# கூட்டுறவுச் சட்ட வரலாறும் நடைமுறைகளும்

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்கள்

அ. பழனியப்ப முதலியார்

ஏ. பி. பாலசுப்பிரமணியம்




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் — 490

# கூட்டுறவுச் சட்ட வரலாறும் நடைமுறைகளும்

(பட்டப்படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகின்றது)

ஆசிரியர்கள்

அ. பழனியப்ப முதலியார், எம்.ஏ., ஐ.ஏ.எஸ். (ஓய்வு),
ஓய்வு பெற்ற கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளர்,
சென்னை.

ஏ. பி. பாலசுப்பிரமணியம், எம்.ஏ., ஜே.பி. (ஓய்வு)
ஓய்வு பெற்ற கூட்டுறவுச் சங்கங்களின் துணைப் பதிவாளர்,
கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரி முன்னாள் விரிவுரையாளர்,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—August, 1973

T.N.T.B.S. (C.P.) No. 490



# History of Co-operative Law and Practice

A. PALANIAPPA MUDALIAR AND
A. P. BALASUBRAMANIAM

Price Rs. 15-00

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

Printed by
Sarathy Printers,
Madras-7.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன் றுண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழி லேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன் வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழி லேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறு வதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெரு முயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன 'கூட்டுறவுச் சட்ட வரலாறும் நடை முறைகளும்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **490** ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை **525** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# முன்னுரை

இந்தியாவில் தொடர்ந்து வருகின்ற ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டுறவு இயக்கம் மக்களின், குறிப்பாக வலிவற்ற பகுதியினரின், சமுதாயப் பொருளாதார முன்னேற்றத்திற்கான ஒரு கருவியென்று வலியுறுத்தப்பட்டதன் காரணமாகக் கூட்டுறவு ஒரு கல்வித் (படிப்புத்) துறைப் பொருளாகப் பெருகி முக்கியத்துவமடைந்து வருகிறது. கிராமங்களிலும் நகரங்களிலுமுள்ள பெரும்பான்மையான கீழ்நிலை வகுப்பு மக்களிடையே பொருளாதார முன்னேற்றத்தை வளர்ப்பதில் கூட்டுறவின் பொதுவுடைமையின் உணர்வு பெருகிக் கொண்டிருக்கிறது. எனவே, கூட்டுறவுச் சட்டமுட்படக் கூட்டுறவு பற்றிய ஏடுகள் பகுதிப் பேச்சு மொழியில் மாணவர்களுக்கு மட்டுமன்றிப் பொது மக்களுக்கும் எளிதில் கிடைக்க வேண்டியது தேவையாகும்.

கூட்டுறவு பற்றி ஆங்கிலத்திலும் தமிழிலும் பல ஏடுகளிருப்பினும், இந்தியாவின் கூட்டுறவுச் சட்டத்தின் வரலாறு பற்றியும் செயல்முறைபற்றியும் தமிழில் செறிவாகவும் விவரமாகவும் எழுதப்பட்ட ஒரு நூல் பெரும்பாலும் இல்லையென்றே சொல்ல வேண்டும். இந்த வெறுமையை—குறிப்பாகத் தமிழ் நாட்டளவில் பூர்த்தி செய்வதில் இந்நூல் ஒரு முயற்சியாகும்.

பல்வேறு பொருள்களைப்பற்றித் தமிழில் நூல்களை வெளியிடும் நன்னோக்கத்தில் ஈடுபாடுடைய தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் வேண்டுகோளுக்கிணங்கியே இந்தப் பணி எங்களால் மேற்கொள்ளப்பட்டது.

இந்தியாவில் கூட்டுறவுச் சட்டத்தின் வரலாறுபற்றியும் தமிழ் நாட்டில் மேற்கொள்ளப்பட்ட கூட்டுறவுச் சட்டத்தைப் பற்றியும், கூட்டுறவு நிறுவனங்கள் எவ்விதச் சட்ட அமைப்புக்குள் செயல்பட வேண்டுமென்பது பற்றியும் தமிழில் முதன்முதல் வெளிவரும் நூல் இதுவே. கூட்டுறவை ஒரு சிறப்புப் பாடமாகப்

பயின்று சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் நடத்தப்படும் பி.காம். தேர்வுக்கும், எம்.காம். தேர்வுக்கும் செல்லும் மாணவர்களின் தேவைகளைக் கவனத்தில் வைத்து இந் நூல் எழுதப்பட்டது. இந்த நூலை எழுதுவதற்குத் தமிழ் நாட்டில் கூட்டுறவுச் சட்ட பரிபாலனத்தில் எங்களுக்குள்ள அனுபவத்தை நாங்கள் பயன்படுத்தியுள்ளோம். கூட்டுறவுச் சட்டத்தின் தனிச் சிறப்புகளையும் தமிழ்நாட்டில் தற்போது அமலிலுள்ள கூட்டுறவுச் சட்டத்தையும் செயல் முறையையும், அவற்றிற்குத் தேவைப்படும் மாறுதல்களையும் இந்த நூலில் விளக்கியுள்ளோம். இந்த நூலில் இரண்டு பாகங்கள் அடங்கியிருக்கின்றன. முதல் பாகத்தில் கூட்டுறவின் பொதுக் கொள்கைகளும், இந்தியா வில் கூட்டுறவுக் கோட்பாட்டின் படிப்படியான மலர்ச்சியும், இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் கூட்டுறவுச் சட்டத்தின் வரலாறும் விளக்கப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பாகத்தில் கூட்டுறவு நிறுவனங்களின் செயல்பாட்டினைத் தழுவும் சட்டத் திலும், விதிகளிலுமுள்ள பல்வேறு சரத்துகளைப் பற்றியும் வளர்ச்சிக்கான சாத்தியக் கூறுகளைப்பற்றியும் விவரமான விளக் கங்கள் தரப்பட்டிருக்கின்றன. இந்த நூல் கூட்டுறவைப் பாட மாகப் பயிலும் மாணவர்களுக்கும் கூட்டுறவு அலுவலர்களுக்கும் அரசு பணியாளரல்லாத கூட்டுறவாளர்களுக்கும் மட்டுமன்றித் தமிழ் நாட்டில் கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியில் ஈடுபட்டு இருக்கும் பொதுமக்களுக்கும் பயன்படும் என்று எதிர்பார்க் கிறோம். கூட்டுறவுப் பிரச்சினைகளைத் தீர்ப்பதில் ஒரு சரியான சட்ட அறிவையும், கையாளும் முறையையும் பரப்புவது மட்டு மன்றி, கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியையும் நலமார்ந்த முறை யிலும் முழு நிறைவான முறையிலும் இந்த நூல் ஊக்குவிக்கு மென்று நாங்கள் நம்புகிறோம்.

**அ. பழனியப்ப முதலியார்,**
**ஏ. பி. பாலசுப்பிரமணியம்**

# பொருளடக்கம்

## முதல் பாகம்

இரண்டாம் பாகம்

முதல் பாகம்

# 1. கூட்டுறவின் அடிப்படைக் கோள்கைகள்

## (Basic Principles of Co-operation)

### 1. கூட்டுறவுக் கருத்தின் விளக்கம் (Concept of co-operation)

சாதாரண மொழியில் கூட்டுறவு என்றால் ஒன்றுபட்டுச் செயல் புரிவது என்று பொருள். அதனுடைய கலையாலான தொழில் நுட்பப் பொருளில், (technical sense) 'கூட்டுறவு' என்பது செயல்களைச் செய்யும் ஒரு முறையாகும். இது பொதுவான பொருளாதார நலன்களை வளர்ப்பதற்காகச் சமத்துவ அடிப் படையில் சுயேச்சையாக மக்கள் ஒன்றுசேர்ந்து செயல்படும் ஒருவித அமைப்பு. இந்த அமைப்பில் ஒன்றுசேருகிறவர்கள் ஒரே விதமான, பொதுவான, பொருளாதார நோக்கத்தை உடைய வர்கள். அத்தகையவர்களில் பெரும்பாலார் பலமில்லாத பொருளாதார நிலையிலிருக்கும் காரணத்தால், தனியான முயற்சியால் அந்தக் குறிக்கோளை அடைய முடியாமல் இருக் கிறார்கள். தனிப்பட்டவர்கள் யாவரும் ஒன்றுசேர்ந்து தங்கள் வளப்பொருள்களை (resources) ஒன்றுதிரட்டியும், பரஸ்பர உதவியின் மூலம் சுய உதவியைப் பலப்படுத்தியும் அவர்களிடையே சன்மார்க்க ஒருமைப்பாட்டின் அடிப்படையை உறுதிப்படுத்து வதன்மூலம் தனி மனிதனுடைய பொருளாதாரப் பலக்குறைவைப் போக்குவது சாத்தியமாகும். கூட்டுறவானது பிரதானமாக ஒரு பொருளாதார நிறுவனமாக இருந்தாலும், ஒரு கூட்டுறவு நிறுவனத்தில் சேரும் மக்களுக்குச் சில சமுதாயநலன்களும், நற்பண்புகளும், கல்விநலன்களும் கிடைக்கின்றன. எனவே, இது ஒரு தொழில் நிறுவனம் மட்டுமல்லாமல் ஒருவித வாழ்க்கை முறை என்றும் கூறப்படுகின்றது.

ஒவ்வோர் உறுப்பினருடைய சமத்துவ வாக்குரிமையின் அடிப்படையில் ஒரு கூட்டுறவுச் சங்கம் அமைக்கப்படுவதால்,

கூட்டுறவு ஒருவிதப் பொருளாதார ஜனநாயகமாகும். 'ஒருவருக்கு ஒரு வாக்குத்தான்' (one man, one vote) என்பது கூட்டுறவின் முக்கியக் கொள்கையாகும். நிறுவனத்தில் தனக்கிருக்கும் முதலீட்டுப் பலத்தின் காரணமாக எந்த ஓர் உறுப்பினரும் மேற்கொண்டு அதிகமான வாக்குரிமையைப் பெறமுடியாது. கூட்டுறவு நிறுவனத்திலிருந்து நன்மையை அடையக்கூடிய எல்லாரும் தட்டுத்தடையின்றி அதில் தாராளமாக உறுப்பினராகலாம். மேலும், கூட்டுறவு நிறுவனத்தின் இலாபப் பிரிவினை தொடர்பாகப் பின்பற்றவேண்டிய கொள்கையைக் கவனிக்குமிடத்து அந்த நிறுவனத்தின் மக்களாட்சிக் கண்ணோட்டம் (democratic outlook) நன்கு விளங்கும். கூட்டுறவு நிறுவனத்தில் அங்கத்தினர் வைத்திருக்கும் மூலதனத்திற்குக் கட்டுப்படுத்தப்பட்ட மிதமான இலாபசுவு (dividend) மாத்திரந்தான் கிடைக்கும். மேற்கொண்டு கிடைத்த இலாபமானது நிறுவனத்துடன் அங்கத்தினர்கள் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் எவ்வளவோ அதற்கேற்றவாறு அவர்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படுகிறது. கூட்டுறவு நிறுவனம் உயர்ந்த இலாபம் சம்பாதிப்பதைக் குறிக்கோளாக வைத்துக்கொள்ளாமல், உறுப்பினர்களுக்கு மிகச் சிறந்த முறையில் சேவை செய்வதையே முக்கியக் குறிக்கோளாகக் கொண்டு இயங்குகின்றது.

கூட்டுறவு இயக்கமானது நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் பரஸ்பர உதவியின் அடிப்படையில் தாங்களாகவே செயல்களைச் செய்துகொள்ளும் வகையைப் போதிப்பதோடு, அப்படிச் செய்ய ஊக்கமும் அளிக்கிறது. அது மந்தமான ஒரேவகையான தன்மையையும் (uniformity) மையக் கட்டுப்பாட்டின்கீழ் ஒரு திறமாக்குதலையும் (regimentation) அதிகார இன ஆட்சிப் போக்கையும் (bureaucratisation) தவிர்த்து, விரும்பிய பலனை அடையச் செய்கிறது. கூட்டுறவு நிறுவனம் வேறுவகைச் சமுதாய நிறுவனங்களைப்போல் அல்லாமல், சுதந்திரத்துடன் வற்புறுத்தலின்றி எல்லாரும் ஒன்றுசேரலாம் என்ற தத்துவத்தின் அடிப்படையில் இயங்குகிறது. இதில் ஒரு நடுநிலை நேர்மை, தனிப்பட்டோரின் சுதந்திரம், ஜனநாயகம் ஆகியவை நிலவுகின்றன. இது மக்களுக்காக மக்களே நிருவாகம் செய்யும் மக்களுடைய நிறுவனமாகும்.

கூட்டுறவின் சாரம் என்னவென்றால் உற்பத்தியிலும், விநியோகத்திலும் அனுவசியமானதும், ஊதாரித்தனமுமான வீண் போட்டியை விட்டுவிட்டுத் தரகர்களை நீக்கிக் கூட்டு முயற்சியினால் தனிப்பட்ட நபர்களும், வகுப்பினர்களும் தங்களுடைய

பொதுவான பொருளாதார இலக்கை மேம்படுத்துவதேயாகும். அதனுடைய உள்ளுணர்ச்சி சகோதரத்துவம்; செயல்படும்வகை; சிக்கனம், அதனுடைய கொள்கை சமநிதியும், நடுநிலை நேர்மையுமாகும். அது 'ஒருவர் எல்லாருக்காகவும், எல்லாரும் ஒருவர்க்காகவும்' என்ற எளிய கொள்கையின் அடிப்படையில் அமைந்திருக்கிறது. சுருங்கக் கூறின், கூட்டுறவின் குறிக்கோள் நிலை (ideal) 'சேவை வேண்டுபவர்கள் தாங்களே சேவை செய்து கொள்ளும் ஜனநாயகம்' (Democracy of servers served) எனலாம்.

2. கூட்டுறவு முதலாளித்துவத்திற்கும் (Capitalism) அரசு பொதுவுடைமைக்கும் (State Socialism) இடைப்பட்ட ஒரு நெறி (Co-operation is a via media between Capitalism and State Socialism

'மாறிக் கொண்டிருக்கும் ஓர் உலகத்தில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்' என்ற வாக்கு எப்போதும்விட இன்று உண்மையாக இருக்கிறது. முதலாளித்துவக் கருத்துகளிலிருந்து உலகம் விலகி அதன் வயப்படாது செல்கிறது. சாதாரண மக்களுடைய நலத்தின் பொருட்டு, வாணிகம், தொழில், வேளாண்மை, சுகாதாரம், கல்வி முதலிய துறைகளில் அதிகமான பொறுப்பை ஏற்கும் அரசாங்கங்கள் இயங்கும் ஒரு புதிய சமுதாயம்—அதாவது பொதுவாகக் கூறப்படும் அரசு பொதுவுடைமை (State Socialism) படிப்படியாக உருவாகிக் கொண்டு வருகிறது. இந்த மாறுதலிலிருந்து எந்த நாடும் அல்லது மக்களும் தப்பித்துக்கொள்ள முடியாது. முதலாளிகளுக்கும், தொழிலாளர்களுக்குமிடையே பிளவை உண்டு பண்ணும் வகையில் ஒரு சிலரிடம் மட்டும் பொருள் குவிய வழி செய்யும் முதலாளித்துவத்திற்கும், தனியார் துறையை வளரவிடாமல் தடுக்கும் அரசு பொதுவுடைமைக்குமிடையே கூட்டுறவு ஓர் இடைநிலை நெறியாக (via media) விளங்குகிறது. ஆகவே, பலாத்கார அடிப்படையில் கண்டிப்பான திட்டமிடுதலுக்கும், கட்டுப்பாடற்ற தாராளச் சுதந்திர முறைக்குமிடையே (leissez faire liberalism) ஓர் இடைவழியாகக் கூட்டுறவைக் கருதலாம். இந்த வகையில் பொருளாதாரத் துறையில் சிறிதளவேனும் திட்டமிடுதலும், ஒழுங்கு நீதியும் அவசியம் என்று நம்புபவர்களும், மற்ற முறைகளிலிருக்கும் பலாத்கார அம்சத்தை வெறுப்பவர்களும், கூட்டுறவு முறையைப் பலமாக வரவேற்கிறார்கள். இதைக் கருதுமிடத்து நாளைய உலகத்தில் கூட்டுறவுக்கு ஒரு பெரிய மகத்தான வாய்ப்பு இருக்கிறது எனலாம்.

எனவே, கூட்டுறவானது முதலாளித்துவப் பொருளாதார அமைப்பிற்கும் பொதுவுடைமைப் பொருளாதார அமைப்பிற்கும்

இடையே உள்ள ஒரு பொன் போன்ற நடுநெறி (golden mean) அமைப்பாகும். எளிய விவசாயிகள், கைத்தொழிலாளிகள், உற்பத்தியாளர்கள், நுகர்வோர்கள் போன்று சிறிதளவில் செயலாற்றுபவர்கள் முதலாளித்துவப் பொருளாதார அமைப்பில் இயங்கும் பெரிய தொழில் நிறுவனங்களுடன் தனி மனிதனுகப் போட்டியிடுவதற்குத் தாங்கள் சரிசமமானவர்கள் அல்லர் என்றாலும், கூட்டுறவு நிறுவனங்களின் மூலம் ஒன்ருகச் சேர்ந்து தங்கள் நிலைமையைமேம்படுத்திக்கொள்ள முடியும் என்பதை உணர்ந்தார்கள். கூட்டுறவு நிறுவனங்கள் எளிய மனிதர்களுடைய வளப் பொருள்களை (resources) ஒன்றுதிரட்டுவதன் மூலம் பெரிய தொழில் நிறுவனங்களில் கிடைக்கும் நன்மைகள் சிலவற்றை அவர்களுக்கு அளிக்கின்றன. அதேசமயத்தில் அவர்களுடைய தனி நபர் மதிப்பையும், சமத்துவத்தையும், கூட்டுச் சேரும் சுதந்திரத்தையும், தனியார் சொத்து உரிமையையும், உற்பத்தியில் சுதந்திரத்தையும் விடாது வைத்துக்கொள்ள முடிகிறது.

முதலாளித்துவ மேலைநாடுகள் கூட்டுறவின் வளர்ச்சியை எதிர்க்கவில்லை. உண்மையாகவே அந்த நாடுகள் கூட்டுறவுக்கு ஊக்கம் அளித்தன. ஏனென்ருல், தனியார் சுதந்திரம் ஒன்று சேரும் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம், தனியார் சொத்து உரிமை, வியாபாரத்தில் போட்டி போன்ற சமுதாய முக்கிய அடிப்படைகளில் மாறுதல் செய்யாமல் எளிய மனிதர்களுடைய பொருளாதார நிலைமையை மேம்படச் செய்து அவர்களுடைய துன்பங்களை நீக்கக் கூட்டுறவு முயற்சிக்கின்றது. பொதுவுடைமை நாடுகளில்கூட—அந்தந்த நாடுகளின் அரசாங்கப் பொருளாதார அமைப்பின் நிர்ப்பந்த முறைகளுக்கேற்ப (regimentation) கூட்டுறவு வளர்ச்சியுற்றது. இந்த நாடுகளில் கூட்டுறவு, உறுப்பினர்களுடைய சமத்துவம், பொதுநலம், கூட்டுத் தொழில் போன்ற சில அம்சங்களைக் கைவிடவில்லையாலும், தனியார் சொத்துரிமை அல்லது தனிப்பட்டவர்களுடைய சுதந்திரம் என்ற அடிப்படையில் அமைக்கப்படவில்லை.

### 3. கூட்டுறவுக் கொள்கைகள் (Co-operative principles)

அண்மையில் அனைத்துலகக் கூட்டுறவுச் சங்கத்தின் (Internationa Co-op. Alliance) மத்தியக் குழுவால் (Central Committee) நியமிக்கப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகளைப்பற்றிய ஆணைக்குழு தனது (Commission on co-operative principles) ஒருமுகமான அறிக்கையில் கூட்டுறவின் அடிப்படைக் கொள்கைகளை நிருணயித்துள்ளது.

1960ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் வியன்னுவில் நடைபெற்ற சர்வதேசக் கூட்டுறவுச் சங்கத்தின் இருபத்து மூன்ருவது காங்கிரஸ் கூட்டத்தில் கீழ்க்கண்ட அந்தக் கொள்கைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

(i) ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினர் உரிமை (membership) தன்னிச்சையாக (voluntary) இருக்க வேண்டும். சங்கத்தின் உறுப்பினர் பொறுப்பை ஏற்றுக்கொள்ள உடன்பட்டு, சங்கத்தினுடைய சேவைகளை உபயோகப்படுத்தக்கூடிய எல்லா நபர்களுக்கும் அந்த உறுப்பினர் உரிமை எந்தவிதச் சமூக, அரசியல், அல்லது சமயபேதப் இல்லாமலும் செயற்கைத் தடைகளின்றியும் இருக்கவேண்டும்.

(ii) கூட்டுறவுச் சங்கங்கள் மக்களாட்சி அமைப்புகளாக இருக்கவேண்டும். அவற்றின் அலுவல்கள் உறுப்பினர்களால் அங்கீகரிக்கப்பட்ட முறையில் நியமிக்கப்பட்ட அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட நபர்களால் நிருவகிக்கப்படவேண்டும். அந்த நபர்கள் உறுப்பினர்களுக்குப் பொறுப்பு உள்ளவர்களாக இருக்கவேண்டும். பிரதம சங்கங்களின் உறுப்பினர்கள் சம வாக்கு உரிமை பெற்றிருக்க வேண்டும். அதாவது ஓர் உறுப்பினருக்கு ஒரு வாக்கு உரிமைதான் உண்டு. சங்கத்தைப் பாதிக்கும் முடிவுகளில் உறுப்பினர்களுக்குச் சமபங்கு உண்டு. பிரதம சங்கங்கள் அல்லாத கூட்டுறவு நிறுவனங்களில் நிருவாகம், மக்களாட்சி அடிப்படையில் தக்க முறையில் நடத்தப்பட வேண்டும்.

(iii) பங்குத் தொகையின் பேரில் வட்டி ஏதாவது கொடுக்கப் படவேண்டியிருந்தால் அந்த வட்டித் தொகை வரையறுக்கப் பட்ட விகிதத்தில்தான் இருக்கவேண்டும்.

(iv) ஒரு சங்கம் செய்யும் தொழிலின் பயனுக ஏற்படும் ஏதாவது மீதம், அல்லது சேமிப்பு, அந்தச் சங்கத்தின் உறுப்பினர் களுக்குச் சொந்தமானது. மேலும், அது பிற உறுப்பினர்களைப் பாதித்து ஓர் உறுப்பினர் மட்டும் இலாபம் அடையாத வகையில் எல்லாருக்கும் உறுப்பினர்கள் உறுதி செய்தபடி கீழ்க்கண்டவாறு பகிர்ந்து கொடுக்கப்படவேண்டும்.

(a) சங்கத்தின் தொழிலை மேம்படுத்துவதற்காக ஒதுக்கி வைப்பதன் மூலம்.

(b) உறுப்பினர்களுக்குப் பொதுவான தொண்டுகள் செய்வதன் மூலம்;

(c) சங்கத்துடன் உறுப்பினர்கள் செய்திருக்கும் கொடுக்கல் வாங்கலின் அளவைப் பொறுத்துப் பகிர்ந்து கொடுப்பதன் மூலம்.

(v) எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களும் கூட்டுறவின் பொருளாதார, மக்களாட்சிக் கொள்கைகளையும், தொழில் நுட்ப முறைகளையும் பொதுமக்களுக்கும், சங்கத்தின் ஊழியர்களுக்கும் அலுவலர்களுக்கும் உறுப்பினர்களுக்கும், போதித்துப் பயிற்சி கொடுப்பதற்கு முன்னேற்பாடு செய்யவேண்டும்.

(vi) அனைத்துலக அளவிலும், நாட்டளவிலும், வட்டார அளவிலும், இதர கூட்டுறவுச் சங்கங்களோடு முயலும் எல்லா வகையிலும் தீவிரமாக ஒத்துழைப்பதன் மூலம், எல்லாக் கூட்டுறவு நிறுவனங்களும் தங்கள் உறுப்பினர்கள் நலத்திற்கும் மக்களுடைய நலத்திற்கும் சிறப்பாகத் தொண்டாற்ற வேண்டும்.

சுருங்கக் கூறின், கூட்டுறவு இயக்கத்தின் முக்கியக் குறிக்கோள், இந்திய அரசியல் சாசனத்தின் சட்ட அமைப்பிற்குள், ஒரு சுதந்திரமுள்ள (free), சுயேச்சையான (voluntary), கட்டிணைப்பு உள்ள (federal) பொருளாதார (economic), மக்களாட்சியை (democracy) உருவாக்குவதேயாகும்.

## 4. கூட்டுறவின் குறிக்கோள் (Ideal of co-operation)

இந்தக் குறிக்கோளின் உட்கருத்தும் அதனுடைய வரையறையும் சிந்திக்கற்பாலன. முதலாவதாக எல்லாக் கூட்டுறவு நிறுவனங்களும், சுதந்திரமாக இயங்கவேண்டும் என்பதன் பொருள், அவை மொழி, இனம், மதம், வகுப்பு, கோட்பாடு, இன்னபிற வேற்றுமைகளைப் பொருட்படுத்தாமல் எல்லாக் குடிமக்களும் (citizen) உறுப்பினர்களாகச் சேர உரிமை அளிக்கவேண்டும். ஒரு பிரதமக் கூட்டுறவுச் சங்கத்தில் உறுப்பினராகச் சேருவதற்கான உரிமையிலுண்டான நியாயமான நிபந்தனைகள் உறுப்பினர் சங்கத்தின் விவகார எல்லையில் வசிக்க வேண்டும், அல்லது சொத்து வைத்திருக்கவேண்டும் என்ற நிபந்தனையும், சங்கத்தின் நடவடிக்கைகளில் அவர் கலந்து கொள்வதற்கான தகுதி பெற்றிருக்கவேண்டும் என்ற நிபந்தனையுமே ஆகும். எனினும், உறுப்பினர்களுடைய தேவைகளை நிறைவு செய்வதற்கு ஒரு சங்கத்தினுடைய ஆற்றல் (capacity) அதனுடைய நிதிவளத்திற்குட்பட்டது. எனவே, ஒரு சங்கம் தான் சேர்த்துக்கொள்ளக்கூடிய உறுப்பினர்களின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டிவரும். அப்படிக் கட்டுப்படுத்தும்போது மேலே குறிப்பிட்ட வேற்றுமை

களை அனுசரிக்காமல் இருக்கவேண்டும்; யாதொரு பேதமும் இல்லாமல் தகுதியுள்ள எல்லாரையும் ஒவ்வொரு பிரதம சங்கமும் தன் அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ளவேண்டும். அதேமுறையில் எல்லா மத்தியச் சங்கமும் உறுப்பினராகச் சேரும் தகுதி பெற்ற எல்லாச் சங்கங்களையும் தன் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ளவேண்டும். ஒரு மாநிலச் சங்கம் எல்லா மத்தியச் சங்கங்களையும் மற்றும் சில சந்தர்ப்பங்களில் தகுதி பெற்ற இதர சங்கங்களையும் தன் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

கூட்டுறவு இலட்சியத்தின் (ideal) மற்றோர் அம்சம் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் நடவடிக்கைகளில் உறுப்பினர்களின் ஈடுபாடு தன்னிச்சையானது (voluntary) என்பதாகும். சாதாரண மாகத் தனிநபர்கள் மட்டும் அடங்கிய எந்த ஒரு பிரதம கூட்டுறவுச் சங்கத்திலும், எவரும் உறுப்பினராகச் சேருவதற்கு எந்தவிதமான வற்புறுத்தலும் (compulsion) இருக்கக் கூடாது. அப்படியானால், ஒரு சங்கத்தில் உறுப்பினராகச் சேரும் ஒருவர், அவர் விரும்பிய காலத்தில் சங்கத்திலிருந்து தம் விருப்பப்படி விலகுவதற்கு உரிமை பெற்றவர் என்று பொருளன்று. ஒரு சங்கத்தில் ஒரு நபர் உறுப்பினராகச் சேர்ந்த அன்றே அவர் மற்ற உறுப்பினர்களுடனும், மொத்தமாகச் சங்கத்தினுடனும், ஒரு கடமைப்பொறுப்புக் கட்டுப்பாட்டிற்கு உட்படுகிறார். ஆகையால், ஒரு சங்கம் நன்கு செயல்பட வேண்டுமானால், அது ஓர் உறுப்பினர் தம் பங்குத் தொகையைத் திரும்பப்பெறுவதற்கும் அல்லது உறுப்பினர் நிலையைத் துறப்பதற்கும் நியாயமான தடைகளையும், நிபந்தனைகளையும் ஏற்படுத்துவது அவசியமாகும். அப்படியானால் அத்தகைய நிபந்தனைகளுக்கும், தடைகளுக்கும் உட்பட்டு எந்த ஓர் உறுப்பினரும் சங்கத்தில் காலவரையறையில்லாமல் எப்பொழுதும் நிலையான உறுப்பினராக இருக்கவேண்டுமென்று வற்புறுத்தப்படமாட்டார். எந்த ஒரு பிரதம மத்தியச் சங்கமும் முறையே மத்தியச் சங்கத்தின் அல்லது மாநிலச் சங்கத்தின் உதவி இன்றித் தானாகவே செயல்படமுடியும் என்று நினைத்தால் அது அப்படியே தன்னிச்சையாகச் செயல்படுவதற்கு உரிமை இருக்க வேண்டும்.

இங்கேயுங்கூட ஒரு பிரதமச் சங்கம் ஒரு மத்தியச் சங்கத்திலோ மாநிலச் சங்கத்திலோ சேர்ந்த நாள் முதல் அது ஏற்றுக்கொண்ட கடமைகளை நிறைவேற்றி வரவேண்டுமேயன்றித் தன் உறுப்பினர் நிலையை விதிகளிலும் உப விதிகளிலும் நிருணயிக்கப்படும் நிபந்தனை களுக்கு உட்பட்டு மாத்திரம்தான் அது திரும்பப் பெற்றுக் கொள்ளும் உரிமை பெறும்.

மேலும், கூட்டுறவு இயக்கம் கூட்டிணைப்புத் (federal) தன்மை பெற்றிருக்க வேண்டும். ஓர் எளிய (simple) மையமாக்கப்பட்ட (centralised) பிரதமச் சங்கத்தில் கோடிக்கணக்கான மக்கள் உறுப்பினர்களாகச் சேர்ந்து அதில் தீவிரமாக ஈடுபடுவது முடிகிற காரியம் அன்று. ஒவ்வொரு சங்கமும் ஒரு வரையறுக்கப்பட்ட எல்லையில் தான் இயங்க வேண்டும். அப்படி வரையறுக்கப்பட்ட விவகார எல்லையானது அந்தந்தச் சங்கத்தின் நடவடிக்கையின் தன்மையைப் பொறுத்து மாறுபடும். இந்தப் பிரதம நிறுவனங்கள் பொதுவான காரியங்களுக்கு ஒன்றுசேர வேண்டியதாக இருக்கிறது. ஆகையால், கூட்டிணைப்பு அமைப்பு (federal structure) இன்றியமையாது தேவைப்படுகிறது. அப்படி நிறுவப்பட்ட கூட்டிணைப்பு அமைப்பில் எத்தனை அடுக்கு (tiers) இருக்கவேண்டும் என்பது சூழலுக்கேற்ற ஏற்பாடாகும். கூட்டுறவு, மாநிலங்களுக்கு (State subject) ஒப்படைக்கப்பட்டு மாநிலச் சட்டத்திற்கு உட்படுத்தப்படுவதால், அத்தகைய சட்டத்தின் அதிகாரத்திற்கு உட்பட்ட உயர்நிலை உச்சி நிறுவனம், மாநிலம் முழுதும் செயல்படும் மாநிலச் சங்கமாக இருக்கிறது. நாடு முழுதும் இயங்கும் ஓர் உயர்நிலைக் கூட்டிணைப்பு நிறுவனம் அமைப்பது சாத்தியமாகவும், அவசியமாகவும்கூட இருக்கலாம். ஆனால், அது நாட்டிலுள்ள மாநில உச்சி நிலைச் சங்கங்கள் தாமே விரும்பி ஒன்றுசேருவதன் மூலம்தான், பல மாநிலங்களில் செயல்படும் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின்கீழ் அமைக்கப்படவேண்டும்.

அடுத்து மிகவும் முக்கியமான அம்சம் கூட்டுறவு இயக்கம் ஒரு பொருளாதார இயக்கம் என்பது. நாட்டு மக்களுடைய சமுதாய, அரசியல், ஒழுக்க வாழ்வில் கூட்டுறவு இயக்கம் மறைமுகமாக, அதன் பலன்களை உண்டாக்கியபோதும், அதனுடைய பிரதானமான குறிக்கோள் ஒரு பக்கம் நேரடியான அரசாங்கத் தொழில் முயற்சியாகும்; மற்றொரு பக்கம் தனியார் தொழில் முயற்சிக்கும் மாறுபட்ட வகையில் பொருளாதார வாழ்க்கையை அமைப்பதாகும். ஆகையால், கூட்டுறவு நிறுவனங்கள் தனியார் தொழில் முயற்சி நடைபெறுகின்ற துறைகளில் தனியார் தொழில் முயற்சியுடன் போட்டியிடக்கூடிய நிலைமையில் இருக்கவேண்டும். ஒரு கூட்டுறவு நிறுவனம் ஆரம்பத்திலிருந்தே எந்த விதமான வெளி உதவியையும் ஆதரவையும் நம்பி இருக்காமல் தன் வலிமையை நம்பி இருத்தல் வேண்டும் என்பது உண்மையாகவே விரும்பத்தக்கது. ஆனால், கல்வியில் பிற்பட்டுத் தொழிலைத் தொடங்குவதற்கு வேண்டிய மூலதனத்தைத் திரட்டுவதற்குச் சக்தி இல்லாமல் ஏழ்மை நிலையில் உள்ள பெரும்பாலான மக்கள் இருக்கும் வளர்ச்சி அடையாத நாடுகளில் மேற்சொன்ன

குறிக்கோளை அடையமுடியாது. ஆகையால், கூட்டுறவுச் சங்கங்களுக்குவேண்டிய உதவியை அவ்வப்பொழுது அரசாங்கம் அளிக்க வேண்டுவது அவசியமாகிறது. எளிய மக்களுக்குக் கூட்டுறவு இயக்கம் சேவை செய்கின்ற அளவிற்கு அம் மாதிரியான அரசாங்க உதவி நீண்ட காலத்திற்கோ தொடர்ந்து உள்ளதாகவோ இருக்கவேண்டியிருக்கும். அத்தகைய உதவி அரசாங்க நிதியிலிருந்து செய்யப்படவேண்டிய நியாயமான செலவு. கூட்டுறவு இயக்கத்தின் பொருளாதார நலத்திற்கு இன்றியமையாதன தொழிற்கொள்கை, நிருவாகத் திறமை, சரியாகக் கணக்கு வைத்தல், தணிக்கை செய்தல் ஆவன. கடைசியாகக் கூட்டுறவு இயக்கம் மக்களாட்சி இயக்கமாக இருக்கவேண்டும். இதற்குப் பொருள் பிரதமச் சங்கத்தின் மட்டத்தில் சங்கத்தின் அலுவல்களனைத்தும் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு குழுவினால் நிருவாகம் செய்யப்படவேண்டும். அம் மாதிரியே மத்தியச் சங்கங்களும் மாநிலச்சங்கங்களும் உறுப்பினர் சங்கங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட குழுவினால் நிருவகிக்கப்படவேண்டும். கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகம் அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களால் தான் நடத்தப்படவேண்டும் என்று கூட்டுறவுக் கொள்கை வற்புறுத்திய போதிலும் சில சூழ்நிலைகளில் இந்தக் கொள்கையில் இருந்து விலகி நிருவாகத்தில் நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்கள் இருப்பது அவசியப்படுகிறது.

5. கூட்டுறவின் வெற்றிக்கு அவசியமான அம்சங்கள் (Factors–necessary for the success of co-operation)

கூட்டுறவு இயக்கத்தின் வெற்றிக்கு ஒரு பொறுப்பு வாய்ந்த மக்களாட்சி அரசாங்கம் அவசியம். ஏனென்றால், அத்தகைய அரசாங்கம் பொறுப்பு உணர்ச்சியையும் தனி நபர் ஆரம்ப முயற்சியையும் வளர்ப்பதற்கு வேண்டிய சூழ்நிலையை உண்டு பண்ணுகிறது. இரண்டாவதாக, அரசாங்கம் எல்லாக் காரியங்களையும் தனியார் துறைக்கு ஒப்படைக்கும் கொள்கையை விட்டுவிட்டு விவசாயம், தொழில், சுகாதாரம், வீட்டு வசதி, கல்வி முதலிய செயல்களில் அதிகப்படியான பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும். நாட்டின் தீவிர பொருளாதார அபிவிருத்தியில் அரசாங்கம் ஈடுபட்டு அதை ஒரு கொள்கையாகப் பின்பற்றுவதைப் பொறுத்துக் கூட்டுறவின் வெற்றி அமைந்திருக்கிறது. மக்களுக்கு நியாயமான வாழ்க்கைத் தரத்தை அளிக்கும் ஒரு மக்கள் நல அரசாங்கமாக அரசு பணியாற்றவேண்டும். மூன்றாவதாக, நாட்டில் பொருளாதார முன்னேற்ற வேகத்தைப் பொறுத்தே கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றம் அமையும்.

# 2. இந்தியாவில் கூட்டுறவுச் சட்டத்தின் வரலாறு

## (History of Co-operative Legislation in India)

### 1. கூட்டுறவுச் சட்டத்தின் தோற்றம் (Genesis of co-operative legislation)

மேலை நாடுகளில் தோன்றியது போல இந்தியாவில் கூட்டுறவானது மக்கள் மேற்கொண்ட முயற்சியினாலோ எண்ணிய எண்ணத்தினாலோ மக்களிடமிருந்து தோன்றிய ஓர் இயக்கமன்று. இந்த நூற்றாண்டு ஆரம்பத்தில் விவசாயியின் நலனுக்காகவும், கிராமக் கடன் நிவாரணத்திற்காகவும் இந்திய அரசு இயற்றிய சட்டத்தின் மூலம் அது தொடங்கப்பட்டது. எனவே, 'இந்தியக் கூட்டுறவு இயக்கம் மேலிருந்து வந்ததே தவிர, கீழிருந்து வரவில்லை' என்று கூறப்படுகிறது. சென்ற நூற்றாண்டின் இறுதியில் இந்த நாட்டில் விவசாயிகள் கடன் பளுவினாலும் வறுமையினாலும் அவதியுற்றிருந்தனர். அநேக விவசாயிகள் கடன் பளுவினால் நிலத்தை நிலக்கிழார்களிடம் கடனுக்காகக் கொடுத்துவிட்டு, நிலமற்றவர்களாயினர். நாட்டிலே பஞ்சமும் நடமாடிற்று. 1860ஆம் ஆண்டுக்கும் 1880ஆம் ஆண்டுக்குமிடையில் நாட்டில் அநேக இடங்களில் பஞ்சம் ஏற்பட்டது. அதிக வட்டி விகிதத்திலும், உபயோகமற்ற செயல்களுக்கும் விவசாயிகள் கடன் வாங்கி எப்போதும் கடனிலே உழன்று மனோதிடமற்று ஆர்வமிழந்த வாழ்க்கையை நடத்தி நாளைக் கழித்துவந்தனர்.

18 சதவிகிதத்திலிருந்து $37\frac{1}{2}$ சதவிகிதம் வரை, விவசாயிகள் சாதாரணமாக வட்டி செலுத்தி வந்தார்கள். 'இந்திய விவசாயி கடனிலே பிறந்து, கடனிலே வாழ்ந்து, கடனிலே இறந்து, தன் பிள்ளைகளுக்குக் கடனையே ஆஸ்தியாக விட்டுச் செல்கிறார்' என்று கூறுமாறு இருந்தது அன்றைய விவசாயியின் நிலைமை. இதன் காரணமாக நாட்டில் விவசாய உற்பத்தி குறைந்து

நாட்டின் பொருளாதார நிலை சீர்கேடாயிற்று. அரசாங்கத்தி னிடம் விவசாயிகளுக்கு வெறுப்புணர்ச்சியும் வளரலாயிற்று. 1875ஆம் ஆண்டில் தக்காணக் கலகங்கள் (Deccan riots) நிகழ்ந்தன. அரசாங்கம் இக் கலகங்களின் காரணங்களை ஆராய ஒரு விசாரணைக் குழுவை நிறுவியது. அந்தக் குழுவின் அறிக்கை யின்படி பம்பாய் மாகாணத்தில் ஒவ்வொரு விவசாயியும் சராசரி ரூ. 370/-கடன்பட்டிருந்தார். விவசாயக் கடன்களைக் குறைக்கும் பொருட்டு அரசாங்கம் வில்லங்கப்பட்ட சொத்துகளின் நிவாரணச் சட்டம் ஒன்றை இயற்றியது. ஆனால், இந்தச் சட்டம் பெரும் நிலக்கிழார்களுக்கு மட்டுமே பயனுடையதாக இருந்தது. ஆகவே, 1876ஆம் ஆண்டு பம்பாய் மாகாணத்தில் பூனா மாவட்டத்தில் நிலக்கிழார்களுக்கெதிராக விவசாயிகள் கலகங்கள் தோன்றின. நாட்டில் அமைதியின்மை ஏற்பட்டது. தக்காணக் கலக விசாரணைக் குழுவின் ஆலோசனையின்படி அரசாங்கம் 1879ஆம் ஆண்டில் தக்காண விவசாய நிவாரணச் சட்டத்தை (Deccan Agriculturists Relief Act) இயற்றியது. நாட்டில் பஞ்சத்தின் காரணமாக 1880ஆம் ஆண்டில் 'பஞ்ச ஆலோசனைக் குழு' ஒன்றை அரசாங்கம் நியமித்தது. 1882ஆம் ஆண்டில் பம்பாயில் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட சர் வில்லியம் வெட்டர்பன் (Sir William Weddarban) என்பவர் விவசாயி களின் கடன் பளுப் பிரச்சினையைத் தீர விசாரித்துஅந்தப் பிரச் சினையைத் தீர்ப்பதற்கும், விவசாயிகளுக்குக் கடன் வசதியளிக் கவும் விவசாய வங்கிகள் (Agriculture Banks) நிறுவலாம் என்று ஆலோசனை தெரிவித்தார். இந்த விவசாய வங்கிகளுக்குத் தேவைப்படும் நிதியை அரசாங்கம் வழங்கவேண்டுமென்றும், அரசாங்க ஊழியர்களே வங்கி ஊழியர்களாகப் பணிசெய்ய வேண்டுமென்றும் அவர் சிபாரிசு செய்திருந்தார். அவருடைய ஆலோசனை செயல் முறையில் அமல்படுத்துவதற்கு ஏற்ற தன்று என்று அரசாங்கம் நிராகரித்தது. ஆனால், அவருடைய முக்கியமான சிபாரிசுகளின் அடிப்படையிலும் பஞ்ச ஆலோசனைக் குழுவின் சிபாரிசின் பேரிலும் இந்திய அரசு 1883ஆம் ஆண்டில் நில அபிவிருத்திக் கடன்கள் சட்டத்தை (Land Improvement Loans Act) இயற்றியது. இச் சட்டப்படி மாகாண அரசாங்கமே விவசாயிகளுக்கு நீண்டகாலக் கடன் கொடுக்க வசதி செய்யப் பட்டது. பின்னர், 1884ஆம் ஆண்டில் விவசாயிகள் கடன் சட்டமும் (Agriculturists Loans Act) இயற்றப்பட்டது. இச்சட் டத்தின்கீழ் மாகாண அரசாங்கமே நேரடியாக விவசாயிகளுக்குக் குறுகிய காலக் கடன்கள் வழங்க வசதி செய்யப்பட்டது. இந்த இரண்டுவிதக் கடன்கள் தக்காவிக் கடன்கள் (Takkavi Loans) என்று வழங்கப்பட்டு வந்தன. ஆனால், இத் தக்காவிக் கடன்கள்

எதிர்பார்த்த அளவு விவசாயிகளின் கடன் சுமையைக் குறைக்க வில்லை. விவசாயிகளும் போதிய பயன் அடைந்தார்களில்லை.

விவசாயிகளின் கடன் பளுவைக் குறைக்கும் பொருட்டு அரசாங்க அதிகாரிகள் சிலர் தனிப்பட்ட முறையில் பல முயற்சி களில் ஈடுபட்டனர். 1882ஆம் ஆண்டில் சர் வில்லியம்வெட்டர்பன் என்பவர் பூனு மாவட்டத்தில் புரந்தர் தாலுக்காவுக்கு ஒரு விவசாய வங்கியை, கம்பெனிச் சட்டத்தின்கீழ் (Companies Act) நிறுவ முயன்றார். ஆனால், அத்திட்டத்தை அரசாங்கம் நிராகரித்துவிட்டது. 1892ஆம் ஆண்டு சென்னை அரசாங்கம் சர் பிரெடரிக் நிக்கல்சன் (Sir Frederick Nicholson I.C.S.) என்ற அதிகாரியை ஐரோப்பிய நாடுகளில் இயங்கிவரும் கூட்டுறவு இயக்கத்தை ஆராய்ந்து, இந்தியச் சூழ்நிலைக்கேற்பக் கூட்டுறவு கிராமக் கடன் சங்கங்கள் ஆரம்பிப்பது குறித்து ஆலோசனை கூறும் படி உத்தரவிட்டது. அவர் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் நடைபெற்றுவந்த பல கூட்டுறவு நிறுவனங்களையும் சில வருடங்கள் தீர ஆராய்ந்து தம் அறிக்கையை 1895ஆம் ஆண்டிலும் 1897ஆம் ஆண்டிலும் இரண்டு பகுதிகளாக அரசாங்கத்திற்குச் சமர்ப் பித்தார். 'நில வங்கிகளும் விவசாய வங்கிகளும்' (Land and Agricultural Banks) என்ற தலைப்புள்ள அவருடைய சரித்திரப் பிரசித்திபெற்ற அறிக்கையில், அவர் ஜெர்மன் நாட்டில் இயங்கும் ரெய்ஃபீஸன் (Raiffeisen) கூட்டுறவுச் சங்கங்கள் போன்ற கிராம கூட்டுறவுச் சங்கங்கள் ஆரம்பிக்கப்படவேண்டும் என்று ஆலோசனை கூறினார்.

'ஃபிரான்சிலும், ஜெர்மனியிலும், இத்தாலியிலும் மக்கள் புதுமையை விரும்பாமலும் சந்தேக நோக்குடனும் மிக ஏழைகளா கவும் ஒற்றுமையின்றியும் இருந்தனர்; அங்கே கூட்டுறவு வெற்றி யடைந்துவிட்டது. சென்னை மாகான மக்கள் அவ்வளவு மோச மான நிலையிலில்லை. எனவே, இங்குக் கூட்டுறவு தவறாது வெற்றி பெறும். அதற்காக இங்கு ரெய்ஃபீசனைக் கண்டுபிடிக்கவேண்டும்' (Find Raiffeison) என்று தம் அறிக்கையில் அவர் முடிவுரை பகர்ந்தார். இந்த அறிக்கையைச் சென்னை அரசாங்கம் 1899ஆம் ஆண்டில் பரிசீலனை செய்து பின்னர்ச் சென்னை மாகாணத்தில் கிராமக்கடன் பிரச்சினை அவசரமுள்ளதன்று என்ற கருத்தை வெளி விட்டது. இந்திய அரசாங்கம் 1900ஆம் ஆண்டில் சர் நிக்சல்சன் அறிக்கையைப் பெற்றவுடன் மாநில அரசாங்கங்களின் கருத் திற்காக அனுப்பிவைத்தது. 1900ஆம் ஆண்டில் ஐக்கிய மாகாணங் களில் பணியாற்றிவந்த எச். டூபெர்னே (H. Dupern I.C.S.) என்பவர் இத்தாலி, ஃபிரான்சு முதலிய நாடுகளுக்குச் சென்று

அங்குள்ள கூட்டுறவு இயக்கத்தை ஆராய்ந்து 'வட இந்தியாவிற்கு மக்கள் வங்கிகள்' (People's Banks for Northern India) என்ற திட்டத்தை வெளியிட்டார். கம்பெனிச் சட்டத்தின்கீழ் (Companies Act) பதிவு செய்யப்பட்ட கிராம வங்கிகளை நிறுவினர். மற்ற மாகாணங்களிலும் விவசாயிகளுக்காக விவசாய வங்கிகள் ஆரம்பிக்கப்பட்டன. பஞ்சாப் மாகாணத்தில் சர் எட்வர்ட் மாக்லகனும் (Sir Edward Maclagan), கேப்டன் கிராஸ்த்வெயிட்டும் (Captain Crosthwait) நிறுவிய வங்கிகளைக் குறித்தும் வங்காளத்தில் லியான் (Lyan) நிறுவிய வங்கிகளைக் குறித்தும் மாகாணங்கள் விடுத்த அறிக்கைகள் இந்திய அரசாங்கத்தின் பார்வைக்கு வந்தன. 1900ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கம் இந்தியாவில் கூட்டுறவுக் கடன் சங்கங்களை நிறுவுவதைப்பற்றி ஆலோசனை கூற ஒரு குழு அமைத்தது. அந்தக் குழுவினர் ரெய்ஃபீசன் சங்கங்களின் முறைப்படி கூட்டுறவுச் சங்கங்கள் இந்தியச் சூழ்நிலைக்கேற்றவை என்ற கருத்தை வெளியிட்டார்கள். 1901ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட பஞ்சநிவாரண ஆலோசனைக் குழுவினர் பரஸ்பரக் கடன் சங்கங்கள் (Mutual Credit Associations) நிறுவலாம் என்ற ஆலோசனையை வெளியிட்டார்கள். இந்த ஆலோசனைக் குழுவில் சர் ஃபிரெடிரிக் நிக்கல்சனும் (Sir Frederick Nickolson) உறுப்பினராக இருந்தார். இந் நிலையில் 1901ஆம் ஆண்டில் இந்தியாவின் வைஸ்ராயாக (Viceroy) இருந்த கர்ஸான் பிரபு (Lord Curzon) இந்த நாட்டில் கூட்டுறவுச் சங்கங்களை நிறுவுவதற்குத் தக்க ஆலோசனை கூற அப்பொழுது வைஸ்ராயின் நிருவாகக் குழுவில் நிதி அங்கத்தினராக இருந்த சர் எட்வர்டு லா (Sir Edward Law) அவர்கள் தலைமையில் ஒரு குழுவை நியமித்தார். இந்தக் குழுவில் சர் ஃபிரெடிரிக் நிக்கல்சன், எச். டுபர்னே, ரெஜினல்டுமர்ரே, வில்சன், சர் புல்லர் ஆகியோர் அங்கம் வகித்தனர். இந்தக் குழு 1901ஆம் ஆண்டு ஜுன், ஜுலை மாதங்களில் சிம்லா நகரத்தில் கூடி, தன் அறிக்கையை முடித்து ஒரு மசோதாவையும் (Bill) மாதிரி விதிகளையும் (model rules) தயார் செய்து அரசாங்கத்திற்குச் சமர்ப்பித்தது. ஏழை விவசாயிகளின் நன்மைகளுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு, விரிவானதும் கடினமானதுமான சரத்துகள் அடங்கிய 256 பிரிவுகள் கொண்ட கம்பெனிச் சட்டம் (Companies Act) ஏற்றதாக இல்லை என்பதால் எளிமையான முறையில் ஒரு தனிச் சட்டம் அவசியமாகக் கருதப்பட்டது. இம் மசோதா இங்கிலாந்தில் கூட்டுறவுத் தலைவர்களில் ஒருவராய் விளங்கிய எச். டபுள்யூ. உல்ஃப் (H. W. Wolff) என்பவரின் கருத்திற்கு அனுப்பப்பட்டது. பிராந்திய அரசாங்கங்களுக்கும் கருத்துத் தெரிவிக்க அனுப்பப்பட்டது. தீவிர

ஆலோசனைக்குப் பிறகு 1903ஆம் ஆண்டில் இந்தியச் சட்டசபையில் கூட்டுறவு நாணயச் சங்கங்கள் மசோதா (Bill) சமர்ப்பிக்கப்பட்டு 29-4-1904 அன்று அது சட்டமாக நிறைவேற்றப்பட்டது. இதுதான் இந்தியாவில் ஏற்பட்ட முதல் கூட்டுறவுச் சட்டம்.

இந்தச் சட்டம் பெரும்பாலும் இங்கிலாந்து நாட்டின் ஃபிரிண்ட்லி சொசைடீஸ் ஆக்டையும் (English Friendly Societies Act), இண்டஸ்டிரியல் அண்ட் பிராவிடெண்ட் சொஸைடீஸ் ஆக்ட்டையும் (Industrial and Provident Societies Act), மத்திய ஐரோப்பிய நாடுகளின் சட்டத்தையும் தழுவியது.

2. 1904ஆம் ஆண்டு கூட்டுறவு நாணயச் சங்கங்களின் சட்டம் (The Co-Operative Credit Societies Act X of 1904)

i. சட்டத்தின் முக்கிய நோக்கங்கள்: விவசாயிகளுக்குக் கடனுதவி செய்ய விவசாயக் கடன் சங்கங்களை நிறுவி, அவற்றுக்குத் தக்க பாதுகாப்பு அளித்து, அவற்றை வளர்க்க வழி செய்வதே இந்தச் சட்டத்தின் முக்கிய நோக்கமாகும். இச் சட்டம் நாட்டில் எல்லாக் கூட்டுறவு நாணயச் சங்கங்களும் பின்பற்றவேண்டிய பொதுக் கொள்கைகளை நிருணயித்தது. கடன் சங்கங்களுக்கு மட்டும் இந்தச் சட்டம் இயற்றப்பட்டதன் காரணத்தை சர் டி. இப்பத்ஸன் (Sir D. Ibbetson) விளக்கம் கூறியபோது, 'இந்தச் சட்டத்தின் நோக்கம் சங்கத்தின் உறுப்பினர்களின் தனிப்பட்ட சிக்கனத்தை வளர்த்து, அவர்களிடையே பரஸ்பர ஒத்துழைப்பைப் பரப்பி, அதன்மூலம் ஏற்பட்ட கடன் வாங்கும் கூட்டுச் சக்தியை அவரவர்களுடைய தேவைகளையும், சக்தியையும் அவர்கள் நன்ருக உணர்ந்திருப்பதைக் கொண்டும் உள்ளூர்ப் பொதுமக்களின் கருத்தைத் துணைக் கொண்டும் பயன்படுத்துவதே', என்று கூறினர். இந்தச் சட்டத்தின் சரத்துகள் எளிமையாகவும் நெகிழ்ச்சியுள்ளதாகவும் (simplicity and elasticity) வகுக்கப்பட்டன. கூட்டுறவுச் சங்கங்களை நாட்டின் பொதுச் சட்ட (General law) முறைகளிலிருந்து விலக்கி அச் சங்கங்களின் அமைப்பிற்கும் நோக்கங்களுக்கும் ஏற்றவாறு பிரத்தியேகமாகத் தொகுக்கப்பட்ட சரத்துகள் இந்தச் சட்டத்தில் அடங்கியுள்ளன. கூட்டுறவு நாணயச் சங்கங்களை நிறுவுவதற்கும் அவை நல்ல முறையில் செயலாற்றுவதற்கும் ஆதரவு அளிப்பதற்குவேண்டிய சிறப்பு உரிமைகளையும் சலுகைகளையும் வசதிகளையும் அவற்றுக்கு வழங்குவதும் இந்தச் சட்டத்தின் நோக்கமாகும். இந்தச் சட்டத்தில் அளிக்கப்பட்டிருக்கும் உரிமைகளையும் சலுகைகளையும், முதலாளிகளும் (Capitalist) ஊக வாணிகர்களும் (Speculators) பயன்படுத்திக்

கொள்ளாதவண்ணம் தக்க பாதுகாப்பும் முன்னேற்பாடும் இச் சட்டத்தில் அடங்கியுள்ளன. இந்தச் சட்டத்தின்கீழ் நிறுவப்படும் சங்கங்கள் சிறிய, எளிமையான நாணயச் சங்கங்களாக இயங்க வேண்டுமென்றும், எளிய தேவைகள் உள்ள சிறு கடன்கள் மட்டும் கோரும் எளிய மக்கள் நலனுக்காகத் தனிப்பட்ட வரம்பிற் குட்பட்ட நோக்கத்துடன் பணியாற்றி அவை குறுகிய காலத் திற்குச் சிறு கடன்கள் வழங்கி, தவணை தவறாமல் வசூல் செய்யும் தொழிலில் ஈடுபடவேண்டும் என்பதே இச் சட்டத்தை நிறை வேற்றிய அரசினர் கருத்தாகும். எளிதாக மட்டும் இல்லாமல் இச் சட்டம் நெகிழ்ச்சியுள்ளதாகவும் இருந்தது. காரணம் சட்டத்தின் பொதுவான எல்லைக்கோடுகளை (general outlines) மட்டும் நிருணயம் செய்து நாட்டின் ஒவ்வொரு பாகத்திலும் தோல்வி, வெற்றி அனுபவங்களை அனுசரித்தும் சங்கங்களின் வளர்ச்சியின் பொருட்டும் வேண்டியவாறு விரிவான விவரங்களை நாளடைவில் அமைத்துக்கொள்வதே இச் சட்டத்தின் நோக்கமாகும். மேற் கொண்டு அனுபவம் கிடைக்கும்வரை சங்கங்களின் நிருவாகத்தை ஒழுங்குபடுத்தும் அரசினர் தலையீடு முக்கியமானதும் வரையறுக்கப் பட்டதுமான பொருள்களில் மட்டும் வைத்துக்கொண்டு சங்கங் களின் இயற்கை வளர்ச்சியைப் பாதிக்காதவாறு இருக்கவேண்டு மென்று இந்திய அரசு மாநில அரசுகளுக்குத் தெரிவித்தது.

ii. சட்டத்தின் முக்கியச் சரத்துகள் :

(1) அங்கத்தினர்களிடையே சிக்கனத்தையும், சுய உதவியை யும் வளர்க்கும்பொருட்டு ஒரே கிராமத்தில் அல்லது நகரத்தில் வசிக்கும் ஒரே வகுப்பு அல்லது சாதியைச் சேர்ந்த 18 வயதுக்கு மேற்பட்ட எந்தப் பத்து நபர்களும் ஒரு கூட்டுறவுச் சங்கமாகப் பதிவு செய்துகொள்ளலாம்.

(2) ஒரு சங்கத்தின் முக்கிய நோக்கம், பிற கூட்டுறவுச் சங்கங் களிடமிருந்தும், அரசாங்கத்திடமிருந்தும் உறுப்பினர் அல்லாதவர் களிடமிருந்தும், கடன்கள் மூலமாகவும், (loans) வைப்புத் தொகைகள் (deposits) மூலமாகவும் நிதிதிரட்டுவதும், அவ்வாறு பெற்ற நிதியை உறுப்பினர்களுக்கு அல்லது பதிவாளரின் (Registrar) சிறப்பு அனுமதியுடன் இதர கூட்டுறவு நாணயச் சங்கங் களுக்குக் கடன்கள் வழங்குவதும் ஆகும்.

(3) ஒவ்வொரு மாகாணத்திலும் கூட்டுறவு நாணயச் சங்கங்களை நிறுவுவதும், பராமரிப்பதும் கூட்டுறவு நாணயச் சங்கங்களின் பதிவாளர் (Registrar of Co-operative Credit Societ- ies) என்று வழங்கப்படும் ஒரு தனிப்பட்ட அரசாங்க அதிகாரியின் பொறுப்பில் இருக்கும்.

(4) ஒவ்வொரு சங்கத்தின் கணக்குகள் பதிவாளர் அல்லது அவருடைய அலுவலர் ஒருவரால் கட்டணம் இல்லாமல் தணிக்கை செய்யப்படும். மற்றும், சங்கங்கள் பதிவாளர் அல்லது அவரது அலுவலரின் கண்காணிப்புக்கும் ஆய்வுக்கும் உட்பட்டன.

(5) கிராமச் சங்கங்களில் உறுப்பினர்கள் ஐந்தில் நான்கு பாகம் விவசாயிகளாகவும், பட்டணத்துச் சங்கங்களில் உறுப்பினர்கள் ஐந்தில் நான்கு பாகம் விவசாயிகள் அல்லாதவர்களாகவும் இருக்கவேண்டும்.

(6) சங்கம் வாங்கிய கடனுக்காக ஒரு கிராமச் சங்கத்தின் உறுப்பினர்களின் பொறுப்பு (liability), மாநில அரசாங்கத்தின் தனிப்பட்ட அனுமதி பெற்றாலொழிய, வரையறுக்கப் படாததாக (unlimited) இருக்கவேண்டும். நகரச் சங்கத்தின் உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டதாகவோ, வரையறுக்கப் படாததாகவோ (limited or unlimited libilits) இருக்கலாம்.

(7) ஒரு கிராமச் சங்கத்தின் இலாபத்திலிருந்து யாதொரு இலாப ஈவும் (dividend) கொடுக்கக்கூடாது. ஆனால், ஆண்டு முடிவில் அந்த இலாபத்தைச் சேம நிதிக்குக் கொண்டு செல்லுதல் வேண்டும். இந்தச் சேம நிதி சங்கத்தின் உப விதிகளில் (By-laws) குறிக்கப்பட்ட சில வரம்புகளுக்கு மேற்பட்டுச் சேர்ந்தால், உறுப்பினர்களுக்கு மேலூதியம் (Bonus) வழங்கப்படலாம்.

(8) நகரச் சங்கங்களில் ஒரு குறிப்பிட்ட ஆண்டில் இலாபத்தில் நான்கில் ஒரு பங்கு ($\frac{1}{4}$) சேம நிதிக்குக் கொண்டு சேர்க்காமல் யாதொரு இலாப ஈவும் கொடுக்கக்கூடாது.

(9) உறுப்பினர்களுக்கு மட்டும் கடன்கள் கொடுக்கலாம். சாதாரணமாக நபர் ஜாமீன் அல்லது சொத்து ஈட்டின்பேரில் மட்டும் கடன்கள் கொடுக்கப்படவேண்டுமே தவிர, வீட்டுத் தட்டுமுட்டுச் சாமான்கள் (chattel) ஈட்டின்பேரில் கொடுக்கக்கூடாது. ஆனால், அநேகக் குடியானவர்கள் தங்கள் சேமிப்பைப் பொதுவாக நகைகளாக (jewles) வைத்திருப்பதால், கடன்களுக்கு நகைகளையும் சட்டம் ஒப்பும் பிணையாக ஏற்றுக்கொள்ளலாம்.

(10) சங்கத்தின் பங்கு மூலதனத்தில் (Share capital) எந்த உறுப்பினரின் பாத்தியதையும் (interests) கண்டிப்பாக வரம்புக்குட்பட்டதாகும்.

(11) இந்தச் சட்டத்தின் கீழ் நிறுவப்பட்ட சங்கங்களுக்கு ஸ்டாம்பு சட்டம் (Stamp Act), பதிவுச் சட்டம் (Registration Act)

வருமான வரிச் சட்டம் (Income Tax Act) முதலிய சட்டங்களின் சரத்துகள்படிக் கொடுக்கவேண்டிய கட்டணங்களிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டது.

(12) உறுப்பினர்கள் செலுத்தியுள்ள பங்குத் தொகையை எந்த நீதிமன்றமும் அவர் கொடுக்கவேண்டிய கடன்களுக்காகப் பற்றுகை செய்யக்கூடாது.

3. 1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் (Co-operative societies act ii of 1912)

(i) சட்டத்தின் நோக்கம்: 1904ஆம் ஆண்டில் நிறைவேற்றப் பட்ட கூட்டுறவு நாணயச் சங்கங்களின் சட்டம் குறைபாடுகள் உடையதாக இருந்ததை அரசாங்கம் விரைவில் உணர்ந்தது. 1909ஆம் ஆண்டில் நடைபெற்ற கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளர்கள் மாநாட்டில் இந்தச் சட்டத்திலுள்ள குறைபாடுகள் ஆராயப்பட்டன. இந்தச் சட்டம் பல வகைகளில் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சியைத் தேவையில்லாத அளவிற்குக் கட்டுப் படுத்தியது என்றும், அந்தச் சட்டத்தில் 1904ஆம் ஆண்டிலிருந்து நிபுணர்களால் கூறப்பட்டச் அறிவுரைகளின்படி சில திருத்தங்கள் விரிவான முறையில் தேவைப்படுகின்றன என்றும் அந்த மாநாடு கருதியது. இந்தச் சட்டத்தைத் திருத்தம் செய்வதற்கு வேண்டிய மசோதா (bill) ஒன்றையும் அந்த மாநாடு தயாரித்தது. இந்த மசோதாவை இந்திய அரசாங்கம் மாநில அரசாங்கங்களின் கருத்துக்கு அனுப்பிப் புதிய கூட்டுறவுச் சங்கங்களின் மசோதா ஒன்றைத் தயாரித்தது. 1904ஆம் ஆண்டில் கூட்டுறவு நாணயச் சங்கங்களின் சட்டத்தில் காணப்பட்ட முக்கியக் குறைபாடுகளை நீக்கும் பொருட்டுச் சட்டத்தில் திருத்தங்களைச் செய்ய இந்திய அரசாங்கம் முடிவு செய்தது. 1904ஆம் வருடத்தியச் சட்டத்தின் குறைபாடுகள் பின்வருமாறு:

(1) 1904ஆம் ஆண்டுச் சட்டம் கூட்டுறவு நாணயத்திற்கு மட்டும் நிறுவப்பட்ட சங்கங்களுக்காக இயற்றப்பட்டதே ஒழிய விநியோகத்திற்கும் உற்பத்திக்கும் விற்பனைக்கும் மற்றும் இது போன்ற இதர செயல்களுக்காகத் தேவைப்படும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அது பொருத்தமானதல்ல. நாணயச் சங்கங்கள் நிறுவியதன் விளைவாக, இதர வகைக் கூட்டுறவுச் சங்கங்களும்கூட நிறுவுவதற்கு வாய்ப்பு நடைமுறையில் தோன்றியது. ஆகையால், அந்த இதரச் சங்கங்களுக்கும்கூட, சட்டத்தில் அளிக்கப் பட்டிருக்கும் உரிமைகளையும், சலுகைகளையும் வழங்குவது உசித மாகத் தோன்றியதால் சட்டம் எல்லாவிதக் கூட்டுறவுச் சங்க

களுக்கும் பொருந்துமாறு திருத்தம் செய்யவேண்டிய அவசியமேற்பட்டது.

(2) 1904ஆம் ஆண்டின் சட்டத்தில் கூட்டுறவுச் சங்கங்கள், கிராமச் சங்கங்கள் என்றும், நகரச் சங்கங்கள் என்றும் பிரிக்கப்பட்டிருந்தன. மேலும், பொது விதியாகக் கிராமச் சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்புடன் இயங்க வேண்டுமென்று அந்தச் சட்டத்தில் குறிக்கப்பட்டிருந்தது. இந்த வேறுபாடுகள் நடைமுறையில் இயற்கைக்கு மாறானவையாகவும், வசதியற்றவையாகவும் இருந்தன. வரையறுக்கப்பட்ட சங்கங்களுக்கும் வரையறுக்கப்படாத சங்கங்களுக்கும் இடையே உள்ள வேறுபாடுகள் தாம் உண்மையான வேறுபாடாகுமாகையால், இந்த வேறுபாட்டையே நிலைநிறுத்தியும், விவசாயக் கடன் சங்கங்கள் மட்டும் பொது விதியாக வரையறுக்கப்படாத பொறுப்புடன் இருக்க வேண்டும் என்ற கொள்கையை நிலைநிறுத்தியும் ஒரு புதிய சட்டம் நிறைவேற்றுவது நல்லது என்று கருதப்பட்டது.

(3) 1904 ஆம் ஆண்டுச் சட்டத்தில் வரையறுக்கப்படாத பொறுப்பு சங்கங்கள் இலாபத்தை அங்கத்தினர்களுக்குப் பிரித்துக் கொடுக்கக் கூடாது என்று ஒரு நிபந்தனை இருந்தது. ஆனால், இந்த நிபந்தனை விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அவசியமாகத் தோன்றவில்லை. இலாபத்தை அங்கத்தினர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கும் வரையறுக்கப்படாத பொறுப்பு விவசாயச் சங்கங்கள் பல மாநிலங்களில் உபயோகமுள்ள முறையில் வேலை செய்து வந்தமை நடைமுறையில் காணப்பட்டது. ஆகையால், வரையறுக்கப்படாத சங்கங்களும் மாநில அரசாங்கத்தின் அனுமதி பெற்று அங்கத்தினர்களுக்கு இலாபப் பிரிவினை செய்ய அனுமதிக்கலாம் என்று கருதப்பட்டது.

(4) ஐரோப்பாவில் கூட்டுறவு யூனியன்களும் கூட்டுறவு மத்திய வங்கிகளும், பிரதமச் சங்கங்களின் இணைப்பு மூலம் இயங்கி வருவதால் அம் மாதிரி மத்தியக் கூட்டிணைப்புச் சங்கங்கள் அநேக மாநிலங்களில் அமைக்க வாய்ப்பு இருந்தது. ஆனால், அம் மாதிரி மத்தியச் சங்கங்கள் 1904ஆம் ஆண்டுச் சட்டத்தின் கீழ் அமைக்கமுடியாது. 1904ஆம் ஆண்டுச் சட்டம் இயற்றிய பிறகு அமைக்கப்பட்ட அநேக சங்கங்கள் வளர்ச்சியுற்றன. ஆனால், அவை தங்களுக்கு வேண்டிய நிதியை, மூலதனத்தை உள்ளூரில் திரட்ட முடியாமல் இருந்தன. ஆகவே, பிரதமச் சங்கங்களைக் கண்காணிப்பதற்கும் அவற்றுக்கு வேண்டிய அளவு மூலதன வசதியளிப்பதற்கும் மத்தியச் சங்கங்கள் அமைக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆகையால், 1904 ஆம் ஆண்டுச் சட்டத்தைத்

திருத்தி மத்தியக் கூட்டுறவுச் சங்கங்களை அமைக்கப் புதிய சட்டத்தில் அனுமதியளிக்கப்பட்டது.

(ii.) சட்டத்தின் முக்கியப் பிரிவுகள்

(1) கூட்டுறவுச் சங்கப் பதிவாளர் ஒருவரை நியமிக்கவும், அவருக்கு உதவி செய்ய அலுவலர்களை அமைத்து அவர்களுக்குப் பதிவாளருடைய அதிகாரங்கள் எல்லாவற்றையும் அல்லது சில வற்றை அளிக்கவும் மாநில அரசாங்கத்திற்கு அதிகாரம் வழங்கப் பட்டது.

(2) கூட்டுறவுக் கொள்கைகளின்படி உறுப்பினருடைய பொருளாதார நலத்தை வளர்க்கும் நோக்கம் கொண்ட ஒரு சங்கமும், மற்றும் அந்தச் சங்கம் இயங்கும் முறையையும் செயல் திறனையும் உதவியின் மூலம் எளிதாக்கும் நோக்கத்துடன் அமைக்கப்பட்ட ஒரு சங்கமும் வரையறுக்கப்பட்ட பொறுப்பிலோ அல்லது வரையறுக்கப்படாத பொறுப்பிலோ இச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யலாம். ஆனால், மாநில அரசாங்கம் வேறு விதமாக உத்தரவிட்டாலொழிய மற்றொரு சங்கம் அங்கத்தினராக இருக்கும் ஒரு சங்கத்தின் பொறுப்பு வரையறுக்கப்பட்டதாக இருக்க வேண்டும். மேலும், உறுப்பினர்களில் பெரும்பாலார் விவசாயி களாக இருந்து அவர்களுக்குக் கடன்கள் கொடுப்பதற்காக நிதியைத் திரட்டுவதை முக்கிய நோக்கமாகக் கொண்ட ஒரு சங்கம் வரையறுக்கப்படாத பொறுப்புள்ளதாக இருக்கவேண்டும்.

(3) தனி நபர்கள் மாத்திரம் அடங்கிய ஒரு சங்கம் குறைந்த பட்சம் 18 வயதுக்கு மேற்பட்ட பத்து உறுப்பினர்களைக் கொண்ட தாக இருக்கவேண்டும்.

(4) ஒரு சங்கத்தின் உப விதிகளில் எந்தத் திருத்தமும் பதிவாளர் பதிவு செய்தாலன்றிச் செல்லக் கூடியதல்ல. அந்தத் திருத்தத்தைப் பதிவு செய்வதற்கு முன் சட்டத்தின் சரத்து களுக்கோ அல்லது சட்டத்தின்கீழ் நிருணயிக்கப்பட்ட விதிகளுக்கோ அந்தத் திருத்தம் முரண்பாடு இல்லாமல் இருக்கின்றதா என்பதைப் பதிவாளர் சரிபார்த்துக் கொள்ள வேண்டும்.

(5) வரையறுக்கப்படாத பொறுப்புள்ள சங்கத்தில் ஓர் உறுப்பினருக்கு ஒரே ஒரு வாக்குத்தான் உண்டு. வரையறுக்கப் பட்ட பொறுப்புள்ள சங்கத்தில் ஓர் உறுப்பினருக்கு அச் சங்கத்தின் விதிகளில் நிருணயித்தவாறு அநேக வாக்குகள் உண்டு.

(6) ஒரு வரையறுக்கப்பட்ட பொறுப்புள்ள சங்கத்தில் எந்த ஓர் உறுப்பினரும் மொத்தப் பங்குத் தொகையில் ஐந்தில் ஒரு பாகத்திற்குமேல் பங்குத் தொகை வைத்துக்கொள்ளக்கூடாது.

(7) நிலவரி அல்லது நிலவரியைப் போல வசூலிக்கக்கூடிய எந்தத் தொகைக்கும் அரசாங்கத்துக்கு உள்ள முதல் உரிமைக்கு உட்பட்டு அல்லது நிலச் சொந்தக்காரருக்குக் கொடுக்கவேண்டிய குத்தகைத் தொகைக்கு அவருக்கு உள்ள முதல் உரிமைக்கு உட்பட்டு, ஒரு சங்கம் தன் உறுப்பினரிடமிருந்து வரவேண்டிய கடன் பாக்கியையோ, இதர தொகையையோ வசூலிக்க அந்தச் சங்கத்தினருக்குக் கடன் கொடுத்த மற்றவர்களைவிட உறுப்பினரின் பயிர், கால் நடைகள் அல்லது விவசாயக் கருவிகள் முதலியவற்றின் மேல் சங்கத்திற்கு முதல் கோருரிமை (prior claim) உண்டு.

(8) ஓர் உறுப்பினர் கொடுக்கவேண்டிய கடனுக்குச் சங்கத்தில் அவர் செலுத்தியிருக்கும் வைப்புத்தொகை, பங்குத் தொகை முதலியவற்றின்மேல் சங்கத்திற்கு ஒரு பற்றுப் பொறுப்பு charge) உண்டு.

(9) ஒரு சங்கத்தினுடைய கடன்களுக்காக ஒரு முன்னாள் உறுப்பினருடைய பொறுப்பு அவர் உறுப்பினர் பதவியிலிருந்து விலகிய தேதியிலிருந்து இரண்டு ஆண்டுக் காலம் நீடித்திருக்கும். ஆனால், இறந்துபோன உறுப்பினருடைய சொத்து அவர் இறந்த தேதியிலிருந்து ஓர் ஆண்டுக் காலம் வரை சங்கக் கடன்களுக்குப் பொறுப்புள்ளவையாகும்.

(10) ஒரு சங்கத்தினுடைய பங்குத் தொகைப் பத்திரங்கள், கடன் ஈட்டுப் பத்திரங்கள் (Debentures), மற்றும் பிற பத்திரங்கள் கட்டாயப் பதிவு நிபந்தனையிலிருந்து விலக்கு வழங்கப்பட்டன.

(11) மத்திய அரசாங்கம் அல்லது மாநில அரசாங்கம் கூட்டுறவுச் சங்கங்களுக்கு வருமான வரி, ஸ்டாம்பு வரி, பதிவுக் கட்டணம் முதலியவற்றைச் செலுத்தவேண்டிய நிபந்தனையிலிருந்து விலக்கு அளிக்கலாம்.

(12) சங்கத்தின் உப விதிகளில் அல்லது சட்டத்தின் கீழ் நிருணயிக்கப்பட்ட விதிகளில் குறிக்கப்பட்ட அளவுக்கும், நிபந்தனைகளுக்கும் உட்பட்டு ஒரு சங்கம், அங்கத்தினர் அல்லாத நபர்களிடமிருந்து, கடன்களும், வைப்புத் தொகைகளும் (Deposits) பெறலாம்.

(13) பதிவாளரால் அங்கீகரிக்கப்பட்ட எந்த வங்கியிலும் அல்லது அரசாங்க சேமிப்பு வங்கி, பொறுப்புரிமையர் பத்திரங்கள் (Trustee security) இதர கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனம் முதலியவற்றில், ஒரு சங்கம் தன்னுடைய நிதிகளை வைப்புத் தொகையாகவோ அல்லது முதலீடாகவோ வைக்கலாம்

(14) ஒரு சங்கத்தின் நிகர இலாபத்தில் நான்கில் ஒரு பாகம் அதன் சேமநிதிக்குக் கொண்டுபோகவேண்டும். அதன் பிறகு 10 சதவிகிதம்வரை, மிகுதி நிகர இலாபத்தை அறச்செயல்களுக்கும் பயன்படுத்தப் பொதுநல நிதி ஏற்படுத்தலாம். உறுப்பினர்களுக்கு இலாப ஈவு கொடுப்பதும் அனுமதிக்கப்பட்டது.

(15) பதிவாளர் தாமாகவோ அல்லது சங்கத்தின் உறுப்பினர் களில் மூன்றில் ஒரு பகுதியினரின் விண்ணப்பத்தின் பேரிலோ ஒரு சங்கத்தின் அமைப்பு அல்லது வேலையைக் (Construction of working குறித்து விசாரணை மேற்கொள்ளலாம்.

(16) ஒரு சங்கத்திற்குக் கடன் கொடுத்தவர் விண்ணப் பத்தின்பேரில் பதிவாளர் சங்கத்தை ஆய்வு செய்யலாம்.

(17) விசாரணை அல்லது ஆய்வுக்குப் பிறகு அல்லது சங்கத்தின் உறுப்பினர்களில் நான்கில் மூன்று பகுதியினர் கொடுத்த விண்ணப்பத்தின்பேரில் பதிவாளர் ஒரு சங்கத்தின் பதிவை ரத்து செய்யலாம்.

(18) சங்கத்தின் பதிவு ரத்து உத்திரவு அமலுக்கு வந்தவுடன் சங்கத்தைக் கலைக்கும் (Liquidator) அதிகாரியாக ஒருவரைப் பதிவாளர் நியமிக்கலாம்.

(19) பதிவு தொடர்பாக சட்டத்தில் குறிக்கப்பட்ட நிபந்தனைகள் எதிலிருந்தும் ஒரு சங்கத்திற்கோ அல்லது ஒருவகைப் பட்ட சங்கங்களுக்கோ மாநில அரசாங்கம் விலக்கு அளிக்கலாம்.

(20) மாநில அரசாங்கம் சட்டத்தின் எந்தச் சரத்திலிருந்தும் ஒரு சங்கத்திற்கோ அல்லது ஒருவகைப்பட்ட சங்கங்களுக்கோ விலக்கு அளிக்கலாம்.

(21) சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்படாமல் இனி அமைக்கப் படும் யாதொரு சங்கமும் தன்னுடைய பெயரில் 'கூட்டுறவு' (Co-operative) என்ற சொல்லைப் பயன்படுத்தலாகாது.

4. சர். எட்வர்ட் மெக்லகன் குழு அறிக்கை 1915 (Report of Sir Edward Maclagan commitee, 1915)

கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியையும் குறைபாடுகளையும் செயல்முறையையும் ஆராய்வதற்குத் தக்க தருணம் கிட்டிவிட்டது என்று 1914ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கம் கருதியது. அதற்காக அரசாங்கம் சர். எட்வர்ட் மெக்லகன் (Sir. Edward Maclagan) அவர்களின் தலைமையில் ஒரு குழுவை நியமித்தது. கூட்டுறவு இயக்கம், குறிப்பாக அதனுடைய மேல் கட்டங்களிலும் நிதி நிலைமையிலும் சரியான முறையில் முன்னேறி வருகிறதா என்பதைப் பரிசீலனை செய்யும்படி அந்தக் குழு கேட்டுக் கொள்ளப்பட்டது. கூட்டுறவு இயக்கத்தைக் குறிப்பாக அதனுடைய மேல் நிலையில் இயங்கும் நிதி அமைப்பை உயர்நிலைச் சங்கங்களைச் சீர்திருத்தம் செய்வதற்காக அந்தக் குழு மிக முக்கியமான பரிந்துரைகள் பல செய்தது. இந்தியாவில் கூட்டுறவுச் சங்கங்கள் இயங்கும் முறையைப்பற்றி வெளிவந்த அந்தக் குழுவின் அறிக்கை கூட்டுறவு இயக்க வரலாற்றின் அடிப்படை ஏடு (Classic Document) ஆகும். குழுவின் பரிந்துரைகளை அரசாங்கம் ஏற்று கூட்டுறவுத் துறைகளின் நடைமுறையில் அவற்றைப் புகுத்தியது. அந்தக் குழுவின் அறிக்கையில் வழங்கப்பட்டிருந்த அறிவுரைகளையும், முன்னேற்பாடுகளையும் பின்பற்றாத காரணத்தினால் பல மாநிலங்களில் அடிக்கடிக் கூட்டுறவு இயக்கம் சரியாக இயங்கவில்லை.

5. மாண்டேகு செம்ஸ்போர்டு அரசியல் சீர்திருத்தங்கள்–1919 (Montagu Chemsford refrrus-Reforms Act of 1919)

1919ஆம் ஆண்டில் ஏற்பட்ட மாண்டேகு செம்ஸ்போர்டு அரசியல் சீர்திருத்தச் சட்டத்தின்படி கூட்டுறவு இயக்கம் மாநில அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டு (Provincial subject), மாநிலகளில் கூட்டுறவு இயக்கம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அமைச்சர் அவையால் (Popular Ministry) நிருவகிக்கப்பட்டது. (Transferred Subject) கூட்டுறவு இயக்கம் பல துறையில் முன்னேற்றம் அடைந்துள்ள மாநிலங்களில் 1912ஆம் ஆண்டின் எளிய சட்டம் பலதரப்பட்ட வளர்ச்சிக்கு இடம் தரவில்லை என்று அறிந்து மாநிலங்கள் பிரத்தியேகமான புதிய சட்டத்தை நிறைவேற்றிக்கொண்டன. இம் மாதிரிப் புதிய சட்டம் முதன் முதலில் நிறைவேற்றிய மாநிலம் பம்பாய் மாநிலம் ஆகும். அந்த மாநிலம் இயற்றிய புதிய கூட்டுறவுச் சட்டம் 1925ஆம் ஆண்டில் அமலுக்கு வந்தது. பிறகு சென்னை, பீஹார், ஒரிசா, வங்காள மாநிலங்கள் முறையே 1932, 1935, 1940ஆம்

ஆண்டுகளில் தனிப்பட்ட சொந்தச் சட்டங்களை நிறைவேற்றின. இந்த மாநிலங்களில் புதியச் சட்டம் இயற்றப்பட்டபோதிலும் அந்த ஒவ்வொரு சட்டத்திலும் 1912ஆம் வருடத்தியச் சட்டத்தின் முக்கிய அம்சங்கள் மறுபடியும் இடம் பெற்றன. 1919ஆம் ஆண்டிலிருந்து பல அகில இந்தியக் குழுக்களும் மாநிலக் குழுக் களும் நாட்டில் கூட்டுறவுச் சங்கங்கள் இயங்கும் நிலைமையை ஆராய்ந்து கூட்டுறவுச்சங்கங்களை மேம்பாடுறச் செய்யவும் வளர்ச்சி அடையச் செய்யவும் பல பரிந்துரைகளைச் செய்தன. இந்தப் பரிந்துரைகளில் சில அமலில் இருந்த கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் தேவைப்பட்ட திருத்தங்களும் ஆகும். எனவே, சில மாநிலங்களில் அமலில் இருந்துவந்த 1912ஆம் ஆண்டுச் சட்டமும் இதரமாநிலங்களில் இயற்றப்பட்ட தனிக் கூட்டுறவுச் சட்டங்களும் அவ்வப்போது மாகாணச் சட்ட மன்றங்களால் திருத்தம் செய்யப்பட்டன.

6. சுதந்திரத்திற்குப் (1948) பிற்பட்ட காலம் (Post-Independence-period)

1948ஆம் ஆண்டில் நம்நாடு அடைந்த சுதந்திரத்தின் காரண மாகப் பெரும்பாலும் மன்னர்கள் ஆண்டுவந்த பகுதிகளை இணைத்து இந்திய யூனியனில் புதிய மாநிலங்கள் தோன்றின. இம்மாதிரி தோன்றிய மாநிலங்களில் உதாரணமாக சௌராஷ்டிரா மாநிலத்தில் கூட்டுறவுச் சங்கங்களைப் பராமரிக்க ஒரு சட்டமும் இல்லாமலே இருந்தது. மத்தியப்பிரதேசம் போன்ற இதர மாநிலங்களில் கூட்டுறவுச் சட்டம் புதிய மாநிலத்தின் ஒரு பகுதிக்கு மட்டும் இருந்தது. ஹைதராபாத், மைசூர் போன்ற இன்னும் சில மாநிலங்களில் கூட்டுறவுச் சட்டம் அமலில் இருந்தும், பழைய பிரிட்டிஷ் மாநிலங்களில் இருந்துவந்த கூட்டு றவுச் சட்டத்திற்கு இணங்குமாறு திருத்தம் செய்ய வேண்டிய அவசியம் உணரப்பட்டது. அதன் காரணமாக 1947ஆம் ஆண்டி லிருந்து 1954ஆம் ஆண்டுவரை புதிய மாநிலங்களில் பல, 1912ஆம் ஆண்டுச் சட்டத்தையோ அல்லது மற்றோர் மாநிலத்தில் அமலில் இருக்கும் வேறு ஒரு சட்டத்தையோ அமல் செய்தன. புதிய மாநிலங்களில் சில, பம்பாய் அல்லது சென்னை மாநிலத்தில் அமலில் இருந்த கூட்டுறவுச் சட்டத்தின் அடிப் படையில் புதிய கூட்டுறவுச் சட்டங்களை இயற்றிக்கொண்டன.

7. இந்தியக் கூட்டுறவுச் சட்டக்குழு 1957 (Committee on Co-opeative Law-India 1957)

இந்திய ரிசர்வ் வங்கியால் (Reserve Bank of India) நியமிக்கப் பட்ட அகில இந்தியக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை 1954

ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் வெளியிடப்பட்டது. குழுவின் பரிந்துரைகளை அமல்படுத்தவும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்த கூட்டுறவுத் திட்டங்களை அமல் படுத்த வசதி ஏற்படுத்தவும் நாட்டில் கூட்டுறவுச் சங்கங்களின் தொடர்பாக அமலில் இருக்கும் சட்டங்களை எளிமையாக்கவும் தற்காலத் தேவைக்கு ஏற்றவாறு சீரமைப்பதற்கும் யோசனை கூறக் கூட்டுறவுச் சட்டக்குழு ஒன்று இந்திய அரசாங்கத்தால் நியமிக்கப் பட்டு அதன் அறிக்கை 1957ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. நாடு முழுவதும் கூட்டுறவுச் சங்கங்களின் தொடர்பாக அமலில் இருக்கும் சட்டத்தை ஒழுங்குபடுத்தும் நோக்கம் கொண்டு பல மாநிலங்களில் அமலில் இருக்கும் கூட்டுறவுச் சட்டங்களைத் திருத்தம் செய்வது அவசியம் என்று இந்தக் குழு கருதியது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்ட பல கூட்டுறவு வளர்ச்சித் திட்டங்களையும் அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் சிபாரிசுகளை அமல் நடத்துவதற்கும் ஏற்பட்ட அவசியத்தின் காரணமாகக் கூட்டுறவுச் சட்டங்களைத் திருத்தவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது என்று இந்தக்குழு சுட்டிக் காட்டியது. மேலும், மாநிலச்சீரமைப்பினுல் பல தரப்பட்ட சட்டங்களும் விதிகளும் அமலில் இருந்த நிலப் பரப்புகள் ஒன்ருகக் கொண்டுவரப்பட்டன. உதாரணமாக, பம்பாய் போன்ற ஓர் மாநிலத்தில் மூன்று அல்லது நான்கு பல்வேறு பட்ட சட்டங்கள் அமலில் இருந்தன. மத்தியப் பிரதேசம், மைசூர், ஆந்திரா, இராஜஸ்தான், கேரளா, மேற்கு வங்காளம் முதலிய மாநிலங்களிலும் இதே நிலைமை இருந்தது. ஒரு நாட்டைச் சேர்ந்த பல்வேறுபட்ட பாகங்களில் இயங்கும் கூட்டுறவுச் சங்கங்கள் தொடர்பாக அமலில் இருக்கும் சட்டங் களில் ஒருமைப்பாடு ஏற்பட வேண்டும் என்று கருதி குழுவினர் கூட்டுறவுச் சட்டத்தைத் திருத்துவதன் அவசியத்தை உணர்ந் தார்கள். ஆகவே, மாநிலங்களுக்கு வழிகாட்டியாக ஒரு மாதிரி கூட்டுறவுச் சங்கங்களின் மசோதாவையும் (Model Co-operative Socities Bill) மாதிரி விதிகளையும் (Model Rules) குழு தயாரித்தது.

1957ஆம் ஆண்டு குழுவினரால் தயாரிக்கப்பட்ட இந்த மாதிரி மசோதாவும் மாதிரி விதிகளும் மாதிரி உப விதிகளும் மாகாண அரசாங்கங்களுக்கு அனுப்பப்பட்டன. குழுவின் சிபாரிசுகளை அனுசரித்தும் மாநிலத்தின் உள்ளூர் நிலைமையை அனுசரித்தும் தங்கள் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தை மாற்றி அமைக்குமாறு மாநில அரசாங்கங்கள் கேட்டுக்கொள்ளப்பட்டன.

**8. கூட்டுறவுச் சட்டத்தைப்பற்றிய தேசிய அபிவிருத்தி அவையின் தீர்மானம் (1958) (National Development Council Resolution on Co-operative Legistation, 1958)**

1958ஆம் ஆண்டில் நவம்பர் மாதத்தில் நடைபெற்ற கூட்டத்தில் தேசிய அபிவிருத்தி அவை, நாட்டில் விவசாய உற்பத்தியைப் பெருக்கவும் உள்ளூர் ஆள் வலிமையினையும் (local man power) இன்னும் இதர வளங்களையும் ஒன்று திரட்டவும் பொதுவாகக் கிராமப் பொருளாதாரத்தைத் திருத்தி அமைக்கும் பணியில் கூட்டுறவு இயக்கம் வகிக்கவேண்டிய பொறுப்பை ஆலோசனை செய்தது. அமலில் இருக்கும் நடைமுறைகள் கூட்டுறவு இயக்கத்தை மக்கள் இயக்கமாக வளர்ச்சியுறுவதைத் தடை செய்கின்றன என்றும், இந்த இயக்கத்தில் சிறு வகுப்பினர் தங்கள் வேலைகளையும் நடவடிக்கைகளையும் அதிக அரசாங்கத் தலையீடு இல்லாமல் கூட்டுறவு முறையில் அமைத்துச் சுதந்திரமாகச் செயலாற்ற வேண்டும் என்றும் அந்த அவை கருத்துத் தெரிவித்தது. நடைமுறையில் இருக்கும் கூட்டுறவுச் சட்டத்தில் காணப்படும் வரையறைப்படுத்தும் அம்சங்களை நீக்கி, தற்போதுள்ள கூட்டுறவுச் சட்டங்களையும் மாநிலங்களில் யோசனையில் இருக்கும் மாதிரிச் சட்டத்தையும் விதிகளையும், கூட்டுறவுக் கொள்கைபற்றி (Co-operative policy) அவர்கள். தீர்மானத்தில் விவரித்து இருக்கும் முறைப்படித் திருத்தவேண்டும் என்றும் அவையினர் கூறினார்கள். தேசிய அபிவிருத்தி அவையின் இந்தத் தீர்மானத்தை அனுசரித்தும் இந்திய அரசாங்கத்தால் மாநில அரசாங்கங்களுக்குத் தெரிவிக்கப்பட்டிருந்த ஆலோசனைகளை அனுசரித்தும் கூட்டுறவுச் சட்டத்தை எளிமைப் படுத்தித் தற்காலத் தேவைகளுக்கு ஏற்பச் சீரமைக்கும் செய்தி ஆராயப்பட்டது. இந்திய அரசாங்கத்தால் கூறப்பட்ட யோசனைகள் கீழ்க்கண்ட பொருள்களைக் குறித்தவை

(அ) (1) சங்கங்கள் பதிவு செய்யுமுன் கவனிக்க வேண்டிய நிபந்தனைகள்

(2) கூட்டுறவுச் சங்கங்களில் சச்சரவுகளைத் தீர்க்கும் முறைகள்

(3) சரிவர செயல்படாத அல்லது துர் நிருவாகம் செய்யப் படும் சங்கங்களில் நிருவாகக் குழுவை நீக்குதல்,

(4) சங்கத்தின் செயல்களைப் பரிசீலனை செய்யும் அதிகாரமும், பதிவாளரும் அவருடைய அலுவலரும் பிறப்பிக்கும் உத்தரவுகளை ஆராய்வதற்கும் மாற்றி

அமைப்பதற்கும் அதிகாரமும் மாநில அரசாங்கங்களுக்கு வழங்குதல்,

(5) சட்டத்தில் கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களுக்கும் நில அடைமான வங்கிகளுக்கும் தனிப்பட்ட சரத்துகள் ஏற்படுத்துதல்,

(6) கூட்டுறவுச் சங்கத்தில் உறுப்பினர் ஆதல் குறித்தும் உறுப்பினர் ஆதலை மறுப்பு செய்யும்போது விண்ணப்பம் செய்து கொள்ளுதல்,

(7) உத்திரவாதம், மானியம், கடன், பங்குத் தொகை முதலியவற்றின்மூலம் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்கப்படும் அரசாங்க உதவிக்குச் சட்டபூர்வமான சரத்துகள் ஏற்படுத்துதல்,

(8) மக்களுடைய அனுமதி பெற்று சங்கங்களைப் பிரிப்பதற்கும் ஒன்று சேர்ப்பதற்கும் வசதி செய்தல்,

(9) சங்கங்களை ஆய்வு செய்ய அரசாங்கத்திற்கும் கூட்டுறவு மத்திய வங்கிகளுக்கும் அதிகாரம் அளித்தல்,

(10) கூட்டுறவுச் சங்கங்களில் தீர்ப்புகளையும், தீர்ப்பாணைகளையும், உத்திரவுகளையும் காலதாமதம் இல்லாமல் நிறைவேற்ற வழிமுறைகள் வகுத்தும் அதற்கு வேண்டிய சரத்துகள் கூட்டுறவுச் சட்டத்தில் இடம் பெறுதல்,

(ஆ) கூட்டுறவுச் சட்டத்தில் தற்போதுள்ள சரத்துகள் கீழ்க்கண்ட வகையில் தாராளமாக்குதல்.

(1) விவசாயக் கடன் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பிலும் அல்லது வரையறுக்கப்படாத பொறுப்பிலும் இருக்கலாம்.

(2) தனிப்பட்ட தகுதி வாய்ந்த சிப்பந்திகள் மூலமாகவாவது அல்லது மாகாண கூட்டுறவு யூனியன் போன்ற சரிவர இயங்கும் அரசாங்கப் பற்றற்ற அமைப்பின் மூலமாவது சங்கங்களைப் பதிவாளர்கள் ஆண்டுத் தணிக்கை செய்யக் கூட்டுறவுச் சட்டம் இடம் தரவேண்டும்.

(3) அரசாங்க அதிகாரிகள் அடங்கிய அல்லது அரசாங்கப் பற்றற்றவர்கள் அடங்கிய மேல்முறையீடு பற்றிய தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றம் (Appellate

Tribunal) ஒன்றை ஒவ்வொரு மாநிலமும் அமைக்க முடிவு செய்யவேண்டும்.

(இ) கீழ்க் குறிக்கப்பட்ட சில சரத்துகள் தற்போது அமலிலுள்ள கூட்டுறவுச் சட்டத்திலிருந்து நீக்கப்பட வேண்டும்.

(1) சங்கங்களைக் கட்டாயமாக இணைக்கவேண்டுமென்ற சரத்து.

(2) சில மாநிலங்களில் கூட்டுறவுச் சங்க நிருவாகக் குழுவின் பெரும்பாலார் (majority) செய்யும் முடிவுகளை மறுத்து, மேல் முறையீடு செய்யும் அதிகாரம் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட நிருவாகக் குழு உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. அப்படி மேல்முறையீடு செய்திருந்தால், மேல்முறையீட்டின் முடிவு தெரியும்வரை நிருவாகக் குழு செய்திருந்த முடிவுகளைச் சங்கங்கள் அமல் நடத்தக்கூடாது என்ற சரத்து.

(3) சில மாநிலங்களில் கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகக் குழு உறுப்பினர்கள் மூன்று முதல் ஆறு பேர்கள் வரை ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அரசாங்கத்தால் நியமனம் செய்யப்படுகிறார்கள். இந்த முறை மாற்றப்பட வேண்டும்.

மேலும் கூட்டுறவுச் சங்கங்கள் இயங்கும் முறையில் பல கட்டங்களில் நடைமுறைத் தாமதங்கள் (procesteral delays) காணப்படுகின்றன; அத் தாமதங்களைக் குறைப்பதற்குத் தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

1960ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் கீழ்க்கண்ட இதர யோசனைகளும் மத்திய அரசால் மாநில அரசாங்கங்களுக்குத் தெரிவிக்கப்பட்டன :

(1) இணைக்கப்பட்ட சங்கங்கள் சார்பில் பதிவாளர்களுடைய அதிகாரங்கள் பலவற்றை, மத்திய அல்லது கூட்டிணைந்த கூட்டுறவுச் சங்கங்களுக்கு வழங்க மாநில அரசாங்கங்களுக்கு அனுமதி அளிக்கும் வகையில் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் ஒரு சரத்தை ஏற்படுத்த வேண்டும்.

(2) ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கமும் பதிவுக்காகக் கொடுக்கப்படும் விண்ணப்பத்தின்பேரில் ஒரு குறித்த

காலவரையறைக்குள் (disposal) பதிவாளர் உத்தரவு தெரிவிக்கவேண்டும் என்ற சரத்தும் சட்டத்தில் இடம் பெறவேண்டும்.

(3) பெரிய கூட்டுறவுச் சங்கங்களின் கணக்குகளைப் பதிவாளரால் அனுமதிக்கப்பட்ட குழுவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சாசனக் கணக்கர்கள் (cahrtered accountants) தணிக்கை செய்வதற்குக் கூட்டுறவுச் சட்டம் அனுமதிக்கவேண்டும். மேற் கண்ட சிபாரிசுகளின் விளைவாக அநேக மாநில அரசாங்கங்கள் புதிய கூட்டுறவுச் சட்டங்களை இயற்றின.

மகாராஷ்டிராவில் கூட்டுறவுச் சங்கச் சட்டம் 1960–லும், பஞ்சாபில் 1961–லும், குஜராத்தில் 1962–லும், ஆந்திரப் பிரதேசத்தில் 1964–லும், உத்திரப் பிரதேசத்தில் 1962–லும் இயற்றப்பட்டன. மைசூர் மாநிலத்தில் அமலில் இருந்த 1958ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கச் சட்டம் 1964 ஆம் ஆண்டில் திருத்தப்பட்டது. தமிழ்நாட்டில் 1961 ஆம் ஆண்டு சென்னை கூட்டுறவுச் சங்கத் திருத்தச் சட்டம் நிறைவேற்றப் பட்டது. இந்தச் சட்டம் 1962ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 4ஆம் தேதி அன்று குடியரசுத் தலைவரின் அங்கீகாரம் பெற்று (assent) 14–3–1962ஆம் தேதி தமிழ்நாடு அரசிதழில் (Fort St George Gazette) பிரசுரிக்கப்பட்டது. 2–10–1963 தேதியிலிருந்து இந்தச் சட்டம் அமலுக்குவந்தது.

9. மிருதா குழு (1964) அறிக்கையும் அதற்குப் பின்னரும் (Mirdha Committce's Refort (1964) and after)

1964ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம், ஸ்ரீ ராம் நிவாஸ் மிருதாவின் தலைமையில் ஒரு கூட்டுறவுக் குழுவை இந்திய அரசாங்கம் நியமித்தது. அக் குழு, தற்போது அமலிலுள்ள கூட்டுறவுச் சட்டங்களையும், விதிகளையும், நடைமுறைகளையும் ஆராயவும், கூட்டுறவு நிறுவனங்களில் ஊன்றியநலமிகள் (Vested Interests) நிரந்தரமாகப் பதவியில் இருப்பதை அனுமதிக்கும் கூட்டுறவு சட்டத்தில் உள்ள குறைபாடுகளைக் கண்டுபிடிக்கவும், அம் மாதிரி ஊன்றிய நலமிகளைச் சங்கங்களிலிருந்து நீக்கவும், அவர்கள் சங்கங்களில் நுழையாமல் தடுப்பதற்கும் தகுந்த யோசனைகளைக் கூறவும் கேட்டுக் கொள்ளப்பட்டது. ஆனால், கூட்டுறவுச் சட்டக் குழுவால் (Commtiee on Co–op. Law) தயாரிக்கப்பட்ட மாதிரிக் கூட்டுறவுச் சங்க மசோதாவில் (Bill) சேர்க்கப்பட்டிருக்கும் சரத்துகளே இதற்குப் போதுமானவை

யாகையால் வேறு சட்டத்திருத்தம் அவசியம் இல்லையென்று குழு தன் அறிக்கையில் தெரிவித்தது. எனினும் இந்தக் குழுவின் அறிக்கையையொட்டியும், 1968ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் சென்னையில் நடைபெற்ற முதலமைச்சர்கள் கூட்டுறவு மாநாட்டின் ஆலோசனைகளையொட்டியும், இந்திய அரசு ஒரு சட்டமியற்றும் திட்டத்தையும் நிருவாகச் செயல் திட்டத்தையும் தயாரித்தது. எனவே, 1964 ஆம் ஆண்டிலிருந்து 1972ஆம் ஆண்டு வரையுள்ள காலத்தில் பல்வேறு மாநிலக் கூட்டுறவுச் சட்டங்களில் கீழ்க்கண்ட வகையான திருத்தங்கள் செய்யப்பட்டன.

(அ) கூட்டுறவு நிறுவனங்களின் அங்கத்துவத்திலிருந்து வட்டித் தொழில் செய்பவர்களையும் மற்றும் இதர தரகர்களையும் விலக்கி வைப்பதற்கான ஏற்பாடு செய்தல்;

(ஆ) ஒரே நிறுவனங்களில் இரண்டு பதவிக் காலத்திற்கு மேற்பட்டுப் பதவி வகிப்பதைத் தடை செய்தல்;

(இ) இரண்டு நிறுவனங்களுக்கு மேற்பட்ட நிறுவனங்களில் ஒரேசமயத்தில் பதவி வகிப்பதைத் தடை செய்தல்;

(ஈ) நிருவாகக் குழு அலுவலர்களுக்கு (office-bearers) வழங்கப்படும் கடன்களை ஒழுங்குபடுத்துதல்;

(உ) சங்கங்களின் நிருவாகத்தில் வலிவற்ற மக்கள் பகுதியினர்களுக்கு இடங்களை ஒதுக்குதல்;

(ஊ) ஒரு சுதந்திரமான அதிகாரியால் கூட்டுறவு நிறுவனங்களில் தேர்தல்களை ஒழுங்குபடுத்துதல்.

இந்தக் காலத்தில் கூட்டுறவு இயக்கம் சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினரின் பொருளாதாரப் புனர் வாழ்வுக்கான ஒரு திறமை வாய்ந்த சாதனம் என்பது அதிகமாக வலியுறுத்தப்பட்டு அதன் விளைவாகப் பல மாநிலங்கள் தங்கள் கூட்டுறவுச் சட்டத்தில் சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினரின் நலன்களைக் கூட்டுறவு நிறுவனங்களில் பாதுகாப்பதற்கும் வளர்ப்பதற்கும் சரத்துகள் ஏற்பாடு செய்தன. மற்றும், கூட்டுறவு நிறுவனங்களின் நற்பலன்களைக் குறைந்த பொருள் வசதியும் குறைந்த கடன் வாங்கும் திறனுமுள்ள சிறு நபர்களுக்குச் சேர விடாமல் தடை செய்து வரும் கூட்டுறவு நிறுவனங்களிலுள்ள ஊன்றிய நலமிகளைத் தடுத்து நிறுத்த, சட்டமியற்றும் அதிகாரங்கள் உபயோகப்படுத்தப்பட்டன. எனினும், கூட்டுறவு நிறுவனங்கள் தேசியக் கொள்கைகளின் ஒரு கருவியாகவும் மாநிலத்திட்டங்களையும் தேசியத் திட்டங்களையும் அமல் நடத்துவதற்கான ஒரு கருவியாகவும் செயல்பட்டாலும் கூட, இந்த நிறுவனங்கள் தங்கள் சுயேச்சைத் தன்மையையும், மக்களாட்சித் தன்மையையும், சுயாட்சித் தன்மையையும்

மக்கள் இயக்கத்தன்மையையும் நிலையாக வைத்துக்கொள்ள வேண்டும். நம் நாட்டில் கூட்டுறவுச் சட்டத்தின் வருங்காலப் போக்கு, கூட்டுறவு அடிப்படைக் கொள்கைகளையும் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியினையும், அவசரத் தேவையினையும், பெரிதும் சார்ந்திருக்கும்.

10. பல மாநிலங்களில் செயல்படும் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் (1942) : (1942ஆம் வருடத்திய VIவது சட்டம்) ; (Multi-Unit Co-operative Socicties Act No: VI Of 1942)

இந்தச் சட்டம் மத்தியச் சட்டம் (Central Act)ஆகும். பதிவு செய்யப்பட்ட மாநிலத்தில் மட்டுமல்லாமல், இதர மாநிலங்களிலும் செயல்படும் கூட்டுறவுச் சங்கங்களை அமைக்கவும், ஒழுங்குபடுத்தவும், கலைக்கவும் இந்தச் சட்டம் அனுமதியளிக்கின்றது. 1934ஆம் ஆண்டில் டெல்லியில் நடைபெற்ற கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளர்களுடைய பதினொன்றும் மாநாட்டில், ஒரு மாநிலத்திற்கு மேற்பட்ட விவகார எல்லையையுடைய கூட்டுறவுச் சங்கங்களைப் பதிவு செய்வதற்கான ஓர் அனைத்திந்தியக் கூட்டுறவுச் சட்டம் அவசியம் என்ற யோசனை கூறப்பட்டது. இந்திய நாடெங்கிலும் அல்லது ஒரு மாநிலத்திற்கு மேற்பட்ட எல்லையில் இயங்கும் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை அதிகரித்ததினால், அத்தகைய சட்டம் தேவைப்பட்டது. இந்தச் சங்கங்களின் செயற்பாட்டில், அநேக நிருவாகப் பிரச்சனைகள் எழுந்தன. அதே சமயத்தில், அத்தகையச் சங்கங்கள் பல திறம்பட வேலை செய்த காரணத்தினால், அவற்றின் விவகார எல்லையைத் தடைக் கட்டினால், அவற்றின் வியாபாரத்திற்குப் பெருமளவு நட்டத்தை விளைவிக்குமாகையால், அச் சங்கங்களின் உறுப்பினர்களும், சங்கங்கள் செயல்படும் மாநிலங்களும், நல்ல வேலை செய்யும் அத்தகைய கூட்டுறவுச் சங்கங்களின் நற்பலன்களை இழந்து விடுவார்கள். இந்த இக்கட்டான நிலைமையைச் சமாளிக்கவும், ஏற்படக்கூடிய நிருவாகச் சிக்கல்களைத் தீர்ப்பதற்கும் இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. ஒரு கூட்டுறவுச் சங்கமானது அது பதிவு செய்யப்பட்ட மாநிலத்தில் மட்டும் அல்லாமல் வேறோர் மாநிலத்தில் தனது கிளை அல்லது வியாபார நிலையத்தை அமைத்தால், எந்த மாநிலத்தில் அது தனது கிளை அல்லது வியாபார இடத்தை ஆரம்பிக்கின்றதோ அந்த மாநிலத்தின் பதிவாளருக்கு ஆறு மாத காலத்திற்குள் தனது உபவிதிகளை அனுப்பி வைக்கவேண்டும். மேலும், அந்த மாநிலத்தின் பதிவாளரின் தணிக்கைக்கும் ஆய்வுக்கும் அது உட்படவேண்டும். இந்தச் சட்டத்தின்கீழ் 1958ஆம் ஆண்டில் விதிகள் (Multi-Unit Co-Operative Societies Rules of 1958) அமைக்கப்பட்டன.

# 3. இந்தியாவில் தனிக் கூட்டுறவுச் சட்டத்தின் அவசியமும் நோக்கமும்

## (Need for Separate Co-operative Regislation in India)

### 1. கூட்டுறவு நிறுவனங்களுக்கு ஒரு தனிச் சட்டத்தின் அவசியம் (Need for seprate Law for Co-operative)

1904ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கம் கூட்டுறவு நாணயச் சங்கங்களின் சட்டத்தை நிறைவேற்றியபோது கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தனியாக ஒரு சட்டத்தை ஏற்படுத்துவதன் அவசியத்தைப் பற்றி விளக்கம் தருங்கால், இந்தியக் கம்பெனிச் சட்டத்தின் (Indian Companies Act, 1882) ஆட்சி எல்லை (Purview) யிலிருந்து கூட்டுறவு நிறுவனங்களை விலக்கிச் சாமானிய மக்கள் குறிப்பாகக் கிராமங்களில் உள்ள மக்கள், புரிந்து கொள்ளக்கூடிய வகையில் முக்கிய ஒரு சில சரத்துகள் மாத்திரம் அடங்கியதும், பின்னால் மாறுதல் செய்வதற்குப் போதிய இடமளிக்கும். ஒரு எளிய சட்டத்தை நிறைவேற்றுவதுதான் அரசாங்கத்தின் நோக்கம் என்றும், கம்பெனிச் சட்டத்தில் உள்ள நுட்பமாகச் செய்யப்பட்ட (Claborate) மிகப் பல சரத்துகளை மக்கள் புரிந்து கொள்ளமாட்டார்கள் என்றும், ஆகையினால் கம்பெனிச் சட்டம் கூட்டுறவு நிறுவனங்களுக்குப் பொருந்தாததும் சிக்கலானதும் ஆகும் என்றும், மேலும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அவைகள் வளர்ச்சிக்காகச் சிறப்பு உரிமைகளையும் சலுகைகளையும் அளிக்க அரசாங்கம் விரும்புவதால் ஒரு தனிச் சட்டம் அவசியம் என்றும் அரசாங்கம் கருதியது.

எல்லாவற்றையும்விட சங்கங்கள் கூட்டுறவுக் கொள்கைகளின் படியும் தொழில் வியாபார முறைகளின்படியும் இயங்குமாறு அவைகளின் செயல் வகையை ஒழுங்குபடுத்தவும், கூட்டுறவு இயக்கத்திற்கு வழிகாட்டியாகச் செயலாற்றி அதைக் கட்டுப் படுத்தி அறிவுரை கூறவும் ஒரு தனி அரசாங்கத் துறையால்

கூட்டுறவுச் சங்கம் பராமரிக்கப்பட வேண்டியவை இந்தச் செயலுக்காக ஒவ்வொரு மாநிலத்திலும் ஏற்படுத்தப்பட்ட தனி துறையின் வசம் கூட்டுறவுச் சங்கங்களில் சரியான முறையில் நிருவாகம் நடப்பதையும் கணக்குகள் தவறு இல்லாமல் சரிவர வைக்கப்பட்டும் அவ்வப்போது தணிக்கை செய்யப்பட்டுவருவதையும் உறுதிப்படுத்தும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. இந்தக் காரணங்களால் கூட்டுறவுச் சங்கங்களுக்காகத் தனிச் சட்டத்தின் அவசியம் ஏற்பட்டு இன்றுவரை அந்த அவசியம் இருந்து வருகிறது.

2. கூட்டுறவுச் சட்டத்தின் நோக்கமும் நோக்க எல்லையும் (Scope and object of Co-Operative Law)

கூட்டுறவுச் சட்டமானது கூட்டுறவுத் தேவதை அணிந்து கொள்ளும் சட்ட ஆடை போன்றது. ஏனென்றால் டாக்டர் லாஸ்ஜேஸ்லோ வால்லியோ (Dr. Laszlo Valeo) அவர்கள் கூறுகிறபடி கூட்டுறவுச் சட்டத்தின் வரலாற்றுத் தொடர்பான வளர்ச்சியைக் கவனித்தால், ஒழுங்கான சட்டம் கூட்டுறவின் இயற்கையான வளர்ச்சியைப் பின்தொடர்ந்துதான் இருக்க முடியும் என்று தெரிகிறது. கூட்டுறவுச் சட்டமானது செயலாற்றுகின்ற ஒரு கூட்டுறவுச் சங்கம் தோன்றும் முன்னமேயே ஏற்பட முடியாது.

கூட்டுறவுச் சட்டத்தின் முக்கியக் கருத்தும் (puapose) வேலையும் (function) ஆவன.

(1) வழக்குத் தொடர்வதற்கும், தொடரப்படுவதற்கும் அருகதையுடன் முழு நிறுவனமாய் இயங்கும் நிலையை கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்கிறது.

(2) கூட்டுறவு சங்கங்களின் சரியான கேடுராத நிருவாகத்தையும், கூட்டுறவுப் பண்பையும் இடையூறு வராமல் உறுதிப்படுத்துகிறது. கூட்டுறவு அல்லாத போலி நிறுவனங்களையும், திட்டங்களையும் விலக்கி ஊன்றிய நலக் கும்பலை வளர்க்க விடாமல் தடுக்கிறது.

(3) கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சிறப்பான வசதிகளை ஏற்படுத்தி விதிவிலக்குகளையும் தருகிறது.

(4) பொறுப்பில்லாத நிருவாகத்தையும், மோசடிச் செயல்களையும் தடுத்துத்திறமை வாய்ந்த, முறைப்படி அமைந்த, நிருவாகத்தைவசதி செய்து வளர்க்கிறது. சரியான குற்றமில்லாத கணக்கு வைத்தல், தொழிற் கொள்கைகளைப்

(bussiness principles) பின்பற்றுதல், நிதியைச் சரிவரப் பயன்படுத்தல், தொடர்ந்து செயல்படும் மேற்பார்வை, தணிக்கை முதலியவைகளை உறுதிப்படுத்துகிறது.

(5) இவற்றுள் மிகவும் முக்கியமானது கூட்டுறவுக் கொள்கைகளைப் பின்பற்றுதல். கூட்டுறவுச் சட்டத்திலும் விதிகளிலும் கூட்டுறவு நிருவனங்களின் கூட்டுறவுப் பண்பைப் பாதுகாக்கும் பொருட்டு ஏற்படுத்தப் பட்டிருக்கும் சரத்துகள் பின்வரும் ஓர் அத்தியாயத்தில் விளக்கப்படும்.

3. கூட்டுறவுச் சட்டமும் விதிகளும் உப விதிகளும் (Co-operative Act, Rules, By Laws)

கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சம்பந்தப்பட்ட சட்டம் (Co-operative Law), அவைகளைச் சார்ந்த சட்டத்தில் (Act) உள்ள சரத்துகளில் மட்டும் இல்லாமல் அந்தச் சட்டத்தின்கீழ் ஏற்படுத்தப்பட்ட விதிகளிலும் (Rules, Framed under the Act) அடங்கி உள்ளது. சட்டங்கள், சட்டமன்றத்தில் நிறைவேற்றப்படுகின்றன. ஆனால், சட்டத்தின்கீழ் அமைக்கப்பெறும் விதிகளை அரசாங்கமே அமைத்து அவைகளைச் சட்ட மன்றங்களின் முன்பு வைக்கின்றது. சட்டத்தின்கீழ் விதிகளை அமைப்பதற்கு வழங்கப் பட்டிருக்கும் அதிகாரத்தையொட்டி அரசாங்கம் இந்த விதிகளை அமைக்கின்றது. இந்த மாநிலத்தில் 1961ஆம் வருடத்திய சென்னை கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 119ஆம் பிரிவின் கீழ் அரசாங்கம் தமிழ்நாடு முழுமைக்காகவும் அல்லது ஒரு பகுதிக்காகவும் எந்த ஒருபதிவு செய்யப்பட்ட சங்கத்திற்காகவோ அல்லது அம் மாதிரியான சங்கங்களின் வகுப்பிற்காகவோ சட்டத்தின் நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டு விதிகள் செய்யலாம், இந்தச் சட்டப்பிரிவின் கீழ் அரசாங்கம் எந்தக் காரியத்திற்கு அல்லது பொருள் பற்றி விதிகள் அமைக்கலாம் என்று சட்டம் குறிப்பிட்டுள்ளது. அம் மாதிரிச் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட விதிகள் அரசிதழில் (Fort. St George Gazette) பிரசுரிக்கப்பட வேண்டும். அம்மாதிரி பிரசுரமான தேதியிலிருந்தோ அல்லது பிரசுரத்தில் குறிக்கப்பட்ட வேறு எந்தத் தேதியிலிருந்தோ அந்த விதிகள் அமுலுக்கு வரும்.

சட்டம், விதிகள், இவை தவிர, ஒவ்வொரு சங்கத்திற்கும் அந்தச் சங்கத்தின் செயல் வகையைக் கட்டுப்படுத்த உப விதிகள் இருக்கின்றன. இந்த உப விதிகள் கூட்டுறவுத் துறையினரால் தமிழ்நாட்டில் கூட்டுறவுப் பதிவாளரால் ஆலோசனை சொல்லப் பட்ட மாதிரி உப விதிகளைத் தழுவி சங்கத்தால் ஏற்படுத்தப்

பட்டது. இந்த உப விதிகள் சங்கங்கள் பதிவு செய்யப்படும் காலத்தில் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. உப விதிகளில் மேற் கொண்டு ஏதாவது மாற்றங்கள் தேவைப்பட்டால் அந்த மாற்றங்கள் பின்னல் சங்கத்தின் பேரவையில் நிறைவேற்றப் படுகின்றன. 1961 ஆம் வருடத்திய சென்னை கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 119 பிரிவு (11) (c) சென்னை அரசாங் கத்திற்கு எந்தெந்தப் பொருள்களில் ஒரு கூட்டுறவுச் சங்கம் உப விதிகளை ஏற்படுத்திக் கொள்ளலாம் அல்லது ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதைக் கட்டளையிட அதிகாரம் கொடுத் திருக்கிறது. இந்த உப விதிகள் ஒரு கம்பெனியின் செயல்முறை விதிகளுக்கு (Articles of Association of Company) ஒப்பாகும். உபவிதிகள் ஒரு சங்கம் கூட்டுறவுக் கொள்கைகளுக்கும் கூட்டுறவுச் சட்டத்திற்கும் பொருந்துமாறு வேலை செய்யவேண்டும் என்பதை உறுதிப்படுத்துவதற்குத் தேவைப்படுகின்றன. ஒரு சங்கத்தின் நோக்கங்களையும், வேலைகளையும் நிருணயிக்கவும் அதன் நடை முறையை ஒழுங்குபடுத்தவும் இந்த உப விதிகள் தேவைப்படு கின்றன. ஆனல், அவை கூட்டுறவுச் சட்டத்திற்கோ அல்லது விதிகளுக்கோ முரண்பட்டு இருக்கக்கூடாது. அவற்றை மீறவும், புறக்கணிக்கவும் கூடாது. எனவே, சங்கங்களின் தொழில் முறைக்காக உப விதிகளை அமைக்கப் பேரவைகளுக்கு (General Assemblies) கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம், கூட்டுறவுச் சட்டத் திலும், விதிகளிலும் உள்ள சரத்துகளுக்கு உட்பட்டது. கூட்டுறவுச் சட்டம், விதிகள், இவைகளுடைய வரம்பிற்குள் சில சூழ்நிலைகளுக்குப் பொருந்த உப விதிகளை மாற்றவும், திருத்தவும் கூடும்.

**4. பழுதற்ற கூட்டுறவு முறையில் சங்கங்கள் வேலை செய்வதை உறுதிப்படுத்துவதற்காகச் சட்டத்திலும் விதிகளிலும் ஏற்படுத்தப்பட்ட சரத்துகள் (Provisions in the Act and the Rules to ensure the working of Societies on Sound Co-operative lines)**

கூட்டுறவுச் சங்கங்களுக்கான சட்டத்தின் முக்கிய நோக்கங்களின் ஒன்றும், கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தனிச் சட்டம் ஏற்படுத்துவதற்கான காரணங்களில் ஒன்றுமாக இருப்பது, கூட்டுறவு நிறுவனங்கள் மூலதாரமான அடித்தளமாய் அமைந்த கூட்டுறவுக் கொள்கைகளைப் பின்பற்றுகின்றன என்பதை உறுதிப்படுத்தி எந்த வகையிலும் கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் கூட்டுறவுத் தன்மையை இழந்து மற்ற சாதாரண தொழில் அல்லது வியாபார அடிப்படைபோல் ஆகிவிடக்கூடாது என்ப தாகும். கூட்டுறவு அல்லாத நிறுவனங்கள் கூட்டுறவு என்ற

பெயரின் மறைவால் வேலை செய்யாமல் இருக்கவும், கூட்டுறவுச் சட்டத்தைப் பயன்படுத்திப் போலிச் சங்கங்களும் பொய்ச் சங்கங்களும் புனைபெயர் சங்கங்களும் நிறுவப்படாமல் இருக்கும்படியும் பார்த்துக்கொள்ள நாம் முயலவேண்டும். கூட்டுறவுச் சங்கங்களுக்கு வழங்கப்படும் தனிச்சிறப்பு உரிமைகளுக்கும், சலுகைகளுக்கும் அரசாங்கம் அவைகளுக்கு வழங்கும் உதவிக்கும் காரணம் கூட்டுறவு சங்கங்கள் எளிய வருவாய் உள்ள மக்கள் கூட்டுறவு அடிப்படையில் ஒன்றுபட்டுச் செயலாற்றித் தங்கள் பொருளாதார நிலைமையை வளர்த்துக்கொள்ள முயலும் நிறுவனங்கள் என்பது தான். மேலும், கூட்டுறவுச் சங்கங்கள் மாறுபட்ட முறையில் செயல்பட ஆரம்பித்தால் இந்த உதவிகளை எல்லாம் பெறுவதற்கு அவை தகுதியானவை அல்ல என்பதும் ஒரு காரணமாகும். ஆகையால், கூட்டுறவு நிறுவனங்களின் கூட்டுறவுத் தன்மையைப் பாதுகாப்பதற்காகச் சட்டத்திலும் விதிகளிலும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. 1961ஆம் ஆண்டின் சென்னை கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திலும் அந்தச் சட்டத்தின்கீழ் ஏற்படுத்தப் பட்டவிதிகளிலும் இவற்றைக் காணலாம்.

(1) சட்டத்தின் தோற்றுவாய்: முதலில் சட்டத்தின் தோற்றுவாயில் (Preamble) சட்டத்தின் நோக்கத்தைக் கூறும்போது சிக்கனத்தையும் தன் உதவியும் பரஸ்பர உதவியையும் பொதுவான பொருளாதார மக்களிடையே வளர்த்து அதன் மூலம் விவசாயத்திலும் தொழிலிலும் சீர்திருத்தங்கள் உண்டுபண்ணுவதற்கும், உற்பத்தியில் முன்னிலும் சிறந்த முறைகளைக் கையாளுவதற்கும், முன்னிலும் சிறந்த முறையில் தொழில் நடத்துவதற்கும் வாழ்க்கையை முன்னிலும் சிறந்த முறையில் நடத்துவதற்கும், கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்கு வசதி அளிப்பது சட்டத்தின் நோக்கம் என்று கூறப்பட்டிருக்கிறது. சட்டத்தின் தோற்றுவாயில் இரண்டு செய்திகள் தெளிவாகின்றன. ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் நோக்கம் முக்கியமாகப் பொருளாதாரத்தைச் சார்ந்ததாக இருக்கவேண்டும். மதம், அரசியல், கலை, இயல், கிளர்ச்சி, விளையாட்டுத்துறை, முதலிய வேறு நோக்கம் கொண்ட சங்கங்கள் கூட்டுறவுச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்படக்கூடாது. உதாரணமாக, தொழிலாளர் சங்கங்கள் (Trade Unions) சங்கீத சபைகள் (Music clubs) போன்றவை கூட்டுறவுச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்படக் கூடாது. பொருளாதாரத் தேவை சங்கத்தில் சேரும் உறுப்பினர் எல்லாருக்கும் பொதுவானதாக இருக்கவேண்டும். இரண்டாவதாக, சிக்கனம், தன்னுதவி, பரஸ்பர உதவி இவைகளை உறுப்பினர்களிடையே வளர்க்க வேண்டும் என்பது வலியுறுத்தப்பட்டிருக்கிறது. சங்கத்தின்

உறுப்பினர்கள் தன்னுதவி என்ற உணர்ச்சியைப் பரப்பி மற்ற உறுப்பினர்களுக்கு உதவி செய்கையில் தாங்களே உதவப் படுகிறார்கள் என்ற உணர்ச்சியும் பரப்பப்பட வேண்டும். ஆகை-யால், பரஸ்பர உதவி அதாவது ஒருவருக்கொருவர் உதவிசெய்வது கூட்டுறவின் மிக முக்கிய ஒரு கொள்கையாகும். சிக்கனமும் மிகவும் முக்கியம் என்பதும் வலியுறுத்தப்பட்டிருக்கிறது. சிக்கனம் இல்லையெனில், சங்கத்தின் நடவடிக்கைகளால் ஏற்படும் எந்த ஒரு நன்மையும் உறுப்பினர் இழக்க நேரிடும். உறுப்பி னர்கள் வீண் செலவுகளைத் தவிர்த்துச் சங்கத்தால் வழங்கப்படும் நிதிகளைப் பயனுள்ள வழியில் செலவு செய்து சங்கம் செய்யும் சேவையை மிக நன்றாகப் பயன்படுத்தி அந்தச் சேவைகளால் நலம் பெறச் செய்யவேண்டும் என்பது ஒரு கூட்டுறவு நிறுவனத்தின் மூலதாரக் கொள்கை. உறுப்பினரின் சேமிப்பு அவர்களுக்கும் சங்கத்திற்கும் உதவும். ஆகையால், ஒருவருடைய பொருள் வளத்தை அதிகரிப்பதற்கும் அவருடைய நல்வாழ்வை வளர்ப் பதற்கும் சிக்கனம் ஓர் அடித்தளமாக இருக்கிறது.

(ii) சட்டத்தின் 4ஆம் பிரிவு (Section 4) : பதிவு செய்யப்படும் சங்கங்கள் கூட்டுறவுக் கொள்கைகளை ஒத்து உறுப்பினர்களுடைய பொருளாதார நலன்களை வளர்ப்பது தங்கள் நோக்கங்களாகக் கொண்டு இருக்கவேண்டும் என்று இந்தப் பிரிவு வலியுறுத்துகிறது. இந்த மூலாதாரமான கொள்கைகள் கூட்டுறவை அறிந்த பொது மக்களுக்கு மிக நன்றாகத் தெரிந்திருப்பதால் இந்தக் கொள்கைகள் என்ன என்பவை இந்தப் பிரிவில் விவரிக்கப்படவில்லை. ஆனால், முன்னால் கூறியபடி இந்தக் கொள்கைகள் சட்டத்திலும் விதிகளிலும் உள்ள மற்ற பல சரத்துகளில் பொதிந்து கிடக் கின்றன. இங்கே கூறவேண்டுவது ஒரு சங்கம் கூட்டுறவுத் தன்மை இல்லாமலிருந்தால் அது பதிவு செய்யப்படக்கூடாது என்பது தான். இதன் முக்கியக் கருத்து, பொய்ச் சங்கங்களும் புனை பெயர் சங்கங்களும் அல்லது போலிச் சங்கங்களும் பதிவு செய்யப்படக் கூடாதவை என்பதே. ஏனென்றால், அம் மாதிரிச் சங்கங்கள் சமுதாயத்தில் பிற பகுதியினரைச் சுரண்டிப் பிழைக்கும் அல்லது கூட்டுறவின் பெயரால் அரசாங்கம் அளிக்கும் உதவிகளையும் சலுகைகளையும் பயன்படுத்திக் கொள்வதற்கு அமைக்கப்படும் சங்கங்கள் ஆகையால், பதிவு செய்யப்படக்கூடாது. உதாரண மாகச் சில இன்றியமையாத, கிடைக்காத, பற்றாக்குறைப் பண்டங்களைப் பெறுவதற்கு விரும்பும் வியாபாரிகள் ஒன்று சேர்ந்து ஒரு நுகர்வோர் கூட்டுறவுச் சங்கம் (Consumers Co-op. Society) அமைத்தால் அதைப் பதிவு செய்யக்கூடாது.

உண்மையான நுகர்வோர்கள்தாம் அந்தச் சங்கத்தில் உறுப்பினராக இருக்கவேண்டும். இல்லையானால் அந்தக் கூட்டுறவுச் சங்கம் நுகர்வோர்களைச் சுரண்டல்செய்து வாழ்வதற்கு வியாபாரிகளின் கரங்களை வலுப்படுத்துவதற்குத்தான் பயன்படும். அவ்வண்ணமே, வட்டித் தொழில் செய்பவர்களுக்கு (Money lenders) ஒரு கூட்டுறவுச் சங்கம் அமைப்பது நினைக்க முடியாதது. அதேபோன்று ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் வேலை செய்யும் உண்மையான நெசவுத் தொழிலாளருக்கு நூல் வழங்கப்பட வேண்டிருக்கும்பொழுது, பற்றுக்குறைக் காலத்தில் அந்த நூலைப்பெற விரும்பும் முதலாளி நெசவாளிகளுக்குக் கூட்டுறவு அடிப்படையில் ஒரு நிறுவனம் அமைக்கப்படக்கூடாது. இதன் சாரம் ஒரு குறிப்பிட்ட தொழிலில் வேலை செய்யும் தொழிலாளர்களையோ அல்லது பண்டங்களை உபயோகிக்கும் உண்மையான நுகர்வோர்களையோ சுரண்டல் செய்து தங்கள் சொந்த பலத்தை மேம்பாடு செய்துகொள்ளும் பொருட்டுச் சங்கம் அமைக்கும் நோக்கம் கொண்ட தரகர்களுக்கும் தொழில் முயல்வோர்களுக்கும் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுவதைத் தடுப்பதுவே. அரசாங்கத்தால் அளிக்கப்படும் பண்டங்களைப் பெறுவதற்குப் பயன்படுத்திக்கொள்ளவோ அல்லது ஓர் அங்காடியைத் (market) தங்கள் ஆதிக்கத்தில் வைத்துக்கொள்ளவோ விரும்பும் வியாபாரிகள் ஒன்றுசேருவதற்காக ஒரு கூட்டுறவுச் சங்கம் அனுமதிக்கப்படக்கூடாது.

உதாரணமாக, ஒரு சில முதலாளிகளை உறுப்பினர்களாகக் கொண்ட ஒரு கூட்டுறவுத் திரை அரங்கம் (Co-operative Theatre) அமைக்க உத்தேசிக்கப்பட்டது. அம் மாதிரிப் போலி கூட்டுறவுச் சங்கங்கள் அனுமதிக்கப்படக்கூடாது. அரசாங்கத்தின் சலுகைகளையும் விளம்பரங்களையும் பெறுவதற்காக இந்த நிறுவனம் உத்தேசிக்கப்பட்டது. ஆகையால், மற்றவர்களுடைய நலன்களைப் பாதிக்கவோ, இடையூறு செய்யவோ, சுரண்டல் செய்யவோ எதுவும் இல்லாமல், நிறுவனத்தின் நன்மைகளை நேரடியாக அடைந்து உறுப்பினர்களுடைய பொதுவான பொருளாதாரத் தேவைகளையும் பாதுகாக்கும் பொருட்டுத்தான் ஒரு கூட்டுறவுச் சங்கம் பதிவு செய்யப்படவேண்டும் என்பது தெளிவாகிறது.

(iii) பிரிவு 17(2)(அ): தங்கு தடையற்ற, திறந்த, தாராள இடமளிக்கிற, அங்கத்துவம் கூட்டுறவின் ஓர் அடிப்படைக் கொள்கை. உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்வதற்கு யாதொரு தடைகள் அல்லது சிக்கல்கள் இருக்கக்கூடாது. விதிகளில் நிருணயிக்கப்படும் சில சங்க வகைகளில், சிலவகைச்

சங்கங்களில் சேருவதற்கு உரிமை பெற்ற ஒவ்வொரு நபரும் சங்கத்தின் உறுப்பினராகச் சங்கத்தின் நிருவாகக்குழுவால் சேர்த்துக்கொள்ளப்படவேண்டும், என்று இந்தப் பிரிவில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், இந்தப் பிரிவின்கீழ் நாணயச்சங்கங்கள், நுகர்வோர் சங்கங்கள் முதலிய சங்கங்களைப் போல சிலவகைச் சங்கங்களில் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்வது கட்டாயப்படுத்தப்பட்டிருக்கிறது. இது கட்டளைக் கடமையாகும்.

(iv) 17 (2) (ஆ): இப்பிரிவின்கீழ் இதரவகைச் சங்கங்களைப் பொறுத்தவரையில், எல்லா விண்ணப்பதாரர்களும் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும் என்றும் எவரேனும் ஒருவர் சேருவது மறுக்கப்பட்டால், எழுத்துமூலம் காரணங்கள் தெரிவிக்க வேண்டும் என்றும் பாதிக்கப்பட்ட நபருக்கு மேல்முறையீடு (Appeal) செய்ய உரிமை உண்டு என்றும் விதிக்கப்பட்டுள்ளது. இந்தச் சரத்துகளின் நோக்கம் உரிமை பெற்ற எந்த ஒரு நபரும் எந்தக் காரணத்தாலும் உறுப்பினராகச்சேர மறுக்கப்படக்கூடாது என்பதை உறுதிப்படுத்துவதே. இந்தச் சரத்து கூட்டுறவுச் சங்கம் ஒரே அரசியல் கட்சி, ஒரே இனம், ஒரே வகுப்பைச் சேர்ந்த ஒரு பிரிவினருக்கு மட்டும் செயல்படும் ஒரு மூடிய வட்டமாக (Closed Circle) ஆகிவிடாமல் பார்த்துக் கொள்கிறது. சொந்தக் காரணங்களுக்காக, மேற்கூறப்பட்டவர்கள் விரும்பாத நபர்களைச் சங்கத்தில் சேருவதைத் தடுக்காமல் இருக்குமாறும் பார்த்துக் கொள்கிறது. மக்களின் ஒரு பிரிவினருடைய நெருக்கமுள்ள சொந்தச் சொத்தாக (Close preserve) கூட்டுறவுச் சங்கம் இருக்கக் கூடாது. கூட்டுறவுச் சங்கத்தில் எல்லாரும் சேருவது எல்லாருடைய உரிமையாக இருக்கவேண்டும். மேலும், சங்கத்தின் நன்மைகளை ஒரு சிலர் மட்டும் அனுபவிக்காமல் அவை நாட்டில் எல்லா மக்களுக்கும் சேரவேண்டும். இல்லையானால் ஊன்றிய நலமிகள் (vested interests) உள்ளே நுழைந்து அதனால் சங்கத்தைப் பாதிக்கும் அளவு தனிச்சலுகைகள் காண்பித்தல் போன்ற விளைவுகள் ஏற்படும். சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேருவது, சுதந்திரமானதும் தடையேதுமின்றி எல்லாருக்கும் திறந்திருக்கப்பட்டதுமாகவும் இருக்கவேண்டும்.

(v) பிரிவு 17 (2) (இ) : சங்கத்தில் அங்கத்துவம் சுயேச்சை யானது என்பதை எடுத்துக்காட்டுகிறது. ஒரு சங்கத்தில் சேரும்படி எந்த ஒரு நபரும் கட்டாயப்படுத்தப்படமாட்டார். விதிக்கப்பட்ட நமூனு ஏதாவது இருந்தால் அதில் அவர் ஒரு விண்ணப்பத்தைச் செய்த பிறகுதான் அவர் சங்கத்தில் சேர்க்கப்

படுவார். விண்ணப்பத்தின்மூலம் அவர் தன்னுடைய ஒப்புதலைத் தெரியப்படுத்த வேண்டும். எனினும், சங்கத்தில் சேர்ந்ததிலிருந்து அவர் சங்கத்தின் விதிகளுக்கு உட்பட்டவராவர்.

(vi) பிரிவு 21 (1) (அ): ஒரு மனிதனுக்கு ஒரு வாக்குத்தான் உண்டு. இந்தப் பிரிவில் ஒரு சங்கத்தின் எந்த ஓர் உறுப்பினரும் அந்தச் சங்கத்தின் செயல்களில் ஒரு வாக்குக்கு மேல் அதிகமான வாக்குகள் வைத்துக்கொள்ளமுடியாது. இது ஒரு கூட்டுறவுக் கொள்கை, மக்களாட்சிக் கொள்கையும்கூட. ஒரு கூட்டுறவுச் சங்கம் மனிதர்களுடைய கூட்டு அல்லாமல் மூலதனத்தின் கூட்டு (Union of Persons and not Union of Capital) அல்ல. ஆகையால், ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் செயல்களில் உறுப்பினர்கள் எடுத்துக் கொள்ளும் பங்கு அவர்களுடைய பங்குகளில் எண்ணிக்கையோ பங்குத் தொகுதியின் அளவையோ பொருத்தது அல்ல. ஒரு சங்கத்தின் நிருவாகத்தில்கூட பங்குத்தொகை வைப்பைக் கருதாமல் எந்த ஓர் உறுப்பினரும் நிருவாகக் குழுவுக்குத் தேர்ந்தெடுக்கப் படலாம். இது ஒரு கூட்டுறவின் மூலதாரமான கொள்கை. இதனால் சங்கம், மக்களாட்சி முறையில், நிருவாகம் செய்யப் படுவது உறுதி செய்யப்பட்டிருக்கிறது உறுப்பினர்களிடையே சமத்துவ உரிமைக் கொள்கை இதில் வலியுறுத்தப்பட்டிருக்கிறது.

(vii) பிரிவு 103 (1): 103(1) ஆம் பிரிவில் ஒரு பதிவு செய்யப் பட்ட கூட்டுறவுச் சங்கத்தைத் தவிர, வேறு எந்த நபரும் அரசாங்க அனுமதி பெறாமல் கூட்டுறவு அல்லது மாநில மொழியில் அதற்குச் சமமான வார்த்தையை ஒரு பாகமாகக் கொண்ட பெயர் அல்லது தலைப்பின்கீழ் தன் வியாபாரத்தைச் செய்யக்கூடாது என்று விதிக்கப்பட்டுள்ளது. இதன் நோக்கம் சட்டத்தில் பதிவு செய்யப்படாமலும், கூட்டுறவின் கொள்கைகளைத் தழுவாமல் வியாபாரம் செய்யும் இயங்குகின்ற நிறுவனங்கள் தங்கள் வியாபாரத்தில் கூட்டுறவு என்ற வார்த்தையைத் தங்கள் நிறுவனத்தின் பெயரில் ஒரு பாகமாக உபயோகிக்காமல் இருப்பதை உறுதிப்படுத்துவதாகும். மேலும், சில கூட்டுறவு நிறுவனங்கள் ஈட்டியிருக்கும் தொழில் நன்மதிப்பைத் தனியார் நிறுவனங்கள் பயன்படுத்திக்கொள்ள முயல்வதைத் தடுப்பதற்காக இம் மாதிரியான தடை தேவைப்படுகிறது. எந்த நிறுவனங்கள் உண்மையான கூட்டுறவு நிறுவனங்களல்ல என்பதை, மக்கள் அறியவேண்டிய நிலையில் இருக்கவேண்டும். இந்தக் குழப்பத்தையும் அதனால் மக்களுக்கு ஏற்படும் தொல்லையும் தவிர்ப்பதற்குச் சட்டம் ஒப்பும் சரத்து தேவைப்படுகிறது.

(viii) 46 (3) ஆம் விதி: சென்னை அரசாங்கத்தால் ஏற்படுத்தப்பட்ட விதிகளில் 46 (3) ஆம் விதி, ஒரு கூட்டுறவுச் சங்கத்தில்

உறுப்பினர்களுக்கு அவர்களுடைய பங்குத் தொகையின் பேரில் கொடுக்கப்படும் இலாபஈவு (dividend) ஒவ்வொரு பங்கின் செலுத்தப்பட்ட மதிப்பின் பேரில் 6 சதவீதத்திற்கு மிகாதிருக்கும்படி விதித்திருக்கிறது. ஆனால், எந்த ஒரு சங்கத்திலும் அல்லது சங்க வகையிலும், அதிக விகிதத்தில் உறுப்பினர்களுக்கு இலாபஈவு வழங்க அரசாங்கம் அனுமதிக்கலாம். இலாப நோக்கத்தை (profit motive) நீக்குவதற்காக இலாப ஈவை வரையறுப்பது ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் கொள்கைகளில் ஒன்று. சேவை நோக்கம் ஒரு கூட்டுறவு நிறுவனத்தின் குறிக்கோளாக இருக்க வேண்டும். ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினர்கள் வைத்திருக்கும் பங்குத்தொகை அந்த நிறுவனத்தின் பொருளாதார வலிமைக்கு உறுப்பினர் வழங்கும் உதவித்தொகை போன்றது. அல்லாமலும் உறுப்பினருடைய சேமிப்புக்கு மூலமானதுமாகும். ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் பங்குகளில் முதலீடு செய்வது இலாப ஈவின் மூலம் உயர்ந்த இலாபங்களைப் பெறுவதற்காக அல்ல. ஆகையால் உறுப்பினர்களுக்கு அவர்களுடைய பங்குகளின் பெயரில் கொடுக்கப்படும் இலாப ஈவின் மீது உச்ச வரம்பு விதிக்கப்பட்டிருக்கிறது.

(ix) 46 (4) ஆம் விதி: ஒரு கூட்டுறவுச் சங்கத்துடன் அதன் உறுப்பினர்கள் செய்யும் வியாபாரத்தின் அளவுக்குப் பொருந்த உறுப்பினர்களுக்குப் போனஸ் வழங்குவது ஒரு மூலாதாரக் கூட்டுறவுக் கொள்கையாகும். இந்தக் கொள்கை இங்கிலாந்து நாட்டில் கூட்டுறவு இயக்கத்தைப் புரட்சிகரமாக்கியது. பிரிட்டிஷ் நுகர்வோர் இயக்கத்தை வெற்றிகரமாக நடத்துவதில் இராக்டேல் முன்னோடிகள் (Rochdale Pioneers) பின்பற்றிய கொள்கையில் உறுப்பினர்களுடைய கொள்முதலின் பெயரில் இலாபஈவு வழங்குவது மையக்கல் (Key stone) ஆக இருந்தது.

46 (4) ஆம் விதிப்படிக் கூட்டுறவுப் பண்டசாலைகள் நெசவாளர் சங்கங்கள், பால் வழங்குவோர் சங்கங்கள், தொழில் ஒப்பந்தச் சங்கம், மோட்டார் போக்குவரத்துச் சங்கம், கூட்டுறவுத் தொழில் பட்டறை போன்ற கடன் சங்கம் அல்லாத கூட்டுறவுச் சங்கங்கள் தம் உறுப்பினர்களுக்குப் போனஸ் வழங்கலாம். உறுப்பினருக்குக் கொடுக்கப்படும் போனஸ், நிகர இலாபத்தில் 25 சதவிகிதம் உயர்ந்த பட்சத்திற்கு உட்பட்டு உறுப்பினர்கள் சங்கத்துடன் செய்திருக்கும் வியாபார அளவின் அடிப்படையில் அல்லது அவர்கள் சங்கத்திற்குச் செய்துள்ள சேவையின் மதிப்பின்பேரில் வழங்கப்படும். இந்தச் சரத்து உறுப்பினர்கள் கூட்டுறவுச் சங்கத்திற்குப் பற்று மாறாதவர்களாக

இருப்பதற்குத் தூண்டுகோலாகும். இது சங்கத்தின் சுறுசுறுப்பான உறுப்பினர்களாக இருந்து வருவதற்கு ஓர் ஊக்கம் அளிக்கவும் உதவுகிறது. இல்லையானால் சங்கமும் அதன் உறுப்பினர்களும் நலிவுறுவார்கள். இது சங்கத்திற்கும் அதன் உறுப்பினர்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பை நிலைநாட்ட வழிவகுக்கும் கூட்டுறவு அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று ஆகும்.

(x) 46 (6) ஆம் விதி : ஒவ்வொரு சங்கமும் தன்நிகர இலாபத்தில் உயர்ந்த பட்சம் ரூபாய் 10,000-க்கு உட்பட்டு இரண்டு சதவிகிதத் தொகையைக் 'கூட்டுறவுக் கல்வி நிதிக்கு' நன்கொடையாக ஒதுக்கி வைக்கவேண்டும் என்று விதிக்கிறது. இந்த விதி ஒரு கூட்டுறவுச் சங்கங்கத்தின் வெற்றி அதன் உறுப்பினர்களுடைய கல்வி அறிவைப் பொறுத்து இருக்கிறது என்ற உண்மையை ஒப்புக்கொள்ளும் ஒரு கொள்கை. பிரிட்டிஷ் நுகர்வோர் இயக்கம் அம் மாதிரி நிகர இலாபத்திலிருந்து ஒதுக்கி வைத்தது. இந்த ஏற்பாடு கூட்டுறவு நிறுவனங்களின் பொதுவான கூட்டுறவுத் தன்மைக்கு ஒத்து இருக்கிறது.

(xi) 48 (1) ஆம் விதி: இவ் விதியின்படி ஒரு சங்கத்தின் க்ஷேம நிதி அதற்கு முழுமையும் சொந்தமானது. அது சங்கத்தில் ஏற்பட்ட எதிர்பாராத இழப்புகளைச் சரிக் கட்டுவதற்கு உத்தேசிக்கப்பட்டதாகும். அதைப் பங்கிடக்கூடாது. எந்த உறுப்பினருக்கும் அதில் ஒரு பங்கு கேட்க உரிமை கிடையாது.

(xii) 48 (3) ஆம் விதி: இவ் விதியின் கீழ் ஒரு சங்கத்தைக் கலைத்து விட்டதனால் அதன் க்ஷேம நிதியையும், மற்றும் அது அதன் பொறுப்புகளைத் தீர்த்து விட்ட பிறகு எஞ்சியுள்ள இதர நிதிகளையும் பொதுநலச் செயல்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் அப்படிச் செய்யத் தவறினால் அந்த உபரி நிதியைக் கலைக்கப்பட்ட சங்கத்தின் எல்லையில் புதிய சங்கம் ஒன்று நிறுவப்பட்டால் அந்தச் சங்கத்தின் க்ஷேம நிதியுடன் சேர்த்துவிட வேண்டும். அம் மாதிரி ஒரு புதுச்சங்கம் நிறுவப்படவில்லையானால் அந்த உபரி நிதி எல்லையில் பணியாற்றும் நிதி உதவும் வங்கிக்குச் சேர்ப்பிக்கப்பட வேண்டும். ஆகையால், இந்த விதி ஒருசங்கம் அது செயல்படும் பொழுது சம்பாதித்த இலாபங்களில் இருந்து ஒதுக்கப்பட்ட க்ஷேம நிதி ஒரு கூட்டுறவு நிறுவனத்திற்கோ அல்லது பொது நலச் செயல்களுக்கோ சேரவேண்டும் என்ற உண்மையை வலியுறுத்துகிறது. உபரித்தொகையைத் தங்கள் சொந்த நலத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற நோக்கத்தில் உறுப்பினர்களின் ஒரு கூட்டுறவுச் சங்கத்தைக் கலைத்துவிடும் எண்ணத்தை இந்த விதி

தடுக்கிறது. இங்கேயும்கூட சங்கத்தின் சேவை நோக்கத்தை வலியுறுத்தப்பட்டு ஒரு சங்கத்தின் உறுப்பினர்கள் அந்தச் சங்கத்தில் ஏற்படும் உபரித்தொகைகளைப் பங்கு போட்டுக் கொள்வதைத் தடுக்கிறது. இந்தச் சரத்துகள் தனிப்பட்ட நபர்கள் இலாபம் அடைய முயற்சி செய்வதைத் தடுக்க உதவி செய்கிறது. ஆகையால், அது கூட்டுறவுச் சங்கத்தின் சேவை நோக்கத்திற்கு ஒத்து இருக்கிறது.

5. கூட்டுறவுச் சட்ட நிருவாகம் (Administration of Co-operative Law)

சட்டம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது கூட்டுறவுச் சட்டத்தை நிருவாகம் செய்வது. சட்டம் எந்த உட்கருத்தோடு ஏற்படுத்தப்பட்டதோ, அந்த உட்கருத்தின் படிச் சட்டம் நிருவகிக்கப்படவேண்டும். கூட்டுறவுச் சங்கங்கள் பற்றிய சட்ட நிருவாகம் சட்டப்படி ஒவ்வொரு மாநிலத்திலும் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட கூட்டுறவுப் பதிவாளரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. தமிழ் நாடு முழுவதற்கும் அல்லது அந்த மாநிலத்தின் ஒரு பகுதிக்கும் ஒரு நபரைக் கூட்டுறவுச் சங்கப் பதிவாளராக அரசாங்கம் நியமிக்கலாம். மேலும், வேறு நபர்களுக்குச் சட்டத்தின்கீழ் கூட்டுறவுப் பதிவாளருக்குள்ள எல்லா அல்லது சில அதிகாரங்களை அரசாங்கம் பொது அல்லது சிறப்பு உத்தரவின் மூலம் வழங்கலாம். கூட்டுறவுச் சட்டத்தின் கீழ் அந்தச் சட்டத்தை நிருவாகம் செய்யும் பொறுப்பு கூட்டுறவுச் சங்கப் பதிவாளர்வசம் இருக்கிறது. அப் பொறுப்பை நிறைவேற்றுவதற்கு அவருக்கு விரிவான அதிகாரங்கள் கொடுக்கப் பட்டுள்ளன.

இந்த அதிகாரங்களை மேல் முறையீட்டுக்குட்பட்டு விருப்பு வெறுப்பு இன்றி அவர் பயன்படுத்துவார் என்று எதிர்ப்பார்க்கப் படுகிறது. அவர் செலுத்தும் ஆட்சி அதிகாரத்தை, தலையீடு என்பதாகப்பொருள் கொள்ளக்கூடாது. சங்கங்கள் விதிகளுக்கும், சட்டங்களுக்கும் ஒத்து செயற்படுமாறு கவனிப்பதற்கே இந்த அதிகாரம் பயன்படுத்தப்படுகிறது. ஆகையால், கூட்டுறவுச் சட்டங்களின்கீழ் ஆட்சி அதிகாரம் செலுத்தும் அளவிற்கு அந்த அதிகாரம் தலையீடாகக் கருதப்படக்கூடாது.

அதிகாரிகள் சட்டத்தை நிருவாகம் செய்யும் வகையைப் பொறுத்துத்தான் இயக்கத்தின் வெற்றி பெருமளவு அமையும். பதிவாளரும், கூட்டுறவு அதிகாரிகளில் பலரும், சுயநலமற்ற உயர்ந்த மனப்பான்மை கொண்டவர்களாக, இயக்கத்தின் திறமை-

மிக்கத் தலைவர்களாகக்கூட இருந்திருக்கிறார்கள் என்பதை மறுக்க முடியாது. சில மாநிலங்களைப் போலவே தமிழ் நாட்டிலும், கூட்டுறவுத் துறையில் எய்தப் பெற்ற வெற்றிக்குக் கூட்டுறவு அதிகாரிகளின் ஊக்கமும் முயற்சியும் பெருமளவு உதவியுள்ளன.

மாக்லகன் குழுவும் (1915), விவசாயத்தைப் பற்றிய ராயல் ஆணைக்குழுவும் (Royal Commission on Agriculture 1928) பதிவாளர் பதவிக்கு உயர்ந்த தகுதிப்பேற்றை (high qualification) வகுத்திருக்கின்றன. அவர் ஒரு முனைப்பான திறமை படைத்தவராக மட்டுமல்லாமல், மக்கள் இயக்கமாகிய கூட்டுறவு இயக்கத்தை நடத்தும் பணிக்கு உணர்ச்சி இயல்பியல் (temperamentally suited) தகுதியுள்ளவராகவும் இருக்கவேண்டும். அவரும் அவருடைய உதவி அலுவலர்களும், புரிந்து கொள்ளும் ஆற்றலுடனும், அனுதாபத்துடனும் சட்டத்தை நிருவாகம் செய்ய வேண்டும். அவர்கள் சட்டத்தை நிருவாகம் செய்யும்போது அதிக விரைப்பாக இல்லாமலும், சட்டத்தின் வாசகத்தை மட்டும் பற்றி நிற்காமலும், சங்கங்களை நிருவாகம் செய்யும் உத்தியோகப் பற்றற்றவர்களுக்கு (non-official) அவ்வப்போது எழும் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு உதவி செய்யவேண்டும். சட்டம் வகுத்துள்ள வரம்பிற்குள் (Framework of the Law) அவர்கள் உத்தியோகப் பற்றற்ற தலைவர்களின் நடவடிக்கைகளை ஊக்குவித்து, இயக்கத்திற்கு ஒரு சரியான உத்தியோகப் பற்றற்றோர் தலைமையை உருவாக்கவேண்டும். குற்றம் செய்பவர்களைத் தண்டிப்பதற்கு உபயோகப்படுத்தும் ஒரு பெரிய கோல் என்றோ யாதேனும் சில காரணத்திற்காக அதிகார வர்க்கத்தால் விரும்பப்படாத மனிதர்களை விரட்டித் துரத்துவதற்கு உபயோகப்படுத்தும் கருவி என்றோ சட்டம் கருதப்படக்கூடாது. உத்தியோகப் பற்றற்ற தலைவர்களுக்குச் சங்கடத்தையும் தொல்லையையும் விளைவிக்கும் வகையில் அவர்கள் சட்டத்தை நிருவாகம் செய்யக்கூடாது. இது இயக்கத்தை விட்டு நல்ல மனிதர்கள் விலகும்படியான நிலைமையை உண்டு பண்ணும். சட்டத்தை நிருவகிக்கும்பொழுது அவர்கள் உடைய உள் நிருவாகத்தில் அதிகாரிகள் தலையிடுவதாக இல்லாமல் இருப்பது அவசியம். ஆட்சி அதிகாரம் செய்வதையும், தலையிடுவதையும் தனித் தனியாகப் பிரித்து வைக்கவேண்டும். ஆகையால், அதிகாரிகள் சட்டத்தை நிருவாகம் செய்வதன் நோக்கம் சங்கம் கூட்டுறவு முறையிலும் தொழில் முறையிலும் திறம்பட வேலை செய்வதை நிலைநிறுத்தும் பொருட்டு நலம் தரும் வகையில் வலிமைமிக்க ஆட்சி அதிகாரத்தைக் கையாளவேண்டுமென்பதே. அத்தகைய ஆட்சி அதிகாரம் சங்கத்தினுடைய நிருவாகத்தில்

தலையீடாக இருக்கிறது என்ற நிலைமைக்கு இடம் தரக்கூடாது. உத்தியோகப் பற்றற்ற தலைவர்கள் பெருவாரியாகச் சங்கங்களை நிருவாகம் செய்வதற்கும் சங்கங்களில் பொறுப்பான பதவிகள் வகிப்பதற்கும் அவர்களுக்கு ஊக்கம் அளிக்கும் வகையில் ஆட்சி அதிகாரம் கையாளப்படவேண்டும். சங்கங்கள் சரியாகவும் திறமையாகவும் வேலை செய்யும்படி உறுதிப்படுத்துவதற்கு வேண்டிய அதிகாரத்தைக் கையாண்டு, பதிவாளர் இயக்கத்திற்கு ஒரு நண்பனாகவும், வழிகாட்டியாகவும், தத்துவ ஆசிரியனாகவும் பணிபுரிய வேண்டும். இந்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட கூட்டுறவுச் சட்டக்குழு (1957) (Commission on Co-operative Law) கீழ்வருமாறு கருத்துரை கூறி இருக்கிறது. கடைசியாகக் கூர்ந்து ஆராய்ந்தால், சட்டத்தைவிடச் சட்டத்தின் பின்னால் உள்ள மக்கள்தாம் முக்கியம் வாய்ந்தவர்கள் என்று புலப்படும். எனினும், கூட்டுறவுச் சட்டம் மேற்போக்கானது அல்ல. அது அவசியமானது.

6. ஒரு நாட்டின் கூட்டுறவுச் சட்டம் இயக்கத்தின் தன்மையையும் குறிக்கோள்களையும் பரதிபலிக்கவேண்டும் (Co-operative Law raflects the Charector and opjective of the Co-op. Movement)

ஒரு நாட்டில் கூட்டுறவுச் சட்டம் கூட்டுறவு இயக்கத்தை அவசியமான அளவிற்கு வளர்ப்பதற்கும், ஒழுங்குபடுத்துவதற்கும், பாதுகாப்பதற்கும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், அது நாட்டின் கூட்டுறவு இயக்கத்தின் தன்மையைப் பிரதிபலிப்பது இயற்கையே. மேலை நாடுகளைப் போல் கூட்டுறவு இயக்கம் தற்காப்புடைய, சுய பலத்தையுடைய இயக்கமாக இருந்தால் அப்பொழுது கூட்டுறவுச் சட்டம் அதிக அளவு ஆட்சி அதிகாரத்தை, அல்லது ஒழுங்குபடுத்தும் அதிகாரத்தை அரசாங்கத்திற்கு அளிப்பதில்லை. இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் அரசாங்கத்தால் கொண்டுவரப்பட்டது. அரசாங்கத்தால் வளர்க்கப்பட்டது. அது மக்களுடைய முன் முயற்சியால் மட்டும் வளரவில்லை. பிரபல கூட்டுறவு ஆசிரியராகிய கால்வர்ட் (Calvert) என்பவர் பதிவாளரை, 'இயக்கத்தின் அடித்தளம்' (Foundation of the Movement) என்று அழைக்கிறார்.

நம் நாட்டில் கூட்டுறவு இயக்கம் அரசாங்க உதவி பெற்றதும் அரசாங்கக் கூட்டாளித்துவம் பெற்றதுமாகவும்கூட இருந்து வந்திருக்கிறது. ஆகையால், கூட்டுறவுச் சட்டம் சங்கங்களை ஒழுங்குபடுத்துவதற்காகவும், கட்டுப்படுத்துவதற்காகவும் அரசாங்கத்திற்கு விரிவான அதிகாரங்களை அளித்திருக்கிறது. எனினும், சுதந்திரத்திற்குப் பிறகு, கூட்டுறவுச் செயல்முறையில் சில புதிய

போக்குகள் காணப்படுகின்றன. இந்தப் போக்குகள் அவ்வப்போது நிறைவேற்றப்பட்ட கூட்டுறவுச் சட்டத்தில் பிரதிபலிக்கின்றன. இன்னும் எதிர்காலத்தில் நிறைவேற்றப்படும் சட்டத்திலும் பிரதிபலிக்க வேண்டும். பொதுமக்கள் நலத்தையும் நல்வாழ்வையும் வளர்ப்பதற்காகத் தயாரிக்கப்படும் சட்டத்திலும் மேம்பாட்டிலும் ஒரு கருவியாகக் கூட்டுறவு ஏற்கப்பட்டு அரசாங்கம் கூட்டுறவு இயக்கத்தில் ஒரு கூட்டாளியாக பணியாற்ற முன் வந்துள்ளது. பதிவாளருடைய அதிகாரங்களும் அரசாங்கத்தின் அதிகாரங்களும் அதிகரித்துள்ளன. ஆனால், அவை கூட்டுறவு இயக்கத்தில் வளர்ச்சிக்காக ஒரு நடவடிக்கையாகக் கருதப்படவேண்டுமே தவிர, ஆட்சிக்கும், ஒழுங்குபடுத்துவதற்கும் அளித்த வெறும் அதிகாரங்களாகக் கருதப்படக்கூடாது. உண்மையில் மாதிரிக் கூட்டுறவுச் சங்கங்களின் மசோதாவும் (Model Co-op. Societies Bill) 1961ஆம் வருடத்திய சென்னை கூட்டுறவுச் சங்கங்களின் சட்டமும் அரசாங்கத்திற்கும் பதிவாளருக்கும் முன்னைவிட அதிகமான அதிகாரங்களை வழங்கி இருக்கிறது. அதே சமயத்தில் கூட்டுறவுச் சட்டம் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் அதிகாரமும் பொறுப்பும் அளித்திருக்கிறது. கூட்டுறவுச் சங்கங்களின் தன்னாட்சி உரிமைக்கும் மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்படவேண்டும்.

கூட்டுறவுச் சங்கங்களைக் கட்டுப்படுத்தும் அரசாங்க ஆட்சி அதிகாரம் கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சேவை செய்யும் ஒரு சாதனமாக இருக்கவேண்டுமே தவிர, அது அரசாங்கத்தின் வரம்பற்ற உரிமையாகக் கருதி கூட்டுறவு இயக்கத்தின் சுதந்திரத்தையும், தனித்தன்மையையும் பாதிக்கும்படி உபயோகப்படுத்தக்கூடாது. 1969ஆம் ஆண்டு நடைபெற்ற சர்வதேசக் கூட்டுறவுக் காங்கிரஸில், (I.C.A. Congress) 'கூட்டுறவு மக்களாட்சி' என்ற தலைப்பில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தில் கூறுவதாவது, 'கூட்டுறவு மேம்பாட்டில் அரசியல் மக்களாட்சி இன்றியமையாததாக இருக்கிறது. பொருளாதார மக்களாட்சிக்குக் கூட்டுறவுக் கருத்துகளும் நடவடிக்கைகளும் தடை இல்லாமல் வளர்ச்சி அடைவது இன்றியமையாததாகும். பொருளாதார மக்களாட்சி இல்லாமல் அரசியல் மக்களாட்சி முற்றுப் பெறாததாக நிற்கும்'; ஆகையால், கூட்டுறவுச் சட்டம் கூட்டுறவு நிறுவனங்களின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தி அவை தன்னாட்சி உரிமை உள்ளவைகளாக இருப்பதற்குப் போதிய வசதி கொடுத்து, சங்கத்தின் பொது சபைக்கும் நிருவாக சபைக்கும் கொடுக்கப்பட்டுள்ள தீர்மானம் செய்யும் அதிகாரத்தை மக்களாட்சி மயமாக்கி, கூட்டுறவு இயக்கத்தின் படிமம் ஓர் உண்மையான

தன்னாட்சி உரிமை உள்ள, சுயேச்சையான இயக்கமாக ஆட்சி அளிக்கும்படிச் செய்யவேண்டும்.

மேலும், பொதுவுடைமைச் சமுதாயத்தை ஏற்படுத்தும் கொள்கையுடைய ஒரு நாட்டில் வலிமையற்ற மக்கள் (Weaker section of the Community) பகுதியின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும் ஒரு சாதனமாக (Lever) வளர்ந்துவரும் கூட்டுறவின் கருத்துப்படிவும் (Concept) சிறிய குடியானவர்கள் முதலியவர்களுக்கு நிருவாகக் குழுவில் தனிப் பிரதிநித்துவத்திற்கு ஏற்பாடு செய்திருக்கும் நமது கூட்டுறவுச் சட்டங்களில் பிரதிபலிக்கப் படுகிறது. மேலும், ஊன்றிய நலமிகள் (Vested interests) கூட்டுறவு இயக்கத்தில் நுழைவதற்கு இடம் கொடாமலும் அவர்கள் கூட்டுறவுச் சங்கங்களில் நீண்ட காலம் பதவி வகித்து சங்கத்தின் உறுப்பினர் சேர்ப்பைத் தம் கைப்பிடியில் வைத்துக் கொண்டு நிறுவனத்தில் தங்கள் குழாமின் ஆதிக்கத்தை நிரந்தரமாக்காமல் தடுக்கவேண்டும் என்று அரசாங்கமும், கூட்டுறவு இயக்கமும் கொண்டுள்ள அக்கறையையும் சட்டம் பிரதிபலிக்கிறது. கூட்டுறவுச் சங்கங்களில் பெரும்பான்மை உறுப்பினர்களாக இருக்கும் குறைந்த வருவாய் உள்ளவர்களுடைய நலன்களைப் பாதுகாப்பதற்குச் சில சட்ட நடவடிக்கைகள் எடுக்க வேண்டுவது அரசாங்கத்தின் கடமையாக இருக்கிறது. இந்தத் தேவைகளைக் கருத்தில் கொண்டு செய்யப்படும் சட்டம், கூட்டுறவு நிறுவனங்கள் அரசாங்க உதவியையும் சலுகைகளையும் பெறுவதுடன் அரசாங்கத்திற்குச் சங்கங்களை ஒழுங்குபடுத்தும் அதிகாரங்களை வழங்கி, கூட்டுறவுச் சங்கங்கள் தங்களுடைய மக்களாட்சித் தன்மையையும் தன்னாட்சி உரிமையையும் இழக்காமல் சாதாரண மக்களுடைய நலன்களை வளர்ப்பதற்குச் சேவை செய்வதற்கு வகை செய்கிறது கூட்டுறவுச் சட்டம் நம் நாட்டில் எந்த அளவுக்கு இந்தப் பண்புக் கூறுகளைப் பிரதிபலிக்கிறது என்பதைப் பின்வரும் அத்தியாயங்களில் காணலாம்.

# 4. இந்தியாவில் கூட்டுறவுக் கோட்பாட்டின் படிப்படியான மலர்ச்சி

## (Evolution of Co-operative Thought in India)

1. கூட்டுறவுக் கோட்பாட்டின் வளர்ச்சி (Development of Co-operative thought)

(i) தோற்றமும் ஆரம்ப வளர்ச்சியும்: இந்தியாவில் கூட்டுறவு இந்த நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளில் கிராம வட்டித் தொழிலர்களிடமிருந்து (Village Money Lender) அநியாய வட்டி விகிதத்தில் கடன் வாங்கும் கட்டாயத்திலிருந்து குடியானவர்களை மீட்பதற்காக அமலுக்குக் கொண்டுவரப் பட்டது. 1904ஆம் வருடத்தியக் கூட்டுறவு நாணயச் சங்கங் களின் சட்டம், குடியானவர்கள், கைவினைஞர்கள், மற்றும் குறைந்த வருவாயுள்ளவர்களுடைய நிலைமையைச் சீர்திருத்து வதற்கும், கூட்டுறவுக் கோட்பாடுகளான சுய உதவி, பரஸ்பர உதவியின் அடிப்படையில் முக்கியமாகக் கிராமச் சங்கங்களை நிறுவு வதற்கும் நிறைவேற்றப்பட்டது. நாணயச் சங்கங்கள் அடைந்த வெற்றியினால் விநியோகம், விற்பனை, உற்பத்தி போன்ற செயல் களுக்கும் சங்கங்களை அமைப்பதற்கும், மற்ற சங்கங்களை மேற்பார்வை செய்து அவற்றிற்கு நிதி உதவுவதற்கும், மத்திய அல்லது கூட்டிணைப்பு நிறுவனங்கள் அமைப்பதற்கும் அவசியம் ஏற்பட்டது. எனவே, 1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கங் களின் சட்டம் அமலுக்கு வந்தது. அதற்குப் பிறகு மத்தியச் சங்கங்களின் எண்ணிக்கை விரைவாக அதிகரித்தது. 1914ஆம் ஆண்டில் அரசாங்கம் மாக்லகன் குழுவை (Maclagan Committee) நியமித்தது.

கூட்டு இணைப்புச் சங்கங்களின் நிதி நிருவாகத்தில் லேவாதேவி அதிகரிப்பு காரணமாக சிக்கல்கள் தோன்றியதால், பலதரப்பட்ட

கூட்டுறவு நிறுவனங்களிடையே இருந்து வந்த நிதித் தொடர்பை ஆராய்வதற்கும், எல்லாவகைக் கூட்டுறவுச் சங்கங்களின் தணிக்கை, ஆய்வு, நிருவாகம், சேம நிதியின் உபயோகம் முதலியவற்றை ஆராய்வதற்கும் இக் குழு கேட்டுக் கொள்ளப்பட்டது. மாண்ட்போர்டு சீர்திருத்தங்கள் (Montford Reforms) என்று பொதுவாகக் கூறப்படும் 1919 ஆம் வருடத்திய அரசியல் சீர்திருத்தச் சாசனத்தை அடிப்படையாகக் கொண்டு, கூட்டுறவு மாநிலங்களுக்கு (Provincial subject) ஒப்படைக்கப்பட்டு, மாநிலங்களில் மக்கள் தேர்ந்தெடுத்த மந்திரி சபைகளால் (Popular Ministry) அது நிருவகிக்கப்பட்டது.

கூட்டுறவு, மாநிலத்தில் மாற்றப்பட்ட அதிகாரம் (Transfered Subject) ஆயிற்று. இதன் விளைவாக மாநில அரசாங்கம் மக்களுடைய-குறிப்பாக சமுதாயத் தலைவர்களுடைய-கவனத்தைக் கூட்டுறவு இயக்கத்தின்பால் ஈர்க்க முனைந்தது; மக்களுடன்-குறிப்பாக கிராமங்களில்-தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதற்கும், விவசாயிகளின் நலன்களை வளர்ப்பதற்கும் ஒரு முக்கியக் கருவியாகக் கூட்டுறவு கருதப்பட்டது. கூட்டுறவு தொடர்பாக மாநிலச் சட்டம் நிறைவேற்றப்பட்டுப் பதிவாளர் மூலம் கூட்டுறவுச் சங்கங்களைப் பல துறைகளில் விரிவு படுத்த அரசாங்கம் முன்பைவிட அதிகமாக நேரிடைக் கண்காணிப்பை ஏற்றது. உத்தியோகப் பற்றற்ற தலைவர்கள், கௌரவ அமைப்பாளர்களுடைய சேவைகளைப் பயன்படுத்தி, கூட்டுறவுக் கொள்கைகளை மக்களிடம் பரப்பி பலவகையான கூட்டுறவுச் சங்கங்களை நிறுவுவதற்கு வேண்டிய சூழ்நிலையை அரசாங்கம் ஏற்படுத்தியது.

இந்தத் தருணத்தில் கூட்டுறவு இயக்கம் நடுத்தர மக்களிடையே 'வங்கித் தொழில் பழக்கத்தை' (Banking Habit) வளர்ச்சி செய்வதற்கும் உதவியாக இருந்தது. மக்களே தங்கள் தினசரி லேவாதேவி நடவடிக்கைகளில் (Monetised Economy) நாணய முறைக்குரிய பொருளாதாரத்தின் முக்கியத்துவத்தை வரவேற்க ஆரம்பித்தார்கள். 1930 ஆம் ஆண்டு முதல் 1939 ஆம் ஆண்டுவரை நிலவிவந்த பொருளாதாரத் தேக்கத்தினால் நாட்டில் கூட்டுறவுச் சங்கங்களின் தொழில் பெரிதும் பாதிக்கப்பட்டது.

சங்கங்களின் மீது விவசாயிகளும் பொதுமக்களும் வைத்திருந்த நம்பிக்கை அசைக்கப்பட்டு, கூட்டுறவின் நிலை மோசமாக நலிவுற்றது. எனினும், 1927 ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட 'விவசாய ராயல் ஆணைக் குழு' (Royal Commission on Arigculture) கூட்டுறவு தோல்வியடையும் பட்சத்தில் கிராம இந்தியாவின் கடைசியான நம்பிக்கை தோல்வியுறும்? என்று கருத்து தெரிவித்தது.

பொருளாதாரத் தேக்கத்தினால் அடைந்த அதிர்ச்சியிலிருந்து கூட்டுறவு இயக்கத்தை மீட்பதற்கு 1930ஆம் ஆண்டிலிருந்து இயக்கத்துக்குப் புனர்வாழ்வு அளிக்கும் முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டன. இந்த முயற்சிகள் நடைபெற்றுக்கொண்டிருக்கும்பொழுது 1935ஆம் ஆண்டில் முக்கிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. முதல் நிகழ்ச்சி, இந்திய ரிசர்வ் வங்கி (Reserve Bank of India) நாளடைவில் உற்பத்திச் செயல்களுக்காக விவசாயிகளுக்குச் சலுகையான வட்டியின்பேரில் நிதியை வழங்க முனைந்தது. இரண்டாவது முக்கிய நிகழ்ச்சி மாகாண சுதந்திரம் (Provincial Autonomy) வழங்கப்பட்டதாகும். அதனால் அநேக மாநிலங்களில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திரி சபைகள் (Popular Ministry) அமைக்கப்பட்டுக் கூட்டுறவு இயக்கத்திற்கு ஊக்கம் அளிக்கப்பட்டது.

கிராமச் சங்கங்களின் நடவடிக்கைகளும் சேவைகளும் விரிவடைந்து அவை பல நோக்குச் சங்கங்களாக வேலை செய்ய ஆரம்பித்தன. இரண்டாவது உலகப் போர் ஆரம்பிப்பதற்கு முன் நாட்டில் கூட்டுறவு நடவடிக்கைகள் முக்கியமாகக் கடன் வழங்கும் துறையில் விரிவடைந்து இருந்தன. போர்க் காலத்தில் அதாவது 1930 ஆம் ஆண்டிலிருந்து 1945ஆம் ஆண்டுவரை கடன் நாணயம் அல்லாத வேறு வகைச் சங்கங்களே வியாபாரத்தைப் பெருக்கிக் கொண்டன.

பற்றுக்குறையான உணவுப் பொருள்களைச் சேகரித்து (Procurement) மக்களுக்கு வழங்கக் கூட்டுறவு நிறுவனங்களின் சேவைகளைப் பயன்படுத்திக்கொள்ள அரசாங்கம் முற்பட்டது. இரும்பு, மண்ணெண்ணெய், சர்க்கரை, அரிசி போன்ற கட்டுப் படுத்தப்பட்ட பண்டங்களை மக்களுக்கு வழங்கியதால் கூட்டுறவு நிறுவனங்களின் வளர்ச்சியில் ஓர் ஏற்றம் தோன்றியது.

இந்த நிறுவனங்கள் விலைவாசியைக் கட்டுப் படுத்தவும் உதவின. அரசாங்கம், பொருள்களை அதிக விலையில் விற்று இலாபம் அடைவதையும், பொருள்களைப் பதுக்கல் செய்வதையும், கள்ள விற்பனை செய்வதையும் தடுப்பதற்காகக் கிடைப்பதற்கு அருமையான பற்றுக்குறைப் பொருள்களை (Scarce Commodities) நியாயமான முறையில் விநியோகம் செய்வதற்குத் தக்க கருவியாக இந்த நிறுவனங்களைப் பயன்படுத்திக் கொண்டது.

தமிழ் நாட்டில் இந்தச் சங்கங்கள் மக்களுக்கு ஒரு தனிப்பட்ட சமுதாய சேவை புரிந்தன. பொருளாதார நலத்தை வளர்க்கும் வலிவுள்ள கருவிகளாக அவை தொண்டாற்றின. விநியோகப்

போர் சங்கங்கள் தவிர, நெசவாளர்கள் போன்ற உற்பத்தியாளர்கள் சங்கங்களும் தொழில் கூட்டுறவுச் சங்கங்களும் பால் பண்ணைகளும், துணி, குடிசைத்தொழில் பொருள்கள், பால் முதலிய பொருள்களை விநியோகிக்கும் சேவையில் ஒரு முக்கிய இடம் பெற்றன. இந்தச் சங்கங்கள் ஓரளவு பாதுகாப்புப் படையினருடைய (Defence Forces) தேவைகளையும் பூர்த்தி செய்தன. இதன் காரணமாகக் கூட்டுறவு இயக்கம் ஒரு புதிய மதிப்பையும், முக்கியத்துவத்தையும், சிறப்பையும் பெற்றது. உலகப் போர் முடிந்த பின்பு 1946ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட கூட்டுறவுத் திட்டக் குழு (Co-operative Planning Committee) பல துறைகளில் நாடு முழுவதும் கூட்டுறவு இயக்கம் வளர்ச்சியுற ஒரு வளர்ச்சித் திட்டத்தைச் சிபாரிசு செய்ததோடு எந்த அளவுக்குப் பல துறைகளில் முன்னேற வேண்டுமென்பதையும் நிருணயித்தது. அக் குழு கிராமச் சங்கங்களின் சேவைகளைப் பலதரப்படுத்தவும், பல மட்டங்களில் இயங்கும் கூட்டுறவுச் சங்கங்களைப் பலப்படுத்தவும் யோசனைகள் கூறியது. நாடு சுதந்திரம் அடைந்த பின்னர் ஆரம்ப ஆண்டுகளில் இந்தக் குழுவின் சிபாரிசுகளை வழிகாட்டியாகக் கொண்டு கூட்டுறவுச் சங்கங்கள் இயங்கின.

(ii) சுதந்திரத்திற்குப் பின் வளர்ச்சி : நாடு சுதந்திரம் பெற்று மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கங்கள் மாநிலங்களிலும் மத்தியிலும் அமைக்கப்பட்டுத் தேசியத் திட்டக் குழு நியமிக்கப்பட்ட பின்னர், கூட்டுறவு இயக்கம் ஒரு புதிய ஊக்கத்தைப் பெற்றது. கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்கப்பட்ட தாராள ஆதரவைக்கொண்டு கூட்டுறவு இயக்கம் பல துறைகளில் சேவை செய்து நாட்டில் எல்லா மாநிலங்களிலும் வளர்ச்சியும் பெருக்கமும் அடைந்தன. கிராமப் பொருளாதார அமைப்பைக் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் வளரச் செய்வதன் அவசியம் வலியுறுத்தப்பட்டது. கிராமக் கடன் பிரச்சனையைத் தீர்ப்பதற்கும் கிராமப் பொருளாதார அமைப்பை மேம்பாடு செய்வதற்கும் தக்க நிறுவனங்கள் கூட்டுறவுச் சங்கங்கள் மட்டுமே எனத் திண்ணமாகக் கருதப்பட்டது.

1954ஆம் ஆண்டில் அகில இந்தியக் கிராமக்கடன் விசாரணைக் குழு (All India Rural Credit Survey) தன் அறிக்கையில், கூட்டுறவு இயக்கம் கிராமக் கடன் துறையில் அடைந்துள்ள முன்னேற்றம் மிகவும் குறைவானது என்று குறிப்பாக வெளிப்படுத்தியது. எனினும், அது கூட்டுறவு இயக்கம் வெற்றி பெற வேண்டுமென்ற நம்பிக்கையில் அழுத்தமாக இருந்து, நாட்டில் கூட்டுறவு நாணய அமைப்பைப் பலப்படுத்துவதற்கான பல நடவடிக்கைகளைப் பரிந்துரை செய்தது.

1951–56ஆம் ஆண்டுகளின் முதல் ஐந்தாண்டுத் திட்டம் கூட்டுறவு இயக்கத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்தியது. சமுதாய முன்னேற்றமும் பரஸ்பர நலனும் பிறர் உதவியின்றி முதல் முயற்சியுமான (initiative) பண்புகளை ஒருங்கே கொண்டு இயங்கும் மக்களாட்சித் திட்டத்திற்கு ஓர் இன்றியமையாத கருவியாகக் கூட்டுறவு விளங்குகிறது என்று தேசியத் திட்டக் குழு கருத்துத் தெரிவித்தது.

ஐந்தாண்டுத் திட்டத்தை அமல் நடத்துவதற்காகத் தயாரிக்கப்பட்ட திட்டங்களில் கூட்டுறவும் ஒரு முக்கிய உறுப்பாக இருக்கவேண்டுமென்று கருத்துத் தெரிவித்தது. திட்டத்தின் நோக்கம் நாட்டின் பொருளாதார அமைப்பைத் தனியார் சுவாதீன முறையிலிருந்து கூட்டுறவு அடிப்படையில் ஒழுங்குபடுத்தி ஒரு சமுதாயமாக மாற்றுவதாகும். ஆகையால், திட்டத்தின் வெற்றியைக் கூட்டுறவு நிறுவனங்களின் மூலம் திட்டம் எந்த அளவுக்கு அமுல்படுத்தப்படுகிறது என்பதிலிருந்து தீர்மானிக்க வேண்டும். திட்டக் குழு விவசாயத்தை அபிவிருத்தி செய்வதிலும், நாட்டின் தொழில், பொருளாதார அமைப்பை வளர்ப்பதிலும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு ஒரு முக்கிய இடத்தைக் கொடுத்தது. எனினும், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் கூட்டுறவு வளர்ச்சிக்கு எந்த ஒரு பெரிய திட்டமும் சேர்க்கப்படவில்லை. ஏனென்றால், உற்பத்திப் பெருக்கத்திற்கு வழி ஏற்படுத்த மின்சாரம், நீர்ப்பாசனம் போன்ற பெரிய திட்டங்களுக்குத்தான் அதில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

## 2. இந்தியப் பொருளாதார அமைப்பில் கூட்டுறவின் இடம் (Place of Co-operation in India's Economy)

இந்திய நாடானது தற்போது முதலாளித்துவப் பொருளாதார அமைப்பிலிருந்து பொதுவுடைமைப் பொருளாதார அமைப்பிற்கு மாறுகின்ற நிலையிலுள்ளது. நம்முடைய குறிக்கோள் பொதுவுடைமை அடிப்படையில் ஒரு சமுதாயத்தை (Socialistic pattern of Society) நிறுவுவதே ஆகும். இதன் கருத்து என்னவென்றால், நாட்டின் செல்வத்திலும் வருவாயிலும் சமத்துவத்தை அதிகமாகப் புகுத்துவதும், தேசிய வருமானத்தையும் வேலை வாய்ப்பையும் பெருமளவு அதிகரிப்பதுமாகும். அந்த நிலைமையை உருவாக்க எடுக்கப்படும் முன்னேற்ற நடவடிக்கைகளில் சமுதாய நலன் முக்கியமே தவிர தனியார் நலன் அடிப்படையாக இருக்கக் கூடாது என்பதுதான். அரசாங்கக் கொள்கையின் (State policy) ஓர் அம்சம் என்னவென்றால், சாதாரண மக்களுடைய நலத்தைப் பாதிக்கும் வகையில்



செல்வமும் உற்பத்திச் சாதனங்களும் ஓரே இடத்தில் குவிவதற்கு இடம் தராத ஒரு பொருளாதார அமைப்புமுறை நாட்டில் இயங்க வேண்டுமென்பதேயாகும். பொதுவுடைமைச் சமுதாயத்தை வளர்ப்பதற்காக இயங்கும் நிறுவனங்களில் கூட்டுறவு நிறுவனங்கள் மிகச் சிறந்தவை. ஏனென்றால், அவை மக்களாட்சிப் பொதுவுடைமைக் கொள்கைகளின் பேரில் தொழில் படுகின்றன. ஆனால், கூட்டுறவு நிறுவனங்களின் சாதனைகள் வரம்புக்குட்பட்டவை என்பதில் ஐயமில்லை. தனிப்பட்ட ஒருவருடைய முயற்சியைவிட, கூட்டாகப் பலர் ஒன்று சேர்ந்து நிறுவன அமைப்பில் செய்யும் முயற்சி எந்தத் துறைகளில் மேலான நலன் அளிக்கிறதோ அந்தத் துறைகளில் மட்டும்தான் கூட்டுறவு வெற்றி அடையமுடியும். கல்வி, சுகாதாரம் போன்ற சில பொது வசதிகளை ஒவ்வொரு குடிமகனுக்கும் அளிக்கும் துறைகளில் கூட்டுறவு ஒரு சரியான நிறுவனமாகாது. மேலும், கூட்டுறவானது ஒரு வகை சேவைச் அமைப்பு மட்டுந்தான் ஆகும். கூட்டுறவு நிறுவனத்தைப் பயன்படுத்தும் ஒரு திட்டம் சரியானதாக இல்லாமலும் அதன் காரணமாக ஏற்படும் திட்டத்தின் அடிப்படைக் குறைபாடுகளினாலும் அந்தத் திட்டம் தோல்வியடைந்தால், அந்தத் திட்டத்தை அமல்படுத்தப் பயன்படுத்தப் பட்ட கூட்டுறவு முறை தோல்விக்குக் காரணம் ஆகாது.

கூட்டுறவு நிறுவனங்கள் பொருளாதார நடவடிக்கையில் சில துறைகளுக்கு மட்டுமே பொருத்தமானவை. அவைகளிலும் சில சூழ்நிலையிலும் சில நிபந்தனைகளுக்குட்பட்டுதான் வெற்றி காண முடியும். மேலும், கூட்டுறவானது மக்களுக்கு வழங்க வேண்டியதை முன்னரே தயாரித்து வைத்துக் கொண்டு உடனே இயங்கக் கூடிய ஒரு நிறுவனம் அன்று. அது மக்களுடைய தேவை அடிப்படையில் அவர்களின் அவாவிலிருந்தோ, விருப்பத்திலிருந்தோ அல்லது அவர்களிடமிருந்தோ தோன்றவேண்டும். நம் நாட்டின் பொருளாதார அமைப்பில் குறிப்பாக விவசாயம், விவசாயப் பொருள் விற்பனை, பால் பண்ணை, வீட்டுவசதி, விநியோகம், சிறு தொழில், குடிசைத் தொழில் முதலிய துறைகளில் கூட்டுறவு நிறுவனங்கள் அறுதியிட்ட முறையில் பணியாற்ற வேண்டியிருக்கிறது.

இந்த வகையில் கூட்டுறவு நிறுவனங்களுக்கு இருக்கும் வாய்ப்பு மிகப் பெரியது. 1971ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் ஆறுவது இந்தியக் கூட்டுறவுக் காங்கிரசைத் தொடங்கி வைத்து நமது தலைமையமைச்சர் திருமதி இந்திரா காந்தி அம்மையார் அவர்கள் பேசுகையில், 'கூட்டுறவு இயக்கத்தைப் போன்று

சமுதாய நோக்கம் நிறைந்ததும், சக்தி வாய்ந்ததுமான வேறு ஒரு கருவியை நான் அறிந்தது இல்லை. அது மக்களை சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்வதற்கு—சுய உதவியைப் பின்பற்றுவதற்கு உதவுகிறது. மக்களுடைய சொந்த முயற்சிகளையும் உரிமைகளையும் தடுக்காமல் அவர்களுக்கு அரசாங்கம் அவசியமான ஆதரவையும் பொருள் உதவியையும் அளிப்பதற்குக் கூட்டுறவு இயக்கம் உதவுகிறது. பொருளாதாரக் குவியலினால் ஏற்படும் தீய விளைவுகளை உண்டு பண்ணாமல், அதேசமயத்தில் பெருவாரியாகத் தொழில் நிறுவனங்களில் கிடைக்கக் கூடிய சிக்கனங்களைப் பெறக் கூடிய ஒரே ஒரு கருவி கூட்டுறவு இயக்கம் தான்' என்றார். இந்த நிலைகளிலிருந்து நோக்கும்போது நாட்டுப் பொருளாதார அமைப்பில் பொதுத் துறையும் (Public Sector) தனியார்த் துறையும் (Private Sector) அல்லாமல், ஒரு நல்ல நிலைமையிலுள்ள சரியான கூட்டுறவுத் துறையையும் ஏற்படுத்துவது முதலாளித்துவ சமுதாயத்திலிருந்து பொதுவுடைமைச் சமுதாயத்திற்கு மாறுவதற்கான இடைமாறுபாட்டு நிலையை (Transmission) அடைய அதிகமாக உதவும்.

3. இந்தியப் பொதுவுடைமைச் சமுதாயத்தில் கூட்டுறவு ஒரு துறை (Co-operation a Sector in India's socialistic pattern of Society)

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் (1956–61), மக்களாட்சி முறையில் பொருளாதார அபிவிருத்தி செய்வது எண்ணற்ற வேறுபாடுடைய வகையில் கூட்டுறவைப் பயன்படுத்த ஒரு பெரிய வாய்ப்பை (field) அளிக்கிறது என்று வலியுறுத்தியது. நம்முடைய பொதுவுடைமைச் சமுதாயத்தில் கருத்து, தொழிலிலும் விவசாயத்திலும் பெருமளவு பலதரப்பட்ட நிறுவனங்களை (units) உண்டாக்க வேண்டும் என்பதே. இந்தச் சிறிய நிறுவனங்கள் ஒன்று சேருவதன் மூலம் பெரிய நிறுவனங்களுடைய நன்மைகளைப் பெறமுடிகிறது. ஆகையால், இந்தியாவில் சமுதாய மாற்றத்தை உறுதிப்படுத்தும் கருத்து கொண்டு செய்யப்படும் பொருளாதார வளர்ச்சியானது கூட்டுறவு நிறுவனங்களை அமைப்பதற்கு ஒரு பெரிய வாய்ப்பை அளிக்கிறது. எனவே, பொருளாதார வளர்ச்சித் திட்டங்களின் ஒரு பிரிவாகக் கூட்டுறவுத் துறையை அமைத்து வளர்ப்பது தேசிய ஆட்சிப்போக்கின் (National Policy) முக்கிய நோக்கங்களின் ஒன்றாகும்' என்று இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் வலியுறுத்தியது.

கூட்டுறவு வளர்ச்சிக்காகத் தயாரிக்கப்பட்ட பெரிய திட்டங்கள் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டன. கூட்டுறவு இயக்கம் இரண்டாம் திட்டக்காலத்தில்

நல்ல முன்னேற்றம் அடைந்தது. மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தின்படிப் (1961–66) பொதுவுடைமைச் சமுதாயத்தில் உள்ளடங்கிய கருத்து விவசாயத்திலும் தொழிலிலும் ஊழியத்திலும் பெருவாரியான எண்ணிக்கையுள்ள பரவலாக்கப் பட்ட நிறுவனங்களை ஏற்படுத்துவது. கூட்டுறவு சிறிய மனிதர் களுக்கு வாய்ப்பும் சுதந்திரமும் அளிக்கும் பெருமை வாய்ந்தது. அதேநேரத்தில் பெரிய நிறுவனங்களில் கிடைக்கும் நிருவாக அமைப்பு நன்மைகளும் பொதுமக்களுடைய ஆதரவும் நல்ல எண்ணமும் கூட்டுறவுக்குக் கிடைக்கிறது. எனவே, வேலை வாய்ப்புகளைப் பெருக்குவதற்கும் பொருளாதார வளர்ச்சியை விரைவுபடுத்துவதற்கும் சமுதாயம் நிலையாக இருப்பதற்கும் குடியானவர்கள், தொழிலாளிகள், நுகர்வோர்கள் இவர்களுடைய தேவைகளைச் சிறப்பாகக் கருத்தில் வைத்துப் பணியாற்றி விரை வாக வளர்ச்சியுறும் கூட்டுறவுத் துறை மிக அவசியமானதாகும். ஆகையால், கூட்டுறவு நிறுவனங்களுக்கு மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் விரிவான முக்கியப் பணிகள் ஒப்படைக்கப்பட்டன.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்திலும்கூடக் கூட்டுறவுக்குப் பல பொருளாதார நடவடிக்கைகளில் முக்கியப் பங்கு கொடுக்கப் பட்டிருக்கிறது. குறிப்பாக, விவசாயம், சிறுதொழில், விற்பனை, விநியோகம், வழங்குதுறை முதலியவற்றில் கூட்டுறவு இயக்கத்தின் முக்கியக் குறிக்கோள்களில் ஒன்று குறைந்த வருவாய் உள்ளவர்கள் ஒன்றுகச் சேருவதற்கும், ஒன்றுபட்ட நடவடிக்கை யினால் நன்மை அடைவதற்கும் வழி செய்வது. இந்தக் குறிக்கோளை அடைவதற்குப் பல கூட்டுறவு வளர்ச்சித் திட்டங்கள் தயாரிக்கப் பட்டன. உதாரணமாக, கூட்டுறவுப் பால் உற்பத்திச் சங்கங்கள், மீனவர் சங்கங்கள், தொழிலாளர் சங்கங்கள், வீடு கட்டும் சங்கங்கள், கைத்தொழில் சங்கங்கள் முதலியன கூட்டுறவு வளர்ச்சிக்காக நான்காவது திட்டத்தில் 206 கோடி ரூபாய் செலவு செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மூன்றுவது திட்டத்தில் கூட்டுறவு வளர்ச்சிக்காகச் செலவு செய்த உத்தேசத் தொகை ரூபாய் 78 கோடி மாத்திரம்தான். ஆகையால், திட்டக் குழு (Planing Commission) மக்களாட்சியில் பொருளாதாரத் திட்டத்திற்குக் கூட்டுறவு இயக்கம் ஓர் இன்றியமையாத கருவி என்று ஒப்புக்கொண்டு, மக்களுடைய–குறிப்பாக எளிய மக்களுடைய சமுதாய, பொருளாதார நலத்திற்காகத் தயாரிக்கப் பட்ட பல திட்டங்களை அமல் செய்வதில் கூட்டுறவுக்கு ஒரு முக்கிய இடம் அளித்திருக்கிறது.

பல சந்தைகளில் செல்வாக்குப் பெற்றுத் தங்கள் பலத்தைப் பயன்படுத்தும் பெரிய நிறுவனங்களிலிருந்து எளிய மக்கள்

தற்காப்பு செய்துகொள்ளவேண்டுமானால் அவர்கள் கூட்டுறவு இயக்கத்தின் பரப்பினுள் கொண்டுவரப்பட வேண்டும். அப்போதுதான் கூட்டுறவு இயக்கம் பொருள் இல்லாதவர்களுடைய முன்னேற்றத்திற்கு ஒரு கருவியாகப் பணியாற்றி சமுதாயத்திலும் பொருளாதாரத்திலும் பிற்பட்டவர்களுக்கு முன்னேற்றச் சக்தியாகச் செயற்பட்டு மக்களாட்சிப் பொது உடைமையைப் பெறமுடியும். கூட்டுறவுச் சங்கம் ஜனநாயகத்தின் ஒரு பள்ளிக்கூடம். கூட்டுறவு சங்கம் உறுப்பினரை ஒரு தெளிவு படைத்த, செய்தியறிந்த குடிமகனாகச் செய்ய உதவுகிறது. இருந்தாலும், அதனுடைய முக்கிய தொண்டு பொருளாதாரத் துறையில்தான் பெருவாரியான சாமானிய மக்களின் வருவாய் நிலையை உயர்த்தி, அதன்மூலம் மக்கள் தொகையில் உயர்ந்த வருவாய் உள்ளவர்களுக்கும், குறைந்த வருவாய் உள்ளவர்களுக்கும், இடையே உள்ள வேறுபாட்டைக் குறைப்பதற்கும் உதவுகிறது. இத் துறையில் கூட்டுறவு இயக்கத்தின் சாதனைகள் இது வரை சிறியதாக இருந்தாலும், அது மக்களாட்சி முறையில் நாட்டின் எதிர் காலப் பொருளாதார மேம்பாட்டுக்கு ஒருவலிமை வாய்ந்த பொருளாதார அடித்தளமாக இருக்கக் கூடியது. மேற்கூறியதிலிருந்து இந்தியாவில் கூட்டுறவுச் சங்கங்கள் கடந்த அறுபது ஆண்டுகளுக்குமேல் பணிபுரிந்ததில் இயக்கத்தின் குறிக்கோள்களில் படிப்படியான மாறுதல்கள் ஏற்பட்டன என்பது விளங்கும்.

கிராமப்புறங்களில் குடியானவர்களுடைய கடன் சுமையைக் குறைப்பதற்கு ஏற்பட்ட ஒரு சாதாரண இயக்கமான கூட்டுறவு இயக்கம் விவசாயத்திலும் தொழிலிலும் பொருளாதார முன்னேற்றத்திற்கான சக்தி வாய்ந்த இயக்கமாக வளர்ந்து இப்பொழுது மக்களாட்சியின் மதிப்புமிக்க துணைவனாக விளங்குகிறது. அரசாங்கத்தின் ஆட்சிக் கொள்கைகளை நிறைவேற்றவும் நாட்டின் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்கும் பொருளாதார, சமுதாயநல முன்னேற்றத்திற்கும் கூட்டுறவு ஒரு தகுதியான கருவி என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. எல்லாவற்றையும்விட அது சாமானிய மக்களுடைய நலன்களைப் பாதுகாக்கும் நம்முடைய பொருளாதார அமைப்பில் ஓர் முக்கியத் துறையாகக் கருதப்படுகிறது.

நவீன அரிசி அறவை ஆலைகள், நூல் நூற்பு ஆலைகள், நெசவு, கைத் தொழிற்சாலைகள், சர்க்கரை ஆலைகள் முதலியவை போன்ற எளிய தொழிற்சாலைகள் உட்பட பலதரப்பட்ட நடவடிக்கைகளைக் கூட்டுறவு மேற்கொண்டிருக்கிறது. இந்த நடவடிக்கைகளின்

மூலம் சாமானிய மக்களுடைய—பொருள் இல்லாதவர்களுடைய நிலையை உயர்த்தி நாட்டில் ஒரு பொதுவுடைமைச் சமுதாயத்தை உருவாக்கும் திட்டத்தின் ஒரு அம்சமாகக் கூட்டுறவு நிறுவனங்களுக்கு ஆக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது. ஒரு பொதுவுடைமைச் சமுதாயத்தை வளர்ப்பதில் கூட்டுறவு நிறுவனங்கள் கணிசமான உதவி அளிக்கமுடியும். ஆகவே, கூட்டுறவு நிறுவனங்களின்பால் ஒரு புத்தொளி தேவைப்படுகிறது. எனவே, கூட்டுறவு இயக்கத்தைப் பலப்படுத்தி இயக்கம் முன்னேவிடத் திறம்படப் பணியாற்றும்படி ஒவ்வொரு நடவடிக்கையும் எடுக்கவேண்டியது அவசியம். கூட்டுறவு நிறுவனங்கள் ஒரு பொதுவுடைமைச் சமுதாயத்தை வளர்ப்பதில் ஒரு முக்கியக் கணிசமான பங்கு கொள்வதற்கு வேண்டியவாறு அவைகளுக்கு ஊக்கமும், உதவியும் அளித்து அவைகளை ஓம்புவது அரசாங்கத்தின் கடமையாகும்.

4. இந்திய அரசும் கூட்டுறவும் (Government of India and Co-operation)

நாடு சுதந்திரம் அடைந்த பின்னர் குறிப்பாக அகில இந்திய கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை வெளிவந்த பின்னர் அரசு கூட்டுறவு நிறுவனங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டது. கூட்டுறவு நிறுவனங்கள் சுய ஆட்சி நிறுவனங்கள் ஆகையால் அவை அரசாங்கத்தின் ஆதரவை எதிர்பார்க்காமல் அரசாங்க உதவி அல்லது வெளி உதவி இல்லாமல் தங்களுடைய அலுவல்களைத் தாங்களே நிருவாகம் செய்யக்கூடிய நிலைமையில் இருக்க வேண்டும் என்று ஒரு சமயம் கூறப்படுகிறது. கூட்டுறவு தனியார் துறை நிறுவனங்கள் ஆகையால் கூட்டுறவு நிறுவனங்கள் அரசாங்க உதவியை எதிர்நோக்காமல் தங்களுடைய அலுவல்களைத் தாங்களே நிருவகிக்க வேண்டுமென்று வாதிக்கப்படுகிறது. இது சரியான வாதமல்ல. கூட்டுறவு நிறுவனங்கள் தனியார் நிறுவனங்களில் ஒரு பகுதி என்பது உண்மையாய் இருந்தாலும் அவைகள் அமைப்பு, செயல்வகை நோக்கங்கள் முதலியவற்றால் ஒரு வேறுபட்ட அடிப்படையில் நிற்கின்றன. உண்மையைக் கூறுமிடத்து கூட்டுறவு இயக்கம் அரசாங்கத்தால் கொண்டு வரப்பட்டது. அது 1904ஆம் ஆண்டு அரசாங்கத்தால் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின் விளைவாகத் தோன்றியது. அப்பொழுதிலிருந்து கூட்டுறவுச் சங்கங்களில் நடவடிக்கையில் அரசாங்கம் அக்கறை எடுத்து அவைகளுக்குப் பலவகையில் உதவிசெய்து வந்திருக்கிறது.

சுதந்திரம் பெற்றபின்னர் அகில இந்தியக் கிராம கடன் விசாரணைக் குழு கூட்டுறவு நிறுவனங்களில் அரசாங்கம் பங்கு

கொள்ளவேண்டுமென்றும், அவைகளுடன் கூட்டாளியாக வேண்டுமென்றும் பரிந்துரை செய்தது. அரசாங்கத்தின் ஊட்டமும் கவனிப்பும், இல்லாதிருந்தால் கூட்டுறவு இயக்கம் இன்று அடைந்திருக்கும் வளர்ச்சியை அடைந்திராது. எனினும், கூட்டுறவு நிறுவனங்களின் சுயாட்சித் தன்மையும் அவைகளுக்கு அரசு உதவி அளிப்பதும், சில சமயங்களில் அவைகளின் நடவடிக்கைகளை அரசு ஒழுங்குபடுத்துவதும், ஒன்றுக்கொன்று ஒவ்வாதது அல்ல. திட்டமிடுதல் என்பதில் அரசாங்க ஈடுபாடு அவசியமாக இருக்கின்றது. இதில் வியப்பானதோ புரட்சியானதோ ஒன்றும் இல்லை. கூட்டுறவுச் சங்கங்களை ஒழுங்குபடுத்துவதற்காக ஒரு தனிச் சட்டத்தை அரசாங்கம் ஏற்படுத்தவேண்டுமென்பது இப்பொழுது எல்லாராலும் ஒருமுகமாக ஒப்புக்கொள்ளபட்டிருக்கிறது. மேலும், அரசாங்கத்திற்கு மக்களிடையே தன்னம்பிக்கையையும், பரஸ்பர உதவி உணர்ச்சியையும் வளர்ப்பது நோக்கமாகையால் கூட்டுறவு எந்த வழிகளில் வளர்க்கப்படவேண்டும் என்பதையும், அத்தகைய வளர்ச்சிக்கான வசதியையும், சூழ்நிலையையும் ஏற்படுத்துவது பற்றியும் பொதுமக்களிடையே கல்வி அறிவு பரப்பப்பட வேண்டும்.

அரசாங்க உத்தரவுப்படிக் கூட்டுறவு இயக்கத்தை வளர்த்து அரசாங்கம் அதற்கு உதவும். கூட்டுறவு நிறுவனங்களை அரசாங்கக் கொள்கைகளை நிறைவேற்றுவதற்கு ஒரு கருவியாகப் பயன்படுத்தும் கொள்கையும் கூட்டுறவு நிறுவனங்களின் சுயாட்சித் தன்மையும், சுயேச்சைத் தன்மையும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை அல்ல. 'வாய்ப்பு எழும்போது ஒரு குறிப்பிட்ட இடத்திலுள்ள எல்லா மக்களுக்கும் பால் அல்லது அடுப்புக்கரி விநியோகம் செய்வதற்காக அரசாங்கத்தின் முகவராகப் பணி செய்வதற்கு. அப்படி செய்வதில் சுயேட்சைத் தன்மைக்குக் கொஞ்சம் மாறுபாடு இருந்தாலும், கூட்டுறவுச் சங்கங்கள் ஏன் தயங்க வேண்டும் என்பது எனக்குத் தோன்றவில்லை' என்று புகழ்பெற்ற பிரிட்டிஷ் பொருளாதார நிபுணர் ஜி. டி. எச். கோல் (G. D. H. Cole) அவர்கள் கூறியுள்ளார்.

கூட்டுறவு முக்கியமாக ஒரு மக்கள் இயக்கமாக இருக்கிறது. கூட்டுறவு முன்னேற்றத்திற்குத் திட்டம் தயாரிப்பதிலும், அத்திட்டங்களை நிறைவேற்றுவதிலும் உத்தியோகப் பற்றற்ற கூட்டுறவாளர்களுடைய முழு ஆதரவைத் திரட்டுவது அவசியமாக இருக்கிறது. அரசாங்கம் இயக்கத்திற்கு உதவியளித்து வழிகாட்ட முடியுமே தவிர இயக்கம் நாட்டின் அபிவிருத்திக்காக ஓர் உயிர் நாடியாக வளரவேண்டுமானால் அதற்கு உத்தியோகப் பற்றற்றவர்களுடைய இடைவிடாத நெருங்கியத்தொடர்பின்மூலம் கிடைக்கும்

பொதுமக்களுடைய ஆதரவு அவசியம் தேவைப்படுகிறது. அரசாங்கம் கூட்டுறவுச் சங்கங்களின் செயல்முறைகளை ஒழுங்குபடுத்தவும், அவைகளுக்கு உதவியளிக்க முடிந்தாலும் கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் சுயாட்சித் தன்மையைக் கைவிடாமல் நாட்டு மக்கள் நலனுக்காகப் பணிபுரிய முடியும்.

அரசியல் சுதந்திரத்திற்குப் பின்னுல் மாநிலங்களில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசுகள் தோன்றிய பின்னர் மக்களுடைய சமுதாய, பொருளாதார நலத்தை வளர்ப்பதற்காகத் தீட்டப்பட்ட திட்டங்களை அமல் நடத்துவதில் கூட்டுறவு நிறுவனங்களுக்கு ஒரு முக்கியப் பங்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. அரசாங்கக் கொள்கைகளை அமல்நடத்துவதற்கு ஒரு சாதனமாகக் கூட்டுறவு நிறுவனங்கள் ஒப்புக்கொள்ளப்பட்டன. நம்முடையது போன்ற ஒரு மக்கள் நல அரசில், மக்கள் நிறுவனங்களாகிய கூட்டுறவு நிறுவனங்களை மக்கள் நலத்திட்டங்களை அமல்படுத்துவதில் அரசாங்கம் ஒரு கருவியாக உபயோகித்துக் கொள்வது இயற்கையானதே. அனைத்திந்தியக் கிராமக்கடன் விசாரணைக் குழு, அரசும் கூட்டுறவும் என்ற பொருள்பற்றி பின்வருமாறு கருத்து தெரிவித்திருக்கிறது.

'கூட்டுறவு நிறுவனங்கள் அரசாங்கத்தினுடைய ஊக்கத்தையும், உதவியையும் பெறுவதற்கு உரியன. ஆனுல், அதனுடைய நோக்கம் சுய உதவியாலும், தன்னம்பிக்கையாலும் இயங்க வேண்டுமென்பது. அது எந்தக் காரணத்தைக்கொண்டும், அரசாங்கத்தால் அமிழக் கூடாது (absorbed) அல்லது உறிஞ்சப் படக்கூடாது. அது பொருளாதார நடவடிக்கைத் துறையில் ஒரு பெரிய பகுதியாக இடம்கொள்ளவேண்டும். அரசாங்கத்தினுடைய பொருளாதாரத் திட்டங்கள் சிலவற்றை நிறைவேற்றுவதற்கு அது உதவவேண்டும். ஆனுல், அது தன்னுடைய சுதந்திரத்தையும் தனித்தன்மையையும் (individuality) முயற்சியில் முந்திக்கொள்ளும் சக்தியையும் (initiative) விடாமல் காத்து வர வேண்டும்.'

# 5. தமிழ்நாட்டில் கூட்டுறவுச் சட்டத்தின் வரலாறு

## (History of Co-op. Legislation in Tamil Nadu)

1. தமிழகத்தில் கூட்டுறவுச் சட்டத்தின் தோற்றம் (Origin of Co-operative Legislation in Tamil Nadu)

இந்தியாவின் மற்ற மாநிலங்களைப்போல், சென்னை மாநிலத்திலும் 1892ஆம் ஆண்டு சென்னை அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட சிறப்பு அதிகாரி சர். பிரடெரிக் நிக்கல்சன் (Sir. Frederik Nicholson) அவர்கள் அளித்த பரிந்துரைகளின்படி கிராமக் கடன் வழங்கும் நிறுவனமாகக் கூட்டுறவுச் சங்கங்கள் துவக்கப்பட்டன. முன்னர் கூறியபடி அவருடைய பரிந்துரைகளின் விளைவாக இந்திய அரசாங்கம் 1904ஆம் வருடத்தியக் கூட்டுறவு நாணயச் சங்கச் சட்டத்தை இயற்றியது. சென்னை மாநிலத்தில் கிராமக் கடன் கூட்டுறவுச் சங்கங்களைப் பதிவு செய்வதற்கு அந்தச் சட்டம் தான் பின்பற்றப்பட்டது. அந்தச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் தங்களுக்குத் தேவைப்படும் மூல நிதியை (Capital) உள்ளூரில் திரட்ட முடியாத நிலைமையில் இருந்து வந்தன. ஆகையால், அந்தச் சங்கங்களுக்கு மூலநிதி வழங்கவும், அவை இயங்கும் முறையைக் கண்காணிப்பதற்கும், உயர்நிலைக் கூட்டுறவு நிறுவனங்கள் அவசியமாகத் தோன்றியது. அந்தத் தேவையைப் பூர்த்தி செய்யும் பொருட்டு 1905ஆம் ஆண்டில் 'சென்னை கூட்டுறவு மத்திய நகர வங்கி' (The Madras Co operative Central Urban Bank) அமைக்கப்பட்டது. 1911ஆம் ஆண்டிற்குள் மாவட்டக் கூட்டுறவு வங்கிகள் (District Co-operative Central Bank) சேலத்திலும் திருச்சிராப்பள்ளியிலும் கோயம்புத்தூரிலும் அமைக்கப்பட்டன. ஆனால், பிரதமச் சங்கங்களுக்கு நிதி வழங்குவதற்கும் கண்காணிப்பதற்கும் தேவைப்படும் உயர்நிலைக் கூட்டுறவு நிறுவனங்களைப் பதிவு செய்ய 1904ஆம் வருடத்தியச் சட்டம் இடம் தரவில்லை.

மேலும், கடன் தேவைகளுக்குத்தவிர மற்ற செயல்களுக்குக் கூட்டுறவுச்சங்கங்களை அமைக்க கூட்டுறவுக் கடன் நாணயச் சங்கச் சட்டம் அனுமதிக்கவில்லை. அந்தக் குறைபாடுகளை நீக்குவதற்கு இந்திய அரசாங்கம் 1912ஆம் ஆண்டில் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தை (Co-operative Societes Act II of 1912) இயற்றியது. அந்தச் சட்டம் நிறைவேறியதன் விளைவாக நாட்டில் கூட்டுறவு இயக்கம் விரிவுபட ஆரம்பித்தது. விற்பனைச் சங்கங்கள் விநியோகச் சங்கங்கள், நெசவாளர் சங்கங்கள்போன்ற புது வகையான கூட்டுறவுச் சங்கங்கள் நிறுவப்பட்டன. மாவட்டங்களிலுள்ள பிரதமச் சங்கங்களுக்கு நிதியளிக்க மத்தியக் கூட்டுறவு வங்கிகளும் அவைகளைக்கண்காணிக்கக் கூட்டுறவு மேற்பார்வை யூனியன்களும் (Co-op. Supervising Unions) நிறுவப்பட்டன.

1914ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட சர். எட்டுவர்டு மாக்லகின் குழு (Sir. Edward Maclagan Committee) நாட்டில் கூட்டுறவு இயக்கத்தின் நிலைமையை ஆராய்ந்து குறிப்பாக கூட்டுறவு இயக்கத்தில் உயர் நிலை நிதி அமைப்பை அபிவிருத்தி செய்வதற்காகப் பல முக்கியமான ஆலோசனைகளைக் கூறியது.

1919ஆம் ஆண்டில் அரசியல் அமைப்புச் சீர்திருத்தத்தின் காரணமாகக் கூட்டுறவு இயக்கம் மாநிலங்களுக்கு ஒப்படைக்கப் பட்டு மாநிலங்களில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சரவையால் நிருவகிக்கப்பட்டது. அதன் விளைவாகக் கூட்டுறவு இயக்கம் ஆக்கம் பெற்று வளர்ச்சியுற்றுப் பதிவு செய்யப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை மிகவும் அதிகரித்தது. ஆகையால், இந்தியாவில் பல மாநிலங்களின் அரசாங்கங்கள் கூட்டுறவு இயக்கத்தை ஆராய்ந்து நல்ல முறையில் கூட்டுறவுச் சங்கங்கள் இயங்கத் தனிச் சட்டத்தை ஏற்படுத்திக்கொண்டன. மாநிலங்களில் நிறைவேற்றப்பட்ட தனிச் சட்டங்கள் கூட்டுறவுச் சங்கங்களை ஒழுங்குபடுத்தித் திருத்தி அமைத்து நல்ல முறையில் இயங்கக் கூட்டுறவுப் பதிவாளருக்கு வேண்டிய அதிகாரங்களை அளித்தன.

2. சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் 1932 (Madras Co-operative Societies Act VI of 1932)

சென்னை மாநிலத்தில் கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றத்தையும் அது இயங்கும் முறையையும் ஆராய்ந்து, இயக்கம் மேலும் வளர வழிவகைகள் ஆலோசனை கூற 1927ஆம் ஆண்டில் சி. எச். டௌன் ஸென்ட் (C. H. Town Send) தலைமையில் குழு

ஒன்றை சென்னை அரசாங்கம் நியமித்தது. இந்தக் குழு பல முக்கியச் சிபாரிசுகளைச் செய்தது. 1912ஆம் வருடத்தியக் கூட்டுறவு சங்கங்களின் சட்டத்தில் செயல்முறையில் காணப்பட்ட பல குறைபாடுகளைக் களைந்து, சென்னை மாநிலத்திற்கு ஒரு தனிக் கூட்டுறவுச் சங்கச் சட்டம் தேவையென்றும், பிரதம நில அடமான வங்கிக் கணக்கு நிதி வழங்க ஒரு மத்திய அமைப்பு நிறுவ வேண்டும் என்றும், நில அடமான வங்கிகளுக்கு ஒரு தனிச் சட்டம் தேவையென்றும், அந்தக் குழு பரிந்துரை செய்தது. இந்தக் குழுவின் சிபாரிசுகளை அனுசரித்து 1932ஆம் ஆண்டில் சென்னைக் கூட்டுறவுச் சங்கங்கங்கள் சட்டம் (The Madras Co-operative Societies Act Act VI Of 1932) இயற்றப்பட்டது. இந்தச் சட்டம் 1912ஆம் வருடத்திய இரண்டாவது இந்தியச் சட்டத்தின் தோற்றுவாயில் காணப்பட்டிருக்கும், 'குறைந்த வருவாய் உள்ளவர்களுக்கு மட்டும்' (Men of Limited Means) என்ற சொற்களை எடுத்துவிட்டு, அவற்றிற்குப் பதிலாக விவசாயிகள் இடையேயும், மேலும் பொதுவான பொருளாதாரத் தேவையுள்ள மற்றவர்களிடையேயும், சிக்கனம், சுயஉதவி, பரஸ்பர உதவியை வளர்த்து அதன்மூலம் அவர்கள் மேன்மையான வாழ்க்கையை நடத்தவும், உயர்வான முறையில் தொழில் நடத்தவும், மேலான உற்பத்தி முறைகளைக்வகையாளவும், வழிவகை செய்து கூட்டுறவுச் சங்கங்களின் நோக்கங்கள் ஆகும் என்று நிருணயித்தது. கூட்டுறவு இயக்கத்தை விரிவடையும் படிச் செய்தது சரிவர இயங்காதசங்கங்கள் மீது தக்க நடவடிக்கை எடுக்கவும், சங்கங்களில்தவணைதவறிய பாக்கியைவசூலிக்க தீர்ப்பாணைகளையும்(degrees) இசைவுத் தீர்ப்புகளையும் (awards) நிறை வேற்றுவதற்குச் சிறப்பான அதிகாரங்கள் வழங்கிப் பதிவாளருடைய கரத்தை இந்தப் புதுச் சட்டம் பலப்படுத்தியது.

3. சென்னை கூட்டுறவு நில அடமான வங்கிகளின் சட்டம் 1934 (Madras Co-operative and Morgtage Banks Act No. X of 1934)

நில அடமான வங்கிகள் தனிப்பட்ட முறையில் ஒவ்வொன்றும் கடன் ஈட்டுப் பத்திரம் (Debentures) வழங்கித் தனித்தனியாக நிதி திரட்டுவது தேவையற்ற போட்டியை உண்டாக்கிப் பல கெடுதல்களை விளைவிப்பதால் ஒரு மத்திய நில அடமான வங்கி நிறுவ வேண்டுமென்று டௌன் ஸென்டி குழு பரிந்துரை செய்ததால் சென்னை மாநிலத்தில் 1929ஆம் ஆண்டில் மத்திய நில அடமான வங்கி ஒன்று அமைக்கப்பட்டது. இந்தக் குழுவின் பரிந்துரைப்படி, 1934ஆம் ஆண்டில் நில அடமான வங்கி தொடர்பாக சென்னை நில அடமான வங்கிகள் சட்டம் என்ற ஒரு

தனிச் சட்டம் இயற்றப்பட்டது. இந்தச் சட்டத்தில் மத்திய நில அடமான வங்கி வழங்கும் கடன் ஈட்டுப் (Debentures) பத்திரங்களுக்கு உத்திரவாதம் அளிப்பதற்கு மாநில அரசாங்கத்திற்கு அதிகாரம் வழங்கியும், கடன் ஈட்டுப் பத்திரம் வாங்கியவர்கள் சார்பாக ஒரு பொறுப்பாளரை (Trustee) நியமிக்கவும், நில அடமான வங்கிகளில் தவணை தவறிய பாக்கிகளை விரைவில் வசூல் செய்யச்சிறப்பான அதிகாரங்களை வழங்கியும் சரத்துகள் சேர்க்கப் பட்டன.

4. சர். டி. விஜயராகவாச்சாரியார் (Sri. T. Vijayaraghavachariar) குழு அறிக்கை 1939 (Committee on Co-operation in Madras 1939)

1931ஆம் ஆண்டில் உலக நாடுகள் அனைத்திலும் பரவலாக ஏற்பட்ட பொருளாதாரத்தேக்கத்தின் காரணமாகக் கூட்டுறவு இயக்கம் பாதிக்கப்பட்டு இயக்கத்தில் பல பிரச்சினைகள் தோன்றின. சங்கங்களில் உறுப்பினர்கள் தாங்கள் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கும் திறனை இழந்து சங்கங்களில் கடன் தவணையைக் கொடுக்காமலும், மத்திய வங்கிகளிலிருந்து பெற்ற கடன்களைப் பிரதமச் சங்கங்கள் தவணையோடு கட்டாமல் தவணை தவறிய பாக்கிகள் பெருமளவு அதிகரித்தன. இந்நிலமையைச் சமாளிக்கப் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இந்தத் தருணத்தில் ரிசர்வ் வங்கியும் (Reserv Bank of India) கூட்டுறவு இயக்கத்தில் அக்கறை எடுத்து இயக்கம் சரியான முறையில் வளர்ச்சியடைவதற்கு ஆலோசனைகள் கூறியது. இந்தச் சூழ்நிலையில் சென்னை மாநிலத்தில் கூட்டுறவு இயக்கத்தில் ஏற்பட்ட பல பிரச்சினைகளை ஆராய்வதற்காகச் சென்னை அரசாங்கம் 1939ஆம் ஆண்டில் சர். டி. விஜயராகவாச்சாரியார் தலைமையில் ஒரு குழுவை அமைத்தது. இக்குழு தனது அறிக்கையை 1940ஆம் ஆண்டில் சமர்ப்பித்தது. அந்த அறிக்கையில் பலவகையான சங்கங்கள் இயங்கும் முறையை மேம்படுத்த அக் குழு பல பரிந்துரைகளைச் செய்தது.

1932ஆம் ஆண்டில் சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தை அமல்படுத்தியதன் விளைவாக கிடைத்த அனுபவத்தில் அந்தச் சட்டத்தில் புகுத்தவேண்டிய திருத்தங்களை ஆராய்ந்து தங்களுடைய கருத்துகளை வழங்குமாறு குழுவினர் கேட்டுக் கொள்ளப்பட்டு இருந்தனர். அதற்கு இணங்கக் குழுவினர் தம் அறிக்கையில் கண்டிருந்த முடிவுகளுக்கும் பரிந்துரைகளுக்கும் ஏற்ற வாறு சட்டத்தில் சில சீர்திருத்தங்களைச் செய்யவேண்டுமென்று யோசனை கூறினர். அரசாங்கம் குழுவின் பரிந்துரைகளில் பல வற்றை ஒப்புக்கொண்டு அமல் செய்தது. ஆனால், இரண்டாவது

உலகப் பெரும்போர் காரணமாக அரசாங்கக் குழு செய்திருந்த சில பரிந்துரைகளை அமல் செய்ய ஒத்திட்போட்டது. கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திருத்தங்களும் ஒத்திப் போடப்பட்டன.

5. பேராசிரியர் டி. ஆர். காட்கில் (Prof. D. R. Godgil 1944) குழு அறிக்கையும், ஆர். ஜி. சராயா (R. G. Saraiya (1945) குழு அறிக்கையும் (Reports of the Godgil Committee and Saraiya Committee)

இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு இந்திய அரசாங்கம் மேற்கொண்ட பொருளாதார அபிவிருத்தித் திட்டங்களில் கூட்டுறவு இயக்கத்திற்கு ஒரு முக்கிய இடம் கொடுக்கப்பட்டது. இந்திய அரசாங்கம் 1944ஆம் ஆண்டில் பேராசிரியர் டி. ஆர். காட்கில் தலைமையில் விவசாய நிதி உபகுழு (Agricultural finance Sub-Committee) ஒன்றையும், 1945ஆம் ஆண்டில் ஆர். ஜி. சராயா தலைமையில் கூட்டுறவுத் திட்டக் குழு (Co-operative planning Committee) ஒன்றையும் நியமித்தது. மற்றும் மாநிலங்களிலும் கூட்டுறவுக் குழுக்கள் நியமிக்கப்பட்டன. இக் குழுக்கள் தங்கள் அறிக்கையில் சில சட்டத் திருத்தத்திற்கான யோசனைகளையும் பரிந்துரைகளையும் தந்தன. இந்தச் சிபாரிசுகளைத் தழுவி கூட்டுறவுச் சங்கங்களின் சட்டமும் விதிகளும் அப்போதைக்கப் போது திருத்தப்பட்டன.

6. சுதந்திரத்திற்குப் பிற்பட்ட காலம் (Post-Independance period)

1947ஆம் ஆண்டில் நம் நாடு அரசியல் சுதந்திரம் பெற்ற பிறகு நாட்டில் அரசாங்கத்தின் தொழில்பற்றிய கருத்தில் மாறுதல்கள் தோன்றி, சமுதாய நல அரசாங்கம் (Welfare State) என்ற இலட்சியத்தின் அடிப்படையில் அரசாங்கம் இயங்கியது. அரசாங்கம் மேற்கொண்ட எல்லாத் திட்டங்களிலும் இந்த இலட்சியம் பிரதிபலித்தது. இந்த இலட்சியத்தை அடைவதற்கு நாட்டு மக்களின் பொருளாதார வாழ்க்கையை ஒழுங்குபடுத்தித் திட்டமிட அவசியம் ஏற்பட்டது. அப்படிச் செய்தால்தான் நாட்டில் உற்பத்தியைப் பெருக்கவும், சமுதாய நீதியையும் (Social justice) நேர்மையான பங்கீட்டையும் ஏற்படுத்தவும், தொழில் மயமாக்குவதன் மூலம் (Industrilisation) சரி சம பொருளாதாரத்திற்கு அடித்தளம் (Foundation) நிறுவி வேலை வாய்ப்பு நிலையைப் பெருக்கவும் முடியும். இந்தக் குறிக்கோள்களை அடைவதற்காகத் திட்டங்கள் நிர்மாணிக்கவும் அவற்றை அமல் நடத்தவும் தேசியத் திட்டக் குழு (National Planning Commission) ஒன்றை இந்திய அரசாங்கம் அமைத்தது. 1951-52ஆம் ஆண்டில்

இருந்து தேசியப் பொருளாதாரம் பலதுறைகளில் முன்னேற்றம் அடைய திட்டம் அமைத்தலே அடிப்படைக் கொள்கையாக இந்திய அரசாங்கம் பின்பற்ற ஆரம்பித்தது. 1951ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் இந்திய ரிசர்வு வங்கியால் நியமிக்கப்பட்ட அகில இந்திய கிராமியக் கடன் விசாரணைக் குழு (All India rural credit survey Committee) 1954ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் தனது அறிக்கையை வெளியிட்டது. இந்தக் குழு செய்திருந்த சிபாரிசுகளை ஒட்டியும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்த கூட்டுறவு வளர்ச்சி திட்டத்தைத் தழுவியும் நாட்டில் இயங்கும் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றிச் சட்டங்களில் திருத்தங்கள் செய்ய அவசியம் ஏற்பட்டது.

7. டி. எம். நாராயணசாமிப்பிள்ளை குழு அறிக்கை 1956 (Committee on co-operation in Madras 1956) 8. சென்னை கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் 1961 (Madras Co-op. Societies Act 53 of 1961)

இந்திய அரசாங்கம் கூட்டுறவுச் சட்டக் குழு ஒன்றை (Committee on Co-operative Law) நியமித்தது. இந்தக் குழு மாநில அரசாங்கங்களுக்கு வழிகாட்டும் பொருட்டு ஒரு மாதிரி (Model Co-op. Societies Bill) கூட்டுறவுச் சங்க மசோதாவைத் தயாரித்துப் பரிந்துரை செய்தது. சென்னை அரசாங்கம் 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் தகுந்த திருத்தங்கள் கொண்டுவருவதைப் பற்றி ஆலோசித்து 1961ஆம் ஆண்டு சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் (Madras Act 53 of 1961) சென்னை சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. இந்தப் புதிய சட்டம் 4-3-1962 தேதியில் இந்தியக் குடியரசுத் தலைவர் அவர்களின் அங்கீகாரம் பெற்றது. அது 2-10-63 தேதியில் அமலுக்கு வந்தது. சென்னை மாநிலத்திலுள்ள கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தை திருத்துவதும், ஒழுங்குபடுத்துவதும் சங்கங்களின் அமைப்பு தொடர்பான மேலான சரத்துகளை ஏற்படுத்துவதும் இந்த சட்டத்தின் நோக்கமாகும். இந்தச் சட்டத்தின்கீழ் விதிகள் உருவாக்கப்பட்டு 30-3-1963 தேதியில் வெளியிடப்பட்ட அரசாங்க உத்தரவில் G. O. MS. NO: 4284, I. L. C. (Co-operation) பிரசுரிக்கப்பட்டது. இவ் விதிகளும் 2-10-63 தேதியில் அமலுக்கு வந்தன.

சென்னை மாநிலத்தில் கூட்டுறவு இயக்கத்தின் தேவைகளையும் சிக்கல்களையும் பிரச்சனைகளையும் விசாரித்து, அக் கூட்டுறவு இயக்கத்தை வலுப்படுத்துவதற்கும் வரைச் செய்வதற்கும், சீர்ப்படுத்துவதற்கும் யோசனை கூறுவதற்கு 1955ஆம் ஆண்டில் சென்னை

அரசாங்கம் திரு. டி. எம். நாராயணசாமிபிள்ளையின் தலைமையின் கீழ் ஒரு கூட்டுறவுக் குழுவை அமைத்தது. அந்தக் குழு அமைக்கப் படுவதற்கு முன்னரே சென்னை மாநிலத்தின் பிரிவினை நிறைவேற்றப் பட்டது. பல பிரச்சினைகளுக்குமிடையே, சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திற்கும், அச் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட விதிகளுக்கும் தேவைப்படும் திருத்தங்களையும் அல்லது மாறுதல் களையும் நன்கு ஆராய்ந்து, அதற்கான யோசனைகளையும் வழங்குமாறு அக் குழு கேட்டுக்கொள்ளப்பட்டது. அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவினரின் சிபாரிசுகளை, அந்தக் குழு 1955ஆம் ஆண்டில் பாட்னாவில் நடைபெற்ற இரண்டாவது இந்தியக் கூட்டுறவுக் காங்கிரஸால் செய்யப்பட்ட மாறுதல்களுடன் பொதுவாக ஆதரித்தது. தங்கள் சிபாரிசுகள் ஏற்றுக் கொள்ளப்பட்டால் சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திற்கும் அதன்கீழ் வகுக்கப்பட்டிருக்கும் விதிகளுக்கும் தேவைப்படும் திருத்தங்களையும் அரசாங்கத்தினிடம் முன்னரே ஆலோசனையிலிருக்கும் சில சட்ட மாறுதல்களைக் கருதி நிறை வேற்றப்படவேண்டிய திருத்தங்களையும் செய்வதற்கான யோசனைகளை அக் குழுவினர் கூறினர். அக் குழுவினரின் பல பரிந்துரைகளை அரசாங்கம் ஏற்றுக்கொண்டுவிட்டமையால், சட்டத்திற்கும், விதிகளுக்கும் திருத்தங்கள் செய்யவேண்டிய அவசியமேற்பட்டது. 1956ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கத் தால் அமைக்கப்பட்ட கூட்டுறவுச் சட்டக் குழுவினர் மாநிலங் களுக்கு வழிகாட்டியாக ஒரு மாதிரிக் கூட்டுறவுச் சங்கங்களின் மசோதாவைத் தயாரித்தளிக்குமாறு யோசனை கூறினர். ஆகையால், சென்னை அரசாங்கமும் சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தில் தக்க மாறுதல்களைக் கொண்டுவரும் பிரச்சினையை ஆலோசனை செய்தது. அதன் விளைவாகவே 1961ஆம் ஆண்டு சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் நிறைவேற்றப் பட்டது.

9. கே. சந்தானம் குழு அறிக்கை (*1969*) (Committee on Co-operation in Tamil Nadu-1969)

1968ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் தமிழ்நாடு அரசாங்கம் திரு. கே. சந்தானம் அவர்கள் தலைமையில் ஒரு குழுவை அமைத்தது. தமிழ்நாட்டில் கூட்டுறவு இயக்கம் இயங்கும் நிலைமையை ஆராய்ந்து அதனுடைய செயல் ஆற்றலையும் சாதனை களையும் மதிப்பிட்டு அதனை வளர்ப்பதற்கான திட்டங்கள் வகுக்கும்படியும் இந்தக் குழு கேட்டுக்கொள்ளப்பட்டது. மேலும் இக் குழுவின் பரிந்துரைகளை நிறைவேற்றவும் தமிழ்நாட்டின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் ஓர் ஆற்றல் வாய்ந்த கருவி

யாகக் கூட்டுறவு இயக்கத்தைத் திருத்தி அமைப்பதற்கும் வேண்டியவாறு சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திலும் அந்தச் சட்டத்தின் கீழ் வகுக்கப்பட்ட விதிகளிலும் திருத்தங்களையும் மாறுதல்களையும் ஆராய்ந்து பரிந்துரை செய்யும்படி இந்தக் குழு கேட்டுக்கொள்ளப்பட்டது. 1969ஆம் ஆண்டு மே மாதத்தில் சந்தானம் குழு தன் அறிக்கையை அரசாங்கத்திற்கு அளித்தது. தங்கள் பரிந்துரைகளையொட்டிச் சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திற்கும் விதிகளுக்கும் திருத்தங்களை இக் குழுவினர் பரிந்துரைத்தனர். இக் குழுவின் பரிந்துரைகள் அரசினர் ஆய்வில் இருக்கின்றன.

10. 1961ஆம் வருடத்திய (53ஆம்) சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திற்குத் திருத்தங்கள் (Amendments to the Madras Co-op. Societies Act 53 of 1961)

(i) தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் திருத்தச் சட்டம் 1970ஆம் வருடத்திய 29ஆம் சட்டம் (Tamil Nadu Co-operative Societies (Amendment Act, 1970 Act No 29 of 1970) 1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தைத் திருத்துவதற்குப் புதிய சரத்துகளைத் தமிழ்நாடு அரசாங்கம் நிறைவேற்றி இருக்கிறது. இந்தப் புதிய சரத்துகள், தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (திருத்தச்) சட்டம் 1970 (1970 வருடத்திய 29ஆம் சட்டம்) என்று அழைக்கப்பட்டு, சட்டத்தின் ஒரு புதிய அத்தியாயமாக அதாவது அத்தியாயம் IX (அ) ஆக அடங்கியிருக்கிறது. இந்தத் திருத்தச்சட்டம் 8-12-70-ல் ஆளுநரின் ஒப்புதல் பெற்று, 10-12-70 முதல் அமலில் வந்திருப்பதாகக் கருதப்படுகிறது. இந்தப் புதிய சரத்துகள் மாநிலக்கூட்டுறவு வங்கியும், மத்திய கூட்டுறவு வங்கிகளும் வாங்கும் எந்தக் கடன்களுக்கும் அல்லது முன் பணங்களுக்கும் அரசின் உத்தரவாதத்தை அளிப்பதற்கு ஏற்பாடு செய்கின்றன. இந்த உத்தரவாதம் அரசாங்கத்தால் நிருணயிக்கப்பட்ட உச்ச வரம்புத் தொகைக்குட்பட்டிருக்கும். மாநிலச் சட்ட மன்றங்களைக் கலந்து ஆலோசித்து இந்த உச்ச வரம்பை அரசாங்கம் திருத்தியமைக்கலாம். இந்த சரத்துகள் சிறு குடியானவர்களுக்கும் சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினர்களுக்கும் கடன் வழங்கும் திட்டத்தின் நிருவாகத்திலும் கடன் விநியோகத்திலும் தங்களுக்குரிய பங்குகொள்ள அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் கொடுப்பதற்குக்கூட ஏற்பாடு செய்கிறது. ஒரேஇடத்தில் குடியானவர்கள் தங்கள் கடன்களைப் பெறுவதற்கு வசதிப்படுத்தும் வகையில் கிராமக் கடன் அமைப்பை ஒன்றிணைப்பதற்காக இந்தச் சரத்துகள் ஏற்பாடு செய்கின்றன.

(ii) தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (இரண்டாவது திருத்தச்) சட்டம் 1970 : (1970ஆம் வருடத்திய 31ஆம் சட்டம்) (Tamil Nadu Co-operative Societies (Second Amendment) Act 1970) (Act No. 31 of 1970) இந்தச் சட்டத் திருத்தம் 10-1-70 தேதியன்று அமலுக்கு வந்திருப்பதாகக் கருதப்பட வேண்டும். அது 23-12-1970 நாளிட்ட தமிழ்நாடு அரசின் அசாதாரண அரசு இதழில் (Tamil Nadu Govt. Gazettee Extraordinary) வெளியிடப் பட்டிருக்கிறது. 1961ஆம் வருடத்திய தமிழ்நாடு 53ஆம் சட்டத்தின் அத்தியாயம் 10 (அ) ஆக அந்தச் சட்டத்தின் அத்தியாயம் (x)-க்குப்பின்னர் ஒரு புதிய அத்தியாயம் சேர்க்கப் பட்டிருக்கிறது. இந்தச் சட்டத் திருத்தம் முக்கியமாக நீரேற்றுப் பாசனச் சங்கங்களைப் (Lift Irrigation Societies) பற்றியும் அவற்றின் செயல்பாட்டைப்பற்றியும் விவரிக்கின்றது. ஒன்று அல்லது இரண்டு ஹெக்டர்கள் நிலம் வைத்துக் கொண்டிருக்கும் குடியானவர்கள் சிறு நீர்ப்பாசனத் திட்டங்களின் (Minor Irrigation Scheme) நற்பலன்களை நுகர்வதற்கும் கிணறு வெட்டி நீர்க்குழாய்கள் (pump sets) அமைப்பதற்கும் போதுமான பணத்தைக் கடன் வாங்குவதற்கு வசதி செய்யும்பொருட்டும் இறைவை நீர்ப்பாசன சங்கங்கள் தமிழ்நாட்டில் அமைக்கப்பட்டுள்ளன. இந்தச் சங்கங்களின் வழி சிறுவிவசாயிகள் அரசாங்கத்தால் அளிக்கப்படும் கடன் வசதிகளைப் பெற்றுப் பயன் அடையலாம்

நிலவள வங்கிகளும், இதர நிதி நிறுவனங்களும் பொதுக் கிணறுகளை வெட்டி நீர்க் குழாய்களை அமைக்கும் பணியை மேற் கொண்டிருக்கின்றன. 1971 மார்ச்சு மாதத்தில், அத்தகைய சங்கங் கள் 1891 அமைக்கப்பட்டன. அத்தகையச் சங்கங்களின் பெரிய எண்ணிக்கையைக் கருதியும் அவற்றின் செயல்பாட்டின் தனி அம்சங்களைக் கருதியும் ஒரு தனிச் சட்டம் இயற்றுதல் தேவைப் பட்டது. அத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காகத்தான் 1961ஆம் ஆண்டு தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத் திற்கு அத்தியாயம் x-a ஆக ஒரு புதிய அத்தியாயம் புகுத்தப் பட்டது. (அதாவது பிரிவுகள் 84 (அ)விலிருந்து 84 (இசட்) வரை)

(iii) தமிழ்நாட்டுக் கூட்டுறவுச் சங்கங்களின் மூன்றாவது (திருத்தச்) சட்டம் 1970 ; 1970ஆம் வருடத்தில் 32ஆம் சட்டம், (Tamil Nadu Co-operative Societies Third Amendment Act 1970) (Act No 32 of 1970) இந்தச் சட்டத்திருத்தம் 23-12-70ஆம் நாளன்று தமிழ் நாட்டு ஆளுநரின் ஒப்புதலைப் பெற்றது. இது பொதுவாக தலைமைச் சங்கங்களின் அமைப்பையும், நிருவாகத்தையும் குறித்தது.

(iv) தமிழ்நாட்டுக் கூட்டுறவுச் சங்கங்களின் திருத்தச் சட்டம் 1971: 1971ஆம் வருடத்திய 38ஆம் சட்டம் (Tamil Nadu Co-operative Societies Amendment Act 1971, Act No 38 of 1971) இது தமிழ்நாட்டு ஆளுநரின் ஒப்புதலை 23-12-1971ஆம் நாளன்று பெற்றது. இது அத்தியாயம் IX (ஆ)-க்குத் (பிரிவு 73 (எச்) தொடர்புடையது. இந்தத் திருத்தத்தின்படி இந்த அத்தியாத்தில் தலைமைச் சங்கங்களுக்குப் பொருந்தும் சரத்துகள் மத்தியச் சங்கங்களுக்கும் பொருந்தும். ஒரு மத்தியச் சங்கம் என்பது தமிழ்நாட்டு மாநிலத்தின் ஒரு பகுதிக்கு வரையறுக்கப்பட்ட விவகார எல்லையைக் கொண்ட ஒரு சங்கம் என்றும், அத்தகையச் சங்கத்தில் இதர பதிவு செய்யப்பட்ட சங்கங்கள் உறுப்பினர்களாக இருக்கின்றன என்றும் அல்லது ஓர் அறிவிப்பின் மூலம் ஒரு மத்தியச் சங்கமாக அரசாங்கத்தால் வகை செய்யப்பட்ட சங்கம் என்றும் விளக்கப்பட்டிருக்கிறது.

(v) தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் இரண்டாவது திருத்தச் சட்டம் 1971ஆம் வருடத்திய 39ஆம் சட்டம் (Tamil Nadu Co-operative Societies Second Amendment Act 1971) (Act No 39 of 1971) இது 23-12-1971 நாளிட்ட தமிழ்நாட்டு ஆளுநரின் இசைவு பெற்றது. இதுபற்றி, '1971ஆம் வருடத்திய இரண்டாவது திருத்தத்திற்கான நோக்கமும் காரணமும்' கூறுவதாவது:- விவசாய உற்பத்திக்கு அளிக்கப்பட்டுள்ள முக்கியத்துவத்தை அனுசரித்தும் இது குறித்துக் கூட்டுறவுத் துறை ஆற்ற வேண்டிய பணியை முன்னிட்டும் இந்தத் துறை ஏற்பாடு செய்திருக்கும் வசதிகள் பற்றிக் குடியானவர்களை உணரச் செய்வதும் அவர்களை அவ் வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ளச் செய்வதும் அவசியமாகிறது. இத் துறையில் கூட்டுறவு ஒன்றியங்கள் பெரியதொரு சேவையைச் செய்ய வேண்டியிருக்கிறது. வட்டங்களிலும் மாவட்டங்களிலும் இயங்குகின்ற ஒன்றியங்கள் கிராம மக்களுக்குக் கூட்டுறவு இயக்கத்தின் பயனைத் தெரியப்படுத்த வேண்டும். மாநில ஒன்றிய முங்கூட சில திருத்தங்களை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. இச் செயலுக்காகத் தக்க திருத்தங்களைச் செய்வது அவசியமாகக் கருதப்படுகிறது.

இந்த வாய்ப்பு சட்டத்தின் அமல் செய்வதில் காணப்படும் சில சிக்கல்களை நீக்குவதற்காகச் சட்டத்தின் இதர சில சரத்துகளைத் திருத்துவதற்குக்கூட பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இந்தச் சட்டத்திருத்தங்களைப் பற்றிய விவரமான குறிப்புகள், பொருத்தமான அத்தியாயங்களில் தரப்பட்டிருக்கின்றன.

# 6. 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தில் ஏற்பட்ட மாறுதல்கள்

## Changes brougth about in the Madras Co-op .Societies Act of 1961

1. சட்டத்தின் மாறுதல்களுக்கான அவசியம் (Need for changes in the Act)

1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டம் நிறைவேற்றப்பட்ட பிறகு இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியில் நிலை மாற்றும் வகையில் முக்கிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. 1935ஆம் ஆண்டில் மாநிலங்களுக்கு மாநில சுயாட்சி வழங்கப்பட்டது. அது கூட்டுறவு இயக்க வளர்ச்சிக்கு ஒரு திடீர் கூறு வேகத்தை அளித்தது. 1939–40ஆம் ஆண்டுகளில் சென்னை மாநிலத்தில் சர். டி. விஜயராகவாச்சாரியார் தலைமையில் ஒரு கூட்டுறவுக் குழு நியமிக்கப்பட்டது. அதன் அறிக்கை 1940ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. 1939ஆம் ஆண்டிலிருந்து 1945-வரை இரண்டாவது உலகப்போர் நடைபெற்ற காலத்தில் கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகள் பல்வேறு வகைகளில் வளர்ச்சியடைந்தன. 1946ஆம் ஆண்டில் அகில இந்தியக் கூட்டுறவுத் திட்டக்குழு (All India Co–operative Planning Committee) நியமிக்கப்பட்டது. அதன் அறிக்கை 1950ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

1947ஆம் ஆண்டில் நாடு சுதந்திரமடைந்தது. 1951ஆம் ஆண்டில் திட்ட ஆணைக்குழு (Planning Commission) அமைக்கப்பட்டது. 1954ஆம் ஆண்டில் இந்திய ரிசர்வ் வங்கியால் அமைக்கப்பட்ட அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் (All India Rural Credit Survey Committee) அறிக்கை வெளியிடப்பட்டது. தமிழ் நாட்டில் 1955-ல் திரு. டி. எம். நாரயணசாமி

பிள்ளை தலைமையில் ஒரு கூட்டுறவுக் குழு நியமிக்கப்பட்டது. 1956ஆம் ஆண்டில் அதன் அறிக்கை வெளியிடப்பட்டது. இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக்காலங்களில் (1951–56, 1956–61) கூட்டுறவு வளர்ச்சித் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. 1969ஆம் ஆண்டில் அகில இந்தியக் கூட்டுறவு நாணயக் குழு வி. எல். மேதா தலைமையில் (All India Co-op.Credit Committee) நியமிக்கப்பட்டு, 1960ஆம் ஆண்டில் அதன் அறிக்கை வெளியிடப்பட்டது. இந்தக் காலத்தில் பல்வேறு துறைகளில் கூட்டுறவு இயக்கம் விரிவடைந்த காரணத்தாலும், மேற்கூறிய பல கூட்டுறவுக் குழுக்கள் செய்திருந்த பரிந்துரைகளை அனுசரித்தும் சென்னை அரசு கூட்டுறவுத் துறை கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சட்டம் இயற்றத் தலைப்பட்டது. 1961ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் 1963ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 2 ஆம் தேதியிலிருந்து அமலுக்கு வந்தது. கூட்டுறவு இயக்கத்தில் ஏற்பட்ட மாறுதல்கள் 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் காணப்படுகின்றன.

2. சட்டத்தின் முக்கிய மாறுதல்கள் (Main Changes in the Act)

1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில், முன்னால் அமலிலிருந்த கூட்டுறவுச் சட்டத்தை அதாவது 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தைத் திருத்திக் கொண்டுவரப்பட்ட முக்கிய மாறுதல்களை இப்பொழுது ஆராய்வோம்.

(i) விவசாயக் கடன் சங்கங்களின் பொறுப்பு (Liability of Agricultural Credit Societies) : 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழ் ஒரு விவசாயக் கடன் கூட்டுறவுச் சங்கம், பதிவாளரால் வேறு விதமாக அனுமதிக்கப்பட்டால் தவிர, வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில் மாத்திரம்தான் நிறுவப்பட வேண்டும். வரையறுக்கப்படாத (unlimited liability) பொறுப்பு கட்டாயப்படுத்தப்பட்டால் அது சில நபர்களை நாணயச் சங்கத்தில் உறுப்பினர்களாவதைத் தடுக்கும் என்றும் நாணயச் சங்கங்களின் நடவடிக்கைகளை விரிவுபடுத்தும் தற்போதைய நிலையில் விவசாய நாணயச் சங்கங்களுடைய பொறுப்பை நிருணயிக்கும் உரிமையை சங்கத்தை ஆரம்பிக்க முயற்சிப்பவர்களுக்கே (Promoters) விட்டு விடவேண்டும் என்றும் கருதப்பட்டது. ஆகையால், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் நான்காம் பிரிவில், ஒரு விவசாய நாணயச் சங்கம் வரையறுக்கப்பட்ட பொறுப்பிலாவது அல்லது

வரையறுக்கப்படாத பொறுப்பிலாவது நிறுவப்படலாம் என்ற சரத்து ஏற்படுத்தப்பட்டது.

(ii) உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்ளுதல் (Admission of Members): பழைய விதிகளின்படி, ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு ஒரு நபரை உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளவோ அல்லது சேர்த்துக் கொள்ள மறுக்கவோ அதிகாரம் பெற்றிருந்தது. உறுப்பினராகச் சேர மறுக்கப்பட்ட நபருக்குப் பதிவாளரிடத்தில் மேல்முறையீடு (Appeal) செய்ய உரிமையிருந்தது. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் இந்த நிலைமை மாறிவிட்டது. ஏனென்றால் நாணயச் சங்கம் அல்லது விநியோகிக்கும் சங்கம் போன்ற சில வகைச் சங்கங்களில் அங்கத்துவம் தகுதி பெற்ற எல்லா நபர்களுக்கும் திறந்து இருக்கவேண்டுவது அவசியம் என்று கருதப்பட்டது. ஆகையால், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 17 (2) (ஏ)- பிரிவில் உறுப்பினராக இருப்பதற்குத் தகுதி பெற்ற ஒவ்வொரு நபரையும் அம் மாதிரிச் சங்கங்களில் அல்லது விதிகளில் நிருணயிக்கப்பட்ட மற்றச் சங்கங்களில் உறுப்பினராக, அச் சங்கங்களின் நிருவாகக் குழுவினர் சேர்த்துக்கொள்ளக் கடமைப்பட்டவராவர் என்ற சரத்து ஏற்படுத்தப்பட்டது. ஆனால், எந்தக் காரணத்தினாலாவது அவ்வாறு சேர்க்கப்பட்ட ஓர் உறுப்பினர், உறுப்பினராக இருந்துவருவது சங்கத்தினுடைய நலன்களைப் பாதிக்கும் என்று கருதப்பட்டால், அந்த உறுப்பினரைப் பதிவாளர் அங்கீகாரம் பெற்றே நிருவாகக் குழுவினர் விலக்கலாம்.

அம் மாதிரி ஓர் உறுப்பினரை விலக்குவதற்கு நிருவாகக் குழுவினர் பதிவாளருக்கு அந்த உறுப்பினரைச் சேர்த்துக் கொண்ட தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் ஒரு விண்ணப்பம் அனுப்ப வேண்டும். உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்வது தொடர்பாக ஏற்படுத்தப்பட்ட இந்தக் கட்டளைச் சரத்து 18ஆம் விதியில் குறிக்கப்பட்ட வகைச் சங்கங்களுக்கு மாத்திரம்தான் பொருந்தும், அதாவது நாணயச் சங்கங்கள், விநியோகிக்கும் சங்கங்கள், விற்பனைச் சங்கங்கள். 18ஆம் விதி கூறுவதாவது; நாணயச் சங்கம், விநியோகிக்கும் சங்கம், விற்பனைச் சங்கம், இச் சங்கங்கள் 17ஆம் பிரிவின் உட்பிரிவு 2-ன் பகுதி (அ) சரத்திற்கு உட்பட்ட சங்க வகைகளாகும். தனிப்பட்ட சில குறிப்பிட்ட நோக்கங்களுடைய இதர வகைச் சங்கங்களைப்பற்றி பிரிவு 17 (2) (எப்) கூறுவதாவது, நிருவாகக்குழுவினர் எந்த ஒரு நபரையும் போதியதக்க காரணங்களுக்காக உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ள மறுக்கலாம் என்றும், அம் மாதிரி மறுக்கப்பட்டதை எழுத்து மூலம் பதிவுசெய்து உறுப்பினராகச்

சேர விண்ணப்பம் செய்துகொண்டவருக்குத் தெரியப்படுத்த வேண்டும். உறுப்பினராகச் சேர மறுக்கப்பட்ட ஒரு நபரும் அல்லது உறுப்பினராகச் சேர ஒரு நபர் செய்த விண்ணப்பத்தின் பேரில் நிருவாகக்குழுவினரின் முடிவை விண்ணப்பத் தேதியிலிருந்து இரண்டு மாதகாலத்திற்குள் தெரியப்படுத்தாவிட்டால் அந்த நபரும், பதிவாளருக்குமேல் முறையீடு (Appeal) செய்துகொள்ள உரிமை பெற்றவர்கள் ஆவர். சட்டத்திலேயே இந்தச் சரத்துகள் சேர்த்திருப்பது, கூட்டுறவுச் சங்கத்தின் அங்கத்துவம் விரிந்த அடிப்படையில் இருக்கவேண்டுமென்பதையும், சங்கத்தில் தகுதி பெற்ற எல்லாரும் யாதொரு தடையும் இல்லாமல் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படவேண்டும் என்பதையும் உறுதிப்படுத்த வேண்டும் என்ற கவலை சட்டம் அமைத்தவர்களுக்கு இருந்தது என்பதைக் காட்டுகிறது.

(iii) உறுப்பினர்களுக்குச் சேவை செய்தல் (Rendering of Services to Members)

(அ) நபர்களை உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்வது மட்டும் போதாது. சங்கம் வழங்கும் சேவைகளையும் உறுப்பினர்கள் பெற முடியவேண்டும். சங்கத்தின் அங்கத்துவம் அனைவருக்கும் அளிக்கப்பட வேண்டும் (Universal Membership) என்று வற்புறுத்தப்படும் இத் தருணத்தில், சங்கத்தின் துணைவிதிகளின்படி உரிமைபெற்ற எந்த ஓர் உறுப்பினருக்கும் சங்கத்தின் சேவைகள் மறுக்கப்படாமல் இருப்பதை உறுதிப்படுத்துவது அவசியமாக இருக்கிறது. ஆகையால், 1961ஆம் ஆண்டுச் சட்டத்தின் 19ஆம் பிரிவு ஒரு சங்கத்தின் உறுப்பினருக்குக் கிடைக்கிற சேவையைப் பெற அவர் விண்ணப்பம் செய்தால் சங்கத்தின் குழுவினர் அந்த உறுப்பினருக்குச் சேவை செய்து கொடுக்கக் கடமைப்பட்டவர்கள் என்றும், காரணமில்லாமலும், வேறுபாடு காட்டும் வகையிலும் அந்தச் சேவை மறுக்கப்பட்ட உறுப்பினர் பதிவாளருக்கு அக் குறையை நிவர்த்திசெய்ய விண்ணப்பம் செய்து கொள்ளலாம் என்றும் விதிக்கிறது.

அந்த விண்ணப்பம் சங்கத்தின் சேவையை மறுத்துக் குழுவினர் செய்த தீர்மானத்தைப் பெற்ற தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குள், அல்லது குழுவினர் தீர்மானம் தெரியப்படுத்தப்படாமல் இருந்தால் உறுப்பினர் சங்கத்திற்குச் செய்துகொண்ட விண்ணப்பத் தேதியில் இருந்து இரண்டு மாதத்திற்குள் பதிவாளருக்குச் செய்யப்பட வேண்டும். சேவையைச் செய்யக் குழுவினர் மறுத்திருப்பது நியாயமற்றதெனவும், தகுதியற்றதெனவும், வேறுபாடு காட்டும் தன்மையில் உள்ளதெனவும் பதிவாளருக்கு ஐயமறத் தெரிந்தால்,

"அவர்" குழுவினருக்குத் தன் விளக்கவுரையைச் (Representation) செய்து கொள்ள வாய்ப்பளித்த பிறகு, அச் சேவையைச் செய்ய வேண்டுமெனக் குழுவினருக்குக் கட்டளையிடலாம். இது 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் சேர்க்கப்பட்ட புதிய பிரிவு ஆகும்.

(ஆ) நாணயச் சங்கத்தின் உறுப்பினர்கள் 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 7 (எ)-பிரிவின்கீழ், சங்கத்தின் விவகார எல்லையில் வசிப்பவர்களாக இருக்கவேண்டும். ஆனால், அநேக நபர்கள் சங்கத்தின் விவகார எல்லையில் நிலங்கள் உடையவர்களாகவும், அந்த எல்லைக்கு அருகிலுள்ள நகரங்கள் அல்லது கிராமங்களில் உண்மையில் வசிப்பவர்களாகவும் இருக்கிறார்கள். அத்தகைய நபர்களுக்குக்கூட நாணயச் சங்கங்கள் செய்யும் சேவைகள் கிட்ட வேண்டும் என்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் விவகார எல்லைக்குள் வசிக்காவிட்டாலும், அங்கு அசையாச் சொத்துகள் உடையவர்களாக இருப்பவர்களும் சங்கத்தில் உறுப்பினராகலாம் என்ற ஒரு சரத்து 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 6ஆம் பிரிவில் சேர்க்கப்பட்டுள்ளது. இதன் பலனைச் சங்கத்தின் விவகார எல்லையில் வசிக்கிற அல்லது அசையாச் சொத்துகளுடைய எந்த ஒரு நபரும் ஒரு நாணயச் சங்கத்திலிருந்து கடன்பெற முடியும்.

(இ) பழைய சட்டத்தில் உரிமை வயது (Major) அடைந்த நபர்கள் மாத்திரம்தான் ஒரு சங்கத்தின் உறுப்பினராகச் சேருவதற்குத் தகுதி பெற்றவர்களாக இருந்தனர். வயது வராதவர்கள் (Miners) அல்லது மனநிலைப் பிணியாளர்கள் (Person of unsound Mind) சங்கத்தின் உறுப்பினர்களாகச் சேருவதற்குப் பழைய சட்டத்தில் ஏற்பாடில்லாமலிருந்தது. வயது வராதவர்களும், பித்துப்பிடித்த நபர்களும்கூட, ஸ்டோர்ஸ் சங்கங்கள், விற்பனைச் சங்கங்கள், நாணயச் சங்கங்கள் போன்ற சிலவகைச் சங்கங்கள் புரியும் சேவைகளைப் பெற வேண்டியுள்ளது. நாணயச் சங்கம் கடன் வழங்கலாம்; விற்பனைச் சங்கம் விவசாய அல்லது இதர வகை விளைபொருள்களை விற்பனை செய்து கொடுக்கலாம்; ஸ்டோர்ஸ் சங்கம் வீட்டுச் சாமான்களையும் தேவைப்படும் இதர சாமான்களையும் வாங்கித்தரலாம். இந்தச் சங்கங்கள் செய்யும் சேவைகளை மேற்சொன்ன வகை நபர்களுக்குக் கூட அளிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன், விதிகளில் குறிக்கப்பட்ட சில வகைச் சங்கங்களில் அந்த விதிகளில் குறிக்கப்பட்டிருக்கும் உரிமைகள், பொறுப்புகள், சிறப்பு அதிகாரங்களுக்குட்பட்டு வயது வராதவர்களையும், பித்துப்பிடித்த நபர்களையும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

அரசினரால் வகுக்கப்பட்ட 17ஆம் விதியில்; 16ஆம் பிரிவு (1)ஆம் உட்பிரிவில் 2ஆம் நிபந்தனையின் நோக்கம் நிறைவேறுவதற்காகச் சங்க வகைகள் விவசாய நாணயச் சங்கங்கள், உற்பத்திச் சங்கங்கள், கூட்டுப்பண்ணைச் சங்கங்கள், விற்பனைச் சங்கங்கள் விநியோகிக்கும் சங்கங்கள் ஆவன என்று அரசினரால் அமைக்கப்பட்ட 17ஆம் பிரிவு கூறுகிறது. 17 (2) ஆம் விதி மேலும், கூறுவதாவது; இந்தச் சங்க வகைகளில் வயது வராதவர்கள், பித்துப்பிடித்த நபர்கள் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படுவதும், அம் மாதிரி உறுப்பினர்களுடன் சங்கங்கள் செய்யும் அலுவல்கள், வர்களுடைய பாதுகாவலர் (Guardians) மூலம் மாத்திரம்தான் செய்யப்பட வேண்டுமென்பது சட்டத்தின் 17 (1) பிரிவும், 17ஆம் விதியும், புதியதாகச் சேர்க்கப்பட்ட சரத்துகள். இந்தச் சரத்துகள், சில வகைச் சங்கங்கள் புரியும் சேவைகள் ஒரு வழியில் இன்றியமையாதவையாக இருப்பதால், அந்தச் சங்கங்களில் வயது வராதவர்களும் அல்லது பித்துப் பிடித்த நபர்களும் சேர்ந்து பலனடையச் செய்வதற்கு உத்தேசிக்கப்பட்டவைகளாகும்.

(ஈ) 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 33ஆம் பிரிவு ஒரு புதிய பிரிவு. இது கடன் வாங்குபவர்கள் தங்கள் கடன் தேவைகளுக்காக, கடன் தேவைப்படும் ஒவ்வொரு சமயமும் பத்திரங்கள் எழுதிக் கொடுப்பதைத் தவிர்த்து, கடன்களைத் துரிதமாகப் பெறுவதற்கு வசதி செய்கிறது. இந்தப் பிரிவின் கீழ் கடன் வாங்குபவர் அவருக்குச் சொந்தமான நிலம் அல்லது அசையாச் சொத்து தன்னுடைய வழக்கமான கடன் தேவைகளுக்காகப் போதிய பாதுகாப்பு அளிக்கும் வகையில் அந்தச் சொத்தின் பாகத்தின் மீது சங்கத்தின் சார்பாகப் பற்றுப் பொறுப்பு (Charge) ஏற்படுத்தலாம். விதிகள் நிருணயிக்கப்பட்ட நமுனாவில் அவர் செய்த உறுதிமொழியின் மூலம் அவர் சங்கத்திற்கு இவ்வாறு உரிமையளிக்கலாம். இந்த உறுதிமொழிப்பத்திரம் சொத்து இருக்கும் எல்லையில் அதிகாரம் பெற்ற உப பதிவாளரால் பதிவு செய்யப்படவேண்டும். அவ்வாறு பதிவு செய்யப்படாத எந்த உறுதிமொழிப் பத்திரமும் செல்லுபடியாகாது. எனினும், சங்கத்திலிருந்து முன்னமேயே வாங்கியுள்ள கடனுக்கு உறுதிமொழிப் பத்திரம் எழுதிக் கொடுக்க உறுப்பினர் கடமைப்பட்டவரல்லர். இந்தப் பிரிவில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் புதிய சரத்து விவசாயக் கடன் வாங்குபவர்களுடைய பணம், உழைப்பு, காலம் முதலியவற்றைப் பெருமளவு மிச்சப்படுத்துகிறது. கடன் கொடுக்கும் சங்கத்திற்கும் பாதுகாப்பை அளிக்கிறது. கடன் வாங்குவதில் கால தாமதத்தைத் தவிர்க்கிறது.

1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் புதியதாகச் சேர்க்கப்பட்டிருக்கும் சரத்து 40ஆம் பிரிவாகும். இது உறுப்பினர்கள் கொடுக்க வேண்டிய பாக்கியை அவர்களுடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழித்துக் கொள்ளப்படுவதை அனுமதிக்கிறது. இந்தப் பிரிவின்கீழ் சம்பளம் அல்லது கூலி பட்டுவாடா செய்யும் ஒரு முதலாளி அல்லது அதிகாரி தான் இம் மாதிரி வசூலித்த தொகையைச் சங்கத்திற்கு விதிகளில் நிருணயிக்கப்பட்ட காலத்திற்குள் செலுத்திவிட வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. 53 (4) விதியின்கீழ் வசூலிக்கப்பட்ட தொகையைச் சங்கத்திற்கு சம்பந்தப்பட்ட அதிகாரி வசூலித்த தேதியிலிருந்து 14 நாள்கள் காலத்திற்குள் செலுத்திவிடவேண்டும் என்றும், ஆனால் இந்தக் கால வரையை முப்பது நாள்கள் வரை, எந்த ஒரு சங்கம் அல்லது வகைச் சங்கங்கள் விஷயத்தில், அதிககாலம் நீடிப்பதற்கு பதிவாளருக்கு அதிகாரம் உண்டு என்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. சம்பளம் அல்லது கூலிபட்டுவாடா செய்யும் முதலாளி அல்லது அதிகாரி சங்கத்திற்குக் கொடுக்கப்படவேண்டிய பாக்கியைக் கழிக்கத் தவறினல், அது சட்டத்தின்கீழ் ஒரு குற்றமாகக் கருதப்பட்டு ரூ 500/–உச்ச வரம்புக்கு உட்பட்ட அபராதம் விதிக்கப்படலாம்.

ஆனால், இந்தத் தண்டனை விதிக்கிற சரத்து அரசு அல்லது அரசின் எந்த அதிகாரிக்கும் பொருந்தாது. ஓர் உறுப்பினர் கடன்கள் வாங்குதலை ஒழுங்கு படுத்தும் நோக்கத்தோடு, பல்வேறு சங்கங்களிடமிருந்து கிடைத்த விண்ணபத்தையொட்டி ஓர் உறுப்பினரிடமிருந்து ஒரு மாதத்தில் வசூலிக்கப்படும் மொத்தத் தொகை அவருடைய மொத்தச் சம்பளம் அல்லது கூலியில் 50 சதவீதம் உச்சவரம்பாக நிருணயிக்கப்பட்டிருக்கிறது. ஆனல், ஊழியர்கள் சங்கங்கள் வழங்கும் சம்பளக் கடன்களையும், ஸ்டோர்ஸ் சங்கங்களில் கடன் விற்பனைகளின் பேரில் கொடுக்க வேண்டிய பாக்கித் தொகைகளையும் துரிதமாக வசூல் செய்ய வேண்டுவதை உறுதிப்படுத்துவதற்கு விதிகளில் குறிக்கப்பட்டுள்ள சில வகைச் சங்கங்கள் மொத்தச் சம்பளம் அல்லது கூலி பூராவும் வசூல் செய்வதற்கு ஒரு விதி விலக்கு செய்யப்பட்டிருக்கிறது. 58 (9) விதியின்கீழ் நாணயச் சங்கங்கள், விநியோகிக்கும் சங்கங்கள், வீட்டு வசதிச் சங்கங்கள், இந்த வகைச் சங்கங்களில் அச்சங்கங்களுக்குச் சேரவேண்டிய பாக்கித் தொகைகள் உறுப்பினருடைய ஒரு மாத மொத்தச் சம்பளம் அல்லது கூலியில் 50 சதவிதத்திற்கு மேற்பட்டும் அவருடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழிக்கப்படலாம். இரயில்வே நிருவாகத்திற்கு உட்பட்ட அலுவலகங்கள் (Establishment) இந்தப் பிரிவின் விதிகளிலிருந்து விலக்களிக்கப்பட்டுள்ளன. இந்தப் புதிய சரத்துகள் ஊழியர்

சங்கங்கள் செயல்படுவதை எளிதாக்கியும் அதேசமயத்தில் ஊழியர்களுடைய கடன்களை நியாயமான வரம்பிற்குள் கட்டுப் படுத்தவும் வகை செய்கின்றன.

(iv) உபவிதிகளுக்குத் திருத்தம் செய்தல் (Amendments to By laws) (1) 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 11ஆம் பிரிவிலுள்ள சரத்து, 1932ஆம் ஆண்டு சட்டத்தின் 12ஆம் பிரிவில் துணைவிதிகள் திருத்தம் சம்பந்தமாக சேர்க்கப்பட்டிருக்கும் சரத்தை விட ஓர் உறுதியான சீர்த்திருத்தமாகும். 1966ஆம் வருடத்தியச் சட்டத்தின் 11ஆம் பிரிவின் (3) உப பகுதியின்கீழ் துணை—விதிகளில் ஒரு திருத்தத்தைப் பதிவு செய்ய மறுத்துப் பதி வாளர் ஓர் உத்தரவைப் பிறப்பிப்பதற்கு முன்பு சங்கம் தன்னுடைய விளக்க உரையைச் செய்து கொள்ள ஒரு வாய்ப்புக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மேலும் 4ஆம் உபபகுதியின் கீழ், துணை விதித் திருத்தம்பதிவு செய்து மறுத்துப் பிறப்பிக்கப்படும், உத்தரவு அதற்கான காரணங்களுடன் சங்கத்திற்குத் தெரியப் படுத்த வேண்டும் என்ற சரத்தும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்த வாய்ப்பும் காலவசதியும் சங்கத்தின் துணை விதிகளில் திருத்தத்தைப் பதிவு செய்வது தொடர்பாக ஒரு முடிவு எடுக்கும் முன்னரே கொடுக்கப்பட்டிருக்கிறது.

11ஆம் பிரிவின்கீழ், துணை விதிகளில் திருத்தம் பதிவு மறுக்கப் பட்ட ஓர் உத்தரவை எதிர்த்துச் செய்யப்படும் மேல் முறையீடு, 96ஆம் பிரிவின் 3ஆம் பகுதியின்படி மறுக்கப்பட்ட தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் செய்யப்படவேண்டும். (சி) உபபகுதியின் கீழ் ஒரு துணை விதித் திருத்தத்தில் குறிப்பிப்பட்டிருக்கும் ஏதாவது தேதியிலிருந்து, அப்படி ஒரு தேதியும் குறிப்பிடப்படாத நிலையில் பதிவு செய்யப்பட்ட தேதியிலிருந்து அமலுக்கு வரும். இந்தச் சரத்து எப்பொழுது ஒரு துணை விதித் திருத்தம் அமலுக்கு வரும் என்பதைத் தெளிவாக விதிக்கிறது. இந்தச் சரத்து இல்லாவிடில் எந்தத் தேதியிலிருந்து ஒரு துணை விதித் திருத்தம் அமல்படுத்த வேண்டும் என்பது குறித்து ஐயப்பாடு எழக்கூடும். மேலும், அது சங்கத்திற்கும் அதன் செயல்பாட்டிற்கும் வசதியான தேதிகளி லிருந்து துணை விதிகளுக்குத் தக்க மாறுதல்களைக் கொண்டுவர வாய்ப்பு கொடுப்பதுடன், தற்பொழுதுள்ள ஏற்பாட்டிலுள்ள நெருக்கடிகளைத் தவிர்க்கவும் செய்கிறது.

1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 12ஆம் பிரிவு ஒரு புதிய சரத்தாகும். சில சங்கங்கள் தங்கள் துணை விதிகளுக்குப் பதிவாளர் அல்லது உறுப்பினர்களின் ஒரு பகுதியினர் யோசனைகளைக்கூறும் திருத்தங்களை உதாரணமாக, விவகார எல்லையை மாற்றுவதற்காக

அல்லது சேவைகளைச் சீர்படுத்துவதற்காக அல்லது இயக்கத்தின் நலத்தின் பொருட்டும் தங்கள் சொந்த நலத்தின் பொருட்டும் நிருவாகத்தில் மாறுதல்களைக் கொண்டு வருவதற்காகத் துணை விதிகளுக்குத் திருத்தங்கள் நிறைவேற்ற விருப்பம் இல்லாம லிருப்பது அனுபவத்தில் தெரிய வருகிறது. அத்தகையத் துணை விதிகளை ஏற்றுக்கொள்ள மறுப்பது சில சமயங்களில் நிருவாகத்தில் இக்கட்டான நிலையை உண்டுபண்ணுகிறது அல்லது சங்கத்தின் முன்னேற்றத்தைத் தடைப்படுத்துகிறது.

அத்தகையச் சூழ்நிலைகள் சங்கத்திற்குள் சில ஊன்றிய நல மிகள் (Vested interest) நுழைந்த காரணத்தாலும் அல்லது சங்கத்தின் செயல்பாட்டிலுள்ள குறைகள் வெளிப்படுத்தப்படும் என்ற பயத்தின் காரணத்தாலும் எழலாம். சங்கத்திற்கு அத்தியா வசியமான அத்தகைய துணை விதித்திருத்தங்கள் ஒரு சங்கத்தால் தாமதப்படுத்தப்படாமல் அல்லது கால வரம்பின்றி ஒத்திவைக்கப் படாமலிருப்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன், 1961ஆம் வருடத்திய 12ஆம் பிரிவில், சங்கம் துணை விதித் திருத்தத்தை ஏற்றுக் கொள்ளத் தவறினாலும், திருத்தத்தை ஏற்றுக் கொள்வ தற்குச் சரியான ஆட்சபேணையைச் சங்கம் கூறிவிட்டாலும், துணை விதித் திருத்தத்தைத் தாமே பதிவு செய்வதற்குப் பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

சட்டத்தின் 96 (2) பிரிவின்கீழ், சங்கம் எந்த ஒரு துணை விதித் திருத்தம், 12ஆம் பிரிவு, (2)ஆம் உட்பிரிவின்கீழ் பதிவு செய்யும் சம்பந்தமாக ஒரு மேல் முறையீடு (Appeal) செய்யலாம். அதற்குக் கால வரம்பு, 96ஆம் பிரிவு, 3ஆம் பகுதியின்படி, திருத்தம் பதிவு செய்யப்பட்ட தேதியில் இருந்து 2 மாதங்கள் ஆகும். இந்த ஏற்பாடு நிறுவனத்தின் மக்களாட்சித் தன்மைக்கு ஒவ்வாதது என்றும் ஒரு வேளை சங்கங்களின் நிருவாகத்தில் ஒரு தலையீடாகவும் கருதப்படும் என்றும் வாதிக்கப்படலாம். ஆனால், சங்க நிருவாகத் தினர்களுடைய உதவும் பாங்கற்ற (Un-helpful) மனப் பான்மையின் காரணத்தால் சங்கத்தின் முன்னேற்றம் தடைப் பட்டு சங்கத்தின் சேவைகளை உறுப்பினர்கள் இழக்க நேரிடும். ஆகையால், அத்தகைய தற்செயலான நிகழ்வைச் சமாளிப்பதற் காகத்தான் சட்டத்தில் இந்த ஏற்பாடு செய்யவேண்டி இருக் கிறது.

(vi) நிருவாகம் (Managemnt)

(1) பிரதி நிதித்துவ மகாசபை (Representative General Body)– சில சங்கங்களில் விவகார எல்லை கட்டுக்கடங்காதவாறு மிகவும்

அகன்று இருக்கிறது; அல்லது உறுப்பினர்களுடைய எண்ணிக்கை மிகவும் அதிகமாக இருக்கிறது. உதாரணமாக, சென்னை போஸ்டல் ஆடிட் கூட்டுறவுச் சங்கம் அல்லது திருச்சிராப்பள்ளி இரயில்வே ஊழியர்கள் சங்கம் அல்லது சென்னை டி. யு. சி. எஸ். (T. U. C. S) போன்ற சங்கங்களில் ஒரு மகாசபைக் கூட்டம் கூட்டுவது நடைமுறையில் கடினமாகவே இருக்கிறது. எல்லா உறுப்பினர்களும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் மகாசபைக்கூட்டம் நடத்துவதற்காக ஒன்று கூடுவது சாத்தியமாக இல்லை.

ஆகையால், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் 26ஆம் பிரிவு சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்தப் பிரிவின்கீழ், சட்டத்தின் கீழ் வகுக்கப்பட்ட 28ஆம் விதியில் குறிக்கப்பட்டிருக்கும் சில நிபந்தனை களுக்குட்பட்டு ஒரு பிரதிநிதித்துவ மகாசபை அமைப்பதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அம் மாதிரிப் பிரதிநிதித்துவ மகாசபையை அமைப்பதற்காகக் கட்டளையிடுவதற்கும் பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சங்கத்தின் சொந்த அமைப்பு அல்லது அதிகாரங்கள் தொடர்பாக துணை விதி களில் இருக்கும் எந்தச் சரத்தையும் மாற்றும் அதிகாரம் தவிர, துணை விதிகளில் மகாசபைக்குக் கொடுக்கப்பட்ட எல்லா அதிகாரங்களும் பிரதிநிதித்துவ மகாசபை பெற்றிருக்கிறது.

(2) நிருவாகிகள் நியமனம்: 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் கீழ் பதிவாளர் சங்கத்தின் நிருவாகிகளை நியமனம் (Nomination) செய்வதற்கு ஏற்பாடுகள் ஒன்றுமில்லை. ஆனால், சில சங்கங்களின் துணை விதிகளில் அத்தகைய நியமனத்திற்கு இடம் இருந்தது. சங்கங்களால் கையாளப்பட்ட இந்த வழக்கத்திற்குச் சட்டப் பூர்வமான அங்கிகாரத்தைக் கொடுக்கும் நோக்கத்துடன், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 26ஆம் பிரிவில் அரசு அல்லது பதிவாளருக்கு, சங்கத்தின் துணை விதிகளில் ஏற்பாடு இருந்தால் குழுவின் எல்லா அல்லது எந்த சில உறுப்பினர்களை நியமனம் செய்வதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவ்விதமாய் 1961ஆம் வருடத்தியச் சட்டம், சங்கங்களின் நிருவாகச் சபைக்கு நபர்களை நியமிக்கும் அதிகாரத்தை அரசு அல்லது பதிவாளருக்கு அளிக்கிறது. குறிப்பாகக் கூட்டுறவு நிறுவனங்களில் அரசாங்க ஈடுபாடும் (Participation) கூட்டாளித்துவமும் (Partnership) ஏற்பட்டுத் தலைமைச் சங்கங்கள், நூற்பாலைகள், சர்க்கரை ஆலைகள் போன்ற பெரிய கூட்டுறவு நிறுவனங்களுக்குக் கடன்கள், உத்தரவாதங்கள் மூலம் அரசாங்கம் பெருமளவு நிதி அளிக்க ஒப்புக் கொண்ட பிறகு இம் மாதிரியான ஏற்பாடு தேவைப் படுகிறது.

27 (2) ஆம் பிரிவின் கீழ் அரசாங்கம் அல்லது நிதிவுதவும் வங்கி அரசாங்கம் முடிவு செய்கிறபடி, ஒரு சங்கத்தின் குழுவின் உறுப்பினர்கள் மொத்த எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பங்கு அல்லது மூன்று நபர்களுக்கு மேற்படாமல் குறைவான நபர்களை நியமனம் செய்யலாம். அம் மாதிரி நியமனம் செய்யப்பட்ட ஒரு நபரை எந்தக் காலத்திலும் அரசாங்கம் அல்லது நிதி அளிக்கும் வங்கி விலகச் செய்யலாம். அவ் வகையில் ஏற்பட்ட காலி இடத்திற்குப் புதிய நபர்களை நியமனம் செய்யலாம். இந்த ஏற்பாடு 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் கீழ் வகுக்கப்பட்ட விதிகளி லிருந்தது. அது இப்பொழுது 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 27ஆம் பிரிவில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

(3) மாற்றுமுறை மூலம் பதவிக்காலம் முடிதல் (Retirement by Rotation) 1961ஆம் வருடத்தியச் சட்டம் நிறைவேறுவதற்கு முன்பு, ஒரு சங்கத்தினுடைய குழு உறுப்பினர்கள் எல்லாரும், துணை விதிகளில் குறிக்கப்பட்டிருந்த காலத்திற்கு, ஒரே கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். காலத்தில் தேர்தல் நடத்தப்படாவிட்டால் குழுவினுடைய காலம் பதிவாளரால் நீடிக்கப்படாவிட்டால், குழு செயலற்றதாகப் functus-officio) போய்விடுகிறது. இந்த நிலைமை 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் மாற்றப்பட்டு சங்கத்தின் குழு ஒரு நிரந்தரமான குழுவாகத் தொடர்ந்து நீடித்து இருப்பதற்காக ஏற்பாடுசெய்யும் நோக்கத் துடனும், விரிவான அடிப்படையில் குழு அமைப்பதை எளிதாக்கு வதற்கும் தேர்ந்தெடுக்கப்பட்ட குழு உறுப்பினருடைய பதவிக் காலம் மூன்று வருடங்களாக நிருணயித்து. குழு உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் வருடா வருடம் விலகுவதற்கும், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

குழு உறுப்பினர்களின் தேர்தல் சட்டத்தின்கீழ் அமைக்கப் பட்ட 29 ஆம் 30ஆம் விதிகளில் நிருணயிக்கப்பட்ட நடைமுறைப்படி, மறைவான வாக்கு அளிப்பு மூலம் (Ballot) நடை பெறவேண்டும். எந்த ஒரு ஆண்டில் விலக வேண்டிய உறுப்பினரின் பதவிக் காலத்தை, 36 (2) விதியில் குறிக்கப்பட்டிருக்கும் காலத்திற்கு அதாவது ஒரு தடவையில் மூன்று மாதங்களுக்கு மேற் படாமலும் அல்லது மொத்தத்தில் ஆறு மாதங்களுக்கு மேற் படாமலும் பதிவாளர் நீடிக்கலாம். தேர்தெடுக்கப்பட்ட ஒரு குழு உறுப்பினரின் பதவியில் தற்செயலாக ஏற்படும் காலி யிடத்தை விதிகளில் நிருணயித்தபடி நிரப்பலாம்.

(4) குழு உறுப்பினர்கள் பதவிக்குத் தகுதியின்மை: சட்டத்தின் கீழ் வகுக்கப்பட்ட விதிகளில்தான் இதுவரை குழு உறுப்பினர் பதவிக்குத் தகுதியின்மையைப் பற்றிக் குறிக்கப்பட்டிருந்தது. ஒரு சங்கத்தில் திறமையான நேர்மையான நிருவாகத்தை உருவாக்குவது ஒரு முக்கிய விஷயம். ஆதலால், இந்தத் தகுதியின்மைகள் 1961 சட்டத்திலேயே 28ஆம் பிரிவில் நிருணயிக்கப்பட்டுள்ளன. இந்தத் தகுதியின்மைகள் 1932ஆம் வருடத்தியச் சட்டத்தில் ஒரு பகுதியாகச் சேர்க்கப்படவில்லை. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 28ஆம் பிரிவின் கீழ், ஒரு உறுப்பினர் அடியிற்கண்டுள்ளபடி இருந்தால் ஒரு சங்கத்தின் குழு உறுப்பினராக நியமிக்கப்படவோ அல்லது தேர்ந்தெடுக்கப்படவோ தகுதியில்லாதவர்கள் ஆவர்.

(அ) அவர் சங்கத்தில் சம்பளம் வாங்கும் ஊழியரின் நெருங்கிய உறவினராய் இருப்பது சட்டத்தின்கீழ் வகுக்கப்பட்ட 38ஆம் விதியில், நெருங்கிய உறவினர்கள் யார் என்பது குறிக்கப்பட்டிருக்கிறது.

(ஆ) அவர் சங்கத்திலோ அல்லது வேறு இதர சங்கத்திலோ கடனையோ அல்லது கடன்களையோ, சங்கத்தின் துணைவிதிகளில் நிருணயிக்கப்பட்ட காலவரைக்குள் அல்லது எப்படியும் மூன்று மாதங்களுக்கு மேற்பட்டுத் திருப்பிச் செலுத்தத் தவறியிருப்பது. கடன் பாக்கியைக் கட்டத்தவறிய காரணத்தினால் குழு உறுப்பினர் பதவியில் இல்லாத ஓர் உறுப்பினர் தான் உறுப்பினராக இருந்த சங்கத்தின் குழுவிற்கு மறுதேர்தலில் நிற்பதையும் அல்லது வேறு இதர சங்கத்தின் குழுவிற்குத் தேர்தலில் நிற்பதையும் அவர் பதவியிலிருந்து நின்றுபோன தேதியிலிருந்து ஒருவருட காலத்திற்கு தடை செய்யப்பட்டிருக்கிறது.

(இ) அவருக்கு எதிராக 1961ஆம் வருடத்தின் சட்டத்தின் 91 ஆம் பிரிவில் குறிப்பிட்டுள்ள யாதொரு டிக்கிரி தீர்மானம், தீர்ப்பு அல்லது உத்திரவு வாங்கப்பட்டு இருப்பது.

(ஈ) அவர் சங்கடத்துடன் செய்துகொண்ட யாதொரு ஒப்பந்தத்தில் அல்லது தனிப்பட்ட முறையில் சங்கம் செய்த விற்பனையில் அல்லது கொள்வினையில் அல்லது யாதொரு ஏலத்தில் அல்லது சங்கத்தின் நிதி உரிமைகள் அடங்கிய எந்த ஓர் அலுவலிலும் அல்லது ஒப்பந்தத்திலும் (முதலீடும் கடன் வாங்குவதும் நீங்கலாக) அந்த ஒப்பந்தம் அல்லது விற்பனை அல்லது கொள்வினை அல்லது விவகாரம் முடிவு பெறாமல் இருந்தால், அவற்றில் நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ பற்றுக் கொண்டவராக இருப்பது. ஒரு விற்பனைச்

சங்கத்தின் உறப்பினர்கள் அவர்களுடைய விளைபொருள்களை விற்பனைச் சங்கத்தின் மூலம்தான் விற்பனை செய்யவேண்டும். அவ் வண்ணமே ஒரு விநியோகச் சங்கத்தின் உறுப்பினர் அவர் சங்கத்தின் கொள்வினைக் குழுவின் உறுப்பினராகக்கூட இருந்தால் சங்கம் செய்த கொள்வினை சம்பந்தமான ஒப்பந்தத்தில் சேர வேண்டும். இந்த வகைச் சங்கங்களின் செயல்பாட்டைப் பாதிக்காமலிருப்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் இந்தச் சட்டப் பகுதியில் கூறப்பட்ட தகுதியின்மை, சட்டத்தின்கீழ் வகுக்கப்பட்ட 37ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட சிலவகை ஒப்பந்தங்களுக்கும், விற்பனைகளுக்கும், கொள்வினைக்கும் பொருந்தாமல் இருக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ளது. இந்த விதி கூறுவதாவது, 28ஆம் பிரிவின் (சி) பகுதியில் மேற்கூறியபடி சில விவகாரங்கள் சம்பந்தமாக விதிக்கப்பட்ட தகுதியின்மை அந்த விவகாரங்கள் சங்கத்தின் முக்கிய நோக்கத்தின்படியும் அதன் துணைவிதிகளின் படியும் உறுப்பினர்களுக்குச் சங்கம் செய்யும் சேவைகள் தன்மை உள்ளவைகளாக இருந்தால் பொருந்தாது என்பதே.

(உ) அவர் சங்கத்தின் அல்லது அந்தச் சங்கத்தில் உறுப்பினராக உள்ள வேறு எந்தச் சங்கத்தின் சார்பாகவோ அல்லது சங்கத்தை எதிர்த்தோ வழக்கறிஞர் ஆக வேலை செய்வது.

(ஊ) அவர் சட்டத்தின் 2ஆம் பிரிவில் விளக்கம் கூறப்பட்ட படி, பெயரளவு அல்லது துணை உறுப்பினராக (Nominal or associate member) இருத்தல்.

(எ) அவர் வயது வராதவராகவோ அல்லது பித்துப்பிடித்த ஒரு நபராகவோ இருத்தல்.

(ஏ) கூட்டுறவுச் சட்டத்தின்கீழ், யாதொரு குற்றத்திற்காகவும் தண்டிக்கப்பட்டு இருத்தல். அந்தத் தண்டனை மாற்றப்படாமலும் தண்டனை முடிவுபெறும் தேதியிலிருந்து மூன்று வருட காலம் கழிந்து போகாமலும் இருத்தல்.

குழுவின் ஓர் உறுப்பினர் இந்த விதிப்படித் தம் பதவியிலிருந்து நிறுத்தப்பட்டால், அவருக்கு விதிக்கப்பட்ட குற்றத் தண்டனை மேல் முறையீட்டின் பேரில் ரத்து செய்யப்பட்டாலும், அல்லது மாறுதல் செய்யப்பட்டாலும், அவர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் காலவரையில் கழியாத பகுதிக்குப் பதவியை மீண்டும் வகிப்பார். இடைக்காலத்தில் அவருடைய காலி இடத்தை நிரப்பத் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது நியமிக்கப்பட்ட எந்த ஒரு நபரும் அந்தப்பதவியிலிருந்து விலகவேண்டும்.

குழுவின் ஓர் உறுப்பினர், மேற்கூறிய தகுதி இன்மைக்கு உட்பட்டவராக ஏற்பட்டாலும் அல்லது அவர் சங்கத்தின் உறுப்பினராக இல்லாமல் நின்றுவிட்டாலும் அல்லது அவர் சங்கத்திற்கு வேறு ஒரு சங்கத்தினர் கொடுக்கவேண்டிய பணத்தைத் திருடப்பெறுவதற்காக ஏலத்திற்குக் கொண்டுவரப்பட்ட யாதொரு சொத்தை நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ வாங்கினாலும், அவர் அவருடைய பதவியை வகிக்க முடியாது.

சங்கத்தின் நியாயமற்ற நிருவாகத்திற்குப் பொறுப்பாக உள்ள நபர்களைக் குழுவிற்கு மீண்டும் தேர்ந்தெடுக்கப்படாமலிருப்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் சட்டத்தின் 28ஆம் பிரிவுப்படி ஒரு குழு உறுப்பினர் மீது சட்டத்தின் 71 (1)ஆம் பிரிவின்கீழ் சர்சார்ஜ் (Surcharge) உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்து, அந்த உத்தரவு தள்ளுபடி செய்யப்படாமல் இருந்தால் அந்த உறுப்பினரும், 72ஆம் பிரிவின்கீழ் பதிவாளரால் மீறப்பட்ட (Super ceded) குழுவின் உறுப்பினராக இருப்பவரும், அந்தத் தள்ளுபடி உத்திரவின் தேதியிலிருந்து அல்லது மேற்கடத்தப்பட்ட காலம் முடிவுபெறும் தேதியிலிருந்து, மூன்று வருடகாலத்திற்கு ஒரு சங்கத்தின் நிருவாகக்குழு உறுப்பினர் தேர்தலில் நிற்கக்கூடாது. (28ஆம் பிரிவு (4) (5) பகுதிகள் பார்க்கவும்) தள்ளுபடி செய்யும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ள ஒரு குழுவின் உறுப்பினரும்கூட 28ஆம் பிரிவின் (5) உட்பிரிவின் (4) பகுதியின் கீழ் அந்த நடவடிக்கைகள் முடியும் வரை குழுவிற்கு நியமிக்கப்படவோ அல்லது தேர்ந்தெடுக்கப்படுவோ தகுதியற்றவர்.

(5) சங்கத்தின் குழுவிலிருந்து உறுப்பினரை விலக்குவதும் அல்லது குழுவில் இருப்பதற்குத் தகுதியின்மையும் பதவி வகிக்கும் ஒரு நபரைச் சங்கத்தின் குழுவிலிருந்து விலக்குவதற்கும், அல்லது அந்தப் பதவியிலிருந்து ஏற்கனவே நிறுத்தப்பட்டிருந்தால், குழு உறுப்பினர் பதவியை இனிமேல் எதிர்காலத்தில் வகிக்க அவரைத் தகுதியில்லாதவராக்குவதற்கும் பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்கும் ஒரு புதிய பிரிவு 28 (எ) பிரிவில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

சில சூழ்நிலைகளில் அதாவது சட்டத்தின் சரத்துகளின் கீழ் உத்தரவிடப்படும் சட்ட விசாரணை சங்கத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது, குழுவில் ஓர் உறுப்பினர் சங்கத்தின் பணத்தையோ அல்லது இதர சொத்தையோ துர்ப்பிரயோகம் செய்தார் என்றும் அல்லது மோசக் கருத்தோடு தம் கைவசம்

வைத்திருந்தார் என்றும் அல்லது சங்கத்தின் தொடர்பாக நம்பிக்கைத் துரோகக் குற்றம் செய்தார் என்றும் அல்லது சங்கத்தின் நிருவாகம் நடத்தும் முறையில் தொடர்ந்து அல்லது மொத்தமாகக் கவனக் குறைவாக இருந்தார் என்றும் அல்லது சங்க விவகாரங்களை முன்னால் தவறாக நிருவாகம் செய்திருந்தார் என்றும் சட்டத்தின்கீழ் அவருடைய கடமைகளையும் வேலைகளையும் செய்யத் தவறினார் என்றும் பதிவாளருக்குச் சந்தேகமறத் தெரிந்தால் பதிவாளர் அந்தக் குழு உறுப்பினரை விலக்கலாம். அம்மாதிரி விலக்குவது, உறுப்பினருக்குத் தம் விளக்க உரையைச் செய்து கொள்வதற்கு ஒரு வாய்ப்புக் கொடுக்காமல் செய்யப்படக்கூடாது.

(6) ஒரு நபர் குழு உறுப்பினராக இருக்கும் சங்கங்களின் எண்ணிக்கையில் கட்டுப்பாடு: இது 1961ஆம் வருடத்திய சட்டத்தில் புகுத்தப்பட்ட ஒரு புதிய சரத்து. கூட்டுறவு இயக்கத்தில் மக்கள் முன்னைவிடப் பெரும்பாலார் பங்கு எடுத்துக் கொள்வதற்கு வாய்ப்பு அளிக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் இந்தச் சரத்து சேர்க்கப்பட்டது. 28ஆம் பிரிவின் படி ஒரு நபர் ஐந்து பதிவு செய்யப்பட்ட சங்கங்களுடைய குழுவிற்கு மேற்பட்ட குழுக்களில் உறுப்பினராக இருக்கக் கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருக்கிறது. அதேசமயத்தில், இன்னும் கூடுதலான நிபந்தனைக்கு உட்பட்டு, அவர் இரண்டு தலைமைச் சங்கங்கள் அல்லது இரண்டு மத்தியச் சங்கங்கள் 11 (5) விதியில் வரைப்படுத்தப்பட்டபடி மேற்பட்ட குழுக்களில் கூட ஒரே சமயத்தில் அவர் உறுப்பினராக இருக்கக்கூடாது. 1961ஆம் வருடத்தியச் சட்டம் அமலுக்கு வந்த தேதியில் ஐந்து பதிவு செய்யப்பட்ட சங்கங்களுடைய குழுவிற்கு மேற்பட்ட குழுக்களில் ஒரு நபர் உறுப்பினராக இருந்தால் அவர் அந்தத் தேதியிலிருந்து 90 நாள்ளுக்குள் ஐந்து சங்கங்களின் குழுக்களில் தவிர, மற்ற எல்லாக் குழுக்களிலும் அவருடைய உறுப்பினர் பதவியை ராஜினமா செய்துவிட வேண்டும். அப்படிச் செய்யத்தவறினால் அத்தகைய எல்லாச் சங்கங்களின் குழுக்களிலும் அவர் தம்முடைய உறுப்பினர் உரிமைகளை இழந்துவிடுவார்.

அம்மாதிரியே, சட்டம் தொடங்கியபோது இரண்டு தலைமைச் சங்கங்கள் அல்லது இரண்டு மத்தியச் சங்கங்களுக்கு மேற்பட்ட சங்கங்களின் குழுக்களில் ஒரு நபர் உறுப்பினராக இருந்தால் அவர் இரண்டு தலைமை அல்லது மத்திய சங்கங்கள் தவிர மற்ற எல்லாச் சங்கங்களுடைய குழுக்களிலிருந்தும் அவர் உறுப்பினர் பதவியை ராஜினமா செய்துவிடவேண்டும். அப்படி செய்யத் தவறினால் அவர் எல்லாத் தலைமைச் சங்கங்களில் அல்லது மத்தியச் சங்கங்

களில் குழுக்களில் உறுப்பினர் பதவியிலிருந்து விலக்கப்பட்டவ ராவார்.

ஒரு சங்கத்தின் குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது நியமிக்கப்பட்ட தேதியில் ஒரு நபர் ஐந்து பதிவு செய்யப் பட்ட சங்கங்களுக்கு மேற்பட்ட சங்கங்களின் குழு உறுப்பினராக இருந்தால் அல்லது இரண்டு தலைமைச் சங்கங்கள் அல்லது இரண்டு மத்திய சங்கங்களுக்கு மேற்பட்ட சங்கங்களின் குழு உறுப்பினராக இருந்தால் சங்கத்தின் குழுவிற்கு அல்லது தலைமைச் சங்கம் அல்லது மத்தியச் சங்கத்தின் குழுவிற்கு அன்னார் தேர்ந்தெடுக்கப்பட்டது அல்லது நியமிக்கப்பட்டது சட்டப்படி செல்லாதது. ஒரு குழுவின் உறுப்பினர் சட்டத்தின் 28ஆம் பிரிவில் கூறப் பட்டிருக்கும் யாதொரு தகுதியின்மைக்குட்பட்டிருந்தார் அல்லது உட்பட்டிருக்கிறார் என்ற கேள்வியை முடிவு செய்வதற்குத் தக்க அதிகாரம் பெற்றவர் பதிவாளரே ஆவார்.

(7) ஒரு சங்கத்தின் அதிகாரி அல்லது ஊழியரை வேலையிலிருந்து சிறிது காலம் வரையில் நிறுத்தி வைப்பதற்கு அதிகாரம்: ஒரு சங்கத்தின் தணிக்கை, விசாரணை அல்லது ஆய்வு நடந்துகொண் டிருக்கும் போது மோசடி நடந்திருப்பது வெளிப்பட்டால் இதைப் பற்றி விசாரணை செய்யப்பட்டு ஒரு முடிவு காணும் வரை மோசடிக்குப் பொறுப்பான ஊதியம் பெறும் அதிகாரிகளை அல்லது ஊழியர்களை வேலையிலிருந்து சிறிது காலம் நிறுத்தி வைப்பது அவசியமாகும். அப்படிச் செய்தால்தான், அவர்கள் விசாரணையில் தலையிடமாட்டார்கள்.

1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 70ஆம் பிரிவு, ஒரு குறிப் பிட்ட காலத்திற்குச் சங்கத்தின் அதிகாரியை அல்லது ஊழியரை வேலையிலிருந்து நிறுத்திவைக்கச் சங்கத்தின் குழுவினருக்குக் கட்டளையிடப் பதிவாளருக்கு அதிகாரம் அளித்திருக்கிறது. குழுவினர், பதிவாளரிடமிருந்து கட்டளை பெற்றவுடன், துணை விதிகளில் மாறுபட்ட சரத்துகள் ஏதாவது இருந்தாலும் ஊதியம் பெறும் அதிகாரி அல்லது ஊழியரை உடனே வேலையிலிருந்து நிறுத்திவைக்க நடவடிக்கை எடுக்கவேண்டும். பதிவாளருடைய முன் அங்கீகாரத்தைப் பெற்ற பிறகே, அந்த ஊழியரை மறு படியும் வேலையில் அமர்த்தலாம். ஒரு சங்கத்தின் ஊதியம் பெறும் அதிகாரி தவருக நடந்து கொண்டபோது அவர்மீது நடவடிக்கை எடுக்க இயலாத நிலைமையில் சங்கம் இருந்தாலும் அப்படி நடவடிக்கை எடுக்கச் சங்கம் விரும்பாமல் இருந்தாலும் அல்லது அதிகாரிகளை விசாரணை நடைபெற்றுக்கொண்டு இருக்கும்போது

வேலையிலிருந்து நிறுத்தி வைக்க அதன் துணை விதிகளில் சரத்து இல்லாமலிருந்தாலும், அந்த இக்கட்டான நிலைமையைச் சமாளிப்பதற்கு இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

(vi) தணிக்கை (Audit)। 1961 வருடத்தியச் சட்டத்தின் 64ஆம் பிரிவு தணிக்கை சம்பந்தப்பட்டது. இந்தப் பிரிவு 1932ஆம் வருடத்திய 37ஆம் பிரிவை விரிவுபடுத்தியிருக்கிறது. ஒருசங்கத்தின் தற்போதைய அல்லது முன்னாள் அதிகாரிகள் அல்லது ஊழியர்கள் உறுப்பினர்கள், சங்கத்தின் செயற்பாட்டைப் பற்றியும் விவகாரங்களைப் பற்றியும் தகவல் கொடுக்கப் பொறுப்புள்ளவர்களாக இந்தப் பிரிவு செய்கிறது. தணிக்கைக் கட்டணங்களை விதிப்பதற்கும் விலக்கு அளிப்பதற்கும் பழைய விதிகளில் ஏற்படுத்தப்பட்ட சரத்து தணிக்கைக் கட்டணங்களை வசூலிப்பதற்காக அங்கீகாரம் பெறும் பொறுப்பு சட்டத்திலேயே இப்போது புகுத்தப்பட்டிருக்கிறது. தணிக்கையில் ஏதாவது குறைபாடுகள் வெளிப்பட்டால், அந்தக் குறைபாடுகளை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் சீர்படுத்துவதற்குச் சங்கத்தின் எந்த ஓர் அதிகாரிக்கும் எழுத்தில் ஓர் உத்தரவு மூலம் பதிவாளர் கட்டளையிடுவதற்கு ஏற்பாடு செய்ய 64ஆம் பிரிவில் (5)ஆம் பகுதியில் ஒரு புதிய சரத்து சேர்க்கப்பட்டிருக்கிறது. தணிக்கையில் காணப்பட்ட குறைபாடுகள் சீர்படுத்துவதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

(vii) விசாரணை (Inquiry)। 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 38ஆம் பிரிவு விரிவு உள்ளதாக இல்லை. சரியான விசாரணை நடத்துவதை எளிதாக்கி, விசாரணையின் தீர்வுகளை நிறைவேற்றி வைக்கும் நோக்கத்துடன் 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 65ஆம் பிரிவின் கீழ்க்கண்ட கூடுதலான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

(1) விசாரணை அதிகாரி எந்த நபரையும் தன் வசமிருக்கும் அல்லது தனக்குச் சொந்தமான எந்தப் புத்தகத்தையும் கணக்குகளையும் அல்லது பத்திரங்களையும் முன்னிலைப்படுத்த வேண்டுமாறு கட்டளையிடலாம்.

(2) தேவைப்பட்டால் விசாரணை அதிகாரி சங்கத்தின் பதிவேடுகளைக் கைப்பற்றி அவைகளைத் தன்வசம் அறுபது நாள்களுக்கும் மற்றும் தன் மேல் அதிகாரியின் அனுமதியுடன் மேலும் நீண்ட காலத்திற்கும் வைத்துக் கொள்ளலாம்.

(3) விசாரணை அதிகாரி, சங்கத்தின் அதிகாரிகளை மகாசபைக் கூட்டமும், குழுக் கூட்டமும் கூட்டவேண்டுமென்று உத்தர

விடலாம். உத்தரவுக்கு இணங்க சங்கத்தின் அதிகாரிகள் கூட்டங்களைக் கூட்டத் தவறினால் அல்லது சங்கத்தில் குழுவோ அல்லது அதிகாரியோ இல்லாமல் இருந்தாலும், அல்லது அம் மாதிரிக் கூட்டங்களைக் கூட்டுவதற்குக் குழு அல்லது அதிகாரியின் தகுதியைப் பற்றித் தகராறு இருந்தாலும் அக் கூட்டங்களைத் தானே விசாரணை அதிகாரி கூட்டலாம்

(i) விசாரணையின் தீர்வு அல்லது முடிவு, தொடர்பாகச் சங்கத்திற்கும் அச் சங்கம் இணைந்துள்ள நிதி அளிக்கும் வங்கிக்கும் தெரியப்படுத்தப்பட வேண்டும். மேலும், சங்கத்தின் பங்கு மூலதனத்தில் அரசாங்கம் ஈடு செய்திருந்தால் அரசாங்கத்திற்கு அல்லது இதற்கென அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட யாதொரு அதிகாரிக்கும் விசாரணையின் முடிவு தெரியப்படுத்தப்படவேண்டும். பதிவாளர், சங்கத்தின் எந்த ஓர் அதிகாரியையும் விசாரணையின் போது காணப்பட்ட குறைபாடுகளை 65ஆம் பிரிவு (4) ஆம் பகுதியின்கீழ், நிருணயிக்கப்பட்ட காலவரைக்குள் களையும்படிக் கட்டளையிடுவதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார்.

(vii) ஆய்வு (Inspection) : 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 66ஆம் பிரிவில், 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 39ஆம் பிரிவில் உள்ள சரத்துகளில் ஒரு சில மாற்றங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. பழைய சட்டத்தின்கீழ் ஒரு சங்கத்தின் கடனாளர் (Creditor) விண்ணப்பத்தின் பேரில் ஆய்வு எடுத்துக் கொள்ளலாம். ஆனால், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 66ஆம் பிரிவின்கீழ் பதிவாளர் தன் சொந்த இயக்கத்தின் பேரிலும் (on his own motion) அல்லது சங்கத்தின் கடனாளர் விண்ணப்பத்தின் பேரிலும் தானே ஒரு சங்கத்தை ஆய்வு செய்யலாம். அல்லது தன்னால் அதிகாரம் கொடுக்கப்பட்ட ஒரு நபரைச் சங்கத்தை ஆய்வு செய்யக் கட்டளையிடலாம். பதிவாளர் தன் சொந்த இயக்கத்தின் பேரில் ஆய்வு செய்தாலுங்கூட அவர் தொடர்புடைய சங்கத்திற்கு ஆய்வின் முடிவுகளைத் தெரியப்படுத்த வேண்டும். தணிக்கை, விசாரணை, ஆய்வில் காணப்பட்ட குறைபாடுகளைச் சீர்படுத்துவதற்குச் சுறுசுறுப்பாகவும் பலனளிக்கும் முறையிலும் நடவடிக்கை எடுப்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்தோடு 66ஆம் பிரிவு (3) ஆம் பகுதியின்கீழ் விதிக்கப்பட்ட காலவரைக்குள் குறைபாடுகளைச் சீர்படுத்துவதற்குச் சங்கத்தின் எந்த ஓர் அதிகாரிக்கும் கட்டளையிடப் பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது.

(viii) தண்டம் (Surcharge): 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 49ஆம் பிரிவில் சர்சார்ஜ் சரத்து வகுக்கப்பட்டிருக்கிறது. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் சர்சார்ஜ் சரத்து 71ஆம்

பிரிவில் வகுக்கப்பட்டிருக்கிறது. ஆனால், 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 49ஆம் பிரிவின் உத்தேசம் (Scope) மிதப்படுத்தப் (Restricted) பட்டிருந்தது. அந்தச் சட்டத்தின் பிரிவின்படி, ஒரு சங்கத்தின் யாதொரு பணம் அல்லது இதர சொத்துகளை மோசடி எண்ணத்தோடு கைவசம் வைத்துக் கொண்டிருந்தாலும் அல்லது கையாடல் செய்திருந்தாலும் அல்லது சங்கத்திற்கு நம்பிக்கைத் துரோகம் செய்திருந்தாலும் மட்டும்தான் சர்சார்ஜ் செய்யலாம். மேலும், குற்றமுடைய (Criminal) உத்தேசம் (Intention) இருக்க வேண்டும்.

1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 71ஆம் பிரிவின்கீழ் மேற்சொன்ன குற்றங்கள் மாத்திரம் இல்லாமல், சட்டத்திற்கும், விதிகளுக்கும், அல்லது துணைவிதிகளுக்கும், மாறாகச் செய்துள்ள செலவுகள் சட்டத்தின் 67ஆம் பிரிவின் கீழ் நிதி உதவும் வங்கியினால் ஒரு சங்கத்தின் கணக்குப் புத்தகங்களை ஆய்வு செய்ததன் விளைவாகக் கண்டுபிடிக்கப்பட்ட தவறான நிருவாகம், வேண்டுமென்றே செய்யப்பட்ட அல்லது மனமறிந்து திட்டமிட்டு இழைக்கப்பட்ட கவனக் குறைபாடு அல்லது சங்கத்திற்கு நம்பிக்கைத் துரோகத்தினால் ஏற்பட்ட சங்கச் சொத்துகளில் ஏற்பட்ட இழப்பு போன்ற குற்றங்களுக்கும் சர்சார்ஜ் செய்ய ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. சங்கத்தில் அதிகாரிகளை மட்டும் அல்லாமல் சங்கத்தின் முன்னாள் ஊழியர்களும் தற்போதைய ஊழியர்களும் இந்தப் பிரிவின் எல்லைக்குள் கொண்டு வரப்பட்டிருக்கிறார்கள். மேலும், சம்பந்தப்பட்ட நபர்களின் நடத்தையை ஆராய்ந்து சர்சார்ஜ் உத்தரவைப் பிறப்பிக்கப் பதிவாளர் எந்த ஒரு நபருக்கும் அதிகாரம் வழங்கலாம். சம்பந்தப்பட்ட நபர்களுக்கு இந்தப் பிரிவின்கீழ் ஓர் உத்தரவு பிறப்பிப்பதற்கு முன்பு அவருடைய விளக்க உரையைச் சமர்ப்பிக்க அவருக்கு வாய்ப்பு கொடுக்கப்படவேண்டும். இந்தப் பிரிவின்கீழ் நடவடிக்கையெடுப்பதற்குத் தவறான செயல்புரிதல், அல்லது செய்யவேண்டுவதைச் செய்யத்தவறுதல் ஏற்பட்டதேதியிலிருந்து 6 வருடங்களுக்குக் காலவரை நிருணயிக்கப்பட்டிருக்கிறது. சிவில் கோர்ட்டுக்கு மேல் முறையீடு (Appeal) செய்வதற்குப் பதிலாக, நடுவர் நீதி மன்றத்திற்கு (Tribunal) மேல்முறையீடு செய்வதற்கும் சரத்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

(ix) சங்கத்தை மூடுதலும் (Winding up (கலைத்தலும்) Dissolution) 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 85 முதல் 90 வரைக்குமுள்ள பிரிவுகளில், ஒரு சங்கத்தின் பதிவை ரத்து செய்தல், கலைத்து விடுதல் என்பதைப்பற்றிய செய்திகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

1961ஆம் வருடத்தியச் சட்டம் நிறைவேறுவதற்கு முன்பு அமலில் இருந்த சங்கங்கள் கலைப்புத் திட்டப்படி முதலில் ஒரு சங்கத்தின் பதிவு ரத்து செய்யப்பட்டு அதில் பின்னர்தான் அந்தச் சங்கத்தின் விவகாரங்களைக் கலைப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப் பட்டன. இந்த ஏற்பாட்டில், சில சந்தர்ப்பங்களில் சாத்தியக் கூறுகள் இருந்த போதிலும், சங்கங்களைப் புதுப்பிப்பதற்கு ஒரு வாய்ப்புக்கு இடமில்லை. மேலும், பழைய சட்டத்தின்படி சங்கத்தின் பதிவு ரத்து செய்யும் உத்தரவு மேல் முறையீடு (Appeal) செய்வதற்கு அளிக்கப்பட்ட இரண்டு மாதங்கள் காலவரை கழிந்த பின்னர்தான் அமலுக்கு வரமுடியும், மேல்முறையீடு சமர்ப்பிக்கப்படின் அது மறுக்கப்பட்டால் மாத்திரம்தான் பதிவு ரத்து உத்தரவு அமலுக்கு வரமுடியும். இதற்கு இடைப்பட்ட காலததில் குழுவினர் சங்கத்தின் சொத்துகளுக்கு பொறுப்புள்ள வர்களாகத் தொடர்ந்து வந்தாலும், அவற்றில் எந்த வித அக்கறையும் காண்பிக்காமல் சொத்துகளைப் பாழாக்கவும் தலைப் படலாம்.

ஆகையால், 61ஆம் வருடத்தியச் சட்டத்தின் 85, 86 பிரிவு களில், ஒரு சங்கத்தைக் கலைப்பதற்கு (winding up) உத்தரவு பிறப்- பிக்கவும் உடனே ஒரு கலைப்பு அதிகாரியை (liquidator) நியமிக்கவும் பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்க ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. இதனுல் சங்கத்தைக் கலைக்கும் உத்தரவை எதிர்த்து மேல்முறையீடு செய்யப்பட்டிருந்தாலும், கலைப்பு அதிகாரி சங்கத் தின் ஆஸ்திகளின் பொறுப்பை உடனே தன்வசம் ஏற்றுக் கொள்ள லாம். மேல்முறையீடு தீர்வு காணும் வரை, கலைப்பு அதிகாரி சங்கத்தின் கடனளர்கள் சார்பில் ஏறக்குறைய ஒரு பொறுப் பாண்மையராகச் (Trustee) செயலாற்றி வரலாம். விதிகளில் நிருண யிக்கப்பட்ட காலவரைக்குள் ஒரு சங்கம்வேலை செய்யத்தொடங்கா விட்டால் அது கலைக்கப்பட வேண்டும் என்று உத்தரவிடலாம் அல்லது ஒரு சங்கம் வேலை செய்வதை நிறுத்திவிட்டால் அந்தச் சங்கத்தின் நடைமுறைகளை நன்மைபயக்கும் வகையில் கலைத்து விடுவதை உறுதிப்படுத்தும் நோக்கத்தோடு சங்கத்தின் உறுப்பினர் களுக்கும் கடனளர்களுக்கும் இடையே சமரச ஏற்பாடு உண்டாக்குவதற்குப் ஒரு நபர் உறுப்பினரா, அல்லது இல்லையா, என்பதைத் தீர்மானிப்பதற்கும், பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்சப்பட்டிருக்கிறது. சங்கத்தின் நடைமுறைகள் முழுவதும் கலைக்கப்பட்டபிறகே அதனுடைய பதிவு ரத்து செய்யப் படவேண்டும். கலைக்கப்பட வேண்டும் என்று உத்தரவு இடப்பட்ட ஒரு சங்கம் குழுவினருக்கு திருப்பி ஒப்படைத்து விடலாம் என்று கருதப்படும் போது, சங்கம் கலைக்கப்பட வேண்டும் என்ற உத்தரவைத் திருப்பிப் பெறவும் அல்லது ரத்து செய்யவும்

பதிவாளருக்கு அதிகாரமும், சங்கத்திற்கு ஒரு குழுவை அமைப்பதற்கும், கலைப்பு அதிகாரிக்கு அதிகாரமும், சட்டத்தின் 90ஆம் பிரிவு வழங்குகிறது.

(x) தகராறுகளைத் தீர்த்தல் : (Settlement of Disputes) 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 51ஆம் பிரிவில் தகராறுகளைத் தீர்ப்பு செய்வது—சாதாரணமாகக் கூறப்படும் இசைவுத் தீர்ப்பு முறை (Orbitration) பற்றிய சரத்து அடங்கியிருக்கிறது. இந்தப் பிரிவின்படி, ஒரு சங்கத்தின் அலுவல்களைக் குறித்து யாதொரு தகராறும், பதிவாளருக்கு, அவருடைய தீர்மானத்திற்கு அனுப்பப்படவேண்டும் என்று பொதுவாக விதிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஏற்பாட்டின் கருத்தை விளக்கும் நோக்கத்துடன், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 73 (1) பிரிவு விரிவு செய்யப்பட்டு, ஒரு சங்கத்தின் நிருவாகம், அமைப்பைக் குறித்தும் எழுகின்ற தகராறுகள், ஒதுக்கப்பட்ட, அல்லது உரிமையாக்கப்பட்ட நிலங்கள் அல்லது இதர அசையாச் சொத்துகள் தொடர்பான நிபந்தனைகளை நிறைவேற்றத் தவறிய காரணத்தால் திரும்ப எடுத்துக் கொள்ளப்பட்டு அத்தகைய நிலங்களையும் அல்லது சொத்துகளையும் சுவாதீனம் கொடுக்கும்படி, ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கம், ஓர் உறுப்பினர், முன்னாள் உறுப்பினர் அல்லது ஓர் இறந்துபோன உறுப்பினரால் நியமிக்கப்பட்டவர் (Nominees) வாரிசு அல்லது சட்டப்படி பிரதிநிதி இவர்களிடம் கோரும் பாத்தியதை இவைகளும் சேர்க்கப்பட்டுள்ளன.

எனினும், ஒரு குழுவிற்குத் தேர்தல் பற்றிய அல்லது தேர்தல் தொடர்பான தகராறுகள், தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்ட தேதிக்குப்பிறகே இசைவுத் தீர்ப்பிற்கு அனுப்பப்படலாம். எவரேனும் ஒரு நபர் சங்கத்தின் உறுப்பினராக இருக்கிறாரா அல்லது இருந்தாரா என்பதையும், அல்லது இசைவுத் தீர்ப்பிற்காக அனுப்பப்பட்ட தகராறு சங்கத்தின் அலுவல்கள் அல்லது நிருவாகம் அல்லது குழு அமைப்பு குறித்த தகராறு என்பதைத் தீர்மானிப்பதற்குப் பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்க 73ஆம் பிரிவு (4) பகுதியில் தனிப்பட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மேலும், தகராறில் சேர்ந்த, அசையாச் சொத்துகளில் அக்கறை உள்ள நபர்களைத் தகராறில் கட்சியினர்களாகச் சேர்த்துக் கொள்ளவும் அத்தகைய நபர்கள் தகராறில் கட்சியினரா அல்லது இல்லையா என்பதைத் தீர்மானிப்பதற்கும் 73ஆம் பிரிவின் (5) ஆம் பகுதியில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தகராறில் கட்சியினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்ட ஒரு நபர் தகராறில் உள்ள சொத்தின் எல்லையளவுக்கு மட்டுமே பொறுப்பாளியாக்கப்பட்டி

ருக்கிறார். 73ஆம் பிரிவின் (6) பகுதியின்கீழ், பதிவாளர் வழக்கிடை உத்தரவுகளைக் (inter locutory order) கூட பிறப்பிக்கலாம்.

(xi) ஒரு சங்கத்தின் சொத்துகளையும், ஆவணங்களையும் உடைமை சேர்ப்பித்தல் (Delivery of possession of records and properties) சில சமயங்களில் சூழ்நிலைக்கேற்ப மகா சபையால் திருத்தி அமைக்கப்பட்ட ஒரு புது குழு அல்லது தனி அலுவலர் அல்லது நிருவாகக் குழு அல்லது பரதிவாளரால் நியமிக்கப்பட்ட ஒரு கலைப்பு அதிகாரி, பதவியைவிட்டு வெளிச் செல்லும் குழுவிடமிருந்து சங்கத்தின் ஆவணங்கள் சொத்துகள் முதலியவற்றை வாங்கிக்கொண்டு பொறுப்பு ஏற்க முடியாமல் அல்லல்படுகிறார்கள். அம்மாதிரிச் சூழ்நிலைகளில் ஆவணங்களையும், இதர சொத்துகளையும் சுவாதீனம் கொடுப்பதை நிறைவேற்றி வைக்கும் நோக்கத்துடன், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 107ஆம் பிரிவில் சங்கத்தின் விண்ணப்பத்தின் பேரிலும், சங்கம் திருத்தி அமைக்கப்பட்டது, அல்லது கலைக்கப்பட்டது அல்லது மூடப்பட வேண்டும் என்று உத்தரவு விடப்பட்டது என்றவாறு பதிவாளரிடம் இருந்து ஒரு சான்று (Certificate) சமர்பித்ததன் பேரிலும், சங்கத்தின் எல்லையில் அதிகாரம் செலுத்தும் நீதிபதிக்கு (Magistrate) அதிகாரமளிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இது 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் சேர்க்கப்பட்ட ஒரு புதிய சரத்து.

(xii) கூட்டுப்பண்ணைச் சங்கங்கள் : (Joint farmming Societies) கூட்டுப்பண்ணைச் சங்கங்கள் அமைப்பதை எளிதாக்குவதற்கும், அவைகளின் அமைப்பிலும் வேலையிலும் தோன்றுகின்ற தடைநிலைகளை (Bottle necks) நீக்குவதற்கும் 1961ஆம் வருடத்தின் சட்டத்தில் ஒரு புதிய அத்தியாயம் அதாவது 74 முதல் 84 வரை பிரிவுகள் புகுத்தப்பட்டிருக்கின்றன. ஒரு கூட்டுப்பண்ணைச் சங்கத்திற்கு உறுப்பினர்கள் சேர்த்துக் கொள்வதைச் சட்டத்தின் 17ஆம் பிரிவில் அடங்கிய சரத்துகளைப் பொருட்படுத்தாமல் குழுவின் அபிப்பிராயத்திற்கு விடப்பட்டிருக்கிறது. ஒரு கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் உறுப்பினர்கள் தங்கள் நிலங்களைச் சங்கத்திற்கு அடைமானம் செய்கிறார்கள்.

சங்கம் கடன் வாங்குவதற்காக அந்த நிலங்களை உப-அடைமானம் (Sub-mortgage) செய்கிறது. அடைமானப் பத்திரங்களை நிறைவேற்றிக் கொடுக்கும் தேவையைத் தவிர்க்கும் நோக்கத்துடன், 77 (1) பிரிவில், சங்கத்தால் வாங்கப்பட்ட எந்தக் கடன்கள் தொடர்பாய் சங்கத்தால் திரட்டப்பட்ட

(pooled) நிலங்களின் பேரில் கூட்டுப்பண்ணைச் சங்கத்திற்குச் சாதகமாக நிருணயிக்கப்பட்ட படிவத்தில் உறுதிமொழிப்பத்திரம் எழுதிக் கொடுப்பதன் மூலம் ஒரு பற்றுப் பொறுப்பு (Charge) உண்டாவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அவ்வாறு ஏற்படுத்தப்பட்ட பற்றுப்பொறுப்பு, சங்கம் எந்த நபரிடமிருந்து கடன் வாங்கி இருக்கிறதோ அந்த நபருக்கு மாற்றப்பட்டதாக அமையும். 77ஆம் பிரிவின் (3) (எ) (பி) பகுதியின் கீழ், ஓர் உறுப்பினர் தன் உறுதி மொழிப் பத்திரத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நிலத்தைச் சங்கத்தின் ஒப்புதல் பெறுமல் வேறு ஒருவருக்குக் கொடுத்து விடக்கூடாது. இந்த சரத்திற்கு மாறுகச் செய்யப் படும் எந்த ஒரு செயலும் சட்டப்படி செல்லாது. 77 ஆம் பிரிவின் 4, 5, 6 பகுதிகளின்கீழ் உறுதிமொழிப் பத்திரம் சங்கத்தின் எல்லையில் அதிகாரம் செலுத்தும் உப பதிவு அலுவலகத்தில் (Sub-Registry office) பதிவு செய்யப்படவேண்டும். அப்படிப் பதிவு செய்யப்படாத உறுதிமொழிப் பத்திரம் சட்டப் படி செல்லாது.

78, 79 பிரிவுகளின்கீழ் சங்கத்தின் ஒவ்வோர் உறுப்பினரும் உறுதிமொழிப் பத்திரத்தோடு ஓர் உடன்படிக்கைப் பத்திரமும் எழுதிக் கொடுக்கவேண்டும். அந்தப் பத்திரத்தில், நிலங்கள் சங்கத்தின் வசம் எவ்வளவு காலம் விடபட்டிருக்கும் என்பதையும் அரசாங்கத்தால் வகுக்கப்பட்ட விதிகளில் அத்தியாயம் 12–ல் அடங்கியுள்ள விதிகளில் குறிக்கப்பட்டிருக்கும் செய்திகளையும், உறுப்பினர்களுடைய வருமானத்தைத் தீர்மானிக்கும் அடிப்–படையில் குறிக்கவேண்டும். இந்த உடன்படிக்கைப் பத்திரம் கூட உறுதிமொழிப் பத்திரத்தைப் போலவே, 79 ஆம் பிரிவு பகுதி 2–லிருந்து பகுதி 4 வரையில் உள்ள சரத்துகளின் படிப் பதிவு செய்யப்படவேண்டும். 80ஆம் பிரிவுப்படி ஒரு கூட்டுப்பண்ணைச் சங்கத்தில் திரட்டப்பட்ட நிலங்களிலிருந்து உடன்படிக்கைப் பத்திரத்தில் குறிக்கப்பட்ட காலவரைக்குள் நிலங்களைத் திருப்பிப் பெறக்கூடாது. உடன்படிக்கையின் காலவரை கழிந்த பிறகு ஓர் உறுப்பினர் சங்கத்திலிருந்து விலக விரும்பினுல் 81 (1) பிரிவின்படி சங்கம் அவருடைய நிலத்தை வாங்கிக் கொள்ளலாம் அல்லது அந்த நிலத்தை சங்கத்திற்குச் சொந்தமான சம மதிப்புள்ள இதர நிலங்களுக்குப் பதிலாக மாற்றிக் கொள்ளலாம். சங்கத்தின் சார்பில் அத்தகைய நிலங்களை அரசாங்கம் கூட 81 (2) ஆம் பிரிவில் விதிக்கப்பட்டிருக்கும் சில நிபந்தனைகளுக்கு உட்பட்டுக் கைப்பற்றலாம் (Acqauire). அம் மாதிரி கைப்பற்றப்பட்ட நிலங்களுக்காகக் கொடுக்கப்பட வேண்டிய நட்ட ஈட்டுத் தொகையின் (Compensation amount) அளவைத் தீர்மானிக்கவும் (Quantum), நட்டஈட்டுத் தொகை

சம்பந்தமாகத் தகராறு ஏதாவது ஏற்பட்டால் 82ஆம் பிரிவின்படி அந்தத்தகராரைத் தீர்ப்பதற்கு ஒரு நடுவரை நியமிக்கவும் சட்டம் வகை செய்கிறது.

சட்டத்தின்கீழ் சங்கம் தான் கைப்பற்றின நிலத்தை விற்பனை செய்ய உத்தேசித்தால் 81 (3) (எ) பிரிவின்படி அத்தகைய நிலத்தை அதனுடைய முந்தையச் சொந்தக்காரர் மீண்டும் பெறுவதற்கு உரிமை உள்ளவராவார். உறுப்பினரிடமிருந்து சங்கத்தால் கூட்டிணைக்கப்பட்ட நிலங்களைத் தவிர வேறு எந்த நிலமும் கூட்டுப் பண்ணை செயல்படுவதை எளிதாக்கும்பொருட்டுத் தேவைப் பட்டால், நிலம் எடுப்புச் சட்டச் (Land aequisition Act) சரத்துகளின் கீழ் அரசாங்கம் 84ஆம் பிரிவின்படி உறுப்பினரிடமிருந்து திரட்டப்பட்ட மொத்த நிலங்களின் பரப்பில் 10 சதவிகிதம் வரைக்கும் விதிகளில் குறிக்கப்பட்ட காரியங்களுக்காக எடுக்கலாம்.

(xiii) மேல் முறையீடு (Appeal) புனர் ஆய்வு (Revision) மறுசீர் ஆய்வு (Revieu)

மேல்முறையீடு: 1932 வருடத்தியச் சட்டத்தின் 57ஆம் பிரிவின்கீழ் அரசாங்கம் அல்லது பதிவாளர், தங்களுக்குக் கீழ்ப்பட்ட எந்த ஓர் அதிகாரியின் நடவடிக்கையை அல்லது விசாரணைக் குறிப்புகளைப் (Records) பரிசீலனை செய்வதற்கு வரவழைக்கலாம். இதன் நோக்கம் கீழ்ப்பட்ட அதிகாரிகள் செய்துள்ள முடிவு அல்லது பிறப்பித்த உத்தரவு சட்டப்படி அமைந்துள்ளதா அல்லது சரியானதா என்பது பற்றியும், பிறப்பிக்கப்பட்ட உத்தரவு அல்லது எடுக்கப்பட்ட நடவடிக்கை ஒழுங்கானதா என்பது பற்றியும் அரசாங்கம் அல்லது பதிவாளர் திருப்தி செய்துகொள்ள வாய்ப்பு அளிக்கவேண்டும் என்பது. எந்த ஒரு விஷயத்தில் அப்படி வரவழைக்கப்பட்ட முடிவு அல்லது உத்தரவு அல்லது நடவடிக்கை ஏதாவது அரசாங்கம் அல்லது பதிவாளருக்குத் திருத்தப்பட வேண்டும் அல்லது தள்ளுபடி செய்யப்படவேண்டும் அல்லது மாற்றப்படவேண்டும் என்று தோன்றினால் சூழ்நிலைக்கேற்றவாறு அரசாங்கம் அல்லது பதிவாளர் அந்த நிலைமையில் தாங்கள் சரி என்று கருதுகிற உத்தரவைப் பிறப்பிக்கலாம். இந்தப் பழைய சட்டத்தின் பிரிவு, அரசாங்கம் அல்லது பதிவாளர் தங்கள்சொந்த இயக்க ஆற்றலினால் கூடச் செய்யப்படுவதை அனுமதிக்கும் எல்லாவற்றையும் அடக்கும் ஓர் ஏற்பாட்டைக் (All-pervasive) கொண்டது. இந்தப் பிரிவை எடுத்துவிட்டு அதற்குப் பதில், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் பல புதிய சரத்துகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகளாவன:

(1) சில குறிப்பிட்ட செயல்களை முடிவு செய்து தீர்மானிப்பதற்கு ஒரு சுதந்தரமான தனிப்பட்ட நியாய மன்றத்தை ஏற்படுத்தும் பொருட்டு, 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 95ஆம் பிரிவின் கீழ் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட நடுவர் நீதிமன்றங்களை (Tribunals) அமைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு நடுவர் நீதி மன்றத்திலும் உப-நீதிபதி பதவிக்குக் குறையாத ஒரு நீதித்துறை அதிகாரி ஒருவர் மாத்திரம் நீதிபதியாக இருப்பார்.

(2) 1932ஆம் வருடத்தியச் சட்டத்தில் பல பிரிவுகளில் பரவியிருந்த மேல் முறையீட்டுக்கான ஏற்பாடுகள், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் ஒரே ஒரு பிரிவில் அதாவது 96ஆம் பிரிவில் மொத்தமாக சேர்க்கப்பட்டிருக்கின்றன. கீழ்க்கண்ட அடிப்படையில், மேல்முறையீட்டுக்கான ஏற்பாடு வகுக்கப்பட்டிருக்கின்றது.

(அ) பதிவாளராக அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கும் கீழ்நிலை அதிகாரிகளும் பதிவாளருமாக இரண்டு வரிசை முதல் நிலை (Original) அதிகாரிகள் இருப்பார்கள். இந்த இரண்டு அதிகாரிகளால் கையாளப்பட்டு நடுவர் நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்யப்படக்கூடிய செயற்பாடுகளைக் குறித்து யாதொரு மேல்முறையீடும் அரசாங்கத்திற்குச் செய்யக்கூடாது.

(ஆ) பதிவாளராக அதிகாரம் கொடுக்கப்பட்ட கீழ்நிலை அதிகாரிகளுடைய தனிப்பட்ட நடவடிக்கைகள் அல்லது உத்தரவுகளைக் குறித்து நடுவர் நீதிமன்றத்திற்கு மேல்முறையீடு செய்து கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதால், அவைகளைக் குறித்து பதிவாளருக்கு மேல்முறையீடு செய்யக்கூடாது.

மேற்சொன்ன (ஆ) இனத்தில் இனம் வராத கீழ்நிலை அதிகாரிகளின் நடவடிக்கையையும் உத்தரவையும் குறித்து பதிவாளருக்கு மேல்முறையீடு செய்யலாம். மாநிலப் பதிவாளரால் பிறப்பிக்கப்பட்ட முதல்நிலை உத்தரவுகளைக் குறித்து மாநில அரசுக்கு மேல்முறையீடு செய்யலாம்.

(3) சட்டத்தின் 96ஆம் பிரிவின்படி நடுவர் நீதிமன்றத்திற்கு கீழ்க்கண்ட பொருள்களைக் குறித்து மேல்முறையீடு செய்து கொள்ளலாம்.

(அ) 71 (1) பிரிவின்கீழ் பதிவாளரால் செய்யப்பட்ட சர்சார்ஜ் உத்தரவு.

(ஆ) 73ஆம் பிரிவின் உட்பிரிவு (2) (3) அல்லது (4)-ன் கீழ் பதிவாளரால் ஒரு தகராறில் பிறப்பிக்கப்பட்ட முடிவு.

(இ) 73-பிரிவின் உட்பிரிவு (2) அல்லது (3) கீழ் ஒரு நடுவர் அல்லது நடுவர்களால் ஒரு தகராறில் செய்யப்பட்ட தீர்ப்பு.

(ஈ) 81 (2)ஆம் பிரிவின்கீழ் ஒரு கூட்டுப்பண்ணைச் சங்கம் திரட்டிய ஒரு நிலத்திற்காகச் சங்கம் கொடுக்கவேண்டிய இழப்பு ஈட்டுத்தொகையை முடிவுசெய்து 82ஆம் பிரிவின்கீழ் ஒரு நடுவரால் செய்யப்பட்ட தீர்ப்பு.

(உ) 91ஆம் பிரிவின்கீழ் பிறப்பிக்கப்பட்ட ஒரு தீர்ப்பாணை (decree) முடிவு, தீர்ப்பு அல்லது உத்தரவை நிறைவேற்றுவதற்காகச் செய்யப்பட்ட ஒரு விண்ணப்பத்தின் பேரில் பதிவாளரால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவு.

(ஊ) சொத்தினை நிபந்தனையுடன் ஜப்தி செய்வதற்காக ஒரு சங்கம் செய்த விண்ணப்பத்தின்பேரில் 108ஆம் பிரிவின்கீழ் பதிவாளரால் செய்யப்பட்ட உத்தரவு.

(4) 96 (2) பிரிவின் கீழ்க்கண்ட செய்திகளைக் குறித்து சமயோசிதம்போல் மாநில அரசாங்கத்திற்கு அல்லது பதிவாளருக்கு மேல்முறையீடு செய்து கொள்ளலாம்.

(அ) ஒரு சங்கத்தின் குழுவிற்குத் தேர்தல் உள்பட குழுவின் அமைப்பு சம்பந்தமாக அல்லது அமைப்பைக் குறித்து எந்த ஒரு நடைமுறையிலும் ஏற்பட்ட தகராறில் 73 ஆம் பிரிவின்கீழ் பிறப்பிக்கப்பட்ட முடிவு, உத்தரவு, அல்லது தீர்ப்பு.

(ஆ) 73ஆம் பிரிவின் உட்பிரிவு (2) அல்லது (3)-ன் கீழ் பிறப்பிக்கப்பட்ட ஒரு தகராறை மாற்றும், ஒப்படைக்கும், திருப்பிப் பெறும் அல்லது மீண்டும் மாற்றும் ஓர் உத்தரவு.

(இ) 7ஆம் பிரிவின்கீழ் ஒரு நபர் விவசாயியா, அல்லது ஒரு நகரம் அல்லது கிராமத்தில் வசிப்பவரா, அல்லது சொந்த அசையாச் சொத்து உடையவரா, அல்லது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கிராமங்கள் ஒரு வகுப்பில் சேர்க்கப்படலாமா அல்லது ஒரு நபர் எந்த ஒரு குறிப்பிட்ட சாதியையோ, அல்லது தொழிலையோ சேர்ந்தவரா என்பது போன்ற கேள்விகள் எழுங்கால் பிறப்பிக்கப்படும் முடிவு.

(ஈ) 9ஆம் பிரிவின்கீழ் ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்கு மறுக்கப்படும் உத்தரவு.

(உ) (12) (2)-ன் பிரிவின்கீழ் சங்கத்தின் துணைவிதிகளில் திருத்தம் பதிவு செய்வது.

(ஊ) 11ஆம் பிரிவின்கீழ் சங்கத்தின் துணைவிதிகளில் செய்யப்பட்ட திருத்தங்களைப் பதிவு செய்ய மறுக்கப்படும் உத்தரவு.

(எ) 17 (2) (எ) பிரிவின்கீழ் ஒரு சங்கத்தினுடைய உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளப்பட்ட ஒரு நபரை விலக்கு வதற்கு அங்கீகாரம் அளிப்பது அல்லது அங்கீகாரம் அளிக்க மறுப்பது.

(ஏ) 20 (2) பிரிவின்கீழ் ஓர் உறுப்பினரை நீக்குவதற்கு (expulsion) அங்கீகாரம் அளிப்பதும் அல்லது அங்கீகாரம் அளிப் பதற்கு மறுப்பதும்.

(ஐ) ஒரு குழுவின் உறுப்பினர் 28 (6)ஆம் பிரிவின்கீழ் சொல் லப்பட்ட தகுயின்மை அடைந்திருக்கிறாரா என்பதைக் குறித்து அந்தப் பிரிவின்கீழ் பதிவாளரால் செய்யும் முடிவு.

(ஒ) 72 (1) பிரிவின்கீழ் ஒரு சங்கத்தின் குழுவை மீறும் வகையில் பிறப்பிக்கப்படும் உத்தரவு.

(ஓ) 85ஆம் பிரிவின்கீழ் பதிவு செய்யப்பட்ட சங்கத்தைக் கலைக்கும்படி கட்டளையிட்டு பிறப்பிக்கப்படும் உத்தரவு. மேற் கண்டவற்றுள் உத்தரவு அல்லது முடிவு பதிவாளரால் பிறப்பிக்கப் பட்டதாக இருந்தால் அதன்மீது முறையீடு மாநில அரசாங்கத் திற்குச் செய்யப்பட வேண்டும். அந்த உத்தரவு அல்லது முடிவு வேறு எந்த ஒருவரால் பிறப்பிக்கப்பட்டிருந்தால் அதன்மீது பதிவாளருக்கு மேல்முறையீடு செய்யப்பட வேண்டும்.

(5) 17ஆம் பிரிவு (2) உட்பிரிவில் (B) பகுதியின்கீழ் ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கத்தில் உறுப்பினராகச் சேர மறுக்கப் பட்ட எந்த ஒரு நபரும் அல்லது 87ஆம் பிரிவின்கீழ் கலைப்பு அதிகாரியினால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவால் பாதிக்கப்பட்ட எவரும் பதிவாளருக்கு மேல்முறையீடு செய்யலாம்.

(6) ஒரு மேல்முறையீடு, முடிவு அல்லது உத்தரவு முதலிய வற்றின் தேதியிலிருந்து 2 மாதங்களுக்குள் செய்யப்பட வேண்டும்.

புனர் ஆய்வு : சட்டத்தின் 97ஆம் பிரிவின்கீழ் மாநில அரசாங்கத்திற்கு விண்ணப்பத்தின்பேரில் அல்லது, தானாகவே பதிவாளரால் பிறப்பிக்கப்பட்ட ஓர் உத்தரவைக் குறித்து புனர்ஆய்வு செய்ய அதிகாரம் உண்டு. அப்படியே பதிவாளருக்குக் கீழ்ப்பட்ட ஓர் அதிகாரியால் பிறப்பிக்கப்பட்ட ஓர் உத்தரவைக் குறித்துப் புனர் ஆய்வு செய்யப் பதிவாளருக்கு

அதிகாரம் உண்டு. நடுவர் நீதிமன்றத்திற்கு மேல்முறையீடு செய்வதற்கு அனுமதிக்கப்பட்ட நடவடிக்கைகள் இந்தப் பிரிவின் அமலிலிருந்து நீக்கப்பட்டிருக்கின்றன. சீர் ஆய்வுக்காகச் செய்யப் படும் ஒரு விண்ணப்பம் விண்ணப்பதாரருக்கு உத்தரவு தெரிவிக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள் செய்யப் பட வேண்டும்.

மறு சீர்ஆய்வு : 98ஆம் பிரிவின்கீழ் அரசாங்கம் 'பதிவாளர், நடுவர் நீதிமன்றம் 96ஆம் அல்லது 97ஆம் பிரிவின்கீழ் பிறப்பிக் கப்பட்ட எந்த ஓர் உத்தரவையும் மேல்முறையீடு செய்பவர் அல்லது மறு சீர்ஆய்வு வேண்டுபவர் அல்லது பிரதிவாதி இவர்கள் செய்துள்ள விண்ணப்பத்தின் பேரில் மறு சீர் ஆய்வு செய்யலாம். மறுசீர்ஆய்வு செய்வதற்காகச் செய்யப்படும் ஓர் விண்ணப்பதாரர் மீது உத்தரவு பிறப்பிக்கப்பட்டபோது அவருக்குத் தெரியாத அல்லது அவரால் முன்னிலைப்படுத்த முடியாத புதியதாகவும், முக்கியமானதுமான அவர் முயற்சியோடு டதிதாய்க் கண்டுபிடித்த பொருண்மைகளின் (Fact) அடிப்படையில் செய்யப்பட வேண்டும். அல்லது குறிப்பேட்டில் ஏற்பட்ட சில தப்பு அல்லது தவறு அடிப் படையின் பேரிலும் அல்லது வேறு எந்த போதுமான காரணத்திற் காகவும் அந்த விண்ணப்பம் செய்யப்படலாம். மறு சீர்ஆய்வுக் காகச் செய்யப்படும் விண்ணப்பத்தின்பேரில் உத்தரவைப் பிறப் பிக்கத் தகுதி பெற்றவர் இடைக்காலத்து கூறப்படும் உத்தரவுகளை விண்ணப்பத்தின்பேரில் முடிவு எடுக்கும் முன்பு பிறப்பிக்கலாம். ஒரே உத்தரவைக் குறித்து ஒரு முறைக்கு மேல் மறு சீர் ஆய்வு விண்ணப்பம் செய்யப்படக்கூடாது. 96, 97 அல்லது 98 ஆம் பிரிவின்கீழ் நடுவர் நீதிமன்றம், பதிவாளர் அல்லது அரசாங்கம் பிறப்பிக்கும் உத்தரவு 94ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட வகையில் அந்தப் பிரிவில் குறிக்கப்பட்டிருக்கும் அதிகாரியால் 97ஆம் பிரிவின்கீழ் நிறைவேற்றப்படும்.

(xiv) சங்கங்களின் கட்டாய இணைப்புச் சரத்து நீக்கம் : (Delection of the Provinsion for Compulsory amalagamation) 1932ஆம் வருடத்தியச் சட்டத்தில் சங்கங்களைக் கட்டாயப்படுத்தி ஒரே சங்கமாக இணைப்பதற்கு (Compulsory amalgamation) ஏற்பாடு இருந்தது. அந்த ஏற்பாடு 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் இடம் பெறவில்லை.

3. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட சென்னை கூட்டுறவுச் சங்கங்களின் விதிகளில் (1963) புகுத்தப்பட்ட தலைமையான மாறுதல்கள் : (Main changes in the rules) 1961ஆம் வருடத்திய

சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின்கீழ் அமைக்கப் பட்ட விதிகள் 'சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் விதிகள் 1963' என்ற தலைப்பில் 1963ஆம் வருடம் செப்டம்பர் மாதம் 4ஆம் தேதி சென்னை அரசாங்க அரசிதழில் (Fort St. George Gazette) வெளியிடப்பட்டன. இந்தத் தேதியிலிருந்து இந்த விதிகள் அமலுக்கு வந்தன. இந்தப் புதிய விதிகள் ஏற்படுத்திய முக்கிய மான மாறுதல்களை இனி ஆராய்வோம்.

(அ) கூட்டுறவுச் சங்கங்களைப் பதிவு செய்தல் (Registration of Societies)

(i) இதுவரை ஒரு சங்கத்தைப் பதிவு செய்ததைக் குறித்த அறிவிப்பு தலைமைத் தோற்றுவிப்பாளருக்கு (Chief-Promoter) அனுப்பப்பட்டிருந்தது. ஆனல், விதிகளில் தலைமைத் தோற்று விப்பாளரை வேலையில் அமர்த்துவதற்கு அல்லது நியமனம் செய் வதற்கு சரத்து ஒன்றுமில்லாமலிருந்தது. அத்தகைய அறிவிப்பை விண்ணப்பதாரர்களால் அதிகாரம் கொடுக்கப்பட்ட நபர்களுக்கு மட்டும் அனுப்பி வைப்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் இப்பொழுது 3ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட சங்கப் பதிவு விண்ணப்ப நமுனவில் மூன்று விண்ணப்பதாரர்களுக்கு மேற் படாமலுள்ள நபர்களுக்குச் சங்கப் பதிவு அறிவிப்பு அனுப்பு வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

(ii) இதற்கு முன்பு ஒரு சங்கம் பதிவு செய்யப்பட்ட பிறகு அதன் வேலையைத் தொடங்குவதற்கு எந்த ஒரு காலவரை யறையும் விதிக்கப்படாமலிருந்தது. ஆகையால், வேலை தொடங்காத ஒரு சங்கம் நீண்ட காலத்திற்குச் சங்கங்களின் பட்டியலில் இருந்து வந்தது. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 85ஆம் பிரிவு நிருணயிக்கப்பட்ட காலவரையறைக்குள் வேலை தொடங்காத ஒரு சங்கத்தைக் கலைப்பதற்குக் கட்டளையிடப் பதிவாளருக்கு அதிகாரம் வழங்கி இருக்கிறது. ஆகையால் 6ஆம் விதியில், ஒரு சங்கம் அதன் பதிவுத் தேதியிலிருந்து அதன் வேலையைத் துவக்கவேண்டிய காலவறையறை மூன்று மாதங்களாக நிருணயிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் காலவறையறையைத் தக்க நிலைமைகளில் நீடிப்பதற்குப் பதிவாளருக்கு அதிகாரமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒரு சங்கம் அது பதிவான பிறகு, முதல் மகாசபைக் கூட்டத்தைக் கூட்டி, அதன் உறுப்பினர்களைச் சேர்த்து, பங்குகளை ஒதுக்கி, அதன் நிருவாகக் குழுவையும் அமைத்துவிட்டால், அது வேலையைத் தொடங்கிவிட்டதாகக் கருதப்படும்.

(iii) 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 15ஆம் பிரிவின்படிப் பதிவாளர், சங்கங்களை விதிகளில் நிருணயித்தபடிபாகுபடுத்தலாம் சட்டத்தின் 78ஆம் பிரிவின், உட்பிரிவு (3), பகுதி (4), ஒரு நபர், விதிகளில் பாகுபடுத்தியபடி இரண்டு தலைமைச் சங்கங்கள், இரண்டு மத்தியச் சங்கங்களுக்கு மேற்பட்ட சங்கங்களின் குழுக்களில் உறுப்பினராக இருப்பதைத் தடை செய்கிறது. இந்தப் பிரிவு களின் நோக்கம் நிறைவேறுவதற்காக. சங்கங்கள் பிரிக்கப்பட வேண்டிய பல பாகுபாடுகள் என்னென்ன என்பதையும். அம்மாதிரிப் பாகுபாட்டை எந்த அடிப்படையில் வகைப்படுத்த வேண்டும் என்பதையும் 11ஆம் விதியில் நிருணயிக்கப்பட்டிருக் கிறது. ஒரு வகைச் சங்கத்தில் (one Class of Society) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட உட்பிரிவுகளை (Categories) ஏற்படுத் தவும், இந்த விதியில் வகை செய்யப்பட்டிருக்கிறது. ஒரு வகைச் சங்கத்திலிருக்கும் (one Class of Society) பல உட் பிரிவுச் சங்கங்-களுக்காகத் தற்போது வழக்கிலிருக்கும் பெயர்களைத் தொடர்ந்து உபயோகிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. உதாரணமாக, கடன் சங்கம் என்ற வகுப்பில் பிரதம விவசாயக் கடன் சங்கம், நகர வங்கி, நில அடைமான வங்கி, ஊழியர் சங்கம், மத்திய வங்கி முதலியவை அடங்கும். ஒரு சங்கத்தைத் தலைமைச் சங்கமென்றும், மத்தியச் சங்கமென்றும், அல்லது பிரதமச் சங்கமென்றும் வகைப்படுத்து வதற்குக் கடைப்பிடிக்கவேண்டிய அடிப்படை என்னவென்று 11ஆம் விதி, (5) பகுதியில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. தற்போது அமலிலிருக்கும் சங்க வகைகளின் ஏற்பாடுகளை இந்த அத்தியாத்தின் பிற்சேர்க்கையில் காணலாம்.

(ஆ) அங்கத்துவம் (Membership): 17ஆம் விதிப்படி, விவசாயக் கடன் சங்கம், உற்பத்திச் சங்கம், கூட்டுப்பண்ணைச் சங்கம், விற்பனைச் சங்கம், விநியோகிக்கும் சங்கம் ஆகிய சங்கங்-களில் வயது வராதவர்களும் (Minors) மனநோயாளர்களும் (Persons of unsound Mind) தங்கள் பாதுகாவலர்கள்மூலம் (Guardians) உறுப்பினர்களாகச் சேருவதற்கு உரிமை பெற்றவர் களாவர். 17ஆம் பிரிவு (2) ஆம் உட்பிரிவு (அ) பகுதியில் தகுதி பெற்ற எல்லா நபர்களுக்கும் சங்கங்களில் சேருவதற்கு உரிமை அளித்து ஏற்படுத்தப்பட்டிருக்கும் சரத்து ஒரு கட்டளைச் சரத்து. இந்தச் சரத்து கடன் சங்கங்கள், விநியோகிக்கும் சங்கங்கள், விற்பனைச் சங்கங்களுக்குப் பொருந்தவேண்டுமென்று 18ஆம் விதி நிருணயிக்கிறது. 19ஆம் விதிப்படி சங்கத் துணை விதிகளில் நிருணயிக்கப்பட்டிருக்கும் கட்டணங்களைச் செலுத்தி ஒரு விநியோகச் சங்கத்தில் வயது வராதவர்கள் துணைஞர் உறுப்பின-

ராகச் (Associate Member) சேரலாம். இவ்வகை உறுப்பினர் களைச் சேர்த்துக் கொள்வதை, மாணவர்களுக்குத் தேவைப்படும் புத்தகங்கள், எழுதுபொருள்கள், இன்னும் மற்றச் சாமான்கள் வழங்குவதை முக்கிய நோக்கமாகக் கொண்ட மாணவர்கள் கூட்டுறவுப் பண்ட சங்கங்களுடைய துணை விதிகளில் மட்டுமே ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த வகை உறுப்பினர்கள் மகாசபைக் கூட்டங்களில் வாக்களிப்பதற்கும், சங்கங்களின் நிருவாகத்தில் பங்கெடுப்பதற்கும் தகுதி இல்லாதவர்கள் ஆவர்.

(ii) இதற்கு முன்பு, ஓர் உறுப்பினர் சங்கத்தில் தான் வாங்கிய எந்த ஒரு கடன் அல்லது கடன்களைக் குறித்துத் துணை விதிகளில் நிருணயிக்கப்பட்ட காலத்திற்குத் தவணை செலுத்தத் தவறினாலும் அல்லது மூன்று மாதங்களுக்குமேல் தவணை தவறிய பாக்கியுள்ளவராக இருந்தாலும் அல்லது வேறு ஒரு சங்கத்திற்குத் தவணை தவறிய பாக்கியுள்ளவராக இருந்தாலும், அவர் சங்கத் திற்குத் தேர்தலில் வாக்கு அளிப்பது அல்லது வேறு ஒரு சங்கத்தில் சங்கப் பிரதிநிதியாக இருந்து வாக்கு அளிப்பதும் தடை செய்யப் பட்டிருந்தது.

சங்கத்திற்குக் கொடுக்கப்பட வேண்டியவற்றைச் செலுத்தி யிருக்கும் ஓர் உறுப்பினர் சங்கத்தின் தேர்தல்களில் வாக்கு அளிக்கும் அவருடைய உரிமை அல்லது வேறொரு சங்கத்தில் தன் சங்கத்தின் பிரதிநிதியாக இருப்பதற்கு உரிமையையும் எடுத்துவிடு வதற்கு அவசியம் இல்லையென்றும், ஓர் உறுப்பினர் வேறோர் சங்கத்திலும் உறுப்பினராக இருந்தாரா என்றும் அவர் அந்த வேறு சங்கத்திற்குத் தவணை தவறிய பாக்கிதாரராக இருந்தாரா என்பதையும் கண்டுபிடிப்பதற்குக் கடினமாக இருக்குமென்றும் கருதப்பட்டது. மற்றும், தேர்தல்களில் வாக்கு அளிக்கும் தகுதியைப் பெறுவதற்கு எந்தக் காலவரையறைக்குள் ஒரு தவணை தவறிய பாக்கிதாரர் தவணை தவறிய பாக்கியைச் செலுத்திவிட வேண்டும் என்பது விதிகளில் நிருணயிக்கப்படாததால் தேர்தல் களில் வாக்களிப்பதற்குத் தகுதி பெற்ற உறுப்பினர்கள் யாவர் என்பதை முடிவு செய்வதற்கும் கடினமாக இருக்கும்.

இந்த நடைமுறையில் காணப்படும் சிக்கல்களைத் தீர்க்கும் நோக்கத்துடன் 20, 21 விதிகளில் தேர்தல் தேதிக்கு 30 நாள் களுக்கு முந்தைய தேதியில் ஓர் உறுப்பினர் வேறோர் சங்கத்திற்குத் துணைவிதிகளில் குறிக்கப்பட்ட காலவரையறைக்குத் தவணை தவறிய பாக்கிதாரராக இருந்தாலும், அல்லது எந்தச் சூழ்நிலை

யிலும் மூன்று மாதங்களுக்கு மேற்பட்ட காலத்திற்குத் தவணை தவறிய பாக்கிதாரராக இருந்தாலும்; அல்லது தான் உறுப்பினராக இருக்கும் சங்கத்திற்குத் தவணை தவறிய பாக்கிதாரராக இருந்தாலும், அவர் வேறொரு சங்கத்திற்குத் தன் சங்கத்தின் பிரதிநிதியாக இருப்பதற்கும், தேர்தல்களில் வாக்கு அளிப்பதற்கும், தகுதி இல்லாதவர் என்று சரத்து ஏற்படுத்தப் பட்டிருக்கிறது.

(இ) நிருவாகம் (Management)

(i) 1961ஆம் ஆண்டிற்கு முன்பு குழு உறுப்பினர்கள் தேர்தல் குறித்து ஒரேசீரான நடைமுறை இல்லாமலிருந்தது. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 27 (4) பிரிவின் விதிகளில் நிருணயிக்கப் பட்டிருக்கும் முறைப்படி வாக்குச் சீட்டு மூலம் குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று விதிக்கிறது. 29ஆம் பிரிவில் தலைமைச் சங்கம், மத்தியச் சங்கம், மற்றும் அரசால் அப்போதைக்கப்போது நிருணயிக்கப்படும் இதர சங்கம் அல்லது சங்க வகைகள் பின்பற்றவேண்டிய விரிவான ஒரு நடைமுறை வகுக்கப்பட்டிருக்கிறது. 30ஆம் விதியில் மற்ற பிரதம சங்கங்கள் 29ஆம் விதியில் சொல்லப்படாத சங்கங்கள் பின்பற்ற வேண்டிய ஓர் எளிய நடைமுறை விதிக்கப்பட்டிருக்கிறது.

சரியான முறையில் தேர்தல்கள் நடத்தப்படுவதற்கு ஒரு தேர்தல் அதிகாரி (Election Officer) அவசியம் என்று கருதப் பட்டால், சங்கங்களின் குழுக்களுக்குத் தேர்தல் நடத்துவதற்காகப் பதிவாளரால் ஒவ்வொரு தேர்தல் அதிகாரியை நியமிப்பதற்கு இந்த விதிகள் வகை செய்கின்றன. 31ஆம் விதியில் நிருணயிக்கப் பட்ட முறைப்படி சங்கத்தின் தலைவர், உப-தலைவர், பொருளாளர் போன்ற நிருவாகிகள் வாக்குச் சீட்டின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

(ii) இதற்கு முன்பு சட்டம் அல்லது விதிகளின்கீழ் தகுதி யிழந்த ஒரு குழு உறுப்பினரை விலக்குவதற்கு விதிகளில் ஓர் ஏற்பாடும் இல்லாமலிருந்தது. இந்தக் குறைப்பாட்டினை 40ஆம் விதி போக்குகிறது. இந்த விதியின்படி அத்தகைய உறுப்பினருக்கும் அவர் உறுப்பினராக இருக்கும் குழுவிற்கும் அவருடைய அல்லது குழுவின் விளக்கவுரையை அளிப்பதற்கு ஒரு வாய்ப்பு கொடுத்த பிறகு அந்த உறுப்பினரை விலக்கக் கட்டளையிடுவதற்குப் பதிவாளருக்கு அதிகாரம் உண்டு. சட்டத்தின் 28ஆம் பிரிவு (6) உட் பிரிவின்கீழ் ஓர் உறுப்பினர் பிரிவில் கண்டிருக்கும் தகுதியின்மைகளுக்கு உட்பட்டிருக்கிறாரா, இல்லையா என்ற ஒரு

கேள்வியைத் தீர்மானிப்பதற்குமுன், அந்தக் குழு உறுப்பினருக்கு அவருடைய மறுப்பைக் கூறுவதற்கு ஒரு வாய்ப்பு அளிக்க வேண்டும்.

(ஈ) சங்கத்தின் நிதிகள் (Funds of Societis)

(i) இதற்கு முன்பு வைப்புத் தொகைகளைப் பெற்று ரொக்கக் கடன் (cash credit) கொடுத்து வந்த வரையறுக்கப்பட்ட பொறுப்புள்ள சங்கங்கள் மாத்திரம் நீர்மைச்சொத்துகள் (Fluid Resources) ஏற்படுத்த வேண்டுமென்று விதிக்கப்பட்டிருந்தது. இப்போது வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில் நிறுவப்பட்ட சங்கங்கள்கூட வைப்புத் தொகைகளைப் பெற்றுவருவதால் 45ஆம் விதியில் வைப்புத் தொகைகளைப் பெறும் வரையறுக்கப்படாத பொறுப்புள்ள சங்கங்களும் வரையறுக்கப்பட்ட பொறுப்புள்ள சங்கங்களுமான எல்லாச் சங்கங்களுக்கும் இந்த சரத்து விதி நீட்டிக்கப்பட்டிருக்கிறது.

(ii) நிகர இலாபத்தைப் பல செயல்களுக்கு ஒதுக்கி வைப்பது 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 62ஆம் பிரிவில் நிருணயிக்கப் பட்டுள்ள முறைப்படி விதிகளில் ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறது. இதனுடன் தொடர்புடைய விதிகளில் செய்யப்பட்டி ருக்கும் முக்கியத் திருத்தங்களாவன:-

(அ) நிதி வழங்கும் வங்கியால் சேமநிதிக்கு ஒதுக்கப்பட வேண்டிய நிகர இலாபம் $33\frac{1}{2}$ சதவீதத்தில் இருந்து 25 சதவீதத் திற்குக் குறைக்கப்பட்டுள்ளது. வரையறுக்கப்படாத பொறுப் புள்ள சங்கத்தில் சேமநிதியும் இதர காப்பு இருப்புகளும் (Reserves) சேர்ந்து மொத்தத்தில் உறுப்பினர்களுடைய செலுத் தப்பட்ட பங்கு மூலதனத்திற்குச் சமமாக வரும்வரை, நிகர இலாபத்திலிருந்து சேமநிதிக்கு ஒதுக்கப்பட வேண்டிய தொகை 50 சதவீதத்திலிருந்து $33\frac{1}{3}$ சதவீதத்திற்கும் அதற்குப்பின் 25 சதவீதத்திற்கும் 16ஆம் விதியில் குறைக்கப்பட்டிருக்கிறது.

(ஆ) மூன்றும் பகுதியில் ஒரு சங்கத்தால் கொடுக்கப்பட வேண்டிய இலாப ஈவின் உச்சவிகிதம் 6 சதவீதத்திற்குக் குறைக்கப் பட்டுள்ளது.

(இ) ஐந்தாவது பகுதியில் சங்கத்தில் மாதம் ரூபாய் 300/-க்கு மேற்படாமல் ஊதியம் வாங்கும் ஊழியர்களுக்கு மூன்று மாத அடிப்படை ஊதியத்தை மேலூதியமாகக் (Bonus) கொடுப் பதற்கு வரம்பு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

(ஈ) கூட்டுறவுக் கல்வி நிதிக்கு (Co-operative Education Fund) ஒதுக்கப்பட வேண்டிய தொகை ரூ. 10,000/ உச்ச

வரப்புக்கு உட்பட்டு நிகர இலாபத்தில் 2 சதவீதமாக நிருணயிக்கப்பட்டிருக்கிறது. அப்படி ஒதுக்கப்பட்ட தொகை தமிழ்நாடு கூட்டுறவு யூனியனுக்கு, மகாசபை நிகர இலாபப்பிரிவினை செய்த தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் செலுத்தப்பட வேண்டும். ஆறுவது பகுதியில் இந்தக் கல்வி நிதியை சில நிபந்தனைகளுக்குட்பட்டு தமிழ் நாடு கூட்டுறவு யூனியன் நிருவாகம் செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

(உ) ஏழாவது பகுதியில் நிகர இலாபத்தில் மிச்சமிருந்தால் நிகர இலாபத்தில் 10 சதவீதம் பொது நல நிதிக்கு ஒதுக்கலாம் என்று நிருணயிக்கப்பட்டிருக்கிறது. இது பழைய விதியில் $7\frac{1}{2}$ சதவீதமாக இருந்தது.

(iii) சங்கத்தினுடைய நிதி நிலைமையை அனுசரிக்காமல் சங்க நிருவாகத்திற்கு நேரிடைத் தொடர்பில்லாத செயல்களுக்கு ஆண்டு விழா கொண்டாடுதல், படத்திறப்பு விழா முதலியன நடத்துவது போன்ற செயல்களுக்குச் சங்கத்தின் நிதிகளை மிதமிஞ்சிச் செலவு செய்யாமல் இருப்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் 50ஆம் விதியில் சங்கத்தின் பொது நிதிகளில் இருந்து அத்தகையச் செலவுகளைச் செய்வதற்கு அதிகாரியின் முன் அனுமதி பெறவேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

(உ) தணிக்கை (Audit): முந்தையச் சட்டத்தில் அதாவது 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 37ஆம் பிரிவில் தணிக்கை செய்வதில் பின்பற்றப்பட வேண்டிய நடைமுறை விதிகள் நிருணயிக்கப்படவில்லை. எனினும், தனிக்கையாளர்கள் தணிக்கை அறிக்கைகளைத் தயாரித்து நிருணயிக்கப்பட்டுள்ள சான்றிதழ்களுடனும் அவர்கள் தணிக்கையின்போது காணப்பட்ட குறைபாடுகளின் பட்டியலுடனும் சமர்ப்பிக்க வேண்டுமென்று அவர்கள் கட்டளையிடப்பட்டிருந்தார்கள். தற்போது அமலில் இருக்கும் நடைமுறைக்கு சட்டச் ஒப்புதல் கொடுக்கும் நோக்கத்துடன் 54ஆம் விதியில் தணிக்கையாளர்கள் விதியின் ஐந்தாவது பகுதியில் குறிக்கப்பட்டிருக்கும் விவரங்கள் அடங்கிய ஒரு தணிக்கை நினைவுக்குறிப்பை (Audit Memorandum) சமர்ப்பிக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்தத் தணிக்கை நினைவுக்குறிப்பின் சுருக்கம் (Summary) ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டத்தில் படிக்கப்பட வேண்டும்.

(ஊ) கலைப்பு (Liquidation): (1) 58 (I) விதியில் சங்கத்தின் உறுப்பினர்களுக்கும் சங்கத்துக்குக் கடன் கொடுத்தவர்களுக்குமிடையே 87 (2)ஆம் பிரிவின் (J And K) பகுதிகளில் நிருணயித்தபடி இசைவு அல்லது சரிகட்டுதல் ஏற்படுத்துவதற்குக்

கலைப்பாளர் (Liquidator) பதிவாளருடைய முன் அங்கீகாரத்தைப் பெறவேண்டுமென்று நிருணயிக்கப்பட்டிருக்கிறது.

(2) முன்பிருந்த விதிகளில் கலைப்பாளர் தீர்க்கப்படாத பொறுப்பைத் (Un-Discharged Liability) தீர்க்கும் பொருட்டு ஒதுக்கப்பட்ட தொகையை நிதி வழங்கும் வங்கியில், பின்னால் அந்தப் பொறுப்புகளைத் தீர்ப்பதற்கு நிதி கிடைக்கும் வகையில், போட்டுவைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆனால், அப்படிப் போட்டு வைக்கப்பட்ட தொகைகளைக் காலாவதி காலவரை கழிந்த பின்னர் எப்படி உபயோகப்படுத்தப்பட வேண்டும் என்று பழைய விதிகளில் சொல்லப்படவில்லை. இந்தக் குறையை நிவர்த்திக்க இப்போது (L) 58ஆம் விதியில் அம்மாதிரித் தொகை போட்டு வைக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று வருடங்கள் கழிந்த பின்னர் நிதிவழங்கும் வங்கியினுடைய வராக் கடன் காப்பு இருப்புக்கு அந்தத் தொகையைச் சேர்த்துவிட வேண்டுமென்று கட்டளையிட்டு அம்மாதிரியான உத்தேசத்தைப் பிறப்பிக்க அறிவிப்பு செய்து கட்டளை பிறப்பிப்பதற்குப் பதிவாளருக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது.

(எ) நிறைவேற்றுதல் (Execution) : நிறைவேற்றுதலைக் குறித்த பழைய விதிகளில் XXIIஆம் விதி இப்போதுள்ள புதிய விதிகளின் கீழ் எளிதாகச் செயற்படுத்தல் கருதி 20 தனிப்பட்ட விதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன (அதாவது விதிகள் 59-லிருந்து 78 வரை). இதற்கு முன்பிருந்த 22ஆம் விதியில் அரசுக்குப் பாக்கியான தொகைகளைத் தீர்ப்பாணை உடையவர் (decree-holder) என்ற முறையில் வசூலிப்பதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. இந்த ஏற்பாடுகள் அரசு தனக்குப் பாக்கியாக உள்ள தொகைக்கு ஒரு தீர்ப்பாணை பெற்றிருந்தால் மாத்திரம் தான் அமல்படுத்த முடியும். இந்த ஏற்பாடுகளின்படி அரசு ஒரு தீர்ப்பாணை பெறுவதன் அவசியத்தைப் போக்க அரசுக்குப் பாக்கியாகவுள்ள தொகைகளை வசூலிப்பதற்கும் சட்டத்தின்கீழ் எந்த ஒரு நடவடிக்கையிலும் அரசுக்குத் தீர்ப்பளிக்கப்பட்ட நட்ட ஈட்டுத் தொகைகளை வசூலிப்பதற்கும், பதிவாளர் அல்லது இதர தகுதி வாய்ந்த அதிகாரியால் கொடுக்கப்பட்ட கேட்பு (demand) ஒன்றை அனுசரித்து அரசை ஒரு தீர்ப்பாணை உடையவராகவும், (decree-holder) சங்கம் அல்லது சங்கத்தினுடைய அதிகாரி அல்லது முன்னாள் அதிகாரியைப் பாக்கிதாரராகப் பாவித்து வசூலிப்பதற்கு 79ஆம் விதியில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

(ஏ) கூட்டுப்பண்ணைச் சங்கங்கள் (Joint Farming Societies) : விதிகள் 86 முதல் 90 வரை கூட்டுப்பண்ணைச் சங்கங்களைப்

பொறுத்தவை. 1961ஆம் ஆண்டுச் சட்டத்தில் கூட்டுப்பண்ணைச் சங்கங்களுக்காக ஒரு புதிய அத்தியாயம் சேர்க்கப்பட்டதனுல், இந்தப் புதிய விதிகள் வகுக்கப்பட்டன. சங்கத்தின் உறுப்பினர் எழுதிக் கொடுக்கும் ஒப்பந்தப் பத்திரத்தில் குறிக்கப்படவேண்டிய விவரங்களையும் நில எடுப்புச் சட்டத்தின் (Land Acquisition Act) சரத்துகளின்கீழ் ஒரு கூட்டுப்பண்ணைச் சங்கத்திற்காக நிலங்களை எந்தச் செயல்களுக்காக எடுக்கலாம் என்பதை விவரித்தும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

(ஐ) ஊதியம் பெறும் செயலாளரை நியமித்தல் (Appointment of Paid Secretary) : ஊதியம்பெறும் செயலாளர்களை நியமிப்பது தொடர்பாகப் பழைய 27 (A) விதியில் செய்யப்பட்டிருந்த ஏற்பாடு இப்போது 84ஆம் பிரிவில் உறுப்பினர்களிடமிருந்து ரூ. 5,00,000/-க்குக் குறையாத கடன் நிலுவை இருக்கும் வீட்டு வசதிச் சங்கங்களுக்கும் நீட்டிக்கப்பட்டிருக்கிறது.

(ஏ) மேல்முறையீடு (Appeal), புனர்ஆய்வு (Revision), மறுசீர் ஆய்வு (Review) :

(1) 96 (2) ஆம் பிரிவின்கீழ் அரசுக்கு அல்லது பதிவாளருக்குச் சமர்ப்பிக்கப்பட்ட முறையீடுகளுக்கு 97ஆம் பிரிவின்கீழ் செய்யப்படும் ஆய்வு விண்ணப்பங்களும் எவ்வாறு பரிசீலனை செய்யப்பட்டு முடிவு காணவேண்டும் என்பது தொடர்பான நடைமுறை 92ஆம் விதியில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. நடுவர் நீதிமன்றத்தில் (Tribunal) உப-நீதிபதி பதவிக்குக் குறையாத ஒரு நீதித்துறை அதிகாரி இருப்பதால், முறையீடுகளைப் பற்றிய நடவடிக்கைகள் சிவில் நடைமுறைச் சட்டத்தில் (Code of Civil Procedure) சரத்துகளின்படி முடிவு செய்யப்படவேண்டும்.

(2) முறையீடு செய்யப்படவேண்டிய காலவரம்பு 96ஆம் விதியின்படி இரண்டு மாதங்களாகவும் ஆய்வு விண்ணப்பம் சமர்ப்பிப்பதற்கு காலவரம்பு 97ஆம் பிரிவின்கீழ் மூன்று மாதங்களாகவும் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. மறு ஆய்வுவிண்ணப்பம் 98ஆம் பிரிவின்கீழ் சமர்ப்பிப்பதற்குக் கால வரம்பு மூன்று மாதங்களாக 93ஆம் விதியில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. மறு ஆய்வு விண்ணப்பம் சமர்ப்பிப்பதில் கையாள வேண்டிய நடைமுறையும் தகுதி வாய்ந்த அதிகாரியால் அந்த விண்ணப்பத்தை ஆய்ந்து முடிவு செய்வதில் பின்பற்றவேண்டிய நடைமுறையும் 93ஆம் விதியில் நிருணயிக்கப்பட்டிருக்கின்றன.

(3) நடுவர் நீதிமன்ற, அரசு அல்லது பதிவாளர் 96, 97 அல்லது 98ஆம் பிரிவின்கீழ் பிறப்பிக்கப்படும் அந்த உத்தரவு தன்னுல் பிறப்பிக்கப்பட்ட உத்தரவு போன்று நிறைவேற்றுவதற்

காக மாவட்டப் பதிவாளரை அதிகாரியாக்க 94ஆம் விதியில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது.

(ஏ) பல்வகைச் சரத்துகள் (Miscellaneous Provisions)

(1) கூட்டங்கள் (Meetings): கூட்டங்கள் சரிவர நடத்தப் படுவதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் 95ஆம் விதியில் சங்கத்தின் தலைமை அலுவலகத்தில் உள்ள ஒரு பொது இடத்தைத் தவிர வேறு எந்த இடத்திலும் ஒரு சங்கத்தின் மகாசபைக் கூட்டம் கூடுவதையும், சங்கத்தின் நிருவாகக் குழுக் கூட்டங்களைச் சங்கத்தின் விவகார எல்லைக்குள் எல்லா உறுப்பினர் களும் சுலபமாக வரக்கூடிய பொது இடத்தில் தவிர மற்ற இடங் களில் கூட்டம் கூட்டுவதும் தடை செய்யப்பட்டிருக்கிறது.

(2) அறிவிப்புச் சேர்த்தல் (Service of Notices): சட்டம் அல்லது விதிகளின்கீழ் பிறப்பிக்கப்பட்ட அறிவிப்புகள் வேறு குறிப்பிட்ட முறை நிருணயிக்கப்படவில்லையானால், 97ஆம் விதியில் நிருணயிக்கப்பட்டுள்ள யாதேனும் ஒரு முறைப்படி சேர்ப்பிக்க வேண்டும்.

(3) சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழிவு செய்தல் (Deduction from Salaries or Wages): உறுப்பினர்களுடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து வசூலிக்கப்பட்ட தொகைகளைச் சங்கத்திற்கு அனுப்பி வைக்கக் காலவரம்பு இல்லாமல் இருந்தது. இப்போது 53ஆம் விதியில் 14 நாள்களாக ஒரு காலவரம்பு நிருணயிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் காலவரம்பை 30 நாள் களாகத் தக்க சந்தர்ப்பங்களில் நீட்டிக்கப் பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

40 (2) (ஆ) பிரிவில் விதிகளில் நிருணயிக்கப்பட்ட சில வகைச் சங்கங்கள் தவிர இதர சங்கங்களின் உறுப்பினர்கள் சம்பளத் திலிருந்து வசூலிக்கப்படும் மொத்தத் தொகை உறுப்பினர் களுடைய மொத்தச் சம்பளம் அல்லது கூலியில் 50 சதவீதம் உச்ச வரம்பாக நிருணயிக்கப்பட்டிருக்கிறது. இந்த உச்சவரம்பு, நாணயச் சங்கங்கள், விநியோகச் சங்கங்கள், வீட்டுவசதிச் சங்கங் களைக் கட்டுப்படுத்தாது. இந்தச் சங்கங்களில் ஒவ்வோர் உறுப்பினரின் மொத்தச் சம்பளம் அல்லது கூலி பூராவும் கழிக்கப் பட்டுச் சங்கத்திற்கு அனுப்பப்படலாம்.

(4) பத்திரங்களின் சான்றிட்ட நகல்களை வழங்குதல் (Grant of Certified Copies of Documents): 100ஆம் விதியில் எந்த ஒரு செயலிலும் நியாயம் தேடும் அல்லது பாதிக்கப்பட்ட ஒரு நபருக்குப் பதிவாளர் அலுவலகத்தில் தாக்கல் செய்யப்பட்ட

எந்த ஒரு பொதுப் பத்திரத்தின் (Public Document) நகல் ஒன்றை வழங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதற்குக் கொடுக்கப்பட வேண்டிய கட்டணங்களும் நிருணயிக்கப்பட்டிருக்கின்றன. இந்த விதியின்படி பத்திரங்களின் நகல்களைப் பெறுவதற்குச் செய்யப்படும் ஒரு விண்ணப்பத்திற்குச் செலுத்த வேண்டிய கட்டணம் ரூபாய் 50ஆகவும், பத்திரத்தின் நகல் எழுதிக் கொள்வதற்குக் கட்டணம் கையில் எழுதப்பட்ட அல்லது தட்டச்சு செய்யப்பட்டஒவ்வொரு 175 வார்த்தைகள் அல்லது அவற்றின் பின்னத்திற்கு 35 காசாக (பழைய கட்டணம் 10காசு) நிருணயிக்கப்பட்டிருக்கிறது. பத்திரங்கள் அச்சிடப்பட்ட நமூனாவில் இருந்தால், நமூனாவின் நகல்கள் விலை பதிவாளரால் நிருணயித்தபடி வசூலிக்கப்பட வேண்டும்.

பிற்சேர்க்கை

சட்டத்தின் 15ஆம் பிரிவின்கீழும், விதி 11 (5)ஆம் பிரிவின் கீழும் பிறப்பிக்கப்பட்ட பதிவாளர் நடவடிக்கை ஆர். சி. எண் 223896/63, தேதி 25-9-1963-ல் கீழே குறிப்பிட்டுள்ளபடி, தலைமைச் சங்கமாகவும் அல்லது மத்தியச் சங்கமாகவும் சங்கங்கள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இந்த உத்தரவில் காணப்படாத ஒரு சங்கம் பிரதம சங்கம் என்ற வகுப்பின்கீழ் வரும்.

| வரிசை எண் | சங்கத்தின் பெயர் | சங்கம் சேர்க்கப் பட்டிருக்கும் வகுப்பு |
|---|---|---|
| | தலைமைச் சங்கங்கள் | |
| (1) | சென்னை மாநிலக் கூட்டுறவு வங்கி, சென்னை. | நாணயச் சங்கம் (Credit Society) |
| (2) | சென்னைக் கூட்டுறவு மத்திய நில அடைமான வங்கி, சென்னை. | ,, |
| (3) | சென்னைக் கூட்டுறவு மத்திய வீடு அடைமான வங்கி, சென்னை. | ,, |
| (4) | சென்னை மாநிலக் கூட்டுறவு விற்பனைச் சங்கம், சென்னை. | விற்பனைச் சங்கம் |
| (5) | தமிழ்நாடு கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கம், சென்னை. | உற்பத்திச் சங்கம் |
| (6) | சென்னை மாநிலக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் சம்மேளனம், சென்னை. | பக்குவப்படுத்தும் சங்கம் (Processing Society) |
| (7) | தமிழ்நாடு கூட்டுறவு யூனியன், | கூட்டுறவு யூனியன் |

| வரிசை எண் | சங்கத்தின் பெயர் | சங்கம் சேர்க்கப் பட்டிருக்கும் வகுப்பு |
|---|---|---|
| | **மத்திய சங்கங்கள்** | |
| (1) | மாநிலத்திலுள்ள எல்லாக் கூட்டுறவு மத்திய வங்கிகள் | நாணயச் சங்கம் |
| (2) | மாநிலத்திலுள்ள எல்லா மாவட்டக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் | விற்பனைச் சங்கம் |
| (3) | தஞ்சாவூர் கூட்டுறவு விற்பனைச் சம்மேளனம் | ,, |
| (4) | மாநிலத்திலுள்ள எல்லா மாவட்டக் கூட்டுறவுக் கைத்தறி நெசவாளர் சம்மேளனங்கள் | உற்பத்திச் சங்கம் |
| (5) | மாநிலத்திலுள்ள எல்லாக் கூட்டுறவு பால் வழங்கும் யூனியன்கள். | ,, |

# 7. கூட்டுறவு நில வள வங்கிகள் பற்றியச் சட்டம்

## (Law relating to Co-operative Land Development Banks)

நில வள வங்கிகள் சம்பந்தமாக தனிப்பட்ட ஒரு சட்டம் நிறை வேற்றுவதற்குக் காரணங்களும் அவசியமும் : (Need for seprate Legislation in respect of land development Banks) : விவசாயத்திற்குக் குறுகிய காலக் கடனும், மத்திய காலக்கடனும் மட்டு மன்றி, நீண்ட காலக் கடனும் தேவைப்படுகிறது. குறுகியக் காலக் கடனும் மத்திய காலக் கடனும், நடைபெறும் சாகுபடிச் செலவிற்கும், விவசாயத்திற்கு வேண்டிய வழக்கமான முதலீடு செய்வதற்கும் பயன்படுத்தப்படுகின்றன. நீண்ட காலக்கடன் பெரிய அளவில் நில அபிவிருத்திக்கும், பழைய அடைமானக்கடன் களைத் தீர்ப்பதற்கும், பழைய கடன்களைத் தீர்ப்பதற்கும், நிலம் வாங்குவதற்கும் போன்ற செலவுகளுக்குத் தேவைப்படுகிறது. கூட்டுறவு இயக்கத்தின் ஆரம்ப வருடங்களில் நிறுவப்பட்ட கிராம நாணயச் சங்கங்கள் விவசாயினுடைய நீண்ட காலக்கடன் தேவை களையுங்கூட நிறைவு செய்ய முயன்றன. ஆனால், இது உசிதமற்ற விருப்பத்தகாத ஒரு முறை என்று நாளடைவில் தெரியவந்தது. ஏனென்றால், கிராம நாணயச் சங்கங்கள் மத்தியக் கூட்டுறவு வங்கிகளிலிருந்து வாங்கும் கடன்கள் குறுகிய கால வைப்புத் தொகைகளாகவும் (Short term Deposits), மத்திய கால வைப்புத் தொகைகளாகவும் (Medium term Deposits) மத்திய வங்கி களால் திரட்டப்பட்ட நிதியிலிருந்து பெறப்பட்டவையாகும். இம் மாதிரித் திரட்டப்பட்ட குறுகிய கால, மத்திய கால வைப்புத் தொகைகள் நீண்ட கால முதலீட்டில், இயங்க முடியாமல், முடக்கி வைக்கப்படக் கூடாது. அன்னாள் சென்னை மாநிலக் கூட்டுறவுப் பதிவாளராயிருந்த திரு. எப். ஆர். எமிங்வே, ஐ. சி. எஸ்,

(F. R. Hemingway, I. C. S.,) அவர்கள், 1919ஆம் ஆண்டிலேயே, கடன் ஈட்டுப் பத்திரங்கள் (Depentures) வழங்குவதன்மூலம் நீண்ட கால நிதியைத் திரட்டும் ஒரு திட்டத்திற்கு யோசனை கூறினார்.

கிராம நாணயச் சங்கங்களுடைய உறுப்பினர்களிடமிருந்து பெற்ற வில்லங்கப்படாத அசையாச் சொத்துகளின் அடைமானங்களின் ஆதாரத்தின்பேரில் கடன் ஈட்டுப் பத்திரங்கள் வழங்கப்பட வேண்டுமென்றும், அந்தக் கடன் பத்திரங்களைக் குறுகிய காலக் கடன்கள் கொடுத்துவந்திருந்த கூட்டுறவு நிறுவனங்களே வழங்கலாமென்றும் அவர் யோசனை கூறினார், இந்தத் திட்டத்தின்படி, மாகாண வங்கி (Provincial Bank) பிரதம சங்கங்கள் தனக்கு மாற்றப்பட்ட அடைமானங்களின் ஆதாரத்தின்பேரில் கடன் பத்திரங்கள் வழங்கவேண்டும். இந்தத் திட்டத்திற்கு முக்கிய எதிர்ப்பு நீண்ட காலக் கடன் அளிப்பதும் குறுகிய காலக் கடன் கொடுக்கும் தொழிலோடு கலந்துவிடும் என்பது. மற்றொரு எதிர்ப்பு அத் திட்டத்தின்படி அடைமானங்களை மாற்றுவதும் (Transfer) திரும்ப மாற்றுவதும் (Re-transfer) நேரிடும் என்பதாகும், அதனால் சொத்து மாற்றுகைச் சட்டம் (Transfer of property Act) திருத்தப்பட்டாலொழிய, அதிகக் காலதாமதம் ஏற்பட வழியுண்டாகும். மற்றும், பிரதமச் சங்கங்கள் தங்கள் அடைமானங்களை மாவட்ட மத்திய வங்கிகளுக்கு மாற்றவேண்டும்.

மாவட்ட மத்திய வங்கிகள் இந்த அடைமானங்களை மீண்டும் மாநில வங்கிக்கு மாற்றவேண்டும். ஓர் அடைமானம் விடுதலைச் செய்யப்பட வேண்டியிருந்தால், மாநில வங்கி, மத்திய வங்கி, பிரதம சங்கம் இவை மூன்றும் விடுதலைப் பத்திரங்கள் நிறைவேற்ற வேண்டும். எனவே, இந்தத் திட்டம் கைவிடப்பட்டது. மத்திய வங்கிகளால் கடன் பத்திரங்கள் வழங்கப்பட்டு, மத்திய வங்கிகளின் தொழிலையும் (Business) பிரதமச் சங்கங்களின் தொழிலையும் இரண்டு தனிப்பட்ட இலாக்காக்களாகப் பிரித்து வைத்துக் கொள்ளவேண்டும் என்ற யோசனை அடங்கிய ஒரு திருத்தியமைக்கப்பட்ட திட்டம் வெளியிடப்பட்டது. நீண்ட காலக் கடன் தொழில், குறுகிய காலக்கடன் தொழிலோடு கலந்துவிடும் என்ற குறையை இந்தத் திட்டம் நீக்கியது. ஆனால், விவசாயிகளுக்குக் கடன் வசதியளிப்பதற்குப் பெருமளவில் நீண்ட கால நிதியைத் திரட்ட வேண்டுவது அவசியமாக இருந்தால், இந்தத் திட்டம் அமல் செய்யப்படவில்லை. மேலும், 1920ஆம் ஆண்டிலிருந்து 1929ஆம் ஆண்டுவரை கிராமக் கடன் சங்கங்களின் எண்ணிக்கை பெருமளவு அதிகரித்துக் கொண்டிருந்தது. அவற்றின் கடன்

தேவைகளை நிறைவு செய்யும் அளவிற்குப் போதிய நிதிவளம் மத்திய வங்கிகளுக்கு இல்லாமலிருந்தது. ஆகையால், வைப்புத் தொகைகளின் (Deposits) மூலம் கிடைத்த நிதியை நிறையாக்கு வதற்குச் சேர்க்கப்பட்ட நிதியாக உதவ நீண்டகால நிதியைத் பெருக்க ஒரு சரியான முறையை உருவாக்குவது அவசியமாகத் தோன்றியது. பங்குத் தொகை, துணை ஈடு (Collateral Security) இவற்றின் ஆதாரத்தின் பேரில் மாத்திரம் திரட்டப்படும் சாதாரண வைப்புத்தொகைகளைவிட, (Deposits) வில்லங்க மில்லாத நிலத்தின் அடைமான ஆதாரத்தின்பேரில் நிதி திரட்டும் திட்டம் பொதுமக்களுக்கு அதிகக் கவர்ச்சியாக இருக்குமென்றும் கருதப்பட்டது.

நீண்ட காலக் கடன்கள் கொடுப்பதற்கு நிலப் பத்திரங்கள் பரிசீலனை போன்ற சிறப்புக் கவனம் செலுத்தவேண்டிய வேலை இருப்பதால், நீண்ட காலக் கடன்கள் கொடுப்பதற்குத் தனிப் பட்ட பெரிய நிறுவனங்கள் அவசியமென்றும் கருதப்பட்டது வில்லங்கமில்லாத நிலச் சொத்துகளின் பேரில் கடன் வழங்கப் படுவதைத் தனிப்பட்ட முறையில் நிலவள வங்கிகள் ஆரம்பிக்கப் பட்டால், அவை நீண்ட கால நிதியைத் திரட்டுவதற்குப் பயன் படுமென்றும், மேலும் வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப் படையில் இயங்கும் கிராமக் கடன் சங்கங்கள் அதிகத் தொகை யுள்ள கடன்களை நிறைய நிலச் சொத்துகளை வைத்திருக்கும் ஒரு சில உறுப்பினர்களுக்குக் கொடுப்பதற்கு அனுமதிப்பது உசிதமானதல்லவென்றும் கருதப்பட்டது. எனவே, விவசாயி களின் நீண்ட காலக்கடன் தேவைகளுக்கு உதவத் தனிப்பட்ட கடன் நிறுவனங்கள் யோசிக்கப்பட்டு, 1925ஆம் ஆண்டில் இரண்டு நில அடைமான வங்கிகள் ஆரம்பிக்கப்பட்டன. இந்த வங்கிகளின் எண்ணிக்கை நாளடைவில் 1927ஆம் ஆண்டில் பத்தாக அதிகரித்தது. இந்த வங்கிகள் அரசாங்க உத்தர வாதத்தின்பேரில் இருபது வருட காலங்களுக்குக் கடன் ஈட்டுப் பத்திரங்கள் வழங்கி அதன்மூலம் திரட்டிய நிதியைக் கொண்டு உறுப்பினர்களுக்குப் பதினேழு வருட காலத்திற்கு நீண்ட காலக் கடன் அளித்தன. சில வங்கிகள் விரைவாக நிதி திரட்ட முடிந்தது. ஆனால், மற்ற வங்கிகளால் அம்மாதிரி நிதி திரட்ட முடியாமலிருந்தது.

1927-28ஆம் ஆண்டில் கூட்டுறவு பற்றிய டவுன்செந்த் குழு (Townsend Committee on Co-operation) ஒரு மத்திய நில அடைமான வங்கி நிறுவவேண்டுமென்று பரிந்துரை செய்தது. ஏனென்றால், பல சிறிய நிறுவனங்கள் கடன் பத்திரங்கள் மூலம்

நிதி திரட்டும் திட்டம், நிதி அங்காடியில் (Money Market) கடன் பத்திரங்களுக்கு வேண்டிய கௌரவமும் மக்கள் ஒப்புமையும் (Prestige and Popularity) கிடைப்பதற்குப் பொருத்தமல்லாததாக இருந்தது. 1928 ஆம் ஆண்டில் 'இந்தியாவில் விவசாயத்தைப் பற்றிய இராயல் ஆணைக் குழு' (Royal Commission on Agriculture in India) கூட, பிரதம நில அடைமான வங்கிகளுக்கு நிதி வழங்கப் படுவதற்காக ஒரு மத்திய நிறுவனத்தை அமைக்க வேண்டுமென்று சிபாரிசு செய்தது.

தனிப்பட்ட பிரதம நில அடைமான வங்கிகள் தனித்தனியாகக் கடன் பத்திரங்கள் வழங்குவது நிதி அங்காடியில் (Money market) பல சிறிய நிறுவனங்கள் ஒன்றோடொன்று போட்டியிட நேரிடுமென்றும் அவற்றைக் கண்காணிப்பது கடினமாக இருக்குமென்றும் அவற்றுக்குக் கொடுக்கப்படும் ஆதாயம் குறைந்ததாக இருக்குமென்றும் இதன் விளைவாக வட்டி விகிதம் உயர நேரிடுமென்றும் கடன் பத்திரம் வாங்குபவர்களிடையே போட்டி ஏற்பட்டு ஒரு சிறிய நிறுவனத்தின் தவறான நிருவாகத்தால் கடன் பத்திரம் வழங்கும் திட்டம் முழுமைக்கும் கெட்ட பெயரையுண்டு பண்ணும் ஆபத்து எப்பொழுதும் இருந்துவரும் என்றும் அந்த ஆணைக் குழுவினர் கருதினார்கள். டவுன்செந்த் குழு (Townsend Committee) 1927-28 ஒரு மத்திய நில அடைமான வங்கி அமைப்பது தொடர்பாகச் செய்த பரிந்துரைகளாவன :

(1) பிரதம நில அடைமான வங்கிகளையும், தனிப்பட்ட நபர்களையும், பங்குதாரர்களாகக் கொண்டு வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் மத்திய வங்கி அமைக்கப்பட வேண்டும். தனி நபர்களை மத்திய வங்கியில் பங்குதாரர்களாகச் சேர்ப்பதன் நோக்கம் அவர்கள் மூலம் மூலதனத்தைத் திரட்டுவதற்கும் வங்கியைத் திறம்பட நடத்துவதற்கு வேண்டிய தொழில் திறனும், அமைப்புத் திறனும் கிடைப்பதற்கு வகை ஏற்படுமென்பது.

(2) பங்குத் தொகையின்மேல் கொடுக்கப்படும் இலாப ஈவு (Dividend) $7\frac{1}{2}$ சதவீதத்திற்கு மேற்படக் கூடாது.

(3) கடன் வாங்கும் அளவு செலுத்தப்பட்டப் பங்குத் தொகைக்கு 25 மடங்குக்கு மேற்படக் கூடாது.

(4) கடன் பத்திரம் பெற்றிருப்பவர்களுக்கு வங்கி தன் கடமைகளைச் சரிவர நிறைவேற்றுவதை உறுதிப்படுத்துவதற்கு ஒரு பொறுப்புரிமையர் (Trustee) நியமிக்கப்பட வேண்டும்.

(5) கடன் பத்திரங்கள் மூலம் மட்டுமே திரட்டப்படும் நடைமுறை முதல் (Working Capital) வங்கியின் எல்லாச் சொத்துகளின் பேரிலும் இழைவுறுப்பற்றுப் பொறுப்பு (Floating Charge) உள்ளதாக இருக்கவேண்டும்.

(6) முதல் 5 வருட காலத்தில் வங்கியினால் வழங்கப்பட்ட கடன் பத்திரங்களின்பேரில் கொடுக்கப்பட வேண்டிய வட்டிக்கு அரசாங்கம் உத்தரவாதம் அளிக்க வேண்டும்.

(7) கடன் ஈட்டுப் பத்திரத்தின் (debentures) பொறுப்புரிமையர் பிணையங்களாகச் (Trustees Securites) செய்யப்பட வேண்டும்.

(8) கடன் ஈட்டுப் பத்திரத்தின் உயர்ந்த அளவுக் காலவரையும் கடன்களின் உயர்ந்த அளவுக் காலவரையும் 25 அல்லது 30 ஆண்டுகளாக நிருணயிக்கப்பட வேண்டும்.

(9) கடன்கள் பிரதம நில அடைமான வங்கிகளுக்கு மட்டுமே வழங்கப்பட வேண்டும்.

(10) கொடுக்கும் கடன்கள்மீது வட்டிவீதம் 7 சதவீதத்திற்கு மேற்படக்கூடாது.

(11) கடன்தீர் நிதி (Sinking fund) ஒன்றை ஏற்படுத்திஅல்லது வெளி அங்காடியில் (market) கடன் பத்திரங்களைப் பத்திரத்தில் கண்டிருக்கும் தொகைக்கு வாங்கி, அல்லது சரியான அறிவிப்பிற்குப்பிறகு சீட்டுக் குலுக்குவதன் மூலம் காலா காலத்தில் கடன் பத்திரங்களை மீட்கக் கடன் வசூல் பணத்தை உபயோகிக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

(12) தனிவரிவங்கியின் நிருவாகக் குழுவில்கடன் பத்திரம் பெற்றவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டும்.

டவுன்செந்த் குழுவின் பிரிந்துரைகளைப் பின்பற்றிப் பிரதம நில அடைமான வங்கிகளுக்குத் தேவையான நிதிகளை நீண்ட காலக் கடன் ஈட்டுப்பத்திரங்கள் வழங்குவதன் மூலம் திரட்டித் தங்கள் உறுப்பினர்களுக்குப் பிரதம வங்கிகள் நீண்ட காலக் கடன்கள் அளிக்கும்பொருட்டு அவற்றுக்கு நிதி வசதி செய்ய, 1929ஆம் ஆண்டில் சென்னை மாநிலத்திற்கென ஒரு மத்தியக் கூட்டுறவு நில அடைமான வங்கி ஆரம்பிக்கப்பட்டது.

2. 1934ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவு நில அடைமான வங்கிகள் சட்டத்தின் தனிச் சிறப்புகள் (Special features of the Madras Co-op. Land Mortgage Bank Act of 1934): டவுன்செந்த் குழுவினர் (Townsend Committee) ஒரு மத்திய நில அடைமான வங்கி அமைப்பதற்குச் சிபாரிசு செய்தபோது, நீதிமன்றங்களுக்குப் போகாமல் அடைமானச் சொத்துகளை விற்பனை செய்யும் உரிமையை அடைமான வங்கிகளுக்கு அளிப்பதற்காக, 1882ஆம் வருடத்தியச் சொத்து மாற்றுச் சட்டத்திற்குத் (Transfer of Property Act 1882) திருத்தங்களையும் யோசனையாகத் தெரிவித்தது. மத்திய நில அடைமான வங்கியின் கடன் ஈட்டுப் பத்திரங்கள், பொறுப்புரிமைப் பிணையங்களாக (Trustee Security) ஆக்கப்பட வேண்டுமென்றும் ஒரு குறித்த காலத்திற்குக் கடன் பத்திரங்களின்மேல் கொடுக்கப்பட வேண்டிய வட்டிக்கு அரசாங்கம் உத்தரவாதம் அளிக்க வேண்டுமென்றுங்கூட அக்குழுவினர் பரிந்துரை செய்திருந்தார்கள். நடைமுறையிலுள்ள பல சட்டங்களைக் கவனத்திற்கு ஈர்த்து அவற்றுக்குத் தேவைப்படும் திருத்தங்களை, யோசனைகளைக் கூறி நில அடைமான வங்கிகள் மற்றக் கூட்டுறவுக் கடன் நிறுவனங்களிலிருந்து முக்கியமான வகையில் மாறுபடுவதால் நில அடைமான வங்கிகள் பொருட்டு ஒரு தனிச் சட்டம் இயற்றுவது விரும்பத்தக்கது என்று குழுவினர் முடிவு செய்தார்கள். அப்படியே 1934ஆம் ஆண்டின் சென்னைக் கூட்டுறவு நில அடைமான வங்கிகளின் சட்டம் என்ற ஒரு தனிச் சட்டம் சென்னைச் சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. அச் சட்டத்தின் தனிச் சிறப்புகளாவன:

(i) பிரதம நில அடைமான வங்கிகளால் மாற்றம் செய்யப்பட்ட அடைமானங்கள் இதரச் சொத்துகளின் ஆதாரத்தின் பேரில் கடன் ஈட்டுப் பத்திரங்கள் வழங்க மத்திய நில அடைமான வங்கிச் சட்டத்தின் நான்காவது பிரிவு அதிகாரம் அளிக்கிறது. கடன் ஈட்டுப் பத்திரம் பெற்றவர்களுடைய நலன்களைப் பாதுகாக்க ஒரு பொறுப்புரிமையரை (Trustee) நியமிப்பதற்கு ஐந்தாவது பிரிவு ஏற்பாடு செய்கிறது. மத்திய நில அடைமான வங்கியால் வழங்கப்பட்ட கடன் ஈட்டுப் பத்திரங்களின் மீது அசலுக்கும் வட்டிக்கும் மாநில அரசாங்கம் உத்தரவாதம் அளிக்க ஆறுவது பிரிவு வகை செய்கிறது.

(ii) பிரதம நில அடைமான வங்கிக்குக் கொடுக்கப்பட வேண்டிய தவணை பாக்கிகளை வசூல் செய்வதற்கு அடை-மானம் வைக்கப்பட்ட நேரத்தில் அறுவடை ஆகாத பயிர் (Standing crops) உட்பட விளைபொருளை ஜப்திசெய்யவும் விற்பனை

செய்யவும் பதிவாளருக்குச் சட்டம் (பிரிவு 9) அதிகாரம் அளிக்கிறது.

(iii) சிவில் (Civil) சட்டமன்றங்களுடைய தலையீடு இல்லாமல் கடனுக்காக அடைமானம் வைக்கப்பட்ட சொத்தை விற்பனைக்குக் கொண்டுவர நில அடைமான வங்கிக்குச் சட்டம் வசதியளிக்கிறது.

(iv) பதிவாளரால் நியமிக்கப்பட்ட விற்பனை அதிகாரி (Sale officer) அடைமானம் வைக்கப்பட்டிருக்கும் சொத்தைப் பொது விற்பனைக்குக் கொண்டுவருவதற்கும் சட்டம் (13ஆம் பிரிவு) அதிகாரம் அளிக்கிறது.

(v) சட்டத்திலுள்ள மற்ற சரத்துகள் நில அடைமான வங்கிகள் வெற்றியுடன் செயல்படுவதற்குத் துணைபுரிகின்றன. அவையாவன:

(அ) சட்டம் நில அடைமான வங்கிகளுக்குச் சில அதிகாரங்களையும் உரிமைகளையும் வழங்கியிருக்கிறது. 26ஆம் பிரிவில் அடைமானம் வைக்கப்பட்டிருக்கும் சொத்துகளை அடைமானம் வைத்துள்ளவர்கள் குத்தகைக்கு விடுவதற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரம் ஒரு தடவையில் ஐந்து வருடங்களுக்கு மட்டுமே வரையறுக்கப்பட்டிக்கிறது.

(ஆ) 27, 28ஆம் பிரிவுகளில் நில அடைமான வங்கிகளுக்கு நில அபிவிருத்திக் கடன்கள் சட்டம், (Land Improvements Loans Act) திவால் சட்டம் (Insolvency Act) இந்த இரண்டு சட்டங்களின் சரத்துகளால் ஏற்படும் சில சிக்கல்களை விலக்குகின்றன.

(இ) அடைமானம் வைப்பவர்களுடைய முந்தைய கடன்களைத் தீர்க்கும்பொருட்டு அந்தக்கடன்கள் கொடுத்தவர்களுக்கு (Creditors) நேரிடையாகக் கடன்தொகையைப் பட்டுவாடா செய்வதற்கு நில அடைமான வங்கிகளுக்குச் சட்டம் உரிமை வழங்குகிறது. இதனால் பழைய கடன்களைத் தீர்ப்பதற்காகக் கொடுக்கப்படும் கடன்கள் சரிவர வழங்கப்பட்டு அடைமானம் வைத்தவர் தன்னுடைய பழைய கடன்களிலிருந்து மீட்கப்படுவது உறுதிசெய்யப்படுகிறது. நில அடைமான வங்கிகள் எழுத்தின் மூலம் அடைமானம் வைத்தவர்களுடைய எல்லாக்கடன் கொடுத்தவர்களையும் (Creditors) தங்களுக்குச் சேரவேண்டிய பணத்தைச் சங்கத்தின் பதிவு செய்யப்பட்ட அலுவலகத்தில் பெற்றுக்கொள்ள கேட்டுக்கொள்ளலாம் என்றும், அந்த அறிவிப்பிற்கு இணங்க பணம் பெற்றுக்கொள்ளத் தவறினால் அந்தப் பணத்தின்மேல்

வட்டியை அவர்கள் இழக்க நேரிடும் என்று 29 ஆம் பிரிவு விதிக்கிறது.

(ஈ) சட்டத்தின் கீழ் வங்கியின் நிருவாகிகள், செயலாளர், அல்லது இதர அதிகாரிகள் பத்திரங்களை நிறைவேற்றுவதற்குப் பதிவு அலுவலகத்தில் (Registration office) தங்களுடைய அலுவலகப் பொறுப்பில் தாமாகவோ அல்லது தங்களுக்குப் பதில் வேறு ஒருவர் மூலமாகவோ நேரில்வர வேண்டுமென்பது அவசியமில்லை. மற்றும் விவசாய அபிவிருத்திக்கும் அல்லது நிலங்கள் வாங்குவதற்கும் வாங்கப்படும் கடன், வயது வராதவரையும் (Minor) வாரிசையும் பந்தப்படுத்தும். ஓர் இந்துக் கூட்டுக் குடும்பத்தின் மேலாளரால் (Manager) நிறைவேற்றப்பட்ட அடைமானம் குடும்பத்தின் உறுப்பினர்களைக் கட்டுப்படுத்துமா இல்லையா என்று நிரூபிக்கும் பொறுப்பு அந்தப் பிரச்சினையை எழுப்புவர்களைச் சாரும் என்று பிரிவு 32 விதிக்கிறது.

1934ஆம் வருடத்தியச் சென்னை நில அடைமான வங்கிகள் சட்டம் 1932ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தை அகற்றவில்லை (ஒதுக்கி வைக்கவில்லை). மத்திய நில அடைமான வங்கியும் பிரதம நில அடைமான வங்கிகளும் 1932ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் கீழ்தான் பதிவு செய்யப்படவேண்டும். நில அடைமான வங்கிகள் சட்டம், 1932ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திற்கு ஒரு துணைச்சட்டம் (Supplement) தான். எனவே, நில அடைமான வங்கிகள் இந்த இரண்டு சட்டங்களுக்கும் கட்டுப்பாடுடையன. 1934ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவு நில அடைமான வங்கிகள் விதிகளைக்கூட அரசுடைமைச் சட்டத்தின் 12, 23ஆம் பிரிவுகளின் கீழ் அமைத்திருக்கிறது.

### நில அடைமான வங்கிகள் பற்றிய பிந்தியச் சட்டம் (Subsequent Legislation in respect of Land Mortgage Banks)

மத்திய நில அடைமான வங்கி அமைக்கப்பட்ட பின்னரும் நில அடைமான வங்கிகள் செயற்பாட்டைக் கட்டுப்படுத்துவதற்கு ஒரு பிரத்தியேகச் சட்டம் இயற்றிய பின்னரும், மத்திய நில அடைமான வங்கி, பிரதம நில அடைமான வங்கி இவற்றின் நடவடிக்கைகளில் ஒரு வேகம் (Spurt) உண்டாயிற்று. 30-6-1969ஆம் தேதியில் 106 பிரதம நில அடைமான வங்கிகள் இருந்தன. அவற்றுக்குக் கொடுக்கப்படவேண்டிய நிலுவையில் இருந்த கடன்தொகை சுமார் 42 கோடி ரூபாய். 1963ஆம் ஆண்டிலிருந்து பழைய கடன்களைத் தீர்க்கும் செயல்களுக்குப் பதிலாக நில

அபிவிருத்திக்காகக் கடன்கள் வழங்கும் ஒரு மாற்றம் ஏற்பட்டது. இப்பொழுது உற்பத்திக்காகவும் நில அபிவிருத்திச் செயல்களுக்காகவும் அதாவது, புதிய கிணறு வெட்டுதல், மின்சார மோட்டார், ஆயில் என்ஜின், பம்பு செட்டுகள் வாங்குதல், நீர்ப்பாய்ச்சலுக்காகக் குழாய்கள் போடுவது, நிலச்சீர்திருத்தம் செய்தல், டிராக்டர் வாங்குதல் போன்ற காரியங்களுக்குச் சுமார் 95 சதவிகிதம் கடன்கள் வழங்கப்படுகின்றன. உற்பத்திக்காகவும் நில அபிவிருத்திச் செயல்களுக்காகவும் கடன்கள் வாங்குவதன் அவசியத்தை விவசாயிகளுடைய கவனத்திற்குக் கொண்டுவருவது நில அடைமான வங்கிகளுடைய முக்கிய வேலையாகும்.

அபிவிருத்திக்காகப் பெருமளவு நீண்டகால நிதி உதவுவதாக இருப்பதால், 1969ஆம் ஆண்டில் திரு. க. சந்தானம் அவர்கள் தலைமையில் நியமிக்கப்பட்ட சென்னைக் கூட்டுறவுக் குழு, நில அடைமான வங்கிகள் நிலவள வங்கிகளாகப் பெயர் மாற்றம் செய்யப்படவேண்டுமென்று சிபாரிசு செய்திருக்கிறது. அதன் விளைவாக மத்திய நில அடைமான வங்கி, பிரதம நில அடைமான வங்கிகளின் பெயர்கள் முறையே தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கி என்றும், கூட்டுறவு பிரதம நிலவள வங்கி என்றும் மாற்றப் பட்டன. 1969-70, 1970-71ஆம் ஆண்டுகளில் தமிழ்நாட்டில் நீண்டகாலக் கடன் இயக்கம் மேற்கொண்டு ஊக்கத்தைப் பெற்றது. 1970-71ஆம் ஆண்டில், பல நடவடிக்கைகள் எடுத்ததன் பயனாகவும், கடன் அளிப்புத் (Sanction) துரிதப் படுவதற்குத் தக்க நடைமுறைகளை வகுத்ததனாலும், ஏறக்குறைய 19 கோடி ரூபாய் அளவிற்குக் கடன் வழங்குவது உயர்ந்திருக் கிறது.

1934ஆம் வருடத்திய நில அடைமான வங்கிகளின் சட்டத் திற்கு 1968ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட ஒரு திருத்தத்தின் மூலம் வில்லங்கப் பரிசீலனைக்காலம் 23 ஆண்டுகளிலிருந்து 13 ஆண்டுகளுக்குக் குறைக்கப்பட்டது. மற்றொரு சட்டத் திருத்தத் தின் மூலம், நிலவரி தொடர்பாக அரசாங்கத்தின் விதிக்கு உட் பட்டு, நில அடைமான வங்கிகளுக்கு எழுதிக் கொடுக்கப்பட்ட அடைமானங்கள் அந்தச் சொத்துகளின் மீது இருக்கும் மற்றைய எல்லா இதர உரிமைகளையும் விட நில அடைமான வங்கி களுடைய உரிமை முதன்மையாக்கப்பட்டது.

தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கிகளின் நிருவாகக் குழுக்களை விரிந்த அடிப்படையில் திருத்தியமைக்கும் நோக்கத் துடன் 1934ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கிச் சட்டத்தின்கீழ் அரசு 1970ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில்

விதிகளை (Rules) வகுத்தது. இந்த விதிகளின்படித் தமிழ்நாடு மத்தியக் கூட்டுறவு நிலவள வங்கியின் நிருவாகக் குழு பிரதம நிலவள வங்கிகளின் 45 பிரதிநிதிகளையும், கடனீட்டுப் பத்திரங்கள் (Debenture holders), வாங்கியவர்கள் சிறிய குடியானவர்கள், பட்டியலில் சேர்க்கப்பட்ட வகுப்பினர் (Schedule Castes) பட்டியலில் சேர்க்கப்பட்ட குடியினர் (Scheduled Tribes) முதலியவர்கள் சார்பில் பிரதிநிதிகளாக 10 நியமிச்கப்பட்ட உறுப்பினர்களையும் கொண்டிருக்கும். இந்த விதிகளில் நிருவாகக் குழுவிற்குத் தேர்தல் முறை, குழுவின் பதவிக் காலம் பெருந்தலைவர் (Chairman) துணைப்பெருந் தலைவர் (Vice-Chairman) தேர்தல் முறை, அவர்கள் பதவிக் காலம், வங்கியின் மகாசபையின் அதிகாரங்கள், வங்கியின் நிருவாகம் முதலியவற்றைப் பற்றி நிருணயிக்கப்பட்டுள்ளது.

மேற்சொன்ன விவரங்களிலிருந்து நில அடைமான வங்கிகளின் செயல்வகையைக் கண்காணிப்பதற்கு ஒரு தனிப்பட்ட சட்டம் மிக அவசியமாக இருந்தது என்பது தெற்றென விளங்கும். கூட்டுறவுச் சட்டக் குழுவினர் (1954), கூட்டுறவுச் சங்கங்களின் செயல்வகையைக் கண்காணிப்பதற்காக நிறைவேற்றப்பட்ட சட்டத்திலேயே நில அடைமான வங்கிகளைப் பற்றிய சரத்துகளை ஓர் அத்தியாயமாகப் புகுத்தலாம் என்ற அபிப்பிராயத்தைத் தெரிவித்திருந்தனர். அந்தக் குழுவினால் தயாரிக்கப்பட்ட மாதிரிக் கூட்டுறவுச் சங்கங்களின் மசோதாவில்கூடக் கூட்டுப் பண்ணைச் சங்கங்களுக்கு ஒரு தனி அத்தியாயம் இருப்பதுபோல கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தில் நில அடைமான வங்கிகளைக் குறித்த சரத்துகள் ஒரு தனி அத்தியாயமாக இருக்கலாம் என்றும் யோசனை கூறினார்கள். ஆனால், இந்த யோசனை விரும்பக்கூடியது அல்ல ; அது நடைமுறைக்கு ஒவ்வாதது ஆகும்.

தமிழ் நாட்டில் நில அடைமான வங்கிகள் விவசாயக் கடன் அமைப்பில் மிகவும் முக்கியமான ஒரு பிரிவாக உள்ளன. அந்தப் பிரிவு இன்னும் விரிவடையலாம். குறிப்பாக நில அபிவிருத்திக்காகக் கொடுக்கப்படும் எல்லாக் கடன்களும் நில அடைமான வங்கிகளின்மூலம்தான் கொடுக்கப்பட்டுவரும் இந்தச் சூழ்நிலையில் நில அடைமான வங்கிகளின் செயல்வகை குறித்து அதிகக் கவனம் செலுத்துவதற்கும், அவை திறம்படப் பணியாற்றுவதை எளிதாக்கும்பொருட்டுப் பல்வேறு நடவடிக்கைகளை ஏற்பாடு செய்வதற்கும், நில அடைமான வங்கிகளின் சட்டம் ஒரு துணைச் சட்டமாகத் (Supplementary Act) தொடர்ந்து இருக்கவேண்டும். உண்மையாகவே, 1971ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆதரவில் 'தமிழ்நாட்டில்

கூட்டுறவு' என்ற பொருள்பற்றி நடைபெற்ற கருத்தரங்கில் (Seminar) நில அடைமான வங்கிகளின் செயல்வகையைக் கண்காணிப்பதற்கும் நீண்ட காலக் கடன் வாங்குவதை ஒழுங்குபடுத்துவதற்கும் ஒரு தனிப்பட்ட சட்டம் தேவைப்படுகிறது என்ற கருத்து ஒப்புக்கொள்ளப்பட்டது. மேலும், நில அடைமான வங்கிகள் இல்லாத மாநிலங்களிலுங்கூட நீண்ட காலக் கடன் அமைப்பு முறையில் திறம்படப் பணியாற்றுவதற்கும் விவசாயிகளுடைய கடன் தேவைகளைச் சிறந்த முறையில் நிறைவு செய்வதற்கும் ஒரு தனிச் சட்டம் நிறைவேற்றப்படவேண்டுமென்று அந்தக் கருத்தரங்கு பரிந்துரை செய்தது.

(4) நில வள வங்கிகளுக்கு வழங்கப்பட்டிருக்கும் சிறப்புச் சலுகைகள் (Special Concessions granted to Land Development Banks

(அ) பதிவுச் சட்டத்தின்கீழ் (Law of Registration) பிரதம நில வள வங்கிகளின் உறுப்பினர்களுக்குக் கீழ்க்கண்ட சலுகைகள் அளிக்கப்பட்டுள்ளன.

(1) 5,000 ரூபாய்க்கு மேற்படாத கடன்களுக்காகப் பிரதம நில வள வங்கிகளுக்கு உறுப்பினர்கள் எழுதிக் கொடுக்கும் பத்திரங்களும் பிரதம நில வள வங்கிகளால் எழுதிக் கொடுக்கப்படும் பத்திரங்களும் பதிவு செய்வதற்காகப் பதிவுச் சட்டத்தின்கீழ் கொடுக்கவேண்டிய பதிவுக் கட்டணங்களில் பாதி குறைக்கப்பட்டிருக்கிறது.

(2) 2,000 ரூபாய்க்கு மேற்படாத தொகைகளுக்குக் கொடுக்கப்படும் கடன்கள் சம்பந்தமாக வாங்கப்படும் வில்லங்கச் சான்றுக்குக் (Encumbrance Certificate) கொடுக்கப்படவேண்டிய கட்டணங்களிலிருந்து முழு விலக்கு (full exemption) அளிக்கப்பட்டிருக்கிறது.

(3) 2,000 ரூபாய்க்கு மேற்பட்டும் 5,000 ரூபாய்க்கு மேற்படாமலுமுள்ள தொகைகளுக்குக் கொடுக்கப்படும் கடன்கள் தொடர்பாக வழங்கப்படும் வில்லங்கச் சான்றுக்குக் கொடுக்கப்படவேண்டிய கட்டணங்களில் பாதி குறைவு செய்யப்பட்டிருக்கிறது.

(4) மேலும், ஒரேகிராமத்திலுள்ள சொத்துகள் தொடர்பாக அந்தச் சொத்துகளில் உரிமை உள்ள சொந்தக்காரர்களின் எண்ணிக்கை குறித்துப் பரிசீலனை முடிவு தெரியவேண்டி செய்யப்படும் ஒவ்வொரு விண்ணப்பத்திற்கும் ஓர் ஒற்றையான (Single) கட்டணம் மாத்திரம் வாங்கப்படுகிறது.

(5) பத்திரங்களைப் பதிவு செய்வதற்கும் வில்லங்கச் சான்றுப் பத்திரங்களைப் பெறுவதற்கும் கொடுக்கப்பட வேண்டிய கட்டணங்களிலிருந்து ஹரிஜனங்களுக்குப் பொது விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

(ஆ) நில வள வங்கிகளுக்கு வழங்கப்பட்டிருக்கும் சலுகைகள் :

(i) நில அடைமான வங்கிகளின் சட்டத்தின் ஆறுவது ரிவின்பிகீழ் தமிழ்நாடு மத்தியக் கூட்டுறவு நில அடைமான வங்கியின் எல்லாக்க டனீட்டுப் பத்திரங்களின்பேரில் கொடுக்கப் படவேண்டிய அசலுக்கும் வட்டிக்கும் அரசாங்கம் உத்தரவாதம் அளித்திருக்கிறது. தற்போது ரூபாய் 125 கோடி வரைக்கும் கடனீட்டுப்ப த்திரங்களுக்கு அரசு உத்தரவாதம் அளிக்கப் பட்டிருக்கிறது.

(ii) 1934ஆம் ஆண்டில் திருத்தம் செய்யப்பட்ட 'இந்திய பொறுப்புரிமைச் சட்டத்தின்'கீழ் (Indian Trust Act) மத்திய நில அடைமான வங்கியால் வழங்கப்படும் கடனீட்டுப் பத்திரங்கள் அரசாங்க ஈட்டுப் பத்திரமாக (Government Securities) ஒப்புக் கொள்ளப்பட்டுப் பொறுப்புரிமை ஈட்டுப்பத்திரங்களின் பட்டியலில் (List of Trust Security) சேர்க்கப்பட்டிருக்கின்றன.

(iii) கடனீட்டுப் பத்திரங்களின் முக மதிப்பில் (Face value) 80 சதவீதம் வரை கடனீட்டுப் பத்திரங்களின் ஈட்டின்பேரில் உறுப்பினர் அல்லாதவர்களுக்கு (Non-Membrs) ஒரு வருட காலத் திற்கு மேற்படாமல் கடன்கள் கொடுப்பதற்குத் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும் அரசாங்கம் அனுமதி அளித்திருக்கின்றது.

(iv) நாட்டாண்மைக் கழகங்கள் (Local Bodies) தங்களுடைய வருங்கால வைப்புகளில் (Provident Funds) ஒரு பாதியையும் செஸ் பண்டு (Cess Fund) தொகைகளில் மூன்றில் ஒரு பங்கும் நில அடைமான வங்கிக் கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்வதற்கு அனுமதியளிக்கப்பட்டிருக்கிறது.

(v) கூட்டுறவு மத்திய வங்கிகள் தாங்கள் வைத்திருக்கும் மத்திய நில அடைமான வங்கி கடனீட்டுப் பத்திரங்களை அவற்றுடைய அங்காடி மதிப்பில் 80 சதவீதம் தங்களுடைய நீர்மைச் சொத்துக் (Fluid Resources) கணக்கில் சேர்த்துக்கொள்வதற்கு அனுமதியளிக்கப்பட்டிருக்கின்றன. மத்தியக் கூட்டுறவு வங்கிகள் தங்கள் சேமநிதிகளை (Reserve Funds) அந்த நிதிகளில் இருக்கும் தொகையை 50 சதவீதத்திற்கு மேற்படாத வரம்புக்கு உட்பட்டு மத்திய நில அடைமான வங்கியின் கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்வதற்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கின்றன. நகரக்

கூட்டுறவு வங்கிகளும் தங்களுடைய சேமநிதிகளை 25 சதவீதத்திற்கு மேற்படாமல் மத்திய நில அடைமான வங்கியின் கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்வதற்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கின்றன. எல்லாக் கூட்டுறவு நில அடைமான வங்கிகளும் அவை வேலை துவங்கிய தேதியிலிருந்து முதல் மூன்று ஆண்டுகளில் அவற்றின் கணக்குகளில் தணிக்கைக்காகக் கொடுக்கப்பட வேண்டிய கட்டணங்களில் இருந்து அரசு விலக்கு அளித்திருக்கிறது.

(vi) இந்திய மொழிகளில் வெளியிடப்பட்ட சென்னை ஆதீன நிலச் சட்டத்தின் கீழ் (Madras Estate Land Act) விற்பனை அறிவிப்புகள் (Sale Notices), விற்பனைப் பேரறிக்கைகள் (Proclamation of Sale), சென்னை அரசிறைப் பெறுதல், சட்டத்தின் கீழ் (Madras Revenue Recovery Act)நடவடிக்கைகள், சிவில் நீதி மன்றங்களால் (Civil Courts) செய்யப் படும் விற்பனை பேரறிக்கைகள் ஜில்லா அரசிதழ்களின் நகல்கள் (District Gazette Sheets) ஆகியவை நில அடைமான வங்கிகளுக்கு இலவசமாக வழங்கப்பட வேண்டுமென்று அரசு உத்தரவிட்டிருக்கிறது.

(vii) பிரதம நில அடைமான வங்கிகளுக்குக் கிராம நாட்டுப் படங்கள் (Village Maps) நிலவரித் திட்டப் பதிவேடுகள் (Settlement Registers) ஆகியவற்றின் நகல்கள் இலவசமாக வழங்கப்பட வேண்டுமென்றும் மத்திய நில அடைமான வங்கிக்கு ஜில்லா நாட்டுப் படங்களும் தாலுகா நாட்டுப் படங்களும் (District and Taluk Maps) இலவசமாக வழங்கப்படவேண்டுமென்றும் அரசு உத்தரவிட்டிருக்கிறது. நில அடைமான வங்கிகளின் செயலாளர் களுக்கு அந்த வங்கிகளின் உறுப்பினர்களின் சொத்து சர்வே நெம்பர் மாற்றம், இதர விவரங்கள் சம்பந்தமான தகவலை கிராம அலுவலர்கள் தெரிவிக்க வேண்டுமென்று கட்டளையிடப்பட்டிருக்கிறார்கள். மேலும், நில அடைமான வங்கிகளுக்கு அனுப்பப்படும் கடன் விண்ணப்பங்களில் குறிக்கப்பட்டிருக்கிற நிலங்களின் வருணனையும், அரசினர் ஆதீன சொத்துக் கணக்குகளில் (Revenue Estate Account) நிலங்கள் எந்த நபர்களின் பேரில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன என்பது பற்றியும் நிலவரி குத்தகைப் பாக்கிகளைப் பற்றியும் வரை படங்கள் (Sketches) சரியானவையா என்று சான்றிதழ் கொடுக்க வேண்டுமென்றும் கிராம அதிகாரிகள் கட்டளையிடப்பட்டிருக்கின்றனர்.

(viii) நில அடைமான வங்கிகள் தங்கள் சீல் வைக்கப்பட்ட பணப் பெட்டிகளைப் (sealed cash chests) பாதுகாப்பான பொறுப்புக்காகக் கருவூலங்களில் (Treasuries) வைப்பதற்கு அரசு

அனுமதி அளித்திருக்கிறது. அரசாங்க இலாக்காக்கள் பணப் பெட்டிகளை வைப்பதற்காக நிருணயிக்கப்பட்டிருக்கும் நடைமுறை (Procedure) நில அடைமான வங்கிகளின் பணப்பெட்டிகளை வைப் பதற்கும் பொருந்தும்.

(ix) நில அடைமான வங்கிகளின் மேற்பார்வையாளர்கள் (Supervisors) தாலுகா அலுவலகத்தில் இருக்கின்ற தேவைப்படும் எல்லாப் பதிவேடுகளைப் (Registers) பார்த்து அவற்றிலிருந்து எழுதப்படும் பகுதிகளை (Extracts) பொறுப்பு வாய்ந்த வருவாய்த் துறை அதிகாரிகள் (Revenue Officers) முன்னிலையில் எழுதிக் கொள்வதற்கும் அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறார்கள்.

(x) மத்திய நில அடைமான வங்கியின் கடனீட்டுப் பத்திரங்கள் மாற்றுதல் சான்றுப் பத்திரங்களின்பேரில் செலுத்தப் படவேண்டிய ஸ்டாம்புக் கட்டணங்களிலிருந்து விலக்கு அளிக்கப் பட்டிருக்கின்றது.

இரண்டாம் பாகம்

# 1. 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் தோற்றுவாய்

(1961ஆம் ஆண்டு 53ஆம் சட்டம்)

## (Preamble to the Madras Co-operative Societies Act 1961) (Madras Act 53 of 1961)

(1963ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 2ஆம் தேதியன்று அமலுக்கு வந்தது)

1. முகவுரை (Introduction)

தமிழ்நாட்டில் கூட்டுறவு இயக்கம் 1961ஆம் ஆண்டுவரை 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தினால் நிருவாகம் செய்யப்பட்டு வந்தது. 1961ஆம் ஆண்டில் இந்தச் சட்டத்தில் ஒரு பெரிய திருத்தம் செய்யப் பட்டது. இந்த நாட்டின் மாநிலங்களில் அமலிலிருந்த கூட்டுறவுச் சட்டங்கள் பெருமளவு ஒன்றுக்கொன்று மாறுபட்டு இருந்தமையால் அந்தக் கூட்டுறவுச் சட்டங்களைச் சீர்திருத்தம் செய்யவும், எளிமையாக்கவும், ஆய்வறிவுக்கு இணங்கச் செய்யவும், சாத்தியப்படுமளவிற்கு ஒரேதன்மையுள்ளதாகச் செய்யும்பொருட்டு இந்திய அரசால் 1957ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட கூட்டுறவுச் சட்டக்குழு, மாநிலங்கள் ஏற்றுக் கொள்வதற்காக ஒரு மாதிரிக் கூட்டுறவுச் சங்க மசோதாவையும், மாதிரி விதிகளையும், முக்கியமான கூட்டுறவுச் சங்கங்களுடைய மாதிரித் துணை விதிகளையும் சிபாரிசு செய்தது. இந்த மாதிரி மசோதாவில், கூட்டுறவுச் சங்கங்களில் அரசு கூட்டாளித்துவத்-திற்கும், அரசு சங்க நிருவாகிகளை நியமனம் செய்வதற்கும்,

சங்கத்தில் உறுப்பினராகச் சேருவதற்கு மறுக்கப்பட்டவர்கள் மேல்முறையீடு செய்வதற்கும், வகைசெய்யச் சரத்துகள் சேர்க்கப்பட்டிருந்தன. இந்த மாதிரி மசோதாவும், நாராயண—சாமி பிள்ளை கூட்டுறவுக் குழுவின் சிபாரிசுகளும், மற்றும் கூட்டுறவு இயக்கத்தில் ஏற்பட்ட புதிய திருப்பங்கள் காரணமாக அவசியப்பட்ட மாறுதல்களும், சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத் திருத்தத்திற்கு அடிப்படையாக இருந்தன.

1961ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட இந்தச் சட்டத்தின் சில முக்கிய சரத்துகளாவன: எல்லாச் சங்கங்களிலும் திறந்த அங்கத்துவம் (Open Membership), கடன் சங்கங்கள், விற்பனைச் சங்கங்கள், விநியோகச் சங்கங்கள் இந்தச் சங்கங்களில் தட்டுத் தடையின்றி எல்லாரும் உறுப்பினராகச் சேர உரிமை, அத்தகையச் சங்கங்களின் உறுப்பினர்களுக்குச் சங்கத்தின் சேவைகளைப் பெற உரிமை, ஊழியர்கள் சங்கத்திற்குச் சேரவேண்டிய பாக்கிகளை ஊழியர்களுடைய சம்பளத்திலிருந்து சம்பளம் பட்டுவாடா செய்பவர்கள் கட்டாயமாகக் கழித்து, அவ்வாறு பெற்ற பணத் தொகையைச் சங்கத்திற்கு சேர்ப்பிப்பது, சங்கங்களின் நிருவாகக்குழு உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பாகத்தினர் ஒவ்வோர் ஆண்டிலும் விலகுதலும், விலகின உறுப்பினர்கள் இடத்திற்குத் தேர்தல் நடத்துதலும்; ஐந்து சங்கங்களுக்கு மேற்பட்ட சங்கங்களின் நிருவாகக் குழுவில் ஒரு நபர் உறுப்பினராக இருப்பதற்குத் தடை, ஒரு சங்கத்தின் விவகாரங்களை அதனுடைய பதிவு ரத்து செய்வதற்கு முன்பே முடிவுகட்டல், சட்டத்தின் சரத்துகளில் சிலவற்றின்கீழ் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளை அல்லது தீர்ப்புகளை எதிர்த்துச் செய்யப்படும் மேல்முறையீடுகளை முடிவு செய்வதற்காக ஒரு (நீதித்துறை அதிகாரி அடங்கிய) தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றங்களை அமைத்தல் போன்றவை.

எனவே, 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டமும், 1963 ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் விதிகளும், முந்தைய கூட்டுறவுச் சட்டங்களையும், விதிகளையும்விட அதிகமாக விரிவாகவும், விளக்கமாகவும், விவரங்கள் உள்ளவையாகவும் இருக்கின்றன. கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களைப்பற்றிய ஒரு தனி அத்தியாயம் உட்படப் பல புதிய சரத்துகள் இதில் அடங்கியிருக்கின்றன. முந்தையச் சட்டத்தையும் விதிகளையும் மாற்றி, 1961ஆம் வருடத்தியச் சட்டத்திலும், அந்தச் சட்டத்தின் கீழ் அமைக்கப்பட்ட விதிகளிலும் காணப்பட்ட முக்கியச் சட்டத்திருத்தங்கள்

முன் அத்தியாயத்தில் விளக்கப்பட்டிருக்கின்றன. இந்தப் புதிய சட்டம் கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றப்பாதையில் ஒரு முன்னேற்ற நடவடிக்கையாகும். இயக்கத்தின் வளர்ச்சிக்கான பணிகளை வளர்ப்பதற்கும், இயக்கத்தை இதற்கு முன் இருந்ததைவிட விரிவான அடிப்படையில் இயங்கும்படிச் செய்வதற்கும் வகை செய்யும்பொருட்டுப் பல சரத்துகளை இந்தச் சட்டம் தன்னகத்தே கொண்டிருக்கின்றது. மேலும், கூட்டுறவுச் சங்கங்கள் சரியான தொழில் வியாபாரக் கொள்கைகளைப் பின்பற்றி நல்ல முறையில் வளர்ச்சி பெறுவதையும், அதிகாரம், பதவி அல்லது நிதிகள், தவறான முறையில் பயன்படுத்தப்படுவதைத் தடுப்பதையும் உறுதிப்படுத்தும்பொருட்டு இதர பல சரத்துகளும்கூட இந்தச் சட்டத்தில் இடம் பெற்றிருக்கின்றன. பதிவாளருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் கூடுதலான அதிகாரங்கள் கூட்டுறவுச் சங்கங்கள் தவறான பாதையில் செல்லும் போது மாத்திரம்தான் கையாளப்பட வேண்டுமே தவிர, சங்கங்களின் வளர்ச்சியை இறுகக் கட்டுப்படுத்துவதற்காக என்று கருதப்படக்கூடாது.

சட்டம், கூட்டுறவு நிறுவனங்கள், கூட்டுறவாளர்களுடைய சுதந்திரம், தலைமைநிலை, தோற்றுவிப்புத் திறன் முதலியவற்றை அழிப்பதற்காக ஏற்பட்டதல்ல. கூட்டுறவு நிறுவனங்கள் கூட்டுறவுக் கொள்கைகளின்படி நேர்மையான முறையில் நடைபெற்றுவந்தால் இந்த அதிகாரங்களைக் கையாளுவதற்கு அவசியம் ஏற்படாது. சங்கங்களுக்குப் பாதகம் விளைவிக்கும்வகையில், வேண்டுமென்று காட்டுகிற வகுப்பு உணர்ச்சி அல்லது விதிகளுக்கு மாறுபாடாகச் செயல் புரிகிற அல்லது சங்க நிதிகளைத் தவறாகப் பயன்படுத்தும் நபர்களுக்காகவும், தீய நிருவாகம் செய்பவருக்காகவும், இந்த அதிகாரங்கள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. பதிவாளர் சட்டத்தின் நடு நாயகம் என்று கூறுவது சரி அன்று. சட்டம் கூட்டுறவுச் சங்கங்களுடன் நடைமுறைத் தொடர்பு கொண்டிருக்கிறது. சட்டத்தின் நடு நாயகமாக இருப்பது கூட்டுறவுச் சங்கங்களே. கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் உறுப்பினராக இருக்கும் நபர்களுடைய நலனுக்காகப் பணியாற்றி, அப்பணியின்மூலம் நாட்டு மக்களுடைய பொருளாதார முன்னேற்றத்திற்கு ஆற்றல் வாய்ந்த ஒரு செயற்கருவியாகத் தொண்டாற்றுவதை எளிதாக்க வேண்டுமென்பதுதான் சட்டத்தின் முக்கிய நோக்கம். சட்டம் உயிர்த் துடிப்புள்ளது. அது கூட்டுறவு இயக்கம் பெரும்பாலான மக்கள் பகுதியினரைக் குறிப்பாகப் பொருளாதார வலிமையற்ற மக்கள்பகுதியினரைத் தன்வயப்படுத்தி, அவர்கள் நலனுக்காகப் பல்வேறு துறைகளில் முன்னேறிக் கொண்டு

செல்லும் போது ஏற்படும் மாறுதல்களைப் பிரதிபலிக்க வேண்டும் அதன் காரணமாகச் சட்டம் மாறுதல் அடையவேண்டும்.

## சட்டத்தின் தோற்றுவாய் (Preamble to the Act)

'சென்னை மாநிலத்தில் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றிய சட்டங்களை ஒருங்கிணைத்து வலுப்படுத்துவதற்கும், திருத்துவதற்கும், அச் சங்கங்களை அமைப்பதற்காக முன்னிலும் மேலான சரத்துகளைச் செய்வதற்கும் ஒரு சட்டம்' என்று சட்டத்தின் தோற்றுவாய் (Preamble) கூறுகிறது. இதன் நோக்கம், பொதுவான பொருளாதாரத் தேவைகளையுடைய நபர்களிடையே சிக்கனம், தன்னுதவி, பரஸ்பர உதவி வளர்ப்பதற்காகவும், அதன் மூலம் விவசாயத்திலும், தொழிலிலும் மேம்பாடு, உற்பத்தியில் மேலான முறைகள், மேலான முறையில் வியாபாரம் நடத்துதல், மேலான முறையில் வாழ்க்கை நடத்துதல் இவற்றை ஏற்படுத்துவதற்கும் கூட்டுறவுச் சங்கங்களை அமைத்து அவற்றை நடத்துவதற்கு வசதிபடுத்துவதுதான் இதன் நோக்கம்.

சட்டத்தின் தோற்றுவாய் ஒரு முன்னுரை ஆகும். அது சட்டத்தின் முக்கிய நோக்கங்களையும் கருத்துகளையும் எடுத்துக் காட்டுகின்றது. அது சட்டத்தினுடைய ஒரு பகுதியன்று. கூட்டுறவுச் சட்டக்குழுவால் தயாரிக்கப்பட்ட மாதிரி மசோதாவில் தோற்றுவாய் இல்லை. ஏனென்றால், இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் நிறைவேற்றிய பிறகு தோன்றிய சட்டங்களில் பொதுவாகத் தோற்றுவாய் இருப்பதில்லை. மசோதாவுடன் பிரசுரிக்கப்பட்ட 'நோக்கங்களும் காரணங்களும்' என்ற அறிக்கையில் பொதுவாகச் சட்டத்தின் தோற்றுவாயில் அடங்கியிருக்கும் செய்திகளைப் பற்றிய விளக்கத்தைக் காணலாம்.

1904ஆம் வருடத்தியச் (பத்தாவது) சட்டத்துடன் இந்திய அரசாங்கம் வெளியிட்ட ஒரு விளக்க அறிக்கையில் சட்டத்தின் முக்கியமான நோக்கம், எளிமையானதும் நெகிழ்ச்சியுள்ளதுமான அதன் சரத்துகளின் மூலம், கூட்டுறவு நிறுவனங்களின் அடிப்படையான கொள்கைகளை அனுசரித்து ஓர் உண்மையான இந்திய இயக்கம் தோன்றுவதற்கு வசதி செய்வதுதான் என்று கூறப்பட்டிருந்தது. 1904ஆம் சட்டத்தின் தோற்றுவாயில் விவசாயிகள், கைவினைஞர்கள், பொருள் வசதி குறைந்த நபர்கள் இவர்களிடையே சிக்கனம், தன்னுதவி, கூட்டுறவு இவற்றுக்கு ஊக்கம் அளிப்பதும் அதன் பொருட்டுக் கூட்டுறவுக் கடன் சங்கங்களை அமைப்பதற்கும் கண்காணிப்பதற்கும் வசதி செய்வது விரும்பத் தக்கது என்று கூறப்பட்டிருக்கிறது.

மத்தியச் சட்டமாகிய 1912ஆம் ஆண்டின் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் ஒரு திருத்தும் சட்டமாகும்–கூட்டுறவுச்சங்கங்களைப் பற்றியச் சட்டங்களைத் திருத்துவதற்கு ஒரு சட்டம், அந்தச் சட்டத்தின் தோற்றுவாய் முந்தையச் சட்டத்தின் வாசகத்தைப் பின்பற்றிக் கீழ்வருமாறு கூறுகிறது.

'விவசாயிகள், கைவினைஞர்கள், மற்றும் பொருள் வசதி குறைந்த நபர்களிடையே சிக்கனத்தையும், தன்னுதவியையும் வளர்ப்பதற்கும், கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்கும் மேலும் வசதி செய்யவும், அதன் பொருட்டுக் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றியச் சட்டத்தைத் திருத்துவதும் மேலும் விரும்பத்தக்க தாகையால் பின்வருமாறு சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது'.

1932ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் தோற்றுவாய் முந்தையச் சட்டங்களுடைய தோற்றுவாயைவிட பலவகைகளில் முற்போக்கானது; முன்னேற்றமானது. அது பின்வருமாறு கூறுகிறது. 'விவசாயிகளிடையேயும், மற்றும் பொதுவான பொருளாதாரத் தேவைகளுடைய இதர நபர்களிடையேயும் சிக்கனம், தன்னுதவி, பரஸ்பர உதவியை வளர்த்து, முன்னிலும் மேலான வாழ்க்கைமுறை, தொழில்முறை, உற்பத்தி முறைகளையும் ஏற்படுத்துவதற்காகவும், கூட்டுறவுச் சங்கங்கள் அமைப்பதையும் அவற்றை நடத்துவதையும் மேலும் வசதிப் படுத்துவது விரும்பத்தக்கதாகையால், அதன் பொருட்டு சென்னை மாநிலத்தில் கூட்டுறவுச் சங்கங்களைப்பற்றியச் சட்டங்களை ஒருங்கிணைத்து, திருத்துவது விரும்பத்தக்கது. ஆகையாலும் இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவதற்கு ஆளுநர் தலைவரின் முன் அங்கீகாரம் பெறப்பட்டதனாலும், கீழ்க்கண்டவாறு சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.'

1961ஆம் வருடத்திய சென்னைச் சட்டத்தின் தோற்றுவாயில் 1932ஆம் வருடத்திய முந்தையச்சட்டத்தின் தோற்றுவாயிலிருந்த கருத்துகளைவிடாமல் வைத்துக்கொண்டு, 'விவசாயத்திலும், தொழிலிலும் மேம்பாடு, மேலான உற்பத்தி தொழில் முறைகளும் மேலான வாழ்க்கை முறையும்' என்ற சொற்கள் சேர்க்கப் பட்டுள்ளன.

(3) சட்டத்தின் தோற்றுவாயின் முக்கிய அங்சங்கள் (Main Points in the Preamble) : 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் தோற்றுவாயில் கவனிக்கத்தக்க முக்கிய அம்சங்கள் பின்வருமாறு:

(i) பொதுவான பொருளாதாரத் தேவைகளுடைய நபர்களிடையே சங்கங்கள் அமைக்கப்பட வேண்டும். கூட்டுறவுச்

சங்கம் முக்கியமாக ஒரு பொருளாதார நிறுவனம்—ஒரு தொழில் நிறுவனம், தனித்தனியாக நிறைவேற்றிக்கொள்ள முடியாமலிருக்கும் தன் உறுப்பினருடைய பொருளாதாரத் தேவைகளை நிறைவேறச் செய்வதுதான் கூட்டுறவுச் சங்கத்தின் நோக்கம். 1912ஆம் வருடத்தியச் சட்டத்தின் தோற்றுவாயில் கூறப்பட்டிருந்த 'குறைந்த பொருள்வசதி உள்ள நபர்களிடையே' என்ற சொற்கள் இயக்க வளர்ச்சியை வரையறைப்படுத்துவதாகக் காணப்பட்டது. ஏனென்றால், வசதியுள்ள சில மக்களுடைய நல்வாழ்வை வளர்ப்பதற்குக்கூட கூட்டுறவுச் சங்கங்கள் தேவைப்பட்டன. உதாரணமாக, கரும்பு பயிர்செய்பவர்களுக்கு ஒரு கூட்டுறவுக் கரும்பாலையும், ஏறக்குறைய நல்ல வசதி பெற்றவர்களுக்கு ஒரு வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கமும், பருத்தி பயிர் செய்பவர்களுக்கு ஒரு கூட்டுறவு நூற்பாலையும் தேவைப்பட்டன. இந்த வகையான சங்கங்களுடைய உறுப்பினர்கள் குறைந்த பணவசதியுள்ள நபர்கள் என்று அழைக்கப்பட மாட்டார்கள். ஆகையால், 1932ஆம் வருடத்தியச் சட்டத்தில் 'குறைந்த பொருள் வசதி உள்ள நபர்கள்' என்ற சொற்களை எடுத்துவிட்டுப் 'பொதுவான பொருளாதார அக்கறை உள்ள நபர்கள்' என்ற சொற்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

இதன் பொருள் கூட்டுறவுச் சங்கங்கள் சிறிய குடியானவர்கள் கைவினைஞர்கள் மற்றும் சமுதாயத்திலுள்ள பிற வலிவற்ற பகுதியினர்களுடைய நலன்களைப் புறக்கணிக்கும் வகையில் சென்று முதலாளித்துவப் பண்பை அடையவேண்டுமென்பது அல்ல. கூட்டுறவு நிறுவனங்கள் மிக எளிய மக்களுக்கு ஆற்றவேண்டிய கடமையைப் பெருமளவு உணர்ந்து, வறுமையைப் போக்குவதற்குச் சிறப்பு முறைகளைக் கையாளக் கடமைப்பட்டிருப்பதையும் உணர வேண்டும். கூட்டுறவு இயக்கத்தின் குறிக்கோள்களில் ஒன்று இந்த நாட்டுப் பொருளாதார அமைப்பில் ஒரு புதிய சமுதாய நேர்மையை ஏற்படுத்தி, எல்லா மக்களுடைய நல்வாழ்வுக்கும் வகை செய்ய வேண்டுமென்று இருப்பதால் பொருளாதார வலிவற்ற மக்கள் பகுதியினரை இயக்கம் குறிப்பாக உயர்த்த வேண்டுமென்ற இலட்சியத்தை மறந்து விடக் கூடாது.

தங்கள் கூட்டுறவுப் பண்பை நிலைநிறுத்தியும் அவை தாங்கள் உள் நோக்கத்தில் முதலாளித்துவ மயமாக ஆகிவிடாமலும், சமுதாயத்தில் எல்லா வகுப்பினர்களுக்கும் உண்மையான சேவை புரிய வேண்டுமென்பதையும் சங்கங்களின் பொறுப்பு என உறுதிப்படுத்தும் பல சரத்துகள் சட்டத்தில் இருக்கின்றன. 1921ஆம்

ஆண்டில் சென்னை ஆளுநராக (Governor) இருந்த வெல்லிங்டன் பிரபு (Lord Wellingdon) சென்னைக் கூட்டுறவு இலாகாவால் வெளியிடப்பட்ட கூட்டுறவுக் கையேட்டிற்கு (Co-opertative manual) முகவுரை (Preface) எழுதுகையில் கூறியிருப்பது போல கூட்டுறவு இயக்கத்தின் மூலம் பலம் இல்லாதவர்கள் உயர்த்தப்பட வேண்டுமென்பது குறிக்கோளாக இருந்து வந்தது. அக் குறிக்கோள் மேலும் விரிவுபட இருக்கவேண்டும். மற்றும், 'சாதாரணத் தொழிலாளிகளும், கூலி வேலை செய்யும் வகுப்பினரும், சிறு குடியானவர்களும் பொதுவாக வட்டிக்குப் பணம் கொடுப்பவர்களிடத்தில் நிறைய கடன் வாங்கி வாழ்க்கைச் சுதந்திரமற்றிருக்கிறார்கள். கூட்டுறவுக் கொள்கைகளின் மூலமாகத்தான் அவர்களுடைய வாழ்க்கையை முன்னேறச் செய்து, நம்முடைய மிகத் தாழ்ந்த குடிமகனுக்கும் இருக்கவேண்டிய சுதந்திரமுள்ள குடி உரிமை உணர்ச்சியைக் (Sense of Free Citizenship) கொடுக்க நாம் எதிர்பார்க்க வேண்டும்' என்று அவர் கூறியுள்ளார்.

தங்களுடைய கை உழைப்புத் தவிர வேறு பொருள் வசதி ஒன்றுமில்லாத அவர்களையும், அவர்களுடைய குடும்பங்களையும் நிலத்தை உழுகின்றவர்களையும்கூடச் சங்கத்தின் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படலாம். விவசாய உற்பத்திக்காக அத்தகைய நபர்களுக்குக் கடன் கொடுத்து உதவவேண்டும். (ஆகையால், எந்தக் கருத்தைக் கொண்டு பார்த்தாலும் 'குறைந்த பொருள் வசதியுள்ள நபர்கள், என்ற சொற்களைச் சட்டத்தின் தோற்றுவாயிலிருந்து நீக்கியது நியாயமானதுதான்.) கூட்டுறவு நிறுவனம் பொருளாதாரத் தேவைகளை நிறைவு செய்வதற்கு நிறுவப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகளின்படி இயங்கவேண்டுமென்ற அடிப்படையில் சமுதாயத்தில் எல்லா வகுப்பினர்களுக்கும் குறிப்பாக பலமற்ற பகுதியினர்களுக்காகச் சேவை செய்யும் ஒரு நிறுவனமாக இருக்க வேண்டும்.

(ii) 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் தோற்றுவாயில் கூட்டுறவு நடவடிக்கையின் பயனாக விவசாயத் துறையிலும் தொழில்துறையிலும் வளர்ச்சி ஏற்படவேண்டுமென்பது குறிப்பாக வலியுறுத்தப்பட்டிருக்கிறது. இந்தியாவில் ஐந்தாண்டுத் திட்டங்களில் தொடர்ந்து விவசாய வளர்ச்சி, தொழில் வளர்ச்சி பற்றி மிகுதியாகக் கவனம் செலுத்தியிருப்பதாலும், இத்தகைய வளர்ச்சியில் கூட்டுறவு நிறுவனங்கள் எடுத்துக்கொள்ள வேண்டிய பங்கும் வலியுறுத்தப்பட்டிருப்பதால் சட்டத்தின் தோற்றுவாயில் இம்மாதிரி குறிக்கப்பட்டிருப்பது சரியானதேயாகும்.

இந்தியா ஒரு விவசாய நாடாக இருப்பதாலும், மக்களில் சுமார் 80 சதவீதம் விவசாயத்தை நேரிடையாகவோ மறைமுக மாகவோ, சார்ந்திருப்பதாலும் உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டியது இன்றியமையாதது. ஆகையாலும் விவசாய வளர்ச்சி நம்முடைய முக்கிய அக்கறையாக இருக்கவேண்டும். மக்களுக்கு வேலை வாய்ப்புக் கொடுத்து அதன்மூலம் நாட்டின் செல்வத்தைப் பெருக்குவதற்கு கூட்டுறவு அடிப்படையில் தொழில் நிறுவப்பட வேண்டுமென்றுகூட கருதப்பட்டது. தொழில்களைப் பரவலாக்க கூட்டுறவு நிறுவனங்களைப் போன்ற சிறிய நிறுவனங்கள் பெருமளவு பயனுள்ளதாக இருக்கும்.

(iii) உற்பத்தியிலும் வியாபாரத்திலும் வாழ்க்கையிலும் மேலான முறைகள்: கூட்டுறவுச் சங்கங்கள் செயல்படுவதன் மூலம் வளர்க்கப்பட வேண்டுமென்பது விரும்பப்படுகிறது. 1932ஆம் வருடத்தியச் சட்டத்தில் மேலான வாழ்க்கை முறை, மேலான வியாபார முறை, மேலான உற்பத்தி முறை வளர்க்கப்பட வேண்டுமென்பது நோக்கமாகக் கூறப்பட்டிருந்தது. 1961ஆம் ஆண்டுச் சட்டத்தின் தோற்றுவாயில் இந்த வரிசைக் கிரமம் மாற்றப்பட்டுள்ளது. உற்பத்திக்கு முதலிடம் கொடுக்கப்பட்டு இருக்கிறது. ஏனென்றால், உற்பத்திப் பெருக்கம் விவசாய உற்பத்தி, தொழில் உற்பத்தி குறிப்பாக உணவு தானிய உற்பத்திப் பெருக்கம் மேலான வாழ்க்கை முறையைத் தோற்று விக்கும்.

மேலான வியாபார முறை என்று கூறியிருப்பதன் நோக்கம் விவசாய உற்பத்தியாளர்களும் தொழில் உற்பத்தியாளர்களும் உற்பத்திப்பெருக்கத்தின் பலனை முடிந்த அளவுக்குப் பெறவேண்டு மென்பதுதான். விவசாயிகளும், குடிசைத் தொழிலாளிகளும், சிறு தொழில் உற்பத்தியாளர்களும், வியாபாரிகளாலும் தரகர் களாலும் சுரண்டப்பட்டால் உற்பத்திப் பெருக்கத்தினால் பயனை அவர்கள் அடையமாட்டார்கள். உற்பத்திப் பெருக்கத்தின் பயன் உண்மையில் உற்பத்தியாளர்களுக்குப் போய்ச் சேராது. ஆகையால், பக்குவப்படுத்தும் கூட்டுறவுச் சங்கங்கள் (Processing Co-operatives), விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள், விநியோகக் கூட்டுறவுச் சங்கங்கள் உற்பத்தியாளர்கள் உற்பத்திப் பெருக்கத்தின் பயனை அடையும்பொருட்டு நிறுவப்படுகின்றன. அதிகமாக உற்பத்தி செய்பவர்கள் தங்கள் உற்பத்திப் பொருள்களை மேலான விலைக்கு விற்பனை செய்தால், அவர் களுடைய வாழ்க்கைத்தரம் மேன்மை அடைவது உறுதி, அதாவது வீட்டு வசதிக்கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் மேலான வீட்டு வசதி

களும், கல்வி, சுகாதாரம், துப்புரவு இவற்றில் மேம்பாடும் அவர்களுக்குக் கிடைக்கிறது. மேலான வாழ்க்கை முறை உற்பத்திப் பெருக்கத்தினாலும், வியாபார இலாபத்தினாலும் மட்டும் வந்துவிடாது. அது சிக்கனம், தன் உதவி, பரஸ்பர உதவி பழக்கங்கள் போன்ற இதர காரணிகளையும் (Factors) பொறுத்திருக்கிறது. ஆகையால், இவையெல்லாம் ஒன்றோடொன்று தொடர்பு உள்ளவை. அயர்லாந்து (Ireland) நாட்டுக் கூட்டுறவு அமைப்பாளரும், பிளங்க்கெட் நிறுவனத்தின் (Plunkett Foundation) அமைப்பாளருமான ஹொரேஸ் பிளங்க்கேட் (Sir Horace Plunkett) கூட்டுறவு இயக்கத்தின் நோக்கம் 'மேலான பண்ணை முறை, மேலான வியாபாரம், மேலான வாழ்க்கைமுறை (Better Farming, Better Business, Better Living)' வளர்ப்பது என்று கூறியுள்ளார். இந்தக் கூற்று நம் நாட்டுக் கூட்டுறவு இயக்கத்திற்கும் நன்கு பொருந்தும்.

(iv) சிக்கனத்தை வளர்ப்பது: சிக்கனத்தை வளர்ப்பது கூட்டுறவின் ஒரு முக்கியக் குறிக்கோள். சிக்கனம் என்பதற்குப் பொருள் ஊதாரித்தனம் இல்லாமல் மிகக் குறைவாகச் செலவு செய்தலும், நிருவாகத்தில் வீண் அழிவின்றிப் பயன் கருதி மிச்சப் படும்வகையில் செலவிடுதலும் ஆகும். ஒரு கூட்டுறவுச் சங்கம் தன் உறுப்பினர்களுடைய பொருளாதார நிலையை வளர்ப்பதற்காகச் சில ஒழுக்கக் கொள்கைகளின் அடிப்படையில் இயங்கும் ஒரு வணிக நிறுவனம். அது உறுப்பினர்களிடையே நேர்மை, சுறுசுறுப்பு, சிக்கனம், தன் உதவி, விவேகம், காலப்படி எதையும் செய்தல் (punctuality), பரஸ்பர உதவி போன்ற பழக்கங்களை வளர்ப்பதன்மூலம் உறுப்பினர்களுடைய பொருளாதாரத் தேவைகளை நிறைவு செய்யும் ஒரு நிறுவனமாகும். பிற்காலத்தில் பயன்படுவதற்காகச் சேர்த்து வைப்பது மாத்திரம் சிக்கனமாகாது. ஊதாரித்தனமானதும் வீணானதுமான செலவுகளைத் தவிர்ப்பதுகூடச் சிக்கனம்தான். எச்சரிக்கையாகச் செலவிடுதல் எதிர்பாராத செலவுகளுக்காக அல்லது அபிவிருத்தி செயல்களுக்காக ஒருவருடைய பொருள் வளத்தைப் பாதுகாப்பதும் சிக்கனம்தான்.

நிலத்தைப் பண்படுத்தல், கிணறு வெட்டுதல், நீர்க்குழாய் (pumpset) அமைத்தல் முதலியவை போன்ற ஆக்கப் பணிகளுக்கு ஒரு விவசாயி பணம் சேர்த்து வைக்க வேண்டியிருக்கிறது. சில சமுதாயக் கடமைகளைச் செய்வதற்குச் செலவு செய்யவேண்டியது அவசியமாக இருந்தாலும் அம்மாதிரிச் செலவுகளை மிகவும் குறைத்துக் கொள்ளவேண்டும். எனவே, கூட்டுறவுச் சங்கங்

களின் நோக்கம் உறுப்பினர்கள் சங்கத்துடன் நடவடிக்கைகள் மேற்கொள்ளும்போது சிக்கனப் பழக்கங்கள் உருவாகின்றன. பணம் சேர்த்துவைக்க மக்களை ஊக்கப்படுத்துவதற்கு சிறிது கல்விப் பிரச்சாரமும், சிறிது வற்புறுத்தலும் அவசியப்படுகிறது. ஒவ்வொரு கடன் சங்கத்தில் ஒரு நபர் போட்டு வைக்கும் பங்குத் தொகை வேறு செயல்களுக்காக அது பயன்பட்டாலும் ஒரு சிக்கனக் கருவியாகக் கருதப்படுகிறது. மற்ற வகைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் இது பொருந்தும். ஒரு கூட்டுறவுப் பண்டசாலையில் உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்படும் இலாப ஈவுத் தொகைகள் பங்குத் தொகைகளுடன் சேர்க்கப்படுகின்றன. இதனால் உறுப்பினர்களுடைய பங்குத் தொகைகள் அதிகரிக்கின்றன. சேமிப்பைத் தவிரக் கூட்டுறவுச் சங்கத்தினிடமிருந்து வாங்கப்படும் கடன்கள் ஓரளவு சங்கத்தால் கட்டுப்படுத்தப் படுகிறது. மேலும், அத்தகைய சேமிப்பு உறுப்பினர்கள் ஊதாரித்தனமாகச் செலவிடுதலையும் வேறு செயல்களுக்காகச் செலவிடும் எண்ணங்களையும் குறைக்கின்றது. உறுப்பினர்களுடைய—குறிப்பாக விவசாயக் கடன் சங்க உறுப்பினர்களுடைய பொருளாதார முன்னேற்றத்திற்குச் சிக்கனம் ஓர் அடித்தளமாக இருக்கிறது.

தமிழ்நாட்டில் கூட்டுறவு நிறுவனங்களில் பெருவாரியாக இருக்கும் விவசாயக் கடன் சங்கங்களில் வைப்புத் தொகை மிகக் குறைவாக இருக்கிறது. விவசாயக் கடன் சங்கங்களின் சொந்தப் பண வசதிகள் (Internal Resources) மிகக்குறைவாக இருக்கிறது. அவற்றினுடைய வெளிக்கடன்களுக்கு 36–64 என்ற விதமுறையில் இருக்கிறது. நம்முடைய மாநிலத்தில் ஓர் உறுப்பினருடைய சராசரி வைப்புத் தொகை விவசாயக் கடன் சங்கங்களில் 65–66 ஆண்டில் ரூ. 8/- மட்டுந்தான் இருந்தது. நாடு பூராவிற்கும் சராசரி வைப்புத் தொகைகள் ரூ. 13 ஆக இருந்தது. ஒருவிதக் கட்டாயச் சேமிப்பு முறையை உறுப்பினர்களிடையே புகுத்த வேண்டியது அவசியமாக இருந்தது.

சென்னைக் கூட்டுறவுக் குழு (1969) திரு. க. சந்தானம் தலைமையில் நிறுவப்பட்டது. உறுப்பினர்களிடமிருந்து அவர்களுக்குக் கொடுக்கப்படும் கடன் தொகையில் இரண்டு சதவீதம் சிக்கன வைப்புத் தொகையாக (Thrift Deposits) வசூலிக்கப்பட வேண்டுமென்று சிபாரிசு செய்தது. இப்படி வசூல் செய்வது கடன் தொகையிலிருந்து கழித்துக் கொள்வதன் மூலம் அல்ல. கடனை உறுப்பினர் திருப்பிச் செலுத்தும் காலத்தில் வசூலிக்கப்பட வேண்டும். ஓர் உறுப்பினர் செலுத்தும் தொகைகளிலிருந்து

முதலில் சிக்கன வைப்புத் தொகைக்கு வைத்துக்கொள்ளப்பட்டு மிச்சத்தை மற்றச் செயல்களுக்கு எடுத்துக்கொள்ளப்பட வேண்டு மென்று சங்கத்தின் துணை விதிகளில் ஒரு சரத்து ஏற்படுத்த வேண்டும். சிக்கன வைப்புத் தொகை மத்திய வங்கியில் முதலீடு செய்யப்பட வேண்டும். இந்தச் சிக்கன வைப்புத் தொகைகளுக்கு ஆறு சதவீதத்திற்குக் குறையாமல் மத்திய வங்கி வட்டி வழங்க வேண்டும். சங்கமும் அதேவட்டி விகிதத்தை உறுப்பினர்களுக்கு அளிக்கவேண்டும். இந்த வட்டித் தொகை உறுப்பினர்களுடைய பாக்கிகளுக்கு வைத்துக்கொள்ளாமல் உறுப்பினர்களுக்கு ரொக்க மாகப் பட்டுவாடா செய்யப்பட வேண்டும். இவ்வாறு சந்தானம் குழு சிபாரிசு செய்திருக்கிறது.

மூன்று வருடங்களுக்கு ஒரு முறை ஓர் உறுப்பினர் தன்னுடைய சிக்கன வைப்புத் தொகையிலிருந்து 50 சதவீதத்திற்கு மேற் படாமல் திரும்பப் பெற்றுக்கொள்வதற்கு உரிமை அளிக்கப்பட வேண்டும். மற்றும் உறுப்பினர் ஆயுள் காப்பு நிறுவனத்துடன் (Life Insurance Corporation) ஆயுள் காப்பு செய்திருந்தால், அவர் கட்ட வேண்டிய ஆயுள் காப்புக் கட்டணம் (பிரிமியம்) கட்டுவதற்காகக்கூடச் சிக்கன வைப்புத் தொகையைப் பயன் படுத்தலாம். உறுப்பினர்கள் சேமிப்பு செய்வதற்குச் சில வகை யான வற்புறுத்தல் அவசியமாக இருக்கிறது.

1961-ல் சென்னை அரசால் நியமிக்கப்பட்ட 'நிறை நிதிக்குழு' (Full Finance Committee) உறுப்பினர்களிடமிருந்து புஞ்சை நிலம் ஓர் ஏக்கராவுக்கு ரூபாய் ஒன்று வீதமும் நஞ்சை நிலத்தில் ஏக்கரா ஒன்றுக்கு 50 காசு வீதமும் சிக்கன நிதிக்குக் கட்டாயமாக வசூலிக்கப்பட வேண்டுமென்று சிபாரிசு செய்தது. இந்தச் செயலுக்காகச் சங்கங்களின் துணை விதிகளில் சரத்து செய்யப் பட்டிருந்தாலும் சரத்தின்படி சிக்கன நிதிக்கு வசூல் ஒழுங்கான முறையில் செய்யப்படவில்லை. பின்னர் இது உறுப்பினர்கள் வாங்கும் கடன் தொகையில் இரண்டு சதவீதமாக நிறுத்தப் பட்டது. இந்த வசூல் கடன் பட்டுவாடா செய்யும்பொழுது கடன் தொகையிலிருந்து கழிப்பதன்மூலம் செய்யப்பட்டது. இந்தத் திட்டம் வரவேற்கப்படவில்லை. ஒரு தக்க திட்டம் யோசிக்கப்படவில்லை. சந்தானம் குழு இந்தச் செய்தியை ஆலோசனை செய்து மேற்கண்ட ஏற்பாட்டைச் சிபாரிசு செய் திருக்கிறது.

கூட்டுறவுப் பேராசிரியர் உல்ஃப் (Wolff) என்பவர் சிக்கனத்தைப்பற்றி விவரித்தபொழுது, 'சிக்கனத்தை வளர்ப்ப

துடன், வீண் செலவு செய்கிற செயலுக்குக் கடன் கொடுப்பதைக் கட்டுப்படுத்துதல் வேண்டும்' என்று கூறியிருக்கிறார்.

(v) சுய உதவியும் பரஸ்பர உதவியும் : 'ஒருவர் எல்லாருக்காகவும், எல்லாரும் ஒருவருக்காகவும்' (Each for all and all for each) என்பது ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கத்தின் கொள்கையாகும். இந்தக் கொள்கை தனிப்பட்ட நபரின் கொள்கையாகிய 'ஒவ்வொருவரும் தனக்காக' என்பதிலிருந்தும், பொதுவுடைமைக் கொள்கையாகிய (Communist doctrine) 'ஒவ்வொருவரும் எல்லாருக்காகவும் எல்லாரும் எல்லாருக்காகவும்' என்பதிலிருந்தும் வேறுபட்டது. சுய உதவி என்பது சுயநலம் என்று பொருள் படாது. ஒரு மனிதன் மற்றவர்களுக்கு உதவி செய்து தனக்கு உதவிசெய்துகொள்வது என்பதுதான் அதன் பொருள். 'பரஸ்பர உதவியின்மூலம் சுய உதவி' என்பது கூட்டுறவுச் சங்கங்களின் வழிகாட்டிக் கொள்கையாக இருக்கிறது. கூட்டுறவு மக்களைத் தன்னுதவி செய்துகொள்வதற்கு உதவுகிறது. கூட்டுறவின் கோட்பாடு அல்லது தத்துவம் (theory) ஒரு பலவீனமான, அதிகாரமற்ற தனிநபர் மற்றவர்களுடன் சேர்ந்தும், ஒழுக்க முன்னேற்றத்தாலும், பரஸ்பர ஆதரவாலும், தனக்கு வேண்டிய அளவு நல்ல வசதியுள்ளவர்களுக்கும் அல்லது பணக்காரர்களுக்கும் அதிகாரமுள்ளவர்களுக்கும் கிடைக்கும்படியான பொருளாதார நன்மைகளைப்பெற்று அதன்மூலம் தன்னுடைய இயற்கையான ஆற்றல்களுக்குப் பூராவும் தன்னை மேம்படுத்திக்கொள்ள முடியும் என்பது.

கூட்டுறவுச் சக்தியால் பொருளாதார முன்னேற்றம் பெறப்படுகிறது. கூட்டுச் செயலால் தற்சார்புடைமை வளர்க்கப்படுகிறது. மேலும், இந்தச் சக்திகளின் பின்னிய செயல் விளைவால் சாதாரண மனிதனுக்கு ஒருமேலான வளமுள்ள வாழ்க்கையைப் பெறுவதற்கு வாய்ப்பிருக்கிறது. இதைத்தான் மேலான தொழில் முறை, மேலான வேளாண்மை, மேலான வாழ்க்கை (better business, better farming, better life) என்று கூறுகிறோம். கூட்டுறவு, முதலாளித்துவத்தில் காணப்படும் தனிநபர் சுதந்திரத்தைக் கைவிடாமல் வைத்துக்கொண்டு, பொதுவுடைமை இயக்கத்தில் காணப்படும் கூட்டுச்செயலை வளர்க்கிறது. கூட்டுறவுச் சங்கம் ஒரு மக்களாட்சி நிறுவனம். அது தன் உறுப்பினர்களுடைய வளங்களை ஒன்று சேர்த்து பரஸ்பர உதவியின் மூலம் சுய உதவியை உறுதிப்படுத்தி 'ஒருவர் எல்லாருக்குமாகவும் எல்லாரும் ஒருவருக்காகவும்' என்ற கொள்கையின்பேரில் ஒற்றுமையை வளர்த்து உறுப்பினர்களுக்கும் பொதுவாக சமுதாயத்திற்கும்கூட, மிகச் சிறந்த சேவையைச் செய்கிறது.

சட்டத்தின் தோற்றுவாயில் அடங்கியிருக்கும் மேற்கூறிய கோட்பாடு, அதாவது. 'சுயவுதவி', அரசாங்க அதிகாரத்தின் கீழும் அரசாங்க உதவியின் கீழும் கூட்டுறவு வளர்ச்சிக் கொள்கைக்கு முரண்பட்டதோ அல்லது வேறுபட்டதோ அல்ல. அரசாங்க உதவி அவசியப்படுகிறது என்றால், அது சுய உதவியின் இடத்தை எடுத்துக்கொள்கிறது என்று பொருள்படாது. 1915ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட மெக்லகன் குழுவினர், 'கூட்டுறவின் நோக்கம் சேமிப்பைத் தூண்டுவது மட்டுமல்லாமல் நியாயமான நிபந்தனைகளின் பேரில் கடன்கள் வழங்குவது மாகும்.' 'கடன் வாங்குவதற்கு முன்பு சிக்கனம் இருக்க வேண்டும். ஆனால், நடைமுறையில் ஏறக்குறைய எல்லா உறுப்பினர்களும் கடன் வாங்குவதற்காகச் சேருகிறார்கள். அவர்கள் முதன் முதலில் சங்கத்தில் போட்டு வைப்பதற்குப் பணமில்லாமல் இருக்கிறார்கள். சிக்கனத்தை உண்டுபண்ணி சொந்த மூலதனத்தை வளர்ப்பதற்குச் சாதனமாகக் கட்டாயப் பிணைவைப்புத் தொகை வைப்பதற்குப் பதில், சிறு தவணைப் பங்கு மூலதனம் போட்டு வைப்பது விரும்பத்தக்கது என்று நாங்கள் கருது கிறோம்.' (மெக்லகன் குழு) கூட்டுறவில் சுய நலத்திற்கு இடமில்லை. சுய உதவி, பரஸ்பர உதவியின் அடிப்படையின் பேரில் ஒரு கூட்டுறவுணர்ச்சி, அதாவது ஒரு தனிப்பட்ட நபர் அவருடைய சொந்த அபிப்பிராயங்களையும் நலன்களையும் சங்கத்தின் பொது நலன்களுக்குக் கீழ்ப்படுத்துவது, கூட்டுறவு முறையின் வெற்றிக்கு அவசியப்படுகிறது. கூட்டுறவு, பொது வான பொருளாதாரத் தேவைகளை அடைவதற்காக, சுய உதவி பரஸ்பர உதவி உணர்வை வளர்க்கப் பாடுபடுகிறது.

4. இதர சில மாநிலங்களின் சட்டத்தின் தோற்றுவாய் (Fremble in the Acts of certain other States)

மகாராஷ்டிரம், மைசூர் போன்ற சில மாநிலங்களில் சட்டத்தின் தோற்றுவாயில் அடங்கிய கருத்துகளை இங்கே ஆராய்வது நன்று. மகாராஷ்டிரத்தில், 1960ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் தோற்றுவாய் பின்வருமாறு கூறுகிறது. 'இந்திய அரசியல் அமைப்பில் கூறப்பட்டிருக்கும் அரசாங்கக் கொள்கையின் வழிகாட்டி கோட்பாடுகளுக்கு இணங்க மகாராஷ்டிர மாநிலத்தில் கூட்டுறவு இயக்கம் ஒழுங்கான வளர்ச்சிக்கு வகை செய்யும் நோக்கத்துடன் அந்த மாநிலத்தில் கூட்டுறவுச் சங்கங்கள் பற்றியச் சட்டத்தைத் திருத்தி ஒழுங்குபடுத்துவது உசிதமாகையால் இந்தியக் குடியரசின் முதலாவது ஆண்டில் இதன் மூலம் பிறப்பிக்கப்படுகிறது'. அரசாங்கச் செயற்பாட்டுக்கொள்கை களில் (Principles of State Policy) ஒன்று 'சாதாரண மனித

னுடைய நலத்தைப் பாதிக்குமாறு செல்வத்தையும் உற்பத்திச் சாதனங்களையும் சிலரிடத்தில் குவித்து வைப்பதை உண்டுபண்ணுதவாறு பொருளாதார அமைப்பைச் செயல்படுத்துவதாகும். இந்த செயற்பாட்டை வளர்ப்பதற்கு வகை செய்யும் நிறுவன சாதனங்களில் கூட்டுறவுச் சங்கங்கள் சிறந்தவை. ஆனால், கூட்டுறவுச் சங்கங்களின் செயல் (Limitation) வரம்புக்குட்பட்டது என்பது எல்லாரும் அறிந்ததே. அவைகள் சிலவிதப் பொருளாதார நடவடிக்கைகளுக்கு மட்டுந்தான் பொருத்தமானவை. மேலும், அவைகள் சில நிபந்தனைகளிலும் சூழ்நிலையிலும் மட்டுந்தான் வெற்றிபெற முடியும். மற்றும், கூட்டுறவு முன்னதாகவே தயாரிக்கப்பட்டு மக்களுக்கு கொடுக்கக்கூடிய ஒரு பொருள் அல்ல. அது மக்களிடமிருந்தே மலர வேண்டும். மக்களுடைய சொந்த எண்ணங்கள், விருப்பங்களிலிருந்து அது எழவேண்டும்.

நாட்டில் சில மாநிலங்களில் வெற்றிகரமாக வேலை செய்யும் பல்வேறு வகைக் கூட்டுறவுச் சங்கங்கள்கூட இன்னும் பெருமளவு பணியாற்ற வேண்டியிருக்கிறது. அரசாங்க விவகார நீதிக் கொள்கைகளில் நிருணயிக்கபட்ட நோக்கங்களை நிறைவேற்றுவதற்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் ஒரு நிருணயமான பங்கு எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. நாட்டில் இன்றுள்ள திட்டமிட்டப் பொருளாதார அமைப்பில் கூட்டுறவின் இடத்தை சட்டத்தின் தோற்றுவாய் நிருணயிக்கிறது. மக்களின் நல்வாழ்வு உறுதிப்படுவதற்குரிய ஒரு புதிய சமுதாயத்தில் அரசாங்க விவகாரக் கொள்கைக்கும் திட்டத்திற்கும் கருவியாகக் கூட்டுறவுச் சங்கங்கள் செயல்பட வேண்டுமென்பதையும் தோற்றுவாய் வலியுறுத்தியுள்ளது. கெமசூர் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத் திருத்த மசோதா (1970), சர்வதேசக் கூட்டுறவுச் சம்மேளனம் 1966ஆம் ஆண்டில் ஏற்றுக்கொண்ட ஆறு கூட்டுறவுக் கொள்கைகளைக் குறிப்பாகக் கூறுகிறது. இந்தக் கொள்கைகள் முன்னமே விவரிக்கப்பட்டிருக்கின்றன.

## 2. தொடக்கக்கூறு பீடிகை

## (Introductory-Preliminary)

1. 1961ஆம் வருடத்தியச் சட்டம் அமலுக்கு வந்த தேதி (Date of the Act of 1961 Comming in to Force) : 1961ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் (பிரிவு 1ம், 2ம்) சங்கங்களின் சட்டம் (1961ஆம் வருடத்திய 53-வது சென்னைச் சட்டம்) இந்தியக் குடியரசுத்தலைவர் இசைவை மார்ச்சு மாதம் 4ஆம்தேதி பெற்றது. அது முதன் முதலாக 14-3-62 தேதிய மாநில அரசிதழில் (Fort St. George Gazette) வெளியிடப்பட்டது. இந்தச் சட்டம் 'சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம்' என்று அழைக்கப் படும். பிரிவு-1 (3) ன் கீழ், 'சட்டம், அரசு வெளியீட்டின் மூலம் எந்தத் தேதியைக் குறிப்பிடுகிறதோ, அந்தத் தேதியில் அமலுக்கு வரும்'. சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட விதிகள், 4-9-63ஆம் தேதிய அரசிதழில் வெளியிடப்பட்டு, பிரிவு 119 (3)-ன் கீழ் அவைகள் வெளியிடப்பட்ட தேதியிலிருந்து அமலுக்கு வரும். 9-9-1963 தேதியில் வெளியிடப்பட்ட அரசாங்கக் குறிப்பில், 1-(3) பிரிவின்கீழ், அரசாங்கம், சட்டம் அமலில் வரும் தேதி 1963 அக்டோபர் மாதம் 2ஆம்தேதி என்று, குறிப்பிட்டிருக்கிறது. ஆகையால், சட்டம் 1963ஆம் ஆண்டு அக்டோபர் 2ஆம் தேதி அமலில் வந்தது.

2. சட்டத்தின் விவகார எல்லை (Jurisdiction of the Act) : பிரிவு 1 (2)-ன் கீழ், சட்டத்தின் விவகார எல்லை தமிழ்நாடு மாநிலம் பூராவும் சுமார் நான்கு கோடி மக்கள் தொகையில் சுமார் மூன்று கோடி மக்கள், அதாவது மக்கள் தொகையில் 75 சதவீதம், கிராமப்புறத்தில் வசிக்கும் தமிழ்நாடு அனைத்தும் பரந்து கிடக்கிறது. தமிழ்நாட்டில் 30-6-67 ஆம் தேதியில் ஏறக் குறைய 22,488 கூட்டுறவுச் சங்கங்கள் இருந்தன. தமிழ்நாட்டில் சுமார் 14,124 கிராமங்கள் இருக்கின்றன. எல்லாக் கிராமங் களுக்கும் நாணயக் கூட்டுறவுச் சங்கங்கள் இருக்கின்றன.

30–6–1971ஆம் தேதியில் 5,929 சங்கங்கள் கிராம மட்டத்தில் இயங்கின. அவை மாவட்ட மட்டத்தில் 15 மத்தியக் கூட்டுறவு வங்கிகளுடன் இணைக்கப்பட்டிருந்தன. இந்த மத்தியக் கூட்டுறவு வங்கிகள் சென்னை நகரத்திலுள்ள தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியுடன் இணைக்கப்பட்டிருந்தன. நாணயச் சங்கங்களில் 38.54 இலட்ச உறுப்பினர்கள் இருந்தார்கள். அந்தச் சங்கங்கள் 42.77 கோடி ரூபாய் குறுகிய கால, மத்திய காலக் கடன் லேவாதேவி செய்திருக்கின்றன. 223 பிரதம நிலவள வங்கிகள் இருந்தன. அவை தாலுகா மட்டத்திலும் வட்டார மட்டத்திலும் 17.57 கோடி ரூபாய் நீண்ட காலக் கடன் லேவாதேவியுடன் இயங்கின.

பிரதம நில வள வங்கிகள் தமிழ்நாடு கூட்டுறவு மாநில நில வள வங்கியுடன் இணைக்கப்பட்டுள்ளன. விவசாய, விற்பனை, பதனப்படுத்தல் துறையில் 133 விற்பனைச் சங்கங்கள் தமிழ்நாடு கூட்டுறவு விற்பனை கூட்டிணைச் சங்கத்திற்கு இணைக்கப்பட்டிருந்தன. மேலும், 85 பதனப்படுத்தும் கூட்டுறவு நிறுவனங்கள்கூட இருந்தன. 30–6–67ஆம் தேதியில் முடியும் ஆண்டில் விற்பனைச் சங்கங்கள் 8.5 கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்களை விற்பனை செய்தன. அவை 9.5 கோடி ரூபாய் மதிப்புள்ள விவசாயத் தேவைகளையும் இதரத் தேவைகளையும் விற்றன. நுகர்வோர் கூட்டுறவு நிறுவனங்களில், 30 மொத்த நுகர்வோர் சங்கங்களும் (Whole Sale Stores) அவைகளுடன் இணைக்கப்பட்ட 452 சில்லறை விற்பனை டிப்போக்களும் இருந்தன. மற்றும் 1686 பிரதம கூட்டுறவு ஸ்டோர்ஸ் சங்கங்கள் இருந்தன. இந்த நிறுவனங்கள் நியாய விலைக்கு நுகர்வோர் சாமான்களை விநியோகம் செய்து கொண்டு வந்தன. தமிழ்நாடு மாநில நுகர்வோர் கூட்டுறவு கூட்டிணைச் சங்கம் ஒரு தலைமைச் சங்கமாகும். அது பிரதம நுகர்வோர் சங்கங்கள், மாவட்ட நுகர்வோர் சங்கங்களின் நடவடிக்கைகளை ஒருமைப்படுத்துகின்றது.

நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் விற்பனை 1966-67ஆம் ஆண்டில் 76.27 கோடி ரூபாய் அளவில் இருந்தன. 63 பிரதம வீடு அடைமானச் சங்கங்கள் இணைக்கப்பட்டு மத்திய வீடு அடைமானச் சங்கம், புதிய வீடுகள் கட்டுவதற்கும், வீடுகளை விஸ்தரிப்பது போன்ற செயல்களுக்கும் கடன் வழங்கியது. 1970–71ஆம் ஆண்டில் 1.6 கோடி ரூபாய் அளவிற்குக் கடன்கள் வழங்கப்பட்டன. பயிற்சி பெற்ற வேலைக்காரர்கள், பயிற்சி பெறாத வேலைக்காரர்கள், துணி வெளுப்பவர்கள், முடி திருத்த

தொழிலாளிகள் போன்ற பலவீன மக்கள் பகுதியினருக்கு உதவி செய்வதற்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் நிறுவப்பட்டிருக்கின்றன. மற்றும் நெசவாளர் சங்கங்கள் போன்ற பிற சங்கங்கள் இருக்கின்றன. தமிழ்நாடு மாநிலக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தில் இணைக்கப்பட்டு, 30–6–67–ல் 1,093 நெசவாளர் சங்கங்கள் இருந்தன. அவை 1966–67ஆம் ஆண்டில் 10.71 கோடி மதிப்புள்ள கைத்தறித் துணி உற்பத்தி செய்தன. 12 கூட்டுறவு நூற்பு ஆலைகளும், ஏழு கூட்டுறவு சர்க்கரை ஆலைகளும் 30-6-67ஆம் தேதியில் இருந்தன. நீலகிரி மாவட்டத்தில் 8 தேயிலைக் கூட்டுறவுத் தொழிற்சாலைகள் இருந்தன.

1960ஆம் ஆண்டில் சிறிய தொழில் கூட்டுறவுச் சங்கங்களுக்கும், சிறிய தொழில் அலுவலர்களுக்கும் நிதி உதவ மாநில தொழில் கூட்டுறவு வங்கி நிறுவப்பட்டது. நகரக் கடன்துறையில் 1,187 நகர்ப்புற வங்கி ஊழியர் சங்கங்கள், நகர்ப்புற நாணயச் சங்கங்கள் இருந்தன. அவற்றில் 30-6-67ஆம் தேதியில் ஏறக்குறைய 30 கோடி ரூபாய் அளவில் கடன்கள் நிலுவையில் இருந்தன. சுகாதாரக் கூட்டுறவுச் சங்கங்கள், கூட்டுறவு அச்சகங்கள், வெளியீட்டுச் சங்கங்கள், டாக்சி ஓட்டுனர் சங்கங்கள், மோட்டார் வண்டிக் கருவிகள் சங்கங்கள் போன்ற இதர வகைச் சங்கங்களும் இருந்தன. ஆகையால், தமிழ்நாட்டில் கூட்டுறவு இயக்கம் விரிவடைந்து, கிராம, நகரப் பொருளாதார அமைப்பில் ஒரு முக்கியமான பகுதியாக விளங்குகிறது. இந்த விரிவான வளர்ச்சியுறும் இயக்கம் 1961ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கங்கள் சட்டம், அதன் கீழ் நிருணயிக்கப்பட்ட 1963ஆம் வருடத்தியச் சென்னை கூட்டுறவுச் சங்கங்களின் விதிகள் ஆகியவற்றிற்குட்பட்டு இயங்கி வருகின்றது.

**(3) சட்டத்தில் காணப்படும் சில சொற்றொடர்களின் விளக்கங்கள் (Definitions of certain terms Contained in the Act)**

சட்டத்தின் இரண்டாவது பிரிவில், சட்டத்தில் உபயோகிக்கப்பட்ட சில சொற்தொகுதிகளுக்கு (Terms) இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. அப்படிச் செய்தால்தான் சட்டத்தினுடைய பல பிரிவுகளில் பயன்படுத்தப்பட்ட சொற்களுடைய பொருள் விளக்கமாகவும் துல்லியமாகவும் தெரிவதுடன் சட்ட ரீதியாக அவை சரியாக எந்தப் பொருளில் கையாளப்பட்டன என்பதையும் அறிய முடியும்.

**(i) உப-விதிகள் (By Laws)**: அகராதியில் காணும் விளக்கப்படி, ஒரு கார்ப்பரேஷன் அல்லது சங்கத்தின் உள்ளமைப்பையும்,

நடைமுறையையும் ஒழுங்குபடுத்துவதற்காகச் செய்யப்பட்ட நிலை நடைமுறை நியாயமானது (Standing Rule of a Corporation) உப விதி எனப்படும். அது நிறுவனத்தின் அமைப்புத் திட்டத்தின் சரத்துக்கு வேறுபட்டு அதைவிட விரிவானதாகவும் உடனே மாற்றப்படக்கூடியதாகவும் இருக்கிறது.

உப-விதிகள் ஒரு கம்பெனியின் நடைமுறை விதிகளை (Articles of Association of Companies) ஒத்திருக்கிறது. அவை ஒரு சங்கத்தின் நோக்கங்களைக் கூறி அதனுடைய நடவடிக்கைகளையும் விளக்கிக் கட்டுப்படுத்துகின்றன. ஒரு சங்கத்தின் உப விதிகள் அதனுடைய பதிவுக்கு முன்பு, சங்கத்தைத் தோற்றுவிப்பவர்களால் (Promoters) ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. உண்மையாகவே, சட்டத்தின் கீழ் ஒரு கூட்டுறவுச் சங்கமாகப் பதிவு செய்துகொள்வதற்காகச் சென்னைக் கூட்டுறவுச் சங்க விதிகளின் (1963) விதியில் நிருணயிக்கப்பட்ட விண்ணப்பத்துடன், விண்ணப்பதாரர்களால் கையெழுத்திடப்பட்ட வரைவு உப விதிகளின் (Draft by laws) ஒரு நகல் அனுப்பப்பட வேண்டும். சங்கமும், அதன் உப-விதிகளும், பின்னர் பதிவாளரால் பதிவு செய்யப்படுகின்றன (பிரிவு 9 (1)). ஒரு சங்கத்தின் உப விதிகளை, அதன் மகாசபை தேவை என்று கருதும்பொழுது, மாற்றலாம், திருத்தலாம், நீக்கலாம்.

சட்டநிலை பெறுவதற்கு உப-விதிகள் பதிவாளரால் பதிவு செய்யப்பட வேண்டும் (பிரிவு 9 (1), அதேமாதிரி, உப-விதி திருத்தங்களும் பதிவு செய்யப்படவேண்டும். (பிரிவு 11 (1)) அவை பதிவு செய்த தேதியிலிருந்தாவது உப-விதிகளில் குறிக்கப்பட்ட தேதியிலிருந்தாவது அமலுக்கு வரும் (பிரிவு 11 (6)). மாதிரி உப-விதிகள் (Model by laws) பதிவாளரால் பலவிதச் சங்கங்களுக்கு, அதாவது கடன் சங்கங்கள், விற்பனைச் சங்கங்கள் நகர வங்கிகள், மத்திய வங்கிகள், மேற்பார்வை ஒன்றியங்கள், வீட்டுவசதிச் சங்கங்கள், நுகர்வோர் சங்கங்கள், கைத்தறி நெசவாளர் சங்கங்கள், விவசாயப் பண்ணைச் சங்கங்கள் முதலியவற்றிற்கு நிருணயிக்கப்பட்டிருக்கின்றன.

உள்ளூர் நிலைமைக்கும், சூழ்நிலைக்கும் ஏற்றவாறு தக்க மாறுதல்களுடன் அவை சங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. உபவிதிகளை உருவாக்கச் சங்கத்திற்குச் சட்டம் அதிகாரம் கொடுக்கவில்லை. 119 (1) பிரிவின்கீழ், விதிகளைச் (Rules) செய்வதற்கு அரசாங்கத்திற்குத்தான் அதிகாரம் உண்டு. (119) பகுதி (2) பிரிவின்கீழ், விதிகள், ஒரு சங்கம் எந்த விஷயத்தில் உப-விதிகளைச்

செய்யலாம் அல்லது செய்யவேண்டும் என்பதையும், உப-விதிகளைச் செய்வதற்கும், மாற்றுவதற்கும், விலக்குவதற்கும் பின்பற்ற வேண்டிய வழி முறைகளையும், அம்மாதிரி உப-விதிகளைச் செய்வதற்கும் மாற்றுவதற்கும் அல்லது விலக்குவதற்கும் முன் நிறைவு செய்யவேண்டிய நிபந்தனைகளையும், நிருணயிக்கலாம். 4 (1) விதி, உப-விதிகளின் பொருளை நிருணயிக்கிறது. 4 (2) விதி, உப-விதிகள், சங்கத்தினுடைய அமைப்பு, செயல்பாடு குறித்த பிற செய்திகளைப் பற்றியும், தேவைப்படுமளவுக்கு அதனுடைய தொழில் நிருவாகத்தைப் பற்றியும் இருக்கலாம் என்று கூறுகிறது. சங்கங்கள், சட்டத்திலும், விதிகளிலுமுள்ள சரத்துகளுக்கு இணங்கும்படிச் சில உப-விதிகளை ஒப்புக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றன. ஆனல், சில முக்கியமற்ற செய்திகள் குறித்துச் சங்கங்கள் ஓரளவுக்குச் சுதந்திரத்துடன் உப-விதிகளை உள்ளூர் நிலைமைக்கும் தேவைக்கும் பொருந்துமாறு அமைத்துக் கொள்ளலாம்.

எனவே, சில உப விதிகள் கட்டாயமானவை; உப-விதிகள் விருப்பத்தைப் பொறுத்தவை. எப்படி இருப்பினும், உப-விதி சட்டத்திற்கு அல்லது விதிகளுக்கு அல்லது கூட்டுறவுக் கொள்கைகளுக்கு முரண்பட்டிருக்கக் கூடாது (பிரிவு 9 (1), அப்படி இருந்தால் அது செல்லத்தக்கதல்ல. ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உப-விதிகள் அதனுடைய உறுப்பினர்களைக் கட்டுப்படுத்தும். உப-விதிகள் அமலில் இருக்கும்வரை எல்லா உறுப்பினர்களும் அவற்றுக்கு இணங்கி நடந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார்கள். எனினும், உப-விதிகள் சட்டச் சரத்தாகாது. ஆனல், சட்டத்துடனும் விதிகளுடனும் உப-விதிகள் சேர்ந்து உறுப்பினர்களைக் கட்டுப்படுத்தும் வகையில் சட்டம் வலிமை வாய்ந்ததும். உப-விதிகளின் தன்மையைப்பற்றியும், அவற்றின் நோக்கத்தைப் பற்றியும் கூட்டுறவுச் சட்டக் குழுவினர் பின்வருமாறு விவரித்திருக்கின்றனர். 'ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உப-விதிகள் கூட்டுறவுச் சட்டத்தினுடனும் கூட்டுறவு விதிகளுடனும் சேர்ந்து சங்கத்தின் இயக்கத்திற்காக அவசியமுள்ள சட்டப்படியான ஓர் அமைப்பை (Legal frame work) ஏற்படுத்துகின்றன. உப-விதிகளின் உத்தேசம், சங்கத்தின் நோக்கங்களை நிருணயிப்பதும், அதன் கடமைகளை (Functions) விளக்கிக்காட்டுவது மன்றி, அதன் செயல்பாட்டைச் சட்டத்திற்கும் விதிகளுக்குமிணங்க முறைபடுத்துவதே. ஒரு கூட்டுறவுச் சங்கத்தால் தொகுக்கப்பட்டு அவ்வப்போது அதனுல் திருத்தப்பட்டாலும் அவை பதிவாளரால் பதிவு செய்யப்பட வேண்டும். எனவே, உப-விதிகள் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் சட்ட அடிப்படையின் ஒருங்கிணைந்த ஒரு பகுதியாக இருந்து அந்தச் சங்கம் கூட்டுறவுச்

சட்டத்திற்கும் கொள்கைகளுக்குமொத்தவாறு செயல்படுவதை உறுதிப்படுத்த உத்தேசிக்கப்படுகின்றன'.

உப-விதிகள் சங்கமும் அதனுடைய உறுப்பினர்களும் இயங்குவதற்கு ஒருவித சட்ட ரீதியான அமைப்பைக் (Legal frame work) கொடுக்கிறது. உப-விதிகளை நிருணயித்த பேரவையும்கூட அவற்றிற்குக் கட்டுப்பட்டது. அவை சீரமைக்கப்படாமலும் அல்லது திருத்தப்படாமலுமிருக்கும்வரை, பேரவை அவற்றைப் புறக்கணிக்க முடியாது. உதாரணமாக, உப-விதிகளின்கீழ், அலுவலரை வேலைக்கு அமர்த்தும் அதிகாரம் சங்கத்தின் தலைவருக்கோ அல்லது நிருவாகக்குழுவிற்கோ குறிப்பாகக் கொடுத்திருக்கும்போது, பேரவைச் சங்கத்தின் தலைவர் அல்லது நிருவாகக் குழுவினரால் செய்யப்பட்ட அலுவலில் தலையிடக் கூடாது. தலைவர் அல்லது நிருவாகக் குழுவின் தொழிலை அது வன்முறை வழி பறிக்கமுடியாது.

(ii) நிருவாகக் குழு (Committee) : சட்டத்தின்கீழ் குழு (Committee) என்ற சொல்லுக்கு ஒரு சங்கத்தினுடைய அலுவல்கள் அல்லது விவகாரங்களின் நிருவாகம் ஒப்படைக்கப்பட்டுள்ள ஆட்சிக் குழு என்று பொருள். அம்மாதிரி ஒரு குழு சங்கத்தின் பேரவையால் சட்டத்தின் 27 (1) பிரிவின்கீழ் அதனுடைய உப-விதிகளின்படி அமைக்கப்படுகிறது. குழு என்ற சொல் சட்டத்தின்கீழ் நிருவாகக் குழு என்ற தனிப் பொருளில் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. அதைச் சாதாரண மொழியில் உபயோகிக்கப்படும் குழு என்ற சொல்லுடன் கலந்துவிடக் கூடாது. சாதாரண மொழியில் குழு என்றால் ஏதாவது ஒரு செய்தியை ஆலோசிக்க அல்லது நிருவகிக்க அமைக்கப்பட்ட நபர்கள் என்று பொருள். பழக்கவழக்கத்தில், குழுவைத் தவிர உப-விதிகளின்கீழ் ஒப்புவிக்கப்பட்ட சில வேலையைச் செய்வதற்கு இதர சிறிய குழுக்கள் (உட்குழுக்கள்) அமைக்கப்படுகின்றன. அம்மாதிரிக் குழுக்கள் பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகின்றன. உதாரணமாக, நிறைவேற்றும் குழு அல்லது செயற்குழு (Executive Committee), மேற்பார்வைக் குழு (Supervision Committee), கடன் குழு (Loans Committee) முதலியன. உட்குழுக்கள் பிரதான நிருவாகக் குழுவால் தேர்ந்தெடுக்கப்படுகின்றன (31 விதி).

உண்மையாகவே, சட்டத்தில் சங்கத்தின் ஓர் அலுவலர் (Officer) என்றால், நிருவாகக் குழுவின் உறுப்பினரையும் சேர்க்கும் வண்ணம், இலக்கணம் கூறப்படுகிறது. இம் மாதிரி சிறிய குழுக்கள்கூட சட்ட அதிகாரம் வாய்ந்தவை. சில குறிப்பிட்ட

செயல்களுக்காக அவை செயல்படுகின்றன. பிரதான நிருவாகக் குழுவிற்கும் சிறு குழுக்களுக்குமிடையே குழப்பத்தைத் தவிர்க்கும் பொருட்டும், விஷயங்களை விளக்கமாகக் கூறும் பொருட்டும், சட்டத்தின் கீழ் அமைக்கப்பட்ட நிருவாக 'இயக்குநர் குழு' (Board of Directors) என்று அழைத்து சங்கத்தினுடைய உப-விதிகளின்கீழ், குறிப்பிட்ட செயல்களுக்காக, ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட சிறு குழுக்களை அமைக்கச் சங்கத்திற்கு விட்டுவிடலாம். இந்தச் சிறு குழுக்கள் அல்லது உப குழுக்கள் பிரதான நிருவாகக்குழுவிலிருந்து அமைக்கப்பட்டு, சங்கத்தின் அலுவல்களில் பிரதான நிருவாகக் குழுவால் ஒப்படைக்கப்பட்ட சில செயல்களைக் கவனிக்கும்.

விவசாயக்கடன் சங்கங்களின் நிருவாகக்குழு 'பஞ்சாயத்து' என்று அழைக்கப்படுகிறது. 'பஞ்சாயத்து' என்றால் ஐந்து நபர்கள் என்று பொருள். இங்கேயும்கூட, நபர்களின் எண்ணிக்கை ஐந்துக்கு மேற்பட்டாலும் நிருவாகக்குழு 'பஞ்சாயத்து' என்றுதான் அழைக்கப்படுகிறது. 'பஞ்சாயத்து' என்ற சொல்லை கிராமப் பஞ்சாயத்துடன் குழப்பிக்கொள்ள நேரலாம். மற்றவகைச் சங்கங்களைப் பொருத்தமட்டில், குழு என்பது இயக்குநர் குழு (Board of Directors) என்று கூறப்படுகிறது. நிருவாகக்குழு (Board of Managment) என்ற சொற்றொடர்கூட, மாநிலக் கூட்டுறவு வங்கிபோன்ற சில கூட்டுறவு நிறுவனங்களில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. சந்தானம் குழு (1969) எல்லாவகைச் சங்கங்களுடைய குழுவைக் குறிப்பிடுவதற்கு ஒரு பொது சொற்றொடர் விரும்பத்தக்கது என்று கருதியது. ஆகையால், அந்தக் குழு எல்லாவகைச் சங்கங்களின் குழுக்களுக்கும், (பிரதமச் சங்கங்களும் இணைப்புச் சங்கங்களும்) இயக்குநர் குழு (Board of Directors) என்ற சொற்றொடர் பயன்படுத்தப்படவேண்டும் என்றும் அதுதான் மிகப் பொருத்தமுள்ளது என்றும் பரிந்துரை செய்திருக்கிறது. இதற்காகச் சட்டத்தை அல்லது விதிகளைத் திருத்தம் செய்யவேண்டியது அவசியமில்லை. பதிவாளர் இது விஷயமாகச் சங்கங்களைத் தங்கள் உப விதிகளில் வேண்டிய திருத்தங்களைச் செய்துகொள்வதற்கு அறிவுரை கூறலாம்.

குழுவினர் எண்ணிக்கை (Strength of the Committee): சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டம் (1961), ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் குழுவின் எண்ணிக்கையைப்பற்றி சில மேலை நாடுகளைப் போன்று, உச்சவரம்பையோ அல்லது குறைந்த பட்ச அளவையோ நிருணயிக்கவில்லை. ஒரு சங்கத்தின் உப-விதிகளைப் பதிவு செய்யும்

பொழுது பதிவாளர் அந்தச் சங்கத்திற்கு ஒத்த குழுவின் எண்ணிக்கையைத் தீர்மானிக்க வேண்டும். இது ஒரு சங்கத்தின் விவகார எல்லையையும் எதிர்பார்க்கப்பட்ட அங்கத்துவத்தையும் பொறுத்திருக்கிறது. கூட்டுறவு மத்திய வங்கிகள், மாநிலக் கூட்டுறவு நிறுவனங்கள், மத்திய நில வள வங்கி முதலிய சங்கங்கள் போன்ற இணைப்புச் சங்கங்களைப் பொருத்தமட்டில், நிருவாகக் குழுவில் பலவகைப் பிரதம சங்கங்களுக்கும், இதர நலமிகளுக்கும் கொடுக்க வேண்டிய பிரதிநிதித்துவத்தையும் பதிவாளர் ஆலோசிக்க வேண்டும். பலவகைக் கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தயாரிக்கப்பட்ட மாதிரி உப-விதிகளில் நிருவாகக் குழுவின் எண்ணிக்கையைப் பற்றிக் குறிப்புகள் இருக்கின்றன.

நடைமுறையில், குழுவின் எண்ணிக்கை பிரதமச்சங்கத்தைப் பொருத்தமட்டில், ஐந்திலிருந்து பதினைந்துவரை இருக்கிறது. ஆனால், டி. யு. சி. எஸ். (T. U. C. S.) போன்ற கூட்டுறவு நிறுவனங்கள் இதற்கு விதிவிலக்கு. டி. யு. சி. எஸ். (T. U. C, S.) நிருவாகக் குழுவின் எண்ணிக்கை 60 வரை போகிறது. ஓர் இணைப்பு சங்கத்தில் நிருவாகக் குழுவின் எண்ணிக்கை 9-ல் இருந்து 32 வரை இருக்கிறது. சந்தானம் குழு நிருவாகக் குழுவின் எண்ணிக்கைக்குச் சட்ட ரீதியான வரம்பு வேண்டுமென்றும், சங்கத்திற்குத் தன்னுடைய உப-விதியில் நிருவாகக் குழுவின் எண்ணிக்கையை அமைப்பதற்குச் சுதந்திரமிருக்க வேண்டுமென்றும் கருதியது. ஓரிஸா மாநிலக் கூட்டுறவுச் சங்கச்சட்டம் (1962), அதனுடைய 28ஆம் பிரிவில், ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவின் எண்ணிக்கை ஐந்துக்குக் கீழ்ப்படாமலும் பதினொன்றுக்கு மேற்படாமலும் இருக்கவேண்டுமென்று நிருணயிக்கிறது. ஒரு நிருவாகக் குழுவின் குறைந்த பட்ச எண்ணிக்கையானது அதில் பலவித அபிப்பிராயங்களுக்கும், அனுபவங்களுக்கும், பிரதிநிதித்துவத்திற்கும் இடம் தந்து ஆய்ந்தறிந்த முடிவுகளைச் செய்வதற்கு வகை செய்யும் வாய்ப்பு கொடுக்கும் வகையில் இருக்கவேண்டும். ஒரு நிருவாகக் குழுவின் உச்ச அளவானது, தாமதமின்றி முடிவு எடுக்கவும் துரிதமாகத் தொழில் செய்வதற்கும் வகைசெய்யும் முறையில் இருக்கவேண்டும். பொதுவாக, பெரிய சங்கங்கள் பிரதமச் சங்கங்களும், இணைப்புச் சங்கங்களும் மிகப்பெரிய நிருவாகக் குழுவை வைத்துக்கொள்ளுகின்றன. ஒரு குழுவின் எண்ணிக்கை மிகப்பெரிதாக இருந்தால், முடிவுகள் எடுப்பது மிகத் தாமதப் படுகிறது. மேலும், அது கூட்டுக்களுக்கு வாய்ப்பு அளிக்கிறது. ஆகையால், சந்தானம் குழு பிரதம சங்கங்கள் பொருத்தவரையில் குறைந்த அளவு 7 ஆகவும் உயர்ந்த அளவு 15ஆகவும், தலைமைச் சங்கங்களும் மத்திய சங்கங்களும் பொருத்தமட்டில் குறைந்த

அளவு 9ஆகவும் உயர்ந்த அளவு 21 ஆகவுமாக ஒரு நிருவாகக் குழுவின் எண்ணிக்கையை சட்ட ரீதியாக நிருணயிக்கலாம் என்று சிபாரிசுசெய்தது. குறைந்த அளவு, உயர்ந்த அளவு எண்ணிக்கையில் நியமிக்கப்பட்ட இயக்குநர்களும் (Naminated Directors) அடங்கியிருப்பார்கள்.

சந்தானம் குழு, சட்டத்தின் 27ஆம் பிரிவுக்குக் கீழ்க்கண்ட ஒரு வரைவுத் திருத்தத்தைக்கூட (Draft Amendment) யோசனை கூறியிருக்கிறது. ஒரு பிரதமச் சங்கம் என்று பாகுபாடு செய்யப்பட்ட ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் நிருவாகக்குழு 7-க்குக் குறையாமலும், 15 உறுப்பினர்களுக்கு மேற்படாமலும் இருக்கவேண்டும்; ஒரு மத்திய அல்லது தலைமைச் சங்கம் என்று பாகுபாடு செய்யப்பட்ட ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் நிருவாகக்குழு 9-க்குக் குறையாமலும், 21 உறுப்பினர்களுக்கு மேற்படாமலும் இருக்கவேண்டும். தமிழ்நாடு கூட்டுறவுச் சட்டத்தில் (திருத்தப) (1970) பிரிவு 73 (அ)வில் 'போர்ட்' (Board) என்றால், மாநிலக்கூட்டுறவு வங்கியின் இயக்குநர் அவை என்று பொருள் என்றும் ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கியின்பற்றிய 'நிருவாகக் குழு' (Committee) என்றால் அதனுடைய அலுவல்களின் நிருவாகம் ஒப்படைக்கப்பட்ட இயக்குநர் குழு (Board of Directors) அல்லது நிருவாகக் குழு (Board of Management) அல்லது ஆட்சிக்குழு (Governing Body) என்றும் பொருளாகும். இவை மாநிலக் கூட்டுறவு வங்கிக்கும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும் பொருத்தமுள்ள தனிச் சிறப்பான இலக்கணமாகும்.

1970ஆம் வருடம் நவம்பர் மாதம் 10ஆம் தேதியிலிருந்து அமலுக்கு வந்த 1970ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில் (திருத்தம்) அத்தியாயம்ஒன்பதில், 73-(ஆ) ஆக ஒரு புதிய பிரிவு சேர்க்கப்பட்டிருக்கிறது. இது மாநிலக் கூட்டுறவு வங்கியையும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளையும் மட்டும் பற்றியது. 73 (ஆ) பிரிவின் சரத்துகளின்படியும், சட்டத்தில் வகுக்கப்பட்ட 85 (ஆ) விதியின்படியும், மாநில கூட்டுறவு வங்கியின் நிருவாகம், எல்லா மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் தலைவர்களையும் (Presidents or Chairman) 85 (ஆ) விதியின் பின்னிணைப்பு 2-ல் குறிக்கப்பட்ட 7 தலைமைச் சங்கங்களுடைய தலைவர்களால் அவர்களுக்குள் தேர்ந்தெடுக்கப்பட்ட மூன்று உறுப்பினர்களும், பின்னிணைப்பு 2-ல் குறிக்கப்பட்ட தலைமைச் சங்கம் ஒன்றிலும் இணைக்கப் படாத பதிவு பெற்ற சங்கங்களுடைய உறுப்பினர்களிலிருந்து பதிவாளரால் நியமிக்கப்பட்ட மூன்று உறுப்பினர்களும் இணைப் பதிவாளரும் (Additional Registrar Credit) (கடன்) அடங்கியுள்ள

ஒரு குழுவிடத்தில் கொடுக்கப்பட வேண்டும். திருத்தத்தின் பயன் (முடிவு) என்னவென்றால், மாநிலக் கூட்டுறவு வங்கியின் இயக்குநர் குழுவின் எண்ணிக்கை மத்திய வங்கிகளின் 16 பிரதிநிதிகளும், மூன்று நியமிக்கப்பட்ட இயக்குநர்களும், இணைப்பதிவாளரும், ஆக மொத்தம் 23 உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்கும்.

தமிழ்நாடு நிலவள வங்கியின் நிருவாகக் குழுவின் எண்ணிக்கை (Board of Management) இன்னும் இதைவிடப் பெரிது. 1934ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கிகளின் சட்டத்தின்கீழ் அண்மையில் விதிகள் அமைக்கப் பட்டுள்ளன. இந்த விதிகள் 18-3-1870 தேதிய விசேஷ அரசிதழில் தமிழ்நாடு அரசாங்கத்தால் வெளியிடப்பட்டுள்ளன. 3ஆம் விதிப்படி மாநில நில வள வங்கியின் நிருவாகம், 3 (அ) விதியின் ஷெடியூலில் குறிக்கப்பட்டுள்ளவாறு, மாவட்டங்களில் உள்ள பிரதம நிலவள வங்கிகளின் தலைவர்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினர்களும், பதிவாளரால் நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களும், அதாவது 3 கடன் ஈட்டுப் பத்திரங்கள் பெற்ற வர்கள், 3 சிறு குடியானவர்கள், அட்டவணை சாதிகளைச் (Scheduled Castes) சேர்ந்த மூவர் அட்டவணைக் குடியினரைச் (Scheduled Tribes) சேர்ந்த ஒருவர், இணைப் பதிவாளர் (கடன்), ஆகியோரை உறுப்பினர்களாகக் கொண்ட ஒரு குழு (Board) வசம் இருக்க வேண்டும். மேலே குறிக்கப்பட்ட ஷெடியூலில் மொத்தம் 45 இடங்கள் மாவட்ட வாரியாக ஒதுக்கப்பட்டிருக் கின்றன.

ஒவ்வொரு மாவட்டத்திற்கான எண்ணிக்கை அந்த மாவட்டத்திலுள்ள பிரதம நிலவள வங்கிகளின் எண்ணிக்கையைப் பொறுத்து மாறுபடும். 3ஆம் விதியின் விளைவு என்னவென்றால், மாநில நிலவள வங்கியின் நிருவாகக் குழுவின் எண்ணிக்கையில் பிரதம நிலவள வங்கிகளின் 45 பிரதிநிதிகளும், பல்வேறு நலமிகளின் பிரதிநிதிகளாக 10 நியமிக்கப்பட்ட இயக்குநர் களும் ஓர் அலுவல் வழி உறுப்பினரும் (Ex-officio Member) ஆக 56 நபர்கள் இருப்பார்கள். மாநில நில வள வங்கியினுடைய குழுவின் வண்ணிக்கை ஓர் புது உச்சியை அடைந்திருக்கிறது. இது நன்மை நல்குமா என்பதைக் காலந்தான் சொல்லவேண்டும்.

அவ்வண்ணமே, 73 (ஆ) பிரிவின்கீழ், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் விஷயத்தில், நிருவாகக் குழு, சட்டத்தின் விதிகளில் நிருணயிக்கப்பட்ட எண்ணிக்கையுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையும், நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களையும், ஒரு பதவி வழி (Ex-officio) உறுப்பினரையும், கொண்டதாக

இருக்கவேண்டும். விதி 85 G–ன்கீழ், ஒரு மத்திய வங்கியின் நிருவாகக் குழு, விதி 85 G-ன் அட்டவணை III–ல் (Schedule III) நிருணயிக்கப்பட்டபடி, கூட்டுறவுச் சங்கங்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினர்களையும், அட்டவணை IV–ல் குறிப்பிட்டபடி, சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினர்களையும் இதர நலன்களையும் பிரதிநிதித்துவம் செய்ய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களையும், சம்பந்தப்பட்ட மாநிலத்தின் கூட்டுப் பதிவாளரைப் பதவி வழி (Ex-officio) உறுப்பினராகவும் கொண்டிருக்கவேண்டும். சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினர் களில் இரண்டு ஹெக்டர் நிலங்களைச் சொந்தமாக வைத்திருக்கும் சிறு குடியானவர்களும் சேர்ந்திருக்கின்றனர். நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கையானது தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி அல்லது மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் நிருவாகக் குழுவின் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் 1/5-க்கு மேற்படக் கூடாது (பிரிவு 73 (ஆ) (3)-ன் விலக்குக்கூறு). தொழில் திறனுக்கும், துரித வேலைக்கும் பாதகமாக, நியாயமில்லாமல், பல்வேறு நலமிகளுக்குப் பொருந்தும்படி சங்கத்தின் குழுக்களைப் பெரிதாக்கும் போக்கைத் தடுத்து சட்டத்திலேயே நிருவாகக் குழுவின் குறைந்த அளவு உயர்ந்த அளவு எண்ணிக்கையைத் தக்க சட்டத்தின் மூலம் நிருணயிப்பது விரும்பத்தக்கது.

(iii) கூட்டுறவு ஆண்டு (Co-oeprative year) : இது பொது வாக எந்த ஒரு வருடத்தின் ஜூலை மாதம் முதல் தேதியிலிருந்து தொடங்கி, அடுத்துவரும் ஆண்டின் ஜூன் மாதம் 30ஆம் தேதி யோடு முடிவடைகிற காலவரை என்று பொருள். இந்தக் காலவரை பெரும்பாலான சங்கங்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கின்றது. குறிப்பாக, விவசாயக் கடன் சங்கங்கள் இதனை ஏற்றுக்கொண்டிருக்கின்றன. விவசாயக்கடன் சங்கத்தில், ஆகஸ்டு மாதத்திலிருந்து நவம்பர் மாதம்வரை உழுவதற்காக பொதுவாகக் கடன்கள் வழங்கப்பட்டு அறுவடையானவுடன் அனேகமாக ஏப்ரல் மாதத்திலிருந்து திருப்பி வசூலிக்கப்படு கின்றன. அறுவடைக் காலத்தின்போது கூட்டுறவு ஆண்டு முடிவடைய வேண்டும் வண்ணம் கூட்டுறவு ஆண்டு தமிழ் நாட்டில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. பல சமயங்களில் இதை ஆங்கிலப் பஞ்சாங்க வருடமாக அல்லது நிதி ஆண்டாகத் திருத்து வதற்கு உத்தேசிக்கப்பட்டுக் கைவிடப்பட்டது. சிலவிதச் சங்கங் களில் அல்லது சில சங்கங்களில் வேறு காலவரையை வைத்துக் கொள்வது வசதியாக இருக்கும். உதாரணமாக, மாணவர் பண்டகசாலைச் சங்கங்கள் ஆங்கிலப் பஞ்சாங்க வருடத்தைக்

கூட்டுறவு வருடமாக வைத்துக் கொள்ளலாம். ஏனென்றால், வருடம் முடிந்தவுடன் சங்கம் பேரவைக் கூட்டம் கூட்டி இலாப ஈவு முதலியன விடுமுறைக்காகப் பள்ளிகள் அல்லது கல்லூரிகள் மூடுவதற்கு முன்பு விநியோகிக்கலாம். அம்மாதிரியாக சில ஸ்டோர்ஸ் சங்கங்கள், பால் விநியோகிக்கும் சங்கங்கள், பல்வேறு காலத்தைக் கூட்டுறவு வருடமாக வைத்துக்கொள்கின்றன. சில சங்கங்களில் கூட்டுறவு வருடம் டிசம்பர் மாதத்தோடு அல்லது இதர சங்கங்களில் மார்ச்சு மாதத்தோடு முடிவடைகிறது. கூட்டுறவு வருடம் மார்ச்சு மாதத்தோடு முடிவடைகிற நிதி வருடத்திற்குச் சரிசமானமாக இருக்கவேண்டும் என்றுகூட ஒரு சமயம் யோசனை கூறப்பட்டது. ஆனால், முன்னரே கூறியபடி விவசாயக் கடன் சங்கங்களுக்கும் பெரும்பான்மையான இதர சங்கங்களுக்கும் அது வசதியாக இருக்காது. எந்த ஒரு சங்கம் அல்லது வகைச் சங்கம், பதிவாளருடைய முன் அனுமதி பெற்று அவற்றின் கணக்குகளை, அவற்றினுடைய தனித் தேவைகளைக் கருதி, ஜூன் மாதம் 30ஆம் தேதியில்லாத வேறு எந்தத் தேதி வரைக்கும் முடித்துக் கொள்ளலாம். அத்தகையச் சங்கங்களின் எண்ணிக்கை மிகவும் குறைவேயாகும்.

(iv) 'நிதி வங்கி' (Financing Bank) என்றால், மற்ற சங்கங்களுக்குப் பணத்தைக் கடன் கொடுப்பதைப் பிரதான நோக்கமாகக் கொண்ட ஒரு பதிவு பெற்ற சங்கம் என்று அர்த்தம். அம்மாதிரியான நிறுவனங்கள் கூட்டுறவு மத்திய வங்கிகளும், தலைமைக் கூட்டுறவு வங்கியுமாவன. கூட்டுறவு மத்திய வங்கிகள், 'மத்திய நிறுவனங்கள்' என்றுகூட அழைக்கப்படலாம். அவை மாவட்ட ரீதியில் பொதுவாகப் பணிபுரிகின்றன. தலைமைக் கூட்டுறவு வங்கியைத் 'தலைமை நிறுவனம்' என்றுகூட அழைக்கலாம். அது மாநில ரீதியில் பணிபுரிகிறது. இந்தத் தலைமை நிறுவனங்கள் இணைப்புத் தன்மை (Federal) வாய்ந்தவை. அதாவது அவை சங்கங்களை உறுப்பினர்களாகக் கொண்டவை. தமிழ் நாட்டில், கூட்டுறவுக் கடன் வழங்கும் அமைப்பு, மூன்று அடுக்குமுறையில் (Three tier System) அமைந்துள்ளது. அடிப்படையில் அல்லது கிராம மட்டத்தில், பிரதமக் கூட்டுறவுச் சங்கங்களும், மாவட்ட மட்டத்தில் பிரதமச் சங்கங்கள் இணைக்கப்பட்ட கூட்டுறவு மத்திய வங்கிகளும், மாநில மட்டத்தில் கூட்டுறவு மத்திய வங்கிகள் இணைக்கப்பட்ட தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியும் இருக்கின்றன. மத்தியக் கூட்டுறவு வங்கிகளும் மாநிலக்கூட்டுறவு வங்கியும் 'நிதி வழங்கும் வங்கிகள்' என்ற வகுப்பில் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்த நிறுவனங்கள் 1912ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட மத்தியச் சட்டத்திற்குப்

பிறகு வைப்புத்தொகைகளைத் திரட்டிக் கிராமச் சங்கங்களுக்குக் கடன் கொடுப்பதற்காகத் தோன்றியவை. கிராமச் சங்கங்கள் கூட்டுறவு மத்திய வங்கிகளிலிருந்தும், மத்திய வங்கிகள் மாநிலக் கூட்டுறவு வங்கிகளிடமிருந்தும் கடன் பெறுகின்றன.

(v) 'அரசினர்' (Government) என்றால் மாநில அரசினர் என்று பொருள்.

(vi) & (vii) 'உறுப்பினர்' (Member) என்றால் ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பத்தில் சேர்ந்த ஒரு நபரும், பதிவு செய்த பிறகு சட்டம், விதிகள், உப–விதிகளின்படி உறுப்பினராகச் சேர்க்கப்பட்ட ஒரு நபரும் என்று பொருள். அது ஒரு நியமிக்கப்பட்டவரையும் (Nominated), ஒரு துணைஞர் (Associate) உறுப்பினரையும் உள்ளடக்கிக் கொள்கிறது. ஓர் உறுப்பினர், தனிநபராக அல்லது ஒரு பதிவு பெற்ற சங்கமாக அல்லது அரசாங்கமாகக்கூட இருக்கலாம். 1897ஆம் வருடத்தியப் பத்தாவது சட்டமாகிய ஜெனரல் கிளாஸஸ் சட்டத்தின்படி (Genaral Clauses Act) ஒரு நபர் என்பது ஒரு கம்பெனி, அல்லது சங்கம் (Association) அல்லது தனிநபர்கள் சேர்க்கையாக (Body of Individuals) இணைக்கப்பட்டதோ அல்லது (Incorporated) இணைக்கப்படாததாகவோ இருக்கலாம். நியமிக்கப் பட்டவர் அல்லது துணைஞர் உறுப்பினர் என்பவர் உப–விதிகளில் குறிக்கப்பட்டவாறு அதிகாரங்களையும் உரிமைகளையும் பெற்று, உறுப்பினர்களுடைய பொறுப்புக்குட்பட்டிருக்கும் ஓர் உறுப்–பினர்.

பிரிவு 8–ன் கீழ் ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்காகச் செய்யப்படும் விண்ணப்பத்தில் சேருகின்ற நபர்கள் சங்கம் பதிவு செய்தவுடன் தாமாக அதனுடைய உறுப்பினர்களாக ஆகி விடுகிறார்கள். ஆனால், விதிகளிலும் சங்கத்தின் உப-விதிகளிலும் நிருணயிக்கப்பட்ட, பங்குத் தொகையையும், நுழைவுக் கட்டணத்தையும், செலுத்துகிறவரை அவர்களுடைய உரிமைகளையும், அதிகாரங்களையும் அவர்கள் பயன்படுத்த முடியாது. (பிரிவு 17 பகுதி 3). அவர்களைப் பொறுத்தவரை உறுப்பினராகச் சேர்த்துக்கொள்வது என்ற நடவடிக்கை எழவில்லை. பொதுவாக, ஒரு சங்கம் நிறுவப்படும்போதும் அது பதிவான பிறகும் சங்கத்தின் தலைமைத் தோற்றுவிப்பவர்களாலும் (Chief promoters) மற்றவர்களாலும் ஒரு கூட்டம் கூட்டப்படுகிறது. அந்தக் கூட்டத்தில் சங்கத்தைப் பதிவு செய்யக் கோரும் விண்ணப் பத்தில் கையெழுத்திட்டவர்கள் நிருணயிக்கப்பட்ட பங்குத்

தொகையையும் நுழைவுக் கட்டணத்தையும் செலுத்துகிறார்கள். அவ்வாறு செலுத்திய உடனே அவர்கள் எல்லா உரிமைகளையும் பெற்ற முழு உறுப்பினர்களாகிவிட்டதாகக் கருதப்படுகிறார்கள். இந்தக் கூட்டத்தில் நிருவாகக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டு அந்தக் குழு பிறகு உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்கிறது.

திறந்த அங்கத்துவம் (Open Membership) அல்லது எல்லாருக்கும் பொதுவான அங்கத்துவம் (Universal Membership) கூட்டுறவுச் சங்கத்தின் ஒரு முக்கியமான கொள்கையாகும். ஒரு சங்கத்தில் எல்லாத் தகுதியுள்ள நபர்களும் உறுப்பினராகச் சேர்க்கப்படவேண்டும். ஒரு பிரதமச் சங்கத்தின் உறுப்பினராக இருப்பதற்கு ஒரு நபர் 17ஆம் பிரிவின்கீழ் நிருணயிக்கப்பட்ட தகுதிகளையுடையவராகவும் 18ஆம் பிரிவில் கூறப்பட்ட தகுதியின்மையில்லாதவராகவும் இருக்கவேண்டும். சந்தானம் குழுவினர், ஒரு குறிப்பிட்ட கூட்டுறவுச் சங்கத்தின் நோக்கத்திற்கு மாறுபட்டதும் அதன் தொழிலுக்குப் பாதகம் விளைவிக்கும்படியான தொழில் அல்லது நடவடிக்கையை நடத்தும் ஒரு நபரை அந்தச் சங்கத்தின் உறுப்பினராக இருப்பதற்குத் தகுதி இல்லாதவராகச் செய்வது அவசியம் என்று கருதினர். ஆகையால், அவர்கள், அந்த ஒரு நபர் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ சங்கம் செய்யும் தொழில் அல்லது வியாபாரம், அதையொத்த வியாபாரம் அல்லது தொழிலில் ஈடுபட்டிருந்தாலும், அல்லது சங்கத்தின் வேலைக்கு முரண்பட்டதாக அல்லது பாதகம் விளைவிக்கக் கூடியதாகவுள்ள வியாபாரம் அல்லது தொழிலில் ஈடுபட்டிருந்தாலும், அவர் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்க்கப்படுவதற்குத் தகுதியுள்ளவராக இருக்கக் கூடாது என்றும் கருதினார்கள். உதாரணமாக, வட்டித் தொழிலில் ஈடுபட்டிருக்கும் ஒருவர் ஒரு கடன் சங்கத்தில் உறுப்பினராகச் சேருவதற்குத் தகுதியற்றவர் ஆவார்

ஒரு வியாபாரி ஒரு விற்பனை அல்லது நுகர்வோர் சங்கத்தில் உறுப்பினராகச் சேருவதற்குத் தகுதியற்றவராகச் செய்யப்பட வேண்டும். ஒரு கைத்தறி நெசவாளர் சங்கத்தில் நெசவாளி முதலாளி உறுப்பினராகச் சேருவதற்குத் தகுதியற்றவராக்கப்பட வேண்டும். இது விதிகளுக்கோ அல்லது உப-விதிகளுக்கோ விடக் கூடாத ஒரு மிகவும் முக்கியமான 'செய்தியாகும் என்று சங்கத்தில் அம்மாதிரி நபர்களைச் சேர்ப்பதனால் சங்கம் பாதிக்கப் படுகிறது என்பதை அனுபவ வாயிலாகக் காணுகின்றோம். அம் மாதிரி நபர்கள், வட்டித் தொழில், வணிகம், உற்பத்தி, கைத்தறி, துணி விற்பனை முதலிய, தங்கள் சொந்த வியாபாரத்தைப் பெருக்கிக்கொள்வதற்கு நிருவாகக் குழுவில் தேர்ந்தெடுக்கப்

பட்டு, தங்கள் இயக்குநர் பதவியை உபயோகிக்க முனைகிறார்கள். ஆகையால், சட்டத்தின் 18ஆம் பிரிவு உட் பிரிவுக்கும் (1) (2) கூடுதலான பகுதியைச் சந்தானம் குழுவினர் யோசனை கூறியிருக்கின்றார்கள். சட்டத்தில் புகுத்தப்படும் இந்தப் புதிய சரத்து அந்தந்த சங்கத்தின் உப–விதிகளில் விவரிக்கப்பட வேண்டும். சந்தானம் குழுவினர் யோசனை கூறியுள்ள கூடுதலான சட்டப் பகுதி கீழ்வருமாறு :

'சங்கம் செய்யும் வியாபாரம் அல்லது தொழிலுக்குச் சமானமான வியாபாரம் அல்லது தொழிலில் அல்லது சங்க வேலைக்கு முரண்பட்டு அல்லது பாதகம் விளைவிக்கும்படி நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ ஈடுபட்டிருந்தால்' வட்டி வியாபாரி அதாவது சட்டத்தில் விலக்கப்பட்ட எந்த ஒரு வட்டி வியாபாரியும், ஒரு விவசாயக் கடன் சங்கத்தினுடைய உறுப்பினராவதற்குத் தகுதியில்லாதவர் என்று விவரமாகவும் குறிப்பாகவும் அவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார்கள். 1957ஆம் வருடத்திய வட்டி வியாபாரிகள் சட்டத்தில் (Money Lenders Act) 'வட்டி வியாபாரி' என்ற வாக்கியம் 'கடன்கள் கொடுத்து, வசூல் செய்யும் வியாபாரத்தைப் பிரதானமான அல்லது துணையான ஜீவனத்தையுடைய ஒரு நபர்' என்று கூறப்பட்டிருக்கிறது. வட்டி வியாபாரி என்ற வகுப்பில் வராத அநேக விவசாயிகள் இருப்பார்கள் என்பதைக் குழுவினர் உணர்ந்திருந்தனர். ஆனால், அத்தகைய விவசாயிகள்கூடத் தங்கள் சக விவசாயிகளுக்குக் கடன் கொடுத்து துணை வட்டி வியாபாரம் மூலம் வருமானம் பெறுகிறார்கள் என்பது உண்மையாகும். அம்மாதிரி விஷயங்களில், சங்கம் அத்தகைய நபர்களைப்பற்றித் தகவல் சேகரித்து அவர்கள் சங்கத்திலிருந்து பெற்ற கடன்களைத் தங்கள் வட்டி வியாபாரத்திற்குப் பயன்படுத்தாதவாறு நடவடிக்கையை எடுப்பது விரும்பத்தக்கது. சங்கத்தில் உறுப்பினராகச் சேருவதற்குத் தகுதியிருப்பதற்குப் முக்கிய நிபந்தனைகளாவன ;

(1) விண்ணப்பதாரர்கள் ஒரு வயது வந்தவராக (Adult) இருக்கவேண்டும்.

(2) வசிப்புத்தகுதி நிருணயிக்கப்படாத சந்தர்ப்பத்தில் தவிர, அவர் சங்க விவகார எல்லையில் வசிப்பவராக இருக்கவேண்டும்.

(3) அவர் சங்கத்தின் சேவைகளை வேண்டுபவராக அல்லது சங்கத்தினுடைய நடவடிக்கையில் பங்கெடுத்துக் கொள்ள தகுதி பெற்றவராகவும் இருக்க வேண்டும்.

இந்த நிபந்தனைகள் நிறைவேற்றப்படும் பட்சத்தில், பொதுநலம் என்ற காரணத்தால் அரசினர் வேறு விதமாக கட்டளையிட்டால் தவிர, ஒரு நபரின் தகுதி கட்டுப்படுத்தும் உரிமையாக இருக்க வேண்டும். ஒரு பிரதமச் சங்கத்தினுடைய அங்கத்துவத்திற்கு ஒரு நபரைச் சேர்த்துக்கொள்ளும் அதிகாரம் நிருவாகக் குழு வசமிருக்கிறது. 1959ஆம் ஆண்டுவரை, அதாவது 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் கீழ், (xviii) ஆ ஆ விதி புகுத்தப்பட்டபோது, காரணம் தெரிவிக்காமல் நிருவாகக்குழு ஒரு நபரைச் சங்கத்தின் உறுப்பினராகச்சேர்க்க மறுக்கலாம். அந்த நபருக்கு மேல்-முறையீடு செய்துகொள்ளவும் உரிமை கிடையாது. கூட்டுறவுச் சங்கத்தின் அங்கத்துவம் பொறுக்கியெடுத்ததாக (Selective-membership) இருக்கவேண்டும் என்ற அடிப்படையின்பேரில் நிலவியது. கூட்டுறவு இயக்கத்தின் ஆரம்ப வருடங்களில் கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினர்களை உன்னிப்பாகப் பொறுக்கி யெடுப்பது, குறிப்பாகச் கடன் சங்கங்களில், ஒரு முக்கியக் கொள்கையாகக் கருதப்பட்டது. ஏனென்றால், ஒரு சமயத்தில் கடன் வாங்கக்கூடியவர்கள் மாத்திரம் சங்கத்தில் சேர்ந்தார்கள். ஆனால், உறுப்பினரைப் பொறுக்கியெடுப்பதன் முக்கியத்துவம் சங்கத்தின் நோக்கத்தைப் பொறுத்தும், உறுப்பினர்களின் பொறுப்பைப் பொறுத்தும் வேறுபட்டது. உதாரணமாக, ரொக்க விற்பனை செய்யும் ஸ்டோர்ஸ் சங்கத்தில் உறுப்பினரைப் பொறுக்கியெடுப்பது முக்கியத்துவம் வாய்ந்ததல்ல. ஆனால், பல துறைகளில் கூட்டுறவு இயக்கம் வளர்ச்சியடைந்த பிறகும், எல்லா வகுப்பு மக்களுடைய, குறிப்பாக பலமில்லாத வகுப்பு மக்களுடைய, பொருளாதார நல்வாழ்விற்குக் கூட்டுறவு இயக்கம் ஒரு கருவியாக இருக்கவேண்டுமென்பது நாட்டின் ஓர் இலட்சியமான பிறகும், அரசினர் பல வசதிகளையும் உதவிகளையும் கொடுத்துள்ள ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் ஒவ்வொரு குடிமகனும் தன் சொந்த உரிமையில் உறுப்பினராகச் சேர வேண்டும் என்பது ஓர் இலட்சியமாகக் கருதப்படும்போது, கூட்டுறவுச் சங்கங்களில் உறுப்பினர்களைப் பொறுக்கியெடுக்கும் கொள்கை நடைமுறையில் கைவிடப்பட்டிருக்கிறது. மேலும், உறுப்பினரைப் பொறுக்கி யெடுக்கும் கொள்கையின் பெயரில், சங்கங்கள் ஒரு மூடப்பட்ட நிறுவனங்களாகி, பொருளாதார பலம் வாய்ந்தவர்களும் அல்லது சமுதாயத்தில் அதிகாரமுள்ளவர்களும் அல்லது அரசியல் செல்வாக்குள்ள ஒரு சில நபர்களும் மாத்திரம் சங்கத்தின் நன்மைகளை அடையவிடக்கூடாது. கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கையின் (All India Rural Credit Survey 1953) சிபாரிசுகளைப் பின்பற்றி 1932ஆம் வருடத்தியச் சென்னை கூட்டுறவுச்

சங்கச் சட்டத்தின்கீழ், XVIII ஆ.ஆ விதி நிருணயிக்கப்பட்டது. இந்த விதியில் கீழ்க்கண்ட சரத்துகள் ஏற்பாடு செய்யப்பட்டன.

(1) ஒருசங்கத்தின் நிருவாகக்குழு ஒரு நபரை உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ள மறுத்ததன் காரணங்களை எழுதி வைக்க வேண்டும் என்றும் அக் காரணங்களை விண்ணப்பதாரர்களுக்கு இரண்டு மாதங்களுக்குள் தெரியப்படுத்த வேண்டும் என்றும்,

(2) உறுப்பினராகச் சேர்க்கப்பட மறுக்கப்பட்ட தெரிவிப்பைப் பெற்றுக்கொண்ட தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள், அல்லது அம்மாதிரித் தெரிவிப்பு ஒன்றும் கிடைக்காவிடில், விண்ணப்பத் தேதியிலிருந்து நான்கு மாதங்களுக்குள், விண்ணப்பதாரர் பதிவாளருக்கு மேல்முறையீடு செய்யலாம். பின்னர், கடன், விற்பனை, அல்லது விநியோகிக்கும் சங்கங்களுடைய நிருவாகக் குழுக்கள், தகுதியுள்ள ஒவ்வொரு நபரையும், அவருடைய விண்ணப்பம் கிடைத்தவுடன், உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று கட்டாயப்படுத்தி 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் (17) (2) பிரிவில் சரத்து ஏற்படுத்தப்பட்டது. ஒரு பிரதம நிலவள வங்கியானது, கடன்சங்க வகுப்பின்கீழ் வரும். ஒரு கைத்தறி நெசவாளர் சங்கம் உற்பத்திச் சங்க வகுப்பின் கீழ்வரும் இரண்டு சங்கங்களிலும் உறுப்பினரைச் சேர்த்துக்கொள்ளுதல் கட்டாயப் படுத்தப்பட்டிருக்கிறது. அப்படிச் சேர்த்துக்கொள்ளப்பட்ட ஓர் உறுப்பினர் விரும்பத்தகாதவராகக் கருதப்பட்டால், நிருவாகக் குழுவினர் அவரைப், பதிவாளரின் அங்கீகாரத்துடன், எடுத்து விடலாம். இந்த மூன்று வகைச் சங்கங்களின் நிருவாகக்குழுவினரை எல்லாத் தகுதிவாய்ந்த நபர்களையும் உறுப்பினர்களாகக் கட்டாயமாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று சட்டபூர்வமான சரத்து செய்யப்பட்டுங்கூட, விண்ணப்பதாரர்கள் சங்கத்தின் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ள மறுக்கப்படுகிறார்கள் என்றும், உறுப்பினராகச் சேருவதில் தேவையற்ற தாமதமிருப்பதாகவும் புகார் இருக்கிறது. அம்மாதிரி மறுப்பு அல்லது தாமதத்திற்குப் பல காரணங்கள் இருக்கலாம். உறுப்பினராகச் சேர விரும்பும் ஒரு நபர் நிருவாகக் குழுவிற்குப் பிடித்தமானவராக இல்லாமலிருக்கலாம் அல்லது வகுப்பு சம்பந்தமானதும், அரசியல் சம்பந்தமானதுமான வேற்றுமைகள் அல்லது குடும்பப் பகையுமிருக்கலாம். ஆகையால் உறுப்பினராகச் சேருவதற்கு உரிமை கொடுக்கப்பட்டிருக்கும் சங்கங்களில் அந்த உரிமை சுறுசுறுப்பாக அமல் செய்யப்படவேண்டுவது அவசியப்படுகிறது.

அங்கத்துவ உரிமைப் பிரச்சினையை விரிவாகக் கவனிக்க சந்தானம் குழுவினர் பிரதமச் சங்கங்களை இந்தச் செயலுக்காக

இரண்டு வகுப்புகளாகப் பிரிப்பதற்கு அவசியமில்லை என்றுகூடக் கருதினர். ஒரு வகுப்புச் சங்கங்களில் உறுப்பினராகச் சேரத் தகுதி உள்ளமை ஓர் உரிமையாகிறது. இன்னொரு வகுப்புச் சங்கங்களில் உறுப்பினர் தகுதியுள்ளமை வெறும் அதிகார சரத்தாக இருக்கிறது. சந்தானம் குழுவினர் எல்லாப் பிரதம சங்கங்களிலும், அரசாங்கத்தால் விதிவிலக்கு குறிப்பாகச் செய்யப்பட்டவை தவிர, உறுப்பினர் தகுதியுள்ளமை ஓர் உரிமையாக இருக்கவேண்டுமென்றும், ஆனால், விண்ணப்பதாரர் எந்த ஒரு தகுதியின்மைக்கும் உட்பட்டவராக இருக்கக்கூடாது என்ற நிபந்தனையிருக்கவேண்டும் என்றும் கருதினர். இந்த உரிமையைச் சீக்கிரமாக அமல்படுத்துவதற்காக, ஆந்திரப் பிரதேசக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் (1964) 19 (2) பிரிவில் கீழ்க்கண்ட சரத்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது; 'போதிய காரணமில்லாமல், ஒரு சங்கமும், சட்டம் அல்லது அதன் உப-விதிகளின் சரத்துகளின்கீழ் தகுதிபெற்ற எந்த ஒரு நபரையும் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ள மறுக்கக்கூடாது. அப்படி மறுத்தால், அதற்குண்டான காரணங்களுடன், முடிவைப் பதிவு அஞ்சல் மூலம் அத்தகைய நபருக்கு முடிவு செய்த தேதியிலிருந்து 15 நாள்களுக்குள் அல்லது விண்ணபத் தேதியிலிருந்து 60 நாள்களுக்குள், எது முன்னதோ அதற்குள், தெரியப்படுத்தவேண்டும். அம்மாதிரியான முடிவைச் சங்கம் அத்தகைய நபருக்கு அவருடைய விண்ணப்பத் தேதியிலிருந்து 60 நாள்களுக்குள் தெரியப்படுத்தாவிட்டால், அந்தக் காலவரை முடிவு பெற்ற தேதியில் அன்னாரை ஓர் உறுப்பினராக அந்தச் சங்கம் சேர்த்துக்கொண்டது என்று கருதப்படும்'.

உறுப்பினர்களைச் சேர்த்துகொள்ளும் பிரச்சினை தொடர்பாக அதாவது ஒரு நபரை உறுப்பினராகச் சேர்த்துக்கொள்வதில் அவசியமான தாமதமில்லாமல் பார்த்துக்கொள்ள நடைமுறை சம்பந்தமாகக்கூட சந்தானம் குழுவினர் சில சிபாரிசுகளைச் செய்துள்ளனர். அவையாவன;

சங்கத்தின் செயலர் தகுதியுள்ள நபர்களை உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஒரு விண்ணப்பதாரரை உறுப்பினராகச் சேர்த்துக் கொண்டதற்கு, அவர் ஒரு கடிதம், விண்ணப்பத் தேதியிலிருந்து 14 நாள்களுக்குள் அனுப்பவேண்டும். செயலரின் கருத்துப்படி ஒரு விண்ணப்பதாரர், தகுதியற்றவராக இருந்தால், அவர் விண்ணப்பதாரருக்குப் பதிவு அஞ்சல்மூலம், (Registered Post) விண்ணப்பம் பெற்ற 14 நாள்களுக்குள், உறுப்பினராக அவரை சேர்த்துக்கொள்ளாததற்குக் காரணங்களை தெரியப்படுத்தி, விண்ணப்பதாரருடைய விளக்கவுரை ஏதாவது இருந்தால், அப்படித் தெரியப்படுத்திய அஞ்சல் பெற்ற தேதியி

லிருந்து 14 நாள்களுக்குள், அந்த விளக்கவுரையை வரவழைக்க வேண்டும். அந்த 14 நாள்கள் காலவரை முடிந்தவுடன் அல்லது விளக்கவுரை கிடைத்தவுடன், எது முன்னரோ, அதற்குள் செயலர் நிருவாகக் குழுவின் முன்பு அந்த விண்ணப்பத்தை அவருடைய குறிப்புடன், விண்ணப்பதாரரிடமிருந்து ஏதாவது விளக்கவுரை வந்திருந்தால் அதையும் வைக்கவேண்டும். செயலரின் குறிப்புத் தேதியிலிருந்து 14 நாள்களுக்குள் நிருவாகக் குழு கூடி, அது விண்ணப்பதாரரை உறுப்பினராகச் சேர்த்துக் கொண்டதாக அவருக்கு ஒரு கடிதம் அனுப்பி, அல்லது அவரைச் சேர்த்துக்கொள்வதை மறுக்க வேண்டியிருந்தால், எழுத்தால் பதிவு செய்யப்பட்ட போதிய காரணத்திற்காக மறுக்கலாம். சேர்த்துக்கொள்ள மறுப்பு செய்து எடுத்த முடிவை, அதற்கான காரணங்களுடன், விண்ணப்பதாரருக்கு, முடிவெடுத்த தேதியி- லிருந்து ஏழு நாள்களுக்குள் பதிவு அஞ்சல் மூலம் தெரியப்படுத்த வேண்டும். அப்படி மறுக்கப்பட்ட ஒரு நபர் முடிவு செய்த தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குள் பதிவாளருக்கு மேல்முறையீடு செய்ய உரிமை பெற்றவராவார். எந்தக் சட்டத்திலாவது செயலர் அல்லது நிருவாகக் குழு செயல்படத் தவறினால், விண்ணப்பதாரர் பதிவாளருக்கு மேல்முறையீடு செய்ய உரிமையுள்ளவராவார். பதிவாளர் மேல்முறையீடு பெற்ற தேதியிலிருந்து ஒரு மாதத் திற்குள் அத்தகைய எல்லா மேல்முறையீடுகளையும் பரிசீலனை செய்து முடிவு செய்யவேண்டும். பதிவாளர் ஒரு விண்ணப்ப தாரரைச் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்று கட்டளையிட்டு பிறப்பித்த உத்தரவைச் செயலர் அமல்படுத்தத் தவறினால், அவர் 500 ரூபாய் வரை அபராதம் செலுத்தும் குற்றத்திற்குள் ளாவார். இந்த சரத்துகள் சட்டத்திலேயே இடம்பெறவேண்டும்.

சட்டத்தின் 17ஆம் பிரிவில், வயது வராதவர்களையும், சம மனநிலை இல்லாத நபர்களையும், குறைக்கப்பட்ட அதிகாரங் களுடனும், உரிமைகளுடனும்பொறுப்புகளுடனும் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்வதற்கு அனுமதியளிக்கப் பட்டிருக்கிறது. ஆனால், விதிகளில் நிருணயிக்கப்படும் வகைச் சங்கங்களில் மாத்திரந்தான் அவர்கள் உறுப்பினராகச் சேர்க்கப்படக்கூடும். அத்தகைய உறுப்பினர்கள் விதிகளில் நிருணயிக்கப்படும் பொறுப்புகளுக்கு மட்டும் உட்பட்டு விதிகளில் நிருணயிக்கப்படும் அதிகாரங்களையும் உரிமைகளையும் மாத்திரம் உடையவர்களாவார்கள். விதி 17 (1)-ன்படி விவசாயக் கடன் சங்கங்கள், உற்பத்திச் சங்கங்கள், கூட்டு விவசாயப் பண்ணைச், சங்கங்கள், விற்பனைச் சங்கங்கள், விநியோகிக்கும் சங்கங்களுக்கு மேற்கண்ட ஏற்பாடு பொருந்தும். விதி 17 (2)-ன் கீழ், ஒரு வயது வராதவர் அல்லது சம மனநிலை

இல்லாத நபர் அவருடைய காப்பாளர் மூலம் (guardian) ஒரு நிலவள வங்கியிலிருந்து அல்லது கடன் சங்கத்திடமிருந்து கடன் வாங்கலாம். ஒரு கைத்தறி நெசவாளர் சங்கத்தில் (ஓர் உற்பத்திச் சங்கத்தில்) சொந்த கைத்தறி வைத்துக்கொண்டு நெசவு செய்யும் ஒரு வயதுவராதவர் அவருடைய காப்பாளர்மூலம் உறுப்பினராகச் சேர்க்கப்படலாம். அவர் பங்குத் தொகையின்பேரில் இலாப ஈவும், உற்பத்தியின்பேரில் மேலூதியமும் (bonus) அல்லது கூலியும் வாங்க அனுமதிக்கப்படுவார். இந்தவகைச் சங்கங்களில் வயது வராதவர்களையும் சமமனநிலை இல்லாத நபர்களையும் அவர்களுடைய காப்பாளர்மூலம்தான் உறுப்பினர்களாகச் சேர்க்கலாம். வயது வராதவர்களையும் சம மனநிலையற்ற நபர்களையும் உறுப்பினர்களாகச் சேர்க்கும் பிரச்சினையை ஆலோசனை செய்த சந்தானம் குழுவினர், இந்த வகை உறுப்பினர்களுடைய உரிமைகளைக் கட்டுப்படுத்துவதற்கு அவசியமில்லை என்ற கருத்து கொண்டனர்.

இந்த வகை உறுப்பினர்களும் தங்கள் காப்பாளர்கள் மூலம் உறுப்பினருடைய எல்லா உரிமைகளையும் பெறுவதற்கு அருகதையுள்ளவர்களாக இருக்கவேண்டும் என்றும், நிருவாகக் குழுவில் உறுப்பினராக இருப்பதும் அல்லது பதவி வகிப்பதும் தவிர, சங்கத்தின் எல்லாக் கடமைகளுக்கும் பொறுப்பாளிகளாகக்கூட இருக்கவேண்டும் என்றும் அந்தக் குழுவினர் கருதினர். ஒரு சட்டமுறையான காப்பாளர் எவராவது, அவருடைய சொந்த உரிமையில் முன்னரே சங்கத்தின் உறுப்பினராக இருந்தால், அவர் எந்த ஒரு தேர்தலிலும் அல்லது கூட்டத்திலும் இரண்டாவது வாக்களிக்க அருகதையில்லாதவராவார். ஒரு பெயரளவு (Nominal) அல்லது துணைஞர் (Associate) உறுப்பினர் என்பவர், சட்டத்தின் பிரிவு 2 (6)-ன் உப-விதிகளில் குறிப்பிடப்பட்ட அதிகாரங்கள், உரிமைகள் பொறுப்புகளுள்ள ஒருவர் என்று விளக்கப்பட்டிருந்தாலும், சட்டத்தில் எந்த இடத்திலும் ஒருவரைப் பெயரளவு அல்லது துணைஞர் உறுப்பினராகச் சேர்க்கப்படலாம் என்பதையும் எந்தச் சூழ்நிலைகளில் சேர்க்கப்படலாம் என்பதையும் குறிக்கப்படவில்லை. பிரிவு 21 (1) (ஆ)-ன் கீழ், ஒரு பெயரளவு அல்லது துணைஞர் உறுப்பினர் வாக்களிக்க உரிமையில்லாதவராவார். 28 (1) (இ) பிரிவின்கீழ் அன்னார் நிருவாகக் குழு உறுப்பினர் பதவிக்குத் தகுதியில்லாதவராவார். கட்டுப்படுத்தப்பட்ட உரிமைகளுடன் நடைமுறையில் பலவித உறுப்பினர்கள் தற்போது இருக்கிறார்கள். உதாரணமாக, ஒரு பிரதம நிலவள வங்கியில் (அ) வகுப்பு உறுப்பினரால் வங்கிக்கு அடைமானம் வைக்கப்படும் சொத்தில் பாத்தியதையுள்ள ஒரு

நபர் அடைமானப் பத்திரத்தில் சேர்ந்து கையெழுத்திடுவதற்காக (ஆ) வகுப்பு உறுப்பினராகச் சேர்க்கப்படுகிறார். (ஆ) வகுப்பு உறுப்பினர் ஒரு பெயரளவுப் பங்குத் தொகையைக் கட்டுகிறார். மகாசபைக் கூட்டத்தில் வாக்களிப்பதற்கோ, பங்கெடுத்துக் கொள்வதற்கோ அவருக்கு உரிமை கிடையாது. அவருடைய பங்குத் தொகையின்பேரில் அவர் இலாப ஈவோ அல்லது கடன்கள் வாங்கவோ உரிமையற்றவர். ஒரு நகர வங்கியில் நகை அடைமானம் வைத்துக் கடன் வாங்குவதற்காக (ஆ) வகுப்பு உறுப்பினர்களாகத் தகுதியுள்ள நபர்கள் சேர்க்கப்படுகிறார்கள். அவர்களும் ஒரு பெயரளவு பங்குத் தொகையைக் கட்டுகிறார்கள். அவர்களுக்கு வேறு எந்த உறுப்பினர் அதிகாரமும் கிடையாது.

ஒரு விற்பனைச் சங்கத்தில், விவசாய விளை பொருள்களில் வியாபாரம் செய்தும், சங்கத்துடன் லேவாதேவி வைத்திருக்கும் வியாபாரிகளை (இ) வகுப்பு உறுப்பினர்களாகச் சேர்க்கலாம். ஆனால், மகாசபைக் கூட்டத்தில் வாக்களிக்கவோ பங்கு கொள்ளவோ அவர்களுக்கு உரிமையில்லை. ஒரு கைத்தறி நெசவாளர் சங்கத்தில், சங்கத்தில் சாயம் போடும் வேலைக்காரர்களும் மற்றுமுள்ள தொழிலாளிகளும், வாக்கு அளிக்கவோ, இலாப ஈவு அல்லது மேலூதியம் பெறவோ உரிமை இல்லாத, (ஆ) வகுப்பு உறுப்பினர்களாகச்சேர்க்கப்படுகிறார்கள். ஒருமாணவர் ஸ்டோர்ஸ் சங்கத்தில், 18 வயதிற்குக் குறைந்த மாணவர்கள் துணைஞர் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படுகிறார்கள். அவர்கள் எந்த பங்குத் தொகையையும் கட்டவேண்டியதில்லை. அவர்கள் நுழைவுக் கட்டணம் மாத்திரம் கட்டவேண்டும். 19ஆம் விதிப்படி, வயது வராத துணைஞர் உறுப்பினர் ஒரு விநியோகச் சங்கத்தில் பங்குத் தொகை கட்ட வேண்டியதில்லை. ஆனால், அவர் உப-விதிகளில் கூறப்பட்ட உறுப்பினர் கட்டணங்களைக் கட்டவேண்டும் என்று அந்த விதி கூறுகிறது. அவர்கள் சங்கத்தில் செய்யும் கொள்வினைக்கேற்ப மேலூதியம் பெறுவதற்குத் தகுதியுள்ளவர்கள். அவர்கள் பேரவைக் கூட்டங்களுக்கு வந்து அங்கு விவாதங்களில் பங்கெடுத்துக் கொள்ளலாம். ஆனால், அவர்கள் வாக்களிக்க உரிமை இல்லாதவர்கள். உறுப்பினர்களுடைய வேறு எந்த உரிமைகளும் அவர்களுக்குக் கிடையாது.

இந்திய அரசினரால் 1957ஆம் ஆண்டு நியமிக்கப்பட்ட கூட்டுறவுச் சட்டக் குழுவினர் சில கூட்டுறவுச் சங்கங்கள், குறிப்பாக விற்பனைச் சங்கங்கள், தங்களுடன் வியாபார உறவு வைத்திருக்கும் வியாபாரிகளை அல்லது வணிகர்களைத் தங்களது உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளவேண்டியிருக்கிறது என்றும்,

ஏனென்றால், அவர்களுக்கும் சங்கத்திற்குமிடையேயுள்ள ஏதாவது தகராறைச் சிவில் நீதிமன்றத்திற்குப் பதிலாகப் பதிவாளருக்குத் தீர்ப்புக்கு அனுப்பலாம் என்றும் ஆனால், அவர்களுக்குச் சங்கத்தின் நிருவாகத்தில் எவ்விதப் பங்கும் இருக்கக்கூடாது என்றும், அல்லது சங்கத்தின் இலாபத்தில் எந்தவிதப் பங்கும் இருக்கக்கூடாது என்றும் கருத்து தெரிவித்திருக்கின்றனர். அந்தக் குழுவினர் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில் இதற்காக ஒரு தனி சரத்து ஏற்படுத்தப்படவேண்டும் என்றும் சிபாரிசு செய்திருக்கின்றனர். 1964ஆம் வருடத்திய ஆந்திரப்பிரதேசக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 20 ஆம் பிரிவிலும், 1961 ஆம் வருடத்திய வங்காளக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 25 ஆம் பிரிவிலும், 1960ஆம் வருடத்திய மகாராஷ்டிரச் சட்டத்தின் 24ஆம் பிரிவிலும், இந்தச் சரத்து அடங்கி இருக்கிறது.

தமிழ் நாட்டில், சந்தானம் குழுவினர் இந்த உறுப்பினர்கள் வகுப்புப் பிரச்சினையை ஆலோசித்து, வேறுபட்ட உரிமைகளையும், அதிகாரங்களையும். பொறுப்புகளையுமுடைய பல்வேறு வகை உறுப்பினர்களிருப்பது, கூட்டுறவு இயக்கத்தின் உண்மையான கொள்கைக்கு முரண்பட்டது என்று கருதினர். ஆகையால், அவர்கள் ஒரு பிரதமச் சங்கத்தில் ஒரே ஒரு வகை உறுப்பினர்கள் மாத்திரம்தான் இருக்கவேண்டும் என்றும், ஆனால், நகை அடைமானத்தின் பேரில் கடன்கள் கொடுப்பதும் வியாபாரிகள் வணிகர்களுடன் லேவாதேவி செய்வதும் போன்ற குறிப்பான சில செயல்களுக்கு மாத்திரம் துணைஞர்களைச் சேர்த்துக்கொள்வதற்காகச் சரத்து இருக்கலாம் என்றும், அம்மாதிரி துணைஞர்களை (Associates) உறுப்பினர்கள் என்று அழைக்கக்கூடாது என்றும், சங்கத்தின் சொத்துகளிலோ அல்லது இலாபங்களிலோ அல்லது நிருவாகத்திலோ எந்தவிதப் பங்கிற்கும் அவர்களுக்கு உரிமை இருக்கக்கூடாது என்றும் சிபாரிசு செய்துள்ளனர். துணைஞராகச் சேர்த்துக்கொள்வதற்காக, சட்டத்திற்கு ஒரு புதிய பிரிவு அதாவது 17 (அ) பிரிவையும் ஆலோசனை கூறி இருக்கின்றனர். அவர்கள் கூறிய சட்டத் திருத்தம் பின்வருமாறு:

(1) '17ஆம் பிரிவில் என்ன கூறப்பட்டிருந்தாலும், நிருணயிக்கப்படும் வகுப்பில் சேர்ந்த ஒரு சங்கம் எந்த நபரையும், அரசாங்க அங்கீகாரத்துடன், எந்த நிறுவனத்திலும் ஒரு துணைஞர் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளலாம்.

(2) ஒரு துணைஞர் உறுப்பினர், உறுப்பினர்களுடைய எந்த ஓர் அதிகாரத்தைப்பெறவும், பேரவைக் கூட்டத்திலும், தேர்தலிலும் பங்கெடுத்துக்கொள்ளவும் அல்லது சங்கத்தினுடைய ஓர்

அலுவலராக இருக்கவும் அல்லது சங்கத்தின் சொத்துகளில் அல்லது இலாபங்களில் எந்தவிதமான பங்கையும் எந்த வடிவிலும் எடுத்துக்கொள்ளவும் உரிமை இல்லாதவர்.

(3) இந்தப் பிரிவில் ஏற்படுத்தப்பட்டிருந்தாலொழிய, துணைஞர் உறுப்பினர்கள், விதிகளிலும் சங்கத்தின் உப விதிகளிலும் குறிக்கப்பட்டபடி அதிகாரங்களையும், பொறுப்புகளையும் உடையவர்களாவர்'.

சட்டத்தின் 17ஆம் பிரிவின்கீழ், கூட்டுறவுச் சங்கங்களை மட்டுமன்றி அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட நிறுவனங்களையும் ஒரு சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்வதற்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தச் சரத்தின் கீழ் அரசாங்கம் ஸ்டோர்ஸ் சங்கங்களில் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளக் கீழ்க்கண்ட நிறுவனங்களை அங்கீகரித்திருக்கிறது.

(1) மத சம்பந்தமான நிறுவனங்கள்

(2) கல்வி நிலையங்கள்

(3) மருத்துவமனைகள்

(4) சமுதாய நிறுவனங்கள்

(5) உணவு விடுதிகள்

(6) தன்னாட்சி ஆணையங்கள்

(7) கூட்டுப் பங்குக் கம்பெனிகள் (Joint Stock Companies).

கம்பெனிகள் தவிர, மேலே சொல்லப்பட்ட மற்ற நிறுவனங்கள் இலாப நோக்குடன் வேலை செய்யவில்லை. ஆகையால், தனிப்பட்ட நுகர்வோர்களுடைய நலன்கள், குறிப்பாக பற்றுக்குறை சாமான்கள் விஷயத்தில், பாதிக்கப் படலாம். ஆகையால், சந்தானம் குழுவினர் மிகக் குறைவான அளவில், பொது நலத்திற்காக மாத்திரம்தான் ஒரு நிறுவனம் கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராகச் சேருவதற்கு அனுமதி அளிக்கப்படவேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கின்றனர். அப்படியும்கூட அந்த நிறுவனம் ஒரு நபர் பிரதிநிதியின் பேரில் மாத்திரம்தான் சங்கத்தின் உறுப்பினராகச் சேரவேண்டும். கம்பெனிகளும், கூட்டாண்மை நிறுவனங்களும், (Partnership Firms) துணைஞராகச் சேரலாமே தவிர உறுப்பினராகச் சேர அனுமதிக்கப்படக்கூடாது என்று அவர்கள் கருதினர்.

17 (1)ஆம் பிரிவில், மாநில அரசினர் தவிர இந்திய அரசினரும் உறுப்பினராகச் சேர்க்கப்படுவது அவசியமாகும்.

ஏனென்றால், இரயில்வே ஊழியர்களுக்காக ஆரம்பிக்கப்பட்ட சங்கங்களின் பங்கு மூலதனத்தில் கலந்துகொள்ள வசதி அளிப்பதற்காக இந்திய அரசினர் அந்தச் சங்கங்களில் உறுப்பின ராகச் சேர்க்கப்படவேண்டும்.

சட்டத்தின் 17 (1) பிரிவு, ஒரு பிரிக்கப்படாத இந்துக் குடும்பம் ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் உறுப்பினராவதற்கு, தெளிவாய் அனுமதி அளிக்கவில்லை. ஓர் இந்துக் கூட்டுக் குடும்ப மானது கார்பபரேஷன் அல்லது கம்பெனி அல்லது கூட்டாண்மை நிறுவனம் போன்ற உண்மையாகவே பதிவு செய்யப்பட்ட நபர்கள் கொண்ட நிறுவனம் போன்று, ஒரு சட்ட ரீதியான நபரல்ல. ஒரு கூட்டு இந்துக் குடும்பத்தினுடைய உறுப்பினர் சட்டநிலை விசித்திரமானது. அது ஒரு தனி சொந்த இனத்தில் நிற்கிறது.

(viii) 'அலுவலர்' (Officer) என்ற சொல், ஒரு தலைவர் (President), உப-தலைவர் (Vice-President), பெருந்தலைவர் (Chairman), உப-துணைப்பெருந்தலைவர் (Vice-Chairman) செயலர், துணைச் செயலர், பொருளாளர், நிருவாகக்குழு உறுப்பினர், மற்றும் விதிகள் அல்லது உப-விதிகளின்கீழ் சங்கத்தின் தொழில் சம்பந்தமாகக் கட்டளையிடுவதற்கு அதிகாரம் பெற்ற வேறு எந்த நபர் இவர்களை உட்படுத்தும் அலுவலரைப்பற்றிய இந்த விளக்கம் உதாரணத்திற்குத் தரப்பட்டது (illustrative): அது முழுமையானது அல்ல (exhaustive), உட்படுத்தும் (including) சொல்லிலிருந்து விளக்கம் முழுமையானதல்ல என்பது தொக்கி இருக்கிறது. ஒரு நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள் எல்லாரும் இந்த விளக்கத்தின்படி அலுவலர்கள் ஆவர். உதாரணமாக, ஒரு கணக்கர் (Accountant) சங்கத்தில் ஓர் அலுவலராகமாட்டார். சங்கத்தின் தொழில் சம்பந்தமாக யாதொரு கட்டளையும் கொடுப்பதற்கு அவருக்கு அதிகாரம் இல்லையென்பதால் ஒரு சட்ட ஆலோசகர் ஓர் அலுவலராவார். ஆனால், சங்கத்திற்காகத்தோன்று கின்ற ஓர் வழக்கறிஞர் ஓர் அலுவலர் அல்லர். விளக்கத்தில் கூறப்பட்ட நபர்கள் விதி தவிர அல்லது உப-விதிகளின்கீழ் ஒரு சங்கத்தின் தொழில் சம்பந்தமாகக் கட்டளை கொடுக்க அதிகாரம் பெற்ற எவரும் ஓர் அலுவலராவார். அத்தகைய அலுவலர்கள் பட்டியலில், 72ஆம் பிரிவின்கீழ் நியமிக்கப்பட்ட ஒரு சிறப்பு அதிகாரியைச் (Special Officer) சேர்க்கலாம். ஏனென்றால், சங்கத்தின் எந்த ஓர் அலுவலருடைய அல்லது நிருவாகக் குழுவின் வேலைகளில் எதாவது அல்லது எல்லாவற்றையும் அவர் செய்ய லாம். 86ஆம் பிரிவின்கீழ் கலைக்கப்பட வேண்டும் என்று உத்தர

விடப்பட்ட ஒரு சங்கத்திற்காக அமைக்கப்பட்ட கலைப்பு அதிகாரியும்கூட (Liquidator) 85ஆம் பிரிவின்கீழ் ஓர் அலுவலராவார். ஏனென்றால், அத்தகையச் சங்கத்தின் பதிவு ரத்து செய்யப்படாமல் அச் சங்கம் ஒரு பதிவு பெற்ற சங்கமாகவே தொடர்ந்து இயங்குகிறது.

(ix) 'பதிவான சங்கம்' என்றால் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்ட அல்லது பதிவு செய்யப்பட்டதாகக் கருதப்பட்ட ஒரு சங்கம் என்று பொருள். எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களும் சட்டத்தின்கீழ், பதிவு செய்யப்பட வேண்டும். 144ஆம் பிரிவின் கீழ் 1904ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழும், 1912ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழும், அல்லது 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழும், பதிவு செய்யப்பட்ட எல்லாச் சங்கங்களும் இந்தச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்டதாகக் கருதப்பட வேண்டும். மேலும், அதனுடைய உப-விதிகள், இந்தச் சட்டத்தின் வெளிப்படையான சரத்துகளுடன் முரண்படாமல் இருந்தால், அவை மாற்றப்படும், அல்லது ரத்து செய்யப்படும் வரையில், அமலிலிருக்கும். முன்னாள் புதுக்கோட்டைமாநிலத்திலும் அல்லது கன்னியாகுமரி மாவட்டத்திலும் அல்லது திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள செங்கோட்டை வட்டத்திலும் அல்லது ஆந்திரப் பிரதேச எல்லையிலிருந்து பின்னர் தமிழ் நாட்டில் சேர்க்கப்பட்ட இடங்களிலும் பதிவு செய்யப்பட்ட சங்கங்களும்கூட இந்தச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்டதாகக் கருதப்படும். அவ்வாறு பதிவாளர் எழுத்துமூலம் உத்தரவிட்டால், மற்ற மாநிலங்களின் கூட்டுறவுச் சங்கச் சட்டங்களின் கீழ் பதிவு செய்யப்பட்ட சங்கங்களும்கூட சென்னை மாநிலத்தில் கிளை அல்லது வியாபார அகம் வைத்திருந்தால் சில செயல்களுக்காக அவைகளும்கூட 1942ஆம் வருடத்திய 'பல மாநிலங்களில் விவகாரங்களுடைய கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தின்படி இந்தச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்டதாகக் கருதப்படும்.

(x) 'பதிவாளர்' என்றால் இந்தச் சட்டத்தின்கீழ் ஒரு கூட்டுறவுச் சங்கப் பதிவாளரின் வேலைகளைச் செய்வதற்கு நியமிக்கப்பட்ட ஒரு நபர் என்று பொருள். சட்டத்தின்கீழ் ஒரு பதிவாளருடைய எல்லா அதிகாரங்களையும் அல்லது எந்த அதிகாரங்களையும் கொடுக்கப்பட்ட ஒரு நபரும்கூட 3ஆம் பிரிவின் கீழ் ஒரு பதிவாளர் ஆவர். மாகாணம் பூராவிற்கும் பதிவாளர் அமைக்கப்படுகிறார். பதிவாளர் என்ற சொல், சட்டத்தின்கீழ் பதிவாளருடைய பல்வேறு அதிகாரங்கள் வழங்கப்பட்ட கூடுதலான பதிவாளரையும், கூட்டுப் பதிவாளர்களையும் துணைப்

பதிவாளர்களையும் உதவிப் பதிவாளர்களையும் சேர்த்துக்கொள்கிறது. இவர்கள் பதிவாளருக்கு உதவி புரிந்து அவருடைய பொதுவான கட்டுப்பாடு, மேற்பார்வையின்கீழ் வேலை செய்வார்கள். இந்த விளக்கத்தின் பிரகாரம், பதிவாளராக நியமிக்கப்பட்டவர்மட்டுமன்றி, சட்டத்தின்கீழ் ஒரு பதிவாளருடைய எல்லா அதிகாரங்களையும் வழங்கப்பட்ட எவரேனும் வேறு ஒரு நபரும்கூடப் பதிவாளர் ஆவார். ஆகையால், ஒருவருக்கொருவர் சுயேச்சையுள்ள, ஒன்றுக்கு மேற்பட்ட பதிவாளர்கள் இருக்கக்கூடும். ஆனல், வேறுவிதமாகக் குறிக்கப்பட்டாலொழிய, அல்லது ஒரு பதிவாளருடைய அதிகாரங்கள் வழங்கப்பட்ட மற்ற நபர்கள் பதிவாளராக அமைக்கப்பட்டவருடைய கட்டுப்பாடு, கட்டளையின்கீழ் வேலை செய்ய வேண்டும் என்று விவரமாகக் கூறப்பட்டிருந்தாலொழிய, நியமிக்கப்பட்ட பதிவாளரைத் தவிர ஒரு பதிவாளருடைய எல்லா அதிகாரங்களையும் செலுத்தும் ஒன்றுக்கு மேற்பட்ட நபர்கள் பதிவாளருடன் சுயேச்சையாயிருக்கும் பிரச்சினை நம்முடைய மாநிலம் பொறுத்தவரையில் சிறிது முக்கியத்துவம் வாய்ந்திருக்கிறது. நீண்ட காலம்வரை இந்த மாநிலத்தில் பதிவாளராக அமைக்கப்பட்டவர் மாத்திரம்தான் வேலை செய்து வந்தும் பதிவாளருடைய எல்லா அல்லது ஏதாவது அதிகாரங்கள் வழங்கப்பட்ட மற்ற எல்லா அலுவலரும் அவருடைய ஆட்சிக்குட்பட்டு வேலை செய்துகொண்டு அவருக்கு உதவி செய்துவந்தார்கள். ஆனல், 1956ஆம் ஆண்டிலிருந்து கடந்த பத்து வருடங்களாகக் கூட்டுறவுச் சங்கங்களுடைய நிருவாக ஆதிக்கம் பல்வேறு அரசாங்க துறைகளுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

தொழில் சம்பந்தமாகவும் அல்லது வியாபார சம்பந்தமாகவுள்ள கூட்டுறவுச் சங்கங்கள் தொழில் நுட்பத் துறையின் ஆதிக்கத்தின்கீழ் வைக்கப்பட்டிருக்கின்றன. தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் தொழில் வணிக இயக்குநர் நிருவாக ஆதிக்கத்தில் இருக்கின்றன. அத்தகையச் சங்கங்களுக்கு அவர்தான் பதிவாளர். கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் கைத்தறி இயக்குநர் ஆதிக்கத்தில் இருக்கின்றன. அத்தகைய சங்கங்களுக்கு அவர் தான் பதிவாளர்; பால் விநியோகச் சங்கங்கள் பால் உற்பத்தி, பால்வள ஆணையாளரின் ஆதிக்கத்தில் இருக்கின்றன. அத்தகையச் சங்கங்களுக்கு பதிவாளர் அவர்தான்; வீட்டுவசதிச் சங்கங்கள் வீட்டுவசதி வாரியத் தலைவரின் ஆதிக்கத்தின்கீழ் இருக்கின்றன. இந்தச் சங்கங்களுக்கு 1966ஆம் ஆண்டிலிருந்து அவர்

தான் பதிவாளர். மீனவர் சங்கங்கள் மீன்துறை இயக்குநர் ஆதிக்கத்தில் இருக்கின்றன. அத்தகைய சங்கங்களுக்கு அவர்தான் பதிவாளர். இவ்வண்ணம் கூட்டுறவு இயக்கம் ஒருவருக்கொருவர் சுதந்தரமாக உள்ள பல பதிவாளர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டு இயங்குகிறது. இந்த ஏற்பாடு மக்களின் நல்வாழ்வு வளர்ச்சிக்கும் ஒருங்கிணைந்த கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சிக்கும் எவ்வாறு பொருந்தும் என்பது சிந்திக்கத்தக்கது.

இந்த விஷயத்தை ஆலோசனை செய்த கூட்டுறவுச் சட்டக் குழுவினர், கூட்டுறவுத் துறையில் ஒரேவகையான கட்டுப்பாட்டுக்கும், ஒருங்கிணைந்த வழிகாட்டுதலுக்கும் ஒரே ஒரு பதிவாளர் மாத்திரம்தான் இருக்கவேண்டியது அவசியமென்று கருதினர். ஆகையால், அவர்களால் தயாரிக்கப்பட்ட மாதிரி மசோதாவில் பதிவாளரைப் பின்வருமாறு விளக்கியிருக்கின்றனர்; 'பதிவாளர் என்பவர் இந்தச் சட்டத்தின்கீழ் கூட்டுறவுச் சங்கப் பதிவாளருடைய வேலைகளைச் செய்வதற்கு அமைக்கப்பட்ட ஒரு நபர்'. மேலும், பதிவாளருக்கு உதவி செய்ய அமைக்கப்பட்ட எவரேனும் ஒரு நபர் பதிவாளரின் எல்லா அல்லது ஏதாவது அதிகாரங்களைச் செலுத்தும் எவரேனும் ஒரு நபரைச் சேர்த்துக் கொள்ளும்.

நம் மாநிலத்தில் கைத்தறி இயக்குநர், தொழில் வணிக இயக்குநர் போன்ற பதிவாளருடன் சுதந்தரமாக வேலை செய்யும் நபர்களுக்குப் பதிவாளருடைய அதிகாரங்களை வழங்குவதற்குக் குழுவினர் சாதகமாக இல்லை. நம்முடைய மாநிலத்தில் பலவித சங்கங்களுக்குப் பதிவாளராகப் பல்வேறு நபர்கள் இயங்கும் இந்த ஏற்பாட்டின் அவசியம் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள், கைத்தறி நெசவாளர் சங்கங்கள் முதலியவை போன்ற சங்க வகைகளுக்குச் சம்பந்தப்பட்ட துறைகளின் தொழில்நுட்பக் கட்டுப்பாடும் மேற்பார்வையும் தேவை என்ற காரணத்தால் எழுந்தது. தமிழ்நாட்டில் தொழில் வணிகத் துறை தன்னுடைய தொழில்நுட்ப மேற்பார்வையைத் தவிர, தொழில் கூட்டுறவுச் சங்கத்தின் மேற்பார்வைக்காகத் தனிக் கூட்டுறவுச் சிப்பந்திகளை அமைத்து, மாநிலத் தொழில் கூட்டுறவு வங்கி ஒன்றையும் ஏற்படுத்தியிருக்கிறது. ஆனால், மற்ற துறைகள் கூட்டுறவுத் துறையின் சிப்பந்திகளைக் கடன் வாங்கியிருக்கிறது. மற்றும் அந்தத் துறைகளிலுள்ள கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கூட்டுறவு நிதி வங்கிகள்தாம் நிதி வழங்குகின்றன.

ஒரே அதிகாரியிடம் நிருவாக ஆதிக்கமும் தொழில்நுட்ப மேற்பார்வையும் நிதி மேற்பார்வையும் இருக்கும்வரை, சங்கங்கள்

தொழில்நுட்பத் துறையினுலோ, அல்லது கூட்டுறவுத் துறையினுலோ கண்காணிக்கப்படுவது குறித்து பெரியதோர் சர்ச்சை இல்லை. ஆனுல், பல்வேறு வகை மேற்பார்வைக்கூட்டுறவுச் சங்கங்களுக்கு இப்பொழுது பல துறையிகளிலிருந்து வருவது போன்று தனித்தனி அதிகாரிகள் அமைப்பது வீணுகும்.

ஒருவகைச் சங்கத்திலிருந்து இன்னொரு வகைச் சங்கத்திற்கு வேறுபாடும் தொழில்நுட்ப உதவியும் மேற்பார்வையும் சம்பந்தப் பட்ட அரசாங்க இலாகாவால் வழங்கப்பட்டு, சம்பந்தப்பட்ட தலைமை நிறுவனங்களுடைய முயற்சிகளும் உதவப்படுகின்றன. மேலும், சங்கங்கள் தங்களுக்கு நிதி வழங்கும் வங்கிகளுக்குப் பொறுப்பாயுள்ள பதிவாளருடைய நிருவாக ஆதிக்கத்தின்கீழ் இருப்பதுதான் பொருத்தமுடையது. தற்போது சில சங்கங் களுக்கு அரசாங்கத்தாலும் அல்லது வேறு நிறுவனங்களாலும் நிதி வழங்கப்பட்டாலும், அவை நாளடைவில் தங்களுக்கு வேண்டும் எல்லாக் கடன் தேவைகளுக்காகக் கூட்டுறவு நிதி வழங்கும் வங்கி களைத்தான் எதிர்பார்க்கவேண்டும். இந்தச் சங்கங்களுக்காகத் தனித்தனிக் கூட்டுறவு நிதி வங்கிகள் ஏற்படுத்துவதும், சாத்தியக் கூறு உள்ளதாகவும் அல்லது விருமபத்தக்கதாகவும் இல்லை. மாநிலத் தொழில் கூட்டுறவு வங்கியும்கூட நாளடைவில் தொழில் கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதி வழங்கும் ஒரு மத்திய நிறுவனத்தின் பங்கை எடுத்துக் கொள்ளவேண்டும். அண்மையில் 1969ஆம் 'ஆண்டில் கூட்டுறவு வங்கிகள் மூலம் தொழிலுக்கு நிதி வழங்குதல்' என்பது பற்றி அமைக்கப்பட்ட செயல் குழுவின் பரிந்துரைப்படி இந்திய ரிசர்வ் வங்கி 22 பரவலான குடிசைத் தொழில்களுக்கும் சிறு தொழில்களுக்கும் உற்பத்திக்காகவும் விற்பனைக்காகவும் (வங்கி விகிதத்தின்படி) நிதி வழங்குவதற்கு அருகதை உள்ளன என்று ஏற்றுக்கொண்டுவிட்டது. தனியார் துறையில் உள்ள சிறு தொழிலுக்கும் குடிசைத் தொழிலுக்கும் நிதி வழங்குவதற்கு நிலையான திட்டமுள்ள பிரதம நகர வங்கி களின் பங்கு மூலதனத்தின் அரசாங்க ஈடுபாட்டிற்கு உதவ 'நீண்ட கால இயங்கு நிதி'யிலிருந்து (Long Term Operation Fund) உதவும் வாய்ப்பும் நீட்டிக்கப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் ஒரு கூட்டுறவு நகர வங்கிகூட இதுவரை இந்த மறு நிதி உதவும் வசதியைப் பயன்படுத்திக் கொண்டு சிறு தொழில் நிறுவனங்களுக்குக் கடன் உதவி செய்யவில்லை. தலைமைக் கூட்டுறவு வங்கியும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளும் மட்டுமே தொழில் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் இதர வகைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் நிதி வழங்கவேண்டும். இந்த

வங்கிகள் கூட்டுறவுத் துறையின் நிருவாகப் பொறுப்பில் இருக்கின்றன. ஏனென்றால், அவைகளுடைய பிரதான வேலை விவசாயக் கடனுக்கும், விற்பனைக்கும் நிதிவழங்குவதாகும். ஆகையால், கூட்டுறவு இயக்கம் முழுவதும் ஒரே ஒரு பதிவாளரின் கீழ் ஓர் ஒன்றிணைந்த இயக்கமாக விளங்கவேண்டும்.

கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாக ஆதிக்கப் பிரச்சினையை ஆராய்ந்த சந்தானம் குழுவினர்கூட எல்லாவிதச் சங்கங்களுக்கும் ஒன்றிணைந்த நிருவாக மேற்பார்வை அவசியம் என்று கருதினர். ஒரே ஒரு அதிகாரிவசம் கூட்டுறவு இயக்கம் முழுவதும் இருக்க வேண்டும் என்ற கொள்கை அரசாங்கத்திடம் இருக்கவேண்டும். அப்படி இருந்தால்தான் கூட்டுறவுச் சங்கங்களின் மேற்பார்வை, வழிகாட்டுதல், கண்காணிப்பு, கட்டளையிடுதல் போன்ற பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்ட பல்வேறு அலுவலர்கள், மெய்ப்பாட்டு நடைமுறையில், பல்வேறு விதமாக நடந்துகொண்டு ஒருவருக்கொருவர் சுதந்தரமாகச் செயல்பட முடியாது. ஆகையால், சந்தானம் குழுவினர் பால் வழங்கும் சங்கங்கள், கைத்தறி நெசவாளர் சங்கங்கள், நூற்பு ஆலைகள், வீட்டு வசதிச் சங்கங்கள், இவைகளில் கண்காணிப்பு உடனே பதிவாளருக்கு மாற்றப்பட வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கின்றனர். ஏனென்றால், மேற்கண்ட எல்லாச் சங்கங்களுக்கும் கூட்டுறவு வங்கிகளே இப்பொழுது நிதிவழங்குகின்றன. மேலும், கூட்டுறவுத் துறையில் முன்னர் பணியாற்றியிருந்த தொழில் நுட்பச் சிப்பந்திகளும், நிருவாகச் சிப்பந்திகளும் இப்பொழுது சம்பந்தப்பட்ட பல்வேறு துறைகளில் பணியாற்றி வருகின்றனர். தொழில் கூட்டுறவுச் சங்கங்களும், இதர வகைச் சங்கங்களும் பொருத்தவரையில், சந்தானம் குழுவினர், அவைகளுக்கு மத்தியக் கூட்டுறவு வங்கிகளும், தலைமைச்சங்கங்களும் நிதி வழங்குவதற்கு ஏற்பாடு செய்தபிறகு பதிவாளருக்கு மாற்றப்பட வேண்டும் என்று, கருத்துத்தெரிவித்திருக்கின்றனர்.

ஒரு தனிப்பதிவாளரே எல்லா வேலையையும் கவனிப்பது மிகச் சுமையானதென்றும், மிக விரிவுள்ளதென்றும் கருதப்படலாம். ஆகையால், நிருவாகத்திறன் நலியாமை பொருட்டு இந்தச் சங்கங்களின் பொறுப்பைப் பல்வேறு அலுவலர்களிடம் ஒப்படைப்பது நல்லது என்று கருதலாம். ஆனால், இந்தச் சங்கடத்தைச் சமாளிப்பதற்குப் பதிவாளர் வாரியம் ஒன்று (Board of Registrars) அமைக்கப்பட்டு, அதில் மிகவும் மூதிய அலுவலரைப் பெருந்தலைவராக (Chairman) அமைத்தால், ஒன்றுபட்ட கட்டுப்பாடும், கண்காணிப்பும், உத்தரவு முறையும்,

கூட்டுறவு இயக்கத்திற்குக் கிடைக்கக்கூடும். மற்ற பதிவாளர்கள் மூதிய அலுவலருக்குத் துணையாகச் செயலாற்றுவர்; ஒவ்வொரு பதிவாளர் அதிகார எல்லையின் கீழ் பல்வேறுவகைச் சங்கங்களும் அவற்றின் நடவடிக்கைகளுமிருக்கும். இந்த ஏற்பாடு, கூட்டுறவுச் சட்டக் குழுவினரும், சந்தானம் குழுவினரும் செய்த பரிந்துரைகளின்படி சரியானதாகவுமிருக்கும்.

அலுவலர்களைத் தவிர சட்டத்தின் கீழ் அதிகாரங்களை உத்தியோகப் பற்றற்றவர்களுக்குக்கூட ஒப்படைக்கலாம். கூட்டுறவு இயக்கத்தின் ஆரம்பக் காலத்தில் கௌரவ உப-பதிவாளர்களை (Honorary Assistant Registrars) அமைக்கும் பழக்கம் இருந்தது. இவர்கள் சங்கங்களை அமைப்பது, வளர்ப்பது போன்ற பணிகளைக் கவனித்தார்கள். அவர்களுக்குச் சில அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. அந்தப் பழக்கம் பிறகு கைவிடப்பட்டது. ஏனென்றால், நாளடைவில் கூட்டுறவுத் துறையில் தகுதி வாய்ந்த அலுவலர்கள் கிடைத்து, மக்களும் கூட்டுறவு இயக்கத்தின் நன்மையை உணர ஆரம்பித்தார்கள்.

(xi) விதிகள் என்பது 'இந்தச் சட்டத்தின்கீழ் விதிகள்' என்று பொருள். சட்டத்தின் 119ஆம் பிரிவின்கீழ் அரசாங்கம் விதிகளைச் செய்யலாம். 119ஆம் பிரிவில் நிருணயிக்கப்பட்ட நடைமுறைக்கு ஒப்ப அவை அமல் செய்யப்படும்போது அவை சட்டத்தின் ஒரு பகுதியாகி, சட்டத்தைப் போலவே செல்லக் கூடியவையாக இருக்கின்றன. ஆனால், சட்டத்தைத் திருத்தாமலே, அவை அதே நடைமுறையால் மாற்றப்படலாம். விதிகள் சட்டத்திற்கு இணக்கமாக இருக்கவேண்டும். சட்டத்தின் 119ஆம் பிரிவு, தமிழ்நாடு முழுமைக்குமாவது அல்லது ஏதாவது ஒரு பகுதிக்காகவாவது, மற்றும் சட்டத்தின் எல்லா அல்லது ஏதாவது நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு எந்தப் பதிவு செய்யப்பட்ட சங்கங்களுக்காவது அல்லது சங்க வகைக்காவது அரசாங்கம் விதிகள் செய்யலாம் என்று கூறுகிறது. பிரிவு 119 பகுதி (ii), விதிகள் எந்தெந்த பொருள்களைப்பற்றி நிருணயிக்கப்படலாம் என்பதை விளக்குகிறது. பல்வேறு விதச் சங்கங்கள் செயல்படும் வகையைப்பற்றிய ஒவ்வொரு விவரத்தையும் சட்டத்திலேயே நிருணயிப்பது சாத்தியப்படாது. ஏனென்றால், அளவுக்கு மிஞ்சிய விவரங்களைச் சட்டத்தில் குறிப்பிடவேண்டிவரும். சட்டத்தில் பொதுவான செய்திக் குறிப்புதான் இருக்கும். விவரங்கள் விதிகளில்தான் விவரிக்கப்படும். விதிகள் துரிதமாகவும், எளிதாகவும் அரசாங்கத்தால் மாற்றப்படலாம். ஆனால், சட்டத்தை மாற்ற நீண்ட காலம் ஆகும். விதிகள் அரசாங்கத்-

தால் நிருணயிக்கப்படலாம். ஆனல், சட்டத்தின் திருத்தம் சட்டமன்றத்தில்தான் நிறைவேற்றப்பட வேண்டும். சட்டம், விதிகள் இவற்றின் கட்டுக்கோப்பிற்குள் சங்கங்கள் இயங்க வேண்டும். சட்டமும் விதியுடன் ஒன்று சேர்ந்து கூட்டுறவு நிறுவனங்களின் ஒழுங்கான செயல்பாட்டிற்கான சட்ட ரீதியான கட்டுக்கோப்பையளிக்கிறது.

(xii) 'தற்சார்புச் சங்கம்' (Self Reliant Society) என்றல் அரசாங்கத்திடமிருந்து எந்தவிதமான உதவியையும் பெருத பதிவு செய்யப்பட்ட சங்கம், அல்லது அரசினரிடமிருந்து உதவி பெறும் யாதொரு சங்கத்திடமிருந்தும் எந்தவிதமான உதவியும் பெருத சங்கம் என்று பொருள். அரசினரிடமிருந்து பெறும் பல்வகை உதவிகள் சட்டத்தின் ஆருவது 45ஆம் விதியின்கீழ் கூட்டுறவுச் சங்கங்கள் வைக்கவேண்டிய அத்தியாயத்தில் குறிக்கப்பட்டிருக்கின்றன. எனினும் எளிவரல் சொத்துகள் (Fluid Resource) வைப்பதற்காக, ஒரு நிதி வங்கியுடன் தற்சார்புச் சங்கத்தால் வைக்கப்பட்டிருக்கிற ரொக்கக் கடன் (Cash Credit) இந்த உதவியில் சேராது. இந்தவிதச் சங்கத்திற்கு 110 பிரிவின்கீழ் சில விதிவிலக்குகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. அதாவது, சங்கத்தின் சேவைகளைப் பெறுவதற்கு உறுப்பினர்களின் உரிமையைப்பற்றியும் குறை நிவர்த்திக்கான விண்ணப்பத்தைப்பற்றியும் கூறும் 19ஆம் பிரிவிலிருந்து விதிவிலக்கு; மற்றும் அரசினராலும் அல்லது பதிவாளராலும் சங்கத்தின் நிருவாகக் குழுவுக்கு நியமனம் செய்வது சம்பந்தமான 27ஆம் பிரிவின் உட்பிரிவு (1)–லிருந்து விதிவிலக்கு; மற்றும் அரசாங்கம் அல்லது நிதி வங்கியால் நிதி உதவிபெற்ற சங்கத்தின் நிருவாகக் குழுவுக்கு நியமனம் செய்வதைக் குறித்த 27ஆம் பிரிவிலிருந்து விதிவிலக்கு. இந்த விதச் சங்கம் உண்மையாக எங்கேயாவது இருப்பதாகப் புலப்படவில்லை. இந்தவிதச் சங்கத்தைப்பற்றி மாத்திரம் சட்டத்தில் ஏன் விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதும் புரியவில்லை. மஹாராஷ்டிர மாநிலச் சட்டத்தில் காணப்படும் எல்லாவிதச் சங்கங்களுக்கும் விளக்கம் கொடுத்திருப்பதுபோல் இந்தச் சட்டத்திலும் ஏன் எல்லாவிதச் சங்கங்களுக்கும் விளக்கம் கொடுக்கப்படவில்லை என்பது புரியவில்லை. ஒரு 'தற்சார்புச் சங்கம்' என்பது ஒரு கற்பனைச் சங்கமாகக் காணப்படுகின்றதேயொழிய உண்மையில் இருப்பது அல்ல. கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகள் அரசினர் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கும் கூட்டுறவு இயக்கத்தின் இன்றைய வளர்ச்சியில் அரசினரிடமிருந்து எந்தவித உதவியையும் பெருமல் இயங்குவதற்கு எந்தச் சங்கத்தாலும் முடியாது.

உதவி பெறுவது வேறு, சார்புடையது வேறு. உதவி பெறுவது ஒரு சங்கத்தைப் பலப்படுத்துவதற்கும், வசதிப்படுத்துவதற்கும் தேவைப்படுகிறது. சார்புடையது என்றால் அரசினரால் சங்கத்தின் செயல்பாட்டிற்கு ஆதாரத் தூண் கொடுக்கப்படுகிறது என்று பொருளாகும். உண்மையாகவே, சங்கங்கள் பொதுவாக ஒரு தன்னம்பிக்கை உணர்ச்சியை வளர்க்கவேண்டும். மேலும், அவை முடிந்தவரை தற்சார்புள்ளவையாக வேலை செய்ய வேண்டும். கூட்டுறவு இயக்கம் முழுவதிலும் சுய உதவி, சுய நம்பிக்கை உணர்ச்சி திகழவேண்டும். சில சங்கங்களை மாத்திரம் தற்சார்புச் சங்கங்கள் என்று பாகுபடுத்தி அவற்றை மாத்திரம் ஒரு தனி வகுப்பாகச் சட்டமுறையாக அங்கீகரிப்பதற்கு அவசிய மில்லை. மேலும், இந்த முறையில் வேலை செய்யும் அந்த ஒரு சங்கமும் இல்லாதபோது சட்டத்தில் இந்த வகைச் சங்கத்திற்கு ஒரு தனி இலக்கணமும் கூறுவதற்கு அவசியமிருப்பதாகத் தெரிய வில்லை.

(xiii)-(xiv) 'வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கமும் வரை யறுக்கப்படாத பொறுப்புச் சங்கமும்': ஒரு வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கத்தில் அது கலைக்கப்படும் பொழுது அதனுடைய கடன்களுக்காக உறுப்பினர்களுடைய பொறுப்பு அதனுடைய உப-விதிகளின்படி வரையறுக்கப்பட்டதாக இருக்கும் வரை யறுக்கப்பட்டது என்றால் உறுப்பினர்களால் எடுக்கப்பட்டிருந்த பங்குகளில் ஏதாவது செலுத்தப்படாத தொகையிருந்தால் அந்தத் தொகை வரைக்கும் வரையறுக்கப்பட்டது என்று பொருள்; அல்லது சங்கம் மூடும்பொழுது அதனுடைய சொத்து களுக்கு உறுப்பினரால் வழங்குவதற்கு ஒப்புக் கொண்ட தொகைக்கு வரையறுக்கப்பட்டது என்று பொருள். பின்னர் கூறப்பட்ட வரையறுக்கப்பட்ட பொறுப்பு வகை, உத்தரவாதம் அளித்த பொறுப்பு (Guarantee Liability) என்று கூறப்படும் அல்லது உத்தரவாதத்தால் வரையறுக்கப்பட்டது என்றும் கூறப் படும் உண்மையாகவே சங்கம் கலைக்கப்படும்பொழுது அதனுடைய கடன்களுக்குத்தான் இந்தப் பொறுப்பு. உத்தரவாதப் பொறுப்பைப் பொறுத்தமட்டில் உறுப்பினர்களுடைய பொறுப்பு அவர்கள் எடுத்துக்கொண்டிருக்கும் பங்குகளின் எண்ணிக்கையில் ஒருசில மடங்காக இருக்கும். அதாவது ஒன்று அல்லது நான்கு அல்லது ஐந்து மடங்குகூட இருக்கும். அல்லது அது ஒரு குறிப்-பிட்ட தொகையாகவும் அதாவது ரூ. 100 அல்லது ரூ. 500ஆகவும் இருக்கலாம். இது சங்கம் கலைக்கப்படும்பொழுது அதனுடைய கடன்களுக்காக உறுப்பினர்கள் சங்கத்திற்கு வழங்கவேண்டும் என்று கேட்கப்படும் தொகைக்கு உச்சவரம்பு. வரையறுக்கப்

பட்ட பொறுப்பு எல்லா நகரக் கடன் சங்கங்களாலும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

உத்தரவாதப் பொறுப்பு பெரிய அளவு விவசாயக் கடன் சங்கங்கள் அமைக்கப்பட வேண்டுமென்று அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் சிபாரிசுகளைப் பின்பற்றி இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் (1956-61) தமிழ்நாட்டில் நிறுவப்பட்ட கிராம வங்கிகள் (Rural banks), விவசாய வங்கிகள் (Agricultural banks) போன்ற சில விவசாயக் கடன் சங்கங்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. வரையறுக்கப் படாத பொறுப்புச் சங்கத்தில் உறுப்பினர்கள் சங்கம் கலைக்கப் படும்பொழுது கூட்டாகவும், தனித்தனியாகவும் சங்கத்தினுடைய எல்லாக் கடன்களுக்கும் (கடமைகளுக்கும்) பொறுப்புள்ளவர்களாக இருந்து சங்கத்தின் பொருள்களில் துண்டுவிழும் தொகைக்கு (பற்றுக்குறைத் தொகைக்கு) நிதி உதவி வழங்க வேண்டும். சங்கத்தின் சொத்துகளில் ஏற்படும் பற்றுக்குறைக்கு உறுப்பினர்கள் கூட்டாக நிதி வழங்குவதற்குப் பொறுப்புள்ளவர்களாக இருக்கிறார்கள். அல்லது பற்றுக்குறைத் தொகை எவரேனும் ஓர் உறுப்பினரிடமிருந்து கூட வசூலிக்கப்படலாம். ஆனால், நடைமுறையில் அது ஒவ்வோர் உறுப்பினரும் கொடுக்க வேண்டிய பொறுப்பு. ஒரு சங்கத்தின் சொத்தில் பற்றுக்குறை ஏற்பட்டுக் கடன் கொடுத்தவர்களுக்குக் கடனைத் திருப்பிச் செலுத்துவதற்குத் துன்பமோ, சாத்தியக்கூறின்மையோ ஏற்பட்டாலும், இந்தப் பற்றுக்குறைப் பங்கு, மூலதனத்தை முழுமையாகக் கட்டிவிட்ட பிறகு, உறுப்பினரிடமிருந்து அவர்களுடைய சொத்துகள் வரைக்கும் விதிக்கப்படும் விகிதாச்சாரப்படி வசூல் தொகைகளிலிருந்து, வசூலிக்கப்படும். சங்கம் மூடப்படும்போது அதனுடைய சொத்துகளுக்கு நிதி வழங்குவதற்கு உறுப்பினர் ஒப்புக்கொள்கிறார். அம்மாதிரி வழங்கப்படும் நிதி சங்கம் திருப்பிக் கொடுக்கவேண்டிய கடன்களைப் பொறுத்துத் தீர்மானிக்கப்படுகிறது. இந்தப் பொறுப்புசங்கம் கலைக்கப்படும் போதுதான் எழும். மேலும், அது பிரிவு 87 (2) (ஆ)-ன் கீழ், கலைப்பாளரால் விதிக்கப்படும் விகிதாசார உதவித் தொகைக்குத் தொடர்புள்ளது. சங்கத்திற்குக் கடன் கொடுத்த ஒருவரால் தனிப்பட்ட உறுப்பினர்மீது நேரிடையாக நடவடிக்கை எடுக்கத் தடை செய்யப்பட்டிருக்கிறது. ஒரு வரையறுக்கப்படாத சங்கத்தில் ஒரு நபர் எடுக்கும் பங்கு மூலதனம் அவருடைய பொறுப்பைத் தீர்மானிக்காது.

தமிழ்நாட்டில் விவசாயக் கடன் சங்கங்கள் அநேகமாக வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில் அமைக்கப்படு

கின்றன. விவசாயக் கடன் சங்கங்களால் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய பொறுப்பு வகையானது இன்றைய நிலையில் குறிப்பான கவனத்துக்குரிய செய்தியாகும். இத்தனை ஆண்டுகளாக விவசாயக் கடன் சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்பை ஏற்றுக்கொள்வதுதான் வழக்கமாக இருந்தது. இந்தியாவில் ரேய்பேசன் சங்கங்களைப் பின்பற்றிக் கிராமக் கூட்டுறவுக் கடன் சங்கங்களின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றாக வரையறுக்கப் படாத பொறுப்பு இருந்தது. இந்தக் கொள்கை 1904ஆம் வருடத்தியக் கூட்டுறவு நாணயச் சங்கங்களின் சட்டத்தில் முதன் முதலில் இடம் பெற்றுப், பிறகு 1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில் மறுபடியும் சேர்க்கப்பட்டு, அகில இந்தியக் கூட்டுறவுச் சட்டத்திற்குப் பதிலாக சில மாநிலங்களில் நிறைவேற்றப்பட்ட சொந்த மாநிலச் சட்டத்திலும், சேர்க்கப் பட்டிருக்கின்றன. கடன் கொடுப்பவர்கள் நோக்கத்தில் தங்களுடைய கடன் பெறும் தன்மையைச் சங்கங்கள் அதிகரித்துக் கொள்ள எதிர்பார்க்கப்பட்டதால் துவக்கத்தில் பிரதமக் கடன் சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில் இருந்தன.

சென்னை மாநிலத்தில் 1940ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட கூட்டுறவுக் குழுவின் பெரும்பான்மையினர் வரையறுக்கப்படாத பொறுப்பின்வழி பயன்பெறும் காலம் போய்விட்டது என்று கருதினர். நெடுங்காலம்வரை தமிழ்நாட்டில் பல கூட்டுற—வாளர்கள் வரையறுக்கப்படாத பொறுப்பைக் கிராமக் கூட்டுறவுக் கடன் நிறுவனத்தில் ஓர் அடிப்படைக் கொள்கையாக வற்புறுத்த வேண்டும் என்ற கருத்து கொண்டிருந்தனர். மத்திய வங்கிகளால் கிராமக் கடன் சங்கங்களுக்குக் கொடுக்கப்படும் கடன்களுக்கு ஒரு பெரிய ஈடாக வரையறுக்கப்படாத பொறுப்பைக் கருதி வந்தது தான் இந்தக் கருத்திற்குப் பெரும்பாலும் காரணமாக இருந்தது. மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் வைப்புத் தொகைகள், விவசாயக் கடன் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பிலிருந்தால் பாதிக்கப்பட்டு, வரையறுக்கப்பட்ட பொறுப்புள்ள கிராமக் கடன் சங்கங்களுக்கு மத்திய வங்கிகள் கடன் கொடுத்தால் மக்கள் தங்கள் வைப்புத் தொகைகளை திரும்பப் பெற்றுக்கொள்வார்கள் என்றுகூடக் கருதப்பட்டது.

ஒரு கிராமச் சங்கத்தின் உறுப்பினர்கள் தங்கள் விவகாரங்களை ஒருவருக்கொருவர் அறிந்திருக்கிறார்கள். ஒருவருக்கொருவர் வாங்கும் கடன் தொடர்பாக ஒருவருக்கொருவர் கண்காணிப்பு இருந்து கடன்கள் தவணைக் காலத்தில் திருப்பிச் செலுத்தப்

படுகிறது என்ற ஒரு முக்கியக் கருத்தின் பேரில் வரையறுக்கப்படாத பொறுப்பு அடிக்கடிக் கோரப்பட்டது.

ஆனல், இன்று கிராம வாழ்வின் நிலைமை மாறிவிட்டது. இன்று நிறுவப்படும் விவசாயக் கடன் சங்கத்தின் வகையும் வேறுபட்டிருக்கிறது. 1904ஆம் வருடத்தியச் சட்டத்தில் இந்தக் கொள்கை இடம் பெற்று இந்திய கவர்னர் ஜெனரல் குழுவில் விவாதிக்கப்பட்டபோது அதற்கு எதிர்ப்பு இருந்தது. காலஞ்சென்ற கோகலே அவர்கள்கூட 'வரையறுக்கப்படாத பொறுப்பு கிராம இந்தியாவின் பல பாகங்களில் நம்முடைய குடியானவர்கள் புரிந்துகொள்ள முடியாத ஒரு கொள்கையாகும். அத்தகைய ஒரு கொள்கை வற்புறுத்தப்பட்டால், எந்த வகுப்பு மக்களின் கூட்டுறவும், உதவியும் இன்றியமையாதவையாக இருக்கின்றனவோ அதே மக்கள் இந்தப் புதிய சமுதாயத்திலிருந்து தூரத்தில் வைக்கப்படுவார்கள்' என்று கூறியுள்ளார்கள். இந்த வார்த்தைகள் இன்றுகூட உண்மையானவையே.

தமிழ்நாட்டில் இதனை ஆராய்ந்த நாராயணசாமி பிள்ளை குழு (1956) வரையறுக்கப்படாத பொறுப்புக்குப் பதில் பெரிய சங்கங்களில் வருங்காலத்தில் உத்தரவாதப் பொறுப்பு இருக்க வேண்டும் என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். அந்தக் குழுவின் சிபாரிசின்பேரில்தான் 1932ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தின் 4 (1) பிரிவு விவசாயக் கடன் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையிலும்கூடப் பதிவு செய்வதற்கு அனுமதியளித்துத் திருத்தப்பட்டது. அம்மாதிரியே முதன்முதல் கிராம வங்கிகள் உத்தரவாதப் பொறுப்பின் அடிப்படையில் நிறுவப்பட்டன.

கூட்டுறவுச் சட்டக் குழுவால் (1957) தயாரிக்கப்பட்ட மாதிரி மசோதாவில் விவசாயக்கடன் சங்கங்கள் ஒரு பொதுவான விதியாக வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில் இருக்கவேண்டும் என்று (27-ஆ) பகுதியில் சரத்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் அந்தக் குழுவினர் மாநில அரசாங்கங்கள் விரும்பினல் விவசாயக் கடன் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின் பேரில் பதிவு செய்வதற்கு, மாதிரி சட்டத்தில் தக்க மாறுதல்களைச் செய்து கொள்ளலாம் என்று கருதினர். சங்கத் தோற்றுவிப்பாளர்கள் விரும்பினல் பொறுப்பு பிரச்சினை அவர்கள் முடிவுக்கு விட்டுவிடப்படவேண்டும் என்றும் கருதினர். மேத்தா (V. L. Mehta) தலைமையில் இயங்கிய கூட்டுறவுக் கடன் குழு (Co-operative Credit Commitee) (1960)

அபிப்பிராயப் போக்கு சில மாநிலங்களில் வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்குச் சாதகமாக இருந்தது என்றும் வேறு சில மாநிலங்களில் புதிய நிறுவனங்கள் இன்னும் வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில் தான் பெரும்பாலும் இருந்தன என்றும் தெரிவித்திருக்கிறது. இந்திய அரசாங்கம் மாநிலங்களுக்கு எழுதிய 11–5–55 தேதிய, கூட்டுறவுக் கொள்கைபற்றிய, கடிதத்தில் கிராமச் சங்கங்களில் உறுப்பினருடைய பொறுப்பு வரையறுக்கப்படாததாகவோ அல்லது வரையறுக்கப்பட்டதாகவோ இருக்கலாம் என்றும், இந்தப் பிரச்சினை சம்பந்தப்பட்ட கிராமச் சங்கத்தில் உறுப்பினர்களின் தீர்மானித்திற்கு விட்டுவிடப் படவேண்டும் என்றும் கருத்து தெரிவித்திருக்கிறது.

மேத்தா குழு, கடன் சங்கங்கள் தன்னிறைவு அடிப்படையில் (Poweriable basis) சீரமைக்கப்பட வேண்டும் என்று பரிந்துரை செய்தது. இந்தச் சீரமைக்கப்பட்ட கிராமச் சங்கம், கடனைத் தவிர மற்ற சேவைகளையும், மேற்கொள்ள வேண்டும் என்றும் அந்தக் குழுவினர் எதிர்பார்த்தனர். வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் இயங்கும் நிறுவனங்கள் தாம் மேலான தகுதியானவை என்றும் கருதினர். நாட்டில் பொதுவான எண்ணம் வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்கு மிகவும் சாதகமாக இருக்கிறது. பல மாநிலங்களில் பழைய சங்கங்களுக்கு வரையறுக்கப்படாத பொறுப்பு கைவிடாமல் வைத்துக்கொண்டு அநேக புதிய சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பின்பேரில் பதிவு செய்யப்பட்டு வருகின்றன. மகாராஷ்டிரம், குஜராத் மாநிலங்களில் வரையறுக்கப்பட்ட பொறுப்புதான் விதியாக இருக்கிறது. இந்திய யூனியனில் 1967ஆம் ஆண்டு ஜூன் முடிவிலிருந்த 1,79,000 விவசாயக் கடன் சங்கங்களில் 1,25,000 சங்கங்கள் (அதாவது 70%) வரையறுக்கப்பட்ட பொறுப்பில் இருந்தன. வரையறுக்கப்படாத பொறுப்புக் கொள்கை உதித்த மேற்கு ஜெர்மனியில் கூட, வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையின் பேரில் நிறுவப்பட்ட கிராம நாணயச் சங்கங்கள் 1963ஆம் ஆண்டின் முடிவில் இருந்த மொத்த சங்கங்களின் எண்ணிக்கையில் 62% இருந்தன. 1938ஆம் ஆண்டு இறுதியில் இது 8% சதவிதமாக இருந்தது (சந்தானம் குழு).

நாட்டில் குறிப்பாக விவசாய உற்பத்தியைப் பெருக்கும் நிலையில் விவசாயக் கடன் சங்கங்கள் விவசாயக் கடன் (குறுகிய காலக் கடனும் மத்திய காலக் கடனும்) வழங்குவதில் பயன் கொடுக்கும் வகையில் பெருமளவு பங்கு கொள்ளவேண்டி ஐந்தாண்டுத் திட்டங்களில் தொடர்ந்து அம்மாதிரி வளர்ச்சித்-

திட்டங்கள் தீட்டியிருக்கும் சூழ்நிலையில், இது பற்றிய கருத்து படிப்படியாக மாறிக்கொண்டு வந்தது. கூட்டுறவுத் திட்டக் குழு (1946) (The Saraiyo Commitee on Co-operative Planning) கூட்டுறவுக் கடன் இயக்கம் விரிவுபடுவதற்கு வரையறுக்கப்படாத பொறுப்பு பொதுவாக மிகவும் பயனுள்ளதாக இல்லை என்று கருதியது. மேலும் உறுப்பினர்கள் தங்கள் சொத்தை உரிமை மாற்றம் செய்வதற்கு ஒரு தடையுமில்லாத காரணத்தால் இந்தப் பொறுப்பு பெரும்பாலும் சட்டஅளவில் மட்டும் இருந்தது என்று கருதப்பட்டது. கிராமக் கடன் விசாரணைக் குழு (1954) எளிய கடன் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையின் பேரில் நிறுவப்பட வேண்டும் என்று பரிந்துரை செய்தது. இந்தச் சங்கங்களின் உறுப்பினர்களின் பொறுப்பு அவர்கள் எடுத்திருக்கும் பங்குகளின் மதிப்புக்கு அல்லது பங்குகளின் சில மடங்குக்கு வரையறுக்கப்பட்டுள்ளதாக இருக்கும் இந்த வரையறுக்கப்படாத பொறுப்பு கூட கிராம மட்டத்திலுள்ள கூட்டுறவு நிறுவனங்களில் தான் அதிகமாக இருந்தது. 30–6–58-ல் 55% சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்பில் இருந்தன. உத்திரப்பிரதேசம், பீகார், பம்பாய் மாநிலங்கள் தவிர மற்ற இடங்களில் வரையறுக்கப்படாத பொறுப்புதான் விதியாக இருந்தது.

அப்படிச் செய்யப்பட்டால், கூட்டுறவுச் சங்கங்களும் அதன் உறுப்பினர்களும் கொஞ்சம் கொஞ்சமாக வரையறுக்கப்பட்ட பொறுப்பைப் பின்பற்றலாம். கிராம வங்கிகளும் (Rural Banks), விவசாய வங்கிகளும் (Agricultural Banks) அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவால் சிபாரிசு செய்யப்பட்ட பெரிய அளவு சங்கங்கள் மாதிரி உத்தரவாதப் பொறுப்பின் அடிப்படையின் பேரில் நிறுவப்பட்டன. கொள்கை ரீதியில் சீரமைப்பின் பேரில் தன்னிறைவு பெற்ற சங்கங்களாக நிறுவப்பட்ட சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில் அமைக்கப்பட்டன. அதன் பயனாக 30–6–67–லிருந்த 10, 618 விவசாயக் கடன் சங்கங்களில் 502 (4·4) மாத்திரம் தான் உத்தரவாதப் பொறுப்பின் பேரிலிருந்தன.

ஏறக்குறைய ஒரே பொருளாதார நிலையிலுள்ளவர்களும் ஒருவருக்கொருவர் நேராகத் தெரிந்தவர்களும் கொண்ட உறுப்பினர்கள் அடங்கிய சீரிய கூட்டுறவுச் சங்கங்களுக்காகத்தான் வரையறுக்கப்படாத பொறுப்புக் கொள்கை ஆரம்பிக்கப்பட்டது. இந்தச் சங்கங்களின் நடிவடிக்கை கடன் கொடுப்பது மாத்திரம் தான். அம்மாதிரிச் சங்கங்களில் உறுப்பினர்களின் கடன் பெறும்

திறன் நம்பிக்கை, தகுதியின் அடிப்படையில் அமைந்திருந்தது. உறுப்பினர்களும் தங்கள் பொறுப்பையேற்றுக்கொள்வதற்குச் சாத்தியமாக இருந்தது. ஆனால், இப்பொழுது விவசாயக் கடன் சங்கங்கள் வேறு பாணியில் நிறுவப்பட்டோ அல்லது சீரமைக்கப் பட்டோ இருக்கின்றன. ஒரு விவசாயக் கடன் சங்கம் 2 அல்லது 3 கிராமங்களில் செயல்பட்டு பெரிய அளவுச் சங்கமாக இயங்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்தச் சங்கத்தில் எல்லையிலுள்ள ஒவ்வொரு வயதுவந்த நபரும் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளப்படும் உரிமை பெற்றவர். (பிரிவு 17 (2) (அ)). அவர்களுக்கு, கடன் பெறவும், மற்றும் சங்கத்தின் இதர சேவைகளைப் பயன்படுத்திக் கொள்ளவும் உரிமை உண்டு. பிரிவு (19), ஆபத்தடங்கிய பல்வேறு கடனில்லாத மற்ற நடவடிக்கைகளையும் சங்கங்கள் மேற்கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தப்படும் இன்றைய நிலைமையில், வரையறுக்கப்படாத பொறுப்பைக் கைவிடாமல் வைத்துக்கொள்வதில் சிறிதளவும் நியாயம் இல்லை என்று சந்தானம் குழுவினர் கருத்து கொண்டனர். ஆகையால், அந்தக் குழுவினர் இனிமேல் எல்லா விவசாயக் கடன் சங்கங்களும் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில்தான் பதிவு செய்யப்படவேண்டும் என்று பரிந்துரை செய்தனர். முன்னரே இருந்துவரும் சங்கங்கள் தன்னிறைவு (Viable) பெற்றவையாக இருந்து வரையறுக்கப்பட்ட பொறுப்பை ஏற்றுக்கொள்ள விரும்பினால் அவ்வாறு செய்துகொள்ள அவை அனுமதிக்கப்பட வேண்டும்.

தமிழ்நாட்டில் இதுபற்றிக் கொள்கையளவில் ஒரு முடிவும் எடுக்கப்படவில்லை. எனினும், நிலைமை என்னவென்றால் சட்டப் படி பங்குகளுக்கோ அல்லது உத்தரவாதத்திற்கோ வரையறுக்கப் பட்ட பொறுப்பு அடிப்படையின்பேரில் விவசாயக் கடன் சங்கம் பதிவு செய்யப்படலாம். தமிழ்நாட்டில் பங்குகளுக்கு வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்குச் சாதகமாக எண்ணம் உருவாகவில்லை. திறந்த அங்கத்துவமும், விவசாயக்கடன் தாராளமாக கொடுக்கப்படவேண்டுமென்றும் வற்புறுத்தப்படும் இந் நாளில் வரையறுக்கப்படாத பொறுப்பிலிருந்து வரையறுக்கப் பட்ட பொறுப்பிற்கு, மொத்தமாகவும் உடனேயும் மாறுதல் செய்வது விரும்பத்தக்கது அல்ல என்று அஞ்சப்படுகிறது. ஆகையால், விவசாயக் கடன் சங்கங்கள் உத்தரவாதப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளலாம். அது ஒரு மாற்ற இடையீற்று நிலையாகும். சீரமைக்கப்பட்ட விவசாயக் கடன் சங்கம் உத்தரவாதப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, கொடுக்கப்பட்ட பங்கு மூலதனத் திற்கு ஒன்றில் இருந்து ஐந்து மடங்களவுக்குப் பொறுப்பு வரையறுக்கப்படலாம்.

(xv) 'மேற்பார்வை ஒன்றியம்' (Supervising Union) : மேற்பார்வை ஒன்றியம் என்றால், தன்னுடைய உறுப்பினராக இருக்கும் சங்கங்களை அமைப்பதையும், உதவி செய்வதையும், அபிவிருத்தி செய்வதயும், மேற்பார்வை செய்வதையும் பிரதானமான நோக்கமாகக்கொண்ட ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கம் என்று பொருள். அந்தச் சங்கம் கூட்டுறவுக் கொள்கைகளைப் பற்றியும், கூட்டுறவு நடைமுறைகளைப்பற்றியும் கல்வி பரப்புவதை அல்லது பிரச்சாரம் நடத்துவதை நோக்கமாகவும் கொள்ளலாம். மேற்பார்வை ஒன்றியங்கள் வியாபார நிறுவனங்களல்ல. அவை வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் இயங்குகின்றன. 4 (1) பிரிவின்படி ஒரு பதிவு பெற்ற சங்கத்தை உறுப்பினராகக் கொண்ட ஒரு சங்கத்தின் பொறுப்பு வரையறுக்கப்பட்டதாக இருக்கவேண்டும். முதல் முதல் ஆரம்பிக்கப்பட்ட ஒன்றியம் மேற்பார்வை நிலையமாக மாத்திரமல்லாமல் உத்தரவாத ஒன்றியமாகக்கூட இருந்தது.

இணைக்கப்பட்ட சங்கங்கள், ஒன்றியத்தின் சிபாரிசின் பேரில் வழங்கப்பட்ட கடன்களின்பேரில் ஏற்பட்ட எல்லாப் பாக்கிக்கும், கூட்டாகவும், தனித்தனியாகவும் பொறுப்புள்ளவையாகும். இந்த மாதிரி ஒன்றியம் பர்மா நாட்டிலும், நம் நாட்டிலும் மத்திய மாநிலத்திலும் இருந்து வந்தன. மாக்லகன் குழு (1915) இந்த முறையை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கருதி இந்த முறையை நம் நாட்டில் விரிவாக்கவேண்டுமென்பதை அவர்களுடைய மிகவும் முக்கிய சிபாரிசுகளில் ஒன்றாகக் கருதினார்கள். எனினும், தமிழ்நாட்டில் இந்தவிதமான ஒன்றியங்களை அமைப்பதில் எதிர்ப்பு இருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக, உத்தரவாதம் அளிக்காது மேற்பார்வை மட்டும் செய்யும் ஒரு புதுவித ஒன்றியம் உருவாயிற்று. இந்த ஒன்றியம் சங்கங்களுக்குக் கடன் வழங்குவதில் நேரடித் தொடர்பு வைத்துக்கொள்ளவில்லை. ஆகையால், இணைக்கப்பட்ட சங்கங்கள் பரஸ்பர மேற்பார்வை மூலமும், கண்காணிப்புமூலமும், ஒன்றுக்கொன்றின் செயல்பாட்டைத் திருப்பிச் சீர்திருத்தம் செய்யும் என்ற கொள்கையின் பேரில் மேற்பார்வை ஒன்றியங்கள் ஆரம்பிக்கப்பட்டன. அதாவது ஒரு சங்கத்தின் உறுப்பினர்கள் பரஸ்பர மேற்பார்வையைத் தங்களுக்குள் மேற்கொள்ள எதிர்பார்க்கப்பட்டன. ஓர் ஒன்றியத்தின் பிரதான நோக்கங்கள், இணைக்கப்பட்ட சங்கங்களை மேற்பார்வை செய்வதும், அவற்றின் செயல்பாட்டை வளர்ப்பதும், மத்திய வங்கிக்கு இந்தச் சங்கங்களின் கடன் விண்ணப்பங்களைச் சிபாரிசு செய்வதும், புதிய சங்கங்களை நிறுவுவதும், இணைக்கப்பட்ட சங்கங்களிடையே எழும் பொது நலச் செயல்களைத் தீர்ப்பதும் ஆகும்.

மேற்பார்வை ஒன்றியத்தின் பயனைப்பற்றிப் பலவித கருத்துகள் நிலவிவருகின்றன. அவற்றுள் ஒன்றியங்கள் எந்தவித உபயோகமுள்ள வேலையும் செய்யாத அனுவசியமான நிறுவனங்கள் என்பது ஒரு கருத்து. ஏனென்றால், மத்திய வங்கிகளே சங்கங்களுடைய மேற்பார்வைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கின்றன. இன்னொரு கருத்து, மேற்பார்வை ஒன்றியங்கள் பயனுள்ள பணிகளைச் செய்கின்றன என்பதும், அவை மத்திய வங்கிகளுக்கும் கிராமப் பிரதமச் சங்கங்களுக்குமிடையே ஒரு சரியான இணைப்பாக இருக்கின்றன என்பதும், 1939 ஆம் ஆண்டில் அமைக்கப்பட்ட சென்னைக் கூட்டுறவுக் குழு (விஜயராகவாச்சாரி குழு) இந்த விஷயத்தை ஆராய்ந்தது. பலவிதக் கருத்துகள் அதனிடம் கூறப்பட்டமையால், மேற்பார்வை ஒன்றியங்களை வைத்துக்கொள்வதோ, அல்லது தள்ளிவிடுவதோ என்பதை மத்திய வங்கிகளுடைய முடிவுக்கு விட்டுவிட வேண்டும் என்று சிபாரிசு செய்தது. பின்னர் இந்த விஷயத்தை ஆராய்ந்த மற்றொரு கூட்டுறவுக் குழுவினர் (நாராயணசுவாமிப் பிள்ளைக் குழு) (1956) மேற்பார்வை ஒன்றியங்கள் அவசியம் என்றும் அவை நீடிக்கப்பட வேண்டும் என்றும் கருத்து தெரிவித்தார்கள். அந்தக்குழு, ஒன்றியங்களில் சில சரியா வேலை செய்யவில்லையானால், அதற்குக் காரணம் ஒன்றியங்கள் முறையினுடைய தவறு அல்ல என்றும், ஆனால், அது ஒன்றியங்களை நடத்தும் மனிதர்களுடைய தவறு என்றும் கருதினார்கள்.

ஒன்றியங்களுக்குப் போதிய நிதியும் அதிகாரங்களும் கூட இல்லாமல் இருக்கிறது. ஆனால், ஒன்றியங்கள் ஒரு சிரமமான பணியை மேற்கொள்ளவேண்டியிருக்கிறது. பரஸ்பர உதவி என்ற கூட்டுறவுத் தத்துவத்திற்கு அவை முற்றிலும் விலகியிருக்கின்றன. அவை உள்ளூர்தலைவர்களின் சமுதாய–பொருளாதார நலன்களைத் தங்கள் சொந்த வட்டாரத்திற்கப்புறமும் விஸ்தரிக்கின்றன. தமிழ்நாட்டில் 30–6–55–ல் 148 ஒன்றியங்கள், 8,530 இணைக்கப்பட்ட சங்கங்களுடன், இருந்தன. சந்தானம் குழுவினர் சங்கங்களை மேற்பார்வை செய்வது மத்திய வங்கியாக இருப்பதால், ஒன்றியம் பெயரளவில் இருக்கும் ஒரு நிறுவனம் என்றும், மத்திய வங்கியில் இணைக்கப்பட்ட விவசாயக் கடன் சங்கங்களைப் பிரதிநிதித்துவம் செய்வதற்கு மத்திய வங்கிக்கு ஓர் இயக்குநரைத் தேர்ந்தெடுப்பது தான் அதனுடைய முக்கிய வேலையாக இருக்கிறது என்றும், அபிப்பிராயப்பட்டு மேற்பார்வை ஒன்றியங்களை எடுத்துவிட வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறார்கள். ஒன்றியங்களுடைய பயனைப்பற்றி பலவித கருத்துகள் இருப்பதாலும், சில ஒன்றியங்கள் பயனுள்ள வகையில் வேலை செய்வதாலும்,

கொள்கையளவில் கூட்டுறவாளர்கள் அவற்றை எடுத்துவிட வேண்டும் என்பதற்குடன்படாமல் அவை பலப்படுத்தப்பட வேண்டும் என்றும் அவற்றுக்குப் போதிய நிதிகளும் அதிகாரங்களும் கொடுக்கப்பட்டால் அவை இணைக்கப்பட்ட சங்கங்களுக்குச் சிறந்த சேவை புரிந்து மத்திய வங்கிகளுக்குத் தங்கள் உறுப்பினர்களிடமிருந்து கடன்களை வசூல் செய்வதில் உதவி புரியக்கூடும் என்றும் கருதுகிறார்கள்.

(xvi) தீர்ப்பாயம் (Tribunal): தீர்ப்பாயம் என்பது 95ஆம் பிரிவின்கீழ் அமைக்கப்பட்ட ஒரு நடுவர் நீதிமன்றம். தீர்ப்பாயம் ஒரு மேல்விசாரணை அதிகாரமுள்ள ஒரு நீதிமன்றம். கூட்டுறவுச் சட்டக் குழுவினர் (1957) ஒவ்வொரு மாநிலமும் மத்தியஸ்த நடவடிக்கைகளில் நிறைவேற்றப்பட்ட கட்டளைகளுக்கெதிராகச் செய்யப்படும் மேல்முறையீடுகளை விசாரிப்பதற்கு ஒரு தீர்ப்பாயத்தை அமைக்கலாம் என்று யோசனைகூறி இருந்தார்கள். பம்பாய் மாநிலம் தவிர எல்லா மாநிலங்களிலும் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் செய்யப்பட்ட உத்தரவுகள், முடிவுகள், தீர்ப்புகள் முதலியவைகளையெதிர்த்துச் செய்யப்படும் மேல் முறையீடு பதிவாளருக்கோ அல்லது மாநில அரசாங்கத்திற்கோ செய்து கொள்ளப்படலாம்.

ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள முக்கியப் பங்கின் காரணமாகப் பதிவாளரின் நிருவாகப் பொறுப்புகள் அதிகரித்திருக்கின்றன. ஆகையால், சில விஷயங்களிலாவது மேல்முறையீடுகளை விசாரிக்கும் வேலை வேறு சிலருக்கு ஒப்படைக்கப்பட வேண்டும். மேலும், கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகள் வளர்ச்சியடைந்திருக்கின்றதனால், மேற்குறித்த விஷயங்கள் அதிக சிக்கலானவையாகவும் தொழில் நுட்பத்தன்மை வாய்ந்தவையாகவும் இருக்கின்றன. ஆகையால், கூட்டுறவுச் சட்டக் குழுவினர் பம்பாய் மாநிலத்திலிருக்கிறபடி ஒவ்வொரு மாநிலமும் மத்தியஸ்த நடவடிக்கைகளில் நிறைவேற்றப்பட்ட உத்தரவுகளையெதிர்த்துச் செய்யப்படும் மேல்முறையீடுகளை விசாரணை செய்வதற்கு ஒரு தீர்ப்பாயத்தை அமைக்கலாம் என்பது விரும்பத்தக்கது என்று கருதியது. அவ்வண்ணமே அந்தக் குழுவினர் தயாரித்த மாதிரிக் கூட்டுறவு மசோதாவில் பம்பாய் மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில் (1925) உள்ளபடி ஒரு கூட்டுறவுத் தீர்ப்பாயத்தை அமைப்பதற்கு பகுதி 100, 101-ல் ஏற்பாடு செய்திருக்கின்றனர். அநேக மாநிலச் சட்டங்கள் இப்பொழுது தீர்ப்பாயங்களை அமைப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கின்றன. சென்னைக் கூட்டுறவுச் சங்கச்

சட்டத்ில்கூட (1962), 95ஆம் பிரிவின் கீழ் அரசாங்கம் சட்டத்தின் நோக்கத்திற்காக தேவைப்படும் பல தீர்ப்பாயங்களை அமைக்கலாம். 95 (2) பிரிவின்கீழ், ஒவ்வொரு தீர்ப்பாயமும் ஒரு நபரை மட்டுமே கொண்டதாக இருக்கவேண்டும். அவர் உதவி நீதிபதி (Subordinate Judge) பதவிக்குக் குறையாத ஒரு நீதித் துறை அதிகாரியாக இருக்கவேண்டும். ஆகையால், தீர்ப்பாயத்தில் அமர்த்தப்பட்ட ஒரு நபர், சங்கங்களை நிருவாகம் செய்யும் கூட்டுறவுத் துறைக்கு வெளியேயுள்ள ஓர் அதிகாரியாகவும் சென்னை நீதித் துறை அதிகாரியாகவும்கூட இருக்க வேண்டும்.

தீர்ப்பாயத்திற்கு உத்தியோகப் பற்றற்றவர்களை அமர்த்த முடியாது. அம் மன்றம் எத்தகைய மேல் முறையீடுகளை விசாரிக்கலாம் என்பது சட்டத்தின் 96ஆம் பிரிவில் விவரிக்கப் பட்டிருக்கிறது.

# 3. பதிவாளரை நியமனம் செய்தல்
## (Appointment of Registrar)

1. பதிவாளரை அரசாங்கம் நியமிக்கவேண்டும் (Government to appoint the Registrar): சட்டத்தின் 3ஆம் பிரிவின்கீழ், அரசாங்கம் ஒருவரை சென்னை மாநிலத்திற்காகக் கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளராக நியமிக்கலாம். மாநிலத்தில் எந்த ஒரு பகுதிக்-காகவுப் கூட கூட்டுறவுச் சங்கப் பதிவாளராக அரசாங்கம் ஒரு நபரை நியமிக்கலாம். அரசாங்கம் சட்டத்தின்கீழ் பதிவாள-ருடைய எல்லா அல்லது எந்த அதிகாரத்தையும் வேறு எந்த நபர் களுக்கும் கூட அளிக்கலாம்.

2. பதிவாளரின் விவகார எல்லை (Jurisdiction of the Registrar) சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட பதிவாளரின் விவகார எல்லை சென்னை மாநிலம் முழுவதும் அமைந்துள்ளது. கூட்டுறவு இயக்கம் தோன்றிய நாளிலிருந்து இதுதான் நிலைமை. 1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கச் சட்டம் (மத்தியச் சட்டம்) மாநிலத்தின் எந்த ஒரு பாகத்திற்காகவும் பதிவாளரை நியமிப் பதற்கு ஒரு சரத்து கொண்டிருந்தது. 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில் இந்தச் சரத்து திரும்பவும் ஏற்படுத்தப்பட்டது. 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்திலும் இந்தச் சரத்து இருக்கிறது.

தலைமைச் சங்கங்களும், மத்தியச் சங்கங்களும் ; ஐந்துக்கு மேற் படாத பதிவான சங்கங்களின் உறுப்பினர்களாகப் பதவி வகித்தல் சம்பந்தமாகப், பிரிவு 28 (3)-ல், 'தலைமைச் சங்கங் களுக்கும் மத்தியச் சங்கங்களுக்கும்' குறிப்பீடு செய்யப்பட்டிருக் கிறது. பிரிவு 15-ன்கீழ்ப், பதிவாளர் சங்கங்களை வகைப் படுத்தல் வேண்டும். விதி 11 (5)-ன்கீழ், எந்தச் சங்கமும் ஒரு கூட்டிணைப்புச் சங்கமாக இருந்தால், அது மேற்கொண்டும், தலைமைச் சங்கம் என்றும் மத்தியச் சங்கம் என்றும் பிரதம சங்கம் என்றும் வகைப்படுத்தப்படலாம். கூட்டிணைப்புச் சங்கம் எது

என்பது விளக்கப்படவில்லை. சட்டத்தில் அல்லது விதிகளில் ஒரு கூட்டிணைப்புச் சங்கம் எது என்று விளக்கப்படுவது நன்று. பம்பாய் மாநிலம் தன் சட்டத்தில் 'கூட்டிணைப்புச் சங்கம்' எது என்பதை விளக்கிருக்கிறது. 1960ஆம் வருடத்திய மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 2ஆம் பிரிவில், சொற்பொருள் விளக்கங்களின்கீழ்ப், பின்வருமாறு சொல்லப் பட்டிருக்கிறது. 'கூட்டிணைப்புச் சங்கம்' என்றால், (அ) ஐந்துக்குக் குறையாத சங்கங்கள் உறுப்பினர்களாகக் கொண்டதும், (ஆ) உறுப்பினர்களாகவுள்ள சங்கங்களுக்கு அத்தகைய சங்கத்தின் பேரவைக் கூட்டத்தில் வாக்குகளின் மொத்த எண்ணிக்கையில் ஐந்தில் நான்குக்கும் குறையாத வாக்குகளிருக்குமாறு வாக்குரிமை முறை செய்திருக்கும் ஒரு சங்கம்' என்று பொருள்படும்.

நடைமுறையில் மாநிலத்தின் ஒரு பகுதிக்காக எந்தக்காலத்திலும் ஒரு கூட்டுறவுச் சங்கப் பதிவாளர் நியமிக்கப்பட்டதில்லை. 1957ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட கூட்டுறவுச் சட்டக் குழுவினரால் தயாரிக்கப்பட்ட மாதிரி கூட்டுறவுச் சங்க மசோதாவில் மாநிலத்தின் ஒரு பகுதிக்காகப் பதிவாளரை நியமிக்கலாம் என்ற சரத்து விலக்கப்பட்டது. ஏனென்றால், அம் மாதிரியான சரத்து, மாநிலம் முழுவதிலும் கூட்டுறவுச் சங்கங்களின் செயல்பாட்டிற்கு வழிகாட்டுவதற்கும், அச் சங்கங்களை மேற்பார்வை செய்வதற்கும், கட்டுப்பாடு செய்வதற்கும் ஓரே ஓர் அதிகாரி இருக்க வேண்டுவது அவசியம் என்ற கருத்துக்கு முரண்பட்டதாக இருக்கிறது என்று கருதப்பட்டது. தமிழ் நாட்டில் பல்வேறு நபர்களுக்குப் பதிவாளருடைய அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தாலும், எந்தக் காலத்திலும் மாநிலத்தின் ஒரு பகுதியில் மாத்திரம் பணிபுரியும் கூட்டுறவுச் சங்கப்பதிவாளர் இருந்ததில்லை. 1960ஆம் வருடத்திய மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்திலும் இம் மாதிரியான சரத்து இல்லை. 1961ஆம் வருடத்திய சென்னை மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில் இந்த சரத்து அதாவது 'அல்லது அதனுடைய எந்த பகுதிக்காகவும்' என்ற சரத்து எடுத்துவிடப்பட வேண்டும்.

(3) அரசாங்கத்தால் பதிவாளரின் அதிகாரங்கள் வழங்கப்படுதல் (Conferment of the powers of the regiestrar by Government): அரசாங்கம் சட்டத்தின் கீழ் பதிவாளருடைய எல்லா அல்லது எந்த அதிகாரங்களையும் வேறு எந்த நபர்களுக்கும் வழங்கலாம். பதிவாளருடைய எல்லா அல்லது சில அதிகாரங்கள் வழங்கப் பட்ட இணைப் பதிவாளர் (Addisional regiestrar), கூட்டுப் பதிவாளர்கள், துணைப்பதிவாளர்கள், உப-பதிவாளர்கள் பதி

யுள்ள பல அதிகாரிகளால் பதிவாளர் உதவி செய்யப்படுகிறார். அந்த அதிகாரிகளுக்குச் சட்டத்தின்கீழ் வழங்கப்பட்ட அதிகாரங்களைக் காட்டும் ஒரு விவரணம் இந்த அத்தியாயத்தின் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. (அனுபந்தம் எண்-I பார்க்கவும்) கூட்டுறவுத் துறையில் பதிவாளருடைய அலுவல்நிலைக்குக் கீழ்ப்பட்ட அலுவலர்களுக்குச் சட்ட முறை அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தாலும், பொதுவாகப் பதிவாளர்களுடைய கட்டுப்பாட்டிற்குட்பட்டும், பதிவாளர் அப்போதைக்கப்போது அந்த அதிகாரங்களை எப்படிச் செலுத்த வேண்டும் என்பதுபற்றி வெளியிடும் கட்டளைகளுக்குட்பட்டும் அந்த அதிகாரங்களை அந்த அலுவலர்கள் செலுத்த வேண்டும். இந்த அதிகாரிகளைத் தவிர, பல கூட்டுறவு முதுநிலை ஆய்வாளர்களுக்கும், இளநிலை ஆய்வாளர்களுக்கும் (Senior & Junior Inspectors Co-op. of Societies) குறிப்பிட்ட அதிகாரங்கள், அவர்கள் சில சூழ்நிலைகளில் சில சட்டமுறையான கடமைகளை நிறைவேற்றும்பொழுது, வழங்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக ஆய்வாளர்கள், ஒருகூட்டுறவுச்சங்கத்தின் கணக்குகளைச் சட்டத்தின் 37ஆம் பிரிவின்கீழ், தணிக்கை செய்ய அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கின்றனர். 65ஆம் பிரிவின்கீழ் விசாரணை நடத்தவும், 91–92–93 பிரிவின்கீழ் சொத்துகளை ஜப்தி செய்தும் விற்பனை செய்தும் சங்கத்தின் உறுப்பினர்கள் கொடுக்க வேண்டிய பாக்கித் தொகைகளை வசூல் செய்வதற்கும் அதிகாரம் அளிக்கப்பட்டு இருக்கின்றனர். அம்மாதிரி அதிகாரம் தணிக்கை செய்வதற்கு அதிகாரம் அளிப்பதுபோல ஒரு பொது உத்தரவின் மூலமாவது அல்லது 37ஆம் பிரிவின்கீழ் விசாரணை செய்வதற்கு அளிக்கப்படும் அதிகாரம்போலத் தனிப்பட்ட நபர்களுக்கு ஒரு தனி உத்தரவின்மூலமாவது அளிக்கப்படலாம். அதாவது ஒரு நிலை அதிகாரிகள் அல்லது ஒரு தனிப்பட்ட அதிகாரிக்காவது அதிகாரம் அளிக்கப்படலாம்.

(4) இதர துறைகளின் தலைவர்களைப் பதிவாளராக நியமித்தல் (Appointment of the Heads of other Departments as Registrar) : தமிழ் நாட்டில் அரசாங்கம் இதர துறைகளின் தலைவர்களுக்குப் (Heads of other Departments) பதிவாளர் அதிகாரங்களை வழங்கியிருக்கிறது. 1956ஆம் ஆண்டுவரை, மாநிலத்திலுள்ள எல்லாவிதக் கூட்டுறவுச் சங்கங்களும் கூட்டுறவுச் சங்கப் பதிவாளரின் நிருவாகக் கட்டுப்பாட்டில் இருந்தன. 1956–66 ஆண்டுகளில் இவ்வித சங்கங்கள் மற்ற துறைகளின் கட்டுப்பாட்டிற்கு மாற்றப்பட்டு அந்தத் துறைகளின் தலைமை அதிகாரிகளுக்குச் சட்டத்தின்கீழ் பதிவாளருடைய அதிகாரங்கள் வழங்கப்பட்டன. இப்பொழுது கூட்டுறவுத் துறையின்

பதிவாளரைத் தவிர, அவருக்குச் சரிசமமாகவும், சுதந்தரமாகவும் பணிபுரியும் எட்டுப் பதிவாளர்கள் இருக்கிறார்கள். இந்த விவரங்களைக்கொண்ட ஒரு விவரணம் அனுபந்தம் II-ல் கொடுக்கப்பட்டிருக்கிறது.

(5) கூட்டுறவுச் சங்கங்களின் ஒன்றிணைந்த நிருவாக மேற்பார்வையின் அவசியம் (Need for unified administration of Co-op. Societies): ஒன்றிணைந்த நிருவாக மேற்பார்வையின் அவசியத்தைப் பற்றி முன் அத்தியாயத்தில் பேசப்பட்டிருக்கிறது. கூட்டுறவுச் சட்டக் குழுவினரால் (1957) தயாரிக்கப்பட்ட மாதிரிக் கூட்டுறவுச் சங்க மசோதாவில், அக் குழுவினர் நிலைமையை விளக்கி இருக்கின்றனர். கூட்டுறவுச் சட்டங்களில், பதிவாளருடைய எல்லா அல்லது எந்த அதிகாரங்களையும் மற்ற நபர்களுக்கு அளிப்பதற்காகச் சரத்து ஏற்படுத்தப்பட்டபோது சட்டத்தை நிருணயித்தவர்களின் நோக்கம், பதிவாளருடைய அதிகாரங்கள் வழங்கப்பட்ட நபர்கள் பதிவாளருக்கு உதவி செய்ய வேண்டும் என்பதாகவும், பதிவாளருக்குச் சரிசமமாகச் சுதந்தரத்துடன் பணிபுரியக் கூடாது என்பதாகவுமிருந்தது, என்று அந்தக் குழுவினர் கருதினர். ஒன்றிணைந்த கட்டுப்பாட்டிற்காகவும், வழிகாட்டுதலுக்காகவும் கூட்டுறவு நிதி நிறுவனங்களையும் அவைகளால் நிதி வழங்கப்பட்ட சங்கங்களையும் ஒரே ஓர் அதிகாரியின் நிருவாகப் பொறுப்பின்கீழ் வைப்பது விரும்பத்தக்கது என்று அவர்கள் கருதினார்கள். மற்ற துறைகள், நிருவாகம் தவிர, தொழில்நுட்ப அறிவுரையையும் உதவியையும் தொடர்ந்து கொடுத்து வரலாம். அப்படி இருந்தால்தான், மாநிலம் முழுவதும் ஒரேமாதிரியான விவகாரக் கொள்கையை நிறைவேற்றுவது உறுதிப்படும். கூட்டுறவுச் சங்க மாதிரி மசோதாவின் 5ஆம் பகுதியில், பதிவாளர்களின் அதிகாரங்கள் வழங்கப்பட்ட வேறு நபர்கள் பதிவாளரின் பொது மேற்பார்வைக்கும், கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டுப் பணிபுரிய வேண்டும் என்று திட்டவட்டமாகக் கூறப்பட்டிருக்கிறது.

1960ஆம் வருடத்திய மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில், கூட்டுறவுத் துறையின் பதிவாளருடைய கட்டுப்பாட்டின் கீழ்தான் பதிவாளரின் அதிகாரங்கள் வழங்கப்பட்ட நபர்கள் பணிபுரிய வேண்டும் என்று இருக்கிறது. அந்தச் சட்டத்தின் 3ஆம் பிரிவு பின்வருமாறு கூறுகிறது.

'மாநில அரசாங்கம், மாநிலத்திற்குப் பதிவாளராக இருக்க ஒரு நபரை நியமிக்கலாம்; மற்றும் அம்மாதிரி நியமிக்கப்பட்ட பதிவாளருக்குத் துணைபுரிய ஒன்று அல்லது ஒன்றுக்கு

மேற்பட்ட நபர்களையும் நியமிக்கலாம்; மேலும், பொதுவான அல்லது சிறப்பான உத்தரவின்மூலம் அந்த நபர் அல்லது நபர்களுக்குச் சட்டத்தின்கீழ் பதிவாளரின் எல்லா அல்லது ஏதாவது அதிகாரங்கள் வழங்கலாம். அம் மாதிரிப் பதிவாளருக்குத் துணை புரிய நியமிக்கப்பட்டு பதிவாளருடைய ஏதாவது அதிகாரங்களை வழங்கப்பட்ட நபர் அல்லது நபர்கள் பதிவாளருடைய பொதுவான வழிகாட்டுதலுக்கும் மேற்பார்வைக்கும், கட்டுப்பாட்டிற்கு முட்பட்டும் வேலை செய்யவேண்டும்'. 1961ஆம் வருடத்திய குஜராத் மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 3ஆம் பிரிவு கூட அதே மாதிரியாகக் கூறுகிறது. அதே சமயத்தில், ஒன்றிணைந்த நிருவாகக் கட்டுப்பாடானது, அதிகாரத்தைப் பரவலாக்குவதைத் (Decentralization of Powers) தடுக்கவில்லை. தற்பொழுது இளநிலை அலுவலர்கள், முன்னைவிட அதிகமான அதிகாரங்களைச் செலுத்துகிறார்கள். அனுபந்தத்தில் கண்டிருக்கும் அதிகார ஒப்படைப்பிலிருந்து (Delegation of Powers) கூட்டுறவுத் துறையில் எப்படி அதிகாரங்கள் பரவலாக்கப்பட்டிருக்கின்றன என்பதைக் காணலாம். பதிவாளருடைய சாதாரண கடமைகளில் சிலவற்றிலிருந்து அவரை விடுவித்து, கூட்டுறவு இயக்கத்தின் வேகமான வளர்ச்சிக்கான நடவடிக்கையைத் துரிதப்படுத்தும் நோக்கத்துடன் இந்த அதிகாரம் பரவலாக்கப்பட்டிருக்கிறது.

(6) தமிழ்நாட்டில் கூட்டுறவுத் துறையின் அமைப்பு (Set up of the Co-operetive Department in Tamil Nadu): தமிழ்நாட்டில், கூட்டுறவுத் தலைமைச் செயலகத்தில், ஓர் இணைப் பதிவாளராலும் (Additional Registrar) இரண்டு கூட்டுப் பதிவாளர்களாலும் (Joint Registrars) நிருவாகத் துறையில் பதிவாளர் உதவப்படுகிறார். தணிக்கைத் துறையில் சென்னை மண்டலக் கணக்கரால் (Accountant-General, Madras) அனுப்பப்பட்ட ஓர் அதிகாரி தலைமைத் தணிக்கை அதிகாரியாகப் (Chief Audit Officer) பதிவாளருக்கு உதவி செய்கிறார். தலைமை அலுவலகத்தில், கூட்டுப் பதிவாளர்களிடையே, கடமைகள் அடிப்படையில் (Functional Basis) வேலைகள் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. பதிவாளர் அலுவலகத்தில் துணைப் பதிவாளர்களும், உதவிப் பதிவாளர்களும், வேறு சில இளநிலை அலுவலர்களும் இருக்கின்றனர். மாவட்ட அதிகாரிகளின் வேலைகளைக் கட்டுப்படுத்த 8 மாநிலக் கூட்டுப் பதிவாளர்கள் (Regional Joint Registrars) இருக்கிறார்கள். சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும் கூட்டுப் பதிவாளர்களுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன. ஆனால், அவர்கள் பதிவாளரின் பொதுவான கட்டுப்பாட்டின்கீழ், வேலை செய்கிறார்கள். நில

அடிப்படையின்பேரில் (Territorial Basis) கூட்டுறவுத் துறையின் நிருவாகத்திற்காக இந்த மாநிலம் 52 வட்டங்களாகப் (Circles) பிரிக்கப்பட்டிருக்கிறது.

சென்னை நகரத்தில் கடமைகள் அடிப்படையில் 2 துணைப் பதிவாளர்கள் இருக்கிறார்கள். இந்த மாநிலத்திலுள்ள 54 வட்டங்களில் ஒவ்வொன்றும் ஒரு துணைப் பதிவாளர் பொறுப்பில் இருக்கிறது. துணைப் பதிவாளருக்குப் பதிவாளருடைய அதிகாரங்களில் பல ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. வட்டத்தில், கூட்டுறவுத் துறையின் கீழிருக்கும் சங்கங்களைக் குறித்த, எல்லா சட்டப்பூர்வமான கடமைகளையும் அவர் நிறைவேற்றுகிறார். ஒரு வட்டத் துணைப்பதிவாளருக்கு 3 அல்லது 4 சார்புப் பதிவாளர்களும், முதுநிலை ஆய்வாளர்களும் (Senior Inspectors), இளநிலை ஆய்வாளர்களும் (Junior Inspectors), மற்றும் இதர சிப்பந்திகளும் உதவி புரிகிறார்கள் சார்புப் பதிவாளர்களுக்குச் சட்டத்தின்கீழ் அதிகாரங்களில் சில கொடுக்கப்பட்டிருக்கின்றன.

முதுநிலை ஆய்வாளர்களும், இளநிலை ஆய்வாளர்களும் மேற்பார்வை, ஆய்வு, தீர்ப்பாணைகளை நிறைவேற்றுதல், சங்கங்களைக் கலைத்தல் போன்ற வேலைகளைச் செய்கிறார்கள். 52 வட்டத் துணைப் பதிவாளர்கள் தவிர, நிலவள வங்கிகளுக்காக 11 துணைப் பதிவாளர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய எல்லையிலுள்ள நிலவள வங்கிகளின் நிருவாகத்தை அவர்கள் கவனிக்கிறார்கள். வட்டார மட்டத்தில் (Blook Level) பொதுவாக ஒரு சார்புப் பதிவாளர், கூட்டுறவு விரிவாக்க அலுவலராகப் (கூட்டுறவு) (Extension Officer, Co-operation) பணி செய்கிறார். அவர்கூட மத்தியஸ்தம், விசாரணை, மேற்பார்வை, ஆய்வு போன்ற சட்டப்பூர்வமான கடமைகளைச் செய்கிறார். மற்றும், நிலவள வங்கிகளின் தொடர்பான வேலையையும் செய்கிறார். அவர், வட்டார வளர்ச்சி அலுவலரின் (Block Development Officer) நிருவாகக் கட்டுப்பாட்டின்கீழும், வட்டத்துணைப் பதிவாளரின் தொழில் நுட்பக் கட்டுப்பாட்டின் கீழும், வேலை செய்கிறார். தணிக்கைத் துறையின் தலைமை அலுவலகத்தில், தலைமைத் தணிக்கை அதிகாரிக்கு (Cheief Audit Officer) உதவியாக ஒரு சாசனக் கணக்கராக (Chartered Accountant) இருக்கும் ஒரு துணைத் தலைமைத் தணிக்கை அதிகாரி உதவி செய்கிறார். மாநிலத்திலுள்ள 14 மாவட்டங்களில் பொதுவாக 14 தணிக்கை வட்டங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு தணிக்கை வட்டமும் ஒரு மாவட்டக் கூட்டுறவுத் தணிக்கை அதிகாரி (District Co-opertative Audit Officer) வசம் இருக்கின்றது. மாவட்டக் கூட்டுறவுத் தணிக்கை அதிகாரி ஒரு கூட்டுறவுத் துணைப் பதிவாளர் மற்றும், அவர்

கட்டுப்பாட்டிலிருக்கும் சார்புப் பதிவாளர்களும், முதுநிலை ஆய்வாளர்களும், இளநிலை ஆய்வாளர்களும் தணிக்கையாளர்களாக வேலை செய்கிறார்கள். மாநிலத்தில் பதிவாளர் அல்லாத மற்ற துறைகளின் தலைவர்களுடைய நிருவாகக் கட்டுப்பாட்டின் கீழுள்ள சங்கங்கள் உட்பட எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களின் தணிக்கை, தலைமைத் தணிக்கை அதிகாரியின்கீழ், இருக்கிறது.

(7) சட்டத்தின்கீழ் பதிவாளரின் அச்சாணியான நிலைமை (Pivotal Position of the Registrar Under the Act): பதிவாளர், சட்டத்தின் கீழ் ஏற்படுத்தப்பட்ட, ஒரு சட்டமுறை அலுவலர் அவருக்குச் சட்டத்தின்கீழ் அநேக அதிகாரங்கள் உண்டு. சங்கங்களின் செயற்பாட்டை எளிதாக்கும் பொருட்டும் அல்லது சரியான முறையில் அவை செயல்பட்டு உண்மையான கூட்டுறவு நிறுவனங்களாக இயங்குவதை உறுதிப்படுத்தும் பொருட்டும், அவர் பல சட்டப்பூர்வமான கடமைகளையாற்ற வேண்டியிருக்கிறது. அவை யாவன: 4ஆம் பிரிவின்கீழ், சங்கங்களைப் பதிவு செய்தல். 11, 12, பிரிவுகளின்கீழ் ஒரு சங்கத்தின் உப விதிகளுக்குத் திருத்தங்களைப் பதிவு செய்தல், 7ஆம் பிரிவின்கீழ், உறுப்பினர்களைச் சேர்த்துக்கொள்வதைப் பற்றிய சில பிரச்சினைகளை முடிவு செய்தல், 18, (7) பிரிவின்கீழ் உறுப்பினராகச் சேருவதற்கு மறுக்கப்பட்டவர்களால் செய்யப்படும் மேல் முறையீட்டை முடிவு செய்தல், 19ஆம் பிரிவின்கீழ், ஒரு சங்கத்தினுடைய சேவையின் மறுப்பை எதிர்த்துச் செய்யப்படும் மேல் முறையீட்டை முடிவு செய்தல், 20ஆம் பிரிவின்கீழ் ஓர் உறுப்பினரை வெளியேற்றுவதை எதிர்த்துச் செய்யப்படும் மேல் முறையீட்டை முடிவு செய்தல், சில தவறான செயல்களுக்காக ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிலிருந்து ஒரு நபரை 28 (ஏ) பிரிவின்படி விலக்குதல், 64ஆம் பிரிவின்கீழ் தணிக்கை செய்தல், 65ஆம் பிரிவின்கீழ் விசாரணை செய்தல், 66ஆம் பிரிவின்கீழ் ஆய்வு செய்தல், 70ஆம் பிரிவின்கீழ் ஒரு சங்கத்தின் அதிகாரியை அல்லது ஊழியரை வேலையிலிருந்து சிறிதுகாலம் வரையில் நிறுத்தி வைத்தல், 71ஆம் பிரிவின்கீழ் தண்டம் (சர்சார்ஜ்) விதித்தல், 72ஆம் பிரிவின்கீழ் ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவை மீறுதல், 73ஆம் பிரிவின்படி தகராறுகளைத் தீர்த்து வைத்தல், 85ஆம் பிரிவின்படி ஒரு சங்கத்தின் விவகாரங்களை முடிவு கட்டல், 88ஆம் பிரிவின்படி அதன் பதிவை ரத்து செய்தல், 91ஆம் பிரிவின்படி தீர்ப்பாணைகளை, முடிவுகளை, தீர்ப்புகளை அல்லது உத்தரவுகளை நிறைவேற்றுதல், 96ஆம் பிரிவின்படி மேல் முறையீடுகளை முடிவு செய்தல், 97ஆம் பிரிவின்படி புனர்ஆய்வு செய்தல், 98ஆம் பிரிவின்படி மறுபுனர்ஆய்வு செய்தல்.

இந்தச் சட்டப்பூர்வமான கடமைகள் மட்டுமில்லாமல் பதிவாளர், மாநிலத்தில் கூட்டுறவு இயக்கத்தை மேற்பார்வை, உதவி. வழிகாட்டுதல், கட்டளையிடுதல், கட்டுப்பாடு முதலியன செய்ய வேண்டும். அவருடைய அதிகாரங்களை அவர் இயக்கத்தின் நலத்திற்கும், வளர்ச்சிக்கும் மாத்திரம்தான் உபயோகப் படுத்தவேண்டும். அவர் இயக்கத்தின் நண்பனுகவும், நல்லாசிரியனுகவும், வழிகாட்டியாகவும் இருக்கிறுர். ஆகையால், அவர் ஒரு மிகப்பெரியதொரு பொறுப்பை நிருவகிக்கிறுர். மாநிலத்திற்குப் பதிவாளராக நியமிக்கப்படும் ஒரு நபர் இயக்க வளர்ச்சிக்கு இன்றியமையாத சில தகுதிகளைப் பெற்றிருக்கவேண்டும். அவைகளை மெக்லகன் குழுவினரைக் (1915) (Maclagan–Commitee) காட்டிலும் மேலாக எவரும் வருணிக்க முடியாது. அந்தக் குழுவினர் கூறியது பின்வருமாறு: அவர் (பதிவாளர்) மிகவும் விரிவுள்ள கூட்டுறவு இயக்கத்தைத் தொடர்ந்து படித்துக்கொண்டு இருக்கவேண்டும். அவர் இந்தியா முழுவதிலும் அவருடைய சொந்த மாநிலத்திலுமுள்ள பொருளாதார நிலைமைகளையும், நடைமுறைகளையும் தெரிந்துகொள்ளவேண்டும்; வணிக வங்கிகளுடைய கொள்கைகளையும், நடைமுறைகளையும் அறிந்திருக்கவேண்டும்; மற்ற நாடுகளில் முயற்சிக்கப்பட்ட சிக்கனத்தையும், கூட்டுறவையும் வளர்க்கும் திட்டங்களைப் பரிசீலனை செய்யவேண்டும்; அவர் ஒரு தொழில் நுட்ப பணியாளர் குழுவிற்குத் தலைவர்கூட; மக்கள் பெரும்பாலாருக்குக் கூட்டுறவின் ஓர் உண்மையான அறிவைப் போதிப்பதற்குத் தக்க முறைகளைக் கற்பிக்கவேண்டும்; ஒரு பெரிய ஊழியர் கூட்டத்தைக் கட்டுப்படுத்தவும், சங்க உபவிதிகளை வரையவும், புள்ளிவிவரங்களைச் சேகரிக்கவும், அறிக்கைகளை எழுதவும், பல்வேறு பொருள் பற்றி அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறவும் நிலவள வங்கிகளும், மத்திய வங்கிகளும், இயக்கத்திற்கு நிதிவழங்கக் கையாளும் முறைகளைக் கூர்ந்துக் கவனிக்க கட்டுப்படுத்தவும் வேண்டும்.

மாக்லகன் குழு (1915) நிருணயித்த தகுதிகள் பட்டியலுக்கு இந்திய இராயல் விவசாய ஆணைக் குழுவினர் (1927–28) பதிவாளருக்கு வேறு தகுதிகளையும் சேர்த்திருக்கிறுர்கள் பதிவாளர் கிராம நிலைமைகளைச் சீர்திருத்த பணி புரியும் எல்லாத்துறைகளின் நடவடிக்கைகளை உணர்ந்திருக்கவேண்டும். மேலான விவசாயத்தையும், மேலான வாழ்க்கை நெறியையும் ஆதரிப்பதற்கு மேலான வியாபாரமென்ற ஒரு பலமான அடித்தளம் இருப்பதை அவர் உறுதிப்படுத்தவேண்டும். எவ்வளவு திறமை வாய்ந்ததாக கூட்டுறவு இயக்கமிருக்கிறதோ, அவ்வளவு இதர துறைகளும்

அதனைப் பயன்படுத்திக்கொண்டு அவைகளுடைய சொந்த பிரத்தியேக நடவடிக்கைகளை வளர்க்க முடியும்.

சட்டத்தின்கீழ், பதிவாளர் இயக்கத்தின் அடித்தளம் என்று கருதப்படுகிறார். அவர் இயக்கத்தின் மையமாக நிற்பவர். கூட்டுறவுத் திட்டக் குழுவினர் (1951) இது தொடர்பாகக் கூறியதாவது: 'பதிவாளர் மிகத் திறமை வாய்ந்த ஒரு மனிதனாக மட்டுமல்லாமல், இம்மாதிரியான ஒரு மக்கள் இயக்கத்தை நடத்தும் அந்த இயக்கத்திற்கு வேண்டிய மனப்போக்குள்ளவராகவும்கூட இருக்கவேண்டும். அவர் பதிவாளர் பதவியை வகிப்பதற்கு முன்பு ஓர் பூர்வாங்கப் பயிற்சி பெற்று துணைப்பதிவாளராகவோ அல்லது கூட்டுப் பதிவாளராகவோ குறைந்தது 2 ஆண்டுகளுக்கு வேலை செய்ய வேண்டும். மேலும், தற்போதுள்ளதைவிட அவருடைய பதவிக் காலம் நீண்டதாக இருக்கவேண்டும்;. இது விஷயமாக, விவசாய இராயல் ஆணைக்குழுவினர், ஒரு முறை நியமிக்கப்பட்ட பதிவாளர் திறமையுள்ளவராகக் காணப்பட்டால், அவர் துணைப் பதிவாளராகவோ அல்லது கூட்டுப் பதிவாளராகவோ முன்னரே 2 ஆண்டுகள் பணிபுரிந்திருந்தார் என்ற அடிப்படையில் குறைந்தது ஐந்தாண்டுக் காலம் வரை பதவி வகிக்கவேண்டும் என்று சிபாரிசு செய்துள்ளனர். அந்தக் குழுவினர் சில மாநிலங்களில்பதிவாளர்கள் அடிக்கடி மாற்றப்படுகிறார்கள் என்பதை நாம் காண்கிறோம். கூட்டுறவு இயக்கத்தைக் குறித்த வேலை அதிகமாகத் தொழில் நுட்ப மயமானதாக வளர்ந்து கொண்டு வருகிறது. ஆகையால், பதிவாளருக்கு இயக்கத்தை ஆராய்ந்தும் (study) விவகாரக் கொள்கைகளை ஏற்படுத்தியும் அவற்றை அமல்படுத்துவதற்குப் போதிய காலம் கொடுக்கவேண்டுவது அவசியமாகும். ஆகையால், எம்முடைய கருத்துப்படி பதிவாளருடைய பதவிக்காலம் 10 வருடங்களாக இருக்கலாம் என்று கூறியுள்ளனர். சென்னை மாநிலத்தில் கூட்டுறவு பற்றிய டவுன்செண்டு குழுவினர் (1928) பதிவாளர் 5 வருட காலத்திற்குப் பதவி வகிக்கவேண்டும் என்று சிபாரிசு செய்துள்ளனர். இயக்கத்தை நன்றாக ஆராய்ந்து அதனுடைய முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் வேண்டிய நடவடிக்கைகளை எடுப்பதற்குப் போதிய காலம் இருக்கவேண்டும். ஆகையால் தான் அவர்கள் இந்தக் காலவரையை நிருணயித்தனர்.

(8) தமிழ்நாட்டில் பதிவாளர்கள் (Registrars in Tamil Nadu) : சென்னை மாநிலத்தில் பதிவாளர் பதவி துவக்கக் காலத்தில் பெயர் பெற்ற இந்தியன் சிவில் சர்வீஸ் அதிகாரிகளால் வகித்துவரப் பட்டது. பின்னர், பதிவாளராக இருந்தவர்கள் (I. A. S) இந்தியன் அட்மினிஸ்டிரேடிவ் சர்விசைச் சேர்ந்தவர்கள்,

அல்லது கூட்டுறவுத் துறையிலிருந்த கூட்டுப் பதிவாளர்கள் (I. A. S.) பதவிக்கு உயர்த்தப்பட்டு அவர்கள் பதிவாளராக இருந்தார்கள். பெருவாரியான உத்தியோகப் பற்றற்ற ஊழியர்களும், கூட்டுறவாளர்களும், தமிழ்நாட்டின் கூட்டுறவு இயக்க முன்னேற்றத்திற்குத் தங்கள் நேரத்தையும் உழைப்பையும் அர்ப்பணித்து போற்றக்கூடிய பெருமுயற்சி செய்து வந்துள்ளனர் என்பது எவ்வளவுக்கு உண்மையோ அதேபோன்று தமிழ்நாட்டில் பதிவாளர் பதவியை வகித்த அதிகாரிகளுடைய முயற்சியாலும் முற்போக்குக் கண்ணோட்டத்தாலும் தமிழ்நாட்டில் கூட்டுறவு இயக்கம் வெற்றியடைந்து இன்று அது இந்தியக் கூட்டுறவுப் படத்தில் ஒரு மதிப்பு வாய்ந்த இடம் பெற்றிருக்கிறது என்பதும் மறுக்க முடியாத ஓர் உண்மை. கூட்டுறவுத் துறையிலுள்ள இணைப் பதிவாளர் அல்லது கூட்டுப் பதிவாளர் பதவியில் இருப்பவர்களைப் பதிவாளர் பதவிக்கு உயர்த்துவதில் சில வெளிப்படையான நன்மைகள் இருக்கின்றன. அவர்களுடைய ஏராளமான அனுபவமும், கூட்டுறவு அதிகாரத்தைப் பற்றிய அறிவும், இயக்கத்தின் வளர்ச்சிக்குக் கிடைக்கும். மற்றும் அவர்களுக்குத் தீவிரப் பயிற்சியும் தேவையில்லை.

வெளித்துறைகளிலிருந்து ஒருவரைப் பதிவாளராக நியமித்து அவர் இயக்கத்தைப் பற்றி அறிந்து, புரிந்துகொள்வதற்கு வேண்டிய காலமும் தேவையில்லை. ஆகையால், கூட்டுறவுத் துறையிலுள்ள தக்க முதுநிலை அதிகாரிகளைச் சாதாரணமாகப் பதிவாளர் பதவிக்கு நியமிப்பது விரும்பத்தக்கது. எனினும், ஏதாவது ஒரு காரணத்தால் பிற துறைகளிலுள்ள ஒருவரை அந்தப் பதவிக்கு அமர்த்துவது அவசியமானல், அன்னவர் கூட்டுறவு நிறுவனங்களின் செயல்பாட்டுடன் தொடர்புள்ளவராகவும், அவற்றை அறிந்தவராகவும் இருக்கவேண்டும். அவரை ஒரு குறுகிய காலத்தில் மாற்றிவிடக்கூடாது. இயக்க நலத்தை முன்னிட்டு அதிகாரிகளை அடிக்கடி மாற்றக்கூடாது. பதிவாளராக நியமிக்கப்பட்ட அதிகாரி தக்கவராகக் காணப்பட்டால் 5 வருடகாலத்துக்கு அவர் பதிவாளர் பதவியில் வைக்கப் படவேண்டும். அவர் அதிக ஊதியம், மதிப்புள்ள பதவிகளுக்குத் தகுதி பெற்றபோதும்கூட, அவரைப் பதிவாளர் பதவியில் குறித்த காலம் முடியும்வரை இருத்திக்கொண்டு அவருக்கு அதனல் ஏற்படும் இழப்பைச் சரிசெய்ய வேண்டும். பதிவாளர் பதவி இயக்க வெற்றிக்கு உதவியுள்ளது என்பதில் ஐயமில்லை. அதே சமயத்தில், கூட்டுறவு இயக்கம், அடிப்படையில் தற்சார்பு, சுதந்தரம் என்ற பண்புகளை வளர்க்கும் ஒரு மக்கள் இயக்கமென்பதையும், கூட்டுறவாளர்களின் உற்சாகத்தை நசுக்கும்

எதையும் செய்யக்கூடாது என்பதையும், மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். கூட்டுறவு இயக்கத்தின் சிறந்த நலத்தை முன்னிட்டு, அந்த இயக்கம் ஓர் அரசாங்கப் பணியாளர் குழுவால் நிருவகிக்கப்பட்ட உத்தியோகப்பற்றுள்ள நிலையமாகிவிடுவதற்கு அரசாங்கம் அனுமதிக்கக்கூடாது.

## இணைப்பு (அ)

சட்டத்தின்கீழ் கூட்டுறவுத் துறை அலுவலர்களுக்கு அதிகார அளிப்படைவு (Delegation under the Act to the Officers of the Co-operative Department) : 5-11-1963 தேதிய அரசு ஆணை எம். எஸ். என். 5292 (கூட்டுறவுத்துறை), 8-11-1963 தேதிய பதிவாளர் மேல்குறிப்பு எண் 25-65-67/61, இ2 எண்ணில் தெரிவிக்கப்பட்டது. அரசாங்கம், 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 3ஆம் பிரிவின்கீழ் கீழ்க் கண்ட அட்டவணையில் கலம் 1-ல் குறிக்கப்பட்ட அலுவலர்களுக்கு (Officers) கலம் 2-ல் அவர்களுக்கெதிரில் குறிக்கப் பட்டிருக்கும் பதிவாளரின் அதிகாரங்களை வழங்கியிருக்கிறது.

அட்டவணை

| அலுவலர்களின் பெயர் | அதிகாரங்களின் விவரம் |
|---|---|
| (1) கூட்டுப்பதி வாளர்கள் (Joint Registrars) | — சட்டத்தின்கீழ் ஒரு பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும் |
| (2) துணைப் பதி வாளர்கள் (Deputy Registrars) | — சட்டப் பிரிவுகள் 12, 60-லும், 70, 72, 85, 88, 90, 97, 114-லும் சட்டப்பிரிவு 85, 88, 90 உட்பிரிவு (2)-லும் குறிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள்தவிர, பதிவாளருடைய மற்ற எல்லா அதிகாரங்களும். |
| (3) உதவிப் பதி வாளர்கள் (Co-operative Sub-Registrars) | — சட்டப் பிரிவுகள் 26 (3) (4) (5), 58 (1), 62, 64, 65, 66, 68, (1), 71 73, 91-ன்கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும்; ஆனால், பிரிவு 71, பிரிவு 73, உட்-பிரிவு (1) |

| | |
|---|---|
| | பகுதி (இ) இவற்றின்கீழ் உதவிப் பதிவாளர் ரூ. 3,000/ அடங்கியுள்ள விஷயங்களில் மாத்திரம் தான் பதிவாளருடைய அதிகாரங்களைச் செலுத்தலாம். |
| (4) தலைமைத் தணிக்கை அதிகாரியும், மாவட்டக் கூட்டுறவுத் தணிக்கை அதிகாரிகளும் (Chief Audit officer and District Co-operative Audit officers) | — சட்டப் பிரிவு 62, 64-ன் கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். |
| (5) கூட்டுறவு வட்டார வளர்ச்சி விரிவாக்க அலுவலர்கள் (Co-operative Extension officers) | (அ) சட்டப் பிரிவு 11, 17, 73 (1), 92 இவற்றின் கீழ் பிரதம விவசாய சங்கங்களைப் பற்றி மாத்திரம் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். |
| | (ஆ) சட்டப் பிரிவு 26(3), 26(4), 58(1), 65, 66, 68(1), 73, 73 (3) இவற்றின் கீழ் எல்லாப் பதிவு செய்யப்பட்ட சங்கங்களைப் பற்றிய பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். ஆனால், கூட்டுறவு விரிவாக்க அலுவலர்கள் பதிவாளருடைய அதிகாரங்களைக் கீழ்க்கண்டவாறு செலுத்தலாம். (i) 73 (1) பிரிவின்கீழ் பணச் சம்பந்தமான சரத்துகள் மட்டும். (ii) 73 (1) பிரிவின்கீழ் ரூபாய் 3,000/மேற்படாமலுள்ள பணத்தைப்பற்றிய சரத்துகள் மட்டும். (iii) 92ஆம் பிரிவின்கீழ் ரூபாய் 1,000/ மேற்படாத தொகையடங்கிய விஷயங்களில் மட்டும். |

| அலுவலர்களின் பெயர் | அதிகாரங்களின் விவரம் |
|---|---|
| | குறிப்பு :–31–7–1964 தேதிய பதிவாளர் குறிப்பு எண் ஆர். சி. 156158/64–ல் தெரிவிக்கப்பட்ட 7–7–64 தேதிய அரசு ஆணை எண் எம். எஸ். 3456–ல், (கூட்டுறவுத் துறை) துணைப் பதிவாளர்களுக்கு மேற்கொண்டு அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. |

## இணைப்புப் (ஆ)

கூட்டுறவுத் துறையின் தணிக்கைத்துறை அதிகாரிகளுக்கு 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்க விதிகளின்கீழ் அதிகாரங்கள் அளிப்படைவு:

அரசுக் கட்டளையின் பேரில் பதிவாளர் தன்னுடைய 3–12–63 தேதிய ஆர். சி. என் 267888/63–2–1 கடிதத்தில் சட்டப் பிரிவு 63–ன் கீழும் 54ஆம் விதி உப-விதி (7)–ன் கீழும் தணிக்கைச் சிப்பந்திகளால் நிகர இலாப அறிவிப்பு செய்யக் கூடிய சங்கங்களைப் பற்றிக் கீழ்க்கண்ட அறிவுரைகள் வழங்கியிருக்கிறார்.

அட்டவணை

| வரிசை எண் | அதிகாரி அல்லது அதிகாரிகளுடைய பதவிப் பெயர் | கூட்டுறவுச் சங்க வகை |
|---|---|---|
| (1) | தலைமைத் தணிக்கை அதிகாரி | எல்லாத் தலைமை நிறுவனங்களும், எல்லா மத்திய வங்கிகளும், மற்றும் துணைப் பதிவாளர்கள் வணிக மேலாளராகவும், பொது மேலாளராகவும், செயலாளராகவும், நிருவாக அதிகாரியாகவும் அமர்த்தப்பட்டுள்ள இதர வகை சங்கங்களும் :—ஆனால், துணைப் பதிவாளர்கள் முதல்வர்களாக நியமிக்கப்பட்டிருக்கும் கூட்டுறவுப் |

| | | |
|---|---|---|
| | | பயிற்சிக் கழகங்களும், நிருவாகக் குழு தள்ளிவைக்கப்பட்டு துணைப் பதிவாளர்கள் விசேஷ அதிகாரிகளாக அமர்த்தப்பட்டுள்ள சங்கங்களும் இதில் சேராது. |
| (2) | மாவட்டக் கூட்டுறவுத் தணிக்கை அதிகாரி | —தலைமைத் தணிக்கை அதிகாரியால் தணிக்கைச் சான்று வழங்கப்பட வேண்டிய சங்கங்களும், மாவட்டக் கூட்டுறவுத் தணிக்கை அதிகாரியின்கீழ் பணியாற்றும் கூட்டுறவுச் சார்பு பதிவாளர்களால் (தணிக்கை) தணிக்கைச் சான்று வழங்கப்பட வேண்டிய சங்கங்களும் தவிர மற்ற எல்லாச் சங்கங்களும் |
| (3) | மாவட்டக் கூட்டுறவுத் தணிக்கை அலுவலகங்களில் மாவட்டக் கூட்டுறவுத் தணிக்கை அதிகாரியின் கட்டுப்பாட்டின்கீழ் பணியாற்றும் கூட்டுறவுச் சார்புப் பதிவாளர் (தணிக்கை) | —வரையறுக்கப்படாத பொறுப்புள்ள எல்லாக் கிராமச் சங்கங்களும், வெல்லம் தயாரிக்கும் சங்கங்களும். |

---

## இணைப்பு (இ)

சென்னைக் கூட்டுறவுச் சங்க விதிகளின்கீழ், (1963) கூட்டுறவுத் துறை அதிகாரிகளுக்கு ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள் :

14–2–64 தேதிய பதிவாளர் மேல் குறிப்பு எண் 256567/61–சி 2–ல் அனுப்பப்பட்ட 6–2–64 தேதிய அரசு ஆணை எம்.எஸ். 672, (கூட்டுறவு)-ல் அரசாங்கம் கீழ்க்கண்ட அட்டவணையில் கலம்–1ல் குறிக்கப்பட்ட அதிகாரிக்கு அவருக்கு நேரே குறிக்கப்பட்டிருக்கும் பதிவாளருடைய அதிகாரங்களை 1963ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்க விதிகளின்கீழ் வழங்கியிருக்கின்றது.

அட்டவணை

| அதிகாரிகளின் பெயர் | அதிகாரங்களின் விவரம் |
|---|---|
| (1) கூட்டுப்பதிவாளர் | —விதிகளின் கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். |
| (2) துணைப்பதி வாளர்கள்கள் | 6, 9, 23, 25, 34, 41, 42, 43, 44, 46, 47, 55, 58, 73, 83, 84, 100 விதிகளில் குறிக்கப்பட்டிருக்கும் பதிவாளர் அதிகாரங்கள் தவிர, விதிகளின் கீழ் பதிவாளருடைய மற்ற எல்லா அதிகாரங்களும். |
| (3) கூட்டுறவு சார்பு பதிவாளர்கள் | —54, 56, 59, 60, 62, 67, 75, 77, 79 விதிகளின் கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். |
| (4) தலைமைத் தணிக்கை அதிகாரியும் மாவட்டக் கூட்டுறவுத் தணிக்கை அதிகாரி களும் | —14, 16, 54, விதிகளின் கீழ் பதிவாளர் ருடைய அதிகாரங்கள். |
| (5) கூட்டுறவு விரிவாக்க அலுவலர்கள் | —கீழ்க்கண்ட பதிவாளருடைய எல்லா அதிகாரங்கள்<br>(i) பிரதம விவசாயநாணயச் சங்கங் களைக் குறித்து 7,82 விதிகளின் கீழ் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்கள்.<br>(ii) எல்லா பதிவு செய்யப்பட்ட சங்கங்களைக் குறித்தும் 56ஆம் விதியின் கீழ் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்கள். ஆனால், விரிவாக்க அலுவலர்கள் பதிவாளருடைய அதிகாரங்களைக் கீழ்க்கண்ட முறையில் செலுத்த வேண்டும்; அதாவது சட்டப் பிரிவு 73 (1) 56ஆம் விதியுடன் சேர்த்து அவற்றின் கீழ் பண சம்பந்த மான தகராறுகளைக் குறித்து மட்டும். |

(iii) சட்டப் பிரிவு 73 (1) (இ)-ன் கீழ் 3,000/- ரூபாய்க்கு மேற்படாத தொகையடங்கிய பண சம்பந்தமான தகராறுகளைக் குறித்து மட்டும்.

(iv) சட்டப்பிரிவு 92 விதி 82 உடன் சேர்த்து அவற்றின் கீழ் ரூபாய் 3,000/- மேற்படாத தொகையடங்கிய தகராறுகளைக் குறித்து மட்டும்.

## இணைப்பு (ஈ)

மீனவர் துறையின் அதிகாரிகளுக்குச் (Officers of the Fishering Dept) சட்டத்தின்கீழ் ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள்:

31-3-'64 தேதிய பதிவாளர் மேற்குறிப்பு எண் 252836/63-சி. எல்.-ல். அறிவிக்கப்பட்ட 16-3-'64 தேதிய அரசு ஆணை எம். எஸ். எண் 1494-ல், (கூட்டுறவு) அரசாங்கம் கீழ்க்கண்ட அட்டவணையில் கலம்—1ல் குறிக்கப்பட்டிருக்கும் மீனவர் துறை அதிகாரிகளுக்கு அவர்களுக்கெதிரே குறிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களை வழங்கியிருக்கிறார்கள்.

**அட்டவணை**

| அதிகாரிகளின் பெயர் | அதிகாரங்களின் விவரம் |
|---|---|
| (1) மீனவர் துறை இயக்குநர் | —சட்டத்தின் கீழ்ப் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். |
| (2) மீனவர் துறை துணை இயக்குநர் | —12, 60 (இ), 62, 64, 70, 72, 85, 88 90, 91, 97, 114 பிரிவுகளில் குறிக்கப் பட்டிருக்கிற அதிகாரங்கள் தவிர சட்டத்தின் கீழ்ப் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். |
| (3) மீனவர் துறை உதவி இயக்குநர் | —8, 9, 10, 11, 13, 14, 19, 20, 26, 27, 60 (டி), 65, 66, 71, 73, 108 பிரிவுகளின் கீழ்ப் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். |

| அதிகாரிகளின் பெயர் | அதிகாரங்களின் விவரம் |
|---|---|
| (4) மீனவர் துறையில் பணியாற்றும் கூட்டுறவுச் சார்புப் பதிவாளர்கள் | —26 (3) (4) (5), 58 (1), 65, 66, 68 (1), 71, 73 பிரிவுகளின்கீழ் பதிவாள ருடைய எல்லா அதிகாரங்களும். ஆனால், 71, 73 (1) (இ) பிரிவுகளின் கீழ் கூட்டுறவு உதவிப் பதிவாளர்கள் ரூ 3000/-க்கு மேற்படாத தொகை அடங்கிய சரத்துகளில் மட்டும் பதி வாளருடைய அதிகாரங்களைச் செலுத்தவேண்டும். |

## இணைப்பு (உ)

கதர் கிராமத் தொழில் வாரியத்தின் அதிகாரிகளுக்கு (Officers of the Khadi & Village Industry Board) சட்டத்தின் கீழ் ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள்

26–9–'64 தேதிய பதிவாளர் மேல் குறிப்பு எண் 57191/64–சி–ல் தெரிவிக்கப்பட்ட 3-9-'64 தேதிய அரசு ஆணை எண் 2525-ல் (உணவு, விவசாயத் துறை), அரசாங்கம் கீழ்க்கண்ட அட்டவணையில் கலம்–1-ல் குறிக்கப்பட்ட கதர் கிராமத் தொழில் வாரியத் துறை அதிகாரிகளுக்குக் கலம்–2–ல் குறிக்கப்பட்டுள்ள பதிவாளர் அதிகாரங்களைக் கலம்–3–ல் குறிக்கப்பட்டுள்ள சங்கங்களைக் குறித்து வழங்கியிருக்கிறார்கள்.

அட்டவணை

| அதிகாரிகளின் பெயர் | அதிகாரங்களின் விவரம் | சங்கங்கள் |
|---|---|---|
| (1) கதர் கிராமத் தொழில் வாரியத்தின் செயலாளர் | —சட்டத்தின் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். | கதர், கூட்டுறவுச் சங்கங்கள் தவிர, மற்றக் கிராமத் தொழில் கூட்டுறவுச் சங்கங்களும் |
| (2) கதர் இயக்குநர் | —சட்டத்தின்கீழ்ப் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். | கதர் கூட்டுறவுச் சங்கங்கள் |

| | | |
|---|---|---|
| (3) துணை இயக்குநர் | —12, 60-சி, 62, 64, 70, 72, 85, 88, 90, 91, 97, 114 பிரிவுகளில் குறிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் தவிர சட்டத்தின்கீழ்ப் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். | தொழில் கூட்டுறவுச் சங்கங்களும் கதர் கிராமத்தொழில் கூட்டுறவுச் சங்கங்களும் |
| (4) கிராமத் தொழில் அதிகாரிகள் | —12, 60 (சி), 62, 64, 70, 72, 85, 88, 90, 91, 97, 114 பிரிவுகளில் குறிக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் தவிரச் சட்டத்தின் கீழ்ப் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். | கிராமத் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் |
| (5) மாவட்டக் கதர் அதிகாரிகள் | —12, 60 (சி) பிரிவுகளில் குறிக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் தவிர சட்டத்தின் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். | கதர் கூட்டுறவுச் சங்கங்கள் |
| (6) கிராமத் தொழில் துறை கூட்டுறவு உதவிப் பதிவாளர்களும், கிராமத்தொழில் அதிகாரிகளும் | —26 (3) (4) (5), 58 (1), 65, 66, 68 (1), 71, 73 ஆகிய சட்டப் பிரிவுகளின் கீழ்ப் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். | கிராமத் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் |

ஆனால், 71ஆம் பிரிவின்கீழும், 73ஆம் பிரிவு உட்பிரிவு (1) பகுதி-(இ)-ன் கீழும் கூட்டுறவுப் பதிவாளர்கள் ரூபாய் 300-க்கு மேற்படாத தொகையடங்கிய சரத்துகளைப் பற்றி மட்டும் பதிவாளருடைய அதிகாரங்களைச் செலுத்தவேண்டும்.

## இணைப்பு (ஊ)

கூட்டுறவுச் சட்டத்தின்கீழ், பால் ஆணையருக்கு (Milk Commissioner) ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள்:

13–5–'64 தேதிய எம்.எஸ்.எண் 2701 (கூட்டுறவு) அரசு ஆணையில் அரசாங்கம் பால் ஆணையருக்குக் கீழ்க்கண்ட எல்லை களிலுள்ள எல்லாப் பால் வழங்கும் கூட்டுறவுச் சங்கங்களையும் ஒன்றியங்களையும் குறித்துச் சட்டத்தின்கீழ்ப் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களையும் வழங்கியிருக்கிறது.

| மாவட்டம் | தலைமை அலுவலகம் |
|---|---|
| (அ) சென்னை பால்பண்ணை உற்பத்தித் திட்டங்கள் (Madras Dairy and Milk Project) | |
| (1) செங்கல்பட்டு | —காஞ்சிபுரம், மதுராந்தகம், திருத்தணி. |
| (2) வட ஆற்காடு | —அரக்கோணம், செய்யாறு, வந்தவாசி, வாலாஜாபேட்டை. |
| (3) தென் ஆற்காடு | —திண்டிவனம், செஞ்சி, விழுப்புரம். |
| (4) கோயமுத்தூர் | —ஈரோடு, பவானி, கோபிச் செட்டிப் பாளையம், தாராபுரம். |
| (5) சேலம் | —திருச்செங்கோடு, நாமக்கல், சங்கரி, ஓமலூர். |
| (6) திருச்சி | —கரூர் |
| (7) நீலகிரி | —எல்லாத் தாலுகாக்களும் |
| (ஆ) மதுரை பால்பண்ணை உற்பத்தித் திட்டம் (Madurai Milk Project) | —மதுரை, இராமநாதபுரம் தாலுகாக்கள் முழுவதும். |

## இணைப்பு (எ)

மதுரை, கள்ளர் மீட்டல் திட்டம் தனித் துணை ஆட்சியாள ருக்குச் சட்ட விதிகளின்கீழ் ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள் :

26–7–'65 தேதிய அரசு ஆணை எம்.எஸ். எண் 3741–ல் (கூட்டுறவு) அரசாங்கம் மதுரை கள்ளர் மீட்டல் திட்டச் சிறப்புத் துணை ஆட்சியாளருக்குக் கீழ்க்கண்ட அதிகாரங்களை வழங்கியிருக் கிறது.

அட்டவணை

| அலுவலர்களின் பெயர் | அதிகாரங்களின் விவரம் |
|---|---|
| (1) மதுரை கள்ளர் மீட்டல் திட்டச் சிறப்புத் துணை ஆட்சியாளர்கள் | —12, 60 சி, 62, 64, 70, 72, 85 (1), 91, 97, 114 பிரிவுகளில் குறிக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் தவிர சட்டத்தின்கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். 1963ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்க விதிகளில் 9, 23, 25, 34, 41, 42, 43, 44, 46, 49, 54, 55, 59, 60, 62, 67, 73, 75, 77, 79, 83, 84, 100 விதிகளில் குறிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் தவிர விதிகளின்கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். |

ஆனால், சட்டப் பிரிவுகள் 88, 90–ன் கீழ் சிறப்புத் துணை ஆட்சியாளர் சட்டப் பிரிவு 85, உட்பிரிவு 2–ன்கீழ் கலைக்க வேண்டுமென்று கட்டளையிடப்பட்ட சங்கங்களைக் குறித்துமட்டும் ஒரு பதிவாளருடைய அதிகாரங்களைச் செலுத்தவேண்டும்.

| | |
|---|---|
| (2) சிறப்புத்துணை ஆட்சியாளர் கட்டுப்பாட்டின்கீழ்ப் பணியாற்றும் கூட்டுறவு உதவிப் பதிவாளர் | —26 (3), 26 (4), 26 (5), 58 (1), 65, 66, 68 (1), 71, 73 பிரிவுகளின் கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும் சென்னைக் கூட்டுறவுச் சங்க விதிகளில் 56ஆம் விதியின்கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களும். |

ஆனால், 71, 73 (1) (சி) பதவிகளின்கீழ் ரூ. 3,000/–க்கு மேற்படாத தொகை அடங்கிய தாலுகாக்களைப் பற்றி மட்டும் பதிவாளருடைய அதிகாரங்களைக் கூட்டுறவு உதவிப் பதிவாளர் செலுத்தவேண்டும்.

## இணைப்பு (ஏ)

கதர், கிராமத் தொழில் வாரிய அதிகாரிகளுக்குச் சென்னைக் கூட்டுறவுச் சங்க விதிகளின்கீழ் (1963) ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள்.

25-5-1965 தேதிய அரசு ஆணை எம். எஸ். எண் 1196, (ஆர். டீ. எல். ஏ) 22-11-65 தேதிய எண் 2503 அரசு ஆணையில் திருத்தியபடி கீழ்க்கண்ட அட்டவணையில் குறித்தபடி கதர் கிராமத் தொழில்வாரிய அதிகாரிகளுக்கு 1963 சென்னைக் கூட்டுறவுச் சங்க விதிகளின்கீழ் அரசாங்கம் பதிவாளருடைய அதிகாரங்களை வழங்கியிருக்கின்றது.

அட்டவணை

| அதிகாரிகளின் பெயர் | அதிகாரிகளின் விவரம் | சங்கத்தின் வகை |
|---|---|---|
| (1) பாநிலக் கதர் கிராமத் தொழில் வாரியத்தின் தலைமை நிருவாகச் செயலாளர் | —விதிகளின்கீழ் பதிவாளருக்குண்டான எல்லா அதிகாரங்களும். | கதர் கூட்டுறவுச் சங்கங்கள் தவிர எல்லாக்கிராமக் கைத் தொழில் கூட்டுறவுச் சங்கங்களும் |
| (2) கதர் இயக்குநர் | .. | கதர் கூட்டுறவுச் சங்கங்கள் |
| (3) துணை இயக்குநர் (தொழில் கூட்டுறவுச் சங்கங்கள்) | —விதிகள் 6, 9, 23, 25, 34, 41, 43, 44, 48, 49, 54, 55, 58, 59, 60, 62, 67, 73, 75, 77, 79, 83, 84, 100-ல் குறிக்கப்பட்ட அதிகாரங்கள் தவிர மற்ற விதிகளில் கூறப்பட்டிருக்கும் பதிவாளரின் எல்லா அதிகாரங்களும். | கதர் கூட்டுறவுச் சங்கங்களும் கிராமக் கைத்தொழில் கூட்டுறவுச் சங்கங்களும் |

| | | |
|---|---|---|
| (4) கிராமத் தொழில் அதிகாரிகள் | —விதிகள் 6, 9, 23, 25, 34, 41, 42, 43, 44, 48, 49, 54, 55, 58, 59, 60, 62, 67, 73, 75, 77, 79, 83, 84, 100-ல் குறிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் தவிர மற்ற விதிகளில் கூறப்பட்டிருக்கும் பதிவாளரின் எல்லா அதிகாரங்களும். | கிராமக் கைத் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் |
| (5) கிராமக் கைத் தொழில் அதிகாரிகளின் கீழ் பணியாற்றும் உதவிக் கூட்டுறவுப் பதிவாளர்கள் | —விதி 56-ன் கீழ் பதிவாளரின் எல்லா அதிகாரங்களும். | கிராமக் கைத் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் |

---

## இணைப்பு (ஐ)

பதிவாளரின் கட்டுப்பாட்டிலிருந்து இதர அதிகாரிகளுக்கு மாற்றப்பட்ட சங்கங்களின் விவரத்தைக் காண்பிக்கும் பட்டியல்

| பதிவாளரிடமிருந்து மாற்றப் பட்ட சங்கங்களின் வகை | கட்டுப்பாடு மாறுதல் அமலுக்கு வந்த தேதி | கட்டுப்பாடு மாற்றப் பட்டுள்ள அதிகாரியின் பெயர் |
|---|---|---|
| (1) கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கங்கள் தவிர இதர தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் | —1–2–1956 | தொழில் வணிகத் துறை இயக்குநர் |
| (2) பனை வெல்லத் தயாரிப்புக் கூட்டுறவுச் சங்கங்கள் | —1–11–1956 | ,, |
| (3) மீனவர் கூட்டுறவுச் சங்கங்கள் | —12–5–1959 | மீனவர் துறை இயக்குநர் |

| பதிவாளரிடமிருந்து மாற்றப் பட்ட சங்கங்களின் வகை | கட்டுப்பாடு மாறுதல் அமலுக்கு வந்த தேதி | கட்டுப்பாடு மாற்றப்பட்டுள்ள அதிகாரியின் பெயர் |
|---|---|---|
| (4) கதர் கூட்டுறவுச் சங்கங்கள் உட்படக் கிராமக் கைத் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் | —15-9-1960 | கதர் கிராமக்கைத் தொழில் துறை இயக்குநர்.[1, 2] |
| (5) கோழிவளர்ப்போர் கூட்டுறவுப் பண்ணைகளும் ஆடு வளர்ப்போர் கூட்டுறவுச் சங்கங்களும் | —10-3-1964 | கால்நடை பராமரிப்பு இயக்குநர் |
| (6) கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களும் நூற்பு ஆலைகளும் | —1-5-1965 | கைத்தறி இயக்குநர் |
| (7) பால் வழங்கும் கூட்டுறவுச் சங்கங்கள் | —1-8-1965 | பால் உற்பத்தி ஆணையர் |
| (8) வீட்டு வசதிக் கூட்டுறவுச் சங்கங்கள் | —1-7-1966 | மாநில வீட்டு வசதி வாரியத்தின் பெருந்தலைவர் |

1 கதர் சங்கங்கள் உட்பட்க கிராமக் கைத்தொழில் கூட்டுறவுச் சங்கங்களின் கட்டுப்பாடு 15-9-1960-ஆம் தேதியில் தொழில் வணிகத் துறை இயக்குநரிடமிருந்து கதர் கிராமத் தொழில துறை இயக்குநருக்கு மாற்றுதல் அமலுக்கு வந்தது.

2 கதர் கூட்டுறவுச் சங்கங்கள் தவிர மற்ற கிராமக் கைத்தொழில் கூட்டுறவுச் சங்கங்களின் கட்டுப்பாடு மாநிலக் கதர் கிராமக் கைத்தொழில் வாரியத்தின் தலைமை நிருவாகச் செயலாளருக்கு மாற்றப்பட்டிருக்கிறது. அவர்தான் அத்தகைய சங்கங்களின் பதிவாளராகக் கூடச் செயலாற்றுகிறார்.

# 4. பல்வேறு வித கூட்டுறவுச் சங்கங்களை அமைத்தலும் பதிவு செய்தலும்

## (Formationand Registration of different types of Co-operative Socities)

### (பிரிவுகள்: 4, 6, 7, 8, 9, 10, 15,)

1. சங்கங்களை அமைத்தல் (Organisation of Socities): விவசாய நாணயச் சங்கங்கள், பொதுவாக, உள்ளூர் கூட்டுறவு மேற்பார்வை ஒன்றியத்தைப் போன்ற உத்தியோகப் பற்றற்ற செயல்துணை நிறுவனங்களால் அல்லது மத்தியக் கூட்டுறவு வங்கிகளைச் சேர்ந்த சிப்பந்திகளால் அமைக்கப்படுகின்றன. விற்பனைச் சங்கங்கள், ஸ்டோர்ஸ் சங்கங்கள், கைத்தறி நெசவாளர் சங்கங்கள், வீட்டு வசதிச் சங்கங்கள், விவசாயப் பண்ணைச் சங்கங்கள் முதலியன போன்ற இதர வகைச் சங்கங்கள், பொதுவாக, சம்பந்தப்பட்ட துறைகளின் அலுவலர்களால் அமைக்கப் படுகின்றன. ஒரு விவசாயக்கடன் சங்கம் அமைப்பதற்கு அனுசரிக்க வேண்டிய சரியான விதி முறை இங்கே வருணிக்கப் படுகிறது. இந்தச் சங்கம் கூட்டுறவுச் சங்கங்களில் மிகச் சாதாரண வகையாகும். அதை ஆரம்பிப்பதில் அனுசரிக்க வேண்டிய விதி முறை பொதுவாக இதர வகைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும்கூடப் பொருந்தும்.

ஒரு கிராமம் அல்லது கிராமத் தொகுதியில் வசிப்பவர்கள் ஒரு சங்கத்தை அமைக்க விரும்பினால் அவர்கள் உள்ளூர் கூட்டுறவு மேற்பார்வை ஒன்றியத்திற்கோ, அல்லது மத்திய வங்கிக்கோ, அல்லது வட்டத் துணைப் பதிவாளருக்கோ ஒரு விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டும். விண்ணப்பத்தைப் பெற்ற பிறகு, ஒன்றியம், அல்லது மத்திய வங்கி, ஒன்றியத்தின் நிருவாகக் குழு உறுப்பினர் மூலமாவது அல்லது வங்கி மேற்பார்வையாளர் அல்லது ஆய்வாளர் மூலமாவது, விண்ணப்பத்தின் பரிசீலனைக்கு

ஏற்பாடு செய்கிறது. விண்ணப்பதாரர்கள் தாங்கள் அமைக்க விரும்பும் சங்க வகையினை விண்ணப்பத்தில் குறிக்க வேண்டும். விண்ணப்பத்தில் கையெழுத்திட்டவர்களுடைய ஓர் ஆரம்பக் கூட்டம் கூட்டப்பட்டு அதற்கு முடிந்த அளவில் பெரும்பாலான இதர கிராம மக்களும் கூட வரவேண்டும். இந்தக் கூட்டம் பொதுவாக கிராம மக்கள் ஒன்று கூடுவதற்கு அவர்களுக்கு வசதியான நேரத்தில் ஒரு பொது இடத்தில் கூட்டப்பட வேண்டும். இந்தக் கூட்டத்தில் சங்கத்தை அமைக்கும் மேற்பார்வையாளர் அல்லது வங்கி ஆய்வாளர் சங்கத்தின் உத்தேச உப-விதிகளையும், அரசாங்கத்தாலும் நிதி வழங்கும் வங்கிகளாலும் வழங்கப்படும் உதவியையும், உத்தேசச் சங்கத்தை ஒன்றியத் திற்கும் நிதி வழங்கும் வங்கிக்கும் இணைக்க வேண்டிய தேவையையும் விளக்குவார்.

உத்தேசச் சங்கம் பொதுவாக எப்படிச் செயல்படவேண்டும் என்றும் விளக்கப்படும். மற்றும் கூட்டத்திற்கு வந்திருக்கும் நபர்களுக்குக் கேள்வி ஏதாவது கேட்பதற்கு வாய்ப்பளித்து, அவர்களுடைய ஐயங்களைத் தீர்க்கவேண்டும். சங்கம் உண்மையான கூட்டுறவுத் தன்மையைப் பெறுவதற்கு வேண்டிய நிபந்தனைகளையும் கூட அவர் விளக்கி, சங்கத்தின் விவகாரங்களை அதன் தோற்றுவிப்பாளர்கள் கூட்டுறவுக் கொள்கைகளுக்கு இணங்கவும் வாணிக முறையிலும் நடத்த வேண்டியதன் தேவையையும் அவர் உணர்த்துவார். பிறகு, சங்கம் அமைப்பது பற்றிய ஒரு முடிவைக் கூட்டத்தில் எடுத்து, சங்கத்தை அமைப்பவர் உத்தேசச் சங்கத்தில் சேர விரும்பும் எல்லாருடைய கையெழுத்தை விண்ணப்ப நமூனாவிலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட உப-விதிகளிலும் வாங்குகிறார். பின்னர், விண்ணப்ப தாரருடைய பெயரும், அவருடைய தகப்பனார் பெயரும், வயது, தொழில், வசிக்கும் இடம், கிராமத்தில் அவருக்குச் சொந்தமாக சொத்து இருக்கிறதா முதலிய, விவரங்களைக் காண்பிக்கும் ஒரு பட்டி தயாரிக்கப் படுகிறது. ஒரு விவசாய நாணயச் சங்கம் வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையின் பேரில் அமைக்கப்பட்டால், உத்தேச உறுப்பினர் ஒவ்வொருவரின் சொத்துகளையும் பொறுப்புகளையும் காண்பிக்கும் மற்றொரு பட்டி தயாரிக்கப்படுகிறது. இந்த பட்டி சொத்துப் பட்டியல் (Property Statement) என்று அழைக்கப் படும்.

சங்கத்தின் உச்சக் கடன் அளவை நிருணயிப்பதற்கு இந்தப் பட்டி அடிப்படையாகையால், இதில் எழுதப்பட்டிருக்கும் விவரங்களை உறுதிப்படுத்த உத்தேச உறுப்பினர்கள் கையெழுத்

திடவேண்டும். பிறகு விண்ணப்பம், அதனுடைய உள்ளடக்கங்களுடனும், அமைப்பாளரின் அறிக்கையுடனும், மேற்பார்வை ஒன்றியத்தின் மற்றும் மத்தியக் கூட்டுறவு வங்கியின் பரிந்துரையுடனும் வட்டத் துணைப்பதிவாளருக்கு அனுப்பப்படுகிறது. விண்ணப்பம், சென்னைக் கூட்டுறவுச் சங்க விதிகளின் (1963) 3ஆம் விதியின் கீழும், சட்டத்தின் 8 ஆம் பிரிவின் கீழும், ஒரு கூட்டுறவுச் சங்கம் பதிவு செய்வதற்காக நிருணயிக்கப்பட்ட நமூனா எண். 1–ல் இருக்கவேண்டும். ஒரு சங்கத்தின் பதிவைப் பற்றிய அறிவிப்பு விண்ணப்பதாரர்களில் அங்கீகரிக்கப்பட்ட நபர்களுக்கு மட்டும், அனுப்பப்படுவதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன், 3ஆம் பிரிவில் சங்கப் பதிவுக்காக நிருணயிக்கப்பட்ட விண்ணப்ப நமூனாவில், சங்கப் பதிவு பற்றிய அறிவிப்பு அனுப்பப்படுவதற்கு மூன்று விண்ணப்பதாரர்களுக்கு மேற்படாதவர்களை நியமிப்பதற்கு, இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பது கவனிக்கத்தக்கது. இது, விதிகளில் புகுத்தப்பட்ட ஒரு புதிய சரத்தாகும்.

நகர வங்கிகள், ஊழியர்கள் சங்கங்கள் முதலியன போன்ற வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கங்கள் தொடர்பாகவும் ஏறக்குறைய இதேமாதிரியான விதிமுறை அனுசரிக்கப்படுகிறது. இதர வித சங்கங்கள், (நாணயச் சார்பில்லாத சங்கங்கள்) (Non-credit Societies) பொதுவாக, துறை அலுவலர்களால் துறை அவ்வப்பொழுது வெளியிடும் விளக்கவுரையின்படி நிறுவப்படுகின்றன. உதாரணமாக, ஒரு கைத்தறி நெசவாளர் சங்கத்தைப் பொருத்தவரை, அத்தகைய சங்கம் அதன் எல்லையிலிருக்கும் கைத்தறிகளின் எண்ணிக்கையைப் பொறுத்து நிறுவப்படவேண்டும்; ஒரு பால் வழங்குசங்கம், அதிக அளவு பால் வழங்கக்கூடிய பசு வைத்திருப்பவர்களைப் பொறுத்தும், பால் நுகரும் நபர்களுக்குப் பாலைக்கொண்டு போகும் போக்குவரத்து வசதிகளைப் பொறுத்தும், அமைக்கப்படவேண்டும்; ஒரு ஸ்டோர்ஸ் சங்கம், அச் சங்கத்தை ஏற்படுத்த விரும்பும் உறுப்பினர்களுடைய தேவைகளையும், நன்மைகளையும் பற்றியதாக, இருக்கவேண்டும்; ஒரு விற்பனைச் சங்கம், கூட்டுறவு முறையில் விற்பனை செய்வதற்கு விரும்பப்படும் விளைபொருள்களைப் பொறுத்தும் அத்தகைய கூட்டுறவு விற்பனையால் கிடைக்கும் கூடுதலான வருமானத்தின் அளவைப் பொறுத்தும், நிறுவப்படவேண்டும்; ஒரு வீட்டு வசதிச் சங்கம், நகர்ப்புறங்களிலிருக்கும், ஜன நெருக்கடியின் அளவைப் பொறுத்தும், தக்க வீடு கட்டும் மனைகள் கிடைக்கக்கூடியதைப் பொறுத்தும் நிறுவப்படவேண்டும்; ஒரு கைத்தொழில் கூட்டுறவுச் சங்கம், கைத்தொழிலாளிகள் கிடைக்கக்கூடியதைப் பொறுத்தும், உற்பத்தியான பொருள்களை விற்பனை செய்யும் வசதியைப் பொறுத்தும் ஆரம்பிக்கப்படவேண்டும்.

(2) ஒரு சங்கம் தன் பணியைத் துவக்குதல் (Starting of a Society on its work) : சங்கத்தின் 8 (1)ஆம் பிரிவின்கீழ், ஒரு சங்கம் பதிவுக்காகச் செய்யப்படும் விண்ணப்பம் பதிவாளருக்குச் சமர்ப்பிக்கப்பட வேண்டும். அவ்விண்ணப்பம், முன்னர் கூறியபடி விதிகளில் நிருணயிக்கப்பட்ட நமூனு எண். 1-ல் இருக்கவேண்டும். இந்த நமூனு 2ஆம் விதியின்கீழ் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. விண்ணப்பம் உறுப்பினர்களாவதற்குத் தகுதி பெற்ற பத்து நபர்களுக்குக் குறையாத உறுப்பினர்களால் கையெழுத்திடப்பட வேண்டும். உறுப்பினராக இருப்பதற்குவேண்டிய தகுதிகள் 6ஆம் பிரிவு உட்பிரிவு 1–லும் 17 (1) பிரிவிலும், விவரிக்கப்பட்டிருக்கின்றன. 6 (1) பிரிவில் கூறப்பட்டிருக்கும் தகுதிகளைப் பற்றி விரிவாகப் பின்னர் ஆராய்வோம். 17 (1) பிரிவில் கூறப்படும் விதிகள் பின்வரும் அத்தியாயத்தில் ஆராயப்படும். எனினும், 6 (1) பிரிவின்கீழ் நிருணயிக்கப்பட்ட தகுதிகளாவன: ஒரு சங்கம் குறைந்த அளவு 10 நபர்களைக் கொண்டதாக இருக்க வேண்டும் என்பதும், ஒரு கிராமச் சங்கத்தின் உறுப்பினர்கள் சங்கத்தின் எல்லையில் வசித்தோ அல்லது சொந்தச் சொத்துகளையுடையவர்களாகவோ இருக்கவேண்டும் என்பதும், அல்லது ஒரே வகுப்பு அல்லது தொழிலைச் சார்ந்தவர்களாக இருக்கவேண்டும் என்பதும், 18 (1) பிரிவில் ஒரு சங்கத்தின் உறுப்பினர்களுக்குச் சில தகுதியின்மைகளும் கூட விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், ஒரு சங்க விண்ணப்பதாரர்கள் 6 (1) பிரிவிலும், 17 (1) பிரிவிலும் நிருணயிக்கப்பட்ட தகுதிகளையுடையவர்களாகவும் 18 (1) பிரிவின் கீழ் நிருணயிக்கப்பட்ட தகுதியின்மைகளையில்லாதவர்களாகவும் இருக்கவேண்டும். ஏனென்றால், ஒரு சங்கத்தின் விண்ணப்பதாரர்கள், 2ஆம் பிரிவு (6)ஆம் பகுதியின்கீழ், ஒரு சங்கம் பதிவு செய்யப்பட்டவுடன், அச் சங்கத்தின் உறுப்பினர்களாகிவிடுகிறார்கள். இந்தப் பிரிவில் ஓர் 'உறுப்பினர்' என்ற பதத்தை விளக்கம் கூறும்போது 'ஒரு சங்கப் பதிவுக்காகச் செய்யப்படும் விண்ணப்பத்தில் சேர்ந்திருக்கும் ஒரு நபரைக்' கூட உறுப்பினராக, விளக்கம் கூறப்படுகிறது.

ஓர் ஒன்றியம், அல்லது மத்திய வங்கி, அல்லது மாவட்ட விற்பனைச் சங்கம் போன்ற வேறு சங்கங்கள் அல்லது சங்கம், உறுப்பினராகச் சேரும் ஓர் இணைப்புச் சங்கத்தைப் பொறுத்த வரை, தனிநபர் உறுப்பினர்களும் மற்றும் உறுப்பினர்களாக இருக்கும் சங்கங்களுடைய பிரதிநிதிகளும், அவர்கள் கையெழுத்திட அங்கீகரிக்கப்பட்டிருந்தால், விண்ணப்பத்தில் கையெழுத்திட வேண்டும். அம் மாதிரிச் சூழ்நிலைகளில், விண்ணப்பம் 10 உறுப்பினர்களால் அல்லது 10 உறுப்பினர்

களுக்குக் குறைந்திருந்தால் எல்லா உறுப்பினர்களாலும் கையெழுத்திடப்பட வேண்டும். வரையறுக்கப்பட்ட பொறுப்பிலுள்ள சங்கமும், அல்லது வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கங்களை உறுப்பினராகவுடைய சங்கமும், அவற்றின் பெயர் இறுதியில் 'வரையறுக்கப்பட்டது' என்ற சொல் சேர்க்கப்பட வேண்டும்.

விண்ணப்பத்துடன், உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளின் நகல் ஒன்று அனுப்பட வேண்டும். (பிரிவு 8 (1) உப-விதிகளில் எந்தெந்த பொருள்களைப் பற்றிய விவரங்களிருக்கவேண்டும் என்பதை 2 ஆம் விதி கூறுகிறது. விண்ணப்பம் கிடைத்தவுடன், சங்கத் தோற்றுவிப்பாளர்களிடமிருந்து வந்த கோரிக்கையின் பேரில் ஏதாவது கூடுதலான தகவல்களைக் கேட்பதற்குப், பதிவாளருக்கு உரிமை உண்டு (15 (1) விதி). விண்ணப்பத்தின் (நமூனு எண். 1) கலம்–6–ல் சொல்லப்பட்ட நபர்களுக்கு இது தொடர்பாகப் பதிவாளர் எழுதலாம். விண்ணப்பத்தில், சங்கத்தைத் தோற்றுவிப்பாளர்கள், உத்தேசிக்கப்பட்ட சங்கத்தைப் பற்றிப் பதிவாளர் ஆலோசனை செய்வதற்கும், தகவல்களைப் பெறுவதற்கும், மூன்றுக்கு மேற்படாத விண்ணப்பதாரர்களை நியமிக்கவேண்டும். அப்படி நியமிக்கப்பட்டவர்கள், பதிவாளரால் கோரப்பட்ட தகவல்களைக் கொடுப்பதற்குக் கடமைப் பட்டவர்கள். (பிரிவு 8 (3). பதிவாளர் இந்த 3 நபர்களுடன் ஆலோசனை செய்து உத்தேசிக்கப்பட்ட சங்கத்தின் உப–விதிகளை மாற்றவும் கூடச் செய்யலாம்.

சங்கம் அமைப்பு ஆவணங்கள் (Records) கிடைத்தவுடன், துணைப்பதிவாளரோ அல்லது எந்த ஒரு சரியான பதிவு செய்யும் அதிகாரியோ, அமைக்கப்பட்ட சங்கம் பதிவு செய்யப்படலாம் என்று திருப்தியடைந்தால், அவர் சங்கத்தையும் அதனுடைய உப–விதிகளையும் சட்டத்தின் 9 (1) பிரிவின்கீழ்ப் பதிவு செய்து, சங்கத்திற்குத் தன்னுல் கையெழுத்திடப்பட்ட ஒரு பதிவுச் சான்றிதழை அவரால் பதிவு செய்யப்பட்ட உப–விதிகளின் ஒரு நகலுடன், இலவசமாக வழங்குவார் (விதி 5 (2). இந்தக் கையெழுத்திடப்பட்ட பதிவுச் சான்றிதழ் சங்கம் ஒழுங்காகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது என்பதற்கு ஒரு முடிவான சான்று ஆகும். (பிரிவு 10) பதிவுச் சான்றிதழின் நகலும் பதிவு செய்யப் பட்ட உப–விதிகளின் நகலும் தொடர்புடைய மத்திய வங்கிக்கும், ஒன்றியத்திற்கும் அனுப்பப்படுகிறது. (விதி 5 (2) பதிவுச் சான்றிதழ், விதி 5 (2)-ன்கீழ் நிருணயிக்கப்பட்ட, நமூனு எண். 2–ல் வழங்கப்படவேண்டும். பதிவுச் சான்றிதழ் சட்டத்தின் 9 (1)

பிரிவின்கீழ் வழங்கப்படுகிறது. வழக்கமாக இந்தச் சான்றிதழும், உப-விதிகளும் பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் நிகழ்ச்சிக் குறிப் பேட்டில் (Minutes Book) பதிவு செய்யப்பட்டுச் சங்கத்தைத் துவக்கும் அதிகாரிக்குச், சங்கத்தைத் துவக்கி வைத்து சங்கத் திற்கு அந்தக் குறிப்பேட்டைக் கொடுத்துவிடும்படி உத்தரவு களுடன், அனுப்பப்படுகிறது. விதி 6-ன்கீழ், ஒவ்வொரு சங்கமும் பதிவு செய்யப்பட்ட தேதியிலிருந்து 3 மாத காலத்திற்குள் தன் வேலையைத் துவக்கவேண்டும். ஆனால், இந்த காலவரையைப் போதிய காரணங்களுக்காக நீட்டிக்கலாம்.

சங்கத்தைத் துவக்கி வைக்கும் அதிகாரி தன் வேலையைத் துவக்குவதற்குப் பொதுவாக, ஒரு சங்கம் பதிவுக்காகச் செய்யப் படும் விண்ணப்பத்தில் கையெழுத்திட்டவர்களும், உத்தேசிக்கப் பட்ட சங்கத்தின் எல்லையில் இருக்கும் மற்றவர்களும் அடங்கிய ஒரு கூட்டத்தைக் கூட்டுவதற்கு ஏற்பாடு செய்கிறார். இந்தக் கூட்டத்தில் விண்ணப்பதாரர்களிலிருந்து ஒருவர் தலைவராகத் தெரிந்தெடுக்கப்படுகிறார். கூட்டத்தில் பதிவுச் சான்றிதழும், உப-விதிகளும் வாசிக்கப்பட்டு, சங்கம் செயல்படவேண்டிய பொதுவான விதிமுறைகள் எடுத்துக் காட்டப்படுகிறது. பின்னர், விண்ணப்பதாரர்களுக்குப் பங்குகள் ஒதுக்கப்பட்டு, உப-விதிகளின்படிப் பங்கு முதலும், நுழைவுக் கட்டணங்களும் வசூலிக்கப்படுகின்றன. பிறகு நிருவாகக்குழு தேர்தல் நடைபெறுகிறது. இந்த நடவடிக்கைகள் நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் பதிவு செய்யப்படுகின்றன. உடனே நிருவாகக் குழுவின் கூட்டமும் பொதுவாகக் கூட்டப்பட்டு, சங்கத் தலைவர், செயலர், இன்னும் மற்ற நிருவாக இயக்குநர்கள், நிருவாகக்குழு உறுப்பினர் களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர் இந்த நிருவாகக்குழுக் கூட்டத்திற்குத் தலைமை வகிக்கிறார். புதிய உறுப்பினர்களைச் சேர்த்தல், மற்றும் சங்கத்தின் பிற அலுவல்கள் பின்னர் நடத்தப்படுகின்றன.

ஒரு சங்கம், அது பதிவு செய்யப்பட்ட பிறகு, முதல் பேரவைக் கூட்டத்தைக் கூட்டி உறுப்பினர்களைச் சேர்த்து அவர்களுக்குப் பங்கு ஒதுக்கி அதனுடைய நிருவாகக் குழுவை அமைத்து விட்டால், அந்தச் சங்கம் தன்னுடைய வேலையைத் துவக்கி விட்டது என்று கருதப்படவேண்டும். (6ஆம் விதியின்கீழ் கொடுக்கப்பட்டிருக்கும் விளக்கத்தைப் பார்க்கவும்). சங்கத்தைத் துவக்கி வைப்பதற்கு அனுப்பப்பட்ட அதிகாரி பின்னர் சங்கம் துவக்குவதைப்பற்றிய அவருடைய அறிக்கையைத் துணைப் பதிவாளருக்கு அனுப்பவேண்டும். மற்றும் ஒன்றியத்திற்கும்

மத்திய வங்கிக்கும் தகவல் தெரியப்படுத்தப்படுகிறது. இப்படியாக அந்தச் சங்கம் சட்டத்தின் 31ஆம் பிரிவின்கீழ்த் தன்னுடைய பெயர், பதிவு எண், அஞ்சல் நிலையம், அது செயல்படும் வருவாய்த்துறை மாவட்டத்தின் பெயர், இந்த விவரங்கள் கொண்ட முத்திரையுடன் (Seal) ஒரு கூட்டுறவு (Body Corporate) ஆகிறது.

3. ஒரு கூட்டுறவுச் சங்கத்தைப் பதிவு செய்வதற்குள்ள நிபந்தனைகள் (Conditions of Registration of a Society): ஒரு பிரதம சங்கம் 9 (1) பிரிவின் கீழ் பதிவு செய்யப்படுமுன், பதிவு செய்யும் அதிகாரி சிலநிபந்தனைகள் நிறைவேற்றப்பட்டுவிட்டனவா என்பதைத் தான் மனநிறைவு செய்துகொள்ளவேண்டும். இந்த நிபந்தனைகள் 4 (1) மற்றும் 6 (1) பிரிவுகளில் அடங்கியிருக்கின்றன. அவைகளாவன: (1) சங்கம், தன் உறுப்பினருடைய பொருளாதார நலன்களை வளர்ப்பதைத் தன்னுடைய நோக்கமாகக் கொண்டிருக்கவேண்டும். (2) இந்த நோக்கம் கூட்டுறவுக் கொள்கைகளுக்கிணங்கச் சங்க அலுவல்களை நடத்துவதன் மூலம் நிறைவேற்றப்படவேண்டும். (3) சங்கம் குறைந்த பட்சம் 10 நபர்களைக் கொண்டதாக இருக்கவேண்டும். (4) ஒரு நாணயச் சங்கத்தின் நபர்கள் சங்கத்தின் உத்தேசிக்கப்பட்ட எல்லையில் வசித்தோ, அல்லது அசையா சொத்துகளைச் சொந்தமாக வைத்துக்கொண்டோ இருக்கவேண்டும். அல்லது ஒரே வகுப்பு அல்லது ஜீவனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும். (5) வரையறுக்கப்படாத அல்லது வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் பதிவு செய்யப்படலாம். பொறுப்பின் வகையைத் தெரிந்தெடுப்பதற்கு நபர்களுக்கு உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. (6) ஆனால், சங்கங்களை உறுப்பினர்களாகக் கொண்ட ஒரு சங்கம் விஷயத்தில், குறைந்த பட்சம் பத்து உறுப்பினர்கள் இருக்கவேண்டுமென்பது அவசியமில்லை. (7) மேலும், சங்கங்களை உறுப்பினர்களாகக் கொண்ட ஒரு சங்கம் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் மட்டும்தான் இருக்கவேண்டும். (8) 'வரையறுக்கப்பட்ட' என்ற சொல்லை வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் பதிவு செய்யப்பட்ட எந்தச் சங்கமும், அதன் பெயரின் இறுதிச் சொல்லாகச் சேர்த்துக்கொள்ளவேண்டும். (9) ஒரு சங்கத்தில் அரசாங்கமோ, அல்லது ஒரு நிதி வழங்கும் வங்கியோ உறுப்பினராக இருந்தால் அவர்களுடைய பொறுப்பு (அவர்கள் எடுத்திருக்கும் பங்குகள் சங்கம் வரையறுக்கப்பட்ட பொறுப்பிலோ, அல்லது வரையறுக்கப்படாத பொறுப்பிலோ, இருந்தாலும்கூட) வரையறுக்கப்பட்டுள்ளதாக மட்டும்தான் இருக்கும்.

(10) பதிவுசெய்யும் அதிகாரி சங்கம் வெற்றிகரமாகப் பணியாற்று வதற்கு நியாயமான வாய்ப்பு இருக்கின்றது என்பதைத் திருப்தி செய்துகொள்ளவேண்டும்.

மேற்சொன்ன நிபந்தனைகளில் ஒவ்வொன்றையும் மேற் கொண்டு இப்பொழுது விளக்குவோம்.

(1) ஒரு சங்கத்தின் முக்கிய நோக்கம் அதன் உறுப்பின ருடைய பொருளாதார முன்னேற்றத்தை வளர்ப்பதாக இருக்க வேண்டும். மற்றும் ஒழுக்க மேம்பாடு, கல்வி முன்னேற்றம், அற நலன், சமுதாய நலன், நீதி, சமுதாய சேவை உணர்ச்சி, வளர்ச்சி முதலிய இதர பலன்கள் பின்னால் ஏற்படலாம். இதைப்பற்றி, முன் அத்தியாயத்தில், சட்டத்தின் தோற்றுவாயிலடங்கிய சொற்களைப்பற்றிப் பேசியபோது விவரமாக விளக்கியுள்ளோம். சட்டத்தின் தோற்றுவாயில்கூடப், பொதுவான பொருளாதாரத் தேவைகளையுடைய நபர்களுக்காகச் சங்கம் நிறுவப்படவேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. மேலும், சங்கம் முக்கியமாக அதன் உறுப்பினர்களுக்கு மட்டும் தான் சேவை செய்ய வேண்டும். ஆனால், எப்போதாவது வெளியார்களுக்குத் தற் செயலாகத்தன் சேவைகளைப்பரப்புவதற்குத் தேவையேற்படலாம். அல்லது சில சூழ்நிலைகளைப் பொறுத்து, அம்மாதிரி, ஒரு தற்காலிக ஏற்பாடாகச் சேவை செய்யலாம். உதாரணமாக, ஒரு விவசாய நாணயச் சங்கம், அரசாங்கம் உரம் அல்லது எரு விநியோகத்தைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு ஒப்படைத்தாலும் அல்லது கூட்டுறவுச் சங்கங்கள் உரம் அல்லது சில இதர முக்கிய விவசாயம் அல்லது தொழில் சம்பந்தமான குடும்பத் தேவைகளை விநியோகிப்பதில் முழு உரிமை (Monoboly) பெற்றிருந்தாலும், உறுப்பினரல்லாதவர்களுக்குக்கூட அத்தகைய பொருள்களை விநியோகிக்க நேரிடும். மேலும், சட்டபடி அமைந்த பங்கீடு (Statutory Rationing) அமலிலிருக்கும்போதும், அல்லது அரசாங்கம் பொது மக்களுக்குச் சில கட்டுப்படுத்தப்பட்ட பொருள்களை விநியோகிக்கவேண்டும் என்று விரும்பினாலும், ஸ்டோர்ஸ் சங்கங்கள் உறுப்பினர் அல்லாதவர்களுக்குக்கூட விற்பனை செய்வதற்குக் கடமைப்பட்டிருக்கின்றன.

சில பங்கீட்டுச் சீட்டு பெற்றவர்கள் ஒரு ஸ்டோர்ஸ் சங்கத்திற்கோ அல்லது அதன் கிளைகளுக்கோ சேர்க்கப்படு கின்றனர். உறுப்பினர் அல்லாதவர்களும் பொருள்களை அல்லது அவர்கள் தேவைகளை அத்தகைய ஸ்டோர்ஸ் சங்கத்திலிருந்து பெறுகிறார்கள். இம்மாதிரி பொது வழக்குக்கு மீறி நடத்தல்

குறிப்பாக, கூட்டுறவு நிறுவனங்கள் பொது மக்களுடைய இன்றியமையாத தேவைகளை நிறைவு செய்வதற்கு அரசாங்கப் பிரதிநிதிகளாக அல்லது முகவர்களாகப் (Agents) பங்கெடுத்துக் கொள்ளும்பொழுது கட்டாயமாக நேரிடுகிறது. அப்படி இல்லாவிட்டால்கூட, ஒரு ஸ்டோர்ஸ் சங்கம் உறுப்பினர்கள் அல்லாதவர்களுடன் ஒரு சிறிய அளவுககுத் தொடர்பை வைத்துக்கொள்கிறது. ஏனென்றால், அவர்களை நாளடைவில் சங்கத்தின் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்வதற்கு, அது ஒரு வழியாகும்.

(2) ஒரு சங்கத்தின் அலுவல்கள் கூட்டுறவுக் கொள்கைகளுக்கிணங்கியவாறு நடத்தப்படவேண்டும். இந்தக் கொள்கைகள் யாவை? என்பது பற்றி முன் அத்தியாயத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. கூட்டுறவுக் கொள்கைகள் யாவை என்பதைச் சட்டம் விளக்கவில்லை. ஆனால், முன்னர் கூறியபடி, பல கூட்டுறவுக் கொள்கைகள் சட்டத்தின் பல சரத்துகளிலும், விதிகளிலும், பொதிந்து கிடக்கின்றன. எனினும், அவைகளை மீண்டும் சுருக்கமாக ஈண்டு கூறுவோம். முக்கியக் கூட்டுறவுக் கொள்கைகள் பின்வருமாறு;– இந்த முக்கியக் கொள்கைகள் எல்லாக் கூட்டுறவு நிறுவனங்களுக்கும் ஜீவதாரமானவையென்றும், அடிப்படையானவையென்றும் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

(i) சுயேச்சை நிறுவனம் : உறுப்பினர்கள் சுதந்தரமுள்ள தனி நபர்களாக ஒன்று சேர்ந்து பூரண சமத்துவ அடிப்படையின் பேரில் கூடுகிறார்கள். கூட்டுறவுச் சங்கததில் சேர யாதொரு கட்டாயமும் வற்புறுத்தலும் கிடையாது. கூட்டுறவுச் சங்கம் ஒரு சுயேச்சையான நிறுவனம். 'ஒரு மனிதனுக்கு ஒரு வாக்கு' என்ற கொள்கையைக் கடைப்பிடிப்பதன் மூலம் சமத்துவமான நடத்தும் முறை உறுதிப்படுத்தப்படுகிறது.

(ii) மக்களாட்சி முறை கட்டுப்பாடு : ஒரு சங்கத்தில் உறுப்பினருடைய பேரவைதான் மாபெரும் அதிகாரம் வாய்ந்தது. உறுப்பினர்களால் தங்களுக்குள் தேர்ந்தெடுக்கப்பட்டஒரு நிருவாகக்குழுவினிடம் சங்க அலுவல்களின் நிருவாகம் ஒப்படைக்கப்படுகிறது. நிருவாகக் குழுவே பேரவைக்குப் பொறுப்பாளியாகும்.

(iii) இலாப நோக்கு அல்லது ஊக வாணிகம் கிடையாது: மூலதனத்திற்கு ஒரு நியாயமான வட்டி உண்டு. நிகர இலாபம் உறுப்பினர்களுக்கு, அவர்கள் சங்கத்தைப் பயன்படுத்திக்கொண்ட அளவுக்கு ஏற்பப் பங்கீடு செய்யப்படுகிறது.

(iv) திறந்த அங்கத்துவம்: கொள்கை அளவில் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் அங்கத்துவம், வம்சம், மதம், பிறப்பு அல்லது

தொழிலைப் பார்க்காமல் எல்லா நபர்களுக்கும் திறந்து இருக்கிறது.

(v) கல்வி தொடர்புடைய வேலை: கூட்டுறவுச் சங்கங்கள் தங்களுடைய நிகர இலாபத்தில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தைக் கல்வி தொடர்பான செயல்களுக்குப் பயன்படுத்துகின்றன.

(vi) அரசியல், மதச் சார்பின்மை: ஒரு சங்கத்தின் முக்கிய நோக்கம் உறுப்பினருடைய பொருளாதார, சமுதாய நிலையை உயர்த்துதல் ஆகும். சங்கம் அரசியல், மத செல்வாக்கிற்கு அப்பாற்பட்டு இருக்கவேண்டும்.

இவை முக்கியமான கொள்கைகளில் சில. என்றாலும், அதே சமயத்தில் சங்கங்களின் அல்லது அவற்றின் உறுப்பினர்களின் நலனுக்காகவும், அல்லது பொதுவுடைமை அடிப்படையில் ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்குவதற்காகவும், கூட்டுறவு இயக்கம் ஒரு கருவியாக இருப்பதால், அதன் பெரிய நோக்கத்திற்காக அது எந்த முக்கியக் கேள்விகளிலிருந்தும் விலகுவதற்கான சூழ்நிலைகள் எழலாம் என்பதை நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். 1915ஆம் ஆண்டிலேயே, மாக்லகன் (Maclagan) குழுவினர், சில அம்சங்களில் மாறுதலுக்கு அவசியம் இருப்பதை ஒப்புக்கொண்டு பின்வருமாறு கூறியிருக்கின்றனர். 'கூட்டுறவுச் சங்கங்கள், தனிப்பட்ட நடைமுறையில் எதிர்பார்க்கப்படும் தரத்திலிருந்து கீழே இறங்கவேண்டியிருக்கிறது. கூட்டுறவு இலட்சியங்களுக்குப் பொருந்தாத செயல்களையும், அவைகள் மேலான முடிவுக்குக் கொண்டு போகும் என்ற நம்பிக்கையுடன், அடிக்கடி ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது'. அம் மாதிரிக் கொள்கைகளிலிருந்து விலகுதலுக்கு உதாரணம், சங்கத்தின் பேரவையின் முக்கியமான அதிகாரத்தைப் பறிமுதல் செய்தும், மக்களாட்சிமுறைக் கட்டுப்பாடு என்ற கொள்கைக்கு முரணாகவும், அரசாங்கம் அல்லது பதிவாளர் ஒரு சங்கத்தின் நிருவாகக்குழு முழுமைக்கும் நபர்களை நியமித்தல்.

வீட்டுச் வசதி சங்கங்களில் 8 ஆண்டுகள் வரை நிருவாக இயக்குநர்களை நியமிப்பதற்கு உப-விதிகளில் சரத்து இருக்கிறது. ஆரம்ப ஆண்டுகளில் நியமிக்கும் முறை அவசியமாக இருக்கலாம். ஆனால், நீண்ட காலங்களுக்கு நியமனம் செய்தலைக் கட்டாயமாக அவசியப்படுத்துவது மக்களாட்சி நிருவாகக் கொள்கையிலிருந்து ஒரு விலகுதலாக இருக்கும். மேலும், கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளில் அரசாங்கம் அதிகமான பங்குகள் எடுத்திருக்கிறது. அல்லது நடைமுறை முதலுக்காக நிதி உதவி இருக்கிறது.

அல்லது அவைகளுக்கு மற்ற நிறுவனங்களால் கொடுக்கப்பட்ட நிதிகளுக்கு உத்தரவாதம் அளித்திருக்கிறது என்ற காரணத்திற்காக நிருவாகக்குழு முழுவதும் நியமனம் செய்யப்படுவதாகத் தெரிகிறது. மேலும், உறுப்பினரல்லாதவர்களுடன் லேவாதேவி செய்வதும் கூட முன்னர் கூறியபடி சரியான கூட்டுறவுக் கொள்கையிலிருந்து ஒரு விலகுதலாகும். மேலும், திறந்த அங்கத்துவம் என்பது ஒரு கூட்டுறவுக் கொள்கையாயிருந்தாலும் எல்லா நபர்களையும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்வது எப்பொழுதுமே சாத்தியப்படாது. ஏனென்றால் ஒரு சங்கத்தினுடைய பயன் அதற்குக் கிடைக்கும் நிதிவளத்தைப் பொறுத்துத் தான் இருக்கிறது. வீடு கட்டும் மனைகளைப் பிரித்துக் கொடுப்பதற்காக நிலத்தை ஆர்ஜிதம் செய்யும் ஒரு கூட்டுறவுச் சங்கம் ஒரு சில நபர்களை மட்டும்தான் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளமுடியும். ஒரு நீர்ப்பாசனச் சங்கம் தன் எல்லையில் கிடைக்கக்கூடிய நீர் வசதியைப் பொறுத்தும் ஒரு நீர்ப்பாசனக் குழாய் அமைப்பதனுல் நீர்ப்பாசனம் செய்யப்படும் நிலத்தின் பரப்பைப் பொறுத்தும் ஒரு குறைந்த எண்ணிக்கையுடைய நபர்களை மட்டும்தான் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ள முடியும். மற்றும் ஒரு கூட்டுறவுச் சங்கம் ஒரு சுயேச்சையான நிறுவனமாகும். ஆனுல், கட்டாயப்படுத்துதலும் சில சூழ்நிலைகளில் அவசியமாக இருக்கிறது.

உதாரணமாக, ஒரு கிராமத்தில் ஒரு பெரிய மக்கள் பகுதியினர் கிராமக் குளத்தைப் பழுதுபார்த்து நல்ல நிலைமையில் வைப்பதற்கு, அல்லது கொடிய மிருகங்களிலிருந்து பாதுகாப்பு அளிப்பதற்கு ஒரு குடி மராமத்துச் சங்கத்தில் சேர்ந்தால், கிராமத்தில் சிறுபான்மையினர் அந்தச் சங்கத்தில் சேராமலிருந்து, அக் கூட்டுறவுச் சங்கத்தின் பலனை அனுபவிக்காமல் இருக்க முடியாது. இம்மாதிரிச் சூழ்நிலைகள் எழலாம் என்பதற்காகச் சென்னையில் நடைபெற்ற 15ஆம் பதிவாளர்கள் மகாநாடு (1943) பின்வருமாறு தீர்மானித்தது; 'இந்த மகாநாடு, கூட்டுறவு இயக்கத்தில் திட்டமிடுவது, ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் அங்கம் வகிப்பதில் கையாளப்படும் சுயேச்சைக் கொள்கையிலிருந்து விலகுதல்', என்று பொருளாகாது என்று கருதுகிறது; இந்தக் கொள்கை மதிக்கப்பட்டு ஒரு சங்கத்தில் சேருவதற்கு ஒருவரையும் வற்புறுத்தக்கூடாது. மேலும், நாட்டு வளர்ச்சியில் பொறுப்பு வாய்ந்த அரசாங்கத் துறைகள் பல சூழ்நிலைகளில் கல்வி, பிரச்சாரம், இசைவுப்பெறப் போதனை, செயல் பயிற்சி விளக்கம், உறுப்பினரல்லாதவர்களுக்கு அதிகாரங்களை மறுத்தல், இவைகளின் மூலம் வற்புறுத்தலில்லாமல் திட்டமிட்டமுறையில், கூட்டுறவு

நடவடிக்கைகளை மேற்கொள்ளச் செய்யமுடியும்'. அந்த மகாநாடு மேலும் சிபாரிசு செய்திருப்பதாவது, 'பொதுவானதும் இன்றி யமையானதுமான பொருளாதாரச் சேவையை மேற்கொள் வதற்கு அவசியம் ஏற்படும்பொழுதும் அல்லது சமூகத்தின் நலன் களுக்காகவும் ஒரு கூட்டுறவுச் சங்கத்தால் நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானம் சம்பந்தப்பட்ட மிகப் பெரும்பாலான பொரு ளாதார வகுப்பு அல்லது கூட்டத்தினர் ஏற்றுக் கொள்ளும் பட்சத்தில், உறுப்பினர் அல்லாதவர்களையும் சட்டப்படி அந்தத் தீர்மானம் கட்டுப்படுத்த வேண்டும் என்பது'. ஆகையால், கூட்டு றவு அடிப்படைக் கொள்கைகளை விட்டுக் கொடுப்பது அவசிய மாகிறது.

அத்தகைய சூழ்நிலைகளில், சங்கங்கள் பதிவு செய்து கொள்ள அனுமதிக்கப்படும்பொழுது, கூட்டுறவுக் கொள்கைகளை முற்றும் உணர்ந்து இந்தக் கொள்கைகள் மேலான வாழ்க்கைத் தரத்தைக் கொடுக்கும் என்ற நம்பிக்கையுடன் பதிவு செய்யப்படவேண்டும். எப்படியிருந்தாலும், பதிவு செய்யும் அதிகாரி இக் கொள்கைகளில் அடங்கியிருக்கும் மெய்க் கருத்து மீறப்படாமலும், அல்லது சங்கங்கள் ஊகவாணிக, சூதாட்டச் செயல்களுக்காகவும் அல்லது தோற்றுவிப்பவர்களுடைய சில சுயநலச் செயல்களுக்காகவும், துர்ப்பிரயோகப்படுத்தப்படாமலிருக்கப் பார்த்துக் கொள்ள வேண்டும். நிறுவனத்திற்கு அரசாங்கத்திடமிருந்தும் அல்லது நிதிவழங்கும் நிலையங்களிலிருந்தும் கிடைக்கும் பல உதவி களுக்காகச், சங்கத் தோற்றுவிப்பாளர்கள் சங்கத்தைப் பயன் படுத்திக்கொள்ள முயற்சிக்கலாம். கூட்டுறவின் பெயரில் போலி நிறுவனங்கள் தோன்றுவது கூடாது. கூட்டுறவு உடையில் முதலாளித்துவ நலமிகள் நுழையக்கூடாது. நிறுவனங்கள் இயல்பாக உண்மையிலேயே கூட்டுறவாக இருந்து ஒரு தெளிவான பொருளாதாரச் சேவை செய்து சமுதாய நலனளிப்பதாக இருக்கவேண்டும்.

(3) ஒரு சங்கம் குறைந்தபட்சம் பத்து நபர்களைக் கொண்ட தாக இருக்கவேண்டும். இந்த நிபந்தனை எல்லா உறுப்பினர்களும் தனி நபர்களாகவும், ஓர் உறுப்பினர்கூடச் சங்க உறுப்பினராக இல்லாமலும் இருக்கும் பிரதமச் சங்கங்களுக்கு மட்டும்தான் பொருந்தும். இந்தக் குறைந்த பட்ச உறுப்பினர் எண்ணிக்கை 1961ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவச் சங்கங்கள் சட்டத்தில் 6ஆம் பிரிவில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. எனினும், இந்த எண்ணிக்கை கூட்டுறவுச் சட்டம் இந்த நாட்டில் நிறை வேற்றப்பட்ட நாளிலிருந்து குறைந்தபட்ச எண்ணிக்கையாக இருந்து வருகிறது என்பது குறிக்கத்தக்கது. சந்தானம் குழுவினர், இந்தக் குறைந்த எண்ணிக்கை, சிறியதாகவும் இறுக்கமானதாகவு

முள்ள சங்கங்களை நிறுவுவது நோக்கமாக இருந்த கூட்டுறவு இயக்க ஆரம்பகாலத்து நிலைமையில், ஒரு நியாயமானதாகவும் வரம்புள்ளதாகவும் இருந்திருக்கலாம் என்று கருதினர்.

இன்று, ஏராளமான உறுப்பினர்களைக்கொண்ட தன்னிறைவு பெற்ற (Viable) நிறுவனங்களை அமைப்பது கொள்கையாக இருக்கிறது. மேலும், கூட்டுறவு இயக்கம், அரசாங்கத்திடமிருந்து பங்கு மூலதனம், மானியங்கள், கடன்கள் போன்ற உதவிகளைப் பெருமளவில் பெறுவதால், இந்த உதவிகள் முடிந்தவரை ஏராளமான உறுப்பினர்களுக்குக் கிடைப்பதை உறுதிப்படுத்துவது தேவையாக இருக்கிறது. ஆகையால், ஒரு பிரதமச் சங்கத்தில் குறைந்தபட்ச உறுப்பினர் எண்ணிக்கை பத்திலிருந்து இருபத்தைந்திற்கு உயர்த்தப்படவேண்டுமென்று அக் குழுவினர் கருதினர். 'எனினும், ஒரு நீரேற்றுப்பாசனச் சங்கத்தைப்போன்ற (Lift Irrigation Society) சில சங்கங்கள் 10 அல்லது 15 உறுப்பினர்களுடைய தேவைகளை மட்டும்தான் நிறைவு செய்யமுடியும் அம்மாதிரிச் சங்கங்களை நாங்கள் விலக்குவதற்கு விரும்பவில்லை. ஆனால், பதிவு செய்வதற்கு முன்பு அம்மாதிரிச் சங்கம் அதிக் எண்ணிக்கையுள்ள உறுப்பினர்களுக்குத் தன் சேவையை அளிக்க முடியாதா என்று பதிவாளர் உண்மை நிலையைத் தெரிந்து கொள்ளவேண்டும். குறைந்தபட்ச எண்ணிக்கை உடையனவாக இருந்தாலும், சங்கங்கள் ஒரு சிலருடைய பிடியிலடங்கும் நிறுவனமாக ஆகிவிடக் கூடாது என்ற கவலைகூட எங்களுக்கு இருக்கிறது. பதிவாளர் ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்குமுன்பு அம்மாதிரி ஒழுங்கு தவறிய வளர்ச்சிக்கு இடம் தரக்கூடாது'.

(4) ஒரு நாணயச் சங்கத்தின் உத்தேசிக்கப்படும் எல்லையில் நபர்கள் வசிப்பவர்களாகவோ அல்லது சொந்த அசையாச் சொத்துகளையுடையவர்களாகவோ இருக்கவேண்டும். அல்லது சில வகுப்புகளையோ அல்லது தொழிலையோ சேர்ந்தவர்களாக இருக்கவேண்டும். இந்த எல்லை ஒரு நகரம், ஒரு கிராமம் அல்லது கிராமத் தொகுதியாகவும் இருக்கலாம். குடியிருப்புத் தகுதி வற்புறுத்தப்படவில்லை என்பது கவனிக்கத்தக்கது. ஒரு சங்கத்தின் எல்லையில் ஒரு நபர் சொந்த அசையாச் சொத்து உடையவராக இருந்தாலும்கூட அவர் ஓர் உறுப்பினராவதற்குத் தகுதி பெற்றவர். ஒரு சங்கத்தின் உத்தேசிக்கப்பட்ட எல்லைக்கு வெளியே வசிக்கும் மக்களும்கூட அந்த எல்லைக்குள் நிலங்களைச் சொந்தமாக வைத்திருந்தால் ஒரு நாணயச் சங்கத்தில் உறுப்பினராவதற்குச் சட்டம் ஏற்பாடு செய்கிறது. இந்த ஏற்பாட்டின் நோக்கம் குடியிருப்புத் தகுதிக்கு ஒரு மாற்றுத் தகுதி வகுத்து, சங்கத்தின் எல்லைக்குள் நிலங்களைச் சொந்தமாக வைத்திருக்கும்

நபர்களும் அருகிலுள்ள நகரங்களில் அல்லது கிராமங்களில் வசித்தபோதும் அவர்களுக்குச் சங்கத்தின் சேவைகள் மறுக்கப்படக்கூடாது என்பது. இதன் விளைவு சங்கத்தின் எல்லைக்குள் உண்மையில் வசிக்காத நபர்களும் அவர்கள் எல்லைக்குள் அசையாச் சொத்துகளைச் சொந்தமாக உடையவர்களாக இருந்தால் மட்டும் அவர்களுக்கும் கூடச் சங்கத்தின் சேவைகள் கிடைக்கும் வண்ணம் விரிவுப்படுத்தப்பட வேண்டும்.

பொதவாக ஒரு நாணயச் சங்கத்தின் விவகார எல்லை அதனுடைய உப-விதிகளில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அந்த எல்லையில் வசிக்கும் நபர்கள் சங்கத்தில் உறுப்பினராவதற்குத் தகுதிபெற்றவர்கள். சந்தானம் குழுவினர், ஒரு விவசாய நாணயச் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்க்கப்படுவதை, அதனுடைய விவகார எல்லையில் வசிப்பவர்களுடைய மட்டும் கட்டுப்படுத்தப் படவேண்டும் என்றும், எனினும், எல்லைக்கு வெளியே உள்ள ஒரு நகரம் அல்லது வேறு இடங்களில் நிரந்தரமாக வசிப்பவர்கள் ஆங்கு விவசாய நாணயச் சங்கம் இல்லாமலிருந்து சங்கத்தின் எல்லையில் நிலங்களைச் சொந்தமாக உடையவராக இருந்து அந்த நிலங்களை உழுது கொண்டிருக்கும் நபர்களுக்கு மட்டும் விதிவிலக்குச் செய்யலாம் என்றும் கருத்து கொண்டனர். இத்தகைய நபர்களுடைய தேவைகளைப் பூர்த்திசெய்வத்ற்குத்தான் 'அசையா சொத்துகளைச் சொந்தமாக உடையவர்கள்' என்று வார்த்தைகள் சட்டத்தின் 6ஆம் பிரிவு 1ஆம் பகுதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. எனினும், சந்தானம் குழுவினர், ஒரு நபர் ஒன்றுக்கு மேற்பட்ட சங்கத்தின் எல்லையில் நிலங்களை உடையவராக இருந்தால், அவர் ஒரு சங்கத்தில் மட்டும்தான் உறுப்பினராவதற்குத் தகுதிவுள்ளவராக இருக்கவேண்டுமென்றும், அவர் சங்கத்திற்கு, இதர சங்கம் அல்லது சங்கங்களின் எல்லையிலிருக்கும் அவருடைய நிலங்களின் விவரங்களைத், தெரியப்படுத்த வேண்டுமென்றும், சங்கம் அவருடைய எல்லா நிலங்களுக்கும் விவசாயத்திற்காக வேண்டிய நிதியை வழங்கவேண்டும் என்றும், சிபாரிசு செய்திருக்கின்றனர். நிலங்கள் தூரமாகப் பிரிக்கப்பட்டிருந்தால், இந்த ஏற்பாடு நடைமுறையில் அமல்படுத்த முடியாது. ஏனென்றால், சங்கத்தில் வாங்கிய கடன் சரியாகப் பயன்படுத்தப்பட்டதா என்பதையும், அல்லது நிலங்களில் விளையும் மகசூல் விற்பனையிலிருந்து அந்தக் கடனைத் திரும்ப வசூல் செய்வதையும், உறுதிப்படுத்துவதற்குச் சாத்தியப்படாது.

(5) சங்கங்கள் வரையறுக்கப்பட்ட அல்லது வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில் பதிவு செய்யப்படலாம். அந்தவிதப் பொறுப்பையும் தெரிந்தெடுத்துக் கொள்வது தோற்ற

விப்பாளர்களுடைய விருப்பத்திற்கு விட்டுவிடப்பட்டுள்ளது. இம்மாதிரி விடப்பட்டிருப்பது பெரும்பாலும் விவசாய நாணயச் சங்கங்களுக்கு மட்டும்தான். இதர சங்கங்கள் பொதுவாக வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் தான் இயங்குகின்றன. வரையறுக்கப்பட்ட சங்கத்தின் பொறுப்பு செலுத்தப்பட்ட பங்குத்தொகைக்கு மட்டும் வரையறுக்கப் பட்டோ அல்லது உத்தரவாதப் பொறுப்பு அதாவது செலுத்தப்பட்ட பங்குத்தொகைக்கு ஒரு சில மடங்காகவோ, அல்லது ஒரு குறிப்பிட்ட தொகைக்கு உத்தரவாதப் பொறுப்பாகவோ இருக்கலாம். இந்த விவரங்கள் உத்தேசிக்கப்பட்ட சங்கத்தின் உப-விதிகளில் அடங்கியிருக்கும். ஆனால், பொறுப்பின் வகை அதாவது வரையறுக்கப்பட்டதா அல்லது வரையறுக்கப் படாததா என்பது சங்கத்தின் பெயரிலேயே காட்டப் பட்டிருக்கும். வரையறுக்கப்பட்ட சங்கத்தில் அதனுடைய பெயரின் கடைசியில் 'வரையறுக்கப்பட்டது' என்று குறிப்பிடப் பட்டிருக்கும். வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்களில் இவ்வார்த்தைகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. விவசாயக் கடன் சங்கங்களுக்கான இந்த இரண்டு வகைப் பொறுப்புகளின் தகுதி ஒப்பீடு முந்தைய அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. நாட்டில் பொதுவான கருத்துப் போக்கு இப்பொழுது வரை யறுக்கப்பட்ட பொறுப்பிற்குத்தான் சாதகமாக இருக்கிறது என்பதும் அங்கே கூறப்பட்டிருக்கிறது. தமிழ்நாட்டில் கையாளப் படும் நடைமுறையும் அங்கே விவரிக்கப்பட்டிருக்கிறது.

தமிழ் நாட்டில், வரையறுக்கப்படாத பொறுப்பு முக்கியமாக விவசாய நாணயச் சங்கங்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. நிதி திரட்டுவதற்கும், திரட்டிய நிதிக்குப் பாதுகாப்பு அளிப்ப தற்கும், அது ஒரு முறையாகக் கையாளப்பட்டது. இந்தப் பழக்கம்; சங்கங்கள் சிறியதாகவும் இறுக்கமானவையாகவுமிருந்து உறுப்பினர்கள் பொறுக்கி எடுக்கும் கொள்கையின்பேரில் சேர்க்கப் பட்டு, கிராமங்கள் ஒற்றுமையாகயிருந்து கிராமத் தலைவர்கள் அந்தச் சங்கங்களில் சேர்ந்து நிருவாகப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்த ஆரம்ப காலத்தில், சரியானதாக இருந்திருக்கலாம். அந்தக் காலத்தில் கூட கிராமங்களில் இந்தக் கொள்கையின் உட்கருத்தைச் சரியாக உணராமலும், உணர்ந் திருந்தாலும், கிராம மக்களால் ஏற்றுக் கொள்ளப்படாமலும் அநேக வழக்குகள் இருந்தன. கிராமங்களில் வரையறுக்கப்படாத பொறுப்பு நிறைவேற்றப்பட்டபோது மக்களில் ஒரு சாரார் கூட்டுறவுச் சங்கங்கள் மீது சசப்பும் வெறுப்பும் கொண்டனர். வரையறுக்கப்படாத பொறுப்பு நிறைவேற்றுவதை நம்பிக்

கொண்டு, நிதி வழங்கும் வங்கிகள்கூடக் கடன்களைச் சரியாகப் பயன்படுத்துதல் போன்றவற்றில் மேற்பார்வைக்காகச் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைப் பற்றிக் கவலைப்படாமல் இருந்தனர். ஆகையால் வரையறுக்கப்பட்ட பொறுப்புக்குச் சாதகமாக கருத்து மாறிக் கொண்டு வந்தது.

பெரிய அளவுச் சங்கங்கள் ஏராளமான உறுப்பினர்களுக்குக் கட்டாயச் சேவைகள் செய்ய வேண்டுவதும், கடன் கொடுப்பதற்கு ஆதாரம் நபருடைய கடன் வாங்கும் தகுதியிலிருந்து கடன் வாங்கும் செயலின் தகுதிக்கு மாறிக் கொண்டிருப்பதும், குத்தகைக்குப் பயிரிடுபவர் உட்பட உழவர்களுக்கும், இறுதி நிலைக்கும் கீழான உழவர்களுக்கும், சமூகத்தில் பலமற்ற பகுதியினருக்கும் கடன்கள் வழங்கப்பட வேண்டும் என்று வற்புறுத்தப் படும் இந்தத் தருணத்தில், எல்லாக் கடன்களுக்கும் பொறுப்பு வகிக்க உறுப்பினர்களை எதிர்பார்ப்பது சாத்தியமுள்ளதல்ல. மேலும், கடன்களுக்கு ஆதாரம் இப்பொழுது கீழ்க்கண்டவை களின் மூலம் திரட்டப்படுகிறது. அதிகப்படுத்தப்பட்ட பங்கு மூலதனம், பல வருடங்களாகச் சேர்த்து வைக்கப்பட்ட காப்பு நிதிகள், மத்திய வங்கிகளால் நியமிக்கப்பட்ட ஏராளமான சிப்பந்திகளின் தீவிரமான மேற்பார்வை, கடன்களைத் திருப்பி வசூல் செய்வதற்காக மேலானதாகவும் சுறுசுறுப்பானதாகவு- முள்ள விதிமுறைகள், அரசாங்கத்தாலும்கூட உதவித் தொகை அளிக்கப்படும் வராக்கடன் காப்பு நிதி, சிறப்புக் காப்பு நிதிகளைச் சேர்ப்பது முதலியன அரசாங்கம் சில சங்கங்களுக்கு அதாவது தெரிந்தெடுக்கப்பட்ட வட்டாரங்களில், முழுமை நிதித் திட்டத்தின்கீழ், சமுதாயத்தில் வலிமையற்ற பகுதியினருக்குக் கொடுக்கப்பட்ட கடன்களுக்கு உத்தரவாதம் அளித்துள்ளது. மேலும், அரசாங்கம், சங்கங்களும் மத்திய வங்கிகளும் ஏற்படுத்தி யுள்ள பிரத்தியேக வராக்கடன் காப்பு நிதிக்குச் சமூகத்தின் பலமற்ற பகுதியினருக்குக் கொடுக்கப்பட்ட கடன்கள் நிலுவை அதிகரிப்பின் பேரில், முறையே 12 சதவிகிதமும் (12%) 4 சதவிகிதமும் (4%) உதவித் தொகையாக வழங்குகிறார்கள். இந்த விதமாக, அரசாங்கம் இதுவரை ரூ. 112 லட்சம் உதவித் தொகை அளித்துள்ளது.

கூட்டுறவு நிறுவனங்கள் நாளடைவில், ரிசர்வ் வங்கியால் ஊக்குவிக்கப்பட்ட 'கடன் உத்தரவாத நிறுவனத்தின் (Credit gurantee Corporation) திட்டத்தின்படியும்கூட உதவி பெற சாத்தியமாக இருக்கும். இந்தத் திட்டம் சிறு குடியானவர் களுக்கும் அவர்களைப் போன்ற இதரத்துறையில் இயங்கும் நபர்

களுக்கும் உதவி செய்யும் கொள்கையை அமல்படுத்தும் வகையில் நாட்டுடைமை வங்கிகளுக்கு உதவுகிறது. இச் சூழ்நிலையைப் பார்க்கும்பொழுது, வரையறுக்கப்படாத பொறுப்பு இனிமேல் ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல என்றும், விவசாய நாணயச் சங்கங்களைப் பொருத்தவரை, வரையறுக்கப்பட்ட பொறுப்புக்கு இடம் தரவேண்டும் என்றும் தெளிவாகிறது. எனினும், தமிழ்நாட்டில் சீரமைக்கப்பட்ட நாணயச் சங்கங்களில் கூட, வரையறுக்கப்படாத பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் வழக்கம் இன்னும் இருந்து வருகிறது. விவசாய நாணயச் சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்பின் அடைப்படையில் தான் இருக்கவேண்டும் என்று 1932 ஆம் வருடத்தியச் சட்டத்திலிருந்த நிபந்தனையைத் தளர்த்தப் பதிவாளருக்கு அதிகாரம் கொடுத்து 1956ஆம் ஆண்டிலேயே சட்டம் திருத்தப்பட்டது. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 4 (1) பிரிவின்கீழ், ஒரு கூட்டுறவுச் சங்கம் வரையறுக்கப்பட்ட அல்லது வரையறுக்கப் படாத பொறுப்பின் அடிப்படையில் பதிவு செய்யப்படலாம். சட்ட பூர்வமாக சீரமைக்கப்பட்ட விவசாய நாணயச் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பு ஏற்றுக்கொள்ளலாம். ஆனால், நடைமுறையில் பழக்கம் வேறு விதமாக இருக்கிறது.

(6) சட்டத்தின் 6, (1) பிரிவின்கீழ், ஒரு சங்கம் நிறுவப்படுவதற்குக் குறைந்தபட்சம் 10 நபர்களிருக்கவேண்டுமென்ற நிபந்தனை, உத்தேசிக்கப்பட்ட சங்கம் ஒரு சங்கத்தையோ அல்லது சங்கங்களையோ உறுப்பினர்களாகக் கொண்டிருந்தால், அகற்றப்பட்டது. ஏனென்றால், அம்மாதிரிச் சங்கங்கள், கூட்டிணைப்பு அல்லது கூட்டுத் தன்மையாக இருந்து, மற்ற சங்கங்களின் செயல்பாட்டை வசதிப்படுத்தவேண்டும். நான்கு அல்லது ஐந்து சங்கங்கள் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டுறவு மேற்பார்வை ஒன்றியம் பதிவு செய்யப்படுவதற்கு மனுச் செய்துகொள்ளலாம். இரண்டு அல்லது மூன்று தனி நபர்களும் இரண்டு அல்லது மூன்று சங்கங்களும் ஒன்று சேர்ந்து பதிவு செய்யப்படுவதற்கு விண்ணப்பிக்கலாம். ஆகையால் இந்த நிறுவனங்கள் 6, (1) பிரிவில் நிருணயிக்கப்பட்ட குறைந்தபட்ச நபர்களின் எண்ணிக்கைக் கட்டுப்பாட்டுக்கு உட்படா.

(7) சங்கங்களை உறுப்பினர்களாகக் கொண்ட சங்கத்தின் பொறுப்பு வரையறுக்கப்பட்டதாக இருக்கவேண்டும். ஏனென்றால், சங்கத்தில் நலனைக்கருதி எந்தச் சங்கமும் வரையறுக்கப்படாத பொறுப்பு சங்கத்தில் பங்குத் தொகையை வாங்க அனுமதிக்க முடியாது. ஒரு சங்கம் வரையறுக்கப்படாத பொறுப்பு சங்கத்தில்

உறுப்பினராகச் சேர்ந்து அதனுடைய சொத்துகளை ஆப்த்துக் குள்ளாக்க முடியாது. ஆகையினால் பிரிவு 4-ன் பகுதி (1)-ல் இந்தக் கட்டுப்படுத்தும் சரத்து ஏற்பட்டிருக்கிறது.

(8) 'வரையறுக்கப்பட்டது' என்ற சொல் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் பெயரில் கடைசிச் சொல்லாகச் சேர்க்கப்படவேண்டும். இது சங்கத்தை நிறுவும்பொழுதும் அல்லது அதில் சேரும்பொழுதும் சங்கத்தின் உறுப்பினர்கள் மேற்கண்ட பொறுப்பின் இனத்தைப் பொதுமக்களுக்குச் சுட்டிக் காட்டுவதற்காகச் செய்யப் படுகிறது.

(9) சங்கங்கள் வரையறுக்கப்பட்ட அல்லது வரையறுக்கப் படாத அடிப்படையில் அமைக்கப்பட்டிருப்பதைப் பொருட்படுத் தாமல், அரசாங்கம் அல்லது ஒரு நிதி வழங்கும் வங்கி சங்கத்தின் உறுப்பினராகும்பொழுது, அவர்களுடைய பொறுப்பு வரை யறுக்கப்பட்டதாக மட்டும்தான் இருக்கும். ஆகையால் 4 (2) பிரிவின்கீழ், அரசாங்கம் அல்லது நிதி வழங்கும் வங்கியின் பொறுப்பு, தமிழ் நாட்டில், செலுத்தப்பட்ட பங்குத் தொகைக்கு ஒரு சில மடங்கு அதாவது 4 அல்லது 5 மடங்கு, வரையறுக்கப் பட்டு இருக்கும். ஒரு விவசாய வங்கி அல்லது ஒரு விவசாய நாணயச் சங்கத்தைப் போன்ற ஒரு வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தில் பங்குகள் அவர்கள் எடுத்து இருந் தாலும்கூட அவர்களுடைய பொறுப்பு அவர்கள் செலுத்தி யிருக்கும் பங்கு மூலதனத்திற்கு வரையறுக்கப்பட்டதாக இருக்க வேண்டும். இந்த சரத்துச் 44 (1) பிரிவின்கீழ் ஏற்பாடு செய்யப் பட்ட பல்வேறு வகையான சங்கங்களின் பங்கு மூலதனத்தில் அரசாங்கம் பங்கு கொள்ளுதல் திட்டத்தினுடைய நேரடி விளைவு. தலைமை வங்கியும், மத்திய வங்கியும்கூட இதர சங்கங்களில் பங்குகள் எடுத்துக் கொள்ளலாம். அப்பொழுது அவைகளுடைய பொறுப்பு அவைகள் செலுத்தியிருக்கும் பங்கு மூலதனம் வரைக்கும்தான் வரையறுக்கப்பட்டிருக்கும்.

ஒரு தனி நபர் பங்குதாரருக்கும் அரசாங்கம் அல்லது இதர நிறுவனப் பங்குதாரர்களுக்குமிடையேயுள்ள வேறுபாடு சேவைப் படுகிறது. ஏனென்றால், அரசாங்கம் அல்லது நிதி வழங்கும் வங்கி, அவைகள் பங்குகளெடுத்திருக்கும் ஒரு சங்கம் கலைக்கப் படும் பட்சத்தில், அந்தச் சங்கத்தினுடைய எல்லாக் கடன் களுக்கும் பொறுப்பு உள்ளவைகளாக இருக்கமுடியாது. இதுதான் நல்லதொரு ஏற்பாடு. அரசாங்கம் அல்லது நிதி வழங்கும் வங்கி ஒரு சம்பந்தப்பட்ட சங்கத்தின் பங்கு மூலதன

அமைப்பைப் பலப்படுத்துவதற்காகவும் பொது மக்கள் மத்தியில் அந்தச் சங்கத்தின் மதிப்பை மேம்படுத்துவதற்காகவும் அந்தச் சங்கத்தில் பங்குகள் செலுத்துகிறார்கள். அத்தகைய சூழ்நிலை களில் அவை சங்கம் கலைக்கப்படும்போது, அதன் எல்லாக் கடன் களுக்கும் பொறுப்பாளிகளாக இருக்கக்கூடாது; அப்படி இருக்கவும் முடியாது. சங்கங்களை உறுப்பினர்களாகக் கொண்ட ஒரு சங்கத்தின் பொறுப்பு வரையறுக்கப்பட்டதாக இருக்க வேண்டும் என்ற (4) 1 பிரிவிலடங்கிய கொள்கையின் நீட்டிப் பாகும் இது.

கூட்டுறவுக் கடனைப் பற்றி ஆராய்ந்த மேதா குழுவினர் 1932ஆம் வருடத்திய சென்னை கூட்டுறவுச் சங்கச் சட்டத்திலிருந்த இந்தச் சரத்தைக் கவனத்தில் குறித்துக் கொண்டார்கள். ஏனென்றால், அந்தச் சம்பந்தப்பட்ட பிரிவு, 1961ஆம் ஆண்டின் சட்டம் பெருமளவு திருத்துவதற்கு முன்னரே கூட, திருத்தப் பட்டிருந்தது. அந்தக் குழுவினர் பின்வருமாறு கருத்து மொழிந் தனர், 'ஒரு வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தில் மற்ற உறுப்பினர்களுடைய பொறுப்பு வரையறுக்கப்படாமலிருப்பது போன்று, அரசாங்கத்தின் பொறுப்பு வரையறுக்கப்படாததாக இருக்க முடியாது என்பது தெளிவு. ஆகையால், அம்மாதிரி சங்கங் களில் அரசாங்கம் பங்குகள் எடுத்தாலும் கூட அரசாங்கம் உதவிய மூலதனத்திற்கு மட்டும்தான் அதனுடைய பொறுப்பு வரை-யறுக்கப்பட்டுள்ளதாகஇருக்கவேண்டும். இந்தவழிகளில் சென்னைக் கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தில் சரத்துகளிருப்பதை நாங்கள் காண்கிறோம்'. அரசாங்கத்தைப் போலவே இதர சங்கங்களில் பங்குகளெடுக்கும் நிதி வழங்கும் நிறுவனங்களுடைய பொறுப்பும் கூட வரையறுக்கப்பட்டுள்ளதாகவே இருக்கும். தமிழ் நாட்டில் அரசாங்கம் அல்லது நிதி உதவும் வங்கிகள் வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்களில் பங்குகள் எடுப்பதிலுள்ள துன்பத்தை முன்கூட்டியே உணர்ந்து, மேதா குழுவினர் இந்தப் பிரச்சினையை ஆராய்வதற்கு முன்னரேகூட, தக்க சட்டத் திருத்தங்கள் செய்யப் பட்டன. அதனுடைய விளைவே சட்டத்தின் 4 (2) பிரிவு ஆகும்.

(10 பதிவு செய்யும் அதிகாரி சங்கம் வெற்றிகரமாக வேலை செய்வதற்கு நியாயமான வாய்ப்புகள் இருக்கின்றனவா என்பதைத் திருப்தி செய்துகொள்ளவேண்டும். வெறும் சட்டத் தேவைகளுக்கு இணக்கமாக இருப்பது மட்டும் ஒரு சங்கம் பதிவு செய்யப்படுவதற்குப் போதிய காரணமாக இருக்கக்கூடாது என்பதை உறுதிப்படுத்துவதுதான் இதன் நோக்கம். பதிவு செய்யும் அதிகாரி, சட்டத்திலும், விதிகளிலுமுள்ள சரத்துகள்

சங்கம் பதிவு செய்வதற்கு விண்ணப்பம் செய்வதில் அனுசரிக்கப் பட்டிருக்கின்றன என்பதையும், உத்தேசிக்கப்பட்ட உபவிதிகள் சட்டத்திற்கும், விதிகளுக்கும் அல்லது கூட்டுறவுக் கொள்கை களுக்கும் எந்தவிதத்திலும் முரண்படாமலிருக்கின்றன என்பதையும், உறுதிப்படுத்திக்கொள்வது அவசியமாக இருப் பினும், அவர் இன்னும் மேலே சென்று, எந்த ஒரு எல்லையில் அமைக்கப்படும் ஒரு சங்கம் வெற்றிகரமாக வேலைசெய்ய முடியுமா என்பதையும் கவனிக்கவேண்டும். முன்னரே கூறியபடி, பதிவு செய்யப்படுவதற்கு விண்ணப்பம் கிடைத்தவுடன் அது அவசிய மான விசாரணைக்கும், ஆய்வுக்கும் அனுப்பப்படுகிறது. அவசியமான விசாரணைகள் செய்தபிறகுதான், ஒரு சங்கத்தை அமைப்பதற்கு முயற்சிக்கப்படுகிறது. ஒரு சங்கத்தினுடைய அவசியம், அது வெற்றிகரமாக வேலை செய்யும் சாத்தியக்கூறுகள், இவைகளைப்பற்றிய எல்லா விவரங்களும் அடங்கிய உறுப்பினர் களுடைய விண்ணப்பத்துடன், அமைப்பாளருடைய அறிக்கையும் அனுப்பப்படுகிறது. மேற்பார்வை ஒன்றியம், நிதி வழங்கும் வங்கி, இவற்றின் சிபாரிசு தவிர, ஒரு சங்கம் பதிவு செய்யப் படலாமா, அல்லது கூடாதா என்பது பற்றி, பதிவு செய்யும் அதிகாரி ஒரு முடிவிற்கு வருவதற்கு இந்த அமைப்பாளருடைய அறிக்கை ஆதாரமாக இருக்கிறது. இங்கேதான் பதிவு செய்யும் அதிகாரியுடைய உளத்தேர்வு நிற்கிறது. 9 (1). பிரிவின் கீழ், ஒரு சங்கத்தைப் பதிவு செய்ய அல்லது செய்ய மறுக்க பதிவாளருக்கு உளத்தேர்விடப்பட்டிருக்கிறது.

விண்ணப்பதாரர்கள் கோரும் எல்லாச் சங்கங்களையும் பதிவு செய்யத்தான் வேண்டும் என்பது பதிவாளருடைய கடமையல்ல. பதிவாளர், சங்கத்தின் நோக்கம், சங்கம் பொருளாதாரத்தைப் பற்றிய தன்மையுடையது. சங்கம் உண்மையான கூட்டுறவுத் தன்மையைப் பெற்றது, சங்கம் கூட்டுறவு முறையில் இயங்கி எந்த நபர்களுக்காக அது உத்தேசிக்கப்படுகிறதோ அந்த நபர்களின் நலத்திற்காக உண்மையாகச் சேவை செய்யும், இவற்றைக்குறித்து அவர் மனநிறைவுபெற வேண்டும். நாணயச் சங்கங்களல்லாத கைத்தறி நெசவாளர் சங்கங்கள், வீட்டுவசதிச் சங்கங்கள், விவசாயப் பண்ணைச் சங்கங்கள், தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் முதலியன போன்ற சிறப்பு வகைச் சங்கங்களின் விஷயத்தில், சிறப்பு விசாரணைகள் செய்யப்படுவது அவசியம். ஆகையால், சங்கம் பதிவு செய்யப்படும்போது, அது உறுதியாகவும் வெற்றிகரமாகவும் நன்கு செயல்படும் என்பதைப் பதிவுசெய்யும் அதிகாரி திருப்தி செய்துகொள்ள வேண்டும். இது, ஐயமின்றி, அபிப்பிராயத்திற்குட்பட்ட ஒரு செயலாகும். ஆனாலும், ஒரு

சங்கத்தைப் பதிவு செய்வதற்கு அனுமதிக்கும் முன்னர், சங்கம் நன்றாக வேலை செய்யும் வாய்ப்பைப்பற்றியும் பதிவுசெய்யும் அதிகாரி ஓர் அபிப்பிராயம் எடுத்துக்கொள்ளவேண்டும். இதுவும் கூட, பதிவாளருக்கு விடப்பட்டிருக்கும் கடமைகளில் ஒன்று; இது ஒரு சங்கம் பதிவு செய்யப்படுவதற்குண்டான நிபந்தனையுமாகும் (பிரிவு 9 (1).

இந்த இடத்தில் கூட்டுறவுச் சட்டக் குழுவினரால் தயாரிக்கப்பட்ட மாதிரி மசோதாவில், பதிவு செய்வது தொடர்பாகக் கீழ்க்கண்ட ஏற்பாடு ஆலோசனை கூறப்பட்டிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது. இந்த ஏற்பாட்டில், மேலே குறிப்பிட்டுள்ள பல விவரக்கூறுகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பதிவு செய்வதைக் குறித்து, மாதிரி மசோதாவின் 7ஆம் பிரிவு கூறுவதாவது :

(அ) விண்ணப்பம் சட்டத்திலும், விதிகளிலுமுள்ள எல்லாச் சரத்துகளுக்கும் இணக்கமாக இருக்கிறது என்றும்,

(ஆ) உத்தேசிக்கப்பட்ட சங்கத்தின் நோக்கங்கள் மாதிரி மசோதாவின் 4ஆம் பிரிவுக்கு ஒத்திருக்கின்றன என்றும்,

(இ) உத்தேசிக்கப்பட்ட சங்கங்களின் குறிக்கோள் சமுதாய நீதிக் கொள்கைகளுக்கு முரண்பட்டதாக இல்லையென்றும்,

(ஈ) உத்தேசிக்கப்பட்ட உப-விதிகள் சட்டத்திலும் விதிகளிலுமுள்ள சரத்துகளுக்கு விரோதமாக இல்லையென்றும்,

(உ) சங்கம், தொழில்முறைக்கு ஒத்து, அது வெற்றிகரமாக வேலை செய்வதற்கு நியாயமான வாய்ப்புகள் இருக்கின்றன என்றும், பதிவாளர் திருப்தியடைந்தால் அவர் அந்தச் சங்கத்தையும் அதனுடைய உப-விதிகளையும் பதிவு செய்யலாம்.

சமுதாய நீதியைப் பரப்புவது அரசியலமைப்பின் குறிக்கோள்களில் ஒன்றாகையால், அரசாங்கத்திடமிருந்து பல தனிச் சலுகைகளைப் பெறும் ஒரு கூட்டுறவுச் சங்கம், சமுதாய நீதியின் முக்கியக் கொள்கையின் தேவைகளை நிறைவு செய்ய வேண்டும். ஆகையால், இதைப் பதிவு நிபந்தனைகளாக, மாதிரி மசோதாவில் சேர்க்கப்பட்டிருக்கிறது. சந்தானம் குழுவினர்கூட இதே வழிகளில், 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 9ஆம் பிரிவிற்குத் திருத்தங்களை யோசனையாகக் கூறியிருக்கிறார்கள். கூட்டுறவுச் சட்டக் குழுவினர் கருத்தில் மேலே குறிப்பிட்ட நிபந்தனைகள், ஒரு சங்கம் பதிவு செய்வதற்குக்

குறைந்த பட்சம் அவசியமானவை. 9 (2) பிரிவின்கீழ் பதிவாளருக்கு ஒரு சங்கம் பதிவு நிபந்தனைகளை நிறைவேற்றவில்லை யென்று தோன்றினாலும், அல்லது அவர் உத்தேசிக்கப்பட்ட சங்கம் உண்மையான கூட்டுறவுச் சங்கமில்லையென்று கருதினாலும், அல்லது சங்கம் நன்றாக வேலை செய்வதற்கு வாய்ப்புகள் இல்லையென்று கருதினாலும், அவர் சங்கத்தைப் பதிவு செய்ய மறுக்க உரிமையுள்ளவராவார். அப்படிச் செய்யும்போது அவர் அவருடைய மறுப்பைக் காரணங்களுடன், சங்கப் பதிவுக்காகச் செய்த விண்ணப்பத்தில் கையெழுத்திட்டு உத்தேசிக்கப்பட்ட சங்கத்தைப்பற்றிப் பதிவாளருடைய அறிவிப்பைப் பெறுவதற்கு அங்கீகரிக்கப்பட்ட நபர்களில் எவரேனும் ஒரு நபருக்குத் தெரியப் படுத்தவேண்டும்.

உண்மையான நடைமுறையில், பதிவாளர் பொதுவாக ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்கு மறுப்பதில்லை. அப்படி அவர் மறுக்கும் நேரத்தில், கீழே குறிக்கப்பட்டிருக்கும் சில சூழ்நிலைகளும் காரணிகளும் காரணமாக இருக்கலாம். 200 மக்கள் தொகை யுள்ள ஒரு கிராமத்தில் ஒரு விவசாய நாணயச் சங்கம், அல்லது 20 அல்லது 25 கைத்தறிகளுள்ள ஓர் இடத்தில் ஒரு கைத்தறி நெசவாளர் சங்கம், அல்லது 5000 அல்லது ஏறக்குறைய 5000 மக்கள் தொகையுள்ள ஒரு சிறிய நகரத்தில் ஒரு நுகர்வோர் சங்கமும், அல்லது 10 அல்லது 15 கைத்தொழிலாளிகளுள்ள ஓர் இடத்தில் ஒரு தொழிற் சங்கமும், ஒரு பொருளாதார அல்லது உருப்படியான தன்னிறைவு பெறக்கூடிய நிறுவனமாக இயங்குமென எதிர்பார்க்கமுடியாது. அத்தகைய ஒரு சங்கத்தின் பதிவை மறுப்பதற்குப் பதிவாளருக்கு உரிமையுண்டு.

ஒரு விவசாய நாணயச் சங்கம் அல்லது ஒரு கைத்தறி நெசவாளர் சங்கம் அல்லது ஒரு வீட்டு வசதிச் சங்கம், ஏற்கெனவே அத்தகைய சங்கங்களிருக்கும் ஓர் இடத்தில், மக்களில் ஒரு பகுதியினர் அரசியல், அல்லது சமுதாய அல்லது வகுப்பு அடிப்படையில் போட்டியினால் நிறுவவேண்டும் என்று கோரினால், அத்தகைய சங்கங்கள் கூடப் பதிவு செய்யப்பட மாட்டது. ஏனென்றால், ஒரே இடத்தில் ஒரேவிதமான சங்கங்கள் அனுமதிக்கப்பட்டால், அம்மாதிரிச் சங்கங்கள் அமைப்பதில் முடிவேயில்லை. அது பிற இடங்களுக்கு ஒரு கெட்ட உதாரண மாகவும் அமையும். மேலும், அரசியல் அல்லது வகுப்பு காரணமாக உள்ளூர்ப் பகைமையால் ஓர் இடத்தில் கட்சிகள் நிறைந்திருந்தாலும், அந்தப் போட்டிக் கட்சிகள் ஒவ்வொன்றும் சங்கங்கள் வேண்டுமென்று விண்ணப்பித்தால், அந்த இடத்தில்

போட்டிக் கட்சிகள் ஓர் உடன்படிக்கைக்கு வரும் வகையில் சங்கங்களைப் பதிவு செய்வதைத் தள்ளி வைப்பது நல்லது. இல்லாவிடில், கட்சிப் போட்டிகள் சங்கத்தின் வேலைப்பாட்டைப் பாதிக்கும். மேலும், சங்கம், தரகர்களுக்கும், அல்லது இதர சிறிய தொழில் முயல்வோர்களுக்கும், உதவி புரியும் ஒரு கருவியாகப் பயன்படுத்தப்படக் கூடாது. குறிப்பாக, நூல் பற்றாக் குறைக் காலத்தில், நூல் பெறுவதற்கு நூல் வியாபாரிகள் அல்லது கைத்தறி தொழில் முதலாளிகள் ஒரு சங்கத்தைத் துவங்க முன்வந்தால் அதனை அனுமதிக்கமுடியாது ஏனென்றால், அது நூலை உண்மையாக உபயோகிக்கும் ஏராளமானவர்களைக் கடுமையாகப் பாதிக்கும்-அதாவது கூட்டுறவுச் சங்கத்திலிருக்கும், கைத்தறி நெசவாளர்களையும் சங்கத்தில் வெளியேயிருக்கும் கைத்தறி நெசவாளர்களையும் மேலும், உள்ளூரிலிருக்கும் பிரமுகர்கள் அந்தச் சங்கத்தில் சேர்ந்து சங்கம் இயங்குவதற்கு உதவி அளிப்பார்கள் என்றும், சங்கத்தின் அலுவல்களை நிருவாகம் செய்வதற்கும், நடத்துவதற்கும், தகுதிவாய்ந்த மனிதர்கள் இருக்கிறார்கள் என்றும், ஓர் உறுதியான நிலை இருக்கவேண்டும்.

உயர்நிலை இன சங்கங்களிலும் அல்லது ஒரு மத்திய வங்கியிலும்கூட, ஒரு புதிய எல்லையில் உத்தேசிக்கப்படும் வங்கியில் தாங்கள் ஆதிக்கம் செலுத்தலாம் என்ற அவாவில் தூண்டப்பட்டு, ஒரு தனி மத்திய வங்கி நிறுவுவதை ஓர் எல்லையிலுள்ள சங்கங்கள் விரும்புவது நேரிடலாம். இம்மாதிரிப் போக்கின் விளைவாகச் சில சூழ்நிலைகளில் ஒன்றுக்கு மேற்பட்ட மத்திய வங்கிகள் சில மாவட்டங்களில் நிறுவப்பட்டன. இது போன்ற சூழ்நிலைகளிலும், பதிவாளர் சங்கத்தைப் பதிவு செய்ய மறுக்கலாம். 9 (1) பிரிவின் கீழ், ஒரு சங்கத்தைப் பதிவு செய்யவோ, அல்லது செய்யாமலிருக்கவோ, அவருக்கு உளத் தேர்வு உண்டு. எனினும், 96 (2) (ஏ) பிரிவில் குறிக்கப்பட்டிருக்கும் அதிகாரிகளுக்கு, ஒரு சங்கம் பதிவு செய்யப்படுவது மறுக்கப்பட்டால், மேல்முறையீடு செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

1960ஆம் வருடத்திய மகாராஷ்டிரக் கூட்டுறவுச் சங்கச் சட்டம், பதிவு செய்யும் அதிகாரி ஒரு முடிவுக்கு வருவதற்கு 6 மாத காலவரையை நிருணயித்திருக்கிறது. இந்தக் கால வரைக்குள் அவர் ஒரு முடிவுக்கும் வராவிட்டால், தாமதத்திற்கான காரணத்தைக் காட்டி அவர் அரசாங்கத்திற்கு ஓர் அறிக்கை அனுப்பவேண்டும். அத்தகைய சரத்து சென்னைச் சட்டத்தில் இல்லை. இது அவசியமானால், விதிகளில் சேர்த்துக்

கொள்ளக்கூடிய ஒரு நிருவாக விவரத்தைக் குறித்த செய்தியாகும். பிரதமச் சங்கங்களைக் குறித்து விவரிக்கப்பட்ட மேற்சொன்ன சட்ட பூர்வமான தேவைகளும், நடைமுறையும், கூட்டுறவு மேற்பார்வை ஒன்றியம், மத்திய வங்கி அல்லது தலைமைச் சங்கம் போன்ற கூட்டுச் சங்கங்களுக்கும் கூடப் பொருந்தும். 4 (1) பிரிவின்கீழ், இதர சங்கங்களின் செயல்பாட்டை வசதிப்படுத்தும் நோக்கத்துடன் ஒரு சங்கம் அமைக்கப்படலாம்.

ஒரு மேற்பார்வை ஒன்றியம் அத்துடன் இணைக்கப்பட்ட பிரதம சங்கங்களின் செயல்பாட்டை வசதிப்படுத்துகிறது. ஒரு கூட்டுறவு மத்திய வங்கியின் நோக்கம் பிரதம நாணயச் சங்கங்களுடைய மற்றும் இதர பிரதமக் கூட்டுறவுச் சங்கங்களுடைய செயல்பாட்டை வசதிப்படுத்துவது. ஒரு மாவட்ட விநியோக விற்பனைச் சங்கத்தின் நோக்கம் தன்னுடன் இணைக்கப்பட்டுள்ள சங்கங்களின் விற்பனை நடவடிக்கைகளுக்கு உதவி செய்வது. ஒரு தலைமை வங்கி அல்லது மாநில மட்டத்தில் இயங்கும் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் நோக்கம் தன்னுடன் இணைக்கப்பட்டுள்ள சங்கங்களுக்கு உதவி செய்வது. 4ஆம பிரிவின் விலக்கு கூற்றின் (Provi·o to Sec. 4) கீழ், இந்தச் சங்கங்கள் வெளிப்படையான காரணங்களுக்காக வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் மட்டும்தான் இருக்க வேண்டும். ஏனென்றால், கூட்டுறவுச் சங்கங்களின் கடன்களுக்காக ஒரு சங்கத்தின் சொத்துகள் பொறுப்புள்ளதாக இருப்பது விவேக மற்றும், விரும்பத்தகாததுமாகும். அம்மாதிரி சூழ்நிலைகளில், வரையறுக்கப்பட்ட பொறுப்பு ஏற்றுக் கொள்வதை வற்புறுத்துதல் தான் ஒரு விவேகமுள்ள நடைமுறையானதாகவும் புத்திசாலித்தனமானதாகவும் இருக்கும்.

7ஆம் பிரிவின்கீழ், பதிவாளருக்கு, ஒரு சங்கத்தின் பதிவு சம்பந்தமான சில செய்திகளைத், தீர்மானிப்பதற்கு அதிகாரங்கள் உண்டு. முன்னமே கூறியுள்ளபடி, பிரிவு 6-லும், 8-லும் ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்காகச் சில நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. இந்த நிபந்தனைகளை நிறைவேற்றுங்கால் 7ஆம் பிரிவில் குறிக்கப்பட்டுள்ள சில செய்திகளில் சந்தேகங்கள் எழலாம். பதிவாளர் இத்தகைய செய்திகளில் முடிவு செய்ய வேண்டும்; அதாவது உத்தேசிக்கப்பட்ட சங்கத்தின் எல்லையில் ஒரு நபர் வசிக்கிறாரா அல்லது அசையாச் சொத்தைச் சொந்தமாக உடையவரா என்பதையும், அந்த எல்லையில் ஒரு நகரம், அல்லது கிராமம், அல்லது கிராமத் தொகுதி, சேர்க்கப்படலாமா அல்லது ஒரு நபர் குறிப்பிட்ட எந்த ஒரு வகுப்பையோ

தொழிலையோ சேர்ந்தவரா என்பதையும், பதிவாளர் தீர்மானிக்கலாம்.

ஒரு நபர் ஒரு விவசாயியா அல்லது விவசாயி அல்லாதவரா, என்ற பிரச்சினை இப்பொழுது தேவையுள்ளதாக இல்லை. ஏனென்றால், 4ஆம் பிரிவு, ஒரு விவசாய நாணயச் சங்கம் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையிலோ அல்லது வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையிலோ பதிவு செய்யப்படுவதற்கு அனுமதிக்கிறது. இந்தப் பிரச்சினை, பெரும் பான்மையான விவசாயிகளைக் கொண்ட ஒரு நாணயச் சங்கம், பதிவாளரால் விதிவிலக்கு வழங்கப்பட்டால் ஒழிய, வரையறுக்கப் படாத பொறுப்பைத்தான் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற சரத்து அடங்கிய 4ஆம் பிரிவு திருத்தப்படுவதற்கு முன்பு, முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கலாம். இப்போது அவ்வாறில்லை.

(4) சங்கங்களை வகைப் படுத்துதல் (Classification of Societies) 15ஆம் பிரிவின் கீழ், பதிவாளர், பதிவு பெறற சங்கங்களை, அவற்றின் நோக்கங்கள், விவகார எல்லை, அங்கத்தவம், அல்லது விதிகளில் குறிக்கப்பட்டிருக்கும் வேறு எந்தச் செயலையும் பொறுத்து, வகைப்படுத்தலாம். இம்மாதிரி வகைப்படுத்துதல் சில புள்ளிவிவரச் செயல்களுக்காகவும், ஒரு சங்கத்தினுடைய செயல்பாட்டின் தன்மையையும், பிரதான நோக்கத்தையும், வழி முறைகளையும், சுலபமாக அடையாளம் காட்டுவதற்குக்கூடத் தேவைப்படுகிறது. இவ்வண்ணம் கடன் வழங்குதலையும், மற்ற சம்பந்தப்பட்ட விவசாயச் சேவைகளைச் செய்வதையும் பிரதானமான நோக்கமாகக் கொண்ட நாணயச் சங்கங்கள், விவசாய விளைபொருள்களை விற்பனை செய்வதை முக்கிய வேலையாகக் கொண்ட விற்பனைச் சங்கங்கள் நுகர்பொருள் வழங்குதலை மேற்கொண்ட விநியோக அல்லது நுகர்வோர் சங்கங்கள், கைத்தறி நெசவாளர் சங்கங்கள், கிராமத் தொழில் சங்கங்கள், கதர் சங்கங்கள், சிறு தொழில் சங்கங்கள் போன்ற தொழில் கூட்டுறவுச் சங்கங்களும், பால் உற்பத்தி செய்து விற்பனை செய்யும் பால் வழங்கும் சங்கங்கள் போன்ற உற்பத்திச் சங்கங்கள் வீடு கட்டுவதற்கு வசதிகள் ஏற்பாடு செய்யும் வீட்டு வசதிச் சங்கங்கள், அரிசி ஆலைகள் முதலியன போன்ற மூலப் பொருள்களைச் சுலபமான விற்பனைக்காகவும், ஏற்றி அனுப்புவதற்காகவும் தக்கவாறு மாற்றுவதை மேற்கொண்ட பதனப்படுத்தும் சங்கங்கள் என்று பலவகைச் சங்கங்கள் இருக்கின்றன. மற்றும் சங்கங்களை விவசாயச் சங்கங்களாகவும் விவசாயமல்லாத சங்கங்களாகவும் வகைப்படுத்தலாம்.

நகர வங்கிகள், ஊழியர்கள் சங்கங்கள் போன்றவை விவசாயமல்லாத சங்கங்கள், விவசாயப் பண்ணைச் சங்கங்கள், விவசாயத் துறையில் ஓர் இனத்தைச் சேர்ந்தவை விவசாயமல்லாத துறையில், வீட்டு வசதிச் சங்கங்கள், இன்னோர் இனத்தைச் சேர்ந்தவை. நாணயச் சங்கங்கள் பெருமளவு விவசாயச் சங்கங்கள். பின்னர், பிரதம சங்கங்களாகவும், மத்தியச் சங்கங்களாகவும், தலைமைச் சங்கங்களாகவும் சங்கங்களை மேலும் வகைப்படுத்தலாம். உதாரணம்: பிரதம நாணய சங்கம் (பிரதம சங்கம்), நிதி உதவும் வங்கி (கூட்டுறவு மத்திய வங்கி), மாநிலக்கூட்டுறவு வங்கி (தலைமை வங்கி). ஆகையால், சங்கப்பாகுபாடு, சங்கங்கள் செய்யும் முக்கியச் சேவைகளையும், அவற்றின் விவகார எல்லையையும், அவைகள் சேவை செய்யும் மக்கள் வகுப்பையும் தெளிவாகப் படம்பிடித்துக் காண்பிப்பதற்காகச் செய்யப்படுகிறது. 15ஆம் பிரிவின் கீழ், சங்கங்களை, அவற்றின் நோக்கங்களையும், விவகார எல்லையையும் அங்கத்துவத்தையும் பொறுத்து, பாகுபாடு செய்வதற்குப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிறார். அல்லது விதிகளின்படி வேறு எந்த முறையிலும், அவர் சங்கங்களைப் பாகுபாடு செய்யலாம்.

சட்டத்தின் கீழ், அமைக்கப்பட்ட விதிகளில், 1ஆம் விதி சங்கங்களைப் பாகுபாடு செய்வதைப் பற்றிக் கூறுகிறது. சட்டத்தின் 15ஆம் பிரிவின் கீழும், 11 (5) ஆம் விதியின் கீழும், பதிவாளர், கீழே அட்டவணையில் குறிக்கப்பட்டவாறு, சங்கங்களைத் தலைமைச் சங்கமாகவும், மத்தியச் சங்கமாகவும் சூழ்நிலைக்கேற்ப வகைப்படுத்தியிருக்கிறார். அட்டவணையில் குறிக்கப்படாத சங்கங்கள் பிரதமச் சங்கங்களாக வகைப்படுத்தப் படவேண்டும்.

அட்டவணை

| வரிசை எண் | தலைமைச் சங்கங்கள் சங்கத்தின் பெயர் | சங்கம் சேர்ந்திருக்கும் வகுப்பு |
|---|---|---|
| 1. | சென்னை மாநிலக் கூட்டுறவு வங்கி லிமிடெட், சென்னை. | நாணயச் சங்கம் |
| 2. | தமிழ்நாடு மாநில நிலவள வங்கி லிமிடெட், சென்னை. | நாணயச் சங்கம் |
| 3. | சென்னைக் கூட்டுறவு மத்திய வீடு அடைமான வங்கி லிமிடெட், சென்னை. | நாணயச் சங்கம் |

| | | |
|---|---|---|
| 4. | சென்னை மாநிலக் கூட்டுறவு விநியோக விற்பனைச் சங்கம் லிமிடெட், சென்னை. | விற்பனைச் சங்கம் |
| 5. | தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட், சென்னை. | உற்பத்திச் சங்கம் |
| 6. | சென்னை மாநிலக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் சம்மேளனம் லிமிடெட், சென்னை. | பதனப் படுத்தும் சங்கம் |
| 7. | தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் லிமிடெட், சென்னை. | கூட்டுறவு ஒன்றியம் |

மத்தியச் சங்கங்கள்

| | | |
|---|---|---|
| 1. | மாநிலத்திலுள்ள எல்லாக் கூட்டுறவு மத்திய வங்கிகள். | நாணயச் சங்கம் |
| 2. | மாநிலத்திலுள்ள எல்லா மாவட்டக் கூட்டுறவு விநியோக விற்பனைச் சங்கங்கள். | விற்பனைச் சங்கம் |
| 3. | தஞ்சாவூர் கூட்டுறவு விற்பனைச் சம்மேளனம். | விற்பனைச் சங்கம் |
| 4. | மாநிலத்திலுள்ள எல்லா மாவட்டக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சம்மேளனங்கள். | விற்பனைச் சங்கம் |
| 5. | எல்லாக் கூட்டுறவுப் பால் வழங்கும் ஒன்றியங்கள். | உற்பத்திச் சங்கம் |

---

குறிப்பு : மற்ற எல்லாச் சங்கங்களும் பிரதமச் சங்கங்களாகப் பாகுபடுத்தப்பட்டிருக்கின்றன. 11ஆம் விதி, சங்கங்கள் பாகு படுத்தப்பட்ட பல வகுப்புகளையும் அத்தகைய பாகுபாட்டின் அடிப்படையையும் குறிப்பிடுகிறது. 11ஆம் விதி (3) ஆம் துணை விதி ஒவ்வொரு சங்கமும் துணை விதிகள் 1,2–ன் படி பதிவாளரால் வகைப்படுத்தப்படலாம் என்று கூறுகிறது. துணைவிதி 4 எந்தச் சங்க வகுப்பையும் அவைகளின் அங்கத்துவம் அவைகள் செய்யும் தொழிலின் தன்மையும் அல்லது அவைகள் கையாளும் பொருள்கள் அல்லது அம்மாதிரி வேறு எந்தக் காரணத்தையும் முன்னிட்டு உப பகுதிகளாகப் பிரிக்கப் பதிவாளருக்கு அதிகாரம் கொடுக் கிறது. 5ஆம் துணை-விதி அதில், விதிக்கப்பட்டிருக்கும் அடிப் படையின் பேரில் ஒரு கூட்டுறவுச் சங்கத்தைத் தலைமைச் சங்க

மாகவும், பிரதமச் சங்கமாகவும் மேலும் வகைப் படுத்த ஏற்பாடு செய்திருக்கிறது. 11 (4) விதியின் கீழ், பதிவாளரால் தயாரிக்கப்பட்ட ஒவ்வொரு சங்க வகுப்பு பிரிக்கப் பட்டுள்ள துணை-வகுப்பின் பட்டியல் ஒன்று இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. சங்கங்கள் இந்தப் பாகுபாட்டில் ஏதாவது ஒன்றின்கீழ் வரும். 11ஆம் விதியின்கீழ் ஒரு சங்கம் எந்த வகுப்பில் சேர்ந்தது என்ற பிரச்சினை ஏதாவது எழுந்தால் பதிவாளருடைய முடிவுக்கு அந்தப் பிரச்சினை அனுப்பப்பட வேண்டும்.

## பின் இணைப்பு

### சங்க வகுப்புகளின் பட்டியல்

| வரிசை எண் | 11 (1) விதியில் குறிக்கப்பட்டிருக்கும் சங்க வகுப்பு | 11 (4)ஆம் விதியின் கீழ் ஒவ்வொரு சங்க வகுப்பும் உட்பிரிக்கப்பட்ட வகுப்பு |
|---|---|---|
| 1. | தணிக்கை ஒன்றியம் | எந்த உட்கோட்டமும் தேவையில்லை. |
| 2. | கூட்டுறவு ஒன்றியம் | ,, |
| 3. | நாணயச் சங்கம் | இது கீழ்க்கண்டவாறு பாகுபாடு செய்யப்படலாம். |

1. நிதி வழங்கும் வங்கி
2. விவசாய நாணயச் சங்கம்
3. விவசாயமல்லாத நாணயச் சங்கம் இவை மேலும் கீழ்க்கண்ட வகுப்புகளாகப் பிரிக்கப்படலாம்.

I. நிதி வழங்கும் வங்கி

(அ) தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி

(ஆ) தமிழ்நாடு மாநில நில வள வங்கி

(இ) தமிழ்நாடு கூட்டுறவு மத்திய வீடு அடைமான சங்கம்

(ஈ) மத்திய வங்கி

| வரிசை எண் | 11 (1) விதியில் குறிக்கப்பட்டிருக்கும் சங்க வகுப்பு | 11 (4)ஆம் விதியின் கீழ் ஒவ்வொரு சங்க வகுப்பும் உட்பிரிக்கப்பட்ட வகுப்பு |
|---|---|---|
| | | II. விவசாய நாணயச் சங்கம்.<br>(அ) கிராம நாணயச் சங்கம் (வரையறுக்கப்பட்டதும், வரையறுக்கப்படாததும்).<br>(ஆ) கூட்டுறவு விவசாய வங்கி.<br>(இ) கூட்டுறவு நாணய ஒன்றியம்.<br>(ஈ) கூட்டுறவுப் பலநோக்குச் சங்கம் (நாணயச் சங்க ஒன்றியத்திற்குப் பின் சேர்ப்பு).<br>(உ) பிரதமக் கூட்டுறவு நிலவள வங்கி, |
| | | III. விவசாயமல்லாத நாணயச் சங்கம்<br>(அ) நகர நாணயச் சங்கம் (வரையறுக்கப்பட்டதும், வரையறுக்கப்படாததும்)<br>(ஆ) நகர வங்கி<br>(இ) ஊழியர் கூட்டுறவுச் சங்கம்<br>(ஈ) பிரதம வீடு அடைமான சங்கம். |
| 4. | விநியோக சங்கம் | (1) கூட்டுறவு ஸ்டோர்ஸ் சங்கம்<br>(2) ஊழியர்கள் கூட்டுறவு ஸ்டோர்ஸ் சங்கம்<br>(3) மாணவர்கள் எழுதுபொருள்கள் ஸ்டோர்ஸ்<br>(4) கூட்டுறவுச் சிற்றுண்டிச்சாலையும், உணவு மனைகைக்கும் |
| 5. | விவசாயப் பண்ணைச் சங்கம் | (1) கூட்டுறவுக் கூட்டு விவசாயப் பண்ணைச் சங்கம்<br>(2) கூட்டுறவுக் மொத்த விவசாயப் பண்ணைச் சங்கம்<br>(3) கூட்டுறவுக் குடியிருப்பவர்கள் விவசாயப் பண்ணைச் சங்கம் |

| | |
|---|---|
| | (4) கிராமதானக் கூட்டுறவுச் சங்கம் |
| | (5) பூதான் கூட்டுறவுச் சங்கம் |
| | (6) நிலக்குடியிருப்புக் கூட்டுறவுச் சங்கம் |
| | (7) நீர்ப்பாசனச் சங்கம் |
| | (8) இதர விவசாயப் பண்ணைச் சங்கம். |
| . வீட்டு வசதிச் சங்கம் | (1) கூட்டுறவுக் கட்டிடச் சங்கம் |
| | (2) கூட்டுறவு வீடு கட்டும் சங்கம் |
| | (3) கூட்டுறவு வீடு அமைக்கும் சங்கம் |
| | (4) கூட்டுறவு நகர அமைப்பு |
| | (5) கூட்டுறவு குடியிருக்கும் வீட்டு வசதிச் சங்கம் |
| | (6) கூட்டுறவுத் தொழிற்சாலை வீட்டு மனை சங்கம். |
| 7. உழைப்பு ஒப்பந்தச் சங்கம் | எந்த உட்கோட்டமும் அவசியமில்லை |
| 8. விற்பனைச் சங்கம் | ,, |
| 9. பதனப்படுத்தும் சங்கம் | (1) கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் |
| | (2) கூட்டுறவு நூற்பாலைகள். |
| 10. உற்பத்திச் சங்கம் | (1) பால் வழங்கும் சங்கம் |
| | (2) இதர விவசாய உற்பத்திச் சங்கம் |
| | (3) கைத்தறி நெசவாளர் கூட்டுறவு உற்பத்திச் சங்கம் |
| | (4) இதர விவசாயமல்லாத உற்பத்திச் சங்கம். |
| 11. மேற்பார்வை ஒன்றியம் | எந்த உட்கோட்டமும் அவசியமில்லை. |
| 12. கூட்டுறவுப் பயிற்சி நிலையம் | ,, |

| வரிசை எண் | 11 (1) விதியில் குறிக்கப்பட்டிருக்கும் சங்க வகுப்பு | 11 (4)ஆம் விதியின் கீழ் ஒவ்வொரு சங்க வகுப்பும் உட்பிரிக்கப்பட்ட வகுப்பு |
|---|---|---|
| 13. | பலவகைச் சங்கங்கள் | (1) போக்குவரத்து வசதிச் சங்கம் |
| | | (2) கூட்டுறவு அச்சகம் |
| | | (3) கூட்டுறவு அச்சகமும் வெளியீட்டு நிறுவனம் |
| | | (4) சலவைத் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கம் |
| | | (5) சிகை அலங்கரிக்கும் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கம் |
| | | (6) கூட்டுறவுச் சுகாதாரச் சங்கம் |
| | | (7) கூட்டுறவு ஈட்டு உறுதி சங்கம் |
| | | (8) சில்லரை விற்பனையாளர்கள் கூட்டுறவுச் சங்கம் |
| | | (9) சமுதாயக் கலாச்சாரக் கூட்டுறவுச் சங்கம் |
| | | (10) இதர பலவகைச் சங்கங்கள். |

# 5. சங்கங்களின் உப-விதிகளும் உப-விதி களுக்குத் திருத்தங்களும்.

## (By laws of Socities and amendments to by laws)

(பிரிவுகள்: 11, 12ஆம் விதிகள் 7-ம் 9-ம் 11-ம்)

**1. உப-விதிகள் ஒரு சங்கத்தின் தொழிலை முறைப்படுத்துகின்றன (By laws are to regulate the bussiness of a Society):** பல்வேறு சங்கங்களுக்காகப் பதிவாளரால் மாதிரி உப-விதிகள் எப்படி உருவாக்கப்படுகின்றன என்பதையும், எப்படி வரைவு உப-விதிகள் உள்ளூர் நிலைமைகளுக்கும் அல்லது வேற்றுமை களுக்கும் பொருந்துமாறு தக்க மாறுதல்களுடன் சங்கத் தோற்று விப்பார்களால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன என்பதையும், நாம் முன்னரே கண்டோம். சட்டத்தின் கீழ் அமைக்கப்பட்ட விதிகளில் 4 ஆம் விதி, சங்கங்களின் உப-விதிகளில் கூறப்பட வேண்டிய செய்திகளைச் சுட்டிக்காட்டுகிறது என்பதையும், ஒரு கூட்டுறவுச் சங்கம் பதிவாகும்பொழுது சங்கத்தின் உப-விதிகளும் பதிவாளரால் பதிவு செய்யப்பட்டு, பதிவுச் சான்றிதழுடன் உப-விதிகளின் ஒரு நகல், சம்பந்தப்பட்ட சங்கத்திற்கும், ஒன்றியத்திற்கும், மத்திய வங்கிக்கும், அனுப்பப்படுகின்றன என்பதையும்கூட அறிந்தோம். ஒரு சங்கத்தின் உப-விதிகள் அச் சங்கத்தின் பேரவையால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. சட்டத்துடனும், விதிகளுடனும், ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உப-விதிகள், ஒரு சங்கத்தினுடைய நடவடிக்கைகளுக்குத் தேவை யான சட்டப்படியான அமைப்பை (Legal frame work) அளிக் கிறது. சங்கத்தினுடைய நோக்கங்களை நிருணயிப்பதற்கும், அதனுடைய வேலைகளைச் சுட்டிக் காட்டுவதற்கும், சட்டத் துடனும், விதிகளுடனும் ஒத்தவாறு அதனுடைய செயல் பாட்டை ஒழுங்குபடுத்துவதற்கும், அவை உத்தேசிக்கப்படு கின்றன. அவை ஒரு சங்கத்தால் அமைக்கப்பட்டு, அதனால்

அப்போதைக்கப்போது திருத்தப்பட்டாலும், பதிவாளரால் பதிவு செய்யப்படவேண்டும். எனவே, உப-விதிகள், எந்த ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் சட்டப்படியான அடிப்படையில் இணைக்கப்பட்ட ஒரு பாகமாக இருந்து, கூட்டுறவுக் கொள்கைகளுக்கிணங்கச் சங்கம் செயல்படுவதை உறுதிப்படுத்த உத்தேசிக்கப்பட்டவையாகும். உப-விதிகள், சங்கங்களின் செயல்பாட்டை வசதிப்படுத்துவதற்கு வேண்டிய நடைமுறை விவரங்களையும், மற்ற காரணிகளையும் கொண்டுள்ளன. 4 ஆம் விதி, எந்தெந்த பொருள்களைப் பற்றி உப-விதிகள் அமைக்கப்படலாம் என்றும், உப-விதிகளில் அப் பொருள்களைப் பற்றி என்னென்ன சரத்துகள் செய்யப்படலாம் என்றும் எடுத்துக்கூறுகிறது.

2. ஒரு சங்கத்தின் உப-விதிகளுக்குத் திருத்தம் (Amendment to the by law of a Society) ; சாதாரணமாகத் திருத்தம் என்றால், மேலானதாகச் செய்தல், சரிப்படுத்துதல், அல்லது சீர்ப்படுத்துதல் என்றும் பொருள். ஆனால், ஓர் உப-விதியின் திருத்தம் என்றால், அமலிலிருக்கும் உப-விதியைச் சரிப்படுத்துவதற்கோ அல்லது அந்த உப-விதிக்குக் கூடுதல் செய்வதற்கோ எந்த ஒரு மாற்றத்தையோ அல்லது திருத்தத்தையோ செய்வது என்று பொருள். ஒரு புதிய உப-விதியைப் புகுத்துவதும் அல்லது அமலிலிருக்கும் ஓர் உப-விதியை எடுத்துவிடுவதும, திருத்தத்தில் சேரும். திருத்தமென்பது அமலிலிருக்கும் மொத்த உப-விதிகளுக்குப் பதிலாக ஒரு முழுமையான புதிய விதிகளின் தொகுப்பாகவும் (Embloc Amendments) இருக்கலாம். இதைக் கூட்டுறவு வாசகப் போக்கில் (Co-operative Phrasealogy), இவைகள் ஒரு சங்க உப-விதிகளுக்கு மொத்தமான திருத்தங்கள் (Embloc Amendments) என்று அழைக்கப்படுகின்றன. எந்த உப-விதிகளும், அவைகள் பதிவு செய்யப்பட்டாலொழிய, அமல்படுத்த முடியாது. பதிவு செய்யப்படாத திருத்தங்களின் அடிப்படையில் எடுக்கப்படும் எந்த நடவடிக்கையும் சட்ட விரோதமானதாகும் (பிரிவு 11 (1))

3. உப-விதிகளின் திருத்தத்திற்கான விதிமுறை (Procedure for Amendment of by laws) : 11ஆம் பிரிவு சங்கத்தின் உப-விதிகளின் திருத்தங்களைப் பற்றிக் கூறுகிறது. ஒரு சங்கத்தின் உப-விதிகளைத் திருத்தம் செய்வதற்காகப் பின்பற்ற வேண்டிய விதிமுறை 7ஆம் விதியில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. உப-விதிகளின் ஒரு திருத்தைப் பதிவு செய்வதற்காக ஒரு விண்ணப்பம், பதிவாளருக்கு, 7ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட விதிமுறைகளை அனுசரித்த பிறகுதான், அனுப்பப்படவேண்டும்.

உப-விதிகளைத் திருத்தம் செய்வதற்குப் பின்பற்ற வேண்டிய முக்கியக் குறிப்பிடத்தக்க செயல்களாவன :

(i) உப-விதித் திருத்தம், சங்கத்தின் பேரவைக் கூட்டத்தில் வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் பெரும்பான்மையினரால் (Majority), நிறைவேற்றப்பட வேண்டும்.

(ii) திருத்தத்தை ஏற்றுக் கொண்டு பேரவையில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் பேரவைக் கூட்டத்தின் தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் பதிவாளருக்கு அனுப்பப்படவேண்டும்.

(iii) உத்தேசிக்கப்பட்ட திருத்தத்தின் முன் அறிவிப்பு உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்படவேண்டும்.

உப-விதித் திருத்தத்தைப் பதிவு செய்வதற்கு அனுப்பப்படும் விண்ணப்பம் சங்கத்தின் தலைவராலும், நிருவாகக் குழுவின் வேறு இரண்டு உறுப்பினர்களாலும், கையெழுத்திடப்பட்டு, கீழ்வரும் விவரங்களைக் கொண்டதாக இருக்கவேண்டும்.

(அ) திருத்தம் நிறைவேற்றப்பட்ட பேரவைக் கூட்டத்தின் தேதி.

(ஆ) பேரவைக் கூட்டத்தைக் கூட்டுவதற்கு எத்தனை நாள்களுக்கு முன் அறிவிப்பு கொடுக்கப்பட்டது.

(இ) அத்தகைய கூட்டத்தின் தேதியன்று சங்கத்திலிருக்கும் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை.

(ஈ) அத்தகைய கூட்டத்திற்கு ஏற்படுத்தப்பட்ட குறைவெண் வரம்புக்காக (Quorum) நிருணயிக்கப்பட்ட உறுப்பினர்கள் எண்ணிக்கை.

(எ) அத்தகைய கூட்டத்தில் வந்திருந்த உறுப்பினர்களின் எண்ணிக்கை.

(ஐ) திருத்தத்திற்குச் சாதகமாக வாக்களித்த உறுப்பினர்களின் எண்ணிக்கை.

(ஓ) உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளின் திருத்தத்தின் நகல் ஒன்று பதிவாளருக்கு அனுப்படவேண்டும் (விதி 11 (2)ம், விதி 7ம).

இந்த விவரங்கள் எல்லாம், உறுப்பினர்களுக்குப் போதிய அறிவிப்புக் கொடுக்கப்படாமல் யாதொரு திருத்தம் எழுப்பப்படாமலும், அல்லது கூட்டத்திற்கு ஏற்பட்ட குறைவு எண் வரம்புகூட (Quorum) இல்லாத, அல்லது பெரும்பாலான உறுப்பினர்களில்லாத கூட்டத்தில், திருத்தம் நிறைவேற்றப்

படாமலிருப்பதை, உறுதிப்படுத்துவதற்காக உத்தேசிக்கப் பட்டுள்ளன.

4. உப-விதித் திருத்தங்களைப் பதிவு செய்தல் (Registration of Amendments to by laws ) : ஓர் உப-விதியின் திருத்தம் பதிவு செய்வதற்கான விண்ணப்பம் கிடைத்தவுடன், பதிவாளர் உத்தேசிக்கப்பட்ட திருத்தம் சட்டத்திற்கும் விதிகளுக்கும் விரோதமாக இல்லையென்று மனநிறைவடைந்தால், அவர் அந்தத் திருத்தத்தைப் பதிவு செய்யலாம் (பிரிவு 11 (3)). திருத்தம், சட்டத்திற்கும் விதிகளுக்கும் இணக்கமாக இருக்கவேண்டும் என்று மட்டும்தான் அந்தப் பிரிவு கூறுகிறது. அது கூட்டுறவுக் கொள்கைகளைப் பற்றியோ அல்லது வேறு எந்தச் செய்தியைப் பற்றியோ குறிக்கவில்லை. சங்கத்தையும் சங்க உப-விதிகளையும் பதிவு செய்வதற்கு எந்த நிபந்தனைகள் விதிக்கப்பட்டனவோ அந்த நிபந்தனைகள் சங்கத்தினுடைய உப-விதித் திருத்தத்தைப் பதிவு செய்வதற்கும் அனுசரிக்கப்படவேண்டும் (பிரிவு 9 (1)).

ஆகையால், ஓர் உப-விதித் திருத்தத்தைப் பதிவு செய்வதற்கோ, அல்லது பதிவு செய்யாமல் மறுப்பதற்கோ ஒரு சங்கத்தைப் பதிவு செய்யும் செய்தியிலிருப்பது போல, பதிவாளருக்கு உளத்தேர்வு உண்டு. 7ஆம் விதியின் கீழ் நிருணயிக்கப் பட்ட விதி முறைகள் நிறைவேற்றப்பட்டாலும் கூட, பதிவு செய்யும் உளத்தேர்வு பதிவாளருக்குண்டு. உப-விதித்திருத்தம் எந்த ஒரு கூட்டுறவுக் கொள்கைக்கும் விரோதமாக இல்லாமலும் அல்லது சங்கத்தின் செயல்பாட்டைப் பாதிக்கச் செய்யாமலு மிருக்கிறதா என்பதை ஆராய்வது பதிவாளருடைய பொறுப் பாயிருக்கிறது. கூட்டுறவுச் சட்டக் குழுவின் கருத்துப்படி, எந்த உப-விதித்திருத்தமும், சட்டத்திற்கும், விதிகளுக்கும் முரண் பாடில்லாமலிருப்பது மட்டுமன்றிச் சரியான வணிக முறைக்கும், சமுதாய நீதிக் கொள்கைக்கும், ஒத்திருக்கவேண்டும். அக் குழுவினர் ஒரு திருத்தத்தைப் பதிவு செய்வதற்காக மாதிரி மசோதாவின் பகுதி 12 (2)-ல் கீழ்க்கண்ட குறைந்த பட்ச நிபந்தனைகளை யோசனை கூறியிருக்கின்றனர்.

உப-விதித் திருத்தத்திற்கான ஒவ்வொரு கோரிக்கையும் பதிவாளருக்கு அனுப்பப்பட வேண்டும். மற்றும் உத்தேசிக்கப் பட்ட உப-விதித் திருத்தம்,

(அ) சட்டத்தின் சரத்துகளுக்கும், விதிகளின் சரத்து களுக்கும், முரணாக இல்லாமலிருக்கின்றது என்றும்,

(ஆ) கூட்டுறவுக் கொள்கைகளுக்கு முரண்படாமலிருக்கின்றது என்றும்,

(இ) சரியான வணிக முறைத் தேவைகளைப் பூர்த்திச் செய்கிறது என்றும்,

(ஈ) சங்கத்தின் உறுப்பினர்களுடைய பொருளாதார நலன்களை வளர்க்கும் என்றும்,

(உ) சமுதாய நீதிக் கொள்கைகளுக்கு மாறுபடாது இருக்கிறது என்றும், பதிவாளர் திருப்தியடைந்தால் அவர் அத் திருத்ததைப் பதிவு செய்யலாம்.

தற்போது, சங்கத்திடமிருந்து தேவையான உப-விதித் திருத்தக் கோரிக்கைகள் கிடைத்தவுடன், அத் திருத்தத்தைப் பதிவாளர் பதிவு செய்வதற்கு எந்த ஒரு காலவரையும் நிருணயிக்கப்படவில்லை. எனினும், அரசாங்கம், சங்கங்களுடைய எல்லா உப-விதித் திருத்தங்களையும், பதிவு செய்வதற்கான விண்ணப்பம் கிடைத்த தேதியிலிருந்து இரண்டு மாதகாலத்திற்குள் பதிவு செய்ய வேண்மென்றும் அந்தக் கால வரைக்குள் ஓர் உப-விதித் திருத்தம் பதிவு செய்ய முடியவில்லையானால், அதற்கான காரணங்களுடன் அதைச் சம்பந்தப்பட்ட சங்கத்திற்குத் தெரியப்படுத்த வேண்டும் என்றும் கூட்டுறவுத் துறைக்குக் கட்டளையிட்டு இருக்கிறது. சந்தானம் குழுவினர் ஒரு காலவரை தேவையென்று கருதி ஓர் உப-விதித் திருத்தத்தைப் பதிவு செய்வதற்காக 120 நாள்கள் காலவரை நிருணயிக்கப்படவேண்டும் என்று பரிந்துரை கூறியுள்ளனர். அந்தக் காலவரைக்குள் ஓர் உப-விதித் திருத்தம் பதிவு செய்யப்படாமலிருந்தாலும், அல்லது பதிவு செய்யப்படவில்லை யென்ற அறிவிப்பு சங்கத்தால் பெறப்படவில்லையென்றாலும், அந்தத் திருத்தம் பதிவு செய்யப்பட்டதாகவே கருதப்படவேண்டுமென்று அவர்கள் மேலும் சிபாரிசு செய்துள்ளனர். இந்தச் செயலுக்காக அக் குழுவினர் சட்டத்திற்கு ஒரு திருத்தத்தை, அதாவது, புதிய பிரிவு (8) கீழ்வருமாறு புகுத்தவேண்டுமென்று யோசனை கூறியுள்ளனர். 'சங்கத்திலிருந்து உப-விதித் திருத்தம் கிடைக்கப்பெற்ற தேதியிலிருந்து 120 நாள்களுக்குள் பதிவுச் சான்றிதழ், அல்லது திருத்தம் பதிவு செய்யப்படவில்லை என்ற அறிவிப்பு, சங்கத்திற்கு வரவில்லையானல், அந்த உப-விதித் திருத்தம் பதிவு செய்யப்பட்டதாகக் கருதப்படவேண்டும்.'

சங்கத்தால் பிரேரேபிக்கப்பட்ட உப-விதித் திருத்தங்கள் எதையும் பதிவு செய்ய மறுக்கப் பதிவாளருக்கு உரிமை உண்டு. உதாரணமாக, ஒரு விவசாய நாணயச் சங்கம் தன் எல்லையில்,

இன்னொரு சங்கத்தின் எல்லையில் முன்னரே இருந்துவரும் இன்னொரு கிராமத்தை அச் சங்கத்திலுள்ள கிராமத்திற்கு உதவி செய்யும்பொருட்டு, சேர்த்துக்கொள்ள விரும்பினால், அந்த உப-விதித் திருத்தத்தைப் பதிவாளர் பதிவு செய்ய மறுக்கலாம். மற்றும், ஒரு ஸ்டோர்ஸ் சங்கம் தன்னுடைய நோக்கங்களில் கடன் விற்பனையையும் சேர்த்துக்கொள்ள விரும்பினால், பதிவாளர் அந்த உப-விதித் திருத்தத்தைச் சில நிபந்தனைகளின்கீழ் மட்டும் அனுமதிக்கக்கூடும். ஒரு நகர வங்கி, சரக்குகள் வியாபாரம் செய்ய விரும்பி அதற்காக உப-விதித் திருத்தத்தைக் கோரினால், பதிவாளர் அதைப் பதிவு செய்வதற்கு மறுத்துவிடலாம். அந்த உப-விதித் திருத்தமும், சட்டத்திற்கும் அல்லது விதிகளுக்கும், அல்லது கூட்டுறவுக் கொள்கைகளுக்கும், நடவடிக்கைகளுக்கும் விரோதமில்லாத நோக்கங்களுக்காக இருக்கவேண்டும். ஆனால், பதிவுசெய்ய மறுப்பதற்கு முன்பு பதிவாளர் சங்கத்திற்குத் தன் எதிர்ப்பைத் தெரிவிக்க ஒரு வாய்ப்பு கொடுக்கவேண்டும். மற்றும், பதிவாளரால் எழுப்பப்பட்ட எதிர்ப்புகளுக்குப் பதிலளிப்பதற்கோ அல்லது அவைகளைத் தீர்ப்பதற்கோ சங்கத்திற்கு ஒரு வாய்ப்பு கொடுக்கவேண்டும். உப-விதித் திருத்தத்தைப் பதிவு செய்ய முடியாது என்று பதிவாளர் திடமாக நம்பினால் அவர் அதைப்பதிவு செய்யமறுப்பார். பிரிவு 11 (3) (பிரிவு 3-ன் விலக்குக்கூறு).ஓர் உப-விதித் திருத்தத்தைப் பதிவு செய்யப் பதிவாளர் மறுத்தால், அவர் அந்த மறுத்தல் உத்தரவைக் காரணங்களுடன்சங்கத்திற்குத் தெரியப்படுத்தவேண்டும்.

ஒரு திருத்தத்தைப் பதிவாளர் பதிவு செய்தால், அவரால் பதிவு செய்யப்பட்ட அந்த உப-விதித் திருத்தத்தின் நகல் ஒன்றை அவர் சங்கத்திற்கு வழங்குவார். இவ்வாறு வழங்கப்பட்ட உப-விதியின் நகல், உப-விதி முறையாகப் பதிவு செய்யப்பட்டது என்பதற்கு, ஒரு முடிவான சான்று (பிரிவு 11 (5)) பதிவு செய்யப்பட்ட உப-விதித் திருத்தத்தின் நகல் ஒன்று சம்பந்தப்பட்ட ஒன்றியத்திற்கும் மத்திய வங்கி அல்லது நிதி வழங்கும் நிறுவனத்திற்கும் அனுப்பப்படும். ஓர் உப-விதித் திருத்தம், அது பதிவு செய்யப்பட்ட தேதியிலிருந்து, (பிரிவு 11 (6) அல்லது திருத்தத்திலேயே குறிக்கப்பட்ட தேதியிலிருந்து, அமலுக்கு வரும். அம்மாதிரி தேதி குறிப்பிடவில்லையானால், உப-விதித் திருத்தம் அது பதிவு செய்யப்பட்ட தேதியிலிருந்து அமலுக்கு வரும். ஒரு தேதியும் குறிக்கப்படவில்லையானால், உப-விதித் திருத்தம் சென்ற காலமுட்பட்ட அமலில் இருக்க முடியாது.

5. உப-விதித் திருத்தங்களைப் பதிவாளர் கட்டளையிடலாம் (Registrarcan direct Amendments to by laws): 1961ஆம்

வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் புகுத்தப்பட்ட ஒரு புதிய வலுவான சரத்து 12ஆம் பிரிவு ஆகும். இந்தப் பிரிவின் கீழ், ஓர் உப-விதித் திருத்தத்தைச் சங்கம் ஏற்றுக் கொள்ளத் தவறினாலும், அது அதை ஏற்றுக்கொள் வதற்குச் சரியான ஆட்சேபனையில்லாமலிருந்தாலும், பதிவாளரே பதிவு செய்யலாம். இந்த ஏற்பாடு பதிவாளரின் ஆயுத சாலையில் ஓர் ஆயுதம் என்று சிலரால் கருதப்படுகிறது. அது பதிவாளரால் ஒரு விதியை விதிப்பதற்குச் சமானமாக நடைமுறையிலிருக்கிறது. உப-விதிகளின் மாதிரி பதிவாளரால் தொகுக்கப்பட்டாலும், உப-விதிகள் சங்கத்தின் பேரவையில் ஒரு தீர்மானம் மூலம் ஏற்றுக் கொள்ளப்படவேண்டும். இந்தப் பிரிவின்கீழ் பதி வாளர் ஒரு சங்கத்தின் விவகார எல்லையை மாற்றுவதற் காகவும், சங்கம் புரியும் சேவைகளைச் சீர்படுத்துவதற் காகவும், அல்லது விதிகளில் குறிக்கப்பட்ட வேறு எந்தச் செயல்களுக்காகவும், இந்த அதிகாரத்தைக் கையாளலாம். இந்தப் பிரிவின்கீழ், சங்கத்தின் பேரவை ஒரு திருத்தத்தை ஏற்பதற்கு மறுத்தாலும் கூட, அந்தத் திருத்தம் சங்கத்தை ஒரு கெட்ட நிலைமையிலிருந்து காப்பாற்றவும் அல்லது ஒரு பொதுவான பொருளாதார சமுதாயச் செயலுக்கு உதவவும் அல்லது அதன் நடவடிக்கையை மேம்படுத்தவும் இன்றியமை யாதது எனக் கருதப்பட்டால், அந்தத் திருத்தம் அமலுக்கு வரும். சில சங்கங்கள் அத்தகைய சூழ்நிலைகள் அபூர்வமாக இருந்தாலும், தங்கள் உப-விதிகளுக்கு ஆலோசனைக் கூறப்பட்ட திருத்தங்களை ஏற்றுக் கொள்வதற்கு விருப்பமில்லாமலிருக் கின்றன என்பதை நடைமுறையனுபவத்தில்காண்கிறோம். அம்மாதிரி உப-விதித் திருத்தங்கள் உதாரணமாக, தங்கள் நிலைமையைப் பாதிக்குமளவு சங்க நிருவாகத்தில் பங்கெடுத்துக் கொள்ளப் புதிய உறுப்பினர்கள் சங்கத்தில் சேராமலிருப்பதற்கு, அல்லது அரசியல் அல்லது சமுதாயப் பகைமையின் காரணமாகச் சங்கத்தை ஒரு மூடிய நிலையமாக வைத்திருப்பதற்குச் சங்க நிருவாகிகள் விரும்பினால், அத்தகைய சூழ்நிலைகளில் சங்கத்தின் விவகார எல்லையை மாற்றுவதற்கு அவசியம் ஏற்படலாம்.

சில உப-விதித் திருத்தங்கள், சங்கத்தின் நலத்திற்கும் அல்லது கூட்டுறவு இயக்க நலத்திற்கும், சங்கத்தின் சேவைகளைச் சீர்ப்படுத்துவதற்காகப் பதிவாளரால் சங்கத்திற்குச் சொல்லப் படலாம். அத்தகைய இன்றியமையாத உப-விதித் திருத்தங்கள் தாமதப்படுத்தப்படாமலும் அல்லது காலவரம்பின்றி ஒரு சங்கத்தால் ஒத்திவைக்கப்படாமலுமிருப்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன், 12ஆம் பிரிவின்கீழ் பதிவாளர், உப-விதித்

திருத்தத்தைச் சங்கம் ஏற்றுக்கொள்ளத் தவறினால், தானே பதிவு செய்வதற்குச் சரத்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. எனினும், சங்கம் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று பதிவாளர் அவசியமாகக் கருதும் உப-விதித் திருத்தத்தை அவரே நேரடியாகப் பதிவு செய்யமுடியாது. 9ஆம் விதியின்கீழ் பதிவாளர் மத்திய வங்கியை முதலில் கலந்தாலோசிக்கவேண்டும். அவர் சங்கம் இணைக்கப் பட்டுள்ள நிதி வங்கிக்கு உத்தேசிக்கப்பட்ட உப-விதித் திருத்தத்தின் நகல் ஒன்றைத், திருத்தத்தைப் பிரேபிப்பதற்குள்ள காரணத்துடன், அனுப்பி உத்தேசிக்கப்பட்ட திருத்தத்தைப்பற்றி அதன் கருத்தை 30 நாள்களுக்குள் அல்லது அவரால் நிருணயிக்கப் பட்ட கால வரம்புக்குள் கேட்டு அறியவேண்டும்.

மத்திய வங்கியின் கருத்தைக் கேட்டறிந்த பிறகு, அவர் ஒரு குறிட்பிட்ட காலத்திற்குள் உப-விதித் திருத்தத்தை ஏற்றுக் கொள்ளுமாறு சங்கத்திற்குக் கட்டளையிடலாம் [பிரிவு 15 (1)]. குறிபபிடட காலத்திற்குள் சங்கம் திருத்தத்தை ஏற்றுக் கொள்ளத் தவறினால், பதிவாளர், உத்தேசிக்கப்பட்ட திருத்திற்கு யாதேனும் ஆட்சேபனைகளிருந்தால் அவற்றை விளக்கும்படி ஒரு வாய்ப்பு கொடுத்து திருத்தத்தைத் தானே பதிவு செய்யலாம். இந்த ஏற்பாடு மக்களாட்சிக் கொள்கைக்கு மாறானதாகக் கருதப் படலாம். ஆகையால், திருத்தத்தைப் பதிவாளர் பதிவு செய் வதற்குள் திருத்தத்திற்கு ஏதாவது மறுப்பு இருந்தால் அதைக் கூறுவதற்குச் சங்கத்திற்கு ஒரு வாய்ப்பு கொடுப்பது அவசியம்.

திருத்தத்தைக் குறித்து நிதி வழங்கும் வங்கியினுடைய கருத்தையும் ஆலோசித்தறியவேண்டும். இந்த ஏற்பாடு செய்தது, நிருவாகக் குழுவை மீறல் அல்லது சங்கத்தைக் கலைத்தல் போன்ற இறுதியானதும் கடுமையானதுமான நடவடிக்கைகளை ஒருவேளை தவிர்க்கும் நோக்கத்துடன் இருக்கலாம். உதாரணமாக, ஒரு விவசாய நாணயச் சங்கம், மோசமான நிலைமையிலிருந்தால், ஒருவேளை அதைப் புதுப்பிப் பதற்கு, அதன் நிருவாக இயக்குநர்களுக்குப் பதிலாக புதிய இயக்குநர்களை நியமித்தல், அல்லது நிருவாகக் குழுவை மீறுதல் அல்லது கலைத்தல் போன்ற கடுமையான நடவடிக்கைகள் எடுக்காமல் சங்கத்தினுடைய நிருவாகத்தை ஒரு வங்கி ஆய்வாளருக்கோ அல்லது மேற்பார்வையாளருக்கோ ஒரு காலவரைக்கு ஒப்படைத்தல் அவசியப்படலாம். ஒரு சங்கத்தின் அலுவல்களின் நிருவாகப் பொறுப்பைப் புதிய நிருவாகிகள் ஒப்புக் கொள்வதற்காக ஒரு புதிய உப-விதி தேவைப்படுகிறது.

ஒரு சங்கத்தின் அலுவல்களின் நிருவாகத்தை, ஒரு வங்கி ஆய்வாளருக்கு, அல்லது ஒரு காலவரைக்கு மத்திய வங்கி அல்லது பதிவாளர் நியமிக்கும் புதிய நிருவாகக் குழுவிற்கு, ஒப்படைப் பதற்குச் சங்கத்தின் பேரவைக்கு அதிகாரம் கொடுக்க ஓர் உப-விதி தேவைப்படுகிறது. அத்தகைய உப-விதி, ஒரு சங்கத்தின் நிருவாகத்தைப்பற்றிய உப-விதிகளில் இதர சரத்து களிலிருந்தாலும், அவற்றையும் பொருட்படுத்தாமல், சங்கத்தின் நலனை முன்னிட்டும், அதன் உறுப்பினர்கள் நலனை முன்னிட்டும், நிறைவேற்றப்பட வேண்டியதாக இருக்கிறது. தற்சமயமிருக்கும் நிருவாகத்தினர் சங்கத்தையழித்து விடுவதற்கு அனுமதிக்கப்படக் கூடாது. இந்த இன்றியமையாத உப-விதித் திருத்தத்தைச் சங்கம் ஏற்றுக்கொள்ளத் தவறினால், பதிவாளர் மத்திய வங்கியைக் கலந்தாலோசித்து, அந்தத் திருத்தத்தைத் தானே பதிவு செய்யலாம். சங்கத்தின் செயல்பாட்டைச் சீர்திருத்தி எல்லையிலுள்ள விவசாயிகளுக்குச் சிறந்த சேவைகளைச் சங்கம் செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் இவ்விதம் செய்யப்படு கிறது. 12 (2) பிரிவின்கீழ், பதிவு செய்யப்பட்ட ஒரு திருத்தம், 11ஆம் பிரிவின்கீழ் பதிவு செய்யப்பட்ட ஒரு திருத்தத்தைப்போல ஒரேமாதிரியான பலனுள்ளது.

11 (4) பிரிவின்கீழ், ஒரு திருத்தத்தைப் பதிவு செய்யப் பதிவாளர் மறுத்தாலும், 12 (2) பிரிவின்கீழ் பதிவாளர் ஒரு திருத்தத்தைப் பதிவு செய்தாலும், மேல்முறையீடு செய்ய 96 (2) (ஏ) பிரிவில் ஒரு சரத்து ஏற்படுத்தப்பட்டுள்ளது. திருத்தத்தைப் பதிவு செய்ய மறுத்த தேதியிலிருந்து, அல்லது பதிவு செய்த தேதியிலிருந்து. சூழ்நிலைகளுக்கேற்ப 2 மாதங் களுக்குள் இந்த மேல்முறையீடு சம்பந்தப்பட்ட சங்கத்தால் மட்டும் செய்யப்படலாம் [96 (3) பிரிவு].

அப்போதைக்கப்போது சட்டத்திற்கும், விதிகளுக்கும், செய்யப்படும் திருத்தங்களின் விளைவாகவும், சங்கங்களுடைய செயல்பாட்டைச் சீர்திருத்துவதற்காகவும், கூட்டுறவுத் துறையில் ஆலோசனை கூறப்படும் சில அரசாங்கக் கொள்கைகளையும் திட்டங் களையும் அல்லது ஆலோசனைகளையும் நிறைவேற்றுவதற்காகவும் கூடச் சங்க உபவிதிகளுக்குத் திருத்தங்கள் பரிந்துரை செய்யப்படு கின்றன. உதாரணமாக, சங்கத்தின் உறுப்பினர்களைச் சேமித்து வைக்க ஊக்குவதற்காகச் சிக்கனத்தைப் பற்றிய ஓர் உப-விதி யைச் சங்கம் ஏற்றுக் கொள்வதற்காகப் பதிவாளரால் ஆலோசனை கூறப்படலாம். சேமிப்புத்திட்டம் உப-விதிகளில் ஓர் அங்கமாகக் கொண்டிருந்தால், சங்க நிருவாகிகள் கலபமாக உறுப்பினர்களைச்

சேமித்து வைக்கச் செய்யலாம். அல்லது சங்கம் இன்னும் ஒரு மேல் நடவடிக்கையையெடுத்து சேமிப்புத் திட்டத்தைக் கட்டாயப்படுத்தலாம். அப்போது, சங்கத்தின் உறுப்பினர்கள் உப-விதிகளுக்குட்பட்டு கட்டுப்பட்டவர்களாவர். உறுப்பினர்களிடமிருந்து சேமிப்பு வைப்புத்தொகையை வசூல் செய்வதற்கு வற்புறுத்தலைக் கையாளவேண்டியிருக்கிறது. இல்லாவிடில், சங்கத்தின் உறுப்பினர்களை ஒழுங்காகச் சேமித்து வைக்கத் தூண்டுவது கடினமாகும். சங்கங்களின் நடைமுறைத் திறமையைச் சீர்திருத்துவதற்காகச் சங்கத்தின் செயல்முறையைப் பற்றிப் பல விவரங்கள் உப-விதிகளில் இடம் பெறவேண்டியிருக்கிறது.

# 6. சங்க அமைப்பில் மாறுதல்கள்

## (Changes in the Structure of Society)

### (பிரிவுகள்: 5, 16, 14 மற்றும் 13)

1. பொது (General)

1. பொறுப்பு வகையை மாற்றுதல் (change of liability)
2. மாற்றம் செய்தல் (conversion)
3. சொத்துகளையும், பொறுப்புகளையும் மாற்றம் செய்தல் (Transfer of Assests and Liability)
4. சங்கங்களைப் பிரித்தலும், இணைத்தலும் (Division and Amalganation of Societies)

இந்தப் பகுதியில், சங்கங்கள் பதிவு செய்யப்பட்ட பிறகு, அவற்றின் பொறுப்பு வகை, நோக்கங்கள், சேர்க்கப்படவேண்டிய சங்க வகை, சங்கங்களுடைய அளவு அல்லது பரிமாணம் போன்றவை குறித்துச் சங்கங்களால் கொண்டு வரப்படும் சில திருத்தங்களைப் பற்றி ஆராய்வோம். சங்கங்கள், தங்களுடைய பொறுப்பு வகை, நோக்கங்கள், அளவு அல்லது பரிமாணத்தில் மாறுதல்களைத் தங்கள் உபவிதிகளுக்குத் தக்க திருத்தங்கள் மூலம் கொண்டுவரலாம். அம்மாதிரி திருத்தங்கள் எந்தச் சூழ்நிலைகளில் கொண்டுவரப்படுகின்றன என்பது பற்றியும், சட்டத்திலும் விதிகளிலுமுள்ள சரத்துகளின் கீழ் அத்தகைய திருத்தங்கள் எப்படிக் கொண்டுவரப்படவேண்டும் என்பது பற்றியும் இனி விவரிக்கப்படும்.

2. பொறுப்பு வகையை மாற்றுதல் (பிரிவு 5) (Change of Liability) :

இப்போதுள்ள நிலைமைப்படிச் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட அல்லது வரையறுக்கப்படாத பொறுப்பில் பதிவு

செய்யப்படலாம் (பிரிவு 4). ஆனால், சங்கங்கள் தங்களுடைய பொறுப்பு வகையை மாற்றாமல் எப்போதும் ஒரேவிதமான பொறுப்பு வகையில்தான் அவைகள் தொடர்ந்து இயங்கி வர வேண்டும் என்பது பொருளல்ல. உண்மையில், தமிழ்நாட்டில் சீரமைக்கப்பட்ட நாணயச் சங்கங்கள் இப்போதும்கூட வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில்தான் அமைக்கப்படுகின்றன. முந்தைய ஒரு பகுதியில், இப்பொழுது கருத்துப்போக்கு வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்குத்தான் சாதகமாக அமைந்திருக்கிறது என்பதையும், அதற்குள்ள காரணங்களையும் ஆராய்ந்தோம். இந்தக் கருத்துப்போக்கின்படிச் சங்கங்கள் தங்களுடைய பொறுப்பை வரையறுக்கப்படாததிலிருந்து வரையறுக்கப்பட்டதாக மாற்றிக்கொள்வது சாதாரணமாக நிகழாது. அம்மாதிரியான ஒரு திருத்தம், பெரும்பான்மையான விவசாயிகளைக் கொண்ட நாணயச் சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்பில் மட்டும்தான் பதிவு செய்யப்படவேண்டும் என்று சட்டம் வற்புறுத்தியபோது, தேவையாக இருந்திருக்கலாம்.

நகர்ப்புறங்களுக்கு அருகாமையிலுள்ள சில சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பின்பேரில் பதிவு செய்யப்பட்டிருக்கலாம். ஆனால், நெருங்கி ஆராயும்போது, அந்தச் சங்கங்களில் பெரும்பான்மையான உறுப்பினர்கள் விவசாயிகளாக இருந்ததால் அந்தச் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பிலிருந்து வரையறுக்கப்படாத பொறுப்பிற்கு மாற்றிக்கொள்ள வேண்டுவது தேவையாக இருந்தது. ஆனால், வருங்காலத்தில் செய்யப்படும் திருத்தம் வரையறுக்கப்படாத பொறுப்பிலிருந்து வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்குத் தேவைப்படும். இந்தத் திருத்தத்தை அமலுக்குக்கொண்டு வருவதற்கு 5ஆம் பிரிவில் சரத்து செய்யப்பட்டிருக்கிறது. திருத்தம் செய்வதற்கு நிறைவேற்றப்பட வேண்டிய நிபந்தனைகள் பின்வருமாறு :

(1) சங்கத்தினுடைய உப-விதிகளில் ஒரு திருத்தத்தின்மூலம் கொண்டு வரப்படலாம்.

(2) சங்கம் தன்னுடைய பொறுப்பு வகையை மாற்றும் உத்தேசத்தைப்பற்றி எல்லா உறுப்பினர்களுக்கும் கடனாளர்களுக்கும் (Creditors) அறிவிப்பு அனுப்பவேண்டும்.

(3) அந்த அறிவிப்புப் பெற்ற 2 மாதங்களுக்குள், ஒவ்வோர் உறுப்பினரும் அல்லது கடனாளரும், சூழ்நிலைக்கேற்றவாறு தன்னுடைய பங்கு மூலதனத்தை அல்லது வைப்புத்தொகைகளை அல்லது கடன்களைத் திருப்பிப் பெறுவதற்கு உரிமையுள்ளவர்கள்.

(4) அவ்வாறு அவர்களுடைய கோரிக்கைகள் தீர்க்கப்பட்ட பிறகு மட்டுமதான், திருத்தம் அமலுக்கு வரமுடியும். எனினும், ஓர் உறுப்பினர் அல்லது கடனாளர் தன்னுடைய கோரிக்கையை 2 மாதங்களுக்குள் தெரியப்படுத்தவில்லையானால் அவர் திருத்தத்தை ஒப்புக் கொண்டதாகக் கருதப்படுவார்.

(5) மேற்சொன்ன நிபந்தனைகள் தளர்த்தப்பட்டு, சங்கம் உத்தேசிக்கிறபடி ஒரு பொறுப்பு வகையிலிருந்து இன்னொரு பொறுப்பு வகைக்கு மாற்றம் செய்வதற்கு எல்லா உறுப்பினர்களும், கடனாளர்களும் உடன்பட்டால் உடனே அந்தத் திருத்தம் அமலுக்கு வரலாம். 8ஆம் விதியில், பொறுப்பு வகையை மாற்றுவதுபற்றிய விதிமுறை விவரமாக நிருணயிக்கப்பட்டிருக்கிறது. பொறுப்பு வகையில் மாற்றம் உப-விதிகளுக்கு ஒரு திருத்தம் மூலம் கொண்டுவரப்பட வேண்டும். ஆகையால், பொதுவாக உப-விதிகளைத் திருத்துவதற்காக 7ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட விதிமுறையைப் பின்பற்றவேண்டும். இந்த விதிமுறையை முந்தைய பகுதியில் கூறியிருக்கிறோம். மேலும், பொறுப்பு வகையை மாற்றுவதுபற்றிய திருத்தம், அதற்கென்று பிரத்தியேகமாகக் கூட்டப்பட்ட பேரவைக் கூட்டத்திற்கு வந்திருந்து வாக்களித்த உறுப்பினர்களில் குறைந்தது 2/3–க்குக் குறையாத, பெரும்பான்மை உறுப்பினர்களால் நிறைவேற்றப்பட வேண்டும். அத்தகைய கூட்டத்திற்குக் குறைந்தது 7 நாள்கள் தெளிவான முன் அறிவிப்பு எல்லா உறுப்பினர்களுக்கும் அனுப்பப்படவேண்டும். [8] (1) விதி இந்த விஷயத்தில் 2/3 பெரும்பான்மை தேவைப்படுகிறது. சாதாரணமாக இதர உப-விதித் திருத்தங்களுக்கு ஒரு சாதாரண பெரும்பான்மை இருந்தால் போதும். ஏனென்றால், பொறுப்புவகை மாற்றத்தைச் செய்யும் முடிவு, கூட்டத்திற்கு வந்திருந்த பெரிய எண்ணிக்கையுள்ள நபர்கள் அதற்குச் சாதகமாக வாக்களிப்பதன்மூலம், எடுக்கப்பட வேண்டும் என்பதை உறுதிப்படுத்துவதற்காகவேதான் இந்தப் பெரும்பான்மை ஏற்பாடு செய்யப்படுகிறது. சங்கத்தின் அமைப்பை அது பாதிப்பதால் பெருமளவு பெரும்பான்மை தேவைப்படுகிறது. மேலும், சாதாரண உப-விதித் திருத்தம் சரியாக இருந்தால் பதிவு செய்யப்படும். ஆனால், பொறுப்பு வகையை மாற்றுவது பற்றிய திருத்தம், எல்லா உறுப்பினர்களும் கடனாளர்களும் அத் திருத்த அறிவிப்பைப் பெற்ற 2 மாதங்களுக்குள் அவர்களின் பங்கு மூலதனத்தையும், வைப்புத் தொகைகளையும், அல்லது கடன்களையும் சங்கத்திலிருந்து திருப்பிப் பெறுவதற்கு அவர்கள் செய்த கோரிக்கைகளைத் தீர்த்தபிறகுதான், பதிவு செய்யப்படும் [பிரிவு 8 (2)]. இம்மாதிரி செய்யப்

படுவது, பங்குதாரர்களும் கடனாளர்களும், அத்தகைய திருத்தத்திற்கு ஒப்புகிறார்கள் என்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன்தான். மேலும், அவர்களுடைய நலன்கள் எந்த விதத்திலும் பாதிக்கப்படாமல், அவர்களுடைய ஒப்புதலுடன் சங்க அமைப்பில் இந்த முக்கியத் திருத்தம் செய்யப்படுகிறது என்பதையும் உறுதிப்படுத்துவதும் இதன் நோக்கமாகும்.

3. மாற்றம் (Conversion) (பிரிவு 16)

முந்தைய பகுதியில் பதிவாளர், 15ஆம் பிரிவின்கீழ், சங்கங்களை எப்படிப் பாகுபாடு செய்கிறார் என்பதையும், அம்மாதிரி அவர் பாகுபாடு செய்வதன் நோக்கத்தையும் ஆராய்ந்தோம். 16ஆம் பிரிவின்கீழ், புதுவிதப் பணிகளை மேற்கொள்ள விரும்பி அதனால் ஒரு சங்கத்தினுடைய நோக்கங்கள் கவனிக்கவேண்டிய முறையில் வேறுபடும்போது எந்தச் சங்கமும் ஒரு புதுவகையாகத் தன்னை மாற்றிக் கொள்ளலாம். அப்படி மாற்றிக்கொண்டால், அந்தச் சங்கம் முதலிலிருந்த வகுப்பிலிருந்து ஒரு வேறுபட்ட வகுப்பின்கீழ் பாகுபாடு செய்யப்படவேண்டியிருக்கிறது. 16ஆம் பிரிவின்படி, எந்த ஒரு சங்கமும் முதலிலிருந்த வகுப்பிலிருந்து வேறுபட்ட ஒரு வகுப்பிற்கு மாற்றம் செய்துகொள்ளலாம். எனினும், அம்மாதிரி மாற்றம் செய்துகொள்வது அருமை. உதாரணமாக, ஒரு விவசாய நாணயச் சங்கத்தை ஒரு விவசாயப் பண்ணைச் சங்கமாக மாற்றிக் கொள்ளலாம். ஒரு வீடு அமைக்கும் சங்கத்தை (House Building Society) ஒரு வீடு கட்டும் (House Construction Society) சங்கமாக மாற்றிக் கொள்ளலாம். ஒரு கிராம எல்லையில் ஒரு ஸ்டோர்ஸ் சங்கம் ஒரு விற்பனைச் சங்கமாக மாற்றிக்கொள்ளப்படலாம். அத்தகைய மாற்றங்களைச் செய்து கொள்வதற்கான விதிமுறை 12ஆம் விதியில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு மாற்றம் செய்துகொள்ளுதல், ஒரு பொறுப்பு வகையிலிருந்து இன்னொரு பொறுப்பு வகைக்கு மாற்றம் செய்துகொள்வதுபோல, சங்கத்தின் உப-விதிகளுக்குத் தக்க திருத்தங்கள் மூலம் செய்யப்படலாம். 12ஆம் விதியின் கீழ், பதிவாளர் அம்மாதிரி மாற்றத்திற்காகச் சங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்படும் உப-விதித் திருத்தங்களைப் பதிவு செய்வதற்கு முன்னர், கீழ்க்கண்ட நிபந்தனைகள் நிறைவேற்றப்படவேண்டும்.

(1) மாற்றத்திற்காகச் சிறப்பாகக் கூட்டப்படும் பேரவைக் கூட்டத்திற்காக உறுப்பினர்களுக்குக் குறைந்தது 7 நாள்கள் அறிவிப்பு அனுப்பப்படவேண்டும்.

(2) சங்கம் முதலிலிருந்த வகுப்பிலிருந்து வேறு ஒரு வகுப்பிற்கு மாற்றிக் கொள்ள உப-விதித் திருத்தத்தின் மூலம்

பேரவை ஒரு தீர்மானத்தை நிறைவேற்றவேண்டும். இந்தத் தீர்மானம் சாதாரண பெரும்பான்மையுடன் நிறைவேற்றப் பட்டால் போதும் என்பது தெளிவு. ஏனென்றால், இது உறுப்பினர்களையும் கடனாளர்களையும் பெரிதும் பாதிக்கக் கூடியதல்ல. இந்தத் தீர்மானத்தில் சங்கத்தால் முன்மொழியப் பட்ட உப-விதித் திருத்தங்கள் உள்ளடங்கி இருக்கவேண்டும்.

(3) இந்தத் தீர்மானம் சங்கத்தின் எல்லா உறுப்பினர்களுக்கும் கடனாளர்களுக்கும் அனுப்பப்படவேண்டும். சங்கத்தில் உறுப்பி-னர்களாகத் தொடர்ந்திருப்பதற்கு அவர்கள் விரும்புகிறார்களா, அல்லது அவர்களுடைய பங்குத் தொகையைத் திரும்பப் பெற்றுக் கொள்ள விரும்புகிறார்களா, என்பதையும் சங்கத்திற்குத் தெரியப் படுத்தவேண்டுமென இரண்டு மாத அவகாசம் அவர்களுக்குக் கொடுக்கப்படவேண்டும். கடனாளர்களும், இந்த இரண்டுமாத காலத்திற்குள், அவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய பாக்கிப் பணத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ள விரும்புகிறார்களா, என்பதைச் சங்கத்திற்குத் தெரியப்படுத்தவேண்டும்.

(4) இந்தத் தீர்மானம் அனுப்பப்பட்ட தேதியிலிருந்து 2 மாதங்கள் கழிந்த பிறகு (விதிகளில் இது முதல் நிலைத் தீர்மானம் என்று கூறப்பட்டிருக்கிறது), சங்கத்தின் உறுப்பினர்களுக்குக் குறைந்த பட்சம் 15 நாள்கள் தெளிவான அறிவிப்புக்கொடுத்த பிறகு இந்த முதல் நிலைத் தீர்மானத்தை ஆலோசிப்பதற்காகப் பேரவைக் கூட்டம் கூட்டப்படவேண்டும். இந்தக் கூட்டத்தில் அந்த முதல் நிலைத் தீர்மானம், திருத்தங்களில்லாமலோ அல்லது முக்கியமானவையல்லாத ஏதாவது திருத்தங்களுடனோ கூட்டத் திற்கு வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3-க்குக் குறையாத பெரும்பான்மை உறுப்பினர்களால், உறுதிப்படுத்தப் படவேண்டும்.

(5) இந்தக் கூட்டத்தில், உறுப்பினர்களுக்கும், கடனாளர் களுக்கும் பங்கு மூலதனத்தையும் வைப்புத் தொகைகளையும் கடன்களையும் திருப்பிச் செலுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்து, இன்னொரு தீர்மானம்கூட நிறைவேற்றப்படவேண்டும். உறுப்பி-னர்களுக்குப் பங்கு மூலதனத்தையும் கடனாளர்களுக்கு அவர் களுடைய பாக்கிகளையும் திருப்பிச் செலுத்துவதற்கான போதிய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்று பதிவாளர் திருப்தி யடைந்தால், அவர் திருத்தங்களைப் பதிவு செய்யலாம். இல்லா விடில், திருத்தங்களைப் பதிவு செய்ய மறுப்பதற்கு அவருக்கு உரிமை உண்டு. உப-விதிகள் திருத்தப்படும்போது, சங்கம்,

அதனுடைய நோக்கங்கள், விவகார எல்லை, அங்கத்துவம் முதலிய வற்றின்படிப் புதியதாக வகைப்படுத்தப்படும். அப்படி வகைப் படுத்தப்படுவது, 11ஆம் விதியில் குறிக்கப்பட்டுள்ள பாகுபாடு முறைப்படி செய்யப்படவேண்டும். இம் மாதிரி சங்க வகையை மாற்றம் செய்வது, சங்கமே தன் சொந்த விருப்பப்படி முன் மொழியலாம், அல்லது சில திருத்தம் கோரிக்கைகளைப் பரிசீலனை செய்வதற்காகச் சங்கம் ஒரு வேறுபட்ட வகுப்பில் வைக்கப்பட வேண்டும் என்று பதிவாளர் கருதினால், பதிவாளருடைய கட்டளையின்படியும் முன்மொழியப்படலாம் (16ஆம் பிரிவு).

(4) சங்கங்களைப் பிரிப்பதும் ஒன்றுசேர்ப்பதும் (13ஆம் பிரிவு) (Division and Amalgamation of Societies) : ஒரு சங்கம் எளிதில் செயல்படமுடியாத அளவுக்குப் பெரியதாகிவிட்டாலும், அல்லது ஒரு சங்கத்தின் விவகார எல்லையில் முதன் முதலில் சேர்க்கப் பட்டிருந்த சிறு நிலப் பகுதிகளுக்காகப் புதிய சங்கங்கள் அமைக்கப் படவேண்டுமென்று விரும்பப்பட்டாலும், ஒரு சங்கத்தைப் பிரிப்பதற்குச் சிபாரிசு செய்யப்படும். உதாரணமாக, ஒரு விவசாய அல்லது விற்பனை பிரதம சங்கம் 2 அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்களாகப் பிரிக்கப்படலாம். பிரிக்கப்பட்ட ஒவ்வொரு சங்கத்தின் விவகார எல்லை இறுக்கமானதாக (Compact) இருந்து, அது பயனுள்ள முறையில் செயல்பட்டு, தன் உறுப்பினர்களுக்கு மேலான முறையில் சேவை செய்யமுடியுமாறு, சங்கங்களைப் பிரிக்கவேண்டும். மற்றும், முன்னரே ஒரு மத்திய வங்கியின் விவகார எல்லையிலிருக்கும் ஒரு நிலப் பகுதியில், ஒரு புதிய மத்திய வங்கி ஆரம்பிக்கப்பட்டால், அப்போதுகூட அந்த வங்கியைப் பிரிக்க நேரிடும். உதாரணமாக, இராமநாதபுரம் மாவட்டத்திற்கு ஒரு தனி மத்திய வங்கி அமைத்த போது, மதுரை–இராமநாதபுரம் கூட்டுறவு மத்திய வங்கியின் சொத்துப் பொறுப்புகள் பிரிக்கப்பட்டு, மதுரை–இராமநாதபுரம் மத்திய வங்கியுடன் முதன் முதலில் இணைக்கப்பட்ட நிலப்பகுதிகள் இராமநாதபுரம் மத்திய வங்கியின் விவகார எல்லையில் சேர்க்கப் பட்டன. மேலும், மாநிலங்கள் சீரமைப்பின் விளைவாகத் தலைமை வங்கிகளைக்கூடப் பிரிக்க நேர்ந்தது.

ஆந்திரப்பிரதேசம் தோன்றியபோது, சென்னை மாநிலக் கூட்டுறவுக் கைத்தறி நெசவாளர் சங்கம், சென்னை மாநில மத்திய நில அடைமான வங்கிபோன்ற தலைமை நிறுவனங்களையும் பிரிக்க நேர்ந்தது. இத்தகைய சூழ்நிலை உண்மையாகவே அபூர்வமானவை யாகவிருந்தாலும்கூட, கூட்டுறவுச் சங்கங்களைப் பிரிப்பதற்கும் சட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. (13ஆம் பிரிவு).

தவிர, சங்கங்களை ஒன்று சேர்த்தால் அவைகளை உறுப்படியான பொருளாதார அமைப்புகளாகச் செய்து, அவைகளுக்குப் பலம் அளிப்பதற்கு அவசியப்படுகிறது. சிறிய, செயலற்ற சங்கங்கள் உருப்படியான பொருளாதார அமைப்புகளாக இல்லாம லிருந்தால் தன்னிறைவு பெறும் பொருளாதார அமைப்புகளை ஏற்படுத்துவதற்காகச் சங்கங்களை ஒன்றுசேர்த்தல், குறிப்பாக விவசாய நாணயச் சங்கங்களில் தேவைப்படும். ஆகையால், சட்டத்தில் சங்கங்களை ஒன்று சேர்ப்பதற்குக் கூட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. [பிரிவு 13 (1)] சங்கங்களைப் பிரிப்ப தற்கும், இணைப்பதற்கும் நிருணயிக்கப்பட்ட விதிமுறை தாமதத்தை உண்டு பண்ணுவதாக இருக்கிறது. மேலும், அது மிகவும் பாடுபட்டு எழுதப்பட்டும் விரிவாகவும் இருப்பதால், சங்கங்களை இணைப்பதும், அல்லது பிரிப்பதும் ஒரு நீடித்த கடின மான செயலாக இருக்கிறது. சங்கங்களைப் பிரிப்பதற்கும் இணைப்ப தற்கும் சட்டத்தில் அடங்கியுள்ள ஏற்பாடு சுருக்கமாக கீழே விளக்கப்பட்டிருக்கிறது.

சங்கத்தைப் பிரிப்பதற்காக மேற்கொள்ளவேண்டிய நிபந்தனைகளும், விதி முறைகளும்

(1) ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டம், இந்தச் செயலுக்காகக் குறைந்தது 7 நாள்கள் தெளிவான முன் அறிவிப்பு உறுப்பினர் களுக்கு கொடுக்கப்பட்டு, பிரத்தியேகமாக கூட்டப்படவேண்டும். அந்தக் கூட்டத்தில் சங்கத்தை 2 அல்லது அதற்கு மேற்பட்ட சங்கங்களாகப் பிரிப்பதற்கு ஒரு தீர்மானம் நிறைவேற்றப் படவேண்டும்.

(2) இந்தத் தீர்மானத்தில், (முதல் நிலைத்தீர்மானம் என்று இது அழைக்கப்படும்) புதிய சங்கங்களிடையே, பிரிக்கப்படும் சங்கத்தின் சொத்துப் பொறுப்புகளைப், பிரிப்பதற்கான யோசனைகள் அடங்கி யிருக்கவேண்டும். மேலும், புதிய சங்கங்களிலிருக்க வேண்டிய உறுப்பினர்களும், விவகார எல்லையும் இந்தத் தீர்மானத்தில் குறிக்கப்படவேண்டும்.

(3) புதிய சங்கங்களின் உத்தேசிக்கப்பட்ட உப–விதிகளும் கூட இந்தத் தீர்மானத்தில் அடங்கியிருக்கவேண்டும்.

(4) இந்தத் தீர்மானத்தின் ஒரு நகல் சங்கத்தினுடைய எல்லா உறுப்பினர்களுக்கும், கடனாளர்களுக்கும், அனுப்பப்பட வேண்டும்.

(5) புதிய சங்கங்களில் எதிலாவது ஒன்றில் உறுப்பினராக இருப்பதற்கு விருப்பம் இருக்கிறதா அல்லது இல்லையா என்பதைத்

தெரிவிப்பதற்கும், கடனாளர்கள் தங்களுக்குச் சேரவேண்டிய பாக்கித் தொகைகளைத் திருப்பிப் பெற விரும்புகிறார்களா என்பதைத் தெரிவிப்பதற்கும, 2 மாத காலம் கொடுக்கப்பட வேண்டும்.

(6) 2 மாதங்கள் கழிந்த பிறகு சங்கத்தின் பேரவைக் கூட்டம் ஒன்று, உறுப்பினர்களுக்கு 15 நாள்களுக்குக் குறையாத தெளிவான அறிவிப்பு கொடுத்தபிறகு, கூட்டப்படவேண்டும். இந்தக் கூட்டம், முதல் நிலைத் தீர்மானத்தையும் உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளையும் ஆலோசிக்கும் செயலுக்காகக் கூட்டப்படும்.

(7) இந்தப் பேரவைக் கூட்டத்தில், முதல் நிலைத் தீர்மானமும், உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளும், கூட்டத்திற்கு வந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3-க்குக் குறையாத உறுப்பினர்களால் யாதொரு முக்கியத் திருத்தங்களில்லாமல் உறுதிப்படுத்தப்படவேண்டும்.

(8) இந்தக் கூட்டத்தில் பங்கு மூலதனத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ள விருப்பம் தெரிவித்த உறுப்பினர்களுக்குப் பங்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுக்கவும், தங்களுக்குச் சேர வேண்டிய பாக்கித்தொகைகளைத் திருப்பிப் பெறுவதற்கு விருப்பம் தெரிவித்த கடனாளர்களுக்கு அவர்கள் பாக்கியைத் திருப்பிச் செலுத்தவும், ஏற்பாடு செய்யப்படவேண்டும்.

(9) (99) (5) விதியின்படி, தீர்மானத்தின் சான்றிடப்பட்ட நகல் சங்கத்தால் உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளின் நகலுடன் பதிவாளருக்கு அனுப்பப்படவேண்டும். எல்லா நிபந்தனைகளும் நிறைவேற்றப்பட்டன என்று பதிவாளர் திருப்தியடைந்தால் அவர் புதிய சங்கங்களைப் பதிவு செய்வார். அப்போது மூல சங்கத்தின் பதிவு தானாகவே ரத்து செய்யப்பட்டதாகிவிடும். புதிய சங்கங்கள் பதிவு செய்யப்பட்டன என்ற உண்மையினால், மூல சங்கத்தின் சொத்துப் பொறுப்புகள் முதல் தீர்மானத்தில் செய்யப்பட்டுப் பேரவையில் உறுதிப்படுத்தப்பட்ட ஏற்பாடுகளின்படி புதிய சங்கங்கள்வசம் சேரும் (பிரிவு 13 எப்).

சங்கங்கள் இணைப்பு; ஏறக்குறைய ஒரே மாதிரியான விதிமுறைகள் சங்கங்கள் இணைப்பிற்கும் 13 (2) பிரிவில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. பலவீனமான சங்கங்கள் ஒரே சங்கமாவதற்கு ஒன்றுசேர்ந்து பலமுள்ள ஒரு தன்னிறைவு பெறும் பொருளாதார நிறுவனமாவதற்கு விரும்பினால், சங்கங்கள் இணைப்பு சிபாரிசு செய்யப்படுகிறது. குறிப்பாக எண்ணிக்கை பெரியதாக

பயனுள்ளவாறு செயல்பட முடியாத, பல சிறிய சங்கங்களாக இயங்கும் விவசாய நாணயச் சங்கங்களுக்குச் சங்க இணைப்பு தேவைப்படுகிறது. தமிழ்நாட்டில் விவசாய நாணயச் சங்கங்களை உருப்படியான அடிப்படையில் திருத்தி அமைக்கும் திட்டம் சுறுசுறுப்பாக நிறைவேற்றவேண்டியிருக்கிறது. இதற்காக 13ஆம் பிரிவை அமல் படுத்தவேண்டும். எனினும், சம்பந்தப் பட்ட சங்கங்கள் இசைவு தந்தால் மட்டும்தான் சங்க இணைப்பு செய்யமுடியும். அவைகளை ஒரே சங்கமாக இணையவேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது. 13 (2) பிரிவின்படி இணைப்பதற்கு விதிமுறை கீழ்வருமாறு விவரிக்கப்பட்டிருக்கிறது.

(1) 2 அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்கள் ஒரே சங்கமாக இணையக் கோரினால் ஒவ்வொரு சங்கமும் தனியாக இந்தக் காரியத்திற்குப் பிரத்தியேகமாக, தங்கள் உறுப்பினர் களுக்கு 7 நாள்கள் தெளிவான அறிவிப்புக் கொடுத்த பிறகு, பேரவைக் கூட்டங்களைக் கூட்டவேண்டும்.

(2) இந்தக் கூட்டங்களில் சங்கங்களை ஒரே சங்கமாக இணைப் பதற்கான ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும். இந்தத் தீர்மானம் முதல் தீர்மானம் என்று அழைக்கப்படும். இணைக்கப் படும் சங்கத்தின் உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளும் அந்தத் தீர் மானத்தில் அடங்கியிருக்கவேண்டும்.

(3) முதல் தீர்மானத்தின் நகல் ஒன்று எல்லாக் கடன்காரர் களுக்கும், உறுப்பினர்களுக்கும் அனுப்பப்பட வேண்டும். உறுப் பினர்களுக்கும், கடன்காரர்களுக்கும் முறையே உத்தேசிக்கப் படும் இணைக்கப்பட்ட சங்கத்தில் அவர்கள் உறுப்பினர்களாக இருக்க விரும்புகிறார்களா என்பதையும், கடன்காரர்கள் தங்கள் பாக்கியைத் திருப்பிப் பெறுவதற்குக் கோருகிறார்களா என்பதை யும் தெரிவிப்பதற்கு அவர்களுக்கு ஒரு மாதகாலம் கொடுக்கப் பட வேண்டும்.

(4) முதல் தீர்மானம் எல்லா உறுப்பினர்களுக்கும் கடன் காரர்களுக்கும் தெரிவித்த இரண்டு மாதங்களுக்குப் பிறகு அத் தகைய எல்லா உறுப்பினர்களுடைய ஒரு கூட்டுக் கூட்டம், எல்லா உறுப்பினர்களுக்கும் 15 நாள்கள் தெளிவான அறிவிப்புக் கொடுத்தபிறகு, கூட்டப்பட வேண்டும். அந்தக் கூட்டுக் கூட்டத்தில், முதல் தீர்மானமும், இணைக்கப்பட்ட சங்கத்தின் உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளும், ஆலோசிக்கப்படும்.

(5) பிரிவு 13 (2) (ஈ)-ல் குறிக்கப்பட்டுள்ள படி அத்தகைய கூட்டம் யாரால் கூட்டப்படவேண்டும், எந்த விதிமுறையை

அனுசரிக்க வேண்டும், அந்தக் கூட்டத்திற்கு ஏற்பட்ட குறை வெண் வரம்பு என்ன (Quorum) இவற்றைப்பற்றியெல்லாம் விதி களில் விவரிக்கப்பட வில்லை.

(6) இந்தக் கூட்டுக் கூட்டத்தில் சங்கங்களால் நிறைவேற்றப் பட்ட முதல் தீர்மானமும், இணைக்கப்படும் சங்கத்தின் உத்தேச உப-விதிகளும், உறுதிப்படுத்தப்பட்டு, கூட்டத்திற்கு வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3-ச்குக் குறையாத உறுப்பினர் களால் முக்கியத் திருத்தங்களில்லாமல் ஒரு தீர்மானம் நிறை வேற்றப்பட வேண்டும்.

(7) இந்தக் கூட்டுக் கூட்டத்தில், உத்தேசிக்கப்பட்ட இணைப்புச் சங்கத்தில் சேருவதற்கு விருப்பமில்லை என்று தெரி வித்த எல்லா நபர்களுக்கும் பங்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுக்கவும், ஒன்று சேர விரும்பும் உறுப்பினருடைய எல்லா கடனாளர்களின் பாக்கியைத் திருப்பிக் கொடுக்கவும் தக்க ஒரு தனி தீர்மானத்தின் மூலம் ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

(8) இந்தத் தீர்மானத்தின் நகல் ஒன்றும், 99ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட முறையில் சான்றிடப்பட்ட உப-விதிகளும் இணைக்கப்பட்ட சங்கத்தையும் உப-விதிகளையும் பதிவு செய்வதற் காகப் பதிவாளருக்கு அனுப்பப்படவேண்டும். எல்லா நிபந்தனை களும் நிறைவேற்றப்படப்பட்டன என்றும், விதிமுறைகளும் அனுசரிக்கப்பட்டன என்றும், பதிவாளர் திருப்தியடைந்தால், அவர் இணைக்கப்பட்ட சங்கத்தையும் உப-விதிகளையும் பதிவு செய்வார். இணைக்கப்பட்ட சங்கத்தின் பதிவு, மூலசங்கங்களின் எல்லாச் சொத்துப் பொறுப்புகளும் இணைக்கப்பட்ட சங்கத்திற்கு மாற்றப்பட்டுவிட்டன என்பதைப்பற்றிய, பேர்துமான ஒரு சான்றாகும் [பிரிவு 13 (2) (ஜி)].

உண்மையான நடைமுறையில், இந்தச் சரத்து மிகவும் அபூர்வமாகத்தான் பயன்படுத்தப்படுகிறது. ஏனென்றால், அம்மாதிரி சங்க இணைப்பிற்கான வாய்ப்பு எழுவது அபூர்வம். இரண்டாவதாக, இணைப்பிற்கான விதிமுறை தாமதப்படுத்தும் தன்மையாகவும் சிக்கல் மிகுந்ததாகவும் இருக்கிறது. 13ஆம் பிரிவில் விவரிக்கப்பட்ட சிக்கலான விதிமுறையைத் தவிர்ப் பதற்குத், தமிழ்நாடு அரசாங்கம், சென்னை மாநிலத்திலிருந்து ஆந்திர மாநிலப் பிரிவினை விளைவாகச் சென்னை மாநிலக் கூட்டுறவு வங்கியையும், சென்னை மாநில நில அடைமான வங்கியையும், சென்னை மாநிலக் கைத்தறி நெசவாளர் சங்கத்தையும் பிரிப்பதற்கு, 1953ஆம் வருடத்திய இரண்டாவது அவசரச்

சட்டத்தைப் (Ordinance) பிறப்பித்தது. கூட்டுறவுச் சட்டக் குழுவினர் இச் சட்டத்தை ஆலோசித்து, சங்கங்களைப் பிரிப்பதற்காகவும், இணைப்பதற்காகவும் எளிமையான விதிமுறை ஒன்று அவசியமென்று கருதினர். அந்தக் குழுவினர், இரண்டு சங்கங்கள் ஒரே சங்கமாக இணைவதற்கு இசைந்தால், கூடுமானவரை விரைவில் இணைப்பதற்குச் சாதகமான எளிய ஒரு விதிமுறைச் சட்டத்தை ஏற்படுத்தவேண்டும் என்றும் கருதினர்.

1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தில் இணைப்புப்பற்றி நிருணயிக்கப்பட்ட தீர்மானங்களில் ஒன்றை எடுத்துவிடலாம் என்றும், உறுப்பினர்களும், கடனாளர்களும் சங்கத்திலிருந்து தங்கள் பணத்தைத் திருப்பிப் பெறுவதற்கு உண்டான அறிவிப்பின் காலத்தைக் குறைத்துவிடலாம் என்றும், அவர்கள் கருதினர். அவர்கள் மாதிரி கூட்டுறவு மசோதாவில் இதுபற்றி ஒரு புதிய பகுதியையும் (பகுதி 14) யோசனை கூறியிருக்கின்றனர். இந்தப் புதிய பகுதியில், சங்கங்களை இணைத்தல், சொத்துப் பொறுப்புகளை மாற்றுதல், சங்கங்களைப் பிரித்தல் போன்றவைகளுக்கு, விதிமுறை கூறப்பட்டிருக்கிறது.

1954ஆம் ஆண்டில், அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை வெளியானவுடன், அந்தக் குழுவினர் பெரிய அளவு சங்கங்களை நிறுவவேண்டும் என்று சிபாரிசு செய்ததையொட்டி சென்னை மாநிலத்தில் 1956—'59 ஆண்டுகளில் கூட்டுறவு விவசாய வங்கிகள், விவசாய நாணயச் சங்கங்கள் தன்னிறைவு பெற்ற பொருளாதார நிறுவனங்களாக இருக்கவேண்டும் என்ற நோக்கத்துடன், நிறுவப்பட்டன என்பது இந்த இடத்தில் கவனிக்கவேண்டியிருக்கிறது. இந்த வங்கிகள் சில, 2 அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்கள் சுயேச்சையாக ஒன்றிணைவதற்களித்த ஒப்புதலின் மூலம் நிறுவப்பட்டன. அந்தக் காலத்தில் விவசாய வங்கிகளை நிறுவி, விவசாய நாணயச் சங்கங்களை உறுதியான அடிப்படையில் சீரமைக்கும் திட்டத்தைத் துரிதமாக நிறைவேற்றுவதற்காகச் சங்கங்களைக் கட்டாயப்படுத்தி ஒன்றிணைத்தது அவசியமாக இருந்தது என்பது உண்மைதான். சங்கத்தின் அதிகாரத்தையும் அல்லது பதவியையும் கைவிட விருப்பமில்லாத காரணத்தாலும், அல்லது தனித்த தன்மை போய்விடும் என்ற அச்சத்தின் காரணமாகவும், சங்கங்கள் ஒன்றிணைவதற்கு மறுத்தால் அந்தச் சூழ்நிலைகளில், கட்டாய இணைப்பு அவசியமாக இருந்தது. சில சிறிய சங்கங்கள் தனித்து இயங்க விரும்பின. அதே சமயத்தில் அவை அதிக உறுப்பினர்களைச் சேர்க்காமலும், விவசாயிகளின் பெரும் பகுதியினருக்குப் பயன்படும் வகையில் செயற்படாமலும் இருந்து வந்தன.

குறுகிய நோக்கம், அல்லது பதவி, அதிகாரம் இழக்கநேரிடும் முதலியன போன்ற காரணங்களால், ஒரு சிறிய சங்கம் அருகிலுள்ள ஏதாவது மற்றொரு சங்கம் அல்லது சங்கங்களுடன் ஒன்றிணைவதற்கு மறுத்தால், பெரிய நிறுவனங்களாகச் சங்கங்களைச் சீரமைப்பதற்கு அவற்றை அறிவுறுத்தி இணங்க வைக்கவும் அல்லது, கட்டாயப்படுத்தவும்கூட வேண்டும். 1956–59ஆம் வருடங்களில், விவசாய வங்கிகள் சென்னை மாநிலத்தில் நிறுவப்பட்ட போது, சங்கங்களின் கட்டாய இணைப்பிற்காக 1932ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்திலிருந்த சரத்து பயனுள்ளதாக இருந்தது. உண்மையிலேயே இந்தச் சரத்தை அமல்படுத்துவதற்கு வாய்ப்பு நேரிடவில்லை. சட்டத்தில் இந்தச் சரத்து இருந்ததே சிறு சங்கங்கள் பெரிய சங்கங்களாக சீரமைககப்படுவதில் எதிர்ப்பை அடக்கி விட்டது. இந்தச் சரத்து 1961ஆம் வருடத்தில் கூட்டுறவுச் சட்டம் திருத்தப்படும்போது நீக்கப்பட்டது. 1961ஆம் ஆண்டுக் கூட்டுறவுச் சட்டத்திலும் இந்தச் சட்டத்தில் ஒரு திருத்தம் சீக்கிரம் கொண்டுவந்தால் அது சங்கங்களின் சீரமைப்புத் திட்டத்தை விரைவாகச் செயல்படுத்த உதவும். எனினும், கூட்டுறவுச் சட்டக் குழுவினர் (1957) சங்கங்களின் கட்டாய இணைப்பிற்குச் சாதகமாக இல்லை. உறுப்பினர்கள் அவ்வாறு விரும்பினால், சங்கங்களின் இணைப்பை வசதிப்படுவதற்குத்தான் ஒரு சரத்து சட்டத்தில் ஏற்பாடு செய்ய வேண்டியது அவசியமாக இருக்கிறது என்று அவர்கள் கருத்து கொண்டனர். ஆகையால், அவர்கள் மாதிரி கூட்டுறவு மசோதாவின் 14 பகுதியில் ஓர் எளிய விதிமுறையைப் பரிந்துரை செய்தார்கள்.

சந்தானம் குழுவினர் (1969) தமிழ்நாட்டில் விவசாய நாணயச் சங்கங்களின் செயல்பாட்டைப் பற்றிய பரிந்துரைகளைச் செய்யும்போது, விவசாய நாணயச் சங்கங்களைச் சீரிய அடிப்படையில் சீரமைப்பதற்கான திட்டம் துரிதமாக நிறைவேற்றப்படவேண்டும் என்று கருதினர். அவர்கள் பலவீனமான விவசாய நாணயச் சங்கங்களுக்கு மட்டுமல்லாமல், பால்–வழங்கும் சங்கம், கைத்தறி நெசவாளர் சங்கம், நுகர்வோர் சங்கம் முதலியன போன்ற இதர வகுப்புச் சங்கங்களிலும்கூடக் கட்டாய இணைப்பு தேவையாக இருக்கிறது என்ற கருத்துகொண்டனர். ஆகையால், மத்திய வங்கிகளைக் கலந்தாலோசித்துப் பலவீனமான சங்கங்களை ஒன்றிணைக்கப் பதிவாளருக்கு அதிகாரங்கள் கொடுத்து 1961ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தின் 13ஆம் பிரிவுக்கு ஒரு திருத்தம் செய்ய யோசனை கூறியிருக்கிறார்கள். அவர்கள் யோசனை கூறியிருக்கும் சட்டத்திருத்தம் பிரிவு 13–க்கு ஒரு புதிய உட்பிரிவு, அது கீழ்வருமாறு :

(அ) பதிவாளர் அபிப்பிராயத்தில் 2 அல்லது 2-க்கு மேற்பட்ட பதிவு செய்யப்பட்ட சங்கங்கள் அவற்றினுடைய வலுவை அல்லது பயனை அதிகரிப்பதற்காக ஒன்றிணைவது அவசியமாக அல்லது விரும்பத்தக்கதாக இருந்தால் அச் சங்கங்கள் இணைந்திருக்கும் நிதி வங்கி, ஏதாவது இருந்தால், அதைக் கலந்து ஆலோசித்த பிறகு, அத்தகைய சங்கங்கள் பிரிவு 13 உட்பிரிவு 2-ல் குறிக்கப்பட்டுள்ள விதிமுறையின் படி, விதிமுறையில் பல்வேறு கட்டங்களுக்காக நிருணயிக்கப்பட்ட கால வரம்பிற்குள் ஒரு சங்கமாக இணையவேண்டும் என்று பதிவாளர் எழுத்தில் ஓர் அறிவிப்புமூலம் கட்டளையிடலாம்.

(ஆ) அந்தச் சங்கங்கள் ஒரே சங்கமாக இணைவதற்குத் தவறினாலும், அல்லது இணைவதற்கான விதி முறையில் எந்தக் கட்டத்திலாவது தாமதமிருந்தாலும், பதிவாளர், ஒவ்வொரு சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு அதன் மறுப்புகள் ஏதாவது கூறுவதற்கு ஒரு வாய்ப்பு கொடுத்த பிறகு, எழுத்து மூலம் ஓர் உத்தரவினால் அச் சங்கங்களை ஒரு சங்கமாக இணைப்பதற்குக் கட்டளையிட்டு அவரால் தயாரிக்கப்பட்ட ஒன்றிணைந்த சங்கத்தின் உப-விதிகளின் ஒரு நகலை ஒவ்வொரு சங்கத்திற்கும் கொடுக்கலாம்.

(இ) அப்படிக் கட்டளையிடப்பட்ட ஒவ்வொரு சங்கமும் பதிவாளருடைய கட்டளையைப் பெற்ற தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குள் அதனுடைய எல்லா உறுப்பினர்களுக்கும், கடனாளர்களுக்கும், பதிவாளரால் குறிக்கப்படும் நமூனாவிலும், முறையிலும் கட்டளையின் அறிவிப்பை அனுப்பவேண்டும். அத்தகைய காலத்திற்குள் சங்கம் கட்டளையின் அறிவிப்பை அனுப்பத் தவறினால் பதிவாளர் அல்லது அவரால் இச் செயலுக்கென அதிகாரம் அளிக்கப்பட்ட எந்த நபரும் அத்தகைய அறிவிப்பை அனுப்பலாம்.

(ஈ) 1. அப்படிக் கட்டளையிடப்பட்ட எந்தச் சங்கத்தினுடைய எந்த உறுப்பினரும், எதிரிடையான எந்த உப-விதி இருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல், அவர் உறுப்பினராக இருக்கும் சங்கத்திற்குக் கட்டளையின் அறிவிப்பு அவர் பெற்ற தேதியிலிருந்து ஒரு மாத காலத்திற்குள் சங்கத்திற்கு அவர் அனுப்பும் அறிவிப்பு மூலம் இணைக்கப்பட்ட சங்கத்தின் உறுப்பினராக இருப்பதற்கு அவருக்கு விருப்பமில்லையென்று தெரிவிக்கலாம்.

(2) அப்படிக் கட்டளையிடப்பட்ட எந்தச் சங்கத்தினுடைய எந்தக் கடனாளரும், எதிரிடையான எந்த ஓர் உடன்படிக்கையிருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல், அவர் கடனாளராக இருக்கும்

சங்கத்திற்கு உட்பிரிவு 1-ல் குறிக்கப்பட்ட காலத்திற்குள் அனுப்பும் அறிவிப்பின் மூலம் தன்னுடைய பாக்கித்தொகையைத் திருப்பிக் கொடுக்கக் கேட்கலாம்.

(உ) பகுதி (டி)-ல் குறிக்கப்பட்ட காலத்திற்குள் தனது உரிமையைக் கோராத எந்த ஓர் உறுப்பினரும் அல்லது கடனாளரும் இணைப்பிற்கு இசைந்தவராகக் கருதப்படுவார்.

(ஊ) கட்டளையின் அறிவிப்பு எல்லாச் சங்கங்களின் எல்லா உறுப்பினர்களுக்கும் கடனாளர்களுக்கும் அனுப்பிய தேதியிலிருந்து ஒரு மாதம் கழிந்த பின்னர் பதிவாளர் 9 ஆம் பிரிவின் சரத்துக்கு உட்பட்டு, 8 ஆம் பிரிவில் எந்தச் சரத்து அடங்கியிருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல், இணைப்புச் சங்கத்தையும் அதனுடைய உப-விதிகளையும் பதிவு செய்யலாம். அப்படிப் பதிவு செய்தபோது மூல சங்கங்களின் பதிவு ரத்து செய்யப்பட்டதாகக் கருதப்படும்.

(எ) இணைப்புச் சங்கத்தின் பதிவு, அதன் வசம் மூல சங்கங்களின் எல்லா சொத்துப் பொறுப்புகளும் ஒப்படைக்கப்பட்டதற்குப் போதிய சான்றாகும். பதிவாளரால் நிருணயிக்கப்படும் காலத்திற்குள் இணைக்கப்பட்ட சங்கம் உறுப்பினர்களுடைய பங்கு மூலதனத்தையும் கடனாளர்களுடைய பாக்கித் தொகைகளையும் திருப்பிச் செலுத்தவேண்டும்.

5. பதிவு செய்யப்பட்ட சங்கங்களினிடையே சொத்துப் பொறுப்புகளை மாற்றுதல் (14ஆம் பிரிவு) (Transfer of assets and liabilites among Societies)

ஒரு சங்கத்தின் அளவைக் குறைப்பதற்கும், அல்லது புதிய சங்கத்தை நிறுவுவதற்கும், வகைப்படுத்த அதன் சொத்துப் பொறுப்புகளில் ஒரு பகுதியை மாற்றுவதற்கும், அல்லது அதன் அலுவல்களைக் கலைத்து அதை இன்னொரு சங்கத்துடன், பிரித்தல் அல்லது இணைத்தலுக்குச் சட்ட விதிமுறையை அனுசரிக்காமல், இணைந்து கொள்வதற்கும், சட்டத்தில் இன்னொரு சரத்தும்கூட இருக்கிறது. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 14ஆம் பிரிவுப்படி இந்தச் சரத்தில் விவரிக்கப்பட்ட விதிமுறை, சங்கங்களைப் பிரித்தல் அல்லது இணைத்தல் பற்றி விவரிக்கப்பட்ட விதிமுறை போன்று, ஏறக்குறைய ஒரேமாதிரியாக இருக்கிறது. அத்தகைய சொத்துப் பொறுப்பு மாற்றுதல் 15ஆம் பிரிவின், கீழ்க்கண்ட, நிபந்தனைகளின் பேரில் நிறைவேற்றப்படலாம்.

(1) எந்தச் சங்கங்களிடையே சொத்துப் பொறுப்புகள் மாற்றவேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டுள்ளதோ அந்தச் சங்கங்கள் தத்தம் உறுப்பினர்களுக்குத் 7 நாள்கள் தெளிவான

அறிவிப்புக் கொடுத்த பிறகு, ஒரு சிறப்புப் பேரவைக் கூட்டத்தைக் கூட்டி, அந்தக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் சொத்துப் பொறுப்புகளைத் தங்களிடையே முழுமையாகவும் அல்லது பகுதியாகவும் மாற்றிக் கொள்ள ஒவ்வொரு சங்கமும் பெரும்பான்மையான வாக்குகள் அளித்து நிறைவேற்றவேண்டும். இந்தத் தீர்மானம் முதல் நிலைத் தீர்மானம் என்று அழைக்கப்படும்.

(2) அந்தத் தீர்மானத்தின் ஒரு நகல் எல்லா உறுப்பினர்களுக்கும் கடனுளர்களுக்கும் அனுப்பப்பட வேண்டும்.

(3) உறுப்பினர்கள் சங்கத்திலிருந்து பங்கு மூலதனத்தைத் திருப்பிப் பெறவும், கடனுளர்கள் தங்களுக்குச் சேரவேண்டிய பாக்கியைத் திருப்பிப் பெறவும் விரும்பினுல் அவர்களுடைய கோரிக்கையைச் சங்கத்திற்குத் தெரிவிக்க அவர்களுக்கு ஒரு மாத காலவரை கொடுக்கப்பட வேண்டும்.

(4) இரண்டு மாதங்களுக்குப் பிறகு ஒவ்வொரு சங்கமும், முதல் தீர்மானத்தை ஆலோசிக்க உறுப்பினர்களுக்கு 15 நாள்கள் தெளிவான அறிவிப்பு கொடுத்தபிறகு, ஒரு பேரவைக் கூட்டம் கூட்டவேண்டும். இந்தக் கூட்டத்தில் அந்த முதல் நிலைத் தீர்மானம், முக்கியமான திருத்தங்களில்லாமல், கூட்டத்திற்கு வந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3-க்குக் குறையாத பெரும்பான்மையினரால் உறுதிப்படுத்தப்படவேண்டும்.

(5) சங்கத்திலிருந்து பங்கு மூலதனத்தைத் திரும்பப் பெற விரும்பும் உறுப்பினர்களுக்குப் பங்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுக்கவும், தங்களுக்குச் சேரவேண்டிய பாக்கித் தொகையைத் திருப்பிச் செலுத்தவும், ஏற்பாடு அந்தத் தீர்மானத்தில் இடம் பெறவேண்டும்.

(6) அத்தகைய தீர்மானத்தின் நகல் ஒன்று 99ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட முறைப்படி சான்றிடப்பட்டுச் சங்கங்களிடையே ஆட்சிப் பொறுப்புகளை மாற்றுவதற்காகப் பதிவாளருடைய அங்கீகாரத்திற்கு அவருக்கு அனுப்பப்படவேண்டும்.

(7) எல்லா நிபந்தனைகளும் பூர்த்தி செய்யப்பட்டுவிட்டன என்று பதிவாளர் திருப்தியடைந்தால் சங்கங்களால் அனுப்பப்பட்ட யோசனையைப் பதிவாளர் அங்கீகரிப்பார். பிறகு இந்த மாற்றுதல் திட்டம் சட்டப்படிச் செல்லுபடியாகும்.

(8) முதல் தீர்மானம் உறுதிப்படுத்தப்பட்டதும், அதைப் பதிவாளர் அங்கீகரித்ததும இந்தப் பிரிவின் கீழ் இவை சொததுப் பொறுப்புகள் தொடர்புடைய சங்கங்களின் வசம் மாற்றப்பட்டதற்குப் போதிய சான்ருகும். சங்கங்களிடையே சொத்துப் பொறுப்புகளை மாற்றுவதற்காகச் செய்யப்பட்டிருக்கும் இந்தச் சரத்துகள் அபூர்வமாகவே பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

# 7. உறுப்பினர் நிலை

## (Membership)

(பிரிவு எண் 17, 18, 19, 21, 22, 20, 23, 24 மற்றும் 25)

**1. யார் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராகலாம்? (Who can become a Member of a Co-operative Society)**

கீழ்க்கண்ட நபர்கள் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பின ராகலாம். (1) ஒப்பந்தம் செய்யத் தகுதியுள்ள ஒரு தனி நபர் (2) ஒரு கூட்டுறவுச் சங்கம் (3) மாநில அரசாங்கம் (தமிழக அரசு) (4) ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராவதற்குத் தகுதி பெற்றது என்று அரசாங்கத்தால் அறிவிக்கப்படும் எந்த ஒரு நிறுவனமும் ஆக, நான்கு வித உறுப்பினர்களிருக்கிறார்கள். 1) தனி நபர்கள் (2) கூட்டுறவுச் சங்கங்கள் (3) மாநில அரசாங்கம் அல்லது தமிழக அரசு (4) அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட நிறுவனங்கள். கடைசி வகை உறுப்பினரைப் பற்றி அரசாங்கம் கீழ்க்கண்ட நிறுவனங்களை ஸ்டோர்ஸ் சங்கங்கள் அல்லது விநியோகச் சங்கங்கள் என்று வகைப்படுத்தப் பட்ட சங்கங்களின் உறுப்பினர்களாவதற்குத் தகுதி பெற்றவை களாக அங்கீகரித்திருக்கிறார்கள்.

(அ) சமய நிலையங்கள் (ஆ) கல்வி நிலையங்கள் (இ) மருத்துவ நிலையங்கள் (ஈ) சமூகத் தொண்டு சங்கங்கள் (உ) சிற்றுண்டிச் சாலைகள் (ஊ) கூட்டுப் பங்குக்கம்பெனிகள் (Jt. Stock Companies) கூட்டாண்மை நிறுவனங்கள் (Partnership Firm), (எ) தன்னாட்சி ஆணையங்கள் (Local Bodies). மருத்துவ மனைகளும், சமய நிலையங் களும், கல்வி நிலையங்களும், தங்களுடன் இணைக்கப்பட்ட மாணவர் இல்லங்கள், ஆலயங்கள் முதலியவற்றிற்காகத் தேவைப்படும் உணவுப் பொருள்களையும், இதர பண்டங்களையும் மொத்தமாக வாங்குவதற்கு இந்த நிறுவனங்களை நுகர்வோர் கூட்டுறவுச்

சங்கங்களில் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ள அவசிய மேற்படும். தொழில் நிறுவனங்களாலும் அல்லது அரசாங்கப் போக்குவரத்துத் துறை போன்ற அமைப்புகளாலும் நடத்தப் படும் சிற்றுண்டிச் சாலைகள் அத்தகைய கொள்முதல் செய்யும் தன்னாட்சி ஆணையங்கள் சென்னை அடையாறிலுள்ள 'இந்திய மருத்துவர் மருந்து விற்பனைக் கூட்டுறவுச் சங்கத்தில்' (Indian Medical Practitioners Co-operative Pharmacy and Stores Limited) உறுப்பினர்களாக இருக்கின்றன. ஏனென்றால், தன்னாட்சி ஆணையங்கள் நடத்தும் மருத்துவமனைகளுக்கு இந்திய மருந்து விற்பனைக் கூட்டுறறவுச் சங்கத்தால் தயாரிக்கப்பட்ட மருந்துகளை மொத்தமாக வாங்கி விநியோகம் செய்யலாம். மேற்குறித்த யாவரும் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராவதற்குத் தகுதி பெற்றவர்கள் ஆவர் [பிரிவு 17 (1)]. பிரிவினை ஆகாத ஓர் இந்துக் கூட்டுக் குடும்பம் (ஓர் இந்து அவிபக்த குடும்பம்) (Hindu Joint Family) ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராக முடியாது. 17 (1)ஆம் பிரிவிற்கு விலக்குக் கூறு ஒரு பிரிவினை ஆகாத குடும்பம் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராவதைத் திட்டவட்ட மாகத் தடை செய்கிறது. வயதுக்கு வராதவர்களும் (Minors), சம மனநிலையில்லாதவர்களும் (Persons of unsoundmind), ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினர்களாகலாம். ஆனால், அவர்கள் தங்களுக்குத் தேவைப்படுகின்ற சேவைகளை வழங்கும் சிலவகைச் சங்கங்களில் மட்டும்தான் உறுப்பினர்களாகச் சேர்க்கப்பட்டுச் சங்கத்தில் அவர்களுடைய காப்புப் பொறுப்பாளர்கள் (Guardians) அவர்களுக்கும் பிரதிநிதிகளாக இருப்பார்கள். எனினும், வயது வராத உறுப்பினர்களுடைய உரிமைகளும், காப்புப் பொறுப்பாளர்களுடைய உரிமைகளும் வரையறுக்கப் பட்டிருக்கின்றன (17 (1)ஆம் பிரிவின் விலக்கக்கூறு].

தங்கள் காப்புப் பொறுப்பாளர்கள் மூலம் வரையறுக்கப்பட்ட உரிமைகளுடன், உரிமை வயது வராதவர்களும், சம மன நிலையில்லாதவர்களுமடங்கிய தனி நபர்களும் கூட்டுறவுச் சங்கங்களும், பால் வழங்கும் ஒன்றியங்கள், விற்பனைச் சங்கங்கள் மத்திய வங்கிகள், மாவட்ட வழங்குதல் விற்பனைச் சங்கங்கள், போன்ற சங்கங்களில் உறுப்பினர்களாவதற்கு யாதொரு எதிர்ப்பு மிருக்கமுடியாதென்றாலும், அரசாங்கம் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராகச் சேருவதற்கு ஏற்படுத்தப்பட்ட சரத்து, அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவினர் அறிக்கையின் பரிந்துரைகளையொட்டிக் கூட்டுறவுச் சங்கங்களில் அரசாங்கத்தின் ஈடுபாடு, கூட்டாளித்துவத்தின், விளைவாகச் செய்யப்பட்டிருக்கிறது. ஒரு சங்கத்தில் அரசாங்கம் நேரடியாகப்

பங்குகள் எடுப்பதற்கு 44ஆம் பிரிவு வகை செய்கிறது. சங்கங்களில் அரசாங்கம் கூட்டாளியாக இருப்பதற்குப் பிரிவு 45-ம், 46-ம் வகை செய்கின்றன.

கூட்டுப்பங்குக் கம்பெனிகளும், கூட்டாண்மை நிறுவனங்களும் கூட்டுறவு விநியோகச் சங்கங்களின் உறுப்பினர்களாகச் சேர்க்கப்பட தகுதிபெற்றிருப்பது விந்தையாக இருக்கிறது. அவற்றினுடைய உள்நோக்கம், குறிப்பாக, இலாபம் சம்பாதிக்க வேண்டுமென்பதாக இருக்கும்போதும், அவைகளுக்குச் சேவை மனப்பான்மையில்லாதிருக்கும்போதும் அவைகளைக் கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களாக ஏன் சேர்க்கவேண்டுமென்பது தெளிவுபடவில்லை. கூட்டுறவுச் சட்டக் குழுவினரும் அதே கருத்தைக் கொண்டவராகையால், மாதிரிக் கூட்டுறவு மசோதாவின் 16ஆம் பிரிவில் அவர்கள் ஒரு சங்கத்தில் உறுப்பினராவதை, ஒப்பந்தம் செய்யத் தகுதிபெற்ற தனி நபர்களுக்கும், இதர கூட்டுறவுச் சங்கங்களுக்கும், மாநில அரசாங்கத்திற்கும் மட்டும் கட்டுப்படுத்தியிருக்கிறார்கள். அவர்கள் கருத்துப்படி, கம்பெனிகளையும், கூட்டாண்மைகளையும், தொழில் நிறுவனங்களையும் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளக்கூடாது. சந்தானம் குழுவினரும், மேற்கூறிய நிறுவனங்களை, விநியோகக் கூட்டுறவுச் சங்கங்களாகிய கூட்டுறவு ஸ்டோர்ஸ் சங்கங்களில், ஊழியர்கள் கூட்டுறவு ஸ்டோர்ஸ் சங்கங்களில், மாணவர்கள் எழுதுபொருள் ஸ்டோர்ஸ் சங்கங்களில் கூட்டுறவுச் சிற்றுண்டிச்சாலைகளில், கூட்டுறவு உண்டிச் சாலைகளில், உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொண்டால், தனி நபர் உறுப்பினர்களின் நலன்கள், குறிப்பாகப் பற்றாக்குறைப் பொருள்கள் விற்பனை பெரிதும் பாதிக்கப்படும். ஆகையால், அந்தக் குழுவினர்கள் இந்த நிறுவனங்கள் மிகவும் அபூர்வமாக உறுப்பினர்களாகச் சேர்க்கப்படவேண்டுமென்றும், அதுவும் பொதுநலம் கருதி அவற்றைச் சேர்த்துக்கொள்வது உதவுமானால் சேர்த்துக்கொள்ளலாமென்றும் சிபாரிசு செய்தனர். அம்மாதிரி சேர்க்கப்பட்டாலும், தனி நபர் பிரதிநிதிகள் பெயரில் மட்டும் தான் அவை உறுப்பினர்களாகச் சேர்க்கப்படவேண்டும். கூட்டுப் பங்குக் கம்பெனிகள், கூட்டாண்மை நிறுவனங்கள் துணைஞர் உறுப்பினர்களாகத் தவிர முழு உறுப்பினர்களாகச் சேர்க்கப்படக் கூடாது.

உரிமை வயது வராத நபர்களும், சம மனநிலை இல்லாதவர்களும் தங்கள் காப்பாளர்கள் மூலம், விவசாய நாணயச் சங்கங்களிலும், உற்பத்திச் சங்கங்களிலும், கூட்டுப்பண்ணைச் சங்கங்களிலும்,

விற்பனைச் சங்கங்களிலும் விநியோகச் சங்கங்களிலும் உறுப்பினர்களாகச் சேருவதற்குத் தகுதி பெற்றவர்கள் (விதி 17). இந்த சங்கங்கள் எல்லா வகுப்பு மக்களுக்கும் மிகவும் இன்றியமையாதவையாகக் கருதப்படுகின்றன. உரிமை வயது வராதவர்களும், சித்த சுவாதினம் இல்லாதவர்களும்கூட இந்தச் சங்கங்களுடைய சேவைகளின் பயனை அடையவேண்டும். ஆகையால், அவர்களைக் காப்பாளர்கள் மூலம் உறுப்பினர்களாகச் சேர்க்கலாம். சங்கம் இவர்களுடன் செய்யும் லேவாதேவி, அவர்களுடைய காப்பாளர்கள் மூலம் மட்டும்தான் இருக்கும். எனினும், அவர்களுடைய நிலையின் காரணமாக, சில வரையறுக்கப்பட்ட உரிமைகளுடன் அவர்கள் உறுப்பினர்களாக இருக்கிறார்கள்.

உரிமை வயது வராதவர்கள், விநியோகச் சங்கத்தில் மட்டும், உப-விதிகளில் குறிக்கப்படும் கட்டணங்களைச் செலுத்தி 'துணைஞர்' உறுப்பினர்களாக நேரடியாகச் சேரலாம். 19ஆம் விதியின்படி, அத்தகைய துணைஞர் உறுப்பினர்கள் எந்தப் பங்கு மூலதனத்தையும் செலுத்தவேண்டியதில்லை. ஆனால், அவர்கள் உப-விதிகளில் உறுப்பினராவதற்கு நிருணயிக்கப்பட்ட கட்டணங்களை மட்டும் செலுத்தவேண்டும். நடைமுறையில் இந்த வகுப்பு உறுப்பினர்களுக்கு, மாணவர்கள் கூட்டுறவுச் சங்கங்களின் உப-விதிகளில் மட்டும்தான், ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இத்தகைய சங்கங்களின் முக்கிய நோக்கம், 18 வயதிற்குக் கீழ்ப்பட்டவர்களும், வயது வராதவர்களுமான மாணவர்களுக்குத் தேவைப்படும் நூல்களையும், எழுது பொருள்களையும், இதர பொருள்களையும், வழங்குவதாக இருக்கிறது. இந்த மாணவர்கள் ஒப்பந்தம் செய்வதற்குத் தகுதியற்றவர்களாக இருந்தாலும்கூட, அவர்களையும் கூட்டுறவுச் சங்கங்களில் சேர்த்துக் கொள்வது அவர்களுக்குக் கூட்டுறவு இலட்சியங்களையும், முறைகளையும் உணர்த்துவதற்குத்தான். மேற்சொன்ன வகை உறுப்பினர்கள் பேரவைக் கூட்டங்களில் வாக்களிப்பதற்கும், சங்கங்களின் நிருவாகத்தில் பங்கு எடுத்துக் கொள்ளவும் தகுதி இல்லாதவர்கள். ஆனால், அவர்கள் பேரவைக் கூட்டங்களுக்கு வந்து அங்கு விவாதத்தில் பங்கு எடுத்துக் கொள்ளலாம். ஆனால், வாக்களிப்பதற்கு அவர்களுக்கு உரிமை இல்லை. அவர்கள் செய்திருந்த கொள்முதலின் பேரில் மேலூதியம் (bonus) பெறுவதற்குத் தகுதி பெற்றவர்கள். உறுப்பினர்களுடைய பிற உரிமைகள் அவர்களுக்குக் கிடையாது.

விற்பனைச் சங்கங்களிலும், மத்திய வங்கிகளிலும், மாநில வங்கியிலும், தமிழ்நாடு நிலவள வங்கியிலும், உறுப்பினர்களாகத்

தனி நபர்கள் சட்டப்படிச் சேர்க்கப்படலாம் என்றாலும் தற்போதைய போக்கு இந்தக் கூட்டு நிறுவனங்களிலிருந்து அவர்களை விலக்கிக் கழிக்க வேண்டுமென்பதே. ஏனென்றால், சங்கங்கள் தங்கள் அலுவல்களைத் தாங்களே நிருவாகம் செய்வதற்கு முடியும் என்று கருதப்படுகிறது. கூட்டுறவு இயக்கத்தின் துவக்கக் காலத்தில் மக்களுடைய நம்பிக்கையை உண்டு பண்ணுவதற்கும், தேவையமான வகை வளங்களைத் திரட்டுவதற்கும், சங்கங்களை நடத்துவதற்கு வேண்டிய நிருவாகத் திறனையளிப்பதற்கும் தனி நபர்களுடைய உதவி தேவையாக இருந்தது. இயக்கம் தற்போது அடைந்துள்ள வளர்ச்சியில், சங்கங்கள் தாங்களே தங்கள் பிரதிநிதிகள் மூலம் கூட்டுறவு நிறுவனங்களின் நிருவாகத்திற்கு ஏற்பாடு செய்யமுடியும் என்று கருதப்படுகிறது.

அதேமாதிரி, வட்டித்தொழில் செய்பவர்கள், வியாபாரிகள் கைத்தறி நெசவாள முதலாளிகள் போன்ற சில தனி நபர்கள் கூட்டுறவுச் சங்கங்களில் உறுப்பினர்களாவதற்குச் சட்டபூர்வமான தடை ஒன்றும் இல்லை. ஆனால் நடைமுறை கவனிப்பின் பேரில் இந்த நபர்களின் நடவடிக்கையோ தொழிலோ அந்த வகைச் சங்கத்தின் நோக்கத்திற்கு முரண்பாடாகவும் அந்தச் சங்கத்தின் செயல்பாட்டைப் பாதிக்குமாறு இருந்தால் அத்தகைய தனி நபர்களைச் சிலவகைக் கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்வதற்குத் தடை செய்வது தேவையாகக் காணப்படுகிறது. வட்டித் தொழில் செய்பவர் ஒரு கடன் சங்கத்தில் உறுப்பினராகச் சேரத் தகுதியில்லாதவராகச் செய்யப்பட வேண்டும். ஒரு வியாபாரி ஒரு விற்பனை அல்லது நுகர்வோர் சங்கத்தின் உறுப்பினராகச் சேருவதற்குத் தகுதியில்லாதவராக்கப்பட வேண்டும். ஒரு கைத்தறி நெசவாளர் முதலாளி ஒரு கைத்தறி நெசவாளர் சங்கத்தில் உறுப்பினராகச் சேருவதற்குத் தகுதியற்றவராகச் செய்யப்பட வேண்டும். சந்தானம் குழுவினர் இதனை முக்கியமானதாகக் கருதி அத்தகைய நபர்கள் சில வகைச் சங்கங்களின் உறுப்பினர்களாக இருப்பதைத் தடுப்பதற்குச் சட்டத்தின் 18ஆம் பிரிவிற்கு, முன் அத்தியாயத்தில் திருத்தங்களைக் காட்டியபடி யோசனை கூறியிருக்கின்றனர்.

விற்பனைச் சங்கங்களைப் போன்ற சில சங்கங்களில் நடைமுறையில் துணைஞர் உறுப்பினர்களை அல்லது பெயரளவு உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்வது அவசியமாகக் காணப்படுகிறது. ஏனென்றால், வியாபாரிகள் அந்தச் சங்கங்களுடன் ஒரு வியாபார உறவு வைத்திருந்தால் அவர்களுக்கும் சங்கத்திற்குமிடையே எழுகின்ற ஏதாவது தகராறைத் தீர்ப்பதற்குச் சிவில்

நீதிமன்றங்களுக்குப் போகாமல் பதிவாளருடைய தீர்ப்புக்கு அனுப்பலாம். ஆனால், இத்தகைய உறுப்பினர்கள் சங்கங்களின் பேரவைக் கூட்டங்களில் பங்கெடுத்துக் கொள்வதற்கோ அல்லது வாக்களிப்பதற்கோ உரிமை இல்லாதவர்கள். ஒரு பிரதம நிலவள வங்கியில், ஓர் உறுப்பினரால் வங்கிக்கு அடைமானம் செய்யப்படும் சொத்தில் அக்கறையுள்ள ஒரு நபர் உறுப்பினரால் நிறைவேற்றப்படும் அடைமானப் பத்திரத்தில் கையெழுத்திட, ஒரு பெயரளவு உறுப்பினராகச் சேர்க்கப்படுகிறார். அவர் பெயருக்கு ஒரு பங்கு எடுத்துக்கொள்கிறார். ஆனால், பேரவைக் கூட்டங்களில் பங்கு எடுத்துக்கொள்ளவோ அல்லது வாக்களிக்கவோ அவருக்கு உரிமை கிடையாது. கடன் வாங்கவோ அல்லது பங்கு மூலதனத்தின் பேரில் இலாப ஈவு (Dividend) பெறவோ, அவருக்குத் தகுதியில்லை ஒரு நகர வங்கியில் நகைக் கடன்கள் வாங்குவதற்கு மட்டும் விரும்பும் தனிநபர்கள் ஒரு பெயரளவுப் பங்கு மட்டும் எடுத்துக்கொண்டு உறுப்பினர்களாகச் சேருகிறார்கள். அவர்களுக்கு உறுப்பினர்களுடைய இதர உரிமைகள் கிடையாது.

ஒரு கைத்தறி நெசவாளர் சங்கத்தில் வேலை செய்யும் சாயம் போடுகிறவர்கள் போன்ற தொழிலாளிகள் நாமினல் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படுகிறார்கள். அவர்களுக்கும் கூட்டங்களில் வாக்களிக்கவோ, அல்லது இலாப ஈவு, அல்லது மேலூதியம் பெறவோ உரிமை கிடையாது. கூட்டுறவுச் சட்டக் குழுவினர் கூடப் பெயரளவு அல்லது துணைஞர் உறுப்பினர்களாகத் தனி நபர்களைச் சேர்த்துக்கொள்வதற்குச் சட்டத்தில் சரத்துகள் செய்வது தேவையென்று கருதி, அவர்களுடைய மாதிரி மசோதாவின் 17ஆம் பிரிவில், வாக்களிப்பதற்கு உரிமையில்லாதவர்களும், சங்கத்தின் சொத்துப் பொறுப்புகளின் எந்தப் பாகத்திற்கும் உரிமையில்லாதவர்களுமான, நாமினல் உறுப்பினர்களைச் சங்கத்தில் சேர்த்துக் கொள்வதற்குச் சரத்து செய்திருக்கிறார்கள். அத்தகைய உறுப்பினர்கள், மாதிரி மசோதா, விதி அல்லது உப-விதிகளில் குறிக்கப்படும், தனிச் சலுகைகளையும், உரிமைகளையும் பெறுவதற்குத் தகுதியுள்ளவர்களாவர்.

சந்தானம் குழுவினர், கண்டிப்பானதும் பிரத்தியேகமானதும் குறிப்பானதுமான செயல்களுக்காகப் பிரதம சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படும் நபர்கள் 'துணைஞர் உறுப்பினர்' என்று அழைக்கப்பட்டு, சங்கத்தின் சொத்துப் பொறுப்புகளில் பங்கு கொள்ள உரிமையில்லாமலும், சங்கத்தின் நிருவாகத்தில் பங்கு எடுத்துக் கொள்ள உரிமையில்லாமலும் இருக்கவேண்டும்

என்றும் பரிந்துரை செய்தனர். துணைஞர் உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்வதற்காகச் சட்டத்தின் 17ஆம் பிரிவிற்கு அவர்கள் ஒரு புதிய பிரிவையும் அதாவது, 17 (அ) என்ற பிரிவை யோசனை கூறியிருக்கிறார்கள். மேலும், வேறுபட்ட உரிமைகளையும், தனிச் சலுகைகளையும், பொறுப்புகளையுமுடைய வேறுபட்ட உறுப்பினர் வகைகள் இருப்பது உண்மையான கூட்டுறவுக் கொள்கைகளுக்கு நியாயமானதோ அல்லது உடன்பாடுள்ளதோ அல்ல என்றும், ஒரு பிரதம சங்கத்தில் ஒரேவிதமான உறுப்பினர் வகை மட்டும்தான் இருக்கவேண்டுமென்றும், இதர சங்கங்களில் சில தனிப்பட்ட செயல்களுக்காகத் துணைஞர் உறுப்பினர்கள் மட்டும் இருக்கவேண்டும் என்றும், அவர்கள் கருதினார்கள். ஆகையால், அவர்கள் சட்டத்திற்குத் திருத்தம் செய்யவேண்டுமென்ற யோசனையைக் கூறியிருக்கிறார்கள்.

2. உறுப்பினராவதற்கு உரிய தகுதிகள் அல்லது யோக்கிய தாம்சங்கள்:—(Qualifications for Membership or eligibility for Membership).

சட்டத்தின் 17ஆம் பிரிவில், ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராகச் சேருவதற்கு ஒரு தனி நபர் பெற்றிருக்கவேண்டிய தகுதிகள் அடங்கியுள்ளன. ஒரு நபருக்கு இருக்கக்கூடாத தகுதியின்மைகள் சட்டத்தின் 18ஆம் பிரிவில் குறிக்கப்பட்டிருக்கின்றன. உறுப்பினராவதற்கு உரிய தகுதி பற்றிய முக்கிய நிபந்தனைகளாவன:

(1) விண்ணப்பதாரர் வயது வந்தவராக இருக்கவேண்டும். அதாவது அவர், மத்தியச் சட்டமாகிய இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் (Indian Contract Act) 11ஆம் பிரிவின்கீழ், ஒப்பந்தம் செய்யத் தகுதி உள்ளவராக இருக்கவேண்டும் அதாவது 18 வயதுக்கு மேற்பட்டவராக இருக்கவேண்டும். 1872ஆம் வருடத்திய இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் 11ஆம் விதியின்படி, எந்த ஒரு நபரும், அவர் குடிமகனாக இருக்கும் சட்டத்தின்படி, உரிமை வயது வந்தவராக இருந்தால், ஒப்பந்தம் செய்யத் தகுதி உள்ளவர். 1875ஆம் வருடத்திய இந்திய உரிமை வயது சட்டத்தின் 3ஆம் பிரிவின்படி, ஒரு நபர் 18 வயது நிரம்பிய பிறகுதான் உரிமை வயது அடைந்ததாகக் கருதப்படுவாரே தவிர அதற்கு முன்பு அல்ல.

(2) குடியிருப்புத் தகுதி நிருணயிக்கப்படாத சங்கங்களைத் தவிர, ஏனைய சங்கங்களில், அவர் சங்கத்தின் எல்லையில் வசிப்பவராக இருக்கவேண்டும். உதாரணமாக, ஒரு விவசாய நாணயச்

சங்கத்தைப் பொறுத்தவரை அவர் சங்கத்தின் எல்லையில் வசிப்பவ ராகவோ அல்லது அந்த எல்லையில் அசையாச்சொத்தை உடையவ ராகவோ இருக்கலாம்.

(3) அவர் சங்கத்தினுடைய சேவைகளைத் தேவையுள்ளவ ராகவோ அல்லது அதனுடைய நடவடிக்கையில் பங்கு எடுத்துக் கொள்ளத் தகுதி உள்ளவராகவோ இருக்கவேண்டும். இந்த நிபந்தனைகளை நிறைவேற்றிவிட்டபோது, சில விதச் சங்கங்களைப் பொறுத்தவரை, தகுதியுடையவராக இருப்பது ஒரு கட்டுப் படுத்தும் உரிமையாகி விடுகிறது. [பிரிவு 17 (2) (ய)]

உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளுதல் சங்கங்களுக்கு விதிக் கப்பட்டஓர் அதிகாரக் கட்டளையாகும். இந்தச் சங்கங்கள் யாவை என்பதை 18ஆம் விதியில் குறிக்கப்பட்டிருக்கின்றன. 18ஆம் விதியின்படி, அவை நாணயச் சங்கங்களும். விநியோகச் சங்கங் களும், விற்பனைச் சங்கங்களுமாவன. பிரிவு 17 (2) (அ)-ன் சரத்துப் படி, உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளுதல் சங்கங் களுக்கு விதிக்கப்பட்ட அதிகார கட்டளை இந்த சங்கங்கள் விவசாயி களிலும் நுகர்வோர்களிலும் பெரும்பாலாருக்குச், சில முக்கிய இன்றியமையாத சேவைகளைப் புரிகின்றவையாகக் கருதப்படு கின்றன. ஆகையால், இந்தச் சங்கங்களில் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்படுவது ஒரு தனி நபருக்குள்ள ஒருவித உரிமையாகும். இந்தச் சங்கங்களில் எல்லாத் தகுதி வாய்ந்த நபர் களையும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்வது, சங்கத்தின் நிருவாகக் குழுவின் சட்டபூர்வமான ஒரு கடமையாகும். இந்தச் சரத்தின் நோக்கம் இந்தச் சங்கங்களின் அங்கத்துவத்தை விரிவாக்கவும், உறுப்பினராகச் சேர்க்கப்படுவதை எளிதாக்கவும் தான். எனினும், அப்படிச் சேர்க்கப்பட்ட உறுப்பினர் எவராவது விரும்பத் தகாதவராகக் காணப்பட்டால் அவரைப் பதிவாள ருடைய அங்கீகாரம் பெற்று விலக்கலாம். [(17 (2) (அ) பிரிவின் விலக்குக் கூறு]. அம்மாதிரி விலக்கும் செய்தி பேரவைக்குப் போக வேண்டியதில்லை. ஒரு சங்கத்தின் நிருவாகக்குழு அத்தகைய நபரை உறுப்பினர் நிலையிலிருந்து விலக்குவதற்குத் தகுதி பெற்றிருக்கிறது. மேலும், பதிவாளரிடமிருந்து கட்டளையின் பேரிலும் அது இவ்வாறு செய்யலாம்.

இதர சங்கங்களில், உறுப்பினராகச் சேர்த்துக் கொள்வது நிருவாகக் குழுவின் விருப்பத்தேர்வுக்கு விடப்பட்டிருக்கிறது. உறுப்பினராகச் சேருவதை நிருவாகக் குழு மறுத்தால் அதற்கு உண்டான காரணங்கள் கூட்டத்தின் நிகழ்ச்சிக் குறிப்பில் பதிவு

செய்யப்பட்டு, உறுப்பினராகச் சேருவதை மறுத்து நிருவாகக்குழு செய்யும் முடிவை விண்ணப்பதாரருக்கு அவர் விண்ணப்பத்தேதியி லிருந்து இரண்டு மாத காலத்திற்குள் தெரியப்படுத்தவேண்டும். அப்படித் தெரியப்படுத்தத் தவறினால், நிருவாகக் குழு விண்ணப்ப தாரரை உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ள மறுத்து விட்டது என்று கருதப்படும். உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ள மறுக்கப் பட்டதைக் குறித்து ஒரு நபர் மேல்முறையீடு செய்ய உரிமை பெற்றவராவார் [பிரிவு 96(2) (அ)]. மறுக்கப்பட்ட தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் மேல்முறையீடு செய்யவேண்டும். நிருவாகக் குழுவின் முடிவு தெரிவிக்கப்படாத சூழ்நிலைகளில் விண்ணப்பதாரருக்கு அவரை உறுப்பினராகச் சேர்க்க நிருவாகக் குழு மறுத்துச் செய்த முடிவைத் தெரியப்படுத்துவதற்கான காலவரை கழிந்த தேதியிலிருந்து, மேல்முறையீடு செய்யவேண்டிய காலம் நிருணயிக்கப்படும். [பிரிவு 17 (2) (ஆ) க்குவிலக்குக் கூறு]. எனவே, உறுப்பினராகச் சேர்த்துக் கொள்வது அதிகாரக் கட்டளை யாகவும், உறுப்பினராகச் சேரத் தகுதியாக இருப்பது ஓர் உரிமை யாகவுமுள்ள, இரண்டு வகையான சங்கங்கள் இருக்கின்றன.

இதர வகைச் சங்கங்களில் உறுப்பினரைச் சேர்ப்பது நிருவாகக் குழுவின் விருப்பத்தேர்வுக்கு விடப்பட்டு, உறுப்பின ராகச் சேருவதற்கான தகுதி இயலச்செய்யும் ஒரு சரத்தாக மட்டும் இருக்கும். இந்த வேறுபாடு தேவையற்றதாகத் தோன்று கிறது. சந்தானம் குழுவினர் இதே கருத்தையே கொண்டிருந் தனர். அவர்கள், அரசாங்கம் ஓர் அரசிதழ் அறிவிப்பால் பொது நலக் காரணங்களுக்காக ஒரு குறிப்பிட்ட சங்கத்திற்குச் சம்பந்தப் படாது என்று அறிவித்தால் தவிர, உறுப்பினராக இருப்பதற்குத் தகுதி ஒரு கட்டுப்படுத்தும் உரிமையாக இருக்கவேண்டுமென்று கூறியிருக்கிறார்கள். எனினும், நடைமுறையில் சில வகைச் சங்கங்களில், அங்கத்துவத்தைக் கட்டாயமாகக் கட்டுப்படுத்த வேண்டியிருக்கிறது. ஏனென்றால், அந்தச் சங்கங்களுடைய வகை வளங்கள் வரையறுக்கப்பட்டனவாகவும் அல்லது அவை எல்லாருக்கும் பலன் கொடுக்கும்படி சேவை செய்யமுடியாமலும் இருக்கின்றன. உதாரணமாக, வீட்டு மனைகள் ஒதுக்குவதற்காக ஒரு நிலத்தை வாங்கும் ஒரு வீட்டு வசதிச் சங்கம் ஒதுக்கிப் பிரித்துக் கொடுப்பதற்கு எத்தனை வீட்டு மனைகள் இருக்கின் றனவோ அத்தனை உறுப்பினர்களை மட்டும்தான் சேர்த்துக் கொள்ளமுடியும்.

ஒரு சங்கத்தின் அளவு அதனுடைய நோக்கங்களாலும், வகை வளங்களாலும், சேவைகளின் பலன் கொடுக்கும் தன்மையாலும்,

வரையறுக்கப்பட்டிருக்கிறது. எனினும், இந்தப் பிரிவிலுள்ள சரத்து, சங்கத்தில் நபர்களை உறுப்பினர்களாக சேர்த்துக்கொள்வதில், ஒரு நிருணயமான முன்னேற்றமாகும். இன்னும், உள்ளூர்ப் பகைமை அல்லது போட்டியின் காரணத்தால் ஒரு சங்கத்தில் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்வதில் மறுத்தலோ அல்லது தாமதமோ ஏதாவது இருந்தால், விதிமுறையைச் சரிபடுத்தவேண்டும். முந்தைய அத்தியாயத்தில், அது எப்படிச் செய்யப்படவேண்டும் என்றும் சங்கங்களில் எவ்விதம் உறுப்பினர்களைச் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்றும் நாம் விளக்கியிருக்கிறோம்.

3. ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் உறுப்பினராக இருப்பதற்குத் தகுதியின்மைகள் (Disqualifications for Membership)

இவை 18 (1) ஆம் பிரிவில் நிருணயிக்கப்பபட்டிருக்கின்றன. அவைகளாவன:

(1) நொடிப்பு (Insolvency) அதாவது ஒரு நபர் நொடித்தவராக அறிவிக்கப்படவேண்டும் என்று விண்ணப்பம் செய்திருந்தாலும், அல்லது அவர் ஒரு விடுவிக்கப்படாத நொடித்தவராக இருந்தாலும்,

(2) ஒரு நபர் ஒழுக்கக்கேட்டின் காரணமாக ஒரு குற்றத்திற்குத் தண்டனை விதிக்கப்பட்டாலும் குறைந்த பட்சம் அந்தத் தண்டனைக் காலம் முடிவடைந்த தேதியிலிருந்து 5 வருடங்கள் கழியும்வரை அவர் ஓர் உறுப்பினராகச் சேர்க்கப்படமாட்டார்.

(3) ஒரு நபர் சங்கத்தின் ஊதியம் பெற்ற ஊழியராக இருந்தால், தான் வேலையிலிருக்கும் சங்கத்தின் உறுப்பினராக ஓர் ஊதியம்பெறும் ஊழியர் இருக்கமுடியாது. மேலும், அந்தச் சங்கத்திற்கு நிதி வழங்கும் வங்கியில் ஊழியராக இருந்தாலும் சங்கத்தின் உறுப்பினராக இருக்கமுடியாது. சங்கமே ஒரு நிதி வழங்கும் வங்கியாக இருந்தால், அவர் அந்த வங்கி நிதி வழங்கும் எந்தச் சங்கத்திலாவது ஓர் ஊதியம்பெற்ற ஊழியராக இருந்தாலும் சங்கத்தின் உறுப்பினராக இருக்கமுடியாது. சங்கமே ஒரு நிதி வழங்கும் வங்கியாக இருந்தால், அவர் அந்த வங்கி நிதி வழங்கும் எந்தச் சங்கத்திலாவது ஓர் ஊதியம் பெற்ற ஊழியராக இருந்தாலும், அந்த வங்கியில் உறுப்பினராக இருக்கத் தகுதியற்றவர்.

(4) சட்டத்தின் 20ஆம் பிரிவின் கீழ் ஒரு சங்கத்தின் உறுப்பினர் பதவியிலிருந்து விலக்கப்பட்ட ஒரு நபராயிருந்தால்

அத்தகைய நபர், அவர் விலக்கப்பட்ட தேதியிலிருந்து ஓர் ஆண்டு முடிவடைந்த பின்னரே ஒரு சங்கத்தின் உறுப்பினராகச் சேர்க்கப் பட முடியும்.

பிரிவு 18 (2)-ன் கீழ், மேற்சொன்ன தகுதியின்மைகள் ஒரு சங்கத்தில் ஓர் உறுப்பினர் தொடர்ந்திருப்பதற்கும் செயல்படும். ஏனென்றால், 18 (2)ஆம் பிரிவின்படி ஒரு நபர் இந்தத் தகுதி யின்மைகளையடைந்த தருணமே உறுப்பினர் பதவியிலிருந்து நிறுத்தப்பட்டவராவார்.

இத்தத் தகுதியின்மைகளில் ஒன்று, ஒழுக்கக்கேடான நடவடிக்கையில் எந்தக் குற்றத்திற்காகவும் தண்டனை விதிக்கப் பட்ட ஒரு நபர் உறுப்பினராக இருப்பதற்குத் தடை 'ஒழுக்கக் கேடு' (Moral Turpitude) என்ற சொல் கூட்டுறவுச் சட்டத்திலோ அல்லது வேறு எந்தச் சட்டத்திலோ விளக்கப்படவில்லை. அலகாபாத் உயர்நீதி மன்றத்திலும், சென்னை உயர்நீதி மன்றத் திலும், அண்மையில் ரிட் மனுக்களில் செய்த தீர்ப்புகளில் இது முக்கியச் செய்தியாக இருந்தாலும், இந்தச் சொல் விளக்கப்பட வில்லை. 1963ஆம் வருடத்திய ரிட் மனுவின் எண். 910 சென்னை உயர்நீதி மன்றத்தின் 9-10-63ஆம் தேதிய தீர்ப்பில், குற்றமுள்ள உணர்வு ஈடுபட்டுள்ள பயங்கரமான எந்த ஒரு கிரிமினல் குற்றமும், அது குற்றத்தைப்பற்றிய (Crime) சட்டங்களின் மகத்துவத்தை மீறுவதால், அதில் ஒழுக்கப்பிழை ஓர் அம்சமாக இன்றியமையாததாக அடங்கியுள்ளது. 1961ஆம் வருடத்திய ரிட் எண் 24 (24)-ல், அலகாபாத் உயர்நீதி மன்றத்தின் 17-4-62 தேதிய தீர்ப்பில், ஒரு குற்றத்தில் ஒழுக்கப்பிழை உள்ளடங்கி யிருக்கிறதா அல்லது இல்லையா என்பதைத் தீர்மானிப்பதற்குக் கீழ்க்கண்ட சோதனைகளைச் சாதாரணமாகச் செய்யவேண்டும் என்று கூறியிருக்கிறார்கள்.

(1) ஒரு தண்டனைக்குக் காரணமாக இருந்த செயலானது பொதுவாக சமுதாயத்தின் ஒழுக்க மனசாட்சிக்கு அதிர்ச்சி உண்டுபண்ணக்கூடியதாக இருந்ததா?

(2) செயலுக்குக் காரணமாக இருந்த எண்ணம் இழிவான தான ஒன்றா?

(3) அந்தச் செயல் புரிந்த காரணத்தால், செயல் புரிந்தவரை ஒரு கெட்ட குணத்தையுடையவர் அல்லது சமுதாயத்தால் அவமதிக்கப்பட்ட ஒரு நபர் என்று கருதலாமா? தண்டனை, ஒழுக்கப்பிழை பொதிந்த ஒரு குற்றத்தைச் செய்ததற்காக,

விதிக்கப்பட்டதா என்பதை முடிவு செய்வதற்கு இந்தக் குறிப்பிட்ட செய்திகளைக்கவனத்தில் வைக்கவேண்டும். எனினும், இந்தத் தகுதியின்மை, தனிப்பட்ட முறையில் குற்றவாளிகளுக்கும் அல்லது குற்றம் செய்தவர்களுக்கும் சீர்திருத்துவதற்காக 18 (3) பிரிவின்கீழ் நிறுவப்பட்ட சங்கங்களுக்குப் பிரயோகிக்கக் கூடாது.

கள்ளர் ஜாதியினரைச் சீர்திருத்துவதற்காக முன்பு சங்கங்கள் நிறுவப்பட்டன. அத்தகைய சங்கங்களின் ஒரே நோக்கம் கள்ளர்களை அவர்களுடைய பழக்க வழக்கங்களிலிருந்தும் ஒழுக்கப் பிழை பொதிந்த நடவடிக்கையிலிருந்தும் மீட்பதாகும். பிரிவு 18 (1) (ஆ)-ல் குறிக்கப்பட்டுள்ள தகுதியின்மை அத்தகைய சங்கங்களின் உறுப்பினர்களுக்குப் பிரயோகிக்கப்பட மாட்டாது. 26ஆம் விதியின்கீழ், 18 (3) பிரிவின் செயலுக்காகக் கூறப்படும் நபர்கள் வகை அட்டவணையிலிருந்து நீக்கப்பட்ட வகுப்பினர்களைச் சேர்ந்தவர்களாவர் (Denotified Tribes) அரசாங்கத்தால் அவ்வப்போது அட்டவணையில் சேர்க்கப்பட்ட வகுப்பினர் அரசாங்கத்தால் வழங்கப்படும் படிப்பு உதவிப் பணத்திற்குத் தகுதியுள்ளவர்களாவர்.

சங்கத்தின் ஊழியர்கள் மீது விதிக்கப்பட்ட தகுதியின்மைகளைக் குறித்து 111ஆம் பிரிவின்கீழ், அரசாங்கம் 18 (1) பிரிவின் (அ) பகுதியிலுள்ள சரத்திலிருந்து எல்லாக் கூட்டுறவு மத்திய வங்கிகளுக்கும் விதி விலக்கு அளித்து, மத்திய வங்கிகளின் ஊழியர்கள், கூட்டுறவுச் சங்கங்களின் ஊழியர்களின் நலத்திற்காகத் தனியாக நிறுவப்பட்ட சங்கத்தின் உறுப்பினர்களாக இருப்பதற்கு, இது உதவுகிறது. ஆனால் கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டுதான் ஊழியர்கள் அந்தச் சங்கத்தில் உறுப்பினராகலாம்.

(1) மத்திய வங்கிகளின் ஊழியர்கள், ஊழியர்கள் சங்கத்தில் உறுப்பினர்களாக இருந்தால் தொடர்புடைய மத்திய வங்கியின் நிருவாகத்தில் எந்தப் பதவிக்கும் அவர்கள் தேர்தலில் நிற்கக் கூடாது.

(2) அத்தகைய ஊழியர்கள் சங்கங்களுடைய கடன் மனுக்கள் அத்தகைய ஊழியர்கள் சங்கங்களின் மீது அதிகாரம் செலுத்தும் பதிவாளரின் மூலம்தான் மத்திய வங்கிக்கு அனுப்பப்பட வேண்டும்.

மத்திய வங்கிகளின் ஊழியர்களை அவர்கள் நலத்திற்காகத் தனியாக நிறுவப்பட்ட [கூட்டுறவுச் சங்கங்களில், அல்லது

பொதுவாக மத்திய வங்கியால் நிதி வழங்கப்பட்ட சங்கங்களின் ஊழியர்கள் நலத்திற்காகத் தனியாக அமைக்கப்பட்ட சங்கங்களில் உறுப்பினர்களாவதற்கு வசதி செய்யும் நோக்கத்துடன் அரசாங்கம் இந்த விதி விலக்கையளிக்கிறது. இந்தத் தகுதியின்மை, முன்னுள் இராணுவத்தினர்க்காக நிறுவப்பட்ட சங்கங்களைப் போலத் தங்கள் உறுப்பினர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுப்பதற்கு மட்டும் நிறுவப்பட்ட சங்கங்களுக்குக் கூட பிரயோகிக்கப்படாது. மோட்டார்ப் போக்குவரத்துச் சங்கம் தொழிற்சாலைகள் முதலியன போன்று, முன்னுள் இராணுவத்தினர் மறுவாழ்க்கை வசதிக்காகச் சங்கங்கள் நிறுவப்பட்டன. இந்தச் சங்கங்களில் முன்னுள் இராணுவத்தினர் ஊழியர்களாகயிருக்கிறார்கள். இத்தகையச் சங்கங்களின் தலையாய நோக்கம் தங்கள் உறுப்பினர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுப்பதாக இருப்பதால், 18 (1) ஆம் பிரிவின் (எ) பகுதியில் குறிக்கப்பட்டுள்ள தகுதியின்மை அத்தகைய சங்கங்களில் வேலை செய்யும் நபர்களுக்குப் பிரயோகிக்கப்படமாட்டாது. மேற்சொன்ன தகுதியின்மைகள் பட்டியலுக்குச் சந்தானம் குழுவினர் கீழ்க்கண்டவைகளைச் சேர்த்திருக்கிறார்கள்.

(1) இந்த அத்தியாயத்தில் முன்னரே கூறியபடியும் முன்பே கூறப்பட்ட காரணங்களுக்காகவும், ஒரு சங்கத்தின் தொழிலைப் போன்ற ஒரு தொழிலில் ஈடுபட்டிருக்கும் ஒரு நபர்.

(2) ஒரே வகுப்பு சங்கங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட சங்கத்தில் எவரும் உறுப்பினராக இருக்கக்கூடாது. சாதாரணமாக ஒரு சங்கத்தின் விவகார எல்லையில் வசிக்கும் நபர் மட்டுமே தான் அந்தச் சங்கத்தின் ஓர் உறுப்பினராக இருக்கத் தகுதி பெற வேண்டும் என்றும் இதனை உப-விதிகளுக்கு விட்டுவிடாமல் விதிகளிலேயே விதிக்கப்பட வேண்டும் என்றும் அவர்கள் கருதினர். ஒரே சங்க வகுப்பிலுள்ள ஒரு சங்கத்தின் உறுப்பினராக ஒரு நபர் முன்னமேயிருந்தால், அவரை இன்னொரு சங்கத்தின் உறுப்பினராவதற்கு, விதிகளில் நிருணயிக்கப்பட்டால் தகுதியற்றவராவதற்கு, 18ஆம் பிரிவிற்கு ஒரு திருத்தத்தைக்கூட அவர்கள் யோசனை கூறியிருக்கிறார்கள்.

(3) ஒரு விவசாய நாணயச் சங்கத்தின் உறுப்பினர் தன் உறுப்பினர் பதவியைத் திரும்பப் பெற்றுக் கொண்டால் அவர் அவ்வாறு திரும்பப் பெற்றுக்கொண்ட தேதியிலிருந்து 2 ஆண்டிற்குப் பிறகு மட்டும்தான் மறுபடியும் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்படலாம். விவசாய நாணயச் சங்கங்களில் உறுப்பினர்கள் தங்களுடைய பாக்கித் தொகைக்காக அவர்

களுடைய பாக்கித் தொகைக்காக அவர்களுடைய பங்கு மூலதனத்தை முழுவதும் அல்லது ஒரு பாகத்தை ஈடு செய்வதற்கு விண்ணப்பம் செய்வது ஒரு பொதுவான அம்சமாக இருப்பதை யொட்டி இந்தப் பிரேரேபனை செய்யப்பட்டது. இந்த வழக்கம் நன்மை பயக்கக் கூடியதல்ல. மூலதனத்தில் ஏற்படும் ஒரு குறைவு சங்கம் மத்திய வங்கியிலிருந்து கடன் வாங்கும் சக்திக்காக அத்துடன் இருக்கும் ஆதாரத்தைக் குறைக்கிறது. மேலும், ஒவ்வொரு சமயமும் ஈடுசெய்து மறுபடியும் கடனுக்காக விண்ணப்பம் செய்யும்போது புதிய பங்கு மூலதனம் முதலீடு செய்வது தேவையற்ற கணக்கை ஏராளமாகப் பதிவு செய்வதற்கு அது வழி கொடுக்கிறது.

தற்சமயம் ஒரு நபர் தன்னுடைய பங்கு மூலதனத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்வதற்கு, உப-விதிகளில் குறிப்பிட்ட ஒரு காலவரை அதாவது மூன்று அல்லது ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு தன்னுடைய உறுப்பினர் பதவியை ராஜினமா செய்யலாம் என்று இருக்கும்போது, அவர் அதற்குப் பிறகு உடனே மீண்டும் உறுப்பினராக ஏற்றுக் கொள்ளப்படலாம். அத்தகைய இராஜினமாவும் பங்கு மூலதனத்தைத் திரும்பப் பெறுவதும் அடிக்கடி நடைபெறுவதைத் தடை செய்யச் சந்தானம் குழுவினர், உறுப்பினர் பதவியிலிருந்து விலகிக் கொண்ட ஓர் உறுப்பினர் அவர் விலகிய தேதிக்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு மட்டும்தான் மீண்டும் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும் என்று பரிந்துரை செய்திருக்கின்றனர். ஓர் உறுப்பினரை வெளியேற்றுவதில் இனிமேல் காலவரையை 3 ஆண்டுகளுக்கு அதிகப்படுத்தவேண்டும். இந்தத் தடைகள் எல்லா வகைச் சங்கங்களுக்கும் விதிக்கப்படவேண்டும் என்ற கருத்தைக் கொண்டு அவர்களுடைய பரிந்துரைகளை அமல் படுத்துவதற்குச் சட்டத்தின் 18ஆம் பிரிவிற்குத் திருத்தங்களை யோசனை கூறியிருக்கிறர்கள்.

மேலும், 25ஆம் விதியின்கீழ், ஒரு நபர் பதிவாளருடைய அனுமதி பெற்றுல் தவிர ஒன்றுக்கு மேற்பட்ட ஒரு நாணயச் சங்கம் அல்லது வீட்டு வசதிச் சங்கத்தில் உறுப்பினராக இருக்கக் கூடாது. வீட்டு அடைமான வங்கிகள் நிலவள வங்கிகள், நிதி வழங்கும் வங்கிகள் நீங்கலாக, ஒரு நபர் ஏதாவது ஒரு நாணயச் சங்கம் அல்லது வீட்டு வசதிச் சங்கத்தில் இந்த விதிக்கு முரண் பட்டு ஓர் உறுப்பினரானல், அத்தகைய சங்கம் அவரை விலக்கி விடவேண்டும் என்று பதிவாளரிடமிருந்து வந்த ஓர் எழுத்து மூலமான வேண்டுகோளின் பேரில் அத்தகைய உறுப்பினரை

விலக்கலாம். ஆகையால், இந்த விதி ஒரு நபர், ஒன்றுக்கு மேற்பட்ட நாணயச் சங்கம் அல்லது வீட்டு வசதிச் சங்கத்தில் உறுப்பினராக இருப்பதைத் தடை செய்கிறது. இந்தச் சரத்து, நபர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட இடத்திலிருந்து கடன் வாங்குவதோ அல்லது பல்வேறுபட்ட வழிகளில் வீடுகள் வாங்குவதோ இயலாமற்செய்யும் நோக்கத்துடன், ஏற்படுத்தப் பட்டது. சந்தானம் குழுவினர் இன்னும் மேல்சென்று இத்தகைய தடை எல்லா வகைச் சங்கங்களிலுமுள்ள ஒரே சங்க வகைக்கு விதிக்கப்படவேண்டும். என்று யோசனை கூறியிருக்கின்றனர். ஒரு நபர், விதிகளில் ஏற்பாடு செய்திருக்கும் வண்ணம் தவிர, ஒரே சங்க வகையில் ஒன்றுக்கு மேற்பட்ட சங்கத்தில் உறுப்பினராக இருக்கக்கூடாது. 17ஆம் பிரிவில் குறிக்கப்பட்ட தகுதிகளும், 18ஆம் பிரிவிலடங்கியிருக்கும் தகுதியின்மைகளும், கூட்டுறவுச் சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேரவிரும்பும் எல்லா நபர்களுக்கும் பொருந்தும். இவைகள் 8 (1) பிரிவின்கீழ் ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பத்தில் சேரும் நபர்களுக்குக்கூடப் பொருந்தும். ஏனென்றால், பிரிவு 2–ன் பகுதி (6)-ன் கீழ், உறுப்பினர் என்றால் ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பத்தில் சேரும் நபர் என்றும், பதிவு செய்த பிறகு உறுப்பினராகச் சேர்க்கப்பட்ட நபர் என்றும் பொருள்படும். ஆகையால், பதிவு செய்த பிறகு சேர்க்கப்படும் உறுப்பினர்களுக்கு விதிக்கப்படவேண்டிய தகுதிகளும் தகுதியின்மைகளும் சங்கத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பத்தில் கோரும் நபர்களுக்கும்கூடப் பொருந்தும்.

4. ஓர் உறுப்பினர் எப்பொழுது உறுப்பினர் உரிமைகளைக் கையாளலாம்? (When can a member exercise the right of membership ?)

தான் சங்கத்திற்குக் கொடுக்கவேண்டிய தேவையான பணத்தைச் செலுத்தும்வரை, அல்லது விதிகளிலும், சங்க உப-விதிகளிலும் நிருணயித்தவண்ணம், சங்கத்தில் உறுப்பினர் நிலையை அடைகிறவரை, ஒரு நபர் உறுப்பினருக்குள்ள உரிமைகளைக் கையாள முடியாது. பிரிவு 17 (3) பொதுவாக ஓர் உறுப்பினரால் பங்கு மூலதனம் நுழைவு கட்டணமும் செலுத்தியது அவர் உறுப்பினர் என்பதற்குச் சான்று. ஒவ்வொரு சங்கமும் வைக்க வேண்டிய ஏடுகளில் ஒன்றாகிய சேர்க்கைப் பதிவேட்டில் (Admission Book) அவர் கையொப்பம் செய்கிறார் (13ஆம் விதி). இந்தப் புத்தகம், உறுப்பினர் ஒவ்வொருவருடைய பெயரையும், முகவரியையும், உறுப்பினரான தேதியையும், அவர் எடுத்துக் கொண்ட பங்குகள் எண்ணிக்கையையும், அந்தப் பங்குகளுக்காக

அவர் செலுத்திய தொகையையும் காண்பிக்கிறது. ஒரு சங்கத்தில் ஒரு நபர் உறுப்பினராக இருப்பதற்கு இவைகளே பொதுவாக முடிவான சான்று (Conclusive evidence) ஆகும்.

1932ஆம் வருடத்தியச் சட்டத்தில் மாநில அரசாங்கத்தைப் போலஇந்திய அரசாங்கமும் ஒரு சங்கத்தின் ஓர் உறுப்பினராவதற்கு எந்தவித சரத்தும் இல்லை. சந்தானம் குழுவினர், இரயில்வே ஊழியர்களுக்காக நிறுவப்படும் சங்கத்தின் பங்கு மூலதனத்தில் பங்கு பெறுவதற்கு வகை செய்ய இந்திய அரசாங்கத்தை உறுப்பினராகச் சேர்த்துக் கொள்வதற்குச் சரத்து ஒன்று செய்வது தேவையென்று கருதி இந்திய அரசாங்கத்தைக்கூட ஒரு சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்வதற்காகப் பிரிவு 17 (அ)–க்கு ஒரு திருத்தத்தையும் யோசனை கூறியிருக்கின்றனர்.

5. உறுப்பினர்களின் உரிமைகள் (பிரிவு 19) (Rights of Members)

உறுப்பினர்களுடைய உரிமைகளும் பொறுப்புகளும் சட்டத்தின் பல்வேறு பிரிவுகளிலும் சட்டத்தின்கீழ் அமைக்கப் பட்ட விதிகளில் விரிவாக்கப்பட்டிருக்கின்றன. இந்த அத்தியாயத்தில், உறுப்பினர்களுடைய உரிமைகளைப்பற்றிக் காண்போம்

(i) முதல் முதலாக ஓர் உறுப்பினர், சங்கத்தின் உப–விதிகளின் கீழ் சங்கத்தால் உறுப்பினர்களுக்குச் செய்யப்படும் சேவைகளைப் பெறுவதற்கு உரிமையுள்ளவராவார். அத்தகைய சேவைகளை ஓர் உறுப்பினர் கோரினுல் சங்கத்தின் நிருவாகக் குழுவினர் அவருக்குச் சேவை செய்யக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஒரு நபரை உறுப்பினராகச் சேர்த்துக்கொண்டு சங்கத்தில் கிடைக்கும் சேவைகளை அவருக்கு மறுப்பதனுல் ஒருவிதப் பயனும் இல்லை. அவர் உறுப்பினரானது வீணுனதாகும். உறுப்பினருக்குத் தொடர்ந்தும், பலன் உள்ளதுமான, சேவையைச் சங்கம் செய்வதை உறுதிப்படுத்தவேண்டும். சங்கத்தின் அங்கத்துவத்தை அனைவருக்குமானதாகச் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தப்படும் இத் தருணத்தில், ஓர் உறுப்பினர் சங்க உப–விதிகளின்கீழ் சங்கத்தின் சேவைகளைப் பெறுவதற்கு அவருக்குண்டான உரிமை மறுக்கப்படாமலிருப்பதை உறுதி செய்வது தேவையானதாகும். ஆகையால், சட்டத்தின் 19ஆம் பிரிவில் ஏற்படுத்தப்பட்ட சரத்து, ஓர் உறுப்பினர், அவர் விண்ணப்பம் செய்தால் அவருக்குச் சங்கம் புரியும் சேவைகளை ஆற்றுவதை நிருவாகக் குழுவின் கடமையாகச் செய்திருக்கிறது. பிரிவு 19 (2)–ன்கீழ், ஒரு நபருக்கு அத்தகைய சேவை, காரணம்

இல்லாமலும் அல்லது வேற்றுமை அடிப்படையிலும், மறுக்கப் பட்டால் அவர் பதிவாளருக்குத் தன் குறையைத் தீர்ப்பதற்கு ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளலாம். அத்தகைய விண்ணப்பம் அவருக்குச் சங்கத்தின் சேவையை மறுத்து நிருவாகக் குழு செய்யும் முடிவின் அறிவிப்பு கிடைத்த தேதியிலிருந்து ஒரு மாத காலத்திற்குள், அல்லது அத்தகைய அறிவிப்பு வரவில்லை யென்றால் அவர் சங்கத்திற்குச் செய்த விண்ணப்பத்தின் தேதியி லிருந்து இரண்டு மாத காலத்திற்குள், செய்யப்படவேண்டும் [பிரிவு 19 (2) & (3)].

சேவை மறுக்கப்பட்டது, காரணமில்லாமலும், தவறாகவும், அல்லது வேற்றுமை அடிப்படையிலும் செய்யப்பட்டது என்று பதிவாளர் திருப்தியடைந்தால், அவர் நிருவாகக் குழுவிற்கு இச் செய்தியைப்பற்றிய தன் விளக்கத்தைக் கூறுவதற்கு ஒரு வாய்ப்பு அளித்த பிறகு, அத்தகைய சேவையை விண்ணப்பதாரருக்குச் செய்யவேண்டுமென்று நிருவாகக் குழுவிற்குக் கட்டளையிடலாம் [பிரிவு 19 (4)]. இம்மாதிரி பதிவாளரால் செய்யப்படும் கட்டளை ஒரு சட்ட பூர்வமான உத்தரவாகும். இந்த உத்தரவை நிருவாகக் குழு நிறைவேற்றத் தவறுவது சட்டத்தின் 101ஆம் பிரிவின் கீழ் ஒரு குற்றமாகும். நிருவாகக் குழுவால் பதிவாளருடைய கட்டளையின்பேரில் ஓர் உறுப்பினருக்குச் செய்யப்படும் சேவை உறுப்பினருக்கு நிருவாகக் குழு பதிவாளருடைய கட்டளை யில்லாமலே இயல்பாகச் செய்யப்படும் சேவைக்குச் சரிசம மாக, எல்லா சட்டச் செயல்களுக்காகவும் பாவிக்கப்படும். அகில இந்தியக் கிராமக்கடன் விசாரணைக் குழுவின் அறிக்கையின் சிபாரிசுகளைப் பின்பற்றி உறுப்பினர்களுக்குச் சட்டத்தால் அளிக்கப்பட்டிருக்கும் மதிப்பு வாய்ந்த சிறப்பு உரிமைகளில் இதுவும் ஒன்றாகும். ஒரு கூட்டுறவுச் சங்கம் மக்களாட்சி நிறுவன மாகும். எல்லாச் உறுப்பினர்களுக்கும், சமமான உரிமைகளும் சலுகைகளும் உண்டு. ஆனால், உண்மையான நடைமுறையில் பார்க்கும்போது, உறுப்பினர்களாக நபர்கள் சேர்க்கப்பட்டு ஏதாவது ஒரு சில காரணத்திற்காக நேர்முகப் பகைமையாலும் அல்லது அரசியல் அல்லது சமுதாயப் பகைமையாலும் சில உறுப்பினர்களுக்குச் சங்கத்தால் செய்யப்படும் சேவைகள் மறுக்கப்படுகின்றன.

(i) சட்டம் ஒரு சங்கம் இயல்பாகப் புரியும் சேவைகளைப் பெற உறுப்பினர்களுக்குச் சட்டபூர்வமான உரிமையைக் கொடுக்கிறது. இதர உரிமைகளாவன :

(ii) ஓர் உறுப்பினர் சங்கத்தின் பேரவைக் கூட்டத்திற்கு ஆஜராகலாம் (பிரிவு 26). மேலும், அத்தகைய கூட்டங்களில் அவர் வாக்களிக்கலாம் (பிரிவு 21).

(iii) அவர் சங்கத்தின் நிருவாகக் குழுவைத் தேர்ந்தெடுப்பதற்கு உரிமையுள்ளவர் [பிரிவு 27 (1)].

(iv) அவர் மற்ற உறுப்பினர்களுடன் சேர்ந்து, உப-விதிகளில் நிருணயித்தபடி ஒரு பேரவைக் கூட்டம் கூட்ட வேண்டுமென்று நிருவாகக் குழுவை வற்புறுத்தலாம்; அதாவது வேண்டுகோள் தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குள் கூட்ட வேண்டுமென்று வற்புறுத்தலாம் [பிரிவு 26 (3)].

(v) அவர் தன் சேமிப்புப் பணத்தைச் சங்கத்தில் சேமித்து வைக்க உரிமையுள்ளவர் (பிரிவு 59). அத்தகைய உறுப்பினருடைய வைப்புத் தொகைகளின்பேரில் கொடுக்கப்படும் வட்டி, பொதுவாக, உறுப்பினர் அல்லாதவர்களிடமிருந்து பெறும் வைப்புத் தொகைகளின் மேல் கொடுக்கப்படும் வட்டி விகிதத்தைவிடச் சிறிதளவு அதிகமாக இருக்கும்.

(vi) அவருடைய பங்குத்தொகையும் அல்லது சங்கத்தின் மூலதனத்திலுள்ள அவருடைய பங்கும் அல்லது 63ஆம் பிரிவின் கீழ் நிறுவப்பட்ட வருங்காலச் சேமிப்பு நிதியில் (Provident Fund) சங்கத்தில் ஓர் ஊழியர் போட்டு வைக்கும் தொகையும், எந்த ஒரு தீர்ப்பாணை அல்லது நீதிமன்ற உத்தரவின்கீழ் ஜப்தி அல்லது விற்பனையிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கின்றன (பிரிவு 36).

(vii) அவர் தன் பங்குத்தொகையை அல்லது சங்க மூலதனத்தில் தனக்குள்ள பங்கைச் சில நிபந்தனைகளுக்குட்பட்டு மாற்றலாம் (பிரிவு 23).

(viii) அவர் பங்குத் தொகை அல்லது சங்க மூலதனத்திலுள்ள தன் பங்கு தன் மரணத்திற்குப் பிறகு மாற்றப்படுவதற்கு ஒரு நபரை நியமிக்கலாம் [பிரிவு 24 (1)]. அப்படி நியமிக்கப்பட்ட ஒரு நபருக்குத் தன்னுடைய சொந்த இயக்கத்தினாலோ அல்லது அந்த நபரால் கோரப்பட்டாலோ, சங்கம் அந்தப் பணத்தைக் கொடுக்கலாம் [பிரிவு 24 (2)]. ஒரு சங்கம் அத்தகைய நபருக்கு, இறந்துபோன உறுப்பினருக்குத் தான் கொடுக்கவேண்டிய பாக்கியான எல்லா இதரப் பணங்களையும், கொடுத்து விடலாம் [பிரிவு 24 (3)].

(ix) ஓர் உறுப்பினர் மரணம் அடைந்தவுடன், அவருடைய பங்கு மூலதனம், அவர் எந்தவிதமான நியமனமும் செய்யா

விட்டாலும்கூட, மிகவும் திருப்திகரமான முறையில் முடிவு கட்டப்படுகிறது. இறந்துபோன உறுப்பினருடைய பங்குத் தொகை அல்லது சங்க மூலதனத்தில் அவருக்குள்ள பங்கு, நிருவாகக் குழுவிற்குத் தோன்றும் அவருடைய வாரிசு அல்லது சட்டப்படி உரிமையுள்ள ஒரு நபருக்குச், சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு, மாற்றப்படும் பிரிவு [24 (1)]. இறந்துபோன உறுப்பினருடைய வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி அவருடைய பணத்தைச் செலுத்தும்படிக் கோரினுல், அவருடைய பங்குத் தொகையும் அல்லது சங்க மூலதனத்திலுள்ள பங்கும் அவருக்குச் செலுத்தப்படும் [பிரிவு 24 (2)].

(x) பங்குத் தொகையின் மேல் இலாப ஈவு (dividend) அல்லது மேலூதியம் போன்றவைகளைச் சங்க இலாபத்திலிருந்து சங்கம் விநியோகித்தால், அதைப் பெறுவதற்கு அவர் உரிமையுள்ளவர் (பிரிவு 61-ம், 62-ம்).

(xi) அவர், இலாபப் பிரிவு, அல்லது மேலூதியத் (bonus) தொகைகளின் பேரில் கட்டவேண்டிய வருமான வரியிலிருந்து, விதி விலக்கு அளிக்கப்படுகிறுர் (பிரிவு 61-ம், 62-ம்).

(xii) சங்கத்துடன் அவருடைய லேவாதேவியைப் பொறுத்த வரைக்கும், அவர் சங்கத்தின் அலுவலகத்தில் அலுவல் நேரங்களில் எப்போதாவது சங்கத்தின் புத்தகங்களை ஆய்வு செய்யலாம் (பிரிவு 22).

ஓர் உறுப்பினர் இதர உறுப்பினருடைய வைப்புத் தொகையை அல்லது கடன் கணக்குகளை ஆய்வு செய்வதற்கு உரிமை கோர முடியாது. ஏனென்முல், அத்தகைய உரிமை சுயநல உள் நோக்கத்தால் வீணுகப் பயன்படுத்துவதற்கும் உறுப்பினருடைய தற்பெருமையைக் கொண்டாடுவதற்கும் வாய்ப்பு தரக்கூடும். ஆனுல், பெரும்பாலும் கிராமச் சங்கங்களுக்கு அலுவலகம் கிடையாது. அலுவல் நேரங்களும் இல்லை. ஆகையினுல், அலுவல் நேரம் என்பதை எல்லா நியாயமான நேரங்களிலும் என்று எடுத்துக் கொள்ளவேண்டும். ஓர் உறுப்பினர் கணக்குகளைத் தானே ஆய்வு செய்யலாம், அல்லது தனக்காக ஆய்வு செய்வதற்கு ஒரு நபருக்கு எழுத்து மூலம் அதிகாரம் கொடுக்கலாம். எப்படியிருந்தாலும் உப-விதிகளிலும் 27 ஆம் விதியிலும் நிருணயிக்கப்படும் தேவையான கட்டணங்களை அவர் செலுத்தவேண்டும். இந்தக் கட்டணம், ஆய்வு செய்யப்படும் கணக்குகள் பற்றிய ஏதாவது ஒரு கூட்டுறவு ஆண்டிற்கு ரூ. 5/- ஆகவும் கூடுதலான ஒவ்வொரு கூட்டுறவு ஆண்டிற்கும் ரூ. 3/-

ஆகவும் அத்தகைய ஆய்வு ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் உறுப்பினருக்கும் கட்டணம் ரூ. 25/–ஆக விதிக்கப்பட்டிருக்கிறது.

(xiii) உப-விதிகளின் ஒரு நகலை இலவசமாகவோ அல்லது கட்டணம் செலுத்தியோ பெறுவதற்கு ஓர் உறுப்பினருக்கு உரிமையுண்டு. மேலும், ஆண்டு அறிக்கை ஏதாவது இருந்தால் அதன் நகல் ஒன்றையும் வரவு-செலவு, இலாப நட்டம், சொத்துப் பொறுப்பு விவரப் பட்டியல்களையும் கூட, இலவசமாகப் பெறுவதற்கு அவருக்கு உரிமையுண்டு.

(xiv) உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் 1/3–க்குக் குறையாத எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் உடன் சேர்ந்து சட்டத்தின் 65 (1) பிரிவின் கீழ் ஒரு விசாரணையை நடத்தும்படிப் பதிவாளரை விண்ணப்பத்துக் கொள்ள ஓர் உறுப்பினருக்கு உரிமையுண்டு.

(xv) உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் 3/4–க்குக் குறையாதவர்களுடன் சேர்ந்து சங்கத்தின் அலுவல்களைக் கலைப்பதற்காக விண்ணப்பம் செய்வதற்கு ஓர் உறுப்பினருக்கு உரிமையுண்டு [பிரிவு 85 (1)].

(xvi) பிரிவு 7–ன் கீழ், உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்வதைப் பற்றிக் கொடுக்கப்படும் எந்த முடிவையும் எதிர்த்து அவர் மேல்முறையீடு செய்யலாம். அதாவது ஒரு நபர் விவசாயியா அல்லது இல்லையா, அவர் ஒரு சங்கத்தின் எல்லையில் வசிப்பவரா அல்லது சொந்த அசையாச் சொத்துகளையுடையவரா அல்லது அவர் சங்கத்தில் உறுப்பினராகச் சேரும் செயலுக்காக எந்த ஒரு குறிப்பிட்ட வகுப்பையோ அல்லது தொழிலையோ சேர்ந்தவரா என்ற பிரச்சினைகளில் செய்யப்படும் முடிவைக் குறித்து அவர் மேல்முறையீடு செய்யலாம் [பிரிவு 96 (2 அ) ].

(xvii) பிரிவு 28–ன் உட்பிரிவு (6)–ன் கீழ், ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவின் உறுப்பினர் நிருவாகக் குழுவிலிருப்பதற்குத் தகுதியற்றிருக்கிறாரா என்பதில் எடுக்கப்படும் எந்த முடிவையும் எதிர்த்து ஓர் உறுப்பினர் மேல்முறையீடு செய்யலாம்.

(xviii) ஓர் உறுப்பினருக்கு இதர உறுப்பினருடன் அல்லது சங்கத்துடன் அல்லது அதன் நிருவாகக் குழுவுடன் அல்லது சங்கத்தின் எந்த ஓர் அலுவலர், பிரதிநிதி அல்லது ஊழியருடன் ஏதாவது தகராறு இருந்தால் பிரிவு 73 (1)–ன் கீழ் அவர் பதிவாளருக்கு மத்தியஸ்த நடவடிக்கை விண்ணப்பம் கொடுத்

சிவில் நீதி மன்றத்திற்குப் போகாமல், பதிவாளரே தகராரைத் தீர்த்து வைக்கும்படிக் கேட்டுக் கொள்ளலாம், எனினும் அத்தகைய தகராறுகள் நிருவாகக் குழு அமைத்தலைப்பற்றி அல்லது சங்கத்தின் நிருவாகம் அல்லது தொழிலைப் பற்றிய செய்திகளைக் குறித்தே இருக்கவேண்டும் [பிரிவு 73 (1)].

(xix) உறுப்பினர்கள் மொத்த எண்ணிக்கையில் 3/4-க்கு குறையாதவர்களுடன் சேர்ந்து ஒரு சங்கத்தின் அலுவல்களை முடிவுகட்ட விண்ணப்பம் செய்ய ஓர் உறுப்பினருக்கு உரிமை உண்டு [பிரிவு 85 (1)].

(xx) இறுதியாக ஓர் உறுப்பினருக்குப் பெரும்பான்மை உறுப்பினர்கள் செய்யும் முடிவை ஏற்றுக்கொள்ள விருப்பமில்லை என்ற காரணத்திற்காகவோ அல்லது வேறு எந்த காரணத்திற்காகவோ, சங்கத்திலிருந்து விலகிச் செல்வதற்கு உரிமையுண்டு. எனினும், சங்கத்திலிருந்து ஒரு நபர் தன் பங்கு மூலதனத்தைத் திரும்பப் பெறுவதற்கு, ஒரு காலவரை, சங்க உப-விதிகளில் நிருணயிக்கப் பட்டிருக்கிறது. பொதுவாக, மூன்றிலிருந்து ஐந்து வருடமாக இந்தக் காலவரை நிருணயிக்கப்பட்டிருக்கிறது. ஒரு நபர் சங்கத்தில் உறுப்பினராகச் சேரத்தான் வேண்டும் என்ற கட்டாயம் சட்டத்தில் எங்கேயும் இல்லை என்ற மெய்ம்மையின் காரணத்தால் உறுப்பினர் பதவியை திரும்பப் பெற்றுக் கொள்ளும் உரிமை அவருக்கு இருக்கிறது. ஆகையால், அவர் நினைத்தால் சங்கத்திலிருந்து தாராளமாகத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். ஒரு வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தில், இது ஒரு மிகவும் முக்கியமான உரிமையாகும். ஏனென்றால், சங்கம் ஏற்கும் ஏதாவது புதிய பொறுப்புகள் அவருக்கு ஏற்றுக் கொள்ள முடியாததாக இருக்கும்போது, அவர் மீது அவை சுமத்தப்படுவதற்கு முன்னர், சங்கத்திலிருந்து உறுப்பினர் பதவியை திரும்பப் பெற்றுக் கொள்வதற்கு இந்த உரிமை வழி செய்கிறது.

உறுப்பினர்கள் திரும்பப் பெற்றுக் கொள்வதற்கும் திரும்பப் பெற்ற உறுப்பினர்களுக்கு ஏதாவது பணத்தைச் செலுத்த வேண்டியதற்கும் ஏற்பாடு செய்ய 119(2) (சி)-ன் கீழ் விதிகளைச் செய்வதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு. உப-விதிகள் எந்தப் பொருளைப் பற்றி விவரிக்கவேண்டும் என்று நிருணயிக்கும் 4 ஆம் விதி, பகுதி (ஜே), உப-விதிகளில் ஒருவர் உறுப்பினர் பதவியைத் திரும்பப் பெற்றுக் கொள்ள எந்தச் சூழ்நிலைகளில் அனுமதிக்கப்படலாம் என்பதைப் பற்றிக் கூறுகிறது. சந்தானம் குழுவினர் ஒரு நபர் உறுப்பினராகச் சேர்ந்த தேதியிலிருந்து குறைந்தது 5 வருட காலம்வரை உறுப்பினராக இருக்கவேண்டு

மென்றும், ஓர் உறுப்பினர் சங்கத்திலிருந்து விலகுவதற்கு அனுமதிப்பதற்கு முன்பு அவர் 6 மாதகால அறிவிப்பு கொடுக்க வேண்டுமென்றும் சிபாரிசு செய்துள்ளனர். திரும்பப் பெற்ற தேதிக்கு இரண்டு வருடங்களுக்குப் பிறகு மட்டும் தான் திரும்பப் பெற்ற ஒரு நபர் மீண்டும் உறுப்பினராகச் சேரக்கூடும் என்றும் கூட அவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார்கள். திரும்பப் பெற ஒரு நபருக்கு இருக்கும் உரிமை கூட்டுறவுச் சங்கத்திற்குண்டான ஒரு தனித் தன்மையாகும். அதனுடைய முக்கியத்துவம் உறுப்பின-ருடைய பொறுப்புகளைப் பொறுத்து மாறுபடும்.

வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தில், ஓர் உறுப்பினர், சங்கம் அவர் மறுத்துரைக்கும் ஏதாவது ஒரு புதிய பொறுப்பை மேற்கொள்வதற்கு முன்னர், அவர் சங்கத்திலிருந்து திரும்பப் பெற முடியும். ஏனென்றால், அவர் உறுப்பினர் பதவியிலிருந்து விலகிய காலத்திலிருந்த சங்கத்தின் கடன்களுக்கு மட்டுமே அவர் பொறுப்பாளியாவார் [பிரிவு 25 (1)]. ஆகையால், சந்தானம் குழுவினர் பரிந்துரை செய்துள்ளபடி, 6 மாத அறிவிப்பு கொடுத்த பின்னர் அவர் விலகுவதை அனுமதிப்பது அவ்வளவு உபயோகமுள்ளதாக இல்லை. விலகுவதற்கு ஓர் உறுப்பினருக்குண்டான உரிமை, நிருவாகத்தில் கவனமின்மையையும், துடுக்கையும் அடக்குகிறது. அதே சமயத்தில் உறுப்பினர்கள் ஒரே மொத்தமாகச் சங்கத்திலிருந்து விலகுவதைத் தடுப்பதற்கும் முன்னேற்பாடு எடுக்கப்பட வேண்டும். ஏனென்றால், அவ்வாறு விலகுவது சங்கத்தினுடைய கடன்களுக்குப் போதிய ஆதாரமில்லாமலும் அல்லது சங்கத்திற்குப் போதிய மூலதனமில்லாமலும் செய்து விடும். இந்த முன்னேற்பாடு சங்கத்தின் உப-விதிகளில் விவரிக்கப்பட்டிருக்கிறது. உதாரணமாக, ஒரு விவசாய நாணயச் சங்கத்தில், உறுப்பினரின் பங்குகளை ஒருசில காலத்திற்கு முன்பு அதாவது மூன்றிலிருந்து ஐந்து வருடங்களுக்கு முன்பு திரும்பப் பெறவோ அல்லது திருப்பிச் செலுத்தவோ கூடாது. ஒரு நகர வங்கியில், கூடுதலான தடையும் விதிக்கப்பட்டிருக்கிறது. அதாவது ஒரு வருடத்தில் உறுப்பினர்கள் விலகுவதால் திருப்பிக் கொடுக்கப்படும் பங்கு மூலதனம், அந்த வருடத்திற்கு முந்தைய கூட்டுறவு ஆண்டின் கடைசி நாளிலிருந்த மொத்தப் பங்கு மூலதனத்தில் 10 சதவிகிதத்திற்கும் மேற்படக்கூடாது.

உறுப்பினர்களின் வாக்களிப்பு உரிமைகள் (Voting rights of Members) : உறுப்பினர்களின் வாக்களிப்பு உரிமைகள் 'ஒரு மனிதர்-ஒரு வாக்கு' (One Man-One vote) என்ற

கொள்கையையும், 21ஆம் பிரிவிலடங்கியிருக்கும் மாற்றுள் (Proxy) வாக்களிப்பதைத் தடை செய்யும் கொள்கையையும், உண்மையாகவே உறுதிப்படுத்தி, அந்தக் கொள்கைகளைப் பாதுகாக்கின்றன. 'ஓர் உறுப்பினர்-ஒரு வாக்கு' என்ற கொள்கை கூட்டுறவின் முக்கியக் கொள்கைகளில் ஒன்றாகப் பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. மேலும், மக்களாட்சிமுறை நிறுவனமாக இருக்கும் ஒரு கூட்டுறவுச் சங்கத்தில், ஒவ்வோர் உறுப்பினரும் சங்கத்தின் அலுவல்களில் சொந்த அக்கறையெடுக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றனர். அத்தகைய அக்கறையை ஒரு மாற்றுள் (Proxy) வாக்களிப்பதை அனுமதித்தால் எதிர்பார்க்கமுடியாது. கூட்டுறவுப் பேராசிரியர் உயர்திரு. உல்ப்பு (Wolff) என்பவர் 'பங்குகளின் மதிப்பு எதுவாயிருந்தாலும், அது ஒரு வங்கியில் உறுப்பினர்களின் வாக்களிப்பு அதிகாரத்தைத் தீர்மானிக்கக் கூடாது. வங்கி கூட்டுறவுத் தன்மையுடையதாக இருக்க வேண்டும். அப்படி என்றால் சங்கம் முதலாளிகளுடைய நிறுவனமாக இல்லாமல் தனி நபருடைய நிறுவனமாக இருக்க வேண்டும். ஒவ்வோர் உறுப்பினருடைய பங்கு மூலதனம் எதுவாயிருந்தாலும் உறுப்பினர்களுக்குள் வாக்களிப்பு அதிகாரம் சமமாக இருக்கவேண்டும்' என்று கூறியிருக்கிறார். வாக்களிப்பு உரிமை எந்த ஓர் உண்மையான கூட்டுறவுச் சங்கத்திலும் முக்கியமான அம்சமாகும். அது ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் அடிப்படையான ஒரு கொள்கையுமாகும். கூட்டுறவுச் சட்டக் குழுவினர், தாங்கள் தயாரித்த மாதிரி கூட்டுறவு மசோதாவின் 19-20 பிரிவில், ஒவ்வோர் உறுப்பினரும் ஒரு வாக்கு மட்டும் தான் பெற்றிருக்கவேண்டும் என்றும், பதிலாக இருப்பவர்கள் வாக்களிப்பதை அனுமதிக்கக்கூடாது என்றும் தெளிவாக நிருணயித்திருக்கிறார்கள். 21ஆம் பிரிவில், உறுப்பினர்களின் வாக்களிப்பு உரிமைகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளாவன :

(i) ஒவ்வோர் உறுப்பினருக்கும், ஒரு வாக்குதான் என்று சொல்வதற்கும், ஒரு வாக்குக்கு மேல் எந்த உறுப்பினரும் பெற்றிருக்கக்கூடாது என்று சொல்வதற்கும், பெருமளவு வேறுபாடு இருக்கிறது. முதல் கூற்றின் படி, ஒவ்வோர் உறுப்பினருக்கும் ஒரு வாக்கு உண்டு. இரண்டாவது கூற்றின்படி, வாக்களிப்பு அதிகாரம் பெற்றவர்கள் ஒரு வாக்கின் மூலம் தான் தங்கள் அதிகாரத்தைச் செலுத்தலாம். ஆகையால், 'துணைஞர்' அல்லது பெயரளவு உறுப்பினர்கள் போன்ற சில உறுப்பினர்களுக்கு வாக்குரிமையை மறுப்பதற்கு இந்தப் பிரிவு இடம்

கொடுக்கிறது. சில சூழ்நிலைகளில், தேர்தல் போன்ற சில செயல்களிலும் வாக்குரிமை மறுப்பதற்கும் இந்தப் பிரிவு இடம் தருகிறது; உதாரணமாக, ஒரு நபர் தவணை தவறிய பாக்கிதாரராக இருந்தால் (defaulter), இதைப்பற்றிப் பின்னர் விவரிக்கப்படும். உட்பிரிவு (1)-ன் விலக்குக் கூற்றின் (Proviso) பகுதி (1) (அ), ஒரு சங்கம், எந்த ஒரு குறிப்பிட்ட செயலிலும், ஓர் உறுப்பினரின் வாக்களிப்பு உரிமையைக் கட்டுப்படுத்த உப-விதிகளில் ஏற்பாடு செய்ய அனுமதிக்கிறது. சங்கத்தின் அலுவல்களில் எந்த உறுப்பினரும் ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கைப் பெற்றிருக்கக்கூடாது [பிரிவு 21 (அ)]. இந்த மாநிலத்தில் கூட்டுறவு நூற்பாலைகள் இந்தப் பிரிவின் சரத்திலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு கூட்டுறவு நூற்பாலையின் பேரவைக் கூட்டங்களில் அரசாங்கப் பிரதிநிதியும், இணைக்கப்பட்ட ஒவ்வொரு சங்கமும், அரசாங்கம் அல்லது அந்தச் சங்கம் எடுத்திருக்கும் ஒவ்வொரு பங்கிற்கும் ஒரு வாக்கு பெறுவதற்கு இந்த விதிவிலக்கு உதவுகிறது (17-12-63 தேதிய அரசாங்க உத்தரவு).

(ii) ஒரு சங்கத்தின் பேரவைக்கு அல்லது ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுக் கூட்டத்திற்குக் கொண்டு வரப்படும் எல்லாப் பிரச்சினைகளும் அந்தக் கூட்டத்தில் வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் பெரும்பான்மையரால் முடிவு செய்யப்பட வேண்டும். ஒரு தேர்தலில் வாக்குகள் சமமாக இருக்கும் பட்சத்தில் சீட்டுக் குலுக்கி முடிவு செய்யப்படவேண்டும். [விதி 21 (1) (அ)]. இதர முக்கியமான நேரங்களில் வாக்குகள் சமமாக இருந்தால் எப்படி முடிவு செய்ய வேண்டும் என்பது தெளிவு படுத்தப்படவில்லை. உதாரணமாக, ஒரு சங்கத்தின் தலைமை அலுவலகத்தை அமர்த்துவது, ஒரு சங்கம் தன் கடனை எந்த நிறுவனத்திலிருந்து வாங்குவது, அல்லது ஒரு சங்கம் எவ்வாறு நிதி திரட்டுவது, போன்ற முக்கியமான பொருள்களில் வாக்குகள் சமமாக இருந்தால், எப்படி முடிவு செய்வது என்பது தெளிவில்லாமல் இருக்கிறது. அத்தகைய செய்திகளில் தேர்தல்களில் எதிர்பார்க்கப்படும் போட்டி இருக்காது என்பதும், சுமுகமாக அத்தகைய பொருள்கள் தலைவருடைய திறமையினாலும் மற்றவர்களுடைய திறமையினாலும் முடிவு செய்யப்படும் என்பதும்தான் கருத்து என்று தெரிகிறது. மேலும், அத்தகைய பொருள்கள் பின்னர் இன்னொரு கூட்டத்தில் ஆலோசிப்பதற்கு வைத்துக் கொள்ளப்படும். வாக்குகள் சமமாயிருக்கும் சூழ்நிலையில் கூட்டத்தின் தலைவருக்கு அறுதி வாக்கு (Casting Vote) 1932ஆம் வருடத்திய சட்டத்தின் 16ஆம் பிரிவு கொடுத்திருக்கிறது.

1961ஆம் வருடத்திய சட்டம், தேர்தல்களில் தவிர, இந்த ஏற்பாட்டை எடுத்துவிட்டது. முக்கியமான முடிவுகள் பெரும்பான்மையரால் எடுக்கப்பட வேண்டுவதும், அவைக் கூட்டத்தின் தலைவரின் முடிவு வாக்கினால் அவை எந்தச் சமயத்திலும் எடுக்கப்படாமலிருப்பதும் தேவையாகும். இல்லா விடில், ஒரு பலமான அலுவலர் தன்னுடைய சொந்த பலத்தில் நிருவாகத்தை நடத்துவார். எனினும், உப-விதிகளில் குறிக்கப் பட்ட குறிப்பான பொருள்களில் உறுப்பினருடைய வாக்களிப்பு உரிமைகளைக்கட்டுப்படுத்தச் சங்கத்திற்கு அதிகாரம் உண்டு [பிரிவு 21(1)(அ)]-ன் விலக்குக் கூறு. ஒரு நிருவாக உறுப்பினர், தான் நேரடியாக அக்கறை கொண்ட எந்தச் செயலிலும் பங்கெடுத்துக் கொள்ளக் கூடாது என்றும், வாக்களிக்கக் கூடாது என்றும் ஒரு சரத்து சங்க உப-விதிகளில் அடங்கியிருக்கிறது. உதாரணமாக, ஒரு நிருவாகக்குழு உறுப்பினருக்குக் கடன் ஒப்பு அளித்தல் (sanction), பேரவைக் கூட்டங்களில் ஓர் உறுப்பினரின் நடத்தை பற்றிய யோசனை (proposition), ஒரு நபரை உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கப்படுவது தொடர்பான பிரச்சினை, விவாதத்தின் போது அந்த உறுப்பினர் அந்த விவாதத்தில் பங்கெடுத்துக் கொள்ளவோ, வாக்களிக்கவோ கூடாது. மேலும், உறுப்பினர்களுடைய வாக்கு அளிப்பு உரிமையைக் கட்டுப்படுத்த சங்கங்கள் உப-விதிகளில் சரத்து செய்திருக்கின்றன. ஒரு கூட்டத்தின் தேதிக்கு 30 நாள் களுக்கு முன்பு, ஓர் உறுப்பினர், தான் கொடுக்கவேண்டிய எந்தக் கடன்களுக்காவது உப-விதிகளில் குறிக்கப்பட்ட காலத்திற்கு அல்லது மூன்று மாதங்களுக்கு மேற்பட்ட காலத்திற்குத் தவணை தவறிய பாக்கிதாரராக இருந்தால், அவர் தேர்தல் நடத்தப்படும் அக் கூட்டத்தில் வாக்கு அளிக்கக்கூடாது. உதாரணமாக, ஒரு கூட்டுறவு நுகர்வோர் சங்கத்தில் அந்தச் சங்கத்திலிருந்து ஒரு சில குறிப்பிட்ட தொகைக்கு முந்தைய ஆண்டில் பொருள்களை வாங்கி யிருக்கும் உறுப்பினர்கள் மட்டும்தான் ஒரு பேரவைக் கூட்டத்தில் வாக்களிக்க உரிமை பெற்றவர்கள் என்றும், உப-விதிகளில் குறிப் பிட்ட தொகைக்கு அந்தச் சங்கத்திலிருந்து பொருள்கள் வாங்கிய வர்கள் மட்டும்தான் தேர்தலில் நிருவாக இயக்குநர் பதவிக்கு வேட்பாளராக நிற்பதற்கு உரிமை பெற்றவர் என்றும் சங்கம் ஏற்பாடு செய்யலாம். ஆக, ஓர் உறுப்பினருடைய வாக்களிப்பு உரிமை சங்க உப-விதிகளில் கட்டுப்படுத்தப்பட்டிருக்கின்றது.

(iii) அரசாங்கம் அல்லது நிதி வழங்கும் வங்கி ஒரு சங்கத்தின் உறுப்பினராக இருந்தால், அச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு அரசாங்கம் அல்லது நிதி வழங்கும் வங்கியால், சூழ்நிலைகளுக் கேற்ப, நியமனம் செய்யப்பட்ட ஒரு நபர் ஒரு வாக்கு மட்டும்

தான் பெற்றிருப்பார். இது ஓர் உறுப்பினர் ஒரு தனி நபராகவோ அல்லது ஒரு நிறுவனமாகவோ இருந்தாலும் ஓர் உறுப்பினருடைய பங்கு மூலதனம் எவ்வளவாக இருந்தாலும், அவருக்கு ஒரு வாக்கு மட்டும்தான் உண்டு என்ற கொள்கையை ஏற்றுக்கொள்வதாகும்.

(iv) ஒரு பெயரளவு அல்லது துணைஞர் உறுப்பினருக்கு வாக்குரிமை கிடையாது. இவ்வித உறுப்பினர்கள், நாம் முன்னரே கூறியபடி, தனிப்பட்ட செயல்களுக்காகவும், அவர்களுக்கும், சில சூழ்நிலைகளில், கூட்டுறவு நிறுவனத்தின் நற்பலன்களை நல்கவும், சேர்க்கப்படுகின்றனர். ஆகையால், சங்கத்தின் அலுவல்களின் நிருவாகத்தில் ஓர் அபிப்பிராயம் கொடுக்க அவர்களுக்கு அதிகாரமளிக்கும் வாக்களிப்புரிமையை வழங்கத் தேவையில்லை.

(v) வயது வராமலும், அல்லது சுவாதீன புத்தியில்லாமலுமுள்ள உறுப்பினர்களுக்கு வாக்களிப்புரிமையில்லை. இந்த நபர்கள் தங்களுடைய காப்பாளர்கள் மூலம் உறுப்பினர்களாகிறார்கள். சங்கத்தின் நன்மைகளையடைவதற்கும், சங்கங்கள் தங்கள் உறுப்பினர்களுக்காகச் செய்யும் சில சேவைகளைப் பெறுவதற்கும், அவர்கள் சேர்க்கப்படுகிறார்கள். ஆனால், அவர்களுடைய உரிமைகள் கட்டுப்படுத்தப்பட்டனவாக இருக்கின்றன. சந்தானம் குழுவினர், இவ்வித உறுப்பினர்கள்கூட தங்கள் காப்பாளர்கள் மூலம் ஓர் உறுப்பினருடைய எல்லா உரிமைகளையும் பெற்று நிருவாகக் குழுவின் உறுப்பினராவதற்கும் அல்லது பதவி வகிப்பதற்கும் உரிமையைத் தவிர, எல்லாக் கட்டுப்பாடுகளுக்கும் பொறுப்புள்ளவர்களாகக்கூட இருக்கவேண்டுமென்று கருதினர்.

(vi) 20ஆம் விதியின்கீழ் ஓர் உறுப்பினர், ஏதாவது தேர்தலுக்காகக் கூட்டப்படும் கூட்டத்தில், அத்தகைய கூட்டத்தின் தேதிக்கு 30 நாள்களுக்கு முன்னால், அவர் வாங்கியிருக்கும் எந்தக் கடனைக் குறித்தும் உப-விதிகளில் குறிக்கப்பட்ட காலத்திற்கு அல்லது எப்படியிருந்தாலும் மூன்று மாதங்களுக்கு மேற்பட்ட ஒரு காலத்திற்குத் தவணை தவறியிருந்தாலும், அல்லது 91ஆம் பிரிவின்கீழ், அவருக்கு எதிராக எந்த ஒரு தீர்ப்பாணை (decree) முடிவு, தீர்ப்பு அல்லது உத்தரவு வழங்கப்பட்டு அது நடைமுறையிலிருந்தாலும், வாக்களிக்க உரிமை கிடையாது. ஆகையால், தேர்தல் நடத்தப்படும் எந்த ஒரு கூட்டத்திலும் தவணை தவறிய பாக்கிதாரர்கள் வாக்களிப்பதை இந்த விதி தடுக்கிறது. இதன் கருத்து என்னவெனில், ஒரு நபர் தவணை

தவறிய பாக்கிதாரராக இருந்தால் அவர் வேட்பாளரைத் தேர்ந்தெடுப்பதில் சரியான கவனத்தைச் செலுத்தமாட்டார் என்பது இயற்கையே. ஏனென்றால், தான் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுப்பதிலும் அவருக்கிருந்த தளர்ச்சியான மனப்பான்மையைத் தகுதியுள்ள வேட்பாளரைப் பொறுக்கி யெடுப்பதிலும், அவர் காண்பிப்பார் என்று எதிர் பார்க்கப்படு கிறது. மேலும், கடன்களைத் திருப்பிக் கொடுப்பதில் முறை யாகவும் தவணை தவறாமலிருப்பதற்கு ஓர் உறுப்பினருக்கு இது ஊக்கமளிக்க உதவி செய்கிறது. ஆகையால், இந்த விதியின்கீழ் தேர்தல்களில் வாக்களிக்கும் உரிமை தவணை தவறிய பாக்கி தாரர்களுக்கு மறுக்கப்பட்டிருக்கிறது. இதற்காகச் சங்கத்தின் உப–விதிகளில் தக்க சரத்துகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன 21 (1) (அ) பிரிவின் கீழ் ஒரு சங்கம் அதனுடைய உப–விதிகளின் மூலம் எந்த ஒரு குறிப்பிட்ட பொருளிலும் ஓர் உறுப்பினருடைய வாக்களிப்புரிமையைக் கட்டுப்படுத்தலாம்.

(vii) ஒரு சங்கம் மற்றொரு சங்கத்தில் பங்குகளெடுத்திருந்தால் உதாரணமாக, ஒரு பிரதம நாணயச் சங்கம் ஒரு நிதி வழங்கும் வங்கியில் பங்குகளெடுத்திருந்தால், அத்தகைய சங்கத்தின் பேரவைக் கூட்டத்திற்கு வருகைதந்து அதன் அலுவல்களில் வாக்களிப்பதற்குத் தன் உறுப்பினர்களில் ஒருவரை நியமிக்கலாம். எனினும், அவ்வாறு தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி, 21ஆம் விதியின் கீழ், ஒரு தவணை தவறிய பாக்கிதாரராக இருக்கக்கூடாது. ஒரு சங்கம் இன்னொரு சங்கத்திற்குத் தன் பிரதிநிதியாக அனுப்பும் ஒரு நபர், அவரே தன்னுடைய சங்கத்திற்குத் தவணை தவறிய பாக்கிதாரராக, உப–விதிகளில் குறிக்கப்படும் காலத்திற்கோ, அல்லது எப்படியிருந்தாலும் மூன்று மாதகாலத்திற்கோ, இருக்கக் கூடாது. அவ்வாறு தவணை தவறியது, சங்கத்திற்குத் தொடர்பான எந்த ஒரு தேர்தல் நடத்துவதற்காகக் கூட்டப் படும் பேரவைக் கூட்டத்திற்கு நிருணயிக்கப்பட்ட 30 நாள்களுக்கு முன்னால், இருக்கக் கூடாது. அத்தகைய பிரதிநிதிக்கெதிராகப் பிரிவு 91–ல் குறிக்கப்பட்ட ஒரு தீர்ப்பு முடிவு, அல்லது தீர்ப் பாணை அல்லது உத்தரவு வழங்கப்பட்டு அது நடைமுறை யிலிருக்கக் கூடாது (விதி 21).

(viii) மாற்றாள் (Proxy) வாக்களிப்பது தடை செய்யப்பட்டி ருக்கிறது. எந்த உறுப்பினரும் தன்னுடைய வாக்கை மாற்றாள் மூலம் அளிக்கக்கூடாது [பிரிவு 21 (3)]. இது உறுப்பினர்கள் கூட்டங்களுக்குத் தாங்களே வந்து, சங்கத்திலும அதன் நடவடிக் கைகளிலும் சுறுசுறுப்பான சொந்த அக்கறையெடுக்க அவர்களை

ஊக்குவதற்கும், ஒரு சில நபர்கள் தங்கள் தனிப்பட்ட கருத்துகளை நிறைவேற்றுவதைத் தடுப்பதற்கும் உறுதி செய்கிறது. இது ஒரு மிகவும் முக்கியமான கூட்டுறவுக் கொள்கையாகும்–குறிப்பாகச் சங்கங்கள் சிறியனவாக இருக்கும்போது. ஆகையால், சங்கத்தின் கூட்டங்களில் உறுப்பினர்கள் தாங்களே வருகை புரிவதை உறுதிப் படுத்தி, ஒரு கூட்டுறவுச் சங்கம் ஒரு வெறும் 'மூலதனத்தின் ஒன்றியம்' இல்லை (Union of Capital) அதற்கு மாறாக அது 'நபர் களின் ஒரு கூட்டு' (Union of Persons) என்ற ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் முக்கியமான தனித் தன்மையை உறுதிப்படுத்துவதே சட்டத்தின் நோக்கமாகும்.

(ix) அரசாங்கம் அல்லது ஒரு நிதி வழங்கும் வங்கியால் நியமனம் செய்யப்பட்டவர்கள் தேர்தல்களில் வாக்களிக்க உரிமை பெறாதவர்கள் [பிரிவு 21(4)]. இது ஒரு நல்ல கொள்கையாகும். அரசாங்கம் அல்லது நிதி வழங்கும் வங்கியால் நியமனம் செய்யப் பட்டவர்கள் தேர்தல்களில் ஈடுபாடில்லாமல் இருக்கவேண்டும். ஏனென்றால், தேர்தலில் கட்சி அல்லது அரசியல் அல்லது சமுதாயம் அல்லது தனிப்பட்ட போட்டிகளும் பகைமைகளும் இருக்கலாம். நியமனம் செய்யப்பட்டவர்கள் தேர்தலில் நடுநிலைமை வகிக்கவேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றனர். அரசாங்கம் அல்லது சூழ்நிலைகளுக்கேற்ப நிதி வழங்கும் வங்கியின் நலன்களைப் பாதுகாப்பதற்காகவும், பொதுவாக, சங்கத்தின் அலுவல்கள் நல்ல தொழில் முறையில் நடத்தப்படுவதை உறுதி செய்வதற் காகவும், இவ்வாறு விதிக்கப்படுகிறது. ஆகையால், அவர்களுக்கு தேர்தல்களில் வாக்களிப்புரிமையைச் சட்டத்தின் சரத்து மறுக் கிறது. ஆனால், சங்கத்தின் அலுவல்களைப் பாதிக்கும் இதர செயல்களில் அவர்களுக்கு வாக்களிக்க உரிமையுண்டு. ஒரு சங்கத்தின் பேரவை அல்லது நிருவாகக் குழு செய்யும் முடிவுகளை அவர்கள் ஒப்புக்கொள்வதையோ அல்லது மாறுபடுவதையோ வாக்களிப்புரிமையின் மூலம் பதிவு செய்யலாம். இந்த உரிமை யில்லாவிடின், இந்த நிறுவனங்களில் அவர்கள் இருப்பது, வெறும் பேருக்கு அல்லது சடங்குக்காக இருப்பதாகவே முடியும்.

6. உறுப்பினரின் பங்கு அல்லது அக்கறையை மாற்றுவதில் கட்டுப் பாடு (Restrictions on Transfer of share or Interest) (பிரிவுகள் 23&24)

இன்னொரு உரிமைகளின் தொகுதி உறுப்பினர் ஒரு சங்கத்தின் மூலதனத்திலிருக்கும் தன் பங்கு அல்லது அக்கறையை மாற்று வதையும், அத்தகைய பங்கு அல்லது அக்கறை ஓர் உறுப்பினர் இறந்தபோது, முடிவு செய்வதையும் பற்றியது. இந்த உரிமை

களைப் பற்றிச் சிறிது விளக்கமாக இப்பொழுது விளக்குவோம். 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 6ஆம் பிரிவு, ஒரு நபருடைய பங்கு மூலதனம், சங்கத்தின் மொத்தப்பங்கு மூலதனத்தில் 1/5 பாகமாக அல்லது ரூ. 1,000/-ஆக இருக்கவேண்டும், என்ற ஒரு வரம்பை விதித்தது. அப்போதைக் கப்போது இந்த வரம்பிலிருந்து விதி விலக்கு கொடுக்கப்பட்டு ரூ. 1,000/-வரம்பு உயர்த்தப்பட்டது. உதாரணமாக, வீடு கட்டும் சங்கங்களில் கூட்டுறவுச் சட்டக் குழுவினர் இந்த வரம்பை ரூ. 5,000/-க்கு உயர்த்த வேண்டுமென்று பரிந்துரை செய்தனர். மேலும், ரூ. 5,000/- வரம்புடைய கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கங்கள், கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் முதலியன போன்ற சில சங்க வகைகளின் செயல்பாட்டைத் தேவையற்ற முறையில் கட்டுப்படுத்தும் என்றும் அவர்கள் கருதினார்கள். ரூ. 5,000/-க்கு மேற்பட்ட பங்கு மூலதனத்தை அரசாங்கம் எடுத்தால், அரசாங் கத்திற்கு விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்றும், அவர்கள் பரிந்துரை செய்தார்கள். எனவே, அவர்கள் தயாரித்த மாதிரி மசோதாவின் 21ஆம் பகுதியில், பங்கு மூலதனத்தில் விதிக்கப் படும் கட்டுப்பாடு மாநில அரசாங்கத்திற்குப் பிரயோகப்படுத்தக் கூடாது என்றும், மாநில அரசாங்கம் எந்தச் சங்க வகையைக் குறித்தும், அரசிதழில் அறிவிப்பின் மூலம், கட்டுப்பாட்டைத் தளர்த்தலாம் என்றும், சரத்து ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

தமிழ்நாட்டில் இந்தக் கட்டுப்பாடு அறவே எடுக்கப்பட்டு விட்டது. ஏனென்றால், அத்தகைய கட்டுப்பாடு பங்கு மூல தனத்தை வளர்ப்பதில் ஒரு குறுக்கீடாக இருக்கும். மேலும், ஒவ்வோர் உறுப்பினருக்கும், தன்னுடைய பங்கு மூலதனம் எவ்வள விருந்தாலும், ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கு இருக்கமுடியாது. ஆகையால், சங்க இலாபத்திலிருந்து பங்குகளின் மேல் கொடுக்கப் படும் இலாப ஈவு (dividend) விகிதம் நிருணயிக்கப்பட்டு அது ஒப்பிட்டுப் பார்த்தால் குறைவாக இருப்பதாலும் அத்தகைய கட்டுப்பாடு தேவை இல்லை (பிரிவு 23-ம், 24-ம்). 23ஆம் பிரிவு ஒரு சங்கத்தில் ஓர் உறுப்பினர் எடுத்திருக்கும் பங்குகளைச் சில கட்டுப்பாட்டிற்குட்பட்டு மாற்றுவதற்கு ஏற்பாடு செய்கிறது. ஓர் உறுப்பினர் இன்னொரு நபருக்குச் சங்க மூலதனத்தில் தனக் கிருக்கும் பங்குகள் அல்லது அக்கறையை மாற்றுவது கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டிருக்க வேண்டும்.

(அ) உறுப்பினர் குறைந்தது ஒரு வருடத்திற்குத் தன் பங்கு களைச் சங்கத்தில் வைத்திருக்கவேண்டும்.

(ஆ) பங்குகளை மாற்றுவது ஒரு சங்கத்திற்கோ, அல்லது சங்கத்தில் உறுப்பினராகச் சேர விரும்பும் இன்னொரு நபருக்கோ,

அல்லது இப்பொழுதிருக்கிற ஓர் உறுப்பினருக்கோ இருக்க வேண்டும்.

(இ) அப்படி மாற்றுவதைச் சங்கத்தின் நிருவாகக் குழு அங்கீகரிக்கவேண்டும். பங்குகள் அடிக்கடி மாற்றப்படாமலிருப்பதையும், பங்குகள் சங்கத்திற்கு அல்லது தற்போதிருக்கும் உறுப்பினர்களுக்கு மாற்றப்படுவதையும், அல்லது சங்கம் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளத் தயாராக இருக்கும் புதிய நபர்களுக்கு மாற்றப்படுவதையும் உறுதி செய்து, சங்கத்தின் பங்கு மூலதனத்தில் குறைவு ஏற்படுவதற்கு ஊக்கம் அளிக்காமலிருப்பதற்கும் இந்தக் கட்டுப்பாடுகள் தேவையாக இருக்கின்றன.

மரணத்தைத் தவிர, சட்டத்தில் எந்த இடத்திலும் பங்குகள் திரும்பப் பெறுவதைப்பற்றி எந்தவிதமான குறிப்பும் இல்லை. அத்தகைய திரும்பப் பெறுதல், பொதுவாக ஓர் உறுப்பினர் சங்கத்திலிருந்து ராஜிநாமா செய்தாலும், ஓர் உறுப்பினர், 18 (2) பிரிவின்கீழ், உறுப்பினராகத் தொடர்ந்திருக்க தகுதியின்மையைப் பெற்று உறுப்பினராகியிருக்க முடியாமலிருந்தாலும்தான் எழும். ஓர் உறுப்பினர், தன் இருப்பிடம் சங்கத்தின் எல்லைக்கு வெளியே மாற்றப்பட்டுத் தான் உறுப்பினராகத் தொடர்ந்திருக்கத் தகுதியில்லாதவராகி விட்டால், சங்கத்திலிருந்து திரும்பப் பெறலாம். அல்லது 20ஆம் பிரிவின்கீழ் ஓர் உறுப்பினர் சங்கத்தின் உறுப்பினர் பதவியிலிருந்து விலக்கப்படலாம். இந்தச் சூழ்நிலைகளிலெல்லாம், சங்கம் உறுப்பினருடைய பங்குகளின் மதிப்பைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். மரணம், அல்லது சங்க எல்லைக்கு வெளியே இருப்பிடம் மாறுதல், அல்லது உறுப்பினர் பதவியிலிருந்து விலக்கப்படுதல் அல்லது பிரிவு 18 (2)-ல் கூறப்பட்ட தகுதியின்மையின் காரணமாக உறுப்பினராக இருப்பது நின்று விடுதல் தவிர, ஓர் உறுப்பினர் ராஜிநாமா செய்வதற்கும், அவருடைய பங்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுக்குமாறு அவர் கேட்பதற்கும் அனுமதிக்கப்படும் முன்னர், பங்குகளை மாற்றுவதற்காக ஒரு வருட காலவரை நிருணயிக்கப்பட்டிருப்பது போல ஒரு கால வரை விதிக்கப்படவேண்டும்.

ஓர் உறுப்பினர் தன்னுடைய பங்குகளைத் திரும்பப் பெறுவதற்கு முன்னர் மூன்றிலிருந்து ஐந்து வருடங்கள் கழியவேண்டும் என்று சங்க விதிகளில் பொதுவாக சரத்து அடங்கியிருக்கிறது. சங்க மூலதனத்தில் திடீரென்று ஒரு குறைவு ஏற்படுவதைத் தடுப்பதற்கும், அடிக்கடி உறுப்பினர்கள் பங்குகளைத் திரும்பப்

பெறுவதையும், அவர்கள் மீண்டும் உறுப்பினராகச் சேருவதையும் தவிர்ப்பதற்குக்கூட இத்தகைய காலவரை தேவையாக இருக்கிறது. ஆகையால், சந்தானம் குழுவினர், ஒரு நபர் உறுப்பினராகச் சேர்ந்த தேதியிலிருந்து குறைந்தது ஐந்து வருட காலம்வரை உறுப்பினராயிருக்கவேண்டும் என்றும், ஓர் உறுப்பினர் ராஜினமா செய்வதற்கும் அல்லது அவருடைய பங்கு மூலதனத்தைப் திருப்பிக் கொடுக்கும்படிக் கேட்பதற்கும் அனுமதிக்கப்படும் முன்னர் 6 மாத அறிவிப்பு தேவை என்றும் யோசனை கூறியிருக்கின்றனர். மேற்சொன்ன இதர சூழ்நிலைகளில், ஒரு நபர் உறுப்பினராக இல்லாமல் நின்றுவிடும்போது, சங்கம் அந்த உறுப்பினருக்கு அவருடைய பங்குகளின் மதிப்பை அல்லது சங்க மூலதனத்தில் அவருக்குள்ள பாகத்தைத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும்.

24ஆம் பிரிவில், ஓர் உறுப்பினர் தன் மரணத்திற்குப் பிறகு தன்னுடைய பங்குகள் அல்லது சங்க மூலதனத்தில் தனக்குள்ள பாகம் எவ்வாறு முடிவு செய்யப்படவேண்டும் என்று விவரிக்கப்பட்டிருக்கிறது. ஓர் உறுப்பினருக்குத், தன்னுடைய பங்குகளை மாற்றுவதற்கோ அல்லது ரொக்கமாக திருப்பிக்கொடுக்கும்படிக் கேட்பதற்கோ ஒரு வாரிசை நியமனம் செய்வதற்குரிமையுண்டு. 22ஆம் விதியின்கீழ் அத்தகைய நியமனம், எழுத்து மூலம் உறுப்பினரால் கையெழுத்திடப்பட்டு, உறுப்பினர் கையெழுத்திட்டதைப் பார்த்த குறைந்தது 2 சாட்சிகளால், அத்தாட்சி செய்யப்படவேண்டும். அத்தகைய நியமனம் சங்கப் புத்தகங்களில் பதிவு செய்யப்படவேண்டும். நியமனத்தை உறுப்பினர் எந்த காலத்திலும் ரத்து செய்து அவர் விரும்பினல் புதிய நியமனத்தைச் செய்யலாம். ஓர் உறுப்பினர் மரணமடைந்த பின்னர், சங்கம் அவருடைய பங்கு பாகத்தை இறந்து போன உறுப்பினரால் நியமனம் செய்யப்பட்ட நபருக்கு மாற்றிவிடவேண்டும். ஆனல், அப்படி நியமனம் செய்யப்பட்டவர் வயது வராதவராகவும் சித்த சுவாதீனமில்லாதவராகவுமிருந்தாலும்கூட, சங்கத்தின் உறுப்பினராகச் சேர்க்கப்படத் தகுதியுள்ளவராகியிருப்பார்.

எந்தக் காரணத்திற்காகவாவது, நியமனம் செய்யப்பட்டவரை உறுப்பினராகச் சங்கம் சேர்த்துக் கொள்ள விரும்பவில்லையென்ருலும், அல்லது நியமனம் செய்யப்பட்டவர் இறந்த உறுப்பினரின் பங்கு பாகத்தைத் திருப்பிச் செலுத்த வேண்டும் என்று விரும்பினலும், சங்கம் நியமனம் செய்யப்பட்டவருக்கு இறந்த உறுப்பினரின் பங்கு பாகத்தை 22, 23 விதிகளின் சரத்துகளுக்

குட்பட்டுத் திருப்பிச் செலுத்தி விடும். 22ஆம் விதியின் கீழ், இறந்த உறுப்பினரால் செலுத்தப்பட்டிருக்கும் பங்கு பாகத் தொகை நியமனம் செய்யப்பட்டவருக்கு திருப்பிக் கொடுக்கப் படும். 23ஆம் விதியின் கீழ், ஓர் இறந்து போன உறுப்பினர், மத்தியக் கூட்டுறவு வங்கியைப் போன்று, தனி நபர்களும் சங்கங் களும் உறுப்பினர்களாகியிருக்கும் ஒரு சங்கத்தில் பங்குகள் எடுத் திருந்தாலும், பதிவாளர், மத்திய வங்கியிலிருந்து தனிப்பட்ட நபர்கள் உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கப்படவேண்டுமென்று கட்டளையிட்டாலும் மத்திய வங்கி, நியமனம் செய்யப்பட்டவரை இறந்த உறுப்பினருடைய பங்கு பாகத்தைத் திருப்பிக் பெற்றுக் கொள்ளவேண்டுமென்று, வற்புறுத்தலாம். நியமனம் செய்யப் பட்டவருக்குப் பங்குகளை மாற்றுவதற்கோ அல்லது அவரை உறுப் பினராகச் சேர்த்துக் கொள்வதற்கோ மத்திய வங்கி கடமைப் பட்டதல்ல. மத்திய வங்கி அனுப்பிய அறிவிப்புத் தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்கு முன்னர், நியமனம் செய்யப்பட்டவர் இறந்து போனவரின் பங்கு பாகத்தைத் திருப்பிப் பெற்றுக் கொள்ளத் தவறினால், இந்த பங்குப் பாகம் தனிக் கணக்கில் வைக்கப்பட்டு அதன்பேரில் இலாப ஈவு அல்லது பாகம் கொடுக்கப் பட மாட்டாது. அம்மாதிரி தனிக் கணக்கில் வைக்கப்பட்ட தொகை இறந்து போன உறுப்பினர் தன் பங்கு பாகத்திற்காகச் சங்கத்தில் கட்டி வைத்த சரியான தொகைக்கு மேற்படாது.

எனினும், ஓர் உறுப்பினர் தன்னுடைய பங்கு பாகத்தைப் பெற ஒரு நபரை நியமனம் செய்யாமல் இறந்து விட்டால் அத்தகைய சூழ்நிலையில் 24ஆம் பிரிவின் கீழ் சங்கம் அவருடைய பங்கு பாகத்தை அதன் நிருவாகக் குழுவிற்கு யார் இறந்துபோன உறுப்பினரின் வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி என்று தோன்றுகிறதோ அத்தகைய நபருக்கு மாற்றிவிடும். ஆனல், அத்தகைய வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி, வயது வராதவராக அல்லது சித்த சுவாதீனமில்லாதவராகிருந்தாலும் கூட, சங்கத்தின் உறுப்பினராகச் சேர்க்கப்படுவதற்கு தகுதி யுள்ளவராவார். வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி விரும்பினாலும் அல்லது சங்கமே விரும்பினாலும், அது வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதிக்கு இறந்து போன உறுப் பினரின் பங்கு பாகத்தைத் திருப்பிச் செலுத்தி விடலாம். உதரணமாக, 23ஆம் விதியின்கீழ், மத்திய வங்கி, வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதிக்கு இறந்துபோன உறுப் பினரின் பங்கு பாகத்தை மாற்றத் தேவையில்லை. அவரை ரொக்கமாக அத் தொகையைப் பெற்றுக் கொள்ளவேண்டும் என்று அது கட்டளையிட லாம். அம்மாதிரி அனுப்பிய அறிவிப்பு

தேதியிலிருந்து 3 மாதங்களுக்குள் அவர் பெற்றுக் கொள்ளத் தவறினல், அந்தத் தொகை தனிக் கணக்கில் வைக்கப்படும், அதற்கு வட்டியோ, இலாப ஈவுகளோ கிடையாது. திருப்பிக் கொடுக்கப்படும் தொகை, இறந்துபோன உறுப்பினரால் தன்னுடைய பங்கு பாகத்திற்காகச் செலுத்தியிருக்கிற சரியான தொகையாக இருக்கும் (விதி 23).

24ஆம் பிரிவின்கீழ், இறந்துபோன உறுப்பினரால் நியமனம் செய்யபட்டவருக்கு அல்லது அவரது வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதிக்குச் சங்கத்தால் பங்குகள் மாற்றப்படுவதோ அல்லது ரொக்கமாகச் செலுத்தப்படுவதோ சட்டபடிச் செல்லக் கூடியதும் உறுதியானதுமாகும். எந்த நபரும் அந்தத் தொகையைச் சங்கத்திலிருந்து கேட்பதற்கு முடியாது [பிரிவு 24 (4)]. இது ஓர் உபயோகமான சிறப்புரிமையாகும். பிரிவு 24 உட்பிரிவு (4), ஒரு சங்கத்தின் செலவை மறுத்து போடப்படும் நீதிமன்ற வழக்குகளிலிருந்து சங்கத்தைப் பாதுகாக்கிறது. நிருவாகக் குழுவிற்கு அளிக்கப்பட்டிருக்கும் இந்த அதிகாரம் ஒரு பெரிய சிறப்பான அதிகாரமாகும். இந்தப் பொறுப்பு கவனத்துடன் நிறைவேற்றப்பட வேண்டும். வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி, ஒரு வழி உரிமைச் சான்று (Succession Certificate), உயிலை உறுதிப்படுத்தும் சான்று (Probate), உயில் நிருவாகப் பத்திரம் (Letter of Administration)- இவற்றைத் தாக்கல் செய்யும் தொல்லையிலிருந்து, விடுதலை பெறுகின்றனர். இவையெல்லாம் ஒழிக்கப்பட்டு, நிருவாகக் குழுவிற்கு இறந்து போன உறுப்பினரின் வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி எவர் என்பதை முடிவு செய்யும் அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

பங்குகளைச் சங்கத்திடம் அடகு வைக்கக்கூடாது: 24ஆம் விதியின் கீழ், உறுப்பினர்கள் ஒரு சங்கத்தின் பங்குகளை அச் சங்கத்தினிடம், தாங்கள் வாங்கும் கடன்களுக்காதாரமாக அடகு வைக்கக் கூடாது. பங்குத் தொகையானது ஒரு சங்கத்தின் மூலதன மாயிருப்பது மட்டுமல்லாமல், அது ஒரு சங்கம் வாங்கும் கடன் களுக்கு வரம்பும், ஆதாரமுமாகும். மேலும், ஓர் உறுப்பினருடைய பங்குகளைச் சங்கம் அவர் வாங்கிய கடனுக்காக ஒதுக்க உரிமை பெற்றிருக்கிறது. எனவே, சங்கத்திற்குப் பங்குகளின் பேரில் முதல் உரிமையுண்டு.

7. உறுப்பினர்களின் பொறுப்புகள் (பிரிவு 25) (Liabilities of members)

உறுப்பினர்களின் பொறுப்புகளைப் பற்றி எதுவும் 25ஆம் பிரிவு கூறவில்லை. முன்னாள் உறுப்பினர்களின் பொறுப்புகளைப்

பற்றியும் இறந்துபோன உறுப்பினர்களின் பொறுப்புகளைப் பற்றியும்தான் அது பேசுகிறது. 2 ஆம் பிரிவின் பகுதிகள் 13-ம், 14-ம் வரையறுக்கப்பட்ட சங்கத்திலும், வரையறுக்கப்படாத சங்கத்திலும் உறுப்பினர்களின் பொறுப்புகளைப் பற்றிப் பேசுகின்றன. வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கத்திலும், வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்திலும், உறுப்பினர்களைக் குறித்த பொறுப்புகள் விவரமாக, முந்தைய அத்தியாயத்தில் விளக்கப்பட்டிருக்கின்றன. ஓர் உறுப்பினர் சங்கத்தின் உப-விதிகளில் அவசியமாகக் கோரப்பட்ட பங்குப் பணம், நுழைவுக் கட்டணம், முதலியவற்றைச் செலுத்திய பிறகு மட்டும்தான் அவர் தன் உறுப்பினர் உரிமையை உபயோகிக்க முடியும் [பிரிவு 17 (3)]. ஆனால், ஓர் உறுப்பினருடைய பொறுப்பு எப்போது ஆரம்பிக்கிறது என்பது சட்டத்தில் எங்கேயும் சொல்லப்படவில்லை. ஒரு நபர் சங்கத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பத்தில் கையெழுத்திட்டும், சங்கம் பதிவு செய்யப்பட்ட பிறகு ஓர் உறுப்பினராகச் சேர்க்கப்பட்ட போதும் அவருடைய பொறுப்பு ஆரம்பமாகிறது என்பது தெளிவு. உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்வதற்காக உப-விதிகளில் நிருணயிக்கப்பட்ட தொகைகளையெதுவும் செலுத்தாமலிருந்தால் பொறுப்பிலிருந்து அவர் தப்பிக்கமுடியாது என்பதும் தெளிவு. சங்கத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பத்தில் சேர்ந்து வெறும் கையெழுத்திட்ட ஒருவரும், [பிரிவு 2 (6)-ம், பிரிவு-8ம்] பதிவு செய்யப்பட்ட பிறகு சங்கத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்ட நபரும், பிரிவு 17-ல் அடங்கிய தகுதிகளுக்குட்பட்டும், 18ஆம் பிரிவில் அடங்கிய தகுதியின்மைகளில்லாமலும், அவர்கள் உடனே திரும்பப்பெற்றுக் கொண்டாலும்கூட, எல்லாப் பொறுப்புகளுக்கும் அவர்கள் பாத்திரமாகிறார்கள். அவர்கள் திரும்பப் பெற்றுக் கொண்டால் அவர்கள் முன்னாள் உறுப்பினர்களாகி அத்தகைய உறுப்பினர்களுக்குண்டான பொறுப்புகளையுடையவர்களாகிறார்கள். அவர்கள் இறந்தால் அவர்களுடைய சொத்துகள் பொறுப்புள்ளவைகளாகும்.

25 (1) ஆம் பிரிவின்படி, சங்கம் கொடுக்கவேண்டிய கடன்களைக் குறித்து, ஒரு முன்னாள் உறுப்பினருடைய பொறுப்பும் அல்லது இறந்துபோன உறுப்பினருடைய சொத்துப் பொறுப்பும் அமைந்திருக்கிறது. ஒரு சங்கம் தன்னுடைய கடன்களைத் திருப்பிச் செலுத்தத் துன்பப்பட்டால், அப்போது தான் முன்னாள் உறுப்பினர்கள், தற்போதைய உறுப்பினர்கள், இறந்துபோன உறுப்பினர்கள் இவர்களுடைய பொறுப்புப்பற்றிய பிரச்சினை எழுகிறது. அத்தகைய பொறுப்பு பிரிவு 85 (1)-ன் கீழ், சங்கம்

கலைக்கப்பட்ட பிறகும், அல்லது பிரிவு 94-ன் கீழ், அரசாங்கத்திற்குப் பாக்கியான தொகைகளை வசூல் செய்யும் போது மட்டும் தான் எழுகின்றது. இந்தப் பொறுப்பு, சங்கத்தினுடைய சொத்துகள் அதன் கடன்களைத் திருப்பிச் செலுத்துவதற்குப் போதுமானவையாக இல்லாமலிருக்கும்போது மட்டும் தான், கட்டாயப்படுத்தப்படுகிறது. முன்னுள் உறுப்பினர்களும், தற்போதுள்ள உறுப்பினர்களும் நேர்முகமான பொறுப்பு உள்ளவர்கள். இறந்துபோன உறுப்பினர்களைப் பொறுத்தவரை அவருடைய பொறுப்பு நியமனம் செய்யப்பட்டவர் வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதியின் வசமிருக்கும் அவருடைய சொத்து அல்லது ஆதினம் பொறுப்புள்ளதாக இருக்கும். தற்போதிருக்கும் உறுப்பினருடைய பொறுப்பு தொடர்ந்திருக்கும் பொறுப்பு. முன்னுள் உறுப்பினருடைய பொறுப்பு அவர் உறுப்பினர் பதவியிலிருந்து விலகிவிட்ட தேதியில் சங்கத்தின் கடன்களுக்காக அந்தத் தேதியிலிருந்து 2 வருட காலங்களுக்கு இருக்கும்.

ஓர் இறந்துபோன உறுப்பினர் பொறுப்பு, அவர் இறக்கும் போது இருந்த சங்கத்தின் கடன்களுக்கு, இறந்த தேதியிலிருந்து இரண்டு வருட காலத்திற்கு நீடித்ததாக இருக்கும். அதே மாதிரி, பிரிவு, 95-ன் கீழ், அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய பாக்கித் தொகைகளை வசூல் செய்வதில், ஒரு முன்னுள் உறுப்பினருடைய பொறுப்பும் இறந்துபோன உறுப்பினருடைய சொத்துப் பொறுப்பும் முறையே உறுப்பினராக நின்றுவிட்ட தேதியில் அல்லது இறந்துபோன தேதியிலிருந்த பாக்கித் தொகையைக் குறித்து மட்டும் தான், முன்னுள் உறுப்பினருடைய பொறுப்பும் இறநதுபோன உறுப்பினருடைய சொத்துப் பொறுப்பும் காலவரம்பின்றித் தொடர்ந்திராமலிருக்க, ஒரு காலவரம்பு விதிக்கப்பட்டிருக்கிறது. ஒரு சங்கத்தின் அலுவல்கள் சீர்கேடடைந்து அதனுடைய கடன்கள் திருப்பிக் கொடுக்க முடியாமலிருந்தால், சங்கம் கலைக்கப்பட்டு சங்கச் சொத்துகளை வசூலிப்பதற்கும் கடன்களைத் திருப்பிச் செலுத்துவதற்கும் நடவடிக்கை எடுக்கப்படுகிறது. சாதாரணமாக, கடன்கள் திருப்பிச் செலுத்தமுடியாது என்பது தெரிந்த சமயத்திலிருந்து, குறைந்தது இரண்டு வருடங்களில் அத்தகைய நடவடிக்கை ஆரம்பிப்பதற்குச் சாத்தியமாக இருக்கவேண்டும்.

அவ்வண்ணமே ஒரு சங்கம் 85 (1) ஆம் பிரிவின் கீழ் கலைக்கப்படவேண்டுமென்று உத்தரவிடப்படும் போது, ஒரு முன்னுள் உறுப்பினருடைய பொறுப்பு, அத்தகைய கலைப்பு உத்தரவு

தேதிக்கு முன்னால் இரண்டு வருட காலத்திற்குள் அவர் உறுப்பினர் பதவியிலிருந்து விலகி விட்டால்தான் எழுகின்றது. மேலும், அந்தப் பொறுப்பு கலைப்பு நடவடிக்கைகள் முடிவடைகிற வரை தொடர்ந்திருக்கும். அந்தப் பொறுப்பு அவர் உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிட்ட தேதியிலிருந்த சங்கத்தின் கடன்களுக்கு மட்டும்தான் இருக்கும். சென்னையிலும், நாகப்பூரிலும் நடைபெற்ற ஒரு வழக்கில், ஓர் உறுப்பினர் தன் உறுப்பினர் பதவியை ராஜிநாமா செய்த கடிதம் சங்கத்தில் சேர்ந்த உடனே அவர் உறுப்பினர் பதவியிலிருந்து விலகிவிட்டதாகத் தீர்ப்பு கூறப்பட்டிருக்கிறது. அவருடைய ராஜிநாமா ஒப்புக்கொள்ளப் படவேண்டும் என்ற பிரச்சினை கிடையாது [பிரிவு 25 (2)]. இறந்துபோன உறுப்பினர் விஷயத்தில் அவருடைய ஆதினம் அல்லது சொத்து, அவர் சங்க அலுவல்கள் கலைக்கப்படவேண்டு மென்ற உத்தரவின் தேதிக்கு முன்னர் இரண்டு வருட காலத் திற்குள் இறந்திருந்தால், பொறுப்புள்ளதாக இருக்கும். அந்தப் பொறுப்பு அவருடைய மரணத்தின் போது இருந்த சங்கத்தின் கடன்களுக்கு மட்டுந்தான். அந்தப் பொறுப்பு சங்கக் கலைப்பு நடவடிக்கைகள் முடிவு பெறும்வரை தொடர்ந்திருக்கும் [பிரிவு 25 (2)]. அதே மாதிரியாக, 94ஆம் பிரிவு அரசாங்க பாக்கித்தொகைகளை வசூல் செய்வதிலும், வசூல் செய்வதற்கான நடவடிக்கைகள், ஒரு முன்னாள் உறுப்பினர் அவர் உறுப்பினர் பதவியிலிருந்து நின்று விட்ட தேதியிலிருந்து இரண்டு ஆண்டு களுக்குள், இறந்துபோன உறுப்பினருடைய சொத்துப் பொறுப்பு அவர் இறந்த தேதியிலிருந்து இரண்டு வருடங்களுக்குள் ஆரம்பிக்கப்படவேண்டும்.

ஒரு சங்கத்தினுடைய கடன் ஓர் உறுப்பினர் சேர்க்கப்படும் முன்பே வாங்கியிருந்தாலும்கூட, 85 (1) பிரிவின் கீழ், சங்கம் கலைக்கப்படும்போது அதனுடைய சொத்துகளுக்கு உதவித் தொகை அளிக்க ஓர் உறுப்பினர் பொறுப்புள்ளவராக இருக்கிறார் [87 (2) (அ)]. சட்டத்தின் கீழ் அமர்த்தப்பட்ட சங்கக் கலைப்பு அதிகாரி (Liquidator) [பிரிவு 86 (1)] உறுப்பினர்கள் சங்கக் கடன்களைத் தீர்ப்பதற்குச் சங்கச் சொத்துகளுக்குக் கொடுக்க வேண்டிய உதவித்தொகையைத் தீர்மானிக்கலாம். பிரிவு 2-ன் பகுதிகள் 13, 14, நிருணயிக்கப்பட்ட வரம்புக்குட்பட்டு உறுப்பினர் அத்தகைய உதவித்தொகையைச் செலுத்தக் கடமைப்பட்டவராவார்.

ஓர் உறுப்பினர் பொறுப்புக்குப் பாத்திரனான பிறகு, தனக்கு முக்கிய பாதுகாப்பு. (Safe guards) சங்கத்தின் பேரவைக் கூட்டத் திற்கு வந்து சங்கத்தின் நல்ல நிருவாகத்தைப் பற்றியும்

அதனுடைய மதிப்பைப்பற்றியும், எல்லாத் தகவல்களைப் பெறுவதற்குத் தன்னுடைய உரிமையே, முன்னரே குறிப்பிட்டபடி, அவர் இதர உறுப்பினர்களுடன் சேர்ந்து சங்கத்தின் பேரவைக் கூட்டம் கூட்டப்படவேண்டுமென்று [பிரிவு 26 (3)] வற்புறுத்துவதற்கு உரிமை பெற்றவர். மேலும், இதர உறுப்பினருடன் சேர்ந்து அவர் சட்டத்தின் 66 (1) விதியின்கீழ் ஒரு சங்கத்தின் அலுவல்களைப்பற்றி விசாரணை நடத்தவேண்டும் என்றும் வற்புறுத்திச் சங்கத்தினுடைய அலுவல்களைப் [85 (1)] பிரிவின்கீழ் கலைக்கப்படவேண்டுமென்றும் இதர உறுப்பினர்களுடன் சேர்ந்து விண்ணப்பம் செய்யலாம்.

இந்தப் பொறுப்புப் பிரச்சினை, தமிழ்நாட்டில், கூட்டுறவு இயக்கத்தின் ஆரம்ப வருடங்களில், விவசாய நாணயச் சங்கங்கள் வரையறுக்கப்படாத பொறுப்பின்பேரில் மட்டும்தான் நிறுவப்படவேண்டும் என்றிருந்தபோது, பெரியதாகத் தோன்றியது. அந்தச் சமயத்தில் இந்த மாநிலத்தில் விவசாய நாணயச் சங்கங்கள் மொத்தக் கூட்டுறவுச் சங்கங்கள் எண்ணிக்கையில் ஒரு பெரிய விகிதாசாரமாக இருந்தன. நாம் முன்பு கண்டபடி, இப்போது வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் விவசாய நாணயச் சங்கங்கள் நிறுவப்படுவதற்காக அவர்கள் விருப்பத்திற்கே விடப்பட்டிருக்கிறது. தற்சமயம் இந்தியாவில் பொதுவான கருத்துப்போக்கு வரையறுக்கப்பட்ட பொறுப்புக்குச் சாதகமாக இருக்கிறது. சந்தானம் குழுவினர்கூட, சீரமைக்கப்பட்ட விவசாய நாணயச் சங்கங்களுக்கு வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் நிறுவப்படவேண்டுமென்று பரிந்துரை செய்தனர். தமிழ்நாட்டில் விவசாய நாணயச் சங்கங்கள் இன்னும் வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையில்தான் இருக்கின்றன. அவை மிக விரைவில் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையை ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கும். அப்பொழுது விவசாய நாணயச் சங்கங்களின் செயல்பாட்டில் உறுப்பினர்களுடைய பொறுப்புப் பிரச்சினை ஒரு முக்கியமான அம்சமாக இராது. ஏனென்றால், வரையறுக்கப்பட்ட சங்கத்தில் உறுப்பினர்கள் சங்கக் கடன்களுக்காக அவர்களுடைய பங்குகளின் அளவிற்கு மட்டும்தான் பொறுப்புள்ளவர்களாக இருக்கின்றார்கள். வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கத்தில், உறுப்பினர்களுடைய நிதிப் பொறுப்பு மிகவும் வரையறுக்கப்பட்டதாக இருக்கும். ஆகையால், அந்தப் பொறுப்பை எளிதாக ஏற்க முடியும்.

உண்மையான நடைமுறையில், சட்டப்படியமைந்த பொறுப்பு சட்டத்திற்கிணங்கிய பொறுப்பு அல்லது நிதிப்

பொறுப்பு, இவைகளைவிட அதிகமான ஒரு பொறுப்பு உறுப்பினர்களுக்கிருக்கிறது. அது தான் சங்கம் பயனுள்ள முறையிலும் சரியான முறையிலும் இயங்கும்படி நிருவாகிகளும் உறுப்பினர்களும் நடந்து கொள்கிறார்களா என்பதைக் கண்காணிக்கும் பொறுப்பு. ஒரு மக்களாட்சி முறை நிறுவனத்தில், சங்கத்திற்கு உறுப்பினர்களுடைய பொறுப்பை உணர்வதை விட உறுப்பினர்களுடைய உரிமைகளை உறுதியாய்ச் சொல்வதுதான் அதிகமாயிருக்கும். உறுப்பினர்கள் சங்கத்தின் மீது பற்றுள்ளவர்களாக, கடன்களைத் தவணை தவறாமல் திருப்பிக் கொடுத்தும், சங்கத்துடன் அவர்கள் செய்யும் லேவாதேவியில் நேர்மையாகவும், சங்கத்தின் நலவசதியைத் தவிர வேறு எந்தக் கவனிப்பாலும் பாதிக்கப்படாமலும், பயமில்லாமலும் சங்கத்தின் அலுவல்களை நிருவாகம் செய்யச் சரியான வகையில் நபர்களைத் தேர்ந்தெடுக்கவும் வேண்டும். சங்கத்தில் நிருவாகம் செய்யத் தேர்ந்தெடுக்கப்பட்ட நபர்கள் ஆற்றலுள்ளவர்களாகவும் அறிவு படைத்தவர்களாகவும், பொதுமக்களுக்குத் தொண்டு செய்யும் உணர்ச்சியுள்ளவர்களாகவும், அவர்களுடைய வேலையில் நேர்மையாகவும், முற்றிலும் ஒழுங்காகவும் இருக்கவேண்டும். சில சமயங்களில், சங்கங்கள் பாழாகி விடுகின்றன என்றால், அதற்குக் காரணம், விரும்பத்தகாத நபர்கள், குறிப்பாக சங்கத்தின் நிருவாகத்திலிருக்கிறதால்தான். ஆகையால், ஒரு சங்கத்தின் வெற்றி பெருமளவு உறுப்பினர்களின் விசுவாச உணர்ச்சியைப் பொறுத்தும், அவர்களிடமிருக்கும் பொறுப்புணர்வைப் பொறுத்தும் தானிருக்கிறது. உறுப்பினர்கள், தாங்கள் நன்மைகளை அனுபவிக்கவேண்டும் என்ற உணர்வும், தாங்கள் சரிவரக் நடந்து கொண்டு சங்க அலுவல்கள் நன்றாக நிருவாகம் செய்யப்பட்டு வருவதைக் கண்காணிக்கவேண்டிய ஒரு பொறுப்பு உணர்வும், சமமாக இருக்கவேண்டும். உறுப்பினர்கள் சங்கத்தின் செயல்பாட்டில் ஓர் உற்சாகமும், விழிப்புமுள்ள அக்கறையையெடுத்துக் கொள்ளவேண்டும்.

ஒரு சங்கத்தின் உறுப்பினர் விரும்பத்தக்க நபராக இல்லையென்றால், அவர் சங்கத்திலிருந்து வெளியேற்றப்படுவார் (பிரிவு 20). சங்க நலன்களுக்கு விரோதமாக நடக்கும் அல்லது செயல்புரியும் எந்த ஓர் உறுப்பினரும் சங்கத்திலிருந்து வெளியேற்றப்படலாம். அவ்வாறு ஓர் உறுப்பினரை வெளியேற்றுவதற்குச் சங்கம் ஒரு தனிப்பட்ட பேரவைக் கூட்டம் கூட்டி, அத்தகைய கூட்டத்திற்கு வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் 2/3-க்குக் குறையாத நபர்களால் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட

வேண்டும் [பிரிவு 20 (1)]. ஓர் உறுப்பினர் சங்கத்திலிருந்து வெளியேற்றப்படுவதற்கு முன், அவருடைய மறுப்பு ஏதாவதிருந்தால் அதைத் தெரிவிக்க அவருக்கு ஒரு வாய்ப்புக் கொடுக்கப்படவேண்டும். மேலும், அவரை வெளியேற்றி நிறைவேற்றப்படும் தீர்மானமும் பதிவாளரால் அங்கீகரிக்கப்படவேண்டும் [பிரிவு 20 (2)]. இந்தத் தீர்மானத்தின் நகலும், தீர்மானத்திற்குப் பதிவாளரின் அங்கீகாரமும், சம்பந்தப்பட்ட உறுப்பினருக்கு அனுப்பப்படவேண்டும் [பிரிவு 20 (2)]. விலக்கப்பட்ட உறுப்பினர் [பிரிவு 96 (2) (அ)] பிரிவின்கீழ் மேல்முறையீடு செய்ய உரிமை பெற்றவர். பதிவாளர், எந்த காரணத்திற்காவது, உறுப்பினரை விலக்கும் தீர்மானத்தை அங்கீகரிக்க மறுத்தால், சங்கமும்கூட ஒரு மேல்முறையீடு செய்யலாம் [பிரிவு 96 (2) (ஆ)] ஓர் உறுப்பினரை வெளியேற்றுவது ஓர் அபூர்வ சம்பவம். இந்தச் சரத்து, வேறு எதையுமவிட, ஒரு பயமுறுத்தித் தடுத்து வைக்கிற உபயோகம் வாய்ந்தது.

20ஆம் பிரிவின் கீழ் விலக்கப்பட்ட ஒரு நபர், உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுபோய்விடுவார். 18 (2) (இ) பிரிவின் கீழ் அவரை வெளியேற்றிய தேதியிலிருந்து குறைந்தது ஒரு வருடம் கழிகிற வரைக்கும், அவர் எந்தச் சங்கத்திலும் ஓர் உறுப்பினராக இருக்கமுடியாது [பிரிவு 18 (1) ஏ] ஒரு விலக்கப்பட்ட உறுப்பினர் முன்னாள் உறுப்பினராகப் பாவிக்கப்பட்டு, அவர் சங்கத்தின் கடன்களுக்காக அவர் விலக்கப்பட்ட தேதியிலிருந்து இரண்டு வருடங்களுக்குப் பொறுப்புள்ளவராக இருப்பார். அவர் உறுப்பினராக நின்றுபோய்விட்ட தேதியிலிருந்த சங்கத்தின் கடன்களுக்காக அவர் பொறுப்பாளியாக இருப்பார். அதே மாதிரியாக அவர் ஒரு சங்கம் கலைக்கப்பட்ட உத்தரவுக்கு முன்பு இரண்டு ஆண்டுகளுக்குள் அவர் விலக்கப்பட்ட காரணத்தால் ஓர் உறுப்பினராக நின்று போய் விட்டால் அவர் சங்கத்தின் சொத்துகளுக்கு உதவித் தொகை அளிக்கப் பொறுப்பாளியாவார். அந்தப் பொறுப்பு கலைப்பு நடவடிக்கைகள் முடியும் வரை தொடர்ந்திருக்கும். அவர் விலக்கப்பட்டு, உறுப்பினராக நின்று போய் விட்ட தேதியன்று இருந்த சங்கக் கடன்களுக்காக அவர் பொறுப்புடையவர் ஆவார். சந்தானம் குழுவினர், 20 (1) பிரிவின் கீழ் விலக்கப்பட்ட ஓர் உறுப்பினர் எந்த ஒரு சங்கத்திலும் மீண்டும் உறுப்பினராகச் சேர்க்கப்படுவதற்கு முன்பு குறைந்தது மூன்று வருடகாலம் கழியவேண்டும் என்று பரிந்துரை செய்த, அந்தப் பரிந்துரைக்கேற்ப பிரிவு 18 (1) (ஏ)-க்குச் சட்டத்திருத்தங்களையும் யோசனை கூறியிருக்கிறார்கள்.

# 8. சங்கங்களின் நிருவாகம்

## (Management of Societies)

(பிரிவுகள் 26, 27, & 28,)

### (1) பேரவை அல்லது மகாசபை (General Body)

(1) ஒரு சங்கத்தின் அறுதி அதிகாரம் உறுப்பினர்களின் பேரவை வசம் இருக்கிறது [26 (1) பிரிவு]. ஒரு சங்கத்தின் ஒவ்வோர் உறுப்பினரும் அதன் பேரவையின் ஓர் உறுப்பினரு மாவர். சங்கத்தின் நிருவாகம் முழுமைக்கும் அறுதிப் பொறுப்பு உறுப்பினருடைய பேரவைக்கு உரிமையாக இருக்கிறது. 119 (2) பிரிவின் கீழ், விதிகளில், உறுப்பினருடைய பேரவைக் கூட்டங் களுக்காகவும் அத்தகைய கூட்டங்களுக்குண்டான நடைமுறைக் காகவும், அத்தகைய கூட்டங்கள் செலுத்தக்கூடிய அதிகாரங்களுக் காகவும், சரத்துகள் செய்யலாம். 4 (2)-ன்விதி சங்கத்தின் உப- விதிகளில் சங்கம் தன் தொழிலை நிருவாகம் செய்வதற்கு இன்றி யமையாததாகக் கருதப்படும் பொருள்களைப்பற்றிச் சரத்துகள் செய்யலாம் என்று கூறுகிறது.

### (2) பேரவையின் அதிகாரங்கள் (Powers of the General Body)

ஒரு சங்கத்தின் வேலையை நடத்துவதற்கு, அவ்வப்போது குறைந்தது வருடத்திற்கு ஒரு முறை, அந்தச் சங்கத்தின் பேரவைக் கூட்டம் நடைபெறவேண்டும். 26 (2) பிரிவின்கீழ் வருடத்திற்கு ஒரு முறை ஒரு பேரவைக் கூட்டத்தைக் கூட்டுவதற்குச் சங்கம் கடமைப்பட்டிருக்கிறது. அந்தக் கூட்டம் கீழ்க்கண்ட செயல்களுக் காகக் கூட்டப்படவேண்டும்

(அ) நிருவாகக் குழுவால் உத்தேசிக்கப்பட்ட சங்கத்தின் நடவடிக்கைத் திட்டத்தின் அடிப்படையில், வருகிற ஆண்டிற்காக வரவு-செலவுத் திட்டத்தை அங்கீகரித்தல் ;

(ஆ) நிருவாகக் குழுவின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தல்;

(இ) தணிக்கை அறிக்கையையும் ஆண்டு அறிக்கையையும் கவனித்தல்;

(ஈ) நிகர இலாபத்தை முடிவு செய்தல்;

(உ) உட-விதிகளின்படிக் கொண்டுவரப்படும் இதர பொருள்களை ஆலோசித்தல்;

பொதுவாக, கீழ்க்கண்ட இதர பொருள்களைப் பேரவை ஆலோசித்து முடிவு செய்கிறது.

(i) தற்போதிருக்கும் எந்த உப-விதியையும் திருத்துதல் அல்லது எடுத்துவிடுதல் அல்லது புதிய உப-விதியை இயற்றுதல் [விதி 7 (1)].

(ii) ஓர் உறுப்பினரை வெளியேற்றுதல் (expulsion) (பிரிவு 20).

(iii) ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு எதிராக எந்த ஒரு தனிப்பட்ட உறுப்பினரால் செய்யப்படும் எந்த ஒரு புகாரையும் ஆலோசித்தல் ;

(iv) சங்கத்திற்கு வரவேண்டியதும், வசூலிக்க முடியாததுமாக உள்ள எந்த ஒரு தொகையையும் தள்ளுபடி செய்தலும் அல்லது திருடு போன, அல்லது வேறுவிதத்தில் இழக்கப்பட்டு வசூலிக்கப்படாத சங்கத்திற்குச் சொந்தமான எந்த ஒரு தொகையையும், பதிவாளருடைய அங்கீகாரத்துடனும் நிதி வங்கியினுடைய அங்கீகாரத்துடனும் தள்ளுபடி செய்தல் (உப-விதியில் ஏற்பாடு செய்தபடி);

(v) ஓர் உள்ளூர் வங்கி, அல்லது மத்திய வங்கி அல்லது மாவட்ட விநியோக விற்பனைச் சங்கம், தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் சங்கம், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு விற்பனைச் சம்மேளனம், தமிழ்நாடு மாநில நுகர்வோர் கூட்டுறவுச் சம்மேளனம் முதலியன போன்ற, வேறு எந்த கூட்டுறவு நிறுவனத்துடனும் சங்கத்தை இணைப்பு செய்வது, அல்லது அந்த நிறுவனத்திலிருந்து இணைப்பை நீக்குவது (உப-விதிகளில் ஏற்பாடு செய்தபடி);

(vi) ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிலிருந்து எந்த ஓர் உறுப்பினரை அல்லது உறுப்பினர்களை நீக்குவது (உப-விதிகளில் ஏற்பாடு செய்தபடி);

(vii) உள்ளூர் ஒன்றியம் அல்லது மத்திய வங்கி அல்லது மாவட்ட விநியோக விற்பனைச் சங்கம், தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் சங்கம், மாநில விற்பனைச சம்மேளனம், மாநில நுகர்வோர் சம்மேளனம்போன்ற சங்கம், பங்குகளெடுத்திருக்கும் வேறு எந்தக் கூட்டுறவு நிறுவனங்களுக்குக் கடன் தவணை தவறுத உறுப்பினர்களிலிருந்து பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தல்;

(viii) வரையறுக்கப்படாத பொறுப்பு விவசாய நாணயச் சங்கங்களில் சொத்துப் பொறுப்பு விபரப்பட்டியலை ஏற்றுக் கொள்ளுதலும், அந்த சொத்துப் பொறுப்பு விபர பட்டியலில் தெரிய வருகிற நிகர சொத்துகளை அனுசரித்து சங்கத்தின் உச்சக் கடன் அளவை நிருணயிப்பதும், இந்த விவரப்பட்டியல் தேவைப்படும்போதெல்லாம் அடிக்கடி புதுப்பிக்கப்பட வேண்டும். அது குறைந்தது மூன்று வருடங்களுக்கொரு முறையாவது புதுப்பிக்கப் பட வேண்டும் (விதி 13);

(ix) ஒரு சங்கத்தை இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்களாகப் பிரிப்பதற்கான திட்டத்தை ஆலோசித்தல் [பிரிவு 13(1)];

(x) இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்களை ஒரே சங்கமாக இணைக்கும் திட்டத்தை ஆலோசித்தல் [13 (உ)];

(xi) பதிவு செய்யப்பட்ட சங்கங்களிடையே சொத்துகளையும், பொறுப்புகளையும் மாற்றுதல் செய்யும் திட்டத்தை ஆலோசித்தல் [(பிரிவு 14);

(xii) ஒரு சங்கத்தை வேறுவித வகுப்புக்கு மாற்றுவது (பிரிவு 14);

(xiii) நிருவாகக் குழுவின் உறுப்பினர்களுக்கும், அவர்கள் உறவினர்களுக்கும், அவர்களைச் சார்ந்திருப்பவர்களுக்கும் சிலவித கடன்களை ஒப்பளித்தல் (உப-விதிகளில் ஏற்பாடு செய்தபடி);

(xiv) சங்கத்தின் நிருவாகஸ்தர்களில் ஒருவருக்குச் செயலாளராக அல்லது எழுத்தராக செய்யப்பட்ட வேலை உட்பட பிரத்தியேகமாகச் செய்யப்பட்ட வேலைக்கு ஊதியம் (Remuneration)

ஒப்பளித்தல் உட்பட நிகர இலாபங்களைப் பிரித்தெடுத்தெடுத்து வைத்தல் (உபவிதிகளில் ஏற்பாடு செய்தபடி);

(xv) எழுத்தர் வேலை செய்ததற்காக ஒரு நிருவாகக்குழு உறுப்பினருக்குப் பொது நிதிகளிலிருந்து ஊதியம் கொடுப்பதை ஒப்பளித்தல் (உப-விதிகளில் ஏற்பாடு செய்தபடி);

(xvi) சங்கத்தின் நிருவாகத்தை ஒரு தனி நபருக்கு (உறுப்பினர் அல்லது உறுப்பினரல்லாதவர்) ஒப்படைத்தல், அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவரிடத்தில் ஒப்படைத்தல். ஒரு சங்கம் சரிவர இயங்காவிட்டால் ஒரு தற்காலிக நடவடிக்கையாக இது செய்யப்படுகிறது. இவ்வாறு நிருவாகம் ஒப்படைக்கப்பட்ட நபர் ஒரு நிருவாகக் குழுவின் அதிகாரங்களை, மத்திய வங்கி அல்லது பதிவாளரின் அங்கீகாரத்திற்குட்பட்டு, உடையவராவர். உபவிதிகளில் ஏற்பாடு செய்தபடி சில முக்கியச் செய்திகளில் அவர் பேரவையின் அங்கீகாரத்தைப் பெறவேண்டும் (உபவிதிகளில் ஏற்பாடு செய்தபடி);

(xvii) நிருவாகக் குழுவின் பரிந்துரையின் பேரில் ஒரு உறுப்பினர் வாங்கிய கடன்களைத் திருப்பிச் செலுத்தும் காலத்தை நீட்டிப்பு செய்தல் (உபவிதிகளில் ஏற்பாடு செய்தபடி);

ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டம் சட்டத்தின் கீழ், குறைந்தது ஆண்டிற்கு ஒரு முறை கூட்டப்பட்டு, மேலே பத்தி 2-ல் (Fara 2 abonve) குறிக்கப்பட்ட செய்திகளை ஆலோசிக்கவும் பத்தி 3-ல் குறிக்கப்பட்டிருக்கும் இதர செயல்களுக்காகவும், பொதுவாகக் கூட்டப்படுகிறது. ஒரு பேரவைக் கூட்டம், உறுப்பினர்கள் நிருவாகத்தின் கவனத்திற்குச் சங்கத்தின் செயல்பாட்டைக் குறித்த எந்தச் செய்தியையும் கொண்டுவருவதற்கும், கொள்கைகள் நடைமுறைகள் தொடர்பான செய்திகளில் தேவைப்படும் தகவல்களைப் பெறுவதற்கும், சங்கத்தின் சீர்திருத்தத்திற்காகவும் யோசனைகளைக் கூறுவதற்கும் ஒரு வாய்ப்பாகும். இந்தக் கூட்டத்தில், பிரிவு 21-லும், விதிகள் 20, 21-லும் விதிக்கப்பட்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, ஒவ்வொரு நபருக்கும் ஒரு வாக்கு உண்டு.

உண்மையாகவே, ஒவ்வோர் உறுப்பினரும் சங்கத்தினுடைய எல்லாக் கடன்களுக்கும் இதர உறுப்பினர்களோடு பொறுப்புள்ளவராக இருப்பதால், இயன்றவரை சங்கத்தினுடைய தொழில் சரியாக நிருவாகம் செய்யப்பட்டு வருவதைக் கண்காணிக்க உறுப்பினர்களுடையவும், பேரவையினுடையவும், கடமையென்பது

தெளிவு மற்றும், பேரவைக் கூட்டங்களில், சங்கத்தின் லேவா தேவிகளைக் குறித்தும், அதனுடைய பொது நிலைமையைக் குறித்தும், உறுப்பினர்களுக்குத் தகவலை அறிவிப்பது நிருவாகக் குழுவின் கடமையாகும். சங்கத்தின் பொதுச்செயல்பாடு பற்றியும், அது எந்தக் கொள்கைகளின் அடிப்படையில் இயங்குகிறது என்பது பற்றியும் புரிந்துகொள்ள ஒவ்வோர் உறுப்பினரும் மிகவும் கடமைப்பட்டிருக்கிறார். சங்கம் தன்னுடைய சொந்தச் சங்கமென்றும், அதனுடைய நல்ல பெயருக்குக் கெடுதி அல்லது பழுது விளைவிக்கும் எதையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் அவர் செய்யக்கூடாது அல்லது அதற்கு ஒரு நட்டம் உண்டு பண்ணக் கூடாது என்ற உணர்வு இருக்கவேண்டும். அத்தகைய உறுப்பினர் எல்லாப் பேரவைக் கூட்டங்களுக்கும் வந்திருந்து சங்கத்திற்கு உபயோகமாகவுள்ள அவர் வசமிருக்கும் அறிக்கையை கூட்டத்திற்கு முன்பு வைக்கவேண்டும். சங்கத்தின் நலன்களுக்குக் கெடுதி விளைவிக்கும் வகையில் எந்த உறுப்பினருடைய நடத்தையிருந்தால், ஒவ்வோர் உறுப்பினரும், தேவைப் பட்டால் அத்தகைய தவறுசெய்யும் நபரை நீக்கும்படிக் கேட்கும் பட்சத்தில், நிருவாகக் குழுவையும், பேரவையையும் தயவு தாட்சண்யமில்லாமல் ஆதரிப்பதற்குத் தயாராக இருக்கவேண்டும்.

3. பேரவையின் கடைமைகள் (Duties of the General body):

பிரிவு 26 (2)–ன் கீழ் ஒரு பேரவைக் கூட்டம் ஆண்டுதோறும் கூட்டப்படவேண்டிய காரணங்களில் ஒன்று நிருவாகக் குழுவின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பது. தற்போதிருக்கும் சட்டப்படி 27 (3) நிருவாகக் குழுவின் உறுப்பினர்களின் மூன்றில் ஒரு பாகத்தினர் ஒவ்வோர் ஆண்டும் ஓய்வு பெறவேண்டியதாகையால் ஒவ்வொருவரிடமும், இந்தக் காலி இடங்களுக்கு நிருவாகக் குழு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் தேவையேற்படுகிறது. சந்தானம் குழுவினருடைய கருத்தில் இது ஒரு நலம் தருகிற முறையாக இல்லை. சங்கங்களுடைய இயல்பான செயல் பாட்டை வருடாந்தரத் தேர்வுகள் பாதிக்கின்றன. மேலும் தேர்தலில் காலம் அதிகமாகச் செலவழிக்கப்பட்டு தேர்தல் ஒரு வருடாந்தர அம்சமாக இருப்பதால் அது சங்கத்தில் வேலைக்கு நிலைக்குலைவு உண்டாக்குகிறது. ஆகையால், சந்தானம் குழுவினர், சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு எல்லா உறுப்பினர்களும் 3 வருட காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்றும், நிருவாகக் குழு உறுப்பினர்கள் 3 வருடங்களுக்குப் பதவி வகிக்க வேண்டும் என்றும், யோசனை கூறியுள்ளார்கள். அந்தக் குழுவினர், நிருவாகக் குழு உறுப்பினர்கள் தேர்தலைக் குறித்த 26 (2) பிரிவின் பகுதி (அ)வை எடுத்துவிடுவதற்காக பிரிவு

26 (2)-க்கு ஒரு திருத்தம் மேற்கொள்ளுமாறு யோசனை கூறியிருக்கிறார்கள் இந்த யோசனை ஒப்புக்கொள்ளத் தக்கதேயாகும்.

4. பேரவைக் கூட்டத்தைக் கூட்டவேண்டியது யார்? (Who should Convene the General Meeting ?)

இயல்பாக, ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டத்தைக் கூட்டுவதற்குத் தக்க அதிகாரம் படைத்தவர்கள் சங்கத்தின நிருவாகக் குழுவினராவர். நிருவாகக் குழு, மேலே குறிக்கப்பட்ட எந்த ஒரு செயலிற்காகவும், எந்த சமயத்திலும், ஒரு பிரத்தியேக பேரவைக் கூட்டத்தைக் கூட்டலாம் ஆனால், அத்தகைய கூட்டம் (1) உப-விதிகளில் குறிக்கப்பட்ட, மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கையில் ஒரு விகிதாச்சார எண்ணிக்கையுள்ள உறுப்பினர்களாலும், (2) சங்கம் இணைக்கப்பட்ட மேற்பார்வை ஒன்றியத்தின் நிருவாகக் குழுவாலும், (3) சங்கம் இணைக்கப்பட்ட நிதி வங்கியின் நிருவாகக் குழுவாலும், (4) அல்லது இந்தச் செயலிற்காக நிருணயிக்கப்பட்ட சங்க வகுப்பிலுள்ள எந்த ஒரு சங்கத்தாலும், (5) பதிவாளரால் கூட்டப்படவேண்டுமென்றும் விரும்பப்பட்டால் நிருவாகக் குழு அத்தகைய கூட்டத்தைக் கூட்டுவதற்குக் கடமைப்பட்டிருக்கிறது [(பிரிவு 26 (3) (அ)].

மேற்சொன்ன நபர்கள், அல்லது நிறுவனங்களில் எவராவது ஒருவர் எழுத்துமூலம் கோரினால், ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு, அத்தகைய கோரிக்கை கிடைத்த தேதியிலிருந்து ஒரு மாத காலத்திற்குள், ஒரு பேரவைக் கூட்டத்தைக் கூட்டவேண்டும். அந்தக் கோரிக்கையில் பிரத்தியேக பேரவைக் கூட்டத்தில் ஆலோசனைக்கு வைக்கப்பட வேண்டியவைகளும் கூறப்படவேண்டும் [பிரிவு 26 (3) (அ)]. நிருவாகக் குழு அத்தகைய பேரவைக் கூட்டத்தைக் கூட்டத் தவறினாலும் அல்லது மறுத்தாலும் பதிவாளர் தாமாகவே அந்தக் கூட்டத்தைக் கூட்டலாம் பிரிவு 26 4) பல காரணங்களுக்காக ஒரு பேரவைக் கூட்டம் நிருவாகக் குழுவால் கூட்டப்படத் தவறலாம். ஒரு பேரவைக்கு எதிர் முகமாய் நிற்க நிருவாகக்குழுவிற்கு விருப்பமில்லாமல் இருக்கலாம். நிருவாகக் குழுவின் புதிய தேர்தல் வரை பேரவைக் கூட்டத்தை ஒத்திப்போடவோ, அல்லது தனக்கு விருப்பமில்லாத பொருளை ஆலோசனை செய்வதை ஒத்திப்போடவோ, நிருவாகக் குழுவினர் விரும்பலாம். அல்லது நிருவாகக் குழு செயலற்றுப் போயிருக்கலாம். ஏனென்றால், அதனுடைய உறுப்பினர்கள் இறந்துவிட்டோ அல்லது சங்க எல்லையிலிருந்து வெளியே போய் விட்டோ அல்லது தகுதியற்றவர்களாகிவிட்டோ இருக்கலாம். அல்லது ஒரு தேர்தல் கூட்டத்தில் எதிரியாயிருக்கிற நிருவாகக்

குழு தேர்ந்தெடுக்கப்பட்டு, எது சட்ட ரீதியான நிருவாகக் குழுவாக தேர்ந்தெடுக்கப்பட்டது என்பதைப் பற்றி ஒரு தகராறு ஏற்பட்டிருக்கலாம். இத்தகைய சூழ்நிலைகளிலும், ஒரு பேரவைக் கூட்டம் அவசியமாகக் கூட்டப்படவேண்டுமென்று கருதப்படும் போதும், பதிவாளர் தாமாகவே ஒரு பேரவைக் கூட்டத்தைக் கூட்டலாம் [பிரிவு 26 (4) அ].

பிரிவு 26 (4) (அ)–ன் கீழ் பதிவாளரால் கூட்டப்படும் எந்தக் கூட்டத்திற்கும், கூட்டம் அறிவிப்புக் கொடுக்கப்படவேண்டிய காலவரை, கூட்டத்தின் இடம், காலம், ஆலோசிக்கப்படும் பொருள்கள் இவற்றைக் குறிக்க சங்க உப-விதிகளில் என்ன சொல்லப்பட்டிருந்தாலும், பதிவாளர் தாமாகவே நிருணயிக்கலாம். பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் பெற்ற ஒரு நபர் அத்தகைய கூட்டத்திற்குத் தலைமை வகித்து, அந்தக் கூட்டத்தின் நடவடிக்கையை நடத்திவைக்கலாம் [பிரிவு 26 (4) (அ) (iii)]. உப-விதிகள், பொதுவாக, பேரவைக்கூட்டங்களுக்குக் குறைவெண் வரம்பு நிருணயிக்கிறது. அது ஒரு சில குறிப்பிட்ட உறுப்பினர்கள் எண்ணிக்கையாகவோ, அல்லது உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் ஒரு விகிதாச்சாரமாகவோ, சாதாரணமாக மூன்றில் ஒரு பங்கு, இதில் எது குறைவோ அதுவாக இருக்கலாம். ஒரு நிகழ்ச்சியை நடத்துவதற்கு எல்லாக் கூட்டங்களுக்கும் ஒரு குறைவெண் வரம்பு (Quorum) தேவை இல்லாவிடில், ஒரு நிழ்கச்சியையும் நடத்த முடியாமல் கூட்டத்தைத் தள்ளிவைக்க வேண்டிவரும்.

மேற்குறிப்பிட்டவாறு உறுப்பினர்களின் வேண்டுகோளின் பேரிலோ [பிரிவு 25 (அ)], அல்லது பதிவாளர் தமாகவோ [பிரிவு 26 (4) (அ)] கூட்டப்பட்ட அந்தப் பிரத்தியோகக் கூட்டத்தில் குறைவெண் வரம்பு இல்லையானல் சூழ்நிலைகளுக்கேற்ப அந்தக் கூட்டம் நிருவாகக் குழு அல்லது பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட தேதிக்கும் காலத்திற்கும் தள்ளிப் போடப்படும் [பிரிவு 26 (4) அ (1)]. அப்படித் தள்ளிப்போடப்பட்ட கூட்டத்திலும் கூட நிகழ்ச்சியை நடத்துவதற்கு குறைவெண் வரம்பு வரவில்லையானல் கூட்டத்திற்கு வந்திருக்கும் உறுப்பினர்களே குறைவெண்வரம்பாக அமைவார்கள். அதாவது வந்திருக்கும் உறுப்பினர்களுடைய எண்ணிக்கை எதுவாயிருந்தாலும், குறைவெண் வரம்பு இருக்கிறதா இல்லையா என்பதைக் கவனிக்கும் தேவையில்லாமல் வழக்கம்போல் நிகழ்ச்சிகள் நடத்தப்படும் [பிரிவு 26 (4) (அ) (ii)]. இந்த ஏற்பாடுகளின் நோக்கம் ஒரு பேரவைக் கூட்டத்தில் அவசரமாக ஒரு முடிவு எடுக்கப்படா

மேலும், அதே சமயத்தில், கூட்டத்திற்கு வராமல் குறைவெண் வரம்பு அமைவதற்கு ஒத்துழைக்காமல் உறுப்பினர்கள் சங்க நிகழ்ச்சிகளை நடத்தவிடாமல் முட்டுக்கட்டையாக இல்லாமல் சங்க நிகழ்ச்சிகளை நடத்துவதற்குச் சாத்தியமாக இருக்கவேண்டும் என்பது. சட்டப் பிரிவு 26 (4) (அ) (i), சிறிய எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் கூடி அவசரத்தில் ஒரு நடவடிக்கையெடுக்காமல், போதிய எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் கூடுவதற்கு இன்னொரு வாய்ப்பு அளிக்கிறது பிரிவு 26 (4) (அ) (ii). உறுப்பினர்கள் எந்த ஒரு முட்டுக்கட்டையாக இருப்பதையும் தடுக்கிறது. ஏனென்றால், ஒரு சங்கம் அவசரமாக ஒரு செயலை நடத்துவதற்குக் காலவரம்பின்றிக் காத்திருக்க முடியாது.

பிரிவு 26 (5)-ன்கீழ், பிரத்தியேகப் பேரவைக் கூட்டத்தைக் கூட்டுவதற்கு உண்டான செலவுகளைச் சங்கம், அல்லது மேற்பார்வை ஒன்றியம், எவருடைய வேண்டுகோளின்பேரில், அக்கூட்டம் கூட்டப்பட்டதோ அந்த இதர சங்கத்திடமிருந்து, அல்லது பதிவாளர் அபிப்பிராயத்தில் பிரிவு 26(4)-ன்கீழ் அந்தக் கூட்டத்தைக் கூட்டத் தவறியதற்கு, அல்லது மறுத்ததற்கு பொறுப்பாகவுள்ள வேறு நபர்களிடமிருந்து வசூலிப்பதற்குப் பதிவாளருக்கு அதிகாரம் உண்டு. ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு, [பிரிவு 26 (3) அ]-ல் குறிக்கப்பட்ட நபர்களால் கோரப்பட்டால், இயல்பாகப் பேரவைக் கூட்டங்களைக் கூட்டுவதை உறுதி செய்வதற்காக இது ஒரு சிறிய ஏற்பாடாகும். மேலும், கூட்டத்தைக் கூட்டுவதற்காக உண்டான செலவுகளைப் போதிய காரணமில்லாமல் ஒரு கூட்டத்தை விரும்பியவர்கள், அல்லது கூட்டம் நடத்துவதற்குத் தடையாக இருந்தவர்கள் ஏற்றுக் கொள்ளவேண்டியதையும், இந்தப் பிரிவு உறுதிப்படுத்துகிறது. நியாயமான செயல்களுக்காக நிருவாகக் குழு ஒரு கூட்டத்தைக் கூட்டாமலிருந்தால், சங்கத்திடமிருந்தே வழக்கமான முறையில் இந்தச் செலவுகளைத் திரும்பப் பெறலாம். சங்கம் அல்லது அந்த நபரிடமிருந்து இந்தச் செலவுகளைத் திரும்பப்பெற வேண்டும் என்கிற முடிவு பதிவாளருக்கு விடப்பட்டிருக்கிறது [பிரிவு 26 (5).

முன்னர் கூறியபடி, பதிவாளர் நிருவாகக் குழுவை ஒரு பேரவைக் கூட்டம் கூட்டவேண்டுமென்று கட்டளையிடலாம் [பிரிவு 26 (3) (அ)]. அத்தகைய சூழ்நிலை பிரிவு 65-ன் கீழ், பதிவாளர் ஒரு விசாரணையை நடத்தும்போது எழும். பிரிவு 65-ன் கீழ், விசாரணை செய்யும் அலுவலர், அவரால் குறிக்கப்படும் பொருள்களை ஆலோசிப்பதற்கு, சங்கத்தின் ஒரு பேரவைக் கூட்டத்தைக் கூட்டவேண்டுமென்று நிருவாகக் குழுவிற்கு அவர் கட்டளையிட அதிகாரம் பெற்றிருக்கிறார். சங்கத்தின் அந்தப்

பேரவைக் கூட்டத்திற்காக உப-விதிகளில் அறிவிப்பு காலவரையைப்பற்றி என்ன சொல்லப்பட்டிருந்தபோதிலும், அவரால் நிர்ணயிக்கப்பட்ட இடம், தேதி காலத்தில் கூட்டத்தைக் கூட்டவேண்டுமென்று அவர் கட்டளையிடலாம். இந்தக் கூட்டம், பிரிவு 26–ன் பகுதி (அ) அல்லது, உட்பிரிவு 3-ன் கீழ் பதிவாளருடைய வேண்டுகோளை அனுசரித்துக் கூட்டப்படும் கூட்டத்திற்குச் சமமானது. பிரிவு 26–ன் உட்பிரிவு (4)-ன் பகுதி (அ)–ன் உப-விதி (2)–ன் சரத்துகள் அத்தகைய கூட்டத்திற்கும் பிரயோகிக்கப்படும். (அதாவது, அத்தகைய கூட்டத்தில் குறைவெண் உறுப்பினர்களில்லாமலிருப்பதைக் குறித்த சரத்து) முதல் சமயத்தில், குறைவெண் வராமலிருந்தால், கூட்டம் ஒரு பிந்திய தேதிக்கும் காலத்திற்கும் தள்ளிப் போடப்படும்.

இரண்டாவது சமயத்திலும் கூடக் குறைவெண் (Quorum) இல்லாமலிருந்தால், கூட்டம் முழுச்சம்போல், குறைவெண் இருந்தாலும் அல்லது இல்லாவிட்டாலும் அதைப் பொருட்படுத்தாமல், தன் செயல்களை நடத்திவிடும்.

5. பேரவைக் கூட்டத்திற்குத் தலைமை வகிக்க வேண்டியவர் யார்? (Who should preside over the general meeting):

ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டத்தில சங்கத்தின் தலைவர் தலைமை வகிப்பார். அவர் கூட்டத்திற்கு வரவில்லையானால், பேரவைக் கூட்டத்திற்கு வந்திருக்கும் உறுப்பினர்களிலிருந்து கூட்டத்திற்குத் தலைமை வகிக்க ஒரு தலைவரை பேரவை தேர்ந்தெடுக்கும். சங்கத்தின் அலுவல்களில் எந்த ஒரு சங்கத்தின் உறுப்பினரும் ஒன்றுக்கு மேற்பட்ட வாக்கு அளிக்கக்கூடாது. வாக்குகள் சமமாக இருந்தால், கூட்டத்தின் தலைவர் ஒரு முடிவுவாக்கினை (Casting vote) அளிக்கலாம். இந்த முடிவுவாக்கினை ஒரு தேர்தல் கூட்டத்தில் வாக்குகள் சமமாக இருக்கும்போது மட்டும்தான் பயன்படுத்த முடியும். மற்ற எல்லாச் சமயங்களிலும், எந்தச் சூழ்நிலையிலும், பேரவைக் கூட்டத்திற்கு வந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில பெரும்பான்மையரால்தான் ஒரு முடிவு எடுக்கப்படவேண்டும். சில பொருள்களில மட்டும் ஒரு சாதாரண பெருப்பான்மையிருந்தால் போதுமானதல்ல. சில பொருள்களில் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு ஒரு சாதாரண பெரும்பான்மையைவிட அதிகமான உறுப்பினர்களுடைய அங்கீகாரம் தேவைப்படுகிறது. உதாரணமாக, பிரிவு 20 (1)–ன் கீழ், ஓர் உறுப்பினரை விலக்குவது தொடர்பாகக் கூட்டத்திற்கு வரும் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் 2/3–க்குக் குறையாத உறுப்பினர்கள் அத்தகைய உறுப்பினரை விலக்குவதற்கு வாக்களிக்கப்படவேண்டும்.

பிரிவு 13 (1)-ன்கீழ், ஒரு சங்கத்தைப் பிரிப்பது தொடர்பாக எழும் பிரச்னையாக் கூட ஒருசங்கத்தை இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்களாகப் பிரிப்பதற்கு நிறைவேற்றப்பட்ட ஆரம்பத் தீர்மானமும், புதியசங்கங்களின் உத்தேசிக்கப்பட்ட உப. விதிகளும், கூட்டத்திற்கு வந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3-க்குக் குறையாத பெரும்பான்மை உறுப்பினர்களால், ஒரு தீர்மானமூலம் உறுதிப்படுத்தவேண்டும். அதே மாதிரியாக, பிரிவு 13/2-ன் கீழ் சங்கங்களை இணைப்பு செய்வதில், ஒன்று சேர இணைய உத்தேசிக்கும் சங்கங்களின் கூட்டுக் கூட்டத்தில் (Joint Meeting) சம்பந்தப்பட்ட சங்கங்களின் ஆரம்பத் தீர்மானமும் (Preliminary Resolution) ஒன்றாக இணைக்கப்பட்ட புதிய சங்கத்தின் உத்தேச உப-விதிகளும், அக் கூட்டத்திற்கு வந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3-க்குக் குறையாத பெரும்பான்மை உறுப்பினர்களால் ஒரு தீர்மானத்தின்மூலம் உறுதிப்படுத்தப்படவேண்டும். மற்றும், பிரிவு 14 (1)-ன்கீழ், பதிவு செய்யப்பட்ட சங்கங்களிடையே சொத்துப் பொறுப்புகளை மாற்றுதல் செய்வதிலும்கூட, சொத்துப் பொறுப்புகளை மாற்றுதலைக் குறித்த தீர்மானம், பிரத்தியேகமாக அந்தச் செயலுக்காகக் கூட்டப்பட்ட ஒவ்வொரு சங்கத்தின் பேரவைக் கூட்டத்தில் அக் கூட்டத்திற்கு வந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3-க்குக் குறையாத பெரும்பான்மை உறுப்பினர்களால், உறுதிப்படுத்தப்பட வேண்டும். மற்றும், பிரிவு 16-ன்கீழ் ஒரு சங்கத்தை ஒரு வகுப்பிலிருந்து இன்னொரு வகுப்புக்கு மாற்றுவதைக் குறித்த ஆரம்பத் தீர்மானம், 12ஆம் விதியின்படி கூட்டத்திற்கு வந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3-க்குக் குறையாத பெரும்பான்மை உறுப்பினர்களால் உறுதிப்படுத்தப்பட வேண்டும். மற்றும், பிரிவு 5-ன்கீழ் ஒரு சங்கம் தன்னுடைய பொறுப்பை வரையறுக்கப்பட்டதிலிருந்து வரையறுக்கப்படாததிற்கு அல்லது வரையறுக்கப்படாததிலிருந்து வரையறுக்கப்பட்டதிற்கு மாற்ற உத்தேசித்தால், தன்னுடைய உப-விதிகளுக்குத் தேவையான திருத்தங்கள், கூட்டத்திற்கு வந்து, வாக்களிக்கும் உறுப்பினர்களில் 2/3-க்குக் குறையாத பெரும்பான்மை உறுப்பினர்களால் நிறைவேற்றப்படும் ஒரு தீர்மானத்தின்மூலம் அங்கீகரிக்கப்பட வேண்டும். இந்த செயல்களில் ஒரு சாதாரண பெரும்பான்மையாக இல்லாமல், 2/3 பெரும்பான்மையாக இருக்கவேண்டுமென்று வற்புறுத்தப்படுவது, மாறுதல்கள் முக்கியத்துவம் வாய்ந்தவையாகவும், சங்க அமைப்பையே மாற்றுவதைக் குறித்தவையாகவும், பொதுவாக உறுப்பினர்களைப் பாதிக்கும் நிகழ்ச்சிகளாகவும் இருப்பதால்தான்.

95ஆம் விதியின்கீழ், ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டம் அதன் அலுவலகக் (Office) கட்டிடத்தில் மட்டும்தான் நடத்தப் படவேண்டும். சங்கத்தின் அலுவலகம் இல்லையானாலும், அல்லது அதன் அலுவலகக் கட்டிடம் ஒரு கூட்டத்தை நடத்துவதற்கு மிகச் சிறியதாக இருந்தாலும், சங்கத்தின் தலைமையிடத்தில் ஒரு தகுந்த பொதுவிடத்தில் கூட்டம் நடத்தப்படவேண்டும். கூட்டம் நடத்தப்படும் இடம் உறுப்பினர்கள் சுலபமாக வரக்கூடியதாக இருக்கவேண்டும். இதன் கருத்து, கூட்டம் நடத்தப்படும் இடம் உறுப்பினர்கள் வருவதற்கு யாதொரு தடையும் இலலாததாக இருக்கவேண்டும் என்பது தெளிவு. கூட்டத்திற்குச் சில நபர்கள் வருவதைத் தடுப்பதாக ஓர் அபிப்பிராயத்தைக் கொடுக்கும் கட்டிடங்களில் கூட்டம் நடத்தப்படக்கூடாது. உதாரணமாக, ஓர் அரசியல் கட்சிக்குச் சொந்தமான ஒரு கட்டிடத்தில், அல்லது ஓர் ஆலயம், மாதாக் கோயில், அல்லது மசூதி போன்ற ஒரு மத தொடர்பான இடத்தில் சாதாரணமாக ஒரு கூட்டம் நடத்தப்படக்கூடாது. எல்லா உறுப்பினர்களும் தாராளமாகக் கூட்டத்திற்கு வருகை புரியக்கூடிய இடமாக அது இருக்க வேண்டும்.

உப-விதிகளின் சரத்துகளுக்குப் பேரவை உட்பட்டது: ஒரு பெரிய பேரவை ஒரு சங்கத்தின் நிருவாகத்தின் ஒவ்வொரு விபரத்தையும் கவனிக்க முடியாது. ஆகையால், பேரவை தன் அதிகாரங்களில் பலவற்றைச், சங்கத்தின் நிருவாகக் குழு என்று அழைக்கப்படு வதும், தங்களால் தேர்ந்தெடுக்கப்படுவதுமான, ஒரு சிறிய குழு வினிடம் ஒப்படைக்கிறது. ஆனால், உபவிதிகளில் தனக்கென்று பிரத்தியேகமாக ஒதுக்கப்பட்ட அதிகாரங்களை நிருவாகக் குழு விற்கோ, அல்லது வேறு எந்த குழுவிற்கோ அது ஒப்படைக்க முடி யாது; ஒப்படைக்கவும் கூடாது. இந்த நிருவாகக் குழுவை, அல்லது நிருவாகக் குழுவின் உறுப்பினரைப் பேரவை தேவையாகக் கருதும்போதெல்லாம் எடுத்துவிடலாம்; அது ஒரு புதிய நிருவாகக் குழுவை அல்லது புதிய நிருவாகக் குழு உறுப்பினரைத் தேர்ந் தெடுக்கலாம். பேரவையால் தீர்மானிக்கப்படும் எந்த ஒரு யோசனையையும் அல்லது போதனையையும், நிருவாகக் குழு அதனுடைய கடமைகளை நிறைவேற்றும்போது பின்பற்ற வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஒரு சங்கத்தின் நிரு வாகத்தைக் குறித்த எல்லாச் செயல்களிலும் பேரவைதான் அறுதி அதிகாரம் படைத்தது என்றாலும், அது, உப-விதியின் கீழ் கொடுக் கப்பட்டுள்ள தன் அதிகாரங்களைச் செலுத்துவதற்காக நிருவாகக் குழு எடுக்கும் எந்த நடவடிக்கைகளிலும், தலையிடக்கூடாது. பேரவையும் கூட, சட்டம் விதிகள், உப-விதிகள் இவற்றின் கட்டுக்

கோப்புக்குள்தான், செயல்படவேண்டும் [பிரிவு 26 (1) விலக்கு கூறு]. உதாரணமாக, ஒரு சிப்பந்தியை அமர்த்தும் அதிகாரம் சங்கத்தின் தலைவர் அல்லது நிருவாகக் குழுவின் வசமிருக்கும் போது, பேரவை, அவ்வாறு ஒருவரை அமர்த்திய பின் அதில் தலையிடக் கூடாது. ஆனால் ஒரு சிப்பந்திக்கிருக்க வேண்டிய தகுதிகளை அது உப-விதிகளில் நிருணயிக்கலாம்.

6. பிரதிநிதித்துவப் பேரவை (Representative General Body)

உறுப்பினர்கள் அதிகமாகவும், ஒரு பரந்த எல்லையில் சிதறியுமிருக்கும் சில சங்கங்களில், சாதாரணப் பேரவை சுலபமாகக் கூடவும் அல்லது உறுப்பினர்கள் சுலபமாகக் கூட்டத்திற்கு வரவும் முடியாது. ஆகையால், அதன் பிரதிநிதிகளடங்கிய ஒரு சிறிய பேரவையின் தேவை எழுகிறது. கூட்டுறவுச் சட்டக்குழு அத்தகைய தேவையை ஏற்றுக்கொண்டு, அவர்கள் தயாரித்த மாதிரி கூட்டுறவு மசோதாவின் 25, 26, 27ஆம் பகுதிகளில் பிரதிநிதிகளடங்கிய ஒரு சிறியபேரவை சாதாரணப் பேரவைக்குப்பதிலாக இயங்குவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அத்தகைய சிறிய பேரவை 'பிரதிநிதித்துவப்பேரவை' என்றபெயரில் அமைப்பதற்கு, 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 26 (1) (அ)-ம் பிரிவில், சரத்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது; சென்னை மாநிலத்தில் இயங்கும் டி.யு.சி.எஸ். (T. U. C. S) நிறுவனம் இதற்கு ஓர் உதாரணம். 69 கிளைகளும் சுமார் 80,000 உறுப்பினர்களும், கொண்ட அந்தச் சங்கத்தில், அதிகமான உறுப்பினர்கள் இருக்கும் காரணத்தால், ஒரு பிரதிநிதித்துவப் பேரவையின் தேவை தெளிவு. முந்தைய அரை வருடத்தில் ரூபாய் நூற்றுக்குக் குறையாத மதிப்புள்ள பொருள்களைச் சங்கத்திலிருந்து வாங்கிய எல்லா உறுப்பினர்களும் சங்கத்தின் முழுப் பேரவையாக அமைகிறார்கள். சங்கத்தின் அமைப்பு, நிருவாகம் உட்பட, எல்லாச் செயல்களிலும் இந்தப் பேரவைக்கு அறுதி அதிகாரம் உண்டு. உப-விதிகளின்படி இந்த முழுப்பேரவையிலிருந்து பிரதிநிதித்துவப் பேரவை அமைக்க வேண்டியிருக்கிறது. இந்தப் பிரதிநிதித்துவப் பேரவை, கீழ்க்கண்டவர்களைக் கொண்டதாயிருக்கவேண்டும்.

(அ) கிளைகளின் பஞ்சாயத்தார்களாகத் தேர்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள்.

(ஆ) சங்கத்தின் இயக்குநர்கள்.

ஒவ்வொரு கிளையிலும் 10 பஞ்சாயத்தார்களும், ஓர் இயக்குநரும் இருக்கிறார்கள். அரையாண்டு வரவு செலவுத் திட்டத்தை

அங்கீகரித்தல், தணிக்கை சான்றை ஆலோசனை செய்தல், முழுப் பேரவைக்கு அளிக்கப்பட்டுள்ள அங்கீகாரங்களுக்குட்பட்டு உப-விதிகளுக்குத் திருத்தங்கள் செய்தல், அசையாச் சொத்துகளை வாங்குதல் முதலியன போன்ற அதிகாரங்கள் ஒவ்வொரு கிளை நிறுவனத்திற்கும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சங்கத்தின் அமைப்பு நிர்வாகமுட்பட எல்லாச் செயல்களிலும் முழுப் பேரவை இறுதி அதிகாரம் வாய்ந்தது. எனினும், அது, இயக்குநர் குழுவின் நடவடிக்கைகளிலும் அல்லது தனக்களிக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தைப் பிரயோகிக்கும் வகையில் பிரதிநிதித்துவப் பேரவை எடுக்கும் நடவடிக்கைகளிலும், தலையிடக்கூடாது. கீழ்க்கண்ட செயல்கள் முழுப் பேரவையால் மட்டும்தான் முடிவு கட்டப்படவேண்டும். (அ) சங்கத்தின் பொறுப்பு வகையை மாற்றுவது; (ஆ) சங்கத்தைப் பிரிப்பது அல்லது இணைப்பது (இ) பிரதிநிதித்துவப் பேரவைக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களைத் திருத்தம் செய்தல். விதி 28 (3) (ஆ) (ii)-ன்கீழ், பிரதிநிதித்துவப் பேரவையின் எண்ணிக்கை (Strength) 400-க்கு மேற்படக் கூடாது. ஆகையால் இந்த விதியின்படி பிரதிநிதித்துவப் பேரவையின் எண்ணிக்கையை 400-க்கு மேற்படாமலிருக்க டி யூ சி.எஸ். (T.U.C.S) நிறுவனம் தன் 69 கிளைகளில் ஒவ்வொன்றிலும், பஞ்சாயத்தார்களின் எண்ணிக்கையை 10-லிருந்து குறைப்பதற்கோ அல்லது தக்க எண்ணிக்கையை நிருணயிப்பதற்கோ ஒரு திருத்தம் தேவைப்படுகிறது. மேலும், ஒரு சங்கத்தின் விவகார எல்லை பெரியதாகியிருந்து அதன் உறுப்பினர்கள் மாநிலத்தில் பல்வேறு பாகங்களிலும் அல்லது மாநிலங்களிலும் சிதறிக் கிடந்தால், ஒரு பிரதிநிதித்துவப் பேரவை தேவைப்படுகின்றது. உதாரணமாக, தென்மாநில இரயில்வே ஊழியர்கள் கூட்டுறவுச் சங்கத்தின் விவகார எல்லை தமிழ்நாட்டில் மட்டுமல்லாமல் தென்னக இரயில்வே மாநிலம் முழுவதிலும் நீடிக்கிறது. இத்த இரண்டுவித நிறுவனங்களுக்காக பிரிவு 26 (ஆ)-லும், விதி 28-லும் பிரதிநிதித்துவப் பேரவையமைப்பதற்காக ஒரு சரத்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

பிரிவு 26 (ஆ)-ன்படியும், விதி 28-ன்படியும், பிரதிநிதித்துவப் பேரவை கீழ்க்கண்ட முறையில் அமைக்கப்படவேண்டும். அத்தகைய பிரதிநிதித்துவப் பேரவை, சங்கத்தின் விருப்பத்தின் காரணமாகவோ அல்லது பதிவாளரிடமிருந்து ஒரு கட்டளையின் கீழோ, அமைக்கப்படலாம். ஒரு சங்கத்தின் விவகார எல்லை, ஒன்றுக்கு மேற்பட்ட வருவாய்த்துறை மாவட்டத்திற்கு நீடித்திருந்தாலும் அல்லது ஒரு சங்கத்தில் உறுப்பினர்களின் எண்ணிக்கை 5000-க்கும் அதற்கு மேற்பட்டுமிருந்தாலும் பிரதி

நிதித்துவப் பேரவை அமைக்கப்படவேண்டும் [விதி 28 (ii)] அத்தகைய ஒரு பிரதிநிதித்துவப் பேரவை, பிரிவு 11-ன்கீழ் சங்கத்தின் உப-விதிகளுக்கு ஒருதிருத்தத்தின்மூலம், அமைக்கப்பட வேண்டும். பிரதிநிதித்துவப் பேரவை எப்படி அமைக்கப்பட வேண்டும் என்பதையும், அதன் அதிகாரங்கள் யாவை என்பதையும் உப-விதிகள் ஏற்பாடு செய்யவேண்டும். விதி 28 (2)-ன்கீழ், பிரதிநிதித்துவப் பேரவை ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு உறுப்பினர்களையும், உப-விதிகளில் குறிக்கப்படும் எல்லையில் வசிக்கும் அல்லது உறுப்பினர் வகையைச் சேர்ந்த உறுப்பினர்களின் பிரதிநிதிகளையும் கொண்டதாகயிருக்க வேண்டும். அத்தகைய பிரதிநிதிகள், அத்தகைய உறுப்பினர்களின் ஒரு பிரத்தியேகக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

பேரவைக்கு ஒவ்வோர் எல்லையிலிருந்தும் அல்லது உறுப்பினர்கள் வகையிலிருந்தும் பிரதிநிதிகள் தேர்ந்தெடுப்பதற்கு ஓர் ஏற்பாடு செய்யப்படும்பொழுது ஒவ்வோர் எல்லையிலும் வசிப்பவர்களிலிருந்து அல்லது ஒரேஉறுப்பினர் வகையைச் சேர்ந்தவர்களிலிருந்து குறைந்த பட்சம் 100 உறுப்பினர்கள் இருக்கும்வண்ணம் அந்த ஏற்பாடு செய்யப்படவேண்டும் [விதி 28 (2)]. ஒரு சங்கத்தின் உறுப்பினர்களின் எண்ணிக்கை 20,000-க்கு மேற்படாமலிருந்தால் எந்த ஒரு பிரதிநிதித்துவப் பேரவையின் மொத்த எண்ணிக்கை 200-க்கு மேற்படாமலும், மற்ற எல்லா நேரங்களிலும் 400-க்கு மேற்படாமலும் இருக்க வேண்டும். உப-விதிகளில் குறிக்கப்பட்டபடியும், விதிகளிலும் அல்லது உப-விதிகளிலும் நிருணயிக்கப்பட்ட கட்டுப்பாடுகளுக்கும் நிபந்தனைகளுக்குமுட்பட்டும், பேரவையால் கொடுக்கப்பட்ட அதிகாரங்களை மட்டும்தான் இந்தப் பிரதிநிதித்துவப் பேரவை கையாளமுடியும். எப்படியிருந்தாலும், தன்னுடைய அமைப்பு, அல்லது அதிகாரங்களைக் குறித்து உப-விதிகளிலிருக்கும் எந்தச் சரத்தையும் திருத்தம் செய்ய பிரதிநிதித்துவப் பேரவைக்கு அதிகாரம் கிடையாது. சிறிய பேரவையை அமைப்பதன் மூலம் அதிக உறுப்பினர்கள் அல்லது பரந்த எல்லையில் உறுப்பினர்கள் சிதறிக்கிடப்பதால் சங்கத்தின் எல்லா உறுப்பினர்களும் ஒரு பேரவைக் கூட்டத்திற்கு வருவதில் உண்டான தொல்லைகள் தவிர்க்கப்படுகின்றன.

**7. சங்கத்தின் நிருவாகக் குழுவை அமைத்தல் [பிரிவுகள் 27,28,28 (அ)] (Construction of Committees of Societies)**

நிருவாகக் குழுவின் தேவை முன்னமே கூறியபடி ஒரு சங்கத்தின் பேரவை சங்கத்தின் வேலையைப் பற்றிய ஒவ்வொரு விபரத்தையும் கவனிக்கமுடியாது. சங்கத்தின் விபரமான

நிருவாகம் ஒரு சிறிய குழுவிற்கு ஒப்படைப்பது இன்றியமை யாததாக இருக்கிறது. உண்மையாகவே இந்தக் குழு, பேரவையின் ஒரு பிரதிநிதியாக அநேகமாகச் செயல்பட்டுப் பேரவையின் எல்லா யோசனைகளையும், கட்டளைகளையும் நிறை வேற்றும். சங்கத்தின் வேலை விபரங்கள் நிருவாகம் முழுவதும் அவர்கள் கையிலிருப்பதால், நிருவாகக் குழுவிற்குச் சரியான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதன் முக்கியத்துவத்தை மிகவும் அதிகமாக வற்புறுத்த வேண்டுவதில்லை. நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள் உண்மையான கூட்டுறவு உணர்ச்சி படைத்த, சுயநலமற்ற, மேன்மையான, தொண்டர்களாகயிருக்கவேண்டும். அவர்கள் பிறர் நன்மைக்காகப் பணியாற்றும் ஆர்வம் உள்ளவர் களாகவும் இருக்கவேண்டும். சுயஉதவி, செயலில் ஒழுங்குக் கட்டுப்பாடு, விசுவாசம் போன்ற கொள்கைகளைப் பின்பற்ற வேண்டிய தேவையை உறுப்பினர்களுக்குணர்த்தும் ஆற்றலுடை யவர்களாகவும் அவர்களிருக்கவேண்டும். சங்கத்தில் தாங்கள் வகிக்கும் பதவியை ஓர் அதிகார, ஆதரவு பீடமாக அவர்கள் கருதக்கூடாது. அவர்கள் தீவிர அரசியல் அல்லது சமுதாயக் கண்ணோட்டங்களால் உந்தப்படாமல், சரியான தொழில் முறையில் சங்கத்தின் அலுவல்களை நிருவகிக்கவேண்டும்.

நிருவாகக் குழுவின் பெயர்: ஒரு சங்கத்தின் அலுவல்களின் நிருவாகம் ஒப்படைக்கப்பட்ட நிருவாகக் குழு, விவசாய நாணயச் சங்கங்களில் 'பஞ்சாயத்து' (Panchayat) என்றும், பொதுவாக இதர சங்கங்களில் 'இயக்குநர்களவை, (Board of Directors) என்றும் அழைக்கப்படுகிறது. பொதுவாக 'நிருவாக அவை' (Board of Management) என்ற சொற்றொடர்கூட தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி போன்ற சில கூட்டுறவு நிறுவனங்களில் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. எல்லாவிதச் சங்கங்களின் நிருவாகக் குழுவும் ஒரு பொதுவான பெயரால் அழைக்கப்படுவது விரும்பத் தக்கதாக உள்ளது. சந்தானம் குழுவினர், 'இயக்குநர்கள் அவை' (Board of Directors), என்ற சொற்றொடரை எல்லாவித சங்கங்களின் நிருவாகக் குழுவிற்கும் - பிரதம சங்கங்களும் கூட்டிணைப்புச் சங்கங்களும் - பயன்படுத்த வேண்டும் என்று சிபாரிசு செய்தனர். சட்டத்திற்கும், விதிகளுக்கும் ஒரு திருத்தம் இதற்காக தேவையில்லையென்றும், இது சங்கத்தின் உப-விதி களில் தேவையான திருத்தங்கள் மூலம் பதிவாளருடைய நிருவாகக் கட்டளையினால் செயல்படலாம், என்றும் அவர்கள் கூறினார்கள்.

நிருவாகக் குழுவிற்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதும், நியமனம் செய்வதும் முறைப்படியான தேர்தலுக்கு முன்பு, இடைக்

கால நிருவாகக் குழு:—புதியதாகப் பதிவு செய்யப்பட்ட சங்கங்களில் உறுப்பினர்கள்கூடி நிருவாகக் குழுவைத் தேர்ந்தெடுப்பதற்குச் சில காலமாகிறது. அந்தக் காலம்வரை சங்கத்தைத் துவக்குவது தொடர்பான வேலையைச் சங்கம் இயங்கும்வரை கவனிப்பதற்கு எவராவது சிலர் நிருவாகம் செய்யவேண்டும். ஆகையால், அத்தகைய ஒரு நிருவாகக் குழுவை அமர்த்துவதற்குப் பிரிவு 27 (1)-ல் ஓர் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஒரு சங்கத்தை நிறுவுவதற்கு விண்ணப்பம் செய்தவர்களில 5-க்கு மேற்படாத நபர்களை அந்த நிருவாகக் குழுவிற்கு அமர்த்தலாம். அத்தகைய நிருவாகக் குழு, சங்கத்தின் பதிவு தேதியிலிருந்து மூன்று மாத காலத்திற்கு அல்லது பதிவாளர் தேவையாகக் கருதும் இன்னும் மேற்பட்ட காலத்திற்குச் சங்கத்தின் அலுவல்களை நடத்தலாம். இந்த நபர்களின் பெயர்கள், சங்கத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பத்தில், குறிப்பிடப்படவேண்டும் (பிரிவு 8-ம், விதி ii 3-ப்). அந்த நிருவாகக் குழு இயங்குவது, சங்கத்தின் உட-விதிகளின் கீழ் ஒரு நிருவாகக் குழுவை அமைத்தவுடன், நின்றுவிடும். அதே மாதிரியாக, இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்களாகப் பிரிந்துகொள்ள விரும்பும் சங்கமும், இடைக்கால நிருவாகக் குழுவை அமைக்கலாம் [பிரிவு 13 (1)]. ஒரே சங்கமாக இணைந்துகொள்வதற்கு விரும்பும் சங்கங்களிலும் அத்தகைய இடைக்கால நிருவாகக் குழுக்களையமைக்கலாம் [பிரிவு 13 (2)] அத்தகைய நிருவாகக் குழுக்களை அமைப்பதற்கு கையாளவேண்டிய நடைமுறையும், அவைகளின் பதவிக் காலமும், முறையே, விதிகள் 32, 33-ல் விபரமாக வருணிக்கப்பட்டிருக்கின்றன.

32ஆம் விதியின்கீழ் சங்கங்களைப் பிரிக்கும் நேரத்தில், மூலச் சங்கத்தின் உறுப்பினர்களில் புதிய சங்கங்களிலுறுப்பினர்களாக இருக்க விரும்புபவர்கள், சங்கத்தைப் பிரிப்பதற்கான முதல் தீர்மானம் ஆலோசிக்கப்படும் பேரவைக் கூட்டத்தில், தங்களுக்குள் ஐந்து நபர்களுக்குக் குறையாதவர்களைக் கொண்ட ஓர் இடைக்காலக் குழுவைப், புதிய சங்கங்களின் அலுவல்களை நடத்துவதற்குப் பதிவுத்தேதியிலிருந்து மூன்று மாத காலத்திற்கு அல்லது, பதிவாளரால் விரும்பப்படும் மேற்பட்ட காலத்திற்குத் தேர்ந்தெடுக்கலாம். அந்த இடைக்கால நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள் தங்களுக்குள் ஒருவரைத் தலைவராக அமர்த்திக் கொள்வார்கள். சங்கம் பதிவு செய்யப்பட்டவுடன், அதன் அலுவல்களை நடத்துவதற்கு இடைக்கால நிருவாகக் குழு பொறுப்பு ஒப்புக்கொள்ளும். அது மூல சங்கத்தின் ஆவணங்கள்,

பணம் முதலியவற்றின் பொறுப்பை ஒப்புக்கொண்டு மூன்றுமாத கால வரைக்கும் முறையாகப் பணியாற்றும். அது இடையில் சங்கத்தின் உப-விதிகளின்படி ஒரு முறையான நிருவாகக் குழுவை அமைப்பதற்காக ஏற்பாடு செய்யும். அவ்வண்ணம் தேர்ந்தெடுக்கப்பட்ட முறையான நிருவாகக் குழு சங்க வேலையை ஒப்புக்கொண்டு வழக்கம்போல் இயங்கும்.

பிரிவு 13 (2)-ன் கீழ், இணைக்கப்பட்ட சங்கத்திலும் இணைக்கப்பட்ட சங்கத்தின் இடைக்கால நிருவாகக் குழுவை அமைப்பதற்கு அனுசரிக்க வேண்டிய நடைமுறை 33ஆம் விதியில் விளக்கப்பட்டிருக்கிறது. இந்த விதியின்கீழ், சங்கங்களின் முதல் தீர்மானம் ஆலோசிக்கப்படும் சங்கங்களின் கூட்டுக்கூட்டத்தில், உறுப்பினர்கள் தங்களுக்குள் ஐந்து நபர்களுக்கு மேற்படாதவர்களை இடைக்கால நிருவாகக் குழுவாகத் தேர்ந்தெடுத்து, இணைக்கப்பட்ட சங்கம் பதிவான தேதியிலிருந்து மூன்றுமாத காலத்திற்கு அல்லது பதிவாளர் கட்டளையிடும் மேற்பட்ட காலத்திற்குச் சங்கத்தின் அலுவல்களை அந்த இடைக்கால நிருவாகக் குழு நடத்தும். இடைக்கால நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள் தங்களுக்குள் ஒரு தலைவரை அமர்த்துவார்கள். இணைக்கப்பட்ட சங்கம் பதிவானவுடனே இடைக்கால நிருவாகக் குழு அதன் அலுவல்களின் பொறுப்பை ஒப்புக்கொண்டு ஒரு நிருவாகக் குழுவின் எல்லா அதிகாரங்களையும் கையாண்டு இயங்கும். தன்னுடைய பதவிக்காலம் முடிவடையும் முன்பு உப-விதிகளின்படி ஒரு முறையான நிருவாகக் குழுவை தேர்ந்தெடுக்க ஏற்பாடு செய்து, பிறகு புதியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நிருவாகக் குழுவிடம் சங்க நிருவாகத்தை ஒப்படைத்துவிட்டு, அது இயங்காமல் நின்றுவிடும். எனவே, விதிகள் 32-ம், 33-ம், பிரிப்பது அல்லது இணைப்பது மூலம் நிறுவப்படும் புதிய சங்கத்தின் அல்லது சங்கங்களின் அலுவல்களை நிருவாகம் செய்வதற்கு உப-விதிகளின்கீழ் முறைப்படி நிருவாகக் குழு ஒன்று அமைக்கப்படும்வரை இந்த இடைக்கால ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றன.

உப-விதிகளின்கீழ் அமைக்கப்பட்ட நிருவாகக் குழு-தேர்தலும் அல்லது நியமித்தலும்; ஒரு சங்கத்தில் உப-விதிகளிலடங்கிய சரத்துகளின்படி, சங்கங்களின் நிருவாகக் குழுக்கள் அமைக்கப்படுகின்றன. நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள் பொதுவாக ஒரு சங்கத்தின் பேரவையால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். சில சூழ்நிலைகளில், நிருவாகக் குழுவின் உறுப்பினர்களை அரசாங்கத்தாலாவது, அல்லது பதிவாளராலாவது நியமிக்கப்படுகிறார்கள்.

வேறு சில சூழ்நிலைகளில், நிருவாகக் குழுவின் சில உறுப்பினர்கள் மட்டும் அல்லது ஒரு பாகத்தினர் மட்டும் அரசாங்கம் அல்லது பதிவாளரால் நியமிக்கப்படுகின்றனர். சில சூழ்நிலைகளில், நிதி வங்கியும்கூட நிருவாகக் குழுவிற்கு உறுப்பினர்களை நியமனம் செய்கிறது. எனினும், நியமனம் செய்தும்கூட ஒரு நிருவாகக் குழு அமைக்கப்படலாம் என்பது, பிரிவு 27 (1)-ல் தெளிவாகக் கூறப்படவில்லை; அதாவது, சங்கத்தின் பேரவையில் தேர்ந்தெடுக்கப்படாமல் வேறு வகையில் நிருவாகக் குழுவை அமைப்பது சந்தானம் குழுவினர். ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு அதன் பேரவையால் தேர்ந்தெடுக்கப்படாமல் வேறு வகையில் அது அமைக்கப்படுவதை அனுமதிக்கும் வண்ணம், 27ஆம் பிரிவின் உட்பிரிவு, நிருவாகக் குழு உறுப்பினர்களை நியமனம் மூலம் அமைப்பதற்குத் திருத்தம் செய்யப்படவேண்டும் என்று, கூறியிருக்கிறார்கள். அப்படி அமைக்கப்பட்ட நிருவாகக் குழுவினரின் அதிகாரங்களின் இயல்பையும் ஆதாரத்தையும் காட்டுவதற்குச் சட்டத்திலும், விதிகளிலும், உப-விதிகளிலும் வழங்கப்பட்ட அதிகாரங்களை அந்தகைய நிருவாகக் குழு கையாளலாம் என்று இந்தப் பிரிவில் குறிக்கப்பட வேண்டுமென்றும்கூட சந்தானம் குழுவினர் கருதினர். ஆகையால், அவர்கள்; பிரிவு 27 (1)-க்குக் கீழ்க்கண்ட திருத்தத்தைச் சிபாரிசு செய்திருக்கின்றனர். 'பிரிவு 27 (1) ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கத்தில் நிர்வாகம், சட்டம் விதிகள் உப-விதிகளின்படி அமைக்கப்பட்ட ஒரு நிருவாகக் குழுவிற்குரிமையானது. அது, சட்டம், விதிகள், உப-விதிகள் முறையே அளிக்கும் அல்லது விதிக்கும் அதிகாரங்களை கையாளவும் கடமைகளை நிறைவேற்றவும் வேண்டும்'.

நிருவாகக் குழுவில் இடங்களை ஒதுக்குதல்: சில சூழ்நிலைகளில் மாதர்கள், சிறிய விவசாயிகள் அல்லது குடியானவர்கள், குத்தகைக்காரர்கள், சமுதாயத்திலுள்ள வலிமையற்ற பகுதியினர் போன்ற சிலருடைய நலன்களைப் பாதுகாப்பதற்குக்கூட, நிருவாகக் குழுவிற்கு நியமனம் செய்யப்படுகிறது. அத்தகையவர்கள் வேறுவிதத்தில் சங்கங்களின் நிருவாகக் குழுவிலிடம் பெற முடியாது. தங்களுடைய நலன்களைக் கவனிப்பதற்கு அவர்கள் நிருவாகக் குழுவிலிடம் பெறுவது தேவையாக இருந்தாலும் நிருவாகக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்பட அவர்களுக்கு சக்தியில்லாமலிருக்கலாம். ஸ்டோர்ஸ் சங்கங்கள், பால் வழங்கும் சங்கங்கள் இவைகளின் நிருவாகத்தில் மாதர்கள் இடம் பெறுவது குறிப்பாக இந்த சங்கங்களின் செயல்பாட்டிற்கு மிகவும் உதவியாக இருக்கும். ஆகையால், அத்தகைய சூழ்நிலைகளில் அரசாங்கம்

அல்லது பதிவாளரால் நியமனம் செய்யும் ஏற்பாடு சங்கத்தின் உப-விதிகளிலிருப்பது தேவையாகும்.

நிருவாகக் குழுவின் எண்ணிக்கை: 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம், ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் இயக்குநர்கள் எண்ணிக்கையின் குறுமம் (minimum) அல்லது பெருமம் (maximum என்ன என்பது பற்றி நிருணயிக்கவில்லை. நிருவாகக் குழுவின் எண்ணிக்கை, ஒவ்வொரு சங்கத்தின் உப-விதிகளில் முடிவு செய்யப்பட்டிருக்கின்றது. ஒரு சங்கத்தின் உப-விதிகளைப் பதிவு செய்யும்போது, அந்தச் சங்கத்தின் விவகார எல்லை, எதிர்பார்க்கப்படும். உறுப்பினர்கள், இவற்றையனுசரித்து, சங்கத்தின் நிருவாகக் குழுவின் எண்ணிக்கை சரியாக நிருணயிக்கப் படுவதைப் பதிவாளர் கவனிக்கவேண்டும். கூட்டிணைப்புச் சங்கங்களில், பல்வேறுவகை இணைக்கப்பட்ட சங்கங்களுக்கும் இதர நலமிகளுக்கும் அளிக்கப்படவேண்டிய பிரதிநிதித்துவத்தைக் கூடப் பதிவாளர் ஆலோசிக்கவேண்டும் சிலவகைச் சங்கங்களுக்காகத் தயாரிக்கப்பட்ட மாதிரி உப-விதிகளில் (Model bv laws), நிருவாகக் குழுவின் எண்ணிக்கை பற்றிய குறிப்புகளிருக்கின்றன. ஒரு பிரதமச் சங்கத்தில், இயக்குநர் குழுவின் எண்ணிக்கை 5-லிருந்து 15ஆக இருக்கிறது. ஆனால், இதற்கு டி.யு.சி.எஸ். (T.U.C.S.)போன்ற சங்கங்கள் விதிவிலக்காக உள்ளன. டி.யு.சி.எஸ். (T U C S) சங்கத்தில், இயக்குநர் எண்ணிக்கை 69 வரை போகிறது. மத்திய வங்கியைப் போன்ற ஒரு கூட்டிணைப்புச் சங்கத்தில், இந்த எண்ணிக்கை 9-லிருந்து போகிறது. சந்தானம் குழுவினர், நிருவாகக் குழுவின் எண்ணிக்கையில், ஒரு சட்டப்படியான வரம்பு நிருணயிக்கப்படவேண்டும் என்றும், சரியான எண்ணிக்கையை உப-விதிகளில் தீர்மானிப்பதற்கு வேண்டிய உளத் தேர்வுச் சங்கத்திற்குக் கொடுக்கப்பட வேண்டும் என்றும் கருதினார்கள்.

1962ஆம் வருடத்திய ஒரிஸ்ஸா கூட்டுறவுச் சங்கத்தின் சட்டத்தின் 28ஆம் பிரிவில் (Orissa Co-operative Society Act). ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு, 5-க்கு குறையாமலும் 11-க்கு மேற்படாமலுமுள்ள உறுப்பினர்களைக் கொண்டிருக்கவேண்டும் என்று நிருணயிக்கப்பட்டிருக்கிறது. ஒரு நிருவாகக் குழுவின் குறுமமான எண்ணிக்கை எப்படியிருக்கவேண்டுமென்றால், சரியானதும் புத்திசாலித்தனமானதுமுள்ள முடிவுகளையெடுக்க உதவும்படி பிரதிநிதித்துவம் இருப்பதற்கு வாய்ப்பு அளிக்கும் வகையிலிருக்கவேண்டும். தாமதமில்லாத முடிவுகளையெடுப்பதற்கும், தொழிலைத் துரிதமாக நடத்துவதற்குப், வசதியாக இருக்கும் வண்ணம் நிருவாகக் குழுவின் குறுமமான எண்ணிக்கை

யிருக்கவேண்டும். பொதுவாக பெரிய சங்கங்கள் (பிரதம சங்கங்களும் கூட்டிணைப்பு சங்கங்களும்) சாத்தியப்பட்ட வகையில் எல்லா மக்களுக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்கவேண்டுமென்ற அவாவினாலும், நிருவாகக் குழுவினிடம் வேண்டும் என்ற அவர்களது கோரிக்கையைத் திருப்தி செய்வதற்கும், மிகப்பெரிய இயக்குநர் குழுவை அமைக்கின்றன. இயக்குநர் குழு மிகப் பெரியதாக இருந்தால், முடிவுகளெடுப்பது அனாவசியமாக தாமதம் ஏற்பட்டு, கலகக்கார குப்பல்கள் ஏற்படுவதற்கு வாய்ப்பு அதிகரிக்கிறது. முன்னரே கூறியபடி, அண்மையில் நிறைவேற்றப்பட்ட 'தமிழ் நாடு கூட்டுறவுச் சங்கத் திருத்தச் சட்டத்தில் 1970)', இயக்குநர் குழுவின் எண்ணிக்கை 23-க்கு அதிகப்படுத்தப்பட்டிருக்கிறது.

1970-ம் வருடத்திய தமிழ் நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (மூன்றாவது திருத்த) சட்டமானது, தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி, மத்தியக் கூட்டுறவு வங்கிகளாகியவற்றின் அமைப்பையும் நிருவாகத்தையும் தழுவும் கொள்கைகளை, எல்லாத் தலைமைச் சங்கங்களுக்கும் நீட்டிக்கச் செய்கிறது. இந்தத் திருத்தச் சட்டம் 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திற்குப் பிரிவுகள் 73 (H)-லிருந்து 73 (N) வரையிலுள்ள பிரிவுகளைக் கொண்ட அத்தியாயம் IX B-யை, ஒரு புதிய அத்தியாயமாகச் சேர்த்திருக்கிறது. இந்தத் திருத்தத்தின் புதிய அம்சம், ஒவ்வொரு தலைமைச் சங்கத்திற்காக ஒரு 'மேலாண்மை-இயக்குநரை' (Managing Director) அமர்த்துவதற்கான சரத்தை ஏற்படுத்தியிருப்பது. பிரிவு 73 (J) (2)-ன்கீழ், ஒரு 'மேலாண்மை இயக்குநர்' (Managing Director) அல்லது செயல் அதிகாரி (Executive officer) அமர்த்தப்படுவதோடு, அவர் அத்தகைய சங்க நிருவாகக் குழுவின் ஒரு பதவி வழி (Ex-officio) உறுப்பினராக இருக்கவேண்டும். மற்றும், 1971ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (திருத்த) சட்டத்தின்படி, (1971ஆம் வருடத்திய 38ஆம் சட்டம்) தலைமைச் சங்கங்களுக்குப் பொருந்துகின்ற சட்டத்தின் IX B அத்தியாயத்தில் அடங்கியுள்ள எல்லாச் சரத்துகளும் மத்தியச் சங்கங்களுக்கும்கூடப் பொருந்தும். பிரிவு 73 H-ஆ-ஆ-ல், ஒரு மத்தியச் சங்கமானது, தமிழ்நாடு மாநிலத்தின் ஒரு பாகத்தை மட்டும் தன் விவகார எல்லையாகக் கொண்டதும் அதில் இதர சங்கங்கள் உறுப்பினர்களாவதற்குத் தகுதி பெற்றவைகளாக இருக்கும்படியான ஒரு சங்கம் என்று விளக்கப்பட்டிருக்கிறது. 1971ம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (இரண்டாவது திருத்த) சட்டத்தின்கீழ், (1971ஆம் வருடத்திய 39ஆம் சட்டம்), 1961 வருடத்திய

சட்டத்தின் IX B அத்தியாயத்திற்குப் பிறகு பிரிவுகள் 73 (0)–லிருந்து 73 (S) வரைக்கும் அடங்கியுள்ள IX C என்ற ஒரு புதிய அத்தியாயம் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்தச் சட்டத் திருத்தத்தில், எல்லாப் பதிவு செய்யப்பட்ட சங்கங்களையும் முறையே தாலுக்கா, மாவட்டம், மாநில மட்டத்திலுள்ள கூட்டுறவு ஒன்றியங்கள் உறுப்பினர்களாக சேர்த்துக் கொள்வதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மாநிலக் கூட்டுறவு ஒன்றியம் கிராமப் புறங்களுக்குக் கூட்டுறவு இயக்கத்தின் நற்செய்தியைக் கொண்டு போவதற்காக அதன் நிருவாகத்தைச் சீர்படுத்துவதற்குச்கூட இதில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மேலும், கிராமப்புறங்களில் வைப்புத்தொகைகளைத் திரட்டுவதற்கான அதிகாரங்களையும்கூடக் கூட்டுறவு ஒன்றியங்களுக்கு இந்தச் சட்டத் திருத்தம் வழங்குகிறது [ பிரிவு 73 (0) (A) ]. தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், சட்டத்தின் அத்தியாயம் IX B பிரிவுப்படி ஒரு தலைமைச் சங்கமாகக் கருதப்படுகிறது [ பிரிவு 73 (P) (3) ].

தமிழ்நாடு நிலவள வங்கியின் நிருவாகக் குழுவின் எண்ணிக்கை கூட, அண்மையில் 56-க்கு உயர்த்தப்பட்டிருக்கிறது. இந்தக் குழுக்கள் மிகப் பெரியதாகயிருப்பதால், தொழில் துரிதமாக நடப்பது தடைப்படலாம். ஓர் அமைதியான, அடக்கமான, சூழ்நிலையில், சரியான முடிவுகளையெடுப்பதற்கு அது சாதகமாக இருக்காது. சந்தானம் குழுவினர், ஒரு பிரதம சங்கத்தின் நிருவாகக் குழுவின் எண்ணிக்கையின் குறைந்தபட்ச எண்ணிக்கையும் அதிக பட்ச எண்ணிக்கையும் முறையே 7–ஆகவும், 15-ஆகவும் நிருணயிக்கப்பட வேண்டுமென்றும், கூட்டிணைப்பு சங்கங்களிலும், தலைமைச் சங்கங்களிலும் முறையே 9-ஆகவும் 21–ஆகவும் நிருணயிக்கப்பட வேண்டும் என்றும் சிபாரிசு செய்திருக்கின்றனர். இந்த எண்ணிக்கை நியமனம் செய்யப்பட்ட இயக்குநர்களையும் சேர்த்துதான் கணக்கிடப்படவேண்டும். இந்தச் செயலுக்காக சந்தானம் குழுவினர் பிரிவு 27–க்கு ஒரு திருத்ததைப் பரிந்துரை செய்திருக்கிறார்கள். மத்திய வங்கிகள் அல்லது இதர நிதி வங்கிகளில் அத்தகைய சங்கங்களின் நிருவாகக் குழுவின் மொத்த எண்ணிக்கையை அனுசரித்துத் தனிப்பட்ட நபர் உறுப்பினர்களின் விகிதாசாரத்திற்கு ஒரு வரம்பு விதிக்கப்பட்டிருக்கிறது. 24ஆம் விதியின்கீழ், சங்க உறுப்பினர்களுக்குத் தனிப்பட்ட நபர் உறுப்பினருடைய விகிதாச்சாரம் 1:3–க்கு மேற்படக்கூடாது. இந்த வரம்புக்குட்பட்டுப் பதிவாளர் ஒவ்வொரு வங்கிக்காகக் குறிப்பிட்ட விகிதாச்சாரத்தை நிருணயிக்கலாம். இது நிருவாகக் குழுவிலுள்ள சங்கத்தின் உறுப்பினருடைய எண்ணிக்கை நிருவாகத்தில் அதிகமாக இடம் பெறவேண்டும்

என்ற நோக்கத்துடன் செய்யப்படுகிறது. ஏனென்றால், இந்த வங்கிகளிலிருந்து படிப்படியாக தனி நபர்களைக் கழித்து விடுவது உத்தேசமாக இருக்கிறது.

நிருவாகக் குழுவிற்கு இயக்குநர்களை நியமனம் செய்தல்: 1961ஆம் வருடத்திய கூட்டுறவுச் சட்டத்தின் 27 (2) ஆம் பிரிவின் படி, அரசாங்கம் அல்லது ஒரு நிதிவங்கி ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கத்தில் பங்குகள் எடுத்திருந்தாலும், அல்லது அதற்கு நிதி உதவி அல்லது வேறு உதவி அளித்திருந்தாலும், சமயோசிதம் போல், அரசாங்கம் அல்லது நிதிவங்கி நிருவாகக் குழுவிற்கு அதன் மொத்த எண்ணிக்கையில் 1/3 உறுப்பினர்களை அல்லது 3-க்கு மேற்படாத உறுப்பினர்களை இதில் எது குறைந்ததோ அந்த எண்ணிக்கையுள்ள உறுப்பினர்களை நியமனம் செய்யலாம். இயக்குநர்களை நியமனம் செய்வதற்குச் சட்டத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் சரத்து புதியதாகும். அப்படியென்றால், 1961-ஆம் ஆண்டிற்கு முன்பு, நியமனம் செய்தல் என்ற கொள்கை தெரியாததோ அல்லது வழக்கத்திலில்லாததோ என்பதல்ல. அரசாங்கம் அல்லது பதிவாளர், வீட்டு வசதிச் சங்கங்களிலும், சென்னை மத்திய நில அடைமான வங்கியிலும் இன்னும் சில வித் சங்கங்களிலும் அந்தச் சங்கங்களில் அரசாங்கத்தின் நலன்களை பாதுகாப்பதற்கு இயக்குநர்களை நியமனம் செய்யவேண்டுவது தேவையாகக் கருதப்பட்டபோது இயக்குநர்களை நியமனம் செய்துள்ளார்கள். எனவே, நடைமுறையிலிருக்கும் நியமனம் செய்யும் வழக்கத்திற்கு ஒரு சட்ட தொடர்பாக ஒப்புதலையளிப்பதற்காக, உப-விதிகளில் நியமனம் செய்வதற்கு சரத்திலிருக்கும் சங்கங்களில் அரசாங்கம் அல்லது பதிவாளருக்கு எல்லா அல்லது ஏதாவது சில நிருவாகக் குழு உறுப்பினர்களை நியமனம் செய்யும் அதிகாரம் கொடுக்க, 27ஆம் பிரிவில் சரத்து செய்யப்பட்டிருக்கிறது. இயக்குநர்களை நியமனம் செய்வதற்கான இந்த சரத்து [பிரிவு 27 (2)] கீழ்க்கண்ட நிபுணர்களின் பரிந்துரைகளையொட்டி செய்யப்பட்டிருக்கிறது.

(1) அரசாங்கம் பங்கு மூலதனத்திற்கு உதவித் தொகையளித்திருக்கும். சங்கங்களின் இயக்குநர் குழுவில் 1/3-க்கு மேற்படாத இடங்கள் மாநில அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பட வேண்டுமென்று அகில இந்தியக் கடன் விசாரணைக் குழுவினர் செய்திருக்கும் பரிந்துரைகள்.

(2) இயக்குநர் குழுவின் மொத்த எண்ணிக்கையில் 1/3-க்கு மேற்படாத உறுப்பினர்களை அல்லது 3 உறுப்பினர்களை இதில் எது குறைந்தோ அந்த எண்ணிக்கை உறுப்பினர்களே நியமனம் செய்

யப்படலாம் என்று 1935ஆம் ஆண்டில் நடைபெற்ற பாட்னு கூட்டுறவுக் காங்கிரசின் (Patna Co-operative Congress) பரிந்துரைகள்.

(3) அரசாங்க உத்தரவாதம் அல்லது கடன்கள் போன்ற பலமான நிதி உதவி அளிக்கப்பட்டிருக்கும் சங்கத்திற்குக்கூட, அரசாங்கம் இயக்குநர்களை நியமிக்கலாம் என்று கூட்டுறவுச் சட்டக் குழுவினர் செய்த பரிந்துரை அவர்களால் தயாரிக்கப்பட்ட மாதிரிக் கூட்டுறவு மசோதாவின் 28ஆம் பகுதியில் அரசாங்கம் பங்குகள் எடுத்திருக்கும் சங்கங்களில் மட்டும் அல்லாமல், உத்தரவாதம் அல்லது கடன்கள் வாயிலாக பலமான நிதி உதவியை அரசாங்கத்திடமிருந்து பெற்றுள்ள சங்கங்களிலும் கூட அரசாங்கம் இயக்குநர்களை நியமனம் செய்யவேண்டுமென்ற பரிந்துரைகள்.

இயக்குநர்களை நியமனம் செய்வது, கூட்டுறவின் உண்மையான பொருளுக்கு தத்துவ ரீதியில் முரண்பட்டிருந்தாலும், அரசாங்க நலன்களைப் பாதுகாப்பதற்கு அரசாங்கம் இயக்குநர்களை நியமனம் செய்வதற்கு தேவையிருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். எனினும், அரசாங்கம் நியமனம் செய்யும் உறுப்பினருடைய எண்ணிக்கையைக் குறைத்துச் சங்க நிருவாகத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநர்களுக்கதிகமான வாய்ப்பு விட்டுவிடுவது விருப்பத்தக்கதாகும். இந்தப் பிரச்சினையை ஆழ்ந்து ஆராய்ந்து சந்தானம் குழுவினர் நியமனம் செய்யப்பட்ட இயக்குநர்களின் எண்ணிக்கை பிரதம சங்கத்திலும் அல்லது மத்திய சங்கத்திலும் முறையே ஒன்றாகவும், தலைமை சங்கங்களில் இரண்டாகவும், கட்டுப்படுத்தப்படவேண்டும் என்று கருதினார்கள். அத்தகைய நியமனம் செய்யப்பட்ட இயக்குநர்கள் அதிகாரிகளாக (Officials) இருக்கவேண்டும்.

உத்தியோகப் பற்றற்றவர்கள் தேர்தல்கள் மூலமாகத்தான் இயக்குநர் குழுவில் சேரவேண்டும். நியமனம் செய்யப்பட்ட அதிகாரிகளைக் குறித்து, சந்தானம் குழுவினர், அவர்கள் செயல் ஊக்கமுடைய ஆற்றல் வாய்ந்தவர்களாக இருக்கவேண்டுமென்று கருத்து தெரிவித்தார்கள். அத்தகைய அதிகாரிகள் இயக்குநர் குழுவின் கூட்டங்களுக்கு ஒழுங்காகவும் தவறாமலும் வருகை புரிந்து அவர்கள் தேவையென்று கருதும்போதெல்லாம் மாறுபாட்டுக் குறிப்பைப் (Minutes of Dissent) பதிவு செய்து, அந்தக் குறிப்பைப் பதிவாளருக்கு அனுப்பவேண்டும். அவர்கள் அரசாங்கத்தின் நலன்களைப் பாதிக்கும் எந்த ஒரு தீர்மானத்தின் குறிப்பையும் அரசாங்கத்திற்கு அனுப்பத் தவறினால், அதற்கு அவர்கள்

பொறுப்பாளிகள் ஆவர். பிரிவு 27 (2)-ன் கீழ், அரசாங்கம் அல்லது நிதி வங்கி எந்தச் சமயத்திலும் நிருவாகக் குழுவிலிருந்து தங்களால் நியமனம் செய்யப்பட்டவர்களை திரும்பப் பெற்றுக்கொண்டு அத்தகைய காலியிடங்களுக்குப் புதிய இயக்குநர்களை நியமிக்கலாம். மேற்சொன்னவாறு, இயக்குநர் குழுவில் ஒரு பாகத்தினரை நியமனம் செய்வதுமட்டுமல்லாமல், இயக்குநர் குழு முழுவதையும்கூட, பங்கு மூலதனம், கடன்கள் போன்ற பெருமளவு அரசாங்க உதவி பெறும் சர்க்கரை ஆலைகள், நூற்பு ஆலைகள் போன்ற, சங்கங்களில் அரசாங்கம் நியமனம் செய்கிறது. இந்த வழக்கம் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் மீனவர் சங்கங்கள் போன்ற சமுதாயத்தில் வலிமையற்ற பகுதியினர்களுக்காக நிறுவப்பட்ட பிரத்தியேகவித சங்கங்களில்கூட இருக்கிறது. அவ்வண்ணம் இயக்குநர் குழு முழுவதும், பிரிவு 27-ன் 2 ஆம் விலக்குக் கூற்றின்கீழ், நியமனம் செய்யப்படுகிறது. இந்தச் சரத்தின்கீழ், உப-விதிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதால், அரசாங்கம் அல்லது பதிவாளர் உப-விதிகளில் குறிக்கப்பட்ட காலவரைக்கு எல்லா இயக்குநர்களையும் அல்லது எந்த சில இயக்குநர்களையும் நியமனம் செய்யலாம்.

சில சூழ்நிலைகளில் நியமனம் செய்யப்பட்ட இயக்குநர் குழு ஒரு வரம்பில்லாத காலத்திற்கு நீடிக்கிறது. இன்னும் சில சூழ்நிலைகளில் சங்கம், அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய பாக்கியுள்ள வரைக்கும், அல்லது சங்கம் வேறு இடத்திலிருந்து வாங்கியிருக்கும் கடன்களுக்கு அரசாங்கம் உத்தரவாதம் இருக்கிற வரைக்கும், அதனுடைய இயக்குநர் குழு முழுவதும் அரசாங்கத்தால் நியமிக்கப்படவேண்டும் என்று உப-விதிகள் கூறுகின்றன. ஒரு வரம்பில்லாத காலத்திற்காக இயக்குநர் குழு முழுவதையும் நியமனம் செய்வது விரும்பத்தக்கதல்ல. ஏனென்றால், சங்கம் தன்னுடைய கூட்டுறவுத் தன்மையை இழந்து ஓர் அரசாங்கத் துறை நிறுவனமாக செயல்பட்டுவிடும். சங்கத்தினர் உறுப்பினர்கள் பெருமளவு அதன் பங்கு மூலதனத்திற்கு உதவியளித்து அதன் தொழிலில் ஈடுபட்டு இருந்தாலும்கூட, அரசாங்கம் ஆரம்ப வருடங்களில் அத்தகைய சங்கத்தின் நிருவாகத்தில் ஓர் அதிகமான பங்கு பெற்றிருக்க வேண்டும் என்பதை ஒப்புக் கொண்டாலும் நாளடைவில் அத்தகைய சங்கத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் நிருவாகப் பொறுப்பை மேற்கொள்வதற்கு வழிவகை செய்யப்படவேண்டும். ஆகையால், சந்தானம் குழுவினர், முதல் மூன்று வருடங்களுக்கு இயக்குநர்கள் அனைவரும் நியமனம் செய்யப்படலாம் என்றிருந்தாலும், அந்தக் காலத்திற்குப் பிறகு இயக்குநர்கள் எண்ணிக்கையில் 2/3-க்குக் குறையாதவர்கள் தேர்ந்

தெடுக்கப்பட வேண்டுமென்று பரிந்துரை செய்தனர். படிப்படியாக சங்கத்தின் நிருவாகம் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் பிரதிநிதிகளுக்கு மாற்றப்பட்டு, நிருவாகக் குழு உறுப்பினர்களில் மொத்த எண்ணிக்கையில் 1/3-க்கு மேற்படாதவர்கள் அல்லது 3 உறுப்பினர்களை மட்டுமதான், சூழ்நிலைக்கேற்றார்போல், அரசாங்கம் நியமனம் செய்யவேண்டுமென்பதுதான் நோக்கமாக இருக்கவேண்டும்.

நிருவாகக் குழுவின் பதவிக் காலம்: 1961ஆம் ஆண்டு கூட்டுறவுச் சட்டத்திற்கு முன்பு, ஒரு விவசாய நாணயச் சங்கத்தின் நிருவாகக் குழு ஆண்டிற்கொரு முறை தேர்ந்தெடுக்கப்பட்டது. இதர பிரதம சங்கங்கள், மத்தியச் சங்கங்கள், தலைமைச் சங்கங்கள் இவை நிருவாகக் குழு, பொதுவாக, மூன்று வருடங்களுக்கொரு முறை தேர்ந்தெடுக்கப்பட்டது. நிருவாகக் குழுவின் எல்லா உறுப்பினர்களும் ஒரே சமயத்தில் உப-விதிகளில் கூறப்பட்ட காலவரைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நிருவாகக் குழுவின் எல்லா உறுப்பினர்களும அந்தப் பதவிக்காலத்தின் முடிவில் ஓய்வு பெற்று ஒரு புதிய நிருவாகக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. ஓய்வு பெறும் உறுப்பினர்கள் கூடத் தேர்தலில் நிற்பதற்கு உரிமையுள்ளவர்களாவர். உரிய காலத்தில் நிருவாகக் குழு தேர்தல் நடத்தப்படவில்லையானல் நிருவாகக் குழு, அதன் பதவிக் காலம் பதிவாளரால் நீடிக்கப்பட்டாலொழிய, செயலிழந்ததாகக் கருதப்படும்.

1961ஆம் வருடத்திய கூட்டுறவுச் சட்டத்தின், 27 (iii) (அ) பிரிவில் உறுப்பினரின் எந்த ஒரு சங்கத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு நிருவாகக் குழு பதவிக்காலம் 3 வருடங்களாக இருந்தாலும், நிருவாகக் குழு உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பாகத்தினர் ஒவ்வொரு வருடமும் ஓய்வு பெறவேண்டும் என்றும், அவ்வாறு ஓய்வு பெறவேண்டிய நபர்கள் நிருவாகக் குழுவால் சீட்டுக் குலுக்குவதன் மூலம் தீர்மானிக்கப்பட வேண்டும் என்றும், ஓய்வு பெறும் நபர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கப் படுவதற்குத் தகுதியுள்ளவர்கள் என்றும் ஏற்பாடுசெய்யப்பட்டிருக்கிறது. இந்த ஏற்பாட்டின் நோக்கம் நிருவாகத்தில் புதிய இரத்தத்தைப் புகுத்த வேண்டும் என்பதும், அதே சமயத்தில் ஒரு சிலர் தொடர்ந்தும் இருக்கலாம் என்பதுதான். நிருவாகக் குழு உறுப்பினர்கள் வருடத்திற்கொருமுறை ஓய்வுபெறும் திட்டத்தின் நடக்ககூடிய தன்மை அப்போதைக்கப்போது பரிசீலனை செய்யப்பட்டது. சந்தேகமின்றி, ஆண்டிற்கொருமுறை ஓய்வுபெறும் திட்டத்தை அமல்படுத்துவதில் நடைமுறைச் சிக்கல்களிருக்கின்றன. இந்தத் திட்டம் மிகவும் அனுகூலமின்மையாகவும் தேவையற்ற பணச் செலவையும் வேலை நிலைக்குலைவையும் உண்டுபண்ணுவதாகவும்

கருதப்படுகிறது. உறுப்பினர்கள் பட்டியல், வாக்குத்தாள் போன்றவைகளை அச்சிடுவதற்கும், பேரவைக் கூட்டங்களைக் கூட்டி, ஒவ்வோர் ஆண்டும் தேர்தல்களை நடத்துவதற்கும் பணச் செலவு செய்யவேண்டியிருக்கிறது. தேர்தல்களை நடத்துவதற்கு முன்னேற்பாடுகளைச் செய்வதற்காகச் சிப்பந்திகளுக்குக் கூடுதலான வேலைப் பளு ஏற்படுகிறது.

ஒவ்வொரு வருடமும் சங்கங்களின் சுமுகமான செயல் பாட்டைப் பாதிக்குமளவு ஒவ்வொரு வருடமும் தேர்தல் சூழ்நிலை உண்டாக்கப்படுகிறது. மேலும், எதிர்பார்க்கப்படும் முடிவு கிட்டுவது சந்தேகமாக இருக்கிறது. அதாவது, ஒவ்வொரு வருடமும் ஓய்வு பெறுவதால் ஏற்படும் காலி இடங்களுக்குப் புதிய உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் என்பது உண்மையான நடைமுறையில், அல்லது மிகவும் பெரும்பாலான நேரங்களில், ஓய்வு பெறும் நபர்களே போட்டியின்றி மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். போட்டி ஏற்படும்போது அதே நபர்கள் அடிக்கடி மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டாலும், சங்கங்களில் கட்சி, கலகம், பகை உண்டாகிறது. ஆகையால், கூட்டுறவாளர்கள் பொதுவாக இந்தத் திட்டம் நிறுத்தப்படவேண்டும் என்று விரும்புகிறார்கள். மிர்தா குழுவினர் (1965) கூறியபடி, இந்தத் திட்டம் வருடம் முழுவதும் ஒருவித தேர்தல் காற்றை நீடிக்கவைத்து இயக்குநர்களைத் தங்கள் வேலையைச் சரிவரக் கவனிப்பதற்கு இடம் தராமலிருக்கிறது. சந்தானம் குழுவினரும் இந்தச் செய்தியில் அதேமாதிரியான கருத்து கொண்டு, மூன்றிலொரு பங்கு இயக்குநர்கள் வருடமொருமுறை ஓய்வு பெறும் திட்டம் கைவிடப்பட வேண்டும் என்றும், கால முறைப்படி ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவினர் அனைவரும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்றும் பரிந்துரை செய்திருக்கின்றனர். ஒரே சமயத்தில் நிருவாகக் குழுவினர் அனைவரும் மூன்று வருடங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்படலாம் என்றும் சிபாரிசு செய்துள்ளனர். ஒரு மூன்று வருட காலம், இயக்குநர்களின் வேலைத் திறத்தையும், மக்கள் ஒப்புதலையும் பற்றி ஒரு புதிய தீர்ப்புக் கூறுவதற்குப், போதுமான ஒரு நீண்ட காலமாகும். ஆகையால், அக் குழுவினர் பிரிவு 26-க்குத் திருத்தங்களை யோசனை கூறியிருக்கிறார்கள்.

அரசாங்கம் அல்லது நிதி வங்கியால் நியமனம் செய்யப்படுபவர்கள்: அரசாங்கம் அல்லது நிதி வங்கியால் நியமனம் செய்யப்படும் நிருவாகக் குழு உறுப்பினர்களின் பதவிக் காலம், அவர் ஓர் உத்தியோகப் பற்றற்ற நபராக இருந்தால், மூன்று வருடங்களாக இருக்கும் [2 பிரிவு 27 (iii) (அ)]. அதிகாரியாகயிருந்தால்,

சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு அவர் ஒரு பதவி வழி உறுப்பின ராக (Ex-Officio Member) நியமிக்கப்படுகிறார். அதாவது அவர் வகிக்கும் உத்தியோகத்தின் காரணமாக, அவருடைய நியமனம் நடைபெறுகிறது. உதாரணமாக, பதிவாளர், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியிலும் இதர நிறுவனங்களிலும் அவர் வகிக்கும் உத்தியோகத்தின் காரணமாக, ஒரு பதவி வழி உறுப்பினராக இருக்கிறார். பதிவாளர் பதவியை வகிக்கும் ஒருவர் மாற்றப் பட்டால் அவர் மாநிலக் கூட்டுறவு வங்கியின் இயக்குநராகத் தொடர்ந்திருக்க முடியாது. ஆனால், நிருவாகக் குழுவிற்கு நியமனம் செய்யப்படும் உத்தியோகப் பற்றற்றவர்கள் மூன்று வருட காலத்திற்குப் பதவி வகிப்பார்கள்.

நிருவாகக் குழு உறுப்பினர்களின் பதவிக்கால நீட்டிப்பு : தற் சமயமுள்ளபடி, நிருவாகக் குழு உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பாகத்தினர் ஒவ்வொரு வருட முடிவிலும் ஓய்வு பெறவேண்டும் [பிரிவு 27 (3) (இ)-ன் விலக்குக் கூறு). எனினும், பதிவாளர், எழுத்தில் பதிவு செய்யப்படும் காரணங்களுக்காக, ஓய்வடையும் உறுப்பினர்களுடைய பதவிக் காலத்தை நீட்டிக்கலாம். சங்கம் செய்யும் ஒரு விண்ணப்பத்தின்பேரில் அவர் அத்தகைய நீட்டிப்பைக் கட்டளையிடலாம். பதிவாளர் அத்தகைய நீட்டிப்பைக் கொடுப்பதற்குப் பிரிவு 27 (3) (இ) ஏற்பாடு செய்கிறது. எனினும், விதி 36 (2)-ன் கீழ், பதிவாளர் பிரிவு 27 (3) (இ)-ன்கீழ் நிருவாகக் குழு உறுப்பினருடைய பதவிக் காலத்தை ஒரு சமயத்தில் மூன்று மாதங்களுக்கு மேற்பட்ட காலத்திற்கு நீட்டிக்கக்கூடாது. அல்லது மொத்தத்தில் ஆறு மாதங்களுக்கு மேற்பட்டு நீட்டிக்கக் கூடாது. அத்தகைய நீட்டிப்பு, சங்கம், எந்தக் காரணத்திற்காவது குறித்த காலத்தில் புதிய உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு ஒரு பேரவைக் கூட்டத்தைக் கூட்ட முடியாமலிருந்தால் தேவைப்படுகிறது. அல்லது சங்கத்தின் நலன் களுக்காகச் சங்கம் மேற்கொண்டிருக்கும் ஒரு வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதற்குத் தற்போதிருக்கும் நிருவாகக் குழு உறுப்பினர்கள் தொடர்ந்திருப்பது தேவை என்று கருதினாலும், அத்தகைய பதவி நீட்டிப்பு தேவைப்படுகிறது.

தேர்தல் எப்பொழுது நடத்தப்பட வேண்டும் : பிரிவு 27 (iii)-ன் கீழ், ஓய்வு பெறும் உறுப்பினர்களுக்குப் பதில், புதிய நிருவாகக் குழு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதில், அத்தகைய உறுப்பினர்கள் ஓய்வடையும் தேதிக்கு முன்னர் 90 நாள்கள் காலத் திற்குள் தேர்தல் நடைபெறவேண்டும். அத்தகைய தேர்தல் நடக்க இருக்கும் பேரவைக் கூட்டத்தின் அறிவிப்பும் மேற் சொன்ன 90 நாள்கள் காலத்திற்குள் வெளியிடப்பட வேண்டும்.

இன்னொரு சங்கத்தின் பிரதிநிதியாக இருக்கும் நிருவாகக் குழு உறுப்பினர்களின் பதவிக்காலம் : 35ஆம் விதியின்கீழ், இன்னொரு சங்கத்தின் நிருவாக உறுப்பினராக இருக்கும் ஒரு சங்கத்தின் பிரதிநிதி, கீழ்க்கண்ட சூழ்நிலைகளின் கீழ், அத்தகைய நிருவாகக் குழுவின் உறுப்பினர் பதவியிலிருந்து விலகவேண்டும். (1) அவரைப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்த சங்கம் அவரை திரும்பப் பெற்று, அவருக்குப் பதில் இன்னொரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்தால் (2) ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு 72ஆம் பிரிவின்கீழ் தள்ளப் பட்டு அந்தச் சங்கம் அவரைப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்திருந் தால் (3) அவரைப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்த சங்கத்தின் பதிவு ரத்து செய்யப்பட்டால்.

நிருவாகக் குழுவைத் தேர்ந்தெடுக்கும் விதம்-வாக்குச் சீட்டின் மூலம் வாக்கெடுப்பு: 1961ஆம் வருடத்திய கூட்டுறவுச் சட்டத்திற்கு முன்பு, சங்கத்தின் நிருவாகக் குழுவின் தேர்தலில் ஒருசீரான (uniform) நடைமுறையில்லாமலிருந்தது. 1961ஆம் வருடத்திய சட்டத் தின் 27(4) பிரிவின்படி, நிருவாகக் குழு உறுப்பினர் தேர்தல், விதி களில் நிருணயித்த முறைப்படி, வாக்கெடுப்பின் மூலம் நடத்தப் படவேண்டும். விதிகளின் இரண்டு தொகுதிகள், அதாவது 29, 30ஆம் விதிகள் வாக்கெடுப்பின் மூலம் தேர்தல் முறையை நிருணயித்து அமைத்திருக்கின்றது. 29ஆம் விதி, தலைமைச் சங்கம், மத்தியச் சங்கம் அல்லது அரசாங்கத்தால் அப்போதைக்கப்போது குறிக்கப்பட்ட வேறு இதர சங்கம், அல்லது சங்க வகை, இவை களால் பின்பற்றப்படவேண்டிய ஒரு விரிவான நடைமுறையை வகுத்திருக்கிறது. 30ஆம் விதி, இதர பிரதம சங்கங்கள், அதாவது முந்தைய விதியில் சொல்லப்படாத சங்கங்கள் பின்பற்ற வேண்டிய ஒரு சாதாரண நடைமுறையை நிருணயித்திருக்கிறது. இரண்டு நடைமுறைகளிலும், ஒரு நபர் தன்னுடைய வாக்கை அச்சமில்லாமல், தாராளமாக இரகசிய வாக்குச் சீட்டின் மூலம் அளித்து, வாக்கெடுப்பது உறுதிப்படுத்தப்பட்டிருக்கிறது.

முந்தைய ஓர் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளபடி, தலைமைச் சங்கம் என்றும் மத்தியச் சங்கமென்றும் பாகுபாடு செய்யப்பட்ட எல்லாச் சங்கங்களும் நிருவாகக் குழு தேர்தலுக்கு 29ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட நடைமுறையைப் பின்பற்ற வேண்டும். மற்றும் விதி 29 (1) (3)-ன் கீழ், அரசாங்கம் 29ஆம் விதியின் செயலுக்காகச் சங்க வகைகளைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்தச் சங்க வகைகள் நிருவாகக் குழு தேர்தலுக்காக 29ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட நடைமுறையை அனுசரிக்க வேண்டும். அரசாங்கத்தால் குறிப்பிடப்பட்ட இந்தச் சங்கங்களாவன

நகர வங்கிகள், ஊழியர் நாணயச் சங்கங்கள், நிலவள வங்கிகள், வீடு அடைமான வங்கிகள், விற்பனைச் சங்கங்கள், சர்க்கரை ஆலைகள், நூற்பாலைகள், நகர ஸ்டோர்ஸ் சங்கங்கள், ஊழியர்கள் ஸ்டோர்ஸ் சங்கங்கள், சிற்றுண்டி விடுதிகள், உணவுச் சாலைகள், கிராம வீட்டுவசதிச் சங்கங்கள் தவிர இதர வீட்டுவசதிச் சங்கங்கள், வீடு கட்டும் சங்கங்கள், கூட்டுறவு நகரங்கள், கூட்டுறவுப் பயிற்சிக் கழகங்கள், மேற்பார்வை ஒன்றியங்கள், கூட்டுறவு அச்சசங்கள், மோட்டார்ப் போக்குவரத்துச் சங்கங்கள், கூட்டுறவு ஈட்டுறுதிச் சங்கங்கள்.

தேர்தலை நடத்துவதற்குப் பதிலாண்மை (Agency to conduct Election): ஒரு சங்கத்தில் தேர்தல் வெளிப் பதிலாண்மையின் உதவியின்றி, சங்கமே தேர்தலைத் தானாகவே நடத்துகிறது. விதிகள் 29, 30-ன்படி, சங்கத்தின் தலைவர் அல்லது அவருக்குப் பதில் அதிகாரம் அளிக்கப்பட்ட சங்கத்தின் எந்த ஓர் இயக்குநராவது தேர்தலில் தலைமை அலுவலராக இருந்து, தேர்தலில் போட்டியிருந்தால், ஒரு வாக்கெடுப்பு எடுப்பதற்கு ஏற்பாடு செய்வார். 29ஆம் விதியின்கீழ் வருகின்ற ஒரு சங்கத்தில் (தலைமைச் சங்கம், மத்தியச் சங்கம், அரசாங்கத்தால் குறிப்பிடப்பட்ட சில பிரதமச் சங்க வகைகள்) நியமனத் தாள்கள் நிருவாகக் குழுவால் பரிசீலிக்கப்படுகின்றன. 30ஆம் விதியின்கீழ் வருகின்ற ஒரு சங்கத்தில், இந்தப் பரிசீலனையைத் தலைமை அலுவலர் செய்வார். எனினும், ஒரு சங்கத்தின் தேர்தலைச் சரியாக நடத்துவதற்குச் சங்கத்தின் விண்ணப்பத்தின் பேரிலோ அல்லது சுயேச்சையாகவோ ஒரு தேர்தல் அதிகாரியை அமர்த்துவது அவசியமென்று கருதினால், பதிவாளர் அப்படி ஒருவரை அமர்த்துவதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார்.

மிர்தா கூட்டுறவுக் குழுவினர் (1965) சங்கங்களில் தேர்தல் நடத்துவதற்காக ஒரு வெளி நபரை அமர்த்தும் பிரச்சினையை ஆராய்ந்து, வெகு காலமாக இருந்து வந்த நிருவாகக் குழுவிற்குத் தேர்தல் நடத்தும் உரிமையைக் கூட்டுறவுச் சங்கங்களை இழக்கச் செய்வது ஒரு பிற்போக்கான செயலாக இருக்கும் என்ற முடிவுக்கு வந்தனர். இந்த உரிமை பரந்த வகையில் தவறாகப் பயன்படுத்தப் பட்டது என்றோ அல்லது கூட்டுறவுச் சங்கங்கள் இந்த நம்பிக்கைக்கு அருகதையில்லாதவாறு நடந்துகொண்டன என்றோ அவர்கள் பார்வைக்கு வரவில்லை, எனினும், அவர்கள் இந்த உரிமை தவறாகப் பயன்படுத்தப்படக் கூடிய வாய்ப்பை ஒரு குறுமத்திற்கு குறைப்பது அவசியமென்று கருதினார்கள். மேலும், அவர்கள் இதர பரிந்துரைகளுடன்,

மத்திய வங்கிகள் போன்ற கூட்டிணைப்புச் சங்கங்கள் தங்களுடைய இணைப்புச் சங்கங்களின்மீது ஒரு கவனிப்பை வைத்துக்கொண்டு இணைப்புச் சங்கங்களின் தேர்தல் நடவடிக்கைகளைக் கவனிப்பதற்குப் பார்வையாளர்களை அனுப்பவேண்டும் என்று சிபாரிசு செய்துள்ளனர்.

தமிழ்நாட்டில், விதி 29-ல் நிருணயிக்கப்பட்ட விரிவான நடைமுறைகளைப் பின்பற்றித் தலைமைச் சங்கத்திலும் மத்தியச் சங்கங்களிலும் நடைபெறும் தேர்தல்களைப் பொறுத்தவரையில் அந்தத் தேர்தல்கள் பொதுவாக சரியான முறையில் நடத்தப்பட்டுவருகின்றன. தேர்தல் ஒழுங்கீனங்களைப் பற்றிய புகார்கள் இதுவரைக்கும் மிகச் சிலவே. இதற்குக் காரணம சங்கங்களில் நல்ல தகுதி பெற்ற ஊழியர்களிருக்கிறார்கள் என்பது மட்டும் அல்ல; நியமனத்தாள்கள் நிருவாகக் குழுவால் பரிசீலிக்கப்படுகின்றன. இந்தச் சங்கங்களில் வாக்களிப்பவர்கள் குறைந்த நபர்களாகவும், கல்வி அறிவுள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். ஆகையால், இந்தச் சங்கங்களில் தேர்தல்களை நடத்துவதற்காக ஒரு வெளி நபர் தேவைப்படவில்லை. சந்தானம் குழுவினர், இந்தச் சங்கங்களின் தேர்தல்களைக் கவனித்து, அவற்றில் ஒழுங்கீனங்கள் ஏதாவது இருந்தால் அவற்றைத் தனக்குத் தெரிவிப்பதற்காக ஒரு பார்வையாளரைப் பதிவாளர் அனுப்பி வைக்கலாம் என்று கூறியிருக்கின்றனர்.

பிரதமச் சங்கங்களைப் பொறுத்தவரையில் குறிப்பாக விவசாய நாணயச் சங்கங்களில் தேர்தல் கூட்டம் உண்மையாக நடத்தப்படுவதில்லையென்றும், ஆனால் அத்தகைய கூட்டங்கள் நடத்தப்பட்டதாகக் காண்பிப்பதற்குப் பதிவேடுகள் தயாரிக்கப்படுகின்றன என்றும், நியமனம் பிரேரணைகள் தேர்தல் தலைமை அதிகாரியால் அல்லது பொதுவாக சங்கத்தின் தலைவரால் சரியில்லாத காரணங்கள் போன்றவைகளைக் காட்டி நிராகரிக்கப்படுகின்றன என்றும் சில சமயங்களில் புகார்கள் செய்யப்படுகின்றன. பிரதம சங்கங்கள்கூடத் தேர்தல்கள் சரியாக நடத்தப்பட்டு தேர்தல் கூட்டங்களில் கலந்து கொள்வதற்கு எல்லா உறுப்பினர்களுக்கும் வாய்ப்பும் ஊக்கமும் அளிக்கப்பட வேண்டுவது மிகவும் தேவை. தேர்தல்களில் உறுப்பினர்களின் அக்கறை அதிகரித்திருப்பதாலும், போட்டியிடப்படும் இடங்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டிருப்பதாலும் ஒரு வெளிச் செயலி மூலம் நியாயமான தேர்தல்கள் நடத்தப்படுவதை உறுதி செய்வது தேவையாக இருக்கிறது. அப்படியானால், பிரதம சங்கங்களின் தேர்தல்களை நடத்துவதற்குத் தகுந்த வெளிச் செயலி யார் என்ற பிரச்சினை எழுகின்றது,

மத்திய வங்கி, மாவட்ட விநியோக விற்பனைச் சங்கம் போன்ற கூட்டிணைப்புச் சங்கங்கள் வசம் ஒரு பிரதமச் சங்கத்தின் தேர்தல் நடத்துவதை ஒப்படைக்க முடியாது என்பது தெளிவு. ஏனென்றால், கூட்டிணைப்புச் சங்கத்தின் நிருவாகத்திற்கு அதனுடன் இணைக்கப்பட்ட சங்கத்தின் தேர்தலில் அக்கறையிருக்கும் அல்லது அக்கறையிருப்பதாக நம்பப்படும் என்ற ஓர் எளிய காரணமிருக்கலாம். சந்தானம் குழுவினர் இதனை ஆலோசித்து, குறிப்பிட்ட பிரதமச் சங்கத்துடனும் அல்லது அதனுடைய கூட்டிணைப்புச் சங்கத்திலுடனும் தொடர்பில்லாத பதிவாளரால் நியமனம் செய்யப்பட்ட நபர்கள் மூலம்தான் தேர்தல் நடத்தப்பட வேண்டுமென்று பரிந்துரை செய்திருக்கின்றனர். இந்த வேலையைச் செய்வதற்கு அதிகமான சிப்பந்திகள் தேவைப்படுவதால், பதிவாளருடைய சொந்தச் சிப்பந்திகள் மட்டுமல்லாமல் ஊராட்சி ஒன்றியத்தின் சிப்பந்திகளையும் உபயோகித்துக் கொள்வதற்கு அதிகாரம் கொடுக்கப்பட வேண்டுமென்றும் பரிந்துரை செய்திருக்கின்றனர். தேவையிருந்தால். இதர துறைகளின் சிப்பந்திகளையும் கல்வி நிறுவனங்களையும் பொது நிறுவனங்களையும்கூட உபயோகித்துக் கொள்ள பதிவாளர் அனுமதிக்கப்பட வேண்டும்.

நிருவாகக் குழுவின் பதவிக் காலம் முடிவடைகிற தேதிக்கு மிக முன்னரே தேர்தல் நடத்தப்பட வேண்டும்: பொதுவாக நிருவாகக் குழுவின் பதவிக் காலம் முடிவடையும் தேதிக்கு முன்னதாகவே தேர்தல் நடத்தப்படவேண்டும். பதவிக் காலம் முடிவடையும் தேதிக்கு முன் 90 நாள்கள் காலத்திற்குள் தேர்தல் நடத்தப்பட வேண்டுமென்று விதிக்கப்பட வேண்டும். 36 (1) விதி, நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள் ஓய்வு அடையும் காரணமாக எழுகின்ற காலி இடங்களுக்குப் பிரிவு 27 உட்பிரிவு 3, பகுதி (அ)-க்கு விலக்குக் கூற்றின்கீழ், அத்தகைய உறுப்பினர்கள் ஓய்வுபெறும் தேதிக்கு முன்னதாக 90 நாள்களுக்குள், தேர்தல் நடத்தப்பட வேண்டும் என்றும், அத்தகைய தேர்தல் நடத்தப்படும் பேரவைக் கூட்டத்தின் அறிவிப்பு மேற்சொன்ன 90 நாள்களுக்கு முன்பு வெளியிடப்படக் கூடாது என்றும் விதிக்கிறது. இந்த விதியின் நோக்கம், தேர்தல்கள் காலத்தில் நடத்தப்படுவதையும், சங்கத்தின் நிருவாகத்தையமைப்பதில் தாமதமோ அல்லது குறைவோ இல்லாமலிருப்பதையும், உறுதிப்படுத்துவதேயாகும்.

சில பிரத்தியேக நலமிகளுக்கும் சமுதாயத்தில் வலிமையற்ற பகுதியினர்களுக்கும் சங்கத்தின் நிருவாகக் குழுவில் இடங்களைச் சட்ட அடிப்படையில் ஒதுக்குதல்: சட்டத்தின்கீழ், தேர்தல் மூலம்

சங்கங்களின் நிருவாகக் குழுவிற்கு இடங்களைச் சட்ட அடிப்படையில் ஒதுக்கப்படவில்லையென்றாலும், சில சங்கங்களின் உப-விதிகளில் நிருவாகக் குழுவில் இடங்களை ஒதுக்குவதற்கு ஒரு சரத்து இருக்கிறது. பிரத்தியேக நலமிகளின் பிரதிநிதித்துவத்திற்காகச் சங்கத்தின் நிருவாகக் குழுவில் இடங்களை ஒதுக்கி வைப்பது அவசியமாக இருக்கிறது. நிருவாகக் குழுவில் உறுப்பினர்களைச் சேர்த்துக்கொள்வதற்குச் (Co-option) சில சங்கங்களின் உப-விதிகளில் சரத்து இருக்கின்றது. அதாவது, சமீப ஆண்டுகளில் சில குறிப்பிட்ட துறைகளிலுள்ள நிபுணர்களைச் சில சமயத்தில் சேர்த்துக் கொள்வதற்கும், சாதாரணமாகத் தேர்ந்தெடுக்கப்பட முடியாத நபர்களைச் சங்கங்களின் நிருவாகக் குழுவில் சேர்த்துக் கொள்வதற்கும் தேவை ஏற்பட்டிருக்கிறது. இப்படிச் சேர்த்துக் கொள்வதை, அத்தகைய நபர்கள் தேர்தல் மூலம் வருவதற்கு இடங்களை ஒதுக்கி வைப்பதன் மூலமாவது அல்லது அரசாங்கத்தால் அல்லது பதிவாளரால் அத்தகைய நபர்கள் நியமனம் செய்யடபடுவதன் மூலமாவது ஏற்படுத்தப்படலாம்.

சந்தானம் குழுவினர், ஸ்டோர்ஸ் சங்கங்கள், நகர வங்கிகள், பால் வழங்கும் சங்கங்கள், பால் வழங்கும் ஒன்றியங்கள் போன்ற சங்கங்களின் நிருவாகக் குழுவில், மாதர்களுக்காக இரண்டுக்குக் குறையாத இடங்களை ஒதுககி வைக்க சட்ட அடிப்படையான ஏற்பாடு செய்யப்பட வேண்டுமென்று பரிந்துரை செய்திருக்கின்றனர். மேலும், விவசாய நாணயச் சங்கங்கள் நாட்டில் எல்லாக் கிராமங்களில் இயங்கி விவசாயிகளின் தேவைகளைக் கவனித்துவரும் கூட்டுறவு இயக்கத்தின் ஓர் அரணாக அமைந்திருக்கின்றன. இந்த மாநிலத்திலுள்ள விவசாய மக்களில் பெரும்பான்மையானவர்கள் சிறிய உழவர்களும், பயிரிடுபவர்களுமே யாவர். உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காக இத்தகைய விவசாயிகளுக்குப் போதுமான சேவை புரிய வேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறது. ஆகையால், அவர்களுடைய தேவைகளையும், பிரச்சினைகளையும் சங்கங்கள் சரியாக உணர்ந்து தங்கள் நிருவாகக் குழுவில் அவர்களுடைய பிரதிநிதிகள் இருப்பதற்கான சாத்தியக் கூறுகளை ஏற்படுத்துவது அவசியமாக இருக்கிறது. சில சங்கங்களில் இந்த மாதிரியான ஏழை எளிய மக்களுக்குப் பிரதிநிதித்துவமில்லாமல் இருக்கிறது. ஆகையால், சந்தானம் குழுவினர், ஒவ்வொரு விவசாயச் சேவைச் சங்கத்திலும் அத்தகையவர்களுடைய பிரதிநிதிகளிருப்பதை உறுதிப்படுத்துவதற்காக அவர்களுக்கு ஒரு குறுமம் எண்ணிக்கையுள்ள இடங்களை ஒதுக்குவதற்கு ஒரு சட்ட ரீதியான ஏற்பாடு செய்ய வேண்டும் என்று பரிந்துரை செய்திருக்கின்றனர். கூட்டுறவு வங்கிகள் மூலமாகவும்

தேசிய மயமாக்கப்பட்ட வணிக வங்கிகள் மூலமாகவும் சிறிய உழவர்களுக்கும், பயிரிடுபவர்களுக்கும் விவசாயப் பணியாளர்களுக்கும் உதவி செய்வதற்கு ஒரு மிகப் பெரிய அளவில் நடவடிக்கையெடுக்கப்படும் இத்தருணத்தில், விவசாய நாணயச் சங்கங்களின் நிருவாகக் குழுவிலும் மற்றும் நிதி வங்கிகளின் இயக்குநர் குழுவிலும்கூடச் சிறு உழவர்களுக்குப் பிரதிநிதித்துவமளிப்பது தேவையாகிறது.

சந்தானம் குழுவினர் விவசாய நாணயச் சங்கங்களின் நிருவாகக் குழுவிற்குச் சிறு உழவர்கள், பயிரிடுபவர்கள், நிலமில்லாத விவசாயப் பணியாளர்கள்—இவர்களிலிருந்து இரண்டிற்குக் குறையாத நபர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும், அதற்கான ஏற்பாடு சட்டத்தில் செய்யப்பட வேண்டும் என்றும் பரிந்துரை செய்திருக்கின்றனர். நிருவாகக் குழுவில் ஒதுக்கி வைக்கப்பட்ட இடங்களை நியமனம் செய்வதன்மூலமும் பூர்த்தி செய்யலாம். உண்மையாகவே, தமிழ்நாடு நில வள வங்கியில் மூன்று சிறு குடியானவர்களையும், அட்டவணைச் சாதிகளைச் சார்ந்த மூன்று நபர்களையும், மற்றவர்களையும் அந்த வங்கியின் இயக்குநர் குழுவிற்குப் பதிவாளர் நியமனம் செய்ய வேண்டும். அவ்வண்ணமே, தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் இயக்குநர் குழுவிற்குத் தலைமைச் சங்கத்துடன் இணைக்கப்படாத பதிவு செய்யப்பட்ட சங்கங்களின் உறுப்பினர்களிலிருந்து மூன்று உறுப்பினர்களைப் பதிவாளர் நியமனம் செய்யவேண்டும். அவ்வாறு நியமனம் செய்யப்படுவது தேர்தல் மூலம் சாதாரணமாக நிருவாகக் குழுவின் உறுப்பினர்களாக வர முடியாமலிருக்கும் நபர்களுக்கும், நலமிகளுக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்கும் உத்தேசத்துடன்தான். ஆகையால், பிரத்தியேக நலமிகளுக்குப் பிரதிநிதித்துவம் வழங்குவதற்காகச் சங்கங்களின் நிருவாகக் குழுவில் சில இடங்களை ஒதுக்கி வைக்க வேண்டும் என்ற கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த இடங்கள் தேர்தல் மூலமாயினும் அல்லது நியமனம் செய்தல் மூலமாயினும் பூர்த்தி செய்யப்படலாம்.

ஒரு சங்கத்தின் முழுப் பேரவையினாலும் அல்லது தேர்தல் தொகுதிகளினாலும் நிருவாகக் குழு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தல்: சில சங்கங்களில் நிருவாகக் குழு உறுப்பினர்கள் சங்கத்தின் ஒரு பேரவைக் கூட்டத்தில், முழுப் பேரவையால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இது ஏறக்குறைய எல்லா விவசாய நாணயச் சங்கங்களிலும் நடைமுறையில் நடந்து வருகிறது. மேலும், சிறு அங்கத்துவமும் அடக்கமான எல்லையுமுள்ள இதர சிறிய சங்கங்களிலும் கூட இது நடைமுறையிலிருக்கிறது.

அங்கத்துவம் பெரியதாகவும் அல்லது சங்கத்தின் எல்லை பரவலாகவுமிருந்தால், நிருவாகக் குழுவிற்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதில் பல்வேறு விதமான நடைமுறைகள் அனுசரிக்கப்படுகின்றன. சில சங்கங்களில், உறுப்பினர்கள் தொகுதிகளுக்கும் அல்லது எல்லைகளுக்கும் நிருவாகக் குழு இடங்களின் எண்ணிக்கையைச் சங்கம் பகிர்மானம் செய்கிறது. ஆனால், எல்லா இடங்களுக்கும் இயக்குநர்களை ஒரு பொதுவான பேரவைக் கூட்டத்தில்தான் சங்கம் தேர்ந்தெடுக்கிறது. இன்னும் சில சங்கங்களில், இயக்குநர்கள் அந்தந்தத் தொகுதி அல்லது எல்லை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆக, நிருவாகக் குழுவின் இடங்களை உறுப்பினர்கள் தொகுதிகள் அல்லது எல்லைகளின் இடையே பகிர்மானம் செய்வதன் மூலம், இயக்குநர்களைத் தேர்ந்தெடுத்தலிலும் ஒருப்படித்தான முறையில்லை. தேர்தல் ஏற்பாடு ஒரு சங்கத்தின் வருமானத்தைப் பொறுத்திருப்பதால் அதாவது, அது பிரதம சங்கமா, அல்லது கூட்டிணைப்புச் சங்கமா அல்லது தலைமைச் சங்கமா என்பதைப் பொறுத்திருப்பதால் எந்த வித ஒருப்படித்தான முறையைக் கையாளுவது சற்று கடினமாகவே இருக்கிறது.

ஒரு சங்கம் சிறியதாக இருந்தால் அதாவது அதன் உறுப்பினர்கள் 500–க்கு உட்பட்டிருந்தால், எல்லா இயக்குநர்களும் முழுப் பேரவையால் ஒரே கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படலாம். 500–க்கு மேற்பட்ட உறுப்பினர்களுடைய பிரதமச் சங்கத்தில், நிருவாகக் குழு இடங்கள், பகுதிகள் அல்லது கிராமங்கள், அல்லது சமயோசிதம்போல் குறிப்பிட்ட எல்லைகளிடையே பகிர்மானம் செய்யப்பட்டு ஒவ்வொரு தொகுதியைச் சேர்ந்த உறுப்பினர்களால் இயக்குநர்கள் தேர்ந்தெடுக்கப்படலாம். ஒரு மத்திய வங்கியில் மேற்பார்வை ஒன்றியம் ஒவ்வொன்றும் மத்திய வங்கிக்கு ஓர் இயக்குநரைத் தேர்ந்தெடுக்கிறது. அநேகமாக ஒன்றியங்களில் விவசாய நாணயச் சங்கங்கள் அடங்கியிருக்கின்றன. இதர சங்க வகைகளும், தனி நபர்களும், மத்திய வங்கியின் பேரவைக் கூட்டத்தில் தங்களுடைய இயக்குநர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். ஒன்றியங்களேயில்லாமலிருந்தால், மத்திய வங்கியின் ஒரு பேரவைக் கூட்டத்தில் சங்கங்களின் பிரதிநிதிகளால் ஒரு மத்திய வங்கியின் இயக்குநர்கள் தேர்தல் நடைபெறுகிறது. அதாவது சங்கங்களின் ஒவ்வொரு தொகுதியின் பிரதிநிதிகளாலும் ஒவ்வொரு தொகுதி இயக்குநர் தேர்ந்தெடுக்கப்பட்டு, இயக்குநர் தேர்தல் நடைபெறலாம். தலைமைச் சங்கங்களில், மத்திய நிறுவனங்கள் தலைமைச் சங்கத்திற்கு இயக்குநர்களை அனுப்பக்கூடாது.

தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியில் ஒவ்வொரு மத்திய வங்கியும் தலைமை வங்கியின் நிருவாகக் குழுவில் தன் பிரதிநிதியாக இருப்பதற்கு ஓர் இயக்குநரை அனுப்புகிறது. தமிழ்நாடு மாநில நிலவள வங்கியில் ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள நிலவள வங்கியின் தலைவர்கள் கூடி விதிகளில் நிருணயிக்கப்பட்ட எண்ணிக்கை இயக்குநர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். ஆகையால், எல்லாச் சங்கங்களிலும் நிருவாகக் குழு உறுப்பினர்கள் தேர்தல், ஒரு சங்கத்தில் பேரவையால் நேர்முகமாகவாவது அல்லது தொகுதிகளை அமைப்பதன் மூலமாவது நடைபெறுகிறது. கூட்டிணைப்புத் தலைமைச் சங்கங்களில், அவற்றின் உப-விதிகளில் நிருணயிக்கப்பட்ட ஏற்பாட்டின்படி, தேர்தல் நடைபெறுகிறது. தேர்தலுக்காக உறுப்பினர்களை நிலப் பகுதி அல்லது வேறு அடிப்படையில் உறுப்பினர்களைத் தொகுதிகளாகப் பிரித்து தேர்தல் தொகுதிகளமைப்பதை முறைப்படுத்த, எந்தவிதச் சட்டரீதியான ஏற்பாடுகளும் செய்யப்படவில்லை. ஆனால், தமிழ்நாட்டு மாநிலக் கூட்டுறவு வங்கி, தமிழ்நாடு மாநில நிலவள வங்கி போன்ற தலைமை நிறுவனங்களிலும், கூட்டுறவு மத்திய வங்கிகளிலும், தேர்தல் ஏற்பாடு சட்டரீதியாக தமிழ்நாடு கூட்டுறவுத் திருத்தச் சட்டத்திலும் (1970) தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கிகளின் விதிகளிலும் (1970) செய்யப்பட்டிருக்கிறது.

சங்கத்தின் அலுவலர்கள் (Office-bearers) தேர்தல் : பொதுவாக ஒரு சங்கத்தின் அலுவலர்கள் (Office-bearers) தலைவர் (President or Chairman), உப-தலைவர் (Vice President or Vice-Chairman), பொருளாளர் (Treasurer), செயலாளர் (Secretary) உதவிச் செயலாளராவர். இப்போது அநேக சங்கங்கள் தங்கள் செயலாளராகப் பணி செய்வதற்கு ஊதியம் பெற்ற ஓர் ஊழியரை வைத்திருக்கிறார்கள். விவசாய நாணயச் சங்கங்களிலும் கூட, ஊதியம் பெற்ற செயலாளர்கள் அமர்த்தப்பட வேண்டும் என்று இப்பொழுது வற்புறுத்தப்படுகிறது. 31ஆம் விதி, சங்கத்தின் தலைவர், துணைத் தலைவர், பொருளாளர் அல்லது வேறு எந்த அலுவலரையும், தேர்ந்தெடுப்பதில் அனுசரிக்க வேண்டிய நடைமுறையை விதிக்கிறது. அலுவலர்கள், வாக்குச் சீட்டின்மூலம் வாக்கெடுப்பில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் சங்கத்தின் அலுவலர்களைத் தேர்ந்தெடுக்கும் செயலுக்காகச் சங்கத்தின் தலைவர் நிருவாகக் குழுவின் உறுப்பினருடைய ஒரு கூட்டத்தைக் கூட்டுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். கூட்டத்திற்குச் சங்கத்தின் தலைவர், அவர் தேர்தலுக்கு ஒரு வேட்பாளராக இல்லாமலிருந்தால், தலைமை வகிக்கவேண்டும் அல்லது தேர்தலுக்கு வேட்பாளராக

இல்லாமலிருக்கும் வேறு எந்த நிருவாகக் குழு உறுப்பினரைக் கூட்டத்திற்குத் தலைமை வகிக்க நிருவாகக் குழு தேர்ந்தெடுக்கலாம். 31ஆம் விதியில் விதிக்கப்பட்டிருக்கும் நடைமுறை ஏறக்குறைய நிருவாகக் குழுவின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு நடத்தப்படும் தேர்தல்களுக்கு அனுசரிக்கப்பட வேண்டிய நடைமுறை மாதிரி இருக்கின்றன.

நிருவாகக் குழுவில் ஏற்படும் தற்செயலான காலி இடங்களை நிரப்புதல்: சாதாரணமாக நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள் தேர்தல், பிரிவு 27 (iv)-ன்படி பிரிவுகள் 29, 30 நிருணயிக்கப்பட்டப்படியும், வாக்குச் சீட்டின் மூலம் வாக்கெடுப்பின் மூலம் நடத்தப்பட வேண்டும் என்று இருந்தாலும் நிருவாகக் குழுவில், மரணத்தாலும் அல்லது 28ஆம் பிரிவின்கீழ் விதிக்கப்பட்ட தகுதியின்மைகளாலும் ஏற்பட்ட காலி இடங்கள், விதிகளிலும், உப-விதிகளிலுமுள்ள சரத்துக்களின்படி நிரப்பப்பட வேண்டும். 31ஆம் விதி இதுபற்றி எதையும் கூறவில்லை. இந்த விஷயம் உப-விதிகளுக்கு விடப்பட்டிருக்கிறது. ஆனால், காலி இடத்திற்கு நியமிக்கப்பட்ட உறுப்பினர் தன் பதவியை அந்த இடம் காலியாகாமலிருந்தால் அந்த இடத்திலிருந்தவர் எந்தக் காலம் வரைக்கும் நீடித்திருப்பாரோ அந்தக் காலம் வரைக்கும் மட்டும்தான் பதவி வகிப்பார் [பிரிவு 27 (iv)-ன் விலக்குக்கூறு). அத்தகைய இடைக்காலக் காலி இடங்கள், காலாவதியாகாத காலப் பகுதிக்கு, நிருவாகக் குழுவின் இதர உறுப்பினர்களால் சேர்த்துக் கொள்வதன்மூலம் (Co-option) நிரப்பப்படலாம்.

8. நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினரை நிருவாகக் குழுவிலிருந்து நீக்குதல் (Removal of a member of the Committee)

1961ஆம் ஆண்டு கூட்டுறவுச் சட்டத்திற்கு முன்பு தொகுக்கப்பட்ட சங்கங்களின் மாதிரி உப-விதிகளில், நிருவாகக் குழுவின் யாதேனும் ஓர் உறுப்பினர் அல்லது உறுப்பினர்கள் பேரவையின் ஒரு தீர்மானத்தின்மூலம் எந்தச் சமயத்திலும் நீக்கப்படலாம் என்ற ஒரு சரத்து இருந்தது. உப-விதிகளின் படி, பேரவை மேற்கொள்ளக்கூடிய அதிகாரங்களில் ஒன்று, இயக்குநர்கள் குழுவைத் தேர்ந்தெடுப்பதும், நீக்குவதுமாகும். விவசாய நாணயச் சங்கங்களில் மாதிரி உப-விதிகளில், ஊராட்சி ஒன்றியத்தினுடைய யாதேனும் ஓர் உறுப்பினர் அல்லது உறுப்பினர்கள் பேரவையின் ஒரு தீர்மானத்தின்மூலம் எந்தச் சமயமும் நீக்கப்படலாம் என்ற ஒரு சரத்து இருந்தது. இந்தச் சரத்து, நிருவாகக் குழுவிலிருந்து ஒரு நிருவாகக்குழு உறுப்பினரை

விலக்குவதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால், 1961ஆம் ஆண்டு கூட்டுறவுச் சட்டத்தின் 26 (2) பிரிவின்கீழ் ஒரு பேரவையால் ஆலோசிக்கப்படும் பொருள்களைப் பட்டியல் செய்யும்போது, நிருவாகக் குழுவின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தல் என்று குறிக்கப்பட்டிருக்கிறது. இதன் நோக்கம், நிருவாகக் குழு பேரவையால் நீக்கப்பட முடியாது என்பதும், நிருவாகக் குழு உறுப்பினர்கள் உப-விதிகளின்படி அவர்கள் பதவிக்காலம்வரை தொடர்ந்திருக்க வேண்டும் என்பதும் தெளிவு. எனினும், நிருவாகக் குழுவிலிருந்து ஓர் உறுப்பினரை வெளியேற்றுவதற்கு இதர சரத்துகள் இருக்கின்றன. அத்தகைய ஒரு சரத்து, பிரிவு 20-ன்கீழ் ஓர் உறுப்பினரை வெளியேற்றும் அதிகாரமாகும். இது ஒரு கடினமான சரத்து. பேரவையினிடத்தில் வேறு பரிகாரம் ஒன்றும் இல்லாமலிருந்தால் மட்டும் இந்தச் சரத்து பிரயோகிக்கப்பட வேண்டும்.

ஓர் உறுப்பினர் தன் உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கப்பட்டால், பிரிவு 18 (2) (ஆ)-ன்கீழ் அவர் ஓர் உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிடுகிறார். ஆகையால், நிருவாகக் குழுவின் உறுப்பினராகக்கூட அவர் இருப்பது நின்றுவிடும். பிரிவு 28 (அ)-ன்கீழ் ஒரு நிருவாகக் குழு உறுப்பினர், பதிவாளரால் நடத்தப்படும் ஒரு சட்டபூர்வமான விசாரணையின்பொழுது அவர் தவறாக நடந்துகொண்டதாகவோ அல்லது சங்கத்தின நலன்களுக்குப் பாதகமான செயல்களைப் புரிந்திருந்தார் என்றோ தெரிய வந்தால், அந்த உறுப்பினரை நிருவாகக் குழுவிலிருந்து நீக்குவதற்குப் பதிவாளருக்கு அதிகாரம் உண்டு. இந்த அதிகாரம், ஒரு சங்கத்தினுடைய நிருவாகம் அதன் நிருவாகக் குழுவின் உறுப்பினர்களில ஒருவரின் நேர்மையின்மையாலும் அல்லது தீய நடத்தையாலும் கேடடைந்தால், பதிவாளரால் மேற்கொள்ளப் படவேண்டும். முழு நிருவாகக் குழுவைப் பிரிவு 72-ன்கீழ் குழுவை மீறுவது (Supersession) அல்லது பிரிவு 85-ன்கீழ், சங்கத்தைக் கலைத்து விடுவது (Winding up) போன்ற நடவடிக்கைகளெடுக்காமல், நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினரை மட்டும் நீக்குவதன்மூலம் ஒரு சங்கத்தின் அலுவல்களைச் சரிபடுத்த முடியும் என்றால் இந்தச் சரத்து உபயோகமாக இருக்கும். இந்தச் சரத்தின் குறைபாடு என்னவென்றால், ஒரு சங்கத்தின் நிருவாகத்திற்கு அதன் நிருவாகக் குழு முழுவதும் பொறுப்பாளியாக இருக்கிறது என்பதாகையால், ஓர் உறுப்பினரை மட்டும் தனிப்படுத்திப் பொறுக்கியெடுப்பது கடினமாகவும், நிருவாகக் குழுவிற்கும் பதிவாளருக்கும்கூடச் சங்கடமாகவுமிருக்கும். சட்ட ரீதியான விசாரணையின் விளைவாகச் சங்கத்தின் கெட்ட நிருவாகத்திற்கு

ஒரு நிருவாகக் குழு உறுப்பினர் எல்லை மீறிய பொறுப்பாளியாக இருந்தார் என்று தெளிவாகத் தெரியவந்தால், பதிவாளர், பிரிவு 28 (ஆ)-ல் விதிக்கப்பட்ட ஒழுங்கு முறைகளையனுசரித்த பிறகு நிருவாகக் குழுவிலிருந்து அத்தகைய நபரை நீக்கி விடலாம்.

72ஆம் விதியின்கீழ் நிருவாகக் குழு மீறப்படலாம் (Supersession). பேரவையால் ஒரு நிருவாகக் குழுவிற்குப் பதிலாக அதன் பதவிக் காலம் முடிவதற்கு முன்னதாகவே ஒரு புதிய நிருவாகக் குழுவை அமைக்க முடியாவிட்டாலும், தன்னுடைய அலுவல்கள் தவறான முறையில் நிருவாகம் செய்யப்படுவதைச் சங்கம் பிடிவாதமாக அனுமதித்தாலும், பதிவாளர் பிரிவு 27-ன் கீழ் நிருவாகக் குழு முழுவதையும் மீறி சங்கத்தின் நிருவாகத்தை அதற்காக அவரால் அதிகாரம் பெற்ற ஒரு நபர் அல்லது நபர்களுக்கு ஒப்படைக்கலாம். சங்கத்தின் அலுவல்கள் சரிவர நிருவாகம் செய்யப்படாத காரணத்தால் நிருவாகத்தை மாற்ற வேண்டுமானால், ஒரு நிருவாகக் குழுவை நீக்குவது உண்மையாகவே அளவுக்குமீறிய நடவடிக்கையாகும். ஆகையால், இயல்பாகவே நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள், நிருவாகக் குழுவிற்குத் தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட, முழு பதவிக் காலத்திற்கும் தொடர்ந்து பதவியிலிருக்கலாம்.

ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிலிருக்கும் அலுவலரை நீக்குதல் : நிருவாகக் குழு உறுப்பினர்கள் தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட முழு பதவிக் காலம் வரை தொடர்ந்து பதவியிலிருக்கலாம் என்ற ஏற்பாடு போன்று, தலைவர் அல்லது துணைத் தலைவர் அல்லது பொருளாளர் அல்லது செயலாளர் (ஊதியம் பெறாத செயலாளர்) இவர்கள் தாங்கள் வகிக்கும் பதவியிலிருந்து நிருவாகக் குழுவால் நீக்கப்பட முடியாது. சில சமயங்களில் அலுவலர்களை வேலையில் அமர்த்துவதற்கும் தேர்ந்தெடுப்பதற்கும் தகுதி வாய்ந்த ஒரு நிருவாகக் குழு, அந்த அலுவலர்களை நீக்கிப் புதிய அலுவலர்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் தகுதி வாய்ந்ததே என்று கூறப்படுகின்றது. இது ஒரு சரியான கருத்தாகத் தெரியவில்லை. ஓர் அலுவலர் முறைகேடாக நடந்தாலும் நிருவாகக் குழு உறுப்பினர்கள் முறைகேடாக நடந்தாலும் எந்த பரிகாரம் இருக்கிறதோ அதே பரிகாரம் அலுவலர்களைப் பற்றிய நடவடிக்கைகளிலும் உண்டு. ஏனென்றால், தலைவர் அல்லது செயலாளர் போன்ற அலுவலர்கள், குறிப்பிட்ட பதவிக்காலம் வரை தொடர்ந்து பதவியிலிருப்பது நிருவாகக் குழுவின் விருப்பம் அல்லது நோக்கத்திற்கு விடப்பட்டால், அவர்கள் தயவு தாட்சண்யமின்றி தங்கள் கடமைகளையாற்றுவது சாத்தியமாக

இராது அது அவர்களுடைய பதவிக்கு ஒரு நிச்சயமின்மையைப் புகுத்தி சங்கத்தின் நிருவாகத்தின் உறுதித் தன்மையைப் பாதித்துவிடும். ஏனென்றால், எந்தச் சமயத்திலும் ஒரு குயுக்தியாக ஏற்பட்ட பெரும்பான்மையினரால் (majority) அலுவலர்கள் நீக்கப்படலாம். உத்தேசம் அதுவல்ல ஆகையால், நிருவாகக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அலுவலர்கள் சாதாரணமாக அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பதவிக் காலம் முழுவதும் தொடர்ந்து பதவி வகிப்பார்கள்.

9. நிருவாகக் குழு உறுப்பினர்களுக்குத் தகுதியின்மைகள் (Disqualification for Membership of Committee)

1961ஆம் ஆண்டுக் கூட்டுறவுச் சட்டத்திற்கு முன்பு ஒரு நிருவாகக் குழுவின் உறுப்பினர்களுக்கான தகுதியின்மைகள் 1932ஆம் வருடத்தில் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் தொகுக்கப்பட்ட விதிகளில் குறிப்பிடப்பட்டிருந்தன. சங்கங்களில் சரியானதும் திறமையானதுமான நிருவாகத்தை உறுதி படுத்துவதற்காக உத்தேசிக்கப்படும் ஒரு முக்கியச் செய்தியாக இது இருப்பதால், தகுதியின்மைகள் சட்டத்திலேயே விதிக்கப்பட்டிருக்கின்றன. அதாவது 1961ஆம் ஆண்டின் கூட்டுறவுச் சட்டத்தின் 28ஆம் பிரிவின்கீழ், ஓர் உறுப்பினர் தேர்தலில் நிற்பதற்குக் கீழ்க்கண்ட காரணத்தால் தகுதியில்லாதவராக இருப்பார்.

(1) அவர் 38ஆம் விதியில் குறிப்பிட்டபடி சங்கத்தில் ஊதியம் பெறும் ஓர் ஊழியருக்கு ஒரு நெருங்கிய உறவினராக இருந்தாலும், பிரிவு 28 (1)-ன் பகுதி (அ)-ன் செயலுக்காக, எவர் நெருங்கிய உறவினர் என்பது 38ஆம் விதியில் பட்டியல் செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பட்டியலுக்கு 38ஆம் விதியைப் பார்க்கவும்.

(2) தன் சங்கத்திற்கோ அல்லது வேறு எந்தச் சங்கத்திற்கோ, தான் வாங்கிய கடன் அல்லது கடன்களில் தொடர்புடைய சங்கத்தின் உப-விதிகளில் குறிக்கப்பட்ட காலத்திற்கு அல்லது எப்படியிருந்தாலும் மூன்று மாதங்களுக்கு மேற்பட்ட காலத்திற்குத் தவணை தவறியிருந்தாலும்; தவணை தவறிய காரணத்திற்காகப் பதவியை விட்டு நின்றுவிட்ட ஒரு நிருவாகக் குழு உறுப்பினர், தான் உறுப்பினராக இருந்த சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு மீண்டும் தேர்தலில் நிற்கவோ அல்லது வேறு எந்தச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்குத் தேர்தலில் நிற்கவோ அவர் பதவியிலிருந்து நின்றுவிட்ட தேதியிலிருந்து ஒரு வருட காலம் வரைக்கும் தடை செய்யப்பட்டிருக்கிறார் [பிரிவு 28 (1) (அ) (1)].

எனினும், இந்தத் தகுதியின்மை ஒரு சங்கத்தின் பிரதிநிதிக்கு அந்தச் சங்கம் தவணை தவறியிருந்தால் குறிப்பாகப் பிரயோகிக்கப்பட மாட்டாது. சந்தானம் குழுவினர் அத்தகைய பிரதிநிதிகூட தகுதியின்மையுள்ளவராகச் செய்யப்படவேண்டும் என்று கருதினார்கள்.

(3) அவர் 91ஆம் பிரிவின்கீழ், எந்த ஒரு தீர்ப்பாணை, முடிவு, தீர்ப்பு, அல்லது உத்தரவு விதிக்கப்பட்ட ஒரு நபராக இருந்தாலும், தனக்கெதிராக பிரிவு 92-ன்கீழ் கடன் வசூலிப்பதற்காக ஒரு விண்ணப்பம் செய்யப்பட்டிருந்தாலும், அல்லது சென்னை நில அடைமான வங்கிச் சட்டத்தின் (1934) பிரிவு 14-ன் கீழ் அடைமான சொத்தின் விற்பனைக்காக விண்ணப்பம் செய்யப்பட்டிருந்தாலும், இந்தத் தகுதியின்மைக்குட்படாதவர். பிரிவு 28 (1) (அ) (2)-லிருந்து இது தெளிவாகிறது. சந்தானம் குழுவினர், அத்தகைய நபர்கள்கூட இயக்குநராவதற்குத் தகுதியற்றவர்களாக்கப்பட வேண்டும் என்று கருதினர். ஓர் இயக்குநர் மூன்று மாதங்களுக்குமேல் தவணை தவறிய காரணத்திற்காக இயக்குநர் பதவியிலிருந்து நின்றுவிட்டால், ஓர் ஆண்டிற்குப் பிறகு அவர் தேர்தலில் நிற்பதற்குத் தகுதியுள்ளவர் என்று இருக்கும்போது, தனக்கு எதிராக ஒரு தீர்ப்பாணை வழங்கப்பட்டிருக்கும் ஒரு நபர் நிரந்தரமாக தகுதியின்மையையடைவது இங்கே கவனிக்கவேண்டிய செய்தியாகும். சந்தானம் குழுவினர் அத்தகைய நிரந்தரத் தகுதியின்மைக்குத் தேவையில்லையென்றும், அந்தத் தகுதியின்மை, தீர்ப்பாணையிலடங்கியுள்ள கடனைத் தீர்த்த தேதியிலிருந்து மூன்று ஆண்டுகாலத்திற்குத் தான் பிரயோகிக்கப்பட வேண்டும் என்றும் கூறியிருக்கின்றனர். இது போதுமானது.

(4) ஒரு நபர் நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ சங்கத்துடன் செய்யப்பட்ட ஏதாவது ஒரு ஒப்பந்தத்தில் அக்கறை கொண்டவராயிருந்தாலும் அல்லது சங்கத்தால் செய்யப்படும் ஏதாவது ஒரு விற்பனை அல்லது கொள்முதலில் தனிப்பட்ட முறையில் ஈடுபட்டிருந்தாலும் அல்லது சங்கத்தின் லேவாதேவி ஒப்பந்தத்தில் எதிலாவது ஈடுபட்டிருந்தாலும் (அந்த ஒப்பந்தம், விற்பனை, அல்லது கொள்முதல், அல்லது லேவாதேவி முடிவு பெறுமலிருந்தால்) நிதி நலன்கள் அடங்கியுள்ள முதலீடு, கடன் வாங்குதல் இவைகளைத் தவிர ஒரு விற்பனைச் சங்கத்தின் உறுப்பினர் விற்பனை செய்யவேண்டியிருக்கிறது. அவருடைய விளைபொருள்களை விற்பனைச் சங்கத்தின்மூலம் விற்கவேண்டியிருக்கிறது அதேமாதிரியாக ஒரு நுகர்வோர் சங்கத்தின் உறுப்பினர் அந்தச் சங்கத்தின் கொள்முதல் குழுவின் உறுப்பினராக இருந்

தாலும்கூட, சங்கத்தால் செய்யப்படும் கொள்முதல் தொடர்பாக அவர் ஒப்பந்தத்தில் சேரவேண்டியிருக்கிறது. மேற்சொன்ன சங்க வகைகளின் செயல்பாடு பாதிக்கப்படாமலிருப்பதை உறுதிப்படுத்துவதற்கு, இந்தப் பகுதியில் உள்ள தகுதியின்மை 37ஆம் விதியில் குறிப்பிடப்பட்ட சிலவித ஒப்பந்தங்கள், விற்பனைகள் கொள்முதல்களுக்கு பிரயோகிக்கப்படக் கூடாதவாறு செய்யப்பட்டிருக்கிறது.

(5) சங்கத்தின் சார்பாக, அல்லது சங்கத்திற்கு எதிராக அல்லது சங்கத்தில் உறுப்பினராக உள்ள ஏதாவது மற்றொரு சங்கத்திற்குச் சார்பாக அல்லது எதிராக வழக்கறிஞராக (ஊழியராக) இருந்தாலும்

(6) அவர் பிரிவு 2-ல் விளக்கப்பட்ட ஒரு பெயரளவு (Nominee), அல்லது துணைஞர் (Associate), உறுப்பினராக இருந்தாலும்

(7) வயது வராதவராகவும் அல்லது தெளிவற்ற மனநிலையுள்ள ஒரு நபராக இருந்தாலும்

(8) அவர் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் ஒரு குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டு, அந்தத் தண்டனை மாற்றப்படாலிருந்து ஒரு மூன்று வருட காலம் தண்டனை முடிவடைந்த தேதியிலிருந்து கழியாமலிருந்தாலும் (28) (1) (ஜி). நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினர் [பிரிவு 28 (1) (ஜி)]-ன்கீழ் பதவியை வகிப்பதிலிருந்து நின்றுவிட்டால், அவருக்கு விதிக்கப்பட்ட தண்டனை மேல்முறையீட்டின் பேரில் ரத்து செய்யப்பட்டாலும் அல்லது திருத்தம் செய்யப்பட்டாலும், அவர் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது அமர்த்தப்பட்ட பதவிக் காலத்தில் முடிவுபெறாத பாகத்திற்குப் பதவிக்கு மீண்டும் அவரை சேர்த்துக்கொள்ளவேண்டும். அப்படிச் செய்யும்பொழுது இடையில் அவருடைய காலி இடத்தில் அமர்த்தப்பட்ட அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட எந்த நபரும் தன் பதவியைக் காலி செய்துவிட வேண்டும்.

நிருவாகக் குழுவின் உறுப்பினர் பிரிவு 28 (1)-ல் குறிப்பிடப்பட்ட தகுதியின்மைகளுக்குட்பட்டவரானாலும் அல்லது பிரிவு 28 (2) (ஆ)-ன்கீழ் ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் உறுப்பினர் பதவியிலிருந்து அவர் நின்றுவிட்டாலும் அல்லது பிரிவு 28 (2)-ன்கீழ் இன்னோர் உறுப்பினர் சங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய ஏதாவது பாக்கித் தொகையை வசூலிப்பதற்காக விற்பனைக்குக் கொண்டுவரப்பட்ட அத்தகைய உறுப்பினருடைய ஏதாவது சொத்தை அவர் நேர்முகமாகவோ அல்லது

மறைமுகமாகவோ வாங்கினாலும் அவர் பதவியிலிருந்து விலக்கப்படுவார். பிரிவு 28 (6)-ன்கீழ் நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினர் நிருவாகக் குழுவிலிருப்பதற்குத் தகுதியின்மையைப் பெற்றிருக்கிறாரா என்ற பிரச்சினை பதிவாளரால் முடிவு செய்யப்படும். 39ஆம் விதியின்கீழ் அத்தகைய நிருவாகக் குழு உறுப்பினருக்குத் தன் மறுப்புகளைக் கூறுவதற்கு ஒரு வாய்ப்பு கொடுத்த பின்னர் தான் பதிவாளர் பிரிவு 28 (6)-ன்கீழ் அத்தகைய உறுப்பினர் பிரிவு 28-ல் குறிப்பிடப்பட்ட ஏதாவது தகுதியின்மைகளுக்குட்பட்டு இருந்தாரா அல்லது உட்பட்டிருக்கிறாரா என்ற பிரச்சினையை முடிவு செய்கிறார்.

முன்பு அமலிலிருந்த விதிகள், சட்டம் அல்லது விதிகளின்கீழ் தகுதியின்மையடைந்த ஏதாவது ஓர் இயக்குநரை நீக்குவதற்கான ஏற்பாடு செய்யவில்லை. இந்த விடுகையை 1961ஆம் ஆண்டின் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் தொகுக்கப்பட்ட விதிகளின் 40ஆம் விதி நிறைவு செய்திருக்கிறது. இந்த விதி அத்தகைய உறுப்பினருக்கும் அவர் உறுப்பினராக இருந்த நிருவாகக் குழுவிற்கும் தங்கள் விளக்கத்தை உரைப்பதற்கு ஒரு வாய்ப்பு அளித்த பின்னர் அத்தகைய உறுப்பினர் பிரிவு 28-ன் உட்பிரிவுகள் (1) (2) (3) (4) அல்லது (5)-ன்கீழ் நிருவாகக் குழுவிலிருப்பதற்குத் தகுதியற்றவரானால் அவரை நீக்குவதற்குத் தானாகவே கட்டளையிடப் பதிவாளருக்கு அதிகாரம் உண்டு. விதி 40 (1)-ன் கீழ், பதிவாளர், நிருவாகக் குழுவில் தொடர்ந்திருந்த ஓர் உறுப்பினர் தகுதியற்றவரென்று கட்டளையிடப்பட்டவுடன் அந்த உறுப்பினர் நிருவாகக் குழுவின் உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிடுவார் [விதி 40 (2)].

10. ஒரு நபர் நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினராகப் பதவி வகிக்கக் கூடிய சங்கங்களின் எண்ணிக்கையில் வரம்பு [பிரிவு 28 (3)] (Limitation of the number of Societies in which a person can serve office Committee member)

அதிக எண்ணிக்கையுள்ள நபர்கள் சங்கங்களின் நிருவாகத்தில் பங்கெடுத்துக்கொள்ள வசதி செய்யும் நோக்கத்துடன் 1961ஆம் ஆண்டுக் கூட்டுறவுச் சட்டத்தில் ஒரே சமயத்தில் ஒரு நபர் இயக்குநராக இருக்கக்கூடிய சங்கங்களின் எண்ணிக்கையில் ஒரு வரம்பு விதிக்கப்பட்டுள்ளது. 28 (3) பிரிவின்படி, ஒரு நபர் ஐந்துக்கு மேற்பட்ட சங்கங்களில் இயக்குநராக இருக்கமுடியாது. இந்த ஐந்து சங்கங்களில் இரண்டிற்கு மேற்பட்ட மத்திய சங்கங்கள், இரண்டிற்கு மேற்பட்ட தலைமைச் சங்கங்களிலிருக்கக் கூடாது. சங்கங்களைப் பாகுபாடு செய்தலைப்பற்றிய 15ஆம்

பிரிவை விளக்கும்போது முந்தைய அத்தியாயத்தில் தலைமைச் சங்கங்கள் யாவை என்றும் மத்திடச் சங்கங்கள் யாவை என்றும் சுட்டிக் காட்டப்பட்டன. இந்தச் சங்கங்கள் யாவை என்று விதி 11 (5) எடுத்துக் காட்டுகிறது. உதாரணமாக, மத்தியக் கூட்டுறவு வங்கி ஒரு மத்தியச் சங்கமாகும். தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி ஒரு தலைமைச் சங்கமாகும். இந்த ஐந்து சங்கங்கள் வரம்பில ஒரு நபர் அரசாங்கத்தால அல்லது பதிவாளரால் இயக்குநராக நியமனம் செய்யப்பட்டிருக்கும் சங்கங்கள் சேரவில்லை.

புதிய சட்டம் அமலுக்கு வந்த தேதியன்று, ஐந்திற்கு மேற்பட்ட பதிவு செய்யப்பட்ட சங்கங்களின் நிருவாகக் குழுவில் ஒரு நபர் உறுப்பினராக இருந்தால், அவர் அந்தத் தேதியிலிருந்து 90 நாள்கள் காலத்திற்குள் ஐந்து சங்கங்கள் தவிர மற்ற எல்லாச் சங்கங்களின் குழுவில் தன் உறுப்பினர் பதவியை ராஜிநாமா செய்யவேண்டும். அப்படிச் செய்யத் தவறினால், அத்தகைய எல்லாச் சங்கங்களின் நிருவாகக் குழுவில் அவர் உறுப்பினர் பதவியிலிருந்து விலக்கப்படுவார். அதேமாதிரியாகச் சட்டத்தின் தொடக்கத்தில், இரண்டிற்கு மேற்பட்ட தலைமைச் சங்கத்தின் அல்லது இரண்டிற்கு மேற்பட்ட மத்தியச் சங்கத்தின் நிருவாகக் குழுக்களில் உறுப்பினராக இருந்த ஒரு நபர் மேலே குறிப்பிட்ட காலத்திற்குள் இரண்டு தலைமைச் சங்கங்கள் அல்லது இரண்டு மத்தியச் சங்கங்களில் தவிர, மற்ற எல்லாச் சங்கங்களின் நிருவாகக் குழுவிலிருந்து தன்னுடைய உறுப்பினர் பதவியை ராஜிநாமா செய்யவேண்டும். அப்படிச் செய்யத் தவறினால், அவர் எல்லாத் தலைமை மற்றும் மத்திய சங்கங்களின் நிருவாகக் குழுவில் தனது உறுப்பினர் பதவியை இழந்துவிடுவார்.

ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு உறுப்பினராகத் தான் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது அமர்த்தப்பட்ட தேதியில் ஒரு நபர் ஐந்து சங்கங்களின் நிருவாகக் குழு உறுப்பினராக இருந்தால் அல்லது இரண்டு தலைமைச் சங்கம் அல்லது இரண்டு மத்தியச் சங்கங்களின் நிருவாகக் குழு உறுப்பினராக இருந்தால், அத்தகைய நபர் சங்கம் அல்லது தலைமைச் சங்கம் அல்லது மத்தியச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்குச் சமயோசிதம்போல் தேர்ந்தெடுக்கப்பட்டது அல்லது அமர்த்தப்பட்டது சட்டப்படிச் செல்லத்தக்கதல்ல. ஒரு நபரும் ஐந்துக்கு மேற்பட்ட சங்கங்களில் அல்லது இரண்டிற்கு மேற்பட்ட தலைமைச் சங்கங்களில் அல்லது மத்திய சங்கங்களில் இயக்குநராக இருக்கக்கூடாது என்ற பிரதான நோக்கத்தை உறுதிப்படுத்துவதற்கு இந்த ஏற்பாடுகள் உத்தேசிக்கப்பட்டன. எனினும், பிரிவு 28 (3)-ல் குறிப்பிடப்

பட்ட ஐந்து சங்கங்கள் வரம்பு தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், எல்லா மேற்பார்வை ஒன்றியங்கள், மாவட்டக் கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சம்மேளனம், சென்னை மாநிலக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் சம்மேளனம், கூட்டுறவுப் பயிற்சிக் கழகங்கள் இவற்றிற்குப் பொருந்தாது. பிரிவு 111-ன்கீழ் அரசாங்கம் இந்த நிறுவனங்களைப் பிரிவு 28 (3)-ன் சரத்து களிலிருந்து விதிவிலக்கு செய்திருக்கிறார்கள்.

சந்தானம் குழுவினர் மேற்குறிப்பிட்ட பிரச்சினையை ஆராய்ந்து அந்த வரம்புடன்கூட விரும்பப்பட்ட குறிக்கோள் அடையப்படவில்லையென்றும், மற்றவர்களுக்கு வாய்ப்பை மறுத்து ஒரு நபர் பத்துக்கு மேற்பட்ட சங்கங்களில் ஓர் இயக்குநராக இருக்க முடிகிறது என்றும், இத்தனை சங்கங்களில் ஓர் இயக்குநராக இருந்து தன்னுடைய முழு கடமைகளைச் செய்வதற்கு ஒரு நபருக்குப் போதிய நேரம் கிடைப்பது அரிது என்றும், இந்தக் கௌரவ வேலைக்கு ஒரு நபர் இயல்பாகச் செலவு செய்யும் காலத்தைப் பார்க்கும்போதும் ஒரு சங்கத்தின் நிருவாகத்தில் ஒரு நபர் பலன் அளிக்கும் முறையில் பங்கெடுத்துக் கொள்வதன் தேவையைப் பார்க்கும்போது இந்த வரம்பு மூன்று சங்கங் களுக்குக் குறைக்கப்படலாம் என்றும் கருத்து தெரிவித்தனர். இந்த மூன்று சங்கங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட மத்தியச் சங்கமும் ஒன்றுக்கு மேற்பட்ட தலைமைச் சங்கமும் இருக்கக்கூடாது. மேலும், அந்தக் குழுவினர், தலைவர், துணைத் தலைவர் தேர்ந் தெடுக்கப்பட்ட செயலர் போன்ற அலுவலர்களைப் பொறுத்த வரையில் அலுவலராக ஒரு நபர் இருக்கக்கூடும் சங்கங்களின் எண்ணிக்கை ஒரே சங்கத்திற்கு வரையறுக்கப்பட வேண்டும் என்றும் யோசனை கூறியிருக்கிறார்கள். இந்த யோசனை கடுமை யானதாகத் தோன்றுகிறது. அந்தக் குழுவினர் மேலும் இந்த மூன்று சங்கங்கள் வரம்பில், நியமனத்தின் மூலம் இயக்குநராக இருப்பதையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று கருதினர்.

11. நிருவாகக் குழு உறுப்பினராக இருப்பதற்கு நபர்களின்மீது இதர கட்டுப்பாடுகள் (Other restrictions on persons to be Committee Members)

சங்கத்தின் தவறான நிருவாகத்திற்குப் பொறுப்பாளிகளான நபர்கள் நிருவாகக் குழுவிற்கு மீண்டும் தேர்ந்தெடுக்கப்படாம லிருப்பதை உறுதி செய்யும் நோக்கத்தோடு, 1961ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டம் அத்தகைய நபர்களின்மீது பல கட்டுப்பாடுகளை விதித்திருக்கிறது.

(1) பிரிவு 71 (1)-ன்கீழ் தன் மீது ஒரு தண்டம் (Sur-charge) உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கும் ஒரு நிருவாகக் குழு உறுப்பினர், அத்தகைய உத்தரவு தள்ளுபடி செய்யப்படாமலிருந்தால், அத்தகைய தண்டம் உத்தரவு தேதியிலிருந்து மூன்று வருட காலத்திற்கு எந்தச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கும் தேர்ந்தெடுக்கப்பட முடியாது [பிரிவு 28 (4)].

(2) பிரிவு 72-ன்கீழ் தள்ளுபடி செய்யப்பட்ட நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினர் தள்ளுபடி செய்யப்பட்ட காலம் முடிவடையும் தேதியிலிருந்து மூன்று வருட காலத்திற்கு எந்தச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கும் தேர்ந்தெடுக்கப்பட முடியாது [28 (5) (அ)].

(3) பிரிவு 72-ன்கீழ் தள்ளுபடி நடவடிக்கைகள் முடிவாகாமலிருக்கும் நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினர் அந்த நடவடிக்கைகள் முடிக்கப்பெறும் வரையில் எந்த ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கும் தேர்ந்தெடுக்கப்பட முடியாது [பிரிவு 28(5) (அ)]. ஒரு நிருவாகக் குழுவின் உறுப்பினர் பிரிவு 28-ல் குறிக்கப்பட்ட தகுதியின்மைகளில் எதற்கேனும் உட்பட்டிருந்தாரா அல்லது உட்பட்டிருக்கிறாரா என்ற பிரச்சினை முடிவு செய்வதற்குத் தக்க அதிகாரி பதிவாளராகும் [பிரிவு 28 (6)].

12. ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிலிருந்து ஓர் உறுப்பினரைப் பதிவாளர் நீக்கலாம் (Removal of a Committee member by the Registror)

சங்கங்களின் அலுவல்களை நிருவாகம் செய்கின்ற நிருவாகக் குழுக்களை அமைப்பதில் விதிக்கப்பட்ட தகுதியின்மைகளும் தடைகளும் தவிர, பிரிவு 28 (7) ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிலிருந்து பதிவாளரால் நீக்கப்பட்ட நபர்களுக்கு ஒரு தடையை விதிக்கிறது. அத்தகைய நபர் எந்தச் சங்கத்திலும் நிரந்தரமாக ஒரு நிருவாகக் குழு உறுப்பினர் பதவியை வகிப்பதற்குத் தகுதியற்றவராகச் செய்யப்படலாம் [பிரிவு 28 (அ)]. ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிலிருந்து ஒரு நபரை நீக்கி அவரை எந்தச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கும் எந்தச் சமயத்திலும் தேர்ந்தெடுக்கபடுவதற்குத் தகுதியற்றவராக்கவும் செய்ய பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்கிறது. அந்த அதிகாரத்தைச் செலுத்தும் முன்னர் பதிவாளர் பிரிவு 65-ன்கீழ் ஒரு விசாரணை பிரிவு 66 அல்லது 67-ன்கீழ் ஓர் ஆய்வு செய்திருக்க வேண்டும். மற்றும் பிரிவு 64-ன் கீழ் 'தணிக்கையின்போது ஒரு நிருவாகக்

குழுவின் தீயநடத்தை காணப்பட்டாலும் பதிவாளர் அந்த அதிகாரத்தைச் செலுத்தலாம்.

பதிவாளர் சட்ட ரீதியான கடமைகளையாற்றும்போது நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினர் சங்கத்தின் நிதிகளைக் கையாண்டிருக்கிறார் அல்லது சங்கத்திற்குச் சேர்ந்த பணத்தை அல்லது சொத்தை ஏதாவதை மோசடியாக வைத்துக்கொண்டிருந்தார் அல்லது சங்கத்திற்கு நம்பிக்கைத் துரோகம் செய்தார் அல்லது நியாயமற்ற செயல்களைப் புரிந்தார் அல்லது சங்கத்தின் அலுவல்களை எல்லை மீறிய தீய நிருவாகம் செய்தார் அல்லது சட்டத்தின்கீழ் விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்யாமலிருந்தார் என்று பதிவாளருக்குத் தெரியவந்தால் நாட்டின் பொதுச் சட்டத்தின்படி அத்தகைய நபரின்மீது எந்த நடவடிக்கை யெடுக்கப்பட்டாலுங்கூட நிருவாகக் குழுவிலிருந்து அவரைப் பதிவாளர் நீக்கலாம் [ பிரிவு 28 (1) ]. ஆனல், அப்படிச் செய்வதற்கு முன்பு பதிவாளர் அத்தகைய நபர் தன்னுடைய விளக்கத்தைக் கூறுவதற்கு ஒரு வாய்ப்பு கொடுக்கவேண்டும் [பிரிவு 28 (2)]. இதை நிருவாகக் குழுவில் தற்போதிருக்கும் உறுப்பினர்களைக் குறித்து பதிவாளர் செய்யலாம். ஆனல், தொடர்பான நபர், நிருவாகக் குழுவின் ஒரு முன்னள் உறுப்பினராக இருக்க நேரிட்டால், அத்தகைய சூழ்நிலையில் அத்தகைய நபரை அந்த ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்குத் தகுதியற்றவராக்குவதற்குப் பதிவாளர் அதிகாரம் செலுத்தலாம். ஆக, ஓர் உறுப்பினரை நிருவாகக் குழுவிலிருந்து நீக்கி அவர் எந்தச் சங்கத்திலும் நிருவாகக் குழு உறுப்பினராகப் பதவி வகிப்பதற்கு நிலையாகத் தகுதியற்றவராக்கப் பதிவாளருக்கு ஒரு கூடுதலான அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

பிரிவு 72-ன் கீழ் நிருவாகக் குழு முழுவதையும் மீறுவதைத் தவிர்த்து ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிலிருந்து ஒன்று அல்லது இரண்டு உறுப்பினர்களை நீக்குவதன் மூலம் சங்கத்தின் குறைபாடுகளைச் சரிப்படுத்தலாம் என்று தெளிவுபடும்போது, இந்த அதிகாரம் பயன்படுத்தப்பட வேண்டும் என்பதுதான் இதன் நோக்கம். பொதுவாக நிருவாகக் குழு ஒரு கூட்டு நிறுவனமாக இயங்குகிறது. தலைவர் அல்லது செயலாளர் அல்லது பிற ஆட்சிப் பொறுப்பாளி இவர்களின் நடவடிக்கைகளுக்கு நிருவாகக் குழு உறுப்பினர்கள் முழுப் பொறுப்பேற்றுக் கொள்கிறார்கள். சில சூழ்நிலைகளில் எதாவது ஒரு நபர் மட்டும் தான் தவருன நிருவாகத்திற்குப் பொறுப்பாளி என்றும் அவரை மட்டும் நிருவாகக் குழுவிலிருந்து நீக்கிவிடவேண்டும் என்றும்

நிருவாகக் குழு விரும்புவதில்லை. அல்லது தன் ஆட்சிப் பொறுப் பாளிகளில் ஒருவரின் நடவடிக்கையை ஆதரித்துத் தங்களில் ஒரு வராகிய அவரை மட்டும் பிரித்து அவரை நிருவாகக் குழுவிலிருந்து நீக்குவதைவிட முழு நிருவாகக் குழுவையும் மீறுவதை விரும்பு கிறார்கள். உண்மையாகவே இந்த சரத்தைப் பதிவாளர் மிக அருமையாகக் கையாளவேண்டும். இந்த அதிகாரத்தைப் பதி வாளர் கையிலிருக்கும் இன்னோர் ஆயுதம் என்று பொதுவாகக் கூட்டுறவாளர்கள் கருதலாம். எனினும், சில சூழ்நிலைகளில் முழு நிருவாகக் குழுவையும் மீறி அதன் மூலம் எல்லா நிருவாகக் குழு உறுப்பினர்களையும் தன்பத்திற்குள்ளாக்குவதைவிட நிருவாகக் குழுவிலிருந்து ஒரு தனி உறுப்பினரை நீக்குவது தேவையாக இருக் கிறது. இந்தச் சரத்து எவ்வாறு உபயோகப்பட்டு வருகிறது என்பதை விழிப்புடன் கவனிக்கவேண்டும். அது நிருவாகக் குழு விலிருக்கும் தவறு செய்கிற உறுப்பினர்மீது ஓர் அச்சுறுத்துகிற சக்தியாகவும் கூட இருக்கிறது.

13. நிருவாகக் குழு உறுப்பினர்களின் பதவிக் காலம் தொடர்ந்திருப் பதை உத்தேசக் கட்டுப்படுத்துதல் (Proposed Limitation on the Continuous Period of Office of members of the Committee)

பிரிவு 27 (3) (இ)-ன்கீழ் நிருவாகக் குழுவிற்கு உறுப்பினர்கள் மூன்று வருட காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு அந்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் 1/3 உறுப்பினர்கள் சீட்டுக் குலுக்கு வதன் மூலம் ஒவ்வோர் ஆண்டு இறுதியில் ஓய்வு பெற்று அவ்வாறு ஓய்வு பெற்றவர்களின் காலி இடங்கள் தேர்தல் மூலம் பூர்த்தி செய்யப்படவேண்டும் பெரும்பாலான சூழ்நிலைகளில் ஒவ்வொரு வருட இறுதியில் ஓய்வு பெற்று தேர்தலில் மீண்டும் நிற்பதற்குத் தகுதியுள்ள உறுப்பினர்கள், நிருவாகக் குழுவிற்கு மீண்டும் தேர்ந் தெடுக்கப்படுகிறார்கள். அதன் பயனாக நிருவாகக் குழு உறுப் பினர்கள் நீண்ட காலத்திற்குப் பதவியில் தொடர்ந்திருந்து நிரு வாகக் குழுவில் மற்றவர்கள் நுழைவதற்கோ அல்லது நிருவாகத் தில் புதிய இரத்தத்தைப் புகுத்துவதற்கோ கடினமாக்கு கிறார்கள்.

சங்கத்தின் நலன்களை உத்தேசித்து நல்ல நபர்களை மீண்டும் தேர்ந்தெடுப்பது தேவையாக இருந்தாலும், சிலர் பல்வேறு முறைகளையும் செல்வாக்குகளையும் பயன்படுத்தித் தங்கள் பதவியையும் அதிகாரத்தையும் நிலைக்கச் செய்ய முயற்சிப்பதும் கூட நேரிட்டு, அதன் விளைவாக அவர்கள் சங்கங்களில் ஒருவித

ஊன்றிய நலமிகளாக இயங்கி இறுதியில் சங்கத்தின் செயல் பாட்டிலும் நிருவாகத்திலும் ஒரு முறைகேட்டை உண்டு பண்ணி, நிருவாகம் ஒருவித அழுத்தமானதும் இரகசிய மானதுமாகி விடுகிறது. இந்தப் போக்கு தடைசெய்யப்பட்டு அடக்கப்பட வேண்டும். தற்போது ஒரு சங்கத்தின் இயக்குநராக ஒரு நபர் தொடர்ந்திருக்கும் காலத்திற்குச் சட்டம் வரம்பு இல்லை. இந்தியாவில் இதர மாநிலங்களிலும், ஒரு சட்ட வரம்பு விதிக்கப் பட்டிருப்பதாகத் தெரியவில்லை. இங்கிலாந்தில் சில சங்கங்களில் ஒரு நபர் தொடர்ந்து இயக்குநராக இருப்பதை 2 அல்லது 3 அல்லது அதற்கு மேற்பட்ட வருடங்களுக்குக் கட்டுப்படுத்தி யிருப்பதாகத் தெரிகிறது. கீழ்க் கண்ட காரணங்களுக்காக ஒரு வரம்பு தேவையாக இருக்கிறது என்று கருதப்படுகிறது.

(1) ஆரம்பக் கட்டத்தில் ஒரு சங்கம் ஒரு நீண்ட காலத்திற்கு அர்ப்பணம் செய்த (Dedicated Individuals) நபர்களால் வளர்க்கப் படுவது பயனுள்ளதாக இருந்தாலும், சங்கங்கள் நீண்ட காலமாக அவர்களையே நம்பியிருப்பது நல்லதல்ல.

(2) ஒரு கூட்டுறவுச் சங்கம் போன்ற ஒரு பொருளாதார நிறுவனம் அத்தகைய நபரின் நசுக்குப் பிடியில் (Strangehold) அகப்பட்டுக் கொள்ளக்கூடும். அந்த நபருக்கு நன்மை எதுவும் ஏற்படாவிட்டாலும், அதிகாரமும் ஆதரவு அளிக்கும் நிலைமையும், சில தீய செயலைச் செய்யும் நிலைமையையும் உருவாக்குகிறது.

(3) புதிய தலைமை தோன்றுவதற்கு ஊக்கம் அளிப்பது தேவையாயிருக்கிறது. ஒரு நிருவாகக் குழு உறுப்பினரின் பதவிக் காலம் தொடர்ந்திருப்பதைக் கட்டுப்பாடு செய்வதற்கு எதிரான வாதம் கீழ்வருமாறு:—(1) உறுப்பினர்கள் தங்களுக்கு இஷ்டப்பட்ட யாரையாவது தேர்ந்தெடுக்கும் மக்களாட்சி உரிமைகளை இது குறைக்கிறது. (2) சங்கத்தின் நிருவாகத்தி லிருந்து நபர்களை விலக்குவதால் சங்கத்திற்கு ஆற்றல் வாய்ந்த நல்ல மனிதர்களின் சேவை இழக்கப்படக் கூடாது. இந்த வாதங் களுக்கு எதிராக என்ன சொல்லப்படுகிறது என்றால், ஒரு சங்கத்தில் நபர்கள் அதிகப்படியான சொந்த செல்வாக்கை வளர்த்துக் கொள்வதற்கு அனுமதிக்கப்பட்டால் சுதந்தரமான தேர்தல் முறை ஒரு சாத்தியமில்லாத வழக்கமாகி விடுகிறது.

மற்றும் ஒரு கூட்டுறவுச் சங்கம் ஒரு வெறும் மக்களாட்சி முறை நிறுவனம் மட்டும் அல்ல. அது ஒருவித பொதுமக்கள் பொறுப்புத் தொழில் நிறுவனம். தர்மகர்த்தர் அல்லது பொறுப்பாளர் நிலைமையிலிருக்கும் நிருவாகக் குழு உறுப்பினர் ஒரு சங்கத்தின் செயல்பாட்டில் ஊன்றிய நலத்தை வளர்த்துக்கொள்ள அனுமதிக்கப்படக் கூடாது.

கூட்டுறவு இயக்கம் மக்களின் பெரும் பகுதியினரைத் தன்னகத்தே சேர்த்துக்கொள்ளுமளவிற்கு வளர்ந்து மக்களின் பொருளாதார வாழ்வின் பல்வேறு துறைகளைக் கவர்ந்திருக்கிறது. அதனுடைய வளர்ச்சிக்காக ஆரம்ப வருடங்களில் அது ஒருசில நபர்களை நம்பியிருந்தது தேவையாக இருந்திருக்கலாம்; ஆனால், இப்பொழுது தேவையில்லை. இந்தக் காரணங்களுக்காக இந்தப் பிரச்சினையை ஆழ்ந்து ஆலோசித்த சந்தானம் குழுவினர் நிருவாகக் குழுவில் ஓர் உறுப்பினராக ஒருவர் பதவியில் தொடர்ந்து இருக்கும் காலத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற கொள்கையை ஆதரித்தனர். ஒரு நபர் சங்கத்தின் இயக்குநராகத் தேர்ந்தெடுக்கப்படும் தொடர்ந்த பதவிக் காலத்தின் எண்ணிக்கையில் ஒரு வரப்பு இருக்கவேண்டும் என்றும், அதற்குப் பிறகு அந்த நபர் மீண்டும் அந்தச் சங்கத்தின் இயக்குநராகத் தேர்ந்தெடுக்கப்படும் தகுதி பெறுவதற்கு முன்னர் ஓர் இடைவேளையிருக்க வேண்டுமென்றும் அவர்கள் கருதினர். அப்படிச் செய்தால்தான், சங்கங்களின் நிருவாகத்தில் புதிய அறிவாளிகள் நுழைவதற்கும் தங்களுக்குப் பதில் ஆற்றல் வாய்ந்தவர்களை இயக்குநர்கள் தேடிப் பார்த்து கொண்டு வருவதற்கும் ஒரு சரியான ஊக்கத்தையும்கூட அளிக்கும் என்று அவர்கள் கருதினர். ஆகையால், மூன்று வருடங்கள் அடங்கிய பதவிக் காலம் தொடர்ந்து இரண்டு பதவிக் காலத்திற்கு இயக்குநராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு நபர், மீண்டும் சங்கத் இயக்குநராகத் தேர்ந்தெடுக்கப்படும் தகுதியிலிருந்து தடை செய்யப்படவேண்டும் என்றும், மூன்று வருடங்களடங்கிய பதவிக் காலம் இடையில் கழிந்த பின்னரே அவர் மீண்டும் ஓர் இயக்குநராகத் தேர்ந்தெடுக்கப்படலாம் என்றும் சிபாரிசு செய்தனர்.

பிரிவு 28-ன்கீழ் தங்கள் சிபாரிசுகளை அமல் நடத்துவதற்காகத் தேவையான திருத்தத்தை அவர்கள் யோசனை கூறியிருக்கின்றனர். மேலும், அநேக சங்கங்களில் திடீர் வேலைக் குழப்பமும், தொடர்ச்சியின்மையும் உண்டுபண்ணாமல் தங்கள் யோசனைகளை

அமல் படுத்துவதற்கும், சில திருத்தங்களைச் சிபாரிசு செய்திருக்கின்றனர். பின்னல் கூறப்பட்ட செயலுக்காக சட்டம் அமலுக்கு வந்தபிறகு நடத்தப்படும் முதல் தேர்தலுக்காகவும், அவர்கள் அந்தத் தகுதியின்மையை யோசனை கூறியிருக்கின்றனர். தொடர்ந்து 10 வருட காலத்திற்கு 1958ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல்தேதிக்கு முன்னல் இயக்குநராகப் பதவி வகித்த நபர்களுக்கு மட்டும்தான் அவர்களுடைய சிபாரிசுகள் பொருந்தும் என்று கூறியிருக்கின்றனர். அவர்களுடைய சிபாரிசுகள் தமிழ் நாட்டில் ஒரு சிலரால் மட்டும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. சங்கங்களில் ஒருவர் நிரந்தரமாக இயக்குநர் பதவியில் இருப்பதைத் தடை செய்வதற்குச் சில சட்ட சரத்து இருக்கவேண்டும் என்ற வாதத்தை மறுக்க முடியாது என்றாலும், அதே சமயத்தில் சங்கங்கள் சுமுகமாகச் செயல்படுவதையும் அல்லது சங்க நிருவாகக் குழுவிலிருந்து நபர்களை நீக்குவதனல் சங்கம் பாதிக்கப்படாமலிருப்பதையும் உறுதி செய்யவேண்டும். இந்தச் சிபாரிசுகள் அரசாங்கத்தின் ஆலோசனையில் இருக்கின்றன.

# 9. பதிவு செய்யப்பட்ட சங்கங்களின் கடமைகளும், சிறப்புரிமைகளும்

## (Duties and privilages of Registered Societies)

(பிரிவுகள் 29 முதல் 43 வரை)

### 1. பொது (General)

ஒரு சங்கத்தின் கடமைகள் கூட்டுறவுச் சட்டத்தின் பல சரத்துகளில் அடங்கியிருப்பவை மட்டுமன்றி, அவைகளைவிட இன்னும் முக்கிய கடமை, தான் மேற்கொண்டிருக்கும் செயல் துறையில் திறம்பட உறுப்பினர்களுக்குச் சேவை செய்வதும், உறுப்பினர்களுக்குப் பொருளாதார, சமுதாய இலாபங்களைச் சேகரித்துக் கொடுப்பதுமே ஆகும். தன் உறுப்பினர்களுக்குப் பயனளிக்கும் வகையிலும், திறமையாகவும் பணிபுரிந்து உறுப்பினருடைய பொருளாதார, சமுதாய, ஒழுக்க முன்னேற்றத்தை வளர்ப்பது அதன் முக்கிய நோக்கமாகும். அதன் நோக்கம் சேவை புரிவது; இலாபம் ஈட்டுவது அல்ல. இது பற்றித்தான், சட்டத்தின்கீழ் கூட்டுறவுச் சங்கங்களுக்கு சிறப்புரிமைகளும், சலுகைகளும் அளிக்கப்பட்டிருக்கின்றன. சட்டத்தின்கீழ் அளிக்கப் பட்டுள்ள தனிச் சிறப்புகளையும் சலுகைகளையும் தவிர, மத்திய அரசும் மாநில அரசுகளும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அதிகமான ஆதரவையும் அளிக்கிறார்கள்.

கூட்டுறவுச் சங்கம் சேவை மனப்பான்மையைக் கொண்டதும், விவசாயத்திலும், தொழிலிலும் மக்களுடைய–குறிப்பாக சமுதாயத்தில் வலிவற்ற பகுதியினர்களுடைய, பொருளாதார சமுதாய முன்னேற்றத்தை வளர்ப்பதற்கு, ஒரு சக்தி வாய்ந்தது மான ஒரு கருவியாக அமைந்திருப்பதால், அதற்கு அரசாங்க ஆதரவு அளிக்கப்படுகிறது. கூட்டுறவுச் சங்கங்களின் இயல்பான நற்குணத்தாலும், மக்களுடைய பொருளாதார, சமுதாய நல்

வாழ்வை வளர்ப்பதை சாத்தியமாக்கும் தன்மையாலும், அவைகள் சமதர்மக் கொள்கையின் அடிப்படையிலியங்கும் மக்களாட்சி முறை நிறுவனங்களாக இருப்பதாலும், அரசாங்கம் கூட்டுறவு இயக்கத்திற்குப் பொருளுதவியும் அறநிலை ஆதரவும் (Moral support) அளிக்கிறது. ஆகையால், கூட்டுறவுச் சங்கங்களுக்காக அரசாங்கம் செய்யும் எந்தச் செலவும் நியாயமானதே. கூட்டுறவுச் சங்கங்களுக்குச் செய்யப்படும் உதவிக்கும், ஆதரவுக்கும் சமாதானம் கிராமப் புறங்களிலும், நகர்ப்புறங்களிலும், நம்முடைய பொருளாதார அமைப்பில், ஒரு முக்கியப் பகுதியாகக் கூட்டுறவு நிறுவனங்கள் சரியாகவும் திறமையாகவும் செயல்படுவதேயாகும்.

2. சங்கங்களின் கடமைகள் (Duties of Societies)

சட்டத்தில் விதிக்கப்பட்டுள்ளபடி, கூட்டுறவுச் சங்கங்களின் கடமைகள் பின்வருமாறு:

(i) விதிகளின்படி, எல்லா அறிவிப்புகளும் கடிதப்போக்குவரத்தும், அனுப்பப்படவேண்டிய பதிவு செய்யப்பட்ட ஒரு முகவரி (Address) ஒவ்வொரு சங்கத்திற்கும் இருக்க வேண்டும். முகவரி மாற்றப்பட்டால், அத்தகைய மாற்றுதல் தேதியிலிருந்து 30 நாட்களுக்குள் பதிவாளருக்குத் தெரியப்படுத்தப்படவேண்டும். 4 (1) விதியின் கீழ், ஒரு சங்கத்தின் உப-விதிகள், சங்கத்தின் பெயரையும் பதிவு செய்யப்பட்ட முகவரியையும், கூறவேண்டும் (பிரிவு 29). ஒவ்வொரு சங்கத்தின் 1ஆம் உப-விதி சங்கத்தின் முகவரியையும் அதன் கிராமம் அல்லது நகரம் அல்லது வட்டம் அல்லது மாவட்டத்தின் பெயரையும், அஞ்சல் நிலையத்தின் (Post Office) பெயரையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது. முகவரியைக் குறிப்பதன் நோக்கம், சங்கத்திற்காக உத்தேசிக்கப்பட்ட எல்லா அறிவிப்புகளும் கடிதப் போக்குவரத்துகளும் அந்த முகவரிக்கு அனுப்பப்படவேண்டும் என்பதுதான் (பிரிவு 29). முகவரியில் எந்த ஒரு மாறுதலும் உப-விதி 1-க்கு ஒரு திருத்தத்தைச் செய்வதன் மூலம் அமலுக்குக் கொண்டு வரவேண்டும்.

(ii) ஒவ்வொரு சங்கமும், சட்டம், விதிகள், தன் உப-விதிகள் இவற்றின் நகல் ஒன்றை வைத்திருக்க வேண்டும். அது, தன் உறுப்பினர்களுடைய ஒரு பதிவேட்டையும் கூட (Members Register) வைத்திருக்க வேண்டும். இந்தப் பதிவேடு சங்கத்தின் பதிவு செய்யப்பட்ட முகவரியில் எல்லா நியாயமான நேரத்திலும் இலவசமான ஆய்வுக்காகக் காண்பிக்கப்படவேண்டும் (பிரிவு 30).

அத்தகைய ஆய்வு, உறுப்பினர்களுக்கு மட்டும் வரையறுக்கப் பட்டதாக அந்தப் பிரிவு கூறவில்லை. விதிகளும் உப-விதிகளும் உறுப்பினர் அல்லாதவர்களுக்கும் காண்பிக்கப்படவேண்டும். வைப்புத் தொகை போட்டு வைப்பவர்களும் (Depositors), இதரக் கடன்காரர்களும் (Creditors) தாங்கள் சங்கத்திற்கு வைப்புத்தொகை அல்லது கடன் கொடுப்பதற்கு முன்பு சங்கத்தின் விதிகளையும் உப-விதிகளையும் அறிந்து கொள்வதற்கு விரும்புவார்கள்.

கூட்டுறவுச் சங்கங்கள் பொதுமக்கள் நலனுக்காக ஏற்பட்ட நிறுவனங்களாகையால், பொதுமக்கள் இந்தச் சங்கங்களில் சேருவதை ஆலோசிப்பதற்காகச் சங்கங்களின் விதிகளையும் நோக்கங்களையும் அறிந்து கொள்வதற்கு அவர்களுக்கு உரிமை உண்டு. பொது மக்களும், வைப்புத் தொகை போட விரும்பு கிறவர்களும், உறுப்பினர்களும், தாங்கள் சங்கத்தில் வைப்புத் தொகை போடவோ, சங்கத்தில் சேரவோ முடிவு செய்வதற்கு முன்பு, சங்கத்திலிருக்கும் உறுப்பினர்கள் எவர் என்பதை அறிந்து கொள்ள விரும்புவார்கள். ஆகையால், உறுப்பினர்கள் பதிவேட்டைக்கூட, ஆய்வு செய்யப்படுவதற்குச் சங்கம் வைத்திருக்க வேண்டும். பொதுமக்கள் சங்கத்தின் உறுப்பினர்கள் எவர் என்பதை மட்டும் அறிந்து கொள்ளலாமே தவிர, அந்த உறுப்பினர்கள் எத்தனை பங்குகள் எடுத்திருக்கிறார்கள், என்பதைப் பற்றிய இதர விவரங்களை தெரிந்து கொள்ளவேண்டியதில்லை யென்பது தெளிவு. ஆகையால், சங்கம் வெறும் உறுப்பினர்கள் பட்டியலை மட்டும் வைத்திருந்தால் போதும். மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் (1961) 39ஆம் பிரிவு 'ஆய்வு செய்யப்படுவதற்கு உறுப்பினர்களின் பட்டியல் ஒன்று மட்டும் சங்கம் வைத்திருக்க வேண்டும்' என்று விதிக்கிறது.

தமிழ்நாட்டில், சங்கங்கள் 13 (இ) விதியில் நிருணயிக்கப் பட்ட ஒரு நுழைவு ஏட்டை வைத்திருக்க வேண்டும். இந்தப் புத்தகம் உறுப்பினர்களுடைய பெயர்களையும், அவர்களின் முகவரி யையும், அவர்கள் உறுப்பினர்களாகச் சேர்க்கப்பட்ட தேதியையும் அவர்கள் எடுத்த பங்குத் தொகைகளின் எண்ணிக்கையையும், அதற்காக அவர்கள் செலுத்திய பணத்தொகையையும், அவர்களுக்குத் திருப்பிச் செலுத்தப்பட்ட பங்குத் தொகையையும், அவ்வாறு அவர்கள் தொகையைக் கொடுத்த தேதி, திரும்பப் பெற்றுக்கொண்ட தேதி முதலியவற்றைக் காண்பிக்கும். விதி 29 (4)-ன் கீழ் தேர்தலுக்காக வாக்கெடுப்புச் செயலுக்காகத்

தவிர, உறுப்பினர்கள் பெயர்கள் மட்டும் அடங்கிய ஒரு பட்டியலைச் சங்கங்கள் பொதுவாக வைத்துப் பேணுவதில்லை.

3. சங்கங்களின் சிறப்புரிமைகள் (Privilaiges of Societies)

சட்டத்தின் கீழ், சங்கங்களுக்களிக்கப்பட்ட சிறப்புரிமைகள் அல்லது தனிச் சலுகைகள் பின்வருமாறு :

இவை பொது மக்கள் நல்வாழ்வை முன்னிட்டும், கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சியைப் பேணுவதற்கும் உத்தேசிக்கப் பட்டவை.

(i) சங்கங்கள் தன் ஆட்சி உரிமையுடைய கூட்டுரிமை நிறுவனங்களாகும் (Bodies Corporate) (பிரிவு 31).

(ii) சங்கத்திலிருந்து கடன்கள் வாங்கியுள்ள உறுப்பினர்களுடைய பயிர்கள், தளவாடங்கள் அல்லது சரக்குகள் மீது சங்கத்திற்கு முதன்மையான பற்றுரிமை அல்லது பற்றுப் பொறுப்பு (Charge) உண்டு (பிரிவு 32).

(iii) சில சங்கங்களிடமிருந்து கடன்கள் வாங்கும் உறுப்பினருடைய அசையாச் சொத்தின் மீது சங்கத்திற்குப் பற்றுரிமை அல்லது பற்றுப் பொறுப்பு (Charge) உண்டு (பிரிவு 33).

(iv) சங்கத்துடன் ஓர் உறுப்பினர் வைத்திருக்கும் எல்லாப் பணத்தின் மீதும் சங்கத்திற்குப் பற்றுரிமை அல்லது பற்றுப் பொறுப்பு (Charge) உண்டு, சங்கத்திற்கு உறுப்பினருடைய பாக்கிக்காக, அத்தகைய பணங்களை ஈடு செய்துகொள்ள சங்கத்திற்கு உரிமை உண்டு (பிரிவு 34).

(v) ஒரு சங்கம் நிதி வங்கிக்குக் கொடுக்க வேண்டிய பாக்கிகளுக்கு ஈடு செய்துகொள்ளப் பற்றுரிமை அல்லது பற்றுப் பொறுப்பு என்ற வகையில், நிதி வங்கி தன்னிடம் அந்த சங்கம் முதலீடு செய்துள்ள காப்பு நிதியின் பேரிலும் (Reserve Fund), வருங்காலச் சேமிப்பு நிதியின் பேரிலும் (Provident Fund) உரிமை வாதம் அல்லது கோருப உரிமை செலுதத முடியாது (பிரிவு 35).

(vi) உறுப்பினர்கள் சங்கத்தில் வைத்திருக்கும் பங்குகள், பற்றுகை (Attachment) செய்யப்படுவதிலிருந்து, விலக்கு அளிக்கப் பட்டிருக்கின்றன (பிரிவு 36).

(vii) சங்கம் கொடுக்கவேண்டிய ஏதாவது கடன் பொறுப்பைக் குறித்து, அதன் சேமநிதி, வராக்கடன், ஒதுக்கு நிதிகள் (Bad Debt Reserves) பற்றுகை செய்யப் படுவதிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன (பிரிவு 37).

(viii) உறுப்பினர்கள் சங்கத்தில் சேர்க்கப்பட்ட தேதியைக் குறித்தும், அவர்கள் உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிட்ட தேதியைக் குறித்தும். உறுப்பினர்கள் பதிவேடு ஒரு 'மேலோட்டமான சான்று' (Prima facie Evidence) ஏற்றுக்கொள்ளப்படும் (பிரிவு 38).

(ix) சட்ட நடவடிக்கைகளில், சங்கத்தின் புத்தகங்களிலுள்ள பதிவுகளை நிரூபிக்கும் சான்றுறுதியாக (Proof) ஏற்றுக்கொள்ளப்படும் (பிரிவு 39)

(x) சங்கத்திற்கு உறுப்பினர்களிடமிருந்து வரவேண்டிய பாக்கிகளுக்காக, அவர்களுடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழித்துக் கொள்ள (Right of Deduction) உரிமையுண்டு (பிரிவு 40).

(xi) சங்கத்தின் பங்குகளையும் கடன் ஈட்டு பத்திரங்களையும் (Debentures), குறித்த ஆவணங்கள் (Records) சட்டாயமாகப் பதிவு செய்யப்படுவதிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன (பிரிவு 41).

(xii) சங்கம் தனக்குச் சேரவேண்டிய ஏதாவது தொகைக்காக அது ஒரு வருவாய்த் துறை ஏலத்தில் (Revenue Sale) அசையாச் சொத்தை வாங்கும்போது ஈடு செய்து கொள்ளும் உரிமை அதற்குண்டு (பிரிவு 42).

(xiii) முத்திரை வரி (Stamp Duty), பதிவுக் கட்டணங்கள் (Registration Fees) செலுத்த வேண்டியதிலிருந்து சங்கத்திற்கு விலக்கு உண்டு (பிரிவு 43).

(xiv) சங்கம் வருமான வரியிலிருந்து (Income Tax) விலக்கு அளிக்கப்பட்டுள்ளது (1932ஆம் வருடத்திய பழைய வருமான வரிச் சட்டத்தின் 30ஆம் பிரிவு)–இந்தப் பிரிவு மட்டும் ரத்து செய்யப்படாமல் இன்னும் அமலிலிருக்கிறது) [பிரிவு 121 (1)].

(xv) இசைவுத் தீர்ப்புமுறை (Arbitration) வழி சங்கத்தில் ஏற்படும் தகராறுகளைத் தீர்த்துக் கொள்வதற்குச் சங்கத்திற்கு உரிமையுண்டு (பிரிவு 73).

(xvi) ஒரு சங்கத்திற்குச் சேர வேண்டிய தொகைகளைக் கூட்டுறவுத் துறை நிறைவேற்றுதல் நடவடிக்கைகளின் மூலம் வசூல் செய்வதற்கு உரிமையுண்டு (பிரிவு 91).

மேற்சொன்ன சிறப்புரிமைகளை இப்போது விவரமாக ஆராய்வோம்.

(i) சங்கங்கள் தன் ஆட்சி உரிமையுடைய கூட்டுரிமை நிறுவனங்களாகும் (பிரிவு 31): 1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டத்

திலும், எல்லா மாநிலக் கூட்டுறவுச் சட்டங்களிலும், கூட்டுறவுச் சங்கங்களைச் சட்டப்படிக் கூட்டுறவாக ஏற்றுக்கொள்வது ஒரு சிறப்புரிமையாகக் கருதப்படுகிறது. அது ஒரு சிறப்புரிமையை விட, ஒரு தேவையானதமான நிகழ்ச்சிக்கூறு. இந்த உரிமையினால் தெளிவான பல நன்மைகளிருக்கின்றன. பிரிவு 31-ன்கீழ் ஒரு சங்கத்தைப் பதிவு செய்வது, அதை ஒரு தனி ஆட்சி உரிமையுடைய கூட்டுரிமை நிறுவனமாகச் செய்து அதை ஒரு சட்டப்படியான நபராகவும் (Legal Entity) செய்கிறது. ஒரு கூட்டுறவுச் சங்கம் ஒரு சட்டப்படி அமைந்த கூட்டு நிறுவனமாகவும், ஒரு சட்டப்படியான ஆளாகவும் அல்லது உருவமாகவும் இருக்கிறது. 'உறுப்பினர்கள் வரலாம், உறுப்பினர்கள் போகலாம்', ஆனால், ஒரு கூட்டுறவுச் சங்கம் சங்கமாகவே தன்னுடைய தொழிலைச் செய்துகொண்டு வருகிறது. சங்கம் ஒரு தன் ஆட்சி உரிமையுடைய நிறுவனமாக இருப்பதால், உறுப்பினர்கள் சேருவதும் விலகுவதும் அதைப் பாதிப்பதில்லை. மேலும், சொத்துகளையுடையதாயிருக்கவும், சங்கத்தினுடைய தன் ஆட்சி உரிமை நிறுவனத் தன்மை தேவைப்படுகிறது. அத்தகைய சொத்துகள் எந்த ஓர் உறுப்பினருக்கும் சொந்தமாகாமல், சங்கத்திற்கே முழுவதும் சொந்தமாக இருக்கின்றன. சங்கம் ஒரு தன் ஆட்சி உரிமையுடைய நிறுவனமாக இருந்தாலொழிய அந்தச் சொத்துகளை அது வைத்திருக்க முடியாது. மேலும், அதனுடைய கடன்கள், உறுப்பினர்களின் பொறுப்பிலிருந்து மாறுபட்டவை.

ஒரு சங்கத்திற்கு எதிராக ஒரு தீர்ப்பாணை பிறப்பிக்கப்பட்டால், அதைத் தனிப்பட்ட உறுப்பினர்களுக்கு எதிராக, சங்கம் கலைப்பு அதிகாரியால் கலைக்கப்பட்டால் தவிர, நிறைவேற்ற முடியாது. மற்றும், சங்கம் தன்னுடைய சொந்தப் பெயரில் தான் ஓர் உறுப்பினர் மீது வழக்குத் தொடர வேண்டும். சங்கத்தின் தலைவருக்கு அவர் சொந்தப் பெயரில் வழக்கு தொடர்வதற்கு உரிமை இல்லை. அவ்வண்ணமே ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் மீது தொடரப்படும் வழக்குகூட அந்தச் சங்கத்தின்மீதுதான் தொடரப்பட வேண்டும்; சங்கத்தின் தலைவர் அல்லது செயலாளர் அல்லது பத்திரத்தில் கையெழுத்திட்ட உறுப்பினர்கள் மீது அல்ல. சங்கத்தின் உப-விதிகளில், செயலாளர் அல்லது தலைவர் சங்கத்தின் சார்பாக வழக்கு தொடரவேண்டிய அல்லது வழக்கு தொடரப்படவேண்டிய அலுவலராவர் என்றும், சங்கத்திற்கு உரிமையான எல்லா ஆவணங்களும் செயலாளர் அல்லது தலைவரின் பேரில் இருக்க வேண்டும் என்றும் ஒரு வழக்கமான சரத்திருக்கிறது. ஒரு தன்னாட்சி உரிமை நிறுவனம் என்ற முறையில், அது சொத்துகளை வைத்துக்கொள்ளவோ,

ஒப்பந்தங்களில் சேரவோ சங்கத்தின் சார்பாக வழக்குகளைத் தொடரவோ அல்லது வழக்குகளைப் பிரதிவாதியாக வாதிக்கவோ மற்றும் அது எந்தச் செயல்களுக்காக பதிவுச் செய்யப்பட்டதோ அந்தச் செயல்களுக்கு தேவையான எல்லா நடவடிக்கைகளையும் எடுக்கவோ முடியும். சங்கங்கள் ஒரு பொதுவான முத்திரையை (Common Seal) வைத்துக்கொண்டு தன் பத்திரங்கள் மீதும் இன்னும் இதர முக்கியப் பதிவேடுகளின் மீதும், தன் அலுவலகம் பற்றிய முத்திரை (Official Stamp) தாங்கியிருப்பதற்கு அதை உபயோகிக்கலாம். 15 ஆம் விதியின் கீழ் ஒரு சங்கத்தின் புத்தகங்களிலுள்ள பதிவுகளின் சான்றிடப்பட்ட ஒவ்வொரு நகலிலும் சங்கத்தின் முத்திரை போட்டிருக்க வேண்டும்.

ஒரு சங்ககத்தின் பதிவு ரத்து செய்யப்பட்டபோது, அதன் தன்னாட்சி உரிமை நிறுவனத் தன்மை நீங்கி விடுகிறது. ஆகையால், தன் ஆட்சி உரிமை நிறுவனத் தன்மையின் பலன், சங்கத்தின் கடன்காரர்கள் தனிப்பட்ட உறுப்பினர்கள் மீது வழக்குத் தொடர முடியாமல் உறுப்பினர்கள் பாதுகாக்கப்படுகின்றனர். சங்கம் வாங்கியிருக்கும் கடனைக் குறித்து சங்கத்தின் உறுப்பினர் மீது தனிப்பட்ட முறையில் சட்டப்படியான நடவடிக்கைகளை எடுக்க முடியாது. சங்கத்தின் மீதுதான் வழக்கு தொடரப்பட்டு சங்கம் கடனைக் கொடுக்கத் தவறினால் கலைக்கப்படுகிறது சங்கமே தவிர, தனிப்பட்ட உறுப்பினர் அல்ல. பாட்னா (Patna) உயர்நீதி மன்றத்தின் முழு ஆயம் (Full Bench) கூறியபடி, 'சங்கத்திற்கு எதிராகப் பெறப்பட்ட நீதிமன்றத் தீர்ப்புகளைக் குறித்து, உறுப்பினர்கள் தங்கள் மீது நிறைவேற்றுதல் நடவடிக்கைகள் எடுக்கப்படுவதற்குப் பொறுப்பாளிகள் அல்ல. சங்கத்தைக் கலைக்கும் நடவடிக்கைகள் எடுக்கப்படும்போதுதான் உறுப்பினர்கள் தனித் தனியாகப் பொறுப்புள்ளவர்களாவர்' ஒரு சங்கத்தின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது அல்லது வரையறுக்கப்படாதது மட்டும் தான் உறுப்பினர்களைப் பாதித்துச் சங்கத்தின் பொறுப்புகளுக்கு அது கலைக்கப்படும் பொழுது, உறுப்பினர்கள் விகிதத் தொகை (Contribution) அளிக்கும்படி நேரிடுகிறது. இதற்கு விதிவிலக்கு, அரசாங்கத்திற்கு நன்மை பயக்கும் முறையில் அரசாங்கத்திற்குச் சேரவேண்டியத் தொகைகளை வசூல் செய்வதில் பிரிவு 94-ல் அளிக்கப்பட்டிருக்கிறது.

கூட்டுறவுச் சட்டக் குழுவினர், ஒரு சங்கத்தின் பெயரை மாற்றுவதற்காக ஒரு தனிப்பட்ட சட்டப் பகுதியை யோசனை கூறியிருக்கிறார்கள். (மாதிரி கூட்டுறவு மசோதாவின் பகுதி 10) ஒரு சங்கம் தன் உப-விதிகளின் ஒரு திருத்தத்தின் மூலம் தன்னுடைய

பெயரை மாற்றிக்கொள்ளலாம் என்று அந்தப் பகுதி கூறுகிறது. பெயர் மாற்றுதல், ஒரு சங்கத்தின் எந்த ஓர் உரிமையையும் கடமையையும் பாதிக்காது அல்லது சங்கத்தாலோ அல்லது சங்கத்திற்கு எதிராகவோ அதனுடைய பழைய பெயரால் எடுக்கப்பட்டிருந்த சட்டப்படியான நடவடிக்கைகள் தொடரப்பட்டாலும் அல்லது சங்கத்தின் புதிய பெயரில் ஆரம்பிக்கப்பட்டிருந்தாலும் குறைபாடுள்ளதாகச் செய்யாது.

(ii) சங்கத்திலிருந்து கடன்கள் வாங்கியுள்ள உறுப்பினர்களுடைய பயிர்கள், தளவாடங்கள் அல்லது சரக்குகள்மீது சங்கத்திற்கு முதன்மையான பற்றுரிமை அல்லது பற்றுப் பொறுப்பு (First Charge) (பிரிவு 32): 1932ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டத்தின் பிரிவு 21-ன் கீழ் ஒரு சங்கத்திற்கு வரவேண்டிய பாக்கி நிலுவையை வசூல் செய்வதற்குச் சில சூழ்நிலைகளில் மற்ற கடன்காரர்களைவிடச் சங்கத்திற்கு முதன்மையான உரிமை பாக்கிதாரர்களுடைய பயிர்கள் மீது இருந்தது. ஆனால், ஓர் உறுப்பினர்மீது அவருடைய இன்னொரு கடன்காரர் தீர்ப்பாணை பெற்றிருந்து அவருடைய பயிர்களைப் பற்றுகை செய்தால், இந்தப் பிரிவு பயனற்றதாக இருக்கிறது. ஆகையால், இந்தப் பிரிவினால் ஏற்படுத்தப்பட்ட முதன்மையான உரிமை நிலவரிக்குட்பட்டு ஒரு முதல் காப்புப் பொருளாக மாற்றப்பட்டால் பட்டும்தான், இந்தப் பிரிவில் சங்கத்திற்கனுகூலமாகக் கொடுக்கப்பட்ட முதன்மையான உரிமை பயனுள்ளதாக இயங்கும். தமிழ்நாட்டில் நாராயணசாமிபிள்ளை கூட்டுறவுக் குழுவினர், சங்கங்களுக்குப் பயிர்கள்மீது கொடுக்கப்பட்ட பற்றுரிமை (Lien) ஒரு முதன்மையான பற்றுப் பொறுப்பாக மாற்றப்படவேண்டுமென்று பரிந்துரை செய்திருக்கின்றனர். கூட்டுறவுச் சட்டக் குழுவினர்கூட, கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சாதகமாக ஒரு முதன்மையான பற்றுப் பொறுப்பை (First Charge) உண்டுபண்ணும் ஏற்பாட்டைச் சிபாரிசு செய்திருக்கின்றனர். ஆகையால், 1961ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டத்தில், நிலவரிக்காக அரசாங்கத்தினுடைய உரிமைக் கோரிக்கைக்குட்பட்டு, ஓர் உறுப்பினரிடமிருந்து (முன்னாள் உறுப்பினர் அல்லது இறந்துபோன உறுப்பினரின் சொத்து அல்லது ஆஸ்தியைச் சேர்ந்த) சங்கத்திற்குப் பாக்கியாயுள்ள எந்த ஒரு தொகையைக் குறித்தும் சங்கத்திற்குச் சாதகமாக ஒரு முதன்மையான பற்றுப் பொறுப்பு (First Charge) பிரிவு 32 (1)-ன் கீழ் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

சங்கத்தில் கடன் வாங்கிய ஓர் உறுப்பினரும், எந்த உறுப்பினருக்காகக் கடன் கொடுக்கப்பட்டதோ அந்த நபரும் அந்தக்

கடன்களைக்கொண்டு உறுப்பினரால் விளையச் செய்யப்பட்ட விவசாய விளைபொருள்கள் மீது ஒரு முதன்மையான பற்றுப் பொறுப்பு சங்கத்திற்கிருக்கும். அதே மாதிரியாகச் சங்கம் கொடுத்த கடன்களைச் கொண்டு வாங்கப்பட்ட எந்த ஒரு கால்நடை, கால்நடைக்கான தீவனம், விவசாய அல்லது கைத்தொழில் கருவிகள், இயந்திரங்கள் அல்லது பணிமனைகள், பட்டரைகள் அல்லது கிடங்குகள் அல்லது அலுவலகக்கட்டிடங்கள் சங்கத்திலிருந்து வாங்கப்பட்ட கடனைக் கொண்டு வாங்கப் பட்டிருந்தாலும் அல்லது கட்டப்பட்டிருந்தாலும் அவற்றின் மீது சங்கத்திற்கு ஒரு முதன்மையான பற்றுப் பொறுப்பு அல்லது ஈடுகாட்டு இருக்கும் [பிரிவு 32 (1)]. எனினும், ஒரு வெறும் முதன்மையான ஈடுகாட்டு உண்டுபண்ணுவது மட்டும் போதாது. இந்த முதல் ஈடுகாட்டு உண்மையாகவே அதன் நோக்கத்தை நிறைவு செய்யவேண்டுமானால், பாதுகாப்புக்காக இருக்கும் சொத்தைச் சங்கத்தின் முன் அனுமதி இல்லாமல் பராதீனம் செய்வதைத் தடை செய்யவேண்டும் இந்தக் தடை பிரிவு 32 (2)-ல் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பிரிவு 32 (2)-ன்படி, முதல் ஈடுகாட்டுக்குட்பட்ட சொத்தை [(பிரிவு 32 (1)] சங்கத்தின் முன் அனுமதியின்றி விற்பனை செய்யவோ அல்லது வேறுவிதமாக எந்த முறையிலும் இன்னொருவருக்கு ஆதினம் செய்யவோ அல்லது மாற்றவோ கூடாது.

முதன்மையான பாதுகாப்புக்குட்பட்ட சொத்துகளை எந்த விதமான உத்தரவுமின்றி மாற்றுதல் செய்வது சட்டப்படிச் செலுத்தக்கதல்ல [பிரிவு 32 (4)]. ஈடுகாட்டப்பட்ட சொத்துகளைப் பாக்கிதாரர் தன் மகசூலை வேறு இடத்திற்குக் கொண்டு போய்விடலாம் என்று சங்கம் அச்சப்பட்டால் சங்கத்தால் குறிக்கப்படும் இடத்திலும் நேரத்திலும் கொண்டு வந்து வைக்க வேண்டும் என்றுங்கூட பாக்கிதாரரைச் சங்கம் வற்புறுத்தலாம். [பிரிவு 32 (2), பிரிவு 32 (3)]-ன்படி, சங்கம் விரும்பினால், உறுப்பினர் ஈடுகாட்டியுள்ள சொத்தை விதிகளில் நிருணயிக்கப் படும் குறிப்பிட்ட இடத்திலும் நேரத்திலும் சங்கத்தின் வசம் அல்லது சங்கத்தின் பொறுப்புக்கு ஒப்படைக்கவேண்டும். அந்தச் சொத்தைக் கெட்டுப் போகாமல் வைத்துக் கொள்வது தொடர் பாகச் சங்கத்திற்கு ஏற்பட்ட செலவுகளைக்கூட உறுப்பினரிட மிருந்து வசூல் செய்யலாம் [பிரிவு 32 (3)]. விதி 83 அவ்வாறு ஒப்படைக்கப்பட்ட சொத்தைக் குறித்து மேற்கொள்ளவேண்டிய விதி முறையை விவரிக்கிறது. பிரிவு 32 (2)-க்கு முரண்பாடாக நடக்கும் எந்த ஒரு நபரும் அல்லது சங்கத்திற்குச் சாதகமாக ஒரு முதன்மையான ஈடுகாட்டுக்குட்பட்ட சொத்தைச் சங்கம்

விரும்பும்போது 32 (3) பிரிவின்கீழ் வைக்கவோ அல்லது பொறுப்புக்கு ஒப்படைக்கவோ தவறினல், அவர் பிரிவு 102-ன் கீழ் 6 மாதங்களுக்கு நீடிக்கும் ஒரு காலத்திற்குச் சிறைவாசம் அல்லது ரூபாய் 500 வரை அபராதம் விதிக்கப்படுவார்.

மேற்குறிப்பிட்ட பிரிவின்கீழ் ஏற்படுத்தப்பட்டிருக்கும் பாது காப்பானது, நிலவரியைக் குறித்தும், சங்கத்தால் கடன் கொடுக்கப்பட்ட பிறகு நில அபிவிருத்திக் கடன்கள் சட்டத்தின் கீழ் (1883) அரசாங்கத்தால் வழங்கப்பட்ட கடன்களைக் குறிக்கும், அரசாங்கத்தின் உரிமைக் கோரிக்கைக்குட்பட்டதே [பிரிவு 32 (5)]. சங்கத்திற்கு இந்தப் பிரிவின்கீழ் அளிக்கப் பட்டுள்ள சிறப்புரிமை, எதிர்பார்க்கப்பட்ட பயிர்களின் (anticipated crops) ஈட்டின் பேரில் கடன்கள் கொடுப்பதை, அதிக அளவு வசதிப் படுத்தும். தற்போதிருக்கும் பொதுவான கருத்துப்போக்கு, பயிர்களின் ஈட்டின் பேரில் கடன்கள் கொடுக்கப்படவேண்டும் என்பது. குறிப்பாக, பயிரிடும் குத்தகைக்காரர்களிடத்தில், இந்த ஈடு மட்டும்தான் அவர்கள் கொடுக்க முடியும். ஆகையால், பிரிவு 32 சங்கங்களுக்கனு கூலமாக முதன்மையான உரிமையை உண்டுபண்ணுவதன் மூலம், சங்கத்திற்கு ஒரு தனிச் சிறப்புரிமையைக் கொடுக்கிறது. பிரதம விவசாய நாணயச் சங்கங்கள் பெருமளவு மகசூல் கடன்கள் கொடுத்து வருவதால் இந்தச் சட்டப்படியான பாதுகாப்பு தேவையாக இருக்கிறது.

பிரிவு 92-ன் கீழும் விதி 82-ன் கீழும், சங்கம், இந்தப் பாதுகாப்பை விரைவாக நிறைவேற்றுவதற்குக்கூட, தவணை தவறிய பாக்கிதாரர்கள் மீது ஒரு தீர்ப்பாணை வாங்காமலே, அவர்களுடைய பயிர்களை ஜப்தி செய்து விற்பனை செய்ய பதிவாளருக்கு ஒரு விண்ணப்பம் செய்துகொள்ள அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது. இதற்குமேல் மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டம் (1960) சங்கம் தனக்குச் சேர வேண்டிய கடன் பாக்கியை ஒரு நிலவரி பாக்கியைப்போல வசூல் செய்வதற்கு அனுமதி அளிக்கிறது. மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் (1960) பிரிவு 101-ன் கீழ் சங்கத்தின் வேண்டுகோளின் பேரில் அல்லது சங்கம் தானுகவே தனக்குச் சேரவேண்டுமென்று சொல்லப்பட்ட கடன் பாக்கியை வசூல் செய்வதற்கு இது ஓர் அளவுக்கு மிஞ்சிய நடவடிக்கையாக இருக்கலாம். ஆனால், அத்தகைய ஒரு சரத்து, பிரிவு 31-ன் கீழ் சங்கம் ஒரு முதன்மையான ஈடுகாட்டை வைத்திருக்கும் மகசூல் கடன்களைப் பொருத்தமட்டிலாவது, தேவையாகத் தோன்று கிறது.

சந்தானம் குழுவினர், விவசாய நாணயச் சங்கங்கள் உறுப்பினர்களிடமிருந்து கடன்களை வசூல் செய்வதைத் துரிதப்படுத்துவதற்காக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகளில் ஒன்று. நிலவரி வசூல் சட்டத்தின் கீழ் நிருணயிக்கப்பட்ட நடைமுறையைக் கூடக் கையாளுவதற்கு அச்சங்கங்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட வேண்டுமென்று, பரிந்துரை செய்திருக்கின்றனர். குறிப்பாக, இந்த அதிகாரம், அத்தகைய சுருக்க நடவடிக்கையையெடுத்தாலொழியப் பாக்கிகளை வசூலிக்க முடியாதென்று கருதப்படும் சூழ்நிலைகளில், சங்கங்களுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்று அவர்கள் பரிந்துரை செய்துள்ளனர். பிரிவு 32 (1)-ன்கீழ் முதன்மையான ஈடுகாட்டுக்குட்பட்ட சொத்துக்களைக் குறித்து எழுகின்ற வசூல் செய்யும் நேரத்தில், அக்குழுவினரின் யோசனையை அமல்படுத்தலாம்.

(iii) சில சங்கங்களிடமிருந்து கடன்கள் பெறுகின்ற உறுப்பினர்களுடைய அசையாச் சொத்துகளின்பேரில் ஈடுகாட்டு (பிரிவு 33): விவசாய நாணயச் சங்கங்களில் கடன் வாங்குபவர்கள், கடன் தேவைப்படும் ஒவ்வொரு சமயமும், கடன் பத்திரங்கள் நிறைவேற்றுதலில்லாமல், துரிதமாகத் தங்கள் கடன் தேவைகளைப் பெறுவதற்கு வசதி செய்யும் நோக்கத்துடன் பிரிவு 33-ல், ஓர் உறுப்பினருடைய நிலத்தின் பேரில் அல்லது அவருக்குச் சொந்தமான இதர அசையாச் சொத்தின்பேரில், அல்லது தன் கடன் தேவைகளுக்காகப் போதமான பாதுகாப்பளிக்கக் கூடிய அந்தச் சொத்தின் ஓர் பாகத்தின் பேரில் விதி 52-ல் நிருணயிக்கப்பட்ட நமூனாவில் ஒரு உறுதிக் கூற்றின் (Decleration) மூலம், ஓர் ஈடுகாட்டைக் கட்டாயமாக ஏற்படுத்துவதற்கு அல்லது நிரூபிப்பதற்கு ஒரு சரத்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த உறுதிக் கூற்றுப் பத்திரத்தைச் சங்கத்தின் அனுமதியைப் பெற்றால்மட்டுமே மாற்ற அல்லது ரத்து செய்யமுடியும் [பிரிவு 38 (2)]. இது சங்கத்தினுடைய நலன்கள் பாதிக்கப்படாமலிருப்பதை உறுதிப்படுத்துகிறது.

உறுதிக்கூற்றுப் பத்திரத்தில் குறிக்கப்பட்ட நிலம் அல்லது இதர அசையாச் சொத்து, சங்கத்திற்குச் சேரவேண்டிய பாக்கி முழுவதும் செலுத்தப்படுகிற வரையில், விற்கப்படவோ அல்லது மாற்றப்படவோ அல்லது பராதீனம் செய்யப்படவோ கூடாது. இந்தச் சரத்துக்கு முரண்பாடாகச் செய்யப்படும் எந்த லேவாதேவியும் சட்டப்படி முற்றிலும் செல்லாதது [பிரிவு 33 (iii)]. இந்தச் சரத்தை மீறி நடக்கும் எந்த உறுப்பினரும் பிரிவு 102-ன் கீழ் 6 மாதங்கள் வரை சிறைவாசம் அல்லது ரூ. 50 வரை

அபராதத்திற்கு உள்ளாவார். இந்த உறுதிக் கூற்றுப் பத்திரத்தை ஓர் உறுப்பினர் கட்டாயமாக எழுதிக் கொடுக்க வேண்டும். சொத்திருக்கும் எல்லையில் அதிகாரம் செலுத்தும் சார்-பதிவாளரால் (Sub-Registrar) இந்த உறுதிக்கூற்றுப் பத்திரம் பதிவு செய்யப்படவேண்டும். சங்கம் உதவிப் பதிவாளருக்கு இந்த உறுதிக்கூற்றுப் பத்திரத்தைப் பதிவு அஞ்சல் மூலம் அனுப்பி அது அவரால் பதிவு செய்யப்படவேண்டும் [பிரிவு 33 (iv)].

உறுதிக்கூற்றுப் பத்திரத்தைச் சார்-பதிவாளர் பதிவு செய்து அவர் அதன் நகல் ஒன்றைச் சங்கத்திற்கு அனுப்பவேண்டும் [பிரிவு 33 (v)].

பதிவு செய்யப்படாத எந்த உறுதிக் கூற்றுப் பத்திரமும் சட்டத்தில் முற்றிலும் செல்லாதது [பிரிவு 33 (vi)].

எனினும், சங்கத்திலிருந்து முன்னரே பெற்றிருக்கும் கடன்களைக் குறித்து உறுதிக்கூற்றுப் பத்திரம் எழுதிக் கொடுக்க உறுப்பினர்கள் கடமைப்பட்டவர்கள் அல்லர். இந்தச் சரத்து, தமிழ்நாட்டில் இதுவரை அமல்படுத்தப்படவில்லை.

ஆகையால், ஓர் உறுப்பினர் எழுதிக் கொடுக்கும் இந்த உறுதிக்கூற்றுப் பத்திரம் அவர் சங்கத்திலிருந்து கடன் வாங்கும் ஒவ்வொரு சமயத்திலும் ஓர் அடைமானப் பத்திரத்தை நிறைவேற்றிக் கொடுக்கும் தேவையைப் போக்குகிறது. இது கடன்களைப் பட்டுவாடா செய்வதில் உண்டாகும் தாமதத்தையும் போக்கி விடுகிறது. இந்தப் பிரிவின்கீழ் ஏற்படுத்தப்பட்ட ஈடுகாட்டுப்பிரிவு 32-ல் ஏற்படுத்தப்பட்ட ஈடுகாட்டிலிருந்து மாறுபடுகிறது. ஏனென்றால், இந்த ஈடுகாட்டு உதவிப் பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்யப்படவேண்டும். பிரிவு 33-ன்கீழ் ஏற்படுத்தப்பட்ட ஈடுகாட்டை அமல்படுத்த வேண்டுமானால், ஒரு தீர்ப்பாணை வாங்கப்பட்டு அது நிறைவேற்றுவதற்காக அனுப்பப்படவேண்டும். சந்தானம் குழுவினர், உறுப்பினரிடமிருந்து தன் அசையாச் சொத்துகளின்மீது ஓர் ஈடுகாட்டு உண்டு பண்ணி ஓர் உறுதிமொழிப் பத்திரம் எழுதி வாங்கும் திட்டத்தை ஆராய்ந்தனர். அவர்கள் கருத்தில், பிரிவு 33 ஓர் உறுப்பினர் தன் உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிடும் வரை அல்லது அவருடைய உறுதிமொழிப் பத்திரம் ரத்து செய்யப்படும்வரை, ஒரு தொடர்ந்திருக்கும் ஈடுகாட்டை உறுதி செய்யவில்லை என்பது இந்தக் காரணங்களுக்காகத்தான் தமிழ்நாட்டில் இந்தச் சரத்து அமல் படுத்தப்படவில்லை. ஆகையால், பிரிவு 33,

மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்திலிருப்பது போல (1960), திருத்தப்படலாம் என்று அவர்கள் பரிந்துரை செய்தனர்.

மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கத்தின் பிரிவு 48-ன் கீழ் நிலத்தின் சொந்தக்காரர் மட்டுமல்லாமல் பயிரிடும் குத்தகைக்காரர்கள் கூட இந்த ஈடுகாட்டை ஏற்படுத்துவதற்குச் சரத்து செய்யப்பட்டிருக்கிறது. மகாராஷ்டிர மாநிலத்தில், பயிரிடுபவர் அல்லது குடியிருப்பவர் உரிமைகள், வரையறுக்கப்பட்ட கால வரைக்குப் பாதுகாக்கப்பட்டும், நன்கு விளக்கப்பட்டும் இருப்பதால், பயிரிடுபவர் கூட அவர் பயிரிடும் நிலத்தின் பேரில் ஓர் ஈடுகாட்டை ஏற்படுத்துவதற்கு உரிமையுள்ளவராக இருக்கிறார். ஆகையால், நம்முடைய சட்டத்தின் 33ஆம் பிரிவு மகாராஷ்டிர மாநிலச் சட்டத்தின் (1960) 48ஆம் பிரிவைப் போன்று திருத்தப்படவேண்டுமென்று சந்தானம் குழுவினர் பரிந்துரை செய்திருக்கின்றனர். மேலும் அவர்கள், 33ஆம் பிரிவைத் திருத்தம் செய்வதற்கு யோசனையையும் கூறியிருக்கிறார்கள். மகாராஷ்டிர மாநிலத்தில், தங்கள் நிலத்தின் மீது ஈடுகாட்டை ஏற்படுத்திய உறுப்பினர்களுக்கு, நபர் ஜாமீன் திட்டம் ஏறக்குறைய கைவிடப்பட்டதென்று தெரிகிறது. பிரிவு 33 தக்கபடி திருத்தப்பட்டு அமலுக்குக் கொண்டுவரப்பட்டால், நிலத்தைச் சொந்தமாகப் பயிரிடுபவர்களுக்குக் கொடுக்கப்படும் கடன்களைக் குறித்து நபர் ஜாமீன் வாங்கும் தேவை இருக்காது. இது தமிழ் நாட்டில் கடன் வழங்கும் நடைமுறையை எளிதாக்கும்.

(iv) ஈடு காட்டும், உறுப்பினர்களுடைய பங்குகள் அல்லது அக்கறையை எதிர் ஈடு செய்தலும்: அதாவது, சங்கத்தினிடமிருக்கும் ஓர் உறுப்பினருடைய பங்குகளின் மீது சங்கத்தினுடைய ஈடு காட்டும் அத்தகைய பணங்களைச் சங்கத்திற்குக் கொடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்களுடைய பாக்கிக்காக அது எதிரீடு செய்து கொள்ளும் உரிமையும் ஆகும் (பிரிவு 34). இந்தப் பிரிவைப் பொறுத்தவரையில், ஈடுகாட்டு உண்மையாகவே ஒரு பற்றுரிமை தான் (Lien); இந்தப் பிரிவில், சங்கத்திற்கு, ஒரு கடன்காரர் என்ற வகையில், இரண்டு நன்மைகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. அதாவது (1) ஈடுகாட்டு (2) எதிரீடு செய்யும் உரிமை! இந்தப் பிரிவின்படி, ஒரு சங்கம் கடன் வாங்கிய உறுப்பினர்களின் சில விதப் பணங்கள், இலாபங்கள் மீது ஓர் ஈடுகாட்டு வைத்துக்கொள்வது மட்டும் அல்லாமல் சங்கத்திற்குப் பாக்கியான கடன்களை வசூலிப்பதற்குச் சட்ட நடவடிக்கைகளெடுக்க வேண்டியதல்லாமல் காப்பாற்றப்பட்டு சங்கம், கடன் வாங்கிய உறுப்பினர்களுடைய

பணம் அல்லது இலாபத்தை எதிரீடு செய்து கொள்ளும் உரிமையைக்கூடப் பெற்றிருக்கிறது. இந்த உரிமை சங்கத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

உறுப்பினர் தான் சங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய கடன் பாக்கிக்காகத் தன் பங்குத் தொகைகளைச் சங்கம் எதிரீடு செய்து கொள்ள வேண்டுமென்று சங்கத்தைக் கட்டாயப்படுத்த முடியாது. ஏனென்றால், பங்குத் தொகை ஓர் உறுப்பினரின் வரவுக்கு வைக்கப்பட்ட பணமல்ல; அல்லது தனக்குத் திருப்பிச் செலுத்தப் படவேண்டுமென்று உரிமையோடு ஓர் உறுப்பினர் அதைக் கேட்கவும் முடியாது. ஈடுகாட்டுக்கும் எதிர் ஈடு செய்து கொள்வதற்கும் சங்கத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் இந்த உரிமையை ஓர் உறுப்பினரிடமிருந்து பாக்கித் தொகைகளைக் குறித்துமட்டுமல்லாமல், ஒரு முன்னாள் உறுப்பினர் அல்லது ஓர் இறந்துபோன உறுப்பினரின் ஆதீனத்தைக் குறித்தும் கூட சங்கம் கையாளலாம் (பிரிவு 34). ஓர் இறந்துபோன உறுப்பினரின் அக்கறையும், ஓர் இறந்துபோன உறுப்பினரின் ஆதீனத்திற்குக் கொடுக்கப்படவேண்டிய தொகைகளும், தற்போதுள்ள உறுப்பினர்களுக்கும் முன்னாள் உறுப்பினர்களுக்கும் கொடுக்கப்பட வேண்டிய பணத்திற்குச் சமமாகப் பாவிக்கப்படுகிறது. பங்கு மூலதனம் தவிர, ஓர் உறுப்பினர் சங்கத்தினிடம் வைத்திருக்கும் இதர பணங்களைக் குறித்துச் சங்கம் எதிரீடு செய்வதற்கு முன்பு, அவை ஒரு நீதி மன்றத்தால் ஜப்தி செய்யப்பட்டால், சங்கம் அக்கடைய ஜப்தி உத்தரவுக்குக் கட்டுப் படவேண்டும். ஆனால், ஒரு நிதி வங்கியைப் பொறுத்தவரை, அது தன் உறுப்பினர் சங்கங்களைக் குறித்துச் சங்கங்கள் நிதி வங்கியில் போட்டு வைத்திருக்கும் சேம நிதிக்கும் சங்கங்களின் ஊழியர்களுடைய வருங்காலச் சேமிப்பு நிதிவைப்புத் தொகைகளுக்கும், இந்த உரிமையைக் கையாள முடியாது.

(v) நிதி வங்கி, தன்னுடன் ஒரு சங்கம் முதலீடு செய்திருக்கும் காப்பு நிதியின் மீதும் ஊழியர்கள் வருங்காலச் சேமிப்புநிதி வைப்புத் தொகையின் மீதும் ஈடுகாட்டாக அல்லது தனக்குச் சேரவேண்டிய பாக்கித் தொகைக்கு அத்தொகையை எதிரீடு செய்து கொள்ளும் உரிமையைக் கையாளுவதற்கு உரிமை கோர முடியாது (பிரிவு 35) ; ஒரு நிதி வங்கிக்கு ஒரு சங்கத்திடமிருந்து தனக்குச் சேர வேண்டிய கடன் பாக்கிக்காக கீழ்க்கண்டவைகள் மீது ஈடுகாட்டோ அல்லது எதிரீடு செய்து கொள்ளும் உரிமையோ பிரிவு 35-ன் கீழ் கிடையாது. (அ) நிதி வங்கியில் முதலீடு செய்யப்பட்டிருக்கும் ஒரு சங்கத்தின் காப்பு நிதி (ஆ) நிதி வங்கியில் முதலீடு செய்யப்பட்ட பிரிவு 63-ன் கீழ் சங்கங்கள் வசூலிக்கும் ஊழியர்களின் வருங்கால

சேமிப்பு நிதி வைப்புத் தொகை. இந்த இரண்டு தொகைகளும், ஒரு நிதி வங்கி தன் உறுப்பினர் சங்கங்களிடமிருந்து வரவேண்டிய பாக்கித் தொகைக்காக எதிரீடு செய்து கொள்ளும் உரிமையிலிருந்து, விலக்கப்பட்டிருக்கின்றன. ஒரு சங்கத்தின் காப்பு நிதி ஒரு மத்திய நிதி வங்கியில் முதலீடு செய்யப்படுவது ஏறக்குறைய கட்டாயமாக இருப்பதால், அது இவ்வாறு விலக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால், விதி 47-ன் கீழ், ஒரு சங்கம் தன் காப்பு நிதியை, 50 (அ) பிரிவிலிருந்து (ஈ) பகுதியில் குறிப்பிடப்பட்ட விதங்களில் தவிர, வேறு விதத்தில் முதலீடு செய்யக்கூடாது. 60 (ஈ) பிரிவின் கீழ் பதிவாளரால் இச் செயலுக்காக அங்கீகரிக்கப்பட்ட வங்கியில் காப்பு நிதி முதலீடு செய்யப்படுவதை அனுமதிக்கிறது. பதிவாளர் பொதுவாக ஒரு சங்கத்தின் காப்பு நிதி, நிதி வங்கியிடமோ, அல்லது தனிப்பட்ட சூழ்நிலைகளில் காப்பு நிதியின் ஒரு பாகம் மத்திய நில அடைமான வங்கியின் கடனீட்டுப் பத்திரத்திலோ முதலீடு செய்யப்பட்டால், அது நிதி வங்கியினுடைய ஈடுகாட்டு உரிமை அல்லது எதிரீடு செய்யும் உரிமையிலிருந்து விலக்கப்பட்டிருக்கிறது. மேலும், ஒரு சங்கத்தின் காப்பு நிதி தன்னுடைய பங்கு மூலதனத்துடன் சேர்ந்து தன்னுடைய கடன் வாங்கும் சக்திக்கு அடிப்படையாக இருப்பது தவிர, சங்கத்தின் எல்லாக் கடன்காரர்களுக்கும் அது ஓர் ஈட்டு ஆதாரமாகவும் இருக்கிறது—நிதி வங்கிக்கு மட்டும் அல்ல, வைப்புத் தொகை கொடுத்தவர்களுக்கும்கூட. ஒரு சங்கத்தின் காப்பு நிதியின்மீது நிதி வங்கிக்கு மட்டும் ஓர் ஈடுகாட்டு இருக்க வேண்டுமென்றால் சங்கம் பொதுமக்களுடைய நம்பிக்கையைக் கவர்ந்து வைப்புத் தொகைகளை ஏற்பதற்கு முடியாது.

ஒரு சங்கத்தால் நிதி வங்கியில் முதலீடு செய்யப்பட்ட ஊழியர்களின் வருங்காலச் சேமிப்பு நிதி வைப்புத் தொகையைப் பொறுத்தும் கூடப் பிரிவு 63 (2) (சி). ஊழியர்களின் வருங்காலச் சேமிப்பு வைப்புத் தொகையானது சங்கத்தின் சொத்துகளின் ஒரு பாகமாகாது என்று கூறுகிறது. வருங்காலச் சேமிப்பு நிதி ஒரு சங்கத்தின் சொத்தாக இல்லாமலிருப்பதால் அது எதிரீட்டுக்குட்பட்டிருக்கும் ஒரு சொத்தாக இருக்க முடியாது. எனவே, எந்த நிதி வங்கியும் தன்னுடன் கடன் வாங்கிய சங்கத்தால் முதலீடு செய்யப்பட்ட அத்தகைய நிதியின்மீது அந்தச் சங்கத்தின் கடன் பாக்கிக்காக ஓர் ஈடுகாட்டு இருக்க வேண்டுமென்று உரிமை கோரிக்கை செய்யமுடியாது. எனவே, நிதி வங்கிக்கு அத்தகைய வருங்காலச் சேமிப்பு நிதியை அல்லது காப்பு நிதியைத் தனக்கு ஒரு சங்கம் கொடுக்கவேண்டிய கடன் பாக்கிக்காக எதிரீடு செய்துகொள்ளும் உரிமை கிடையாது.

(vi) ஒரு சங்கத்தில் வைக்கப்பட்டுள்ள உறுப்பினருடைய பங்குகள் ஜப்தி செய்யப்படுவதிலிருந்து விலக்கு (பிரிவு 36): இந்தப் பிரிவின் கீழ் ஓர் உறுப்பினர் வைத்திருக்கும் பங்குகளை எந்த ஒரு வெளிக் கடன்காரரும் ஜப்தி செய்யமுடியாது. ஆனால், பிரிவு 35-ல் விளக்கியபடி, சங்கத்திற்கு அவற்றை ஈடுகாட்டு அல்லது எதிரீடு செய்துகொள்ளும் உரிமையுண்டு. இதற்குட்பட்டு, ஓர் உறுப்பினருடைய பங்குகளை அவர் ஒரு வெளிக் கடன் காரருக்குக் கொடுக்கவேண்டிய எந்த பாக்கித் தொகைக்கும் எந்த ஒரு நீதி மன்றத்தாலும் ஜப்தி செய்யமுடியாது. இந்த விலக்கு சிக்கனத்தை ஊக்குவிப்பதற்காக அளிக்கப்பட்டிருக்கிறது என்பது தெளிவு. ஏனென்றால், ஒரு சங்கத்தில் பங்குகள் வைத்திருப்பது சேமிப்பு செய்யும் விதங்களில் ஒன்றாகும். மேலும், இந்தச் சரத்து, உறுப்பினர்கள் பணமுடையுள்ளவர்களாகவும் அவர்களுடைய சொத்துகள் வெளிக் கடன் காரர்களால் ஜப்தி செய்யப்பட்டுமிருந்தால், ஒரு சங்கத்தின் பங்கு மூலதனத்தில் ஒரு குறைவு வராமல் தடுக்க உதவுகிறது. ஆகையால், இந்தச் சிறப்புரிமை உறுப்பினர்களுக்கு பட்டுமன்றிச் சங்கத்திற்குக்கூட நன்மை செய்கிறது. இந்தப் பிரிவின்கீழ் கொடுக்கப்பட்ட சிறப்புரிமை ஒரு சங்கத்தில் ஓர் உறுப்பினரெடுத்திருக்கும் பங்குகளுக்கு மட்டுமல்லாமல் பிரிவு 53-ன் கீழ் அமைக்கப்பட்ட வருங்காலச் சேமிப்பு நிதியில் ஒரு சங்கச் சிப்பந்தியால் போட்டு வைக்கப்பட்டிருக்கும் தொகைக்கும்கூட நீட்டிக்கப்பட்டிருக்கிறது.

சிப்பந்திகளுடைய வருங்காலச் சேமிப்பு நிதியில் சங்கத்தின் உதவித் தொகைகளைச் சேர்த்து இருப்பிலிருக்கும் தொகை முழுமைக்கும் மேற்சொன்ன சிறப்புரிமை நீடிக்கும். அந்த ஜப்தி விலக்கு அந்தத் தொகைக்கு மட்டுமல்லாமல், ஒரு மநில வங்கி உட்பட எந்த வங்கியிலும் சங்கம் முதலீடு செய்திருக்கும் வருங்காலச் சேமிப்பு நிதித் தொகைக்கும்கூடப் பொருந்தும்.

இங்கேயும்கூட, இரண்டு விதமான பாதுகாப்பு இருக்கிறது. அதாவது உறுப்பினருக்கு மட்டுமன்றி சங்கத்திற்குக்கூட. வருங்காலச் சேமிப்புநிதி உதவித் தொகைகளும்கூட, அவை வெளியில் முதலீடு செய்யப்பட்டிருந்தாலும்கூட, ஒரு நீதி மன்ற ஜப்தி உத்தரவுக்குப் பொறுப்பாகா. சிப்பந்திகளுடைய வருங்காலச் சேமிப்பு நிதியின் பிரதான நோக்கம், சிப்பந்தியின் குடும்பத்தை நன்மையடையச் செய்வதாக இருப்பதால் அந்த நிதி சேதப்படாமல் வைக்கப்பட்டிருப்பதை உறுதிப்படுத்துவதற்குத்தான் இந்தச் சிறப்புரிமை உத்தேசப்பட்டிருக்கிறது. இந்த நிதியிலிருக்கும் தொகை சங்கத்தின் சொத்து அல்ல. இது சங்கத்தின்

தொழிலில் உபயோகிக்கப்படாமல் இருக்கிறது. அதை நீதிமன்றமோ அல்லது எந்த அலுவலரோ உத்தரவிட்டு ஜப்தி செய்யமுடியாது (பிரிவு 63).

ஒரு நபர், மாநில நொடிப்புச் சட்டத்தின் (1920)கீழ், (Provincial Insolvency Act) அல்லது மாநகரங்கள் நொடிப்புச் சட்டத்தின் கீழ் வந்தாலும், சங்கத்தின் வசம் ஒரு சிப்பந்திக்கு இருப்பாக இருக்கும் வருங்காலச் சேமிப்பு நிதித் தொகையைப் பெறுவதற்கு, இந்த இரண்டு சட்டங்களின் கீழ் நொடிப்பு நபர்களின் விவகாரங்களைக் கவனிப்பதற்காக அமர்த்தப்பட்ட அதிகாரிகளால் உரிமைக் கோரிக்கை செய்ய முடியும்.

ஓர் உறுப்பினர் சங்கத்தில் வைத்திருக்கும் இதர சேமிப்புகள், பிரிவு 36–ன் படி ஜப்தியிலிருந்து விலக்களிக்கப்படவில்லை. இந்தப் பிரச்சினை சந்தானம் குழுவினரால் கூட ஆலோசிக்கப்பட்டது. அதாவது கிராமப் புறங்களில், உறுப்பினர்கள் சேமித்த வைத்து அத்தகைய சேமிப்புத் தொகைகளைத் தங்கள் சங்கங்களில் முதலீடு செய்வதற்கு ஏதாவது ஊக்கம் அல்லது தூண்டுகோல் ஏற்படுத்த வேண்டுமா என்பதைக்கூட அவர்கள் ஆலோசித்தார்கள். அத்தகைய சிக்கன வைப்புத் தொகைகள் நகர வங்கிகளிலும் கூடக் குறிப்பாக ஊழியர்கள் சங்கங்களில் ஊக்குவிக்கப்படவேண்டும். கிராம நாணயச் சங்கங்களில், உறுப்பினர்களிடமிருந்து சிக்கன வைப்புத் தொகைகளும் அவர்களுக்குக் கொடுக்கபட்ட கடன்களில் 2 சதவீதம் வசூலிக்கப்படுகின்றது. ஊழியர்கள் சங்கங்களில் அவர்கள் பெறும் சம்பளத்தின் அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட தொகை வசூலிக்கப்படுகிறது. சில சூழ்நிலைகளில் சிக்கன வைப்புத் தொகைக்கு உறுப்பினர்கள் பணத்தைப் போட்டு வைப்பது கட்டாயமாக இருக்கிறது. குறிப்பாக, ஓர் ஊழியர்கள் சங்கத்தின் அல்லது விவசாய நாணயச் சங்கத்தின் உறுப்பினர்களிடத்திலும் கூட சிக்கன வைப்புத் தொகையைக் கட்டாயப் படுத்திக் கிராம சேமிப்பு திரட்டப்படவேண்டும் என்று ஒரு கருத்து நிலவுகிறது.

ஊழியர்கள் சங்கத்தில் சிக்கன வைப்புத் தொகைகள் ஊழியர்கள் வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு அவர்களுக்கு உபயோகப் படவேண்டும் என்பதுதான் இதன் நோக்கமாகும். அது வருங்காலச் சேமிப்பு நிதியைப் போன்றது. ஆகையால், அத்தகைய சேமிப்பு வைப்புத் தொகைகள் எந்த ஒரு நீதிமன்றத்தின் தீர்ப்பாணை அல்லது உத்தரவின் கீழ் ஜப்தி செய்யப்படுவதற்குப் பொறுப்பாக்கப்படமாட்டாது என்று சந்தானம் குழுவினர் பரிந்

துரை செய்தனர். விவசாய நாணயச் சங்கங்களில் சிக்கன வைப்புத் தொகைத் திட்டத்தை மக்கள் விரும்பும்வகையில் பரப்புவதற்காக அத்தகைய வைப்புத் தொகைகளின் பேரில் 6 சதவீதம் வட்டி கொடுக்கப்படவேண்டுமென்றும், சிக்கன வைப்புத் தொகையிருப்பில், 50 சதவீதத்திற்கு மேற்படாமல் தொடர்பான சிப்பந்தி திரும்பப் பெற்றுக் கொள்வதற்குரிமையுள்ளவராக இருக்கவேண்டுமென்றும் அவர்கள் பரிந்துரை செய்திருக்கின்றனர்.

ஓர் உறுப்பினரின் சிக்கன வைப்புத் தொகையை அவருடைய ஆயுள் காப்பீட்டுறுதிக் கட்டணத்தைக் (Life Insurance Premium) கட்டுவதற்கு உபயோகிக்க அனுமதிக்கப்படவும வேண்டும். அதே போன்று, ஊழியர்கள் சங்கத்திலும் கூட ஓர் உறுப்பினர் அவர் உறுப்பினராக இருக்கும் காலத்தில் கூட அவருடைய சிக்கன வைப்புத் தொகையிருப்பில் 5 சதவிகித வரம்புக்குட்பட்டு வீடு கட்டுவதற்கு வீட்டுமனை வாங்குவதற்கும் அல்லது ஈட்டுறுதிக் கட்டணம் செலுத்துவதற்கும் தன்னுடைய சிக்கன வைப்புத் தொகையின் ஒரு பாகத்தை உபயோகிக்க அனுமதிக்கப்பட வேண்டும் என்றும் சந்தானம் குழுவினர் பரிந்துரை செய்திருக்கின்றனர். ஆகையால், ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் வைக்கப்பட்டிருக்கும் சிக்கன வைப்புத் தொகை ஓர் உறுப்பினருடைய பங்கு மூலதனத்தைப்போல ஜப்திலிருந்து விலக்களிக்கப்பட வேண்டும் என்றும், அப்படிச் செய்யப்படுவதற்கும் பிரிவு 32-க்குத் தேவையான திருத்தத்தையும் அவர்கள் பரிந்துரை செய்திருக்கின்றனர்.

(vii) ஒரு சங்கத்தின் காப்பு நிதியும் வராக்கடன் காப்பிருப்பும் ஜப்திக்கு பொறுப்பானவையல்ல (பிரிவு 37; பிரிவு 35). ஒரு சங்கத்தின் காப்பு நிதியையும் தன் சிப்பந்திகளின் வருங்காலச் சேமிப்பு நிதியையும் அதன் நிதி வங்கியினுடைய ஈட்டுகாட்டு உரிமையிலிருந்தும், எதிரீடு செய்து கொள்ளும் உரிமையிலிருந்தும், விலக்குகிறது. பிரிவு 37, ஒரு சங்கத்தின் காப்பு நிதிக்கும் வராக்கடன் காப்பிருப்புக்கும் மேற்கொண்டு பாதுகாப்பளித்து சங்கத்தால் கொடுக்கப்படவேண்டிய எந்த ஒரு கடன் அல்லது பொறுப்பைக் குறித்து அவற்றை எந்த ஜப்திக்கும் பொறுப்பாகாதவாறு செய்கிறது. இந்த நிதிகள் எந்த ஓர் உறுப்பினருக்கும் சொந்தமல்லாமல் சங்கத்திற்கு மட்டும்தான் சொந்தமானவை. எவரும் இந்த நிதிகளில் எந்த பாகத்திற்கும் உரிமைக் கோரிக்கை செய்ய முடியாது. இந்த நிதிகள் சங்கத்தின் கடன் வாங்கும் சக்திக்காக ஓர் அடித்தளமாகவும், சங்கத்தின் நிதிநிலை நல்ல படி

யுள்ளது என்பது குறித்து ஓரளவுக்கு அறிகுறியாகவும் இருக்கிறது.

காப்பு நிதி (Reserve Fund) சங்கத்தின் வருடாந்தர இலாபங்களிலிருந்து வளர்க்கடபடுகிறது. அதேபோன்றுதான் வராக் கடன் காப்பிருப்பும் கூட. சில நேரங்களில், இலாபங்களையறிவிப்பதற்கு முன்னரே கூட வராக்கடன் காப்பிருப்பு ஏற்படுத்தப்படுகிறது. அந்த அளவுக்கு இலாபம் குறைந்துபோய் விடுகிறது. இந்த இரண்டுவித நிதிகளும் இலாபங்களிலிருந்து குறைக்கப்படுவதால் (அதாவது உண்மையான இலாபமும், வரவேண்டிய கூடுதல் இலாபமும் அல்லது சாத்தியமான இலாபமும்) இந்த நிதிகள் சங்கத்தின் வியாபாரத்தின் வெளியே ஒரு நிதி வங்கியிலோ அல்லது பிரிவு 50-ன் கீழ் பதிவாளரின் கட்டளைப்படி வேறு விதமாகவோ பொதுவாக முதலீடு செய்யப்படுவதாலும் இந்த நிதிகள் சங்கம் கலைக்கப்படும்போது அதனால் கொடுக்கப்பட வேண்டிய கடன்கள் ஏதாவது குறித்து எழுகின்ற பொறுப்பைச் செலுத்தத் தேவைப்படுவதால் இந்த நிதிகள் ஜப்தி செய்யப்படுவதிலிருந்து விலக்கப்பட்டிருக்கின்றன. அத்தகைய ஒரு சிறப்புரிமை சங்கத்திற்கு நீடிக்கப்படாவிட்டால் சங்கத்தினுடைய கடன் வாங்கும் சக்தி பாதிக்கப்பட்டு சங்கத்தின் கடன்களைக் குறித்து உறுப்பினர்களுடைய பொறுப்பு அதிகமாகிவிடும். இந்தக் காப்பு நிதிகள் நாணயச் சங்கத்தில் கடன்கள் வசூலாகாததால் ஏற்படுகின்ற இழப்புகளுக்கும் இதரவித சங்கங்களில் வேறு காரணங்களால் எழுகின்ற இழப்புகளுக்கும் ஒரு காப்பாக இருக்க உத்தேசிக்கப்படுகின்றன. ஆகையால் பிரிவு 37, இந்த நிதிகள் சங்கத்தால் தனக்கு வரவேண்டிய எந்த பாக்கித் தொகைகளைக் குறித்தும் யாதொரு நபரும் இந்த நிதிகளை ஜப்தி செய்ய வேண்டுமென்று கோர உரிமையில்லாமல் செய்து சங்கத்திற்கு ஒரு பாதுகாப்பை அளிக்கிறது.

(viii) சங்கத்திலிருக்கும் உறுப்பினர்கள் பதிவேடு அங்கத்துவத்தைக் குறித்த சில விவரங்களுக்கு 'மேலோட்டமான சான்றாக' ஏற்றுக்கொள்ளப்படுகிறது (பிரிவு 38): விதி 13 (இ)-ன்கீழ், ஒவ்வொரு சங்கமும், ஒவ்வோர் உறுப்பினரின் பெயரும், அவர் முகவரியும், அவர் உறுப்பினராக சேர்ந்த தேதியும், அவரால் எடுக்கப்பட்ட பங்குத் தொகைகளும், அத்தகைய பங்குகளுக்கு அவரால் செலுத்தப்பட்டத் தொகையும், அவருக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்ட ஏதாவது பங்குத் தொகையும், இவற்றின் தேதிகளும், ஆகிய விவரங்களைக் காட்டுகின்ற ஒரு நுழைவு ஏட்டை வைத்திருக்க வேண்டும். விதி 13 (இ)-ன்கீழ் ஒரு சங்கம் ஒரு நியமன உ.

பதிவேடுகூட வைத்திருக்க வேண்டும். இந்த 38ஆம் பிரிவின்கீழ் அளிக்கப்பட்டுள்ள சிறப்புரிமை என்னவென்றால், சங்கத்தில் வைக்கப்படும் உறுப்பினர்கள் பதிவேடு அல்லது பட்டியல் அல்லது பங்குகள் பதிவேடு, ஒரு நபர் தான் உறுப்பினரான தேதியைப் பற்றியும் உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிட்ட தேதியைப் பற்றியும் 'மேலோட்டமான சான்றாக' இருக்கவேண்டும் என்பது. இந்தத் தேதிகள், முன்பே கூறியபடி, ஓர் உறுப்பினர், முன்னாள் உறுப்பினர், அல்லது இறந்துபோன உறுப்பினரின் ஆதீனத்தின் பொறுப்பை 25ஆம் பிரிவின்கீழ் தீர்மானம் செய்வதற்கு முக்கியமானவை. எனினும், பதிவேட்டில் எழுதப்பட்டிருக்கும் நபர் ஓர் உறுப்பினர் என்பதை நிரூபிக்கப் பதிவேட்டுடன் சுதந்தரமான சான்று துணை செய்யவேண்டும் இந்தப் பதிவேடு, சட்டரீதியாக ஒரு தன்னாட்சிக் கூட்டுறவுக்கிருக்கவேண்டிய முக்கிய ஆவணங்களிலொன்று. அது சங்கக் கடனுக்குப் பொறுப்புள்ள நபர்களின் பட்டியலைத் தெரிவிக்கிறது. விதி 13 (இ)-ன்கீழ் அது கட்டாயமாக வைக்கப்பட வேண்டும். விதி 38-ன்கீழ் மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டம், இந்தப் பதிவேடு உறுப்பினரின் பங்கு மூலதனத்திற்குரிமையுடைய நபர்களின் பெயர்களையும் அவர்கள் நியமனம் செய்யப்பட்ட தேதியையும்கூடக் காண்பிக்கிறது. தமிழ்நாட்டில், விதி 13 (இ)-ன்கீழ் ஒரு தனி நியமனப் பதிவேடு வைக்கப்படவேண்டியது தேவையாக இருக்கிறது.

(ix) சட்ட நடவடிக்கைகளில் சங்க ஆவணங்களிலுள்ள பதிவுகளின் மெய்ப்பித்தல் [பிரிவு 39 (1)] அதாவது சங்க ஆவணங்களிலுள்ள பதிவின் நகல் ஒரு சான்றாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியது: இந்தச் சரத்து, ஒரு சங்கத்தை நீதிமன்றத்தில் தன் மூல பதிவேடுகளைத் தாக்கல் செய்யும் தொல்லையிலிருந்து காப்பாற்றுகிறது. மேலும், அப்படிச் செய்வதனால் சங்கத்தின் வியாபாரத்திற்கும் பங்கம் ஏற்படுகிறது. ஏனென்றால், சங்கங்களின் மூல ஏடுகள் நீதிமன்றங்களில் தாக்கல் செய்யப்பட்டால் புதிய ஏடுகள் திறக்கப்பட வேண்டும். அப்படித் தாக்கல் செய்யப்படும் ஏடுகள் நடப்பு உபயோகத்திலிருந்தால் அவை சங்கத்தின் அன்றாட வியாபாரத்திற்குத் தேவைப்படும். எனினும், இந்த ஏடுகள் சங்கத்தின் வியாபார நடைமுறையில் சுதந்தரமாக வைக்கப்படுகின்றன என்று சான்றுரைக்கப்பட வேண்டும். புத்தகங்களிலுள்ள பதிவுகளின் நகல்கள் சான்றிடப்பட்டால் மட்டுந்தான் அவைகளை மூல ஏடுகளுக்குச் சான்றாக ஏற்றுக்கொள்ளக்கூடும்.

பிரிவு 114 (என்)-ன் படி, விதிகள், சங்கத்தின் ஏடுகளின் பதிவு நகல்கள் எந்த நபரால் சான்றிடப்படவேண்டும் என்பதையும்,

எந்த நமூனாவில் சான்றிடப்படவேண்டும் என்பதையும், அத்தகைய நகல்களை வழங்குவதற்கு என்ன கட்டணங்கள் விதிக்கப் படவேண்டும் என்பதையும் ஏற்பாடு செய்யலாம். 15ஆம் விதியின் படி, பிரிவு 39 (1)-ன் செயலுக்காக ஒரு சங்கத்தினுடைய ஏட்டின் பதிவுகளின் நகல், சங்கத்தின் தலைவர் அல்லது செயலராலும், நிருவாகக் குழுவின் இரண்டிற்குக் குறையாத உறுப்பினர்களாலும் சான்றுரைக்கப்பட வேண்டும். பிரிவு 72-ன் கீழ் மீறப்பட்ட நிருவாகக் குழுவுள்ள ஒரு சங்கத்தின் புத்தகத்தின் பதிவுகள், நகல், அச்சங்கத்தின் சிறப்பு அலுவலராலும், சங்கத்தின் நிருவாகக் குழு தள்ளப்பட்ட பிறகு பதிவாளரால் அமர்த்தப்பட்ட நிருவாகக் குழுவின் இரண்டிற்குக் குறையாத உறுப்பினர்களாலும் கையெழுத்திடப்பட வேண்டும். 85ஆம் பிரிவின் கீழ் ஒரு கலைப்பு அதிகாரி அமர்த்தப்பட்டால், அந்தக் கலைப்பு அதிகாரி ஏட்டின் பதிவுகளின் நகலைச் சான்றுரைக்க வேண்டும். சான்றுரைக்கப் பட்ட ஒவ்வொரு நகலிலும் சங்கத்தின் முத்திரையிருக்க வேண்டும்.

நீதிமன்றத்தில் சங்கத்தின் ஏடுகளை முன்னிலைப்படுத்துவதற்கு, அல்லது ஏடுகளிலுள்ள பதிவுகளை நிரூபிப்பதற்கு ஒரு சாட்சியாக வருவதற்குச் சங்கம் தன்னுடைய அதிகாரிகளில் ஒருவர் மூலம் வர வேண்டிய சங்கடம்கூட ஓரளவுக்குத் தவிர்க்கப் பட்டிருக்கிறது. ஆனால், யாதொரு பிரத்தியேக காரணத்திற்காக நீதிமன்றம், சங்கம் யாதொரு சட்ட நடவடிக்கையில் ஒரு கட்சிக் காரராக இல்லாமலிருக்கும் சூழ்நிலையில் அது நேர்முகமாக வர வேண்டும் என்றும் ஏடுகளைச் சமர்ப்பிக்க வேண்டு மென்றும் கட்டளையிட்டால், அக் கட்டளையைச் சங்கம் நிறை வேற்றத்தான் வேண்டும் [பிரிவு 39 (2)]. இந்தச் சலுகை பிரிவு 86 (1)-ன் கீழ் அமர்த்தப்பட்ட கலைப்பு அதிகாரிக்குக்கூட நீட்டிக்கப்பட்டிருக்கிறது.

எனவே, மூலக் கணக்கு ஏடுகளைச் சமர்ப்பிக்கும் தேவை ஒழிக்கப்பட்டு, அக் கணக்குகளின் நகல்களை அக் கணக்குகள் உண்மையாகவே வைக்கப்பட்டிருக்கின்றன என்பதற்கு 'மேலோட்டமான சான்றாக' ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஆனால், அக் கணக்குகள் சங்கத்தின் வியாபார நிகழ்ச்சியின்போது முறைப்படி வைக்கப்பட்டன என்றுகூட நிரூபிக்கப்படவேண்டும்.

(x) சங்கத்திற்குச் சேரவேண்டிய பாக்கிக்காக உறுப்பினர் களுடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழித்துக் கொள்வதற்கு உரிமை (பிரிவு 40): இந்த உரிமை பிரிவு 40-ல் விவரிக்கப்பட் டிருக்கிறது. இந்த உரிமையைக் கையாளுவதற்குப் பின்பற்ற

வேண்டிய நடைமுறை 53ஆம் விதியில் விவரிக்கப்பட்டிருக்கிறது. இந்த உரிமை, ஊழியர்கள் நாணயச் சங்கங்களுக்கு, குறிப்பாக பொருந்துவதாக இருக்கிறது. உறுப்பினர்கள் முறையான சம்பளம் அல்லது கூலி வாங்குபவர்களாகயிருக்கும் நகர வங்கிகளிலும், உணவுப் பொருள்களையும் இதர பொருள்களையும் கடனுக்காகக் கொடுத்து அந்தப் பொருள்களின் மதிப்பு விலையை உறுப்பினர்களுடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து ஒவ்வொரு மாதமும், அல்லது அதற்கும் குறைந்த காலவரைக்குள், பணியாண்மையர் வசூல் செய்யும் ஊழியர்கள் ஸ்டோர்ஸ் சங்கங்களிலும்கூட, இந்த உரிமை சில அளவுகளுக்குப் பெறுமானமுள்ளதாக இருக்கிறது. சங்கத்திற்குச் சேரவேண்டிய பாக்கிகள் உறுப்பினரிடமிருந்து சுலபமாக வசூல் செய்யப்படுவதால் இந்த உரிமை சங்கத்திற்கு நன்மை பயக்கக் கூடியதாக இருக்கிறது.

உறுப்பினர்களுக்குக்கூடத் தங்களுடைய தேவைகள் உரிய காலத்தில் பூர்த்தி செய்யப்படுவதாலும், தங்கள் சம்பளம் அல்லது கூலிக்குத் தொடர்புள்ள சில குறிப்பிட்ட தொகைகளுக்குத் தங்களுடைய கடன் வாங்குதல் கட்டுப்படுத்தப்படுகிறதாகையாலும் இந்த உரிமை நன்மை பயக்கக் கூடியதாகவே இருக்கிறது. பிரிவு 40–ன் கீழ் பணியாண்மையர் அல்லது சம்பளம் அல்லது கூலி பட்டுவாடா செய்யும் அதிகாரி சங்கத்திற்கு உறுப்பினரால் கொடுக்கப்பட வேண்டிய தொகையைச், சங்கத்தின் விண்ணப்பத்தின் பேரில், விதி 53–ன் கீழ் நிருணயிக்கப்பட்ட நமூனா எண் 5-ல், சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழித்து வசூல் செய்யக் கடமைப்பட்டவர். ஆனால், உறுப்பினர் தனக்குச் சம்பளம் அல்லது கூலியைப் பட்டுவாடா செய்யும் அதிகாரி தன்னுடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழிக்கச் சம்மதித்து சங்கத்திற்கு ஓர் ஒப்பந்தத்தை நிறைவேற்றிக் கொடுக்கவேண்டும் [பிரிவு 40 (1), (2) (அ)].

சம்பளப் பட்டுவாடா அதிகாரி, ஒரு சங்கத்தின் உறுப்பினர்களுடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழித்து தான் வசூல் செய்த தொகைகளைச் சங்கத்திற்குச் செலுத்தி வைக்கக் கடமைப்பட்டிருக்கிறார். இந்தத் தொகைகளைக் கூடுமான வரை வசூல் செய்த உடனே, எப்படியிருந்தாலும், அவர் வசூல் செய்த தேதியிலிருந்து 14 நாள்களுக்குள் சங்கத்திற்குக் கட்டிவிடவேண்டும். இந்தக் காலவரையை, எந்தச் சங்கம் அல்லது சங்க வகைகளிலும் 30 நாள்களாகப் பதிவாளர் நீட்டிக்கலாம் [விதி 53 (4)] வசூல் தொகையைக் கட்டும்போது சம்பளப் பட்டுவாடா செய்யும் அதிகாரி தொடர்பான சங்கத்திற்கு விதி 53 (5)–ன் கீழ்

நிருணயிக்கப்பட்ட எண் 6 நமூனவில் வசூலைப் பற்றிய ஒரு விவரப் பட்டியலையும், சங்கத்திற்குப் பணம் கட்டியதற்காக ஏற்பட்ட செலவின் பட்டியலையும், அனுப்ப வேண்டும். சம்பளம் அல்லது கூலி பட்டுவாடா செய்யும் வேலை கொடுப்பவர் அல்லது அதிகாரி கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சேரவேண்டிய பாக்கியைச் சம்பளம் அல்லது கூலியிலிருந்து வசூல் செய்யத் தவறினால், ரூ. 500 வரை அபராதம் விதிக்கப்படக்கூடிய குற்றம் செய்ததாகக் கருதப் படுவார் [பிரிவு 40 (6)]. எனினும், இந்த அபராதம் விதிக்கும் சரத்து அரசாங்கத்திற்கும் அல்லது எந்த ஓர் அரசாங்க அதிகாரிக்கும் பிரயோகிக்கப்படக்கூடாது (பிரிவு 40-ன் (6) ஆம் பகுதிக்கு விலக்குக்கூறு).

ஓர் உறுப்பினருடைய கடன் வாங்குதலை முறைப்படுத்தும் நோக்கத்துடனும், ஒவ்வொரு மாதமும் அவருடைய சம்பளம் வாங்கும் சமயத்தில் அவருக்குப் பணமில்லாமல் செய்யப்படு வதைத் தவிர்ப்பதற்கும் அவருடைய சம்பளம் அல்லது கூலியில் 50 சதவிகித உச்ச வரம்பு, பல்வேறு சங்கங்களிலிருந்து வந்த விண்ணப்பங்களின் பேரில், ஓர் உறுப்பினரிடமிருந்து வசூல் செய்யப்படக்கூடிய மொத்தத் தொகையாக நிருணயிக்கப் பட்டிருக்கிறது [பிரிவு 40 (2) (அ)]. ஒன்றுக்கு மேற்பட்ட சங்கங்களிலிருந்து விண்ணப்பம், சம்பளப்பட்டுவாடா அதிகாரிக்கு வந்து, மொத்தக் கோரிக்கைத் தொகை உறுப்பினருடைய சம்பளம் அல்லது கூலியின் 50 சதவிகிதத்திற்கு மேற்பட்டால், அந்த அதிகாரி உறுப்பினருடைய சம்பளம் அல்லது கூலியின் 50 சதவிகிதத்திற்கு மட்டும் தான் வசூல் செய்து அவ்வாறு வசூல் செய்யப்பட்ட தொகையை விகிதாச்சாரமாக தொடர்பான சங்கங்களுக்குச் செலுத்த வேண்டும் [பிரிவு 40 (2) (அ)]. எனினும், வசூல் செய்யவேண்டிய 50 சதவிகித உச்சவரம்பி லிருந்து, விதி 53 (9)-ல் நிருணயிக்கப்பட்ட சில சங்க வகை களை, விதிவிலக்கு செய்யப்பட்டிருக்கிறது. அதாவது, நாணயச் சங்கங்களிலும், நுகர்வோர் சங்கங்களிலும், வீட்டு வசதிச் சங்கங்களிலும் மொத்தச் சம்பளம் அல்லது கூலி முழுவதையும் வசூல் செய்வதற்கு இந்த விதிவிலக்கு அளிக்கப் பட்டிருக்கிறது.

ஊழியர்கள் நாணயச் சங்கத்தில் கொடுக்கப்படும் சம்பளக் கடன்களை (Salary Loans) தாமதமில்லாமல் வசூல் செய்யப்படு வதை உறுதி செய்வதற்காக இந்த விதிவிலக்கு அளிக்கப்பட் டிருக்கிறது. இந்தச் சம்பளக் கடன்கள் ஒரு மாதத்திற்கு வாங்க வேண்டிய சம்பளத்தின் ஆதாரத்தின்பேரில் கொடுக்கப்பட்டு,

மொத்த சம்பளம் அல்லது கூலியின் 50 சதவிகிதத்திற்கு மேற்படாமல் வசூலிக்கப்பட வேண்டும் என்று விதிக்கப்பட்டிருந்தாலும்கூட முழுமையாகச் சம்பளம் வசூல் செய்யப்படுகிறது. அதேமாதிரியாக ஆலை ஊழியர்கள், ஆலைத் தொழிலாளிகள் ஸ்டோர்ஸ் சங்கங்கள் கோவையிலும், மதுரையிலும் இயங்குகிறபடி ஸ்டோர்ஸ் கடன் விற்பனையின் கீழ் வரவேண்டிய தொகையும் அத்தகைய இதர பாக்கிகளும் சம்பள முழுமையும் வசூலிக்கப்படலாம் [பிரிவு 40 (2) (ஆ) விலக்குக்கூறு], பிரிவு 40 (7)-ன் அமலிலிருந்து இரயில்வே நிறுவன சிப்பந்திகள் விலக்களிக்கப்பட்டிருக்கின்றனர். சம்பளம் அல்லது கூலி பட்டுவாடா செய்யும் பணியாண்மையினர் அல்லது அதிகாரி விதி 57(8)-ல் நிருணயிக்கப்பட்ட பதிவேட்டை 7ஆம் எண் நமூனாவில் வைத்திருக்க வேண்டும் [பிரிவு 40 (3)]. தற்போது அமலிலிருக்கும் வேறுவிதமாக எந்தச் சட்டமிருந்தாலும் இந்தப் பிரிவின் சரத்துகள் கையாளப்பட வேண்டும் [பிரிவு 40 (5)]. சம்பளம் அல்லது கூலியிலிருந்து பிரிவு 40-ன் கீழ் சங்கத்திற்குப் பாக்கிகளைக் கழித்து வசூலிப்பதில் கடன் வாங்கும் உறுப்பினரும் சங்கமும், சம்பளம் அல்லது கூலி பட்டுவாடா செய்யும் அதிகாரியும் பின்பற்ற வேண்டிய நடைமுறையை விதி 53 விளக்கமாகக் கூறுகிறது.

உண்மையாகவே இது உறுப்பினர்களுக்குச் சங்கம் தொடர்ந்ததாகவும் பயன் அளிப்பதாகவும் உள்ள சேவையைச் செய்வதை உறுதிப்படுத்த உதவி செய்யும் ஒரு முக்கியச் சிறப்புரிமை ஆகும். சந்தானம் குழுவினர் இந்தப் பிரச்சினையை விவரமாக ஆராய்ந்து சில பரிந்துரைகளைச் செய்திருக்கின்றனர். முதலாவதாக, சங்கத்திற்குச் சேர வேண்டிய பாக்கியை ஓர் உறுப்பினருடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து மட்டுமன்றி, உறுப்பினர் வேலையிலிருந்து ஓய்வுபெறும்போதும் அல்லது அவர் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கும் காலம் முடிவதற்கு முன்பு அவருடைய வேலை முடிக்கப்பெற்றாலும், அவர் கொடுக்க வேண்டிய கடன் பாக்கி நிலுவையை அவருக்குக் கொடுக்கப்பட வேண்டிய பணிக் கொடையிலிருந்தும்கூடக் (Gratuity) கழித்து வசூல் செய்யப்படவேண்டும். பொதுவாக பணிக்கொடைக்குரிமையுள்ள ஊழியர் ஒருவரின் பணிக் கொடையிலிருந்து கடன் பாக்கியைக் கழித்து வசூலிப்பதற்கு ஏற்பாடு செய்ய, பிரிவு 40 தக்கவாறு திருத்தப்படவேண்டும் என்பது அந்தக் குழுவினரின் பரிந்துரையாகும். அப்படிக் கழித்து வசூல் செய்வதைச், சங்கம் கடன் அனுமதிக்கும் சமயத்தில், உறுப்பினருடன் செய்து கொள்ளும் ஒப்பந்தத்தில், குறிப்பாக, ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

சந்தானம் குழுவினருடைய இரண்டாவது பரிந்துரை, இதர மாநிலங்களில் பதிவு செய்யப்பட்ட ஊழியர்கள் சங்கங்களில் கூட உறுப்பினர்களுடைய பாக்கியை வசூல் செய்வது சாத்திய மாக இருக்கவேண்டும் என்பது. மாநிலத்தில், வேறு எல்லையில் வசிக்கும் அல்லது மாற்றப்பட்டிருக்கும் உறுப்பினர்களைப் பொருத்தவரை பிரிவு 40-க்கு அதிகாரமில்லை. ஆகையால், சந்தானம் குழுவினர், எந்த ஒரு மாநிலத்தில் பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் உறுப்பினர்களிடமிருந்து பாக்கியை வசூல் செய்வதற் கான ஒரு சரத்து ஒவ்வொரு மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத் திலுமிருக்கவேண்டியது தேவையென்று கருதினர். அத்தகைய சரத்தை ஏற்படுத்தவேண்டுமென்று, எல்லா மாநிலங்களுக்கும் இந்திய அரசாங்கம் யோசனை கூறியுள்ளதாகவும் தெரிகிறது. சென்னை சட்டத்தின் பிரிவு 40-ஐத் திருத்தம் செய்து, இந்தச் சரத்து ஏற்படுத்தப்பட வேண்டுமென்று சந்தானம் குழுவினர் பரிந்துரை செய்திருக்கின்றனர். அந்தக் குழுவினர் செய்திருக்கும் மூன்றாவது பரிந்துரை, அரசாங்க அதிகாரிகள் உறுப்பினருடைய கடன் பாக்கிகளை வசூல் செய்யத் தவறினால், அவர்களை அதற்கு உண்டான தண்டனையிலிருந்து விலக்கும் பிரிவு 40 (6)-ன் விலக்குக் குக்கூறு எடுக்கப்படவேண்டும் என்பது. கடன் பாக்கியை வசூல் செய்யத் தவறியதால், சில சூழ்நிலைகளில் சில சங்கங்களில் தவணை தவறிய பாக்கிகள் அதிகமாகக் குவிய நேரிட்டதால், அப்படி வசூல் செய்யத் தவறிய அரசாங்க அதிகாரிகளை அதற்காக நிருணயிக்கப்பட்ட தண்டனைகளிலிருந்து விலக்கத் தேவையில்லை என்று சந்தானம் குழுவினர் கருதினர்.

(xi) ஒரு சங்கத்தின் பங்குகளையும் கடனீட்டுப் பத்திரங்களையும் பற்றிய பதிவேடுகளைக் கட்டாயப் பதிவு செய்வதிலிருந்து விலக்கு (பிரிவு 41); இந்த விதிவிலக்கு 1912ஆம் வருடத்தியச் சட்டத்தில் மட்டும் தான் அளிக்கப்பட்டிருந்தது. அதற்குப் பிறகு மாநிலச் சட்டங்களில் இந்தச் சலுகை இடம் பெற்றது. 1908ஆம் வருடத்திய இந்தியப் பதிவுச் சட்டத்தின், (Indian Registration Act) 17 ஆம் பிரிவு 1-ன் உட்பிரிவு பகுதிகள் (அ) & (இ)-ன்படி, இந்தப் பத்திரங்கள் கட்டாயமாகப் பதிவு செய்யப்படவேண்டும். ஆனால், கூட்டுறவுச் சட்டத்தின் 41ஆம் பிரிவு, பதிவு செய்யப் பட்ட கூட்டுறவுச் சங்கங்களில் பங்குகளையும் கடனீட்டுப் பத்திரங்களையும் குறித்த பத்திரங்களைக் கட்டாயமாகப் பதிவு செய்யப்படுவதிலிருந்து விலக்க ஏற்பாடு செய்திருக்கிறது. பத்திரம் என்பது சில வழக்கத்திற்கிசைந்த நடவடிக்கைகளுக்குத் தெளிவாய்ச் சொல்லப்பட்ட ஓர் ஆவணம் ஆகும்.

ஒரு கடனீட்டுப்பத்திரம் என்பது ஒரு கடனை எழுத்து மூலம் ஒப்புக்கொள்ளும் ஒரு பத்திரம். அது கடனுகைப் பணம் செலுத்திய தற்கு ஓர் ஆவணம். அதாவது அந்தப் பத்திரம், ஒரு முதலீட்டை விற்பதற்காகவும் வாங்குவதற்காகவும் வசதியான ஒரு வடிவில் வெளியிடப்பட்டதும், திருப்பிச் செலுத்துவதற்கு ஒரு கடமையை அடங்கியதுமானது, அது அசையாச் சொத்துகளின் மீது ஓர் ஈடுகாட்டை ஏற்படுத்தாத ஒரு சாதாரண படிவத்திலும் இருக்க லாம்; அல்லது அது பத்திரத்தை வெளியிடும் கடனாளியின் எல்லா அல்லது சில சொத்துகளின்மீது நிலையான பற்றுப்பொறுப்பு (Fixed Charge) அல்லது இழைவுறு பற்றுப் பொறுப்பு (Floating Charge) அடங்கியிருக்கும் ஓர் அடைமானக் கடனீட்டுப் பத்திர மாகவும் இருக்கலாம். மேலும், ஒரு கடனீட்டுப் பத்திரம் இரண்டுவகைகளாக இருக்கலாம். அது அசையாச்சொத்தின் மீது அல்லது அசையும் சொத்தின்மீது ஓர் உரிமையை ஏற்படுத்தலாம் அல்லது அது அசையாச் சொத்துக்கு அல்லது அசையாச் சொத்தில் யாதோர் உரிமையும் ஏற்படுத்தாவிட்டாலும் அந்தப் பத்திரத்தை வைத்திருப்பவர், அந்தக் கடன் தொகையைக் கடன் ஈட்டுப் பத்திரத்தையுடையவர்களுடைய பொறுப்பாளருக்குச் (Trustee of the Debenture-holders) செலுத்தச் சொல்ல உரிமை யளிப்பதாகவும் இருக்கலாம். அத்தகைய கடன் பத்திரமுடையவர் களுடைய பொறுப்பாளருக்குக் கடனளி அடைமானம் மூலம் அசையாச் சொத்தில் தனக்கிருக்கும் அக்கறையை மாற்றியிருக்க லாம். பின்னல் சொல்லப்பட்ட கடன்பத்திர வகை பதிவு செய்யப் படவேண்டியதிலிருந்து விலக்கப்பட்டிருக்கிறது.

அசையாச் சொத்தில் அல்லது அசையாச் சொத்துக்கு யாதோர் உரிமையையும் ஏற்படுத்தாத ஒரு கடன் பத்திரமும், பதிவு செய்யப்பட்ட பத்திரத்தின் மூலம் ஏற்படுத்தப்பட்ட ஈட்டுக்குக் கடன் பத்திரத்தையுடையவருக்கு உரிமையளிக்கும் ஒரு பத்திரமும், பதிவு செய்யப்படுவதிலிருந்து விலக்கப்பட்டிருக் கின்றன. ஓர் ஈட்டை ஒரு பதிவு செய்யப்பட்ட பத்திரத்தின் மூலம் ஏற்படுத்துவதென்றல், சங்கம், தன்னுடைய அசையாச் சொத்துரிமையையும் அல்லது பாகத்தையும் அல்லது சட்டத்தில் தனக்கிருக்கும் யாதோர் அக்கறையையும், கடன் பத்திரங்களை யுடையவர்களுடைய நன்மைக்காகக் கடன் பத்திரங்களை யுடையவர்களுடைய பொறுப்பாளருக்கு அடைமானம் வைக் கலாம்; அல்லது சொத்துரிமையை மாற்றலாம்; அல்லது வேறு விதமாக மாற்றுதல் செய்யலாம். மேலும், கடன் பத்திரங்களின் மீது எழுதப்படும் புறக்குறிப்பும், (Endosement) அல்லது கடன் பத்திரங்களை மாற்றுதல் செய்வதும், பதிவு செய்யப்படுவதிலிருந்து

விலக்கப்பட்டிருக்கிறது [பிரிவு 41 (3)]. ஆகையால், பதிவு செய்யப்படுவதிலிருந்து விலக்கு சங்கத்தால் உறுப்பினர்களுக்கு வழங்கப்படும் பங்குச் சான்றிதழ்களுக்கும், சான்றிதழ்களின் புறக்குறிப்புகள் அல்லது மாற்றுதல்களுக்கும் சங்கத்தால் வழங்கப் பட்ட கடன் பத்திரங்களுக்கும் அத்தகைய கடன் பத்திரங் களின் மீது செய்யப்பட்ட புறக்குறிப்புகளுக்கும் பொருந்தும்.

(xii) ஒரு சங்கம் சென்னை வருவாய்த்துறை வசூல் சட்டத்தின்கீழ் (1864) (Madras Revenue Recovery Act) நடத்தப்பட்ட ஒரு விற்பனை யில் அசையாச் சொத்தை வாங்கினுல், அதற்கு எதிரீடு செய்வதற்கு உரிமை (பிரிவு 42): இந்த சரத்து 1933ஆம்ஆண்டின் சென்னைசட்டம் (viii)-ல், ஏற்படுத்தப்பட்டது. சட்டத்தின் சில சரத்துகளின் கீழ், நிலவருவாய் பாக்கியாக, சங்கத்தின் உறுப்பினர்களிடமிருந்து வசூல் செய்ய வேண்டியிருக்கிறது; உதாரணமாக, பிரிவு 71 (2)-ன் கீழ் விதிக்கப்பட்ட தண்டம் (surcharge). அத்தகைய சூழ்நிலைகளில், ஒரு சங்கத்திற்குப் பணத்தொகை கொடுக்கப்பட வேண்டியிருக்கும்போதும், உறுப்பினர்களுடைய சொத்து சென்னை வருவாய்த்துறை வசூல் சட்டத்தின்கீழ் விற்பனைக்குக் கொண்டுவரப்படும்போதும், சங்கமே அந்தச் சொத்தை வாங்கலாம். ஆனால், சாதாரணமாக எதிர்பார்க்கிறபடி, விற்பனைத் தேதியிலிருந்து 30 நாள்களுக்குள் விற்பனைத் தொகையைச் சங்கம் கட்ட வேண்டியதில்லை. சங்கம் தான் கட்ட வேண்டிய விற்பனைத் தொகையிலிருந்து தனக்குச் சேர வேண்டிய பாக்கித் தொகையை எதிரீடு செய்துகொள்வதற்கு அனுமதிக்கப்படும். தனக்குச் சேர வேண்டிய பாக்கித் தொகையைவிட அதிகமான விலைக்கு அந்தச் சொத்தைச் சங்கம் வாங்கியிருந்தால், தனக்குச் சேரவேண்டிய பாக்கித் தொகைக்கு மேற்பட்ட தொகையை, விற்பனைத் தேதியிலிருந்து 30 நாள் களுக்குள், வருவாய்த்துறை தொடர்பான அதிகாரிக்குச் சங்கம் செலுத்திவிட வேண்டும்.

ஏலத்தில் சொத்துகளை வாங்குவதற்கு வேண்டிய பணத்தைக் குறிப்பாக, இந்தத் தொகை அதிகமாயிருக்கும்போது, சேகரிக்கும் தொல்லையிலிருந்து சங்கத்தைக் காப்பாற்றும் நோக்கத்துடன் இச் சலுகை சங்கத்திற்கு நீட்டிக்கப்பட்டிருக்கின்றது என்பது தெளிவு. மேலும், சொத்தை ஏலத்தில் சங்கம் கேட்க வில்லையாயின், அந்தக் கிராமத்தில் அல்லது நகரத்தில் வேறு எவரும் ஒரு நியாயமான தொகையைக் கேட்பதற்கு முன் வராமலிருக்கும் சூழ்நிலை நேரிடலாம். ஏலம் கேட்பவர்கள் ஒன்றுசேர்ந்துகொண்டு ஏலம் கேட்காமலுமிருக்கலாம்.

(xiii) 1899 ஆம் வருடத்திய மத்தியச் சட்டத்தின்கீழ் செலுத்தப் படவேண்டிய முத்திரை வரியிலிருந்தும், (Stamp Duty) பதிவுக் கட்டணங்களிலிருந்தும், (Registration fees) விலக்கு: பிரிவு 43-ன் கீழ் முத்திரை வரியையும் பதிவுக் கட்டணங்களையும், கூட்டுறவுச் சங்கங்களைக் குறித்தவரைக்கும், நீக்கிவிடச் செய்ய அரசாங்கத் திற்கு அதிகாரமுண்டு.

முத்திரை வரியிலிருந்து விலக்கு: இந்த அனுமதிக்கும் சரத்தின் கீழ், எல்லாச் சங்கங்களிலும், கீழ்க்கண்ட பத்திரங்களைக் குறித்து, தற்போது அமலிலிருக்கும் எந்தச் சட்டத்தின் கீழும், விதிக்கப்படவேண்டிய முத்திரை வரியை அரசாங்கம் நீக்கி யுள்ளது.

(அ) சங்கத்தின் வியாபாரத் தொடர்பாக, சங்கத்தால் அல்லது சங்கத்தின் சார்பாக அல்லது சங்கத்திற்குச் சாதகமாக நிறைவேற்றப்பட்ட பத்திரங்களும் அல்லது அத்தகைய சங்கத்தின் வியாபாரத் தொடர்பாக, அச் சங்கத்தின் அலுவலர் அல்லது உறுப்பினரால் நிறைவேற்றப்பட்ட பத்திரங்களும். ஆனால், விற்பனைப் பத்திரங்களைப் பொருத்தவரை, அப் பத்திரங்களை நிறைவேற்றுவதற்கு இரண்டு வருட காலத்திற்கு முன்னர் சொத்தை விற்றவர் அத்தகைய சங்கத்தில் தொடர்ந்து உறுப்பினராக இருந்திருக்க வேண்டும்.

(ஆ) பதிவாளருடைய முடிவுகள், தீர்ப்புகள், உத்தரவுகள் அல்லது சட்டத்தின் கீழ் இசைவுத் தீர்ப்பாளருடைய உத்தரவுகள்.

(இ) அசையாச் சொத்து விற்பனையைக் குறித்து, பதிவு பெருத ஊழியர்களையும் அரிசன மக்களையும் முழுமையாக உறுப் பினராகக் கொண்ட வீட்டு வசதிச் சங்கங்களுக்குச் சாதகமாக நிறைவேற்றப்பட்ட பத்திரங்கள்.

(ஈ) சங்கத்தின் சிப்பந்திகளால் நிறைவேற்றப்பட்ட பிணைப் பத்திரங்கள் (Security Bonds).

பதிவுக் கட்டணங்களிலிருந்து விலக்கு: பதிவுச் சட்டத்தின் கீழ் செலுத்தப்பட வேண்டிய கட்டணங்களைச் செலுத்துவதிலிருந்து விலக்கு:

தற்போது அமலிலிருக்கும் பதிவுச் சட்டத்தின் கீழ், ஒரு சங்கம் அல்லது சங்கத்தின் சார்பாகச் செலுத்தபடவேண்டிய பதிவுக் கட்டணங்களில் ஒரு பாதி தள்ளுபடி செய்யப்பட்டிருக் கிறது. அல்லது ரூபாய் ஐயாயிரத்திற்கும் அதற்கும் கீழ்ப்பட்ட மதிப்புக்கு ஒரு சங்கத்தால் அல்லது சங்கத்திற்குச் சார்பாக

அல்லது அத்தகைய சங்கத்தின் அலுவலரால் அல்லது உறுப்பினரால் சங்கத்தின் வியாபாரத் தொடர்பாடு நிறைவேற்றப் பட்ட எந்த ஒரு பத்திரத்திற்கும் செலுத்தப்படவேண்டிய பதிவுக் கட்டணங்களில் ஒரு பாதி தள்ளுபடி செய்யப்பட்டிருக்கிறது. ரூபாய் ஐயாயிரத்திற்கு மேற்பட்ட மதிப்புள்ள பத்திரங்களைக் குறித்தும் ரூபாய் ஐயாயிரத்திற்கு மேற்பட்ட கடன்கள் தொடர்பாக வில்லங்கச் சான்றிதழ் விண்ணப்பங்களைக் குறித்தும் முழு விகிதத்தில் கட்டணங்கள் விதிக்கப்படுகின்றன. மாநில அரசு எந்த ஒரு சங்கத்திற்காகவும் அத்தகைய விதி விலக்கைத் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். அட்டவணை வகுப்பினரையும் அரிசன வகுப்பினரையும் கொண்ட ஒரு சங்கத்தின் உறுப்பினர் களால் வாங்கப்படும் கடன்களுக்காகச் சங்கங்களுக்கு நிறைவேற்றப்படும் பத்திரங்களுக்கும், வில்லங்கச் சான்றிதழ் விண்ணப்பங்களுக்கும், செலுத்த வேண்டிய பதிவுக் கட்டணங்கள் தள்ளுபடி செய்யப்பட்டிருக்கின்றன.

(Xiv) வருமான வரியிலிருந்து விலக்கு : ஒரு கூட்டுறவுச் சங்கம் தான் சம்பாதித்த இலாபங்களை அல்லது இலாப ஈவுகளைக் குறித்தும், அல்லது இலாபத்தின் காரணமாக உறுப்பினர்களால் வாங்கப்பட்ட இதர இலாபப் பட்டுவாடாக்களைக் குறித்தும், செலுத்தப்படவேண்டிய வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கப் பட்டிருக்கிறது. இந்திய அரசாங்கம் கீழ்க்கண்ட வருமானங்களை வருமான வரியின் சட்டத்தின் கீழ் செலுத்தப்படவேண்டிய வருமான வரியிலிருந்து விலக்கு அளித்திருக்கிறது.

(அ) சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட எந்த ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் இலாபங்கள், ஒரு சங்கத்தின் முழு வியாபார இலாபங்கள், உறுப்பினர்களிடமிருந்து வழி வந்த இலாபங்களுக்கும் உறுப்பினர் அல்லாதவர்களிடமிருந்து வழிவந்த இலாபங்களுக்கும் வேறுபாடின்றி, வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கப்படும்.

(ஆ) அத்தகைய இலாபங்களிலிருந்து சங்கத்தின் உறுப் பினர்கள் பெறுகின்ற இலாப ஈவும் அல்லது இதர தொகைகளும் வருமானவரி விலக்கு அளிக்கப்படும் இந்தச் செயலுக்காக, ஒரு சங்கத்தின் இலாபங்களில் கீழ்க்கண்ட ஆதாரங்களிலிருந்து கிடைக்கும் வருமானம் அல்லது இலாபம் அல்லது ஆதாயங்கள் அடங்கியிருக்கக்கூடாது.

(1) வருமான வரியின் 8ஆம் பிரிவில் குறிக்கப்பட்டிருக்கும் தன்மையுள்ள பிணையங்களிலும் (Security) அல்லது வருமான வரிச் சட்டத்தின் 9ஆம் பிரிவில் குறிக்கப்பட்டிருக்கும் தன்மை யுள்ள சொத்துகளிலும் செய்யப்படும் முதலீடுகள்.

(2) இலாப ஈவுகள்.

(3) வருமானவரிச் சட்டத்தின் பிரிவு 12-ல் குறிக்கப்பட்டிருக்கிற இதர ஆதாரங்கள்.

கூட்டுறவுச் சட்டக் குழுவினர் (1957), வருமானவரி, முத்திரை வரி, பதிவுக் கட்டணங்கள், இவைகளன்றியும் இதர வரிகளிலிருந்தும் அளிக்கப்படும் விலக்கின் வாய்ப்பு தேவையாக இருக்க வேண்டுமென்றும் அத்தகைய விலக்கு, மாநில அரசாங்கத்தின் அபிப்பிராயத்தில் கூட்டுறவுத் தொழிற்றுணிவை (Enterprise) ஊக்குவிப்பதற்குப் பயன்படுமென்றால், அத்தகையவரி விலக்கை மாநில அரசாங்கம் வழங்கலாம் என்றும் கருத்துதெரிவித்தனர். ஆகையால்,அவர்கள் தயாரித்த மாதிரி மசோதாவின் 35ஆம் பகுதியில், எந்தச் சங்க வகைக்கும் விவசாய வருமான வரி, சரக்குகள் விற்பனை அல்லது கொள்முதல் மீது வரி, தொழில் வரி, வியாபார வரி, உத்தியோக வரி, இந்த வரிகளிலிருந்து அரசாங்கம் விலக்கு அளிக்கலாம் என்று யோசனை கூறியிருக்கிறார்கள். உண்மையாகவே, சந்தானம் குழுவினரிடத்தில், விற்பனை வரி விதிப்பது விற்பனைச் சங்கங்களின் வளர்ச்சியைப் பாதிக்கிறது என்று முறையீடு செய்யப்பட்டது. இந்தப் பிரச்சினை அரசாங்கத்தினுடைய கவனத்திற்குப் பலமுறை கொண்டுபோகப்பட்டது. சந்தானம் குழுவினர் இந்தப் பிரச்சினையை ஆலோசித்து, தனிப்பட்ட வியாபாரிகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தொல்லை கொடுக்கும் முட்டுக்கட்டைகளை அகற்றும் நோக்கத்துடன், விற்பனை வரியிலிருந்து விற்பனைச் சங்கங்களுக்கு விலக்கு அளிக்கும் பிரச்சினை ஒரு நிபுணரால் ஆலோசிக்கப்பட வேண்டும் என்று பரிந்துரை செய்தனர். இடைக்காலத்தில் ஒரே சரக்கு பல கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் சென்று விற்கப்பட்டால், ஏதாவது ஒரு கட்டத்தில் ஒரு முனை வரி விதிக்கப்பட வேண்டுமென்றும் அவர்கள்பரிந்துரை செய்தார்கள். இச் செயலுக்காகத் தொடர்புடைய எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களையும் ஒரே நிறுவனத்தின் கிளைகளாகப் பாவிக்க வேண்டும். தகராறுகளைத் தீர்த்து வைத்தல் தொடர்பான சிறப்புரிமைகளும், கூட்டுறவுத் துறையின்மூலம் கடன்களை வசூலித்தல் தொடர்பான சிறப்புரிமைகளும், பொருத்தமான அத்தியாயங்களில் விளக்கப்பட்டிருக்கின்றன.

மேற்சொன்ன சட்டப்பூர்வமான சிறப்புரிமைகள் மட்டுமன்றி, சங்கங்களுக்கு இதர சில பொதுச் சலுகைகளையும் அரசாங்கம் வழங்கியிருக்கின்றது. அவைகளைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் விளக்குவோம்.

# 10. கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசாங்க உதவி

## (State Aid to Co-operative Societies)

(பிரிவுகள் 44–57)

### 1. கூட்டுறவுச் சங்கங்களில் அரசாங்கக் கூட்டாளித்துவமும் பங்கு கொள்ளுதலும் (State Partnership and Participation)

சங்கங்களின் நிருவாகத்தைப் பற்றி முந்தைய அத்தியாயத்தில் விளக்கியபடி, சில சூழ்நிலைகளில் அரசாங்கம் அல்லது நிதி வங்கியின் பிரதிநிதிகள் பிரிவு 27-ல் அடங்கிய சரத்துகளின் காரணத்தால் சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் இடம் பெறுகிறார்கள். அரசாங்கம் சங்கத்தின் நிருவாகத்தில் பங்கு கொள்வது மட்டுமல்லாமல் சங்கத்தின் வியாபாரத்திலும் ஒரு கூட்டாளியாகக்கூட இருக்க வேண்டும். அத்தகைய சங்கங்கள் தலைமைச் சங்கமாகவும், மத்தியச் சங்கமாகவும் அல்லது பிரதமச் சங்கமாகவுமிருக்கலாம். கூட்டுறவுச் சங்கங்களில் அரசாங்கக் கூட்டாளித்துவம், அல்லது அரசாங்கம் பங்கு கொள்ளுதல் என்ற கருத்து (concept), 1954ஆம் ஆண்டில் தன் அறிக்கையை வெளியிட்ட அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் பரிந்துரைகளின் விளைவாக ஏற்பட்ட ஒன்று.

கூட்டுறவுக் கடன் நிறுவனங்களின் அமைப்பைப் பலப்படுத்துவதற்காக எடுக்கப்படவேண்டிய நடவடிக்கைகளில் ஒரு பகுதியாக, கூட்டுறவுச் சங்கங்கள் சரியான முறையில் இயங்குவதற்கு வேண்டிய நிலைமைகளை ஏற்படுத்த வேண்டும் என்றும், இச்செயலுக்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் உதவி அளிக்கப்பட வேண்டும் என்றும், நாளடைவில் படிப்படியாகச் சங்கங்கள் அத்தகைய உதவியைக் குறைத்துக் கொள்ளவோ அல்லது விட்டு விடவோ வேண்டும் என்றும், அந்தக் குழுவினர் கருத்து கொண்டனர். இந்த உதவி, தேவைப்பட்ட அளவுக்கு இருக்க

வேண்டுமானாலும், கூட்டுறவு நிறுவனங்கள் ஊன்றிய நலமிகளின் எதிர்ப்பைச் சமாளிப்பதற்கு வேண்டிய ஒரு வகையாகவும் இருக்க வேண்டுமானாலும், அரசாங்கத்திடமிருந்து மட்டும்தான் வர முடியும். இந்த உதவியின் முறை வெறும் நிருவாகத் தொடர்புடையதாக மட்டும் இருக்கக் கூடாது. அந்தக் குழுவினர் கருத்துப்படி, அரசாங்க உதவி, கடந்த காலத்தில் 'அதிகப்படியான நிருவாகமும் குறைவான நிதி வழங்குதலும்' (Over Administration and Under-Financing) என்ற படிவத்திலிருந்தது; அரசாங்க உதவியும் அறிவுரையும் மட்டும் போதாது. அந்தக் குழுவினர் அபிப்பிராயப்படி 'எது தேவைப்படுகிறது என்றால் கூட்டுறவுச் சங்கத்தில் அரசாங்கக் கூட்டாளித்துவம். இந்தக் கூட்டாளித்துவத்தின் விளைவாகச் சங்கங்களின் நிருவாகத்திலும் தொழிலிலும் அரசாங்கம் பங்கு கொள்ளுதலும் ஏற்படும்'.

2. கூட்டுறவுச் சங்கங்களில் அரசாங்கக் கூட்டாளித்துவத்தின் இன்றியமையாமை (Need for State Partnership in Co-op: Societies)

அரசாங்கம் கூட்டுறவு நிறுவனங்களை வளர்ப்பதிலும் ஊக்குவிப்பதிலும் ஒரு சுறுசுறுப்பான அக்கறையெடுக்க வேண்டுமென்பது, கிராமக் கடன் விசாரணைக் குழுவின் முக்கியப் பரிந்துரையாகும். அந்தக் குழுவின் அறிக்கையின்படி 'கிராம நாணயச் சங்கத்தின் பிரச்சினை கிராமக் கடனைச் சீரமைப்பது அல்ல; சமுதாயத்தில் வலிவற்ற மக்களுடைய நன்மைக்காகப் பலனளிக்கும் வகையில் அது செயல்படுவதற்கான புதிய நிலைமைகளை ஏற்படுத்துவதுதான். இச் சங்கங்களிலிருப்பதனால் அமுக்கப்பட்டு வலிவற்றவர்களாக்கப்பட்ட, நபர்களாலேயே இப்பொழுது நடைமுறையிலிருக்கும் நிலைமையை மாற்றிவிட முடியாது. இந்த நிலைமையை மாற்றுதல் செய்யும் சக்திகள், குறைந்தது, மாற்றப்படவிருப்பவைகளைப் போலவாவது வல்லமையுள்ளனவாக இருக்கவேண்டும். அத்தகைய சக்திகளைக் கூட்டுறவு நிறுவனங்கள் தனியாக உற்பத்தி செய்யமுடியாது; அல்லது பிறப்பிக்க முடியாது, ஆனால், கூட்டுறவு நிறுவனங்கள் அரசாங்கத்துடன் சேர்ந்து பிறப்பிக்கமுடியும்'. கூட்டுறவுச் சட்டக் குழுவினரால் தயாரிக்கப்பட்ட மாதிரி மசோதா, மாநிலத்தில் கூட்டுறவு இயக்கத்தை ஊக்குவிப்பதும் வளர்ப்பதும் மாநில அரசாங்கத்தின் கடமையாக இருக்கவேண்டும் என்று கூறுகிறது.

அரசாங்கம் கூட்டுறவு இயக்கத்தை வளர்ப்பதற்கும் ஊக்குவிப்பதற்கும் மிகவும் வலிமை வாய்ந்த ஒரு செய்முறை (method) அரசாங்கத்தின் கூட்டாளித்துவம்தான் என்பதை கிராமக் கடன் விசாரணைக் குழு அறிக்கை எடுத்துக்காட்டியுள்ளது. அதாவது

அரசாங்கம், கூட்டுறவு இயக்கத்தைப் பேணி அதன் வளர்ச்சிக்கு உதவி செய்ய வேண்டியதோடு, அது கூட்டுறவு நிறுவனங்களில் எல்லா மட்டத்திலும் பங்கு எடுத்து சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் தன்னுடைய பிரதிநிதிகளைக்கூட அமர்த்தவேண்டும். அப்படிச் செய்வதால் சங்கத்தின் நிருவாகத்தில் அரசாங்கத்திற்குக்கூட ஒரு பங்கிருக்கவேண்டும் என்பது. எனவே, அரசாங்கம் கூட்டுறவு நிறுவனங்களில் அவற்றின் தொழில் நிதியில் பங்கு ஏற்றுக்கொண்டும் அவற்றினுடைய அலுவல் நிருவாகத்திலும் பங்கு கொண்டுமிருக்கும். அரசாங்கம் ஒரு கூட்டாளியாகி விடுவது, தொடர்புடைய நிறுவனங்களின் நிதி வலிமையைச் சீர்படுத்துவதற்கு மட்டுமன்றி, சங்கங்களுடைய உயர்வையும் கௌரவத்தையும் உயர்த்திப் பொதுமக்களிடத்தில் அதிக அளவு நம்பிக்கையுண்டுபண்ணுவதற்குக்கூடத் தான் என்று எதிர்பார்க்கப்படுகிறது. கூட்டுறவுச் சங்கத்துடன் அவ்வாறு அரசாங்கம் கூட்டாளியாக இருப்பது முந்தைய அத்தியாயத்தில் எடுத்துக் காட்டியபடிக் கூட்டுறவுக் கொள்கைகளுக்கோ, அல்லது நிறுவனங்களின் கூட்டுறவுத் தன்மைக்கோ அல்லது அவைகளின் சுயஆட்சி இயல்புக்கோ முரண்பட்டதல்ல. ஏனென்றால், அரசாங்கம் இணைப்பிலிருந்தும்கூடச் சங்கங்கள் சுதந்தரமான நிறுவனங்களாக இருந்து தங்களுடைய சொந்த முயற்சித் திறமையால் தங்களுடைய அலுவல்களை நிருவாகம் செய்யமுடியும்.

சங்கங்களின் நிருவாகக் குழுவில் அரசாங்கத்தின் பிரதிநிதிகள் சிறுபான்மையினரே; அதாவது குழுவின் எண்ணிக்கையில் 1/3–க்கு மேற்படாதவர்கள் அல்லது மூவர் இதில் எது குறைந்ததோ அந்த எண்ணிக்கையுள்ளவர்களாக இருப்பார்கள். இந்த நிறுவனங்களில் ஏராளமான அரசாங்க நிதியும் பொது மக்களின் நிதியும் சேர்ந்திருப்பதால் அரசாங்கப் பிரதிநிதிகள், பாதுகாவலர்களாக இருப்பார்கள். சங்கங்களுடைய அன்றாடச் செயல்பாட்டில் அல்லது சங்கத்தின் உள் விவகாரங்களில் தலையிடுவதற்கு அரசாங்கத்திற்கோ அல்லது அதன் பிரதிநிதிகளுக்கோ உரிமை கிடையாது. அத்தகைய பிரதிநிதிகள் சங்க நிருவாகக் குழுவிலிருப்பது. அறிவுரை கூறுவதற்கும், தேவைப்பட்டால் முக்கிய விவகாரங்களில் கொள்கைகளை உருவாக்கிச் சங்கங்கள் தங்கள் தொழிலில் சரியான கொள்கைகளை மீறுமலிருப்பதைப் பார்த்துக் கொள்வதற்கும்தான்.

கிராமக் கடன் விசாரணைக் குழு அறிக்கையின் முக்கிய பரிந்துரைகள் எல்லா மாநில அரசாங்கங்களாலும் ஏற்றுக்

கொள்ளப்பட்டன. மாநில அரசாங்கங்கள் பல்வேறு வடிவங்களில் இந்தப் பரிந்துரைகளை அமல்படுத்தியிருக்கின்றன.

3. கூட்டுறவுச் சங்கங்களில் அரசாங்கக் கூட்டாளித்துவத்தின் செய்முறை (Method of State Partnership)

அரசாங்கக் கூட்டாளித்துவம் எந்த முறையில் சங்கங்கள் பெறவேண்டுமென்பதைப்பற்றிக் கூறும் போது, கிராமக் கடன் விசாரணைக் குழுவினர், அது நேர்முகமாகவும் அல்லது மறைமுகமாகவும் இருக்கலாம் என்று பரிந்துரை செய்தனர். நேர்முகமாக இருந்தால், அரசாங்கம் தன் சொந்தப் பெயரில் சங்கங்களில் நேர்முகமாகப் பங்குகள் எடுக்கும். மறைமுகமாக இருந்தால் அரசாங்கம் ஒரு கூட்டுறவு நிறுவனத்திற்கு, மற்ற நிறுவனங்களில் பங்குகளெடுத்துக் கொள்ளும் செயலுக்காக முழுமையாக உபயோகிக்கப்படுவதற்கு, நிதிகள் வழங்கும். பின்னல் சொல்லப்பட்ட சூழ்நிலைகளில், பெயரளவுக்கு அல்லது பதிவு காரணத்திற்கு இந்தப் பங்குகள் நிதி வழங்கப்பட்ட நிறுவனத்தின் பெயரில் வைக்கப்பட்டிருப்பினும் உண்மையான பங்குதாரர் அரசாங்கம் தான். நேர்முகக் கூட்டாளித்துவம் ஓர் எளிய செயலாகும். மறைமுகமான கூட்டாளித்துவம் ஒரு சிக்கலான செயலாகும். மறைமுகக் கூட்டாளித்துவத்தைக் குறித்து, கிராமக் கடன் விசாரணைக் குழுவினர் கீழ்வருமாறு கூறியிருக்கின்றனர்.

'தலைமை மட்டத்தில், கூட்டாளித்துவம் நேர்முகமாக இருக்கும்; அதாவது மாநில அரசாங்கம், தொடர்புடைய நிறுவனங்களின் பங்குமூலதனத்திற்கு நேர்முகமாக உதவித் தொகை கொடுக்கும். மாவட்ட மட்டத்தில், அரசாங்கக் கூட்டாளித்துவம் தலைமை நிறுவனங்களின் மூலம் இருக்கும். உதாரணமாக, மாநில அரசாங்கம் தலைமை நிறுவனங்கள் மாவட்ட மட்டத்திலுள்ள நிறுவனங்களின் பங்கு மூலதனத்திற்கு உதவித் தொகையளிக்க உதவுவதற்கு தலைமை நிறுவனங்களுக்கு நிதிகளைக் கொடுக்கும். பிரதான மட்டத்தில் கூட, அரசாங்கக் கூட்டாளித்துவம் மறைமுகமாக இருக்கும்; அதாவது அரசாங்கம் தலைமை நிறுவனங்களுக்கு உதவித்தொகை அளித்து அந்த உதவித் தொகையைக் கொண்டு மாவட்ட மட்டத்திலிருக்கும் நிறுவனங்களுக்கு நிதி வழங்கி அந்த நிதியைக் கொண்டு மாவட்ட நிறுவனங்களில் பங்கு மூலதனத்திற்கு உதவித்தொகை அளிக்கும். சில சூழ்நிலைகளில் உதாரணமாக, விற்பனைச் சங்கங்களிலும், பதனப்படுத்தும் சங்கங்களிலும், அரசாங்கக் கூட்டாளித்துவம் எல்லா மட்டங்களிலும் நேர்முகமாக இருக்கலாம்'.

இந்திய ரிசர்வ் வங்கியின் விவசாயக் கடனைப் பற்றிய நிலையான ஆலோசனைக் குழுவினர் (Standing Advisory Committee on Agricultural Credit of the Reserve Bank of India) 1956ஆம் வருடம் ஜனவரி மாதத்தில் நடைபெற்ற அதனுடைய ஐந்தாவது கூட்டத்தில், இந்தப் பரிந்துரைகளில் உள்ளடங்கிய கருத்துகளை விவாதித்து, இந்தப் பொருளில் எந்தவித ஒருப்படித்தான சூத்திரத்தை (Uniform Formula) நிருணயிக்க முடியாது என்பதை ஏற்றுக்கொண்டு, சில மாநிலங்களில் பிரதம மட்டம் உட்பட பல்வேறு மட்டங்களில் அரசாங்கம் நேரடியாகப் பங்கு கொள்வதற்காக ஏற்பாடு செய்யத் தேவையிருக்கலாம் என்று கருதினர். அந்தக் குழுவினர் அபிப்பிராயப்படி, உறுதிப்படுத்தப் படவேண்டிய முக்கியச் செய்திகள், மாநில அரசாங்கம் ஒரு வெறும் கடன்காரரைப் போன்றில்லாமல் பங்கு மூலதனத்தின் துணிவிலும் (risks) பங்கு கொள்ளவேண்டும் என்ற பொருளில் மாநில அரசாங்கம் ஒரு கூட்டாளியாக இருக்கவேண்டும் என்றும், தலைமை வங்கியின் நிலைமை. ஓர் ஒட்டிக் கொண்டிருக்கக்கூடிய அமைப்பின் தலைமையிடத்தை முடிந்த வரையில் பலப்படுத்த வேண்டும் என்றும், ஆனால், எந்தச் சூழ்நிலைகளிலும் அந்த நிலைமைக்கு ஊறு விளைவிக்கக்கூடாது என்றும் கருதினர். இக் கருத்துகளை மனதில் கொண்டு, கூட்டுறவுச் சட்டக் குழுவினர் (1957) தாங்கள் தயாரித்த மாதிரி மசோதாவின் ஐந்தாவது அத்தியாயத்தில் அரசாங்கம் கூட்டுறவுச் சங்கங்களில் நேர்முகமாகவும், மறைமுகமாகவும் கூட்டாளித்துவம் கொள்வதற்குத் தக்க சட்டங்கள் அரசாங்கத்தால் செய்யப்பட வேண்டுமென்று யோசனை கூறியிருக்கின்றனர். இந்தச் சூழ்நிலையில் அந்தக் குழுவினர் கீழ்வருமாறு கூறியுள்ளார்கள்.

'சட்டப்படியான அபிப்பிராயத்தில், நேர்முகக் கூட்டாளித்துவம் ஒரு சாமானியமானதும் அதிகத் திருப்தியளிப்பதாகவுமிருந்தாலும், குறிப்பாக, அரசாங்கமே இல்லாமல் இன்னொரு சங்கம் பெயரளவுப் பங்குதாரராகவிருந்து அப்படியிருந்தும் அரசாங்கம் பெயரளவுப் பங்குதாரராக இருப்பதற்குப் பதிலாகக் கூட்டாளித்துவத்தின் துணிவுகளை மேற்கொள்ள வேண்டும் என்றிருக்கும்போது மறைமுகக் கூட்டாளித்துவம் ஒரு சிக்கலான விவகாரமாக இருக்கிறது. ஆகையால், பரிந்துரைகளுக்குச் சட்டப்படியான அமல் கொடுப்பதற்குப் 'பிரதான அரசாங்கக் கூட்டாளித்துவ நிதி' 'துணை அரசாங்கக் கூட்டாளித்துவ நிதி' இவற்றின் செய்முறையை யோசனை கூற வேண்டியிருக்கிறது. எனவே, மறைமுகக் கூட்டாளித்துவத்திற்காக, மாதிரி மசோதாவின் சரத்துகளின் கீழ் 'தலைமைக் கூட்டுறவு

நிறுவனங்கள் மாநில அரசாங்கத்திடமிருந்து நிதியைப் பெற்று அந்த நிதியைப் பிரதான அரசாங்கக் கூட்டாளித்துவ நிதிக்கு வரவு வைக்கும்; அது இந்த நிதியிலிருந்து பணத்தை யெடுத்துத் தன்னுடைய சொந்தப் பெயரில் இணைக்கப்பட்ட மாவட்ட அல்லது மத்திய நிறுவனங்களில் பங்குகள் வாங்கும். இந்த நிதியிலிருந்து பணத்தை மீண்டும் வாங்கி, இணைக்கப்பட்ட மத்திய அல்லது மாவட்ட நிறுவனங்கள் தங்களுடன் இணைக்கப் பட்ட பிரதம சங்கங்களில் பங்குகள் எடுப்பதற்கு வசதி செய்ய அந்த நிறுவனங்களுக்குப் பணம் வழங்கும். அப்படிச் செய்யும் போது மாவட்ட அல்லது மத்திய நிறுவனங்கள் இந்தப் பணத்தை வாங்கி 'துணை அரசாங்கக் கூட்டாளித்துவ நிதி' என்றழைக்கப் படும் ஒரு நிதிக்கு வரவு வைத்து, அந்தப் பணத்தைத் தன்னுடன் இணைக்கப்பட்ட பிரதம கூட்டுறவு நிறுவனங்களில் தங்களுடைய சொந்தப் பெயரில் பங்குகள் வாங்குவதற்கு அந்தப் பணத்தைப் பயன்படுத்துவார்கள்.

அரசாங்கம் தன் பணத்தை அளிக்கும் நிறுவனங்களில் ஒரு வெறும் கடன்காரராக மட்டுமல்லாமல் ஓர் உண்மையான கூட்டாளியாக இருப்பதை உறுதி செய்யும் பொருட்டு மாதிரி மசோதா அரசாங்கத்திற்குத் தான் நேர்முகமாகவோ, மறைமுக மாகவோ, கூட்டாளியாகச் சேர்ந்திருக்கும் சங்கத்தால் அறிவிக்கப் பட்ட இலாப ஈவுத் தொகைக்கு மட்டும் ஓர் உரிமையைக் கொடுக் கிறது. இந்த மசோதா அரசாங்கம் கூட்டாளியாகவிருக்கும் சங்கத்தில் ஏதாவது நட்டம் ஏற்பட்டாலும் அந்த நட்டத்தில் பங்கு கொள்ளும் பொறுப்பைக்கூட அரசாங்கத்தின் மீது விதிக் கிறது. மறைமுகமான கூட்டாளித்துவம் பின்பற்றப்பட்ட சூழ் நிலைகளில், அரசாங்கக் கூட்டாளித்துவத்தைப் பயனுள்ளதாகச் செய்வதற்குப் பிரதான அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலி ருந்தும் அல்லது துணை அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலிருந்தும் பங்குகள் வாங்குதல் அரசாங்கத்தினுடைய முன் அங்கீகாரத் திற்குட்பட்டு, இந்த நிதிகளிலிருப்பிலிருக்கும் தொகைகள் அந்த நிதிகளை வைத்துக்கொண்டிருக்கும் நிறுவனங்களின் சொத்து களாகப் பாவிக்கப்படுகிறதில்லை. கூட்டுறவுச் சட்டக் குழுவின் யோசனைப்படிக் கூட்டுறவுச் சங்கங்களில் அரசாங்கக் கூட்டாளித் துவத்திற்காகச் செய்யப்பட்ட மேற்சொன்ன ஏற்பாடுகளை யொட்டித் தமிழ்நாட்டு அரசாங்கம் 1961ஆம் வருடத்திய சென்னை கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் அத்தியாயம் 6-ல் கூட்டுறவுச் சங்கங்களில் அரசாங்கம் பங்கு கொள்வதற்காக சரத்துகள் செய்திருக்கிறது. இது ஒரு புதிய அத்தியாயம் ஆகும்.

இந்த அத்தியாயத்தில், அரசாங்கக் கூட்டாளித்துவத்தைக் குறித்த சரத்துகளை மட்டுமன்றிக் கூட்டுறவுச் சங்கங்களின் செயல் பாட்டில் அரசாங்கம் நிதி மூலமாகவும் வேறு வகையிலும் உதவக் கூடிய இதர வழிகளும் கூடப் பட்டியல் செய்யப்பட்டிருக்கின்றன. இந்தச் சரத்துகள் 44-லிருந்து 57வரையிலான பிரிவுகளில் அடங்கி யுள்ளன.

**அரசாங்கக் கூட்டாளித்துவத்தின் முக்கிய அம்சங்கள் :** கூட்டுறவு நிறுவனங்களில் அரசாங்கக் கூட்டாளித்துவத்தைப்பற்றிக் குறிக் கப்படவேண்டிய, முக்கிய கருத்துகள் பின்வருமாறு :

(1) கூட்டாளித்துவம் நேர்முகமாக இருக்கலாம்; அதாவது ஒரு சங்கத்தின் பங்கு மூலதனத்திற்கு நேர்முகமாக அரசாங்கம் பணம் போடும் [பிரிவு 44 (1)]. அல்லது கூட்டாளித்துவம் மறை முகமாகவும் இருக்கலாம்; அதாவது ஒரு சங்கம் இதர சங்கங் களில் பங்குகள் வாங்குவதற்காக அந்தச் சங்கத்திற்கு அந்த நிதி வழங்கப்படலாம் (பிரிவு 45).

(2) சங்கங்களில் நேர்முகமாகவோ, அல்லது மறைமுக மாகவோ அரசாங்கத்தால் முதலீடு செய்யப்பட்ட பங்கு மூல தனத்தின் பேரில் சங்கத்தில் வேறு எந்தப் பங்குதாரருக்கும் கொடுக்கப்படும் அதே விகிதத்தில் மட்டும் அரசாங்கம் இலாப ஈவு பெறுவதற்கு உரிமையுள்ளது. இலாப ஈவுக்கோ அல்லது ஓர் அதிகமான விகிதாச்சாரத்திற்கோ அரசாங்கத்திற்கு ஒரு முன்னுரிமையும் (Preferential claim) இல்லை. ஒரு சங்கத்தின் இதர பங்குதாரர்களுடன் அரசாங்கமும் சமமாக நிற்கிறது [பிரிவு 44 (2) மற்றும் பிரிவு (50)].

(3) ஒரு சங்கத்தில் பங்குகளெடுத்திருக்கும் அரசாங்கத்தின் பொறுப்பு அரசாங்கத்தால் போடப்பட்டிருக்கும் பங்கு மூலதனத் திற்கு மட்டுமே வரையறுக்கப்பட்டிருக்கவேண்டும். அதற்கு மேல் கிடையாது; சங்கம் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையிலிருந்தாலும் அல்லது வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையிலிருந்தாலும், [பிரிவு 4 (2)-ம் பிரிவு 49-ம் கூட] அது போன்ற செய்தியைக் கூறுகிறது. நேர்முக மாகவோ அல்லது மறைமுகமாகவோ அரசாங்கத்தால் வாங்கப் பட்ட பங்குகளைக் குறித்து அரசாங்கத்தின் பொறுப்பு அத்தகைய பங்குகளுக்காகச் செலுத்தப்பட்ட தொகைக்கு வரையறுக்கப் பட்டிருக்கிறது (பிரிவு 49). ஆனல், பிரிவு 4 (2)-ல் குறிப்பிடப்பட்ட சரத்துக்கும், பிரிவு 49-ல் குறிப்பிட்ட சரத்துக்கும் ஒரு சிறிய வேறுபாடு இருக்கிறது. பிரிவு 4 (2)-ன் படி, அரசாங்கத்தின் பொறுப்பு, ஒப்பிய பங்கு மூலதனத்திற்கு (Subscribed Share

Capital) வரையறுக்கப்பட்டிருக்கும். 49 பிரிவின்படி பொறுப்பு, எடுக்கப்பட்ட பங்குகளுக்காகச் செலுத்தப்பட்ட தொகைக்கோ அல்லது செலுத்திய பங்கு மூலதனத்துக்கோ, வரையறுக்கப் பட்டிருக்கும். இதனால் ஊகிக்க வேண்டியது, அரசாங்கம் தான் எடுத்துக்கொண்ட பங்குகளின் மதிப்பையெல்லாம் ஒரே மொத்த மாக உடனே செலுத்திவிடும் என்பதுதான்.

(4) அரசாங்கம் ஒரு சங்கத்தில் நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ முதலீடு செய்திருக்கிற பங்குகளுக்காக யாதொரு பிரத்தியேக உரிமைக் கோரிக்கையும், எந்தச் சங்கத் திற்கும் எதிராக, அந்தச் சங்கம் கலைக்கப்பட்டாலும் அல்லது மூடப்பட்டாலும், அரசாங்கம் கொண்டாட முடியாது. வேறு எந்தப் பங்குதாரரைப்போல அரசாங்கமும் அதனுடைய பங்கு மூலதனத்தை இழக்கும் அல்லது ஓர் உபரி (Surplus) இருந்தால், மற்ற எல்லாப் பங்குதாரர்களுக்கும் கலைப்பு அதிகாரியால் கொடுக்கப்படும் பங்கு மூலதனத்தின் பாகத்தைக் கலைப்பு அதிகாரியிடமிருந்து அரசாங்கமும் பெறும். ஆகையால், ஒரு சங்கம் கலைக்கப்படும்போது அல்லது மூடப்படும்போது, கலைப்பு அதிகாரியால் பங்கு மூலதனம் திருப்பிச் செலுத்துவதில்கூட அரசாங்கம் இதர பங்குதாரர்களுக்குச் சமமாகவே இருக்கின்றது (பிரிவு 51).

(5) மறைமுகமான கூட்டாளித்துவச் சூழ்நிலைகளில் அரசாங்கம் தலைமைச் சங்கத்திற்கு, அந்தச் சங்கம் இதர சங்கங் களில் பங்குகள் வாங்குவதற்காக, நிதி வழங்கும். அரசாங்கத்தால் இவ்வாறு வழங்கப்படும் நிதி, சங்கங்களுக்கு எப்படிப் பங்கு மூலதனத்திற்காக முதலீடு செய்யப்படவேண்டும்? அத்தகைய சூழ்நிலைகளில் கையாளவேண்டிய நடைமுறை தலைமைச் சங்கத் திற்கு அத்தகைய நிதி வழங்கப்படும் நியந்தனைகள் 46, 47, 48, 52, 53, 54, 55 ஆகிய பிரிவுகளில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைப் பற்றிக் கீழ விளக்கம் தரப்பட்டிருக்கின்றது.

(அ) ஒரு தலைமைச் சங்கம், உதாரணமாக தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி, அதற்குப் பிரிவு 45-ன்கீழ் அரசாங்கம், அந்த வங்கி இதர சங்கங்களில் பங்குகளெடுப்பதற்காக, நிதி வழங்கினால் அவ்வாறு வழங்கப்பட்ட நிதியைக் கொண்டு 'பிரதான அரசாங்கக் கூட்டாளித்துவ நிதி' என்று அழைக்கப்படும் ஒரு நிதியை அது அமைக்க வேண்டும் [பிரிவு 46 (1)]. இந்த நிதி இதர சங்கங்களில் நேர்முகமாகப் பங்குகள் வாங்குவதற்காவது, அல்லது மத்திய வங்கிகள் போன்ற மத்தியச் சங்கங்களிலும் விவசாய நாணயச் சங்கங்கள் போன்ற பிரதான சங்கங்களிலும்

பங்குகளெடுப்பதற்கு வசதி அளிக்க நிதி வழங்குவதற்காவது பயன்படுத்தப்பட வேண்டும் [ பிரிவு 46 (2 ]. இந்த நிதி அரசாங்கத்திற்குச் செலுத்துவதற்கு வேண்டிய ஏதாவது செலுத்தலுக்குக் கூட பயன்படுத்தப்பட வேண்டும் [ பிரிவு 46 (2) (இ)].

(ஆ) 'பிரதான அரசாங்கக் கூட்டாளித்துவ நிதி' (Principal State Partnership Fund) யிலிருந்து ஒரு தலைமைச் சங்கத்தால் நிதி வழங்கப்படும் ஒரு மத்தியச் சங்கம், அத்தகைய நிதியிலிருந்து ஓர் 'அரசாங்கக் கூட்டாளித்துவத் துணை நிதி' (Subsidiary State Partnership Fund) என்று அழைக்கப்படும் ஒரு நிதியை அமைக்க வேண்டும் [ பிரிவு 47 (1) ]. பிரதமச் சங்கங்களில் பங்குகளெடுப்பதற்கும், தலைமைச் சங்கத்திற்கு ஏதாவது செலுத்துதல் செய்வதற்கும் தவிர வேறு எச் செயலுக்கும் இந்த நிதியை உபயோகிக்கக் கூடாது [ பிரிவு 47 (2) ].

(இ) மேற்சொன்ன இரண்டு நிதிகளிலிருந்து எந்தச் சங்கத்திலும் பங்குகளெடுப்பதற்கு அரசாங்க அங்கீகாரம் தேவை (பிரிவு 48).

(ஈ) பங்குகள் மீட்கப்படும்போது அல்லது அரசாங்கத்தால் வழங்கப்பட்ட நிதியிலிருந்து எடுக்கப்பட்ட பங்குகளின் பேரில் இலாப ஈவு செலுத்தப்படும்போது ஒரு தலைமைச் சங்கத்தால் பெறப்படும் எல்லாத் தொகைகளும் 'பிரதான அரசாங்கக் கூட்டாளித்துவ நிதி'க்குச் செலுத்தப்பட வேண்டும் (பிரிவு 52(1). 'அரசாங்கக் கூட்டாளித்துவத் துணை நிதி'யிலிருந்து பிரதம சங்கங்களில் வாங்கப்பட்ட பங்குகளைக் குறித்துப் பங்குகள் மீட்கப்படும்போதும் அல்லது அத்தகைய பங்குகளின் பேரில் இலாப ஈவுகள் செலுத்தப்படும்போதும் ஒரு மத்தியச் சங்கத்தால் பெறப்படும் எல்லாத் தொகைகளையும் 'அரசாங்கக் கூட்டாளித்துவத் துணைநிதி'க்கு முதலில் வரவு வைத்துப் பிறகு அது தலைமைச் சங்கத்துக்கு மாற்றப்பட்டு, தலைமைச் சங்கம் அதைப் 'பிரதான அரசாங்கக் கூட்டாளித்துவ நிதி'க்கு வரவு வைக்கும் [பிரிவு 52 (2)]. இவ்வாறு இந்த இரண்டு நிதிகளிலும் வரவு வைக்கப்பட்ட தொகைகள் அரசாங்கத்திற்குத் தலைமைச் சங்கத்தின் பேரில் அல்லது மத்தியச் சங்கத்தின் பேரில் செலுத்தப்பட வேண்டும் [பிரிவு 52 (3)]. 52 (1) & 52 (2) பிரிவுகளில் கூறப்பட்ட மேற்சொன்ன நிதிகளைத் தவிர, அரசாங்கம் தலைமைச் சங்கத்திற்குப் பிரிவு 45-ன்கீழ் வழங்கும் நிதிகளுக்குப் பதிலாக, வேறு எந்தத் தொகையையும் பெறுவதற்கு உரிமை இல்லை.

(உ) தலைமைச் சங்கம் அல்லது மத்தியச் சங்கம் கலைக்கப்பட்டாலும் மூடப்பட்டாலும் அவைகளால் முறையே வைக்கப்பட்டிருக்கும் பிரதம கூட்டாளித்துவ நிதியின்' இருப்பிலிருக்கும் தொகைகளையும் 'கூட்டாளித்துவத் துணை நிதி' யின் இருப்பிலிருக்கும் தொகைகளையும் அரசாங்கத்திற்குச் செலுத்தவேண்டும் (பிரிவு 53).

(ஊ) இந்த இரண்டு நிதிகளிலிருக்கும் தொகைகள் தலைமைச் சங்கம் அல்லது மத்தியச்சங்கத்தின் சொத்துகளின் ஒருபாகமாகா. இந்த நிதிகள் அரசாங்கத்திற்குச் சொந்தமானவை (பிரிவு 54).

(எ) மேற்சொன்ன ஏற்பாடுகளை நிறைவேற்றுவதற்காகவும், தலைமைச் சங்கத்திற்கும் தலைமைச் சங்கத்தால் மத்தியச் சங்கத்திற்கும் அரசாங்கம் நிதி வழங்கும் நிபந்தனைகளை நிருணயிப்பதற்காகவும், தக்க ஒப்பந்தங்கள் (Agreements) அரசாங்கத்துக்கும் தலைமைச் சங்கத்துக்குமிடையே அல்லது தலைமைச் சங்கத்துக்கும் மத்தியச் சங்கத்துக்கும் இடையே அரசாங்க அங்கீகாரத்துடன் செய்துகொள்ளப்படலாம் (பிரிவு 55). 45 முதல் 55 வரையுள்ள பிரிவுகளிலடங்கியிருக்கும் சரத்துகள், தற்சமயம் அமலிலிருக்கும் வேறு எந்தச் சட்டத்திலடங்கிய எந்தச் சரத்துகளுக்கு முரண்பட்டிருந்தாலும்கூட, அமல் செய்யப்படவேண்டும் (பிரிவு 57), இந்தப் பிரிவுகளில் செய்யப்பட்டிருக்கும் தனிப்பட்ட ஏற்பாடுகள் நாட்டின் பொதுச் சட்டத்தின் சரத்துகளுக்கு முரண்படாமலிருப்பதை இந்தச் சரத்து உறுதிப்படுத்துகிறது. இந்தத் தனிப்பட்ட ஏற்பாடுகளின்படி, அரசாங்கத்தினுடைய நிதி, தலைமை வங்கியின் பேரிலும் மத்திய வங்கிகளின் பேரிலும் வைக்கப்பட்டிருக்கின்றன. அம் மாதிரி அரசாங்க நிதியுடைமை இந்த இரண்டு வங்கிகள் பேரில் வைத்திருப்பது, நிதியுடைமை இரண்டு பாகங்களாக்கப்படுவதை அனுமதிக்காத நாட்டின் பொதுச் சட்டத்திற்கு முரண்பாடானதல்ல.

## 4. தமிழ் நாட்டில் கூட்டுறவுச் சங்கங்களில் அரசுக் கூட்டாளித்துவம் (State participation in Co-op. Societies in Tamil Nadu)

தமிழ் நாட்டில், கூட்டுறவுச் சங்கங்களில் அரசாங்கக் கூட்டாளித்துவம் கொள்கையளவில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. நாணயத் துறையில், தலைமை மட்டத்தில் இந்தக் கூட்டாளித்துவம் நேர்முகமாக இருக்கிறது. மாவட்ட மட்டத்தில் இது மறைமுகமாக இருக்கிறது. அரசாங்கம் தலைமைச் சங்கத்தின் மூலதனத்திற்கான நிதியை நேர்முகமாக வழங்குகிறது. மாவட்ட மட்டத்தில் அரசாங்கம் மாவட்டத்

திலுள்ள நிறுவனங்களின் பங்கு மூலதனத்திற்கு நிதி வழங்குவதற்கு வசதி செய்யத் தலைமைச் சங்கத்திற்கு நிதி வழங்குகிறது. பிரதம மட்டத்தில் கூட அரசாங்கக் கூட்டாளித்துவம் மறைமுகமாகவே இருக்கிறது. கிராமக் கடன் விசாரணைக் குழுவினரின் சிபாரிசுகளைப் பின்பற்றி, இந்திய ரிசர்வ் வங்கி, விவசாய நாணயத்தை விரிவு படுத்துவதில் ஒரு சுறுசுறுப்பான தொண்டைச் செய்வதற்கு வசதி செய்ய, இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டம் திருத்தப்பட்டது. இந்தத் திருத்தத்தின் சரத்துகளில் ஒன்று 'தேசிய விவசாய நீண்டகால செயல் நிதியை' (National Long-Term Oparations Fund) அமைப்பது. இந்த நிதி, மாநில அரசாங்கங்கள் நாணயச் சங்கங்களின் பங்கு மூலதனத்திற்கு ஒப்புதல் புரிய வசதி செய்வதற்கு, 20 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்தப்படும் கடன்களையும், முன் பணங்களையும் கொடுப்பதற்கு, உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

தமிழ் நாட்டில், அரசாங்கம் நாணயச் சங்கங்களின் கடன் வாங்கும் சக்தியைப் பெருக்குவதற்கு அந்தச் சங்கங்களின் மூலதனத்தில் ஏறக்குறைய ரூ. 775 இலட்சம் தொகை அரசாங்கம் முதலீடு செய்திருக்கிறது. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியில் ரூ. 126 இலட்சமும், மத்திய வங்கிகளில் ரூ. 233 இலட்சமும், பிரதம நாணயச் சங்கங்களில் ரூ. 168 இலட்சமும், தமிழ்நாடு மாநில மத்திய நிலவள வங்கியில் ரூ. 170 இலட்சமும், பிரதம நிலவள வங்கிகளில் ரூ. 43 இலட்சமும், நகர வங்கிகளில் ரூ. 85 இலட்சமும், மத்திய வீடு அடைமான வங்கியில் ரூ. 35 இலட்சமும், அரசாங்கம் முதலீடு செய்திருக்கிறது. அரசாங்கக் கூட்டாளித்துவம் நாணயச் சங்கங்களுக்கு மட்டும் எல்லைப் படுத்தப்படவில்லை. அது விற்பனைச் சங்கங்களுக்கும், சில சூழ்நிலைகளில் ஸ்டோர்ஸ் சங்கங்களுக்கும்கூட நீட்டிக்கப் பட்டிருக்கிறது.

தேசியக் கூட்டுறவு அபிவிருத்தி நிறுவனம் (National Co-operative Development Corporation) மாநில அரசாங்கங்கள் விற்பனைச் சங்கங்களிலும் விநியோகச் சங்கங்களிலும், மற்றும் இதர சங்கங்களிலும் பங்குகள் எடுப்பதற்கு வசதிகள் செய்ய நிதி வழங்குகிறது. விற்பனைச் சங்கங்களில் அரசாங்கப் பங்காளித்துவம் நேர்முகமாக இருக்கிறது. அதே மாதிரியாக, கூட்டுறவு ஆலைகள், கூட்டுறவு நவீன அரிசி ஆலைகள் போன்ற பெரிய பதனப்படுத்தும் சங்கங்களில்கூட அரசாங்கப் பங்காளித்துவம் நேர்முகமாக இருக்கிறது. பிரதம விற்பனைச் சங்கங்களில் 30-6-67 வரை அரசாங்கத்தின் பங்கு மூலதனம் ரூ. 67 இலட்சத்திற்கு இருந்தது.

அதில் ரூ. 40 இலட்சம் பதனப்படுத்தும் சங்கங்களில் முதலீடு செய்யப்பட்டிருந்த தொகையாகும். மொத்த விற்பனை ஸ்டோர்ஸ் சங்கங்களில் அரசாங்கப் பங்கு மூலதன முதலீடு ரூ. 41 இலட்சத்திற்கு இருந்தது. பல்வேறு வித சங்கங்களில் தமிழ் நாட்டில் அரசாங்கப் பங்காளித்துவம் என்ற கொள்கை பரவலாகக் கையாளப்பட்டு வருகிறது.

5. இதரவித அரசாங்க உதவிகள் (பிரிவு 56) (Other forms of State Aid)

கீழ்க்கண்ட முறையில் கூட்டுறவு நிறுவனங்களுக்கு அரசாங்கம் உதவி அளிக்க பிரிவு 56-ல் ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

(அ) எந்த ஒரு பதிவான சங்கத்திற்கும் கடன்களையும் முன் பணங்களையும் வழங்குவது [பிரிவு 56 (அ)]. அரசாங்கம் பல் வேறுவித சங்கங்களுக்கு நேர்முகமாகக் கடன்கள் வழங்குகிறது. உதாரணமாக பால் வழங்கும் சங்கங்களுக்கு உறுப்பினர்கள் கறவை மாடுகள் வாங்குவதற்கும், வீட்டு வசதிச் சங்கங்களுக்கு உறுப்பினர்கள் வீடு கட்டுவதற்கும், விவசாய நாணயச் சங்கங் களுக்கும் விற்பனைச் சங்கங்களுக்கும், கிடங்குகள் கட்டுவதற்கும் விவசாயப் பண்ணைச் சங்கங்களுக்குத் தளவாடங்கள் முதலியன வாங்குவதற்கும் அரசாங்கம் கடன் உதவி செய்கிறது.

(ஆ) ஒரு சங்கத்தால் வெளியிடப்பட்ட கடனீட்டுப் பத்திரங்களின் பேரில் அசலைத் திருப்பிக் கொடுப்பதற்கும் வட்டி யைச் செலுத்துவதற்கும் அரசாங்கம் உத்தரவாதம் அளிக்கிறது [பிரிவு 56 (ஆ)]. உதாரணமாக தமிழ்நாடு கூட்டுறவு நிலவள மத்திய வங்கியால் வெளியிடப்பட்ட கடனீட்டுப் பத்திரங்களைக் குறித்து, அசலையும் வட்டியையும் அரசாங்கம் உத்தரவாதம் அளித்திருக்கிறது. இவ்வாறு, அரசாங்கம் தமிழ்நாடு மத்திய நிலவள வங்கியின் கடனீட்டுப் பத்திரங்களுக்கு ரூ. 125 கோடி வரை அரசாங்கம் உத்தரவாதம் அளித்திருக்கிறது.

(இ) பங்கு மூலதனத்தைத் திருப்பிச் செலுத்துவதற்கும், அரசாங்கத்தால் குறிக்கப்பட்ட விகிதத்தில் இலாப ஈவுத் தொகைகளை வழங்குவதற்கும் அரசாங்கம் உத்தரவாதம் அளித் திருக்கிறது [பிரிவு 55 (இ)].

(ஈ) ஒரு சங்கத்திற்கு வழங்கப்பட்ட கடன்கள் மீதும் முன் பணங்கள் மீதும் அசல் திருப்பிக் கொடுப்பதையும் வட்டி செலுத்து வதையும் அரசாங்கம் உத்தரவாதம் அளித்திருக்கிறது [பிரிவு 55 (ஈ)]. உதாரணமாக சங்கங்களுக்குப் பட்டுவாடா செய்

வதற்காக, தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு இந்திய ரிசர்வ் வங்கி கொடுத்திருக்கும் மத்திய காலக் கடன்களுக்கு (Medium-Term Loans) மாநில அரசாங்கம் இந்திய ரிசர்வ் வங்கிக்கு உத்தரவாதம் அளித்திருப்பது அத்தகைய கடன்களுக்கு விதிக்கப்பட்ட நிபந்தனைகளில் ஒன்று. தமிழ்நாட்டில் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் போன்ற சில பதனப்படுத்தும் சங்கங்கள் மாநில அல்லது மத்தியத் தொழில் நிதி நிறுவனங்களிலிருந்து (Industrial Finance Corporation) வாங்கிய கடன்களுக்குத் தமிழ்நாடு அரசாங்கம் உத்தரவாதம் அளித்திருக்கிறது. மாவட்ட சப்ளை விற்பனைச் சங்கங்கள் அரசாங்கச் சார்பாக உணவு தானியக் கொள்முதலை மேற்கொள்வதற்காக (Procurement Food of grains) அந்தச் சங்கங்கள் இந்திய ஸ்டேட் வங்கியிலிருந்து (State Bank of India) வாங்கிய தொகைகளுக்கும் மாநில அரசாங்கம் இந்திய ஸ்டேட் வங்கிக்குத் திருப்பிச் செலுத்தும் உத்தரவாதம் அளித்திருக்கிறது. ஆகையால், இந்தச் சரத்து அரசாங்கமே நேர்முகமாகக் கூட்டுறவு நிறுவனங்களுக்குக் கடன் கொடுப்பதற்குப் பதில் கூட்டுறவு நிறுவனங்களால் வாங்கப்படும் கடன்களுக்கும் முன் பணங்களுக்கும் அரசாங்கம் உத்தரவாதம் அளிப்பதற்கு வசதி செய்கிறது.

(உ) ஒரு சங்கம் வாங்கிய வைப்புத்தொகைகளைத் (Deposits) திருப்பிச் செலுத்துவதற்கும் அத்தகைய வைப்புத்தொகைகளின் மேல் வட்டி செலுத்துவதற்கும் அரசாங்கம் உத்தரவாதம் அளித்திருக்கிறது [பிரிவு 55 (2)]. கூட்டுறவு நிறுவனங்களில் வைப்புத் தொகைகள் தாராளமாக வருவதை ஊக்குவிக்கும் நோக்கத்துடன் இந்த உத்திரவாதம் அளிக்கப்படுகிறது. சங்கங்கள் தங்கள் சொந்த பலத்தில் நிற்கவேண்டும் என்று கொள்கையிருந்தாலும், சங்கங்கள் பொதுமக்கள் தங்களிடம் வைப்புத்தொகைகள் போடுவதற்கு நம்பிக்கையுண்டுபண்ண வேண்டும் என்றிருந்தாலும் மேற்கொண்டு ஒரு தூண்டுதலாக இருப்பதற்கு அத்தகைய வைப்புத்தொகைகளுக்கு அரசாங்கம் உத்தரவாதம் அளிக்க வேண்டியிருக்கிறது. உதாரணமாக, ஈட்டுறுதித் திட்டம் (Insurance Scheme) அமல் தொடக்கத்தில் வணிக வங்கிகள் வாங்கிய வைப்புத்தொகைகளுக்கு வைப்புத் தொகைகளில் நம்பிக்கையுண்டு பண்ணுவதற்காக அரசாங்க உத்தரவாதம் தேவையாகக் கருதப்பட்டது. ஆகையால், அரசாங்கம் 1964ஆம் ஆண்டிலிருந்து, மாநிலக் கூட்டுறவு வங்கியாலும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும் வாங்கப்பட்ட 36 மாதங்கள் தவணை வைப்புத்தொகைகளையும் 36 மாதங்களுக்கு மேற்பட்ட தவணை வைப்புத்தொகைகளைக் குறித்தும் அசலைத் திருப்பிச் செலுத்துவதற்கும் வட்டி செலுத்துவதற்கும்

அரசாங்கம் உத்தரவாதம் அளித்திருக்கிறது. இந்த உத்தர வாதம் 5.75 கோடி ரூபாய் வரை அளிக்கப்பட்டிருக்கிறது. மேலும், தமிழ்நாடு மாநிலத் தொழில் கூட்டுறவு வங்கி யுடனிருக்கும் வைப்புத்தொகைகளும் அரசாங்க உத்தர வாதத்தைப் பெற்றிருக்கின்றன.

(ஊ) எந்த ஒரு சங்கத்திற்கும் உதவித் தொகையுட்பட வேறு எந்த உருவத்திலும் அரசாங்கத்தால் நிதி உதவி வழங்கப்படலாம் [பிரிவு 56 (ஊ)].

கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசாங்கம் வழங்கும் இதரவகை நிதி உதவிகள் பின்வருமாறு:

பிரிவு 73 (ஈ)-ன் கீழ், மாநிலக் கூட்டுறவு வங்கியும் மத்தியக் கூட்டுறவு வங்கிகள் ஒவ்வொன்றும் வாங்கும் எந்தக் கடன் அல்லது முன்பணத்தின் அசலையும் அதன் மீது செலுத்தப்பட வேண்டிய வட்டியையும் திருப்பிச் செலுத்துவதையும் குறித்து அரசு உத்தரவாதம் அளிக்கலாம். அவ்வாறு அளிக்கப்படும் அரசின் உத்தரவாதம், அரசால் நிருணயிக்கப்பட்ட உச்சத் தொகைக்கும் அரசு உசிதம் என்று கருதி விதிக்கும் நிபந்தனை களுக்குமுட்பட்டு இருக்கலாம். இந்தப் பிரிவின்கீழ், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளும் இந்திய ரிசர்வ் வங்கியிடமிருந்தும் (Reserve Bank ot India), இந்திய ஸ்டேட் வங்கியிடமிருந்தும் (State Bank of India) இதர நிதி நிறுவனங்களிடமிருந்தும் கடனாக வாங்கியுள்ள நிதிகளைத் திருப்பிச் செலுத்துவதையும் அரசு உத்தரவாதம் அளிக்கலாம். மேலும், அத்தகைய கூட்டுறவு வங்கிகளால் தம் உறுப்பினர் களிடமிருந்தும் பொதுமக்களிடமிருந்தும் பெறப்பட்ட வைப்புத் தொகைகள் அல்லது கடன்களைக் கூடத் திருப்பிச் செலுத்துவதை அரசு உத்தரவாதம் அளிக்கலாம். பிரிவு 56-ல் குறிப்பிடப்பட்ட அரசாங்க உதவி வகைகள் சட்டத்தின்கீழ்ப் பதிவு செய்யப்பட்ட எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் பொருந்தும் அரசாங்க உதவி வகைகளாகச் செய்வது மட்டுமன்றி, தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியையும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளையும் குறித்துச் சட்டத்தில் ஏற்படுத்தப்பட்ட ஒரு சிறப்பான அரசாங்க உதவியாகவும் இது விளங்குகிறது. பொதுவாக, 1970ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (மூன்றாவது திருத்தச்) சட்டத்தில் ஏற்படுத்தப்பட்ட பிரிவு 73 (எல்)-ன் கீழ்த் தலைமைக் கூட்டுறவுச் சங்கங்களால் வாங்கப்படும் கடன்கள் அல்லது முன்பணங்களின் அசலையும் வட்டியையும் திருப்பிச்

செலுத்துவதை உத்தரவாதம் அளிக்கவும், அதேமாதிரியான ஓர் அதிகாரத்தை அரசாங்கம் எடுத்திருக்கிறது.

விவசாய நாணயச் சங்கங்களுக்குக் கிடங்கு, அலுவலகப் பணிமனை, கொட்டகை கட்டுவதற்காக அரசாங்க உதவித்தொகை கொடுக்கப்படுகிறது. அத்தகைய உதவிக்கொடை இந்தக் கட்டடங்களைக் கட்டுவதற்காக அரசாங்கம் ரூ. 25 ஆயிரம் வரை கடனாகவும் உதவிக் கொடையாகவும் அளிக்கிறது. (50% கடன் 50% உதவிக் கொடை). நிருவாகச் சிப்பந்திகளை அமர்த்துவதற்காக, ரூ. 100/– இலட்சத்திற்குக் குறைந்த நடைமுறை முதல் வைத்திருக்கும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு உதவிக்கொடை மூலமாக நிதி உதவி அளிக்கப்படுகிறது. சில சூழ்நிலைகளில் கூட்டுறவுத் துறை சிப்பந்திகள் சங்கங்களில் ஆரம்ப வருடங்களில் முக்கிய அலுவலர்களாக வேலை செய்வதற்கு அனுப்பப்படுகின்றனர். எனவே, பால் வழங்கும் சங்கங்கள், புதியதாக நிறுவப்பட்ட மத்திய வங்கிகள், அவைகள் சரியாகச் செயல்படுவதை வசதிப்படுத்துவதற்குச் சில காலத்திற்கு இலவசமாக கூட்டுறவுத் துறை அதிகாரிகளின் சேவைகள் சங்கங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த வழிகளிலும் இன்னும் பல விதங்களிலும் அரசாங்கம் கூட்டுறவு நிறுவனங்களுக்கு உதவி அளித்துக்கொண்டு வந்திருக்கிறது. பிரிவு 56 அதன் தற்போதைய உருவத்தில் வருவதற்கு முன் அரசாங்கம் அத்தகைய உதவிகளைச் செய்யவில்லையென்று பொருளல்ல.

1932ஆம் வருடத்திய சட்டத்தின் 31ஆம் பிரிவுதான் தற்போதுள்ள 56ஆம் பிரிவாக, அரசாங்கம் அளிக்கும் எல்லாவித நிதி உதவிகளையும் ஒன்றுசேர்த்துக் கொள்ளும் வண்ணம், விரிவு செய்யப்பட்டிருக்கிறது. பொருளாதார, சமுதாய நல்வாழ்வை வளர்ப்பதற்கு ஒரு சாதகமாகக் கூட்டுறவுச் சங்கங்களை அதிகப்படியாகப் பயன்படுத்துவதால், அரசாங்க உதவி அதிக அளவு கொடுக்கப்பட்டு பிரிவு 56-ல் அத்தகைய அரசாங்க உதவிகளின் விவரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. கூட்டுறவுச் சட்டக் குழுவினரால் தயாரிக்கப்பட்ட கூட்டுறவு மசோதாவின் 50 வது பகுதிகூட அரசாங்க நிதி உதவிகள் பல உருவங்களை விளக்கிக் கூறுகிறது. 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டம் இன்னும் மேலே சென்று அதிகப்படியான பல்வேறு வழிகளில் அரசாங்க உதவிக்கு வழிவகை செய்திருக்கிறது.

# 11. சங்கங்களின் நிதிகள்
## (Funds of Societies)

(பிரிவுகள் 58–63)

1. பொது (General)

ஒரு சங்கத்தின் நிதிகளைக் கீழ்வருமாறு வகைப்படுத்தலாம்:

1. அதன் பங்கு மூலதனம் (Share Capital)
2. வைப்புத் தொகைகள் (Deposits)
3. கடன் வாங்குதல் (Borrowings)
4. அதன் காப்பு நிதியும் (Reserve Fund) இதர காப்பு இருப்பு (Reserves) நிதிகளும்
5. அதனால் வெளியிடப்பட்ட கடன் ஈட்டுப் பத்திரங்கள் Debentures)

மேற்கண்ட நிதிகள் பொதுவாக ஒரு சங்கத்தின் நடைமுறை முதலாக (Working Capital) அமைகின்றன. விதி 2 (கே)-ல், 'நடைமுறை முதல்' என்பது 'ஒரு சங்கத்தின் கட்டடங்களிலும் இதர நிலையான சொத்துகளிலும், முதலீடு செய்யப்படாத காப்பு நிதி, செலுத்தப்பட்ட பங்கு மூலதனம், கடன்கள், வைப்புத் தொகைகள் கடனீட்டுப் பத்திரங்களின் தொகைகளின் பாகம், என்று விளக்கப்பட்டிருக்கிறது. கடன் ஈட்டுப் பத்திரங்களும் கூட ஒரு சங்கம் வாங்கிய கடன். அது ஒரு சங்கத்தின் மூலதனமாகப் பயன்படுகிறது. இந்த மாநிலத்தில் கடன் ஈட்டுப் பத்திரங்களை வெளியிட்டு, அவற்றின் மூலம் நிதிகளைத் திரட்டும் ஒரே ஒரு நிறுவனம் தமிழ் நாடு கூட்டுறவு மாநில நிலவள வங்கியாகும். இந்த வகையில் அந்தச் சங்கம் கடன் வாங்கும் நிபந்தனைகள் தனியாக 1934ஆம் வருடத்திய 'சென்னை கூட்டுறவு நில

அடைமான வங்கிச் சட்டத்தில்' அடங்கிய சரத்துகளின்படி முறை செய்யப்பட்டிருக்கின்றன. இந்த அத்தியாயத்தில் வைப்புத் தொகைகள், கடன் வாங்குதல், சங்கத்தின் காப்பு நிதி இன்னும் இதர பாதுகாப்பு நிதிகள் இவைகளைப் பற்றி மட்டும் விளக்கப் படும். பங்கு மூலதனம் சங்கத்தின் வியாபாரத்தில் பயன்படுத்தப் படலாம்.

சங்கத்தில் உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்ளுதல், பங்கு மூலதனத்தைச் செலுத்துதல், பங்கு மூலதனத்தை மாற்றுதல் அல்லது திருப்பிக் கொடுத்தல் மற்றும் இவை தொடர்பான இதர பொருள்கள் முந்தைய ஓர் அத்தியாயத்தில் விளக்கப்பட்டிருக் கின்றன. ஆகையால், இந்த அத்தியாயத்தில் வைப்புத் தொகைகள், கடன் வாங்குதல், காப்பு நிதி, இதர காப்பு நிதிகள் மூலம் திரட்டப்பட்ட நிதிகள் தொடர்பான சட்ட விதிகள் விளக்கப்படும்.

## 2. ஒரு சங்கத்தின் வியாபாரத்திற்காக நிதிகள் எவ்வாறு திரட்டப் படுகின்றன ? (How Funds are Raised for the Business of Society)

சங்கம் கடன் வாங்கும் முறை : ஒரு சங்கம் விதிகளில் அல்லது அதன் உப-விதிகளில் நிருணயிக்கப்பட்ட நிபந்தனைகளுக்கு உட் பட்டும், பிரிவுகளுக்கு உட்பட்டும் மட்டுமே வைப்புத் தொகை களையும், கடன்களையும் வாங்க முடியும் (பிரிவு 51). சாதாரண மாக, ஒரு வைப்புத்தொகை பாதுகாப்புக்காகவும் அல்லது வசதிக்காகவும் சங்கத்தில் போட்டு வைக்கப்பட்டிருக்கிற நிதி. அது, சங்கத்தால் நிருணயிக்கப்பட்ட நிபந்தனைகளின்படி சங்கத்திற்குக் கொடுக்கப்பட்ட பணம். சங்கம் போதுமான வைப்புத்தொகைகளைப் பெற முடியாதபோது கடன் வாங்கு கிறது. அந்தக் கடன், கடன் கொடுப்பவரின் நிபந்தனைகளின் பேரில், சங்கம் வாங்குகிறது. இதுதான் வைப்புத் தொகை களுக்கும், கடன்களுக்கும் உள்ள வேறுபாடு. விதி 42-ன்படி, தன் உறுப்பினர்களிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் பெற்ற எல்லா வைப்புத் தொகைகள், கடன்கள் இவற்றின் மொத்தத் தொகை யானது ஒரு சங்கம் அல்லது சங்க வகையைக் குறித்துப் பதிவாளரால் குறிப்பிடப்படுகிற வரம்பிற்கு மேற்பட்டால், எந்த ஒரு சங்கமும் உறுப்பினரல்லாதவர்களிடமிருந்து வைப்புத் தொகையையோ, கடனோ வாங்கக் கூடாது. எனவே, பிரிவு 59-ம், விதி 42-ம் கூறுவதென்னவென்றால், ஒரு சங்கம் அதன் உறுப்பினர்களிடமிருந்து வரம்பில்லாமல் வைப்புத் தொகைகளைப் பெறலாம் என்பதும், ஆனால், உறுப்பினரல்லாத நபர்களிட

மிருந்து அது பதிவாளரால் குறிப்பிடப்பட்ட அளவுக்கு மட்டும் தான் கடன் வாங்கலாம் என்பதுமே. இது ஒரு சங்கம் தன் உறுப்பினர்களிடமிருந்து வைப்புத் தொகைகளை வாங்குவதை ஊக்குவிக்கும் நோக்கத்தைக் கொண்டது.

எனினும், உண்மையான நடைமுறையில், ஒரு சங்கத்தின் உப விதிகளின்படி கடன் வாங்கும் வரம்பிற்கு உறுப்பினர்களிடமிருந்து சங்கம் வாங்கும் வைப்புத் தொகைகளும் கூட மேற்படக் கூடாது. ஆகையால், ஒரு சங்கம் வெளி நிறுவனங்களிடமிருந்தும் உறுப்பினரல்லாதவர்களிடமிருந்தும் பெறும் வைப்புத் தொகைகளும், கடன்கள் மட்டுமன்றி கடன்களைச் சேர்த்து உறுப்பினர்களிடமிருந்து பெறும் வைப்புத் தொகைகளும் சங்கத்தின் உப-விதிகளில் நிருணயிக்கப்பட்ட கடன் வாங்கும் வரம்பிற்கு மேற்படக்கூடாது. எனவே, ஒரு சங்கத்தின் உப-விதிகளில் நிருணயிக்கப்பட்ட கடன் வாங்கும் வரம்பு ஒரு சங்கம் வைப்புத்தொகைகளின் மூலமும் ஏற்றுக்கொள்ளக்கூடிய மொத்தப் பொறுப்பை எடுத்துக்காட்டுகிறது. ஒரு சங்கம் அதிகப்படியாகக் கடன் வாங்கி அதைச் சரியாகப் பயன்படுத்த முடியாமல், துன்பங்களுக்கு ஆளாகாமல் இருப்பதைத் தடுப்பதற்கு இந்தக் கட்டுப்பாடு தேவைப்படுகிறது. வங்கித் தொழில் செய்யும் ஒரு நாணயச் சங்கத்தின் செயல்களில் இந்தக் கட்டுப்பாடு மிகவும் தேவைப்படுகிறது. ஏனெனில், வைப்புத் தொகைகள் காலத்தில் தவறாமல் திருப்பிச் செலுத்தப்பட வேண்டும். இல்லாவிடில், சங்கத்தில் பொதுமக்கள் வைத்திருக்கும் நம்பிக்கை மட்டும் அல்லாமல் பொதுவான அந்த உள்ளூரில் உள்ள கூட்டுறவு நிறுவனங்களில் பொதுமக்களின் நம்பிக்கையும் பாதிக்கப்படும். வைப்புத் தொகை வைத்திருப்பவர்களுடைய கேட்புகளுக்காகச் சங்கம் வீணை ரொக்கப் பணம் வைத்திருக்க வேண்டிவரும்.

ஸ்டோர்ஸ் சங்கம் அல்லது விற்பனைச் சங்கம் போன்ற இதர சங்கங்களைப் பொறுத்தவரை அவை கடன் வாங்குதலில் ஒரு வரம்பு இல்லை என்றால் மிதமிஞ்சிய வியாபாரம் செய்து நட்டம் ஏற்படும். ஆகையால், எந்த ஒரு சங்கம் அல்லது சங்க வகை வைப்புத் தொகைகள் மூலமாகவும், கடன்கள் மூலமாகவும் திரட்டக்கூடிய நிதிகளின் உச்ச (maximum) வரம்பு பொதுவாக ஒரு சங்கத்தின் உப-விதிகளில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. இந்த வரம்பு தேவைப்படும்போது அப்போதைக்கப்போது மாற்றப் படலாம். சங்கத்தின் தேவைகளை அனுசரித்து இந்த வரம்பைக் குறைக்கவோ, அல்லது அதிகப்படுத்தவோ செய்யலாம். எல்லா வகைச் சங்கங்களுக்காகவும்— வரையறுக்கப்பட்ட பொறுப்பு

சங்கம், வரையறுக்கப்படாத பொறுப்பு சங்கம், தலைமைச் சங்கம், மத்திய சங்கம், பிரதம சங்கம்— இந்த வரம்பு நிருணயிக்கப் படுகிறது. ஒரு சங்கத்தின் நிதி பலத்தைக் குறித்துக்கூட அந்த வரம்பு நிருணயிக்கப்படுகிறது. அதாவது அதன் பங்கு மூலதனம் காப்பு நிதி இதர காப்பு இருப்பு நிதிகள். எனவே, சங்கங்கள் தன் தேவைகளைக் குறித்தும், நிதிகளைச் சரியாகப் பயன்படுத்தும் சாத்தியக்கூறுகளைக் குறித்தும் மட்டும் இல்லாமல், தன் நிதி பலத்தைக் குறித்தும் கூடக் கடன் வாங்கலாம். இந்த நிதி பலம் வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கங்களில், அவைகளின் பங்கு மூலதனம், காப்பு இருப்பு நிதிகள் அடிப்படையின் பேரில் அமையும். வரையறுக்கப்படாத பொறுப்பு சங்கத்தில் நிதிபலம், அவைகளுடைய உறுப்பினர்களின் சொத்துப்பட்டியலில் தெரிய வருகின்ற உறுப்பினர்களின் நிகர சொத்துகளின் அடிப்படையின் பேரில் அமையும்.

சங்கம் கடன் வாங்கும் அடிப்படையும் அல்லது கட்டுப்பாடும்

(அ) வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்களில், அதாவது வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையின் பேரில் அமைக்கப்பட்ட விவசாய நாணயச் சங்கங்களில் கடன்கள் மூலமாகவும் வைப்புத் தொகைகள் மூலமாகவும் வாங்கப்படும் உச்சக் கடன் அளவு உறுப்பினர்களின் நிகர சொத்தில் சில சதவிகிதத்திற்கு மேற்படக்கூடாது. முதன் முதலில் அந்த உச்ச வரம்பு உறுப்பினர்களின் நிகர சொத்துகளில் 1/8 பாகமாக நிருணயிக்கப்பட்டிருந்தது. ஒரு வரையறுக்கப்படாத பொறுப்பு விவசாயச் சங்கத்தின் கடன் வாங்கும் உச்ச அளவு அந்தச் சங்கத்தின் உப-விதிகளில் மாற்ற முடியாத சொற்களில் நிருணயிக்கப்பட்டு, ஆனால் உறுப்பினர்களின் நிகர சொத்துகளில் 1/8 பாகமாக கணக்கிடப்பட்டுக் வந்தது. உறுப்பினர்கள் எண்ணிக்கையும் அவர்களுடைய நிகர சொத்தும் வேறுபட்டால், உப-விதிகள் திருத்தப்பட வேண்டியிருந்தது. இந்த நடைமுறை யால் தாமதம் ஏற்பட்டது. ஆகையால், இப்போது கடன் வாங்கும் உச்ச அளவு உறுப்பினர்களின் நிகர சொத்துகளில் 1/8 பாகமாக சங்கத்தின் உப-விதிகளில் நிருணயிக்கப்படுகிறது. இப்படிச் செய்வதனால் உப-விதிகளை அடிக்கடித் திருத்தம் செய்ய வேண்டிய தேவை தவிர்க்கப்படுகிறது.

கூட்டுறவுக் கடனைப் பற்றிய மேத்தா குழுவினர் இந்தக் கடன் வாங்கும் உச்ச அளவு உயர்த்தப்பட வேண்டும் என்றும் சங்கங்கள் உறுப்பினர்களுடைய நிகர சொத்துகளில் 1/6 பாகத்துக்கு மேற்படாமல் கடன் வாங்குவதற்கு அனுமதிக்கப்

படவேண்டும் என்றும் பரிந்துரை செய்தனர். இந்த யோசனையைத் தமிழ்நாடு அரசாங்கம் ஏற்றுக்கொண்டுவிட்டது. இப்போது அமலில் இருக்கிறபடி வரையறுக்கப்படாத பொறுப்பு விவசாய நாணயச் சங்கம் தன்னுடைய உறுப்பினர்களின் நிகர சொத்துகளில் 1/6 பங்கு வரம்புக்கு உட்பட்டுக் கடன் வாங்கலாம். வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையில் இயங்குகின்ற விவசாய வங்கிகள் போன்ற இதர விவசாய நாணயச் சங்கங்களிலும், நகர வங்கிகளிலும், அவைகளின் கடன் வாங்கும் உச்ச வரம்பு, அவைகளின் பங்கு மூலதனம், காப்பு நிதி, இவைகளைப் பொறுத்து (சொந்த நிதிகள்) நிருணயிக்கப்படுகிறது. பொதுவாக இந்தச் சங்கங்கள் தங்களுடைய செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தையும் காப்பு நிதியையும் சேர்த்து அத் தொகை போன்று 8 மடங்குகள் வரை கடன் வாங்குவதற்கு அனுமதிக்கப் படுகின்றன. கூட்டுறவுக் கடனைப் பற்றிய மேத்தா குழுவினர் வரையறுக்கப்பட்ட பிரதம நாணயச் சங்கங்களில் அவைகளின் கடன் வாங்கும் உச்ச வரம்பை அவைகளின் சொந்த நிதிகளின் 10 மடங்குகளிலிருந்து 12 மடங்குகள் வரை நிருணயிப்பதற்குப் பதிவாளர் அனுமதிக்கப்படவேண்டும் என்று பரிந்துரை செய்தனர்.

(ஆ) மத்தியக் கூட்டுறவு வங்கிகள், மாநிலக் கூட்டுறவு வங்கியிலும் கூட அவைகளின் கடன் வாங்கும் உச்ச வரம்பு அவைகளின் சொந்த நிதிகளைப் பொறுத்து நிருணயிக்கப் படுகின்றது. மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் இந்த உச்சவரம்புப் பங்கு மூலதனத்தையும் காப்பு நிதியையும் சேர்த்து அதில் 12 மடங்குகளாகவும், மாநிலக் கூட்டுறவு வங்கியில் அது 15 மடங்குகளாகவும் நிருணயித்திருக்கிறார்கள். இந்தச் சூழ்நிலையில் 'சொந்த நிதிகள்' (Owned Funds) என்ற சொற்றொடரைப் பற்றித் தெளிவாகப் பொருள் கொள்ள வேண்டியது தேவையாக இருக்கிறது. கூட்டுறவுச் சங்கங்களின் சட்டமும், அத்தச் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட விதியும் சொந்த நிதிகள் என்ற தொடரைப் பற்றி விளக்கம் கூறவில்லை. தமிழ்நாட்டில் ஒரு கூட்டுறவு வங்கியின் கடன் வாங்கும் வரம்பைத் தீர்மானிக்கும் செயலுக்காகச் 'சொந்த நிதிகள்' என்பன செலுத்தப்பட்ட மொத்த பங்கு மூலதனமும் சேமநல நிதியும் ஆகும். இதனை ஆலோசித்த மேத்தா குழுவினர், செலுத்தப்பட்ட பங்கு மூலதனமும் காப்பு நிதியும் மட்டும் அல்லாமல் சங்கத்தின் இலாபங்களிலிருந்து ஏற்படுத்தப்பட்ட நிலையான தன்மையுடைய கட்டட நிதி, ஸ்திரப் படுத்தும் நிதி (Stabilisation fund) நிலவள வங்கிகளின் கடன் ஈட்டுப் பத்திரங்களைத் தவிர இதர வங்கிகளின் கடன் ஈட்டுப்

பத்திரங்களுக்காக ஏற்படுத்தப்படும் கடன் தீர்நிதி (Sinking Fund) போன்ற இதர நிதிகளையும் கடன் வாங்கும் உச்ச வரம்பை நிருணயிப்பதற்குச் 'சொந்த நிதிகளாகச்' சேர்த்துக் கொள்ளப் படவேண்டும் என்ற கருத்து கொண்டனர்.

மேத்தா குழுவினர் கருத்தின்படி மத்திய வங்கிகளும்; மாநிலக் கூட்டுறவு வங்கிகளும் முறையே தங்கள் சொந்த நிதிகளின் 12 மடங்குகளுக்குமேல், 15 மடங்குகளுக்குமேல் கடன் வாங்குவதற்குத் தேவை ஏற்படாவிட்டாலும், கடன் வாங்கும் வரம்புகள் மேலும் தளர்த்தப்படவேண்டும் என்று தேவைப்படும் போது, கடன் வாங்கும் உச்ச வரம்பு மத்திய வங்கிகளில் சொந்த நிதிகளின் 12 மடங்குகளிலிருந்து 15 மடங்குகளுக்கும் மாநிலக் கூட்டுறவு வங்கிகளில் 15 மடங்குகளிலிருந்து 20 மடங்குகள் வரை உயர்த்தப்படலாம் என்பதே. மத்திய வங்கிகள் மாநிலக் கூட்டுறவு வங்கி இன்னும் இதர சங்க வகைகளுக்குட்பட்டு வரையறுக்கபட்ட பொறுப்புச் சங்கங்களில் அவற்றின் கடன் வாங்கும் உச்ச வரம்பு. பங்கு மூலதனமும் காப்பு நிதியும் இதர சொந்த நிதிகளும் சேர்ந்து அவற்றில் இத்தனை மடங்கு என்று அவற்றின் உட-விதிகளிலேயே நிருணயிக்கப்படுகிறது.

ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய பல்வேறுவித வைப்புத் தொகைகளைப் பற்றியும் அத்தகைய வைப்புத் தொகைகளின் பேரில் கொடுக்கப்படவேண்டிய வட்டி விகிதங்களைப் பற்றியும் பிரதம சங்கங்களின் உப-விதிகளில் விதிக்கப்பட்டிருக்கின்றன. சில சூழ்நிலைகளில் இவை இயக்குநர்கள் குழுவால் அவ்வப்போது தீர்மானிக்கப்படுகின்றன. ஒரு சங்கத்தின் உப-விதிகள், அந்த சங்கம் எந்தச் சூழ்நிலைகளில் நிதிகளைக் கடன் வாங்கலாம் என்றும் அந்தக் கடன்களின் பேரில் கொடுக்கப்பட வேண்டிய வட்டி விகிதங்களின் உச்ச வரம்பையும், அவ்வாறு கடன் வாங்குவதற்குக் கையாளவேண்டிய நடைமுறையையும், நிருணயிக்க வேண்டும் என்று விதி 4 (எம்) கூறுகிறது. ஆகையால், ஒரு சங்கம் அதனுடைய விதியைப் பொறுத்துக் கடன் வாங்கவேண்டும். மற்றும் அது பண அங்காடியில் நிலவும் நிலைமையை அனுசரித்து வைப்புத் தொகைகளில் வாங்கவேண்டும்.

நாணயச் சார்பில்லாத (Non-Credit) சங்கங்கள்கூட வைப்புத் தொகைகளைப் பெறுகின்றன. அவை வங்கித் தொழில் செய்யும் செயலுக்காக அத்தகைய வைப்புத் தொகைகளை வாங்குவதில்லை. அதாவது கடன் கொடுப்பதற்காக அல்ல; தங்கள் சொந்தத் தொழிலில் பயன்படுத்திக் கொள்வதற்காக

அத்தகைய வைப்புத் தொகைகளை வாங்குகின்றன. இந்தச் சங்கங்கள் விற்பனைச் சங்கங்கள், பதனப்படுத்தும் சங்கங்கள், ஸ்டோர்ஸ் சங்கங்கள் முதலியன போன்ற கடன் அல்லாத வகை சங்கங்கள். இவை தங்கள் சொந்த வியாபாரத்தில் பயன்படுத்துவதற்காகப் பிரதானமாக உறுப்பினர்களிடமிருந்தும், உறுப்பினர்களல்லாதவர்களிடமிருந்தும் வைப்புத் தொகைகளை ஈட்டிக் கொள்கின்றன. அவை காசோலை (Cheques) மூலம் திரும்பப் பெறக்கூடிய வைப்புத் தொகைகளைப் பெற்றாலும்கூட, அவை பொதுமக்களுடன் வங்கித் தொழில் செய்யும் வங்கி நிறுவனங்கள் போன்றில்லாமல் உறுப்பினர்களுக்கு மட்டும்தான் காசோலை மூலம் பணம் தருவதை அனுமதிக்கலாம்.

3. ஒரு சங்கத்தில் வழங்கப்படும் கடன்கள் அல்லது முன்பணங்களின் பேரில் கட்டுப்பாடுகள் (பிரிவு 58) (Restriction on loans and advances made by a Society)

அநேகமாக, இந்தப் பிரிவு நாணயச் சங்கங்களுக்குப் பொருந்தும். சிறிதளவு சில தனிப்பட்ட சூழ்நிலைகளில் ஒரு குறிப்பிட்ட செயல் அல்லது செயல்களுக்காக முன் பணங்கள் வழங்கும் ஸ்டோர்ஸ் சங்கங்கள், விற்பனைச் சங்கங்கள் முதலியன போன்ற இதர சங்க வகைகளுக்கும் பொருந்தும். சங்கங்கள் கடன்களை அனுமதிப்பதில் கையாள வேண்டிய கொள்கைகளும் கட்டுப்பாடுகளும் கீழ்வருமாறு:

(i) முதலில் ஒரு சங்கம் உறுப்பினரல்லாதவர்களுக்குக் கடன் வழங்கக்கூடாது.

ஒரு சங்கம் உறுப்பினரல்லாத வேறு எந்த நபருக்கும் பிரிவு 58 (1)-ன் படி கடன் வழங்கக்கூடாது. ஒரு சங்கத்தின் நோக்கம் அதனுடைய உறுப்பினர்களின் நலன்களை வளர்த்து, உறுப்பினர்களுக்கு வகை செய்யவேண்டும் என்பதே. ஓர் உறுப்பினரல்லாதவர்களுக்குக் கடன் கொடுப்பது ஒரு சட்ட விரோதமான செயல் அத்தகைய கடனை அனுமதித்த தலைவர் அல்லது தலைவர்கள் அத்தகைய சட்ட விரோதமான கடன்களால் நேரிட்ட நட்டத்திற்குப் பொறுப்பாளிகளாவர். இந்தப் பொது விதிகளுக்குக் கீழ்க்கண்ட விலக்குகள் உள்ளன.

(அ) ஒரு சங்கம் பதிவாளருடைய பொது அல்லது தனிப்பட்ட அங்கீகாரத்துடன் மற்றொரு சங்கத்திற்குக் கடன்கள் வழங்கலாம் [பிரிவு 58 (1) விலக்குக்கூறு]. ஒரு சங்கம் மற்றொரு சங்கத்திற்குக் கடன் கொடுப்பது சங்கங்களுக்குள் கடன்

கொடுப்பதாக அமையும். இது தடை செய்யப்பட்டிருக்கிறது. ஆனல், ஒரு சங்கம் அதனுடன் இணைக்கப்பட்ட சங்கங்களுக்கு நிதி வழங்குவதை அதன் முக்கிய நோக்கமாக வைத்திருந்தால் அச் சங்கங்களுக்குக் கடன் கொடுக்கலாம். உண்மையான நடைமுறையில், அவ்வாறு சங்கங்களுக்குள் ஒருவருக்கொருவர் கடன் கொடுப்பதற்குத் தேவை இராது. ஏனெனில், ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு மத்திய வங்கியும், மாநில மட்டத்தில் ஒரு தலைமை வங்கியும் எல்லா சங்கங்களுக்கும் கடன் வழங்குவதை மேற்கொண்டிருக்கின்றன. சங்கங்களுக்குள் ஒருவருக்கொருவர் கடன் கொடுப்பது குழப்பத்தில் முடியும். அன்றியும் அது கடன் கொடுப்பதில் ஒரு படித்தான விதிமுறை சாத்தியப்படாது.

ஒரு சங்கம் அதிகப்படியான நிதிகளை வைத்துக் கொண்டிருந்தால் அந்த நிதியை அது ஒரு மத்திய வங்கியில் வைப்புத் தொகையாகப் போட்டு வைக்க வேண்டும். ஒரு மாவட்டத்தில் ஒரு மத்திய வங்கி நிதிகளைச் சமப்படுத்தும் ஒரு நிலையம். சங்கங்களுக்கு வேண்டிய நிதிகளை மத்திய வங்கி வழங்கும். மத்திய வங்கிக்குப் போதுமான நிதியில்லாமலிருந்தால், அது தலைமை வங்கியிலிருந்து கடன் வாங்குகிறது. தலைமை வங்கி, இந்திய ரிசர்வ் வங்கி அல்லது இந்திய அரசாங்க வங்கியிலிருந்து, தன் சொந்த நிதிகள் போதுமானவையாக இல்லாமலிருக்கும்போது, மத்திய வங்கிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குக் கடன் வாங்குகிறது.

தமிழ்நாட்டில், கூட்டுறவுக் கடன் வழங்கும் திட்டம் ஒரு மூன்று அடுக்குத் திட்டமாக இருக்கிறது நிலவள வங்கிகளில் அது ஓர் இரண்டு அடுக்குத் திட்டமாக இருக்கிறது. எப்படி இருந்தாலும், சங்கங்கள் தங்களுக்குள் ஒருவருக்கொருவர் கடன் கொடுக்கக்கூடாது. அப்படிக் கொடுத்தால், குழப்பமும், நடைமுறைக் குலைவும் கண்காணிப்பின்மையும் ஏற்படும். எனினும், தவிர்க்கவியலாத சூழ்நிலைகளில், ஒரு சங்கம் மற்றொரு சங்கத்திற்குக் கடன் கொடுப்பதற்கு அனுமதிக்கப்படலாம். உதாரணமாக, ஒரு நகர வங்கி ஒரு சங்கத்தால் நிறைவேற்றப்படும் விவசாய அல்லது தொழில் கடன் திட்டத்தில் தனிப்பட்ட அக்கறையெடுத்துக் கொண்டால் அவ்வாறு கடன் வழங்குவதற்கு அனுமதிக்கப்படலாம். ஆனல், ஒரு மத்திய வங்கியால் கடன் கொடுப்பதைவிட சங்கத்தால் மேற்கொள்ளப்படும் ஒரு திட்டத்தின் வளர்ச்சிக்கு நகர வங்கியே கடன் கொடுக்கும் ஏற்பாடு நலன் தரும் என்று உறுதியாகத் தோன்ற வேண்டும். எனினும், அத்தகைய சூழ்நிலைகள் மிக மிக அபூர்வம்.

ஆகையால், இந்தச் சரத்து சில தனிப்பட்ட அசாதாரண சூழ்நிலைகளில் பதிவாளர் அத்தகைய ஏற்பாட்டை மேற்கொள்வதை அனுமதிக்கும் ஒரு சரத்தாக உள்ளது.

(ஆ) ஒரு சங்கம் தன்னுடைய ஊதியம் பெறும் ஊழியர்களுக்குத் தன் உப-விதிகளில குறிக்கப்பட்டிருக்கும் கடன்களை வழங்கலாம் [பிரிவு 58 (1)-ன் இரண்டாவது விலக்குக்கூறு] ஊழியர்கள் சங்கத்தின் உறுப்பினர்கள் அல்லர். அவர்கள் உறுப்பினர்களாக முடியாது; பிரிவு 18 (1) (ஈ)-ல் அவர்கள் உறுப்பினர் களாவது தடை செய்யப்பட்டிருக்கிறது. எனினும், பொங்கல், தீபாவளி, முதலியன போன்ற பண்டிகைக் காலங்களில் கடன்கள அல்லது முன் பணங்கள் வழங்கப்பட வேண்டும். ஆகையால், இந்தப் பிரிவின் விலக்குக் கூற்றின் கீழ் சங்க ஊழியர்களுக்குச் சங்கம் கடன் கொடுக்க வசதி செய்யும்பொருட்டு, ஒரு விதி விலக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

(இ) ஒரு சங்கம் அதன் வசம் தொகை வைப்பவருக்கு (Depositors). அவர் சங்கத்தின் உறுப்பினராக இல்லாமலிருப்பினும் அவருடைய வைப்புத் தொகையின் ஈட்டின் பேரில் கடன் வழங்கலாம் [பிரிவு 58 (2)]. உறுப்பினரல்லாதவர்களுக்கு இந்தக் கடன் வசதி மிகவும் தேவையாக இருக்கிறது. இந்த வசதி அளிக்கப்படவில்லையானல், கூட்டுறவு நிறுவனங்கள் வைப்புத் தொகைகளை ஈர்ப்பதற்கு இயலாது. அத்தகைய கடன்களை வழங்குவது முற்றிலும் சேதமடையாமல் இருப்பதோடு, இந்த அடிப்படையான வசதியை உறுப்பினரல்லாத தொகை வைப்பவர்களுக்குக் கொடுக்க மறுத்தால், அவர்கள் இந்த வசதியை அளிக்கும் வணிக வங்கிகளிலும் இதர வங்கிகளிலும மட்டும்தான் முதலீடு செய்வார்கள். ஆகையினல், பிரிவு 58 (2)-ல் இந்தச் சரத்து ஏற்படுத்தப்பட்டுள்ளது. [கடன் என்ற சொல் பண்டமாகவும் (Kind) ரொக்கப் பணமாகவும் (Cash) அளிக்கப்படும் கடன்களைக் குறிக்கும்.

(ii) ஒரு சங்கம் அல்லது சங்க வகையால் அசையாச் சொத்து அடைமானத்தின் பேரில் வழங்கப்படும் கடன்களைக் குறித்த கட்டுப்பாடுகள் : ஒரு சங்கம் அசையாச் சொத்தின் அடைமானத்தின் பேரில் கடன் கொடுப்பதைத் தடை செய்யவோ அல்லது கட்டுப்படுத்தவோ அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு. [பிரிவு 58 (3)-ம், விதி 43-ம] இந்தக் கட்டுப்பாடுகளின் விவரங்கள் விதி 43-ல் சொல்லப்பட்டிருக்கின்றன. உறுப்பினர்களுக்குப் பொதுவாக அளிக்கப்படும் கடன்கள் குறுகிய

காலக்கடன், மத்திய காலக் கடன், நீண்டகாலக் கடன் என்று வகைப் படுத்தப்பட்டிருக்கின்றன. இந்தப் பாகுபாடு கடன் கொடுக்கப்படும் காலவரம்பைப் பொருத்தது. கடன் ஏட்டைப் பொறுத்துக் கடன்களை நபர் ஜாமீன் கடன் என்றும் அடைமானக் கடன்கள் என்றும் பாகுபாடு செய்யப்பட்டிருக்கின்றன. பொதுவாகக் குறுகியகாலக் கடன்கள், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட உறுப்பினர்களின் நபர் ஜாமீன் பேரில் கடன் வாங்குபவருக்குக் கொடுக்கப்படுகின்றன. இந்தக் கடன்கள் அடுத்த அறுவடையின் வருமானத்திலிருந்து திருப்பிச் செலுத்தப் படவேண்டும். எவ்வாறாக இருந்தாலும், கரும்பைப் போன்ற சில பயிர் வகைகளுக்குத் தவிர, மற்ற பயிர்களுக்கு ஒரு வருடத்திற்குள் இந்தக் கடன்கள் திருப்பிச் செலுத்தப்பட வேண்டும். கரும்பு போன்ற சில பயிர் வகைகளில் கடன்களைத் திருப்பிக் கொடுப்பதற்கு ஒரு வருடத்திற்கு மேற்பட்ட காலம் தேவைப்படலாம் விதி 43 (4). குறுகிய காலக் கடன்கள் அசையாச் சொத்தின் அடைமானத்தின் பேரிலும் கூடக் கொடுக்கப்படலாம்.

மத்தியக் காலக் கடன்கள், பொதுவாக மூன்று வருட காலத்திற்குக் கொடுக்கப்படுகின்றன. அவை ஐந்து வருடங்களுக்கு மேற்பட்ட காலத்திற்குக் கொடுக்கப்படுவதில்லை. இந்தக் கடன்கள் பொதுவாக அசையாச் சொத்து அடைமானத்தின் பேரில் வழங்கப்படுகின்றன. ஆனால், சில நேரங்களில் கடன் தொகை அதிகமாக இல்லாமலிருப்பின், அத்தகைய கடன்கள் நபர் ஜாமீன் பேரிலும் வழங்கப்படலாம். நீண்ட காலக் கடன்கள் ஐந்து வருடங்களிலிருந்து இருபது வருடங்கள் வரை, நீடிக்கும் காலங்களுக்கு வழங்கப்படுகின்றன. அத்தகைய கடன்கள் நிலவள வங்கிகள், வீடு அடைமான வங்கிகள் முதலியன போன்ற தனிப்பட்ட நாணயக் கூட்டுறவு நிறுவனங்களால் வழங்கப்படுகின்றன. அசையாச் சொத்துகளின் பேரில் வழங்கப் படும் கடன்களைக் குறித்து விதிக்கப்படவேண்டிய கட்டுப்பாடுகள், ஒரு சங்கத்தின் குறுகிய கால வைப்புத்தொகைகள் எந்தக் கால வரம்பிற்கு வாங்கப்பட்டிருக்கின்றனவோ அந்தக் காலத்திற்கு அதிகமான கால வரம்பிற்கு அடைமானக் கடன்களில் கட்டுண்டு இராமல் ஒரு சங்கத்தின் நிதிகளை முறைப்படுத்தப்பட வேண்டிய தேவையால் எழுகின்றன. நிலவள வங்கிகள், அல்லது வீடு அடைமான வங்கிகள் போன்ற நீண்ட காலக் கடன்களை அசையாச் சொத்தின் அடைமானத்தின் பேரில் வழங்குவதை முக்கிய நோக்கமாகக் கொண்ட சங்கங்களைத் தவிர, இதரச் சங்கங்கள் அசையாச் சொத்து ஈட்டின்பேரில் கடன்

வழங்குவதைத்தான் விதி 43 கட்டுப்படுத்துகிறது. இந்த விதியில் கூறப்பட்டிருக்கும் கட்டுப்பாடுகள் சுருக்கமாகக் கீழே குறிக்கப்பட்டிருக்கின்றன.

(அ) ஒரு பிரதம நாணயச் சங்கம் அல்லது ஒரு நிதி வங்கி, சாதாரணமாக, அசையாச் சொத்தின் அடைமானத்தின் பேரில் மூன்று வருடங்களுக்கு அதிகமான கால வரம்பிற்குக் கடன் வழங்கக் கூடாது [விதி 43 (1)].

(ஆ) தனிப்பட்ட சூழ்நிலைகளிலும், குளங்கள், கிணறுகள் முதலியன போன்ற நீர்ப்பாசனங்களைக் கட்டுதல் அல்லது பழுது பார்த்தல், பம்பு செட்டு வாங்குதல், குடிசைத் தொழில் அபிவிருத்தி செய்தல் முதலியன போன்ற செயல்களுக்கும், அத்தகைய கடன்களின் கால வரம்பு ஐந்து வருடங்கள் வரை போகலாம் [விதி 43 (1)-ன் விலக்குக் கூறு].

(இ) சங்கம் அல்லது மத்திய வங்கியின் நிதி நிலைமையை அனுசரித்து அந்த நிறுவனம் வழங்கக் கூடிய குறுகிய காலக் கடன்களின் உச்ச வரம்பையும், மத்தியக் காலக் கடன்களின் உச்ச வரம்பையும் பதிவாளர் நிருணயிக்கலாம் [விதி 43 (அ)].

(ஈ) அவ்வாறு நிருணயிக்கப்பட்ட உச்ச வரம்பில் 50 சதவிகிதத்திற்கு மேற்படாமல் மூன்று வருடங்களுக்கு மேற்பட்டும் ஐந்து வருடங்களுக்கு உட்பட்டுமுள்ள காலவரம்பிற்குக் கடன்கள் வழங்கலாம். எஞ்சிய 50 சதவீதம் ஒரு வருடத்திற்கு மேற்பட்டும், மூன்று வருடங்களுக்கு உட்பட்டும் உள்ள கால வரம்பிற்கு மட்டும்தான் கடன்கள் வழங்கப்படவேண்டும். [விதி 43 (2)-ன் விலக்குக் கூறு].

(உ) வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையிலுள்ள எந்த ஒரு விவசாய நாணயச் சங்கமும், ஐந்து வருடங்களுக்கு மேற்பட்ட காலத்திற்குக் கடன்கள் கொடுக்கமுடியாது [விதி 44 (3)].

உறுப்பினர்களுக்கு மட்டும் கடன்கள் வழங்கப்படவேண்டும் என்ற கட்டுப்பாட்டைப் போன்று, உறுப்பினர் அல்லாதவர்களுடன் லேவாதேவி செய்யக்கூடாது என்ற கட்டுப்பாடு விதி 49-ல் விதிக்கப்பட்டுள்ளது. அந்த விதியின் கீழ், எந்த ஒரு ஸ்டோர்ஸ் சங்கமும் உறுப்பினர் அல்லாத நபர்களுக்குப் பதிவாளரின் முன் அனுமதியைப் பெறுமல் தன் சரக்குகளை விற்கக்கூடாது. எனினும், நடைமுறையில் உறுப்பினரல்லாதவர்களுக்குச் சரக்குகளை விற்பதற்கு வேண்டிய அனுமதி பதிவாளரால் பெரும்பாலும் கொடுக்கப்படுகிறது. சங்கத்தில் கொள்முதல்

செய்வதற்கும் அதன் சேவைகளைக் கோர உறுப்பினர்களுக்கு ஒரு முன்னுரிமை இருப்பது தெளிவு. ஆனாலும், ஸ்டோர்ஸ் சங்கங்கள் பொதுவாக ரொக்கத்திற்கு விற்பதால் உறுப்பினரல்லாதவர்களுடன் வியாபாரம் செய்வதில் ஒரு சிக்கலும் இல்லை. மேலும் விநியோகச் சங்கங்கள், பற்றுக்குறைக் காலத்திலும் அல்லது தேசிய நெருக்கடிக் காலத்திலும், உறுப்பினரல்லாதவர்களுக்கும் கூட விற்பனை செய்யவேண்டியிருக்கிறது. ஏனென்றால், அவை அந்தக் காலங்களில் பங்கீட்டுப் பொருள்களின் விற்பனையை மேற்கொண்டும், சர்க்கரை, மண்ணெண்ணை போன்ற இன்றியமையாத பொருள்களையும் அரிசி, கோதுமை போன்ற உணவுப் பொருள்களையும் விநியோகம் செய்கின்றன.

4. நிதிகளை முதலீடு செய்தல் (பிரிவு 60-ம் விதி 44-ம்) (Investment of Funds)

பிரிவு 60-ல் சங்கத்தின் காப்பு நிதி மட்டுமல்லாமல் சங்கத்தின் வியாபாரத்திற்கு உடனே தேவைப்படாத நிதிகளைச் செலவு செய்தல் அல்லது பயனைக் குறித்தும் சரத்து செய்யப்பட்டுள்ளது. அவ்வாறு உபரி நிதிகளைப் பயன்படுத்துவது அனுமதிக்கப்படக்கூடியதும் ஆகும். 1961ஆம் வருடத்திய மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 70ஆம் பிரிவின் கீழ், ஒரு சங்கம் தன்னுடைய நிதிகளை அந்தப் பிரிவில் சுட்டிக் காட்டப்பட்டிருக்கும் முறைகளில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட முறைகளில் முதலீடு செய்தல் அதன் கடமையாகும். அத்தகைய கட்டுப்பாடு, தமிழ்நாட்டுக் கூட்டுறவுச் சட்டத்தில் இல்லை. ஒரு சங்கத்தின் காப்பு நிதியை முதலீடு செய்வது பதிவாளரால் அவ்வப்போது ஒழுங்கு படுத்தப்பட்டாலும் ஒரு பிரதமச் சங்கம் தன்னுடைய காப்பு நிதியைத் தன் சொந்த வியாபாரத்தில் பயன்படுத்துவது தடை செய்யப்படவில்லை. சங்கம் தன்னுடைய நிதிகளைப் பிரிவு 60-ன் பகுதிகள் (அ) முதல் (ஈ) வரை குறிக்கப்பட்டிருக்கும், என்ற ஒரு கடன் பத்திரத்திலும் முதலீடு செய்வதற்கு உரிமையுடையது. மேலும், விதிகளில் அனுமதிக்கப்படும் இதர முறையிலும் முதலீடு செய்யலாம் [பிரிவு 60 (உ)].

(i) தபால் நிலையங்களில் வைக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களின் கணக்குகள் பொதுத் துறைக் கணக்குகளாகப் (Public Accounts) பாவிக்கப்படுகின்றன. பொதுத் துறைக் கணக்கிலிருந்து ஒரு சமயத்தில் திருப்பிப் பெறக்கூடிய தொகையின் உச்சவரம்பு, திரும்பப் பெறுவதற்காகத் தேவைப்படும் அத்தகைய முன்னறிவிப்பு நாள்களின் எண்ணிக்கை பற்றிய சலுகை

கள் கூட்டுறவுக் கணக்கிலிருந்து திரும்பப் பெறுதலுக்கும் உண்டு [பிரிவு 60 (அ)]. அதாவது, கூட்டுறவுச் சங்கங்கள் தன்னுடைய கணக்கிலிருந்து மாவட்டத் தலைமை அலுவலகம், அல்லது தாலுக்கா தலைமை அலுவலகத்திலுள்ள எல்லாத் தபால் நிலையங் களிலும் முப்பது நாள்கள் அறிவிப்பில் ரூபாய் 3,000/- வரை திரும்பப் பெறலாம். பத்து நாள்கள் அறிவிப்பில் ரூபாய் 10,000 வரை திரும்பப் பெறலாம். இதர எல்லாத் தபால் நிலையங்களிலும் பத்து நாள்கள் அறிவிப்பில் ரூபாய் 3,000/- திரும்பப் பெறலாம்.

(ii) இந்தியப் பொறுப்பமைப்புச் சட்டத்தின் (Indian Trust Act) 1882ஆம் வருடத்திய மத்தியச் சட்டம் பிரிவு 20-ல் குறிக்கப் பட்ட கடன் பத்திரங்கள் பின்வருமாறு [பிரிவு 60 (ஆ)]. பொறுப்பமைப்புப் பணத்தை முதலீடு செய்தல் (Investment of Trust Money), ஒரு பொறுப்பமைப்புச் சொத்து (Trust Property) பணமாக இருந்து அந்தப் பணத்தைப் பொறுப்பமைப்புச் செயல் களுக்குகாக உடனே அல்லது விரைவான தேதியில் பயன்படுத்த முடியாதபோது, பொறுப்புரிமையர் (Trustee) பொறுப்பமைப்புப் பத்திரத்தில் (Instrument of Trust) குறிக்கப்பட்டிக்கும் யாதேனும் கட்டளைக்குட்பட்டு, கீழ்க்கண்ட பத்திரங்களில் முதலீடு செய்யக் கடமைப்பட்டுள்ளவர் ஆவார். அவர் வேறு எந்தக் கடன் பத்திரங் களிலும் முதலீடு செய்யக் கூடாது.

(அ) கடனுறுதிச் சீட்டு (Promissory Note): கடனீட்டுப் பத்திரம் (Debentures) எந்த ஒரு மாநில அரசாங்கத்தின் அல்லது இந்திய அரசாங்கத்தின் அல்லது பிரிட்டிஷ் கூட்டரசின் பங்குப் பத்திரம் (Stock) அல்லது பிற பிணையங்கள் (Other Securities).

(ஆ) இந்திய அரசாங்கத்தின் வருமானத்தின் பேரில் பேரரசு பார்லிமெண்டால் சாற்றப்பட்ட கடன் பத்திரங்கள் (Bonds), கடனீட்டுப்பத்திரங்கள் (Debentures), ஆண்டுத்தொகைப் பத்திரங்கள் (Annuities). ஆனால், 1916ஆம் ஆண்டு பிப்ரவரி 15ஆம் தேதிக்குப் பிறகு ஒரு முடிக்கத்தக்க ஆண்டுத் தொகை பத்திரமாக இருந்தால் (Terminable Annuity) அத்தகைய எந்த ஓர் ஆண்டுத் தொகை பத்திரத்தில், ஒரு கடன் தீர்வு நிதி (Sinking Fund) அத்தகைய ஆண்டுத் தொகைப் பத்திரம் தொடர் பாக ஏற்படுத்தப்பட்டிருந்தால் ஒழிய, எந்தப் பணத்தையும் முதலீடு செய்யக் கூடாது. இந்த விலக்குக்கூறு மேற்கண்ட தேதிக்கு முன்பு செய்யப்பட்ட முதலீடுகளுக்குப் பொருந்தாது.

(ஆ. ஆ) இந்திய அரசாங்கத்தால் அல்லது இங்கிலாந்தில் இந்திய அரசுக்கான செயலரால் (Secretary of State for India in Council) இனிமேல் எப்பொழுதாவது வெளியிடப்படும் இந்திய

பங்குத் தொகை $3\frac{1}{2}$ சதவீதம் ($3\frac{1}{2}$%), இந்திய பங்குத் தொகுப்பு 3%, அல்லது வேறு எந்த விதமான மூலதன பங்குத் தொகுப்பு (Capital Stock) அத்தகைய பங்குத் தொகுப்புகள் இந்திய அரசாங்க வருமானத்தின் பேரில் பார்லிமெண்டின் ஒரு சட்டத்தின் அதிகாரத்தின்கீழ் சாற்றப்பட்டிருக்க வேண்டும். பம்பாய் மாநிலக் கூட்டுறவு வங்கியின் கடன் ஈட்டுப் பத்திரங்களில், அப் பத்திரங்களின்பேரில் வட்டித் தொகை இந்திய அரசுக்கான செயலரால் உத்தரவாதம் அளிக்கப்பட்டிருந்தால் முதலீடு செய்யலாம்.

(இ) இரயில்வே அல்லது இதர கம்பெனிகளால் வெளியிடப் பட்ட கடன் ஈட்டுப் பத்திரங்களிலும் பங்குப் பத்திரங்களிலும் அத்தகைய பத்திரங்களின்பேரில் வட்டித் தொகை இந்திய அரசுக்கான செயலரால் உத்தரவாதம் அளிக்கப்பட்டிருந்தால் முதலீடு செய்யலாம்.

(ஈ) பிரிட்டிஷ் இந்தியாவில் அமைக்கப்பட்ட சட்டசபை களின் ஒரு சட்டத்தின் அதிகாரத்தின்கீழ் அல்லது எந்த ஒரு நகராட்சி நிறுவனம் துறைமுகப் பொறுப்பாயம் (Port Trust) எந்த ஒரு மாநில நகரத்தில் அல்லது இரங்கோன் நகரத்தி லுள்ள நகர முன்னேற்றம் பொறுப்பாயம் (City Improvement Trust) அல்லது கராச்சி துறைமுகப் (Port of Karachi) பொறுப்பாளிகளால் அல்லது அவர்கள் சார்பில் வெளியிடப்பட்ட கடனீட்டுப் பத்திரங்களில் அல்லது இதர கடன் பத்திரங்களில் முதலீடு செய்யலாம்.

(2) பிரிட்டிஷ் இந்தியாவிலிருக்கின்ற அசையாச் சொத்தின் முதல் அடைமானத்தின் பேரில் முதலீடு செய்யலாம். ஆனால், அந்தச் சொத்து ஐந்து வருட காலச் சொத்தாக இருக்கக்கூடாது. மேலும், அந்தச் சொத்தின் மதிப்பு அடைமானக் கடன் தொகைக்கு 1/3-க்கு மேற்பட்டும், அல்லது அந்தச் சொத்து கட்டடங்களாக இருந்தால், பாதிக்கு மேற்பட்டும் இருக்க வேண்டும்.

(ஊ) உயர்நீதி மன்றத்தால், அவ்வப்போது நிருணயிக்கப் படும் எந்த விதி அல்லது பொறுப்பமைப்பு (Trust) அல்லது ஆவணம் (Instruments) வழி அதிகாரமளிக்கப்பட்ட பிற கடன் பத்திரங்களிலும் முதலீடு செய்யலாம். ஆனால், ஒப்பந்தம் செய்வதற்குத் தகுதி பெற்ற ஒரு நபர் இருந்தாலும், அல்லது எந்த ஒரு நபர் ஆயுள் முழுவதும் ஒரு பொறுப்புச் சொத்தின் (Trast Properties) வருமானத்தை வாங்குவதற்கு உரிமை பெற்ற

வராயிருந்தாலும், எழுத்துமூலம் அவருடைய அனுமதியின்றி பகுதிகள் (ஈ), (உ) மற்றும் (ஊ)-ல் குறிக்கப்பட்ட எந்த ஒரு கடன் பத்திரத்திலும் முதலீடு செய்யக் கூடாது.

நில அடைமான வங்கியின் கடனீட்டுப் பத்திரங்கள், 1934ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவு நில அடைமான வங்கிச் சட்டத்தின்கீழ், பொறுப்புரிமையர் பிணையங்களாகச் (Trustee Securities) செய்யப்பட்டிருக்கின்றன. தமிழ்நாடு நில வள வங்கியின் இந்தக் கடன் பத்திரங்களின் அசலும் வட்டியும் அரசாங்கத்தால் உத்தரவாதம் அளிக்கப்பட்டு இந்திய பொறுப் பமைப்புச் சட்டத்தின் (Indian Trust Act) பிரிவு 20-ன் கீழ் பொறுப்புரிமையர் பிணையங்களாக இருக்கின்றன.

(3) ஒரு சங்கம் மற்றொரு சங்கத்தில் பங்குகள் எடுத்துக் கொள்வதன்மூலம் தன் நிதிகளை அந்தச் சங்கத்தில் முதலீடு செய்யலாம். அங்கத்துவம் தேவையாக இல்லாத போதிலும் ஒரு சங்கம் மற்றொரு சங்கத்தில் பங்குகள் மூலமாகத்தான் நிதிகளை முதலீடு செய்வதற்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கும் சூழ்நிலை களும் இருக்கின்றன. உதாரணமாக, பெரிய நாணயச் சங்கங்கள், நூற்பு ஆலைகள் அல்லது சர்க்கரை ஆலைகளில் பங்குகள் எடுத் திருக்கின்றன. இது புதிய சங்கங்களை நிறுவுவதற்கு உதவி செய்யும் நோக்கத்துடன் செய்யப்படுகிறது. பதிவாளருடைய அனுமதியின்றி வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்களில் அத்தகைய பங்குகள் எடுக்கக் கூடாது. எனினும், ஒரு வரை யறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தில் பங்குகள் வாயிலாக ஒரு சங்கம் முதலீடு செய்வது மிகவும் அபூர்வமானது. தமிழ்நாடு மாநில நிலவள வங்கிப் பத்திரங்கள் தவிர வேறு எந்தக் கடன் பத்திரங்களிலும் எந்தச் சங்கத்தாலும் வெளியிடப்படவில்லை [பிரிவு 60 (இ)].

(இ) சங்கங்கள் தங்களுடைய உபரி நிதிகளை வணிக வங்கி களிலும் தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளிலும் முதலீடு செய்யலாம். பொதுவாக, பதிவாளர் வணிக வங்கிகளின் செயல்பாட்டை அனுசரித்து வணிக வங்கிகளில் முதலீடு செய்வதை ஒப்பளித்து, அத்தகைய முதலீட்டிற்கு ஒரு வரம்பும் நிருணயிக்கிறார். இந்த அனுமதியை அவர் அவ்வப்போது புதுப்பிக்கிறார். இச்செயலுக்காக அங்கீகரிக்கப்பட்ட வணிக வங்கிகளின் ஒரு பட்டியலைப் பதிவாளர் வைத்திருக்கிறார். ஒரு சங்கத்தினுடைய முதலீடுகள், நிதி வங்கி அல்லாத மற்றொரு சங்கத்தில் செய்யப்பட்டால் அத்தகைய முதலீடுகள்,

பிரிவு 58 (1)-ன் கீழ் சங்கங்களுக்குள் ஒன்றுக்கொன்று கடன் கொடுத்துக் கொள்வதாக அமையும். அதற்குப் பதிவாளருடைய அனுமதி இன்றியமையாததாகும் [பிரிவு 60 (ஈ)].

(ஈ) மேலும், சங்கம் தன் உபரி நிதிகளை விதிகளில் அனுமதிக்கப்பட்ட வேறு எந்த வகையிலும் முதலீடு செய்யலாம். உதாரணமாகச் சங்கத்திற்கு அலுவலகங்களைக் கட்டுவதற்கும் அதற்காக நிலங்கள் வாங்குவதற்கும் முதலீடு செய்யலாம். 44ஆம் விதி அத்தகைய முதலீடுகளை ஒழுங்குமுறை செய்கிறது. விவசாய நாணயச் சங்கங்கள் தங்கள் அலுவல்களுக்காகவும், கிடங்குகளுக்காகவும் கட்டடங்கள் கட்டுகின்றன. மத்திய வங்கிகளும் மாநில நிறுவனங்களும் தங்களுக்கு வசதியாக அலுவலகங்கள், வங்கிக்கு நல்ல இடங்கள் ஏற்பாடு செய்வதற்குத் தங்கள் நிதிகளிலிருந்து கட்டடங்களை வாங்குகின்றன, அல்லது கட்டுகின்றன. இம் மாதிரி நிதிகளை முதலீடு செய்வது 44ஆம் விதியில் விளக்கப்பட்டு இருக்கிறது. இந்த விதியின் கீழ் ஒரு சங்கம் பதிவாளருடைய அனுமதி பெற்று தன் நிதிகளை நிலத்தை வாங்குவதற்கும் அல்லது குத்தகை எடுப்பதற்கும், அல்லது தன்னுடைய வியாபாரத்தை நடத்துவதற்குத் தேவைப்படும் எந்தக் கட்டடத்தையும் வாங்குவதற்கும் கட்டுவதற்கும் அல்லது சீரமைப்பதற்கும் முதலீடு செய்யலாம். அவ்வாறு முதலீடு செய்யப்பட்ட தொகை, பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட ஒரு கால வரம்பிற்குள் ஈடு செய்யப்படவேண்டும்.

ஒரு கட்டடம் வாங்கப்படுவதோ, அல்லது கட்டப்படுவதோ, ஒரு சங்கத்தின் இலாபங்களிலிருந்து அமைக்கப்பட்ட கட்டட நிதியிலிருந்து (Bulding Fund) செய்யப்பட்டால், அவ்வாறு ஈடு செய்யப்பட வேண்டியதில்லை. இந்தச் சரத்து, எல்லா மட்டங்களிலிருந்தும் இயங்கும் பெரும்பான்மையான சங்கங்கள் தங்களுக்காகச் சொந்த கட்டடங்களை அமைத்துக் கொள்வதற்கு, உதவி செய்திருக்கிறது. எனினும், அத்தகைய முதலீடு சங்கத்திற்கு அத்தகைய கட்டடம் தேவையாக இருந்தால் மட்டும்தான் அனுமதிக்கப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. மேலும், சங்கத்தின் நிதி நிலைமை அத்தகைய முதலீட்டை அனுமதித்தும் முதலீடு செய்யப்பட்ட தொகையை 10 முதல் 12 ஆண்டுகளுக்குள் ஈடு செய்யக்கூடிய வகையில் சங்கத்தின் செயல்பாடு இருக்க வேண்டும். இல்லாவிடில், சங்கங்கள் தங்களுடைய கட்டட நிதியில் தக்க தொகையைச் சேர்த்த பிறகுதான் கட்டடங்களைச் சொந்தமாகப் பெற வேண்டும். இதற்கு நீண்ட காலமாகலாம். ஆகையால், சங்கம் ஒரு கட்டடத்தை வைத்துக்

கொள்வதை அனுமதிக்கும் வண்ணம் செயல்பட வேண்டும். அதே சமயத்தில் கட்டடத்தில் அலங்காரத்தைத் தவிர்த்து தேவையை மட்டும் நிறைவு செய்து கொள்ளவேண்டும். எனினும், இந்த விதி ஒரு தீர்ப்பாணை (Decree) அல்லது தீர்ப்பு நிறை வேற்றுவதில் நடத்தப்பட்ட ஒரு விற்பனையில் வாங்கப்பட்ட அசையாச் சொத்திற்குப் பொருந்தாது. உபரி நிதிகளை முதலீடு செய்யும்போது வைப்புத் தொகைகள், போட்டவர்களுடைய கோரிக்கைகளை நிறைவு செய்வதற்கு, வங்கித் தொழில் (Banking Business) செய்யும் சங்கம் தன் நிதிகளில் ஒரு சில பகுதியை விரைவில் பணமாக்க கூடிய சொத்தாக (fluid resources) வைத்திருக்கவேண்டும் என்பதைக் கவனத்தில் வைக்கவேண்டும்.

விதி 45-ன் கீழ், சங்கங்கள் தங்கள் நிதிகளில் ஒரு பகுதியை விரைவில் பணமாக்கக் கூடியவையாக வைத்திருக்கவேண்டும். அத்தகைய விரைவில் பணமாக்கக்கூடிய சொத்து எந்தச் சங்கங்கள் வைத்திருக்கவேண்டும்; அந்தச் சங்கங்கள் தங்கள் நிதிகளில் அத்தகைய சொத்து எவ்வளவு வைத்திருக்கவேண்டும், அத்தகைய சொத்தினை எந்த உருவத்தில் வைத்திருக்கவேண்டும் என்பவை அவ்வப்போது ஒவ்வொரு சங்க வகையைக் குறித்தும் அரசாங்கத்தால் நிருணயிக்கப்படுகிறது. இவ்வாறு செய்யப் படுவது, வைப்புத் தொகைகளைப் போட்டவர்கள் திருப்பிக் கேட்கும் காலத்தில் அத் தொகைகளைத் திருப்பிக் கொடுக்க முடியாதவாறு ஒரு சங்கத்தின் எல்லா நிதிகளும் அதன் வியாபாரத்தில் பூட்டி வைக்கப்படக்கூடாது என்ற நோக்கத் துடன்தான். வணிக வங்கிகள், கூட்டுறவு வங்கிகளின் அனுபவத்தின் அடிப்படையில் இந்த ஆதாரங்களின் வரம்புகளைப் பதிவாளருடன் ஆலோசித்து அரசாங்கம் நிருணயிக்கிறது. சங்கங்கள் இந்தச் செயலுக்காக, ஒரு தனிப்பட்ட பதிவேட்டை வைத்து அதை நாள்தோறும் எழுதி அவைகளுக்காக நிருணயிக்கப்பட்ட விரைவில் பணமாக்கும் ஆதாரங்களைத் தவறுமல் வைத்தால் தன் பணம் போட்டு வைக்கும் பொது மக்களுடைய நம்பிக்கையை இழக்காமல் இயங்கி வைப்புத் தொகை போட்டவர்களுக்குச் சங்கம் தன் கடமையைத் தவறுமல் செய்யமுடியும்.

கடன் வாங்குதலைப் போல முதலீடு செய்வதிலும் கட்டுப் பாடுகள் பிரிவு 60-ல் விதிக்கப்பட்டிருக்கின்றன. இதன் நோக்கம் சங்கத்தின் நிதிகள் சரிவரப் பயன்படுத்தப்பட வேண்டும் என்றும் வைப்புத் தொகை போட்டவர்களுக்கு வைப்புத் தொகையைத் திருப்பிக் கொடுப்பதில் நெருக்கடி ஏற்படும் வண்ணம் சங்கங்கள்

தங்கள் நிதிகளை வியாபாரத்தில் முடக்கி வைக்கக் கூடாது என்றும், கூறப்படுவதற்குக் காரணம் பொதுவாக முதலீடு செய்யப்பட்ட நிதிகளின் பாதுகாப்பை உறுதிப் படுத்த வேண்டும் என்பதே ஆகும்.

5. ஒரு சங்கத்தின் நிதிகளின் மீது உறுப்பினர்களுக்குக் கோருரிமை இல்லை (பிரிவு 61) (Members have no Claim upon the Funds of a Society)

ஒரு சங்கத்தின் இலாபத்திலிருந்து உறுப்பினர்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படும் பல்வேறு தொகைகள் தவிர, எந்த ஓர் உறுப்பினரும் சங்கத்தின் நிதிகளில் எந்த ஒரு பகுதி மீதும் கோருரிமை செலுத்த முடியாது. ஆகையால், பிரிவு 61-ன் கீழ்ப் பதிவாளரால் வெளியிடப்பட்ட சங்கத்தின் தணிக்கைச் சான்றிதழில் அடங்கியபடிச் சங்கத்தால் தன் நிகர இலாபத்திலிருந்து பிரித்துக்கொடுத்த தொகைகளைத் தவிர ஒரு சங்கத்தின் நிதிகளில் எந்தப் பாகமும் உறுப்பினர்களிடையே மேலூதியமாகவும் இலாப ஈவாகவும் பிரித்துக் கொள்ளப்படக் கூடாது. எனினும், இந்தப் பொதுத் தடைக்கு ஒரு விலக்கு உண்டு. அதாவது செயலாளராகவோ அல்லது எழுத்தராகவே புரிந்த பணிக்கு உப-விதிகளில் நிருணயிக்கப்படும் முறைப்படி ஓர் உறுப்பினருக்குப் பட்டுவாடாக்கள் செய்யப்படலாம் [பிரிவு 61 (1)-க்கு விலக்குக் கூறு].

ஒரு சங்கத்தின் நிதிகளிலிருந்து சங்கத்தின் தலைவருக்கோ அல்லது அலுவலருக்கோ அவர் சங்கத்திற்குச் செய்த சேவைக்காகக் கௌரவச் சம்பளம் பட்டுவாடா செய்யக்கூடாது. இந்தப் பிரிவு செயலராகவோ அல்லது எழுத்தராகவோ ஓர் உறுப்பினர் ஆற்றிய பணிக்குப் பட்டுவாடா செய்வதற்கும் சங்கத்தின் எந்த ஓர் அலுவலர் சங்கத்திற்குச் செய்த சேவைக்குக் கௌரவ சம்பளம் வழங்குவதற்குமிடையே ஒரு வேறுபாட்டை ஏற்படுத்துகிறது. முதலில் சொன்னது ஓர் உறுப்பினர் செயலராகவோ அல்லது எழுத்தராகவோ செய்த ஒரு குறிப்பிட்ட சேவைக்கு அதாவது அவர் செய்த சில எழுத்தர் வேலைகளுக்குப் பட்டுவாடா செய்வது. கௌரவ சம்பளம் என்பது ஒரு சங்கத்தின் நிகர இலாபங்களிலிருந்து மட்டும் கொடுக்கப்பட வேண்டியது. சங்கத்தின் அலுவலர்கள் தங்களுக்காகச் சம்பளம் எடுத்துக் கொள்வதன் மூலம் சங்கத்தின் சம்பாதனை சிதறப்படுத்தப்படாமலிருப்பதை உறுதிப்படுத்துவதுதான் இந்தச் சரத்தின் நோக்கமாகும். ஆனால், ஓர் உறுப்பினர் செய்த குறிப்பிட்ட எழுத்தர் வேலைக்கு அவருக்குப் பட்டுவடா செய்யப்பட வேண்டும். இந்தப் பிரிவு

கூட்டுறவுச் சட்டக் குழுவால் தயாரிக்கப்பட்ட மாதிரிக் கூட்டுறவு மசோதாவிலுள்ள பிரிவு போன்றது. மாதிரி மசோதாவின் 52ஆம் பிரிவு ஒரு சங்கத்தின் நிதிகளில் எந்த பாகமும் உறுப்பினர்களிடையே பிரித்துக் கொடுக்கப்படக் கூடாது என்றும் நிகர இலாபங்களிலிருந்து தவிர சங்கத்தின் நிதிகளிலிருந்து மேலூதியம் அல்லது இலாப ஈவு பட்டுவாடா செய்யக் கூடாது என்றும் கூறுகிறது.

6. நிகர இலாபங்களைப் பங்கிடும் வகைமுறை (Disposal of net Profits) (பிரிவு 62, விதி 46)

ஒவ்வொரு சங்கத்தின் நிகர இலாபங்கள் வருடந்தோறும் அறிவிக்கப் படுகின்றன. அவை பதிவாளரால் அறிவிக்கப்பட்டு தணிக்கை அறிக்கையுடன் பதிவாளரால் வெளியிடப்படும். தணிக்கைச் சான்றிதழில் குறிக்கப்படுகிற நிகர இலாபம் ஒதுக்கீடு செய்யப்பட வேண்டிய பல்வேறு செயல்கள் அத்தகைய ஒதுக்கீடு செய்யப்படவேண்டிய முறை ஆகியவை கூறப்பட்டிருக்கின்றன. அவை பின் வருமாறு: ஒவ்வொரு சங்கமும் தன் நிகர இலாபங்களை ஒதுக்கீடு செய்வதில் இந்த வரிசையைப் பின்பற்ற வேண்டும்.

(1) நிகர இலாபங்களில் 25 சதவீதத்திற்குக் குறையாமல் சங்கத்தின் காப்பு நிதிக்குக் கொண்டுபோகப்பட வேண்டும். சட்ட பூர்வமான காப்பு நிதிக்குக் கொண்டு போகப்பட வேண்டிய நிகர இலாபங்களின் பாகம் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகிறது. உதாரணமாக, பம்பாய் மாநிலத்தில் ஓர் ஆதார (நாணய) சங்கம் (A Resourse Society) தன்னுடைய நிகர இலாபங்களில் 25% காப்பு நிதிக்குக் கொண்டுபோக வேண்டும். (ஆனால் இதர சங்கங்கள் 10% மட்டும் தான் கொண்டுபோக வேண்டும்). கூட்டுறவுச் சட்டக் குழுவினர் ஒரு சங்கத்தின் நிகர இலாபங்களில் 25%-க்குக் குறையாமல் காப்பு நிதிக்குக் கொண்டு போகப்பட வேண்டுமென்று கருத்துக் கொண்டனர். அவர்களுடைய மாதிரி மசோதாவின் 53ஆம் பகுதியில் ஒரு சங்கம் எந்த ஒரு வருடத்திலும் தன் நிகர இலாபங்களிலிருந்து 25 சதவீதத்திற்குக் குறையாத தொகையைக் காப்பு நிதிக்குக் கொண்டு போக வேண்டுமென்று யோசனை கூறியுள்ளனர்.

தமிழ்நாட்டில் 46ஆம் விதியின்கீழ் நிதி வங்கிகள் உட்பட வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கங்கள் தங்கள் நிகர இலாபங்களில் 25 சதவீதத்தைக் காப்பு நிதிக்குக் கொண்டுபோக வேண்டும். வரையறுக்கப்படாத சங்கங்கள் தங்கள் நிகர

இலாபத்தில் 1/3 பங்குக்குக் குறையாமல் காப்பு நிதிக்குக் கொண்டுபோக வேண்டும். அச் சங்கங்களில் காப்பு நிதியும் மற்றும் இதர காப்பு இருப்பு நிதிகளும் சேர்ந்த மொத்தத் தொகை உறுப்பினர்களின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்திற்குச் சமமாக இருப்பின் அப்போது நிகர இலாபங்களில் 25 சதவீதம் மட்டும் காப்பு நிதிக்குக் கொண்டுபோனால் போதும். வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்களில் நிகர இலாபங்களில் அதிகமான பாகம் காப்பு நிதிக்குக் கொண்டு போக வேண்டுமென்று நிருணயித்திருப்பது அச் சங்கங்களுடைய வரையறுக்கப் படாத பொறுப்பு நிறைவேற்றப்படும்போது ஒரு பாதுகாப்பாக அவற்றின் காப்பு இருப்பு நிதிகளைப் பலப்படுத்தும் நோக்கத்துடன் தான். அண்மையில் இந்தப் பிரிவு திருத்தப்பட்டது. இத் திருத்தத்தின்படி சங்கம் தனது நிகர இலாபத்தில் 20% முதல் 30% அளவு வரை காப்பு நிதிக்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

(ii) கூட்டுறவு அபிவிருத்தி நிதி (Co-operative Development Fund) : ஒவ்வொரு சங்கமும் பின்னர் தன் நிகர இலாபங்களில் 5 சதவீதத்திற்கு ஒரு தொகையைக் 'கூட்டுறவு அபிவிருத்தி நிதிக்கு' ஒதுக்கீடு செய்ய வேண்டும் [ விதி 46 (1) (அ) ]. இந்த நிதி தமிழ் நாடு கூட்டுறவு ஒன்றியத்தில் வைக்கப்பட்டு தமிழ்நாடு மாநில வங்கி அல்லது பதிவாளரால் குறிக்கப்பட்ட இதர வங்கியில் முதலீடு செய்யப்பட வேண்டும். இந்த விதியின்படி சங்கம் தன் பேரவையால் நிகர இலாபங்கள் ஒதுக்கீடு செய்த தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குள் அந்தத் தொகையைத் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்திற்குச் செலுத்திவிட வேண்டும். இந்த நிதி கூட்டுறவு வளர்ச்சி, கூட்டுறவு ஆராய்ச்சி, கூட்டுறவுத் துறை வளர்ச்சி, கூட்டுறவுத் திட்டங்களை உருவாக்குதல், பொதுவாகக் கூட்டுறவு இயக்கத்தின் முன்னேற்றம் தொடர்பான செயல்களுக்குப் பயன் படுத்தப்பட வேண்டும். தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் நிருவாகக் குழு உறுப்பினர்களால் அவர்களுக்குள் தேர்ந்தெடுக்கப் பட்ட 3 நபர்கள், கூட்டுறவுப் பதிவாளர், தொழில் வணிகத் துறை இயக்குநர், மாநில வீட்டு வசதி வாரியத்தின் தலைவர், கால்நடை பராமரிப்புத்துறை இயக்குநர், சர்க்கரை இயக்குநர், பால் உற்பத்தி பால் பொருள் வளர்ச்சி ஆணையாளர், காதி கிராமத் தொழில் இயக்குநர், கைத்தறித் துணி இயக்குநர், மீன்துறை இயக்குநர், கூட்டுறவுப் பதிவாளரால் நியமிக்கப்பட்ட மூன்று நபர்கள் ஆகியோரைக் கொண்ட ஒரு குழுவால் இந்த நிதி நிருவாகம் செய்யப்படும். தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் இந்த நிதியைக் குறித்துத் தனிப்பட்ட கணக்குகள் வைக்க வேண்டும் [விதி 46 (1-அ)].

(அ) விதிகளில் நிருணயிக்கப்பட்டபடி, இதர விதிகளுக்கும் நிருணயிக்கப்பட்ட விகிதாச்சாரத்தை உதவித் தொகை (Contribution) அளித்தல்.

தணிக்கை நிதிக்கு உதவித் தொகை ஒதுக்குதல்: 46ஆம் விதியின்படி, அரசாங்கத்தால் நிருணயிக்கப்பட்ட அளவின்படி தணிக்கைக் கட்டணம் செலுத்த அல்லது தன் சொந்தச் செலவில் தன் கணக்குகளைத் தணிக்கை செய்விக்காத ஒவ்வொரு சங்கமும் தன் நிகர இலாபங்களின் 10 சதவிகிதத்தை தணிக்கை நிதிக்குப் பின்னர் ஒதுக்கவேண்டும். இவ்வாறு பெரும்பாலும் விவசாய நாணயச் சங்கங்களால் செய்யப்பட்டு, இந்த நிதி சங்கத்தின் தணிக்கையின் பொருட்டு அரசாங்கத்திற்குச் செலுத்துவதற்காகப் பயன்படுத்தப்படுகிறது, விதி 55 (2)-ன் கீழ், தணிக்கைக் கட்டணம் விதிப்பிற்குட்படாத ஒரு சங்கத்தில் ஒவ்வொரு சங்கத்தின் தணிக்கை நிதி வைப்பில் இருக்கும் தொகையை அல்லது செலுத்தவேண்டிய தணிக்கைக் கட்டணத்தை இதில் எது குறைந்ததோ அதனை, அரசாங்கத்திற்குப் பதிவாளரால் தணிக்கைச் சான்றிதழ் வெளியிடப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள் அத்தகைய சங்கம் செலுத்தவேண்டும். ஆகையால், தணிக்கைக் கட்டணம் விதிப்பிற்குட்பட்ட சங்கத்தைப் பொறுத்தவரை, தணிக்கை நிதிக்கு உதவித் தொகை கொண்டுபோவது மற்ற நிகர இலாப ஒதுக்கீடுகளுக்கு முன்பாக இருக்கிறது. இது, தணிக்கைக் கட்டணத்தைச் செலுத்த வசதியில்லாத சங்கத்திற்குச் சுமையாக இல்லாமலும் அந்தச் சங்கம் இலாபத்தில் வேலை செய்யும்போது அதன் தணிக்கைநிதி இருப்பிலிருக்கும் ஏதாவது தொகையை மட்டும் தணிக்கைக்காகப் பெற்றுக் கொள்ளலும் ஆகிய நோக்கங்களுடன் செய்யப்பட்டிருக்கிறது.

iii. (ஆ) விவசாயக் கடன் நிலைபேறுக்க நிதிக்கு உதவித் தொகை கொண்டு போதல் (Agricultural Credit Stabilisation Fund): இந்தச் சரத்து அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் பரிந்துரைகளுள் ஒன்றின் விளைவாகும். இந்த நிதியின் நோக்கம், பிரதம நாணயச் சங்கங்களுக்கும், விவசாயிகளுக்கும், கொடுக்கப்படும் குறுகிய காலக் கடன்களுக்கு நீட்டிப்பு (Extension) வழங்குவதற்காகப் பயன்படுத்தப்படுவதாகும். பிரதம நாணயச் சங்கம், மத்திய வங்கி, தலைமை வங்கி, இவைகளால் பல்வேறு மட்டங்களில் அத்தகைய நிதி அமைக்கப்படுகிறது. இதே செயலுக்காக ஒரு தனி நிதியை இந்திய ரிசர்வ் வங்கியும் அமைத்துக் கொள்கிறது, ஒவ்வொரு விவசாய நாணயச்

சங்கமும், மத்திய வங்கியும் மாநில வங்கியும் தன் நிகர இலாபங்களிலும் 10 சதவீதத்தை இந்த நிதிக்கு (விவசாயக் கடன் நிலை பேருக்க நிதி, ஒதுக்கீடு செய்யவேண்டும் என்று விதி 46 (2) கூறுகிறது.

சங்கத்தில் கடன் வாங்கியவர்கள் பஞ்சம், வறட்சி அல்லது அத்தகைய எதிர்பாராத பிற காரணங்களால் தங்கள் கடன்களைத் திருப்பிச் செலுத்துவதைத் தள்ளிப் போடுவதற்கு வசதி செய்யவேண்டும். இந்த நிதி பதிவாளரின் முன் அனுமதி பெற்றுப் பயன்படவேண்டும். ஆகையால், குறுகிய காலக் கடன்களுக்கு நீட்டிப்புக் கொடுத்து அவைகளை மத்தியக் காலக் கடன்களாக மாற்றி, விவசாயிகள் மழையில்லாமை, புயல், வெள்ளம், பயிர்களைப் பாதிக்கும் பூச்சி நோய்கள், இயற்கையான விபத்து அல்லது இதர காரணங்களால் அடுத்த அறுவடையிலிருந்து தங்கள் கடன் பாக்கியைத் திருப்பிச் செலுத்தமுடியாமலிருந்தால் தங்கள் கடன் பாக்கிகளைச் சில வருடங்களில் திருப்பிச் செலுத்த முடியும் வண்ணம் உதவுவதுதான் இந்த விதியின் முக்கிய நோக்கம். இந்த விதியைப் பலப்படுத்தும் நோக்கத்துடன் இந்திய ரிசர்வ் வங்கி ஒரு திட்டத்தை ஏற்படுத்தியிருக்கிறது. இத் திட்டத்தின்படி மாநில அரசாங்கம் மாநிலக் கூட்டுறவு வங்கி மட்டத்தில் 'விவசாயக் கடன் நிலை பேருக்க நிதிக்கு' ஒரு மொத்தத் தொகையை உதவித் தொகையாக அளிக்கவேண்டும். இந்த நிதிக்கு மாநில அரசாங்கம் உதவ இந்திய அரசாங்கம் தொகை அளிக்கிறது.

இதுவரை மாநிலக் கூட்டுறவு வங்கியின் விவசாயக் கடன் நிலைபேருக்க நிதிக்கு இந்திய அரசாங்கம் ரூ. 171.85 இலட்சம் உதவித்தொகை அளித்திருக்கிறது. இந்த மாநிலத்தில் இந் நிதியில் வைப்பிலிருக்கும் தொகை முழுவதும் வறட்சி, புயல், வெள்ளம் முதலிய காரணங்களால் பயிர்கள் சேதம் அடையும்போது குறுகிய காலக் கடன்களை மத்திய காலக் கடன்களாக மாற்றுவதற்குப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

விதிகளில் குறிக்கப்பட்ட விகிதாச்சாரத்தில் உறுப்பினர்களுக்குப் பங்குகளின் பேரில் இலாப ஈவுகளைப் (Dividend) பட்டுவாடா செய்தல் :

46 (3)ஆம் பிரிவின் கீழ் பங்குகளின் பேரில் இலாப ஈவின் உச்ச விகிதாச்சாரம் 6% என்றும் இந்த வரம்பைத் தளர்த்தி அரசாங்கம் எந்த ஒரு சங்கத்தையும் அல்லது சங்க வகையையும் 6%-க்கு மேற்பட்ட விகிதாச்சாரத்தில் இலாப ஈவு

பட்டுவாடா செய்வதற்கு அனுமதிக்கலாம். 46ஆம் விதியின் 3ஆம் உப-விதியின் விலக்குக் கூறின் கீழ், அரசாங்கம் சென்னை மாநிலக் கூட்டுறவு வங்கி 6%-க்கு மேற்பட்டும் 9%-க்கு மேற்படாமலும் ஒரு விகிதாச்சாரத்தில் ஒவ்வொரு சலுகைப் பங்கின் (Preference Share) செலுத்தப்பட்ட பங்கு மதிப்பின் பேரில் இலாப ஈவு பட்டுவாடா செய்வதற்கு அனுமதி அளித்திருக்கிறது. கூட்டுறவு நூற்பு ஆலைகளின் செயல்முறையில் அவை எல்லாப் பங்குதாரர்களுக்கும் ஒவ்வொரு பங்கின் செலுத்தப்பட்ட மதிப்பின் பேரில் 9 சதவிகிதம் உச்ச இலாப ஈவைப் பட்டுவாடா செய்வதற்கு வசதியாக அவ்வாலைகளை 46ஆம் விதியின் சரத்திலிருந்து அரசாங்கம் விலக்கு அளித்திருக்கிறது.

சந்தானம் குழுவினர், சங்கங்களில் பங்குதாரர்களுக்கு அனுமதிக்கப்படும் இலாப ஈவின் உச்ச விகிதாச்சாரத்தையும் ஆராய்ந்தார்கள். இலாப ஈவின் உச்ச விகிதாச்சாரம் 6¼ % ஆக இருந்து வந்தது. 1963ஆம் ஆண்டில் அது 6% ஆக செய்யப்பட்டது. இந்த மட்டத்தில் இலாப ஈவின் விகிதாச்சாரத்தில் ஒரு வரம்பைக் நிருணயிப்பதற்கு காரணம், ஒரு கூட்டுறவுச் சங்கம் பிரதானமாக ஒரு இலாபம் சம்பாதிக்கும் நிறுவனம் அல்ல என்பது. 6% வரம்பானது தற்போதிருக்கும் பணச் சந்தையின் நிலைமையில் மிகவும் குறைந்தது என்று சந்தானம் குழுவினர் கருதினர். கூட்டுறவு நிறுவனங்களின் பங்குகளில் செய்யப்பட்ட முதலீடுகளிலிருந்து கிடைக்கும் வருமானத்திற்கும் இதர துறைகளில் செய்யப்படும் முதலீடுகளிலிருந்து கிடைக்கும் வருமானத்திற்கும் இடையே ஒரு பெரிய வேறுபாடு இருந்தால் அது கூட்டுறவு இயக்கத்திற்கு மூலதனம் பெறுவதை அடக்கிவிடும் என்று அவர்கள் எண்ணினார்கள். ஆகையால், அனுமதிக்கக்கூடிய இலாப ஈவின் உச்ச விகிதாச்சாரம் எல்லாச் சங்கங்களிலும் (பிரதமச் சங்கம் மத்திய சங்கம், தலைமைச் சங்கம்) 6%-விருந்து 9%-க்கு உயர்த்தப்பட வேண்டுமென்று அவர்கள் பரிந்துரை செய்துள்ளனர்.

வருடந்தோறும் பங்குதாரர்களுக்கு இலாப ஈவு பட்டுவாடா செய்வது ஒரு சங்கத்தின் செயல்பாட்டின் திருப்திகரமான நிலைமைக்கு ஓர் அடையாளம். இலாப ஈவு பட்டுவாடா செய்யப்படுவதால் சங்கம் இலாபங்களைச் சம்பாதித்து நன்றாக வேலை செய்கிறது என்று கருதப்படுகிறது. மற்றும், ஒழுங்காக இலாப ஈவு பட்டுவாடா செய்யப்பட்டால் ஒரு சங்கத்தில் பங்குகள் எடுப்பதற்கு ஒரு தூண்டுகோலாக இருக்கும். அநேக விவசாய நாணயச் சங்கங்களும் இதர சிறிய சங்கங்களும் இலாபம் இருக்கும் போதுகூட இலாப ஈவை அறிவிப்பதோ அல்லது இலாப

ஈவை விநியோகிப்பதோ இல்லை. இதற்குப் பல காரணங்கள் உண்டு. ஒன்று: உறுப்பினர்கள் எண்ணிக்கை அதிகமாயிருந்து இலாபம் குறைவாக இருக்கும் காரணத்தால் உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்படவேண்டிய தொகையைக் கணக்கிட்டுப் பட்டுவாடா செய்வதற்குக் கடினமாக இருக்கலாம். மேலும், அம்மாதிரி பட்டுவாடா செய்வது பயனற்றது என்று கருதப்படுகிறது. சில சூழ்நிலைகளில் சங்கங்கள் ஒரு பெரிய காப்பு இருப்பு நிதியை ஏற்படுத்துவதற்குப் பேரவையினால் இலாப ஈவை அறிவிப்பதில்லை. எவ்வாறாயினும் நாளடைவில் இலாப ஈவு பட்டுவாடா செய்யப்படவில்லையானால் அது சங்கத்தின் மீது மக்கள் கொண்டுள்ள ஈடுபாட்டைக் குறைக்கும். ஒரு வெற்றிகரமான சங்கத்தின் அறிகுறி, இலாப ஈவு பட்டுவாடா செய்வதே ஆகும்.

சந்தானம் குழுவினர் இலாபம் இருக்கும்போது ஒரு பிரதம சங்கம் பேரவையால் முடிவு செய்யப்படும் $33\frac{1}{3}$-க்குக் குறையாத சதவீதத்தை ஓர் இலாப ஈவு நிதிக்குச் செல்லு வைத்து அந்த நிதியிலிருந்து வருடந்தோறும் இலாப ஈவு விநியோகம் செய்து அல்லது இலாப ஈவு வீதம் பங்குகள் மூலதனத்தின் பேரில் 3% குறைவாக இருந்தால் மூன்று வருடங்களுக்கு ஒரு முறையாவது விநியோகிக்கப்பட வேண்டும் என்று பரிந்துரை செய்துள்ளனர். இந்த ஏற்பாடு குறைந்தது 3 வருடங்களுக்கு ஒரு முறை அல்லது அதற்கும் முன்பு இல்லாவிடில் வருடந்தோறும் இலாப ஈவு பட்டுவாடா செய்யப்பட்டதை உறுதிப்படுத்திப் பொது மக்கள் சங்கத்தில் அதிகமான ஈடுபாட்டையும் நம்பிக்கையும் வைப்பதற்கு உதவும்.

(iv) **விதிகளில் நிருணயிக்கப்படும் நிபந்தனைக்குட்பட்டும் விகிதாச்சாரத்திலும் உறுப்பினர்களுக்கும் ஊதியம் பெறும் ஊழியர்களுக்கும் மேலூதியம் (Bonus) பட்டுவாடா செய்தல்** *[விதி 46 (4), (5)-ம் விதி 46 (4)-ம்]* : உறுப்பினர்களுக்கு மேலூதியம் பட்டுவாடா செய்வதை முறைப்படுத்துகிறது. மேலூதியம் பட்டுவாடா செய்யப்படுவது ஓர் ஸ்டோர்ஸ் சங்கத்தில் ஓர் உறுப்பினர் செய்த கொள்முதல்களைப் பொறுத்தும், ஒரு கைத்தறி நெசவாளர் சங்கத்தில் ஓர் உறுப்பினர் சம்பாதித்த கூலிகளைப் பொறுத்தும், ஒரு பால் வழங்கும் சங்கத்தில் ஓர் உறுப்பினருக்கு வழங்கப்பட்ட பாலைப் பொறுத்தும், ஒரு தொழிலாளர் ஒப்பந்தச் சங்கத்திலும் மோட்டார்ப் போக்குவரத்துச் சங்கத்திலும், ஒரு கூட்டுறவுத் தொழிற்சாலையிலும் உறுப்பினர் சம்பாதித்த கூலிகளைப் பொறுத்தும் இருக்கிறது. இதில் அடிப்படையான கொள்கை

என்னவென்றால் மேலூதியம், சரக்குகளைக் கொள்முதல் செய்தல் அல்லது வழங்கப்படுதல், அல்லது கூலி சம்பாதித்தல், அல்லது சேவைகளைச் செய்தல் போன்ற அடிப்படையான பேரில் செய்யப் படவேண்டும் என்பது. இந்தக் கொள்கை, கொள்முதல்களின் பேரில் இலாப ஈவு என்ற இராக்டேல் முன்னோடிகள் (Rochdale Pioneers) கொள்கையின் அடிப்படையில் இருக்கிறது. அதாவது, ஓர் உறுப்பினரின் பங்கு மூலதனத்தைப் பொறுத்து அல்ல. ஆனால், ஒரு சங்கம் இலாபகரமாக வேலை செய்வதற்கு அல்லது அங்ஙனம் இலாபங்களைச் சம்பாதிப்பதற்கு உறுப்பினர் செய்த உதவியின் அடிப்படையில் இலாப ஈவு விநியோகம் செய்யப்படுவது. எனினும், மேலூதியம் பட்டுவாடா செய்வது நிகர இலாபங்களில் 25% உச்ச வரம்புக்குட்பட்டது. ஆனால், கைத்தறி நெசவாளர் சங்கங்களின் உறுப்பினர்களுக்கு நிகர இலாபங்களில் 33⅓% வரை மேலூதியம் பட்டுவாடா செய்வதற்கு அரசாங்கம் அனுமதி அளித்திருக்கிறது.

**மேலூதியம் பட்டுவாடா செய்வதில் ஏற்படுத்தப்பட்ட இதர கட்டுப் பாடுகளாவன :** (அ) ஸ்டோர்ஸ் சங்கங்கள் உறுப்பினர் அல்லாத வருக்கும் விற்பனை செய்கின்றன. உறுப்பினர் அல்லாதவர்களால் செய்யப்பட்ட கொள்முதலின்பேரில் கணக்கிடப்பட்ட மேலூதியம் உறுப்பினர்களல்லாதவருக்கு விநியோகிக்கப்படக் கூடாது. உண்மையாகவே அச் சங்கங்கள் தங்கள் விற்பனைச் சீட்டில் உறுப்பினர் அல்லாதவர்களின் பெயர்களை எழுதுவதில்லை. அத்தகைய கொள்முதலின் பேரில் கொடுக்கப்பட வேண்டிய மேலூதியம் சேம நிதி அல்லது வியாபார இழப்புக் காப்பு இருப்பு நிதிக்குக் (Business Loss Reserve Fund) கொண்டு போகப்பட வேண்டும். ஏனென்றால், மேலூதியம் உறுப்பினர் அல்லாதவருக்குக் கூட கொடுக்கப்பட்டால் அவர்கள் உறுப்பினர்களாவதற்கு தூண்டு கோலில்லாமல்இருக்கும். தமிழ்நாட்டில் உறுப்பினரல்லாதாருக்கு விற்பனை செய்யப்படுகின்றன. சங்கங்களுக்குக்கூட மேலூதியம் கொடுக்கப்பட வேண்டும். உறுப்பினர் அல்லாதவருக்கு மேலூதியம் கொடுக்கப்பட வேண்டுமென்றும் அந்தத் தொகை வைப்புத் தொகையாக வைக்கப்பட்டு பங்கு மூலதனமாக்க அந்த நபர் விரும்பினால் மாற்றப்பட வேண்டுமென்றும், அரசாங்கம் உத்தரவிட்டுள்ளது. ஆனால், அந்த நபர் மூன்று வருடங்களுக்குள் சங்கத்தில் சேர விருப்பமுள்ளவராக இருக்க வேண்டும். இல்லா விடில் அந்தத் தொகை சேம நிதிக்கு அல்லது இதர வியாபார இழப்புக் காப்பு இருப்பு நிதிக்குக் கொண்டு போகப்படும்.

உறுப்பினர்களைப் பொறுத்தவரை சங்கம் ஒரு திருப்திகரமான பங்கு மூலதன அடித்தளத்தைக் கட்டுகிற வரையிலும் கடன்

வாங்குதல் இன்றி, தன் இயல்பான வியாபாரத்தை நடத்தக்கூடிய சக்தி பெறும் வரையிலும் மேலூதியத் தொகை உறுப்பினர்களின் பங்கு மூலதனக் கணக்கிற்கு வரவு வைக்கப்பட வேண்டும். ஒரு முன்னாள் இராணுவத்தினர் மோட்டார்ப் போக்குவரத்துச் சங்க உறுப்பினருக்கு எந்த ஒரு வருடத்தில் பட்டுவாடா செய்யப்படும் மேலூதியம் அவர்களுடைய மூன்று மாதச் சம்பளம் அல்லது கூலிக்கு மேற்படக் கூடாது. மற்றும், மேலூதியம் விநியோகிக்கப் பட்ட பிறகு நிகர இலாபங்களில் 25%-லிருந்து ஏதாவது மீதப் பட்டால் அது ஒரு 'மேலூதியம் சமப்படுத்தும் நிதிக்கு' (Bonus Equalisation Fund) கொண்டு போகப்பட்டு சங்கத்தின் உப-விதி களின்படித் தேவைப்படும்போது பயன்படுத்தப்படும்.

ஒரு சங்கத்தில் ஊழியர்களுக்குப் பட்டுவாடா செய்யப்படும் மேலூதியத்தைக் குறித்து விதி 46 (5) ஊதியம் பெறும் சிப்பந்தி களையுடைய ஒரு சங்கம் அத்தகைய ஊழியர்களுக்கு மேலூதியம் வழங்கலாமென்றும், ஆனால் அவ்வாறு வழங்கப்பட்ட தொகை உறுப்பினர் உப-விதிகளில் குறிக்கப்பட்ட தொகைக்கு மேற் படாமல் மூன்று மாத அடிப்படைச் சம்பளம் அல்லது ரூ. 900/- இதில் எது குறைந்ததோ அந்த உச்ச வரம்புக்கு மேற்படாமல் இருக்க வேண்டும் என்று கூறுகிறது. இந்த விலக்குக்கூறு 1964ஆம் ஆண்டில் அரசாங்கத்தால் பின்னர் எடுக்கப்பட்டு விட்டது. அத்தகைய சூழ்நிலைகளில் மேலூதியம் வழங்குவது மேலூதியம் வழங்கும் சட்டத்தால் (1965ஆம் வருடத்திய XXI ஆம் சட்டம்) (Payment of Bonus Act) முறைப்படுத்தப்படும்.

(v) விதிகளில் குறிக்கப்படும்படி நிகர இலாபங்களில் 2%-க்கு மேற்படாத விகிதாச்சாரத்தில் கூட்டுறவுக் கல்வி நிதிக்கு (Co-operative Education Fund) உதவி செய்தல்: கூட்டுறவுச் சட்டக் குழுவினர், கூட்டுறவுச் சிப்பந்திகள் ஆகியோருக்குப் பயிற்சி யளிக்கவேண்டிய பெரும் பொறுப்பு கூட்டுறவு நிறுவனங்களையே சாரும் என்ற கருத்துக் கொண்டனர். இச் செயலுக்காக ஒவ்வொரு சங்கமும் சட்டத்தின் மூலம் தன் நிகர இலாபங்களில் இருந்து ஒரு பாகத்தை ஒவ்வொரு வருடமும் ஒரு கூட்டுறவுக் கல்வி நிதிக்கு உதவி செய்யவேண்டுமென்று கட்டாயப்படுத்த வேண்டும் என்று அவர்கள் கருதினார்கள். அவர்கள் தயாரித்த மாதிரி மசோதாவின் 53ஆம் பகுதி அரசாங்கத்தால் நிருணயிக்கப் பட்ட ஒரு விகிதாச்சாரத்தில் அத்தகைய உதவித் தொகை இருக்கவேண்டும் என்று சரத்தை ஏற்படுத்தி இருக்கிறது. தமிழ் நாட்டில் விதி 46 (பி) ஒவ்வொரு சங்கங்களும் ரூ. 10,000/-

உச்சத்திற்குட்பட்டு தன் நிகர இலாபங்களில் 2%-க்குக் கணக்கிடப்பட்ட ஒரு தொகையைக் கூட்டுறவுக் கல்வி நிதிக்கு ஒதுக்கீடு செய்யவேண்டும் என்று கூறுகிறது. அவ்வாறு கல்வி நிதிக்கு ஒதுக்கீடு செய்யப்பட்ட தொகை பேரவையால் ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதியிலிருந்து 2 மாதங்களுக்குள் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்திற்குச் செலுத்தப்படவேண்டும். கூட்டுறவுக் கல்வி, கூட்டுறவுப் பயிற்சி, கூட்டுறவுப் பிரச்சாரம், கூட்டுறவு விளம்பரம் இவைகளைப் பற்றிய பல திட்டங்களை அமல்படுத்தும் பொறுப்பு தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தினிடம் இருக்கிறது.

தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் கூட்டுறவு விளம்பரத்திற்கும் கூட்டுறவுப் பிரச்சாரத்திற்கும் தலைமை நிறுவனம் ஆகும். இந்த நிதி, தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தால் வைக்கப்பட்டு நிருவகிக்கப்பட்டு தன் உப-விதிகளில் உத்தேசித்தபடி பிரச்சாரம் உட்படக் கூட்டுறவுக் கல்வியைப் பரப்புவதற்குப் பயன்படுத்தப்படுகிறது. இந்த நிதி ஒன்றியத்தின் விதிகளின்படியும் பதிவாளரால் அவ்வப்போது வெளியிடப்பட்ட பொதுவான கட்டளைகளின்படியும் செலவழிக்கப்பட வேண்டும். இந்த நிதியைக் குறித்துத் தனிப்பட்ட பதிவேடுகளும் ஒன்றியத்தால் வைக்கப்படவேண்டும் [விதி 46 (6)].

ஒரு சங்கத்தின் இலாபங்களைத் தன் உறுப்பினர்களின் கல்விக்காகப் பயன்படுத்துவதன் முக்கியத்துவத்தை மிகைபட வலியுறுத்த முடியாது. ஒரு சங்கத்தின் இலாபங்களின் பாகம் கூட்டுறவுக் கல்விக்கும் பிரச்சாரத்திற்கும் பயன்படுத்தப்பட வேண்டும் என்பது (இராக்டேல் முன்னோடிகளின்) ஒரு கொள்கையாகவும் கூட இருந்தது. இக் கொள்கையை ஆராய்ந்த சந்தானம் குழுவினர் இந்த நிதி பலப்படுத்தப்படவேண்டும் என்ற கருத்து கொண்டனர். அண்மையில் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் அமைப்பும் நிருவாகமும் மாற்றப்பட்டு 25.9.71 தேதிய எம்.எஸ்.நம்பர்.441 அரசாங்க (கூட்டுறவு) உத்தரவில், விதிகளுக்கு ஒரு புதிய அத்தியாயம் [அத்தியாயம் xi (ஆ)] சேர்க்கப்பட்டிருக்கிறது. மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களை நிறுவுவதன் மூலம் கூட்டுறவுப் பிரச்சாரம் விரிவு செய்யப்பட்டுக் கூட்டுறவுக் கல்வி நிதியிலிருந்து அதிகமாகச் செலவு செய்யவேண்டி இருக்கிறது. ஆகையால், கல்வி நிதிக்கு ஒதுக்கீடு செய்யப்படும் உதவித் தொகையின் தற்போதுள்ள விகிதாச்சாரத்தை நிகர இலாபத்தின் 2 சதவிகிதாச்சாரத்தை வைத்துக் கொண்டு எந்த ஒரு சங்கம் கொடுக்க வேண்டிய அத்தகைய உதவித் தொகையின் உச்ச வரம்பை ரூ. 25,000-க்கு

உயர்த்தலாம் என்று சந்தானம் குழுவினர் பரிந்துரை செய்துள்ளனர். மேலும், கூட்டுறவு இயக்கத்தின் பொதுவான நன்மைக்குக் கூட்டுறவுக் கல்வியின் தேவையைக் கருதி பிரிவு 62-ன் கீழ் நிகர இலாபங்களிலிருந்து ஒதுக்கீடு வரிசையில் கல்வி நிதிக்கு ஒதுக்கீடு செய்யப்படும் உதவித் தொகை சேம நிதிக்கு அடுத்தாற்போல் வைக்கப்பட வேண்டும் என்றும்கூட அந்தக் குழுவினர் பரிந்துரை செய்தனர்.

(vi) உப-விதிகளில் குறிக்கப்படும் விகிதாச்சாரங்களிலும் இதர நிதிகளுக்கு உதவித் தொகை ஒதுக்கீடு செய்தல்: அத்தகைய நிதிகளாவன

வியாபார இழப்புக் காப்பு இருப்பு (Business losses Reserve) ஸ்டோர்ஸ் சங்கங்களில் கட்டட நிதி (Building Fund), (எல்லாச் சங்களிலும்) விலைவாசி ஏற்ற இரக்க நிதி (Price Fluctuation Fund), விற்பனைச் சங்கங்களில் கால்நடை மரிப்பு நிதி (Cattle Morsality Fund) (பால் வழங்கும் சங்கங்களிலும், கால்நடை வளர்ப்பு சங்கங்களிலும்) வராக்கடன் காப்பு இருப்பு நிதி (Bad Debt Reserve) (நாணயச் சங்கங்களில்) இலாப ஈவு சமப்படுத்தும் நிதி (Devidend Equalisation Fund) (எல்லாச் சங்கங்களிலும்) முதலியன. அத்தகைய நிதிகளை ஏற்படுத்துவதற்காகத் தங்கள் உப-விதிகளில் சங்கங்கள் தனிப்பட்ட சரத்து செய்திருந்தால் பிரிவு 62 உப-விதிகளில் கண்டிருக்கிறபடி இலாபங்களில் ஒரு சில விகிதாச்சாரத்தை நிகர இலாபங்களிலிருந்து அத்தகைய நிதிகளுக்கு 6ஆம் இனமாக எடுத்துக்கொண்டு செல்வதற்கும் அனுமதிக்கிறது.

(vii) விதிகளில் குறிக்கப்படும் வகையில் நிகர இலாபங்களில் 10%-க்கு மேற்படாத விகிதாச்சாரத்தில் பொது நல நிதிக்கு உதவித் தொகையை ஒதுக்கீடு செய்தல்: விதி 46 (6) ஒரு சங்கத்தின் பேரவை நிகர இலாபங்களிலிருந்து 10%-க்குக் கணக்கிடப்பட்ட ஒரு தொகையை 'பொதுநலப் நிதிக்கு'க் (Common Good Fund) கொண்டுபோக முடிவு செய்யலாம். மருத்துவ உதவி, சுதாதாரம், கூட்டுறவுப் பிரச்சாரம், நூல் நிலையங்களை நடத்துதல், ஏழைகளின் கல்வி உதவி போன்ற அறக்கட்டளைச் சட்டத்தின் (பிரிவு 2-ல் அறிக்கை 1890ஆம் வருடத்திய, மத்திய சட்டம்) பிரிவு 2-ல் குறிக்கப்பட்டு வந்த செயல்களுக்கும் இந்த நிதி பயன்படுத்தப்படலாம். பொதுவாகத் தங்கள் நிகர இலாபங்களின் ஒரு சில சதவிகிதத்தைப் பொதுநல நிதிக்குக் கொண்டு போகின்றனர். இந்த நிதி மேற்சொன்ன செயல்களுக்காக உள்ளூரில் பயன்படுத்தப்படுகிறது. ஒரு நிறுவனத்தின்மீது

மக்கள் விருப்பைப் பெருக்குகின்ற ஒரு வழி அது சமுதாய நலனுக்காகச் சேவை செய்வதாகும்.

(viii) நிகர இலாபங்களில் ஏதாவது மீதப்படும் தொகை சட்டப்படியான சேமநிதிக்கு வரவு வைக்கப்பட வேண்டும். ஒரு சங்கத்திற்குச் செய்யப்படும் சேவைக்குச் சங்கத்தின் நிருவாகிகளுக்கு இலாபங்களிலிருந்து கௌரவச் சம்பளம் கொடுப்பதற்கு ஒரு சரத்தும் ஏற்படுத்தப்படவில்லை என்பது மேற் சொன்னதிலிருந்தே அறியப்படும். பிரிவு 61-ன்கீழ் சங்கத்தின் பொது நிதிகளிலிருந்து எழுத்தாளர் வேலைக்கும் செயலாளர் வேலைக்கும் பட்டுவாடா செய்தல் உத்தேசிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு சங்கத்திலும் கௌரவ சேவையை அளிப்பதற்குத் தகுதி வாய்ந்த நபர்கள் போதுமான எண்ணிக்கையில் இருக்க வேண்டும் என்று எண்ணுவது எப்பொழுதுமே ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல. இதனை ஆலோசித்த சந்தானம் குழுவினர் கொள்கையளவில் ஒரு சங்கம் தன் நிருவாகிகள் புரியும் சேவைகளை மதித்துத் தன் நிகர இலாபங்களிலிருந்து ஒரு சிறிய சதவிகிதத்தைக் கௌரவச் சம்பளமாகக் கொடுப்பதில் தடை இல்லை என்று கருதினர். ஆகையால், அவர்கள் விவசாய நாணயச் சங்கங்களில் ஒரு வருடத்தில் சங்கத்தின் நிகர இலாபத்தில் 10% வரை சங்கத்தின் தலைவருக்கும் வேறு எந்த இயக்குநருக்கும் கௌரவச் சம்பளம் கொடுக்கலாம் என்றும் அவ்வாறு ஒருவருக்குப் பட்டுவாடா செய்யப்பட்ட கௌரவச் சம்பளம் ரூ. 500/-க்கு மேற்படக் கூடாது என்றும் பரிந்துரை செய்தனர். இதர வகை பிரதம சங்கங்களில் சங்கத்தின் தலைவருக்கு அல்லது இயக்குநருக்குப் பட்டுவாடா செய்யப்படும் உச்சத் தொகை ரூ. 1,000/-க்கும் போகலாம். அத்தகைய கௌரவச் சம்பளம் பட்டுவாடா செய்வது, சங்கத்திற்குத் தேவையான சேவையைத் திறம்படப் புரிவதற்காக ஒரு கூடுதலான ஊக்கமாக இருக்கும். அத்தகைய ஒரு சரத்து உண்மையாகவே தேவைப்படுகிறது.

## 7. சங்கங்களின் இதர சொத்துகள் (Other Properties of Societies)

ஒரு சங்கத்திற்குச் சொந்தமானதும் கடன் வாங்கியதுமான நிதிகளைத் தவிர, ஒரு சங்கத்திற்குச் சொந்தமான இதர சொத்து களும் இருக்கின்றன. வாகனங்கள் போன்ற அசையும் சொத்து களும், கட்டடங்கள் போன்ற அசையாச் சொத்துகளும் இவ் வகையில் அடங்குகின்றன. இந்தச் சொத்துகள்ச ங்கத்தால் சரிவர வைக்கப்பட்டு பரிபாலனம் செய்யப்படவும் வேண்டும். ஆகையால், இவற்றைப்பற்றி விதிகளில் சில விதி முறைகள் செய்யப்பட்டு இருக்கின்றன. அத்தகைய ஒரு விதி 5ஆம் விதி,

இந்த விதி ஒரு சங்கத்தின் வியாபாரத்திற்காகப் பயன்படும் அதன் எந்த ஒரு கட்டடத்தையும் (சொந்தமானது அல்லது வாடகைக்கு எடுக்கப்பட்டது) அதன் பாகத்தையும் அத்தகைய வியாபாரம் அல்லாத மற்ற ஒரு செயலுக்கு அல்லாத இதர கூட்டுறவுச் சங்கங்களுக்காகப் பதிவாளருடைய ஒப்புதலைப் பெற்றால் அன்றி பயன்படுத்துவதைத் தடை செய்கிறது. அரசியல் கூட்டங்களை நடத்துவது, அரசியல் கட்சியின் விழாக்களை நடத்துவது போன்ற அரசியல் செயல்களுக்காக ஒரு சங்கத்தின் கட்டடத்தை பயன்படுத்துவதற்காக எப்பொழுதுமே ஒப்புதல் கொடுக்கப்படக்கூடாது என்றுகூட இந்த விதியில் விளக்கமாக விதிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தடையின் நோக்கம் கூட்டுறவு நிறுவனங்களின் நடுவுநிலைமையை உறுதிப்படுத்துவதும், அரசியல் சொற்பொழிவுகளுக்காகவும், அரசியல் போட்டி வகைக்கும், அரசியல் கூட்டங்களுக்கும் கூட்டுறவு நிறுவனங்கள் ஒரு மேடையாகப் பயன்படுத்துவதைத் தடுப்பதுமேயாகும்.

இதனை ஆலோசித்த சந்தானம் குழுவினர் ஒரு சங்கத்தின் சொத்துகள் வீணடிக்கப்படுவதைத் தடுப்பதற்குச் சட்டத்தில் ஒரு சரத்தும் இல்லை என்ற கருத்து கொண்டனர். தங்கள் வியாபாரத் தொடர்பாகச் சங்கங்கள் தங்கள் பயனுக்காக வாகனங்களைச் சொந்தமாக வைத்திருக்கின்றனர். வாகனங்களைச் சரியாக வைத்துக் கொள்வதற்கும், பயன்படுத்துவதற்கும் துணை விதிகளைச் சங்கம் ஏற்படுத்த வேண்டுமென்று நிருவாக அறிவுரைகள் இருப்பினும் வீணடிப்பு இருந்தால் மட்டும்தான் நிருவாக நடவடிக்கை மேற்கொள்ளப்படலாம். சந்தானம் குழுவினர், வாகனங்களின் சரியான பயனைச் சட்டப்படியாக உறுதிப்படுத்த வேண்டும் என்று கருதினர். ஆகையால், பிரிவு 61 (அ)-க்குப் பின்வருமாறு ஒரு புதிய பிரிவை யோசனை கூறியிருக்கின்றனர். 'ஒரு சங்கத்தின் வசம் இருக்கும் எந்த ஒரு அசையும் அல்லது அசையாச் சொத்து விதிகளிலும், உப-விதிகளிலும் விதிக்கப்பட்ட நடைமுறைகளின்படியல்லாமல் வேறு விதத்தில் பயன்படுத்தப்படக்கூடாது அல்லது அனுமதிக்கப்படக் கூடாது'. ஒரு சங்கத்தின் வாகனங்களை பயன்படுத்தும் முறையை நிருணயித்துத் தக்க விதிகள் அமைக்கப்பட வேண்டும்.

மேலும், விதி 50-ன் கீழ் சங்கத்தின் பொது நிதிகளைப் பயன்படுத்துவதில் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. இந்த விதியின் கீழ், எந்தச் சங்கமும் பதிவாளரின் முன் ஒப்புதலின்றி நிருவாகம் அல்லது வியாபாரத்திற்கு நேர்முகமாகத் தொடர்பில்லாத எந்த ஒரு செயலுக்கும் தன் பொது நிதிகளி

லிருந்து எவ்விதச் செலவும் செய்யக்கூடாது. அத்தகைய செலவு ஒரு சங்கத்தின் இலாபத்தைப் பாதிப்பதாக இருந்து அதன் காரணமாக சேமநிதி அமைப்பதையும், வைக்கப்படுவதையும் பாதிப்பதனுல் அத்தகைய செலவு தடை செய்யப்பட்டிருக்கின்றது. பதிவாளரின் முன் அங்கீகாரமின்றி செலவழிக்கக் கூடாத விதிகளில் உத்தேசிக்கப்பட்ட செலவினங்களின் உதாரணங்களாவன:

வெள்ளிவிழா கொண்டாடுவது, சங்கத்தின் நிருவாகிகளின் உருவப் படங்களைத் திறப்பது முதலியன போன்றவை. அம்மாதிரி இனங்களின்பேரில் செய்யப்படும் செலவை முறைப்படுத்தும் நோக்கத்துடன் விதி 50, அத்தகைய செலவு செய்வதற்கு முன்பு பதிவாளருடைய முன் ஒப்புதல் வாங்கப்பட வேண்டும் என்று விதிக்கிறது. இந்த விதி, ஒரு சங்கத்தின் பொது நிதிகள், கேளிக்கைகளிலும் விழாக்களிலும் சிதருமல் இருப்பதை உறுதிப் படுத்துவதற்காக உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. மேலும், அத்தகைய செலவுகள் சங்கத்தின் இலாபங்களைக் குறைத்து சங்கத்திற்காக ஒரு சேம நிதி ஏற்படுத்துவதைத் தடைப்படுத்தும்.

## 8. வருங்காலச் சேமிப்பு நிதி (Provident Fund) (பிரிவு 63)

ஒரு சங்கம் தன் ஊழியர்களின் நலத்திற்காக ஒரு வருங்காலச் சேமிப்பு நிதித் திட்டத்தை ஏற்படுத்தலாம். அவ்வமயம் சங்கம் தன் ஊழியர்களால் கொடுக்கப்படும் எல்லாத் தொகைகளையும் உப-விதிகளின்படி சங்கம் வழங்கும் உதவித் தொகைகளையும் இந்த நிதிக்கு வரவு வைக்க வேண்டும் [பிரிவு 63 (1)]. கூட்டுறவுச் சட்டக் குழுவினர், வருங்காலச் சேமிப்பு நிதி சங்கத்தின் சொத்துகளில் ஒரு பாகமாக ஆகி விடாமல் ஊழியர்களின் நலன்களைச் சட்டம் பாதுகாக்க வேண்டியதுதேவை என்று கருதினர். அவர்கள் தயாரித்த மாதிரி மசோதாவின் 58ஆம் பகுதியில் இந்தப் பாதுகாப்பை அவர்கள் ஏற்பாடு செய்திருக்கிருர்கள். தமிழ்நாடு கூட்டுறவுச் சட்டத்தின் 63ஆம் பிரிவு இதை அப்படியே பின்பற்றுகிறது. இந்த நிதி சங்கத்தின் வியாபாரத்தில் பயன்படுத்தப்படக் கூடாது [பிரிவு 63 (2) (அ)]. ஏனென்ருல், தேவைப்படும் போது இந்த நிதி தயாராகக் கிடைக்காது. ஆகையால் இந்த நிதி தனியாக வைக்கப்பட்டு, சங்கத்தின் வியாபாரத்தில் அதைப் பயன்படுத்தக் கூடாது. இந்த நிதி சங்கத்தின் ஒரு சொத்தாகவும் கூட இல்லை. இது சங்கத்தின் ஒரு பொறுப்பு. ஏனென்ருல், ஊழியர்களுக்கு உரிய காலத்தில் இந்தத் தொகை செலுத்தப்பட வேண்டும் [பிரிவு 63 (2) (ஆ). இந்த நிதி ஜப்தி செய்யப்படக் கூடியதுமல்ல.

மேலும், எந்த நீதிமன்றம் அல்லது அதிகாரியின் எந்த ஒரு நடவடிக்கைக்கும் அது உட்பட்டதல்ல [பிரிவு 63 (2) (இ)]. ஒரு நிதி வங்கியில் அந்தத் தொகை முதலீடு செய்யப்பட்டிருந்தால், நிதி வங்கிக்கு அதன் மீது ஒரு தொகை இருக்காது. இது முந்தைய ஓர் அத்தியாயத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. இந்த நிதி ஜப்திக்கு உட்படாது என்பதுகூட பிரிவு 36 முந்தைய ஓர் அத்தியாயத்தில் விளக்கப்பட்ட போது கூறப்பட்டிருக்கிறது. இந்த நிதியின் நோக்கம் ஊழியர்களின் குடும்பத்திற்கு இலாபம் கிடைக்கும்படிச் செய்ய வேண்டுமென்பதால் இந்த நிதியைக் குறித்து இந்தத் தனிச் சலுகைகள் வழங்கப்பட்டிருக்கின்றன.

வருங்காலச் சேமிப்புநிதி, நிதிவங்கியில் முதலீடு செய்யப்பட வேண்டுவது தேவை என்று சந்தானம் குழுவினர் கருதி, நிதி வங்கியில் வருங்காலச் சேமிப்பு நிதி முதலீடு செய்யப்பட வேண்டுமென்று பிரிவு 63-க்கு ஒரு கூடுதலான உட்பிரிவை யோசனை கூறியிருக்கின்றனர். ஊழியர்களின் நலத்தைக் கருதி இந்த யோசனை கூறப்பட்டிருக்கிறது. திறமையான வேலைக்குத் திருப்தியடைந்த சிப்பந்திகள் தேவை. ஆகையால், அதை உறுதிப்படுத்துவதற்கு இது ஒரு வழி. மற்றும் இதர சலுகைகள் 58, 62 பிரிவுகளிலும் 4 ஆம் விதியிலும் வழங்கப்பட்டிருக்கின்றன. பிரிவு 58-ன் கீழ், ஒரு சங்கம் தன் ஊழியர்களுக்குக் கடன்கள் வழங்கலாம். பிரிவு 62-ன் கீழ், சங்கத்தின் இலாபங்களிலிருந்து ஊழியர்களுக்கு மேலூதியம் பட்டுவாடா செய்யப்பட வேண்டும். பிரிவு 63-ன் கீழ், ஊழியர்களின் நன்மைக்காக வருங்காலச் சேமிப்பு நிதி ஏற்படுத்தப்பட வேண்டும். ஒரு சங்கத்தின் விதிகளில் 'வழங்கல் வருங்காலச் சேமிப்பு நிதி' (Contributory Provident Fund) ஏற்படுத்துவதைப் பற்றியும் ஊழியர்கள் ஓய்வு பெறும்போதும் மரணம் அடையும்போதும் அவர்களுக்குப் 'பணிக் கொடை' (Gratuity) பட்டுவாடா செய்வதைப் பற்றியும் சரத்துகள் இருக்கவேண்டுமென்று விதி 4 கூறுகிறது.

பெரிய சங்கங்கள் தங்கள் தனிப்பட்ட உப-விதிகளில் பணிக் கொடை பட்டுவாடா செய்வதற்குச் சரத்து ஏற்படுத்தியிருக்கின்றன என்றாலும், ஊழியர்களுக்குப் பணிக்கொடை பட்டுவாடா செய்வதற்காகச் சட்டத்திலேயே தக்க சரத்துகள் இருக்க வேண்டுமென்று சந்தானம் குழுவினர் கருத்து கொண்டு பிரிவு 63-க்குக் கீழ்க்கண்ட ஒரு திருத்தத்தை யோசனை கூறியிருக்கின்றனர். 'ஒரு சங்கத்தின் ஊழியர்கள், நிருணயிக்கப்படும் நிபந்தனைகள் பேரிலும் விகிதாச்சாரத்தின்படியும் பணிக் கொடை

பெறுவதற்கு உரிமையுள்ளவராவர். வருடந்தோறும் சேருகின்ற அத்தகைய பணிக் கொடை நிதி வங்கியில் முதலீடு செய்யப்பட வேண்டும்.

9. காப்பு நிதி (Reserve Fund)

ஒவ்வொரு சங்கமும், ஒவ்வொரு வருடமும் அறிவிக்கப்பட்ட தன் நிகர இலாபங்களிலிருந்து முதலினமாக 20 சதவீதத்திற்குக் குறையாத 30%-க்கு மேற்படாத ஒரு தொகையைஇலாப ஒதுக்கீடு வரிசையில் முதலினமாகத் தன் காப்பு நிதிக்குக் கொண்டுபோக வேண்டும் என்று விதிப்பதன் மூலம் காப்பு நிதியின் அமைப்பை 62ஆம் பிரிவு ஏற்படுத்திய போதிலும் 47ஆம் விதி காப்பு நிதியை முதலீடு செய்யும் வகையைப்பற்றியும் 48ஆம் விதி காப்பு நிதியின் நோக்கத்தைப்பற்றியும், ஒரு சங்கம் கலைக்கப்படும் போது காப்பு நிதியை முடிவாக விநியோகம் செய்தலைப் பற்றியும் கூறுகிறது. 1971ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (இரண்டாவது திருத்தம்) சட்டத்தின்படி 1961ஆம் வருடத்திய சட்டத்தின் 62ஆம் பிரிவுக்கு ஒரு திருத்தம் செய்யப்பட்டிருக் கிறது. இந்தத் திருத்தத்தின்படி, காப்பு நிதிக்குக் கொண்டுபோகப் படவேண்டிய குறைந்த பட்ச தொகை நிகர இலாபங்களின் 20 சதவீதமாகவும் உயர்ந்தபட்ச தொகை 30 சதவீதமாகவும் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. கூட்டுறவுச் சட்டத்தில் முதன் முதலில் காப்பு நிதிக்குக் கொண்டு போகப் படவேண்டிய தொகை 25 சதவீதமாகவும் அதற்கு உச்சவரம்பு இல்லாமலு மிருந்தது.

ஒரு சங்கத்தின் காப்புநிதி அந்தச் சங்கம் வருடந்தோறும் சம்பாதித்த இலாபங்களிலிருந்தே அமைக்கப்படுகிறது. 48ஆம் விதியின் கீழ் காப்பு நிதி முழுமையும், சங்கத்திற்குச் சொந்த மானது. அதன் மீது எந்த ஓர் உறுப்பினரும் கோருரிமை செய்ய முடியாது. அது பிரிக்க முடியாதது. அதில் எந்த ஒரு பகுதிக்கும் எந்த உறுப்பினரும் உரிமை கோர முடியாது. அது எதிர்பாராத இழப்புகளைச் சமாளிப்பதற்கு உத்தேசிக்கப் பட்டிருக்கின்றது. எதிர்பாராத இழப்புகளைச் சமாளிப்பதற்குப் பதிவாளரின் ஒப்புதல் இல்லாமல் அதைப்பயன்படுத்த முடியாது.

காப்பு நிதி ஒரு சங்கத்தின் சொந்த நிதிகளின் இனங்களில் ஒன்று. நிதிகள் முழுமையும் சங்கத்திற்குச் சொந்தமானவை என்ற பொருள்படி அவை சங்கத்தின் ஓர் சொத்தாகும். காப்பு நிதி முதலீடு செய்யப்பட்டிருந்தால் 47ஆம் விதியில் நிருணயிக்கப் பட்ட நிபந்தனைகளுக்குட்பட்டு சங்கத்தின் வியாபாரத்தில் பயன் படுத்துவதற்காகவாவது அல்லது எதிர்பாராத இழப்புகளைச் சமாளிப்பதற்காகவாவது திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

அதே சமயத்தில் அது ஒரு பொறுப்புங்கூட. அதாவது காப்பு நிதியில் ஒவ்வொரு வருடமும் சேருகின்ற தொகை தனியாக முதலீடு செய்யப்பட்டிருந்தாலும் அல்லது அப்படிச் செய்யப் படாவிட்டாலும் அது ஒரு சங்கத்தின் பொறுப்பாகும்.

ஒரு சங்கத்தின் காப்பு நிதி, பிரிவு 60-ன் பகுதிகள் (அ) (ஆ) (இ) (ஈ)-ல் சொல்லப்பட்ட வகைகளில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட வகைகளில், முதலீடு செய்யப்பட வேண்டும் (விதி 47). வழக்கமான நடைமுறையில் காப்பு நிதி, ஒரு நிதி வங்கியுடனும் அல்லது பதிவாளரின் ஆலோசனைப்படி தமிழ்நாடு மத்திய நிலவள வங்கியின் கடன் ஈட்டுப் பத்திரங்களிலும் முதலீடு செய்யப்படுகிறது. இருந்தாலும் ஒரு நிதி வங்கியில் மட்டும்தான் காப்பு நிதி முதலீடு செய்யப்பட வேண்டும் என்ற ஒரு வற்புறுத்தல் கிடையாது. எனினும், காப்பு நிதி தனியாக முதலீடு செய்யப்படுவதும் அது நிதி வங்கியில் முதலீடு செய்யப்படுவதும் எப்பொழுதுமே அறிவுடைமை ஆகும்.

ஒரு சங்கத்தின் முதலீடு செய்யப்பட்ட காப்பு நிதி அதன் பலத்திற்கும் நிலையான தன்மைக்கும் ஓர் அறிகுறி. அது சங்கத்தின் நல்ல நிதி திறத்தன்மைக்கும் ஓர் அடையாளமாகவும் உள்ளது.

அது சங்கத்தின் நிதி நிலைமைக்கு ஆக்கமளிக்கிறது. ஏனென்றால், ஒரு வரையறுக்கப்பட்ட சங்கத்தின் கடன் வாங்கும் சக்தி பொதுவாக அதனுடைய முதலீடு செய்யப்பட்ட காப்பு நிதியும் பங்கு மூலதனமும் சேர்த்து அதன் மொத்தத்தில் சில மடங்குகளாக அதாவது எட்டு அல்லது பத்து மடங்குகளாக இருக் கிறது. எனவே, காப்புநிதி தேவையான கடன்வாங்குகிற சக்தியை அளிக்கிறது. மேலும், எதிர்பாராத இழப்புகள் நேரிடும் சமயங் களில் காப்பு நிதியிலிருந்து பணம் எடுத்துக் கொள்ளலாம். வரையறுக்கப்படாத பொறுப்பு அமல் படுத்தப்பட்ட பிறகு, சேமநிதி ஒரு முதல் வரிசைப் பாதுகாப்பாக இருக்கிறது. கடன் களைத் திருப்பிச் செலுத்துவதனாலோ அல்லது வேறு எந்தக் காரணங்களாலோ இழப்புகள் எழுகின்ற சமயத்தில், அது தேவைப்படும் ஒரு திண்டை (cushion) வழங்கி ஒரு வரையறுக்கப் படாத பொறுப்புச் சங்கத்தின் உறுப்பினர்களை வரையறுக்கப் படாத பொறுப்பின் கொடுமையிலிருந்து பாதுகாக்கிறது. சில சூழ்நிலைகளில், ஒரு சங்கத்தின் காப்பு நிதி அதன் வியாபாரத்தில் பயன்படுத்தப்படலாம் (விதி 47). அத்தகைய சூழ்நிலைகளாவன :

(அ) ஒரு சங்கத்தின் காப்பு நிதி அதன் நடைமுறை முதலின் (Working Capital) 20 சதவீதத்திற்கு மேற்பட்டால்

அவ்வாறு மேற்பட்ட தொகை பதிவாளருடைய ஒப்புதலைப் பெற்றஒரு சங்கத்தின் வியாபாரத்தில் பயன்படுத்தப்படலாம்.

(ஆ) நாணயமல்லாத இதர சங்கங்களில் உதாரணமாக ஸ்டோர்ஸ் சங்கத்தில் பதிவாளருடைய அங்கீகாரத்துடன் காப்பு நிதி முழுமையையும் சங்கத்தின் வியாபாரத்தில் பயன்படுத்தப் படலாம்.

(இ) கடன் வாங்காத சங்கத்தின் அதாவது தன் உப-விதி களின் படி கடன் வாங்கமுடியாத சங்கம் (உறுப்பினர்களிட மிருந்தும் அல்லது உறுப்பினர்கள் அல்லாதவர்களிடமிருந்தும்) காப்பு நிதி முழுமையையும் ஒரு சங்கத்தின் வியாபாரத்தில் பயன்படுத்தப்படலாம்.

பிரிவு 60-ன்படி முதலீடு செய்யப்பட்ட ஒரு சங்கத்தின் காப்பு நிதி முன்னரே விளக்கியபடி சங்கம் வாங்கிய எந்த ஒரு கடன் அல்லது பொறுப்பு குறித்து நீதிமன்றத்தின் எந்த ஒரு தீர்ப்பாணை அல்லது உத்தரவின் கீழ் ஜப்தியிலிருந்து விலக்களிக்கப் பட்டிருக்கிறது (பிரிவு 37). காப்பு நிதி ஒரு நிதி வங்கியில் முதலீடு செய்யப்பட்டிருந்தாலும்கூட அத்தகைய நிதி வங்கிக்குத் தனக்கு ஒரு சங்கத்திலிருந்து வரவேண்டிய எந்தக் கடன் பாக்கிக் காகவும் அந்தக் காப்பு நிதியின்மீது ஓர் ஈடு அல்லது ஈடு செய்யும் உரிமை கிடையாது (பிரிவு 35). ஏனென்றால், காப்பு நிதியானது எல்லாக் கடன்காரர்களுக்குமுள்ள ஒரு பிணையம், அதை நிதி வங்கி மட்டும் எடுத்துக் கொண்டுபோய் விடக்கூடாது. சங்கம் வேறு இடங்களிலிருந்தும் கடன் வாங்கியிருக்கலாம். அல்லது திருப்பிக் கொடுக்கப்பட வேண்டிய வைப்புத் தொகை களைப் பெற்றிருக்கலாம். காப்பு நிதி எல்லாக் கடன்காரர்களின் உரிமைக் கோரிக்கைகளை வீதாச்சார அடிப்படையில் நிறைவு செய்வதற்குப் பயனுக இருக்கவேண்டும்; இது ஒரு சங்கத்தைக் கலைக்கும்போது தான் இயலும். சட்டத்தின்கீழ் அமர்த்தப்பட்ட கலைப்பு அதிகாரி (பிரிவு 86) சங்கத்தின் முதலீடு செய்யப்பட்ட காப்பு நிதியை அதன் இதர எல்லாச் சொத்துகளுடன் ஒப்புக் கொண்டு சங்கத்தின் பொறுப்புகளைத் தீர்ப்பதற்கு ஏற்பாடு செய்வார்.

விதி 48, ஒரு சங்கத்தின் காப்பு நிதியைப் பிரிவு 85-ன் கீழ் ஒரு சங்கம் கலைக்கப்பட்டு பிரிவு 86-ன் கீழ் கலைப்பு அதிகாரி சங்கத்தின் சொத்துகளை வசூல் செய்து அதன் பொறுப்புகளைத் தீர்க்கும் போது முடிவாகச் செலவழிப்பதைக் குறித்துப் பின்பற்ற வேண்டிய நடைமுறையை வகுக்கிறது. ஏதாவது உபரித் தொகை மீதமானல், அந்தத் தொகை எப்படிச் செலவிடப்பட வேண்டுமென்பதையும் இந்த விதி விளக்குகிறது. இது பின்னர் விளக்கப்படும்.

# 12. தணிக்கை, விசாரணை, ஆய்வு, தண்டம், தள்ளிவைப்பு, நோக்க எல்லையும், விதி முறையும்

## (Audit, Inquiry, Inspection, Surcharge and Supersession-Scope and Procedure)

(பிரிவுகள் 64-72)

### 1. பொது (General)

இந்த அத்தியாயத்தில், சங்கங்களின் நிருவாகத்தில் எழும் (நிதி தொடர்பாகவும், நிருவாகத் தொடர்பாகவும்) முறைகேடுகளைத் தடுப்பதற்கு உத்தேசிக்கப்பட்ட நடவடிக்கைகளைப் பற்றிய சட்டமும், சங்கங்களின் நிருவாகத்தில் அத்தகைய முறை கேடுகளுக்குப் பொறுப்பான நபர்கள்மீது எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகளும் விளக்கப்படும். சங்கங்கள் நிதி ஒழுங்கு முறையிலும் ஆட்சி முறையிலும் மட்டுமன்றி, கூட்டுறவுக் கொள்கை முறையிலும்கூடச் சரியாக நிருவாகம் செய்யப்படுவதை உறுதிப் படுத்துவதற்கும், குற்றம் செய்யும் நபர்களை, தேவைப்பட்டால், கட்டுப்படுத்தவும், தண்டிக்கவும், சில சட்ட பூர்வமான கடமைகள் பதிவாளர் மீதும் அவருடைய அதிகாரிகளின் மீதும் விதிக்கப்பட்டிருக்கின்றன. இதனுடன் தொடர்புடைய நடவடிக்கைகளில் பதிவாளருடைய அதிகாரங்களும், அந்த அதிகாரங்களை அவர் எப்படிக் கையாளுகிறார் என்பதும் இந்த அத்தியாயத்தில் விளக்கப்படும். சங்கங்கள் சரியான முறையிலும் கூட்டுறவு முறையிலும் செயல்படுவதை உறுதிப்படுத்துவதற்குச் சட்டத்தில் உத்தேசிக்கப்பட்ட பல்வேறு ஏற்பாடுகளில் ஒன்று தணிக்கையைப் பற்றியதாகும். எனவே, முதலில் தணிக்கையைப் பற்றிய சட்ட ஏற்பாட்டைக் கவனிப்போம்.

## 2. தணிக்கை (Audit) (பிரிவு 64 மற்றும் விதி 54)

**தணிக்கை-பதிவாளரின் சட்டப்படியமைந்த ஒரு பொறுப்பு :** சட்டத்தின் பிரிவு 64 (1)-ன்கீழ், தணிக்கை பதிவாளரின் ஒரு சட்டப்படியமைந்த ஒரு கடமையாகும். எந்த ஒரு கம்பெனி அல்லது வியாபாரம் தணிக்கை செய்யப்படுவதன் நோக்கங்கள் ஒரு நிறுவனத்தின் உண்மையான நிதி நிலைமையையும், வருவாயையும் அறுதியிடுவதும், பிழைகளையும் மோசடிகளையும் கண்டுபிடிப்பதும், அவற்றைத் தடை செய்தலுமாகும். மற்றும், சிப்பந்திகள் தங்கள் வேலையைத் தவறாது செய்வதைக் கவனிக்கும் வகையில் அவர்களிடையே ஓர் ஒழுக்கத்தை ஏற்படுத்துவதும் தணிக்கையின் ஒரு பலன் ஆகும்.

'ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் தணிக்கையின் முக்கிய நோக்க மாவது, கூட்டுறவுக் கொள்கைகளின்படியும், கூட்டுறவு நடை முறையின்படியும் சங்கம் அடைந்த முன்னேற்றத்தை வெளிப் படுத்துவதாகும்'. ஆகையால், சங்கத்தின் உறுப்பினர்களுடைய நலன்களையும் கடன்காரர்களுடைய நலன்களையும் சிறப்பாகப் பாதுகாப்பதற்கும், சங்கம் சரியான முறையிலும் கூட்டுறவுக் கொள்கைகளின் முறையிலும் செயல்பட்டு வளர்ச்சியடைவதை உறுதிப்படுத்துவதற்கும் கூட்டுறவுத் தணிக்கை உத்தேசிக்கப் பட்டுள்ளது. 'ஒவ்வொரு பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் கணக்குகளைக் குறைந்தது வருடத்திற்கொருமுறை பதிவாளர் தணிக்கை செய்யவேண்டும் அல்லது இதனை எழுத்து மூலம் அவருடைய பொது அல்லது தனிப்பட்ட உத்தரவினால் அதிகாரம் அளிக்கப்பட்ட சில நபர்களால் தணிக்கை செய்யப்பட ஏற்பாடு செய்யவேண்டும்', என்று பிரிவு 64 (1) விதிக்கிறது. இந்தப் பிரிவின் கீழ், பதிவாளர், தன் கீழ் வேலை செய்யும் அரசாங்கச் சிப்பந்திகளை மட்டுமல்லாமல், தனி நபர் தணிக்கையாளர்களையும் அல்லது அவரால் நிருணயிக்கப்படும் நிபந்தனைகளுக்குட்பட்டு சாசனக் கணக்கர்களுக்குக் (Chartered Accountants) கூட, தணிக்கை செய்வதற்கு அதிகாரங்கள் வழங்கலாம். எனினும் தமிழ்நாட்டில், கூட்டுறவுத் துறை அரசாங்கச் சிப்பந்திகளால் தணிக்கை செய்யப்படுவதுதான் பொது விதியாக இருக்கிறது. ஏனென்றால்,'கூட்டுறவுச் சங்கத்தின் தணிக்கை ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனியின் தணிக்கையிலிருந்து, பரப்பிலும், நோக்கங் களிலும் வேறுபடுகிறது.

1915ஆம் ஆண்டில் மாக்லகன் குழுவினர் கூறியபடி, 'தணிக்கை என்பது உண்மையாகவே அரசாங்கத்தால் கட்டுப் படுத்தப்பட்ட ஒரு தணிக்கையாக (State-Controlled Audit) இருக்

கிறது'. இந்தக் கருத்துதான் சட்டத்தின் பிரிவு 64 (1)-ல் உள்ளடங்கியிருக்கிறது. தணிக்கையின் மூலம் மட்டும்தான் கூட்டுறவு இயக்கத்தின் மீது ஒரு பயனளிக்கக்கூடிய கட்டு பாட்டைச் செலுத்த முடியும். தணிக்கை என்பது ஒரு வெறும் எண் கணக்கீடு தணிக்கையாக இருக்க வேண்டுமென்று எப்போதுமே உத்தேசிக்கப்படவில்லை என்பதும், தணிக்கைக்கு அப்பால் பதிவாளருடைய நடவடிக்கை ஆய்வுக்கும் (பிரிவு 66) அல்லது விசாரணைக்கும் (பிரிவு 65) அடைக்கப் பட வேண்டும் என்றும் எப்போதுமே உத்தேசிக்கப்படவில்லை என்பதும் தெளிவு. தணிக்கை செய்யும் சிப்பந்திகள் அவர்கள் எவராயிருந்தாலும் பதிவாளருக்குப் பொறுப்பான வர்கள். அவர்கள் பிரதானமாகப் பதிவாளரால் கட்டுப்பாடு செய்யப்பட வேண்டும். தணிக்கையாளர்களுடைய அறிக்கை யானது பதிவாளருக்கு செய்தியறிவிக்கும் பொருட்டு உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. 1957ஆம் ஆண்டிலேயே கூட்டுறவுச் சட்டக் குழுவினர் கீழ்வருமாறு கருத்து தெரிவித்தனர்.

'தணிக்கை பற்றி கவனத்தில் வைக்கவேண்டிய முக்கியமான செய்தி சட்டத்தின்கீழ் கூட்டுறவுச் சங்கத்தின் சரியான செயல் பாட்டிற்குப் பொறுப்பாயுள்ள பதிவாளர், அவருடைய கட்டளையின் கீழும், கட்டுப்பாட்டின் கீழும் சங்கங்களுடைய கணக்குகளைத் தணிக்கை செய்யப்படுதன் மூலம் சங்கங்களுடைய செயல்பாட்டை நெருங்கிக் கண்காணித்தால் தவிர, அவர் அவருடைய பொறுப்பைத் திருப்திகரமாக நிறைவேற்ற முடியாது'.

**தணிக்கை வகைகள்** (Kinds of Audit) : உடன் தணிக்கை (Concurrent Audit), இடைக் காலத் தணிக்கை (Interium Audit), இறுதித் தணிக்கை (Final Audit) என தணிக்கை பலவகைப் படும். உடன் தணிக்கையாவது, வருடம் முழுவதும் தொடர்ந்து நிறுவனங்களின் கணக்குகளைத் தணிக்கை செய்வதில் தணிக்கைச் சிப்பந்திகள் ஈடுபட்டிருக்கும் ஒன்றாகும். உடன் தணிக்கை மாதாந்தரமாகவும் கால் வருடத்திற்கொருமுறையாகவும் செய்யப்படலாம். இத்தகைய தணிக்கை வழக்கமாக மத்திய வங்கிகள், மொத்த விற்பனை ஸ்டோர்ஸ் சங்கங்கள், சர்க்கரைத் தொழிற்சாலைகள், நூல் நூற்பு ஆலைகள், தலைமைச் சங்கங்கள், முதலியன போன்ற பெரிய சங்கங்களில் நடத்தப்படுகின்றன. மேலும், ஆண்டு முடியும் வரை தணிக்கையை ஒத்திப்போடுவது தொல்லைகளை விளைவிக்குமென்று கருதும் சங்கங்களில் அத்தகைய தணிக்கை மேற்கொள்ளப்படுகிறது.

'இடைக் காலத் தணிக்கை' இரண்டு இறுதித் தணிக்கைகளுக்கிடையே நடத்தப்படுகிறது. இடைக்காலத் தணிக்கையின் போது, சொத்துப் பொறுப்புப் பட்டியல், இலாப-நட்டக் கணக்கு இவைகளைத் தயாரிப்பது நீங்கலாக, இதர அம்சங்களான, கணக்குகளைப் பரிசோதித்தல் நிருவாகச் செயல்முறைகளை ஆய்வு செய்தல், வரவு செலவு விவரப் பட்டியல் தயாரித்தல் முதலியன செய்யப்படுகின்றன. வழக்கமாக, இடைக்காலத் தணிக்கை விவசாய நாணயச் சங்கங்களில் செய்யப்படுகிறது. இறுதித் தணிக்கை என்பது, சட்டப்படி கட்டளையிடப்பட்ட, வருடாந்தரத் தணிக்கை ஆகும். இந்த இறுதித் தணிக்கையில் வருடக் கணக்குகளை முடிவு செய்தல், வரவு-செலவு விவரப் பட்டியலைத் தயாரித்தல், சொத்துப் பொறுப்புப் பட்டியல், இலாப நட்டக் கணக்கு தயாரித்தல், சொத்துகளையும் பொறுப்புகளையும் சரிபார்த்தல் (Verification) செய்யப்படுகின்றன. ஆகையால், பிரிவு 64 (1)-ன் கீழ், இறுதித் தணிக்கை மட்டும்தான் பதிவாளருக்குக் கட்டளையிடப்பட்ட ஒரு சட்டப்படியான கடமை. இதர தணிக்கை வகைகள் அவ்வாறு பதிவாளரின் சட்டப்படியான கடமையல்ல. இந்தப் பிரிவின் கீழ், பதிவாளரின் ஒரு பொது உத்தரவின் மூலம், கூட்டுறவுத் துறையின் தணிக்கைக் கிளையில் வேலை செய்யும் எல்லாக் கூட்டுறவு உதவிப் பதிவாளர்களுக்கும், கூட்டுறவு முதுநிலை ஆய்வாளர்களுக்கும், கூட்டுறவு இளநிலை ஆய்வார்களுக்கும் கூட்டுறவுச் சங்கங்களின் கணக்குகளைத் தணிக்கை செய்ய அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

**தணிக்கை பதிவாளருடைய கட்டுப்பாட்டிற்குட்படாமல் தனித்திருக்க வேண்டுமா அல்லது பதிவாளரல்லாத வேறு ஒருவரின் பொறுப்பாக இருக்கவேண்டுமா? :** பிரிவு 64-ன் கீழ், தணிக்கைக்காகப் பொறுப்புள்ள நபர் பதிவாளராவார். தணிக்கைக்கான பொறுப்பும், தணிக்கையின் மீதுள்ள கட்டுப்பாடும் பதிவாளரிடமிருந்து எடுக்கப்பட்டு, பதிவாளருக்கு கட்டுப்படாத சுதந்தரமான ஒரு வெளித் துறைக்கு ஒப்படைக்கப்படவேண்டும் என்ற கருத்து சில காலமாகச் சில வட்டாரங்களில் நிலவிக் கொண்டிருக்கிறது. அத்தகைய ஏற்பாடு மட்டும்தான் தணிக்கையின் சுதந்தரத்தை உறுதிப்படுத்தும் என்றும், சங்கங்களின் ஆட்சிப் பொறுப்பை வைத்துக் கொண்டிருக்கும் பதிவாளர் சுதந்தரமான முறையிலும், அச்சமற்ற முறையிலும், வற்புறுத்தலில்லாத முறையிலும் தணிக்கையை நடத்தமுடியாது என்றும் செய்யப்படும் வாதத்தினால் இந்தக் கருத்து கொள்ளப்பட்டிருக்கிறது.

கூட்டுறவுச் சட்டக் குழுவினர், இப் பிரச்சினையை ஆலோசித்துக் கீழ்க்கண்டவாறு கூறியிருக்கின்றனர். 'தணிக்கையைப் பதிவாளருடைய கண்காணிப்பிலிருந்தும் அவருடைய சிப்பந்திகளுடைய கண்காணிப்பிலிருந்தும் எடுத்துவிடவேண்டும் என்ற எண்ணம், கூட்டுறவுத் துறையானது கூட்டுறவுச் சங்கங்களின் அலுவல்களை நிருவாகம் செய்கிறது என்று சில வட்டாரங்களில் நிலவி வரும் ஒரு தவருன கருத்திலிருந்து பெரும்பாலும் உதிக்கிறது. இக் கருத்தின் காரணம், சில மாநிலங்களில் மாநிலக் கூட்டுறவு நிறுவனங்களுக்குப் பதிவாளர்கள் தலைவர்களாகவும், பதிவாளர்களுடைய துணை அதிகாரிகள் மத்தியக் கூட்டுறவு நிறுவனங்களின் தலைவர்களாகவும் இருப்பது. இதற்கு இன்னெரு காரணமும்கூட இருக்கிறது; அதாவது சில மாநிலங்களில் கூட்டுறவுச் சங்கங்களின் மேற்பார்வை கூட்டுறவுத் துறையால் கையாளப்படுகிறது. எனினும், இந்திய அரசாங்கமும், மாநில அரசாங்கங்களும், மாநிலக் கூட்டுறவு நிறுவனங்களிலும் மத்தியக் கூட்டுறவு நிறுவனங்களிலும் தலைமைப் பதவி இந்த நிறுவனங்களிலிருக்கும் உத்தியோகப் பற்றற்றவர்களுக்குக் கூடிய விரைவில் ஒப்படைக்கப்படவேண்டுமென்று ஒப்புக்கொண்டுள்ளனர். கிராமக் கடன் விசாரணைக் குழுவும் இந்திய ரிசர்வ் வங்கியும் கூடக் கூட்டுறவுச் சங்கங்கள் மீதுள்ள மேற்பார்வை கூட்டுறவு வங்கிகளுக்கு மாற்றப்படவேண்டுமென்று பரிந்துரை செய்திருக்கின்றன. இச் சூழ்நிலைகளில் தணிக்கையானது பதிவாளரிடத்தில் விட்டுவிடப்பட்டால், கூட்டுறவுச் சங்கங்களை மேற்பார்வை செய்பவர்கள் அவர்களுடைய சொந்தக் கணக்கை அவர்களே தணிக்கை செய்து கொள்கிருர்கள் என்ற குறை கூறுதலுக்கு வாய்ப்பிருக்காது.

கூட்டுறவுச் சங்கங்களின் சரியான செயல்பாட்டிற்குச் சட்டத்தின் கீழ் பொறுப்பாயிருக்கும் பதிவாளர், அவருடைய கட்டளைக்கும் கட்டுப் பாட்டிற்கும் கீழ் சங்கங்களின் கணக்குகளைத் தணிக்கை செய்வதன் மூலம் சங்கங்களின் செயல்பாட்டுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டாலொழிய, பதிவாளர் தன்னுடைய பொறுப்பைச் சரிவர நிறைவேற்ற முடியாது என்பது தணிக்கையைப் பற்றிக் கவனத்தில் கொள்ளவேண்டிய முக்கியமான செய்தியாகும். தேவைப்பட்டால், கூட்டுறவுத் துறையில் வேலைசெய்யும் தணிக்கை சிப்பந்திகள் பதிவாளருடைய கட்டுப்பாட்டின் கீழ் வேலை செய்து, அவருக்குப் பொறுப்பாயுள்ள அவருடைய தலைமைத் தணிக்கை அதிகாரியின் கீழ் இயங்கும் கூட்டுறவுத் துறையின் ஒரு தனிக் கிளையாக அமைந்து கொள்ள

லாம். இந்த ஏற்பாடு கூட்டுறவுச் சங்கங்களின் தணிக்கையை ஒரு சுயேச்சையானதும் அச்சமில்லாததுமான தணிக்கையாகச் செய்வதை உறுதிப் படுத்தும். ஆகையால், கூட்டுறவுச் சட்டக் குழுவினர், அவர்கள் தயாரித்த மாதிரி கூட்டுறவு மசோதாவின் 59ஆம் பகுதியில் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் கணக்குகள் பதிவாளரால் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட நபரால் மட்டும்தான் தணிக்கை செய்யப்பட வேண்டும் என்ற சரத்து, ஏற்படுத்தியிருக்கின்றனர்.

தமிழ்நாட்டில், நாராயணசாமிப் பிள்ளை கூட்டுறவுக் குழு (1956), ஒரு நடுநிலையாக, தணிக்கையானது மொத்தமாக ஒரு சுயேச்சையான தணிக்கையாகவுமில்லாமல் கூட்டுறவுத் துறையின் ஒரு இணைந்த பகுதியான தணிக்கையாகவுமில்லாமல் இருக்கும் வண்ணம் ஒரு சீரமைப்பை யோசனை கூறியது. தமிழ் நாட்டரசினர் இப் பரிந்துரையை ஏற்றுக் கொண்டு 1958ஆம் ஆண்டு கீழ்க்கண்ட உத்தரவைப் பிறப்பித்தார்கள். (1) கூட்டுறவுத் துறையின் தணிக்கைப் பகுதி ஒரு தனிப்பட்ட கிளையாக நிறுவப்பட வேண்டும். (2) தணிக்கைக் கிளையின் தலைமை அதிகாரி தலைமைத் 'தணிக்கை அதிகாரி (கூட்டுறவுத் துறை)' என்ற பெயரால் இயங்குவார். இவர் வசம் பதிவாளருடைய அதிகாரங்களும் உட்படுத்தப்பட்டு இவர் பதிவாளருடைய எல்லாவற்றையும் உள்ளிட்ட மேற்பார்வையின் கீழ் வேலை செய்வார். (3) தலைமைத் தணிக்கை அதிகாரி, அக்கவுண்டெண்ட் ஜெனரல் அலுவலகத்தில் (Acct. General's Office) வேலை செய்யும் ஒரு கணக்கு அதிகாரியாக (Accounts Officer) இருக்கவேண்டும். நிருவாகத்திலிருந்து தணிக்கையைத் தனியாகப் பிரிக்கும் திட்டம் 15. 12. 1958 தேதியிலிருந்து அமலிலிருக்கிறது. பதிவாளர் அல்லாத இதர துறைத் தலைவர்களின் ஆட்சிக் கட்டுப்பாட்டின் கீழிருக்கும் கூட்டுறவுச் சங்கங்கள் உட்பட எல்லாக் கூட்டுறவுக் சங்கங்களின் தணிக்கைகளும் இந்த தலைமைத் தணிக்கை அதிகாரியின் கீழிருக்கிறது. தணிக்கைக் கிளையிலும், நிருவாகக் கிளையிலும் வேலை செய்யும் சிப்பந்திகள் ஒரு கிளையிலிருந்து இன்னொரு கிளைக்கு மாற்றப்படலாம்.

**தணிக்கையாளரின் அதிகாரங்களும், கடமைகளும்:** 1915ஆம் ஆண்டிலேயே தணிக்கையின் பரப்பு மாக்லகன் குழுவினரால் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. அந்த விளக்கம் இன்றைய தேதியில் கூடப் பெரும்பாலும் பொருந்தும். சட்டம் தணிக்கையைப் பற்றித் தெளிவாகக் கூறுவது என்னவென்றால் தணிக்கையின் போது தவணை தவறிய கடன்களைப் பரிசீலனை

செய்தலும் சொத்துகளையும், பொறுப்புகளையும் மதிப்பிடுதலும் மேற்கொள்ள வேண்டுமென்பது. எனவே, வெறும் சொத்துப் பொறுப்புப் பட்டியல் தயாரிப்பது மட்டுமல்லாமல், பதிவாளர் நிருணயிக்கும் முறைப்படி உறுப்பினர்களுடைய சொத்துகளின் பட்டியல்களுக்கும்கூடப் போதுமான பரிசீலனை தணிக்கையில் செய்யப்படவேண்டும் என்பது உறுதி.

தணிக்கையானது சட்டத்தின் தேவைகளுக்கு அப்பாலும் சென்று ஒரு சங்கத்தின் பொது நிலைமையைத் தீர்மானிக்கும் எல்லாச் சூழ்நிலைகளையும் விசாரணை செய்ய வேண்டும் என்பது. உதாரணமாக தணிக்கையாளருடைய கடமை, சட்டம், விதிகள் அல்லது உப-விதிகள் மீறப்பட்டனவா என்பதைக் கவனித்தலும், கையிருப்பைச் சரிபார்த்தலும், கணக்குகள் சரியாகயிருக்கின்றனவா என்பதைச் சான்று செய்தலும், கடன்கள் நியாயமாக வழங்கப்பட்டனவா என்றும் சரியான கால வரம்பிற்கும், நோக்கங்களுக்கும் தக்க ஆதாரத்தின் பேரிலும் கடன்கள் கொடுக்கப்பட்டனவா என்று பரிசீலனை செய்தலும், புத்தக அட்ஜஸ்ட்மெண்டுகளையும் அல்லது சரியில்லாத கடன் நீட்டிப்புகளையும் சரிபார்ப்பதற்காகக் கடன் திருப்பிச் செலுத்துதல்களைப் பரிசோதனை செய்தலும், பொதுவாகச் சங்கம் ஒழுங்கான முறையில் வேலை செய்து கொண்டிருக்கின்றதா என்பதைப் பார்த்தலும், சங்கத்தின் நிருவாகக் குழுவினர் அலுவலர்கள் சாதாரண உறுப்பினர்கள் தத்தம் கடமைகளையும், பொறுப்புகளையும் உணர்ந்திருக்கிறார்களா என்பதையெல்லாம் கவனிப்பதுமாகும். சென்னை கூட்டுறவு நடைமுறை நூலில் (The Madras Co-operative Manual, 1952), சட்டத்தின்கீழ் ஒரு தணிக்கையாளரின் கடமைகளைப் பற்றியும் அதிகாரங்களைப் பற்றியும், கீழ்க்கண்டவாறு கூறப்பட்டிருக்கின்றது.

**தணிக்கையாளரின் கடமைகள்:** சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 64 (2) பிரிவு உட்பிரிவு (1)-ன்கீழ் தணிக்கையில் தவணை தவறிய கடன்கள் ஏதாவதிருந்தால் அவைகளைப் பரிசீலித்தலும், ரொக்கக் கையிருப்பையும் (ஆதாரங்களையும்) (பத்திரங்களையும்) சரி பார்த்திதலும், சங்கத்தின் சொத்துகளையும் மதிப்பிடுதலும் அடங்கும். ஆகையால், தணிக்கையாளர் (1) அவர் வருகை செய்த தேதியில் கையிருப்பைச் சரிபார்த்து அப்படிச் சரி பார்த்ததை ரொக்க ஏட்டில் (Cash Book) அவருடைய கையெழுத்துடன் தேதியிட்டுப் பதிவு செய்யவேண்டும். அந்தக் கையிருப்பு எங்கே வைக்கப்பட்டிருக்கிறது, எப்படி வைக்கப்பட்டிருக்கிறது. உப-விதிகளின்

கீழ் அதிகாரம் அளிக்கப்பட்ட நபரால் அது வைக்கப் பட்டிருக்கிறதா என்பதையும்கூட அவர் சொல்ல வேண்டும். ரொக்க ஏட்டில் கையிருப்பு சரியாகக் குறிக்கப்பட்டிருக்கிறதா என்பதை உறுதிப்படுத்துவதற்கும் பொய்ச்செலவுகள், ஏடுகளில் எழுதப்படாமலிருப்பதை உறுதிப்படுத்துவதற்கும் தணிக்கை யாளர் கையிருப்பைச் சரி பார்ப்பதற்கு முன்பு ரொக்க ஏட்டில் எழுதப்பட்டிருக்கும் பதிவுகள், ரசீதுகள், வவுச்சர்கள், பில்கள் இவைகளைக் கொண்டு பரிசீலனை செய்ய வேண்டும். கையிருப்பு உடனே காண்பிக்கப்படவில்லையானால் அவர் அதை ரொக்க ஏட்டில் குறிப்பிட்டுத் தாமதத்திற்காகக் கொடுக்கப்பட்ட காரணங்களையும் பதிவு செய்ய வேண்டும்.

(ii) சென்னைக் கூட்டுறவு நடைமுறை நூலிலும் (Madras Co-op. Manual), விதிகளின் கீழ் நிருணயிக்கப்பட்ட எல்லாப் புத்தகங்களும் வைக்கப்பட்டிருக்கின்றனவா என்பதைச் சரி பார்க்க வேண்டும்.

(iii) எல்லா நபர் ஜாமீன் பத்திரங்களும் அடைமானப் பத்திரங்களும் உண்மையானவையா, ஒழுங்கானவையா என்பதைச் சரிபார்த்தும் அவை காலாவதியாகியிருக் கின்றனவா என்பதைப் பார்த்தும் குறைபாடுகளை விவரிக்க வேண்டும்.

(iv) நபர் ஜாமீன் கடன்களுக்காகத் தக்க ஆதாரமாக இருக்கிறார்களா என்றும், அடைமானக் கடன்களுக்குண்டான ஆதாரங்கள் போதியனவா என்றும் விசாரித்துக் குறைபாடுகள் ஏதாவதிருந்தால் அவைகளைக் குறிப்பிட்டு விமரிசனம் செய்ய வேண்டும்.

(v) எல்லாத் தவணை தவறிய கடன்களைப்பற்றி ஒரு விவர மான அறிக்கை தயாரித்து அவை வசூலாகக் கூடியவையா அல்லது வசூல் ஆகக் கூடாதவையா என்று அவருடைய கருத்தை திட்டவட்டமாக அறிவிக்க வேண்டும். அம் மாதிரிக் கடன்களை வசூல் செய்வதற்கு எடுத்துக் கொள்ளப்படுகின்ற நடவடிக்கை களைக்கூட அவர் தன் அறிக்கையில் கூறவேண்டும்.

(vi) சங்கத்தின் பொறுப்புகளை, மத்திய வங்கியின் நிலுவைப் பாக்கி விவரப்பட்டியலுடனும் (Statement of Outstanding Balances) வைப்புத் தொகையைப் போட்டவர்களிட மிருக்கும் வைப்புத் தொகை ரசீதுகளுடனும் (சாத்தியப்படும் வகையிலெல்லாம்) சரிபார்த்து ஏதாவது வேறுபாடு

விருந்தால் அவற்றை அவருடைய விளக்கத்துடன் குறிப்பிட வேண்டும்.

(vii) சங்கத்தின் உப-விதிகள், பதிவாளரின் அறிவுரைகள், பின்பற்றப்பட்டு வருகின்றனவா என்பதையும் தணிக்கையாளர் கூறவேண்டும்.

(viii) முந்தைய தணிக்கையறிக்கையில் வெளியிடப்பட்ட எல்லாக் குறைபாடுகளும் சீர்திருத்தப்பட்டனவா என்பதையும் தணிக்கையாளர் கூற வேண்டும்.

(ix) ரசீதுகள், வவுச்சர்கள், பத்திரங்கள் முதலியவற்றில் திருத்தங்கள், எழுத்தின்மேல் எழுத்துகளிருந்தால், அவற்றின் விவரங்களைப் பற்றி விசாரணை செய்து தொடர்பான லேவா தேவிகளில் மோசடியில்லாமலிருக்கின்றனவா என்றும், கூற வேண்டும். மேலும், எல்லாத் திருத்தங்களும் எழுத்தின்மேல் எழுத்துகளும், கணக்குகளும் ரொக்கக் கையிருப்பை வைத்திருப்பதற்காகப் பொறுப்பான நபர்களால் சான்றிடப் பட்டனவா என்பதையும் தணிக்கையாளர் பரிசோதனை செய்ய வேண்டும்.

(x) ஊழியர் சாதல்வார் கணக்கினங்களில் சங்கத்தால் செய்யப்பட்ட செலவுகள் வரவு செலவுத் திட்ட மதிப்பீட்டின் ஒதுக்கீட்டிற்குள் இருக்கின்றனவா என்றும் பரிசீலனை செய்து அத்தகைய ஒதுக்கீட்டிற்கு மேல் ஏதாவது செலவு செய்யப் பட்டிருந்தால் அத்தகைய செலவைக் குறைபாடுகளின் பட்டியலில் குறிப்பிட வேண்டும். அவை தணிக்கையில் அங்கீகரிக்கப்படக்கூடாது.

(xi) ஒரு சொத்துப் பொறுப்புப் பட்டியலும் (இருப்பு நிலைக் குறிப்பு-Balance Sheet) இலாப நட்டக் கணக்கும் தயாரிக்க வேண்டும்.

தணிக்கையாளர் தணிக்கையைச் சங்கத்தின் தலைமை அலுவலகத்தில் செய்யவேண்டும். அவர் சங்கத்தின் ஏடுகளைச் சங்கத்தின் அலுவலகத்திலிருந்து எடுத்துச் செல்லக்கூடாது; அல்லது அகற்றக்கூடாது. தணிக்கையறிக்கையிலுள்ள கேள்வி களுக்குத் திருப்திகரமாக அவர் பதில் சொல்ல வேண்டுமானால் அவர் உறுப்பினர்களை நெருக்கமாக அறிந்து கொள்ளவேண்டும். இது, அவர் தணிக்கையைச் சங்கத்தின் அலுவலகத்தில் செய்தால் மட்டும் தான் சாத்தியப்படும்.

மேற்கூறியவை எல்லாச் சங்க வகைகளுக்கும் பொருந்தும், எனினும், இவை குறிப்பாக விவசாய நாணயச் சங்கங்களிலும் நகர சங்கங்களிலும் பொருந்தும். ஏனென்றால், இந்த இரண்டு வகைச் சங்கங்களில் நிலுவையிலிருக்கும் கடன்களைப் பரிசீலனை செய்தல் மிகவும் முக்கியமானதாக இருக்கிறது. இந்தத் தணிக்கைக் கொள்கைகளை மனதில் வைத்துக்கொண்டு தணிக்கையாளர் ஸ்டோர்ஸ் சங்கங்கள், கைத்தறி நெசவாளர் சங்கங்கள், பால் வழங்கும் சங்கங்கள், கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்கள், சர்க்கரை ஆலைகள், நூல் நூற்பாலைகள் போன்ற பல்வேறு சங்கவகைகளை, அவைகளின் தனிப்பட்ட தேவைகளையும், அவை வைக்கும் தனிப்பட்ட கணக்குகளையும், பதிவேடுகளையும் அனுசரித்து, தணிக்கை செய்யவேண்டும்.

சட்டத்தின்கீழ் தணிக்கையாளரின் அதிகாரங்கள் பின்வருமாறு

*(1)* அவர் எல்லா நியாயமான நேரங்களிலும் சங்கத்திற்குச் சொந்தமான அல்லது அதன் வசமிருக்கும் ஏடுகள், கணக்குகள், பத்திரங்கள், ஆதாரங்கள், ரொக்கம், மற்றும் இதர சொத்துகளைத் தாராளமாக அணுகலாம், பிரிவு *64 (3)*. இந்த அதிகாரம் ஒரு சங்கத்தின் கணக்குகளைத் தணிக்கை செய்வதற்குத் தணிக்கையாளருக்குத் தேவைப்படுகிறது.

*(2)* ஏடுகள், பதிவேடுகள், ரொக்கக் கையிருப்பு இவைகளை வைத்திருக்கும் சங்கத்தின் அலுவலர், தணிக்கையாளர் கேட்கும் போது காண்பிக்கத் தவறினால், தணிக்கையாளர் பிரிவு *64 (3)*-ன் கீழ் தொடர்பான அலுவலருக்கு அவைகளை உடனே காண்பிக்குமாறு அழைப்புக் கட்டளையை (Summons) வெளியிட்டு அந்த இடத்திலேயே அதை நேர்முகமாகச் சேர்ப்பிக்க வேண்டும். அவர் அழைப்புக் கட்டளையின் மூலம் தொடர்பான அதிகாரியை ஏடுகளையும், கணக்குகளையும், பத்திரங்களையும், ஆதாரங்களையும், அல்லது இதர சொத்துகளையும் சங்கத்தின் தலைமை அலுவலகத்தில் அல்லது அதன் கிளையில் எந்த இடத்திலாவது காண்பிக்க வேண்டுமென்று கேட்கலாம் [பிரிவு *64 (3)*]. அழைப்புக் கட்டளையைச் சேர்ப்பிக்கும் முறை 57ஆம் விதியில் விவரிக்கப்பட்டிருக்கிறது. கேட்கப்படும் பொருளைக் காண்பிக்கத் தவறி அழைப்புக் கட்டளையை மீறுவது பிரிவு 101-ன்கீழ் ஒரு குற்றம் ஆகும். அதற்கு ரூபாய் 200 வரை அபராதம் தண்டனையாக விதிக்கப்படும்.

*(3)* அவர் சங்கத்தின் எந்த ஓர் அலுவலர் அல்லது ஊழியர் அல்லது உறுப்பினர் அல்லது முன்னாள் உறுப்பினர் இவர்களைச்

சங்கத்தின் லேவாதேவிகளைப் பற்றியும், செயல்பாடுகளைப் பற்றியும் தனக்குத் தேவைப்படும் தகவலைக் கொடுப்பதற்கு வரவழைப்பதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார் [பிரிவு 64 (4)]. உறுப்பினர்களும் அல்லது ஊழியர்களும் (முன்னால் இருந்தவர்களும் தற்போதிருப்பவர்களும்) சங்கத்தின் லேவாதேவிகளைப் பற்றியும், செயல்பாட்டைப் பற்றியும், தகவலைக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். தணிக்கையாளரின் வாய் மொழி வேண்டுகோளுக்கிணங்கி அவர்கள் வரவில்லையானால் தணிக்கையாளர் அவர்களுக்கு விதி 57-ல் நிருணயிக்கப்பட்ட முறையில் அழைப்புக் கட்டளை வெளியிடவேண்டியது இயற்கை. அதற்கும் வரவில்லையானால், பிரிவு 101-ன் கீழ் அது ஒரு குற்றமாகும். ஏனென்றால், அது சட்டத்தின் சரத்துகளின் கீழ் அதிகாரம் அளிக்கப்பட்ட ஒரு நபரால் சட்டப்படித் தேவைப்பட்ட தகவலை ஒரு நபர் கொடுக்கத் தவறினார் என்ற குற்றத்திற்கு அவர் ஆளாகிறார் (பிரிவு 101).

தணிக்கையாளர் ஒரு சங்கத்தைத் தணிக்கை செய்யும்போது அந்தச் சங்கத்தின் செயல்பாட்டைக் குறித்த தகவலைப் பெறுவதற்குப் பிரிவு 64 (4)-ன் கீழ் அதிகாரம் பெற்றிருக்கும் ஒரு நபராவார். தணிக்கை செய்வதற்குச் சங்கத்தின் ஏடுகளையும், சங்கத்தின் செயல்பாட்டைக் குறித்த தகவல்களையும் தடையின்றிப் பெறுவதற்குத் தணிக்கையாளருக்கு இந்த அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது.

**தணிக்கை நடத்துவதற்கான விதிமுறை (விதி 54) :** தணிக்கையாளர் தன் அறிக்கைகளைத் தயார்செய்து நிருணயிக்கப்பட்ட சான்றிதழ்களுடனும், தணிக்கையின்போது காணப்பட்ட குறைபாடுகளின் ஒரு பட்டியலுடனும் சமர்ப்பிக்கவேண்டும். 54ஆம் விதி ஒரு புதிய விதி. தற்போதுள்ள நடைமுறைக்கு ஒரு சட்ட பூர்வமான ஒப்புதலையளிக்கும் நோக்கத்துடன் இந்த விதி அமைக்கப்பட்டிருக்கிறது. தணிக்கை நடத்துவதற்கான நடைமுறை 54ஆம் விதியில் விவரமாகக் கூறப்பட்டிருக்கிறது.

பதிவாளரும் கூட்டுறவுச் சங்கங்களின் தணிக்கையை நடத்துவதற்கும் தணிக்கைக் குறிப்பு தயாரிப்பதற்கும் பின்பற்றவேண்டிய நடைமுறையை விவரமாகத் தணிக்கையாளர்களுக்கு அறிவுரைகள் செய்திருக்கிறார். இந்த அறிவுரைகளின்படி இறுதித் தணிக்கை அறிக்கைப் படிவங்கள் (Final Audit Report Forms) தணிக்கைக் குறிப்புகள் (Audit Memoranda) என்று அழைக்கப்படும். பிரிவு 64-ன் கீழ் தணிக்கை, எல்லா நேரங்களிலும்,

முந்தைய தணிக்கையின் இறுதித் தேதியிலிருந்து பிரிவு 2 (3)-ல் விளக்கப்பட்டுள்ள கூட்டுறவு ஆண்டிற்குச் செய்யப்படும் [விதி 54 (1)]. தணிக்கையாளர் தான் சமர்ப்பிக்கும் இறுதித் தணிக்கைக் குறிப்புடன் சட்டப் பிரிவின் இறுதியில் அனுபந்தமாகக் கொடுக்கப்பட்டிருக்கும் படிவத்தில், ஒரு சான்றிதழும் கொடுக்கவேண்டும் [விதி 54 (2) முதல் (4) வரை]. இந்தச் சான்றிதழ் இதற்கு முன்பு பல்வேறு சங்க வகைகளுக்கான தணிக்கை அறிக்கையில் நிருணயிக்கப்பட்ட இதரச் சான்றிதழ்களுக்குக் கூடுதலானது. தணிக்கையாளர் தணிக்கைக் குறிப்புடன் விதி 54 (5)-ன் கீழ் நிருணயிக்கப்பட்ட இணைப்புகளையும் கூட (Enclosures) சமர்ப்பிக்கவேண்டும். விதி 44 (5)-ன் கீழ் தயாரிக்கப்பட்ட அத்தகைய எல்லா இணைப்புகளும் (Schedules) 'ஷெடியூல்கள்' என்று அழைக்கப்பட்டு அவை வரிசையாக எண்ணிடப்படும். குறைபாடுகளின் பட்டியல் விதி 54 (5)-ல் குறிப்பிடப்பட்ட கீழ்க்கண்ட தலைப்புகளில் தயாரிக்கப்பட்டு இறுதித் தணிக்கைக் குறிப்பிற்கு ஷெடியூல்களாக இணைக்கப்பட வேண்டும்.

(1) சட்டம், விதிகள் அல்லது சங்கத்தின் உப-விதிகள் இவைகளின் சரத்துகளுக்கு எதிரிடையாகத் தோன்றும் எல்லா லேவாதேவிகளும்.

(2) சங்கம் செய்திருக்கும் செலவிலும் சங்கத்துக்கு வரவேண்டிய தொகைகளை வசூல் செய்வதிலும் எந்த ஒரு முக்கியமான தவறு அல்லது முறைகேடும்.

(3) சங்கத்தின் கணக்கில் கொண்டுவரப்படவேண்டியிருந்து ஆனால், அப்படிக் கொண்டு வரப்படாத எல்லாத் தொகைகளும்.

(4) தணிக்கையாளருக்கு வசூல் செய்ய முடியாது அல்லது வசூல் செய்யப்படுவது சந்தேகமென்று தோன்றுகின்ற சங்கத்திற்குச் சொந்தமான பணமும், அதன் சொத்தும் அல்லது கடனும்.

(5) இது தொடர்பாகப் பதிவாளரால் குறிப்பிடப்பட்ட வேறு எந்தப் பொருள்களும்.

எனவே, முன்பு தணிக்கையாளரால் சமர்ப்பிக்கப்பட்ட குறைபாடுகளின் பட்டியல் இனிமேல் விதி 54 (5) (1) (2) (3) (4) (5)-ன் கீழ் ஷெடியூல்கள் எனப்படும். குறைபாடுகள் ஒன்றும் இல்லாமலிருந்தாலும் 'இல்லை' என்ற விவரம் (Nil Statement) கொடுக்கப்பட்டு இணைக்கப்படவேண்டும். தணிக்கை முடிவில் பதிவாளரால் அவ்வப்போது வெளியிடப்படும் அறிவுரைகளின்படி

சங்கங்களைத் 'தணிக்கைப் பாகுபாடு' (Audit Classification) செய்யவேண்டும், [விதி 54 (6)]. தணிக்கையாளரால் பரிந்துரை செய்யப்பட்ட தணிக்கைப் பாகுபாடு சங்கத்தின் தணிக்கைச் சான்றிதழிலேயே, தணிக்கைச் சான்று வெளியிடப்படும் சமயத்தில், பதிவு செய்யப்படவேண்டும். தணிக்கையாளரால் கொடுக்கப்பட வேண்டிய சான்றிதழில், தணிக்கைப் பாகுபாட்டின் பிழையின்மையைக் குறித்துப் பதிவாளரால் கொடுக்கப்பட்ட ஒரு சான்றிதழ் சேர்க்கப்பட வேண்டும். விதி 54 (7)-ன்கீழ், சான்றிதழை வெளியிடும் அதிகாரிகள் தணிக்கைக் குறிப்பில் எந்தப் பகுதியாவது தங்களுக்கு ஒப்பாமலும், உண்மையில்லாமலும் காணப்பட்டால் அந்தப் பகுதியைத் திருத்தவோ, எடுத்துவிடவோ அதிகார முடையவர்களாவர். அதிகாரிகள், தணிக்கைக் குறிப்பின் பிழை யின்மையைப் பற்றியும், தணிக்கையாளரின் மறுப்புரைகளின் பிழையின்மை பற்றியும், அவைகளைச் சங்கத்திற்கு அனுப்புவதற்கு முன்பு, திருப்தி செய்து கொள்ளவேண்டும். ஒவ்வொரு தணிக்கையின் பிறகு, பதிவாளர் தொடர்பான சங்கத்திற்கு விதி 54 (2)-ல் குறிக்கப்பட்டிருக்கும் ஒரு தணிக்கைச் சான்றிதழை யும் தணிக்கைக் குறிப்பின் ஒரு நகலையும் கொடுக்கவேண்டும். பிறகு சங்கம் தணிக்கைச் சான்றிதழையும் (Audit Certificate), வருட வரவு செலவுப் பட்டியலையும் இலாப நட்டக் கணக்கையும், சொத்துப் பொறுப்புப் பட்டியலையும், (இருப்பு நிலைக் குறிப்பு) பதிவாளரால் குறிக்கப்படும் முறையில் வெளியிடு செய்து சங்கத்தின் எந்த ஓர் உறுப்பினரின் ஆய்வுக்குக்கூட அவைகளைக் காண்பிக்கவேண்டும். தணிக்கைக் குறிப்பின் சுருக்கமும் கூடச் சங்கத்தின் பேரவைக் கூட்டத்தில் படிக்கப்பட வேண்டும் [விதி 54 (8)].

பிரிவு 64 (5)-ன்கீழ், பதிவாளர் எழுத்து மூலம் சங்கத்தின் எந்த அதிகாரியையும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் தணிக்கையில் காணப்பட்ட குறைபாடுகளை நிவர்த்திக்கத் தக்க நடவடிக்கை எடுக்கும்படிக் கட்டளையிடலாம். விதி 54 (5)-ன்கீழ், சங்கங்களுக்கு இணைப்புப் பட்டியல்களை அனுப்பி வைக்கும்போது சங்கத்திற்குக் கூறப்பட்ட குறைபாடுகளை நிவர்த்தி செய்வதற்கு, அவற்றைப் பெற்ற தேதியிலிருந்து மூன்று மாத கால வரம்பை நிருணயிக்கும்படி, தணிக்கை அதிகாரிகள் பதிவாளரால் அறிவுரை சொல்லப்பட்டிருக்கின்றனர். நிருவாக அதிகாரிகள் கூடக் குறைபாடுகளைச் சங்கங்கள் நிவர்த்திச் செய்தலைக் கவனிக்க வேண்டும். கூட்டுறவுச் சட்டக் குழுவினரும்கூட, குறைபாடுகளை நிவர்த்தி செய்ய ஒரு சங்கத்திற்குக் கட்டளையிடுவதற்குச்

சட்டத்தின்கீழ் பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்க வேண்டியது தேவை என்று கருதினர். ஆகையால், அவர்களும் மாதிரி மசோதாவின் 60ஆம் பகுதியில் இந்த அதிகாரத்தை ஏற்பாடு செய்திருக்கின்றனர். தமிழ்நாட்டில் பிரிவு 64 (5)-ல் இந்தச் சரத்து செய்யப்பட்டிருக்கிறது. ஒரு குறைபாட்டை ஒரு கால வரம்பிற்குள் நிவர்த்திச் செய்ய வேண்டும் என்ற பதிவாளரின் உத்தரவை மீறி நடப்பதும்பிரிவு 101-ன் கீழ் ஒரு குற்றமாக அமையும்.

தணிக்கைப் பிரச்சினையை ஆராய்ந்த சந்தானம் குழுவினர் சில பரிந்துரைகளைச் செய்திருக்கின்றனர். தணிக்கையானது பதிவாளருடைய அறுதிப் பொறுப்பாகத் தொடர்ந்திருக்க வேண்டுமென்றாலும், துறையின் தணிக்கைக் கிளையும் நிருவாகக் கிளையும் அவற்றின் ஊழியர்களும், பதிவாளருக்குக் கீழ் எல்லா மட்டங்களிலும் தனியாகப் பிரிந்து இயங்க வேண்டு மென்பது அவர் கருத்து. தணிக்கைக் கிளைக்கும், நிருவாகக் கிளைக்குமிடையே ஊழியர்கள் ஒரு கிளையிலிருந்து இன்னொரு கிளைக்கு மாற்றப்படக்கூடாதென்றும், அப்படியிருந்தால்தான், சுதந்தரத் தணிக்கையின் நோக்கம் முன்னை விட நன்றாக நிறை வேற்றப்பட முடியும் என்றும் அவர்கள் கருதினார்கள். அதே நேரத்தில் தணிக்கைக் கிளையைப் பதிவாளரின் ஆதிக்கத்திலிருந்து அகற்றுவது விருப்பத்தக்கதல்ல என்பதையும் அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். இது நிருவாகக் கிளை, தணிக்கைக் கிளை என்ற இரண்டு கிளைகளின் செயல்பாட்டின் உச்சத் திறமையைப் பொறுத்துத் தீர்மானிக்கப்பட வேண்டிய ஒரு நிருவாக ஏற்பாடு ஆகும்.

சந்தானம் குழுவினர் செய்திருக்கும் இன்னொரு பரிந்துரை, எல்லாத் தலைமை நிறுவனங்கள், மத்திய வங்கிகள், நகர வங்கிகள் (50, இலட்சத்திற்குக் குறையாத வட்டித்தொகை வாங்கியிருக்கும் வங்கிகள்) இந்த நிறுவனங்களின் தணிக்கையானது சாசனக் கணக்கர்களுக்கு (Chartered Accountant) ஒப்படைக்கப்படவேண்டு மென்பது. கூட்டுறவு நூல் நூற்பாலைகளின் தணிக்கை, கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் தணிக்கை, சாசனக் கணக்கர் களால், செய்யப்படவேண்டுமென்று அரசாங்கம் உத்தரவிட்டிருக் கிறது. சந்தானம் குழுவினர், மேற்கூறப்பட்ட பெரிய நிறுவனங் களின் தணிக்கையையும் சாசனக் கணக்கர்களுக்கு ஒப்படைக்க வேண்டுமென்றும், அத்தகைய சாசனக் கணக்கர்களை நியமிப் பதும், நியமிப்பு நிபந்தனைகளும், நடைமுறையும், பதிவாளரால் தீர்மானிக்கப்பட வேண்டுமென்றும் கருதினர்.

தணிக்கையாளர்களால் தயாரிக்கப்படும் தணிக்கைக் குறிப்பின் சுருக்கத்தைக் குறித்து சந்தானம் குழுவினர் செய்திருக்கும் பரிந்துரை, அத்தகைய சுருக்கம் தணிக்கையாளர் சங்கத்தின் இயக்குநர் குழுவுடன் விவாதித்த பிறகுதான் தணிக்கையாளர்களால் தயாரிக்கப்பட வேண்டுமென்பது. அப்படிச் செய்யப்படாவிடில், சிறிய குறைபாடுகளும் நிவர்த்தி செய்யக் கூடிய குறைபாடுகளும் அந்தச் சுருக்கத்தில் இடம் பெறலாம். சுருக்கத்தில் ஏதாவது தவறான நிலைமை காண்பிக்கப் பட்டிருந்தால் இயக்குநர் குழுவின் கருத்தைப் பெற்ற பிறகு அதையும் திருத்தம் செய்யலாம். குறைபாடுகளை நிவர்த்தி செய்வதற்கும் முறைகேடுகளைச் சரிசெய்வதற்கும் சங்கங்கள் நடவடிக்கைகள் எடுப்பதற்குப் பதிவாளர் மூன்று மாத கால வரம்பினை நிருணயித்து இருக்கிறார். சந்தானம் குழுவினரும் அதே கருத்தையே கொண்டிருந்தனர்.

தணிக்கையைக் காலத்தில் முடிப்பதற்கு வசதி செய்யச் சந்தானம் குழுவினர் இன்னொரு பரிந்துரையையும் செய்தனர். சங்கத்தின் தணிக்கையில், குறிப்பாக விவசாய நாணயச் சங்கத் தணிக்கையில், தாமதத்திற்கான காரணங்களில் ஒன்று ஏடுகள் உடனே கிடைப்பதில்லை. அல்லது கணக்கு ஏடுகள் கடைசி தேதி வரை எழுதப்படுவதில்லை. இந்தக் காரணத்திற்காக ஒரு சங்கத்தின் இறுதித் தணிக்கை தாமதப்படுத்தப்படக்கூடாது. ஆகையால், சங்கத்தின் கணக்குகள் கடைசி தேதி வரை எழுதப் படவில்லையானால், தணிக்கை செய்யப்படும்போது சங்கத்தின் செலவில் கணக்குகளை எழுதுவதற்கு ஏற்பாடு செய்யத் தணிக்கையாளருக்கு அதிகாரம் இருக்கவேண்டுமென்று சந்தானம் குழுவினர் கருதினர்.

**தணிக்கைக் கட்டணங்கள் (பிரிவு 64, விதி 55) :** தணிக்கைக் கட்டணங்களை விதிப்பதற்காகவும், தணிக்கைக் கட்டணங்களை நீக்குவதற்காவும் பழைய விதிகளில் அடங்கியிருந்த சரத்து, தணிக்கைக் கட்டணங்களை வசூல் செய்வதற்குச் சட்டப்படியான ஒப்பளிப்பு (Statutory Sanction) வழங்குவதற்கு, இப்பொழுது சட்டத்திலேயே *(1961)* சேர்க்கப்பட்டுள்ளது [பிரிவு 64 (1)]. தணிக்கை ஊழியர்களுக்காகச் செய்யப்படும் செலவை நிறைவு செய்வதற்கு, அரசாங்கத்தால் தணிக்கைக்காகச் செலவழிக்கப் படும் நேரத்தின் அடிப்படையில் தணிக்கைக் கட்டணங்கள் விதிக்கப்படுகின்றன. சில பெரிய நிறுவனங்கள் தனியாகவோ அல்லது கூட்டாகவோ தணிக்கையாளர்களை எடுத்துக் கொண்டு அவர்களுக்கான செலவு முழுமையும் சங்கம் அல்லது சங்கக்

கூட்டால் ஏற்றுக்கொள்ளப் படுகின்றது. தனிப்பட்ட தணிக்கை யாளரால் அதாவது சாசனக் கணக்கர்களால் தணிக்கை செய்யப் படுவதற்கு அனுமதிக்கப்பட்ட சங்கங்களில் தணிக்கைக் கட்டணப் பிரச்சினை எழவில்லை. இதர சூழ்நிலைகளில், தணிக்கைக் கட்டணங்கள் பதிவாளர் குறிப்பிட்ட அளவுப்படி நிருணயிக்கப் படுகின்றன. விவசாய நாணயச் சங்கங்களில் நிகர இலாபங்களிலிருந்து (பிரிக்கப்படும் இலாபங்களிலிருந்து) ஒரு தணிக்கை நிதி நிகர இலாபங்களில் 10%க்கு மேற்படாத விகிதாச் சாரத்தில், இலாபங்கள் ஒதுக்கீட்டிய்ல் இரண்டாவது இனமாக அமைக்கப்படுகிறது. இந்தத் தணிக்கை நிதியில் இருப்பிலிருக்கும் தொகை அவ்வப்போது அரசாங்கத்திற்குச் செலுத்தப் பட வேண்டும். இப்படி செய்யப்படுவதன் நோக்கம் விவசாய நாணயச் சங்கங்கள் இலாபத்தில் வேலை செய்யும்போது மட்டும் அவைகளிடமிருந்து தணிக்கைக் கட்டணங்கள் வசூலிக்கப்படவேண்டுமென்பது. இப்படிச்செய்யப்படுவது தங்கள் சொந்தச செலவில் கணக்குகளைத் தணிக்கை செய்யாத சங்கங் களிலும் நிருணயிக்கப்பட்ட தணிக்கைக் கட்டணங்கள் அளவுப்படி அரசாங்கத்திற்குத் தங்கள் தணிக்கைக்காக ஒரு தொகையும் செலுத்தாத சங்கங்களிலும் மட்டும்தான்.

இதர எல்லாச் சங்கங்களிலும் தணிக்கைக் கட்ட-ணங்கள் விதிக்கப்பட வேண்டும். பிரிவு 66-ன்கீழ் ஒவ்வொரு சங்கமும் ஒவ்வொரு வருடத்திற்காகத்தன் கணக்குகளைத் தணிக்கை செய்வதற்காக அரசாங்கத்திற்குத் தணிக்கைக் கட்டணங்கள் செலுத்த வேண்டும். இந்தக் கட்டணங்கள் 55ஆம் விதியின் படிப் பதிவாளரால் நிருணயிக்கப்படும். எந்தச் சங்கத்திற்கும் அல்லது எந்தச் சங்க வகைக்கும் தணிக்கைக்காக எந்த வருடத் திற்கும் குறிப்பிட்ட கட்டணத்தை அரசாங்கம் முழுமையாகவும் அல்லது ஒரு பகுதியாகவும் நீக்கிவிடலாம் [பிரிவு 64 (6)-க்கு விலக்குக்கூறு]. பிரிவு 94-ன் கீழ், இந்தக் கட்டணங்கள் நில வருவாய் பாக்கியாக வசூலிக்கப்படலாம். 55ஆம் விதியின் கீழ்ப் பதிவாளர், பல்வேறு வகைச் சங்க வகைகளால் தங்கள் கணக்கு களைத் தணிக்கை செய்வதற்காகச் செலுத்தப்பட வேண்டிய கட்டணங்களைக் குறிப்பிடலாம். இந்த விதியின்படி, ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட சங்கத்தின் கணக்குகளைத் தணிக்கை செய்வதற்காகப் தனியாக ஊழியர்களைப் பதிவாளர் அமர்த்தினல் அந்த ஊழியர்களுக்கான செலவு முழுவதையும் தொடர்பான சங்கங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் [விதி 55 (1) (அ)]. அரசாங்க ஊழியர்களால் தணிக்கை செய்யப்பட்ட இதர சங்கங்களில் பதிவாளர் அரசாங்கத்தின் முன் அங்கீ

காரத்தைப் பெற்றும் தணிக்கைக்காக அமர்த்தப்பட்டிருக்கும் ஊழியர்களுக்கான செலவைக்கணக்கிட்டும் தணிக்கைக் கட்டணங்களின் அளவை நிருணயிப்பார் [விதி 55 (1) (அ)]. பிரிவு 64 (6)-ன் கீழ் விதிக்கப்பட்ட தணிக்கைக் கட்டணத்தின் தொகை, தொடர்பான சங்கத்தின் தணிக்கைச் சான்றிதழில் ஒரு தனிந் பிரிவின் கீழ் குறிக்கப்படவேண்டும் என்று பதிவாளர் கட்டளையிடப்பட்டிருக்கிறார்.

தணிக்கைச் சான்றிதழ் வெளியிட்டவுடனே தணிக்கைக் கட்டணங்களைச் செலுத்த வேண்டுமென்று சங்கம் கட்டளையிடப்பட்டு. ஒரு தனி கேட்பு (Demand) சங்கத்திற்கு அனுப்பப்படுகிறது.விதி 55 (2)-ன் படி, இந்தக் கேட்பு அனுப்பப்பட்ட தேயிலிருந்து மூன்று மாதங்களுக்குள் தணிக்கைக் கட்டணங்கள் அருகாமையிலுள்ள அரசாங்கக் கருவூலத்தில் செலுத்தப் படவேண்டும். தணிக்கைக் கட்டணங்கள் விதிப்பிற்குட்படாத சங்கங்களில், அத்தகைய சங்கத்தில் தணிக்கை நிதியின் இருப்பிலிருக்கும் தொகை அல்லது விதி 55 (1)-ன்கீழ் செலுத்தப்பட வேண்டிய தணிக்கைக் கட்டணம் இதில் எது குறைவோ அதை ஒவ்வொரு சங்கமும் பதிவாளரால் தணிக்கைச் சான்றிதழ் அனுப்பப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள் அருகாமையிலுள்ள அரசாங்கக் கருவூலத்தில் செலுத்த வேண்டும். தணிக்கை நிதியிலிருந்து செலுத்தும் சங்கத்தால் செலுத்தப்பட வேண்டிய தணிக்கைத் தொகையைத் தணிக்கைச் சான்றிதழில் குறிப்பிடவேண்டுமென்று பதிவாளர் கட்டளையிட்டுள்ளார். அதாவது தணிக்கை நிதியிலிருந்து தணிக்கைக் கட்டணங்கள் செலுத்தும் செயலுக்காக 46 (2) விதியில் வரும் ஒரு சங்கம் 64 (6) பிரிவின்படி விதிக்கப்பட்ட தணிக்கைக் கட்டணத்தை 55 ஆம் விதியில் குறிப்பிடப்பட்ட மூன்று மாத காலவரம்பிற்குள் செலுத்தவில்லையானல், பிரிவு 94-ல் குறிப்பிட்ட விதத்தில் நில வருவாய் பாக்கியாக அந்தக் கட்டணம் வசூலிக்கப்பட வேண்டும்.

சந்தானம் குழுவினர், எந்தச் சங்கத்தையும், அல்லது சங்க வகையையும் தணிக்கைக் கட்டணம் செலுத்துவதிலிருந்து விலக்குவதற்கான அரசாங்க அதிகாரம் குறிப்பிட்ட வகையில் இருக்கவேண்டுமென்று கருதினர். தற்போதுள்ளபடி, பிரிவு 64 (6)-ன் விலக்குக்கூறு, அரசாங்கத்தின் தக்க அதிகாரியால் தணிக்கைக் கட்டணம் விதிக்கப்பட்ட பிறகே, செயல்படுகிறது. ஆகையால் பின்வருமாறு தக்க ஒரு திருத்தத்தை அவர்கள் யோசனை கூறியிருக்கிறார்கள். அரசாங்கம், பொது அல்லது

சிறப்பு உத்தரவின்மூலம், எந்தச் சங்கத்தையும் அல்லது சங்க வகையையும் எந்தக் கூட்டுறவு ஆண்டிற்காகவும் தணிக்கைக் காகச் செலுத்தப்பட வேண்டிய முழுக் கட்டணத்திலிருந்து அல்லது கட்டணத்தின் ஒரு பகுதியிலிருந்து விலக்களிக்கலாம். இதற்கு முன்பு, ஒரு சங்கம் செலுத்தவேண்டிய தணிக்கைக் கட்டணங்கள் முழுமையும் அல்லது ஒரு பாகத்தையும் வசூலிப் பதற்கும் அல்லது தள்ளுபடி செய்வதற்கும் பதிவாளருக்கு அதிகாரமிருந்தது. இந்த அதிகாரம் இப்பொழுது அரசாங்கத் தினிடமிருகிறது.

தணிக்கைக் கட்டணம், தணிக்கைக்காகச் செலவழிக்கப்படும் நேரத்தின் அடிப்படையின்பேரில் விதிக்கப்படுகிறது. தணிக்கைக் கட்டணத்தின் விகிதாச்சாரம், பதிவாளரால், அரசாங்கத்தின் அதிகாரத்தைப் பெற்று, நிருணயிக்கப்படுகிறது. மத்திய வங்கிகள், நிலவள வங்கிகள் மற்றும் இதர சங்க வகைகள், தணிக்கைக் கட்டணங்களை ஒரு நாளைக்கு ரூ. 8.50 வீதம் செலுத்த வேண்டும். விதி 46-ன்கீழ் தணிக்கை நிதி ஒதுக்க வேண்டிய சங்கங்களில், வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்கள் ஒரு நாளைக்கு ரூ. 6·50 வீதம் தணிக்கைக் கட்டணம் செலுத்த வேண்டும் என்றும் மற்ற சங்க வகைகள் ஒரு நாளைக்கு ரூ. 8.50 வீதம் தணிக்கைக் கட்டணம் செலுத்த வேண்டும் என்றும் பதிவாளர் நிருணயித்திருக்கிறார்.

தணிக்கை அறிக்கையின் அனுபந்தம் (Annexure to the Audit Report) : விதி 54-ன் கீழ், தணிக்கையாளரால், அளிக்கப்பட வேண்டிய சான்றிதழ்.

(1) ......... சங்கத்தின் கணக்குகளை 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 64 (1)பிரிவின்கீழ் ......... தேதியில் முடிவடையும் கூட்டுறவு ஆண்டிற்காகத் தணிக்கை செய்வதற்கு அதிகாரம் அளிக்கப்பட்ட.........தணிக்கை யாளர் இதன் மூலம் சான்றிடுவதாவது (1) என்னுடைய கருத் திலும், எனக்குத் தெரிந்த தகவலை அனுசரித்தும், எனக்களிக்கப் பட்ட விளக்கத்தின் படியும் (அ) என்னால் பரிசீலிக்கப்பட்ட சங்கத்தின் இருப்பு நிலைக் குறிப்பு (Balance Sheet) கூட்டுறவு ஆண்டின் இறுதியிலிருந்த சங்கத்தின் அலுவல்களின் நிலைமையின் ஓர் உண்மையானதும் நியாயமானதுமான நிலையினைக் காண்பிக் கிறது. (ஆ) என்னால் பரிசீலிக்கப்பட்ட சங்கத்தின் இலாப நட்டக் கணக்கு கூட்டுறவு ஆண்டிற்காகச் சங்கத்தின் இலாபம் அல்லது நட்டத்தின் ஓர் உண்மையானதும் நியாயமானதுமான நிலையினைக் காண்பிக்கிறது.

(2) .........என்னுடைய தணிக்கைக்காக, எனக்குத் தெரிந்த மட்டிலும், நான் நம்புகிற வகையிலும், தேவைப்படும் எல்லாத் தகவல்களையும், விளக்கங்களையும் நான் பெற்றிருக்கிறேன்.

(3) என்னுடைய கருத்தில், சட்டம், விதிகள், சங்கத்தின் உப-விதிகள் இவைகளால் தேவைப்படும் சரியான கணக்கு ஏடுகள் வைக்கப்பட்டு அந்த ஏடுகள், என்னுடைய பரிசீலனையிலிருந்து தோன்றும் வரை, ஒழுங்காகச் சங்கத்தால் வைக்கப்பட்டிருக்கின்றன.

(4) தணிக்கைக் குறிப்பில் குறிப்பிடப்பட்டிருக்கும் இருப்பு நிலைக்குறிப்பும், இலாப நட்டக் கணக்கும் சங்கக் கணக்கு ஏடுகளுடனும் விவர அறிக்கைகளுடனும் ஒத்திருக்கின்றன.

குறிப்பு: மேல் குறிப்பிட்ட 2, 3, 4 எண்களின் கீழ் தணிக்கையாளர் இல்லையென்றோ, அல்லது ஒரு திருத்தத்துடனோ பதில் அளிக்க விரும்பினால், அத்தகைய பதிலுக்காக அவர் காரணங்களைக் குறிப்பிடவேண்டும்.

(5) நான் தணிக்கைக் குறிப்பிற்கு, விதி 54 (5)-ன் கீழ், குறிக்கப்பட்ட எல்லா ஷெடியூல்களையும் இணைத்திருக்கிறேன்.

(6) சங்கத்தை......... வகையில் தணிக்கையில் வைப்பதற்கு பரிந்துரை செய்யும்போது நான் பதிவாளரால் அவ்வபோது வெளியிடப்பட்ட அறிவுரைகளைப் பின்பற்றியுள்ளேன்.

3. விசாரணை (Inquiry) (பிரிவு 65)

பிரிவு 65-ன் கீழ், ஒரு சங்கத்தின் அலுவல்களைப் பற்றிய விசாரணை, ஒரு சட்ட பூர்வமான விசாரணையாகும். கூட்டுறவுத் துறையின் அதிகாரிகள் தங்கள் நிருவாகக் கடமைகளை யாற்றுங்கால் செய்யும் மற்ற விசாரணைகளைப் போலல்லாது இந்த விசாரணை சட்டத்தின்படி நடத்தப்படுவதால் அதற்குச் சில சிறப்பான பயன்களுமுண்டு. ஒரு சட்டமமைப்பு முறையிலும், சட்ட ரீதியான முறையிலும், செயல்களைச் சரிபடுத்துவதற்குக் கூட வசதி செய்யும் சில அதிகாரங்கள் விசாரணை அதிகாரிக்குண்டு. கொடுக்கப்பட்டுள்ள கடன்களைப் பரிசீலனை செய்தல், மற்றும் சங்க அலுவல்கள் மீது புகார்கள், சங்கத்தின் நிதிகள் வீண்டிப்பு செய்யப்பட்டிருத்தல், கூட்டங்கள் கூட்டப்படாமலிருத்தல் போன்ற பல்வேறு பொருள்களைப் பற்றிய விசாரணையும் கூட்டுறவுத் துறை அதிகாரிகளால் நடத்தப்படுகின்றன. சாதாரணமாக, கூட்டுறவுத் துறை அதிகாரிகள் சங்கங்களுக்குச் சென்று முடிந்த வரையில் குறைபாடுகளைச் சரிசெய்து மேலதிகாரிகளுக்கு மேல் நடவடிக்கைக்காக அறிக்கை அனுப்புகிறார்கள்.

65ஆம் பிரிவின் கீழ், பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட ஒரு நபர் சங்கத்தின் அமைப்பு, செயல்பாடு, நிதி நிலைமை, அலுவல்கள், இவற்றைப் பற்றிய ஒரு விசாரணை செய்கிறார். இந்த விசாரணை, ஒரு சங்கத்தின் அலுவல்கள் சீர்கேடாக இருந்தாலும், அல்லது குறிப்பிட்ட புகார்களைக் குறித்தும், ஒரு முழுமையான விசாரணையாகவுமிருக்கலாம். இதனால் விளைகின்ற பயன் என்னவென்றால், விசாரணையின் அடிப்படையில் நிருவாகத்தைச் சீரமைக்கவும், அல்லது நிருவாகிகள் ஒரு சங்கத்தில் தவறான செயல்களுக்கும் அல்லது நிதி விணடிப்பிற்கும் பொறுப்பானவர்களாகக் காணப்பட்டால் அவர்கள் மீது சில சட்ட ரீதியான நடவடிக்கைகள் எடுக்கவும் முடிகிறது. ஆகையால், சட்டம், உறுப்பினர்களின் நலன்களைப் பாதுகாக்கவும், சங்கம் சரியாக இயங்குவதை உறுதிப்படுத்தும் பொருட்டும் அத்தகைய விசாரணையை நடத்துவதற்கு, அதிகாரம் அளிக்கிறது.

இந்தப் பிரிவு விசாரணை செய்வதற்கு ஓர் உரிமையை அளிக்கிறது. ஏனென்றால், பிரிவு 65 (1)-ன் கீழ், ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவின் பெரும்பான்மையராலும் அல்லது உறுப்பினர்களில் 1/3-க்குக் குறையாதவர்களாலும் அல்லது மாவட்ட ஆட்சித் தலைவராலும் அத்தகைய விசாரணை செய்யப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்பட்டால், ஒரு சங்கத்தின் அமைப்பு, செயல்பாடு, நிதி நிலைமை இவற்றைப் பற்றிய ஒரு விசாரணைக்குப் பதிவாளர் உத்தரவிடவேண்டும். பதிவாளர் தன் சொந்த இயக்கத்தாலும் கூட அத்தகைய விசாரணையை நடத்த உத்தரவிடலாம். உறுப்பினர்களின் இந்த உரிமை 'நேர்மையான சங்கங்களின் கொள்கையைக்' (Principle of Equitable Association) கடைப்பிடிப்பதற்குத் தேவையாக இருக்கிறது. உறுப்பினர்களின் பெரும்பான்மையினரால் தேர்ந்தெடுக்கப்பட்ட நிருவாகக் குழுவால் என்ன செய்யப்படுகிறது என்பதையறிய ஓர் உரிமையை இது உறுப்பினர்களின் சிறுபான்மையோருக்குக் கொடுக்கிறது (கால்வெர்ட்). தணிக்கை மட்டும் போதுமானதல்ல. பேராசிரியர் உல்ப் (Wolffe) சுட்டிக்காட்டியுள்ளபடி, 'தணிக்கை எவ்வளவு திறமையாகச் செய்யப்பட்டாலும் அது ஆய்வாகாது. ஆய்வு என்பது நிருவாகக்குழு தன் உளத்தேர்வு அதிகாரத்தை (Discretionary Power) எந்த உபயோகத்திற்காகச் செலுத்தியிருக்கிறது என்பதை ஆராய்கிறது'. ஒரு சங்கத்தின் அலுவல்களின் உண்மையான நிலைமையைக் கண்டுபிடிக்கும் நோக்கத்துடனும், அடிப்படையில் தேவைப்படும் நடவடிக்கைகளையெடுக்கும் நோக்கத்துடனும், விசாரணை நடத்த உத்தரவிடப்படலாம்.

பொதுவாக, நபர்களின் நலத்திற்காகவும், சங்கத்தில் அவர்க்ளுடைய நலன்களையும், உரிமைகளையும் பாதுகாப்பதற்காகவும் விசாரணை செய்யப்படுகிறது. மாவட்ட ஆட்சித்தலைவரின் வேண்டுகோளின் பேரிலும் கூட விசாரணை செய்யப்படவேண்டும். அவர் மாவட்ட நிருவாகத்தலைவராக இருப்பதாலும் மற்ற துறைகளின் நடவடிக்கைகளில் கூட அவர் தீவிரமாக அக்கறையெடுத்துக் கொள்ளவேண்டுமென எதிர்பார்க்கப்படுவதாலும் இது தேவைப்படுகிறது.

நிருவாகக்குழுவின் கவனமின்மை, சங்கத்தின் அலுவலர்களால் அதிகாரம் நியாமற்றுச் செய்யப்படுதல், தணிக்கையில் வெளிவராத மோசடிகள், சங்கத்தின் அலுவல்களில் நிருவாகம் எடுத்துக் கொள்ளும் அக்கறை, விதிகளை அல்லது உப-விதிகளை மீறி நடத்தல், கோஷ்டி சேர்த்தல், யுக்தமில்லாது நடத்துதல் அல்லது சங்க வளர்ச்சியைத் தடைசெய்யும் இதர பயனற்ற சூழ்நிலைகள், உறுப்பினர்களுக்குச் சேவைகளை மறுத்தல், இவைகளையெல்லாம் ஒரு விசாரணை வெளிப்படுத்தும். அத்தகைய விசாரணை, சங்கத்தின் நிலைமை மிகவும் மோசமாக இருந்தாலொழிய, சங்கத்தைக் கலைப்பதற்குக் கட்டாயமாகக் கொண்டுபோய் விடுவதில்லை. விசாரணையானது காணப்பட்ட குறிப்பான ஒரு குறைபாட்டைப் பற்றியும் கூட இருக்கலாம். குறைபாடுகளைச் சரிப்படுத்துவதற்கும் சங்கத்தை ஒரு மேலான நிலைமையில் வைப்பதற்கு வெண்டிய ஏற்பாடுகளைச் செய்வதற்கும் கூட விசாரணை உத்தேசிக்கப்படுகிறது.

இது ஒரு சட்ட ரீதியான விசாரணையாதலால், இது பொதுவாகக் கீழ்க்கண்ட நடவடிக்கைகளுக்கு அடிப்படையாக இருக்கிறது. (I) பிரிவு 85 (1)-ன் கீழ் ஒரு சங்கத்தைக் கலைத்தல் (II) பிரிவு 71 (1)-ன் கீழ் ஒரு சங்கத்தின் அலுவலர்கள்மீது மிகைக் கட்டண (Surcharge) உத்தரவுகளை விதித்தல் (III) பிரிவு 70-ன் கீழ் ஒரு சங்கத்தின் அலுவலர் அல்லது வேலைக்காரரை வேலையிலிருந்து நிறுத்திவைத்தல். இந்த நடவடிக்கைகள் தேவையென்று விசாரணையில் தோன்றினுல் எடுக்கப்படும். சங்கத்தின் நிருவாகக் குழுவை இயல்பான முறையில் மாற்றியமைக்க முடியாத சூழ்நிலைகளில், நிருவாகக் குழுவின் கூட்டத்தை அல்லது பேரவைக் கூட்டத்தைக் கூட்டி, சங்கத்தின் நிருவாகக் குழுவைத் திருத்தியமைப்பதற்குக்கூட இந்தப் பிரிவு பயன்படுத்தப்படுகிறது. பிரிவு 65-ன் கீழ், விசாரணை அதிகாரிக்குச் சில அதிகாரங்கள் உண்டு. எனவே, விசாரணையின்போது, குற்றம் செய்யும் நிருவாகக் குழுவினரைத் தண்டிப்பதும் அல்லது மாற்றுவதுமட்டுமன்றி, தேவைப் பட்டாலும், சாத்தியப்பட்டாலும் குறைபாடுகளைச் சரி

செய்த பிறகு சங்கத்தை ஓர் இயல்பான அடிப்படையின் பேரில் வைப்பதற்கும் விசாரணை அதிகாரிக்கு வசதி ஏற்படுகிறது.

விசாரணை, பதிவாளராலும் அல்லது அதிகாரமளிக்கப்பட்ட ஓர் அதிகாரியாலும் நடத்தப்படலாம். பொதுவாகக் கூட்டுறவுத் துறை அதிகாரிகள் மட்டும்தான் அத்தகைய விசாரணை நடத்துவதற்கு அதிகாரம் அளிக்கப்படுகிறார்கள். பிரிவு 62 (1)-ன்கீழ் விசாரணை நடத்த அதிகாரமளிக்கப்பட்ட அத்தகைய அதிகாரிகளுக்குக் கீழ்க்கண்ட அதிகாரங்கள் உண்டு. இந்த அதிகாரங்கள் சரியான விசாரணை நடத்துவதற்கு வசதி செய்யவும், விசாரணையின் முடிவுகளை அமலுக்குக் கொண்டு வரவும் உத்தேசிக்கப்படுகின்றன.

(i) தணிக்கையில் குறிப்பிட்டது போல [பிரிவு 64 (3)] விசாரணை நடத்துவதற்கு அதிகாரமளிக்கப்பட்ட அதிகாரி, ஏடுகள், கணக்குகள், பத்திரங்கள், ஆதாரங்கள், ரொக்கப்பணம் மற்றும் இதர சங்கத்திற்கு சொந்தமானதும் அதன் வசமிருக்கும் ஏடுகள் இவைகளைப் பார்ப்பதற்கு அவருக்கு அதிகாரமுண்டு. அவைகளை அவர் தடையில்லாமல் தாராளமாகப் பார்க்கலாம். கணக்குகளைப் பார்ப்பதற்கும், சொத்துகளைப் பரிசீலனை செய்வதற்கும், சங்கத்தின் ஏடுகளைக் கொண்டு அதன் அலுவல்களின் நிலைமையைத் தெரிந்து கொள்வதற்கும் வசதி செய்ய அத்தகைய அதிகாரம் தேவையாக இருக்கிறது.

(ii) ஏடுகள், கணக்குகள், ஆதாரங்கள், பத்திரங்கள், ரொக்கம் மற்றும் இதர சொத்துகளை வைத்துக்கொண்டிருக்கும் அல்லது அவைகளைப் பத்திரமாக வைத்துக் கொண்டிருப்பதற்குப் பொறுப்பாகவுள்ள எந்த ஒரு நபரையும் (உறுப்பினர் அல்லது உறுப்பினரல்லாதவர் அல்லது முன்னாள் உறுப்பினர், அல்லது ஊழியர்கள், அவற்றைச் சங்கத்தின் தலைமை அலுவலகத்தில் கொண்டு வந்து சேர்க்க அழைப்பாணை வெளியிட (Summons) அவருக்கு அதிகாரம் உண்டு [பிரிவு 65 (2) (ஆ)]. அப்படி சேர்க்கத் தவறுவது பிரிவு 101-ன் கீழ் ஒரு குற்றமாகக் கருதப்பட்டு ரூ200/- வரை அபராதம் தண்டனையாக விதிக்கப்படலாம்.

(iii) அத்தகைய ஏடுகளையும், கணக்குகளையும், பத்திரங்களையும் பத்திரப்படுத்துவதை உறுதி செய்யவும், அல்லது தன்னுடைய விசாரணையை வசதிப்படுத்தும் பொருட்டும் அவைகளைக் கைப்பற்றுவது தேவையென்று அவர் கருதினால் அவர் அவற்றைக் கைப்பற்றலாம். இது ஒரு மிகவும் வசதியளிக்கும் பயனுள்ள அதிகாரமாகும். இந்த அதிகாரம் இல்லாவிடில், சில

சந்தர்ப்பங்களில் விசாரணை பாதிக்கப்படும். சங்கத்தின் ஏடுகளையும், கணக்குகளையும் அல்லது பத்திரங்களையும் சங்கத்தின் அலுவலர்கள் வசம் விட்டுவைத்தால் அந்த அலுவலர்கள் அவற்றை மோசடி மாற்றுதல் செய்யலாம் அல்லது அவைகளை அழித்துவிடலாம் அல்லது முறைகேடுகள் கண்டுபிடிக்கப்படாமல் தப்பித்துக் கொள்வதற்கு வேறு ஏடுகளை வைக்கலாம். ஆகையால், ஏடுகளைக் கைப்பற்றுவது தேவையா அல்லது இல்லையா என்பதை முடிவு செய்வது விசாரணை அதிகாரியின் உளத்தேர்வைப் பொறுத்திருக்கிறது. தேவை என்று அவர் கருதினுல் ஏடுகளைக் கைப்பற்றி, எந்த நபரிடமிருந்து அல்லது நபர்களிடமிருந்து அந்த ஏடுகள் அல்லது பத்திரங்கள் கைப்பற்றப் பட்டனவோ அவர்களுக்கு அவர் ஒரு ரசீது கொடுக்கவேண்டும் [பிரிவு 62 (2) (அ)]. எனினும், விசாரணை அதிகாரி அவைகளை, விசாரணையின் காரியத்திற்காகவும் பரிசீலனைக்ககவும் தேவைப் படும் வரைக்கும் தான், வைத்திருக்கலாம். எப்படியிருந்தாலும், அவர் உயர்அதிகாரியின் அனுமதியிருந்தால் தவிர, 6 மாதங் களுக்கு மேல் வைத்திருக்கக் கூடாது [பிரிவு 62 (2) (அ)-ன் விலக்குக்கூறு]. ஏடுகளைப் பரிசீலனை செய்வதற்காகவும் விசாரணையை முடிப்பதற்காகவும் 6 மாதங்கள் ஒரு போதுமான அளவு நீண்டகாலமாகும். அப்படியிருந்தும் கூட, விசாரணை அறிக்கையின் அடிப்படையின் பேரில் ஏதாவது இறுதி நடவடிக்கை எடுப்பதற்கு முன்னர் அவைகளைத் திருப்பிக் கொடுக்கக்கூடாது என்று கருதப்பட்டால் மேல் அதிகாரியின் அனுமதியினுடன் அவைகளை வைத்துக் கொண்டிருக்கலாம்.

(4) அவர் எந்த நபரையும், அந்த நபருக்குச் சொந்தமான எந்த ஏடுகளையும் கணக்குகளையும் அல்லது பத்திரங்களையும் அல்லது விசாரணை செய்யப்படும் சங்கத்தைக் குறித்த தன் வசமிருக்கும் அத்தகைய ஏடுகளை முன்னிலைப்படுத்துவதற்கு அழைப்புக் கட்டளை வெளியிடலாம் [பிரிவு 65 (இ)]. சங்கத்தின் லேவாதேவியின் உண்மையை அல்லது ஒழுங்குத் தன்மையைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு அத்தகைய லேவாதேவிகளைக் குறித்த எந்தப் பதிவையும் பார்ப்பதற்கு விசாரணை அதிகாரிக்கு வசதி செய்ய இந்த அதிகாரம் தேவைப்படும் [பிரிவு 65 (சி)].

(5) எந்த ஒரு நபர் சங்கத்தின் அலுவல்களைப் பற்றித் தெரிந்து சங்கத்தின் எந்த ஒரு நடவடிக்கையை அல்லது லேவாதேவியைப் பற்றி விவரம் சொல்லக்கூடியவர் என்று விசாரணை அதிகாரி கருதி அவரை அழைக்கவேண்டுவது தேவையென்று கருதினுல் அந்த நபருக்கு விசாரணை அதிகாரி

அழைப்பாணையிடலாம். மேலும், அத்தகைய நபர்களிடமிருந்து பிரமாணத்தின் பேரில் (Oath) அவர் வாக்கு மூலங்களைப் பெறலாம். அத்தகைய வாக்கு மூலங்களின் மேல் நடவடிக்கை எடுக்கப்பட்டு நீதி மன்றங்களில் எந்த நபர்மீதும் குற்றம் சாட்டப் படலாம். சில சமயங்களில் சான்றாக (Evidence) அவை தாக்கல் செய்யப்படலாம். ஆகையால், விசாரணை அதிகாரி எந்த நபரையும் அவர் சங்கத்தின் லேவாதேவிகளைப் பற்றி அல்லது வியாபாரத்தைப் பற்றித் தெரிந்திருப்பவர் என்று கருதினால் அவரைப் பிரமாணத்தின் பேரில் விசாரணை செய்வதற்கும் அதிகாரம் பெற்றிருக்கிறார் [பிரிவு 65 (c)].

(6) விசாரணை அதிகாரி சங்கத்தின் அலுவலர்களை ஒரு நிருவாகக் குழுக் கூட்டத்தை அல்லது பேரவைக் கூட்டத்தைக் கூடக் கூட்டவேண்டுமென்று கேட்டுக்கொள்ளலாம். சங்கத்தின் அலுவலர்கள் அக் கூட்டங்களைக் கூட்டத் தவறினாலும், அல்லது நிருவாகக் குழு அல்லது அலுவலர்கள் ஒரு சங்கத்தில் இல்லாம லிருந்தாலும் அல்லது அத்தகைய கூட்டங்களைக் கூட்டுவதற்கு நிருவாகக் குழுவின் அல்லது அலுவலரின் தகுதியைப் பற்றி ஒரு தகராறு இருந்தாலும், விசாரணை அதிகாரியே அத்தகைய கூட்டங்களைக் கூட்டலாம் [பிரிவு 65 (இ) (1) & (2)]. இந்தச் சரத்துகள், பேரவைக் கூட்டங்களைப் பற்றிய பிரிவு 26-ல் அடங்கி யிருக்கும் சரத்துகளைப் போன்றவை.

ஒரு பேரவைக்கூட்டம் அல்லது நிருவாகக் குழுக் கூட்டம் சங்கத்தின் தொடர்புடைய அலுவலர்களால் கூட்டப்படவேண்டு மென்று விசாரணை அதிகாரி கட்டளையிடலாம். விசாரணையில் எழுகின்ற பொருள்களை ஆலோசிப்பதற்கு அத்தகைய கூட்டங்கள் தேவைப்படுவதால், அத்தகைய கூட்டங்களுக்கு அறிவிப்பு கால வரம்பு கிடையாது [பிரிவு 65 (இ) (1)]. சங்கத்தின் அலுவலர்கள் எந்தக் காரணத்தினாலும் அத்தகைய கூட்டங்களைக் கூட்டவில்லையானால், விசாரணை அதிகாரியே தாமாக அத்தகைய கூட்டங்களைக் கூட்டலாம் [பிரிவு 65 (இ) (2)]. இப்படிக் கூட்டப்பட்ட கூட்டங்களுக்குக் குறைவெண் (Quorum), தள்ளிப் போடப்பட்ட கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் செல்லக்கூடிய தன்மை, இவற்றிற்கு பிரிவு 26 (4) (அ) (1)& (2)-ன் சரத்துகள் பொருந்தும். இந்தச் சரத்துகளின்படி, கூட்டத்தில் குறைவெண் உறுப்பினர்கள் வரவில்லையானால், கூட்டம் தள்ளிப் போடப்படவேண்டும். அப்படித் தள்ளிப் போடப்பட்ட கூட்டத்திலும் குறைவெண் உறுப்பினர்கள் வரவில்லையானால், கூட்டத்திற்கு வந்திருந்த உறுப்பினர்களே குறைவெண்ணாக

அமைவார்கள். விசாரணை அதிகாரி தன் வேலையைப் பூர்த்தி செய்து கொள்வதற்கும், விசாரணையில் காணப்பட்ட குறைபாடு களைக் கவனிப்பதற்கும், இவைகளைச் சரிப்படுத்துவதற்கும் நடவடிக்கை எடுப்பதற்கும், கூட்டங்களைக் கூட்டுவதற்கும், சங்கத்தின் அலுவலர்கள் ஏதாவது முட்டுக்கட்டையிட்டால், அதைச் சமாளிப்பதற்கும் இந்தச் சரத்து தேவையாக இருக்கிறது.

**விசாரணையின்** முடிவுகளைத் தொடர்புடைய கட்சியினருக்கு அறிவிக்கப் பதிவாளர் கடமைப்பட்டிருக்கிறார் [பிரிவு 65 (3)]. சங்கம் அரசாங்கத்திடமிருந்து பங்குகள் பெற்றிருந்தால், அதாவது அரசாங்கம் ஒரு சங்கத்தின் பங்கு மூலதனத்தில் ஈடு செய்திருந்தால், விசாரணை அதிகாரி விசாரணையின் முடிவுகளை அரசாங்கத்திற்கும், சங்கம் இணைக்கப்பட்டிருக்கும் நிதி வங்கிக்கும், சங்கத்திற்கும் அறிவிக்கவேண்டும். சங்கம், நிதி வங்கியிடமிருந்து கடன் வாங்காமலிருந்தாலும் கூட, நிதி வங்கிக்கு விசாரணையின் முடிவுகள் அறிவிக்கப்பட வேண்டும். ஏனென்றால், தான் உறுப்பினராக இருக்கும் ஒரு சங்கத்தின் நிலைமையை நிதி வங்கி அறிந்திருக்கவேண்டும். மேலும், சங்கம் நிதி வங்கியிலிருந்து வருங்காலத்தில் எப்போதாவது கடன் வாங்கலாம் [65 (3)]. விசாரணை அறிக்கையின் மீது சங்கமும், நிதி வங்கியும், அரசாங்கமும் நடவடிக்கையெடுக்கலாம். பதிவாளரும் விசாரணை அறிக்கையின் மீது, தக்க நடவடிக்கை எடுக்கலாம். அவர், சங்கத்தை அல்லது வங்கியை, ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் குறைபாடுகளைச் சரிபடுத்துவதற்கான, அவரால் விவரிக்கப்படும் முறையில், நடவடிக்கையெடுப்பதற்குக் கட்டளையிடலாம் [பிரிவு 65 (4)].

பிரிவு 65-ன் கீழ் நடத்தப்படும் விசாரணை, தாமதமில்லாமல் செய்யப்படுவது மிகவும் தேவையானது. விசாரணை நீடித்துக் கொண்டே இருக்கக்கூடாது. விசாரணை சுறுசுறுப்பாகவும், தாமதமில்லாமலும் நடத்தப்படாவிட்டால், விசாரணைக்குப் பயனில்லாமலும், சங்கம் ஒரு நீடித்த காலத்திற்கு அதன் வழியே தான் சென்று கொண்டுமிருக்கும். சங்கத்தின் வகையையும், அல்லது முக்கியத்துவத்தையும், அல்லது விசாரணையின் நோக்கத்தையும், பரப்பையும் அனுசரித்துப் பதிவாளர், தன் துணைப் பதிவாளர் உதவிப் பதிவாளர் அல்லது ஆய்வாளர் இவர்களை விசாரணை செய்யும்படி அவர்களுக்கு அதிகாரம் அளிக்கலாம். குறைபாடுகளைத் தாமதமில்லாமலும் விரைவாகவும் சரிப்படுத்துவதற்காக, விசாரணையானது முழுமையானதாகவும், தாமதமில்லாததாகவும், திட்டவட்டமானதாகவும் இருக்கவேண்டும்.

இந்தப் பிரிவைப் பரிசீலனை செய்த சந்தானம் குழுவினர், நிதி வங்கிகள் தங்கள் உறுப்பினர் சங்கத்தைக் குறித்து விசாரணை செய்யவேண்டும் என்ற கோரிக்கை செய்தாலும்கூடப் பதிவாளர் அவ் விசாரணையைக் கட்டளையிடுவதற்கான சரத்து இந்தப் பிரிவிலிருக்கவேண்டுமென்று கருதினர். பொதுவாக, இம் மாதிரியான விசாரணை நடைமுறையில் செய்யப்பட்டு வந்தாலும், சட்டத்தின் பிரிவிலேயே இதற்கான சரத்து இருக்கவேண்டும் என்பதுதான் அவர்களின் யோசனை. எந்த ஒரு பதிவேடுகளையும் அல்லது சொத்துகளையும் முன்னிலைப் படுத்துவதற்கு அழைப்புக் கட்டளையிட விசாரணை அதிகாரிக்கு அதிகாரங்களிருந்தாலும்கூட, பதிவேடுகள் அல்லது சொத்துகள் முன்னிலைப் படுத்தப்படவில்லையானால், அவைகள் முன்னிலைப்படுத்தப்படுவதை உறுதிப்படுத்துவதற்காகச் சட்டத்தில் எந்த ஒரு சரத்தும் இல்லையென்றும்கூட சந்தானம் குழுவினர் கருதினர். அக் குழுவினரின் கருத்தின்படி அழைப்பாணை நிறைவேற்றப்படாவிட்டால் வழக்கு தொடருவதற்கு மட்டும் சரத்து இருக்கிறது. விசாரணை அதிகாரியிடமிருந்து ஒரு புகாரின் பேரில், பதிவேடுகளை முன்னிலைப் படுத்துவதற்காக ஒரு நீதிபதியால் (Magistrate) ஒரு பிடிப்பாணை (Warrant) வெளியிடப்படுவதற்குத் தக்க ஒரு சரத்து ஏற்படுத்த, பிரிவு 65-க்கு ஒரு திருத்தம் தேவையென்றும், அந்தக் குழுவினர் கருதினர். 1960ஆம் வருடத்திய மகாராஷ்டிர மாநில கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில், இதற்காகச் சரத்து செய்யப்பட்டிருக்கிறது. இந்தச் சரத்து பின்வருமாறு 'ஒரு சங்கத்தின் ஏடுகளும் பதிவேடுகளும் அடக்கி வைக்கப்படலாம், அல்லது மோசடியாக மாறுதல் செய்யப்படலாம்; அல்லது அழுத்திவிடப்படலாம் என்றும் அல்லது ஒரு சங்கத்தின் நிதிகளும் சொத்துகளும் கையாடல் அல்லது தவருகப் பயன்படுத்தல் செய்யப்படலாம் என்றும் பதிவாளர் திருப்தியடைந்தால், பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட நபர் சங்க எல்லையில் அதிகாரம் செலுத்தும் நீதிபதிக்குச் சங்கத்தின் பதிவேடுகளையும் சொத்துகளையும் கைப்பற்றுவதற்கு அல்லது சுவாதீனம் செய்து கொள்வதற்கு மனுச் செய்து கொள்ளலாம். உட்பிரிவு (1)-ன்கீழ், அத்தகைய ஒரு மனு கிடைத்தவுடன், பதிவேடுகளும் சொத்துகளும் வைக்கப்பட்டிருக்கும் அல்லது வைக்கப்படலாம் என்று கருதப்படும் எந்த ஓர் இடத்திற்குள்ளும் நுழைந்து சோதனை செய்து அவைகளைக் கைப்பற்றி அவைகளைப் பதிவாளருக்கு அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட நபருக்குச் சூழ்நிலைக்கேற்ப அவைகளின் சுவாதீனத்தை ஒப்புவிக்க ஒரு காவல்துறை அதிகாரிக்கு நீதிபதி அதிகாரம் அளிக்கலாம். இந்தச் சரத்து, மாதிரிக் கூட்டுறவு மசோதாவின் 30ஆம் பகுதியைப் போன்றது.

4. ஆய்வு (Inspection) (பிரிவு 66)

பிரிவு 65-ன்கீழ், செய்யப்படும் விசாரணை உறுப்பினர்களின் நலனைப் பாதுகாப்பதற்கு உத்தேசிக்கப்பட்டிருப்பதுபோல், பிரிவு 66-ன்கீழ் செய்யப்படும் ஆய்வு சங்கத்தின் கடன்காரர்களின் நலனை அல்லது நிதி வங்கியின் நலனை அல்லது வைப்புத் தொகை செலுத்தியவர்களின் நலனைப் பாதுகாப்பதற்குப் முக்கியமாக உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. பிரிவு 65-ன்கீழ் செய்யப்படும் விசாரணை, பொதுவாக எல்லாம் அடங்கிய முழுமையானதாக இருக்கிறது. ஆனால், பிரிவு 66-ன்கீழ் செய்யப்படும் ஆய்வு நோக்கத்தில் வரம்புக்குட்பட்டது. ஒரு கடனாளர் (நிதி வங்கி அல்லது வைப்புத் தொகை செலுத்தியவர்) கொடுத்திருக்கும் தொகைகள் முழுமையாகவும் உரிய காலத்திலும் வசூலிக்கப்பட முடியுமா என்பதை ஆராய்வதுதான் ஆய்வின் நோக்கம். பிரிவு 65-ன்கீழ், நிருவாகக் குழு உறுப்பினர்கள் அல்லது சங்கத்தின் உறுப்பினர்கள் அல்லது மாவட்ட ஆட்சியாளர் செய்யும் வேண்டுகோளின்பேரில் விசாரணை நடத்தப்படுகிறது. ஆனால், பிரிவு 66-ன்கீழ் நடத்தப்படும் ஆய்வு சங்கத்தின் கடனாளர்களின் வேண்டுகோளின்பேரில் செய்யப்படுகிறது. பிரிவு 65 (1)-ல் குறிக்கப்பட்ட நபர்களின் வேண்டுகோளின்பேரில் செய்யப்படும் விசாரணை ஓர் அதிகாரக் கட்டளையாகும். ஆனால், பிரிவு 66 (1)-ன்கீழ் செய்யப்படும் ஆய்வு அத்தகையதல்ல. எனினும், விசாரணை அதிகாரிக்கும் ஆய்வு அதிகாரிக்கும் ஒரே விதமான அதிகாரங்கள் உண்டு. அதாவது பிரிவு 66-ன்கீழ் ஆய்வு செய்யும் அதிகாரி பிரிவு 65-ன்கீழ் விசாரணை செய்யும் அதிகாரியின் எல்லா அதிகாரங்களையும் பெற்றிருக்கிறார். பிரிவு 66-ன்கீழ் செய்யப்படும் ஆய்வு சட்டப்படி அமைந்த ஓர் ஆய்வு; அது கூட்டுறவுத் துறை அதிகாரிகளால் நடத்தப்படும் சாதாரண சங்க ஆய்வுகளிலிருந்து வேறுபட்டது. இந்த ஆய்வு ஒரு கடனாளரின் வேண்டுகோளின்பேரில் அல்லது பதிவாளரால் தன் சொந்த இயக்கத்தின் பேரில் செய்யப்படுகிறது [பிரிவு 66 (1)]. பதிவாளர் தானே விசாரணையை நடத்தலாம்; அல்லது ஆய்வு செய்வதற்கு எந்த ஓர் அதிகாரிக்கும் அவர் அதிகாரம் அளிக்கலாம். பொதுவாக பிரிவு 66-ன் கீழ் செய்யப்படும் ஆய்வு கூட்டுறவுத் துறை அதிகாரிகளால் மட்டும்தான் செய்யப்படுகிறது. ஆகையால், அத்தகைய சட்டப்படி அமைந்த ஆய்வுகள் அபூர்வமாகக்கூட இருக்கின்றன. எனினும், இந்தப் பிரிவு ஓர் ஆய்வைக் கேட்கக் கடனாளர்களுக்கு ஓர் உரிமையை அளிக்கிறது.

எனினும், இந்த உரிமை ஓர் அதிகாரக் கட்டளையானது அல்ல. ஏனென்றால், பிரிவு 66-ன் கீழ் ஆய்வு நடத்தும் உளத்தேர்வு

பதிவாளருக்கு உண்டு. ஆய்வு நடத்துவதற்கு முன்பு, அல்லது தன் அதிகாரிகளால் ஓர் ஆய்வு நடத்தும்படிக் கட்டளையிடுவதற்கு முன்பு பதிவாளர், சங்கம் கடன்காரருக்கு ஓர் அறுதியிட்ட தொகையானது பாக்கியாக இருக்கிறதென்றும், அந்தத் தொகையைக் கடன்காரர் கேட்டும் ஒரு நியாயமான காலத்திற்குள் சங்கத்திடமிருந்து அவர் ஒரு தொகையையும் பெறவில்லையென்றும், திருப்தியடைய வேண்டும். ஆய்வுக்காக விண்ணப்பம் செய்பவர், பதிவாளரிடம் அவரால் கோரப்படும் தொகையை, உத்தேசிக்கப்பட்ட ஆய்வின் செலவுக்காகப், பிணயமாகக்கூட வைக்கவேண்டும். ஓர் ஆய்வு தேவையென்று பதிவாளர் திருப்தியடைந்தால், அவர் தானே அல்லது தன்னுடைய அதிகாரிகளால், அந்த ஆய்வை நடத்தலாம் [பிரிவு 66 (1)-க்கு விலக்குக் கூறு]. தன் சொந்த இயக்கத்தின் பேரில் பதிவாளரால் ஆய்வு செய்யப்பட்டால், அவர் ஆய்வின் முடிவுகளைச் சங்கத்திற்கு அறிவிக்கவேண்டும். கடன்காரரின் வேண்டுகோளின் பேரில் ஆய்வு செய்யப்படும்போது, ஆய்வின் முடிவுகளைச் சங்கத்தின் கடன்காரர்களுக்கும் சங்கம் இணைக்கப் பட்ட நிதி வங்கிக்கும் அறிவிக்கவேண்டும் [பிரிவு 66 (2)]. தணிக்கையைப் போன்றும் [பிரிவு 64 (5)] விசாரணையைப் போன்றும் [பிரிவு 65 (4)] ஆய்வு செய்வதிலும் கூடப் பதிவாளர், சங்கத்தின் எந்த அலுவலரையும் ஒரு குறிப்பிட்டக் காலத்திற்குள் குறைபாடுகளைச் சரிப்படுத்தும்படிக் கட்டளையிட அதிகாரம் பெற்றிருக்கிறார் [பிரிவு 63 (3)]. இந்த அதிகாரம், ஆய்வின் விளைவாகக் காணப்பட்ட குறைபாடுகளைச் சரிப்படுத்துவதற்காகக் காலதாமதமில்லாத வகையிலும் பயனளிக்கும் வகையிலும் நடவடிக்கையெடுப்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆய்வு காலதாமதமின்றி செய்யப் பட்டுக் குறைபாடுகளும் விரைவில் நீக்கப்படவேண்டும்.

**5. நிதி வங்கியால் புத்தகங்கள் ஆய்வு செய்யப்படுதல் (Inspection of books by a Financing Bank) (பிரிவு 76)**

இது நிதி வங்கியின் ஒரு தனிப்பட்ட சிறப்புரிமையாகும். பிரிவு 67, நிதி வங்கிக்குக் கடன் பாக்கியுள்ள எந்த ஒரு சங்கத்தின் ஏடுகளையும் ஆய்வு செய்வதற்கு நிதி வங்கிக்கு உரிமை வழங்குகிறது. இந்த ஆய்வு ஒரு சங்கத்தின் ஏடுகளைச் செய்யும் ஒரு பொதுவான ஆய்வு அல்ல. ஆய்வு அதிகாரி, வங்கியின் ஓர் ஊதியம் பெற்ற ஊழியராக இருந்தால், அத்தகைய ஆய்வை மேற்கொள்வதற்கு அவர் தகுதியுள்ளவர் என்று பதிவாளரால் சான்றிடப்பட்டவராக இருக்கவேண்டும். நிதி வங்கியின்

நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினர் அத்தகைய ஆய்வை மேற்கொண்டால் பதிவாளருடைய அத்தகைய சான்றிதழ் தேவையில்லை. நிதி வங்கியின் ஓர் அதிகாரியால் ஆய்வு செய்யப் பட்டால், ஆய்வு செய்வதற்கு வங்கியின் நிருவாகக் குழுவால் அவருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்க வேண்டும். அந்த அதி-காரி சங்கத்தின் ஓர் ஊதியம் பெற்ற ஊழியராக இருக்கக்கூடாது.

பிரிவு 67-ன் கீழ் ஆய்வு செய்யும் நபர் சங்கத்திற்குச் சொந்த மான அல்லது அதன் வசமிருக்கும் புத்தகங்களையும், கணக்கு களையும், பத்திரங்களையும், ஆதாரங்களையும், பணம் மற்றும் இதர சொத்துகளையும் தாராளமாகப் பார்க்கலாம். அவர், சங்கத்தின் நிதிநிலைமையை அறிவதற்கும், சங்கத்திற்கு நிதி வங்கி யால் கடனுகை அளிக்கப்பட்ட பணத்தின் பாதுகாப்பை அறிவதற்கும், தேவைப்படும் தகவல்களையும், விவரப்பட்டியல் களையும், விவர அறிக்கைகளையும் கூடக் கேட்கலாம் (பிரிவு 67). ஆய்வு செய்யும் நபருக்கு வேறு அதிகாரங்களில்லையென்பது குறிப் பிடத்தக்கது. அதாவது, ஏடுகள், கணக்குகள், முதலியவற்றை முன்னிலைப்படுத்துவதற்காக அழைப்பாணை வெளியிடுவதற்கும் அல்லது அவற்றைக் கைப்பற்றுவதற்கும் அதிகாரம் கிடையாது. எனினும், இந்தப் பிரிவின்கீழ் ஆய்வு செய்யும் ஒரு நபர் சட்டப்படி யான அதிகாரியாகையால், அவர் புத்தகங்களைப் பெறுவதற்கும் விவரப்பட்டியல் அல்லது தகவல்களைப் பெறுவதற்கும் ஒரு சட்டப்படியான உத்தரவை வெளியிடக்கூடும். அத்தகைய உத்தரவு கீழ்ப்படியப் படாவிட்டாலுங்கூட அது பிரிவு 101-ன்கீழ் ஒரு குற்றமாகக் கருதப்படும். இந்தப் பிரிவு ஒரு நிதி வங்கிக்குச் சிறப்புரிமை நிலைமையிலிருந்து ஆய்வு செய்ய ஓர் உரிமையை வழங்குகிறது. இல்லாவிடில், ஒரு சங்கத்தின் உள் நிருவாகத்தில் ஒரு நிதி வங்கி தலையிடக்கூடாது என்ற காரணத்தைக் காட்டி ஒரு சங்கம் நிதி வங்கி ஆய்வு செய்வதைக் கோபிக்கலாம். அவ்வாறு எந்தச் சங்கமும் காரணம் காட்டி நிதி வங்கியின் ஆய்வைத் தடை செய்யாமலிருப்பதற்கும், நிதி வங்கி தன் நலத்தைப் பாதுகாக்கும் பொருட்டும் தனக்குக் கடன் பாக்கியுள்ள எந்த ஒரு சங்கத்தையும் ஆய்வு செய்யச் சட்டத்தில் சரத்து செய்யப்பட்டிருக்கிறது.

ஒரு சங்கத்தின் மதிப்பைப் பரிசீலனை செய்வதற்கும், நிதி வங்கிக்குக் கொடுக்க வேண்டிய பாக்கியைத் திருப்பிச் செலுத்து வதற்குச் சங்கத்தின் சக்தியை ஆராய்வதற்குமான ஒரு குறிப் பிட்ட செயலுக்கு இந்த ஆய்வு தேவைப்படுகிறது. ஒரு நிதி வங்கியால் செய்யப்படும் ஆய்வுப் பிரச்சினையை ஆராய்ந்த சந்தானம் குழுவினர், உறுப்பினர் சங்கத்தை, அது கடன் பாக்கி

யாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், ஆய்வு செய்வதற்கு நிதி வங்கிக்கு உரிமையிலிருக்க வேண்டும் என்று, கருதினர். மத்திய வங்கியால் கடனுதவி அளிக்கப்பட்ட சங்கத்தை ஆய்வு செய்வதற்கான உரிமை மாநிலக் கூட்டுறவு வங்கிக்குக்கூட இருக்க வேண்டுமென்று அவர்கள் கருத்து கொண்டனர். மேலும், நிதி வங்கியின் ஊழியர் ஒருவர், தனக்குக் கடன் பாக்கியாகவுள்ள ஒரு சங்கத்தை ஆய்வு செய்யும்போது, அவருக்குப் பதிவாளரின் சான்றிதழ் தேவையில்லை என்றும் அவர்கள் கருதினார்கள். அந்த ஊழியர் நிதி வங்கியின் நிருவாகக் குழுவால் அங்கீகாரம் அளிக்கப்பட்டால் மட்டும் போதும் என்றும் அவர்கள் கருதினார்கள். மேலும், நிதி வங்கியின் ஓர் அதிகாரி சங்கத்தை ஆய்வு செய்தால், ஏடுகளையும, கணக்குகளையும் முன்னிலைப் படுத்தும்படி உறுப்பினர் சங்கத்துடன் தொடர்புள்ள எந்த நபருக்கும் அவர் அழைப்புக் கட்டளை வெளியிட உரிமையுடைய வராகக்கூட இருக்க வேண்டுமென்று அவர்கள் கூறியிருக் கின்றனர்.

### 6. விசாரணை, ஆய்வு, நிதி வங்கியின் ஆய்வு இவற்றின் செலவை வசூல் செய்தல் (Recovery of Costes) (பிரிவு 68)

விசாரணைச் செலவும் ஆய்வுச் செலவும் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட விகிதாச்சாரத்தில் வசூலிக்கப்படும். விசாரணையின் செலவையும் (பிரிவு 65) அல்லது ஆய்வின் செலவையும் (பிரிவு 66) நிருணயித்து அதைச் சில விகிதாச்சாரப் படி, விசாரணை அல்லது ஆய்வு மனு செய்த சங்கத்திடமிருந்தும், உறுப்பினரிடமிருந்தும், கடனாளரிடமிருந்தும், சங்கத்தின் அலுவலர் அல்லது முன்னாள் அலுவலரிடமிருந்தும் வசூல் செய்யலாம். பிரிவு 67-ன்கீழ் நிதி வங்கியால் செய்யப் படும் ஆய்வில், பதிவாளர் நிதி வங்கிக்குச் செலவுகளைத் தீர்ப்பு அளிக்கலாம். விசாரணை, ஆய்வு அல்லது நிதி வங்கியால் செய்யப் படும் ஆய்வுக்கான செலவுகளை விதிப்பது பதிவாளரின் விருப்பத் திற்கு விடப்பட்டது. பொதுவாக மிகவும் அபூர்வமான சூழ்நிலை களில் தவிர, அத்தகைய செலவுகள் விதிக்கப்படுவதில்லை [பிரிவு 68 (11)]. செலவுகள், நில வருவாய் பாக்கியாக வசூலிக்கப் படுகின்றன [பிரிவு 68 (2)].

### 7. சங்கத்தின் ஊதியம் பெற்ற அதிகாரியை அல்லது ஊழியரைத் தற்காலிகமாக விலக்கி வைத்தல் (Suspension of a Paid Officer or Servant of a Society) (பிரிவு 70)

*1961*ஆம் வருடத்திய சட்டத்தின் பிரிவு 70 ஒரு புதிய சரத்தாகும். ஒரு சங்கத்தில் தவறான நிருவாகத்திற்கும் சில

தவறுதலான செயல்களுக்கும் ஓர் ஊதியம் பெற்ற அதிகாரி-பொதுவாக ஓர் உயர்நிலை அதிகாரி-பொறுப்பாளியாக இருப்பது சில சமயங்களில் ஏற்படலாம். அத்தகைய தவறான செயல்களில் நிருவாகக் குழுவினர் அல்லது நிருவாகக் குழுவின் சில உறுப்பினர்கள் தெரிந்தோ அல்லது தெரியாமலோ ஈடுபட்டவர்களாக இருக்கிறார்கள். பிரிவு 65-ன் கீழ் ஒரு விசாரணைக்குப் பிறகு நிருவாகக் குழுவை மாற்றவும் அல்லது பிரிவு 72-ன் கீழ் அதைத் தள்ளி வைக்கவும் தேவையில்லாமலிருக்கும்போது, தொடர்பான அதிகாரியைப் பதவியிலிருந்து விலக்கினால் நிருவாகம் சீரடையலாம். அப்படிச் செய்வதற்கு நிருவாகக் குழு தொடர்பான அதிகாரியின் மீது குற்றச்சாட்டு செய்து அவருடைய விளக்கத்தைப் பெற்று முடிவு செய்ய வேண்டும். இதற்குக் காலம் ஆகலாம், இதற்கிடையில் அந்த அதிகாரியின் தவறான செயல்களை நிறுத்தமுடியாது. மேலும், அந்த அதிகாரி விசாரணையில் தலையிடலாம். அல்லது தன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கையிலும் தலையிடலாம். ஆகையால், இந்தப் பிரிவின் கீழ் (பிரிவு 70), பதிவாளர் அத்தகைய அதிகாரியைத் தற்காலிகமாக வேலையிலிருந்து விலக்கி வைக்கவேண்டுமென்று கட்டளையிட அதிகாரம் பெற்றிருக்கிறார்.

பிரிவு 65-ன் கீழ் நடத்தப்பட்ட விசாரணை அல்லது பிரிவு 66-ன் கீழ் நடத்தப்பட்ட ஆய்வு, அல்லது பிரிவு 67-ன் கீழ் நடத்தப்பட்ட தணிக்கை, அல்லது பிரிவு 67-ன் கீழ் நிதி வங்கியால் செய்யப்பட்ட ஆய்வின் விளைவாகச் சில தவறான செயல்கள் சங்கத்தின் அதிகாரி புரிந்துள்ளார் என்று திட்டவட்டமாகத் தெரிய வந்தால், அவர் மீது மேல் விசாரணை தொடுத்து முடிவு தெரியும்வரை, இவ்வாறு வேலையிலிருந்து அவரைத் தற்காலிகமாக விலக்கலாம். நிதிகளைக் கையாடல், நம்பிக்கைத் துரோகம் செய்தல் முதலியன போன்று, அந்த அதிகாரியின் தவறான செயல்கள் கிரிமினல் தன்மையுள்ளதாக இருக்கவேண்டும். அத்தகைய சூழ்நிலைகளில் அத்தகைய ஊதியம் பெற்ற அதிகாரி அல்லது ஊழியரைத் தன்னால் குறிப்பிடப்பட்ட காலத்திற்கு வேலையிலிருந்து தற்காலிகமாக விலக்கி வைக்கப் பதிவாளர் உத்தரவிடலாம் [பிரிவு 70 (1)]. பதிவாளருடைய உத்தரவு கிடைத்தவுடன் சங்கத்தின் நிருவாகக் குழுவினர் ஓர் ஊதியம் பெற்ற அதிகாரியை வேலையிலிருந்து தற்காலிகமாக விலக்கி வைக்கலாம். சங்கத்தின் உப-விதிகளில் ஊழியர்களின் பணி வரையரைகள் எவ்வாறாக இருப்பினும், இம் மாதிரி தற்காலிகமாக ஓர் ஊழியரை வேலையிலிருந்து விலக்கி வைக்கலாம் [பிரிவு 70 (2)]. ஊழியரை வேலையிலிருந்து தற்காலிகமாக விலக்கி

வைக்கப் பதிவாளர் உத்தரவை நிருவாகக் குழு நிறைவேற்றத் தவறினால், அது பிரிவு 101-ன் கீழ் ஒரு குற்றமாக அமையும். ஓர் ஊதியம் பெற்ற ஊழியரை வேலையிலிருந்து விலக்கி வைத்தல், அவர் மீதிருக்கும் குற்றச்சாட்டு விசாரிக்கப்பட்டு முடிவு செய்யப் படும் வரை, உத்தரவிடப்பட்டிருக்கிறது. ஆகையால், விசாரணை முடியும்வரை தொடர்பான அதிகாரி குற்றத்திலிருந்து விலக்கப் பட்டு வேலையில் மீண்டும் வைக்கப்படும் வரையிலும், அல்லது அவரை வேலையிலிருந்து நீக்கும் வரையிலும், அவ்வப்போது அவரை வேலையிலிருந்து விலக்கி வைக்கப்படும் காலத்தை நீடிப்பதற்குத் தேவைப்படலாம். எந்தச் சூழ்நிலையிலும், பதிவாளருடைய முன் அனுமதியின்றி அந்த ஊழியரை மீண்டும் வேலையில் அமர்த்தக்கூடாது [பிரிவு 70 (3)]. இந்தச் சரத்து சங்கத்தின் ஊதியம் பெற்ற ஊழியர்களால் செய்யப்படும் ஒழுங்கீனச் செயல்களைத் தடுத்து, தவறு செய்யும் ஊழியர்களின் மீது காலத்தில் விரைவாக நடவடிக்கையை எடுப்பதற்கு வசதி செய்கிறது. சாதாரணமாக, இந்த அதிகாரம் மிகவும் அருமை யாகவே பயன்படுத்தப்படுகிறது.

சங்கங்களில் முறைகேடுகளைத் தடுப்பதற்கும், அல்லது கண்டு பிடிப்பதற்கும் சங்கங்களின் சரியான செயல்பாட்டை நிதித் துறையிலும் ஆட்சித் துறையிலும் உறுதிப்படுத்துவதற்கும், கூட்டுறவுக் கொள்கைகளைத் தழுவியிருப்பதற்கும், இந்தச் சரத்துகள் உத்தேசிக்கப்பட்டிருக்கின்றன. இந்த நிலையில் தணிக்கை, மேற்பார்வை, விசாரணை, ஆய்வு என்ற சொற்களின் பொருளையும் அவற்றின் வேறுபாட்டையும் விளக்கமாகத் தெரிந்து கொள்வது பயனுள்ளதாக இருக்கும்.

தணிக்கை என்பது சட்டத்தின் 64ஆம் பிரிவின் கீழ் பதிவாளரின் சட்டப்படி அமைந்த ஒரு கடமையாகும். பிரிவு 65-ன் கீழ் விசாரணையும், பிரிவு 66-ன் கீழ் ஆய்வும், சில தனிப் பட்ட சூழ்நிலைகளில் சட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருக் கின்றன. ஆனால், தொடர்ந்த மேற்பார்வையில் சட்டரீதியான ஏற்பாடு ஒன்றும் தேவையில்லை. சட்டப்படியான சரத்தும் செய்யப்படவில்லை. கூட்டுறவு நிறுவனங்களின் திறமையானது (1) காலமுறைத் தணிக்கை (2) தொடர்ந்த மேற்பார்வை என்ற இரண்டு முக்கியப் பாதுகாப்புகளைக் குறித்துச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகளைப் பொறுத்தே மிகவும் அதிகமாகச் சார்ந்திருக்கிறது. தணிக்கையாளர் என்பவர் தணிக்கை வேலையில் சிறப்பாக ஈடு பட்டவர். மேற்பார்வையாளர் என்பவர் மேற்பார்வையில் சிறப்பாக அல்லது தனியாக ஈடுபட்டவர். விசாரணையும், ஆய்வும், பிரிவுகள் 65-லும் 66-லும் முறையே உத்தேசிக்கப்பட்ட

தனியானதும் எப்போதாவது நேரும்படியானதுமான செயல்களுக்குப் பயன்படுத்தப்பட வேண்டியதாகும். மேற்பார்வைத் தணிக்கையிலுட்பட்ட அநேக விவரங்களை உள்ளடக்கியிருக்கிறது. ஆனால், அதோடு நின்று விடாமல், மேற்பார்வையானது சங்கத்திற்குக் கூட்டுறவுக் கொள்கைகளைப் போதிக்கும் கடமையையும், பொதுவாகச் சங்கங்களை அமைத்துக் கூட்டுறவு இயக்கத்தைப் பரப்பும் கடமையையும், உள்ளடக்கியிருக்கிறது.

மேற்பார்வைக்கும் தணிக்கைக்கும் உள்ள வேறுபாடு என்னவென்றால் மேற்பார்வை, ஒரு சங்கத்தின் திறமையைப் பரிசிலனை செய்வதை மட்டும் நோக்கமாகக் கொண்டிராமல், சங்கம் திறமையாகச் செயல்படுவதை உதவி செய்யும் வேலையையும் தணிக்கையில் குறிக்கப்பட்டிருக்கும் குறைபாடுகளைச் சரிசெய்யும் வேலையையும் உள்ளடக்கியிருக்கிறது. மேலும், அது ஒரு சங்கத்தின் செயல்பாடு வாணிக அடிப்படையில் இருப்பதையும், மற்றும் அது உண்மையாகவே கூட்டுறவு முறையிலிருப்பதையும் கண்காணிக்கிறது. சங்கத்தின் கணக்குகள், நல்லமுறையில் வைக்கப்பட்டிருக்கின்றன என்பதையும் சங்கத்தின் வியாபாரம் முறையாகவும், சிறப்பாகவும் நடத்தப்பட்டு வருகிறது என்பதையும் திருப்தி செய்து கொண்டு மேற்பார்வையாளர் இலக்கங்களை விவரமாகப் பரிசிலனை செய்யாமல், நிருவாகக் குழுவினருடைய செயலறிவையும், உறுப்பினர்களுடைய அறிவையும் சோதனை செய்தும், அவர்கள் படும் பாடுகளைப் பற்றியும், அவர்களிடையேயுள்ள தகராறுகளைப் பற்றியும், அறிவுரை கூறியும், பிழைகளை விளக்கி அவைகளைச் சரிசெய்தும், சங்கங்கள் எப்பொழுதும் பின்பற்ற வேண்டிய சொள்கைகளை வலியுறுத்தியும் வருவார். ‘இந்தக் கடமைகள் எங்களுடைய கருத்தில் சரியாகக் கூட்டுறவு நிறுவனங்களையே சாரவேண்டும்’ (மாக்லகன் குழு). எனவே, கூட்டுறவுச் சங்கத்தின் செயல்பாட்டின் மீது செய்யப்படும் மேற்பார்வை, சட்டம், விதிகள், உப-விதிகளின்படி சங்கத்தின் அலுவல்களைப் பரிசீலனை செய்வதுடன் உறுப்பினர்களுக்கும் சங்கத்தின் நிருவாகிகளுக்கும் கூட்டுறவுக் கொள்கைகளிலும் நடைமுறைகளிலும் பயிற்சி அளிப்பதை உள்ளடக்கியிருக்கிறது. மேற்பார்வையாளர் சங்க வேலையில் இடைவிடாத உதவியும் நிதித் தொடர்புடைய செயல்களில் புத்திமதியும் சங்கத்தின் பொது நிருவாகத்தில் வழிகாட்டுதலும் செய்ய வேண்டும்.

தமிழ்நாட்டில், சங்கங்களின் மேற்பார்வைக்காக இரண்டுவித நிறுவனங்களிருக்கின்றன. ஒன்று, விவசாய நாணயச் சங்கங்

களின் செயல்பாட்டை மேற்பார்வை செய்யும் மேற்பார்வை ஒன்றியங்களும் (Supervising Unions), அவற்றின் மேற்பார்வையாளர்களும், ஊழியர்களும், மத்திய வங்கிகளும், அவற்றின் ஆய்வாளர்களும், ஊழியர்களும் கொண்ட உத்தியோகப் பற்றற்ற அமைப்பாகும் (Non-Official Agency). மற்றொன்று, கைத்தறி நெசவாளர் சங்கங்கள், ஸ்டோர்ஸ் சங்கங்கள் முதலியன போன்ற கடனல்லாத சங்கங்களின் செயல்பாட்டினை மேற்பார்வை செய்யும் துறை அதிகாரிகள் அடங்கிய அரசாங்க ஊழியர்கள். தற்போது, மத்திய வங்கி விவசாய நாணயச் சங்கங்களை மட்டும் மேற்பார்வை செய்கின்றது. இதரவகைச் சங்கங்களின் மேற்பார்வை தொடர்பான ஆட்சித் துறைகளின் வசம் இருக்கின்றது. மத்திய வங்கி தன்னால் நிதி அளிக்கப்பட்ட சங்கங்களுக்குக் கடன் விண்ணப்பங்களைப் பரிசீலனை செய்வதற்காகவும் அல்லது சரக்கு இருப்புகளைச் சரிபார்ப்பதற்காகவும் தன் ஊழியர்களை அனுப்புகிறது. மத்திய வங்கி இந்தச் சங்கங்களை முறையாகக் காலமுறை ஆய்வு செய்வதில்லை. சந்தானம் குழுவினர், நிதி வங்கி என்ற முறையில் மத்திய வங்கி தன்னால் நிதி வழங்கப்பட்ட எல்லாச் சங்கங்களையும் மேற்பார்வை செய்வது தேவை என்று கருதினர். மாவட்டத்தில் கூட்டுறவு இயக்கத்தின் நிதி பொறுப்பாளர் என்ற நிலைமையில் மத்திய வங்கிகளிருப்பதால் தங்களால் நிதி வழங்கப்படாத இணைக்கப்பட்ட நகர வங்கிகள் போன்ற சங்கங்களையும் கூட மத்திய வங்கிகள் பொதுவான மேற்பார்வை செய்கின்றன. ஆகையால், அந்தக் குழுவினர், ஒவ்வொரு மத்திய வங்கியும் தன்னுடன் இணைக்கப்பட்ட எல்லாச் சங்கங்களையும் பிற அமைப்பு மேற்பார்வை செய்யப்படுவதைப் பொருட்படுத்தாமல் தானே தன் மேற்பார்வையைச் செய்யவேண்டும் என்ற பரிந்துரையைச் செய்துள்ளனர்.

பிரிவு 65-ன் கீழ், சில தனிப்பட்ட சூழ்நிலைகளில், விசாரணை மேற்கொள்ளப்படுகிறது. பிரிவு 64-ன் கீழ் செய்யப்படும் தணிக்கைக்கும் பிரிவு 65-ன் கீழ் செய்யப்படும் விசாரணைக்குமிடையே சில முக்கியப் புள்ளிகளும் வேறுபாடுகளும் உள்ளன. இவ்விரண்டும் சட்டத்தின் கீழ் செய்யப்பட்டாலும் இவ்விரண்டிற்கும் சில வேறுபாடுகள் உள்ளன. தணிக்கை என்பது கணக்குகளைப் பரிசீலனை செய்தலும், வரவு செலவு விவரப் பட்டியல், இலாப நட்டக் கணக்கு, ஐந்தொகைக் குறிப்பு, மற்றும் இதர தொடர்புள்ள விவரப்பட்டியல்களைத் தயாரித்தலும் ஆகும். ஆனால், விசாரணை என்பது ஒரு சங்கத்தின் அமைப்பையும், செயல்பாட்டையும், நிதி நிலைமையையும், பரிசீலனை செய்தல் ஆகும். ஆகையால், விசாரணை

தணிக்கையைவிட விரிவானது. தணிக்கை காலமுறையாகச் செய்யப்படுவது. ஆனால் விசாரணை, எப்போதாவது சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் செய்யப்படுவது. ஒரு சங்கத்தின் ஏடுகள், ஆவணங்கள் முதலியவற்றைக் கைப்பற்றுவதற்குத் தணிக்கையாளர்களுக்கு அதிகாரம் கிடையாது. ஆனால், விசாரணை அதிகாரி சங்கத்தின் ஏடுகள், ஆவணங்கள் முதலியவற்றைப் பாதுகாப்பதற்கு அவைகளைக் கைப்பற்ற வேண்டுவது தேவை என்று கருதினால் அவர் அவைகளைக் கைப்பற்றக்கூடும்.

ஒரு தணிக்கையாளர் ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுக் கூட்டத்தை அல்லது பேரவைக் கூட்டத்தைக் கூட்டுவதற்கு ஏற்பாடு செய்யவோ அல்லது அவரே அக் கூட்டங்களைக் கூட்டவோ அதிகாரம் கிடையாது. ஆனால், ஒரு விசாரணை அதிகாரி பிரிவு 65-ன் கீழ் அத்தகைய கூட்டங்களைக் கூட்டுவதற்கு ஏற்பாடு செய்யவோ அல்லது தானாகவே அத்தகைய கூட்டங்களைக் கூட்டவோ அதிகாரம் பெற்றவர். ஒரு தணிக்கையாளர் சாதாரணமாகச் சங்கத்தின் குறைபாடுகளைச் சங்கத்திலேயே இருந்து கொண்டு நீக்கம் செய்வதில்லை. ஆனால், ஒரு விசாரணை அதிகாரி முடிந்த வரை குறைபாடுகளைச் சரிப்படுத்துவதற்கு முயற்சி செய்து சங்கத்தின் அலுவல்களை ஒரு திருப்திகரமான அடிப்படையில் வைப்பதற்கும் முயற்சி செய்கிறார். தணிக்கைக் காக அரசாங்கத்தால் கட்டணங்கள் விதிக்கப்படுகின்றன. விசாரணைக்காகத் தொடர்பான கட்சியாளரிடமிருந்து விசாரணைச் செலவுகள் விதிக்கப்படுகின்றன.

பிரிவு 66-ன் கீழும் 67-ன் கீழும் சில தனிப்பட்ட சூழ்நிலை களில் ஆய்வு செய்யப்படுகிறது. எனினும், ஆய்வின் பரப்பு வரையறுக்கப்பட்டது. பிரிவு 67-ன் கீழ், பதிவாளர் தானாகவோ, அல்லது ஒரு வைப்புத் தொகை செலுத்தியவர் அல்லது நிதிவங்கி போன்ற கடனாளர்களின் வேண்டுகோளின் பேரிலோ ஆய்வு மேற்கொள்ளலாம். எனினும், இந்த ஆய்வு பதிவாளராலும் அல்லது அவருடைய அதிகாரிகளில் ஒருவராலும் செய்யப்படு கிறது. அத்தகைய அதிகாரி பிரிவு 65-ன் கீழ் ஒரு விசாரணை அதிகாரிக்குள்ள எல்லா அதிகாரங்களையும் பெற்றிருக்கிறார். ஆனால், பிரிவு 67-ன் கீழ் செய்யப்படும் ஆய்வு, நிதி வங்கியால், தனக்குக் கடன் பாக்கியிருக்கும் எந்த ஒரு சங்கத்தைக் குறித்தும், மேற்கொள்ளப்படுகிறது. அத்தகைய ஆய்வின் பரப்பும் வரையறுக்கப்பட்டதாக இருக்கிறது. இந்த இரண்டு சூழ்நிலை களிலும், கடனாளருடைய நலன்களைக் காப்பாற்றுவதற்காக அது

வரையறுக்கப்பட்டதாக இருக்கிறது. பிரிவு 65-ன் கீழ் செய்யப்படும் விசாரணை, பொதுவாகப் பங்குதாரர்களுடைய பாதுகாப்பிற்காகச் செய்யப்படுகிறது. மேலும், பிரிவு 67-ன் கீழ் நிதி வங்கியால் ஆய்வு செய்யப்படும்போது, ஆய்வு செய்யும் வங்கியின் அதிகாரிக்கு அல்லது ஊழியருக்குப் பிரிவு 65-ன் கீழ் விசாரணை செய்யும் அதிகாரிக்குள்ள அதிகாரங்கள் கிடையாது. மேலும், அவருடைய ஆய்வை வசதிப்படுத்துவதற்குப் ஏடுகளையோ அல்லது நபர்களையோ முன்னிலைப் படுத்துவதற்கு அவர் அழைப்பாணை விடுக்கமுடியாது. எனினும், இரண்டு சூழ்நிலைகளிலும் அதாவது பிரிவு 66-ன் கீழும் பிரிவு 67-ன் கீழும் ஆய்வின் செலவுகள் விதிக்கப்படலாம்.

8. **பதிவு பெற்ற சங்கத்தால் செலுத்தப்பட வேண்டிய சில செலவினங்கள் (Recovery of the Cost of the Spl. Staff (பிரிவு 69)**

பிரிவு 69-ன் கீழ், அரசாங்கம் அல்லது பதிவாளர் சங்கத்திற்காகக் தங்களால் அமர்த்தப்பட்ட தனிப்பட்ட ஊழியர்களின் செலவினங்களை வசூல் செய்வதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார்கள். சில தனிப்பட்ட சூழ்நிலைகளில், கட்டணத்தை விதிப்பதற்கு அரசாங்கத்தை அனுமதிக்க இது ஒரு பொதுவான சரத்து. இந்த அதிகாரம் தனிப்பட்ட சூழ்நிலைகளில் பொதுவாகக் கையாளப்படுகிறது. உதாரணமாக விதிகள் 14-ன் கீழும் 16-ன் கீழும் கையாளப்படுகிறது.

விதி 14-ன்கீழ் ஒரு சங்கத்தின் கணக்குகளையும் ஏடுகளையும் குறிப்பிட்ட ஒரு தேதி வரை குறிப்பிட்ட ஒரு வடிவத்தில், குறிப்பிட்ட ஒரு காலத்திற்குள்ளும் எழுதி முடிக்கும்படிக் கட்டளையிடப் பதிவாளருக்கு அதிகாரம் உண்டு. ஒரு சங்கம் அத்தகைய கட்டளையை நிறைவேற்றத் தவறினால், பதிவாளர் தன்னுடைய உதவி அலுவலர் மூலம் கணக்குகளை எழுதி முடிக்கலாம். இதற்காக அமர்த்தப்படும் ஊழியர்களின் செலவுகளைச் சங்கத்திடமிருந்து அவர் வசூல் செய்யலாம். அவ்வாறு விதிக்கப்படும் ஊழியர்களின் செலவு, கணக்குகளை எழுதி முடிப்பதற்கு எடுத்துக்கொண்ட காலத்தைக் குறித்தும் கணக்குகளை எழுதிய அதிகாரி அல்லது உதவி ஊழியரின் சம்பளத்தையும், சம்பளப் படியையும் குறித்து, தீர்மானிக்கப்படும். இதே மாதிரியான சூழ்நிலைகளில், விதி 16-ன்கீழ் சங்கம் ஒவ்வோர் ஆண்டும் அனுப்ப வேண்டிய அறிக்கைகளையும் விவரப் பட்டியலையும் (பொதுவாக அழைக்கப்படும் வருடாந்தர விவர அறிக்கைகள்) சங்கம் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட காலத்

திற்குள் அனுப்பத் தவறினால், பதிவாளர் அவைகளைத் தன் உதவி அலுவலரைக் கொண்டு தயார் செய்து பெற்றுக் கொள்ளலாம் [ விதி 16 (1) ].

ஸ்டோர்ஸ் சங்கங்களில் அத்தகைய சங்கம் ஆண்டு முடிவில் சரக்குகளின் இருப்பு சரிபார்க்கும் அறிக்கையைப் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட காலத்திற்குள் அனுப்பத் தவறினால் பதிவாளர், தன் கீழ் அதிகாரிகளில் ஒருவரைக் கொண்டு அத்தகைய அறிக்கையைத் தயார் செய்து, ஏற்றுக் கொள்ளலாம். இந்த எல்லாச் சூழ்நிலைகளிலும் அறிக்கைகளைத் தயார் செய்வதற்கு எடுத்துக் கொண்ட காலத்தின் அடிப்படையிலும் தயாரித்த அதிகாரியின் சம்பளம், சம்பளப் படியின் அடிப்படையிலும் தொடர்பான சங்கத்திலிருந்து செலவுகளை வசூலிக்கலாம். மற்றும், சில குறிப்பான செயல்களுக்காகவும் அரசாங்கம் தன் ஊழியர்களைச் சங்கங்களுக்கு வேலை செய்ய அனுமதிக்கிறது. அத்தகைய சூழ்நிலைகளிலும் ஊழியர்களின் செலவு தொடர்பான சங்கத்திடமிருந்து வசூலிக்கப்படுகிறது. உதாரணமாகப் பிரதம நிலவள வங்கிகளின் கடன் விண்ணப்பங்களைப் பரிசீலனை செய்வதற்காகவும், நிலங்களை மதிப்பீடு செய்வதற்காகவும் வேலையில் வைக்கப்பட்ட அரசாங்க ஊழியர்களின் செலவு தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கியிடமிருந்து வசூலிக்கப்படுகிறது. ஏனென்றால், தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கி எல்லாப் பிரதம நிலவள வங்கிகளுக்கும் தலைமை நிறுவனமாக இருக்கிறது. நுகர்வோர் (ஸ்டோஸ்) சங்கங்களின் மேற்பார்வைக்காக வேலையில் அமர்த்தப்பட்ட ஊழியர்களைக் குறித்த மேற்பார்வைக் கட்டணங்களை நுகர்வோர் சங்கங்கள் செலுத்துவது வழக்கமாய் இருந்தது. எனவே, சங்கங்களில் வேலை செய்யும் ஊழியர்களின் செலவுகளைத் தொடர்பான சங்கத்தினிடமிருந்து வசூல் செய்வதற்கு அரசாங்கத்திற்கு அனுமதியளிக்கும் நோக்கத்துடன், ஒரு பொதுச் சரத்து பிரிவு 69-ல் செய்யப்பட்டிருக்கிறது.

## 9. தண்டம் (Surcharge) (பிரிவு 71)

1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில் தண்டத்திற்காக (Surchargeக) எந்தச் சரத்தும் இல்லை. முதன் முதலாக இந்தச் சரத்து 1932ஆம் வருடக் கூட்டுறவுச் சட்டத்தில் ஏற்படுத்தப்பட்டது. 1932ஆம் வருடக் கூட்டுறவுச் சட்டத்தின் 49ஆம் பிரிவின்படி, ஒரு சங்கத்தை அமைப்பதிலும் அல்லது நிருவாகம் செய்வதிலும் தொடர்பு கொண்ட எந்த ஓர் அலுவலர் அல்லது நபர் சங்கத்தின் பணத்தை அல்லது இதர சொத்தை

மோசடியாகத் தன்னிடம் வைத்துக் கொண்டிருந்தாலும் அல்லது கையாண்டிருந்தாலும் அல்லது சங்கத்தைக் குறித்து நம்பிக்கைத் துரோகம் செய்திருந்தாலும் அவரைப் பதிவாளர் தண்டம் செய்யலாம். ஒரு நபரின் செயலில் குற்றமுள்ள நோக்கம் இருந்தாலும், அல்லது அவர் செய்த செயலின் மூலம் ஒரு குற்றத்தைப் புரிந்தார் என்று இருந்தாலும் மட்டும்தான் அந்த நபர்மீது தண்டம் விதிக்கப்படலாம் என்று அந்தச் சரத்து இருந்ததால், அந்தப் பிரிவின் பரப்பு வரையறுக்கப்பட்டதாயிருந்தது. சங்கத்தின் நிதிகளைக் கையாண்டிருப்பதற்காகவும், அல்லது சட்டம், விதிகள், அல்லது சங்கத்தின் உப-விதிகள் இவைகளுக்கு முரண்பாடாக இயக்குநர்களால் செலவு செய்யப்பட்டதற்காகவும், குற்றமுள்ள நோக்கமில்லாமலே இயக்குநர்களுடைய செயல்களினுல் அல்லது செயல்களைச் செய்யத் தவறியதனுல் சங்கத்திற்கு ஏற்பட்ட நட்டத்திற்காகவும், அல்லது அழிவிற்காகவும், பொறுப்பாகவிருந்த நபர்களைத் தண்டம் செய்வதற்கு இந்தச் சரத்து பதிவாளருக்கு அதிகாரம் கொடுக்கவில்லை. ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு ஒரு மத்தியஸ்த தாவா தாக்கல் செய்தால் மட்டும்தான் அத்தகைய செயல்களைப் பதிவாளர் முடிவு செய்யலாம். ஆனுல், இயக்குநர்கள் நிதிகளைக் கையாண்டதற்குப் பொறுப்பாகவுள்ளவர்களிடத்தில் பற்று வைத்திருந்தாலும் அல்லது அவர்களே நிதிகளைக் கையாண்டிருந்தாலும் அவர்கள் ஒரு மத்தியஸ்த தாவா தாக்கல் செய்வதை எதிர்பார்க்க முடியாது. இந்தக் குறை 1961ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டத்தில் நீக்கம் செய்யப்பட்டிருக்கிறது.

தண்டத்தைக் (Surcharge) குறித்த பிரிவு 71-ல் தேவைப்பட்ட சரத்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மற்றும் ஒரு தண்டம் பற்றிய உத்தரவு பிறப்பிப்பதற்கு முன்பு அனுசரிக்க வேண்டிய நடைமுறையில் 1932ஆம் வருடத்திய கூட்டுறவுச் சட்டத்தின் பிரிவு 49-ன் படி, பதிவாளர் ஒரு நபர் மீது தண்டம் உத்தரவு பிறப்பிப்பதற்கு முன்பு, தொடர்பான நபருக்குத் தன் விளக்கத்தைக் கூறுவதற்கு ஒரு வாய்ப்பினைப் பதிவாளர் கொடுக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. இந்தக் குறைபாடும் கூட 1961ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டத்தின் பிரிவு 71-ல் நீக்கப்பட்டிருக்கிறது. மேலும், 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் பிரிவு 49-ன் கீழ் பதிவாளரின் தண்டம் பற்றிய உத்தரவிற்கு எதிராக ஒரு மேல்முறையீடு, சங்கத்தின் தலைமை அலுவலகமிருக்கும் எல்லையில் அதிகாரம் செலுத்தும் மாவட்ட நீதி மன்றத்திற்குச் செய்யலாமென்றிருந்தது. ஆனுல், 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் கீழ் நீதி மன்றத்தின் அதிகாரத்தை அறவே எடுத்துவிட்டு அதற்குப் பதிலாக, மேல்முறையீடு தனிப்

பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்குச் (Tribunal) செய்யப் பட வேண்டுமென்று சரத்து செய்யப்பட்டிருக்கிறது. எனவே, தண்டத்தைக் குறித்து 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் 71-ன் பரப்பு விரிவானதாகவும், தண்டம் உத்தரவு பிறப்பிப்பதற்குப் பின்பற்றப்பட வேண்டிய நடைமுறையும் கூட முன்னைவிடச் சிரமைந்ததாகவும் செய்யப்பட்டிருக்கிறது.

**தண்டம் உத்தரவு பிறப்பிப்பதற்காக ஆதாரம்-எந்தச் செயல் களுக்காக ஒரு நபர் தண்டம் செய்யப்படுவார்? :** ஒரு தண்டம் உத்தரவு பிறப்பிப்பதற்கு முன்பு ஒரு சட்ட ரீதியான செயலைப் பதிவாளர் எடுத்திருக்கவேண்டும். அதாவது பிரிவு 64-ன் கீழ் தணிக்கை அல்லது பிரிவு 65-ன்கீழ் விசாரணை, அல்லது பிரிவுகள் 66, 67-ன் கீழ் ஆய்வு, அல்லது பிரிவுகள் 85, 86, 87-ன் கீழ் ஒரு சங்க அலுவல்களைக் கலைப்பது போன்ற சட்டப்படியான நடவடிக்கைகளின் போது வெளிப் பட்ட சில குற்றங்களின் ஆதாரத்தின் பேரில் மட்டும்தான் ஒரு தண்டம் பற்றிய உத்தரவு பிறப்பிக்க முடியும். இந்தச் சட்டப்படியான நடவடிக்கைகளில் எந்த ஒரு நடவடிக்கை நடத்தும்போதும் ஒரு நபர் அல்லது நபர்கள் கீழ்க்கண்ட குற்றங்களில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற் பட்டவைக்குப் பொறுப்பாளியாக இருந்தார் என்று முடிவு காணப்படவேண்டும்.

(1) சங்கத்தின் நிதிகளைக் கையாளுதல், அல்லது மோசயாடியாக அல்லது சங்கத்தின் பணம் அல்லது இதர சொத்தை மோசடியாகத் தன் வசம் வைத்துக்கொண்டிருத்தல். உதாரணமாக, ஒரு நபர் தன் சொந்த உபயோகத்திற்காகச் சங்கத்தின் நிதிகளைச் செலவு செய்தல்.

(2) ஒரு சங்கத்தைக் குறித்து அதன் நிதிகள் அல்லது சொத்து தொடர்பான நம்பிக்கைத் துரோகம் செய்தல். உதாரணமாக, சங்கத்தின் சொத்தை விற்று அதன் மூலம் கிடைத்த பணத்தைத் தன் வசம் வைத்துக் கொள்ளுதல்.

(3) நம்பிக்கைத் துரோகத்தின் காரணமாகவும் அல்லது தன் கடமைகளைச் செய்வதில் வேண்டுமென்ற எச்சரிக்கையின்மையின் காரணமாகவும் சங்கத்தின் சரக்கு இருப்பில் அல்லது இதர சொத்துகளில் குறைவு ஏற்படுவதற்குப் பொறுப்பாளியாக இருத்தல்; உதாரணமாகக் கடன் விண்ணப்பதாரர்கள் இல்லாத நபர்கள் என்று தெரிந்தும் அவர்களுக்குக் கடன்கள் ஒப்பளித்தலும், கடன் தொகைகளைத் தன்வசம் வைத்துக் கொள்ளுதலும், ஓர் உறுப்பினர் அல்லாதவருக்குக் கடன் கொடுப்பது பெரிய கவனமற்ற செயலாகும். போதாத

மேற்பார்வை, அனுமதி பெறாத முதலீடுகள் போன்றன கவன மின்மைக்கு எடுத்துக் காட்டாகும். அத்தகைய் கவனமின்மை வேண்டுமென்றே இருக்கலாம். அல்லது சங்கத்திற்கு நட்டத்தை ஏற்படுத்துவதாகவுமிருக்கலாம்.

(4) சட்டம், விதிகள், அல்லது சங்கத்தின் உப-விதிகள் இவை களுக்கு முரண்பாடாகச் செய்யப்படும் பட்டுவாடாக்கள்; உதாரணமாக, பொய் நிறுவனங்களுக்கும், அங்கீகரிக்கப்படாத நிறுவனங்களுக்கும் நன்கொடைகள் முதலீடுகள் வாயிலாக செலவு செய்தலும், விழாக்கள் முதலியன போன்றவைகளில் பெருஞ் செலவு செய்தலும். எனவே, எந்தக் குற்றமுள்ள செயலுக் காகவும் அல்லது குற்றமுள்ள நோக்கத்துடன் செய்யப்படும் செயலுக்காகவும் மட்டுமன்றிச் சங்கத்திற்கு நட்டமுண்டு பண்ணும் வகையில் வேண்டுமென்ற கவனமின்மைக்காகவும், மற்றும், சங்கத்தின் நிதிகளிலிருந்து முறைகேடானதும் சட்ட விரோதமானதுமான பட்டுவாடாக்கள் அல்லது செலவுகள் செய்ததற்காகவும்கூட ஒரு நபர்மீது தண்டம் உத்தரவு பிறப் பிக்கப்படலாம். ஆகையால், குற்ற அம்சம் அடங்கியில்லாத செயல்களுக்காகவும் தண்டம் பிறப்பிப்பதற்கு இந்தப் பிரிவின் பரப்பு விரிவாக்கப்பட்டிருக்கிறது. கூட்டுறவுச் சட்டக் குழுவினரின் கருத்தின்படி, ஒரு நபர் குற்றமாகச் செய்யும் செயல் மட்டுமல்லாமல், ஒரு சங்கத்தின் விதிகளைத் தவருகப் பயன் படுத்தல், சட்டம், விதிகள் அல்லது உப-விதிகள் இவைகளுக்கு விரோதமான செயல்களுக்குச் சங்கத்தின் நிதிகளைப் பயன் படுத்துதல், சங்கத்திற்கு நட்டத்தை விளைவிக்கும் கவனமற்ற செயலுக்குக்கூட, தண்டம் விதிக்கும் அதிகாரம் நீட்டிக்கப்பட வேண்டும். அக் குழுவினர் தயாரித்த மாதிரிக் கூட்டுறவு மசோதாவின் பகுதி 64-ல் இவை எல்லாவற்றிற்கும் சரத்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்தச் சரத்தைப் பின்பற்றியே 1961ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தின் பிரிவு 71 வகுக்கப்பட்டிருக்கிறது.

**எவர்மீது தண்டம் உத்தரவு பிறப்பிக்கப்படலாம்?:** ஒரு தண்டம் உத்தரவு சங்கத்தின் அமைப்பும் நிருவாகமும் ஒப்படைக்கப் பட்டிருந்த அல்லது ஒப்படைக்கப்பட்டிருக்கும் எந்த ஒரு நபர் மீதும் பிறப்பிக்கப்படலாம். 'சங்கம் அமைப்பு' என்ருல் சங்கத்தின் பதிவுக்கு முந்தைய ஒரு காலத்தையும் குறிக்கிறது; அதாவது, சங்கம் அமைக்கப்படும் தருணத்திலிருக்கும்போது என்றும், 'நிருவாகம் என்ருல்' ஒரு சங்கம் பதிவு செய்யப்பட்டு நிருவாகக் குழு அமைக்கப்படும்போது என்றும் பொருள்.

ஆகையால், தண்டம் உத்தரவு, உறுப்பினர் அல்லாதவர்கள் மீதும் கூடப் பிறப்பிக்கப்படலாம் என்பது இதனுல் தெரியப்படும். உண்மையாகவே, அத்தகைய உத்தரவு, சங்கத்தின் முன்னுள் அல்லது தற்போதுள்ள ஊழியர்கள் மீதும், அலுவலர்கள் மீதும், சங்கத்திற்கு நட்டம் விளைவித்த அவர்களுடைய செயல்களைக் குறித்துப் பிறப்பிக்கப்படலாம். சங்கத்தில் சில வேலைகள் ஒப்படைக்கப்பட்ட எந்த நபர் மீதும் அந்த நபர் அந்த வேலை களின் தொடர்பாகப் பிரிவில் குறிப்பிடப்பட்ட செயல்களைச் செய்திருந்தால், அவர் மீது அத்தகைய உத்தரவு பிறப்பிக்கப் படலாம்.

ஓர் ஊதியம் பெற்ற அலுவலர் அல்லது நிருவாகக் குழு உறுப் பினர் அல்லது நிருவாகக் குழுவினர் அனைவர் (முன்னுல் உள்ளவர் களும் தற்போதுள்ளவர்களும்) மீதும் தண்டம் உத்தரவு பிறப் பிக்கப்படலாம், சங்கத்தின் உப-விதிகளின் கீழ் ஓர் உறுப்பினர் கூடச் சங்கத்தைக் குறித்து வேலைகள் ஏதாவது ஒப்படைக்கப் பட்டிருந்தால் அவர் மீதும் தண்டம் உத்தரவு பிறப்பிக்கப் படலாம். ஒரு சங்கத்தின் தோற்றுவிப்பாளர்கள்கூட நிறுவனத் திற்கு நட்டமுண்டுபண்ணும் செயல் ஏதாவது செய்திருந் தாலும், அவர்கள் மீது தண்டம் உத்தரவு பிறப்பிக்கப் படலாம். உதாரணமாக, இடைக்கால நிருவாகக் குழுவிற்கு நியமிக்கப்பட்டிருக்கும் ஒரு நபர் பணம் வசூல் செய்து அதை நிறுவனக் கணக்கில் வரவு வைக்காமலிருந்திருக்கலாம். ஒரு சங்கத்தின் நிருவாகத்தில் நிருவாகக் குழு உறுப்பினர்கள் தங்கள் பதவிக் காலத்தில் அவர்கள் செய்யவேண்டியதைச் செய்யாமல் இருந்திருக்கலாம் அல்லது தவருன செயல்கள் புரிந்திருக்கலாம்.

தண்டம் உத்தரவு எவரால் விதிக்கப்படக்கூடும், எவருடைய தூண்டுதலினுல், அத்தகைய உத்தரவு பிறப்பிக்கப்படக்கூடும்? தண்டம் உத்தரவு, பிரிவு 70 (1)-ன் கீழ் பதிவாளர் தன் சொந்த இச்சையினுல் பிறப்பிக்கலாம். ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு வினர், அல்லது கலைப்பு அதிகாரி, அல்லது ஒரு நிதி வங்கி, அல்லது ஒரு வைப்புத் தொகை போட்டவர், அல்லது கலைக்கப் பட்ட சங்கத்தின் சொத்துகளுக்கு உதவித் தொகை அளிக்க வேண்டுமென்று பிரிவு 87-ன் கீழ் கட்டளையிடப்பட்டவர், இவர் களின் வேண்டுகோளின் பேரிலும் அவர் அத்தகைய உத்தரவைப் பிறப்பிக்கலாம். இந்த நபர்கள் சங்கத்தின் நல்வாழ்வில் அக்கறை கொண்டிருப்பதாலும் அல்லது சங்கத்திற்குக் கடனுகை அளிக்கப் பட்ட தொகைகளின் பாதுகாப்பில் அக்கறை கொண்டிருப் பதாலும், அல்லது சங்கத்திற்குக் கடனுகை அளிக்கப்பட்ட

தொகைகளின் பாதுகாப்பில் அக்கறை கொண்டிருந்தாலும், சங்கத்தின் நட்டத்திற்குப் பொறுப்பாகவுள்ள நபர்கள் மீது தண்டம் உத்தரவு பிறப்பிப்பதற்காக அவர்கள் பதிவாளருக்கு ஒரு விண்ணப்பம் செய்துகொள்ளலாம். பிரிவு 87-ன் கீழ் சங்கச் சொத்துகளுக்கு உதவித் தொகை (Contribution) அளிப்பவர்கூட அத்தகைய உத்தரவைப் பிறப்பிக்கவேண்டும் என்று பதிவாளரை வேண்டிக் கொள்ளலாம், ஏனென்றால், சங்கத்தின் கடன்களுக்காகச் சங்கத்தின் சொத்துகளுக்கு உதவித் தொகையைச் செலுத்துவதற்கு அவர் மீது உத்தரவு போடாம லிருப்பதற்கும், சங்கத்தின் சொத்துகளில் பற்றுக்குறைக்குப் பொறுப்பாளிகளாக இருந்த நபர்களிடமிருந்து அந்தப் பற்றுக் குறையை வசூல் செய்யப்படுவதை உறுதிப்படுத்துவதற்கும், அவர் அவ்விதம் பதிவாளரை வேண்டிக்கொள்ளலாம்.

தண்டம் உததரவு பிறப்பிப்பதற்கு முன்பு கைக்கொள்ள வேண்டிய நடைமுறை

(i) தணிக்கை அல்லது ஆய்வு அல்லது சங்கக் கலைப்புச் செய்யப்படும்போது, சங்க விவகாரத்தில் சங்கத்திற்கு நட்டம் விளைந்ததாக வெளிப்பட்டால், பதிவாளர் தண்டம் உத்தரவு பிறப்பிப்பதற்கு முன்பு சங்க நட்டத்திற்குப் பொறுப்பாளிகளாய் இருந்த நபர்களின் நடத்தையை விசாரணை செய்து அவர்கள் நட்டத்திற்கு எவ்வாறு பொறுப்பாளிகளாக இருந்தனர் என்பதையும் விசாரிக்கவேண்டும். விசாரணை செய்யும் முறை, ஏடுகளையும், கணக்குகளையும் பரிசீலனை செய்வதால், நட்டத்தின் தன்மையையும் பரப்பையும் விசாரிப்பதும், நட்டம் எப்படி நேர்ந்தது என்பதைப் பரிசீலனை செய்வதும் நட்டத்திற் காகப் பொறுப்பாளியாக இருந்த நபர் அல்லது நபர்களை விசாரணை செய்வதுமாகும். பதிவாளர் எந்த நபரையும் அழைக்கலாம். அவர் எந்த நபரையும் ஐயம் தரும் எந்த ஒரு நடவடிக்கையையும் விளக்கும்படிக் கேட்கலாம். ஆனால், பதிவாளர் நபர்களுக்கு அழைப்புக் கட்டளையை அனுப்பிச் சில பதிவேடுகள் முதலியவற்றை முன்னிலைப் படுத்த வேண்டுமென்று கேட்கலாமென்று இந்தப் பிரிவில் சொல்லப்படவில்லை. ஏனென்றால், இவ்வாறு முன்னமேயே செய்யப்பட்டிருக்க வேண்டும். பதிவாளர் தொடர்பான நபர்களைத் தக்க விசாரணை செய்து, கணக்குகளையும் பரிசீலனை செய்த பிறகுதான் ஓர் உத்தரவைப் பிறப்பிப்பதற்கு முனைய வேண்டும். எப்படி யிருந்தாலும், தண்டம் உத்தரவுபிறப்பிக்கும் முன்னரே விசாரணை செய்யவேண்டியிருப்பதால், அவர் பிரிவு 65-ன் கீழ் செய்யப்பட்ட

விசாரணையின் அறிக்கையையும் பிரிவு 66-ன் கீழ் செய்யப்பட்ட ஆய்வின் அறிக்கையையும்கூடப் பார்க்கவேண்டும்.

(ii) எனினும், ஒரு தண்டம் உத்தரவு பிறப்பிக்க உத்தேசிக்கப்படும் சங்கத்தின் லேவாதேவி, அல்லது செய்ய வேண்டியதைச் செய்யாதிருந்தால், அல்லது தவறு செய்தல், அவை பற்றி விசாரணைக்கு எடுத்துக்கொள்வதற்கு ஆறு வருடங்களுக்கு முன்பு அவை நடந்தவையாக இருக்கக்கூடாது. இதன் நோக்கம், ஆறு வருடங்களுக்கு முன்பு செய்யப்பட்ட எந்தச் செயலுக்கும் ஒருவரையும் பொறுப்பாளியாகச் செய்யாமலிருப்பதை உறுதிப்படுத்தலே. ஆறுவருட காலத்தில் அநேக தணிக்கையாளர்களும், ஆய்வாளர்களும், சங்கத்தின் லேவாதேவிகளைப் பரிசிலனை செய்திருப்பார்கள். ஆகையால், ஆறு ஆண்டுக்காலம் ஒரு போதுமான நீண்ட காலமாகும் [பிரிவு 71 (1)-ன் விலக்குக்கூறு].

(iii) தொடர்பான நபர் அல்லது நபர்களுக்கு உத்தேசிக்கப்பட்ட தண்டம் உத்தரவிற்குத் தங்கள் மறுப்புகளைத் தெரிவிப்பதற்கு ஒரு வாய்ப்பு அளித்த பின்னரே, ஒரு நபர் அல்லது நபர்கள்மீது தண்டம் உத்தரவு பிறப்பிக்கப்படலாம். அவர்மீது த்ண்டம் உத்தரவு பிறப்பிப்பதற்கு முன்னர் அவருடைய விளக்கவுரையைக் கேட்டறிதல் வேண்டும் [பிரிவு 71 (1)-ன் இரண்டாவது விலக்குக்கூறு].

(iv) நிதிகளைக் கையாளுதல் அல்லது தவருகப் பயன்படுத்தல், பணம் அல்லது சொத்தை மோசடியாகத் தன் வசம் வைத்துக்கொள்ளுதல், நம்பிக்கைத் துரோகம் அல்லது வேண்டுமென்ற கவனமின்மை, இவை தொடர்பாகச் சங்கத்திற்கு உதவித் தொகையளிப்பதற்காக, தண்டம் உத்தரவு பிறப்பிக்க வேண்டிய தொகையையும் பதிவாளர் முடிவு செய்யவேண்டும். உண்மையாகவே அவர் தொடர்பான நபருக்கு அனுப்பும் அறிவிப்பில், எந்த ஒரு குறிப்பிட்ட தொகையைத் தண்டமாக அவரிடமிருந்து ஏன் வசூல் செய்யக்கூடாதென்றும் அந்தத் தொகை எவ்வாறு கணக்கிடப்பட்டதென்றும் குறிப்பிடவேண்டும். அவ்வாறு முடிவு செய்யப்பட்ட தொகையின்மீது வட்டியும் விதிக்கப்படும் [பிரிவு 71 (1)].

(v) இந்தப் பிரிவின் கீழ் வசூலிக்கப்படவேண்டுமென்று உத்தரவிடப்பட்ட எந்தத் தொகையும் நில வருமான பாக்கியாக வசூலிக்கப்படும் [பிரிவு 71 (2)]. இந்தத் தொகை நில வருமான

பாக்கியாக வசூல் செய்வதற்கு, மாவட்ட ஆட்சியாளருக்குப் பதிவாளரின் ஒரு விண்ணப்பத்தின் மூலம் நடவடிக்கை எடுக்கப் படலாம்.

(vi) குற்றவாளியாக ஒரு நபர் மீது வழக்குத் தொடரப் பட்டிருந்தாலும்கூட, அவர் மீது ஒரு தண்டம் உத்தரவு பிறப்பிக்கப்படலாம். குற்றவாளிப் பொறுப்பும் பிரிவு 70-ன் கீழ் ஏற்படும் பொறுப்பும் வேறுபட்டவை. ஆகையால், நாட்டின் பொதுச் சட்டத்தின் கீழ் ஒரு நபர் பொறுப்பாளியாக இருந்தாலும்கூட, அவர் மீது ஒரு தண்டம் உத்தரவு பிறப்பிக்கப் பட்டால் அவர் உத்தரவில் கண்ட தொகையைச் செலுத்த வேண்டிய பொறுப்புள்ளவராவார்.

இந்தச் சரத்து, மோசமான சூழ்நிலைகளில், அதாவது, உத்தரவில் கண்டிருக்கும் தொகை பெரிதாக இருந்தாலும் அல்லது, சங்கத்தின் நிதிகள் பெருமளவு தவருகப் பயன்படுத்தப்பட்டிருந் தாலும், அமல்படுத்தப்படுகிறது. பிரிவு 96-ன் கீழ் தண்டம் உத்தரவுக்கெதிரே ஒரு மேல்முறையீடு தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்குச் செய்யலாம் [பிரிவு 96 (1) (அ)]. 1932ஆம் வருடத்தியச் சட்டத்தில் ஏற்படுத்தப்பட்டிருந்த சிவில் நீதிமன்றத்தில் அதிகாரம் எடுக்கப்பட்டு ஒரு தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்கு மேல்முறையீடு செய்யப் பிரிவு 96-ன் கீழ் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

சட்டத் திருத்தயோசனை : இந்தப் பிரிவைப் பரிசீலனை செய்த சந்தானம் குழுவினர், சட்டம், விதிகள் அல்லது உப-விதிகள் இவைகளுக்கு முரண்பாடான பட்டுவாடாக்கள் என்ற வார்த்தை களையெடுத்து விட்டு 'சட்டம், விதிக்ள், உப-விதிகள் இவை களுக்கு இணங்காத பட்டுவாடாக்கள்' என்ற வார்த்தைகளை இந்தப்பிரிவில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கருத்து கொண்டனர். ஏனென்ருல், சட்டம் முதலியவற்றிற்கு முரண் பாடான பட்டுவாடாக்கள் இருப்பதை நிரூபிப்பதற்குக் கடின மென்று அவர்கள் எண்ணிஞர்கள். மேலும், பிரிவு 71 (1)-ன் கீழ் சங்கச் சொத்துகளுக்கு உதவித்தொகை வழங்கவேண்டும் என்ற உத்தரவின் பரப்பைச் சட்டம், விதிகள், உப-விதிகளுக்கு முரண்பாடாகச் செய்யப்பட்ட பட்டுவாடாக்களுக்கும் நீட்டிக்க வேண்டுமென்றும் அவர்கள் யோசனை கூறியிருக்கின்றனர். தற்போதுள்ளபடி, இந்தப் பிரிவு அத்தகைய பட்டுவாடாக்களைக் குறிப்பிடவில்லை. ஆகையால் பிரிவு 71 (1)-ன் முடிவில் கீழ்க்கண்ட வார்த்தைகளைச் சேர்க்க வேண்டுமென்றும் அவர்கள் யோசனை

கூறியிருக்கின்றனர். ('அல்லது சட்டம் விதிகள். அல்லது உப-விதிகளுடன் இணக்கமில்லாத பட்டுவாடாக்கள்').

**10. மேற்கடப்பு (Supersession) (பிரிவு 72)**

ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவை மேற்கடப்பதற்கு அதிகாரம் முதன் முதலில் 1932ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கத்தின் சட்டத்தில் ஏற்படுத்தப்பட்டது. (1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் பிரிவு 43). ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு, தொடர்பான உறுப்பினர்கள் நன்மையின் பொருட்டு தன் கடமைகளைச் சரிவர நிறைவேற்றத் தவறி. அதே நேரத்தில் இதர உறுப்பினர்கள் சங்கத்தின் நிருவாகப் பொறுப்பை எடுத்துக் கொள்ள முன் வருவதற்குத் தயங்கலாம். மற்றும், ஒரு சங்கத்தின் நிருவாகத்தில் முட்டுநிலை ஏற்படலாம். அல்லது தப்பு வழி காட்டப்பட்ட சங்கத்தின் பேரவை தன் அலுவல்களை நடத்துவதற்குத் தகுதி வாய்ந்த நபர்களைத் தேர்ந்தெடுக்காமலிருக்கலாம். இந்த நிலையில், பிரிவு 85-ன்கீழ் சங்கத்தைக் கலைப்பது ஒரு மிதமிஞ்சிய, கடுமையான நடவடிக்கையாக இருக்கும். சங்கத்தின் நிதிநிலைமை நன்றாக இருக்கலாம், அல்லது அது முற்றிலும் நன்றாக இல்லையானாலும் அது திருத்த நிலைக்குக் கொண்டு வரப்படலாம். அத்தகைய சூழ்நிலையில் சங்கத்தை நல்ல திடமான அடிப்படையில் வைப்பதற்காகத் தகுதி வாய்ந்த நபர்களுக்குச் சங்கத்தின் நிருவாகத்தைத் தற்காலிகமாக ஒப்படைக்கத் தேவைப்படலாம். இது சங்கத்தினாலேயே, அல்லது பதிவாளரால், பிரிவு 72-ன்கீழ் செய்யப்படலாம்.

பொதுவாக, விவசாய நாணயச் சங்கங்களின் உப-விதிகளில், ஒரு சங்கத்தின் நிருவாகத்தை ஒரு தனித் தகுதி வாய்ந்த நபருக்கு நிருவாகக் குழுவின் எல்லா அதிகாரங்களுடன் ஒப்படைப்பதற்கு, ஒரு சரத்து அடங்கியிருக்கிறது. சில காலங்களுக்குப் பிறகு, சங்கத்தை நிருவாகம் செய்வதற்கு அனுப்பப்பட்ட தனி நபரால் சங்கத்தின் அலுவல்கள் ஓர் இயல்பான நிலைமைக்குக் கொண்டு வரப்பட்டபோது, சரியான நபர்கள் முன்வந்து சங்கத்தின் நிருவாகத்தை எடுத்துக் கொள்ளலாம். உப-விதிகளின்கீழ், இவ்வாறு ஒரு பிரதிநிதியினுடைய எல்லாச் செயல்களுக்காகவும் பேரவை பொறுப்பு எடுத்துக் கொள்கிறது. அவ்வாறு அமர்த்தப்பட்ட நபர் உப-விதிகளின்கீழ் நிருவாகக் குழுவின் அதிகாரங்களைப் பெற்றிருப்பார்; அதாவது கடன்களை வசூல் செய்து, நிறைவேற்றுதல் நடவடிக்கையெடுப்பது முதலியன போன்ற அதிகாரங்கள். ஆனால், நிதிகளைக் கடன் வாங்குதல், உறுப்பினர்

களுக்குக் கடன் கொடுத்தல், உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்ளுதல், அவர்களுக்குப் பங்குகள் ஒதுக்குதல், பங்கு மூலதனத்தைத் திருப்பிச் செலுத்துதல் முதலியன போன்ற முக்கியப் பொருள்களில் அவர் பேரவையின் அங்கீகாரத்தைப் பெறுவார். சங்கத்தின் அலுவல்களை மேலுக்குக் கொண்டு வருவதற்காக இந்த ஏற்பாடு, குறிப்பாக சில விவசாய நாணயச் சங்கங்களில், சாத்தியமாக இருக்கிறது. அது நடைமுறையிலும் இருக்கிறது. இந்த ஏற்பாடானது சங்கங்களின் பேரவையால் செய்யப்படும் ஒன்று. இது சங்கத்தால் ஒரு தக்க உப-விதியை ஏற்றுக் கொள்வதன் மூலம் செய்யப்படுகிறதே ஒழியச் சட்டம் அல்லது விதிகளின் சரத்தையொட்டிச் செய்யப்படுவதல்ல.

**பிரிவு 72-ன் பரப்பு :** பிரிவு 72, மேற்கூறிய ஏற்பாடு போல் அல்லாமல், பதிவாளரால் அமர்த்தப்பட்ட ஒரு நபரால் சங்கத்தின் நிருவாகத்தை எடுத்துக் கொள்வதற்கான சட்டப் படியமைந்த ஒரு சரத்தாகும். இந்தப் பிரிவின்படி, ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவை மேற்கடந்து அதன் அலுவல்களை நிருவாகம் செய்வதற்குத் தக்க நபர் அல்லது நபர்களை அமர்த்தும் அதிகாரம் பதிவாளர் வசமிருக்கிறது.

**ஒரு நிருவாகக் குழு எப்பொழுது மேற்கடக்கப் படலாம் :** பொதுவாக, கீழ்க்கண்ட நிலைகளில் ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவை மேற்கடக்க வேண்டி வரும்.

(i) ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு, தொடர்பான எல்லாருடைய நலன்களும், மேம்படும் வகையில் சரியாகப் பணியாற்ற வில்லையானால்,

(ii) ஒரு சங்கத்தின் நிதி நிலைமை திருப்திகரமாக இல்லாத போது பயனுள்ள முறையிலும் துரிதமாகவும் நடவடிக்கை எடுத்தால் ஒரு திருப்திகரமான அடிப்படையில் சங்கத்தை இயங்க வைக்கலாம் என்று தெரியவந்தால்,

(iii) நிருவாகக் குழு, சங்கத்தின் அலுவல்களைத் தவறான முறையில் நிருவாகம் செய்து, சங்கத்தின் நிலைமை மோசமடைந்தால்,

(iv). சங்கத்தின் நிருவாகத்தை எடுத்துக் கொள்வதற்குத் தக்க நபர்கள் முன்னுக்கு வரவில்லையானால்,

(v) புறம்பான காரணங்களால், ஒரு சங்கத்தின் பேரவை தகுதி வாய்ந்த நபர்களைத் தேர்ந்தெடுப்பதற்குத் தயாராக

இல்லாமலிருந்து, செல்வாக்கு அல்லது அதிகாரத்தின் காரண மாக நிருவாகக் குழுவிலிருக்கும் சில உறுப்பினர்களேயே மீண்டும் தேர்ந்தெடுப்பதாக இருந்தால்,

(vi) நிருவாகத்தில் போட்டியும் பகைமையும் விரோதமும் இருந்து அதனுல் சங்கத்தின் அலுவல்கள் பாதிக்கப்பட்டால்,

(vii) ஒரு சங்கத்தின் நிருவாகத்தில் முட்டுநிலே ஏற்பட்டு, அதனுல் போட்டிக் கும்பல்கள் தாங்கள் மட்டும்தான் சரியாக அமைக்கப்பட்ட நிருவாகக் குழுவினர் என்று உரிமைக் கோரிக்கைகள் செய்தால்,

(viii) நிருவாகக் குழு செயலற்றிருந்தால்,

(ix) நிருவாகக் குழு சட்டத்தின்கீழ் அல்லது விதிகளின்கீழ் பதிவாளரால் வெளியிடப்பட்ட சட்டரீதியான உத்தரவை அல்லது கட்டளேயை வேண்டுமென்றே மீறினுலும், புறக்கணித் தாலும்.

எனவே, பிரிவு 72-ன் பரப்பு நிருவாகக் குழு சரிவர இயங்க வில்லேயென்று காண்பிக்கும் செயல்களுக்கு மட்டுமன்றிப் பதிவாளரால் வெளியிடப்பட்ட சட்டப்படியான உத்தரவு அல்லது கட்டளேயை நிறைவேற்றத் தவறியதற்கும் அல்லது வேண்டுமென்றே புறக்கணிப்பதற்கும்கூட நீடிக்கிறது என்பது தெளிவு.

நிருவாகக் குழுவை மேற்கடத்தல் குறித்த நடைமுறை

(i) ஒரு பிரதமச் சங்கத்தில், சங்கம் நிதி வங்கிக்குக் கடன் பாக்கியாக இருந்தால், பிரிவு 72 (6)-ன் படிப் பதிவாளர் அந்தச் சங்கத்தின் நிருவாகக் குழுவை மேற்கடப்பது குறித்தும் அதன் நிருவாகத்திற்குச் செய்யவேண்டிய ஏற்பாட்டைக் குறித்தும் நிதி வங்கியிடம் கலந்தாலோசிக்கவேண்டும். அந்தச் சங்கம் ஒரு நிதி வங்கிக்குக் கடன் பாக்கியில்லாமலிருந்தால் பதிவாளர் அவ்வாறு கலந்தாலோசிப்பதை விட்டு விடலாம். நிருவாகக் குழுவை மேற்கடப்பதற்கு உத்தேசிக்கப்படப்பட்ட சங்கம் ஒரு நிதி வங்கி யாக இருந்தால், அத்தகைய நடவடிக்கை எடுப்பதற்கு முன்னர் பதிவாளர் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியுடன் கலந்து ஆலோசிக்கவேண்டும். எப்படியிருந்தாலும், சமயோசிதம் போல், நிதி வங்கி அல்லது தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் சம்மதம் அல்லது இசைவு தேவையில்லே. பொதுவாக, ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவை மேற்கடக்கும் அறிவிப்பு சங்கத்திற்கு அனுப்பப்படும்போது, அதன் நகல் ஒன்று நிதி

வங்கிக்கு, அந்த யோசனையின்மீது தன் கருத்துகளைத் தெரிவிப்ப தற்கு, அனுப்பப்படுகிறது. இது கலந்தாலோசிக்கும் ஒரு வகையே தவிர, மத்திய வங்கியின் கருத்துக்குப் பதிவாளர் கட்டுப்பட்ட வரல்லர். பதிவாளர் தேவையென்று கருதினால், ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவைத் தள்ளிப்போட அவர் அதிகாரம் பெற்றிருக் கிறார்.

(ii) எல்லாச் சூழ்நிலைகளிலும், சங்கத்தின் நிருவாகக் குழுவை மேற்கடப்பதற்கு ஏதாவது எதிரீடிருந்தால் ஒரு குறிப் பிட்ட தேதிக்குள் அந்த எதிரீட்டைத் தெரிவிக்குமாறு பதிவாளர் கேட்டுக் கொண்டு தொடர்பான சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு ஓர் அறிவிப்பு அனுப்பவேண்டும் [பிரிவு 72 (1) (அ)] நிருவாகக் குழுவின் எதிரீடுகள் ஏதாவது இருந்தால் அவற்றை ஆலோசித்த பிறகு, பதிவாளர் பொருத்தமென்று கருதினால், நிருவாகக் குழுவை மேற்கடந்து அவர் உத்தரவிடலாம் [பிரிவு 72 (1) (அ)].

(iii) பதிவாளர் ஒரே சமயத்தில் இரண்டு வருடங்களுக்கு மேற்படாத ஒரு காலத்திற்கு மட்டும் மேற்கடப்பு உத்தர விடலாம். இந்தக் காலவரம்பு, தேவைப்பட்டால் மொத்தத்தில் நான்கு வருடங்களுக்கு மேற்படாமல், நீட்டிக்கப்படலாம் [பிரிவு 72 (1) (அ)].

(iv) பிரிவு 72-ன் கீழ் ஒரு நிருவாகக் குழு மேற்கடக்கப் பட்டால், அந்தச் சங்கத்தின் நிருவாகத்திற்கான பொறுப்பைப் பதிவாளர் ஏற்றுக் கொள்கிறார். ஆகையால், அவர் பொதுவாக 'சிறப்பு அலுவலர்' (Special Officer) என்று அழைக்கப்படும் ஓர் அரசுத் துறை அதிகாரியைச் சங்கத்தின் அலுவல்களை நிருவாகம் செய்வதற்கு அமர்த்துகிறார். சில சமயங்களில் அவர் சங்கத்தின் அலுவல்களை நிருவாகம் செய்வதற்கு 2 அல்லது அதற்கு மேற் பட்ட உத்தியோகப் பற்றற்ற நபர்கள் கொண்ட ஒரு நிருவாகக் குழுவையும் அமர்த்துகிறார். இந்தக் குழு 'நிருவாகக் குழு' என்று அழைக்கப்படுகிறது [72 (1) (அ)]. சிறப்பு அலுவலர் அல்லாமல் அவருடைய வேலைக்கு உதவி செய்வதற்கும் பதிவாளரால் தன் உத்தரவில் குறிப்பிட்ட பொருள்களைப் பற்றிச் சிறப்பு அலுவலருக்கு உதவி செய்வதற்கும், சில சமயங்களில், பதிவாளர் ஓர் 'ஆலோசனைக் குழுவை' அமர்த்துகிறார்; அல்லது அமர்த்தலாம். அத்தகைய ஆலோசனைக் குழு குறிப்பாக மத்திய வங்கி போன்ற பெரிய லேவாதேவிகளுள்ள சங்கங்களில் தேவைப் படுகிறது. ஒழுக்கமும் நேர்மையுமுள்ள உள்ளூர்ப் பிரமுகர் களிலிருந்து, அத்தகைய ஆலோசனைக் குழுக்களுக்கு, உறுப்பினர் களைப் பதிவாளர் அமர்த்துகிறார். எனினும், இந்தக் குழுக்கள்

ஆலோசனைக் குழுக்களாக மட்டும் இயங்கும். சிறப்பு அலுவலர் தான் சங்கத்தின் அலுவல்களில் சரியான நிருவாகத்திற்குப் பொறுப்பாளியாவார் [பிரிவு 72 (2)].

(v) பிரிவு 72 (4)-ன் கீழ் பதிவாளர், பிரிவு 72 (1)-ன் கீழ் அமர்த்தப்பட்ட சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழுவிற்குப் பட்டுவாடா செய்யப்படவேண்டிய ஊதியத்தை நிருணயிக்கலாம். அத்தகைய ஊதியத்தின் தொகையும், இதர இடை நிகழ்ச்சிச் செலவுகளும், சங்க நிருவாகத்தில் செலவு செய்யப்பட்டிருந்தால் தொடர்பான சங்கத்தின் நிதிகளிலிருந்து அவை பட்டுவாடா செய்யப்படவேண்டும்.

(vi) பதிவாளரின் ஆதிக்கத்திற்குட்பட்டும், அவர் அவ்வப் போது வெளியிடும் தனிப்பட்ட அல்லது பொதுவான அறிவுரை களுக்குட்பட்டும், சிறப்பு அதிகாரி அல்லது நிருவாகக் குழு, சங்கத்தின் நிருவாகக் குழுவின் அல்லது ஓர் அதிகாரியின் கடமை களில் எல்லாவற்றையும் அல்லது சிலவற்றையும் செலுத்திச் சங்கத்தின் நலத்திற்குத் தேவைப்படும் எல்லா நடவடிக்கை களையும் எடுக்கலாம் [பிரிவு 72 (3)]. அவர்களுடைய எல்லாச் செயல்களும், தள்ளி வைக்கப்பட்ட காலத்திற்குப் பிறகு அமைக்கப்படும் நிருவாகக் குழுவைக் கட்டுப்படுத்தும். இந்த விதமாகச் சிறப்பு அலுவலர் (அல்லது நிருவாகக் குழு) பதிவாளரின் ஆதிக்கத்திற்கும் கட்டளைக்கும் உட்பட்டு, சங்கத்தின் அலுவல்களை நிருவாகம் செய்வார். ஆகையால், தள்ளிவைக்கப் பட்ட காலத்தின் போது சங்கத்தின் அலுவல்கள் சரியாக நடத்தப்பட்டுச் சங்கம் பலமானதும் திடமானதுமான ஓர் அடிப்படையில் வைக்கப்படுவதைக் கவனிப்பதற்கான ஒரு சிறப்புப் பொறுப்பு பதிவாளருக்கு உண்டு.

(vii) மேற்கடப்பு உத்தரவில் குறிக்கப்பட்டிருந்த தேதி யிலிருந்து, அது அமலுக்கு வரும் [பிரிவு 72 (8)]. பொதுவாக, இந்த உத்தரவில் ஒரு நாள் குறிப்பிடப்பட்டிருக்கும். பிரிவு 72–ன் கீழ் அமர்த்தப்பட்ட சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழு, சங்கத்தின் ஆவணங்கள் அல்லது சொத்துகளைப் பெறுவது தடை செய்யப்பட்டாலும் அல்லது அதில் எதிர்ப்பு இருந்தாலும், பிரிவு 107 (1)–ன் கீழ், சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழு அந்த எல்லையில் அதிகாரம் செலுத்தும் முதல்தர நீதிபதிக்கு ஒரு மனு செய்யலாம். அந்த மனுவுடன், தள்ளி வைப்பைக் குறித்தும் சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழு அமர்த்தப் பட்டதைக் குறித்தும், பதிவாளரிடமிருந்து ஒரு சான்றிதழ்

இருக்கவேண்டும். மனு பெற்றவுடன் நீதிபதி சங்கத்தின் ஆவணங்களையும் சொத்துகளையும் சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழு வசம் ஒப்படைக்க வேண்டுமென்று கட்டளையிடலாம் [பிரிவு 107 (4)].

(viii) சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழு தன் பதவிக் காலம் முடிவடையும்போது, சட்டம், விதிகள், சங்கத்தின் உப-விதிகளின்படி, ஒரு புதிய நிருவாகக் குழுவை அமைப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

**மேற்கடப்பிலிருந்த காலத்தின்போது பேரவையின் நிலை :** மேற்கடப்பிலிருந்த காலத்தின் போது, பேரவை தொடர்ந்து இயங்கித் தன் கடமைகளைச் செய்கிறது. ஆனால், மேற்கடப்பு அதிகாரியின் கடமைகளுக்கும் அல்லது அதிகாரங்களுக்கும் முரண்பாடான பேரவையின் கடமைகளும் அதிகாரங்களும் தள்ளிவைக்கப்படுகின்றன. எனினும், ஒரு பேரவை பதிவாளருடன் போட்டியாக எந்த ஆதிக்கத்தையும் செலுத்த முடியாது. உண்மையாகவே சங்கத்தின் அலுவல்களை நிருவாகம் செய்வதற்குப் பதிவாளரால் அமர்த்தப்பட்ட சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழுவால் மட்டும்தான் பேரவைக் கூட்டம் கூட்டமுடியும். பதிவாளருடன் போட்டியிடாமல், பேரவை தன் கடமைகளையும் அதிகாரங்களையும் செலுத்தலாம். உதாரணமாக, உப-விதிகளில் ஒரு திருத்தத்தைச் செய்யும் அதிகாரம் பேரவை வசம் தான் இருக்கிறது. நிருவாகக் குழு தள்ளி வைக்கப்பட்டதன் காரணத்திற்காகப் பேரவையின் இந்த அதிகாரம் பதிவாளருக்குப் போய்விடவில்லை.

**சங்க நிருவாகத்திற்குப் பதிவாளரின் பொறுப்பு :** கூட்டுறவு நடைமுறைக் கையேட்டின்படி (தொகுதி II, 1952) (Co-operative Manual), [பிரிவு 72 (1) (அ)]-ன் கீழ் பதிவாளரால் நியமனம் செய்யப்பட்டவர்களால் சங்கம் நிருவாகம் செய்யப்படும்போது சங்கத்திற்கு ஏற்படும் எந்த நட்டத்திற்கும் பதிவாளர் பொறுப்பாளியல்ல. இந்தப் பிரிவில் வரும் 'நிருவாகம் செய்வதற்கு' என்ற சொற்றொடருக்குப் பதிவாளரால் அமர்த்தப்பட்ட நபர் அல்லது நபர்களால் சங்கத்தின் தனிப்பட்ட செயல்பாடு நடத்தப்படுகிறது என்று தான் பொருள். பிரிவு 72 (3)-ன் கீழ் பதிவாளருக்காக அளிக்கப்பட்ட அதிகாரங்கள் மேற்பார்வை செய்வதற்கு மட்டும்தான். ஆகையால், அவரால் அமர்த்தப்பட்ட நபர் அல்லது நபர்களின் செயல்களுக்குப் பதிவாளர் பொறுப்பாளியல்ல. இந்த நபர் அல்லது நபர்கள்

அவரால் அமர்த்தப்பட்டாலும், சங்கத்தின் பங்குதாரர்களுக்கு அவர் பிரதிநிதியாக இருக்கிறார். அந்த நபர் அல்லது நபர்களின் நிருவாகத்தின் விளைவாக ஏற்படும் இலாபங்கள் பங்குதாரர் களுக்குத்தான் சேரும். அதுபோலவே நட்டத்தையும் அவர்கள் தான் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

**நிருவாகத்தை மேற்கடக்கும் அதிகாரமானது ஒரு சங்கத்தைக் கலைக்கும் அதிகாரத்தினின்றும் தனிப்பட்டது :** மேற்கடப்புக் காலத்தின் முடிவில், அல்லது மேற்கடப்புக் காலத்தின் போதும் கூட, ஒரு சங்கத்தின் அலுவல்களைச் சரிப்படுத்தமுடியவில்லை யானாலும், சங்கத்தின் நிதி நிலைமை திருப்திகரமாகயில்லாமலிருந் தாலும், பிரிவு 85-ன் கீழ் ஒரு சங்கத்தைக் கலைப்பதற்கு உத்தரவிடப் பதிவாளருக்கு அதிகாரம் உண்டு. ஒரு சங்கம் மேற்கடக்கப்பட்டது என்ற காரணத்தால், பதிவாளர், அதன் அலுவல்களை நல்ல அடிப்படையில் வைக்கமுடியாததனால் கலைப்பிற்கான நடவடிக்கையை எடுக்கமுடியும் என்று பொருளல்ல. பிரிவு 72-ன் கீழ், அவர் மேற்கடப்பதற்கு மட்டும் தான் அதிகாரம் பெற்றிருக்கிறார். சங்கத்தைக் கலைப்பதற்கு அவர் பிரிவு 85-ன் கீழ் அதிகாரம் பெற்றிருக்கிறார். இந்த வேறு பாடு பிரிவு 72 (7)-ல் காட்டப்பட்டிருக்கிறது.

**மேற்கடப்பு உத்தரவுக்கு எதிராக மேல்முறையீடு செய்தல் :** மேற்கடப்பு உத்தரவுக்கு எதிராக ஒரு மேல் முறையீடு செய்ய லாம். அத்தகைய மேல்முறையீடு பிரிவு 96 (சி) (அ)-ல் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மேற்கடப்பு உத்தரவு தேதிக்கு இரண்டு மாதங்களுக்குள் மேல்முறையீடு தாக்கல் செய்யப்பட வேண்டும் [பிரிவு (96) பி (3)]. அந்த உத்தரவு பதிவாளரால் பிறப்பிக்கப் பட்டால், மேல் முறையீடு அரசாங்கத்திற்குச் செய்யப் பட வேண்டும். ஆனால், உத்தரவு பதிவாளரின் கீழ்நிலை அதிகாரி களால் பிறப்பிக்கப்பட்டால் மேல் முறையீடு பதிவாளருக்குச் செய்யப்பட வேண்டும் [பிரிவு 96 (உ) (அ)]. மேல்முறையீட்டில் முடிவு எடுப்பதற்கு முன்பு, அரசாங்கம் மேற்கடப்பு உத்தரவை நிறுத்தி வைத்து ஓர் உத்தரவை வெளியிடக்கூடும். அந்நிலையில் மீறுதல் உத்தரவை அமல் படுத்தக்கூடாது [பிரிவு 72 (8)]. மேல்முறையீட்டின் பேரில், மேற்கடப்பு உத்தரவு ரத்து செய்யப்பட்டால், சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழு, சூழ்நிலைக்கேற்ப சங்கத்தின் நிருவாகத்தைச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு உடனே ஒப்படைக்கவேண்டும் [பிரிவு 72 (8)]. ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவை மேற்கடப்பு பிறப்பிக்கப்படும் பதிவாளரின் உத்தரவு நீதி முறையானது போன்றது.

உயர்நீதி மன்றம் ஒரு ரிட் மனுவை ஏற்றுக் கொள்ளலாம். ஆனால், நீதி மன்றங்கள் மேற்கடப்பு உத்தரவின் தகுதியைப் பரிசீலனை செய்யக்கூடாது என்று தீர்ப்பு கூறப்பட்டிருக்கிறது. அதாவது, பதிவாளரின் முன் இருக்கும் தகவலின் அடிப்படையின் பேரில் ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவைப் பதிவாளர் மேற் கடந்தது சரியா என்று நீதி மன்றங்கள் பரிசீலனை செய்யக்கூடாது. பதிவாளர் தன் கருத்தை அமைத்துக் கொண்டது அவருடைய உள நிலையைப் பொறுத்தது. ஆகையால், ஒரு மேல்முறையீட்டில் தீர்ப்பு கூறுவதுபோல, அதே தகவல்களின் பேரில் வேறு முடிவுக்கு நீதி மன்றம் வந்திருக்கும் என்று கூறுவதற்கு நீதி மன்றத்திற்கு அதிகாரமில்லை. எல்லாவற்றையும் பார்க்கும்போது, இந்தக் கடமை நிருவாகத் தொடர்புடையதாக இல்லாவிடினும், நீதி முறையானது போன்றதாக இருக்கிறது. அந்தக் கடமையைப் பதிவாளர் தான், தன் சொந்தத் தீர்ப்பினால் அவருக்கு முன் வைக்கப்பட்டிருக்கும் தகவல்களை ஆலோசித்த பிறகு நிறைவேற்ற வேண்டும்.

ஒரு மேல்முறையீடு நீதிமன்றம்போல், நீதி மன்றங்களுக்குப் பதிவாளருடைய தீர்ப்புக்குப் பதில் தங்கள் தீர்ப்பை அளிப்பதற்கு அதிகாரம் கிடையாது. ஆகையால், நீதி மன்றங்கள் பதிவாள ரால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளில் தலையிடுவதில்லை. ஒரு ரிட்மனு தாக்கல் செய்யப்பட்டாலும்கூட, அத்தகைய மனு சட்டத்தில் நிருணயிருக்கப்பட்ட நடைமுறையைப் பின்பற்றத் தவறியது, பதிவாளருடைய தீய எண்ணம், முதலியன போன்ற காரணங்களுக்காகச் செய்யப்படவேண்டுமே தவிர, பதிவாளரின் உத்தரவின் தகுதி பற்றிய காரணத்திற்குத் தாக்கல் செய்யப்படக் கூடாது. பதிவாளருடைய சரியான எண்ணம் கேள்விக்குரியதாக இல்லாமலிருந்தால் அவருடைய முடிவும் கேள்விக்கு உரியது அல்ல. எனவே, பதிவாளருடைய உத்தரவு, பிரிவு 96–ல் அனு மதிக்கப்பட்டு அரசாங்கத்திற்குச் செய்யப்படும் மேல்முறையீடு தவிர, நடைமுறையில் முடிந்த முடிவாகும்.

மத்திய வங்கியின் அலுவல்களில், சந்தானம் குழுவினர் ஒரு மத்திய வங்கியின் நிருவாகக் குழுவை மீறுவதற்கு முன்னர், ஒரு இடைக் காலக் கட்டத்தைப் பரிந்துரை செய்திருக்கின்றனர். பதிவாளர், ஒரு மத்திய வங்கியின் அலுவல்கள் திருப்திகரமாக இல்லை என்று கருதினால், அவர் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியுடன் கலந்தாலோசித்து, மாநிலக் கூட்டுறவு வங்கியை அந்த மத்திய வங்கியின் அலுவல்களை நல்ல நிலைமையில் வைப்ப தற்கு ஆலோசனை கூற ஒரு முழு நேர ஆலோசகரை அமர்த்த

வேண்டுமென்று கட்டளையிடலாம் என்று அந்தக் குழுவினர் யோசனை கூறியிருக்கின்றனர். மத்திய வங்கிக்கு ஒரு வாய்ப்பு கொடுத்து அதனுடைய விளக்கவுரைகளைக் கருதிய பின்னர்தான் இவ்வாறு செய்யவேண்டும். அப்படி அமர்த்தப்பட்ட ஆலோசகர் இரண்டு வருடங்களுக்கு மேல் இருக்கக் கூடாது. இந்த காலத்தின்போது எந்தச் சமயத்திலாவது ஆலோசகருடைய அறிக்கையையும் அல்லது இதர பொருத்தமான தகவல்களையும் கருதி, மாநிலக் கூட்டுறவு வங்கியுடன் கலந்தாலோசித்து, பதிவாளர் மத்திய வங்கியின் நிருவாகக் குழுவை மேற்கடந்து மாநிலக் கூட்டுறவு வங்கி மத்திய வங்கியின் நிருவாகத்தை மூன்று வருடங்களுக்கு மேற்படாத ஒரு காலத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று, கட்டளையிடலாம்.

சந்தானம் குழுவினருடைய பரிந்துரைகளின்படி, மாநிலக் கூட்டுறவு வங்கியால் அனுப்பப்பட்ட ஆலோசகர் உதவியுடன் தன் செயல்பாட்டைச் சீர்படுத்திக் கொள்ள மத்திய வங்கிக்கு ஒரு வாய்ப்பு அளிக்கப்படும். ஓர் அபிவிருத்தியுமில்லையானல் பிரிவு 72-ன்கீழ் நிருவாகம் மேற்கடக்கப்பட்டு, மாநிலக் கூட்டுறவு வங்கியின் நியமி அல்லது நியமிகள் சிறப்பு அலுவலராக அமர்த்தப் படுவார்கள்; அல்லது அவர்கள் மேற்கடக்கப்பட்ட மத்திய வங்கியின் நிருவாகக் குழுவாக அமர்த்தப்படுவார்கள்.

# 13. தகராறுகளைத் தீர்த்து வைத்தல்

## (Settlement of Disputes)

(பிரிவு 73, விதிகள், 56, 57)

### 1. தகராறுகளைப் பதிவாளரால் அல்லது மத்தியஸ்தர்களால் தீர்த்து வைப்பதற்காகக் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் ஏற்பாடு செய்ததன் நோக்கம் (Object of Providing for Settlement of Disputes by Arbitration)

கூட்டுறவுச் சங்கங்களில் தகராறுகளை மத்தியஸ்தர்களால் தீர்த்து வைப்பதற்குப் பிரிவு 73-ல் செய்யப்பட்டுள்ள ஏற்பாடு கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்கப்பட்ட சலுகைகளில் ஒன்றாக, சட்டப்படியமைந்த சலுகையாகக் கருதப்படுகிறது. ஏனென்றால், கூட்டுறவுச் சங்கங்களில் தகராறுகளைத் தீர்த்து வைப்பதற்காக நீதி மன்றங்களுக்குச் செல்லும் தேவையைப் பொதுவாக இந்தப் பிரிவு போக்குகிறது. அதனால், நேரமும், பணமும், தொல்லையும் சேமிக்கப்படுகிறது. நீதி மன்றங்களுக்குச் செல்வதால் அதிகச் செலவு ஏற்பட்டு, நீடித்த வழக்கு விசாரணை உண்டாகி, தொடர்பான கட்சிகளின் காலம் அதிகமாக எடுத்துக் கொள்ளப்படுகிறது. சிக்கனம், சுயஉதவி, கூட்டுறவு இவைகளை வளர்ப்பது ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் முக்கிய நோக்கங்களுள் ஒன்றாகையால் கூட்டுறவுச் சங்கமே நீதி மன்றங்களில் வழக்குத் தொடர்வதையும், அத்தகைய வழக்கின் மீது செலவு செய்வதையும் ஆதரிக்கக் கூடாது. எனவே, கூட்டுறவுச் சங்கங்கள் எல்லாத் தகராறுகளையும், கோருரிமைகளையும், செலவு குறைந்ததும், விரைவானதுமான மத்தியஸ்த முறையின்மூலம் தீர்த்துக் கொள்வதற்குச் சட்டம் ஏற்பாடு செய்கிறது.

1961ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டத்தின் பிரிவு 73-ல் (1932 வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 51ஆம் பிரிவுக்கு நேரானது) கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர் களின் தகராறுகளைக் கூட்டுறவுத் துறையின் அதிகாரிகளும்'

அல்லது தகராறுகளை முடிவு செய்யும் செயலுக்காகப் பதிவாளரால் அதிகாரமளிக்கப்பட்ட மற்றவர்களும் தீர்த்து வைப்பதற்காகச் சட்டப்படியான ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பிரிவு 73-ல், சங்கங்களில் எழும் தகராறுகளைப் பதிவாளராலும், அல்லது அரசாங்கத்தால் இது தொடர்பாக அதிகாரமளிக்கப்பட்ட ஒரு நபராலும் (அரசாங்க ஊழியர் அல்லது அரசாங்க ஊழியரல்லாதவர் அல்லது பதிவாளரால் நியமிக்கப்பட்ட மத்தியஸ்தர் ஒருவரால்) சிவில் நீதி மன்றங்களுக்குத் தகராறுகளைக் கொண்டு செல்லாமல், கட்டாயமாகத் தீர்த்து வைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதன் நோக்கம் நீதி மன்றங்களில் வழக்குத் தொடருவதால் ஏற்படும் தொல்லையும், செலவும் தவிர்க்கப்பட்டும் சிவில் நீதிமன்ற வழக்கு விசாரணையின் சிக்கலானதும் விரிவானதுமான நடைமுறை தவிர்க்கப்பட்டும், பதிவாளரால் விரைவில் தகராறுகள் முடிவு செய்யப்படுவதை உறுதிப்படுத்துவதுமாகும்.

2. சிவில் நீதி மன்றங்களின் அதிகார வரம்பிற்குத் தடை (Bar of Jurisdiction of Civil Courts)

1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டத்தில், கூட்டுறவுச் சங்கங்களில் தகராறுகளைப் பதிவாளரால் கட்டாய மத்தியஸ்தர் மூலம் தீர்த்து வைப்பதைக் குறித்த எந்த ஒரு சரத்தும் அடங்கியில்லை. அந்தச் சட்டத்தில் தகராறுகளைத் தீர்த்து வைப்பதைக் குறித்த நடைமுறையானது விதிகளுக்கு விடப்பட்டிருந்தது. அந்தச் சட்டத்தின் 43ஆம் பிரிவின் கீழ் தகராறுகளைப் பதிவாளருக்கு அல்லது அவருடைய கட்டளையின் பேரில் ஒரு மத்தியஸ்தருக்கு அனுப்பி வைப்பதற்கான விதிகள் செய்யப்பட வேண்டுமென்றிருந்தது, கூட்டுறவுச் சட்டக் குழுவினர் இது தொடர்பாகப் பின்வருமாறு கூறியிருக்கின்றனர்.

'நீடித்ததும் அதிக செலவுள்ளதுமான வழக்கு விசாரணையைத் தவிப்பதற்குச் சிவில் அல்லது இதர நீதி மன்றங்களுக்கு வெளியே, கூட்டுறவுச் சங்கங்கள் தகராறுகளைத் தீர்த்துக் கொள்வது தேவையாக இருக்கிறது. ஆகையால், இந்த முக்கியமான சரத்து சட்டத்திலேயே ஓர் இடம் பெறவேண்டுமென்றும், அத்தகைய தகராறுகளைக் குறித்து எந்த ஒரு சிவில் வழக்கையும் அல்லது இதர நடவடிக்கையையும் ஏற்றுக் கொள்ள எந்த நீதி மன்றத்திற்கும் அதிகார வரம்பு விதிக்கக் கூடாதென்று குறிப்பாகக் கூறப்படவேண்டுமென்றும் நாங்கள் கருதுகிறோம். மற்றும் எது ஒரு தகராறு என்று அமையும் என்பது, குறித்துச் சில சமயங்களில் ஐயங்கள் தெரிவிக்கப்படுகின்றன. ஆகையால்,

தகராறுகளாகக் கருதப்படவேண்டிய இனங்களை எடுத்துக் காட்டுவது விரும்பத்தக்கதாக இருக்கிறது. இந்தப் பிரச்சினையின் பல்வேறு அம்சங்களையும் தழுவுவதற்கு, மாதிரிக் கூட்டுறவு மசோதாவில் 65ஆம் பகுதி, போதுமான வரை எல்லாவற்றையும் முழுமையாக அடக்கி வைக்கும் வண்ணம், செய்யப்பட்டிருக்கிறது'. சிவில் வழக்கு நடைமுறை விதித் தொகுப்பின் 9ஆம் பிரிவு (Civil Procedure Code) வெளிப்படையாகவும் அல்லது ஊகமாகவும் தடை செய்யப்பட்ட சிவில் வழக்குகளைத் தவிர மற்ற எல்லா சிவில் வழக்குகளையும் விசாரணை செய்யச் சிவில் நீதி மன்றங்களுக்கு அதிகாரமளிக்கிறது. ஒரு தனிப்பட்ட சட்டப் படியமைந்த ஏற்பாடு அமைக்கப்பட்டபோது, சிவில் நீதி மன்றங்களின் அதிகார வரம்பு தடை செய்யப்படுகிறது. 73ஆம் பிரிவு, அதில் குறிக்கப்பட்டிருக்கும் எல்லாத் தகராறுகளையும் பதிவாளருக்கு அனுப்பவேண்டுமென்று, கூறுகிறது. எனவே இது ஊகமாக, சிவில் நீதி மன்றங்களின் அதிகாரத்தைக் கோரத் தடை செய்திருக்கிறது.

தகராறுகளைக் கட்டாயமாகத் தீர்த்து வைப்பதைக் குறித்தும் சிவில் நீதி மன்றங்களின் அதிகார வரம்புத் தடையைக் குறித்தும், சென்னைக் கூட்டுறவுக் கையேட்டின் இரண்டாவது தொகுதியில் [ Vol (II) of the Madras Co-operative Manual ] கீழ்க்கண்டவாறு எழுதியிருப்பது கவனிக்கத் தக்கது. '1912ஆம் வருடத்திய (இந்திய) கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் கீழ் வகுக்கப்பட்ட விதி (xiv) (1), சங்கங்களின் தகராறுகள் பதிவாளருக்கு அனுப்பப் படலாம் என்று நிருணயித்தது. 'படலாம்' என்ற வார்த்தை, விளக்கம் கூறும்போது சில சிக்கல்களுக்கு இடங்கொடுத்ததால், சென்னை டவுன் ஷெண்ட் கூட்டுறவுக் குழுவினர் (1928) 'படலாம்' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'வேண்டும்' என்ற வார்த்தையைச், சிவில் நீதி மன்றங்களின் அதிகார வரம்பை ஓர் ஐயமுமின்றித் தடை செய்யும்பொருட்டு, சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று யோசனை கூறினர். இந்த யோசனை 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் பிரிவு 51-ல் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

சிவில் நீதி மன்றங்களின் அதிகார வரம்பைத் தடைசெய்யும் பிரச்சினையைப் பற்றிக் கீழ்க்கண்ட தீர்ப்பு வழிச்சட்டம் (Case Law) கவனிக்கற்பாலது. 'ஒரு தனிப்பட்ட சட்டப்படியமைந்த ஏற்பாடு அமைக்கப்பட்டபோது தேவையான ஊகத்தால் சிவில் நீதி மன்றத்தின் அதிகார வரம்பு தடை செய்யப்படலாம். அவ்வாறு தடை செய்யப்படுவது வெளிப்படையாக இருக்க

வேண்டியதில்லை. சட்டத்தின் கீழ் அளிக்கப்பட்ட அதிகாரங்களைப் பிரயோகிப்பதால் ஏற்பட்டதாகக் கூறப்படும் தீமைகளைச் சீர்ப்படுத்துவதற்காகச் சட்டத்தினால் ஒரு நீதித் தன்மை வாய்ந்த ஏற்பாடு அமைக்கப்படும்போது சாதாரணமாக அதே பரிகாரத்தையளிப்பதற்கு நீதி மன்றங்களின் அதிகார வரம்பு தடை செய்யப்படும் என்று ஊகிக்கப்படவேண்டும்' (1935 692 எம். எல். ஜே. 726.

நீதி மன்றங்களின் அதிகார வரம்பைத் தடை செய்யும் பிரச்சினையைக் குறித்துப் பின்வரும் பகுதி நகலும்கூட (Extract) மிகவும் முந்தைய காலத்திற்குத் தொடர்புடையதாயிருந்தாலும், அது பிரிவு 73-ன் சரத்தின் முக்கிய நோக்கத்தைக் காண்பிக்கிறது. 'சட்டத்தின் நோக்கம், சிக்கனத்தையும், சுய உதவியையும், கூட்டுறவையும், விவசாயிகள், கைவினைஞர்கள், குறைந்த வருவாயுள்ள நபர்கள் இவர்களிடையே ஊக்குவிப்பது என்பது காணப்படும். மற்றும் எங்கள் கருத்தில் இந்த மக்கள் தங்கள் தகராறுகளைத் தீர்த்துக் கொள்வதற்கு மிகச் செலவுள்ளதும் நீடித்ததுமான வழக்கு விசாரணையும் எல்லா தொல்லைகளையும் கவலைகளையும் கட்டாயமாக அனுபவிக்க வேண்டியிருந்தால், இந்த நோக்கங்களையடைவதற்குச் சாத்தியப்படாது. மேற்கொண்டும் கவனிக்க வேண்டியது என்னவென்றால் இந்த செயலில் ஆங்கிலச் சட்டமும் பெரும்பாலும், அதே மாதிரியாக இருக்கிறது. இம்மாதிரியான சிவில் வழக்கு ஒரு நீதி மன்றத்தால் முடிவு செய்வதற்கு அனுமதிக்கப்பட்டால் அது சட்டத்தின் பரப்பிற்கும் நோக்கத்திற்கும் முற்றிலும் விரோதமாக இருக்கும் என்று நாங்கள் கருதுகிறோம்.

பதிவாளருக்கு ஒரு தாவாவின்மூலம் விதிகளின்கீழ் ஏற்படுத்தப்பட்ட பலமான பரிகாரத்தின்மூலம், நீதிமன்றத்தில் ஒரு நடவடிக்கை வாயிலாக இயற்றுச் சட்டத்தின் (Common Law) பரிகாரம் பொது ஊகத்தினால் எடுக்கப்பட்டுவிட்டது என்று நாங்கள் கருதுகிறோம்'. (சிவில் அப்பீல் வழக்கு நெம்பர் 944/1922-ல் லாஹூர் உயர்நீதி மன்றம்—ஜமீன்தார் வங்கி ஷெர்பூர் காதரும்-சுப்ரமணியமும்) இந்தச் சிவில் வழக்கு, வாதியால் எழுதிக் கொடுக்கப்பட்டதாகக் கூறப்பட்ட பத்திரங்கள் கள்ளப்பத்திரங்கள் (Forgeries) என்று ஓர் உறுதிக் கூற்றுக்காகத் (Declaration) தொடங்கப்பட்டது. இந்த வழக்கு விதிகளால் (மத்தியஸ்தத்தைக் குறித்த) தடை செய்யப்பட்டதாக நீதிபதி (Munsiff) தள்ளுபடி செய்திருந்தார். கீழ்அப்பீல் நீதிமன்றம் ஒரு சிவில் வழக்கு தொடரக்கூடும் என்று முடிவு

செய்தது. ஆகையால் விதி 18-ன்கீழ் (1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டத்தின் பிரிவு 43-ன்கீழ் வகுக்கப்பட்டது) ஏற்படுத்தப்பட்ட பலமான பரிகாரத்தின்மூலம் அதாவது பதிவாளருக்கு ஒரு தகராறைத் தாவா செய்வதன்மூலம் சிவில் நீதி மன்றத்தின் அதிகார வரம்பு எடுக்கப்பட்டு விட்டது என்று முடிவு செய்யப்பட்டது. ஆகையால் கூட்டுறவுச் சட்டம், இயற்றுச் சட்டத்தின் உரிமையை ஒழித்துவிட்டு ஒரு தனிப்பட்ட நடைமுறையை ஏற்படுத்துகிறது. அதாவது சிவில் நீதிமன்றத்தில் பரிகாரம் தேடும் பொது சட்டவுரிமை இதனால் எடுக்கப்பட்டு விட்டது.

சிவில் நீதிமன்றங்களின் அதிகார வரம்பு 1961ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சட்டத்தின் சில பிரிவுகளின்கீழ் தெளிவாகவும், வெளிப்படையாகவும் தடை செய்யப்பட்டிருக்கிறது. உதாரணமாக பிரிவு 89-ன்படி ஒரு சங்கத்தைக் கலைப்பதும் அல்லது அதன் பதிவை ரத்து செய்வதும் தொடர்பான எந்தச் செயலிலும் எந்த நீதி மன்றமும் வழக்கு எடுத்துக் கொள்ளக் கூடாது. பிரிவு86-ன் கீழ் அமர்த்தப்பட்ட கலைப்பு அலுவலரின் மீது, சங்கத்தின் அலுவலர்களைப் பற்றிய எந்தச் செயலைப் பற்றியும் எந்தச் சிவில் வழக்கும் அல்லது சட்ட நடவடிக்கையும் எடுக்கப்படக் கூடாது. இந்தப் பிரிவில் நீதிமன்றங்களின் அதிகார வரம்பு படிப்படியாக அப்புறப்படுத்தப்பட்டிருக்கிறது. அதே மாதிரியாக, பிரிவு 100-ன் கீழும் கூட ஒரு மத்தியஸ்தர், ஒரு கலைப்பு அலுவலர், பதிவாளர் அல்லது அவருடைய கீழ்நிலை அரசாங்க அலுவலர் பிறப்பிக்கும் உத்தரவு அல்லது தீர்ப்பு அல்லது எடுக்கும் முடிவு அல்லது நடவடிக்கை அல்லது வெளியிடும் கட்டளை எந்த ஒரு நீதிமன்றத்திலும் மறுப்பு செய்யப்படக்கூடாது. பிரிவு 73-ல் தகராறுகளைத் தீர்த்து வைப்பதைப் பற்றி அத்தகைய வெளிப்படையான அதிகார வரம்பு காட்டப்படவில்லை. ஆனால், ஊகத்தின் மூலம் நீதிமன்றங்களின் அதிகார வரம்பு அப்புறப்படுத்தப்பட்டிருக்கிறது. ஏனென்றால், பிரிவு 73 (1)-ன் கீழ் பதிவாளரின் மத்தியஸ்தத்தின் மூலம் கூட்டுறவுச் சங்கங்களின் தகராறுகளைத் தீர்த்துக் கொள்வது கட்டாயமாக இருக்கிறது.

1961ஆம் வருடத்திய மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டம், சிவில் நீதி மன்றங்களின் அதிகார வரம்பைத் தடை செய்து பதிவாளரின் தனிப்பட்ட அதிகார வரம்பிற்காக ஏற்பாடு செய்கிறது (1960ஆம் வருடத்திய மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 91ஆம் பிரிவு தகராறுகளையும் மத்தியஸ்தத்தையும் குறித்து). அந்தச் சட்டத்தின்

பிரிவு 91 (1), பின்வருமாறு தொடங்குகிறது. 'தற்போது அமலிலிருக்கும் பிற சட்டத்தில் அடங்கியிருக்கும் சரத்து எதுவாயிருந்தாலும் ஒரு சங்கத்தின் அமைப்பு, நிருவாகி தேர்தல், பேரவைக் கூட்டங்கள் நடத்துதல், சங்கத்தின் தொழிலை நிருவாகம் செய்தல் இவைகளைப் பற்றிய எந்தத் தகராறும், தகராறுக்குத் தொடர்புடைய எந்தக் கட்சியினராலும் அல்லது சங்கம் இணைக்கப்பட்ட ஒரு கூட்டிணைப்புச் சங்கத்தாலும் அல்லது சங்கத்தின் ஒரு கடனாளராலும் பதிவாளருக்கு அனுப்பப் படவேண்டும்'. மீண்டும் மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 91ஆம் பிரிவின் உட்பிரிவு (3)-ன் படி 'பிரிவு 93-ன் உட்பிரிவு 3-ன் கீழ் வேறுவிதமாக ஏற்படுத்தி யிருப்பது தவிர, எந்த நீதி மன்றத்திற்கும் உட்பிரிவு (1)-ல் குறிக்கப்பட்ட எந்தத் தகராறைப் பற்றியும் அல்லது எந்தச் சிவில் வழக்கையும் அல்லது இதர நடவடிக்கையையும் ஏற்றுக்கொள்ள அதிகார வரம்பு கிடையாது'. ஆகையால், 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் பிரிவு 78 தொடர்பான பொருள்களைப் பற்றி சிவில் நீதிமன்றத்தின் அதிகார வரம்புக்கு ஒரு தடையிருக்கிறது என்பது தெளிவு.

பிரிவு 73-ன் கீழ் அதிகார வரம்பு பெறுவதற்கு, (1) ஒரு தகராறு இருக்கிறது என்றும், (2) அந்தத் தகராறு ஒரு சங்கத்தின் அமைப்பு அல்லது நிருவாகம் அல்லது தொழிலைப் பற்றியது என்றும், (3) அந்தத் தகராறு பிரிவு 73 (1)-ன் பகுதிகள் (அ) முதல் (இ) வரை குறிக்கப்பட்டிருக்கும் நபர்கள் வகைகள் இடையேயும் தகராறுகள் இடையேயும் இருக்கிறது என்றும், நிரூபிக்கப்படவேண்டும். மேற்கூறியவைகளில் ஏதாவது ஒன்று இல்லாமலிருந்தால் இந்தப் பிரிவின் கீழ் செய்யப் படும் முடிவு அதிகார வரம்புக்குப் புறம்பானதாகவும் அந்தக் காரணத்தால் நடவடிக்கை எடுக்க முடியாததாகவும் இருக்கும்.

## 3. ஒரு தகராறு என்பது எது? (What is a dispute?)

'தகராறு' என்பதில், சிவில் வழக்குக்குப் பொருளாக அமையக்கூடிய எல்லாச் செயல்களும் அடங்கும்பிரிவு 73 (1). ஒரு தகராறில் எவையெவை சேர்க்கப்பட்டிருக்கின்றன என்பதைக் கூறுகிறது. ஆனால், சங்கத்தின் ஊதியம் பெற்ற ஊழியர் மீது சங்கத்தால் அல்லது அதன் நிருவாகக் குழுவால் எடுக்கப்படும் ஒழுங்கு நடவடிக்கை தொடர்பான ஒரு தகராறை இந்தப் பிரிவு சேர்த்துக் கொள்ளவில்லை. ஆனால், இந்தப் பிரிவில் நிருவாகக் குழுவின் அமைப்பு அல்லது ஒரு சங்கத்தின் நிருவாகம் அல்லது

தொழிலைப் பற்றிய எல்லாச் செய்திகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மற்றும் உறுப்பினர், முன்னுள் உறுப்பினர் அல்லது இறந்து போன உறுப்பினர்களின் நியமி அல்லது வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதியிடமிருந்து பாக்கியாகவுள்ள எந்தக் கடனுக்கும் சங்கத்திஞல் செய்யப்படும் கோருரிமைகளும், நில ஒப்படை நிபந்தனைகளை முறிவு செய்த காரணத்திற்காகச் சங்கத்தால் திரும்பக் கைக்கொள்ளுதல் செய்யப்பட்ட அசையாச் சொத்தைச் சங்கத்திற்குச் சுவாதீனம் கொடுப்பதற்காகச் சில நபர்கள் மீது சங்கம் செய்யும் கோருரிமைகளும் கூடச் சேர்க்கப் பட்டிருக்கின்றன [பிரிவு 73 (1)-க்கு விளக்கங்கள் (1)-ம் (2)-ம்]. பிரிவு 73 (1)-ன் கீழ் குறிப்பிடப்பட்டவைகள் தகராறுகளாகும்.

1. ஓர் உறுப்பினர், முன்னுள் உறுப்பினர், இறந்து போன உறுப்பினரின் நியமி, வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி. இவர்களிடமிருந்து வரவேண்டிய எந்தக் கடனுக்காகவும் (அந்தக் கடன் ஒப்புக் கொள்ளப்பட்டாலும் அல்லது ஒப்புக்கொள்ளப் படாவிட்டாலும்), ஒரு சங்கத்தால் செய்யப்படும் உரிமைக் கோரிக்கை ஒரு கடன் அவரே தவணை தவறியதாகயிருந்து. அதைத் திருப்பிச் செலுத்தாமலும், செலுத்துவதற்குப் போதுமான காரணத்தைக் காண்பிப்பதற்குத் தவணை தவறிய பாக்கிதாரர் மறுத்தாலும் பிரிவு 73-ன் கீழ் அவர் மீது நடவடிக்கை எடுக்கப்படும். தீர்ப்பளிக்கப்பட்ட தொகை ஒரு தீர்ப் பாணையாக வசூலிக்கப்படும் [பிரிவு 73 (1)-ன் விளக்கம்].

(i) தகராறுகளில் பல இந்த வகையைச் சேர்ந்தவையாக இருக்கின்றன.

(ii) நிலம் அல்லது சொத்து ஆர்சிதம் அல்லது ஒதுக்குதல் நிபந்தனைகளை மீறியதற்காக ஓர் உறுப்பினர் முன்னுள் உறுப்பினர் அல்லது இறந்துபோன உறுப்பினர்களின் நியமி அல்லது வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி மீது சங்கம் திருப்பி எடுத்துக் கொண்ட நிலம் அல்லது இதர அசையாச் சொத்துகளின் சுவாதீனத்திற்காகச் சங்கம் செய்யும் கோருரிமை [பிரிவு 73 (1)-க்கு விளக்கம் (2)].

(iii) தனக்குச் சேர வேண்டிய ஒரு கடனுக்காக ஒரு சங்கம் இன்னொரு சங்கத்தின் மீது செய்யும் ஒரு கோருரிமை. சங்கத்திற்குச் சேர வேண்டிய தொகைகளை வசூல் செய்வதற்காக மட்டுமன்றி, வேறெந்தச் சங்கத்திடமிருந்து வரவேண்டிய தொகைகளை வசூலிப்பதற்குக்கூட 73ஆம் பிரிவின் சரத்துகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

(iv) பிரிவு 73-ன்கீழ், பதிவாளர் தேர்தல் தகராறுகளையும் முடிவு செய்யக்கூடும். பிரிவு 73 (1)-ல், தகராறு ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவின் அமைப்பைக் குறித்தும், நிருவாகத்தைக் குறித்ததுமான ஒன்று. அதாவது தேர்தல் தகராறுகள், என்று தெளிவாக விரிவு செய்யப்பட்டிருக்கிறது. சங்கத்தின் நிருவாகிகளின் தேர்தலைப் பற்றிய அல்லது ஒரு சங்கத்தின் கூட்டம் சட்டப்படிச் செல்லக்கூடியதா என்பதைப் பற்றிய ஒரு தகராறு இந்தப் பிரிவின்கீழ் விசாரிக்கப்படக் கூடும். நிருவாகக் குழு உறுப்பினர்களின் தேர்தலும், நிருவாகக் குழு அலுவலர்களின் தேர்தலும், அவர்களின் தேர்தலுக்காக நிருவாகக் குழு அல்லது பேரவைக் கூட்டங்கள் நடத்துதலும் ஒரு சங்கத்தின் அமைப்பையும் நிருவாகத்தையும் குறித்தவை. ஒரு சங்கத்தின் பேரவையால் அல்லது நிருவாகக் குழுவால் இன்னொரு சங்கத்தின் பேரவைக்கு அல்லது நிருவாகக் குழுவிற்குத் தன் பிரதிநிதியாக ஒருவரைத் தேர்ந்தெடுப்பதைக் குறித்த எந்த ஒரு தகராறும்கூட இந்தப் பிரிவின் பார்வையின்கீழ் வரும். ஒரு சங்கத்தின் பேரவை அச் சங்கத்திலிருந்து ஓர் உறுப்பினரை விலக்கினாலும் அந்தப் பேரவைக் கூட்டம் சட்டப்படிச் செல்லக் கூடியதா என்பதைக் குறித்த ஒரு தகராறு இருந்தால் அதுவும்கூட இந்தப் பிரிவின்கீழ் ஒரு தகராறாக இருக்கும்.

ஒரு நிருவாகக் குழுவிற்கு எந்த ஒரு தேர்தலைக் குறித்தும் அல்லது தேர்தல் தொடர்பாகவும் பிரிவு 73 (1)-ன்கீழ் ஒரு தகராறு, அத்தகைய தேர்தல் முடிவு அறிவிப்பு தேதி வரை, தீர்ப்புக்கு அனுப்பப்படக் கூடாது. தேர்தலைக் குறித்த செய்திகளைத் தேர்தல் நடைபெற்ற பிறகுதான் பிரிவு 73 (1)-ன்கீழ் ஒரு தாவா தாக்கல் செய்யலாம். அப்படியென்றால், தேர்தல்களை நிறுத்தி வைப்பதற்கும், தேர்ந்தெடுக்கப்பட்டால் நபர்கள் தங்கள் பதவியை ஏற்றுக்கொள்வதை நிறுத்தி வைப்பதற்கும், தடைக் கட்டளையிடுவதன்மூலம், பதிவாளர் வழக்கில் ஒரு தடை உத்தரவைப் பிறப்பிக்க முடியாது என்றுதான் பொருள்.

(v) ஒரு சங்கத்தின் தொழிலைக் குறித்த தகராறுகளைப் பொறுத்தமட்டில், 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 51ஆம் பிரிவில் ஒரு நிருவாகக் குழுவின் 'அமைப்பு அல்லது நிருவாகம்' என்ற சொற்கள் இல்லாமலிருக்கின்றன. இதற்கு முந்தைய சட்டத்தில் அடங்கியிருந்த தொழில் என்ற சொல்லில் நிருவாகக் குழுவின் அல்லது நிருவாகக் குழுவின் அலுவலர்களின் தேர்தலைக் குறித்த தகராறுகள் அல்லது சங்கத்தின் கூட்டம் சட்டப்படிச் செல்லக் கூடியதா என்பதைப் பற்றிய தகராறுகள் அடங்கியிருக்கின்றன என்று கருதப்பட்டது. ஏனென்றால், சங்கத்

தால் நடத்தப்பட்ட தேர்தல்களும், கூட்டங்களும் அந்தச் சங்கத்தின் தொழிலில் ஒரு பாகம் என்றும் காரணத்தைக் காட்டினார்கள். இதனை ஐயமின்றித் தெளிவுபடுத்த 'நிருவாகக் குழுவின் அமைப்பு அல்லது நிருவாகம்' என்ற சொற்கள் 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தின் 73ஆம் பிரிவில் சேர்க்கப்பட்டன.

'ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் தொழில்' என்ற சொற்றொடரில், சங்கம் அமைக்கப்படுவதில் கருதப்பட்ட தொழிலினங்களும், சங்கத்தின் நோக்கங்களும் மட்டுமன்றிச் சங்கம் தன் உறுப்பினர்களுடனாவது அல்லது ஊழியர்களுடனாவது செய்யும் எந்தவித லேவாதேவிகளும் கூட அடங்கும். 1923ஆம் ஆண்டில் சென்னை உயர்நீதி மன்றத்தால் அளிக்கப்பட்ட ஒரு தீர்ப்பில் அந்த உயர்நீதி மன்றம் கீழ்க்கண்டவாறு கருத்து தெரிவித்திருக்கிறது.

(i) 'சங்கத்தின் தொழிலைப் பற்றிய' என்ற சொற்றொடரில் ஒரு சங்கத்தின் அலுவல்களின் உள் நிருவாகத்தைப் பற்றிய தகராறுகள் அல்லது சங்கத்தின் தொழிலை நடத்துவதற்குண்டான கொள்கைகளைப் பற்றிய தகராறுகள் மட்டும்தான் அடங்கியிருக்கின்றன என்பதில்லை.

(ii) ஒரு சங்கத்தின் அலுவலராக இருக்கும் ஓர் உறுப்பினருக்கும் சங்கத்திற்குமிடையே, சில பொருள்கள் வாங்குவதற்காக அந்த உறுப்பினருக்கும் ஒப்படைக்கப்பட்ட தொகையின் தொடர்பாக எழும் ஒரு தகராறும் இந்தப் பிரிவின் கீழ் வருகிறது.

(iii) ஒரு சங்கத்தின் அலுவலராக இருக்கும் ஓர் உறுப்பினருக்கும் நிருவாகக் குழு அல்லது அதிகாரிக்குமிடையே எழும் ஒரு தகராறும் இந்தப் பிரிவின் கீழ் அடங்கியிருக்கிறது.

'சங்கத்தின் தொழில்' என்ற சொல்லின் பரப்பைப் (Scope) பற்றி நீதி மன்றங்களின் தீர்ப்பில் பின்வரும் பகுதி நகல் (Extract) நன்கு விளக்குகிறது.

*(1) சட்டத்தில் அமைக்கப்பட்ட தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்தின் (Tribunal) அதிகாரங்கள் வரையறுக்கப் பட்டுள்ளன. அந்த அதிகாரங்கள் சட்டத்தினாலும், சட்டத்தின் கீழ் வகுக்கப்பட்ட விதிகளினாலும், நிறுவனத்தால் ஏற்படுத்திக் கொள்ள அனுமதிக்கப்படும் உப-விதிகளாலும், எல்லைப் படுத்தப் பட்டிருக்கின்றன. சட்டத்திலும், விதிகளிலும், உப-விதிகளிலும்*

கூறப்பட்டவைகளுக்கும் மட்டுமன்றிக் கூட்டுறவு இயக்கம் எச் செயலுக்காகத் துவக்கப்பட்டதோ அச் செயலை நிறைவு செய்வதற்குத் தேவையாகவும், சரியாகவும், தேவைப்படுகிற அளவிற்கும் கூட அந்த அதிகாரங்கள் நீடிக்கின்றன. அல்லது அச் செயலுக்குத் தொடர்பான அல்லது அதன் விளைவாக ஏற்படும் செயலுக்கும் அந்த அதிகாரங்கள் நீடிக்கின்றன.

(2) 'தொழிலைத் தொடும்' (Touching the Business) தகராறு, சங்கத்தின் அலுவல்களின் உள் நிருவாகத்தைக் குறித்த ஒரு தகராறுக்கும் அல்லது அந்தத் தொழில் நடத்துவதை ஒழுங்குபடுத்துவதற்குத் தேவையான கொள்கைகளைக் குறித்த ஒரு தகராறுக்கும் மட்டும் எல்லைப்படுத்தப்பட வேண்டியதில்லை. ஒரு சங்கத்தின் தொழிலை நடத்தும் போது எழுகின்ற ஒரு லேவாதேவியும் கூடச் சங்கத்தின் 'தொழிலைத் தொடுகின்ற' என்ற தொடரின் பொருளுக்குள் வரும்.

(3) தொழில் என்பது உறுப்பினர்களுடன் சங்கம் செய்யும் லேவாதேவிக்கு மட்டுமன்றிச் சட்டத்தின் கீழ் சங்கத்திற்கு அதிகாரமளிக்கப்பட்ட எல்லாத் தொழில்களையும் குறிக்கும்.

(4) சங்கத்தின் உப-விதிகளின் படி சங்கம் மேற்கொள்ளும் ஒவ்வொரு செயலும் சங்கத்தின் தொழிலைத் தொடுகின்ற ஒரு செயலாகும். பணத் தகராறுகள், தேர்தல் தகராறுகள் தவிர, மேற்சொன்னவாறு ஒரு சங்கத்தின் தொழிலைக் குறித்த வேறு தகராறுகளும் எழலாம். உதாரணமாக, ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டம் ஓர் உறுப்பினரை விலக்கினால், அந்த விலக்குதல் சட்டப்படிச் செல்லாது என்று அறிவிப்பதற்காக எடுக்கப்படும் நடவடிக்கையும் ஒரு சங்கத்தின் தொழிலைக் குறிக்கும். மற்றும் ஒரு ஸ்டோர்ஸ் சங்கம் சாமான்கள் வாங்குவதற்காகச் சங்கத்தின் அலுவலருக்குப் பணம் ஒப்படைக்கப்பட்டு செலவாகாத மீதப் பணத்தை அவர் சங்கத்திற்குத் திருப்பித் தராவிட்டால் அதை, சங்கத்தின் தொழிலைத் தொடுகின்ற ஒரு தகராறு போன்று அவரிடமிருந்து கேட்கப்படலாம்.

கூட்டுறவுச் சங்கங்களால் தாக்கல் செய்யப்படும் தகராறுகளில் பல உறுப்பினர்களால் தங்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்படவேண்டிய கடன்களைக் குறித்தவையே ஆகும். இங்கேயும் கூட, எடுத்துச் சொல்லியும் (Persuasion) பிற நடவடிக்கைகள் மூலமும் ஒரு தவணை தவறிய கடனை வசூல் செய்வதற்கு மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் தோல்வி அடைந்த பின்னர் தான், அந்தக் கடனை வசூல் செய்வதற்காக, பிரிவு 73-ன் கீழ் மத்தியஸ்தத்திற்குக் கடைசி நடவடிக்கையாக, தகராறு தாவா

செய்யப்படவேண்டும். இதர செயல்களிலும் சமாதான முறையில் தகராறுகளைத் தீர்ப்பதற்கு எல்லா முயற்சிகளும் செய்யப்பட்டு அத்தகைய சமாதான முயற்சிகள் தோல்வியுற்றால் மட்டுமே பிரிவு 73-ன் கீழ் மத்தியஸ்த தாவாக்கள் செய்யப்பட வேண்டும். இதுதான் ஒரு சங்கத்தின் எல்லா உறுப்பினர்களிடையே இருக்கவேண்டிய கூட்டுறவு உணர்ச்சிக்குப் பொறுத்தமுள்ள செயலாகும்.

4. தகராறுக்குத் தொடர்பான தரப்பினர் (Parties to the dispute)

(அதாவது மத்தியஸ்த தாவாக்கள் எந்த நபர்கள்மீது தாக்கல் செய்யப்படலாம் அவ்வாறு எவரால் தாக்கல் செய்யப்படலாம்). பிரிவு 73-ல் தகராறுகளுக்குண்டான தரப்பினர்கள் வரிசைக் கிரமமாய்க் கூறப்படுகின்றனர். பிரிவு 73-ன்கீழ் கூறப்பட்ட தகராறுகள் மட்டும்தான் பதிவாளரின் மத்தியஸ்த முடிவிற்கு அனுப்பப்படலாம். பிரிவு 73-ன்கீழ் கூறப்பட்ட தகராறுகள், பின்வரும் நபர்களுக்குள் அவர்களுக்கிடையே எழும் தகராறுகளாக இருக்கவேண்டும்.

(அ) ஒரு சங்கத்தின் உறுப்பினர்களுக்கும் முன்னாள் உறுப்பினர்களுக்கும், இறந்துபோன உறுப்பினர்கள் மூலம் உரிமைக் கோரிக்கை செய்யும் நபர்கள் இவர்களுக்குள்ளும் எழும் தகராறுகள்.

(ஆ) ஓர் உறுப்பினருக்கும் முன்னாள் உறுப்பினருக்கும் அல்லது ஓர் உறுப்பினர், முன்னாள் உறுப்பினர், இறந்துபோன உறுப்பினர் மூலம் உரிமைக் கோரிக்கை செய்யும் நபருக்கும், சங்கம், அதன் நிருவாகக் குழு அல்லது அதன் அலுவலர், முகவர், (Agent), அல்லது ஊழியருக்கும் இடையே எழும் தகராறுகள்.

(இ) சங்கம் அல்லது அதன் நிருவாகக் குழுவிற்கும் அதன் முன்னாள் நிருவாகக் குழுவிற்கும் அல்லது அதன் அலுவலர், முகவர் அல்லது ஊழியர் அல்லது முன்னாள் அலுவலர் முன்னாள் முகவர், அல்லது முன்னாள் ஊழியர் அல்லது இறந்துபோன அலுவலர், இறந்துபோன முகவர் அல்லது இறந்துபோன ஊழியரின் நியமிகள், வாரிசுகள் அல்லது சட்டப்படியான பிரதிநிதிகளுக்கும் இடையே எழும் தகராறுகள்.

(ஈ) சங்கத்திற்கும் பதிவு செய்யப்பட்ட வேறு எந்தச் சங்கத்திற்கும் இடையே எழுகின்ற தகராறுகள். இந்தச் சரத்துகள், உறுப்பினர்களிடையே அல்லது பிரிவில் குறிக்கப்பட்ட இதர நபர்களிடையே எழுகின்ற தகராறுகளுக்கு மட்டும்தான் பிரயோகிக்கப்படுகின்றனவே தவிர, மற்றவர்களுக்குள்ள

தகராறுகளுக்கல்ல. உதாரணமாக, உறுப்பினரல்லாத வைப்புத் தொகை செலுத்தியவர்களும் அல்லது உறுப்பினரல்லாத இதர கடனாளிகளும் தரப்பினராக இருக்கின்ற தகராறுகள் இந்த சரத்துகளின்கீழ் வரா. அத்தகைய தகராறுகள் சிவில் நீதி மன்றங்களுக்கு எடுத்துச் செல்லப்படவேண்டும். அதனால்தான், விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களில், வியாபாரிகள் நாமினல் உறுப்பினர்களாகச் சேர்க்கப்படுகிறார்கள். அப்படிச் செய்வதால் சங்கம் அத்தகைய வியாபாரிகளுக்குச் செய்யப்பட்ட விற்பனைகள் தொடர்பாக அவர்களிடமிருந்து வரவேண்டிய தொகைகளை வசூல் செய்வதற்காகச் சங்கம் அவர்கள்மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம்.

ஓர் உறுப்பினர் மூலம் உரிமை கோரிக்கை செய்யும் நபர்களில், அவருடைய வாரிசுகள் (Heirs) மரண சாசனத்தின்படி நிறைவேற்றுளர்கள் (Executors), பரிபாலனக்காரர்கள், (Administrators), பெற்றுக்கொள்வதற்கு நியமிக்கப்பட்டவர்கள் (Assigns), நியமனம் அனுமதிக்கப்பட்டிருந்தால் அவர்களுடைய நியமிகள் கூட, சேர்ந்துள்ளார்கள். ஒரு சங்கத்தின் உப-விதிகள் இந்த நபர்களையும் கடமைப்படுத்தும், உட்பிரிவு (1)-ன் சரத்துகளை ஒரு சங்கத்திற்கும், அச் சங்கத்தின் ஊதியம் பெறும் ஊழியர்களுக்குப் பிணையாளாக (Surety) நிற்கும் உறுப்பினர் அல்லாதவர்களுக்குமிடையே எழுகின்ற தகராறுகளுக்குப் பிரயோகிக்க முடியாது. ஆகையால், சங்கங்கள் தங்கள் ஊதியம் பெறும் ஊழியர்கள், உறுப்பினர்களை மட்டும்தான், பிணையாள்களாகக் கொடுக்கவேண்டுமென்று, வற்புறுத்த வேண்டியது அவசியம். அப்படிச் செய்தால்தான் தொடர்பான ஊழியரின் கவனக் குறைவாலும் தவறாலும் விளைந்த எந்த நட்டத்திற்கும் அவர்கள் பொறுப்பாளிகளாகத் தோன்றினால் அத்தகைய பிணையாள்கள் மீது சங்கம் நடவடிக்கை எடுக்கமுடியும். ஆகையால், ஒரு தகராறு பிரிவு 73-ன் பரப்பிற்குள் வருவதற்கு அது,

(அ) ஓர் உறுப்பினருக்கும் மற்றோர் உறுப்பினருக்கும் இடையே எழவேண்டும்; அல்லது

(ஆ) ஓர் உறுப்பினருக்கும் சங்கத்திற்குமிடையே எழவேண்டும்;

(இ) சங்கத்திற்கும் அதன் முன்னாள் ஊழியருக்குமிடையே எழவேண்டும்;

(ஈ) இரண்டு சங்கங்களுக்குமிடையே எழவேண்டும்.

**5. பிரிவு 73-ன் கீழ் பதிவாளருக்கு ஒரு மத்தியஸ்த தாவா விண்ணப்பம் செய்வதற்கான நடைமுறை (Procedure for making a reference under sec. 73)**

சாதாரணமாக நடைமுறையில், ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு அதன் செயலாளர் அல்லது தலைவர், தன் உப-விதிகளின் கீழ் வழக்குத் தொடர யார் தகுதி உள்ளவரோ, அவருக்கு அதிகாரம் அளித்து ஒரு தீர்மானம் நிறைவேற்ற வேண்டும். அந்தத் தீர்மானத்தில், குறிக்கப்பட்ட தவணை தவறிய கடன்களை அல்லது இதர தகராறுகளைத் தீர்த்து முடிவு செய்வதற்காகப் பதிவாளருக்குத் தாவா செய்வதற்கு அதிகாரம் அந்தத் தீர்மானத்தில் கொடுக்கப்படவேண்டும். விதி 56 (1)-ன் படி, பிரிவு 73-ன் கீழ் தகராறைத் தீர்த்து வைக்கப் பதிவாளருக்கு அனுப்பப்படும் தாவா எழுத்து மூலம் இருக்கவேண்டும். பிரிவு 72-ன் கீழ் வேலையில் அமர்த்தப்பட்ட சிறப்பு அலுவலர் வசமிருக்கும் சங்கங்களில், முன்னாள் நிருவாகக் குழு, முன்னாள் அலுவலர்கள், முன்னாள் ஊழியர்கள் முதலியவர்கள் மீது பிரிவு 73 (1)-ன் கீழ் தாவாக்களைத் தாக்கல் செய்யும் பொறுப்பை, சிறப்பு அலுவலர் தானே எடுத்துக்கொள்வது நல்லதல்ல என்று கருதப்படுகிறது. அத்தகைய செயல்களில் முடிந்தவரை தொடர்பான சங்கத்தின் பேரவைப் தீர்மானத்தால் குற்றச் சாட்டுப் பத்திரம் (Plaint) ஆதரிக்கப்படவேண்டும்.

ஒரு தகராறை மத்தியஸ்தத்திற்கு அனுப்பவேண்டும் என்று தீர்மானித்து ஒரு சங்கம் பதிவாளருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும். விண்ணபத்துடன் கீழ்க்கண்டவைகளைச் சங்கம் அனுப்பவேண்டும்.

(அ) தகராறை மத்தியஸ்த முடிவுக்கு அனுப்பவேண்டுமென்று ஊராட்சி அல்லது நிருவாகக் குழு அல்லது பேரவை செய்த தீர்மானத்தின் நகல். தவணை தவறியவரின் முழுப் பெயர், முகவரி, அவருடைய ஜமீன்தார்களின் முழுப் பெயர், முகவரி, அவர்கள் உயிருடன் இருக்கிறார்களா என்ற தகவலும் அல்லது இறந்திருந்தால் அவர்களுடைய வாரிசுகள் அல்லது சட்டப்படியான பிரதிநிதிகளின் பெயர்களும், முகவரியும் கொடுக்கப்பட வேண்டும்.

(ஆ) சங்கத்திற்குத் தவணை தவறிய பாக்கிதாரரால் எழுதிக் கொடுக்கப்பட்ட பத்திரத்தின் மூலம் (Original), எனினும், இந்தப் பத்திரத்தைத் தகராறு விசாரிக்கப்படும் சமயத்தில், முன்னிலைப்படுத்த அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

(இ) கடன் பதிவேட்டின் பகுதி நகல், சங்கத்தின் அலுவலரால் அது சரியென்று சான்றிடப்பட்டிருக்கவேண்டும்.

(ஈ) நிருணயிக்கப்பட்ட நமூவினுல் சங்கம் கோரியிருக்கும் தொகையைப் பற்றியும், அதன் தன்மையைப் பற்றியும் ஒரு விவரணம் (Statement).

(உ) பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட கட்டணங்கள். சங்கத்திற்கு ஒரு கடனுக்கு மேற்பட்ட கடன்கள் கொடுக்க வேண்டிய தவணை தவறிய பாக்கிதாரர்கள் விஷயத்தில், எல்லாக் கடன்களிலும் ஒரே பிணையாளர்கள் நின்றிருந்தாலும் அல்லது ஒரே சொத்து அடைமானம் செய்யப்பட்டிருந்தாலும் எல்லாக் கடன்களையும் ஒன்று சேர்த்து ஒரே தாவா தாக்கல் செய்யப் படலாம். இதர எல்லாச் சூழ்நிலைகளிலும், தனித்தனி தாவாக்கள் தாக்கல் செய்யப்பட்டு தனித்தனித் தீர்ப்புகள் வாங்கப்படவேண்டும்.

ஒரு நிருவாகக் குழுவின் தேர்தலைக் குறித்த, அல்லது ஒரு அலுவலரைக் குறித்த தகராறுகளில், அத்தகைய தேர்தல் முடிவு அறிவிப்புத் தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் அந்தத் தாவா பதிவாளருக்கு அனுப்பப்படவேண்டும் [விதி 56 (2)-ன் விலக்குக்கூறு]. இல்லாவிடில், அந்தத் தகராறு தீர்ப்புக்கு எடுத்துக் கொள்ளப்படக்கூடாது. அத்தகைய தேர்தல் முடிவு அறிவிப்புத் தேதிவரை அத்தகைய தேர்தல் தகராறு தாவா எடுக்கப்படக்கூடாது; அல்லது தீர்ப்புக்கு ஏற்றுக் கொள்ளப்படக் கூடாது [பிரிவு 73 (1)-க்கு விலக்குக்கூறு].

6. மத்தியஸ்த தாவாக்கள் எவரிடத்தில் தாக்கல் செய்யப்பட வேண்டும்? எவர் மத்தியஸ்த தாவாக்களை முடிவு செய்யக்கூடும்? (To Whom should a Refrence be filed and Who can decide a Refrence?)

பிரிவு 73 (1)-ன்கீழ் மத்தியஸ்த தாவாக்கள் பதிவாளருக்கு அல்லது பதிவாளருடைய அதிகாரங்களைச் செலுத்தும் நபருக்கு அனுப்பப்பட வேண்டும். பிரிவு 73-ன்கீழ் மத்தியஸ்த தாவாக்கள் பதிவாளருக்கு அல்லது பதிவாளருடைய அதிகாரங்களைச் செலுத்தும் நபருக்கு அனுப்பப்பட வேண்டும். பிரிவு 73-ன்கீழ் கூடுதலான பதிவாளர்களும், கூட்டுப் பதிவாளர்களும், துணைப் பதிவாளர்களும், சார் பதிவாளர்களும், ஒரு பதிவாளருடைய அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றனர். எனினும், சார் பதிவாளர்கள், பிரிவு 73 (1) (இ)-ன்கீழ் ரூ. 3,000/-க்கு மேற்படாத தொகை சேரவேண்டிய தகராறுகளைக் குறித்த

பணம் தொடர்பான கோரிக்கைகளைக் குறித்து மட்டும்தான் பதிவாளருடைய அதிகாரத்தைச் செலுத்த வேண்டும். சமுதாய அபிவிருத்தி வட்டாரங்களில், கூட்டுறவு விரிவாக்க அலுவலர்கள் (Extunsion Officers-Co-operation) பிரிவு 73 (1)-ன்கீழ் பிரதம விவசாய நாணயச் சங்கங்களின் பணம் தொடர்பான தகராறுகளைக் குறித்தும், பிரிவு 73 (1)-ன்கீழ் ரூ. 3,000/-க்கு மேற்படாத தொகைகள் அடங்கியிருக்கும் பணத் தகராறுகளைக் குறித்தும் மட்டும்தான் பதிவாளரின் அதிகாரத்தைச் செலுத்த முடியும். மீன்வளத் துறை, காதி கிராமக் கைத்தொழில் துறை (Khadi Department) முதலியவை போன்ற இதர அரசாங்கத் துறைகளில் பணியாற்றும் பல்வேறு ஈடான அலுவலர்களுக்கும் அதே மாதிரியான அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. (கூட்டுறவுத் துறை அலுவலர்களுக்கும் இதர துறைகளின் அலுவலர்களுக்கும் அதிகாரங்கள் ஒப்படைப்பைக் குறித்து விவரிக்கும் சட்டப் பிரிவு 3-ஐப் பார்க்கவும்) இந்த எல்லா அலுவலர்களுக்கும் அரசாங்கம் அதிகாரம் அளித்துள்ளபடி, பலவகைத் தகராறுகளை அனுப்பலாம். அல்லது அவ்வப்போது அரசாங்கத்தால் அதிகாரம் அளிக்கப்படும் இதர அலுவலர்களுக்கும் தகராறுகளை அனுப்பலாம்.

சட்டப்படி மேற்சொன்ன அலுவலர்கள், தகராறுகளைத் தீர்ப்பதற்கு அதிகாரம் பெற்றிருந்தாலும், எந்த அலுவலர்கள் தகராறு தாவாக்களை ஏற்றுக் கொண்டு தகராறுகளை முடிவு செய்யவேண்டும் என்பதைக் குறித்து அவ்வப்போது நிருவாக அறிவுரைகள் வெளியிடப்படுகின்றன. இந்த அலுவலர்களுக்குச் சட்டப்படியான அதிகாரங்கள் இருந்தாலும், நிருவாக அறிவுரைகள் எதற்காக வெளியிடப்படுகின்றனவென்றால் சிக்கலான தாவாக்களிலும் அல்லது தேர்தல் தகராறுகளிலும் அல்லது சங்கத்தின் நிருவாகக் குழு அல்லது அலுவலர்கள் மீது தொடரப்படும் தகராறுகளிலும் அவை உயர்நிலை அலுவலர்களாலும், தக்க அலுவலர்களாலும் விசாரிக்கப்படுவதை உறுதிப்படுத்துவதற்கே. தகராறுகளை இந்த அதிகாரிகள் தாங்களே முடிவு செய்வதற்கு அல்லது பிரிவு 73 (3)-ல் ஏற்படுத்தியபடி மற்றவர்களுக்குத் தகராறுகளை மாற்றுவதற்கும் அதிகாரங்கள் உண்டு. ஒரு மத்தியஸ்த தாவா கிடைத்தவுடன், பதிவாளர் அத்தகராறை தானே முடிவு செய்யலாம்; அல்லது அவர் தனக்குக் கீழ்ப்பட்ட எந்த நபருக்கும், அரசாங்கத்தால் அவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருந்தால், இந்தத் தகராறை முடிவு செய்வதற்கு அவருக்கு மாற்றலாம் [பிரிவு 73 (2) (அ)]. அல்லது பதிவாளர் ஒரு மத்தியஸ்தருக்கு அல்லது மத்தியஸ்தர்களுக்கு அந்தத்

த்கராறை முடிவு செய்வதற்கு அனுப்பலாம் [பிரிவு 73 (2) (அ)]. கூட்டுப் பதிவாளர்கள் அல்லது துணைப் பதிவாளர்கள் பிரிவு 73-ன் கீழ் ஒரு பதிவாளருடைய அதிகாரங்களைச் செலுத்தும்போது தாங்களே எல்லாக் கடினமானதும் சிக்கலானதுமான தாவாக்களை விசாரணை செய்யவேண்டும். மற்ற சாதாரண தாவாக்களை (பணத் தகராறுகள்) பிரிவு 73-ன் உட்பிரிவு 2 பகுதி (அ)-ன் கீழ் இச் செயலுக்காக அரசாங்கத்தால் அதிகாரம் அளிக்கப்பட்ட எந்த நபருக்கும் (சார் பதிவாளர்கள்) மாற்றலாம் அல்லது பிரிவு 72 (2)-ன் பகுதி (ஆ)-ன் கீழ் ஒரு மத்தியஸ்தர் அல்லது மத்தியஸ்தர்களுக்கு அனுப்பலாம். தகராறுகளுக்கு உண்டான கட்சியினர்கள் ஒரு மத்தியஸ்தர்கள் குழுவால் தகராறுகள் முடிவு செய்யப்படலாம் என்று வேண்டிக்கொண்டால், துணைப் பதிவாளர்கள் இந்த வேண்டுகோளுக்கிணங்கி தகராறுகளுக்குண்டான கட்சியினர் ஒவ்வொருவரையும் ஒரு மத்தியஸ்தரை நியமனம் செய்யும்படிக் கேட்டு, தானும் மூன்றுவது மத்தியஸ்தரை நியமிக்கலாம். துணைப் பதிவாளரால் நியமிக்கப்பட்ட மத்தியஸ்தர், அந்த மத்தியஸ்தர் குழுவிற்குத் தலைவராகச் செயல்பட்டு, தகராறை விசாரிப்பதற்கான காலத்தையும், இடத்தையும் நிருணயித்து தாவா தொடர்பான தேவையான கடிதப் போக்குவரத்தைச் செய்யலாம். விதி 56 (4) பல மத்தியஸ்தர்கள் நியமிக்கப்பட்டால், அவர்களில் பெரும்பான்மையானவரின் (Majority) கருத்து ஏற்றுக் கொள்ளப் படவேண்டும் [விதி 56 (6)]. பிரிவு 73 (1)-ன் பகுதி (இ)-ன் கீழ் வரும் தகராறுகளை அதாவது ஒரு சங்கம் அல்லது அதன் நிருவாகக் குழுவிற்கும் முன்னுள் நிருவாகக் குழு அலுவலர், முகவர் (Agent) அல்லது ஊழியர், அல்லது முன்னுள் ஊழியர் அல்லது இறந்துபோன அலுவலர், இறந்துபோன முகவர் அல்லது இறந்துபோன ஊழியரின் நியமிகள், வாரிசுகள் அல்லது சட்டப் படியான பிரதிநிதிகளுக்குமிடையே எழுகின்ற தகராறுகள் துணைப் பதிவாளர்களால் அல்லது உயர்நிலை அதிகாரிகளால் விசாரிக்கப் படவேண்டும். அத்தகைய தகராறுகள் வேறெந்த அலுவலர்கள் அல்லது மத்தியஸ்தர்களுக்கும் மாற்றப்படக்கூடாது. அவ்வண்ணமே, கூட்டுறவுத் துறையின் ஊழியர்களுக்கான கூட்டுறவுச் சங்கங்களால் தங்கள் உறுப்பினர்கள் மீது தொடரப் பட்ட தாவாக்கள்கூட விசாரிக்கப்படவேண்டும். பிரிவு 108-ன் கீழ், தீர்ப்புக்கு முன்பு நிபந்தனைக்குட்பட்ட சொத்து ஜப்தி (Condiitonal Attachment before Judgement) செய்யப்பட வேண்டுமென்று வேண்டிக்கொண்டு சங்கத்தால் தொடரப்பட்ட தாவாக்களையும் கூடத் துணைப் பதிவாளர்கள் தாங்களே முடிவு செய்வதும் விரும்பத்தக்கது.

தகராறுகளை முடிவு செய்வதற்கான அதிகாரம் அளிக்கப் பட்ட பதிவாளரும் மற்றும் இதர துறைகளின் அலுவலர்களும் தகராறுகளை முடிவு செய்யும்போது பதிவாளராகச் செயல்பட வேண்டுமே தவிர மத்தியஸ்தர்களாகச் செயல்படக் கூடாது. ஆகையால், பிரிவு 73-ன் உட்பிரிவு (2)-ன்பகுதி (அ)-ன் கீழ் தகராறுகளை முடிவு செய்வதில் மத்தியஸ்தர்களாகத் தங்களைப் பெயரிட்டுக் கொள்ளக்கூடாது. இந்த அலுவலர்கள் பதிவாள ராகத் தங்கள் அதிகாரங்களைச் செலுத்தி அல்லது இந்தச் செயலில் அரசாங்கத்தால் தங்களுக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களைச் செலுத்தி தகராறுகளை முடிவு செய்வார்கள். ஒரு மத்தியஸ்த தாவாவை இந்தப் பிரிவின் கீழ் அதிகாரம் அளிக்கப்பட்ட தனக்குக் கீழான ஓர் உத்தியோகஸ்தருக்கு மாற்றுதல் செய்யப் பதிவாளருக்கு அதிகாரமுண்டு. மத்தியஸ்த தாவாக்கள் உத்தியோகப்பற்றற்றவர்களுக்கு (Non Officials) அனுப்பப்பட்டால், அத்தகைய நபர்களுக்கு அவர்களை மத்தியஸ்தர்களாகப் பதிவாளர் தாவாக்களை அனுப்புகிறார். எனவே, அதிகாரம் அளிக்கப்பட்ட நபர்களுக்குத் தாவா மாற்றப் படுகிறது. மத்தியஸ்தர்களுக்கு இரண்டு சூழ்நிலைகளிலும், தாவா விண்ணப்பம் எழுத்துமூலம் செய்யப்படவேண்டும். மத்தியஸ்தர்களுக்குத் தாவா அனுப்பப்பட்டால், சாதாரண மாகத் துணைப் பதிவாளர்கள் தாவாக்களை முடிவு செய்ய வேண்டிய காலவரையரையை நிருணயிக்கிறார்கள். எந்தக் காரணத்திலாவது நிருணயிக்கப்பட்ட காலவரையரைக்குள் தாவாக்கள் முடிவு செய்ய முடியாவிட்டால் எழுத்தின்மூலம் காலநீட்டிப்பு கொடுக்கப்படுகிறது. அசாதாரணமான தாமதம் ஏற்படும் சூழ்நிலைகளில், துணைப் பதிவாளர்கள் தாவாக்களைத் திரும்பப் பெற்றுத் தாங்களே அவற்றை முடிவு செய்யக் கூடும்; அல்லது அவற்றைப் புதிய மத்தியஸ்தர்களுக்கு அனுப்பி வைக்கலாம். மத்தியஸ்த வேலையில், குறிப்பாகப் பிரதம விவசாய நாணயச் சங்கங்கள், நகர வங்கிகள், ஊழியர் சங்கங்கள் முதலிய சங்கங்களில், சாத்தியப்படுமளவு முழுவதற்கும் உத்தியோகப்பற்றற்ற கூட்டுறவாளர்களின் சேவை பொதுவாகப் பயன்படுத்தப்படுகிறது.

பிரிவு 73 (3)-ன் கீழும், விதி 56 (6) (ஆ)-ன் கீழும், கூட்டுறவுத் துறை அலுவலர்ளுக்கு முடிவு செய்வதற்காக மாற்றப் பட்ட தாவாக்களையும் மத்தியஸ்தர்களுக்கு அனுப்பப்பட்ட தாவாக்களையும் எந்தக் காரணத்தாலும் பதிவாளர் திரும்பப் பெற்று அத்தகைய தகராறுகளைத் தானே முடிவு செய்வதற்கும் அல்லது இந்தச் செயலில் தேவையான அதிகாரங்கள் வழங்கப்

பட்ட வேறு எந்த அலுவலர்களுக்கு மாற்றுவதற்கும் அல்லது மத்தியஸ்தர்களுக்கு அனுப்புவதற்கும் அல்லது எந்த அலுவலர்களிடமிருந்து அந்தச் தகராறுகள் திரும்பப் பெறப்பட்டனவோ அவர்களுக்கே முடிவு செய்வதற்கு மீண்டும் மாற்றவும் அல்லது எந்த மத்தியஸ்தர்களிடமிருந்து அவை திரும்பப் பெறப்பட்டனவோ அவர்களுக்கே முடிவு செய்வதற்காக மீண்டும் அனுப்புவதற்கும்கூடப் பதிவாளர் ஏற்பாடு செய்யலாம். விதி 56 (6)-ன் கீழ், பதிவாளர் பிரிவு 73 (1)-ன் கீழ் தொடரப்பட்ட தகராறில் தானுகவே திருப்தியடைந்தாலும் அல்லது இதன் தொடர்பான தகராறுக்குண்டான எந்தக் கட்சியினரால் தனக்குச் செய்யப்பட்ட விண்ணப்பத்தின் பேரில் திருப்தியடைந்தாலும், நீதி நலத்தை முன்னிட்டும், அல்லது தகராறை முடிவு செய்வதில் எந்த ஒரு நிருவாகத் துன்பத்தைச் சமாளிப்பதை முன்னிட்டும் அந்தத் தகராறைத் திரும்பப் பெறலாம். உதாரணமாக, தாவாக்கள் மாற்றப்பட்ட ஓர் அதிகாரி அதே உத்தியோகத்தில் தொடர்ந்திருந்தால் அவரிடமிருந்து தாவாக்களைத் திரும்பப் பெற்று மற்ற அதிகாரிகளுக்குப் பதிவாளர் அவற்றை மாற்றக் கூடும்; மற்றும் ஒரு மத்தியஸ்தர் தன் இடத்தை விட்டுத் தற்காலிகமாகப் போய்விட்டால் அவருக்கு அனுப்பப்பட்டு முடிவு செய்யப்படாமலிருக்கும் தகராறுகளை அவரிடமிருந்து திரும்பப் பெற்று இதர மத்தியஸ்தர்களுக்கு அனுப்பக்கூடும். மற்றும் ஒரு மத்தியஸ்தர் தனக்கு அனுப்பப்பட்ட தாவாக்களை முடிவு செய்வதற்குக் காலதாமதம் செய்தால் பதிவாளர் இந்த நடவடிக்கையை எடுத்து அந்தத் தாவாக்களைப் புதிய மத்தியஸ்தர்களுக்கு அனுப்பலாம். தாவாக்களை விரைவாக முடிவு செய்வதை வசதிப்படுத்துவதற்கும், சில தாவாக்கள் அலுவலர்களால் முடிவு செய்யப்படுவதை கட்சியினர்கள் மறுத்தாலும், ஒரே மத்தியஸ்தரால் தாவாக்கள் முடிவு செய்யப்படுவதைக் கட்சியினர் மறுக்கும் சில அபூர்வ சூழ்நிலைகளிலும் இந்த அதிகாரங்கள் தேவைப்படுகின்றன. இந்த அதிகாரங்களின் கீழ், தகராறுகளை அலுவலர்களாலும் மத்தியஸ்தர்களாலும் முடிவு செய்யப்படுவதற்கு அனுப்புவதையும், தகராறுகளை முடிவு செய்வதையும் ஒழுங்குபடுத்துவதற்குப் பதிவாளருக்கு உளத் தேர்வு இருக்கிறது. உட்பிரிவுகள் (2)-ன் கீழும் (3)-ன் கீழும் பிறப்பிக்கப்படும் தகராறுகளை மாற்றுதல், அனுப்புதல், திரும்பப் பெறுதல் அல்லது மீண்டும் மாற்றுதல் உத்தரவுகள் எல்லாவற்றையும் எதிர்த்து மேல் முறையீடு தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்குச் செய்யப்படக்கூடாது. அத்தகைய மன்றத்திற்குச் செய்யப்படும் மேல்

முறையீட்டிலிருந்து இவை விலக்கப்பட்டிருக்கின்றன. [பிரிவு 96 (1) (அ)-ன் பகுதி (11)-ஐப் பார்க்கவும்].

**7. இந்தப் பிரிவின் கீழ் அதிகாரமளிக்கப்பட்ட பதிவாளர், மற்ற அதிகாரிகள், மத்தியஸ்தர்கள் ஆகியோரின் அதிகாரங்களும், கடமைகளும் (Powers & Duties of Arbitrators)**

(1) ஒரு தகராறை முடிவு செய்யும் பதிவாளர் அல்லது மத்தியஸ்தர்கள், அல்லது மத்தியஸ்தர்கள் குழுவினர் அல்லது வேறு எந்த நபரும் 56 (5)-ன் கீழ் பிரமாணம் (Oath) செய்து வைக்கவும் (Administer), அழைப்பாணை (Summons) விடுத்து சாட்சிகள் உள்பட தொடர்புடைய எல்லாக் கட்சியினர்களும் வருகை தரவேண்டுமென்று விரும்பவும், தகராறுகளில் தொடர்பான எல்லாப் பதிவேடுகளையும் பத்திரங்களையும் சங்கத்தின் தலைமைச் செயலகத்தில் அல்லது முடிந்தவரை அதற்கு அருகாமையிலுள்ள வசதியான இடத்தில் முன்னிலைப்படுத்தும்படி விரும்பியும் கோரலாம். முடிந்தவரை வழக்குக்குண்டான கட்சியினர், அவர்களே தங்கள் சொந்தச் செலவில் சாட்சிகளைக் கொண்டுவரவேண்டும். சில நபர்களைச் சாட்சிகளாக விசாரிப்பதற்கு விரும்பும் கட்சியினர் அத்தகைய நபர்களை அழைப்புக் கட்டளையின்றி அவர் முன்னிலைப்படுத்த முடியாமலிருந்தால் தகராறை முடிவு செய்யும் நபரால் அழைப்புக் கட்டளையை வெளியிடும்படி ஏற்பாடு செய்துகொள்ளலாம். அவ்வாறு சாட்சிகளை வரவழைப்பதற்குண்டான பிரயாணப்படி முதலியவற்றை முன்னதாகவே தெரிவித்துவிடவேண்டும். இத்தகைய சூழ்நிலைகளில் கொடுக்கவேண்டிய பயணப்படி விகிதம் எந்த விதிகளிலும் நிருணயிக்கப்படவில்லை, உள்ளூர் நிலைமைக்கேற்ப அது வேறுபடும்.

(2) ஒரு தகராறை முடிவு செய்யும் பதிவாளர், அல்லது தகராறுக்குண்டான கட்சியினரின் விண்ணப்பத்தின் பேரில், தகராறில் ஈடுபட்ட அசையாச் சொத்தில் அக்கறையுள்ள நபரை அத்தகைய நபர் உறுப்பினராக இருந்தாலும் அல்லது உறுப்பினராக இல்லாவிட்டாலும், தகராறுக்குண்டான கட்சியினராகச் சேர்த்துக் கொள்ளலாம். அப்படிச் சேர்க்கப்பட்ட நபர் தகராறில் ஈடுபட்ட சொத்தின் அளவுக்கு மட்டும் தான் பொறுப்பாளியாகச் செய்யப்படுகிறார் [பிரிவு 73 (5)].

(3) விதி 56 (3)-ன்கீழ் பதிவாளர், மத்தியஸ்தர் அல்லது மத்தியஸ்தர்கள், அல்லது ஒரு தகராறை முடிவு செய்யும் இதர நபர்கள், தங்கள் சொந்த இயக்கத்தினாலோ அல்லது தகராறுக்-

குண்டான கட்சியினர் ஒருவரின் விண்ணப்பத்தின் பேரிலோ தகராறில் ஈடுபட்ட எந்தச் சொத்தையும் பரிசோதனை செய்ய லாம். ஆனால், அத்தகைய சோதனை, தகராறுக்குண்டான இரண்டு கட்சியினர்களுக்கும் முன் அறிவிப்புக் கொடுக்காமல், செய்யப்படக் கூடாது. அத்தகைய அதிகாரங்கள் அவருக்கு இல்லையானல், சில சமயங்களில் தகராறில் அவர் செய்யும் முடிவு, தீர்ப்பு, பலனற்றதாகிவிடும்; அல்லது உண்மையில் நீதி செய்வதாக அமையாது.

(4) பிரிவு 73 (6)-ன்கீழ் பதிவாளர் நீதியளிக்கும் பொருட்டு தனக்குத் தகுதி என்று தோன்றும் வகையில் இடைக்கால உத்தரவுகளையும் (Interlocutory Orders) கூடப் பிறப்பிக்கலாம்.

(5) விதி 56 (அ)-ன்கீழ் ஒரு தகராறை அனுப்பிய நபர் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட கட்டணத்தை முன்னதாகவே செலுத்தவேண்டுமென்று பதிவாளர் விரும்பலாம். இதற்காகப் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட கட்டணங்களும் கீழே தரப் பட்டிருக்கின்றன.

(i) பணத் தகராறுகளைக் குறித்த பிராது (Plaint) ஒன்றுக்கு, தகராறுக்கான தொகை ரூ, 150/-க்கு மேற்பட்டால் கட்டணம் ரூ. 1/-

(ii) கீழே குறிக்கப்பட்ட மூன்றாவது இனத்தில் குறிப்பிடப் பட்ட புனராய்வு மனுக்கள் தவிர மற்ற எல்லாப் புனராய்வு மனுக்கள் (Revision Petitions) பேரில் கட்டணம் ரூ. 1/-

(iii) பணச் சார்பற்ற தகராறுகளைக் (Non-Monetary Disputes) குறித்த ஒவ்வொரு பிராதுக்கும் அதன் பேரில் ஒவ்வொரு புனராய்வு மனுக்கும் கட்டணம் ரூ. 100/-

(iv) ஓர் உறுப்பினரிடமிருந்து, நில ஒப்படைப்பு நிபந்தனை களை மீறியதற்காக அல்லது நிபந்தனைகளைக் கடைப்பிடிக்காததற் காகச், சங்கம் திரும்ப எடுத்துக் கொண்ட நிலத்தைச் சுவாதீனம் செய்து கொள்வதைக் குறித்த தகராறுகள் தொடர்பான பிராது ஒன்றுக்குக் கட்டணம் ரூ. 1/-

பதிவாளர் அல்லது தகராறுகளை முடிவு செய்யும் இதர அதிகாரிகள், விதி 56 (7) (இ)-ன் கீழும் விதி 56 (7) பகுதி (அ)-ன் கீழும் செலுத்தப்படவேண்டிய கட்டணங்கள் முழுவதையும், அல்லது அவற்றில் எந்த பாகத்தையும் நீக்குவதற்கு உளத்தேர்வு உடையவர்கள். எனினும், எந்தச் சூழ்நிலையிலும் ரூபாய் 150/-க்கு மேற்பட்ட மதிப்புள்ள ஒவ்வொரு பணத் தகராறுக்கும்

பயன்படுத்திக் கொள்ளப்பட்ட கட்டணம் ரூ 1/-ஐத் திருப்பிக் கொடுக்கக்கூடாது.

8. தாவாக்களை முடிவு செய்வதில் கையாளவேண்டிய நடைமுறை (Procedure for the disposal of References)

(i) தாவாக்களைப் பரிசீலனை செய்தல்: பிரிவு 73-ன் கீழ் தாவாக்கள் கிடைத்தவுடன் அந்தத் தாவாக்கள் பிரிவு 73-ன் சரத்துகளின் கீழ் வருகின்றனவா என்பதைப் பரிசோதனை செய்ய வேண்டும். மேலும்,

(1) தகராறு பிரிவு 73-ன் உட்பிரிவு (1)-ன் பகுதிகள் (அ) முதல் (இ) வரை குறிக்கப்பட்ட நபர்களுடைய தகராறு என்றும்,

(2) தகராறுகளுக்கான வழக்கு மூலம் (Cause of Action) இருக்கிறதா என்றும் ஒரு தகராறு நிச்சயமாக இருக்கிறது என்றும் தெரிந்துகொள்வது தேவை.

(3) அந்தத் தகராறு நிருவாகக் குழு அமைப்பு அல்லது சங்கத்தின் தொழில் அல்லது நிருவாகத்தைக் குறித்ததென்றும் பதிவாளர் திருப்தி செய்து கொள்ளவேண்டும். உதாரணமாக, ஒரு சங்கத்தின் சார்பாக வழக்கறிஞராகத் தோன்றும் ஓர் உறுப்பினரின் நடத்தை மத்தியஸ்த தாவாவில் அடங்கியுள்ள செய்தியாக இருக்கக்கூடாது. ஏனென்றால், அவர் ஓர் உறுப்பினர் என்ற நிலையில் செயல்படவில்லை. மற்றும், ஓர் உறுப்பினரல்லாதவர்களுக்குச் சட்டவிரோதமாகக் கொடுக்கப்பட்ட ஒரு கடன், பிரிவு 73-ன் கீழ் செய்யப்பட்ட தாவாவில் அடங்கியதாகச் செய்யப்படக் கூடாது. பிரிவு 73 (4)-ன் கீழ், ஒரு நபர் ஒரு சங்கத்தின் உறுப்பினராக இருக்கின்றாரா அல்லது இருந்தாரா என்பதையும், முடிவுக்கு அனுப்பப்பட்ட ஒரு தகராறு ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவின் அமைப்பு அல்லது தொழில் அல்லது நிருவாகத்தைத் தொடுகின்ற தகராறாக இருந்ததா என்பதையும் முடிவு செய்வதற்குப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிறார். இதன் தொடர்பாகப் பதிவாளரின் முடிவு, தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்குச் செய்யப்படும் மேல் முறையீடுகளிலிருந்து விலக்கப்பட்டிருக்கிறது. [பிரிவு 96 (1) (அ)-ல் உட்பிரிவு 1-ஐப் பார்க்கவும்]. எனவே, தகராறு பிரிவு 73-க்குள் வருகிறது என்பதைத் திருப்தி செய்து கொண்ட பிறகுதான் பதிவாளர் தாவாவை ஏற்றுக் கொண்டு நடவடிக்கை எடுக்க முனையலாம். தகராறு தாவாவை ஏற்றுக் கொள்வதற்கு முன்பு, தகராறு தொடர்பாக எந்த நிருவாக விசாரணையை அல்லது ஆரம்ப விசாரணையை அவர் நடத்தக் கூடாது.

சங்கங்களால் தாக்கல் செய்யப்பட்ட குறைபாடுகளுள்ள பிராதைச் சங்கங்களுக்குத் திருப்பி விடவேண்டும். குறைபாடுகளைச் சரி செய்த பிறகு, ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் அத்தகைய பிராதுகள் திரும்பவும் பதிவாளருக்குச் சமர்ப்பிக்கப்படவேண்டும். குறிப்பிட்ட தேதிக்குள் பிராதுகளைத் திரும்பவும் பதிவாளருக்கு அனுப்பத் தவறிய காரணத்தால், பிராதுகள் காலாவதியாகி, அதனுல் சங்கங்களுக்கு விளையும் எந்த நட்டத்திற்காகவும் தொடர்புடைய சங்கத்தின் நிருவாகிகள் சொந்தமாகப் பொறுப்பாளிகளாகக் கருதப்படுவர். தாவாக்களையும் குறிப்பாக அவற்றுடன் தாக்கல் செய்யப்படும் எந்தப் பத்திரங்களையும் அல்லது மதிப்புள்ள ஆதாரங்களையும் பெற்றதற்குப் பதிவாளர் ரசீது கொடுக்கவேண்டும். ஒவ்வொரு சூழ்நிலையிலும், தாக்கல் செய்யப்பட்ட மதிப்புள்ள ஆதாரங்களின் போதுமான விவரங்கள் கொடுக்கப்படவேண்டும். அப்போது தான் சங்கம் பத்திரங்களுக்குப் பதிலாக இந்த ரசீதுகளைத் தன் வசம் வைத்துக் கொண்டு கடன் பேரேட்டில், பத்திரங்கள் பதிவாளர் முடிவுக்கு அனுப்பப்பட்டுள்ளன என்ற ஒரு குறிப்பை எழுதி வைக்கலாம். இந்த முன்னெச்சரிக்கை மிகவும் தேவையாக இருக்கிறது. ஏனென்றுல், தணிக்கையாளர் தன் அறிக்கையின் போது எல்லாப் பத்திரங்களையும் சரிபார்க்கவேண்டும். சங்கம் பத்திரங்களை முன்னிலைப் படுத்தாமலும் அல்லது பத்திரங்கள் என்னவாயின என்பதைக் காண்பிப்பதற்கு எந்த ஒரு சான்றையும் முன்னிலைப்படுத்தாமலும் இருந்தால், தணிக்கையில் தாமதமும் தொல்லைகளும் விளையும்.

(ii) **அழைப்புக் கட்டளைகளை வெளியிடுதல் :** தகராறை ஏற்றுக்கொண்டவுடன், பதிவாளர் அல்லது தகராறுகளை விசாரிக்கும் இதர அலுவலர் அல்லது மத்தியஸ்தர் அல்லது மத்தியஸ்தர்கள் கட்சியினர்களுக்கு அழைப்புக் கட்டளைகள் வெளியிடவேண்டும். அழைப்புக் கட்டளைகளைச் சேர்ப்பிக்கும் முறை விதி 57-ல் விளக்கப்பட்டிருக்கிறது. இந்த விதியில் கூறப்பட்டிருக்கும் முறை உண்மையாகவே சட்டத்தின்கீழ் வெளியிடப்பட்ட எல்லா அழைப்புக் கட்டளைகளுக்கும் பொருந்தும். சுருக்கமாக அந்த முறை பின்வருமாறு.

(அ) வெளியிடப்பட்ட ஒவ்வோர் அழைப்புக் கட்டளையும் எழுத்துமூலம் இருக்க வேண்டும். அதை வெளியிட்ட அலுவரின் கையெழுத்தும் அவருடைய அலுவலக முத்திரையும் அதை மெய்ப்பிக்கவேண்டும். அது அத்தகைய அலுவலராலும் அல்லது இச் செயலுக்காக அவரால் எழுத்துமூலம் அதிகாரம் பெற்ற எந்த நபராலும் கையெழுத்திடப்படவேண்டும். அழைப்புக் கட்டளையில் அழைக்கப்பட்ட நபர் அந்த அதிகாரிக்கு முன்பு ஒரு

குறிப்பிட்ட இடத்திலும் நேரத்திலும் வரவேண்டுமென்றும், அவருடைய வருகையானது சான்று பகர்வதற்காகவும் அல்லது ஒரு பத்திரத்தை முன்னிலைப் படுத்துவதற்காகவும் அல்லது இரண்டு செயல்களுக்காகவும் என்று குறிப்பிடப்படவேண்டும். கோரப் படுகின்ற குறிப்பான பத்திரம் அழைப்புக் கட்டளையில் சரியான திருத்தத்துடன் வருணிக்கப்படவேண்டும் [விதி 57 (1)].

(ஆ) அழைப்புக் கட்டளை அனுப்பப்பட்ட கட்சியினர் மீது பிரிவு 73 (1)-ன் கீழ் மத்தியஸ்த தாவா செய்யப்பட்டிருந்தால், அழைப்பாணையுடன் தாவாவின் ஒரு நகலும் அனுப்பப்பட வேண்டும் [விதி 57 (2)].

(இ) சான்று பகருவதற்கு அழைக்கப்படாமல், ஒரு பத்திரத்தை முன்னிலைப் படுத்துவதற்கு மட்டும் அழைக்கப்பட்ட எந்த நபரும், அதை முன்னிலைப் படுத்துவதற்குச் சொந்தமாகத் தானே வருவதற்குப் பதில், அத்தகைய பத்திரத்தை முன்னிலைப் படுத்துவதற்கு ஏற்பாடு செய்துவிட்டால் அவர் அழைப்பாணையை நிறைவேற்றியவராகக் கருதப்படுவார்.

(ஈ) எந்த நபருக்கும் அழைப்பாணை கீழ்க்கண்ட வகைகளில் ஏதாவது ஒன்றில் சேர்க்கப்படலாம்.

(i) அத்தகைய நபருக்குக் கொடுப்பதன் மூலமும் அல்லது முறைப்படி ஒப்படைத்து (Tendering) விடுவதன் மூலமும்.

(ii) அத்தகைய நபர் காணப்படாவிட்டால், அவர் கடைசியாக வசித்திருந்த அல்லது தொழில் செய்திருந்த இடத்தில் விட்டு விடுவதன் மூலமும் அல்லது அவருடைய குடும்பத்தின் வயதுவந்த ஒரு நபருக்குக் கொடுப்பதன் மூலமும் அல்லது முறைப்படி ஒப்படைத்து விடுவதன் மூலமும்.

(iii) அத்தகைய நபருடைய முகவரி, பதிவாளருக்கு அல்லது இதர அதிகாரம் பெற்ற நபருக்குத் தெரிந்திருந்தால் அத்தகைய நபருக்குப் பதிவு அஞ்சல்மூலமும் அல்லது

(iv) மேற்சொன்ன எந்தச் சாதனங்களும் இல்லையானல், அழைப்புக் கட்டளையை அத்தகைய நபர் கடைசியாக வசித்த அல்லது வியாபாரம் செய்த இடத்தின் ஒரு வெளிப்படையான பகுதியில் ஒட்டுவதன் மூலமும் [ விதி 57 (4) ].

(உ) அழைப்பாணையைப் பெற்றுக்கொண்ட நபர், சேர்ப்பிக்கும் அலுவலர் அதை நேராக அவருக்குக் கொடுத்தாலும் அல்லது அழைப்பாணையின் நகலைப் பிரதிவாதிக்கு அல்லது அவருடைய முகவருக்கு அல்லது அவர் சார்பாக இன்னொரு

நபருக்கு நேராக ஒப்படைத்தாலும், பெற்றுக் கொண்டதற்குண்டான ரசீதில் கையெழுத்திட வேண்டும். அழைப்பாணையின் நகல் ஒரு நபருக்கு நேராகக் கொடுத்தாலும் அல்லது ஒப்படைத்தாலும் அந்த நபரை அழைப்பாணையின் மூலத்தின்மீது பெற்றுக் கொண்டதற்கு ஒப்புதல் மேல் எழுத வேண்டுமென்று (Endorsement) சேர்ப்பிக்கும் அலுவலர் விரும்பலாம் *[விதி 57 (5)]*.

(ஊ) சேர்ப்பிக்கும் காலத்தையும் முறையையும் மேலெழுதுதல் : உப-விதி 5-ன் கீழ் அழைப்புக் கட்டளை சேர்ப்பிக்கப்படும் எல்லாச் சூழ்நிலைகளிலும் சேர்ப்பிக்கும் அலுவலர் அழைப்பாணையின்மீது எந்த நேரத்தில் எந்த முறையில் அழைப்பாணை சேர்ப்பிக்கப்பட்டது என்றும், அவ்வாறு சேர்ப்பித்ததைச் சாட்சியாகப் பார்த்து அழைப்பாணையை வாங்கிய நபரை அடையாளப் படுத்தும் நபரின் பெயரையும் முகவரியையும் மேலெழுதி அல்லது மேலெழுதச் செய்து அல்லது அழைப்பாணை மூலத்துடன் ஓர் அறிக்கையை அனுப்பவேண்டும் *[விதி 57 (6)]*.

(எ) அழைப்பாணை சேர்ப்பிக்கப்படவேண்டிய நபர் ஓர் அரசாங்க அலுவலர் அல்லது இரயில்வே நிறுவனத்தின் ஊழியராக அல்லது உள்ளாட்சித்துறை அலுவலராக இருந்தால், அழைப்பாணையை வெளியிடும் அலுவலர், தனக்குச் சரி அல்லது வசதியானதென தோன்றினால் அதைப் பதிவு அஞ்சல் மூலம் அத்தகைய நபருக்கு அவர் வேலை செய்யும் அலுவலகத்தின் தலைவருக்குச் சேர்ப்பிப்பதற்காக அனுப்பி வைக்கலாம். அதற்கு அஞ்சல் ரசீது வாங்கப்படவேண்டும். அப்படி அனுப்பும்போது அத்தகைய நபர் தன்னுடன் வைத்துக் கொள்வதற்கு அழைப்பாணையின் நகல் ஒன்றையும் அனுப்பி வைக்கவேண்டும் *[விதி 57(7)]*.

பதிவு அஞ்சல் மூலம் அனுப்பப்பட்ட அழைப்பாணைகள் கட்சியினர்களால் மறுக்கப்பட்டாலும் அவ்வாறு அஞ்சல் துறை ஒரு மேல் எழுத்தைக் கொடுத்தாலும் அழைப்பாணை சரியாகச் சேர்க்கப்பட்டதாகக் கருதப்படும். ஓர் இடத்தில் அழைப்பாணையை ஒட்டி வைக்கும் சூழ்நிலையில், அழைப்பாணையைச் சேர்ப்பிக்கும் நபர் முடிந்த வரை அழைப்பாணையைச் சேர்ப்பித்த முறையைக் குறித்து உள்ளூரில் சில மதிப்புக்குரிய நபர்களுடைய சான்றுக் குறிப்பைப் பெறவேண்டும். அழைக்கப்பட்ட கட்சியினர், தகராறை விசாரணை செய்யும் நபரின் முன்பு தேவையற்ற அசௌகரியமும் தாமதமுமில்லாமல் வருகை புரிவதை வசதிப்படுத்தவும், கட்சியினர்களுக்குக் காலத்தில் கட்டளைகள் சேர்ப்பிக்கப்

படுகின்றன என்பதை உறுதிப்படுத்தவும்கூட போதிய கவனம் செலுத்தப்படவேண்டும். தொடர்பான எல்லாக் கட்சியினர்கள் மீதும் விசாரணை தேதிக்கு முன்பு அழைப்பாணைகள் சரிவரச் சேர்ப்பிக்கப்படாமலிருந்தால், தகராறின் விசாரணை வேறு ஒரு தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டு அடுத்த விசாரணைக்குக் காலத்தில் புதிய அழைப்பாணைகள் வெளியிடப்படவேண்டும். முதல் விசாரணையின்போது வருகை புரிந்து கட்சியினர் அடுத்த விசாரணையின்போது வருகை தருவதாக எழுத்துமூலம் ஓர் உறுதி மொழி அளித்தால் அடுத்த விசாரணைக்காக மீண்டும் அழைப்பாணை அவருக்குச் சேர்ப்பிக்கவேண்டிய தேவையில்லை. முடிந்த வரை விசாரணை ஒத்தி வைப்பு தவிர்க்கப்படவேண்டும்.

(iii) சான்று பகர்வதை எழுத்துருவில் குறித்து வைத்தல்: பதிவாளர் அல்லது தகராறை முடிவு செய்யும் இதர நபர் அல்லது மத்தியஸ்தர்கள் கட்சியினரின் சான்றுரையையும் அல்லது வாக்கு மூலத்தையும் (Deposition) வருகை தரும் சாட்சிகளின் சாட்சியத்தையும் ஆங்கிலத்தில் அல்லது தமிழில் அல்லது தகராறுக்குண்டான இரு கட்சியினர்களுக்கும் தெரிந்த மாநில மொழியில் ஒரு சுருக்கமான குறிப்பில் பதிவு செய்து அல்லது பதிவு செய்ய ஏற்பாடு செய்து அந்தக் குறிப்பைக் கட்சியினர் களுக்குப் படித்துக் காட்டியும் தேவையானல் அவர்களுக்கு மொழி பெயர்த்தும் அந்தக் குறிப்பை அவர்கள் ஒப்புக் கொண்ட தற்கு அடையாளமாக அவர்களுடைய கையெழுத்தை வாங்க வேண்டும். மேலும், சான்றுரை தங்களால் எடுக்கப்பட்டது அல்லது தங்களுக்கு முன்பு எடுக்கப்பட்டது. என்பதைத் தெரி விக்கும் பொருட்டு அந்த அதிகாரிகள் அந்தக் குறிப்பில் கையெழுத்திட்டு உறுதியளிக்கவேண்டும். அவ்வாறு பதிவு செய்யப்பட்ட சான்றுரையையும் கட்சியினர்களால் முன்னிலைப் படுத்தப்பட்ட பத்திரத் தொடர்பான சாட்சியத்தையும் ஆலோசித்த பிறகு தான் ஒரு முடிவு அல்லது தீர்ப்பு, சூழ்நிலைக் கேற்றாற்போல் அளிக்கவேண்டும். அதில் முடிவுக்கான காரணங் களையும் எடுத்துக் காட்டி, தீர்ப்பாணைகளை எழுதுவதற்கு தேவைப் படும் மெய்மைகளை அல்லது பொருண்மைகளையும் (Facts) விளக்கிக் கூறவேண்டும் [விதி 56 (6)]. மத்தியஸ்தர்கள் எல்லாச் சான்றுரை களையும் இரு கட்சியினர்கள் முன்னிலையில் விசாரிக்கவேண்டும். எதிர்க் கட்சியினர் வராத சமயத்தில், ஒரு கட்சியினரையோ அல்லது சாட்சியையோ அவர் விசாரிக்காமல் இருக்கவேண்டும். எந்த ஒரு கட்சியினரும் தன் சாட்சியத்தை நிறுத்தி வைத்தாலும் அல்லது அழைக்கப்படும்போது வரத் தவறினாலும் தகராறை விசாரிக்கும் நபர் அவர்களில்லாமலேயே ஒரு தலையாகத் (Ex-Parte)

தகராறைத் தீர்ப்பதற்கு முனையலாம் [விதி 56 (6)]. எனினும், அவர் அழைப்பாணையைக் கட்சியினர்களுக்கு அனுப்பும்போது கட்சியினர்கள் வரத் தவறினால் ஒரு தலையான நடவடிக்கை எடுக்க நேரிடும் என்று எச்சரிக்கை செய்யவேண்டும்.

(iv) **தீர்ப்புகளைப் பிறப்பித்தலும் அவைகளைத் தெரிவித்தலும் :** தீர்ப்புகள் பிறப்பிப்பதைக் குறித்து கீழ்க்கண்ட விவரக் கூற்றுகள் (Points) குறிக்கப்படவேண்டும். கட்சிகளை விசாரித்து அவர்களின் வாக்கு மூலங்களைப் பதிவு செய்த பின்னர், முடிவுக்கான காரணங்களைக் காட்டி ஒரு தீர்ப்பு (Judgement) எழுதப்பட வேண்டும். அளிக்கப்பட்ட முடிவு அல்லது தீர்ப்பு எழுதப்பட வேண்டும் [விதி 56 (6)]. கடன் தகராறுகள் போன்ற எளிய நிலைகளில், முடிவைக் குறித்தும், ஒரு டிக்கரி வெளியிடப்பட்டதைக் குறித்தும் தகவல்தாள் வரிசைத் தொகுப்பில் (File) ஒரு குறிப்பு வைக்கப்படவேண்டும். தீர்ப்பு அளிக்கப்பட்ட அதே நாளில், தீர்ப்புக்கு இணங்கத் தீர்ப்பாணை வெளியிடப்பட வேண்டும். இயன்றபோதெல்லாம், கட்சியினர் வந்திருந்தால் அவர்களுக்குத் தீர்ப்பு கூறப்பட வேண்டும். தீர்ப்பாணையின் ஒரு நகல் வாதிக்கு இலவசமாகக் கொடுக்கப்படவேண்டும். மேலும், இயன்றபோது தீர்ப்பாணைகள் வெளியிடப்பட்டதன் அறிவிப்பைப் பிரதிவாதிகளுக்கு நேரில் கொடுத்து அவர்களுடைய ரசீதைப் பெற வேண்டும். மற்ற நேரங்களில், பதிவாளர் அந்த அறிவிப்பை அஞ்சல் மூலம் அனுப்பலாம். தகராறு தாவாக்கள் மத்தியஸ்தர்களால் முடிவு செய்யப்படும்போது, அவர்கள் தகவல்தாள் வரிசைத் தொகுப்புகளைப் பதிவாளருக்கு அனுப்பவேண்டும். அவற்றைப் பதிவாளர் பரிசீலனை செய்து தீர்ப்பாணைகள் அல்லது தீர்ப்புகளின் நகல்களைத் தொடர்பான கட்சியினருக்கு அனுப்ப வேண்டும். தீர்ப்பாணை அறிவிப்பு பிரதிவாதிகளுக்கு நேரில் கொடுக்கப்படாதபோது அரசாங்கச் செலவில் அவர்களுக்கு அஞ்சல் மூலம் அவை அனுப்பப்பட வேண்டும்.

(v) பதிவாளர், மத்தியஸ்தர், அல்லது தகராறை முடிவு செய்யும் இதர நபரின் முன் நிகழும் நடவடிக்கைகளில் வழக்கறிஞர்கள், கட்சியினர்களுக்குப் பிரதிநிதிகளாகத் தோன்றுவதற்கு, அவர்களுக்கு உரிமை கிடையாது என்று விதி 56 (8)-ல் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், நடைமுறையில் முக்கியமானதும் சிக்கலானதுமான தாவாக்களில், வழக்கறிஞர்கள் தோன்றுவதற்கு அனுமதிக்கப்படலாம். அவ்வாறு வழக்கறிஞர்கள் தங்கள் முன்பு தோன்றுவதால் அது தாவாக்களைத் துரிதமாகவும் எளிதாகவும் முடிவு செய்வதற்கு உதவியாக இருக்கும் என்று தகராறை முடிவு செய்யும் நபர் கருதினால்

அவ்வாறு அனுமதிக்கலாம். இது தகராறை விசாரிக்கும் நபர்களுடைய உளத்தேர்வுக்கு முழுவதும் விடப்பட்டிருக்கிறது.

தகராறுகளை முடிவு செய்யும் பதிவாளர் அல்லது மத்தியஸ்தர் அல்லது இதர நபர்கள் கவனிக்கவேண்டிய பொதுச் சட்டத்தின் சில முக்கியப் பொருள்களைக் குறித்துக் கீழ்க்கண்ட விவரக் கூற்றுகள் குறிக்கப்படவேண்டும்.

*(1)* இறந்துபோன கடன் வாங்கினவர்களின் வாரிசு மீது சொந்த தீர்ப்பாணைகள் கொடுக்கப்படக்கூடாது. அசையாச் சொத்துகள் சங்கத்திற்கு ஆதாரமாக அடைமானம் வைக்கப் பட்டிருக்கும் சூழ்நிலைகளில், அத்தகைய சொத்துகள் மீது தீர்ப்பாணைகள் கொடுக்கப்படலாம். ஆனால், இறந்துபோன கடன் வாங்கியவர்களின் வாரிசுகளின் மீது தனிப்பட்ட சொந்த தீர்ப்பாணைகள் கொடுக்கப்படக்கூடாது. ஓர் இறந்துபோன உறுப்பினரின் கடன் பாக்கிகளைக் குறித்து அவருடைய சட்டப் படியான பிரதிநிதியின் பொறுப்பு அந்தப் பிரதிநிதியின் கைவசம் இருக்கும் விற்பனை செய்யப்படாத இறந்த நபரின் சொத்து வரை தான் நீடிக்கும். ஆகையால், இறந்துபோன கடன் வாங்கினவர் களின் வாரிசுகள் மீது அவர்கள் வசமிருக்கும் இறந்த நபரின் சொத்துகள் அளவுக்கு மட்டும் தான் தீர்ப்பாணைகள் பிறப்பிக்கப் படலாம்.

*(2)* கூட்டு இந்துக் குடும்பங்களின் நிருவாகிகள் சங்கத்தின் உறுப்பினர்களாகக் குடும்ப நன்மைக்காக அடைமானக் கடன்கள் வாங்கினால் அடைமானச் சொத்தில் அக்கறை வைத்திருக்கும் உறுப்பினரல்லாத நபர்கள் சில சமயங்களில் அடைமானப் பத்திரம் நிறைவேற்றுதலில் சேருகிறார்கள். உறுப்பினரல்லாத அத்தகைய சம நிறைவேற்றுபவர்களைப் (Co-Executors) பிரதிவாதி களாக மத்தியஸ்த நடவடிக்கைகளில் சேர்த்துக் கொள்ளத் தேவையில்லை. கூட்டு இந்துக் குடும்பத்தின் நிருவாகிகள் குடும்பச் சொத்தில் தனக்கிருக்கும் சொந்த அக்கறை மட்டு மல்லாமல் வாங்கிய கடன்கள் குடும்ப நன்மைக்காக இருந்தால் குடும்பத்தின் மற்ற உறுப்பினர்களுடைய அக்கறையைக் கூட அடைமானம் செய்வதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார். அத்தகைய உறுப்பினர் அடைமானப் பத்திரத்தில் குடும்ப நிருவாகிகளாக வருணித்துக் கொண்டாலும் அவர் மீது வழங்கப் பட்ட தீர்ப்பாணையை நிறைவேற்றும்போது அடைமானம் செய்யப்பட்ட சொத்தின் மீது சங்கம் நடவடிக்கை எடுக்க உரிமை பெற்றிருக்கிறது. ஆனால். அடைமானப் பத்திரத்தில்

கடன்கள் குடும்ப நலத்திற்காக வழங்கப்பட்டன என்று சொல்லப் பட்டிருக்கவேண்டும்.

(3) பதிவாளருக்கு அல்லது அவரால் அமர்த்தப்பட்ட மத்தியஸ்தர்களுக்குப் பிரிவு 73-ன் கீழ், காப்பாளர்களை (Guardians) அமர்த்த அதிகாரம் கிடையாது. எனினும், சிவில் நீதி மன்றங்களால் அமர்த்தப்பட்ட காப்பாளர்களை அவர்கள் ஒப்புக் கொள்ளலாம். காப்பாளர்கள் அமர்த்தப்பட வேண்டுமானால், கட்சியினர்கள் சிவில் நீதி மன்றங்களுக்குப் போகவேண்டும்.

(4) பதிவாளர் அல்லது தகராறு தாவா அனுப்பப்பட்ட நபர்கள் அல்லது மத்தியஸ்தர்கள் தகராறுகளை, நீதி, அறம், நியாயம், நல்ல மனசாட்சி இவற்றிற்கு ஒத்தவாறு, (Justice, Equity and Good Conscience) முடிவு செய்ய வேண்டும் [விதி 56 (6)]. அதாவது ஒரு தகராறை முடிவு செய்வதில் அந்த அலுவலர், இரண்டு கட்சியினர்களுக்குமிடையே நீதியை வழங்குவதற்காக, நீதி மன்றங்களைவிட அதிகமான சுயேச்சையைக் கூடப் பெற்றிருக்கிறார். அவர் எல்லாச் செயல்களிலும் நியாய அம்சங்களை (moral aspects) ஆலோசனை செய்து அற அடிப்படையிலும் நல்ல மனசாட்சிக்கு ஒப்பவும் தன் முடிவைச் செய்ய வேண்டும்.

(5) இந்திய சான்றுச் சட்டத்தின் (Indian Evidencc Act) 1872 (பிரிவு 1) விதிகள் ஒரு மத்தியஸ்தர் முன்பு நிகழும் நடவடிக்கைகளுக்குப் பிரயோகிக்கப்படுவதில்லை. அவர் சாட்சியத்தை அனுமதிப்பதில் பொது விதியைப் பின்பற்றுவதற்கு முயற்சிக்க வேண்டுமானாலும்கூட அவர் விதிகளைக் கண்டிப்பாக அனுசரிக்கவேண்டும் என்று எதிர்பார்க்கப்படவில்லை. இந்தியச் சான்றுச் சட்டத்தின் சரத்துகளைப் பிறழாமல் கடைப்பிடிக்கத் தவறியது அவருடைய தீர்ப்புக்கு ஒரு சட்டப்படியான மறுப்பாக அமையாது.

(6) எனினும், பதிவாளர் அல்லது மத்தியஸ்தர் அல்லது தகராறை முடிவு செய்யும் நபர், கூட்டுறவுச் சட்டத்தின் சரத்துகளுக்கும் அதன்கீழ் வகுக்கப்பட்ட விதிகளின் வெளிப்படையான சரத்துகளுக்கும் முரண்பாடில்லாத நாட்டின் பொதுச் சட்டங்களைப் பின்பற்ற வேண்டும்.

(7) காலாவதிச் சட்டம் (Law of Limitation): கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் வகுக்கப்பட்ட விதி 58 (2) ஒரு தகராறை அனுப்புவதற்கான காலாவதிக் காலம் இந்தியக் காலாவதிச்

சட்டத்தின் (1963ஆம் வருடத்திய மத்தியச் சட்டம் எண். 36) சரத்துகளால் ஒழுங்கு படுத்தப்படும் என்று விதிக்கிறது. அத் தகராறு ஒரு சிவில் வழக்கு போன்றும் பதிவாளர் ஒரு சிவில் நீதி மன்றம் போலும் மத்தியஸ்த தாவாக்களை முடிவு செய்வதில் காலாவதிச் சட்டத்தின் தொடர்பான பகுதிகளைக் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அவை பின்வருமாறு :

(i) காலாவதியாகிவிட்டது என்று பிரதி வாதத்தில் கூறப் படா விட்டாலும், நிருணயிக்கப்பட்ட காலாவதி காலம் கழிந்த பிறகு, தாக்கல் செய்யப்பட்ட எந்த வழக்கையும் ஒரு நீதி மன்றம் தள்ளி விடலாம் (Dismiss).

(ii) ஒரு கடனுக்கு, கடன் வாங்கியவர் எழுத்தில் அக் கடனை ஒப்புக்கொண்ட தேதியிலிருந்து, ஒரு புதிய காலாவதிக் காலம் தொடங்கும். அவ்வாறு கடனை ஒப்புக்கொள்ளுதல் சொல்லால் உரைக்கப்படவேண்டியதில்லை ; அது ஊகத்தினாலும் இருக்கலாம். ஆனால், கடன் காலாவதியான பிறகு செய்யப்படும் ஒப்புக் கொள்ளுதல் காலாவதியைப் பாதுகாக்காது. அத்தகைய சமயங்களில் தொடர்பான கட்சியினர் இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் (Indian Contract Act) பிரிவு 25-ன் கீழ் காலாவதி யான கடனைச் செலுத்துவதற்குத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு ஓர் ஒப்பந்தத்தைச் செய்தால், காலாவதி பாதுகாக்கப் பட்டுக் கோருரிமை புதுப்பிக்கப்படலாம்.

(iii) கடன் வாங்கியவர் அல்லது அவருடைய அங்கீகரிக்கப் பட்ட முகவர் அசலுக்காக அல்லது வட்டிக்காகச் செலுத்தும் தொகையைத் தன்னுடைய சொந்தக் கையெழுத்தில் அல்லது தன்னால் கையெழுத்திடப்பட்டு ஒப்புக்கொண்டால் அந்தத் தேதியிலிருந்து ஒரு புதிய காலாவதிக் காலம் தொடங்கும்.

(iv) இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட நபர்கள் கூட்டாக நிறைவேற்றும் பத்திரங்களில், ஒரு பாக்கிதாரரால் செய்யப்படும் கடன் ஒப்புக் கொள்ளுதல் அல்லது கடனுக்காகப் பணம் செலுத்துதல், பத்திரத்தில் சேர்ந்துள்ள இதர கட்சியினர்கள் மீது காலாவதியைப் பாதுகாக்காது. ஆகையால், பத்திரத்தில் சேர்ந்த எல்லாக் கட்சியினர்களிடமிருந்தும் சங்கம் கடன் ஒப்புதலை வாங்கி எல்லாப் பாக்கிதாரர்கள் மீதும் தன் கோருரிமையை உயிருடன் வைத்திருக்கவேண்டும்.

(v) (அ) (i) கேட்கும்போது செலுத்தப்படவேண்டிய புரோ நோட்டுகளில் (Pronotes) புரோ நோட்டுத் தேதியிலிருந்து காலாவதிக் காலம் 3 வருடங்கள் ஆகும்.

(ii) மொத்தத் தொகையாக செலுத்தப்படும் புரோ நோட்டுகளில் காலாவதிக் காலம் திருப்பிச் செலுத்துவதற்கான தேதியிலிருந்து 3 வருடங்களாகும்.

(iii) தவணைகளில் செலுத்தப்படவேண்டிய புரோ நோட்டுகளில் ஒவ்வொரு தவணையையும் திருப்பிச் செலுத்தவேண்டிய தேதியிலிருந்து காலாவதி காலம் 3 வருடங்களாகும்.

(ஆ) புரோ நோட்டு பதிவு செய்யப்பட்டிருந்தால் காலாவதிக் காலம் 3 வருடங்களுக்குப் பதில் 6 (ஆறு) வருடங்களாகும்.

(இ) அடைமானப் பத்திரங்களில், அடைமான உரிமையை அமல்படுத்துவதற்கான காலாவதிக் காலம், கடன் செலுத்த வேண்டிய தேதியிலிருந்து 12 வருடங்களாகும்.

இந்தியக் காலாவதிக் சட்டத்தின் சரத்துகள் பொதுவாகக் கூட்டுறவுச் சட்டத்தின் பிரிவு 73-ன் கீழ் தாக்கல் செய்யப்பட்ட தகராறுகளுக்குப் பொருந்தினலும், பிரிவு 56 (2)-ன் விலக்குக் கூறுகளில் இரண்டு விலக்குகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. முதலாவதாக, சங்கம் அல்லது அதன் நிருவாகக் குழுவிற்கும், எந்த முன்னுள் நிருவாகக் குழு, எந்த முன்னுள் அலுவலர், முன்னுள் முகவர் அல்லது முன்னுள் ஊழியர் அல்லது இறந்துபோன அலுவலர், இறந்து போன முகவர் அல்லது இறந்துபோன ஊழியரின் நியமிகள், வாரிசுகள் அல்லது சட்டப்படியான பிரதிநிதிகள் இவர்களுக்கிடையே, எழுகின்ற தகராறு எந்தச் செயலைக் குறித்துத் தகராறு எழுந்ததோ அந்தச் செயல் நடந்த தேதியிலிருந்து 3 வருடங்களுக்குள் பதிவாளருக்கு அனுப்பவேண்டும். ஆனல், அந்தத் தகராறு சங்கம் அல்லது அதன் நிருவாகக் குழு அல்லது எந்த முன்னுள் நிருவாகக் குழுவின் முன்னுள் அலுவலர் முன்னுள் முகவர் அல்லது இறந்துபோன ஊழியரின் நியமிகள் வாரிசுகள் அல்லது சட்டப் படியான பிரதிநிதிகள் இவர்களுக்கு இடையே எழுகின்ற தகராறு எந்தச் செயலைக் குறித்துத் தகராறு எழுந்ததோ அந்தச் செயல் நடந்த தேதியிலிருந்து 3 வருடங்களுக்குள் பதிவாளருக்கு அனுப்பவேண்டும். ஆனல், அந்தத் தகராறு சங்கம் அல்லது அதன் நிருவாகக் குழு அல்லது எந்த முன்னுள் நிருவாகக் குழு, முன்னுள் அலுவலர், முன்னுள் முகவர் அல்லது முன்னுள் ஊழியர் அல்லது இறந்துபோன அலுவலர்,

முகவர், அல்லது ஊழியரின் நியமிகள், வாரிசுகள் அல்லது சட்டப்படியான பிரதிநிதிகள் புரிந்துள்ள செயல் தொடர்பாகவும் அல்லது புரியாது விட்டு விடப்பட்ட செயல் தொடர்பாகவும் இருக்கவேண்டும். இரண்டாவதாக ஒரு நிருவாகக் குழுவின் தேர்தல் தொடர்பாகவும் அல்லது ஓர் அலுவலர் தேர்தல் தொடர்பாகவுமுள்ள தகராறுகள் அத்தகைய தேர்தல் முடிவு அறிவுப்புத் தேதிலியிருந்து 2 மாதங்களுக்குள் பதிவாளருக்கு அனுப்பப்படவேண்டும்.

(8) சட்டத்தின் கீழ் வெளியிடப்பட்ட எல்லா முடிவுகளும், தீர்ப்பாணைகளும், தீர்ப்புகளும் முத்திரை வரியிலிருந்து விலக்கப் பட்டிருக்கின்றன. அவை ஒரு சாதாரணமான காகிதத்தில் வெளியிடப்படலாம்.

9. மத்தியஸ்தர்களின் உரிமைகள் (Privileges of Arbitrators)

பிரிவு 73 (2) (அ)-ன் கீழ், உத்தியோகப் பற்றற்ற பிரமுகர்கள் பொதுவாக மத்தியஸ்தர்களாக நியமிக்கப் படுகிறார்கள். அவர்கள் அரசாங்க அஞ்சல் முத்திரையைப் பயன்படுத்துவதற்கு உரிமை பெற்றிருக்கிறார்கள். அவர்கள், சென்னை பிரயாணப்படி விதிகளின் கீழ், பிரயாணப்படிக்குக்கூட உரிமை பெற்றவர்கள்.

10. சிவில் நீதி மன்றங்களின் அதிகாரத்துக்குத் தடை (Bar of Jurisdiction of Civil Court)

பிரிவு 73-ன் கீழ், ஒரு தகராறில் செய்யப்பட்ட முடிவை எந்தச் சிவில் அல்லது வருமானத்துறை நீதி மன்றமும் கேள்விக்கு எடுத்துக்கொள்ளக்கூடாது. பிரிவு 100-ன் கீழ், எந்த நீதி மன்றத்திலும் ஒரு கூட்டுறவுத் தீர்ப்பு மறுப்புக்கூறு செய்யப்படக் கூடாது. [பிரிவு 96 (1) (அ)]-ன் கீழ், மேல்முறையீட்டிற்கு ஏற்பாடு இருப்பது உண்மைதான். இதைத் தவிர, பிரிவு 73-ன் கீழ் கொடுக்கப்பட்ட எல்லாத் தீர்ப்புகளும் அல்லது முடிவுகளும் முடிவானவை.

(11) தீர்ப்பாணை பிறப்பிப்பதற்கு முன்பு, சொத்துகளை நிபந்தனைக்கு உட்பட்ட ஜப்தி செய்தல் (Conditional Attachment of properties before Decree) (பிரிவு 108)

பல்வேறு சூழ்நிலைகளில் சொத்துகளை நிபந்தனைக்குட்பட்ட ஜப்தி செய்வது தொடர்பான ஒரு பொதுவான பிரிவாகும். பிரிவு 73-ன் கீழ் கொடுக்கப்பட்ட ஒரு தீர்ப்புக்கு முன்பு,

சொத்துகளை ஐப்தி செய்வதற்குக்கூடப் பிரிவு 108-ல் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பிரிவு 108, சில சூழ்நிலைகளில், ஒரு தகராறுக்குண்டான கட்சியினர்களின் சொத்துகளை ஒரு முடிவு வருவதற்கு முன்பு நிபந்தனைக்குட்பட்ட ஐப்தியை உத்தரவிடு வதற்குப் பதிவாளருக்கு அதிகாரம் அளிக்கிறது. பிரிவு 73 (1)-ன் கீழ், தனக்குச் செய்யப்பட்ட ஒரு மத்தியஸ்த தாவாவில் தாவாவுக்குத் தொடர்புடைய ஒரு கட்சியினர் அந்தத் தாவாவின் மேல் பிறப்பிக்கப்படும் முடிவைத் தோற்கடிக்கும் எண்ணத்துடன் அல்லது முடிவு நிறைவேற்றுதலைத் தாமதப்படுத்தும் எண்ணத் துடன் தன் எல்லாச் சொத்தையும் அல்லது சொத்தின் எந்த பாகத்தையும் பதிவாளரின் அதிகார எல்லையிலிருந்து விற்பனை செய்வதற்கு அல்லது எடுத்துக் கொண்டு போவதற்கு ஏற்பாடு செய்து கொண்டு இருக்கிறார் என்று ஒரு சங்கம் விண்ணப்பம் செய்து கொண்டால், பதிவாளர் தான் திருப்தியடைந்தால், தக்க பிணையம் கொடுக்கப்பட்டால் ஒழிய, அத்தகைய சொத்து அல்லது சொத்தின் பாகத்தை அவர் தேவையென்று கருதியபடி நிபந்தனைக்குட்பட்ட ஐப்தியைத் கட்டளையிடலாம். அத்தகைய ஐப்தி உத்தரவு தகுதி வாய்ந்த ஒரு சிவில் நீதி மன்றத்தால் செய்யப்பட்டது போன்ற சக்தி வாய்ந்தது.

இந்தப் பிரிவின்கீழ் அதிகாரங்கள் பொதுவாக அரசுத்துறை அலுவலர்களால் கையாளப்படுகின்றன. அவை மத்தியஸ்தர் களால் கையாளப்படக் கூடாது. இந்தப் பிரிவின் கீழ் ஒரு ஐப்தி செய்யப்பட்டிருந்தால், பிரிவு 91-ன் கீழ் தகராறில் பிறப்பிக்கப் பட்ட டிக்கிரி நிறைவேற்றப்படும்போது ஒரு புதிய ஐப்தி தேவை யில்லை. ஐப்திக்குப் பின்னர், எடுக்கப்படவேண்டிய நடவடிக்கைகள் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட விதிகளுக்கிணங்க (விதிகளின் அத்தியாயம் 10) எடுக்கப்படவேண்டும்.

**சொத்துகளை நிபந்தனைக்குட்பட்ட ஐப்தி செய்வதற்கு அனுசரிக்கப்பட வேண்டிய நடைமுறை பின்வருமாறு :**

ஐப்தி செய்யப்படவேண்டிய சொத்துகளைக் குறிப்பிட்டும், தீர்ப்புக்கு முன்பு அந்த ஐப்தி செய்யப்பட வேண்டுமென்ற உண்மையைக் குறிப்பிட்டும், பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட நமூனாவில் ஒரு நிறைவேற்றுதல் மனு பிரிவு 73-ன் கீழ், தாக்கல் செய்யப்பட்ட வழக்குத்தாளுடன் அனுப்பப்படவேண்டும். வழக்குத்தாளுடன் தேவைப்பட்ட மத்தியஸ்தக் கட்டணங்கள் நிறைவேற்றுதல் கட்டணங்கள் செலுத்தப்பட்டதற்காக ரசீதுகள் (chalans) கூட, அனுப்பப்படவேண்டும். நிபந்தனைக்குட்பட்ட ஐப்தியைக் கோருவதற்கான காரணங்களைக் கொடுத்து சங்க

நிருவாகக் குழுவின் தீர்மானத்தின் ஓர் உண்மையான நகலும் அனுப்பப்படவேண்டும். ஒரு தீர்ப்பு அல்லது முடிவு பிறப்பிப்பதற்கு முன்னர் செய்யப்படும் ஐப்தியானது அபூர்வமான சூழ்நிலைகளில் மட்டும்தான் அனுமதிக்கப்படவேண்டும்.

12. தீர்ப்பு அல்லது முடிவை அமல் செய்தல் (Enforcement of award or decision)

பிரிவு 73-ன் கீழ், பிறப்பிக்கப்படும் முடிவு அல்லது தீர்ப்பு நிலம் அல்லது இதர அசையாச் சொத்து கொடுக்கப்படும் அல்லது ஒதுக்கப்படும் நிபந்தனைகளின் பங்கத்திற்காக மீண்டும் எடுத்துக் கொள்ளப்பட்ட நிலம் அல்லது இதர அசையாச் சொத்தைச் சங்கத்திற்குச் சுவாதீனம் கொடுக்கும் சூழ்நிலைகளில் தவிர, கீழ்க்கண்ட ஏதாவது ஓர் இடத்தில் அமல் செய்யப்படக்கூடும் [விதி 56 (9)].

(1) செயல் எழுந்த மாவட்டத்தின் பதிவாளருக்குச் செய்யப்படும் ஒரு விண்ணப்பத்தின் பேரில் முடிவு அல்லது தீர்ப்பு, விதிகளின் 10ஆம் அத்தியாயத்தில் ஏற்பாடு செய்யப்பட்டபடி, அமல் செய்யப்படவேண்டும்.

(2) மாவட்ட ஆட்சியாளருக்கு அல்லதுச் செயலில் அவரால் அங்கீகரிக்கப்பட்ட எந்த நபருக்கும் பதிவாளரால் செய்யப்பட்ட ஒரு வேண்டுகோளின் பேரில் முடிவு அல்லது தீர்ப்பின் கீழ், வசூலிக்கப்படவேண்டிய எல்லாத் தொகைளும் அவை நில வருவாய் பாக்கிகள் வசூலிக்கப்படுவதுபோலவே வசூலிக்கப்படவேண்டும்.

(3) முடிவு அல்லது தீர்ப்பில் அடங்கியுள்ள செய்தியின் மீது அதிகாரம் வகிக்கின்ற சிவில் நீதி மன்றத்திற்குச் செய்யப்படும் ஒரு விண்ணப்பத்தின் பேரில், அந்தச் சிவில் நீதி மன்றம் அந்த முடிவு அல்லது தீர்ப்பைச் சிவில் நீதிமன்றத்தின் ஒரு முடிவான தீர்ப்பாணையை அமல் படுத்துவது போலவே அமல் படுத்தவேண்டும்.

இந்த உப-விதியில், சிவில் நீதி மன்றங்கள் என்றால் சென்னை கிராம நீதி மன்றங்களின் சட்டத்தின் கீழ் (Madras Village Courts Act-Madras Act I of 1869) அமைக்கப்பட்ட கிராம நீதி மன்றங்களும் அடங்கும்.

விதி 56 (10)-ன் கீழ் அதாவது நில ஒப்படைப்பு நிபந்தனைகள் சங்கத்திற்காக ஓர் உறுப்பினரிடமிருந்து மீண்டும்

எடுக்கப்பட்ட நிலம் அல்லது இதர அசையாச் சொத்தைச் சங்கத்திற்குச் சுவாதீனம் செய்வதற்காக அந்த முடிவு அல்லது தீர்ப்பு செய்யப்பட்டால் சங்கம் அந்த நிலம் அல்லது இதர அசையாச் சொத்திருக்கும் மாவட்டப் பதிவாளருக்கு முடிவு அல்லது தீர்ப்பை அமல் செய்வதற்காக விண்ணப்பம் செய்யலாம். அத்தகைய விண்ணப்பத்தின் பேரில் அத்தகைய பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட விற்பனை அலுவலர் (Sale Officer) அத்தகைய நிலம் அல்லது இதர அசையாச் சொத்தைச் சங்கத்திற்கு அல்லது சங்கத்தால் இந்தச் செயலில் அமர்த்தப்பட்ட ஒரு நபருக்குச் சுவாதீனம் கொடுக்கவேண்டும். அப்படிச் சுவாதீனம் கொடுக்கும்போது அவர் அந்த நிலம் அல்லது இதர அசையாச் சொத்தைக் காலி செய்வதற்கு மறுக்கும் முடிவு அல்லது தீர்ப்பில் கட்டுப்படுத்தப்பட்ட எந்த நபரையும் தேவைப் பட்டால் நீக்கலாம்.

அரசாங்க உத்தரவின் கீழ், கூட்டுறவுத் தீர்ப்புகளையும் அல்லது தீர்ப்பாணைகளையும் நிறைவேற்றுதல் செய்வது வருவாய்த் துறைக்கு ஒப்படைக்கப்படவில்லை. சிவில் நீதிமன்றங்களின் மூலம் தீர்ப்பாணைகள் நிறைவேற்றுதல் செய்வதில் பணச்செலவு அதிகமாகக் காணப்படுவது மட்டுமன்றித் தாமதமும் ஏற்படுகிறது. ஆகையால், சங்கங்கள் கூட்டுறவுத் துறைக்குத் தங்கள் தீர்ப்பாணைகள் நிறைவேற்றுதல் மனுவை அமல் செய்வதற்கு அனுப்புகின்றன.

விதி 56 (11)-ன் கீழ் முடிவு, தீர்ப்பு அல்லது உத்தரவை நிறைவேற்றுதலுக்கான காலாவதிக் காலம் சிவில் நடைமுறைத் தொகுப்பின் பிரிவு 48-லும் இந்தியக் காலாவதி சட்டத்தின் முதல் பட்டியலின் பிரிவு 136-லும் அடங்கியுள்ள காலாவதிக் காலம் போன்றது.

விதி 56 (12)-ன் கீழ் ஒரு தீர்ப்பு அமல் செய்வதற்கான விண்ணப்பம் அனுப்பப்பட்ட ஒரு மாவட்டப் பதிவாளர் அத்தகைய தீர்ப்பைத் தக்க அதிகாரம் வாய்ந்த ஒரு சிவில் நீதி மன்றத்திற்கு நிறைவேற்றுவதற்காக அனுப்ப உரிமை பெற்றிருக் கிறார். அவர் அவ்வாறு செய்வதற்குண்டான காரணங்களைக் கொடுக்கவேண்டும். தீர்ப்பு அனுப்பப்பட்ட சிவில் நீதி மன்றம், அந்தத் தீர்ப்பை அது சிவில் நீதி மன்றத்தின் முடிவான தீர்ப்பாக இருப்பது போன்று, நிறைவேற்றும். இங்கேயும்கூட, அத்தகைய சூழ்நிலைகள் அபூர்வமாக இருக்கும். ஏனென்றால், மாவட்டப் பதிவாளர், சிக்கலான சூழ்நிலைகளிலும், சிவில் நீதிமன்றங்கள்

அந்தத் தீர்ப்பை மேலான பயன் கொடுக்கும் வகையில் நிறைவேற்றும் என்று அவர் கருதும் சூழ்நிலைகளில்தான் அவ்வாறு செய்யப்படுகிறது.

குறிப்பு

(1) இந்த அத்தியாயத்தில் 'பதிவாளர்' என்ற சொல்லில், அந்தச் சூழ்நிலையில் மாறுதலான நோக்கமிருந்தாலொழிய, ஒரு துணைப் பதிவாளர் அல்லது உதவிப் பதிவாளர் அல்லது பிரிவு 73-ன்கீழ் ஒரு பதிவாளரின் அதிகாரங்கள் அளிக்கப்பட்ட வேறு எந்த அரசாங்க அலுவலர்கள் அடங்கியுள்ளார்கள்.

(2) 'தீர்ப்பு' என்ற சொல் ஒரு மத்தியஸ்தரால் முடிவு செய்யப்பட்ட தகராறு செயலில் பயன்படுத்தப்படுகிறது. 'தீர்ப்பாணை', 'முடிவு', 'உத்தரவு' என்ற சொற்கள் மற்றவர்களால் முடிவு செய்யப்பட்ட ஒரு தீர்ப்புச் செயலில் பயன்படுத்தப் படுகிறது.

13. பிரிவுகள் 73, 71 ஆகியவற்றின் ஒப்பீடு (Difference between Sections 73 & 71)

பிரிவுகள் 71-ம், 73-ம், சமமாகப் பிரயோகம் செய்யப்பட வேண்டும் என்பது நோக்கமாக இருக்கக் கூடாது. இரண்டு பிரிவுகளுக்குமிடையே உள்ள வேற்றுமைகளின் முக்கிய அம்சங்கள் கீழே தரப்பட்டிருக்கின்றன.

(1) பிரிவு 71-ன்கீழ் தண்டம் (Surcharge) நடவடிக்கை பதிவாளரால் தன் சொந்த இயக்கத்தினாலும் அல்லது ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவின் அல்லது கடனாளரின் விண்ணப்பத்தின் பேரிலும் எடுக்கப்படலாம், ஆனால், பிரிவு 73-ன் கீழ் சங்கத்தால் அல்லது பாதிக்கப்பட்ட அல்லது தொடர்பான கட்சியினர்களால் மட்டும்தான் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்.

(2) பிரிவு 71-ன்கீழ் ஒரு தண்டம் உத்தரவை, சட்டப்படியாக செய்யப்பட்ட விசாரணை அல்லது நடத்தப்பட்ட தணிக்கையின்போது வெளிப்பட்ட உண்மைகளின் அடிப்படையின்பேரில் செய்யப்படுகிறது. ஆனால், ஒரு மத்தியஸ்த

தாவா தொடர்பான கட்சியினரிடையே ஒரு தகராறு இருப்பதால் தாக்கல் செய்யப்படுகிறது.

(3) ஒரு தண்டம் உத்தரவு, அநேகமாக ஒரு குற்றமுள்ள நோக்கத்துடன் (Criminal Motive) செய்யப்பட்ட செயல்களுக்காகவும், செய்யப்படாமல் விட்டுவிடப்பட்டவைகளுக்காகவும் பிறப்பிக்கப்படுகிறது. இந்தச் செயல்களில் அதிகமான நேர்மையற்ற தீய ஒழுக்கத்தாலும் (Moral Turpitude) அல்லது வேண்டுமென்ற கெட்ட நடத்தையாலும் அல்லது கவனமின்மையினுலும் சங்கத்திற்கு நட்டம் விளைந்திருக்க வேண்டும். ஆனுல், மத்தியஸ்த தாவாக்கள், அநேகமாக, பணத் தகராறுகள், தேர்தல் தகராறுகள் முதலியன போன்ற செயல்களைக் குறித்து சிவில் தன்மையுள்ளவைகளாக இருக்கின்றன. எனவே, பிரிவு 71 பிரயோகிக்கப்பட வேண்டிய ஒரு தாவா பிரிவு 73-ன்கீழ் தாக்கல் செய்யப்படுவதை விலக்கவேண்டும்; அது செல்லுபடியாகாது.

# 15. சங்கங்களைக் கலைப்பதும் அவற்றின் பதிவை ரத்து செய்தலும்

## (Winding up and Cancellation of Registration of Societies)

(பிரிவுகள் 85-90-ம் விதிகளின்-அத்தியாயம் IX-ம்)

### 1. ஒரு சங்கத்தைக் கலைக்கும் நடைமுறையில் இரண்டு வேறுப்பட்ட கட்டங்கள் (Two distinct stages in the dissolution of a Society)

முன்னரே விளக்கியபடி, 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் ஒரு சங்கத்தை முதலில் கலைப் பதற்கும் அதன் பின்னர் தேவைப்பட்டால் அதன் பதிவை ரத்து செய்வதற்கும் ஏற்பாடு செய்கிறது. 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன்னர் ஒரு சங்கத்தின் பதிவை முதலில் ரத்து செய்து அதன் பின்னர் தான் அதன் அலுவல்களைக் கலைப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கப் பட்டன. இந்த நடைமுறையில் சில நேரங்களில் சங்கத்தைப் புதுப்பிப்பதற்குச் சாத்தியக் கூறுகளிருப்பினும் அவ்வாறு சங்கத்தைத் திருத்தி அமைப்பதற்கு வாய்ப்பு இல்லாமல் இருந்தது. மற்றும், பழைய சட்டத்தின்படி பதிவு ரத்து உத்தரவு மேல்முறையீட்டுக்காக அனுமதிக்கப்பட்ட இரண்டு மாத காலங்கள் கழிந்த பின்னர்தான் அமலுக்கு வந்தது.

ஒரு மேல்முறையீடு செய்யப்பட்டால் அந்த மேல்முறையீடு மறுக்கப்பட்ட தேதியிலிருந்துதான் பதிவு ரத்து உத்தரவு அம லுக்கு வர முடியும். இடைக் காலத்தில் சங்கத்தின் சொத்துகளின் பொறுப்பையேற்றிருக்கும் நிருவாகக் குழு அதில் எந்தவித அக்கறையையும் காண்பிக்காமல் அந்தச் சொத்துகளை வீணடித்து விடலாம். அப்படிச் செய்தால், சங்கத்தின் உறுப்பினர்களுடைய நலன்களும் கடன்காரர்களுடைய நலன்களும் பாதிக்கப்படும்.

முதலில் ஒரு சங்கத்தைக் கலைத்தவுடனே ஒரு கலைப்பு அலுவலரை நியமித்து ஓர் உத்தரவைப் பிறப்பிக்கப் பதிவாளருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டால், அத்தகைய நிலைமை எழ முடியாது. அப்படிச் செய்தால் கலைப்பு உத்தரவுக்கு எதிராக ஒரு மேல்முறையீடு செய்யப்பட்டிருந்தாலும்கூட, கலைப்பு அலுவலர் உடனே சங்கத்தின் சொத்துகளைப் பொறுப்பேற்றுக் கொள்ளலாம். மேல்முறையீட்டில் ஒரு காலம் வரை கலைப்பு அலுவலர் சங்கத்தின் உறுப்பினர்கள் சார்பாகவும் கடனாளிகளின் சார்பாகவும் ஒரு பொறுப்பாளியாகப் பணியாற்றலாம்.

ஆகையால், கூட்டுறவுச் சட்டக் குழுவினர் பதிவாளருக்குச் சட்டத்தில் அத்தகைய அதிகாரங்கள் வழங்கும் பொருட்டு சரத்துகள் செய்யப்பட வேண்டுமென்று யோசனை கூறினர். 1961ஆம்வருடத்தியச் சட்டத்தில் அவ்வண்ணமே ஒரு சங்கத்தைக் கலைத்த உடனே பதிவாளர் ஒரு கலைப்பு அலுவலரை நியமிப்பதற்குச் சரத்து செய்யப்பட்டது. ஒரு சங்கம் விதிகளில் நிருணயிக்கப்பட்ட கால வரம்புக்குள் தன் வேலையைத் தொடங்காவிட்டாலும் அல்லது செயலற்றிருந்தாலும் மற்றும் சில காரணங்களுக்காகவும் அதைக் கலைப்பதற்கான உத்தரவு பிறப்பிக்கப்படலாம். ஒரு சங்கத்தைப் பயனுள்ள முறையில் கலைப்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன், கலைப்பு அலுவலருக்கு, இதர அதிகாரங்களுடன் உறுப்பினர்களுக்கும் கடன்காரர்களுக்குமிடையே ஒரு சமாதானத்தை ஏற்படுத்துவதற்கும், ஒரு நபர் சங்கத்தின் உறுப்பினரா அல்லது இல்லையா என்பதைத் தீர்மானிப்பதற்கும், அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது.

ஒரு சங்கத்தின் விவகாரங்களை அறவே கலைத்துவிட்டுப் பிறகுதான் அதன் பதிவு ரத்து செய்யப்படும். கலைக்கப்படவேண்டுமென்று உத்தரவிடப்பட்ட ஒரு சங்கம் திருப்பி ஒரு நிருவாகக் குழுவிற்கு ஒப்படைக்கப்படவேண்டுவது தேவையாகக் கருதப்பட்டால், பதிவாளரின் கலைப்பு உத்தரவைத் திரும்பப் பெறவும் அல்லது ரத்து செய்து ஒரு நிருவாகக் குழுவைக் கலைப்பு அதிகாரியால் அமைப்பதற்கும் 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் சரத்து செய்யப்பட்டிருக்கிறது. எனவே, 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் இந்தச் சரத்துகள் ஒரு சங்கத்தின் விவகாரங்களை விரைவாகக் கலைப்பதற்காக மட்டுமன்றி, சாத்தியக் கூறுகள் இருந்தால் சங்கத்தைச் சீரமைப்பதற்காகவும் ஒரு சாதாரணமான வாய்ப்பைக் கொடுக்கும் வண்ணம் ஒரு குறிப்பிடத்தக்க முன்னேற்றம் வாய்ந்தவையாகும். பொதுவாக இந்த மாநிலத்தின் கூட்டுறவு இயக்கத்தின், குறிப்பாக விவசாய

நாணயச் சங்கங்களின், வளர்ச்சிக்காக இந்தச் சரத்துகள் உதவியாக இருக்கின்றன.

## 2. பிரிவு 85-ன் கீழ் ஒரு சங்கம் எப்பொழுது கலைக்கப்படவேண்டும்? (When Should a Society be Wound up?)

பிரிவு 85-ன் கீழ் ஒரு சங்கத்தைக் கலைப்பதற்கு முன் கையாளவேண்டிய சட்டப்படியான நிபந்தனைகள் பின்வருமாறு:

(1) பிரிவு 65-ன் கீழ் பதிவாளரால் அல்லது பதிவாளரால் அதிகாரம் கொடுக்கப்பட்ட ஓர் அலுவலரால் சங்கத்தின் அலுவல்களைப் பற்றிய ஒரு விசாரணை நடத்தப்பட்டிருக்கவேண்டும். அல்லது

(2) பிரிவுகள் 66 அல்லது 67-ன் கீழ் பதிவாளரால் அல்லது பதிவாளரால் அங்கீகாரம் அளிக்கப்பட்ட ஓர் அலுவலரால் சங்கத்தின் ஏடுகள் ஆய்வு செய்யப்பட்டிருக்கவேண்டும். அல்லது

(3) சங்கத்தின் உறுப்பினர்களின் $\frac{3}{4}$-க்குக் குறையாதவர்களால் ஒரு விண்ணப்பம் செய்யப்பட்டிருக்க வேண்டும் [பிரிவு 85 (1)]. அல்லது

(4) ஒரு சங்கத்தின் உறுப்பினர்களின் எண்ணிக்கை சட்டப்படியான குறுமமான பத்துக்குக் கீழ் குறைந்திருக்க வேண்டும் [பிரிவு 85 (2) (அ)]. அல்லது

(5) சங்க விதிகளில் நிருணயிக்கப்பட்ட காலவரம்புக்குள் தன் வேலையை அது தொடங்காமல் இருக்கவேண்டும் அல்லது செயலற்று இருக்கவேண்டும் [பிரிவு 85 (2) (ஆ)-ம் விதி 6-ம்].

விதி 6-ன்படி, ஒரு சங்கம் பதிவு செய்யப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாத காலங்களுக்குள் அது தன் வேலையைத் தொடங்க வேண்டும். தக்க சூழ்நிலைகளில் பதிவாளர் இந்தக் கால வரம்பை நீட்டிக்கலாம். விதி 6-ன் கீழ் கொடுக்கப்பட்ட விளக்கத்தின்படி ஒரு சங்கம் பதிவு செய்யப்பட்ட பிறகு முதல் பேரவைக் கூட்டத்தை நடத்தி உறுப்பினர்களையும் சேர்த்துப் பிறகு உறுப்பினர்களுக்குப் பங்குகளை ஒதுக்கித் தன் நிருவாகக் குழுவை அமைத்துவிட்டால் அது தன் வேலையைத் தொடங்கி விட்டதாகக் கருதப்படும். ஒரு சங்கத்தின் பதிவைத் தெரிவிக்கும் உத்தரவில் பொதுவாகப் பதிவு அலுவலர்கள் சங்கம் தன் வேலையைத் தொடங்கவேண்டிய தேதியையும் குறிப்பிடுகிறார்கள். மற்றும்

ஒரு சங்கம் தன் வேலையைத் தொடங்கி இருக்கலாம்; ஆனால், அது செயலற்று இருக்கக்கூடும். இப்படி இருந்தாலுங்கூட அது கலைக்கப்படலாம். ஒரு சங்கம் தன் முதல் பேரவைக்கூட்டத்திற்குப் பிறகு எந்த வேலையையும் செய்யாமல் செயலற்று இருக்கக்கூடும். அத்தகைய சூழ்நிலைகளிலும்கூடப் பதிவாளர் ஒரு சங்கத்தைக் கலைப்பதற்கு உத்தரவிடலாம். இந்தச் சூழ்நிலைகளில் எந்தக் காலவரையறையும் நிருணயிக்கப்படவில்லை. அத்தகைய கால வரையறையைப் பதிவாளரே முடிவு செய்யவேண்டும்.

இந்தப் பிரிவின் கீழ் எடுக்கப்படும் நடவடிக்கை பதிவாளரின் விருப்பத்திற்கு விடப்பட்டிருக்கிறது. ஒரு சங்கத்தில் சட்டப்படியான விசாரணையோ அல்லது ஆய்வோ நடத்தப்பட்ட பிறகும், அல்லது பிரிவு 85 (1)–ன் கீழ், சங்கத்தின் உறுப்பினர்களில் ¾–க்கு குறையாதவர்களால் ஒரு விண்ணப்பம் செய்யப்பட்டபோதும், சங்கம் கலைக்கப்பட வேண்டுமென்று பதிவாளர் கருதினால் அவர் அச் சங்கத்தைக் கலைப்பதற்கு உத்தரவிடலாம். எல்லாச் சூழ்நிலைகளிலும் ஒரு சங்கத்தைக் கலைக்கும் உத்தேசத்திற்கு எதிராகத் தன் எதிர்ப்பினைத் தெரிவிக்கச் சங்கத்திற்கு ஒரு வாய்ப்பு அளிக்கப்படவேண்டும். சங்கத்தின் ஆட்சேபனையை அல்லது விளக்கத்தைப் பரிசீலனை செய்த பிறகு பதிவாளர் அந்தச் சங்கத்தைக் கலைப்பதற்கு உத்தரவிடலாம். எனினும், ஒரு சங்கத்தின் உறுப்பினர்கள் 10–க்குக் குறைந்தாலும் அல்லது சங்கம் வேலை செய்ய உடன்பட வில்லையானாலும் அல்லது சங்கம் செயலற்று இருந்தாலும், இந்த நிலைமைகளில் பதிவாளர் கலைப்பு உத்தரவு வெளியிடுவதற்கு முன்னர் தொடர்புடைய சங்கத்திற்கு அத்தகைய வாய்ப்பு அளிக்கவேண்டியது தேவையில்லை. எல்லாச் சூழ்நிலைகளிலும், கலைப்பு உத்தரவு எழுத்து மூலம் இருக்க வேண்டும். கலைப்பு உத்தரவின் ஒரு நகல் தொடர்பான சங்கத்திற்குப் பதிவு அஞ்சல் மூலம் உடனே அனுப்பப்படவேண்டும் [பிரிவு 85 (1)]. பிரிவு 96 (2) (அ)-ல், கலைப்பு உத்தரவு பதிவாளரால் வெளியிடப்பட்டால் அரசாங்கத்திற்கு மேல் முறையீடு செய்வதற்கும், கலைப்பு உத்தரவு பதிவாளருக்குக் கீழ்ப்பட்ட அலுவலர்களால் வெளியிடப்பட்டால் பதிவாளருக்கு மேல்முறையீடு செய்வதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

பிரிவு 85-ன் கீழ், ஒரு சங்கத்தின் அலுவல்களைக் கலைப்பதானது, அந்தச் சங்கத்தைச் சீரமைக்கும் முயற்சியில் தோல்வியிருந்தாலும் சங்கத்தைச் சீரமைப்பதற்கும் அல்லது புதுப்பிப்பதற்கும் இதர முறைகள் கையாளப்பட்ட பிறகும்தான் உத்தரவிடப்படுகிறது. சங்கங்களை அவசரப்பட்டுக் கலைப்பது இயக்கத்

திற்குத் தீங்கு விளைவிக்கும். ஒரு சங்கத்தைக் கலைப்பதற்குப் பரிந்துரை செய்வதற்கு முன்னர் மேற்பார்வைக் கழகங்கள் சங்கத்தின் அலுவல்களைச் சரிப்படுத்துவதற்கு முயற்சி செய்ய வேண்டும். வழக்கமாக ஒரு சங்கத்தைக் கலைப்பதற்கு முன்னர் மத்திய வங்கிகளுடன் ஆலோசனை நடத்தப்படுகிறது. முதலில் மத்திய வங்கிகளும் அல்லது அரசுத்துறை அலுவலர்களும், கெட்ட நிலைமையிலிருக்கும் சங்கத்தின் நிருவாகக் குறைகளைச் சீரமைத்துச் சங்கத்தின் உறுப்பினர்களுக்குக் கூட்டுறவு அறிவுரை செய்து சங்கத்தில் அவர்கள் ஒரு தீவிர அக்கறை எடுப்பதற்கு வேண்டிய ஆர்வத்தை அளிக்க முயற்சி செய்யவேண்டும். சங்கத்தில் ஆற்றலில்லாமலும், விஷமத்தனம் வாய்ந்துமுள்ள விரும்பத்தகாத இயக்குநர்களை எடுத்துவிட்டு அவர்களுக்குப் பதில் சங்கத்தின் அலுவல்களைச் சரிசெய்யும் ஆற்றலுள்ளவர்களை இயக்குநர்களாக அமர்த்த ஏற்பாடு செய்யவேண்டும். அத்தகைய இயக்குநர்கள் கிடைக்காவிட்டாலும், அல்லது சங்கத்தின் அலுவல்களை அதன் உப-விதிகளின் கீழ் ஒரு முகவரிடம் அல்லது பதிவாளரால், கூட்டுறவுப் பிரிவு 72-ன் கீழ் சங்கத்தின் நிருவாகக் குழு மீறப்பட்டு அவரால் நியமிக்கப்பட்ட ஓர் அலுவலரிடம் ஒப்படைக்க முடியாமலிருக்கும் நிலைமையிலும், ஒரு சங்கத்தைக் கலைப்பதற்கான பிரச்சினை ஆலோசிக்கப் படலாம்.

சில நேரங்களில், ஒரு சங்கத்தின் அலுவல்கள் அவசரமாகக் கலைக்கப்பட வேண்டியிருக்கும். அதாவது,

(1) ஒரு சங்கத்தில் மத்திய வங்கியிலிருந்து வாங்கப்பட்ட கடன் முழுத் தொகை அல்லது பெரும்பான்மையான பாகம் ஒரு சில குடும்பங்களைச் சேர்ந்த நபர்களுக்கு அளிக்கப்பட்டு வன்தாக்கு முறைகளினாலன்றி அவற்றை வசூலிக்க முடியாமலும் கடன் வாங்கியவர்கள் கடனைத் திருப்பிக் கொடுக்கும் சக்தியில்லாதவர்கள் என்று ஓர் ஐயம் ஏற்பட்டாலும்,

(2) ஒரு வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தில் கடன் வாங்காத வசதியுள்ள உறுப்பினர்கள் சங்கம் சரியாக வேலை செய்யவில்லையென்பதற்காக அல்லது வேறு காரணங்களுக்காக வரையறுக்கப்படாத பொறுப்பின் அமலிலிருந்து தப்பிக்கும் நோக்கத்துடன் திரும்பப் பெற்றாலும்,

(3) சங்கத்தின் தலைமை நிருவாகி அல்லது நிருவாகிகள் சங்கத்தின் பணத்தைக் கையாடல் செய்து அல்லது தங்கள் சொத்தைச் சங்கத்திற்கு நட்டம் விளைவிப்பதற்காக

முறையற்ற செயல்களைச் செய்திருந்தாலும் அல்லது இவ்வாறு செய்ய முயற்சி செய்தாலும்,

(4) செயலற்றும் செயல்படாதுமுள்ள நுகர்வோர் (ஸ்டோர்ஸ்) சங்கத்தைப் புதுப்பித்தல் அல்லது கலைத்தலில் தாமதம் ஏற்பட்டால் சங்கத்தின் பொருள்கள் கெடுதியடைந்து அதன் காரணமாகச் சங்கத்திற்கு அதிக நட்டம் விளைவதாக இருந்தாலும்.

எனினும், எந்தச் சூழ்நிலையிலும், ஒரு சங்கத்தைக் கலைப்பது அச் சங்கத்தைப் புதுப்பிப்பதற்கும் சீரமைப்பதற்கும் எடுத்துக் கொண்ட முயற்சிகள் தோல்வியுற்றுச் சங்கத்தைச் சீரமைக்க இயலவில்லை என்ற நிலைமையில்தான் செய்யப்படவேண்டுமே தவிர, அது ஓர் இயல்பான நடைமுறையாக இருக்கக் கூடாது.

ஒரு சங்கம் கலைக்கப்படுவதற்கு முன்னர் நிதி வங்கியுடன் ஆலோசனை செய்யப்பட வேண்டும். பிரிவு 65-ன் கீழ் நடத்தப் பட்ட விசாரணையின் முடிவும் பிரிவு 66-ன் கீழ் நடத்தப்பட்ட ஆய்வின் முடிவும் சங்கம் கடன் வாங்கியுள்ள நிதி வங்கிக்குத் தெரிவிக்கப்படவேண்டும். ஸ்டோர்ஸ் சங்கங்களில், மாவட்ட மொத்த விற்பனை ஸ்டோர்ஸ் சங்கத்துடனும் ஆலோசனை நடத்தப்படவேண்டும். இவ்வாறாக எல்லாச் சூழ்நிலைகளிலும் ஒரு சங்கம் இணைக்கப்பட்டிருந்தாலும் அல்லது இணைக்கப்படாமல் இருந்தாலும் நிதி வங்கியுடன் ஆலோசனை நடத்தப்பட வேண்டும். நிதி வங்கியுடனும் மற்ற மேற்பார்வைக் கழகங்களுடனும் ஆலோசனை நடத்திய பின்னர் தேவைப்பட்டால் பதிவாளர் சங்கத்தைக் கலைத்து கலைப்பு உத்தரவைப் பிரிவு 85-ன் கீழ் வெளியிடலாம்.

### 3. கலைப்பு அலுவலரை நியமித்தல் (Appointment of the Liquidator)

ஒரு சங்கம் கலைக்கப்பட வேண்டுமென்று உத்தரவிடப் பட்டால் அதே உத்தரவில் பதிவாளர் எந்த ஒரு நபரையும் ஒரு சங்கத்தின் கலைப்பு அலுவலராக நியமித்து அவருடைய ஊதியத்தையும் நிருணயிக்கலாம் [பிரிவு 86 (1)]. சில சூழ்நிலை களில், ஒரு கலைப்பு அலுவலரை நியமிப்பதற்குத் தேவையில்லாமல் இருக்கும். உதாரணமாக, பிரிவு 85 (2) (ஆ)-ன் கீழ் ஒரு சங்கம் தன் வேலையைத் தொடங்கவில்லை என்ற காரணத்திற்காகக் கலைக்கப்பட்டால் ஒரு கலைப்பு அலுவலரை நியமிக்கத் தேவையில்லை.

பொதுவாகக் கூட்டுறவுத் துறை அலுவலர்களே கலைப்பு அலுவலர்களாக நியமிக்கப்படுகிறார்கள். அபூர்வமான சூழ்நிலைகளிலேதான், உத்தியோகப் பற்றற்ற நபர்கள் கலைப்பு அலுவலர்களாக நியமிக்கப்படுகிறார்கள். கடந்த காலத்தில் உத்தியோகப் பற்றற்ற நபர்கள் கலைப்பு அலுவலர்களாக நியமிக்கப்பட்டனர். ஆனால், அந்தத் திட்டம் வெற்றியளிக்கவில்லை. ஆகையால், இந்தத் திட்டம் கைவிடப்பட்டு இப்போது கூட்டுறவுத் துறை அலுவலர்களே கலைப்பு அலுவலர்களாக நியமிக்கப்படுகிறார்கள். துறை அலுவலர்கள் தங்கள் நிருவாகக் கடமைகளில் ஒன்றாக ஒரு சங்கத்தின் கலைப்பு அலுவலராக வேலை செய்யும் சூழ்நிலைகளில் அவர்களுக்கு ஊதியம் நிருணயிக்கப்படுவதில்லை.

ஆனால், உத்தியோகப் பற்றற்றவர்கள் கலைப்பு அலுவலர்களாக நியமிக்கப்பட்டால் அவர்களுக்கு ஊதியம் நிருணயிக்கப்பட வேண்டும். விதி 68 (ஆ)-ன் கீழ் ஒரு கலைப்பு அலுவலரின் நியமனத்தை செயின்ட் ஜார்ஜ் அரசிதழில் பதிவாளர் அறிவிக்க வேண்டும். ஒரு சங்கத்தைக் கலைப்பதைக் குறித்துப் பதிவாளர் செய்யும் அறிவிப்பில் கலைப்பு அலுவலரின் நியமனத்தைப் பற்றியும் குறிக்கப்படும். இந்த அறிவிப்பு இலவசமாக செயின்ட் ஜார்ஜ் அரசிதழில் பிரசுரிக்கப்படுகிறது. பொதுவாகக் கூட்டுறவுத் துறை அலுவலர்களே கலைப்பு அலுவலர்களாக நியமிக்கப்படுகிறார்கள். ஆகையால், அவ்வாறு அமைக்கப்பட்ட கலைப்பு அலுவலர்களுக்கு ஊதியம் கிடையாது. ஆனால், உத்தியோகப் பற்றற்றவர் கலைப்பு அலுவலராக நியமிக்கப்பட்டால் அவருக்கு ஊதியம் உண்டு. அவருடைய ஊதியத்தைப் பதிவாளர் பிரிவு 86 (1)-ன் கீழ் நிருணயிக்கிறார். அவ்வாறு நிருணயிக்கப்பட்ட கலைப்பு அலுவலரின் ஊதியம் சங்கத்தைக் கலைக்கும் செலவில் சேர்க்கப்பட்டு சங்கத்தின் சொத்துகளிலிருந்து பட்டுவாடா செய்யப்பட வேண்டும். மற்ற எல்லாக் கோரிக்கைகளையும் நிறைவேற்றுவதற்கு முன்னரே இந்த ஊதியம் பட்டுவாடா செய்யப்படவேண்டும்.

பிரிவு 86 (1)-ன்கீழ் நியமிக்கப்பட்ட கலைப்பு அலுவலர்கள் பதிவாளரால் எந்தச் சமயத்திலும் நீக்கப்படலாம். அவ்வாறு நீக்கப்பட்ட அலுவலர் கலைக்கப்படும் சங்கத்திற்குச் சொந்தமான எல்லாச் சொத்துகளையும் ஆவணங்களையும் பதிவாளர் கட்டளையிடும் ஒரு நபரிடம் ஒப்படைக்க வேண்டும் [ விதி 59 (எல்)].

### 4. கலைப்பு உத்தரவு அமலில் வரும் தேதி (Date of the Winding up Order Taking Effect)

பிரிவு 85-ன்கீழ் ஒரு சங்கம் கலைக்கப்பட வேண்டுமென்று பிறப்பிக்கப்பட்ட பதிவாளரின் உத்தரவினால் பாதிக்கப்பட்ட

எந்த ஒரு சங்கத்தின் உறுப்பினரும் அரசாங்கத்திற்கு மேல் முறையீடு செய்யலாம். அத்தகைய கலைப்பு உத்தரவு பதிவாளருக்குக் கீழ்ப்பட்ட அலுவலரால் பிறப்பிக்கப்பட்டால் அவ்வுத்தரவுக்கு எதிராக எந்த உறுப்பினரும் பதிவாளருக்கு மேல் முறையீடு செய்து கொள்ளலாம் [ பிரிவு 96 (2) ]. அத்தகைய மேல் முறையீடு, உத்தரவுத் தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் செய்யப்பட வேண்டும். சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட கலைப்பு அலுவலர் [ பிரிவு 86 (1) ] சங்கத்தின் எல்லாச் சொத்துகளையும் பொருள்களையும் உடனே தன் கைவசம் செய்துகொண்டு அல்லது தன் பாதுகாப்பில் வைத்துக்கொண்டு அத்தகைய சொத்துகளுக்கு எந்தவித நட்டமும் சேதமும் ஏற்படுவதைத் தடுப்பதற்கு வேண்டிய தக்க நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் [ பிரிவு 86 (2) ]. பிரிவு 96-ன்கீழ், கலைப்பு உத்தரவுக்கு எதிராக மேல்முறையீடு செய்யப்பட்டால் அத்தகைய உத்தரவு மேல்முறையீட்டில் உறுதிப்படுத்தப்படும் வரை அமலுக்கு வராது [ பிரிவு 86 (3) ]. எனினும் இந்த ஏற்பாடு கலைப்பு அலுவலர் அச் சங்கத்தின் சொத்துகளை உடனே கைவசப் படுத்திக்கொண்டு சங்கத்தின் சொத்துகளுக்குச் சேதம் வராம லிருக்கத் தக்க நடவடிக்கைகள் எடுத்துகொள்ள வேண்டுமென்ற சரத்தைப் பாதிக்காது [ பிரிவு 86 (3)-ன் விலக்குக் கூறு ]. இவ்வாறு செய்யப்பட்டிருப்பது சங்கத்தின் சொத்துகளுக்கும் அவை மீண்டும், மேல் முறையீடு செய்யப்பட்ட காரணத்தால், சங்கத்திற்கு ஒப்படைக்கப்படுவதால் சேதம் வராமல் இருப்பதை உறுதிப்படுத்துவதற்கு உத்தேசிக்கப்படுகிறது. உதாரணமாகக் கலைக்கப்படும் ஒரு ஸ்டோர்ஸ் சங்கத்தில் பலசரக்குப் பொருள்கள் சேதம் அடையாமல் இருக்க வேண்டுமானுல் உடனே அவை விற்கப்படவேண்டும்.

ஒரு சங்கத்தின் வசம் அறுவடைக்காகத் தயாராக இருக்கும் பயிர்கள் விளைந்துள்ள நிலங்களில், அத்தகைய பயிர்கள் உடனே அறுவடை செய்யப்பட வேண்டும். நடவடிக்கை எடுக்கப்பட வேண்டிய பத்திரங்கள் ஏதாவது இருந்தால் அவை காலாவதி யாவதற்கு முன்னர் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும். ஒரு சங்கத்தின் வசம் கச்சாப் பொருள்கள் அல்லது இயந்திரங்கள் இருந்தால் அவை பாதுகாக்கப்பட வேண்டும். அவற்றின் பாது காப்புக்காக ஏற்பாடுகளும் செய்யப்பட வேண்டும்.

மேல் முறையீட்டில் ஒரு சங்கத்தைக் கலைப்பதற்குப் பிறப் பிக்கப்பட்ட பதிவாளரின் உத்தரவு உறுதி செய்யப்பட்டால், கலைப்பு அலுவலர் மேல்முறையீட்டின் மேற்கடப்பைக் குறித்துக் கொண்டு தொடர்ந்து செயல்படவேண்டும். ஆனுல், கலைப்பு

உத்தரவு மேல்முறையீட்டில் மேற்கடப்பு செய்யப்பட்டால், சங்கத்தின் சொத்துகளும் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டிய பத்திரங்களும் சங்கத்தின் வசம் மீண்டும் ஒப்படைக்கப்பட்டு சங்கத்தின் பொறுப்பில் இருக்கும் [ பிரிவு 86 (4) ].

பிரிவு 96 (2)–ன் கீழ் மேல்முறையீடு செய்ய உரிமை பெற்ற ஓர் உறுப்பினர் சங்கத்தைக் கலைப்பதற்காக வெளியிடப்பட்ட உத்தரவின் ஒரு நகலைப் பெறுவதற்கு உரிமையுள்ளவர். பொதுவாக அத்தகைய உத்தரவின் நகல் விண்ணப்பத்தின் பேரில் இலவசமாக ஒரு நபருக்குக் கொடுக்கப்படுகிறது. அந்த உத்தரவின் நகல் சங்கத்தின் உறுப்பினர்களின் பார்வைக்கு வைக்கப்படுகிறது.

5. கலைப்பு அலுவலரின் அதிகாரங்கள் (Powers of the Liquidator). அதிகாரங்களைக் கலைப்பு அலுவலர் எப்படி, எப்பொழுது, கையாளலாம்?

விதிகளுக்குட்பட்டும் பதிவாளரின் மேற்பார்வைக்கும், கண்காணிப்புக்கும், கட்டளைக்குமுட்பட்டும், கலைப்பு அலுவலர் தன் அதிகாரங்களைக் கையாளலாம். பிரிவு 85-ன் கீழ் அமைக்கப்பட்ட ஒரு கலைப்பு அலுவலர் சங்கத்தின் சொத்துகளை, கலைப்பு உத்தரவை எதிர்த்து மேல்முறையீடு செய்யப்பட்டிருந்தாலும்கூட, தன் கைவசம் உடனே எடுத்துக் கொள்ள வேண்டும். பிரிவு 96 (2)-ன் கீழ், மேல்முறையீடு செய்யப்பட்டிருந்தால், கலைப்பு உத்தரவு மேல்முறையீட்டில் உறுதிப்படுத்தப் படும்வரை அமலுக்கு வராது. அத்தகைய சூழ்நிலைகளில், கலைப்பு அலுவலர் சங்கத்தின் சொத்துகள், முதலியவற்றின் பொறுப்பைத் தொடர்ந்து வைத்துக்கொண்டு அவை சேதம் அடையாமலும் நட்டம் அடையாமலுமிருக்க தக்கத் நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். இவ்வாறு அவர் சங்கத்தின் உறுப்பினர்கள் சார்பாகவும் கடனாளிகள் சார்பாகவும் ஒரு பொறுப்பாளியாக மேல்முறையீடு முடிவு செய்யும் வரை தொடர்ந்து செயல்பட வேண்டும் [பிரிவு 86 (2)].

உதாரணமாக, கலைப்பு அலுவலர், மேல் முறையீட்டுக்காக அனுமதிக்கப்பட்ட கால வரம்பின்போதும் அத்தகைய மேல் முறையீடு முடிவு செய்யப்படும் வரை, காலாவதியடையும் தருவாயிலிருக்கும் கடன்களை வசூல் செய்வதற்கும் நடவடிக்கை எடுக்கவேண்டும். எனினும், ஒரு சங்கத்தின் சொத்துகள் முழுவதும் கலைப்பு உத்தரவு அமலுக்கு வந்த தேதியிலிருந்து மட்டும்தான் கலைப்பு அலுவலரின் பொறுப்புக்கு வரும். அதாவது

மேல்முறையீட்டிற்காக அனுமதிக்கப்பட்ட இரண்டு மாத காலம் கழிந்த பின்னர், அந்தக் கால வரம்பிற்குள் ஒரு மேல்முறையீடு செய்யப்பட்டால், அத்தகைய மேல்முறையீட்டில் கலைப்பு உத்தரவு உறுதி செய்யப்பட்ட பின்னர், கலைப்பு அலுவலர் பிரிவு 87-ன் கீழும் விதி 58-ன் கீழும் அளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களைச் செலுத்தி அந்தத் தேதியிலிருந்து அதாவது கலைப்பு உத்தரவு அமலுக்கு வந்த தேதியிலிருந்து சங்கத்தின் அலுவல்களைக் கலைப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கலாம்.

கலைப்பு அலுவலரின் அதிகாரங்கள் (பிரிவு 87 மற்றும் விதி 58)

கலைப்பு அலுவலரின் அதிகாரங்கள் பிரிவு 87-லும் விதி 58-லும் விளக்கப்பட்டிருக்கின்றன. கலைப்பு உத்தரவு அமலுக்கு வந்த தேதியிலிருந்து கலைக்கப்படும் சங்கத்தின் சொத்துகள் முழுவதும் கலைப்பு அலுவலரின் பொறுப்பில் இருக்கும். கலைப்பு அலுவலர் அத்தகைய சொத்துகளை விற்பனை மூலமாகவும் அல்லது வேறு விதமாகவும் வசூல் செய்வதற்கு அதிகாரம் பெற்றவர் [பிரிவு 87 (1)]. அவர் சங்கம் கொடுக்கவேண்டிய தொகைகளுக்கான கோரிக்கைகள் தனக்கு அனுப்பப்படவேண்டுமென்று தக்க முறையில் ஓர் அறிவிப்பை வெளியிடவேண்டும். அத்தகைய எல்லாக் கோரிக்கைகளும் அத்தகைய அறிவிப்பு வெளியிடப்பட்டு இரண்டு மாதங்களுக்குள் அனுப்பப்பட வேண்டும். சங்கத்தின் கணக்குப் பதிவேடுகளில் பதிவு செய்யப்பட்ட எல்லாப் பொறுப்புகளும் கலைப்பு அலுவலரால் திருப்பிச் செலுத்தவேண்டியவைகளாகக் கருதப்படும். அதாவது கலைப்பு அலுவலர் சங்கத்தின் சொத்துகளை வசூல் செய்து சங்கத்தின் பொறுப்புகளைத் திருப்பிச் செலுத்தும்பொழுது சங்கத்தின் கணக்குப் பதிவேடுகளில் பதிவு செய்யப்பட்டிருக்கும் அத்தகைய பதிவுகளின்படி நடவடிக்கை எடுக்கவேண்டும் [விதி 58 (ஆ)]. அவர் அவ்வாறு செயல்படும்போது, அவருக்குக் கீழ்க்கண்ட அதிகாரங்களுண்டு.

(அ) சங்கத்தின் சார்பாக தன் உத்தியோகப் பெயரில் வழக்குகளைத் தொடரவும் வழக்குகளிலும் இதர நடவடிக்கைகளிலும் பிரதிவாதியாக வாதிக்கவும் அவருக்கு அதிகாரம் உண்டு.

(ஆ) சங்கத்தின் உறுப்பினர்கள் அல்லது முன்னாள் உறுப்பினர்கள் அல்லது இறந்துபோன உறுப்பினர்களின் சொத்துகளிலிருந்து அத்தகைய உறுப்பினர்களின் நியமிகள், வாரிசுகள் அல்லது சட்டப்படியான பிரதிநிதிகள் செலுத்தவேண்டிய

உதவித் தொகையையும் (Contribution) அல்லது சங்கத்தின் எந்த அலுவலர் அல்லது முன்னாள் அலுவலர் சங்கத்தின் சொத்துகளுக்குச் செலுத்தவேண்டிய உதவித் தொகையையும் அவ்வப்போது தீர்மானிக்கலாம் [பிரிவு 87 (2) (ஆ)] விதி 58 (இ)-ன் கீழ் கலைப்பு அலுவலர் கலைப்பு உத்தரவுத் தேதியன்று இருந்த சங்கத்தின் சொத்துகளையும் பொறுப்புகளையும் முடிவு செய்த பின்னர், உறுப்பினர்கள், முன்னாள் உறுப்பினர்கள், இறந்துபோன உறுப்பினர்களின் சொத்துகளிலிருந்து அவருடைய நியமிகள், வாரிசுகள் அல்லது சட்டப்படியான பிரதிநிதிகள், அல்லது சங்கத்தின் அலுவலர்கள் அல்லது முன்னாள் அலுவலர்கள் பிரிவு 87 (2)-ன்பகுதிகள் (B) and (F)-ன் கீழ் சங்கத்தின் சொத்துகளுக்குச் செலுத்தவேண்டிய உதவித் தொகையைத் தீர்மானிக்கவும் முற்படவேண்டும்.

எனினும், தேவை இருந்தால் உதவித் தொகையைக் குறித்து அவர் ஒரு துணை உத்தரவு அல்லது உத்தரவுகளைக்கூடப் பிறப்பிக்கலாம். அத்தகைய உத்தரவுகள் முதன்முதலாக அவர் உதவித் தொகை தொடர்பாகப் பிறப்பித்த உத்தரவுகளைப் போன்று நிறைவேற்றப்படும். சட்டத்தின் கீழும் விதிகளின் கீழும் கலைப்பு அலுவலர் சங்கத்தின் சொத்துகளுக்கு உறுப்பினர்களாலும் மற்றவர்களாலும் செலுத்தப்பட வேண்டிய உதவித் தொகையை அவ்வப்போது தீர்மானிக்க வேண்டும். அத்தகைய உதவித் தொகையைச் சங்கத்திற்குக் கொடுக்கப்பட வேண்டிய கடன்களுக்காகவும் விதிக்கலாம். சங்கத்தின் சொத்துகளைத் தவறாகப் பயன்படுத்திய அலுவலர்கள் அல்லது முன்னாள் அலுவலர்கள் மீதும், அவர்கள் சங்கத்திற்குச் சொந்தமான அத்தகைய பணம் அல்லது சொத்துக்குப் பொறுப்பாளிகளாகவும் அல்லது உத்தரவாதமுள்ளவர்களாகவுமிருந்திருப்பதால், அவர்கள்மீதும் உதவித் தொகையைக் கலைப்பு அலுவலர் விதிக்கலாம். கடைசியாகச் சங்கத்தின் சொத்துகளின் பற்றுக்குறையைச் சரிப்படுத்துவதற்காக வரையறுக்கப்படாத பொறுப்பையும் அல்லது உத்தரவாதப் பொறுப்பையும் அமல் படுத்துவதற்காகவும்கூட பிரிவு 78-ன்கீழ் உதவித் தொகை உத்தரவுகள் பிறப்பிக்கப்படுகின்றன. அத்தகைய உத்தரவுகள் வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்களின் செயல் முறையிலும் உத்தரவாதப் பொறுப்புச் சங்கங்களிலும் விதிக்கப்படுகின்றன.

(இ) சங்கத்திற்குச் செய்யப்படும் எல்லா நிதிக் 'கோரிக்கைகளையும் பரிசீலனை செய்து சட்டத்தின் சரத்துகளுக்குட்பட்டு கோரிக்கையைச் செய்பவர்களுக்கிடையே முதன்மையானவர்

எவர் என்ற பிரச்சினையைக்கூடக் கலைப்பு அலுவலர் முடிவு செய்யலாம்.

(ஈ) சிவில் நடைமுறைச் சட்டத்தின்கீழ் (Civil Procedure Code 1908-Central Act of 1908) ஒரு சிவில் நீதிமன்றம் செய்வதைப்போல் கலைப்பு அலுவலர் சாட்சிகள் வருவதற்கு அழைப்பாணையை அனுப்பவும் சங்கத்திற்குச் சொந்தமான அல்லது சங்கத்தின் பாதுகாப்பிலிருந்த எத்தகைய பதிவேடு களையும் கணக்குகளையும் பத்திரங்களையும் பிணைப் பத்திரங்களையும் ரொக்கப் பணங்களையும் அல்லது இதர சொத்துகளையும் முன்னிலைப் படுத்துவதற்கும் அழைப்பாணை அனுப்பலாம். இந்த அதிகாரங்கள் 65 அல்லது 66-ன் கீழ் நியமிக்கப்பட்ட விசாரணை அலுவலர்களுக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களைவிடப் பரந்தவை களாக இருக்கின்றன.

(உ) இச் செயலுக்காகச் செய்யப்பட்ட எந்த விதிகளுக்கு முட்பட்டு சங்கத்திற்குச் செய்யப்படும் நிதிக் கோரிக்கைகளைச், சங்கம் கலைக்கப்படும் தேதி வரை கொடுக்கப்பட வேண்டிய வட்டி உட்பட, முதன்மை வரிசைக் கிரமம் ஏதாவது இருந்தால் அதன் படி முழுமையாகவும் அல்லது சங்கத்தின் சொத்துகள் அனுமதிக்கும் வகையில் விகிதாச்சாரமாகவும் செலுத்தலாம். அப்படிச் செலுத்திய பின்னர் ஏற்படும் உபரித் தொகையை, அவர் நிருணயிக்கும் விகிதப்படி, எப்படி இருந்தாலும் ஒப்பந்த விகிதத் திற்கு மேற்படாமல், கலைப்பு உத்தரவுத் தேதியிலிருந்து, வட்டி பட்டுவாடா செய்வதற்குப் பயன்படுத்தலாம்.

(ஊ) கலைப்புச் செலவை எந்தெந்த நபர்கள் எந்தெந்த அளவுக்கு ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பதையும் கலைப்பு அலுவலர் தீர்மானிக்கலாம். தற்போதுள்ள வழக்கத்தின்படி கலைப்புச் செலவுகள் நபர்கள் மீது விதிக்கப்படுவதில்லை.

தற்போது அமலில் இருக்கும் துறை அறிவுரைகளின் படி கலைப்புச் செலவுகள் கலைக்கப்பட்ட சங்கத்தில் மொத்த வசூல் களில் 10 சதவீதம் விதிக்கப்படுகிறது. இந்த 10 சதவீதத்தில் வசூலில் 7½ சதவீதத்திற்குக் குறையாத தொகை, கலைப்புச் செலவிற்காக, அரசாங்கத்திற்கு வரவு வைக்கப்படுகிறது. மீதித் தொகை மாவட்டக் கலைப்பு நிதி (District Liquidation Fund) என்று அழைக்கப்படும் ஒரு கணக்கிற்கு வரவு வைக்கப்படுகிறது. இந்த நிதியில் இருக்கும் தொகையைச் சாதல்வார் செலவு களுக்கும் கலைக்கப்பட்ட சங்கத்தின் உத்தியோகப் பற்றற்ற ஊழியர்களுக்குச் சம்பளம் பட்டுவாடா செய்வதற்கும் பயன்

படுத்தலாம். கீழ்க் குறித்த வசூல் இனங்கள் கலைப்புக் கட்டண விதிப்பிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கின்றன.

(1) கலைப்பு அலுவலரால் வாங்கப்பட்ட சொத்துகள் விற்பனை செய்யப்பட்டால் அத்தகைய சொத்துகளின் விற்பனைத் தொகை முழுவதன் மீது கலைப்புக் கட்டணங்கள் விதிக்கப்படாமல், கலைப்பு அலுவலரால் அத்தகைய சொத்துகள் வாங்கப்பட்ட விலைக்கும் மேற்பட்டு விற்பனைத் தொகையிருந்தால் அத்தகைய மேற்பட்ட தொகையின் மீதுதான் கலைப்புக் கட்டணம் விதிக்கப் பட வேண்டும்.

(2) வசூலிக்க முடியாமல் வராக் கணக்கில் சேர்க்கப் பட்ட சொத்துகளும் கலைப்புக் கட்டணங்கள் விதிப்பிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கின்றன.

கலைப்புக் கட்டணங்கள் இதர இனங்களைச் சேர்த்துக் கீழ்க் கண்ட இனங்கள் மீது விதிக்கப்படுகின்றன.

(i) சங்கத்தின் முன்னுள் நிருவாகிகளிடமிருந்து கலைப்பு அலுவலர் பொறுப்பு ஏற்றுக் கொண்ட ரொக்கக் கையிருப்பு.

(ii) சங்கம் முதலீடு செய்திருந்த பங்கு மூலதனத்தின் மீது கிடைத்த இலாப ஈவு.

(iii) கலைப்பு அலுவலரால் வாங்கப்பட்ட சொத்துகளின் மதிப்புக்கு ஈடு செய்யும் வகையில் தவணை தவறிய பங்கு தாரர்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட பாக்கித் தொகை.

(iv) கலைப்பு அலுவலரால் வசூல் செய்யப்பட்ட சுயேச்சையான உதவித் தொகைகள் (Voluntary Contribution).

(v) நிதி வங்கியிடமிருந்து கடன் வாங்கிய சங்கங்களிலும் அல்லது மொத்த விற்பனை ஸ்டோர்ஸ் சங்கங்களிலும் இந்தச் சங்கங்கள் நிதி வங்கியில் முதலீடு செய்திருந்த பங்கு மூலதனத் தொகையும் வேறு முதலீடுகளும், அத்தகைய நிதி வங்கிக்குப் பாக்கியாக உள்ள தொகை வரை மட்டும்.

(vi) நிதி வங்கியில் முதலீடு செய்யப்பட்ட சேமிப்பு நிதியின் மீதி வசூலான வட்டித் தொகை.

(vii) எல்லா அனுமத்து இனங்கள் (Suspanse items)

(viii) அரசாங்கம் மட்டும் ஒரே ஒரு கடனாளியாகயிருக்க நேர்ந்தால் வசூல்கள் முழுமையும்.

(ix) வழக்கு மன்றக் கட்டணங்கள் (Curt Cost) வசூலிக்கப் பட்டால், அத்தகைய கட்டணங்கள், கலைப்பு அலுவலர் கலைக்கப்பட்ட சங்கத்தின் சொத்துகளை வசூல் செய்யும் போது, செலவு செய்யப்பட்டாலும் அல்லது செலவு செய்யப்படாமல் சங்கத்தின் சொத்தாகச் சங்கத்தின் கலைப்புத் தேதியில் காண்பிக்கப் பட்டாலும், கலைப்பு அலுவலர் சங்கத்தின் பொறுப்பையேற்ற தேதியில் வசூல் ஆகாமலிருந்த வழக்கு மன்றக் கட்டணங்கள் மீது கலைப்புக் கட்டணங்கள் விதிக்கப்பட வேண்டும்.

இந்தக் கட்டணங்கள் குறிப்பிட்ட ஓர் இடைவேளையில், அதாவது மாதமொருமுறை வசூலிக்கப்படுகின்றன. அத்தகைய கட்டணங்கள் கலைப்பு அலுவலரால் வசூலிக்கப்படும் தொகை களின் மீது முதன்முதலாகக் கழிக்கப்பட வேண்டியவையாகும்.

(எ) எந்த ஒரு நபரையும் அவர் உறுப்பினரா அல்லது முன்னாள் உறுப்பினரா, அல்லது இறந்துபோன உறுப் பினரின் நியமியா (nominee) என்பதைக் கலைப்பு அலுவலர் தீர்மானிக்கலாம்.இந்த அதிகாரம் 1961ஆம் வருடத்தியச் சட்டத் தின்கீழ் கொடுக்கப்பட்ட ஒரு புதிய அதிகாரமாகும்.

(ஏ) சங்கத்தின் அலுவல்களைக் கலைப்பதற்குத் தேவையான முறையில் சங்கத்தின் சொத்துகளை வசூலிப்பதற்கும் விநியோகம் செய்வதற்குமான கட்டளைகளைக் கலைப்பு அலுவலர் வெளி யிடலாம்.

(ஐ) சங்கத்தைப் பயனுள்ள முறையில் கலைப்பதற்காகத் தேவைப்படும் காலம் வரை சங்கத்தின் தொழிலை நடத்தலாம். இந்த அதிகாரம் அபூர்வமாகக் கையாளப்பட வேண்டியிருக்கும். சில சமயங்களில் மட்டும்தான் இது தேவைப்படும். உதாரணமாக ஒரு ஸ்டோர்ஸ் சங்கத்தில் விற்பனையாகாத ஒப்படைக்கப்பட்ட சரக்குகளை விற்பனை செய்தலும், ஒரு கைத்தறி நெசவாளர் சங்கத்தில் கைத்தறித் துணி நெய்வதற்காக நூல் வழங்குதலும்.

(ஒ) பதிவாளரின் முன் அங்கீகாரத்தைப் பெற்று, விதி 58 (2)-ன் கீழ் கடனாளிகளுடனும் அல்லது சங்கத்தின் மீது கோரிக்கை செய்யும் நபர்களுடனும் சமாதான உடன்படிக்கை செய்யவும் அல்லது இதர ஏற்பாடுகள் செய்யவும் கலைப்பு அலுவலருக்கு அதிகாரம் உண்டு. அதாவது சங்கத்திற்குச்

செய்யப்படும் நிதி கோரிக்கைகளைக் குறித்து ஒரு சமாதான ஏற்பாட்டினைக் கலைப்பு அலுவலர் செய்யலாம்.

(ஓ) பதிவாளருடைய முன் அங்கீகாரத்தைப் பெற்று விதி 58 (2)-ன்படி சங்கத்தினுடைய சொத்துகளுக்கு உதவித் தொகை அளிக்கும் பொறுப்புள்ளவர்களுடன் சமாதான ஏற்பாடு செய்து கொள்ளக் கலைப்பு அலுவலருக்கு அதிகாரம் உண்டு.

மேற்சொன்ன (ஒ), (ஓ) பகுதிகளில் குறிக்கப்பட்ட அதிகாரங்கள் கூட்டுறவுச் சட்டக் குழுவினரால் யோசனை கூறப் பட்டவை. மாநிலங்களிலுள்ள சில கூட்டுறவுச் சட்டங்கள், கடனாளிகளுக்கும் சங்கத்தின் உறுப்பினர்களுக்கும் சங்கத்திற்கு மிடையே சமாதான ஏற்பாடு செய்வதற்காகக் கலைப்பு அலுவலருக்கு அதிகாரங்கள் வழங்கச் சரத்து செய்யப்படவில்லை என்று அக் குழுவினர் கண்டார்கள். கலைப்பு நடவடிக்கைகளை விரைவுபடுத்துவதற்கு அத்தகைய அதிகாரம் கலைப்பு அலுவலருக் குக் கொடுக்கப்பட வேண்டியது தேவை என்று அவர்கள் கருதி, மாதிரிக் கூட்டுறவு மசோதாவில் 69ஆம் பகுதியில் கலைப்பு அலுவலரின் அதிகாரப் பட்டியலில் இந்த அதிகாரத்தையும் சேர்த்தனர். சட்டத்தில் இந்தப் பகுதியைப் புகுத்துவதற்கு முன்னரே கடந்த காலத்தில் அத்தகைய சமாதான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தாலும், கூட்டுறவுச் சட்டக் குழுவினர் அத்தகைய சமாதான ஏற்பாட்டிற்கு சட்டப்படியான ஓர் ஒப்புதலையளித்துச் சங்கத்தின் அலுவல்களைக் கலைப்பதற்காகக் கலைப்பு அலுவலருக்குக் கொடுக்கப்படும் அதிகாரங்களில் ஒன்றாக இந்த அதிகாரத்தைச் சேர்த்திருக்கின்றனர். இந்த அதிகாரங்கள் விதி 58 (2)-ன் கீழ், பதிவாளருடைய முன் அங்கீகாரத்தைப் பெற்ற பின்னரே கையாள வேண்டுமென்று குறிப்பாக விதிக்கப் பட்டிருக்கின்றன. உண்மையாகவே, கலைப்பு அலுவலரின் எல்லா அதிகாரங்களும் பிரிவு 87 (2)-ல் குறிக்கப்பட்டபடி பதிவாளரின் பொதுவான ஆதிக்கத்திற்குட்பட்டவையாகவே இருக்கின்றன.

மேற்சொன்ன பகுதி (ஒ)-ன் கீழ், கலைப்பு அலுவலர் சங்கத்திற்கு எதிராக நிதி கோரிக்கை செய்யும் கடனாளிகளுடன் ஒரு சமாதான ஏற்பாட்டினடிப்படையில் தொகையைப் பட்டுவாடா செய்வதற்கு ஏற்பாடு செய்யலாம். பகுதி (ஓ)-ன் படி, கலைப்பு அலுவலர் சங்கத்திற்குக் கொடுக்க வேண்டியவர்களுடன் சமாதான ஏற்பாடு செய்த பிறகு சமாதானத்தின்படி கொடுக்கவேண்டிய தொகையை ஏற்றுக் கொள்ளலாம். அதாவது கலைப்பு அலுவலர் சங்கத்திற்குக்

கொடுக்கப்படவேண்டிய பங்கு மூலதன பாக்கிகளேயும், உத்தர வாதப் பொறுப்புச் சங்கங்களில் உறுப்பினர் கொடுக்க வேண்டிய பாக்கி உத்தரவாதப் பங்கு மூலதனத்தையும், வசூல் செய்யலாம்.

சங்கத்திற்குக் கொடுக்கப்படவேண்டிய கடன்களைக் குறித்தும், அல்லது கவனமின்மையாலும், நம்பிக்கைத் துரோகத்தாலும், தவருன செயல்களாலும், செய்யவேண்டியதைச் செய்யத் தவறியதாலும் ஏற்பட்ட தொகைகளைக் குறித்தும் கலைப்பு அலுவலர் சமாதான ஏற்பாடு செய்து தொடர்பான நபர்கள் மீது ஓர் உதவித் தொகை உத்தரவைப் (Contribution Order) பிறப்பிக்கலாம். அத்தகைய தொகைகள் ஒரு சங்கம் கலைக்கப்பட்ட தேதியில் சங்கத்திற்குப் பாக்கியாகவும் இருக்கலாம் அல்லது சங்கத்தைக் கலைக்கும்பொழுது சங்கத்திற்குப் பாக்கி யாகக் காணப்பட்ட தொகையாகவும் இருக்கலாம். எல்லாச் சூழ்நிலைகளிலும், சமாதான ஏற்பாட்டின்படி எந்தத் தொகையையும் பெற்றுக்கொள்வதற்குக் கலைப்பு அலுவலருக்கு உளத்தேர்வு இருக்கிறது. அத்தகைய உளத்தேர்வைப் பதிவாளரின் அதிகாரத்திற்குட்பட்டுதான் கலைப்பு அலுவலர் கையாளமுடியும்.

### 6. கலைப்பு அலுவலரால் கையாளப்படவேண்டிய நடைமுறை (Procedure to be followed by Liquidator)

சங்கத்தின் பதிவேடுகளேப் பொறுப்பேற்றுக்கொள்வதும் தன்னுடைய பதவி ஏற்பை அறிவிப்பு செய்தலும்: பிரிவு 85 (2)-ன் கீழ் அமைக்கப்பட்ட கலைப்பு அலுவலர் உடனே சங்கத்தின் ரொக்கக் கையிருப்பையும், கணக்குகளையும், பதிவேடுகளையும், சங்கத்தின் பத்திரங்களையும், இதர பத்திரங்களையும் பொறுப் பேற்றுக்கொள்ள வேண்டும். அவ்வாறு பொறுப்பேற்றுக் கொள்வது அவராலோ, அல்லது அவரால் பொதுவாக அங்கீகரிக்கப்பட்ட கீழ்நிலை அலுவலராலோ செய்யப்படலாம். முன்னரே கூறியபடி, கலைப்பு அலுவலர் சங்கத்திற்கு எதிரே செய்யப்பட வேண்டிய எல்லா நிதிக் கோரிக்கைகளையும் தனக்கு இரண்டு மாதங்களுக்குள் அனுப்பிவிட வேண்டும் என்று ஒரு விளம்பரம் தக்க முறையில் பிரசுரிக்க ஏற்பாடு செய்ய வேண்டும் [விதி 58 (ஆ)]. பிறகு விதி 58 (இ)-ன்கீழ் அவர் உதவித் தொகை உத்தரவுகளைப் (Contribution Orders) பிறப்பிக்கத் தொடங்க வேண்டும். சங்கத்தின் சொத்துகளை வன்தாக்கு இல்லாமல் விரைவாக வசூல் செய்வதற்கு ஏற்பாடு செய்யவும் சங்கத்திற்குப் பாக்கியாக உள்ள கடன்களைப் பற்றித் தேவையான

விசாரணையைச் செய்யவும் தன் கீழ்நிலை அலுவலரை அவர் அனுப்பலாம். அவர் எழுத்துமூலம் ஒரு பொது உத்தரவின்மூலம் அல்லது தனி உத்தரவின்மூலம் தன் சார்பாக வசூல்கள் செய்வதற்கும் வசூலுக்காகச் சரியான ரசீதுகள் கொடுப்பதற்கும் தன் கீழ் அலுவலருக்கு அதிகாரம் அளிக்கலாம் [விதி 58 (இ)]. கலைப்பு அலுவலரின் வசமிருக்கும் எல்லா நிதிகளும் அரசாங்கக் கருவூலத்திலாவது அல்லது அஞ்சல் நிலையத்திலாவது சேமிப்பு வங்கிக் கணக்கிலாவது அல்லது ஒரு நிதி வங்கியிலாவது அல்லது பதிவாளரால் அங்கீகரிக்கப்பட்ட வேறு வங்கியிலாவது அல்லது வேறு நபரிடமாவது வைக்கப்பட வேண்டும். இந்தக் கணக்கு, கலைப்புஅலுவலரின் பெயரில் இருக்கவேண்டும் [விதி 58 (எப்)].

**சங்கத்தின் சொத்துகளை வசூலித்தல்:** சங்கத்திற்குப் பாக்கியாக உள்ள கடனைச் சுலபமாக வசூலிக்க முடியாவிட்டால் கலைப்பு அலுவலர் உதவித் தொகை உத்தரவுகளைப் (Contribution Orders) பிறப்பிக்கலாம். ஓர் உதவித் தொகை உத்தரவு பிறப்பிப்பதற்கு முன்னர் தொடர்புடைய பாக்கிதாரருக்கு ஓர் அறிவிப்பு அனுப்ப வேண்டும். பாக்கிதாரர் தன் விளக்கத்தைத் தெரிவிப்பதற்கான தேதி, காலம், இடம் ஆகியவையும் தெரிவிக்கப்பட வேண்டும். இறந்துபோன உறுப்பினரின் பிரதிநிதிகளுக்கு அனுப்பப்படும் அறிவிப்பு அல்லது அழைப்பாணையில் இறந்துபோன உறுப்பினரின் சொத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகை சங்கத்தின் சொத்துகளுக்காக ஏன் செலுத்தக் கூடாது என்பதற்குக் காரணம் காட்டுமாறு அவர்கள் கேட்கப்படலாம். நிருணயிக்கப்பட்ட தேதியன்று தொடர்புடைய தரப்பினர்களை விசாரித்து அல்லது தொடர்புடைய தரப்பினர் வராமலிருந்தால், அவர்களுடன் ஆலோசனை செய்து கலைப்பு அலுவலர் தன் உத்தரவைப் பிறப்பிக்க நடவடிக்கை எடுக்கலாம். ஓர் உதவித் தொகை உத்தரவு பிறப்பிக்கப்படும் பொழுது, தொடர்புடைய கட்சியினருக்கு அந்த உத்தரவு பதிவு அஞ்சல் மூலம் உடனே தெரியப்படுத்தப்பட வேண்டும். தொடர்புடைய கட்சியினர் விரும்பினால் பதிவாளருக்கு, உத்தரவுத் தேதியிலிருந்து இரண்டு மாதங்கள் முடிவடையு முன்னர் மேல்முறையீடு செய்துகொள்ளலாம் [பிரிவு 96 (2) (ஆ)].

மேல்முறையீட்டு அலுவலர் கலைப்பு அலுவலரின் உத்தரவை மாற்றுவதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார் (பிரிவு 97). மறுதீர்ப்புக்குப் பிரிவு 98-ன் கீழ் அதிகாரம் உண்டு. இந்த உதவித் தொகை உத்தரவுகள் நீதிமன்றத்தின் மூலமாவது அல்லது கூட்டுறவுத் துறையின் மூலமாவது நிறைவேற்றப்படுகின்றன.

உறுப்பினர்களிடமிருந்து வரவேண்டிய தீர்ப்பாணை, வழங்கப் படாத கடன்கள் எல்லாவற்றையும் குறித்துப் பொதுவாக உதவித்தொகை உத்தரவுகள் பிறப்பிக்கப்படுகின்றன. கலைப்பு அலுவலர் அடைமானக் கடன்களுக்காக அடைமானத் தொகை உத்தரவையும் பிறப்பிக்கலாம். டிக்கிரிகள் வாங்கப்பட்ட கடன் களில், தீர்ப்பாணைகளை நிறைவேற்றுவதற்கு அனுப்பிவிடா மலிருந்தால் அந்தச் சூழ்நிலையிலும் தேவைப்பட்டால் உதவித் தொகை உத்தரவுகள் பிறப்பிக்கப்படலாம். இல்லாவிடில் அந்தத் தீர்ப்பாணைகளை நிறைவேற்றுவதற்கு அப்படியே அனுப்பி விடலாம். கலைப்புக் கட்டணத்திற்காகத் தேவைப்பட்டால் தனிப்பட்ட உதவித் தொகை உத்தரவுகள் பிறப்பிக்கப்படலாம். முன்னரே நிறைவேற்றுதலிலிருக்கும் தீர்ப்பாணைகளிலும்கூட நிறைவேற்றுதல் நடவடிக்கைகள் தொடரப்படலாம். தேவைப் பட்டால் நிறைவேற்றுதல் கட்டணத்தை வசூல் செய்வதற்கும் தனிப்பட்ட உதவித் தொகை உத்தரவுகள் பிறப்பிக்கப்படலாம்.

ஒரு சங்கத்தைக் கலைக்கும்பொழுது, சங்க அமைப்பில் அல்லது நிருவாகத்தில் பங்கெடுத்துக்கொண்ட எந்த நபரும் அல்லது எந்தச் சங்க அலுவலரும் சங்கத்தின் பணம் அல்லது சொத்தைக் கையாடல் செய்திருந்தால் அல்லது மோசடியாகத் தன் வசம் வைத்திருந்தால் அல்லது சங்கத்திற்கு நம்பிக்கைத் துரோகம் செய்திருந்தால் நம்பிக்கைத் துரோகத்தின் மூலமாகச் சங்கத்தின் சொத்துகளுக்குப் பற்றுக்குறை ஏற்படுத்தினால் அல்லது சட்டம், விதிகள் அல்லது உப-விதிகள் இவைகளின் கீழ் விரோத மாகப் பணம் பட்டுவாடா செய்திருப்பதாகத் தெரியவந்தால், கலைப்பு அலுவலர் அத்தகைய நபர்களுடைய நடத்தையைப் பரிசீலனை செய்வதற்குப் பதிவாளருக்கு விண்ணப்பம் செய்து [பிரிவுகள் 71 (1)], அந்த நபரைச் சங்கத்தின் சொத்துகளுக்கு உதவித் தொகையைச் செலுத்தக் கட்டளையிடலாம். இந்தத் தொகை அவர் கையாண்ட தொகைக்கு ஈடாக இருக்க வேண்டும் [பிரிவு 71 (1)].

**வரையறுக்கப்படாத பொறுப்பை நிறைவேற்றுதலும், உதவித் தொகை உத்தரவுகளைப் பிறப்பித்தலும் :** ஒரு கலைப்பு சங்கத்தினிடமி ருந்து கடன் வாங்கியவர்களின் பாக்கித் தொகையும் அச் சங்கத்தின் இதர சொத்துகளும் சங்கத்தின் வெளிப்பொறுப்பு களைத் தீர்ப்பதற்குப் போதுமானவையாக இல்லை என்று தெரிந்தால் கீழ்க்கண்டவர்களிடமிருந்து உதவித் தொகை மூலம் பற்றுக்குறையைச் சரிப்படுத்தலாம்.

(i) கலைப்புத் தேதியன்று இருந்த சங்கத்தின் உறுப்பினர்கள்.

(ii) சங்கத்தின் கலைப்பு தேதிக்கு முன்னர் இரண்டு வருடங்களுக்குள் உறுப்பினர்கள் பதவியை விட்டுவிட்ட முன்னாள் உறுப்பினர்கள்.

(iii) சங்கத்தின் கலைப்பு தேதிக்கு முன்னர் இரண்டு வருடங்களுக்குள் இறந்துபோன உறுப்பினர்களின் சொத்து, முன்னாள் உறுப்பினர்களிடமும் இறந்துபோன உறுப்பினர்களிடமும் உறுப்பினர் பதவியை விட்டுவிட்ட தேதியன்று அல்லது மரணம் அடைந்த தேதியன்று இருந்த சங்கம் கொடுக்கவேண்டிய கடன்களைக் குறித்து மட்டும்தான் அவர்கள் உதவித் தொகை அளிக்கப் பொறுப்பாளிகளாவர். ஆனால், மேற்சொன்ன இரண்டு சூழ்நிலைகளிலும், சங்கம் வாங்கியிருக்கும் கடன்களைக் குறித்த பொறுப்பு, கலைப்பு நடவடிக்கைகள் முழுவதும் முடிவு பெறும்வரை, தொடர்ந்திருக்கும் [பிரிவு 25 (1)-ம்(2)-ம்].

ஒரு வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கத்தில் எந்த உதவித் தொகை உத்தரவும் சங்கத்திற்கு உறுப்பினர் கொடுக்க வேண்டிய பங்குத்தொகை எச்சத்திற்கு மேற்பட்டு விதிக்கப்பட முடியாது. உத்தரவாதப் பொறுப்பு வரை மட்டும்தான் உதவித் தொகை உத்தரவுகளைப் பிறப்பிக்க முடியும். இந்த உத்தர வாதப் பொறுப்பு, உறுப்பினர் எடுத்திருந்த பங்குத் தொகைக்குப் பல மடங்குகளாகவும் அல்லது ஒரு குறிப்பிட்ட தொகையாக வும், இருக்கலாம். வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தின் செயலில், கலைப்பு அலுவலர் உறுப்பினர்கள் மீதும் அல்லது முன்னாள் உறுப்பினர்கள் மீதும், அல்லது இறந்துபோன உறுப்பினர்களின் சொத்துகள்மீது அவரது சொத்துகளின் எல்லைக்குட்பட்டு, உதவித் தொகை உத்தரவுகளைப் பிறப்பிக்க லாம். ஆனால், கலைப்புச் சங்கத்தில் ஏற்பட்டிருக்கும் பற்றாக் குறையைப் பணக்காரராகவும் நிறைந்த வருவாயுள்ளவர் களாகவுமுள்ள ஒருசில நபர்களிடமிருந்து மட்டும் வசூலிப்பது நியாயமாக இராது. வரையறுக்கப்படாத பொறுப்பை நிறைவேற்றுவதற்காக பிறப்பிக்கப்படும் அத்தகைய உதவித் தொகை உத்தரவுகள் முழு விசாரணை செய்த பிறகு உறுப்பினர் களிடமிருந்து நியாயமான முறையில் விதிக்கப்படவேண்டும். ஒருசில பணக்கார உறுப்பினர்களை மட்டும் தண்டிக்கும் வகையில் இந்த உதவித் தொகை உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன என்ற ஒரு கருத்தை அல்லது பயத்தை உண்டுபண்ணும் வகையில் உதவித் தொகை உத்தரவுகள் பிறப்பிக்கப்படக்கூடாது.

சங்கத்திற்குப் பாக்கியாகவுள்ள கடன்களையும் சங்கத்தின் இதர சொத்துகளையும் வசூல் செய்வதற்குத் தக்க நடவடிக்கைகள்

முழுமையாக எடுத்த பின்னர்தான் பற்றுக்குறையைச் சரிப்படுத்துவதற்கு எந்தவிதமான உதவித் தொகை உத்தரவுகளும் விதிக்கப்படவேண்டும். இடையில் கலைப்பு அலுவலர் சுயேச்சையாகவாவது அல்லது பிரிவு 108-ன் கீழாவது உதவித் தொகை அளிக்க வேண்டியவர்களிடமிருந்து போதுமான பிணையத்தை வாங்கிக் கொள்ளலாம். பிரிவு 108-ன் கீழ் கலைப்பு அலுவலரின் விண்ணப்பத்தின் பேரில், பதிவாளர் ஒரு நபர் சங்கத்தின் சொத்துகளுக்குப் பிரிவு 87 (2) (3)-ன்கீழ் கொடுக்கவேண்டிய உதவித் தொகையைத் தீர்மானிப்பதற்காகக் கலைப்பு அலுவலர் எடுக்கும் நடவடிக்கைகளில் அந்த நபர் போதுமான ஆதாரம் அளிக்கவில்லையானால் உதவித் தொகை உத்தரவு பிறப்பிக்க உத்தேசிக்கப்படும் அத்தகைய நபர் அல்லது நபர்களின் சொத்தை, நிபந்தனைக்குட்பட்ட ஜப்தி (Conditional Attachment) செய்யக் கட்டளையிடலாம்.

கலைப்பு அலுவலர் ஒரு நபரின் நடத்தையின் காரணமாக சங்கத்திற்கு விளைந்த நட்டத்திற்காக உதவித் தொகை உத்தரவு அவர்மீது பிறப்பிப்பதற்கு முன்னர் அத்தகைய நபரின் நடத்தையை விசாரணை செய்வதற்காக பிரிவு 71-ன் கீழ் பதிவாளருக்கு ஒரு விண்ணப்பம் செய்துகொண்டால், கலைப்பு அலுவலர் அத்தகைய நிபந்தனையுள்ள ஜப்தி செய்வதற்கும் பதிவாளருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாம். நபர்கள் தாங்கள் உதவித் தொகையைச் செலுத்துவதைத் தடுத்துக் கொள்ளும் நோக்கத்துடன் தங்கள் சொத்துகளைப் பாராதீனம் அல்லது விற்பனை செய்வதைத் தடுப்பதற்காக, இந்த நிபந்தனையுள்ள ஜப்தியைக் கோரி கலைப்பு அலுவலர் பதிவாளருக்கு விண்ணப்பம் செய்கிறார். பிரிவு 71-ன் கீழ் ஒரு நபரின் நடத்தைக்காக அவர் மீது உதவித் தொகை உத்தரவு பிறப்பிக்க உத்தேசிக்கப்படும்பொழுது அத்தகைய உத்தரவை உடனே நிறைவேற்றவேண்டும். இல்லாவிடில் தன் கெட்ட நடத்தையாலும் கவனின்மையினாலும் சங்கத்திற்கு ஏற்பட்ட நட்டத்திற்குப் பொறுப்பாளிகளாக உள்ள நபர்கள் தப்பித்துக்கொள்ள முயலுவார்கள். அப்படித் தப்பித்துக்கொண்டால் சங்கத்தில் ஒரு கெட்ட விளைவு ஏற்பட்டு கெட்ட நடத்தைக்குத் தண்டனையில்லாமல் போய்விடும்.

வரையறுக்கப்படாத பொறுப்பை நிறைவேற்றுவதற்கான உதவித் தொகை உத்தரவுகளைப் பிறப்பிப்பது, விவசாய நாணயச் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்ற கருத்து நிலவும் இந் நாளில்,

முக்கியத்துவத்தை இழந்து விட்டது. மகாராஷ்டிர மாநிலம் போன்ற சில மாநிலங்களில் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையில் இருப்பதுபோல் மற்ற மாநிலங்களிலும் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையில் இயங்கினுல், வரையறுக்கப்படாத பொறுப்பை நிறைவேற்றுவதற்கான உதவித் தொகை உத்தரவுகளைக் கலைப்பு அலுவலர் பிறப்பிக்கும் பிரச்சினையே எழாது. ஆனுல், வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்கள் கலைக்கப்படும்பொழுது, வரையறுக்கப்படாத பொறுப்பானது உறுப்பினர்கள்மீது நியாயமான முறையில் நிறைவேற்றப்பட வேண்டும்.

வரையறுக்கப்படாத பொறுப்பை நிறைவேற்றுவதற்கான கலைப்பு அலுவலர் உதவித் தொகை உத்தரவுகளைப் பிறப்பிப்பதில் கீழ்க்கண்ட செய்திகளைக் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

(1) காலாவதியான கடன்களைப் பொறுத்தவரை கடன் வாங்கியவர்கள்மீது அவர்கள் கொடுக்கவேண்டிய பாக்கித் தொகைகளுக்கு வரையறுக்கப்படாத பொறுப்பு நிறைவேற்றப்படவேண்டும். கடன்கள் காலாவதியானதும் அக் கடன்களைத் திருப்பிச் செலுத்தக் கடன் வாங்கியவர்கள் தரும ரீதியாகக் கடமைப்பட்டிருக்கின்றுர்கள்.

(2) பொய்க் கடன்கள் கொடுத்தும், கடன் வாங்கியவர்களிடமிருந்து வசூலித்த தொகைகளைச் சரிவரக் கணக்கில் வரவு வைக்காமலும், கடன்களைத் தங்கள் நண்பர்களுக்கும் உறுப்பினர்களுக்கும் விநியோகம் செய்தும், சங்கத்தின் அலுவல்களைத் தவருக நிருவாகம் செய்ததாக நிரூபிக்கப்பட்ட நபர்கள் தங்களால் சங்கத்திற்கு விளைந்த நட்டத்தின் அளவுக்குச் சங்கங்களின் சொத்துகளுக்கு உதவித் தொகை அளிக்கக் கட்டளையிடப்படவேண்டும்.

(3) வெளிக் கடன்களுக்குக் கொடுக்க வேண்டிய தொகையில் பற்ருக்குறை ஏற்பட்டால், கொடுக்கும் சக்தியுள்ள நபர்களிடமிருந்து அது நியாயமான முறையில் வசூலிக்கப் பட வேண்டும்.

(4) உதவித் தொகை அளிக்க வேண்டியவர் தக்க பிணையம் கொடுப்பவராகவோ அல்லது உதவித் தொகையைச் செலுத்துபவராகவோ இருந்தால் அவர் நியாயமான காலம் அதாவது இரண்டு அல்லது மூன்று மாத காலத்தில் கொடுக்கப்

பட வேண்டும். உதவித் தொகை விரைவாகச் செலுத்தப் பட்டால் உதவித் தொகையில் 25% வரை விலக்கு கொடுக்கப் பட வேண்டும். அதற்குப் பின்னர் தான் நிறைவேற்றுதல் நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும்.

(5) சில அபூர்வ சூழ்நிலைகளில், அதாவது சங்கம் வாங்கி யிருக்கும் கடன்களைத் திருப்பிக் கொடுக்க முடியாதிருந்தால், இரண்டாவது முறையாகக் கூட உதவித் தொகை உத்தரவைப் பிறப்பிக்கலாம்.

(6) அப்படிச் செய்தும், ஒரு பற்றுக்குறை இருந்தாலும் அல்லது வசூல் செய்வது சாத்தியப்படாமலிருந்தாலும் சங்கம் நிதி வங்கிக்குக் கொடுக்கவேண்டிய பாக்கித் தொகையை எடுத்து விட்ட பிறகு (write off) கலைப்பு அலுவலர் சங்கத்திற்கு ஆலோசனை கூறுகிறார்.

காலாவதிச் சட்டம் (Law of Limitation) தீர்ப்பாணைகளுக்கும் உதவித் தொகை உத்தரவுகளுக்கும் பொருந்துமாதலால் (Appli cable), இவை காலாவதி ஆகாமலிருப்பதை உத்தேசித்துக் காலாவதிக் காலத்திலேயே கலைப்பு அலுவலர் அவைகளின் நிறைவேற்றுதல் நடவடிக்கை எடுக்கவேண்டும். அவர் அடைமானக் கடன்களில் குறிப்பாக உன்னிப்பாக இருக்க வேண்டும். ஏனென்றால், மூல தீர்ப்பாணை காலாவதியானால் அடைமானச் சொத்தின் பேரிலிருக்கும் தொகை இல்லாமற் போய்விடும். அந்தச் சூழ்நிலையில் ஒரு புதிய உதவித் தொகை உத்தரவின் மூலம் அடைமானத்தின்மீது ஒரு தொகையை ஏற்படுத்த முடியாது. ஆகையால், கலைப்பு அலுவலர் விழிப்புடன் இருந்து அந்தக் கடனும் காலாவதியாகாமலிருக்குமாறு பார்த்துக் கொள்ளவேண்டும்.

சொத்துகளின்மீது செய்யப்படும் நிபந்தனையுள்ள ஜப்தி தேவையற்ற நீண்ட காலம் வரை அமலிலிருப்பதை அனுமதிக்கக் கூடாது. ஏனென்றால், அது தொடர்பான நபர்களுக்குப் பெருத்த துன்பத்தை விளைவிக்கும். இயல்பாக, நிபந்தனையுள்ள ஜப்தி உத்தரவுத் தேதியிலிருந்து மூன்றிலிருந்து ஆறு மாதங் களுக்குள் ஓர் உதவித் தொகை உத்தரவைப் பிறப்பிப்பதற்குக் கலைப்பு அலுவலருக்குச் சாத்தியமாக இருக்கவேண்டும். உதவித் தொகை உத்தரவு பிறப்பிக்கப்பட்ட உடனே நிபந்தனையுள்ள ஜப்தி உறுதி செய்யப்பட்டு அது ஓர் ஒழுங்கான ஜப்தி உத்தரவாகி விடுகிறது. கலைப்பு அலுவலர் அப்போது சொத்தை விற்பனைக்குக்

கொண்டுவருவதன் மூலம் உதவித் தொகை உத்தரவுத் தொகையை வசூல் செய்யக்கூடும்.

கலைப்புச் சங்கத்தின் சொத்துகளுக்காகச் சுயேச்சையான உதவித் தொகையைக் கலைப்பு அலுவலர் பெற்றுக்கொள்வதில் ஆட்சேபனை ஒன்றுமில்லை. அத்தகைய தொகைக்கு அவர் ரசீது வழங்கலாம். அவ்வாறு உதவித் தொகை உறுப்பினர்கள் கொடுப்பது ஒவ்வொரு நபரும் ஒரு குறிப்பிட்ட தொகையைச் சங்கத்திற்கு உதவித் தொகையாக அளிக்க வேண்டுமென்று செய்துகொள்ளும் ஓர் ஏற்பாட்டை அனுசரித்தே செய்யப் பட்டால் கலைப்பு அலுவலர் உதவித்தொகை உத்தரவைப் பிறப்பிக்கும் சங்டத்திலிருந்து காப்பாற்றப்படுகிறார். அத்தகைய ஏற்பாடு எழுத்து மூலம் செய்யப்பட வேண்டும்.

தீர்ப்பாணைகளிலும் உதவித் தொகை உத்தரவுகளிலும் அடங்கியுள்ள கடன்கள், நிச்சயமாக வராக்கடன்களாக இருந்தால், அத்தகைய கடன்களுக்கு வட்டியைக் கணக்கிட்டுச் சேர்த்துக்கொள்வதில் எந்தவிதப் பயனுள்ள பலனுமில்லை. கலைப்புத் தேதிக்குப் பிறகு, வசூலாகவேண்டிய சொத்துகள், ஏறின வட்டி மேற்கடப்பு செய்யப்பட்ட பின்னரும் சங்கத்தின் எல்லாப் பொறுப்புகளையும் கலைப்புத் தேதிவரை கொடுக்கப்பட வேண்டிய வட்டியுடன் கடன்காரர்களுக்குச் செலுத்துவதற்குப் போதுமானவையாக இருந்தால், வட்டி விதிக்கப்படக்கூடாது. அத்தகைய நிலைமைகளில் மேற்கண்ட வட்டி வசூலிக்கப்பட்டால், சங்கத்தின் உபரி நிதிதான் அதிகரிக்கும். ஆனால், சங்கத்தின் பொறுப்புகளைச் செலுத்துவதற்கு சங்கத்தின் சொத்துகள் போதுமானவையாக இல்லாமலிருந்தால் வரையறுக்கப்படாத பொறுப்பு நிறைவேற்றப்பட வேண்டும். சங்கத்தின் கடனாளி களைப் பாதிக்கும் என்று தோன்றும் நிலைமைகளில், வசூலிக்கப் படவேண்டிய கடன்களில் வட்டியை மேற்கடப்பு செய்யக் கூடாது. வரையறுக்கப்படாத பொறுப்பை அமல் படுத்தும் பொருட்டுப் பிறப்பிக்கப்படும் உதவித் தொகை உத்தரவுகளின் மீது வட்டி விதிக்கப்படக்கூடாது. இதர உதவித் தொகை உத்தரவுகளின் மீது விதிக்கப்படும் வட்டி விகிதம் அவ்வப்போது மாற்றப்படலாம். இவற்றையெல்லாம் கலைப்பு அலுவலர் தன் விருப்பப்படி முடிவு செய்யலாம்.

**கலைப்புச் சங்கத்தின் பொறுப்புகளைச் செலுத்துதல்:** பிரிவு 87 (2) (சி) (ஈ), சங்கத்திற்கு எதிராகச் செய்யப்படும் நிதிக் கோரிக்கைகளைச் செலுத்தவும், கடனாளிகளிடையே முதன்மைப்

பிரச்சினையை முடிவு செய்யவும் கலைப்பு அலுவலருக்கு அதிகாரம் அளிக்கிறது. அவ்வப்போது வசூலாகும் சங்கத்தின் வரவுகள் கடனாளிகளின் பாக்கியைத் திருப்பிக் கொடுப்பதற்குப் பயன்படுத்தப்படவேண்டும். சாதாரணமாக, முதன்மை வரிசையில் சமமாகவிருக்கும் பல்வேறு கடனாளிகடையே, விகிதாச்சாரமான பட்டுவாடா செய்யப்பட வேண்டும். சங்கம் கொடுக்கவேண்டிய எல்லாக் கடன்கள் மீதும் வைப்புத் தொகைகள் மீதும் சங்கம் கலைக்கப்படும் தேதி வரையில் மட்டுமே வட்டி செலுத்தப்பட வேண்டும். ஆனால், சங்கத்தில் உபரி நிதிகள் இருந்தால் அந்தத் தேதிக்குப் பின்னரும் வட்டி செலுத்தப்படலாம்.

## 7. கலைப்பு அலுவலரால் பிறப்பிக்கப்படும் உதவித் தொகை உத்தரவுகளை நிறைவேற்றுதல் (Enforcement of Contribution Orders passed by the Liquidator)

பிரிவு 87 (3) (4)-ன் கீழ், சங்கத்தின் சொத்துகளுக்குப் பிரிவு 87-ன் கீழ் அளிக்கப்படவேண்டிய உதவித் தொகை, வருமான பாக்கியாக வருவாய்த் துறை மூலமாகவாவது அல்லது உள்ளூரில் அதிகாரமுள்ள சிவில் நீதிமன்றம் மூலமாகவாவது வசூல் செய்யப்படலாம். வருவாய்த் துறை மூலம் வசூல் செய்யப்படுதாக இருந்தால் வசூல் செய்யப்படுவதற்கான விண்ணப்பம் பதிவாளரால் மாவட்ட ஆட்சியாளருக்கு அனுப்பப்படவேணடும். சிவில் நீதிமன்றத்தின் மூலம் வசூல் செய்வதாக இருந்தால், கலைப்பு அலுவலர் சிவில் நீதிமன்றத்திற்கு விண்ணப்பம் செய்யலாம். பிரிவு 91 (இ)-ன் கீழ், சங்கத்தின் சொத்துகளுக்கு உதவித் தொகையாகவும் அல்லது கலைப்புச் செலவுக்காகப் பிரிவு 87-ன் கீழ் வசூல் செய்யப்படவேண்டிய எந்தத் தொகையும் கூட்டுறவுத் துறை மூலம் வசூல் செய்யக்கூடும். அதாவது பிரிவு 91-ன் கீழ் அதிகாரம் அளிக்கப்பட்ட கூட்டுறவுத் துறை அலுவலர்களின் மூலம் வசூல் செய்யப்படலாம்.

விதி 58 (ஈ)-ன் கீழ், ஒரு கலைப்பு அலுவலர் சங்கக் கலைப்புத் தொடர்பான செய்தியில் செய்யப்பட்ட முன்னேற்றத்தைக் காண்பிக்கும் ஒரு காலாண்டு அறிக்கையைப் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட நமூனாவில் பதிவாளருக்கு அனுப்ப வேண்டும். சங்கத்தின் அலுவல்கள் கலைக்கப்பட்டுவிட்டால், கலைப்பு அலுவலர் பதிவாளருக்கு ஓர் அறிக்கையை அனுப்பிவிட்டுச் சங்கத்தின் பதிவேடுகளைப் பதிவாளர் கட்டளையிடுமிடத்தில் வைக்கலாம் [பிரிவு 87 (5)]. பொதுவாகச் சங்கத்தின் பதிவேடுகள் உள்ளூர்த் துணைப் பதிவாளரின் அலுவலகத்தில்

மூன்றாண்டுக் காலத்திற்கு வைக்கப்படுகின்றன. பிறகு அவை அழிக்கப்படுகின்றன [விதி 58 (எம்)].

பிரிவு 87-ன்கீழ் கலைப்பு அலுவலரால் பிறப்பிக்கப்பட்ட உதவித் தொகை உத்தரவுகளுக்கெதிரே மேல்முறையீடு செய்வதற்குச் சட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது [பிரிவு 96 (2) பகுதி (ஆ)]. மேல்முறையீட்டு அலுவலரின் உத்தரவைத் திருத்துவதற்கும் சட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது (பிரிவு 97). அந்த உத்தரவை மறு சீராய்வு, செய்வதற்கும் சட்டத்தில் சரத்து இருக்கிறது (பிரிவு 98). எனவே, மேல்முறையீடு செய்வதற்காகச் சட்டத்தில் நிறைய சரத்துகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

8. சில சூழ்நிலைகளில் சிவில் நீதிமன்றங்களில் வழக்குத்தடை (Bar of Suit in Civil Court in Certain Cases) (பிரிவு 89)

ஒரு சங்கத்தின் கலைப்பு தொடர்பான எல்லாச் செய்திகளையும் கலைப்பு அலுவலரே முடிவு செய்கிறார். A (H.E.A at P. 35) பிரிவு 89-ன் கீழ் எந்தச் சிவில் நீதிமன்றமும் சங்கத்தின் கலைப்பு தொடர்பான எந்தச் செய்தியிலும் தலையிடக்கூடாது (Tahecognigance) (சட்டத்தில் பொதுப்படையாக ஏற்பாடு செய்திருக்கும் செய்திகள் தவிர). ஒரு கலைப்பு அலுவலர் அமைக்கப்பட்டவுடன், பதிவாளருடைய அனுமதியில்லாமலும் பதிவாளர் நிருணயிக்கும் நிபந்தனைகளுக்குட்படாமலும், கலைப்புச் சங்கத்தின் மீது எந்த வழக்கும் அல்லது சட்டப்படியான நடவடிக்கையும் எடுக்கப்படக்கூடாது அல்லது தொடரப்படக்கூடாது.

ஒரு சங்கம் கலைக்கப்படும்பொழுது அதற்கெதிரே ஒரு வழக்கு இருந்து வந்தால், அத்தகைய வழக்கைப் பதிவாளரின் அனுமதியின்றித் தொடர்ந்து நீடிக்கக் கூடாது. பதிவாளரின் அனுமதியின்றி, ஒரு சங்கத்திற்கெதிரே அது கலைக்கப்பட வேண்டுமென்று கட்டளையிடப்பட்ட பிறகு எந்த வழக்கும் தொடரப்படக் கூடாது. ஒரு சங்கத்தைக் கலைப்பது தொடர்பாகவும் அதை மூடுவது தொடர்பாகவும் எந்தச் செயலிலும் ஒரு வழக்கைத் தொடர முடியாது. கலைக்கப்பட வேண்டுமென்று உத்தரவிடப்பட்ட சங்கத்தின் அலுவல் தொடர்பாக எந்தவித வழக்கையும் அல்லது இதர சட்டப்படியான நடவடிக்கையையும் பிரிவு 89 தடை செய்கிறது. பதிவாளரின் அனுமதியின்றி அத்தகைய சங்கத்திற்கெதிராக அல்லது அச் சங்கத்தின்

உறுப்பினருக்கெதிராக அச் சங்கத்தின் அலுவலைக் குறித்து எந்தச் செயலிலும் ஒரு வழக்கோ அல்லது இதர சட்டப்படியான நடவடிக்கையோ எடுக்கப்படக் கூடாது.

ஒரு சிவில் நீதிமன்றம் அத்தகைய வழக்கை எடுத்துக்கொள்ள தடை செய்யப்பட்டிருந்தாலும், சிவில் நீதிக் சட்டத்தின் பிரிவு 226, 227-ன்கீழ் ரிட் மனுக்கள் தன்மையுள்ள நடவடிக்கைகளை உயர் நீதிமன்றத்தில் அது ஒரு சிவில் நீதிமன்றமாக இருந்தாலும் கூட, எடுப்பதற்குத் தடையில்லை. எனினும், பிரிவு 89-ன் உட்கருத்து கலைப்புத் தொடர்பான எல்லாச் செய்திகளையும் கலைப்பு அலுவலர் கவனித்து அவரே முடிவு செய்ய வேண்டுமென்பது. ஒரே மத்திய இடத்தில் எல்லாச் செயல்களும் அதாவது கலைப்பு அலுவலரால் எல்லாச் செயல்களும் ஆலோசிக்கப்படுவது வசதியான ஒரு முறையாகும். எனவே, எந்தப் புதிய நடவடிக்கையும் கலைப்புச் சங்கத்திற் கெதிராக எடுப்பதற்கு அனுமதிக்கப்படுவதில்லை. கோரிக்கையாளர்களும் கூட (Claimants) தங்கள் கோரிக்கைகளைக் கலைப்பு அலுவலருக்குதான் சமர்ப்பிக்க வேண்டும். அதேமாதிரியாக முன்னரே அமலில் இருக்கும் நடவடிக்கைகள்கூட தொடர்ந்து நீடிக்க அனுமதிக்கப்படக் கூடாது. கோரிக்கையாளர்களும் அவ்வண்ணமே நடந்து கொள்ளவேண்டும்.

எனினும், 89ஆம் பிரிவினுல் தடை செய்யப்படாத சில சூழ்நிலைகளும் இருக்கின்றன. உதாரணமாக, பிரிவு 87 (2) (ஆ)-ன் கீழ் கலைப்பு அலுவலர் சங்கத்தின் சொத்துகளுக்கு உறுப்பினர்களாலும் மற்றவர்களாலும் (முன்னுள் உறுப்பினர்கள் இறந்துபோன உறுப்பினர்களின் சொத்துகள், சங்கத்தின் அலுவலர்கள், முன்னுள் அலுவலர்கள்) கொடுக்கப்படவேண்டிய உதவித் தொகையை முடிவு செய்வதற்கு மட்டும்தான் அதிகாரம் பெற்றிருக்கிறுர். உறுப்பினரல்லாதவர்கள்மீதும், சங்கத்தின் கலைப்பு உத்தரவு தேதியிலிருந்து இரண்டுவருடங்களுக்கு முன்னர் உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிட்ட நபர்கள் மீதும் உதவித் தொகை உத்தரவுகளைப் பிறப்பிக்க அவருக்கு அதிகாரம் இல்லை. ஒரு நபர், தான் சங்கத்தின் கலைப்பு உத்தரவுத் தேதியிலிருந்து இரண்டு வருடங்களுக்கு முன்னரே உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிட்டதை, முதற் காட்சியில் தோன்றும் பொருளாக, (Prima-facic Case) நிரூபிக்க முடிந்தால், அத்தகைய பொருள்களைச் சிவில் நீதி மன்றங்கள் ஏற்றுக்கொள்ள அதிகாரம் பெற்றிருக்கின்றன; அத்தகைய சூழ்நிலைகளில் சிவில் நீதி மன்றங்கள் 89ஆம் பிரிவினுல் தடை செய்யப்படவில்லை.

9. **இறுதிக் கலைப்புக்கான விதிமுறை (Final Winding up Procedure)**

கலைப்பு அலுவலர் சங்கத்தின் கூட்டங்களை அவ்வப்போது கூட்டலாம் [விதி 58 (H)]. ஆனால், எல்லாச் சூழ்நிலைகளிலும் அது தேவையாக இராது. கலைப்பு உத்தரவுத் தேதிவரை கொடுக்கப்படவேண்டிய வட்டி உட்பட எல்லா வெளிப் பொறுப்புகளையும் (Outside Liabilities) முழுவதும் தீர்த்துவிட்ட பிறகும், சங்கச் சொத்துகளிருந்தால் அவை சங்கம் கொடுக்க வேண்டிய கடன்கள்மீது கலைப்பு உத்தரவுத் தேதியிலிருந்து செலுத்தும் தேதிவரை வட்டி செலுத்துவதற்காகப் பயன்படுத்தப் படவேண்டும். உறுப்பினர்களின் பங்கு மூலதனத்தைச் செலுத்து வதற்கும் முன்னுரிமையாக அவ்வாறு செய்யப்படவேண்டும். மீதமுள்ள சொத்துகள், ஏதாவது இருந்தால் உறுப்பினர்களின் பங்கு மூலதனத்தை, அவர்களுக்குச் சேரவேண்டிய இலபா ஈவையும் விதி 48 (2)-ல் நிருணயிக்கப்பட்ட முறைப்படி செலுத்து வதற்குப் பயன்படுத்தப்படவேண்டும். மத்திய வங்கிக்குச் சேரவேண்டிய கடன்கள் போன்ற வெளிப் பொறுப்புகளின் இதர இனங்கள் எல்லாம் தீர்க்கப்படும்வரை, உறுப்பினர்களின் பங்கு மூலதனத்தைப் பொறுப்புகளிலிருந்து விடுவிக்கக்கூடாது. இலாப ஈவு விதி 46–ல் குறிக்கப்பட்ட உச்சவரம்பு விகிதத்திற்குட்பட்டு செலுத்தப்படவேண்டும். சங்கத்தைக் கலைப்பதற்கு முன்பு உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிட்ட நபர்களும்கூட இலாப ஈவுக்குரிமையுள்ளவர்கள். இலாப ஈவு செலுத்தப்படாத ஒவ்வோர் ஆண்டு இறுதியிலும் நிலுவையிலிருந்து செலுத்தப்பட்ட முழு பங்கு மூலதனத்தின் மீதும் இலாப ஈவு செலுத்தப்பட வேண்டும். மீதமுள்ள தொகைசங்கத்தின் உபரி நிதியாகக் கருதப்படும்.

சங்கம் கொடுக்கவேண்டிய கோரிக்கைகளை முடிவு செய்யும்போது உறுப்பினர்களுட்பட தொடர்பான எல்லா தரப்பினரின் இருப்பிடத்தையும் (Whereabouts) தெரிந்து கொண்டுதான், எல்லாச் சூழ்நிலைகளிலும், பணம் செலுத்து வதற்குச் சாத்தியப்படாது. அத்தகைய சூழ்நிலைகளில் என்ன செய்யவேண்டுமென்பது விதியில் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. கோரிக்கையாளர்களின் இருப்பிடம் தெரியாமலிருக்கும் காரணத்திற்காவது அல்லது வேறு காரணத்திற்காவது எந்த ஒரு பொறுப்பைத் தீர்க்க முடியவில்லையானால், விதி 58 (K)-ன் கீழ் அத்தகைய தொகைகள் ஒரு நிதிவங்கியில் வைக்கப்பட்டு, தொடர்பான நபர் அல்லது நபர்களின் கோரிக்கையைத் தீர்ப்பதற்கு எளிதில் கிடைக்கக்கூடிய தன்மையிலிருக்கவேண்டும். அத்தகைய தொகை வைக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று

வருடங்கள் கழிந்த பின்னர், தன்னிச்சையாகவோ அல்லது நிதி வங்கயின் விண்ணப்பத்தின் பேரிலோ, நிதிவங்கியின் வராக்கடன் காப்பு நிதிக்கு அத் தொகை சேர்க்கப்படவேண்டுமென்று பதிவாளர் ஓர் உத்தரவைப் பிறப்பிக்கலாம் [விதி 58 (K). எனினும், அத்தகைய உத்தரவைப் பிறப்பிப்பதற்கு முன்னர், பதிவாளர், தான் அவ்வாறு உத்தேசம் செய்திருப்பதைச் சங்கத்தின் விவகார எல்லையிலடங்கிய கிராமங்களில் தண்டோரா போடுவதன் மூலமாவது, தொடர்பான மாவட்ட அரசிதழில் பிரசுரம் செய்வதன் மூலமாவது அல்லது தான் தகுதியுள்ளதாகக் கருதும் வேறு விதத்திலாவது அறிவிப்பு செய்யவேண்டும். அத்தகைய அறிவிப்புத் தேதியிலிருந்து 30 நாள்கள் கழிந்திருக்க வேண்டும்.

கலைக்கப்படும் ஒரு சங்கத்தின் உபரி நிதிகள் விதி 48 (3)-ல் விதிக்கப்பட்ட முறையில் விநியோகிக்கப்பட வேண்டும். சங்கத்தின் கலைப்பு நடவடிக்கை முடிந்த பிறகு சங்கத்தின் பேரவைக் கூட்டம் கூட்டப்பட்டு அக் கூட்டத்தில் கலைப்பு அலுவலர் நடவடிக்கைகளின் முடிவைச் சுருக்கமாக விளக்கி விதி 48 (3)-ல் நிருணயிக்கப்பட்ட முறையில் உபரி விதிகளை விநியோகிப்பதற்காக ஒரு வாக்கெடுப்பு எடுக்கவேண்டும். கலைக்கப் பட்ட சங்கத்தின் பேரவையில் தெரிந்தெடுக்கப்பட்டுப் பதிவாளரால் அங்கீகரிக்கப்பட்ட பொதுநலச் செயலுக்காக அச் சங்கத்தின் உபரி நிதிகள் பயன்படுத்தப்பட வேண்டும். அத்தகைய உபரி நிதி தேசியப் பாதுகாப்பு நிதிக்கும் (National Defence Fund) அல்லது அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட வேறு எந்த நிதிக்கும் உதவுவதற்குப் பயன்படுத்தப்படலாம். அப்படிப் பயன்படுத்தப்படாத எதாவது உபரி நிதியிருந்தால் அத்தகைய நிதி விதி 48 (3) (அ), (ஆ)-ல் கூறப்பட்டவாறு பயன் படுத்தப்படலாம்.

நிதி வங்கி அல்லது மேற்பார்வை ஒன்றியம் தவிர மற்ற சங்கத்தின் செயல்களில் உபரி நிதி கலைக்கப்பட்ட சங்கத்தின் பேரவையால் முடிவு செய்யப்பட்டுப் பதிவாளரால் அங்கீகரிக்கப் பட்டப் பொது நலச் செயல்களுக்குப் பயன்படுத்தப்பட வேண்டும். அத்தகைய செயலை நிறைவேற்றுவதற்காகக் கலைப்பு அலுவலர் ஓர் அறநிலையத்தை அமைப்பதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார். ஒரு பொறுப்புரிமையர் (Trustee) அல்லது பொறுப்புரிமையர்களைச் (Trustees) சங்கத்தின் முன்னாள் உறுப்பினர்களிலிருந்தோ அல்லது மற்றவர்களையோ தேர்ந்தெடுக்கும்படிச் சங்கத்தின் பேரவையை அவர் கேட்டுக் கொள்ளலாம். அவ்வாறு பேரவை ஒரு பொறுப்

புரிமையரைத் தேர்ந்தெடுக்கவில்லையானாலும், அல்லது பேரவை தேர்ந்தெடுத்த பொறுப்புரிமையர் கலைப்பு அலுவலருக்கு ஏற்றுக் கொள்ளப்படாதவர்களாக இருந்தால், கலைப்பு அலுவலர் தானே நிலைமைகளுக்கேற்ப ஒரு பொறுப்புரிமையர் அல்லது பொறுப்புரிமையர்களை நியமிக்கலாம். அத்தகைய பொறுப் புரிமையர் பதிவாளரால் அவ்வப்போது நிருணயிக்கப்படும் நமூனாவில் ஒரு பத்திரத்தை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும். அப் பத்திரம் பதிவு செய்யப்படுவது விரும்பத்தக்க தாக இருக்கிறது. ஏனென்றால், பத்திரத்தைப் பதிவு செய்வதால் பல நன்மைகள் இருக்கின்றன. பொறுப்புரிமையருக்கு ஒப்படைக்கப்பட வேண்டிய நிதி சிறியதாக இருந்தால், அதாவது ரூ. 100/-க்கு மேற்படாமலிருந்தால், கலைப்பு அலுவலர் பத்திரத்தைப் பதிவு செய்ய வேண்டுமா, அல்லது வேண்டாமா என்பதைப் பற்றி முடிவு செய்யலாம். பொறுப்புரிமையர் தங்களுக்கு ஒப்படைக்கப்பட்ட நிதியை ஒப்படைக்கப்பட்ட செயலுக்காகப் பத்திரம் பதிவு செய்யப்பட்ட தேதியிலிருந்து மூன்று வருட காலத்திற்குள், பயன்படுத்தவேண்டும். இந்தக் காலத்திற்குள் பொறுப்புரிமையர் நிதியைப் பயன்படுத்தத் தவறினால், அவர்களுக்குத் தங்கள் மறுப்புரையைத் தெரிவித்துக் கொள்ள ஒரு வாய்ப்பு அளித்துவிட்ட பிறகு, பதிவாளரே அந்தத் தொகையைக் கலைக்கப்பட்ட சங்கத்தின் எல்லையில் பணியாற்றும் நிதி வங்கியின் சேமிப்பு நிதிக்கு (Reserve Fund) ஒதுக்கி விடுவதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார். உபரி நிதியை நிருவாகம் செய் வதற்கு அமைக்கப்பட்ட ஒரு பொறுப்புரிமையர் நிறுவனம் இந்திய பொறுப்புரிமையமைப்புச் சட்டத்தின் (Indian Trust Act of 1822-Central Act-1822) சரத்துகளால் பரிபாலிக்கப்படும் [விதி 48 (3) (இ)].

கலைப்பு அலுவலரால் வெளியிடப்பட்ட அறிவிப்புக்கு 30 நாள்களுக்குள் கலைக்கப்பட்ட சங்கத்தின் பேரவை இச் செயலில், பதிவாளரால் அங்கீகரிக்கப்பட்டஒரு முடிவைச் செய்யத் தவறினால் பதிவாளர் சங்கத்தின் உபரி நிதிகளைச் சங்கத்தின்எல்லையில் பணிய யாற்றும் நிதி வங்கியில் வைப்புத் தொகையாகவோ அல்லது வேறுவிதமாகவோ வைத்து விடலாம். கலைக்கப்பட்ட சங்கத்தின் விவகார எல்லையில் அதே நோக்கத்தைக்கொண்டு ஒரு புதிய கூட்டுறவுச் சங்கம் பதிவு செய்யப்பட்டால், கலைக்கப்பட்ட சங்கத்தின் உபரிநிதிகள் அத்தகைய புதிய சங்கத்தின் சேமிப்பு நிதிக்கு வரவு வைக்கப்பட வேண்டும். பதிவாளர் கருத்தில், அந்த எல்லையில் ஒரு நியாயமான காலத்திற்குள் ஒருபுதிய சங்கம் அமைப் பதற்கு வாய்ப்பில்லாமல் இருந்தால், அவர் அந்த உபரி நிதியை

அந்த எல்லையில் பணியாற்றும் நிதி வங்கியின் வராக் கடன் காப்பு நிதிக்கோ (Bad Debt Reserve) அல்லது சேம நிதிக்கோ (Reserve Fund) கொடுத்துவிட வேண்டும். அப்படிக் கொடுத்துவிட்ட பிறகு, கலைக்கப்பட்ட சங்கத்தின் பேரவையைக் கூட்டவோ அல்லது செயல்படவோ முடியாது. ஏனென்றால், பேரவை செயல்முறை இல்லாததாகி (Functus Officio) விடுகிறதல்லாமல், கலைப்பு அலுவலர் வெளியிட்ட அறிவிப்புத் தேதியிலிருந்து 30 நாள்கள் கழிந்த பின்னர் அது ஒரு புதிய முடிவைச் செய்யவும் முடியாது [ விதி 48 (3) (அ) ].

ஒரு நிதி வங்கியின் நடைமுறையில் உபரி நிதி, அந் நிதி வங்கி வேலை செய்துகொண்டிருந்த எல்லையில் இயங்குகிற சங்கங்கள் இணைக்கப்படுகிற அல்லது மாற்றப்படுகிற வேறு எந்த ஒரு நிதி வங்கி அல்லது நிதி வங்கிகளின் சேமிப்பு நிதிக்கு அல்லது வேறு நிதிகளுக்கு ஒதுக்கப்பட வேண்டும். அத்தகைய எல்லையில் நிதி வங்கி ஒன்றும் செயல்படவில்லையானால், ஒரு புதிய நிதி வங்கி அந்த எல்லையில் அமைக்கப்படும் வரை உபரி நிதியைப் பதிவாளர் தமிழ்நாட்டு மாநிலக் கூட்டுறவு வங்கியில் வட்டிக்கு முதலீடு செய்யவேண்டும். ஒரு புதிய நிதி வங்கி அந்த எல்லையில் அமைக்கப்பட்டால், அத்தகைய நிதி வங்கியின் சேமிப்பு நிதிக்கு அந்த உபரி நிதி வரவு வைக்கப்பட வேண்டும் [விதி 48 (3) (ஆ)].

ஒரு மேற்பார்வை ஒன்றியத்தின் செயலில், உபரி நிதி கலைக்கப்பட்ட மேற்பார்வை ஒன்றியத்தில் இணைக்கப்பட்டிருந்த சங்கங்களை மேற்பார்வை செய்ய முன்வரும் வேறு மேற் பார்வை ஒன்றியத்திற்கு அல்லது நிதி வங்கிக்குக் கொடுக்கப்பட வேண்டும் [விதி 48 (3) (இ)].

**10. கலைக்கப்பட உத்தரவிடப்பட்ட ஒரு சங்கத்தின் பதிவை ரத்து செய்தல் (Cancellation of Registration of a Society Orders to be Wouud up)**

ஒரு சங்கத்தின் கலைப்பு நடவடிக்கை வேலை முடிந்துவிட்ட பின்னர் கலைப்பு அலுவலர் தான் எடுத்டக்கொண்ட நடவடிக்கைகளைப் பற்றி, அதாவது சங்கத்தின் வரவினங்களை வசூல் செய்வதற்காகவும் சங்கத்தின் பொறுப்புகளைத் திருப்பிச் செலுத்துவதற்காகவும் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளைப் பற்றிச் சுருக்கமாக ஓர் இறுதி முடிவு அறிக்கையைப் பதிவாளருக்கு அனுப்பவேண்டும் [பிரிவு 87 (5)]. பதிவு ரத்து செய்யப்பட்ட எல்லாப் பதிவேடுகளும் ஆவணங்களும் கலைப்பு அலுவலரின் நடவடிக்கைகள் பதிவேடுகளும் சங்கத்தின் கலைப்பு முடிந்த தேதி

யிலிருந்து மூன்று வருடங்கள் கழிந்த பின்னர் பதிவாளரால் அழித்துவிடப்படலாம் [விதி 58 (எம்)]. சங்கத்தின் அலுவலர்கள் முழுவதும் கலைக்கப்பட்ட பின்னரும், கலைப்பு அலுவலரால் எடுக்க வேண்டிய நடவடிக்கை வேறு ஒன்றுமில்லை என்று தெரிந்த பிறகும் சங்கத்தின் பதிவு பிரிவு 88-ன் கீழ் ஓர் உத்தரவின்மூலம் ரத்து செய்யப்படவேண்டும். ஒரு சங்கத்தின் பதிவு ரத்து செய்யப்பட்டவுடன், அது அவ்வாறு ரத்து செய்யப்பட்ட தேதி யிலிருந்து ஒரு சட்டபூர்வமான நிறுவனமாக இருப்பது நின்று விடுகிறது (பிரிவு 88). கலைக்கப்பட்ட ஒரு சங்கம் ஒரு நிருவாகக் குழுவிற்குத் திருப்பி ஒப்படைக்கப்படலாம் என்று தேவையாகக் கருதப்பட்டால், சங்கத்தின் அலுவல்கள் முழுமையும் கலைக்கப் படுவதற்கு முன்னர் எந்தச் சமயத்திலும், கலைப்பு உத்தரவை ரத்து செய்வதற்கோ அல்லது திரும்பப் பெற்றுக் கொள்வதற்கோ வகை செய்வதற்கும், ஒரு நிருவாகக் குழு அமைக்கப்படுவதற்கும் அத்தகைய நிருவாகக் குழுவிற்குச் சங்கத்தைத் திருப்பி ஒப்படைப் பதற்கும் பிரிவு 90 ஏற்பாடு செய்கிறது. அப்படிச் செய்யப்படும் பொழுது சங்கம் ஒரு புது வாழ்வை ஆரம்பித்து, நொடிப்பு நிலச் சட்டத்தின் கீழ் விடுதலை செய்யப்பட்ட ஒரு நபரைப் போல் சுத்தமான வகையில் இயங்கக்கூடும்.

முன்னரே கூறியபடி, கலைப்பு அலுவலர்கள் பொதுவாகக் கூட்டுறவுத் துறை அலுவலர்களாக இருக்கிறார்கள். அதாவது மத்தியச் சங்கங்களும் பெரிய சங்கங்களும் கலைக்கப்பட உத்தர விடப்பட்டால், துணைப் பதிவாளர்களும் அல்லது உதவிப் பதிவாளர்களும், இதர சங்கங்களில் உதவிப் பதிவாளர்களும் கலைப்பு அலுவலர்களாக நியமிக்கப்படுகின்றனர். கலைக்கப்பட்ட சங்கத்தின் சொத்துகளை வசூல் செய்வதில் கலைப்பு அலுவலர்கள் ஆய்வாளர்களால் உதவி செய்யப்படுகிறார்கள். நிதி வங்கிகளுக்குக் கடன்பட்டிருக்கும் சங்கங்கள் கலைக்கப்பட்டால், அத்தகைய சங்கங்களின் சொத்துகளை விரைவாக வசூல் செய்யும் நோக்கத் துடன் நிதி வங்கிகளின் ஊழியர்கள் கலைப்பு அலுவலர்களாக நியமிக்கப்படலாம் என்று ஒரு யோசனை கூறப்படுகிறது. நாரயண சாமி பிள்ளை கூட்டுறவுக் குழுவினர் (1956), சங்கத்தின் கடனாளியாகவோ அல்லது கடனாளிகளில் ஒருவராகவோ இருக்கும் நிதி வங்கிக் கலைப்பு அலுவலராக நியமிக்கப்பட்டு, கலைக்கப்பட்ட சங்கத்தின் முன்னாள் உறுப்பினர்கள் மீது உதவித் தொகை உத்தரவுகள் விதிப்பதற்கு அதிகாரம் அளிப்பது விரும்பத்தக்கது அல்ல என்ற கருத்தைக் கொண்டனர். எனினும், சந்தானம் குழுவினர் நிதி வங்கியின் அலுவலர்கள்கூடக் கலைப்பு அலுவலர் களாக நியமிக்கப்படலாம் என்று பரிந்துரை செய்து தங்கள் பரிந்துரையை அமல் படுத்துவதற்காகச் சட்டத் திருத்தத்தையும் யோசனை கூறியிருக்கின்றனர்.

# 15. நிறைவேற்றுதல் விதிமுறை
## (Execution Proceedings)

தீர்ப்பாணைகள், முடிவுகள், தீர்ப்புகள், உத்தரவுகள் ஆகியவற்றை நிறைவேற்றுதல் (பிரிவுகள் 91–94) மற்றும் விதிகளின் அத்தியாம் X

### 1. பொது (General)

பதிவாளராலும், மத்தியஸ்தர்களாலும் பிறப்பிக்கப்பட்ட தீர்ப்புகள், தீர்ப்பாணைகள், உத்தரவுகள் முதலியவற்றை நிறைவேற்றுவதற்காக, 1932ஆம் வருடத்திய சென்னை கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில் பிரிவு 57 (ஏ) 1935ஆம் வருடத்தில் புகுத்தப்படுத்துவதற்கு முன்னர், சாதாரணமாக சிவில் நீதிமன்றங்களும் வருவாய்த் துறையுமே, (Revenue Department) கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பயனாக இருந்தன. ஆனால், சிவில் நீதிமன்றங்களின் மூலமும் வருவாய்த் துறையின் மூலமும் கூட்டுறவு நிலுவைகளை வசூல் செய்வதில் கிடைத்த அனுபவம் ஊக்கம் அளிப்பதாக இல்லை. எனவே, டவுன் சந்த (Town Send) கூட்டுறவுக் குழுவினரின் பரிந்துரைகளையொட்டிச் சிவில் நீதிமன்றத்துடனும் வருவாய்த் துறையுடனும் மட்டுமன்றிக் கூட்டுறவுத் துறையின் மூலமும் தீர்ப்பாணைகள், தீர்ப்புகள் முதலியவற்றையும் நிறைவேற்றுவதற்குப் பதிவாளருக்கு அதிகாரமளித்து 1932ஆம் வருடக் கூட்டுறவுச் சட்டத்தின் பிரிவு 57 (ஏ)-ல் சரத்து செய்யப்பட்டது. கூட்டுறவுத் துறையின் மூலமும் நிறைவேற்றுதல் செய்வதற்கான நடைமுறைக் கூட்டுறவுச் சட்டக் குழுவினராலும் அங்கீகரிக்கப்பட்டு அக் குழுவினர், தாங்கள் தயாரித்த மாதிரிக் கூட்டுறவு மசோதாவின் 95-99 பகுதிகளில் கூட்டுறவுத் துறையின்மூலம் நிறைவேற்றுதல் செய்வதற்கான ஒரு சரத்தை ஏற்பாடு செய்திருக்கின்றனர்.

**2. தீர்ப்பாணைகளைக் கூட்டுறவுத் துறையின் மூலம் நிறைவேற்றுவதற்கான ஏற்பாடு (Provision for Execution of Decrees through the Co-op. Dept.)**

கீழ்க்கண்ட வகைகளில் வசூலிக்கப்பட வேண்டிய தொகைகளை ஜப்தி மூலமும், சொத்து ஏலம் மூலமும் வசூலிப்பதற்காகப் பதிவாளரும் அல்லது அவருக்குக் கீழ் அதிகாரம் அளிக்கப் பட்டுள்ள எந்த ஒரு நபருக்கும் அதிகாரம் அளிக்கப்பட்டிருக் கின்றன (பிரிவு 91.)

(அ) பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப் பட்ட அவருக்குக் கீழான ஒரு நபர் அல்லது மத்தியஸ்தர் அல்லது மத்தியஸ்தர்கள் இவர்களால் பிறப்பிக்கப்பட்ட ஒரு முடிவில் அல்லது தீர்ப்பில் உத்தரவிடப்பட்ட தொகையும் சிவில் நீதிமன்றத்தின் ஒரு தீர்ப்பாணை அல்லது ஓர் உத்தரவின்கீழ் கொடுக்கப்படவேண்டிய தொகையும் அல்லது பதிவாளருடைய ஓர் உத்தரவின் கீழ் கொடுக்கப்பட வேண்டிய தொகையும் [பிரிவு 91 (ஆ) ].

(ஆ) சட்டத்தின்கீழ் எந்த நடவடிக்கைகளிலும் அரசாங்கத் திற்கு ஒரு சங்கம், அல்லது சங்கத்தின் அலுவலர், அல்லது முன்னுள் அலுவலர், உறுப்பினர், அல்லது முன்னுள் உறுப்பினர், அல்லது இறந்துபோன உறுப்பினர், கொடுக்கவேண்டிய தொகை [பிரிவு 91 (ஆ) ].

(இ) பிரிவு 26 (4)-ன் கீழும் அல்லது பிரிவு 65 (2) (ட) உப-பகுதி (ii)-ன் கீழும் கூட்டப்பட்ட ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டத்தின் செலவுக்காகக் கொடுக்கப்பட வேண்டுமென்று உத்தரவிடப்பட்ட தொகை [பிரிவு 91 (இ)].

(ஈ) பிரிவு 68-ன் கீழ் (விசாரணைச் செலவுகளும் ஆய்வுச் செலவுகளும்) செலவுகளுக்காக நிதிவங்கி உட்பட ஒரு சங்கம் கொடுக்கவேண்டுமென்று தீர்ப்பு அளிக்கப்பட்ட தொகை [பிரிவு 91 (ஈ)].

(உ) பிரிவு 87-ன் கீழ் ஒரு சங்கத்தின் சொத்துகளுக்கு உதவித் தொகையாகவும் அல்லது கலைப்புச் செலவுகளுக்காக உதவித் தொகையாகவும் வசூலிக்கப்படவேண்டுமென்று கலைப்பு அலுவலரால் உத்தரவிடப்பட்ட தொகை [பிரிவு 91 (எ)].

(ஊ) பிரிவு 71-ன் கீழ் (தண்டம்-Surcharge) சங்கத்திற்குத் திருப்பிச் செலுத்தப்படவேண்டுமென்று உத்தரவிடப்பட்ட தொகையும், அல்லது சங்கத்தின் சொத்துகளுக்கு உதவித்

தொகையாக வசூலிக்கப்படவேண்டுமென்று கலைப்பு அலுவலரால் உத்தரவிடப்பட்ட தொகையும், இந்தத் தொகைகள் தவிர, அத்தகைய தொகைகளின்பேரில் சேரவேண்டிய வட்டியும், டிக்கிரிகள், தீர்ப்புகள், உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டவர்களுக்கு எதிராகச் சொத்தை ஜப்தி செய்வதற்காகவும் விற்பனை செய்வதற்காகவும் செலவழிக்கப்பட்ட செலவுகளும்கூட அதேமாதிரியாக வசூலிக்கப்படலாம் [பிரிவு 91 (ஏ)].

**3. பிரிவு 32-ன் கீழ், ஈடுசெய்யப்பட்ட சொத்துகள் தொடர்பானக் கடன்களை வசூல் செய்வதற்கான ஏற்பாடு (Provision for recovery for debts in respect of Properties Subject to charge under Sec. 32)**

ஒரு சங்கம் பிரிவு 32/1-ன் கீழ், ஒரு முதன்மையான ஈடு (First Charge) பெற்றிருக்கும் சூழ்நிலையில் அச் சங்கத்திற்கு வரவேண்டிய கடன்களை வசூல் செய்வதற்காகப் பிரிவு 92-ன் கீழ், ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சங்கத்திற்கிருக்கும் ஈடு பயனுள்ளதாகச் செய்வதற்கு, அத்தகைய ஈட்டின் கீழ் கொடுக்கப்பட வேண்டிய தொகையை வருவாய்த் துறையின் மூலமும் அல்லது சிவில் நீதிமன்றத்தின் மூலமும் அல்லது பதிவாளரின் மூலமும் வசூலிக்க வேண்டுமென்ற சரத்து ஏற்படுத்துவது தேவை என்று கூட்டுறவுச் சட்டக் குழுவினர் கருத்து கொண்டனர். ஆகையால், மாதிரிக் கூட்டுறவு மசோதாவின் பகுதி 95-ல், இது தொடர்பாக ஒரு சங்கம் செய்யும் விண்ணப்பத்தின் மீது ஓர் உத்தரவு செய்வதற்கும் பதிவாளருக்கு அதிகாரம் அளிக்க, ஒரு சரத்தை அக் குழுவினர் யோசனை கூறியிருக்கின்றனர். அந்த உத்தரவு, சட்டத்தின் கீழ் செய்யப்பட்ட டிக்கிரிகள், உத்தரவுகள் போல, நிறைவேற்றப் படலாம். வசூல் செய்வதற்கான வேறு முறைகளைப் பொருட் படுத்தாமலும், ஒரு டிக்கிரி அல்லது தீர்ப்பு வழங்காமலும், ஒரு சங்கத்திற்கு அதன் உறுப்பினர், முன்னுள் உறுப்பினர் அல்லது இறந்துபோன உறுப்பினர் கொடுக்கவேண்டிய கடனை வசூல் செய்வதற்காகப் பிரிவு 32 (1)-ன் கீழ் சங்கத்திற்கு ஈடு செய்யப் பட்டுள்ள சொத்தை அல்லது அச் சொத்திலுள்ள அக்கறையை விற்பனை செய்வதன் மூலம், நடவடிக்கை எடுக்கலாம். இது பதிவாளருக்கு அல்லது அவருக்குக் கீழுள்ள எந்த நபருக்கும் கொடுக்கப்பட்டுள்ள ஒரு சுருக்கமான (கேள்வி முறையற்ற) (Summary) அதிகாரமாகும். இது ஒரு சங்கத்திற்குக் கொடுக்கப் பட்டுள்ள சிறப்பு சலுகை. இந்த முறை எளிதாகவும், பயனுள்ள முறையிலும் நிறைவேற்றப்படவேண்டும்; இல்லாவிடில், சங்கத்திற்குக் கொடுக்கப்பட்ட முதன்மையான பற்றுப்பொறுப்பு (First Charge) என்ற சிறப்புச் சலுகை பயனற்றதாகப் போய்

விடும். இந்தப் பிரிவின் கீழ் வசூலை நிறைவேற்றுவதற்கான நிபந்தனைகள் பின்வருமாறு:

(1) சொத்துப் பிரிவு 33 (1) ன் கீழ் முதன்மையான பற்றுப் பொறுப்பிற்கு (First Charge) உட்பட்டதாக இருக்கவேண்டும்.

(2) இவ்வாறு இந்தப் பிரிவின் கீழ் வசூலிக்கப்பட வேண்டுமென்று சங்கத்தினிடமிருந்து ஒரு விண்ணப்பத்தைப் பதிவாளர் பெறவேண்டும்.

(3) தொடர்புடைய நபருக்கு 7 நாள்கள் அறிவிப்பு ஒன்று கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். இந்த அறிவிப்பு விதி 97–ல் நிருணயித்தபடி சரியாக தொடர்புடைய நபருக்கு அனுப்பப்பட்டிருக்கவேண்டும். அந்த அறிவிப்பில் தொடர்புடைய நபர் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் தன் கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று கேட்கப்பட்டு அப்படித் திருப்பிக் கொடுக்க அவர் தவறியிருக்க வேண்டும். கடன்களை வசூல் செய்வதற்காக பிரிவு 92–ன் கீழ் பதிவாளருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் இந்த அதிகாரம், பிரிவு 32-ல் குறிப்பிடப்பட்ட சொத்துகளின் மீது முதன்மையான பற்றுப்பொறுப்பு வைத்துக் கொள்வதற்குச் சங்கங்களுக்குக் கொடுக்கப்பட்ட சிறப்புச் சலுகையின் ஒரு நீடிப்பு. அது, பிரிவு 32-ன் கீழ் ஒரு சங்கத்திற்கு அளிக்கப்பட்ட முதன்மையான பற்றுப்பொறுப்பைச் செயல்படுத்தும் பிரிவு.

**4. சில செயல்களுக்காகப் பதிவாளர் சிவில் நீதிமன்றமாக இயங்கலாம் (Registrar to be Civil Court for certain purposes)**

பிரிவு 93-ன் கீழ் பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட எந்த நபரும், கீழ்க்கண்ட சூழ்நிலைகளில், இந்தியக் காலாவதிச் சட்டத்தின் (Indian Limitation Act 1908) முதல் அட்டவணையின் 182ஆம் பகுதித் தொடர்புடைய செயல்களுக்காக ஒரு சிவில் நீதிமன்றமாகக் கருதப்படுவர்.

(1) சொத்து ஜப்தி மூலமும், சொத்து விற்பனை மூலமும், அல்லது சொத்து ஜப்தி இல்லாமல் விற்பனை மூலமும், எந்தத் தொகையையும் வசூல் செய்வதற்குச் சட்டத்தின் கீழ் எந்த அதிகாரங்களைக் கையாளும்போது அல்லது

(2) அவ்வாறு வசூல் செய்வதற்கு அல்லது அவ்வாறு வசூல் செய்யும்பொருட்டு சில உதவி நடவடிக்கைகள் எடுப்பதற்குச் சங்கத்தினிடமிருந்து தான் பெற்ற விண்ணப்பத்தின்மீது உத்தரவு பிறப்பிக்கும்போது.

**5. அரசாங்கத்திற்குப் பாக்கியாகவுள்ள தொகைகளை நில வருமான பாக்கியாக வசூல் செய்தல் (பிரிவு 94) (Recovery of sums due to Govt. as Land Revenue Arrears)**

பிரிவு 94-ல் அரசாங்கத்திற்குப் பாக்கியாகவுள்ள தொகைகளை வசூல் செய்வதற்கான நடைமுறை விளக்கப்பட்டிருக்கிறது. அரசாங்கத்திற்கு, ஒரு சங்கத்திலிருந்தோ அல்லது அதன் அலுவலர், முன்னாள் அலுவலர், உறுப்பினர், அல்லது முன்னாள் உறுப்பினர், அல்லது இறந்துபோன உறுப்பினர், இவர்களிடமிருந்து வர வேண்டிய எல்லாத் தொகைகளும், சட்டத்தின்கீழ் எந்த நடவடிக்கையிலும் அரசாங்கத்திற்குச் சாதகமாக தீர்ப்பளிக்கப்பட்ட செலவுகளுட்பட-நில வருமான பாக்கிகளை வசூலிப்பதுபோலவே வசூலிக்கப்படலாம் [பிரிவு 94 (1)]. ஒரு சங்கத்திலிருந்து பாக்கியாகவுள்ள தொகைகள் கீழ்க்கண்ட வரிசையில் வசூலிக்கப்பட வேண்டும். முதலாவதாக, சங்கத்தின் சொத்துகளிலிருந்து; இரண்டாவதாக, சங்கத்தின் உறுப்பினர்கள் முன்னாள் உறுப்பினர்கள் அல்லது இறந்துபோன உறுப்பினர்களின் சொத்துகளிலிருந்து. இது வரையறுக்கப்பட்ட சங்கத்தின் செயலில் அவர்களுடைய பொறுப்பு வரைக்குமுட்பட்டுதான் வசூலிக்கப்பட வேண்டும். மூன்றாவதாக, இதர சங்கங்களில் உறுப்பினர்களிடமிருந்தும் முன்னாள் உறுப்பினர்களிடமிருந்தும் இறந்துபோன உறுப்பினர்களின் சொத்துளிலிருந்தும் வசூலிக்கப்பட வேண்டும். இந்த எல்லாச் சூழ்நிலைகளிலும், உறுப்பினர்களின் பொறுப்புக்குட்பட்டு வசூல் செய்யவேண்டுமென்பது [பிரிவு 94 (2)]. ஒரு சங்கம் ஒரு சட்டப்படியான நிறுவனமாகும். ஆகையால், கடனாளிகள், சங்கம் ஒரு சட்டப்படியான நிறுவனமாக இருக்கும் வரை அதன் தனிப்பட்ட உறுப்பினர்கள் மீது நடவடிக்கை எடுக்க முடியாது. ஆனால், அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் ஒரு விலக்கு செய்யப்பட்டிருக்கிறது. [பிரிவு 94 (2)]-ன் கீழ் அரசாங்கத்திற்குப் பாக்கியான தொகையைத் தனிப்பட்ட உறுப்பினர்களிடமிருந்தும் முன்னாள் உறுப்பினர்களிடமிருந்தும் இறந்து போன உறுப்பினர்களின் சொத்திலிருந்தும் மேற்சொன்ன வரிசைப்படியும் நிபந்தனைகளுக்குட்பட்டும் வசூல் செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பிரிவு சுருக்கமான (Summary) விதி முறையை ஏற்படுத்தியிருந்தாலும், மற்ற கடன்களுக்கு மேல் அது முதன்மையான உரிமையை அளிப்பதில்லை.

**6. சென்னை நிலவள வங்கிச் சட்டத்தின்கீழ் நிறைவேற்றுதல்–முக்கிய அம்சங்கள் (Execution under the Madras Land Martgage Banks Act–Important Features)**

1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் சரத்துகளும் அச் சட்டத்தின்கீழ் வகுக்கப்பட்ட விதிகளின் அத்தியாயம் X-ம் அல்லாமல், அரசாங்கம் சென்னைக் கூட்டுறவு நில அடைமான வங்கிகளின் சட்டத்தில் (1934ஆம் வருடத்தியச் சட்டம் X) சில தனிப்பட்ட துணைச் சரத்துகள் நில அடைமான வங்கிகளுக்குச் சேரவேண்டிய பாக்கிகளை விரைவாக வசூல் செய்வதற்கு ஏற்பாடு செய்திருக்கிறது. அச் சட்டத்தின் 9ஆம் பிரிவின்படி ஒரு நில அடைமான வங்கியின் நிருவாகக் குழு பதிவாளருக்கு அல்லது பதிவாளருக்குதவி செய்ய அமர்த்தப் பட்ட எந்த நபருக்கு நில்வள வங்கிக்குப் பாக்கியாகவுள்ள ஒரு கடன் தொகையை வசூல் செய்வதற்கு விண்ணப்பம் செய்யலாம். நிலவள வங்கிக்குச் சேர வேண்டிய பாக்கித் தொகையானது ஒரு கடன் தவணையாக இருக்கலாம்; அல்லது ஒரு தவணையின் பாகமாக இருந்து அது தவணை தவறிய தேதியியிருந்து ஒரு மாதத்திற்கு மேல் பாக்கியாக இருக்கலாம். இந்தப் பாக்கியை, அடைமானம் செய்யப்பட்ட நிலத்திலுள்ள அறுவடை செய்யப் படாத பயிர்களுட்பட எல்லா மகசூல்களையும் ஜப்தி செய்தும் விற்பனை செய்தும் வசூல் செய்வதற்காக இந்த விண்ணப்பம் செய்யப்படுகிறது.

நிலவள வங்கியின் பிரிவு 13-ன் கீழ் நிலவள வங்கியின் நிருவாகக் குழு அடைமானப் பத்திரத்தில் நீதிமன்றத் தலையீடு இல்லாமலே விற்பனை அதிகாரம் தனக்கு வெளிப்படையாக அளிக்கப்பட்டிருந்தால், நிலவள வங்கி, சட்டத்தின் பிரிவு 22-ன் கீழ் அமர்த்தப்பட்ட விற்பனை அலுவலருக்கு (Sale Officer) அடைமானம் செய்யப்பட்ட சொத்தைத் தவணைப் பாக்கியைச் செலுத்தத் தவறிய சூழ்நிலைகளில் நீதிமன்றத் தலையீடு இல்லாமலும் அந்தச் சட்டத்தின் பிரிவு 13 (2)-ல் விவரிக்கப்பட்ட நிபந்தனைக்குட்பட்டும் விற்பனைக்குக் கொண்டுவர விண்ணப்பம் செய்துகொள்ளலாம். இந்தச் சட்டத்தின் 24ஆம் பிரிவின்கீழ் ஒரு நில அடைமான வங்கி பிரிவு 9 அல்லது பிரிவு 13-ன் கீழ் கடன் தொகை முழுவதையும் வசூல் செய்வதற்கு நடவடிக்கை எடுக்கக்கூடும். அத்தகைய நடவடிக்கையை, அடைமானம் வைத்தவர் கூடுதலான பிணையம் அளிக்கத் தவறினாலும் அல்லது அடைமானம் செய்யப்பட்ட சொத்து முழுவதும் அல்லது சில பாகங்கள்அழிக்கப்பட்டிருந்தாலும்அல்லது அடைமானம் வைக்கப் பட்டிருக்கும் சொத்து போதிய ஆதாரமாக இல்லாமல் போய் விட்டாலும், அல்லது வங்கியின் நிருவாகக் குழுவால் முடிவு செய்தவண்ணம் ஒரு நபர் பெற்றிருக்கும் கடனின் ஒரு பாகத்தைத் திருப்பிச் செலுத்தாமற்போனாலும், சங்கம் நடவடிக்கை

எடுக்கலாம். இந்தச் சட்டத்தின் 25ஆம் பிரிவின்கீழ் மத்திய நில அடைமான வங்கியின் நிருவாகக் குழு அல்லது பொறுப்புரிமையர் (Trustee) தவணை தவறிய எல்லா பாக்கிதாரர்கள் மீதும் பிரிவுகள் 9,13 அல்லது 24-ன் கீழ் நடவடிக்கை எடுக்க, ஒரு பிரதம நில அடைமான வங்கியின் நிருவாகக் குழுவிற்குக் கட்டளையிடலாம். பிரதம நில அடைமான வங்கியின் நிருவாகக் குழு அக் கட்டளையை நிறைவேற்றத் தவறினால் மத்திய வங்கியின் நிருவாகக் குழு அல்லது பொறுப்பாளி அத்தகைய நடவடிக்கையைத் தாங்களே எடுக்கலாம். நில அடைமான வங்கிச் சட்டத்தின்கீழ் அந்தச் சட்டத்தின் சரத்துகளின்படி தொகைகளை வசூல் செய்வதற்குப் பின்பற்றவேண்டிய நடைமுறையை நிருணயித்து மாநில அரசாங்கம் தனிப்பட்ட விதிகளை வகுத்திருக்கின்றது.

7. நிறைவேற்றுதலைக் குறித்த விதிமுறை (Procedure for Execution Proceedings)

1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் பிரிவுகள் 91 முதல் 94 வரை, தீர்ப்பாணைகள், தீர்ப்புகள் முதலியவற்றை நிறைவேற்றுதலைக் குறித்து அடங்கியுள்ள சரத்துகள், 1931ஆம் வருடத்தியச் சட்டத்தின் 57 (அ), 57 (ஆ), 58 பிரிவுகளிலடங்கியிருந்த சரத்துகளைவிட விரிவானவையாகும். பாக்கித் தொகைகளை விரைவாக வசூல் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்கும் நிறைவேற்றுதல் நடவடிக்கைகளை விரைவுபடுத்துவதற்கும் இந்த விதிகள் உத்தேசிக்கப்பட்டிருக்கின்றன. அதே சமயத்தில், நிறைவேற்றுதல் வேலை நீதி பரிபாலனத் தன்மையுடையதாக இருப்பதால் அந்த வேலையைச் சட்டத்தின் சரத்துகளைக் கடைப்பிடித்து எச்சரிக்கையாகச் செய்யவேண்டும். விதிகளின் அத்தியாயம் X-ல் விவரிக்கப்பட்ட விரிவான நடைமுறையையும் எச்சரிக்கையுடன் பின்பற்ற வேண்டும். நிறைவேற்றுவதற்காக கையாளப்பட வேண்டிய விவரமான நடைமுறைகள் அத்தியாயம் X-ல் விதிகள் 59-83-ல் அடங்கி இருக்கின்றன. சட்டத்தின் பிரிவுகள் 91-94-ல் அடங்கியுள்ள நிறைவேற்றுதலைக் குறித்த சரத்துகளுடன் இந்த விதிகளைச் சரிவரப் பின்பற்ற வேண்டும்.

கூட்டுறவுத் துறையின்மூலம் வசூல் செய்வது தவிர இதர வசூல் வகைகள் இன்னும் இருந்து வருகின்றன. சிறப்பான சூழ்நிலைகளில்தான் அம் முறைகள் கையாளப்படும். சிவில் நீதிமன்றங்கள் கூட்டுறவுத் தீர்ப்பாணைகளைச் சிவில் நீதிமன்றத் தீர்ப்பாணைகள்போல் நிறைவேற்றலாம் [பிரிவு 96 (அ)-ம், விதி 59-ம்)]. சிவில் நீதிமன்றத்தின் தீர்ப்பாணை அல்லது

உத்தரவுங்கூடக் கூட்டுறவுத் துறையின்மூலம் நிறைவேற்றப்படலாம் [விதி 56 (9) (இ)]. வருவாய்த் துறையின்மூலம்கூடக் கூட்டுறவுப் பாக்கிகளை வசூல் செய்யலாம் [விதி 56 (9) (ஆ)]. கீழ்க்கண்ட சூழ்நிலைகளில் தனிப்பட்ட முறையில் கூட்டுறவுத் துறையின் மூலம் வசூல் செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ;

(1) பிரிவு 68-ன் கீழ் நடத்தப்படும் விசாரணையின் செலவும் ஆய்வின் செலவும்,

(2) பிரிவு 71-ன் கீழ் பிறப்பிக்கப்பட்ட ஒரு தண்டம் உத்தரவும் (Surcharge Order),

(3) பிரிவு 87 (3)-ன் கீழ் கலைப்பு அலுவலரால் பிறப்பிக்கப்பட்ட உதவித் தொகை உத்தரவுகளும் கலைப்புச் செலவுகளும்,

(4) பிரிவு 94 (1)-ன் கீழ் அரசாங்கத்திற்குப் பாக்கியாக உள்ள எல்லாத் தொகைகளும்.

**நிறைவேற்றுதல் நடவடிக்கைகளுக்கான நடைமுறை. நிறைவேற்றுதல் விண்ணப்பங்களை நடவடிக்கைக்கு எடுத்துக்கொள்ளுதல் :** பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட எந்த ஒரு கீழ்நிலை அலுவலர் மட்டும்தான் நிறைவேற்றுதல் நடவடிக்கைகளுக்குத் தொடர்பான வேலைகளைச் செய்யக் கூடும். பிரிவு 91-ன் கீழ் நடவடிக்கை எடுக்க விரும்பும் எந்த ஒரு தீர்ப்பாணையை வைத்துக் கொண்டிருப்பவரும் செயலுக்குக் காரணமாக இருந்த மாவட்டத்தின் பதிவாளருக்கு (கூட்டுறவுத் துணைப் பதிவாளர்) நிருணயிக்கப்பட்ட நமூனுவில் ஒரு விண்ணப்பம் செய்து பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட விகிதாச்சாரப்படி வசூல் செலவுகளை வைப்புத் தொகையாகச் செலுத்த வேண்டும் (விதி 59). தீர்ப்பாணை வைத்துக் கொண்டிருப்பவர் அந்த விண்ணப்பத்தில் கையெழுத்திட்டு அத்துடன் தீர்ப்பு, தீர்ப்பாணை அல்லது முடிவை வைத்து அனுப்பவேண்டும் (விதி 60). அவர் முதலில் அடைமானம் வைக்கப்பட்ட அசையாச் சொத்தின்மீது நடவடிக்கை எடுக்க விரும்புகிருரா அல்லது கடன்காரரின் இதர அசையாச் சொத்தின் மீது நடவடிக்கை எடுக்க விரும்புகிருரா என்பதை அவர் விண்ணப்பத்தில் குறிக்கவேண்டும் (விதி 60). விண்ணப்பம் கிடைத்தவுடன் மாவட்டத்தின், பதிவாளர் விண்ணப்பத்தில் எழுதப்பட்ட விவரங்கள் சரியானவையாகவும் உண்மையாகவும் இருக்கின்றனவா என்று தன் அலுவலகத்திலுள்ள பதிவேடுகளுடன் பரிசோதனை செய்து, எழுத்துமூலம் ஒரு கேட்பு அறிவிப்பைப் (Demand Notice),

பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட நமூனுவில், தவணை தவறிய பாக்கிதாரரின் பெயரையும் அவர் கொடுக்கவேண்டிய பாக்கித் தொகையையும் குறிப்பிட்டுத் தயார் செய்து அதை ஒரு விற்பனை அலுவலருக்கு (Sale Officer) அனுப்பவேண்டும் (விதி 60).

செயலுக்குக் காரணமாக இருந்த மாவட்டத்தைத் தவிர வேறிடத்தில் தவணை தவறிய பாக்கிதாரர் வசித்தாலும் அல்லது நடவடிக்கை எடுக்கப்படவேண்டிய அசையாச் சொத்து இருந்தாலும், விண்ணப்பம் செயலுக்குக் காரணமாக இருந்த மாவட்டத்தின் பதிவாளருக்கு அனுப்பப்பட்டு அவர் அந்த விண்ணப்பத்தைத் தவணை தவறிய பாக்கிதாரர் வசிக்கிற அல்லது அவருடைய சொத்து இருக்கிற மாவட்டத்தின் பதிவாளருக்கு அனுப்புவார் (விதி 60). அவர் மற்ற நடைமுறைகளைப் போல் முன்னதாகவே தேவைப்பட்ட கட்டணங்களை வசூல் செய்து விண்ணப்பத்தையும் கேட்பு அறிவிப்பையும் அவர் வசூல் செய்து கட்டணங்களைக் குறித்த ஒரு குறிப்பையும் நடவடிக்கை எடுக்கப் படவேண்டிய மாவட்டத்தின் பதிவாளருக்கு அனுப்ப வேண்டும். நிறைவேற்றுதல் செலவுகளின் பாக்கி உட்பட மற்ற வசூல்கள் செய்வதற்கான மேல் நடவடிக்கை அந்த மாவட்டப் பதிவாளரால எடுக்கப்படவேண்டும்.

ஒரு தீர்ப்பாணைத் தொகை முழுவதும் வசூலிக்கப்படுவதற்கு முன்னர், ஒரு தவணை தவறிய பாக்கிதாரர் இறந்துவிடும் சூழ்நிலையில் விதி 59 (1)-ன் கீழ் நிறைவேற்றுதல் விண்ணப்பம் இறந்துபோன பாக்கிதாரரின் சட்டப்படியான பிரதிநிதிகள் மீது எடுக்கப்படலாம். அப்போது அத்தகைய சட்டப்படியான பிரதி நிதியே தவணை தவறிய பாக்கிதாரர் என்ற அடிப்படையில், கீழ்க்கண்ட நிலைமைகளில் தவிர, அவர் மீது நடவடிக்கை எடுக்கப் படும் [விதி 59 (2)].

(1) சட்டப்படியான பிரதிநிதியின் மீது தீர்ப்பாணை நிறை வேற்றப்பட்டால் அவர் தன் வசம் வந்து விற்பனையாகாத இறந்து போனவரின் சொத்து அளவுக்கு மட்டும்தான் அவர் பொறுப்பாளி ஆவார். அவருடைய பொறுப்பை நிருண்யிப்பதற்குத் தீர்ப்பாணையை நிறைவேற்றும் பதிவாளர், தன்னிச்சையாகவோ அல்லது தீர்ப்பாணை வைத்திருப்பவர் விண்ணப்பத்தின் பேரிலோ, அத்தகைய சட்டப்படியான பிரதிநிதியைத் தேவையாகக் கருதப் படும் கணக்குகளை முன்னிலைப்படுத்த வேண்டுமென்று கட்டாயப் படுத்தலாம் [விதி 59 (3) (ii)]. தீர்ப்பாணை பிறப்பிக்கப்பட்ட இறந்துபோன உறுப்பினரின் கடனைச் செலுத்துவதற்கு இந்தச் சட்டத்தின்கீழ் பொறுப்பாளியாக உள்ள இறந்து போனவரின்

மகன் அல்லது இதர சந்ததி வசம் இருக்கும் சொத்து இறந்து போனவரின் சொத்தாக அவர்கள் வசம் இறந்து போனவரின் சட்டப்படியான பிரதிநிதியாக இருக்கிறது என்பதாகக் கருதப் படும் [விதி 59 (4)].

**நடவடிக்கை எடுக்கப்பட வேண்டிய வரிசை முறை:** விதி 60-ன் கீழ் தவணை தவறிய பாக்கிதாரரின் சொத்தின்மீது நடவடிக்கை எடுக்கப்படும் வரிசைமுறை பற்றித் தீர்ப்பாணை வைத்திருப்பவர் தன் விருப்பத்தைத் தெரியப்படுத்தினுலொழியச், சாதாரணமாக நிறைவேற்றுதல் நடவடிக்கை கீழ்க் கண்டவாறு எடுக்கப்படும்.

(1) தவணை தவறிய பாக்கிதாரரின் அசையும் சொத்தின் மீது முதன்முதல் நடவடிக்கை எடுக்கப்படவேண்டும். ஆனுல், அதே சமயத்தில் தேவைப்பட்டால் அவருடைய அசையாச் சொத்தின் மீதும் நடவடிக்கை எடுக்கவும் கூடும்.

(2) அசையும் சொத்தில்லாமலிருந்தாலும் அல்லது அசையும் சொத்தின் விற்பனைப் பணம் அல்லது ஜப்தி செய்யப் பட்டு விற்பனை செய்யப்பட்ட சொத்தின் விற்பனைப் பணம் தீர்ப்பாணை வைத்திருப்பவரின் கேட்பு முழுவதையும் திருப்பிச் செலுத்துவதற்குப் போதாமலிருந்தால், தீர்ப்பாணை வைத்திருப் பவருக்கு அடைமானம் வைக்கப்பட்ட அசையாச் சொத்தின் மீதும் அல்லது தவணை தவறிய பாக்கிதாரருக்குச் சொந்தமான இதர சொத்தின் மீதும் நடவடிக்கை எடுக்கப்படலாம் (விதி 61).

ஜப்தியிலிருந்து விலக்கப்பட்ட சொத்து சிவில் நடைமுறைச் சட்டத்தின் (Civil Procedure Code 1908 Central Act) பிரிவு 60 (1)-ன் விலக்குக்கூறில் ஜப்தியிலிருந்து விலக்கப்பட்டதாக குறிக்கப்பட்ட அசையும் சொத்து கூட்டுறவு விதிகளின்கீழ் ஜப்தி அல்லது விற்பனைக்குரியவையாகா [விதி 62 (XIX)].

**அசையும் சொத்தை ஜப்தி, கைப்பற்றுதல், விற்பனை செய்தலுக்கான நடைமுறை (விதிகள் 62-68) ஜப்தி செய்தலும் கைப் பற்றுதலும் :** தீர்ப்பாணை வைத்திருப்பவருக்கு அறிவிக்கப்பட்ட நாளில் விற்பனை அலுவலர் தவணை தவறிய பாக்கிதாரரின் சொத்தை ஜப்தி செய்வதற்காகக் கிராமத்திற்குச் சென்று அவருக்கு, அவர் நேரில் வந்திருந்தால், கேட்பு அறிவிப்பைக் (Demand Notice) கொடுக்கவேண்டும். செலவுகளுட்பட பாக்கித் தொகை உடனே செலுத்தப்படவில்லையானுல், விற்பனை அலுவலர் அசையும் சொத்தை ஜப்தி செய்ய அத்தகைய சொத்தின் பட்டியலைத் தவணை தவறிய பாக்கிதாரருக்குக்

கொடுத்து, பாக்கித் தொகை ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் செலுத்தப்படவில்லையானால், ஜப்தி செய்யப்பட்ட சொத்தை விற்பனைக்குக் கொண்டுவரப்படும் இடம், தேதி அல்லது காலத்தை அறிவிக்கவேண்டும். தவணை தவறிய பாக்கிதாரர் கிடைக்கவில்லையானால் விற்பனை அலுவலர் கேட்பு அறிவிப்பை அவர் குடும்பத்திலுள்ள வயதுவந்த நபரிடம் அல்லது பாக்கிதாரரின் அங்கீகரிக்கப்பட்ட முகவரிடம் கொடுக்க வேண்டும். அல்லது அப்படிக் கொடுக்க முடியவில்லையானால் கேட்பு அறிவிப்பைப் பாக்கிதாரரின் இல்லத்தில் ஒரு முக்கியமான இடத்தில் ஒட்டிவிடவேண்டும். பிறகு அவர் அசையும் சொத்தை ஜப்தி செய்து, ஜப்தி செய்யப்பட்ட சொத்தின் விவரப் பட்டியலைப் பாக்கிதாரரின் வழக்கமான இல்லத்தில் ஒட்ட வேண்டும். அத்தகைய பட்டியலில், ஜப்தி செய்யப்பட்ட அசையும் சொத்து எந்த இடத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட வேண்டுமென்றும், ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் பாக்கித்தொகை செலுத்தப்படாவிடில் அச் சொத்து விற்பனை செய்யப்படும் இடத்தையும், தேதியையும், காலத்தையும் விற்பனை அலுவலர் குறிக்கவேண்டும் [விதி 62 (1)]. அத்தகைய ஜப்தி சூரியன் உதித்த பின்னரும், சூரியன் மறைவதற்கு முன்பும் மட்டுமே தான் செய்யப்பட வேண்டுமே தவிர வேறு எந்தச் சமயத்திலும் செய்யப்படக்கூடாது [விதி 62 (VI)],

ஜப்தி செய்வது தவணை தவறிய பாக்கிதாரரிடமிருந்து வரவேண்டிய பாக்கித் தொகைக்குச் சமமுள்ள மதிப்புக்கு உள்ளடங்கி இருக்கவேண்டும் [விதி 62 (VI)]. சாதாரணமாகக் கேட்பு அறிவிப்பில் கொடுக்கப்படும் தேதிக்கும் விற்பனைத்தேதிக்கு மிடையே 15 நாள்கள் கழிந்திருக்கவேண்டும். ஜப்தி செய்யப் படும் சொத்து பயிர் அல்லது சேகரிக்கப்படாத மகசூலாக இருந்தால் அறிவிப்பைச் செய்து மகசூலை சேகரிப்பதற்குப் போதுமான காலம் கடைபிடிக்கும் வகையில் விற்பனைத் தேதியைத் தள்ளி நிருணயிக்கவேண்டும். கைப்பற்றப்பட்ட சொத்து விரைவானதும் இயற்கையானதுமான அழிவுக்குட்பட்டிருந் தாலும், அல்லது அதைப் பாதுகாப்பாக வைப்பதற்கான செலவு அதன் மதிப்பைவிட மேற்படக்கூடும் என்று இருந்தாலும், விற்பனை அலுவலர் அதை எந்தச் சமயத்திலும் விற்பனை செய்யலாம். அதாவது மேற்சொன்ன 15 நாள்கள் காலம் கழிவதற்குள் பாக்கித் தொகை செலுத்தப்படாவிட்டால் அவர் அவ்வாறு விற்பனை செய்யலாம் [ விதி 66 (XII) ].

ஜப்தி செய்த பிறகு விற்பனை அலுவலர் ஜப்தி செய்யப்பட்ட சொத்தை தீர்ப்பாணை வாங்கியவர் வசம் அல்லது வேறு வகையில்

பாதுகாப்பாக வைப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். விற்பனை அலுவலர் ஜப்தி செய்யப்பட்ட சொத்தை ப்பாதுகாப்பாக வைத்திருக்க வேண்டுமென்று தீர்ப்பாணை வைத்திருப்பவரை விரும்பினால் அவர் அவ்வாறு வைத்திருப்பதற்குக் கடமைப்பட்டவர். அவருடைய கவனமின்மையினால் விளைந்த நட்டத்தை அவரே சரிப்படுத்த வேண்டும். ஜப்தி செய்யப்பட்ட சொத்து கால்நடையாக இருந்தால் தீர்ப்பாணை வைத்திருப்பவர் அதற்கு வேண்டிய உணவைத் தருவதற்குப் பொறுப்பாளி ஆவார் [ விதி 62 (iii) ]. தவணை தவறிய பாக்கிதாரர் வேண்டுகோளின்பேரிலும், அல்லது ஜப்தி செய்யப்பட்ட சொத்தில் அக்கறை கோருகின்ற எந்த நபரின் வேண்டுகோளின்பேரிலும், விற்பனை அலுவலர் ஜப்தி செய்யப்பட்ட சொத்தை, ஜப்தி செய்த கிராமம் அல்லது இடத்திலேயே தவணை தவறிய பாக்கிதாரரின் பொறுப்பில் அல்லது அக்கறையுள்ள நபரின் பொறுப்பில் அவர்கள் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட போதுமான ஜாமீன்களுடன், விற்பனை அலுவலர் விரும்பும் இடத்தில் விற்பனைக்காகச் சொத்தை முன்னிலைப்படுத்துவதற்காக ஒரு பத்திரம் எழுதிக் கொடுத்தால், அவர்கள் வசம் விட்டுவிட்டு வரலாம் [ விதி 62 (iv) ]. அத்தகைய பத்திரத்திற்குச் சென்னை முத்திரை வரிச் சட்டத்தின்கீழ் முத்திரை வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கிறது.

ஜப்தி செய்யப்பட்ட சொத்து விற்பனை செய்யப்படாமல் இருந்தாலும், பாக்கித் தொகை வசூலிக்கப்படாமலிருந்தாலும் இந்தப் பத்திரத்தைப் பொதுவாக தீர்ப்பாணை வைத்திருப்பவரின் பேரில் அல்லது மத்திய வங்கியின் பேரில் ஒப்படைக்க வேண்டும் (Assigned). குறிக்கப்பட்ட நாளில் பிணையாளர் அல்லது பிணையாளர்கள் ஜப்தி செய்யப்பட்ட சொத்தை முன்னிலைப் படுத்தத் தவறினால், அவர் எழுதிக் கொடுத்த பிணையத்தின் மீது நடவடிக்கை எடுப்பதுதான் சிறந்த முடிவாகும். இந்த நடவடிக்கை ஒரு சிவில் நீதிமன்றத்தில் எடுக்கப்பட வேண்டும். தவணை தவறிய பாக்கிதாரருக்குச் சொந்தமான பயிர் அல்லது சேகரிக்கப்படாத மகசூல் ஜப்தி செய்யப்பட்டால், தக்க பருவத்தில் அவற்றை அறுவடை செய்வதற்கோ சேகரிப்பதற்கோ விற்பனை அலுவலர் நடவடிக்கை எடுக்கலாம். அவை விற்கப்படும் வரை அவற்றைத் தனியான இடத்தில் பாதுகாப்பாக வைப்பதற்கும் அவர் நடவடிக்கை எடுக்கலாம். இவ்வாறு செய்யும்போது அறுவடை செய்வதற்கும் அல்லது சேகரிப்பதற்கும் அத்தகைய பயிர் அல்லது மகசூலைப் பாதுகாப்பாக வைப்பதற்கும் செய்யப்பட்ட செலவுகளை அதற்குச் சொந்த

மானவர் செலுத்தவேண்டும். அல்லது அவை விற்பனை செய்யப் பட்டால் விற்பனைத் தொகையிலிருந்து இந்தச் செலவுகளை எடுத்துக்கொள்ள வேண்டும் [விதி 62 (vii)].

விற்பனை அலுவலர் ஜப்தி செய்யப்பட்ட எருது அல்லது கால் நடை அல்லது வேறு பொருள்களைப் பயன்படுத்தக்கூடாது. ஆடு மாடுகளுக்கும் அல்லது கால்நடைகளுக்கும் தேவையான உணவைக் கொடுக்க அவர் ஏற்பாடு செய்து அதற்கான செலவு களைச், சொத்தைச் சொந்தக்காரருக்கு ஒப்படைக்கும் போது, அவரிடமிருந்து வாங்கிக் கொள்ள வேண்டும். அல்லது ஜப்தி செய்யப்பட்ட சொத்து விற்பனை செய்யப்பட்டால் விற்பனைத் தொகையிலிருந்து அத்தகைய செலவுகள் எடுக்கப்பட வேண்டும் [விதி 62 (viii)]. குதிரை லாயம், மாட்டுக் கொட்டகை, நெல் களஞ்சியம், கிடங்கு, வெளிக் கட்டடம் (Out house) அல்லது இதர கட்டடம் இவற்றை உடைத்துத் திறப்பதற்கு விற்பனை அலுவலருக்கு அதிகாரம் உண்டு. வெளிக் கதவு திறந்திருக்கும் வசிக்கும் எந்த ஒரு வீட்டிற்குள்ளும் கூட அவர் செல்லலாம். தவணை தவறிய பாக்கிதாரருக்குச் சொந்தமான சொத்தை ஜப்தி செய்வதற்காக அத்தகைய சொத்து வைக்கப்பட்டிருக்கும் அறையின் கதவையும்கூட உடைத்துத் திறக்கலாம். ஆனால், பெண்கள் வசிப்பதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் ஓர் அறையை உடைத்துத் திறப்பதற்கு அல்லது அதில் நுழைவதற்கு விற்பனை அலுவலருக்கு அதிகாரமில்லை [விதி 62 (ix)].

தவணை தவறிய பாக்கிதாரரின் சொத்து வெளிக் கதவு மூடப் பட்ட ஒரு வசிக்குமிடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது என்றோ அல்லது பெண்கள் நாட்டு வழக்கத்தின்படி வசிப்பதற்குத் தனி இடமாக ஒதுக்கப்பட்ட அறையில் அத்தகைய சொத்து வைக்கப் பட்டிருக்கிறது என்றோ விற்பனை அலுவலர் சந்தேகப்பட்டால் அவர் அச் சூழ்நிலையில் அருகிலுள்ள காவல் நிலையப் பொறுப்பு அலுவலருக்கு நிலைமையை விளக்கவேண்டும். அத்தகைய விளக்கத்தின் பேரில் காவல் அலுவலர் ஒரு காவல் அலுவலரை அந்த இடத்திற்கு அனுப்பவேண்டும். அந்தக் காவல் அலுவலரின் முன்னிலையில் விற்பனை அலுவலர் அத்தகைய இடத்தின் வெளிக் கதவை உடைத்துத் திறக்கலாம். பெண்களை அந்த இடத்திலிருந்து அப்புறப்படுத்த அறிவிப்புக் கொடுத்த பின்னரும், தக்க முறையில் அவரை முன்னிலைப்படுத்தக் காலம் கொடுத்த பிறகும், காவல் அலுவலரின் முன்னிலையில் விற்பனை அலுவலர் அந்த அறைகளில் சென்று அங்கு வைக்கப்பட்டிருக்கும் தவணை தவறிய பாக்கிதாரரின் சொத்தை ஜப்தி செய்யலாம்.

அத்தகைய சொத்து அங்குக் காணப்பட்டால் உடனே அத்தகைய அறைகளிலிருந்து அவற்றை அப்புறப்படுத்த வேண்டும். அதற்குப் பிறகு, அந்த அறையைப் பெண்கள் மீண்டும் வசிப்ப தற்கு விட்டுவிடவேண்டும் [விதி 62 (X)].

விற்கப்படவிருக்கும் சொத்தின் விற்பனைக் காலத்தையும் இடத்தை யும் அறிவிப்பு செய்தல்: விற்பனை நாளுக்கு முந்தைய நாள் அன்றும் விற்பனை நாளன்றும் விற்பனைக் காலத்தையும் இடத்தையும் தவணை தவறிய பாக்கிதாரர் வசிக்கும் கிராமத்தில் முரசு அறை மூலம் விற்பனை அலுவலர் அறிவிப்பு செய்ய வேண்டும். விற்பனைக்குத் தக்க விளம்பரம் அளிப்பதற்குப் பதிவாளர் தேவையாகக் கருதும் வேறு இடம் அல்லது இடங் களிலும் அத்தகைய அறிவிப்பை விற்பனை அலுவலர் செய்ய வேண்டும் [விதி 62 (XI)]. விற்பனையை நடத்துவதற்கு முன்பு, விற்பனை அறிவிப்புக் கொடுக்கப்பட்டும் விளம்பரம் செய்யப் பட்டும் 15 நாள்கள் கழிந்திருக்கவேண்டும். எனினும் கைப்பற்றப் பட்ட சொத்து விரைவாகவும் இயல்பாகவும் அழிவுக்குட் படக் கூடியதாக இருந்தாலும், அத்தகைய சொத்தைப் பாது காப்பில் வைப்பதற்கான செலவுகள் சொத்தின் மதிப்பைவிட அதிகமாக இருக்கக் கூடியதாக இருந்தாலும் முன்னதாகவே பாக்கித்தொகை செலுத்தப்பட்டாலொழிய விற்பனை அலுவலர் அச் சொத்தை 15 நாள்கள் கழிவதற்கு முன்னரே எந்தச் சமயத் திலும் விற்பனை செய்யலாம் [விதி 62 (XII)].

குறிக்கப்பட்ட காலத்தில் விற்பனை அலுவலர் விரும்பத்தக்கது என்று கருதும் வகையில் சொத்தை ஒன்று அல்லது அதற்கு மேற் பட்ட பகுதியாக (lots) ஏலத்திற்கு விடலாம். அதிகமாக ஏலத் தொகை கூறுபவருக்கு (Highest bidder) சொத்து விற்பனைசெய்யப் படவேண்டும். எனினும் அந்த ஏலத்தொகை மிகவும் குறைந்த தாகத் தோன்றினாலும் அல்லது வேறு காரணங்களுக்காகவும் விற்பனை அலுவலர் அந்த அதிகமான ஏலத் தொகையை (Highest Bid) ஏற்றுக்கொள்ள மறுப்பதற்கு உரிமை பெற்றிருக் கிறார். அவ்வாறு அதிகமான ஏலத் தொகை ஏற்றுக்கொள்ளப் படாவிட்டால், சொத்தின் விற்பனை வேறு ஒரு வசதியான தேதிக்கு ஒத்தி வைக்கப்பட வேண்டும். மாவட்டப் பதிவாளர் அல்லது விற்பனை அலுவலர் தன்னுடைய உளத்தேர்வில் விற்பனையை ஒரு குறிப்பிட்ட நாளுக்கும் நேரத்திற்கும் ஒத்தி வைக்கலாம். அவ்வாறு ஒத்தி வைக்கும்பொழுது ஒத்தி வைப்புக் கான தன் காரணங்களைப் பதிவு செய்யவேண்டும். ஏழு நாள் களுக்குமதிகமான காலத்திற்கு விற்பனை அவ்வாறு ஒத்தி வைக்கப்

பட்டால், தவணை தவறிய பாக்கிதாரர் அத்தகைய அறிவிப்பு வேண்டாமென்று ஒப்புக்கொண்டாலொழிய, அவ்வாறு உத்தேசிக்கப்படும் விற்பனைக் காலத்தையும், நிலையத்தையும் பற்றி விதி 62 பகுதி (XI)-ன் கீழ் ஒரு புதிய அறிவிப்பு செய்யப்பட வேண்டும் [விதி 62 (XIII)].

விற்பனைச் சமயத்தில் அல்லது அதற்குப் பிறகு, விற்பனை அலுவலரால் குறிக்கப்படும் காலத்தில் சொத்தின் விற்பனைத் தொகை ரொக்கத்தில் செலுத்தப்படவேண்டும். விற்பனைத் தொகை முழுவதையும் சொத்தை வாங்குபவர் செலுத்தும்வரை சொத்தின் எந்தப் பகுதியையும் சொத்தை வாங்குபவர் எடுத்துக் கொண்டுச் செல்வதற்கு அனுமதிக்கப்படக்கூடாது [விதி 62 (XV)]. கொடுக்கவேண்டிய பாக்கித் தொகைக்கு மேற்கொண்ட தாக சொத்தின் விற்பனைத் தொகை இருந்தால், அத்தகைய பாக்கித் தொகையின்பேரில் கொடுக்கப்பட வேண்டிய வட்டியையும் விற்பனைச் செலவுகளையும், இதர செலவுகளையும் அதிலிருந்து கழித்துக்கொண்ட பிறகு, உபரித் தொகை தவணை தவறிய பாக்கிதாரருக்குச் செலுத்தப்பட வேண்டும். [விதி 62 (XIV)]. சொத்தை வாங்குபவர் விற்பனைத் தொகையை செலுத்தத் தவறினல் சொத்து மீண்டும் விற்கப்படும் (Resold) [விதி 62 (XVI)]. எந்த நபரும் ஒரு முறை ஜப்தி செய்யப்பட்ட சொத்தை வன்தாக்காக அல்லது இரகசியமாக எடுத்துக்கொண்டார் என்று தக்க அதிகாரம் படைத்த சிவில் நீதிமன்றத்தில் ருசுப்படுத்தப்பட்டால், அத்தகைய சொத்து விற்பனை அலுவலருக்கு உடனே ஒப்படைக்கப்படவேண்டுமென்று அத்தகைய நீதிமன்றம் கட்டளையிடலாம் [விதி 62 (XVII)].

விற்பனைக்காக நிருணயிக்கப்பட்ட நாளுக்கு முந்தைய நாளன்று தவணை தவறிய பாக்கிதாரர் அல்லது அவர் சார்பாகச் செயல்படும் எந்த நபரும் அல்லது ஜப்தி செய்யப்பட்ட சொத்தில் அக்கறை கோரும் எந்த நபரும், வட்டி, படி (Batta), சொத்தை ஜப்தி செய்வதற்குச் செய்யப்பட்ட மற்ற செலவுகளுட்பட பாக்கித் தொகை முழுவதையும் செலுத்தினல், விற்பனை அலுவலர் ஜப்தி உத்தரவை ரத்து செய்து, சொத்தை உடனே விடுதலை செய்யலாம் [விதி 62 (XVIII)]. ஜப்தி செய்யப்பட்ட சொத்தைப் பாதுகாப்பாக வைத்திருக்கும் நபர்கள் அதை தவணை தவறிய பாக்கிதாரருக்கு ஒப்படைக்க மறுத்தால், தக்க அதிகாரம் வாய்ந்த எந்தச் சிவில் நீதிமன்றமும் ஒரு விண்ணப்பத்தின்பேரில் சொத்து விடுதலைக்காக விற்பனை அலுவலர் செய்த உத்தரவை, அந்த நீதிமன்றமே பிறப்பித்து

உத்தரவைப்போல், நிறைவேற்றலாம் [விதி 62 (XX)]. தீர்ப்பாணை வைத்திருப்பவர் ஒரு நிறைவேற்றுதல் விண்ணப்பத்தைத் திரும்பப் பெற்றுக்கொண்டாலும் அல்லது அத்தகைய விண்ணப்பம் தீர்ப்பாணை வைத்திருப்பவரின் கவனக் குறைவு காரணத்திற்காக மேற்கடப்பு செய்யப்பட்டாலும் (Dismissed), நிறைவேற்றுதல் விண்ணப்பத்தை மேற்கடக்கச் செய்து சட்டப்படியான ஓர் உத்தரவை வெளியிட வேண்டும்; ஆனால், விடுதலை உத்தரவு வெளியிடப்படுவதில்லை. எனினும், நிறைவேற்றுதல் விண்ணப்பம் மேற்கடப்பு செய்யப்பட்ட உத்தரவுக்குப்பிறம், அசையும் சொத்தைத் தவணை தவறிய பாக்கிதாரருக்குத் திருப்பி ஒப்படைக்க வேண்டும்.

ஓர் அரசாங்க அலுவலர் அல்லது இரயில்வே நிறுவனத்தின் ஊழியர் அல்லது உள்ளாட்சித்துறை அலுவலர் அல்லது கம்பெனியின் ஊழியர் ஆகியவர்களின் சம்பளம் அல்லது படியை ஜப்தி செய்தல் (விதி 63) : விதி 63 மேற்கண்ட ஊழியர்களின் சம்பளம் அல்லது படியை ஜப்தி செய்வதைக் குறுத்த நடைமுறையை விதிக்கிறது. தவணை தவறிய பாக்கிதாரர் ஓர் அரசாங்க அலுவலர், அல்லது இரயில்வே நிறுவனம், உள்ளாட்சி நிறுவனம் முதலிய நிறுவனங்களின் ஊழியராக இருந்து, அவருடைய சம்பளத்தையோ, படியையோ, கூலியையோ ஜப்தி செய்யத் துவங்கும் முன்னர், மாவட்டப் பதிவாளர் ஒரு நியாயமான காலத்திற்குள் அவரைப் பாக்கித் தொகையைச் செலுத்தும்படிக் கேட்டு அவருக்கு ஓர் அறிவிப்பு வெளியிட வேண்டும். அதற்குண்டான தேவையான அறிவிப்புக் கட்டணத்தையும் வசூல் செய்யவேண்டும்.

நிருணயிக்கப்பட்ட தேதிக்கு முன்னர் பாக்கித்தொகை செலுத்தப்படாவிட்டால், விற்பனை அலுவலரிடமிருந்து ஓர்அறிக்கையைப் பெற்று மாவட்டப் பதிவாளர், சிவில் நடைமுறைச் சட்டத்தின் (Code of Civil Procedure) பிரிவு 60-ன் சரத்துகளுக்குட்பட்டு, அத்தகைய பாக்கித் தொகையைச் சம்பளம் அல்லது படி அல்லது கூலியிலிருந்து ஒரே மொத்தமாகவாவது அல்லது பதிவாளர் கட்டளையிடும் மாதத் தவணைகளிலாவது வசூலிக்க வேண்டுமென்று கட்டளையிட வேண்டும். அத்தகைய கட்டளை அறிவிப்புப் பெற்றவுடன், அத்தகைய சம்பளம், படி அல்லது கூலியைப் பட்டுவாடா செய்யக் கடமை பெற்ற அலுவலர் அல்லது வேறு நபர், கட்டளையிடப்பட்ட பாக்கித் தொகையை அல்லது சூழ்நிலைகளுக்கேற்ப பாக்கித் தொகையின் மாதத் தவணையை, வசூல் செய்து விற்பனை அலுவலருக்கு அனுப்பி வைக்கவேண்டும்

(விதி 63). சம்பளத்தை ஜப்தி செய்யும் உத்தரவில் கூறப்பட்ட தொகை செலுத்தப்பட்டவுடனே அத்தகைய உத்தரவு தானே ரத்தாகி விடுகிறது. எனவே அத்தகைய சூழ்நிலையில், சம்பள ஜப்தி உத்தரவுப் படி தொகை செலுத்தப்பட்டுக் கடன் தீர்க்கப் பட்டு விட்டால், ஒரு விடுதலை உத்தரவு தேவை இல்லை. எனினும், ஜப்தி உத்தரவின் நிபந்தனைகளுக்கு வெளியே தவணை தவறிய பாக்கிதாரர் தீர்ப்பாணையை வைத்திருப்பதற்கு நேராகக் கடனைச் செலுத்தித் தன் கடனை அடைத்துவிட்டால், சம்பள ஜப்தி உத்தரவு ரத்து செய்யப்பட்டு ஓர் உத்தரவு வெளியிடப்பட வேண்டும்.

**பங்குத் தொகைகளையும் அசையும் சொத்துகளிலுள்ள அக்கறையையும் ஜப்தி செய்தல் (விதி 64) :** ஜப்தி செய்யப்பட வேண்டிய சொத்தானது தவணை தவறிய பாக்கிதாரருடைய பங்குத் தொகையாக இருந்தாலும், அல்லது அவருக்குச் சொந்தமான அசையும் சொத்திலுள்ள அக்கறையாக (nterest in the property) இருந்தாலும், அல்லது அவருக்கும் இன்னொருவருக்கும் சொந்தமான அசையும் சொத்திலுள்ள ஓர் அக்கறையாக இருந்தாலும், பங்குத் தொகையை மாற்றுவதற்குத் தடை செய்யும் அல்லது அசையும் சொத்தில் தனக்கிருக்கும் அக்கறையை மாற்றுவதற்குத் தடை செய்யும் தவணை தவறிய பாக்கிதாரருக்கு ஓர் அறிப்விப்பு கொடுத்து அது ஜப்தி செய்யப்பட வேண்டும் [விதி 64 (1)]. ஜப்தி செய்யப்பட வேண்டியது ஒரு செலவாணி முறிப் பத்திரமாக விருந்து (Negotiable Instrument) அத்தகைய பத்திரம் நீதிமன்றத்தில் அல்லது ஓர் அரசாங்க அலுவலரின் பாதுகாப்பில் வைக்கப்படாமலிருந்தால், அந்தப் பத்திரம் சரியான கைப்பற்றுதல் (Actual Seizure) மூலம் ஜப்தி செய்யப் பட்டு, பத்திரம் பதிவாளரின் அல்லது ஜப்தி செய்வதற்குக் கட்டளையிட்ட மாவட்டப் பதிவாளரின் அலுவலகத்திற்குக் கொண்டுவரப்பட்டு அவரால் மேற்கொண்டு செய்யப்படும் உத்தரவுகளுக்குட்பட்டு அங்கே வைக்கப்பட வேண்டும் [(விதி 64 (2)]. ஜப்தி செய்யப்பட்டிருக்கும் சொத்து ஒரு நீதிமன்றத்தின் அல்லது அரசாங்க அலுவலரின் வைப்பில் இருந்தால், அத்தகைய நீதிமன்றம் அல்லது அரசாங்க அலுவலருக்கு ஓர் அறிவிப்பின் மூலம் அது ஜப்தி செய்யப்பட்டு, அச் சொத்தும், அச் சொத்தின் மீது செலுத்தப்பட வேண்டிய வட்டி அல்லது இலாப ஈவு பட்டுவாடா செய்யப்பட வேண்டியிருந்தால் அவையும் அறிவிப்பு வெளியிடும் மாவட்டப் பதிவாளரின் மேற் கொண்ட உத்தரவுகளுக்குட்பட்டு வைத்திருக்க வேண்டும் [(விதி 64 (3)].

ஜப்தி செய்யப்படவிருக்கும் சொத்து ஒரு நீதிமன்றத்திலோ அல்லது இன்னொரு மாவட்டப் பதிவாளரின் பாதுகாப்பிலோ இருந்தால், தீர்ப்பாணை வைத்திருப்பவருக்கும் தவணை தவறிய பாக்கிதாரரல்லாத அந்தச் சொத்தில் அக்கறை கோருகின்ற மற்ற நபருக்குமிடையே எழுகின்ற முதல் உரிமைப் பிரச்சினை அந்த நீதிமன்றம் அல்லது பதிவாளரால் முடிவு செய்யப்பட வேண்டும். விதி 64 (3)-ல் அரசாங்க அலுவலர் என்பதில் சட்டப் பிரிவு 86 (1)-ன் கீழ் அமர்த்தப்பட்ட ஒரு கலைப்பு அலுவலரும் உள்ளடங்கி இருக்கிறார்,

**தீர்ப்பாணையை ஜப்தி செய்தல் (விதி 65) :** ஓர் அடைமானத்தை அல்லது ஈட்டை நிறைவேற்றுதல் செய்வதில் பணம் செலுத்துவதற்காக அல்லது விற்பனை செய்வதற்காகத் தீர்ப்பாணை ஜப்தி செய்வதற்கு மாவட்டப் பதிவாளருக்கு அதிகாரம் உண்டு. இந்தச் சூழ்நிலைகளில் ஜப்தி விதி 65-ல் விதிக்கப்பட்ட முறையில் செய்யப்படவேண்டும்.

**தவணை தவறிய பாக்கிதாரர் வசம் இல்லாத இதர சொத்தையும் கடனையும் பங்குத் தொகையையும் ஜப்தி செய்தல் (விதி 66) :** ஜப்தி செய்யப்பட வேண்டிய அசையும் சொத்து,

(அ) தவணை தவறிய பாக்கிதாரருக்குக் கொடுக்கப்பட வேண்டிய கடனாக இருந்தாலும் அல்லது,

(ஆ) ஒரு நிறுவனத்தின் (Corporation) மூலதனத்தில் ஒரு பங்காகவும் அல்லது அத்தகைய நிறுவனத்தில் முதலீடு செய்யப்பட்ட ஒரு வைப்புத் தொகையாக இருந்தாலும் அல்லது,

(இ) எந்தச் சிவில் நீதிமன்றத்தில் வைக்கப்பட்டிருக்கும் அல்லது வைப்பில் இருக்கும் சொத்தைத் தவிர தவணை தவறிய பாக்கிதாரர் வசமில்லாத மற்ற அசையும் சொத்தாகவும் இருந்தால், மாவட்டப் பதிவாளரால் கையெழுத்திடப்பட்ட ஓர் எழுத்து மூலமான உத்தரவின்மூலம் அது ஜப்தி செய்யப்படலாம். அத்தகைய உத்தரவின்மூலம் மாவட்டப் பதிவாளர்,

(i) எந்தக் கடன்களிலும் அக் கடனைக் கடனாளி வசூலிப்பதையும், அதைக் கடன்காரர் திருப்பிச் செலுத்துவதையும் தடை செய்யலாம்.

(ii) ஒரு பங்குத் தொகை அல்லது வைப்புத் தொகைகளைப் பொறுத்தவரையில் அந்தப் பங்குத் தொகை அல்லது வைப்புத் தொகை எந்த நபரின் பெயரில் இருக்கிறதோ அந்த நபர் அத்தகைய பங்கை அல்லது வைப்புத் தொகையை

மாற்றுவதற்கும் அல்லது அவற்றின்மீது வட்டி அல்லது இலாப ஈவைப் பெறுவதற்கும் தடை செய்யலாம்.

(iii) மேற்கூறியவாறு தவிர, இதர அசையும் சொத்துகளில் அத்தகைய சொத்தை வைத்திருக்கும் நபர் சொத்தைத் தவணை தவறிய பாக்கிதாரருக்குக் கொடுத்து விடுவதைத் தடை செய்யலாம்.

மேற்கண்ட தடை உத்தரவின் நகல் ஒன்று, கடனுயின் கடன்காரருக்கும் பங்குத்தொகை அல்லது வைப்புத் தொகை யாயின் நிறுவனத்தின் சரியான அலுவலருக்கும், இதர அசையும் சொத்துகளாயின் (மேற்கூறியவாறு தவிர) அத்தகைய சொத்தை வைத்திருக்கும் நபருக்கும் அனுப்பப்படவேண்டும். பகுதி (அ)-ல் குறிக்கப்பட்ட கடன் அல்லது (ஆ)-ல் குறிக்கப்பட்ட வைப்புத் தொகை திருப்பிச் செலுத்தப்படவேண்டிய காலம் கழிந்துவிட்டால், இந்தத் தொகையைத் தனக்குச் செலுத்த வேண்டுமென்றுத் தொடர்பான நபருக்கு மாவட்டப் பதிவாளர் கட்டளையிடலாம். பங்குத் தொகை திரும்பப்பெறக் கூடாததாக இருந்தால், அத்தகைய பங்கை ஒரு தரகர் (Broker) மூலம் விற்பனை செய்வதற்குப் பதிவாளர் ஏற்பாடு செய்யலாம். பங்குத் தொகை திரும்பப்பெறக் கூடியதாக இருந்தால், அது செலுத்தப்படவேண்டிய காலம் வந்தவுடன் அதன் மதிப்பைப் பதிவாளருக்கோ அல்லது தொடர்பான நபருக்கோ செலுத்த வேண்டும். பகுதி (இ)-ல் குறிக்கப்பட்ட இதர அசையும் சொத்துகளில், தொடர்பான நபர் அந்தச் சொத்தைத் தவணை தவறிய பாக்கித் தொகை செலுத்தப்படவேண்டிய தேதி வந்தவுடன், பதிவாளரின் வசம் ஒப்படைக்க வேண்டும்.

**அசையாச் சொத்தை ஜப்தி செய்தலும், விற்பனை செய்தலும் (விதிகள் 67-லிருந்து 72வரை) :** ஒரு தீர்ப்பாணை நிறைவேற்றுதல் நடவடிக்கையில் எந்த அசையாச் சொத்தும் அத்தகைய சொத்து முன்னதாகவே ஜப்தி செய்யப்பட்டிருந்தாலொழிய விற்பனை செய்யப்படக்கூடாது. அத்தகைய சொத்தின் அடைமானம் அடிப்படையில் அந்தத் தீர்ப்பாணை வாங்கப்பட்டிருந்தால் அந்தச் சொத்தை ஜப்தி செய்யவேண்டிய தேவையில்லை. அசையாச் சொத்தை ஜப்தி செய்வதற்கும் விற்பனை செய்வதற்குமான நடைமுறை விதி 67 (2) (i) முதல் (xii) வரையில் விவரிக்கப் பட்டிருக்கிறது. அசையாச் சொத்து விற்பனை அலுவலரால் விற்பனை செய்யப்பட்டிருந்தால் அத்தகைய சொத்துக்குச் சொந்தக்காரரான எந்த நபரும் அல்லது அத்தகைய சொத்தில், அத்தகைய விற்பனைக்கு முன்பு பெற்றிருந்த உரிமையின்

காரணமாக அக்கறை கொண்டிருக்கும் எவரும் அத்தகைய விற்பனையை மேற்கடப்பு செய்வதற்கு விதி 68-ன் கீழ் விண்ணப்பம் செய்யலாம். இவ்வாறு விண்ணப்பம் செய்யும்போது, மாவட்டப் பதிவாளரிடம்

(அ) சொத்தை வாங்கியவருக்கு, வாங்கிய தொகையில் 5%-க்கு சமமான ஒரு தொகையைச் செலுத்துவதற்கும்,

(ஆ) தீர்ப்பாணை பெற்றிருப்பவருக்கும், சொத்து விற்பனை அறிவிப்பில் குறிக்கப்பட்ட பாக்கித் தொகையை, வட்டியுடனும், ஜப்தி செலவுகளுடனும், விற்பனைச் செலவுகளுடனும், இதர செலவுகளுடனும், விற்பனை அறிவிப்புத் தேதிக்குப் பிறகு தீர்ப்பாணை பெற்றிருப்பவரால் வாங்கப்பட்ட தொகையைக் கழித்துக்கொண்டு மீதத்தைச் செலுத்துவதற்காக ஒரு தொகையை வைப்புத் தொகையாகச் செலுத்தவேண்டும். அத்தகைய வைப்புத் தொகையும் விண்ணப்பமும் விற்பனைத் தேதிக்கு 30 நாள்களுக்குள் அனுப்பப்பட்டால், விற்பனையை மேற்கடப்பு செய்து பதிவாளர் ஓர் உத்தரவைப் பிறப்பித்து, சொத்தை வாங்கியவருக்கு வைப்புத் தொகையாக வைக்கப் பட்டிருக்கும் சொத்து விற்பனைத் தொகையை விண்ணப்ப தாரரால் வைப்புத் தொகையாக வைக்கப்பட்ட 5% தொகை உட்பட, திருப்பிச் செலுத்திவிடுவார். மேற்கண்டபடி வைப்புத் தொகையும் விண்ணப்பமும் ஒன்றுக்கு மேற்பட்ட நபர்களால் அனுப்பப்பட்டால் முதல் வைப்புத் தொகையைச் செலுத்தியவரின் விண்ணப்பம் கிடைத்தவுடன் விற்பனையை மேற்கடப்பு செய்ய அதிகாரம் பெற்ற அலுவலரால் அது ஏற்றுக் கொள்ளப்படவேண்டும். விதி 69-ல் குறிக்கப்பட்ட காரணங் களுக்காக, அசையாச் சொத்து விற்பனையை மேற்கடக்கச் செய்ய வேண்டுமென்று ஒரு நபர் மனு செய்தால், அவர் விதி 68-ன் கீழ், ஒரு விண்ணப்பத்தைச் செய்து கொள்வதற்கு அவருக்கு உரிமை கிடையாது (விதி 68).

விற்பனையை உறுதிப்படுத்துவதிலும் விற்பனைச் சான்றிதழ் வழங்குவதிலும் ஒழுங்கீனங்கள் காரணமாக விற்பனையை மேற்கடக்கச் செய்வதற்கு ஒரு விண்ணப்பம் செய்யப்படலாம் (விதி 69). இந்த விதியின் கீழ் தீர்ப்பாணை வைத்திருப்பவரும் அல்லது விற்பனை செய்யப்படுவதால் பாதிக்கப்பட்ட எந்த நபரும், சொத்துகளை விகிதாச்சாரப்படி பிரித்துக் கொடுக்கும் போது அதில் ஒரு பாகத்திற்கு உரிமை பெற்ற எந்த நபரும், அசை யாச் சொத்து விற்பனைத் தேதிக்கு 30 நாள்களுக்குள் எந்தச்சமயத் திலும் கீழ்க்கண்ட காரணங்களுக்காக விற்பனையை மேற்கடக்கச் செய்யும்படி மாவட்டப் பதிவாளருக்கு மனுச் செய்யலாம்.

(1) விற்பனை நடத்துவதிலும் விற்பனை விளம்பரம் செய்வதிலும் குறிப்பிடத்தக்க அளவில் ஓர் ஒழுங்கீனம் அல்லது தவறு அல்லது மோசடி. ஆனால், ஒழுங்கீனம் அல்லது மோசடி காரணமாக ஒரு விற்பனையை மேற்கடக்கச் செய்வது என்றால், பதிவாளர் விண்ணப்பதாரருக்கு அத்தகைய ஒழுங்கீனம், தவறு அல்லது மோசடியின் காரணமாக மிகுந்த நட்டம் அடைந்திருக்கிறார் என்ற நம்பிக்கையை அடையவேண்டும் (விதி 69). அத்தகைய மனு ஏற்றுக் கொள்ளப்பட்டால் மாவட்டப் பதிவாளர் விற்பனையை மேற்கடக்கச் செய்து ஒரு புதியவிற்பனைக்குக் கட்டளையிடலாம் [விதி 69 (2)].

விற்பனை மேற்கடக்க செய்யப்பட வேண்டுமென்று மாவட்டப் பதிவாளருக்குத் தோன்றினால், மேற்கடக்கச் செய்யப்பட வேண்டுமென்று ஒரு மனு வரா விட்டாலும் அல்லது மேற்கடக்க செய்யப் பட வேண்டுமென்று மனுவில் கூறப்பட்ட காரணங்கள் தவிர வேறு காரணங்களுக்காகவும் அவர் விற்பனையை மேற்கடக்கச் செய்யலாம். எனவே, மாவட்டப் பதிவாளர் தன்னிச்சையாக விற்பனையை மேற்கடக்கச் செய்வதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார் [விதி 69 (3)-க்கு விலக்குக் கூறு]. விற்பனைத் தேயிலிருந்து 30 நாள்கள் கழிந்தவுடன் விற்பனையை மேற்கடக்கச் செய்வதற்கு எந்த விண்ணப்பமும் செய்யப்படாவிட்டாலும் அல்லது விதி 68 அல்லது விதி 69 (1)-ன்கீழ் அத்தகைய விண்ணப்பம் செய்யப் பட்டு மறுக்கப்பட்டாலும், மாவட்டப் பதிவாளர் விற்பனையை உறுதிப்படுத்தி ஓர் உத்தரவைப் பிறப்பிக்கலாம் [விதி 69 (3)].

ஓர் அசையாச் சொத்தின் விற்பனை உறுதிபடுத்தப்படா விட்டாலும் அல்லது மேற்கடக்கச் செய்யப்படாவிட்டாலும், வைப்புத் தொகை அல்லது சொத்து விற்பனைத் தொகை சொத்து வாங்கியவருக்குத் திருப்பிச் செலுத்தப்பட வேண்டும் [விதி 69 (4)]. விற்பனை உறுதிப்படுத்தப்பட்ட பிறகு, மாவட்டப் பதிவாளர் ஒரு விற்பனைச் சான்றிதழைச் சொத்து வாங்கியவருக்கு நிருணயிக்கப்பட்ட நமூனாவில் வழங்கவேண்டும். இந்தச் சான்றிதழ் ஒரு முத்திரை வரிக் காகிதத்தில் மாவட்டப் பதிவாளரின் அலுவலக முத்திரையும் கையெழுத்துமிடப்பட்டிருக்கவேண்டும் [விதி 69 (5)]. இந்தச் சான்றிதழுக்குச் செலுத்தப்படவேண்டிய முத்திரை வரி, நீதிமன்றங்களாலும் வருவாய்த் துறையினராலும் வழங்கப்படுகிற இதே மாதிரியான சான்றிதழ்களுக்குச் செலுத்தப்பட வேண்டிய முத்திரை வரித் தொகையேயாகும். வழங்கப்பட்ட சான்றிதழில் விற்பனை செய்யப்பட்ட சொத்தின் விவரமும் வாங்கியவர் பெயரும்

குறிக்கப்பட வேண்டும், இந்தச் சான்றிதழ், அசையாச் சொத்தை ஒருவர் வாங்கியதற்கு, முடிவான சான்று (Conclusive Evidence) ஆகும். எல்லா நீதிமன்றங்களிலும், தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றங்களிலும் விற்பனை ருசுப்படுத்தபட வேண்டியிருந்தால் இந்தச் சான்றிதழ் ஒரு முடிவான சான்றாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். சான்றிதழில் பதிவாளருடைய அலுவலக முத்திரை, கையெழுத்து இவை தொடர்பாகச், சான்றிதழ் சமர்ப்பிக்கப்படும் அலுவலர் அதன் மெய்யான தன்மையைச் சந்தேகிப்பதற்குக் காரணமிருந்தாலொழிய வேறு சான்று தேவை இல்லை [விதி 69 (6)]. விதி 69-ன் கீழ் செய்யப் படும் ஓர் உத்தரவு, சட்டப் பிரிவு 97-ன் சரத்துகளுக்கு மட்டும் உட்பட்டு, முடிவானதாக இருக்கும். அந்த உத்தரவை எந்த வழக்கிலும் அல்லது இதர சட்டப்படியான நடவடிக்கைகளிலும் மறுத்துரைக்க முடியாது.

**அசையாச் சொத்து விற்பனைச் சான்றிதழைப் பதிவு செய்தல் :** இந்தியப் பதிவுச் சட்டத்தின் (1908) பிரிவு 89-ன்படியும் அல்லது அதன் உட் பிரிவு (2)-ன் படியும், உட்பிரிவு (4)-ன் படியும் அசையாச் சொத்து விற்பனைச் சான்றிதழ் நீதிமன்றங்களாலும் வருவாய்த் துறை அலுவலர்களாலும் வழங்கப்பட்டால் பதிவு அலுவலருக்கு அனுப்பப்பட்டு அத்தகைய பதிவு அலுவலர் அதைத் தன்னுடைய நெ. 1. புத்தகத்தில் தாக்கல் செய்ய வேண்டும். சென்னை நிலவள வங்கிச் சட்டத்தின் (1934) பிரிவு 17-ன் கீழும், சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் (1932) கீழ் வகுக்கப்பட்ட விதிகளின் கீழும், கூட்டுறவுத் துறை அலுவலர் களால் வழங்கப்படும் அசையாச் சொத்து விற்பனைச் சான்றிதழ் களைக் குறித்து அதேமாதிரியான ஒரு சரத்தை ஏற்படுத்தும் பொருட்டு இந்தியப் பதிவுச் சட்டம் திருத்தப்பட்டிருக்கிறது. அசையாச் சொத்தின் உரிமைப் பதிவை முழுமையாக்குவதற்கும் அது பதிவு அலுவலகங்களில் தொடர்ந்ததாக இருப்பதற்கும் இவ்வாறு இந்தியப் பதிவுச் சட்டம் திருத்தப்பட்டது. அசையாச் சொத்து விற்பனைச் சான்றிதழை விதி 69-ன் கீழ் வழங்கும் கூட்டுறவுத் துறை ஒவ்வோர் அலுவலரையும் அத்தகைய சான்றிதழின் ஒரு நகலைச் சான்றிதழில் பொறிக்கப்பட்ட அசையாச் சொத்து முழுவதும் அல்லது எந்தப் பகுதியும் இருக்குமிடத்தில் அதிகாரம் செலுத்தும் பதிவு அலுவலர் அல்லது பதிவு அலுவலர்களுக்கு அனுப்பவேண்டும். அத்தகைய பதிவு அலுவலர்கள் இந்தியப் பதிவுச் சட்டத்தின்கீழ் அந்த நகலைத் தங்கள் நெ. 1. ஏட்டில் தாக்கல் செய்யவேண்டும். அத்தகைய அசையாச் சொத்து விற்பனைச் சான்றிதழ்கள் அசையாச்

சொத்தின் மதிப்பு ரூ. 100-க்குக் குறைந்திருந்தால், பதவியி லிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கிறது.

பிரிவு 91-ன் கீழ் பதிவாளரின் உத்தரவுகளுக்கெதிரான மேல் முறையீடு: தீர்ப்பாணைகளைப் பதிவாளர் நிறைவேற்றுதல் செய்வதில் மேல்முறையீடு பிரிவு 96 (1) (அ)-ல் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பிரிவு 91-ன் கீழ் செய்யப்பட்ட முடிவு அல்லது உத்தரவினால் பாதிக்கப்பட்ட எந்த நபரும் தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்கு முறையீடு செய்யலாம். அத்தகைய முறையீடு, முடிவு அல்லது உத்தரவுத் தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள், செய்யப்படவேண்டும் [பிரிவு 96 (3)]. எனினும், விதி 69-ன் கீழ் செய்யப்பட்ட ஓர் உத்தரவு பிரிவு 97-ன் (புனராய்வுச்) சரத்துகளுக்குட்பட்டவரை முடிவானதாகும்.

எதிர்ப்புச் சூழ்நிலையில் தக்க அதிகாரம் வாய்ந்த நீதிமன்றத்தால் அசையாச் சொத்தைச் சுவாதீனம் கொடுத்தல்: சொத்தைச் சுவாதீனம் வைத்திருப்பதாக நல்லெண்ணத்துடன் கோரிக்கை செய்யும் ஒரு நபரைத் தவிர வேறு எந்த நபரும் தவணை தவறிய பாக்கிதாரராக அல்லாத எதிர்ப்பு செய்யும் நிலையில், சொத்தை வாங்கியவருக்கு அதைச் சுவாதீனம் அளிப்பதற்கு, விதி 70–ல் காட்டப்பட்டிருக்கும் முறைப்படி நடவடிக்கை எடுக்கலாம். விதி 69-ன்கீழ் வழங்கப்பட்ட விற்பனைச் சான்றிதழைச் சமர்ப்பித்து ஒரு விண்ணப்பம் செய்தால், தக்க அதிகாரம் வாய்ந்த எந்த நீதிமன்றமும், அந்த நீதிமன்றத்தின் முடிவின்படி வாங்கப்பட்ட அசையாச் சொத்து வாங்கியவருக்குத் தீர்ப்பாணை அளிப்பது போல், அதே மாதிரியாகவே அசையாச் சொத்தை வாங்கிய வருக்கு சுவாதீனம் அளிக்கும்பொருட்டு சரியான நிறைவேற்றுக் கட்டளைகளை வெளியிடுவதற்கு உத்தரவிடலாம் (விதி 70).

அசையாச் சொத்தின் விற்பனைத் தொகை வசூலாக வேண்டிய பாக்கித் தொகைக்குச் சமமாக இருக்க வேண்டும். தவணை தவறிய பாக்கிதாரரிடமிருந்து வர வேண்டிய கடனை வசூல் செய்வதற்கு, அவருடைய அசையாச் சொத்து முழுவதையு மாவது அல்லது எந்தப் பாகத்தையுமாவது விற்பனை செய்வதற்கு விற்பனை அலுவலர் அதிகாரம் பெற்றிருக்கிறார். ஆனால், முடிந்த வரை, வர வேண்டிய பாக்கித் தொகை, அதற்குண்டான வட்டி, சொத்தின் ஜப்தி செலவு, விற்பனைச்செலவு, இவற்றின் மொத்தத் தொகைகளை வசூல் செய்வதற்குப் போதுமானவரை அசையாச் சொத்தின் பாகத்தை மட்டும்தான் விற்பனை செய்ய வேண்டும் (விதி 71).

சொத்து ஜப்தி செய்யப்பட்ட பிறகு சொத்தை அந்தரங்கமாக விளுக்குதல் சட்டப்படிச் செல்லத்தக்கது அல்ல: விதிகளின் கீழ் ஒரு சொத்து ஜப்தி செய்யப்படவிருந்தால், ஜப்தி செய்யப்பட்ட சொத்தை அந்தரங்கமாக மாற்றுதலும் அல்லது சுவாதீனம் செய்தலும், அல்லது சொத்திலுள்ள அக்றையை மாற்றுதலும் ஜப்திக்கு முரண்பாடாகத் தவணை தவறிய பாக்கிதாரருக்கு எந்தக் கடன் கொடுப்பதும், அல்லது இலாப ஈவு அல்லது இதர தொகைகள் கொடுப்பதும், ஜப்தியின் கீழ் நிறைவேற்றப்பட வேண்டிய எல்லாக் கோரிக்கைகளுக்கும் எதிரே சட்டப்படிச் செல்லத்தக்கது அல்ல (விதி 72). விதி 72-ன் செயலுக்காக, ஜப்தியின் கீழ் நிறைவேற்றப்பட வேண்டிய கோரிக்கைகளில் விதி 78-ன் கீழ் சொத்துகளை விகிதாச்சாரமாகப் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்ற கோரிக்கைகளும் அடங்கும்.

ஜப்தி நிறைவேற்றுக் கட்டளையையும் விற்பனை நிறைவேற்றுக் கட்டளையையும் சேர்ப்பிக்கும் ஊழியர்களுக்கு (Process Server) பிரயாணப் படி (Batta) கொடுக்கப்படவேண்டும்: விதிகளின் கீழ் அறிவிப்புகளையும் (Notices) அல்லது இதர ஜப்தி விற்பனை நிறைவேற்றுக் கட்டளைகளையும் கட்சிக்காரர்களுக்குச் சேர்ப்பிப்பதற்குப் பணி செய்யும் நபர்கள் பதிவாளரால் அவ்வப்போது நிருணயிக்கப்பட்ட விகிதப்படி, பிரயாணப் படி பெறுவதற்கு உரிமை பெற்றவர்கள்.

பிரயாணப் படி வட்டி, மற்றும் இதர செலவுகள் விற்பனைத் தொகையிலிருந்து (Sale Processs) வசூல் செய்யப்பட வேண்டியவையாகும்: அசையும் சொத்தை ஜப்தி செய்வதற்கும் விற்பனை செய்வதற்கும் செய்யப்பட்ட செலவுகளும் அல்லது விதிகளின் கீழ் அசையாச் சொத்துகளை ஜப்தி விற்பனை செய்வது தொடர்பாகவும் அல்லது ஜப்தி செய்யாமல் விற்பனை நடத்துவது தொடர்பாகவும் செய்யப்பட்ட செலவுகள் விதி 59-ன் கீழ் தீர்ப்பாணை வாங்கியவரால் (Decree Holder) வைப்புத் தொகையாகச் செலுத்தப்பட்ட தொகைக்கு மேற்பட்டால் அத்தகைய மேற்பட்ட தொகை விற்பனை செய்யப்பட்ட சொத்தின் விற்பனைத் தொகையிலிருந்து கழித்துக் கொள்ளப்பட்டாலும் அல்லது நிலைமைக்கேற்பத் தவணை தவறிய பாக்கிதாரரால் செலுத்தப்பட்ட தொகைகளில் இருந்தும் கழித்துக் கொள்ளப்பட்டு மீதியாகவுள்ள தொகையைத் தீர்ப்பாணை வாங்கியவருக்குச் சேர்த்து விடவேண்டும் (விதி 74).

பாக்கித் தொகையைச் செலுத்தியவருக்கு இரசீது கொடுத்தல்: விதி 91-ன் கீழ் வசூல் செய்வதற்கு ஒரு விண்ணப்பம் செய்யப்பட்ட பாக்கித் தொகைக்காகப் பணம் செலுத்தும் எந்த நபரும்

அந்தப் பணத்திற்கு விற்பனை அலுவலர் அல்லது பதிவாளரால் அதிகாரம் அளிக்கப்பட்ட வேறு அலுவலர் அல்லது மாவட்டப் பதிவாளரால் கையெழுத்திடப்பட்ட ஓர் இரசீதைப் பெற்றுக் கொள்வதற்கு உரிமையுள்ளவர் ஆவார். அத்தகைய இரசீதில் பணம் செலுத்திய நபர்கள் பெயரும், எதற்காக அத்தகைய பணம் செலுத்தப்பட்டது என்பதும் எழுதப்பட வேண்டும் (விதி 75).

**சொத்து ஜப்திக்கெதிராகச் செய்யப்படும் கோரிக்கைகளையும் மறுப்புகளையும் ஆராய்தல் :** இந்த விதிகளின்கீழ் ஜப்தி செய்யப்படும் சொத்துக்கு, அத்தகைய சொத்து ஜப்திக்குப் பொறுப்பாகாது என்ற காரணத்தால், ஒரு கோரிக்கை அனுப்பப்படலாம்; அல்லது மறுப்பு செய்யப்படலாம். விற்பனை அலுவலர் அத்தகைய கோரிக்கையை அல்லது மறுப்பை ஆராய்ந்து தக்க முடிவு செய்யவேண்டும். எனினும், செய்யப்பட்ட கோரிக்கை அல்லது மறுப்பு வீணானது என்று விற்பனை அலுவலர் கருதினால் அத்தகைய பரிசீலனை செய்ய வேண்டியதில்லை [விதி 76 (1)]. கோரிக்கை அல்லது மறுப்பு தொடர்பான சொத்தானது, விற்பனைக்காக விளம்பரம் செய்யப்பட்டிருந்தால், விற்பனை அலுவலர் அந்தக் கோரிக்கையை அல்லது மறுப்பை ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வரும்வரை விற்பனையை ஒத்தி வைக்கலாம் [விதி 76 (2)]. கோரிக்கை அல்லது மறுப்பு செய்யப்பட்டிருந்து அவ்வாறு செய்தவருக்கெதிராக ஓர் உத்தரவு பிறப்பிக்கப் பட்டால், அவர் அந்த உத்தரவுத் தேதியிலிருந்து ஆறு மாதங் களுக்குள் தகராறிலிருக்கும் சொத்தில் அவர் கோரியிருக்கும் உரிமையை நிரூபிப்பதற்கு ஒரு வழக்குத் தொடரலாம். அத்தகைய வழக்கின் முடிவுக்குட்பட்டு அந்த உத்தரவு முடிவானதாகும் [விதி 76 (3)].

**சொத்தை மீண்டும் விற்பனை செய்தல்-சொத்து விலையில் துண்டு விழுந்தால் அதை வசூல் செய்தல் :** விதி 62 பகுதி (XVI) அல்லது விதி 67-இன் பகுதி (VII) அல்லது (X) இவற்றின்கீழ் நடத்தப் பட்ட சொத்தின் மறு விற்பனையில் (Resale) சொத்து விலையில் துண்டு விழுந்தாலும், அதற்குக் காரணம் சொத்தை வாங்கிய வருடைய தவணை தவறிய குற்றமாக இருந்தாலும் அத்தகைய மறு விற்பனைக்காகச் செய்யப்பட்ட எல்லாச் செலவுகளையும் விற்பனை அலுவலரால் சான்றிடப்பட்டுப் பதிவாளருக்கு அல்லது மாவட்டப் பதிவாளருக்குத் தெரியப்படுத்த வேண்டும். தீர்ப்பாணை வாங்கியவரின் அல்லது தவணை தவறிய பாக்கிதாரரின் வேண்டுகோளின்பேரில் அத்தகைய செலவுகள்,

சொத்தை வாங்கிப் பணத்தைச் செலுத்தாத சொத்து வாங்கிய வரிடமிருந்து விதிகளின்கீழ் வசூலிக்கப்படும். அவ்வாறு வசூலிப் பதில் உண்டான செலவுகளையும்கூடத் தவணை தவறிய சொத்து வாங்கியவர் ஏற்றுக்கொள்ள வேண்டும் [விதி 76 (4)]. சொத்துக்கு மறு விற்பனையில் முதல் விற்பனையைவிட அதிகமான விலை கிடைத்தால், முதல் விற்பனையில் சொத்தை வாங்கித் தவணை தவறியவருக்கு அந்த விலை அதிகரிப்பில் எந்தக் கோரிக்கையும் செய்ய உரிமை கிடையாது [விதி 76 (4) (ஆ)].

**நிறைவேற்றுதல் மனுக்களை மேற்கடக்கச் செய்தலும் (Dismissal) அல்லது தீர்ப்பாணை வாங்கியவர் கவனக் குறைவு காரணத்திற்காக நடவடிக்கைகளை ஒத்தி வைத்தலும்:** ஒரு தீர்ப்பாணை நிறைவேற்று நடவடிக்கையில் ஒரு சொத்து ஜப்தி செய்யப்பட்டு ஆனால் தீர்ப்பாணை வாங்கியவர் தவணை தவறிய காரணத்தால் மேற்கொண்டு அந்த மனுவில் நடவடிக்கை மாவட்டப் பதிவாளரால் எடுக்க முடியாமலிருந்தால், அவர் நிறை வேற்றுதல் மனுவை மேற்கடச்சுச் (Dismiss) செய்யலாம் அல்லது போதிய காரணத்திற்காக நிறைவேற்றுதல் நடவடிக்கைகளை ஒரு தேதிக்குத் தள்ளி வைக்கலாம். அத்தகைய மனு மேற்கடப்பு செய்யப்பட்டபோது ஜப்தி நின்றுவிடும் (விதி 77).

**தீர்ப்பாணைகளைப் பல நீதிமன்றங்களில் நிறைவேற்றுதல் செய்யும் பொழுது, ஜப்தி செய்தலும் சொத்துகளை விகிதாச்சாரமாகப் பகிர்ந்து கொடுத்தலும்:** ஒரு நீதிமன்றத்தின் தீர்ப்பாணை நிறைவேற்றப் படும்போது ஒரு சொத்து முன்னரே ஜப்தி செய்யப்பட்டு நீதிமன்றத்தின் பாதுகாப்பிலில்லாத எந்தச் சொத்தையும் விற்பனை அலுவலர் விதிகளின்கீழ் ஜப்தி செய்தால், அந்த நீதிமன்றம் அத்தகைய சொத்தைப் பெறவும் அந்த வசூல் செய்ய வும் அல்லது அத்தகைய சொத்துக்குச் செய்யப்படும் கோரிக்கை களிலும் அத்தகைய சொத்தின் ஜப்திக்கெதிரே செய்யப்படும் மறுப்புகளிலும் முடிவும் செய்யவேண்டும். ஒன்றுக்கு மேற்பட்ட நீதிமன்றங்களின் தீர்ப்பாணைகளின் நிறைவேற்று நடவடிக்கையில் ஒரு சொத்து ஜப்தி செய்யப்பட்டிருந்தால், அத்தகைய சொத்-தைப் பெறவும் அல்லது வசூல் செய்யவும் அல்லது அத்தகைய சொத்தின் ஜப்திக்கெதிரே செய்யப்படும் கோரிக்கையையும் மறுப்பையும் முடிவு செய்யவேண்டிய நீதிமன்றமானது மேலான தான நீதிமன்றம் (Court of the highest grade) ஆகும். அத்தகைய நீதிமன்றங்களினிடையே தர வேறுபாடு இல்லாமலிருந்தால், எந்த நீதிமன்றத்தின் தீர்ப்பாணையின்கீழ் சொத்து முதலில் ஜப்தி செய்யப்பட்டதோ அந்த நீதிமன்றம் மேலானதான நீதிமன்றம் ஆகும் [விதி 78 (1)].

சொத்துகளை விற்பனை அலுவலர் வைத்துக் கொண்டிருந்தாலும், அத்தகைய சொத்துகளைப் பெறுவதற்கு முன்னர் தீர்ப்பாணைகளை நிறைவேற்றுதலுக்காக செய்யப்பட்ட விண்ணப்பத்தின் அடிப்படையில் தவணை தவறிய ஒரு பாக்கிதாரருக்கு எதிராக ஒன்றுக்கு மேற்பட்ட தீர்ப்பாணைகள் வாங்கியவர்களிடமிருந்து கேட்பு அறிவிப்புகள் (Demand Notices) கிடைத்து தீர்ப்பாணை வாங்கியவர்கள் தங்கள் பணத்தைப் பெறுமலிருந்தாலும் அந்தச் சூழ்நிலையில் வசூலுக்காகச் செய்யப்பட்ட செலவுகளைக் கழித்துக்கொண்டு மீதியுள்ள சொத்துகளை விற்பனை அலுவலர் விகிதாச்சாரமாக தீர்ப்பாணை வாங்கியவர்களிடையே சிவில் நடைமுறைச் சட்டத்தின் (1908) பிரிவு 73 நியமிக்கப்பட்ட முறையில் பகிர்ந்து விநியோகிக்க வேண்டும் [விதி 78 (2)]. பிரிவு 91-ன்கீழ் பதிவாளரால் நிறைவேற்றுதல் செய்யப்படத் தகுதி பெற்றிருக்கும் தீர்ப்பாணைகளைப்பற்றித்தான் மாவட்டப் பதிவாளர் சொத்துகளை விகிதாச்சாரமாக விநியோகம் செய்வதற்கான விண்ணப்பத்தை ஏற்றுக் கொள்ளலாம். [சென்னைக் கூட்டுறவுக் கையேடு பாகம் இரண்டின் (Co-operative Manual Vol. II) பக்கங்கள் 81—82)-ஐ பார்க்கவும்].

அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய தொகைகளை வசூலிப்பதற்கான நடைமுறை (விதி 79): அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய தொகைகளை நில வருமான பாக்கிக்காக வசூல் செய்வதற்காக பிரிவு 97 ஏற்பாடு செய்திருக்கிறது. அத்தகைய தொகைகள் கூட்டுறவுத் துறையின் மூலமாகக்கூட வசூலிக்கப்படலாம். அவ்வாறு வசூல் செய்வதற்கான நடைமுறை விதி 79-ல் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. விதிகள் 59 முதல் 78 வரை நிருணயிக்கப்பட்டிருக்கும் சரத்துகள், சில மாறுதல்களோடு, அரசாங்கத்திற்குச் சேரவேண்டிய தொகைகளை வசூலிப்பதிலும் பயன்படுத்தப்படலாம் இத்தகைய தொகைகளை வசூல் செய்வதில் சில நடைமுறைகள் கைவிடப்பட்டிருக்கின்றன என்பதுதான் இந்த மாறுதல்கள். அவையாவன :

(1) விதிகளின்கீழ் ஒரு மனு செய்யப்படாமலிருந்தாலுங் கூடப் பதிவாளரே நடவடிக்கை எடுக்கலாம் [விதி 79 (1)].

(2) உப-விதி (1)-ன்படி நடவடிக்கை செலவுகளுக்காக ஒரு வைப்புத் தொகையை வைக்க வேண்டுமென்பது தேவையில்லை [விதி 79 (2)].

(3) விதி 62 (1)-ன்படி தவணை தவறிய பாக்கிதாரர்மீது கேட்பு அறிவிப்பு அனுப்பிக்கேட்ட பணத்தை அவர்

செலுத்தத் தவறினால் அவருடைய சொத்தை ஐப்தி செய்வதற்கு உத்தேசமிருப்பதாக முந்தைய ஓர் அறிவிப்பை, விதி 62-ன் பகுதி (1)-ல் நிருணயித்தபடி, தீர்ப்பாணை வாங்கியவருக்கு விற்பனை அலுவலர் அனுப்ப வேண்டிய தேவையில்லை. ஐப்தி செய்யப்பட்ட சொத்தின் பாதுகாப்பை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று தீர்ப்பாணை வாங்கியவரை வற்புறுத்த விற்பனை அலுவலருக்கு அந்த விதியின் பகுதி (ii) சரத்துகளிலிருக்கும் அதிகாரத்தையும் கையாளத் தேவையில்லை [விதி 79 (3)].

(4) விதி 67 (V)-ன்படி தீர்ப்பாணை வாங்கியவருக்கு ஐப்தி அறிவிப்பின் நகல் ஒன்றை அனுப்புவது தேவையில்லை [விதி 79 (4)].

(5) விதி 67 (5)-ன்படி தீர்ப்பாணை வாங்கியவருக்குச் சொத்து விற்பனை விளம்பர அறிவிப்பைக் கொடுப்பதற்குத் தேவையில்லை [விதி 79 (5)],

(6) விதி 67 (6)-ன் கீழ் தீர்ப்பாணை வாங்கியவரால் அனுப்ப வேண்டிய வில்லங்கச் சான்றிதழைப் பதிவாளரே வாங்க வேண்டும்.

(7) விதி 68 (1) (ஆ)-ன் பகுதி (ஆ)-ன் கீழ் செலுத்தப் பட வேண்டிய தொகைகள் தீர்ப்பாணை வாங்கியவரின் சார்பாக விற்பனை அலுவலருக்குச் செலுத்தப் பட வேண்டும் [விதி 79 (7)].

(8) விதி 64 (1)-ல் குறிக்கப்பட்ட விண்ணப்பம் தீர்ப்பாணை வாங்கியவரின் சார்பாக விற்பனை அலுவலருக்கு அனுப்பப்பட வேண்டும் [விதி 79 (8)].

நிறைவேற்றுக் கட்டளை அறிவிப்பைச் சேர்ப்பிக்கும் வகை அல்லது நிறைவேற்றுக் கட்டளை அறிவிப்பை மெய்யொப்பம் செய்தல் (Authertication) : ஒவ்வொரு நிறைவேற்றுக் கட்டளை அறிவிப்பும் எழுத்து மூலம் இருக்கவேண்டும். அதை வெளியிடும் அலுவலரின் அலுவலக முத்திரையால் அது மெய்யொப்பமிடப்பட்டு அத்தகைய அலுவலரால் அல்லது இதற்கென அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட ஒரு நபரால் கையெழுத்திடப்பட வேண்டும் (விதி 80).

தீர்ப்புக்கு முன் ஐப்தி (Attachment before Judgement) : சட்டத்தின் கீழ் எந்த நடவடிக்கையிலும் தீர்ப்புக்கு முன்பு

சொத்தை ஜப்தி செய்யும் உத்தரவைப் பிறப்பிக்கப் பதிவாளருக்கு அதிகாரம் கொடுப்பது தேவை என்று கூட்டுறவுச் சட்டக் குழுவினர் கருதினர். எந்த ஓர் உத்தரவைத் தோற்கடிக்கும் அல்லது தாமதப்படுத்தும் நோக்கத்துடன் தொடர்பான ஒரு நபர் தன்னுடைய சொத்து முழுவதையும் அல்லது சொத்தின் எந்தப் பாகத்தையும் பராதீனம் செய்யப் போகிறார் அல்லது பதிவாளரின் அதிகார எல்லையிலிருந்து எடுத்துவிடப் போகிறார் என்று பதிவாளருக்குத் தோன்றினால், தீர்ப்புக்கு முன்பு சொத்தை ஜப்தி செய்வதற்குப் பதிவாளருக்கு அதிகாரம் அளிக்கக் கூட்டுறவு மாதிரி மசோதாவின் 98ஆம் பகுதியில் அந்தக் குழுவினர் சரத்துகள் ஏற்பாடு செய்துள்ளனர். அத்தியாயம் X-ல் அடங்கியுள்ள விதிகளில் ஏற்படுத்தப்பட்டவண்ணம் பிரிவு 108-ன்கீழ் சொத்து ஜப்தி செய்யப்பட வேண்டும் [விதி 81 (1)]. அவ்வாறு ஜப்தி செய்யப்பட்ட சொத்துக்குக் கோருரிமை எந்த நபராவது செய்தால் அந்தக் கோருரிமையை அத்தியாயம் (X-ல்) அடங்கியுள்ள விதிகளில் குறிக்கப்பட்ட முறைப்படி, விதிகளில் குறிப்பிடப்பட்ட அலுவலரால் ஆராயப்பட வேண்டும் [விதி 81 (2)]. ஒரு சொத்து ஜப்தி செய்வதற்குக் கட்டளையிடப்பட்டால் மாவட்டப் பதிவாளர் அந்த ஜப்தியைக் கீழ்க்கண்ட சூழ்நிலைகளில் திரும்பப் பெறும்படி உத்தரவிடலாம் :

(அ) தொடர்பான நபர் ஜப்தியின் செலவுகளுக்கான பிணையத்துடன் தேவைப்படும் பிணையத்தைத் செலுத்தினால் அல்லது,

(ஆ) பிரிவு 71 (1)-ன் கீழ் தொடர்பான நபர் எந்தப் பணத்தையும் அல்லது சொத்தையும் திருப்பிக் கொடுக்கத் தேவையில்லை என்றும் அல்லது அவர் நட்டப் பற்றுப்பொறுப்புக்காகச் சங்கத்தின் சொத்துகளுக்கு எந்தத் தொகையையும் உதவித் தொகையாக அளிக்க வேண்டியதில்லை என்றும் பதிவாளர் ஓர் உத்தரவைப் பிறப்பித்தால் அல்லது,

(இ) பிரிவு 73 (1)-ன் கீழ் தாவா செய்யப்பட்ட தகராறு, எவருடைய விண்ணப்பத்தின்பேரில் ஜப்தி செய்யப்பட்டதோ அவருக்கெதிராக, முடிவு செய்யப்பட்டால் அல்லது,

(ஈ) பிரிவு 87 (2)-ன் பகுதி (ஆ)-ன் கீழ், கலைப்பு அலுவலர் தொடர்பான நபர் எந்த உதவித் தொகையையும் செலுத்த வேண்டியதில்லை என்று முடிவு செய்தாலும் [விதி 81 (3)].

விதி 81 (1)-ன் கீழ் செய்யப்படும் ஜப்தியானது ஜப்தி செய்வதற்காக எடுக்கப்பட்ட நடவடிக்கைகளில் தொடர்

பில்லாத நபர்களின் ஜப்தி செய்வதற்கு முன்பிருந்த உரிமையைப் பாதிக்கக்கூடாது. அல்லது எவருடைய சொத்து ஜப்தி செய்யப் படுகிறதோ அவருக்கெதிராக ஒரு தீர்ப்பாணையை வைத்திருக்கும் எந்த நபரும், அத்தகைய தீர்ப்பாணை நிறைவேற்றுதல் நடவடிக்கையில் ஜப்தி செய்யப்பட்டிருக்கும் சொத்தை விற்பனை செய்வதற்கு, மனு செய்துகொள்ளத் தடையிருக்கக் கூடாது [விதி 81 (4)]. விதி 81-ன் சரத்துகள் காரணமாக ஒரு சொத்து ஜப்தியிலிருக்கும்போது ஜப்தி சொத்தின் சொந்தக்காரருக் கெதிரே ஒரு தீர்ப்பாணை பின்னல் பிறப்பிக்கப்பட்டால் அச் சொத்தை மீண்டும் ஜப்தி செய்வதற்காக அத்தகைய தீர்ப் பாணையை நிறைவேற்றுதல் செய்வதற்கான விண்ணப்பத்தில் மனு செய்துகொள்ளத் தேவையில்லை [விதி 81 (5)]. தீர்ப்புக்கு முன்பு செய்யப்பட்ட ஜப்தி, தீர்ப்பு பிறப்பிக்கப்பட்டவுடன், உறுதியாகிவிடும்.

தீர்ப்புக்கு முன்பு செய்யப்படும் ஜப்தியில், மாவட்டப் பதிவாளர் தவணை தவறிய பாக்கிதாரர் தன் சொத்தைப் பராதீனம் செய்யும் நோக்கத்துடனிருக்கிறார் என்று ஐயமுறுவது உண்மையானதே என்று திருப்தி செய்துகொள்ளவேண்டும். அதற்குப் பிறகு தீர ஆராய்ந்து உடனே ஜப்தி செய்வது தேவை யாகத் தோன்றினல் நிறைவேற்றுதல் அலுவலர்கள், ஆரம்ப அறிவிப்பைப் (Preliminary Notice) கொடுக்காமலே, உடனே நமூனவின் வாசகத்தைத் தக்கவாறு திருத்தி ஜப்தி உத்தரவை வெளியிடலாம். மற்ற எல்லாச் சூழ்நிலைகளிலும் ஜப்தி செய்வதற்கு முன்பு ஓர் அறிவிப்பு வெளியிடுவது விரும்பத்தக்கது. ஏனென்றால், குற்றமில்லாத தவணை தவறிய பாக்கிதாரரைத் தண்டிக்கக்கூடாது.

நிபந்தனைக்குட்பட்ட ஜப்தி செய்யப்படும் சொத்து விரைவாகவும், இயல்பாகவும் அழியக்கூடியதாத இருந்தாலும், அல்லது அதைப் பாதுகாப்புடன் வைப்பதற்குண்டான செலவுகள் அதன் மதிப்பைவிட அதிகப்படுவதாக இருந்தாலும், விற்பனை அலுவலர் விதிகளில் நிருணயிக்கப்பட்ட 15 நாள்கள் காலம் கழிவதற்கு முன்பே, அல்லது பிரிவு 73 அல்லது 87 அல்லது 71-ன்கீழ் ஓர் உத்தரவு பிறப்பிக்கப்படுவதற்கு முன்பும், ஜப்தி உத்தரவில் குறிக்கப்பட்ட தொகை இதற்கு முன்பே செலுத்தப் பட்டு விட்டாலொழிய எந்தச் சமயத்திலும் அந்தச் சொத்தை விற்பனை செய்து விற்பனைத் தொகையில் விற்பனை செலவுகளைக் கழித்துக் கொண்டு மீதியை அருகிலுள்ள அரசாங்கக் கருவூலத்தில் பாதுகாப்பாக வைக்கவேண்டும்.

8. **பிரிவு 32 (1)-ன் கீழ் ஈடுசெய்யப்பட்ட சொத்து விற்பனை மூலம் கடனை வசூல் செய்வதற்கான விதிமுறை** [(Recovery of Debt by Sale of Property Subject to a Charge under Sec 32 (1)].

முந்தைய அத்தியாயத்தில் விளக்கியுள்ளபடி ஓர் உறுப்பினரிட மிருந்து அல்லது முன்னாள் உறுப்பினரிடமிருந்து அல்லது இறந்து போன உறுப்பினரின் சொத்திலிருந்து சங்கத்திற்கு வரவேண்டிய கடன்களை குறித்துச் சங்கம் கொடுத்த கடனுதவியைக் கொண்டு பயிரிடப்பட்ட பயிர்கள்மீதும், வாங்கப்பட்ட பொறிகள் (Machinery) மீதும் அல்லது கச்சாப் பொருள்கள் மீதும் சங்கத் திற்கிருக்கும் முதன்மையான ஈடு உரிமை கூட்டுறவுச் சங்கங்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் சிறப்புரிமைகளில் ஒன்றாகும். இந்த முதலீடு நிறைவேற்றப்பட முடியாவிட்டால் அது மதிப்பில்லாததாகி விடும். இந்த முதலீட்டை நிறைவேற்றுவதற்குப் பிரிவு 92-ல் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அத்தகைய கடன்களை வசூல் செய்வதற்கான செயல்முறை பிரிவு 92-லும், விதிகள் 82-லும், 83–லும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

விதி 82-ன்படி பிரிவு 92-ன்கீழ் செய்யப்படும் ஒவ்வொரு விண்ணப்பமும் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட நமூனாவில் செய்யப்பட்டு ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவால் அதிகாரம் அளிக்கப்பட்ட ஒரு நபரால் கையெழுத்திடப்பட வேண்டும். விண்ணப்பம் செய்யும் சங்கம் விற்பனைக்குத் தேவையான செலவு களைக்கூட வைப்புத் தொகையாகச் செலுத்த வேண்டும் [விதி 82 (1) & (2) ]. அத்தகைய விண்ணப்பம் பெற்றவுடன் பதிளாளர் அல்லது மாவட்டப் பதிவாளர், நிருணயிக்கப்பட்ட நமூனாவில், தவணை தவறிய பாக்கிதாரருக்கு ஒரு கேட்பு அறிவிப்பை வெளி யிடுவார். அந்த அறிவிப்பில் தவணை தவறிய பாக்கிதாரர் தன் பாக்கியின் அறிவிப்பு தனக்குச் சேர்ப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து ஏழு நாள்களுக்குள் செலுத்த வேண்டுமென்று கேட்கப்படுவார். அவ்வாறு பாக்கித் தொகை செலுத்தப்படாவிட்டால், மாவட்டப் பதிவாளர் கடனுக்குச் சமமான மதிப்புள்ள சொத்தைப் பிரிவு 32-ன்கீழ் விற்பனை செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும். விதிகள் 59 முதல் 78 வரையுள்ள விதிகளில் சரத்து கள் அத்தகைய விற்பனைக்குப் பயன்படுத்தப்பட வேண்டும்.

பிரிவு 32 (3)-ன் கீழ் சங்கத்தின் வசம் வைக்கப்படவேண்டும் அல்லது ஒப்படைக்கப்படவேண்டும் என்று சங்கத்தால் விரும்பப் படும் தவணை தவறிய பாக்கிதாரரின் சொத்தைக் குறித்து கையாளப்பட வேண்டிய செயல்முறை விதி 83-ல் விளக்கப் பட்டிருக்கிறது. அச் சொத்து பிரிவு 32 (3)-ன் கீழ் சங்கத்தின் வசம்

கொடுக்கப்படவேண்டும் அல்லது ஒப்படைக்கப்பட வேண்டுமென்று சங்கம் விரும்பலாம். அத்தகைய சொத்து சங்கத்தால் அதிகாரமளிக்கப்பட்ட அலுவலரிடம் கொடுக்கப்படவேண்டும் அல்லது தவணை தவறிய பாக்கிதாரர், கேட்கப்படும்பொழுது சொத்தை முன்னிலைப்படுத்துவதற்கு, நிருணயிக்கப்பட்ட நமூனுவில், ஒரு பத்திரம் எழுதிக் கொடுத்தால் அவருடைய ஒரு நியமிக்குக் (Nominee) கொடுக்கப்பட வேண்டும் [ விதி 83 (1) ]. உப-விதிகள் (2), (3) & (4)-ல் கால்நடை, பயிர்கள், பொறிகள் முதலியவற்றை முறையே பாதுகாப்பாக வைப்பதற்கான நடைமுறை நிருணயிக்கப்பட்டிருக்கிறது. பயிர்கள் அல்லது சேகரிக்கப்படாத நிலத்தின் விளைச்சலைப் பொறுத்த வரையில், விளைச்சலை அறுவடை செய்து சேகரித்து சங்கத்தின் வசம் கொடுக்கும்படிப் பாக்கிதாரரைச் சங்கம் கேட்கலாம். அல்லது சங்கத்தின் செலவில் சங்கமே அவ்வாறு செய்வதற்கு ஏற்பாடு செய்யலாம். இந்தச் சூழ்நிலையில் சங்கம் செய்துள்ள செலவுகளைத் தவணை தவறிய பாக்கிதாரர் ஏற்றுக்கொள்வார் [விதி 83 (2)].

சொத்து, ஆடு, மாடு, அல்லது கால்நடையாக இருந்தால், சங்கம் அவற்றை எந்தவிதத்திலும் வேலை வாங்கவோ அல்லது பயன்படுத்தவோ கூடாது. ஆடு, மாடு, அல்லது கால்நடைக்குத் தீவனம் அளிப்பதற்காகச் சங்கம் செய்யும் செலவுகளைத் தவணை தவறிய பாக்கிதாரர் ஏற்றுக்கொள்ளவேண்டும் [ விதி 83 (3) ]. சொத்து உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் ஒரு பொறியாக (இயந்திரமாக) இருந்தால், அல்லது அது ஓர் உறுப்பினர் உபயோகத்திலிருக்கும் தொழிற்சாலை, கிடங்கு அல்லது வியாபார நிலையமாக இருந்தால், அந்த உறுப்பினரின் வேண்டுகோளின் பேரில் அவர் சங்கம் திருப்தியடையும் வண்ணம் ஒரு பிணையத்தை முன்னிலைப்படுத்தினுல் அவர் வசமே அந்தச் சொத்தைச் சங்கம் விட்டு வைக்கலாம். அத்தகைய பிணையம் வில்லங்கமில்லாத அசையாச் சொத்து அல்லது நபர் பிணையாக இருக்கவேண்டும். இல்லாவிடில், தவணை தவறிய பாக்கிதாரர் போதுமான பிணையம் கொடுக்கும்வரை, அல்லது அவர் கடன் அல்லது சொத்தின்மீது பற்றுப் பொறுப்பு சங்கத்திற்குள்ளவரை, பாக்கியைத் தீர்க்கும் வரை அவருடைய சொத்தைச் சங்கம் தன்வசமே வைத்துக் கொள்ளலாம். பொறி முதலியவற்றை நல்ல நிலைமையில் வைத்துக் கொண்டிருப்பதற்கும் நிருவகிப்பதற்கும் ஏற்பட்ட செலவுகளைத் தவணை தவறிய பாக்கிதாரர் தான் சொத்தைத் திரும்பப் பெற்றவுடன் அல்லது சொத்து விற்கப்பட்டால் விற்பனைத் தொகையிலிருந்து செலுத்திவிடவேண்டும் [விதி 83 (4)].

9. சிவில் நீதிமன்றங்களிலிருந்து பெற்ற தீர்ப்பாணைகளை நிறைவேற்றுதல் (Execution of Decrees Obtained from Civil Courts)

சங்கங்கள் வசமிருக்கும் சிவில் நீதிமன்ற தீர்ப்பாணைகளும் பிரிவு 91-ன் கீழ் கூட்டுறவுத் துறையின் மூலம் நிறைவேற்றப் படலாம். அத்தகைய தீர்ப்பாணைகள் உறுப்பினரல்லாதவர்கள் மீது வாங்கப்பட்டிருந்தாலும் அவ்வாறு நிறைவேற்றப்படலாம். ஆனல், அத்தகைய தீர்ப்பாணைகள் சங்கத்திற்குச் சாதகமாக இருக்கவேண்டும். அதாவது தீர்ப்பாணையின்கீழ் வசூலிக்கப்பட வேண்டிய பணம் ஒரு சங்கத்திற்குப் பாக்கியானதாக இருக்க வேண்டும்.

10. காலாவதியான தீர்ப்பாணைகளை நிறைவேற்றுதல் (Execution of time barred Decrees)

ஒரு தீர்ப்பாணை விடுக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று வருடங்களுக்குள் அது நிறைவேற்றுவதற்கு அனுப்பப்படா விட்டால் அது காலாவதி அடைந்துவிடுகிறது. காலத் திற்குள் தீர்ப்பாணை நிறைவேற்றுவதற்கு அனுப்பப்பட்டு, ஆனல், தீர்ப்பாணைத் தொகை முழுவதும் வசூலிப்பதற்கு முன்னர், சில காரணங்களுக்காக நிறைவேற்றுதல் மனு மூடப் பட்டால் (closed), அந்தத் தீர்ப்பாணையின் நிறைவேற்றுதல் மனு மூடப்பட்ட தேதியிலிருந்து மூன்று வருடங்கள் கழிவதற்கு முன்னர் மீண்டும் நிறைவேற்றுதலுக்கு அனுப்பப்பட வேண்டும். இல்லாவிடில், அந்தத் தீர்ப்பாணை காலாவதி அடைந்துவிடும். ஒரு தீர்ப்பாணையை உயிருடன் வைத்திருப்பதற்கு நிறை வேற்றுதல் மனு மூடப்படும் தேதியிலிருந்து மூன்று வருடங் களுக்குள் அவ்வப்போது நிறைவேற்றுதல் விண்ணப்பங்கள் அனுப்பப்பட வேண்டும். அம்மாதிரி அவ்வப்போது நடவடிக்கை எடுத்தாலும் ஒரு தீர்ப்பாணை தேதியிலிருந்து 12 வருடங்கள் கழிந்துவிட்டால் அந்தத் தீர்ப்பாணை காலாவதி ஆகிவிடும். அத்தகைய காலாவதியான திர்ப்பாணைகளை நிறைவேற்றுதலுக் காக ஏற்றுக்கொள்ளக்கூடாது. அத்தகைய சூழ்நிலைகளில், சிவில் நீதிமன்றங்கள் மூலம் நடவடிக்கை எடுக்குமாறு தொடர்பான நபர்களுக்கு யோசனை கூறவேண்டும். தீர்ப்புக் கடனைக் கொடுக்க வேண்டியவர் (Judgement Debtor) மோசடியாலும் அல்லது பலவந்தத்தாலும், நிறைவேற்றுதல் விண்ணப்பத் தேதிக்கு முன்பு 12 வருடங்களுக்குள் சில சமயங்களில் தீர்ப்பாணை நிறை வேற்றுவதைத் தடுத்திருந்தால் அத்தகைய சூழ்நிலைகளில் மேல் நடவடிக்கை எடுக்கச் சிவில் நீதிமன்றங்களுக்கு உரிமை உண்டு.

மாவட்டப் பதிவாளரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட நிறைவேற்றுதல் விண்ணப்பங்கள் சுறுசுறுப்பாக முடிவு செய்யப்பட வேண்டும். நீண்ட காலத்திற்கு நடவடிக்கை ஒன்றுமில்லாமல் அந்த விண்ணப்பங்களைச் சும்மா வைத்துக் கொண்டிருக்கக் கூடாது. தீர்ப்பாணை வைத்திருக்கும் சங்கம் நடவடிக்கை எடுக்க விருப்பமில்லாமலிருந்தால், நிறைவேற்றுதல் விண்ணப்பங்களை அது திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டும் அல்லது அந்த விண்ணப்பங்களை மாவட்டப் பதிவாளர் மேற்கடக்கச் செய்யவேண்டும். கீழ்க்கண்ட சூழ்நிலைகளில் நிறைவேற்றுதல் விண்ணப்பங்கள் மூடப்படலாம் :

(1) பாக்கித் தொகை செலுத்தப்படாவிட்டால்,

(2) நிறைவேற்றுதல் விண்ணப்பம் திரும்பப் பெற்றுக் கொள்ள அனுமதிக்கப்பட்டுவிட்டால்,

(3) நிறைவேற்றுதல் விண்ணப்பம் மேற்கடக்கச் செய்யப் பட்டுவிட்டால். நிறைவேற்றுதல் செலவுகள் எல்லாம் முழுமையாக வசூல் செய்யப்பட்டு, வசூலிக்கப்பட்ட எல்லாத் தொகையும் சரியான நபருக்கு அனுப்பப்பட்ட பிறகுதான், நிறைவேற்றுதல் விண்ணப்பங்கள் மூடப்பட வேண்டும். நிறைவேற்றுதல் விண்ணப்பங்களை மூடும்போது மேல் நடவடிக்கை ஒன்றும் எடுக்க வேண்டியதில்லை என்பதை உறுதிப்படுத்திக்கொள்ளவேண்டும்.

நிறைவேற்றுதல் நடவடிக்கைகளை விரைவுபடுத்துவதற்குத் தக்க பயனுள்ள செயல்முறை கையாளப்பட வேண்டுமென்று சந்தானம் குழுவினர் யோசனை கூறியிருக்கின்றனர். தற்போது இது தொடர்பான வேலை அதிகரிப்பைச் சமாளிப்பதற்கு, மத்திய வங்கிகள் உள்ளிட்ட பெரிய கூட்டுறவு நிறுவனங்கள் தீர்ப்பாணைகள் நிறைவேற்றுதல் நடவடிக்கைகளைக் கவனிப்பதற்குக் கூட்டுறவுத் துறை ஆய்வாளர்களின் சேவையை எடுத்துக் கொள்வதற்கு அனுமதிக்கப்பட்டிருக்கின்றனர். அத்தகைய ஆய்வாளர்கள், பொதுவாக, மாவட்டப் பதிவாளரின் கட்டுப்பாட்டின் கீழ் நேர்முகமாக வேலை செய்கிறார்கள்; அல்லது அவர்கள் அத்தகைய மத்திய வங்கிகளில் அல்லது பெரிய கூட்டுறவு நிறுவனங்களில் செயலாளர்களாகவும் நிருவாக அலுவலர்களாகவும் கூட்டுறவுத் துணைப் பதிவாளர்களின் கீழ் வேலை செய்கிறார்கள். மத்திய வங்கிகளில் செயலாளர்களாகவும் நிருவாக அலுவலர்களாகவும் வேலை செய்யும் துணைப் பதிவாளர்கள்கூட, குறிப்பிடப்பட்ட விவசாய நாணயச் சங்கங்களைக் குறித்து நிறைவேற்றுதல் விண்ணப்பங்களை ஏற்றுக் கொள்வதற்கும் அவற்றின்

மீது நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்கும் அனுமதிக்கப் பட்டிருக்கின்றனர்.

விவசாய நாணயச் சங்கங்களில் தவணை தவறிய பாக்கிகளைக் குறைப்பதற்கு ஒரு நடவடிக்கையாக விவசாய நாணயச் சங்கம் நில வருமான வசூல் சட்டத்தின் கீழும் நடவடிக்கை எடுப்பதற்கு அதிகாரம் அளிக்கப்பட வேண்டுமென்று சந்தானம் குழுவினர் பரிந்துரை செய்திருக்கின்றனர். சங்கத்திற்குச் சேரவேண்டிய பாக்கிகளை அவ்வாறு நடவடிக்கை எடுக்கப்படாவிடில் வசூலிக்க முடியாது என்று கருதப்படும் நேரங்களில் அத்தகைய நடவடிக்கை தேவைப்படுகிறது. ஆகையால், சந்தானம் குழுவினர் கூட்டுறவுச் சட்டத்திற்குக்கூட ஒரு திருத்தத்தை யோசனை கூறி இருக்கின்றனர். வேறு எந்த வசூல் நடவடிக்கை எடுப்பதையும் பாதிக்காமல் ஒரு விவசாய நாணயச் சங்கத்திற்குப் பாக்கியான தொகையை அச் சங்கத்தின் நிருவாகக் குழு தீர்மானித்தால் அந்தப் பாக்கி ஒரு நில வருமான பாக்கியாக வசூல் செய்யப் படலாம். அவ்வாறு வசூல் செய்வதற்கு, சென்னை வருவாய்த் துறை வசூல்சட்டத்தின் கீழ் (Madras Revenue Recovery Act-1864) பதிவாளர் ஒரு மாவட்ட ஆட்சியாளரின் அதிகாரங்களைப் பெறவேண்டும். 'இந்த யோசனையில் மிகுந்த பலனிருந்தாலும், கூட்டுறவுச் சங்கங்கள் சமாதான முறையைவிட வன்முறையைத் தான் நம்புகின்றன என்ற ஒரு கருத்தை உண்டு பண்ணக்கூடும்' என்று அந்தக் குழுவினரே கருதினர்.

# 16. மேல் முறையீடு, புனர் ஆய்வு, மறு சீராய்வு

## (Appeal, Revision and Review)

*(பிரிவுகள் 95-100)*

### 1. பொது (General)

பம்பாய் மாநிலம் தவிர, எல்லா மாநிலங்களிலும் கூட்டுறவுச் சட்டத்தின் கீழ் செய்யப்பட்ட உத்தரவுகள், முடிவுகள், தீர்ப்புகள் முதலியவற்றுக்கெதிராக ஒரு மேல் முறையீடு பதிவாளருக்கு அல்லது மாநில அரசாங்கத்திற்குச் சமர்ப்பிக்கக் கூடும். கூட்டுறவுச் சட்டக் குழுவினர், பதிவாளருடைய நிருவாகப் பொறுப்புகள் அதிகரித்துக் கொண்டிருக்கும் இந்நாளில் சில சூழ்நிலைகளில் மேல் முறையீடுகளை விசாரிக்கும் வேலையிலிருந்து பதிவாளர் விடுவிக்கப்பட வேண்டுமென்று கருதினர். மேலும், கூட்டுறவுச் சங்கங்களின் செயல் வளர்ச்சியால் மேல் முறையீடுகளைக் குறித்த செய்திகளை முன்னைவிட அதிகமான சிக்கலானவையாகவும் தொழில்நுட்ப முள்ளவையாகவும் ஆகிவிட்டன. ஆகையால், பம்பாய் மாநிலத்தில் இருப்பதுபோல், ஒவ்வொரு மாநிலமும் ஒரு தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்தை, மத்தியஸ்த நடவடிக்கைகளில் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளுக்கெதிரே செய்யப்படும் மேல் முறையீடுகளை விசாரிப்பதற்கு அமைக்கப்பட வேண்டுமென்று குழுவினர் கருதினர். எனவே, அக் குழுவினர் கூட்டுறவு மாதிரி மசோதாவின் 100, 101ஆம் விதிகளில், 1925ஆம் வருடத்திய பம்பாய் மாநிலக் கூட்டுறவுச் சங்கச் (சட்டத்திலுள்ளபடி ஒரு தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்தை Tribunal) அமைப்பதற்காகச் சரத்துகள் செய்திருக்கிறார்கள்.

1961ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சட்டத்திலும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு

மன்றங்களைச் சில வழக்குகளை முடிவு செய்யும்பொருட்டு ஒரு சுதந்தரமான நீதிமன்றத்தை அமைப்பதற்கான சரத்து செய்யப் பட்டிருக்கிறது. ஒவ்வொரு வழக்குத் தீர்ப்பு மன்றமும், சார் நீதிபதியின் (Subordinate Judge) தகுதிக்குக் குறையாத ஒரு நீதித் துறை அலுவலரைக் கொண்டதாக இருக்கும். சட்டத்தின் பல பிரிவுகளில் மேல் முறையீட்டுக்காகச் செய்யப்பட்ட சரத்துகளை ஒன்று சேர்த்து ஒரே பிரிவில் அடைத்து வைக்கப்பட்டிருக்கின்றன; அதாவது பிரிவு 96. மேல் முறையீட்டில் அடங்கக்கூடிய பொருள் களில் ஒன்று, ஒரு சங்கத்தின் உறுப்பினராக ஒரு நபரைச் சேர்த்துக் கொள்வதற்கு மறுத்து அச் சங்கம் செய்யும் முடிவு, அல்லது ஒரு சங்கத்திலிருந்து ஓர் உறுப்பினரை விலக்கி அச் சங்கம் செய்யும் முடிவு. இந்த ஏற்பாடு அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணையின் அறிக்கையின் பரிந்துரையை ஒட்டியதாகும். அந்த அறிக்கையில், ஒரு சங்கத்தில் உறுப்பினராகச் சேர மறுக்கப்பட்ட எந்த நபரும் பதிவாளருக்கு மேல் முறையீடு செய்ய உரிமை அளிக்கப்படவேண்டுமென்ற, பரிந்துரை செய்யப்பட்டிருந்தது.

கூட்டுறவுச் சட்டக் குழுவினரும் இந்த யோசனையை ஆதரித்து கூட்டுறவு மாதிரி மசோதாவின் பகுதி 102-ல் மேல் முறையீட்டுக் காகக் கருதப்படும் செய்திகளில், ஒரு நபரை உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ள மறுத்து ஒரு சங்கம் செய்யும் முடிவையும், ஒன்ருகச் சேர்த்திருக்கிறுர்கள். 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்திலுங்கூடப் பிரிவு 96 (2) (ஆ)-ல் ஒரு சங்கத்தில் ஒரு நபர் உறுப்பினராகச் சேர மறுக்கப்பட்ட முடிவுக் கெதிரே மேல்முறையீடு செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறது.

2. கூட்டுறவுத் தீர்ப்பாயம் (Co-operative Tribunal) (பிரிவு 95)

சட்டத்தைச் செயல்படுத்தத் தேவைப்படும் எத்தனை தீர்ப் பாயங்களையும் அரசாங்கம் அமைக்கலாம். ஒவ்வொரு தீர்ப் பாயமும் சார் நீதிபதி தகுதிக்குக் குறையாத ஒரு நீதித் துறை அலுவலரைக் கொண்டதாக இருக்கும். ஒவ்வொரு தீர்ப் பாயமும் அரசாங்கம் அவ்வப்போது அறிவிப்பின்மூலம் தீர்மானிக் கும் எல்லையில் அரசாங்கம் குறிக்கும் அதிகாரத்தைப் பெறும் [பிரிவு 95]. பிரிவு 95-ல் வழங்கப்பட்ட அதிகாரத்தைப் பயன் படுத்தி, சென்னை அரசாங்கம் 5-10-63 தேதியிட்ட தங்கள் உத்தரவு எண் 4818 (கூட்டுறவு)-ல் கீழே தரப்பட்ட அட்டவணை யின் கலம் 1-ல் குறிக்கப்பட்ட ஒவ்வொரு நீதித் துறை அலுவலரைச் சட்டத்தின் செயலுக்காகக் கலம் 2-ல் குறிக்கப் பட்ட எல்லைக்கு ஒரு தீர்ப்பாயமாக அமைத்திருக்கிறது.

அட்டவணை

| | |
|---|---|
| (1) சென்னை சிறு வழக்கு நீதிமன்றத்தின் தலைமைநீதிபதி (Chief Judge ; Court of Small Causes, Madras). | மாநில நகரம் (Presidency Town) |
| (2) ஒரு மாவட்ட நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியும் மாவட்ட நீதிமன்றத்தில் இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட நீதிபதிகள் இருந்தால் அவர்களில் முதல் நிலையில் உள்ளவரும். (Presiding Judge of a District Court and where these are two or more Judges, the senior among them). | அவருடைய அதிகார எல்லைக்குள்ளிருக்கும் உள்ளூர்ப் பகுதிகளின் எல்லைகள். |

ஒரு தீர்ப்பாயம் சார் நீதிபதி தகுதிக்குக் குறையாத ஒரு நீதித் துறை அலுவலரைக் கொண்டதாக இருப்பதால், மேல் முறையீடுகளைக் குறித்து அதன் நடவடிக்கைகள் சிவில் நடைமுறை விதித் தொகுப்பின் (Code of Civil Procedure) சரத்துகள் படி மேற்கொள்ளப்படும்.

3. மேல்முறையீடுகள் (Appeals) (பிரிவு 96)

1932ஆம் வருடத்திய கூட்டுறவுச் சட்டத்தின் பல பகுதிகளில் சிதறிக் கிடந்த மேல் முறையீட்டுக்கான சரத்துகள் அனைத்தையும் சேர்த்து 1961ஆம் வருடக் கூட்டுறவுச் சட்டத்தில் ஒரே பிரிவில் அதாவது பிரிவு 96-ல் தொகுக்கப்பட்டிருக்கின்றன. மேல் முறையீட்டுக்கான ஏற்பாடு கீழ்க்கண்ட அடிப்படையில் செய்யப்பட்டிருக்கிறது.

(அ) மூல அலுவலர்களில் (Original Authority) இரண்டு அடுக்கு (Tiers) உண்டு. அதாவது மாநிலப் பதிவாளரும், பதிவாளராக அதிகாரமளிக்கப்பட்ட கீழ்நிலை அலுவலர்களும். இவர்களில் ஒவ்வொருவராலும் கையாளப்பட்டுத் தனிப்பட்ட தீர்ப்பாயத்திற்கு மேல் முறையீடு செய்யப்படக் கூடிய பணிகளில் அரசாங்கத்திற்கு எந்த மேல் முறையீடும் அனுப்பப்படக் கூடாது.

(ஆ) பதிவாளராக அதிகாரம் அளிக்கப்பட்ட கீழ்த்தர அலுவலர்களுடைய குறிப்பிட்ட நடவடிக்கைகள் அல்லது

உத்தரவுகளுக்கெதிரே மேல்முறையீடு தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தால் மாநிலப் பதிவாளருக்கு மேல் முறையீடு அனுப்பப்படக் கூடாது.

(இ) மாநிலப் பதிவாளரால் பிறப்பிக்கப்பட்ட மூல உத்தரவுகளைக் குறித்த மேல் முறையீடு மாநில அரசாங்கத்திற்கு அனுப்பப்படும்.

**4. தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்கு மேல் முறையீட்டிற்கான செய்திக் குறிப்புகள் (Subjects for Appeal to Tribunal)**

பிரிவு 96 (1)-ன்படி, கீழ்க்கண்ட செய்திகளைக் குறித்து ஒரு தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்கு மேல் முறையீடு செய்துகொள்ளலாம். பிரிவு 96-ன் உட்-பிரிவு (1)-ன் பிரிவில் வரும் எல்லா மேல் முறையீடுகளும் முறைப்படியான தீர்ப்பாயத்திற்குச் செய்யப்படவேண்டும். அத்தகைய தீர்ப்பாயத்திற்குச் செய்யப்படும் மேல் முறையீட்டிற்கான செய்திகள் பின்வருமாறு :

(1) பிரிவு 71 (1)-ன் கீழ் பதிவாளரால் செய்யப்பட்ட ஒரு தண்டம் (Surcharge) உத்தரவு,

(2) பிரிவு 73-ன் உட்-பிரிவு 2, 3 அல்லது 4-ன் கீழ் ஒரு தகராறில் பதிவாளரால் பிறப்பிக்கப்பட்ட ஒரு முடிவு. எனினும், பிரிவு 96 (1)-ன் விலக்குக்கூறு (1)-ன் கீழ் சில பொருள்கள் விலக்கப்பட்டிருக்கின்றன. தேர்தல் தகராறு உட்பட ஒரு நிருவாகக் குழு அமைப்பின் தொடர்பாக அல்லது அதைக் குறித்த எந்தப் பொருளிலும் பிரிவு 73-ன் கீழ் செய்யப்பட்ட எந்த முடிவு அல்லது உத்தரவு முதலியவற்றையும் குறித்து தீர்ப்பாயத்திற்கு மேல் முறையீடு கிடையாது.

(3) பிரிவு 73-ன் உட்பிரிவு 2 அல்லது 3-ன் கீழ், ஒரு தகராறில் மத்தியஸ்தர் அல்லது மத்தியஸ்தர்களால் செய்யப்பட்ட ஒரு தீர்ப்பு.

(4) பிரிவு 81 (2)-ன் கீழ் வாங்கப்பட்ட ஒரு நிலத்தைக் குறித்து ஒரு கூட்டு விவசாயப் பண்ணைச் சங்கம் செலுத்த வேண்டிய நிறையீட்டுத் தொகையைப் (Compensation) பிரிவு 82-ன் கீழ் முடிவு செய்ய ஒரு மத்தியஸ்தரால் பிறப்பிக்கப்பட்ட ஒரு தீர்ப்பு.

(5) பிரிவு 91-ன் கீழ் பிறப்பிக்கப்பட்ட ஒரு தீர்ப்பாணை, முடிவு, தீர்ப்பு அல்லது உத்தரவு நிறைவேற்றுவதற்கான ஒரு விண்ணப்பத்தின் பேரில் பதிவாளர் செய்யும் ஓர் உத்தரவு.

(6) நிபந்தனைக்குட்பட்ட சொத்து ஜப்திக்காக ஒரு சங்கம் செய்யும் விண்ணப்பத்தின் பேரில் பிரிவு 108-ன் கீழ் பதிவாளரால் செய்யப்பட்ட ஓர் உத்தரவு.

5. மாநில அரசாங்கத்திற்கு அல்லது பதிவாளருக்கு செய்யப்பட வேண்டிய மேல்முறையீட்டைக் குறித்த செய்திகள் [பிரிவு 96 (2)] (Matters in respect of which Appeal will lie to the State Govt. or the Registrar)

கீழ்க் கண்ட செய்திகளைக் குறித்து மேல்முறையீடு தேவைக்கேற்ப மாநில அரசாங்கத்திற்கு அல்லது பதிவாளருக்கு அனுப்பப்படலாம் [பிரிவு 96 (2)].

(i) தேர்தல் தகராறு உட்பட ஒரு நிருவாகக் குழு அமைப்பின் தொடர்பான அல்லது அதைக் குறித்த எந்த செய்திகளைப் பற்றியும் பிரிவு 73 (2) (3) (4)-ன் கீழ் ஒரு தகராறு பிறப்பிக்கப்பட்ட எந்த முடிவும் உத்தரவும் அல்லது தீர்ப்பும்.

(ii) பிரிவு 73 (2) அல்லது (3)-ன் கீழ் ஒரு தகராறை மாற்றி அல்லது அனுப்பி அல்லது திரும்பப்பெற்று அல்லது மீண்டும் மாற்றிப் பிறப்பிக்கும் ஓர் உத்தரவு.

(iii) பிரிவு 7-ன் கீழ் ஒரு நபர் விவசாயியா அல்லது ஒரு நபர் ஒரு நகரம் அல்லது கிராமத்தில் வசிப்பவரா அல்லது அசையாச் சொத்தைச் சொந்தமாக வைத்திருப்பவரா அல்லது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கிராமங்கள் ஒரே இடமாகக் கருதப்படலாமா அல்லது ஒரு நபர் ஒரு குறிப்பிட்ட வகுப்பை அல்லது ஜீவனத்தைச் சேர்ந்தவரா என்னும் பிரச்சினைகளை முடிவு செய்யப் பிறப்பிக்கப்படும் ஓர் உத்தரவு.

(iv) பிரிவு 8-ன்கீழ் ஒரு சங்கத்தைப் பதிவு செய்ய மறுத்துப் பிறப்பிக்கப்படும் உத்தரவு.

(v) பிரிவு 11-ன் கீழ் ஒரு சங்கத்தின் உப-விதிகளின் திருத்தத்தைப் பதிவு செய்ய மறுத்துப் பிறப்பிக்கப்படும் ஓர் உத்தரவு.

(vi) பிரிவு 12 (2)-ன் கீழ் ஒரு சங்கத்தின் உப-விதிகளின் திருத்தத்தைப் பதிவு செய்தல்.

(vii) பிரிவு 17 (2) (அ)-ன் கீழ் ஒரு சங்கத்தின் உறுப்பினராகச் சேர்க்கப்பட்ட ஓர் உறுப்பினரை அகற்றியதை அங்கீகரித்தல் அல்லது அங்கீகரிக்க மறுத்தல்.

(viii) பிரிவு 20 (2)-ன் கீழ் ஒரு சங்கத்தின் உறுப்பினரை விலக்கல் செய்ததை அங்கீகரித்தல் அல்லது அங்கீகரிக்கமறுத்தல்.

(ix) பிரிவு 28 (6)-ன் கீழ் ஒரு நிருவாகக் குழுவின் உறுப்பினர் அந்தப் பொறுப்பிலிருக்க அப்பிரிவில் குறிப்பிட்ட தகுதியின்மைகளுக்கு உட்பட்டிருந்தாரா அல்லது உட்பட்டுவிட்டாரா என்பதைப்பற்றி முடிவு செய்து பதிவாளரால் பிறப்பிக்கப்படும் ஓர் உத்தரவு.

(x) பிரிவு 72 (1)-ன் கீழ் ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவைத் தள்ளிவைத்துப் பிறப்பிக்கப்படும் ஓர் உத்தரவு.

(xi) பிரிவு 85-ன் கீழ் ஒரு சங்கத்தைக் கலைத்து விடும்படிக் கட்டளையிட்டுப் பிறப்பிக்கப்படும் ஓர் உத்தரவு.

(xii) பிரிவு 17 (2) (ஆ)-ன் கீழ் ஒரு சங்கத்தில் உறுப்பினராகச்சேர மறுக்கப்பட்ட எந்த நபரும்.

(xiii) பிரிவு 87-ன் கீழ் பிறப்பிக்கப்பட்ட ஒரு கலைப்பு அலுவலரின் உத்தரவினுல் பாதிக்கப்பட்ட எந்த நபரும்கூடப் பதிவாளருக்கு மேல் முறையீடு செய்யலாம். மேற்கண்டவற்றில் உத்தரவு அல்லது முடிவு பதிவாளரால் பிறப்பிக்கப்பட்டிருந்தால், மேல்முறையீடு மாநில அரசாங்கத்திற்குச் செய்யப்படவேண்டும். ஆனால், அந்த உத்தரவு அல்லது முடிவு வேறு எந்த நபராலும் பிறப்பிக்கப்பட்டிருந்தால், மேல் முறையீடு பதிவாளருக்குச் செய்யப்பட வேண்டும். சந்தானம் குழுவினர், பிரிவு 96 (2) (அ) II-ல் வரும் 'மேற் சொல்லப்பட்ட' (Aforesaid) என்ற கூற்றை எடுத்துவிட வேண்டுமென்று பரிந்துரை செய்துள்ளனர். ஏனென்றால் இச் சொல் பிரிவில் குறிக்கப்பட்ட பதிவாளர் சென்னை மாநிலத்திற்கான பதிவாளரை மட்டுமே, குறிக்கும் என்ற பொருளைத் தருகின்றது. கூட்டுறவுத் துறையின் அலுவலர்களால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவு முதலியவைகளைக் குறித்துச் செய்யப்படும் எல்லா முறையீடுகளையும், முடிவு செய்வதற்கு மாநிலத்தின் பதிவாளருக்கு இயலாது. ஆகையால் 'மேற் சொல்லப்பட்ட' என்ற சொல்லை எடுத்துவிட வேண்டுமென்று யோசனை கூறப்பட்டிருக்கிறது. அப்படி அச் சொல்லை எடுத்து விட்டால் பதிவாளருடைய அதிகாரங்கள் வழங்கப்பட்ட எந்த உயர்தர அலுவலரும் மேல் முறையீடுகளை முடிவு செய்யலாம்.

**6. மேல் முறையீடுகளுக்குக் கால வரையறை**

குறை கூறப்பட்ட முடிவு உத்தரவு, தீர்ப்பு, மறுப்பு, பதிவு அல்லது அங்கீகாரம் இவற்றின் தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் மேல் முறையீடு செய்யப்பட வேண்டும் [ பிரிவு

96 (3) ]. ஆனால், இரண்டு மாதங்களுக்குப் பிறகு மேல் முறையீடு செய்பவர் காலவரையறைக்குள் மேல் முறையீடு செய்யாதத்ற்குப் போதிய காரணம் இருந்தது என்று மேல் முறையீடு அலுவலர் திருப்தியடைந்தால் மேல் முறையீட்டை ஏற்றுக் கொள்ளலாம் [ பிரிவு 96 (3) ].

7. மேல் முறையீட்டை முடிவு செய்வதற்கான விதி முறை (Procedure for making Appeals and their Disposal)

பிரிவு 96-ன்கீழ் செய்யப்பட்ட ஒரு மேல் முறையீட்டை முடிவு செய்வதில், மேல் முறையீட்டு அலுவலர் தொடர்பான கட்சியினருக்குத் தங்கள் விளக்கத்தைக் கூறுவதற்கு ஒரு வாய்ப்பு கொடுத்த பிறகு அவர் தகுதியாகக் கருதும் வகையில் ஓர் உத்தரவைப் பிறப்பிக்கலாம் [ பிரிவு 96 (4) ]. மேல் முறையீட்டு அலுவலர் பிறப்பிக்கும் முடிவு அல்லது உத்தரவு அறுதியான தாகும் (Final)[ பிரிவு 96 (5)]. எனினும் ஒரு தீர்ப்பாயம் தன்னால் பிரிவு 98-ன் கீழ் முடிவு செய்யப்பட்ட பொருள்களை மறு சீராய்வு செய்யலாம். பதிவாளர் அல்லது அரசாங்கம் இவற்றைப் பிரிவு 97-ன்கீழ் புனர் ஆய்வும், பிரிவு 98-ன்கீழ் மறுசீராய்வும் செய்ய லாம். மேல் முறையீட்டு அலுவலர் ஒரு மேல் முறையீட்டின் பேரில் முடிவு வருவதற்கு முன்பு, தான் தகுதி என்று கருதுகின்ற படி இடை நீதி உத்தரவுகளைப் (Interlocutory Orders) பிறப்பிக்க லாம் [பிரிவு 96 (6)]. மேல் முறையீடு தனக்கு முன்பு எடுக்கப் படும் எந்த நடவடிக்கைகளிலும் உண்டான செலவுகளைச் சங்கத்தின் நிதிகளிலிருந்தோ அல்லது மேல் முறையீடு கட்சியின ராலோ, தான் எது தகுதி என்று அவர் கருதுகிறாரோ அவ்வாறு செலுத்தவேண்டுமென்று தீர்ப்பு உத்தரவிடலாம்.

மேல் முறையீடுகளை முடிவு செய்வதற்கான மேற்கொண்டு விரிவான செயல் முறை விதிகள் 91-லும் 92-லும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. விதி 91-ல் வழக்குத் தீர்ப்பு மன்றத்தால் மேல் முறையீடு முடிவு செய்யும் விதி முறையைப் பற்றி விளக்கப் பட்டிருக்கிறது. விதி 91-ன் படி தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்தின் நடவடிக்கை சுருக்கமாக இருக்கவேண்டும். மேலும் அவை சிவில் நடைமுறை விதித் தொகுப்பின் (Code of Civil Procedure) சரத்துகளால் நெறிபடுத்தப்படும் [விதி 91 (1)]. வழக்குத் தீர்ப்பு மன்றத்திற்குச் செய்யப்படும் ஒரு மேல் முறை யீட்டைக் குறித்துச் செலுத்தப்பட வேண்டிய கட்டணம் ரூபாய் 1/- [விதி 91 (2)]. வழக்குத் தீர்ப்பு மன்றத்தால் வெளி யிடப்பட்ட நிறைவேற்றுக் கட்டளையைச் (Process) சேர்ப்பிப்

பதற்கும் நிறைவேற்றுவதற்கும் செலுத்தப்பட வேண்டிய கட்டணங்கள் கீழ்க்குறிக்கப்பட்ட விகிதத்திலிருக்கவேண்டும் :

| நிறைவேற்றுக் கட்டளேயின் விவரங்கள் | செலுத்தப்பட வேண்டிய கட்டணங்கள் |
| --- | --- |
| (1) ஒவ்வோர் அழைப்பாணைக்கும் அல்லது அறிவிப்புக்கும். | |
| (அ) ஒவ்வொரு பிரதிவாதி அல்லது எதிர் வாதி அல்லது சாட்சிக்குப் பதிவு அஞ்சல் மூலம் அனுப்பப்பட்டால்... | ரூ. 1–50 |
| (ஆ) நீதி மன்றத்தின் ஓர் அலுவலரால் சேர்ப்பிக்கப்பட்டாலும் அல்லது சேர்ப்பிப்பதற்கு வேறு எந்த நீதி மன்றத்திற்கும் அஞ்சல் மூலம் அனுப்பப்பட்டாலும், | |
| (i) ஒரு பிரதிவாதி அல்லது எதிர் வாதி அல்லது சாட்சிக்கு அனுப்பப்பட்டால், ... | ரூ. 1–50. |
| (ii) ஒவ்வொரு கூடுதலான எதிர் வாதி, பிரதிவாதி அல்லது சாட்சி ஒரே கிராமத்தில் வசித்து அவர்களுக்கு ஒரே சமயத்தில் நிறைவேற்றுக் கட்டளே சேர்ப்பிக்கப்பட வேண்டுமென்று மனு செய்யப்பட்டால், ... | ரூ. 0–75 |
| (இ) ஒரு சாட்சி அல்லது சாட்சிகளுக்குச் சேர்ப்பிக்கப்படுவதற்காகக் கட்சியினருக்கு நேரில் கொடுக்கப்பட்டால், ... | மேலே கூறிய பகுதி (ஆ) (ii)-ன் கீழ் செலுத்தப்படவேண்டியகட்டணத்தில் பாதி |

உரிமை வயது வராத பல எதிர்வாதிகள் அல்லது பிரதிவாதிகளுக்காக ஒரே பாதுகாவலர் (Guardian) பிரதிநிதியாக இருக்கும் சூழ்நிலேகளில், அத்தகைய பாதுகாவலரின்பேரில் நிறைவேற்றுக் கட்டளேயை ஒரே தடவையாகக் சேர்ப்பித்தால் போதும். அவ்வாறு செய்வதற்கு கட்டணம் ஒருமுறை மட்டும் விதிக்கப்பட வேண்டும்.

பிரிவு 96 (2)-ன் கீழ் தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்திற் கில்லாமல் வேறு அலுவலருக்குச் செய்யப்படும் மேல் முறையீட்டைக் குறித்த நடைமுறையும் பிரிவு 97 (1)-ன் கீழ் புனராய்வு விண்ணப்பம் செய்வதற்கான நடைமுறையும்: இவற்றிற்கான நடைமுறை விதி 92-ல் விதிக்கப்பட்டிருக்கின்றது. பிரிவு 96 (2)-ன் கீழ் செய்யப்படும் ஒரு மேல் முறையீடும் அல்லது பிரிவு 97 (1)-ன் கீழ் செய்யப்படும் ஒரு புனர் ஆய்வு விண்ணப்பமும் நேரில் கொடுக்கப் படலாம் அல்லது மேல் முறையீட்டு அலுவலருக்கு அல்லது புனர் ஆய்வு அலுவலருக்கு அஞ்சல் மூலம் அனுப்பப்படலாம் [விதி 92 (1)]. மேல் முறையீட்டைக் குறித்தும் அல்லது புனர் ஆய்வுக்கான விண்ணப்பத்தைக் குறித்தும் செலுத்தப்பட வேண்டிய கட்டணம் கீழ்க்கண்ட விகிதங்களில் இருக்கவேண்டும் [விதி 92 (1) (அ)].

| | | | |
|---|---|---|---|
| (1) | மேல் முறையீடு அரசாங்கத்திற்கு நேரில் கொடுக்கப்பட்டால், ... | ரூ. | 5–00 |
| (2) | பதிவாளருக்கு மேல் முறையீடு நேரில் கொடுக்கப்பட்டாலும் அல்லது புனர் ஆய்வு விண்ணப்பம் அரசாங்கத்திற்கு அல்லது பதிவாள ருக்கு, இனம் III-ன் கீழ் வராத செயல்களைக் குறித்து, நேரில் கொடுக்கப்பட்டால், ... | ரூ. | 2–00 |
| (3) | பிரிவு 96 உட்பிரிவு (1)-ன் விலக்குக் கூற்றின் பகுதி (1)-ன் கீழ் வருகின்ற முடிவு, உத்தரவு அல்லது தீர்ப்பின் புனர் ஆய்வுக்கான விண்ணப்பம் அரசாங்கம் அல்லது பதிவாளருக்கு நேரில் கொடுக்கப்பட்டால், ... | ரூ. | 100–00 |

மேல் முறையீடு அல்லது புனர் ஆய்வுக்கான விண்ணப்பம் ஒரு நினைவுக் குறிப்பு (Memorandum) வடிவில், மேல் முறையீடு செய்யப்பட அல்லது புனர் ஆய்வு செய்யப்பட வேண்டுமென்று கோரப்பட்ட உத்தரவின் மூலத்துடன் அல்லது சான்றிடப்பட்ட நகலுடன், அனுப்பப்பட வேண்டும் [விதி 92 (2)].

மேல் முறையீடும் அல்லது புனர்ஆய்வுக்கான விண்ணப்பமும்.

(அ) மேல் முறையீடு செய்பவரின் அல்லது விண்ணப்ப தாரரின் பெயரும், விலாசமும், பிரதிவாதியின் பெயரும்

விலாசமும்கூட நேரத்துக்குத் தக்கவாறு குறிப்பிடப்பட வேண்டும்.

(ஆ) மேல் முறையீடு செய்யப்பட்ட உத்தரவு அல்லது புனர் ஆய்வுக்கு விரும்பப்படும் உத்தரவு எவரால் பிறப்பிக்கப் பட்டது என்பதைக் குறிப்பிடவேண்டும்.

(இ) சுருக்கமானதும் விளக்கமானதுமான தலைப்பின் கீழும் மேல் முறையீடு செய்யப்பட்ட உத்தரவு அல்லது புனர் ஆய்வுக்கு விரும்பப்பட்ட உத்தரவுக்கு மறுப்பு விவரங்கள் (Grounds of Objection) கூறப்பட்டு, சான்று நினைவுக் குறிப்புடன் (Memorandum of Eivdence) இருக்கவேண்டும்.

(ஈ) விண்ணப்பதாரர் அல்லது மேல் முறையீடு செய்பவர் விரும்பும் பரிகாரத்தைச் சரியாகக் குறிப்பிடவேண்டும்.

(உ) மேல் முறையீடு செய்யப்பட்ட அல்லது புனர் ஆய்வு விரும்பப்படும் உத்தரவின் தேதி கொடுக்கப்பட வேண்டும் [விதி 92 (3)]. பிரிவு 96 (2)-ன் கீழ் ஒரு மேல் முறையீடு, பிரிவு 96 (3)-ல் குறிப்பிடப்பட்ட இரண்டு மாதங்கள் கழிந்த பின்னர் செய்யப்பட்டால், அந்த மேல் முறையீட்டுடன் ஒரு மனுவும் இரண்டு மாத காலத்திற்குள் முறையீடு செய்யாததற்குத் தனக்குப் போதிய காரணம் உண்டு என்று மேல் முறையீட்டு அலுவலரைத் திருப்தி செய்வதற்கான விவரங்களைக் காட்டும் ஒரு குறிப்பும் (Affidavit) விண்ணப்பதாரர் அனுப்ப வேண்டும் [விதி 92 (4)].

மேல் முறையீடு அல்லது புனர் ஆய்வு விண்ணப்பம் கிடைத்தவுடன் மேல் முறையீட்டு அலுவலர் அல்லது புனர் ஆய்வு அலுவலர் அவற்றை முடிந்தவரை விரைவில் பரிசீலனை செய்து, கீழ்க்கண்ட செய்திகளை உறுதிப்படுத்தவேண்டும்.

(அ) மேல் முறையீடு அல்லது விண்ணப்பம் அனுப்பும் நபர் அவ்வாறு மேல் முறையீடு விண்ணப்பம் செய்வதற்குப் போதிய தகுதி உள்ளவர் என்பது,

(ஆ) விண்ணப்பம் நிருணயிக்கப்பட்ட கால வரையறைக்குள் அனுப்பப்பட வேண்டுமென்பது,

(இ) சட்டத்தின் எல்லாச் சரத்துகளுக்கும், விதிகளின் எல்லாச் சரத்துகளுக்கும் விண்ணப்பம் இணக்கமானதாக இருக்க வேண்டுமென்பதும் [விதி 92 (5)]. மேல் முறையீட்டு அலுவலர் அல்லது புனர் ஆய்வு அலுவலர் முறையீடு செய்தவரை அல்லது புனர் ஆய்வுக்காக விண்ணப்பம் செய்தவரை விண்ணப்பத்தில் குற்றபாடுகள் ஏதாவதிருந்தால் அவற்றைக் களைவதற்கும்

அல்லது தேவைப்படும் கூடுதலான தகவல்களை அதற்கான அறிவிப்பு பெற்ற தேதியிலிருந்து 15 நாள்களுக்குள் தருவதற்கும் கேட்டுக்கொள்ளலாம். மேற்சொன்ன அவர்கள் குறைபாடுகளை நிவர்த்தி செய்யவோ அல்லது கூடுதலான தகவல்களைக் கொடுக்கவோ தவறினால், மேல் முறையீடு அல்லது புனர் ஆய்வு விண்ணப்பம் மேற்கடப்பு செய்யப்படலாம் *[விதி 92 (6)].*

புனர் ஆய்வு அலுவலர், தன் உத்தரவுகளைப் பிறப்பிப்பதற்கு முன்பு, பிரிவு 87-ன் கீழ்நிலை அலுவலரிடமிருந்து, விசாரணை அல்லது நடவடிக்கைகளைக் குறித்து அத்தகைய நடவடிக்கைகளின் ஒழுங்கு முறையைப் பரிசீலனை செய்வதற்கும் அல்லது அத்தகைய விசாரணை அல்லது நடவடிக்கை மீது பிறப்பிக்கப்பட்ட உத்தரவு அல்லது முடிவு சரியானதா அல்லது சட்டப்படியானதா அல்லது ஒழுங்கானதா என்பதைப் பரிசீலனை செய்வதற்கும், மேற்கொண்ட தகவல்களை வாங்கலாம். புனர் ஆய்வு அலுவலர் அத்தகைய விசாரணை அல்லது நடவடிக்கைக்குத் தொடர்பான கட்சியினரிடமிருந்துகூட, விசாரணை அல்லது நடவடிக்கையின் பதிவுகளையும் கீழ்நிலை அலுவலரிடமிருந்து பெற்ற தகவல்களையும் பரிசீலனைத் செய்வதற்கு தேவையான தகவல்களைக் கேட்டு வாங்கலாம் *[விதி 92 (7)].*

மேல் முறையீட்டு அலுவலர் அல்லது புனர் ஆய்வு அலுவலரின் முன் நடைபெறும் நடவடிக்கைகளின் கட்சியினருக்காக வழக்கறிஞர்கள் பிரதிநிதியாகத் தோன்றவோ அல்லது முறையிடவோ கூடாது *[விதி 92 (8)].* நடத்தப்பட்ட விசாரணையின் அடிப்படையின் பேரிலும் பரிசீலனை செய்யப்பட்ட விசாரணைப் பதிவுகளை அனுசரித்தும் மேல் முறையீட்டு அலுவலர் அல்லது புனர் ஆய்வு அலுவலர் தனக்கு நியாயமாகவும் சரியாகவும் தோன்றியவாறு மேல் முறையீடு அல்லது புனர் ஆய்வு விண்ணப்பத்தின்மீது தக்க உத்தரவைப் பிறப்பிக்க வேண்டும் *[விதி 92 (9)].*

பிரிவு 96 (2)-ன் கீழும் அல்லது பிரிவு 97-ன் கீழும் நேரத்துக்கு ஏற்றவாறு பிறப்பிக்கப்படும் மேல் முறையீட்டு அலுவலரின் அல்லது புனர் ஆய்வு அலுவலரின் ஒவ்வோர் உத்தரவும் எழுத்து மூலம் இருக்கவேண்டும்; மேல் முறையீடு செய்தவருக்கும் அல்லது விண்ணப்பதாரருக்கும், அல்லது முடிவு அல்லது உத்தரவால் பாதிக்கப்படலாம் என்று அத்தகைய அலுவலர் கருதும் இதர நபர்களுக்கும், எந்த அலுவலரின் உத்தரவுக்கெதிரே மேல் முறையீடு அல்லது புனர் ஆய்வு விண்ணப்பம் செய்யப்

பட்டதோ அத்தகைய அலுவலருக்கும், அந்த உத்தரவு அனுப்பப் படவேண்டும் [விதி 92 (10)].

8. புனர் ஆய்வு (Revision) (பிரிவு 97)

1961-ஆம் வருடத்திய புதிய கூட்டுறவுச் சட்டத்தின் கீழ் மாநில அரசு, விண்ணப்பத்தின் பேரிலாவது அல்லது தன் இச்சை யாகவாவது, பதிவாளரால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவைக் குறித்து மட்டும் புனர் ஆய்வு செய்யும் அதிகாரம் பெற்றிருக் கிறது. பதிவாளர், தனக்குக் கீழுள்ள எந்த அலுவலராலும் பிறப்பிக்கப்பட்ட ஓர் உத்தரவைக் குறித்து, அதேமாதிரியான புனர் ஆய்வு அதிகாரம் பெற்றிருக்கிறார். தீர்ப்பாயத்திற்குச் (Tribunal) செய்யப்பட்ட மேல்முறையீட்டைக் குறித்து செய்யப் பட்ட நடவடிக்கைகள் இந்தப் பிரிவின் பரப்பிலிருந்து விலக்கப் பட்டிருக்கின்றன. ஒரு புனர் ஆய்வுக்கான விண்ணப்பம், விண்ணப்பதாரருக்கு உத்தரவு தெரிவிக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள், செய்யப்படவேண்டும் [பிரிவு 97 (1)-ன் விலக்குக்கூறு]. தன்னிச்சையாக எடுக்கப்படும் நடவடிக்கைக்கு எந்தக் கால வரம்பும் நிருணயிக்கப்படவில்லை. புனர்ஆய்வுக்கான விண்ணப்பம் செய்வதற்குப் பின்பற்றவேண்டிய நடைமுறையும், தக்க அலுவலரால் அதை முடிவு செய்வதற்கான நடைமுறையும் விதி 92-ல் நிருணயிக்கப்பட்டிருக்கின்றன.

பிரிவு 97-ன்கீழ் செய்யப்படும் புனர்ஆய்வு விண்ணப்பம் பிரிவு 96-ன்கீழ் செய்யப்படும் மேல் முறையீட்டிலிருந்து கீழ்க் கண்ட வகையில் வேறுபடுகிறது.

(1) ஓர் உத்தரவின் புனர் ஆய்வு அரசாங்கத்தாலும் பதிவாளராலும் செய்யப்படலாம். பதிவாளரால் பிறப்பிக்கப் பட்ட உத்தரவில் அரசாங்கமும், பதிவாளரின்கீழ் பணிபுரியும் அலுவலரால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவில் பதிவாளரும், அவ்வாறு புனர்ஆய்வு செய்யலாம். புனர்ஆய்வு நடவடிக்கை அரசாங்கம் அல்லது பதிவாளர் தன் இச்சையாகவாவது அல்லது விண்ணப்பத்தின்பேரிலாவது எடுக்கலாம். மேல் முறையீட்டில் தன்னிச்சையாக நடவடிக்கை எடுக்க முடியாது.

(2) பிரிவு 96-ன்கீழ் ஒரு மேல் முறையீடானது, மேல் முறையீடு செய்யப்படும் உத்தரவு தேதியிலிருந்து இரண்டு மாதங் களுக்குள், செய்யப்பட வேண்டும்; ஆனால், பிரிவு 97-ன்கீழ் புனர்ஆய்வுக்கான விண்ணப்பம் மூன்று மாதங்களுக்குள் செய்யப் படவேண்டும்.

பிரிவு 97 (1)-ன் கீழ் புனராய்வு அலுவலர் முதலில் புனர் ஆய்வு செய்யப்பட வேண்டிய உத்தரவு அல்லது நடவடிக்கை அல்லது முடிவு சரியானதாகவும் ஒழுங்கானதாகவும், சட்டப் படியானதாகவும் அல்லது முறைப்படியானதாகவும் இருக்கிறதா என்பதைத் திருப்தி செய்துகொண்டு, எந்தச் செயலிலாவது அத்தகைய முடிவு அல்லது உத்தரவு பதிவாளர் அல்லது அரசாங்கத்தின் கருத்தில் திருத்தப்பட வேண்டும் அல்லது ரத்து செய்யப்பட வேண்டும் அல்லது மாற்றப்பட வேண்டும் அல்லது புனராலோசனைக்காக அனுப்பப்பட வேண்டுமென்று தோன்றினல் அவ்வாறு பதிவாளர் அல்லது அரசாங்கம் உத்தரவு களைப் பிறப்பிக்கலாம். மற்றும் பிரிவு 91 (1)-ன் கீழ் எந்த நபரையும் பாதிப்பதாகவுள்ள ஓர் உத்தரவு, அத்தகைய நபர் தன் விளக்கத்தைத் தருவதற்கு ஒரு வாய்ப்பு கொடுக்கப்பட்டிருந்தா லொழியப், பிறப்பிக்கப்படக் கூடாது [பிரிவு 97 (2)].

பதிவாளர் அல்லது அரசாங்கம் நேரத்திற்கேற்பத் தன் அதிகாரங்களைப் பிரிவு 97 (1)-ன்கீழ் கையாளுவதற்கு முன்பு, ஆய்வின் முடிவை அல்லது உத்தரவை நிறைவேற்றுதல் செய்வதை நிறுத்தி வைக்கலாம் [பிரிவு 97 (3)]. பதிவாளர் அல்லது அரசாங்கம் இந்தப் பிரிவின் கீழ் எடுக்கப்படும் நடவடிக்கை களின் செலவுகளைச் சங்கத்தின் நிதிகளிலிருந்து செலுத்தப்பட வேண்டுமென்று அல்லது பதிவாளர் அல்லது அரசாங்கம் தகுதி என்று கருதும் புனராய்வு விண்ணப்பத்திற்குத் தொடர்பான கட்சியினர்களால் செலுத்தப்பட வேண்டுமென்று தீர்ப்பு கூறலாம் [பிரிவு 97 (4)]. மறு சீராய்வுக்கான விண்ணப்பத்தைக் குறித்து ஒரு முடிவு செய்வது குறித்தும் கையாளப்பட வேண்டிய விவரமான நடைமுறை விதி 92-ல் அடங்கியுள்ளது. அதை மேல் முறையீடு பற்றிய விளக்கம் கூறியபோது முன்னரே விவரித்துள்ளோம்.

9. மறு சீராய்வு (Review) (விதி 98)

அரசாங்கமும், பதிவாளரும் தீர்ப்பாயமும் மேல் முறையீட்டு விண்ணப்பத்தின் பேரிலும் அல்லது புனராய்வுக்கான விண்ணப்-பத்தின் பேரிலும் அல்லது பிரதிவாதியின் விண்ணப்பத்தின் பேரிலும் பிரிவு 96 அல்லது 97-ன் கீழ் பிறப்பிக்கப்பட்ட எந்த உத்தரவையும் மறு சீராய்வு செய்யலாம். ஆனுல், மறு சீராய்வுக்கான விண்ணப்பம் புதியதாகவும் முக்கியமானதாகவு மான பொருண்மைகள் (Facts) கண்டுபிடிப்பின் அடிப்படையின் பேரில் மட்டும்தான் செய்யப்பட வேண்டும். அத்தகைய பொருண்மைகள், விண்ணப்பம் செய்யும் நபருக்கு அவர் தேவை

யான உன்னிப்புடன் கையாண்ட பிறகும், தெரிந்தேயிராதவை யாகவும், உத்தரவு பிறப்பிக்கப்படும்பொழுது அவரால் முன்னிலைப்படுத்த முடியாதவையாகவுமிருக்க வேண்டும்; அல்லது பதிவேட்டின் சில தவறுதல்கள் அல்லது தவறுகள் அடிப்படையின் பேரிலும் அல்லது வேறு போதுமான காரணத்திற்காகவுமிருக்க வேண்டும் [பிரிவு 98 (1)]. எனினும், ஒரே உத்தரவைக் குறித்து ஒரு தடவைக்கு மேல் மறுசீராய்வுக்கான விண்ணப்பத்தைச் செய்யக்கூடாது [பிரிவு 98 (1)-க்கு விலக்குக்கூறு].

மறு சீராய்வுக்கான விண்ணப்பத்தின் பேரில், உத்தரவு பிறப்பிப்பதற்குத் தகுதி வாய்ந்த அலுவலர் மறு சீராய்வுக்கான விண்ணப்பத்தின்பேரில் முடிவு வருவதற்கு முன்பு தனக்குச் சரி என்று தோன்றும் விதம் இடைக்கால உத்தரவுகளைப் (Interlocutory Orders) பிறப்பிக்கலாம் [பிரிவு 98 (4)]. மறு சீராய்வுக்கான விண்ணப்பத்தின் மீது பிறப்பிக்கப்படும் முடிவு அல்லது உத்தரவு அறுதியானதாக இருக்கவேண்டும் [பிரிவு 98 (3)]. அவ்வாறு சங்கத்தின் நிதியிலிருந்தாவது அல்லது மறு சீராய்வுக்கானவிண் ணப்பத்தில் தொடர்பான கட்சியினராலாவது அந்த அலுவலர் சரி என்று கருதும் வகையில், மறு சீராய்வுக்கான நடவடிக்கைகளின் செலவுகள் செலுத்தப்பட வேண்டுமென்று அவர் தீர்ப்பு அளிக்கலாம் [பிரிவு 98 (5)]. புனர் ஆய்வுக்கான ஒவ்வொரு விண்ணப்பமும் நிருணயிக்கப்பட்ட கால வரையறைக் குள்ளும் முறைப்படியும் செய்யப்பட வேண்டும்.

மறு சீராய்வுக்கான ஒரு விண்ணப்பத்தைச் செய்வதற்கும் அதைத் தக்க அலுவலரால் முடிவு செய்வதற்கும் பின்பற்ற வேண்டிய நடைமுறை விதி 93-ல் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. இந்த விதியில், பிரிவு 98 (1)-ன் கீழ் மறு சீராய்வுக்கான ஒரு விண்ணப்பத்தைச் செய்வதற்கு மூன்று மாதகால வரை நிருண-யிக்கப்பட்டிருக்கிறது [விதி 93 (1)]. விண்ணப்பம் ஒரு நினைவுக் குறிப்பின் (Memorandum) வடிவில் செய்யப்பட வேண்டும். உத்தரவு பிறப்பிக்கப்பட்டபோது, விண்ணப்பதாரர் தக்க விவேகத்தைக் கையாண்ட பிறகும், அவருக்குத் தெரிந்திராத தாகவும், அவரால் முன்னிலைப்படுத்த முடியாததாகவுமிருந்து பின்னல் தெரியவந்த புதிய முக்கியப், பொருண்மைகளையும் அல்லது விசாரணைப் பதிவுகளிலிருந்த தவறுகள் அல்லது மறு சீராய்வு கோருவதற்கு அடிப்படையான இதர காரணங் களையும் சுருக்கமாகவும் விளக்கமான தலைப்பின் கீழும் கூற வேண்டும். இந்த விண்ணப்பத்துடன் ஒரு சான்று நினைவுக் குறிப்பும் (Memorandum of Evidence) அனுப்பிவிட வேண்டும்

[விதி 93 (2)]. விண்ணப்பத்துடன் விண்ணப்பத்திற்குத் தொடர்பான உத்தரவின் மூலத்தையும் அல்லது சான்றிடப்பட்ட நகலையும் அனுப்பவேண்டும். ஒவ்வொரு விண்ணப்பத்தைக் குறித்தும் செலுத்தப்பட வேண்டிய கட்டணம் ரூபாய் 2/- [விதி 93 (3)].

மூல உத்தரவுக்குத் தொடர்பான கட்சியினர் எத்தனையோ அத்தனை கூடுதலான நகல்கள் விண்ணப்பத்துடன் அனுப்பப்படா விட்டால், அத்தகைய விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்படக் கூடாது [விதி 93 (4)]. விதி 93 (5)-ன்படி தேவைப்படும் வகையில் ஒரு விண்ணப்பம் தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றம் அல்லது பதிவாளர் அல்லது அரசாங்கம் சரி என்று கருதும் முறையில் முடிவு செய்யப்படலாம். ஆனால், உத்தரவு எந்த நபரையாவது பாதிப்பதாக இருந்தால் அத்தகைய நபருக்குத் தன் விளக்கத்தைக் கூறுவதற்கு ஒரு வாய்ப்பு கொடுக்கப் பட்டிருந்தாலொழிய அத்தகைய உத்தரவு பிறப்பிக்கப் படக் கூடாது.

**10. மேல் முறையீட்டிலும் புனராய்விலும் அல்லது மறு சீராய்விலும் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளை நிறைவேற்றுதல் (Execution of orders passed in Appeal, Revision or Reiview) (பிரிவு 99)**

பிரிவு 96, 97, 98-ன் கீழ் வழக்குத் தீர்ப்பு மன்றம், பதிவாளர் அல்லது அரசாங்கத்தால் பிறப்பிக்கப்பட்ட ஓர் உத்தரவு, பிரிவு 99-ன் கீழ் விதிகளில் எடுத்துக் காட்டப்பட்ட முறையில், விதிகளில் குறிக்கப்பட்ட அலுவலரால் நிறைவேற்றப் படும். விதி 94-ன் கீழ் பதிவாளர் அல்லது மாவட்டப் பதிவாளர் பிரிவுகள் 96, 97 அல்லது 98-ன் கீழ் பிறப்பிக்கப்பட்ட உத்தரவு களை நிறைவேற்றுவதற்குத்தக்க அலுவலராக குறிப்பிடப்பட்டிருக் கிறது. அவர் இந்த உத்தரவைத் தானே பிறப்பித்த உத்தரவு போல் நிறைவேற்றலாம்.

**11. சிவில் நீதிமன்றங்களின் அதிகாரத் தடை (Bar of Jurisdiction of Civil Courts) பிரிவு 100)**

எந்த உத்தரவையும் அல்லது தீர்ப்பையும் அல்லது முடிவையும் அல்லது நடவடிக்கையையும் கட்டளையையும் சட்டத்தின்கீழ் ஒரு மத்தியஸ்தர் அல்லது ஒரு கலைப்பு அலுவலர் அல்லது பதிவாளர் அல்லது பதிவாளரால் அதிகாரமளிக்கப்பட்ட

ஓர் அலுவலர் ஒரு தீர்ப்பாயம் அல்லது அரசாங்கம் அல்லது அரசாங்கத்திற்குக் கீழ்ப்பட்ட எந்த அலுவலரும் பிறப்பித்திருந் தால் பிரிவு 100-ன் கீழ் அவற்றைக் குறித்து எந்த நீதிமன்றத் திலும் எதிர் வழக்குத் தொடரக்கூடாது. அத்தகைய சிவில் நீதி மன்ற அதிகாரத் தடை, ஒரு சங்கத்தைக் கலைக்கும் செயலிலும் அதை ரத்து செய்யும் செயலிலும் பதிவாளரின் அனுமதியைப் பெற்றும் அவர் விதிக்கும் நிபந்தனைகளுக்குட்பட்டுமிருந்தாலன்றி, பிரிவு 89-ல் செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பிரிவு (பிரிவு 100) கூட்டுறவுச் சங்கங்களின் செயல்பாட்டிற்குத் தொடர்பான செயல்களில் எந்த ஒரு சிவில் நீதிமன்றத்திலும் நடவடிக்கைகள் எடுக்கப்படக்கூடாது என்று விதிக்கிறது. பாதிக்கப்பட்ட நபர் களுக்கு நிறைய பரிகாரங்கள் சட்டத்தில் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. எனினும், இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் பிரிவுகள் 226, 227-ன் கீழ் ஓர் உயர் நீதிமன்றத்திற்கு எப்பொழுதும் எந்த வழக்கினையும் விசாரிக்க மேலுரிமைப்பாட்டு அதிகாரம் (Over riding powers) உண்டு.

# 17. குற்றங்களும், அபராதங்களும்
## (Offences and Penalties)
### (பிரிவுகள் 101-107)

**1. சட்டத்தின்கீழ் குற்றங்கள்** (Offences under the Act)

சட்டத்தின்கீழ்க் குற்றங்களின் இனங்களைப் பின்வருமாறு பிரிக்கலாம்.

(அ) (i) ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவாலும் அல்லது அதன் அலுவலராலும், அல்லது ஊழியராலும் அல்லது ஊதியம் பெற்ற ஊழியராலும் அல்லது எந்த உறுப்பினராலும் வேண்டுமென்றே ஒரு பொய்யான அறிக்கை (False Return) கொடுக்கப் படுதலும் அல்லது ஒரு பொய்யான தகவல் (False Information) தரப்படுதலும் (பிரிவு 101).

விதி 16-ன்கீழ் பதிவாளருக்கு அனுப்பப்பட வேண்டிய அட்டவணைகளையும் (Statements) அறிக்கைகளையும் (Returns) தொடர்புப்படுத்தி குறிப்பாக இந்தக் குற்றம் கூறுகிறது (விதி 16-ஐ பார்க்கவும்). மற்றும் விதி 102-ன்கீழ் தொழிற்கூடத்தையும் (Labour Bureau) இது குறிக்கிறது. (விதி 102-ஐ பார்க்கவும்) மற்றும் பிரிவுகள் 64-ன் கீழும் 67-ன்கீழும் தணிக்கையின் போதும், நிதி வங்கியால் செய்யப்படும் ஆய்வின்போதும் சங்கங்களாலும் நபர்களாலும் தகவல்கள் கொடுக்கப்பட வேண்டியிருக்கிறது.

(ii) எந்த நபராலும் சட்டச் சரத்துகளின்கீழ் வெளியிடப்பட்ட கேட்புக் கட்டளை, அழைப்பாணை, வேண்டுகோள் அல்லது இதர சட்டப்படியான உத்தரவு அல்லது கட்டளை இவற்றை வேண்டுமென்றும் அல்லது எந்த நியாயமான சமாதானமில்லாமலும் கீழ்ப்படியாமல் இருத்தல் (பிரிவு 101),

அத்தகையவைகளின் உதாரணங்கள் பின்வருமாறு: பிரிவு 64 (3)-ன்கீழ் (தணிக்கை) வெளியிடப்படும் அழைப்பாணை (Summons), பிரிவு 65 (2) (அ)-ன்கீழும் (விசாரணை), பிரிவு 66-ன் கீழும் (ஆய்வு), பிரிவு 87 (2) (இ)-ன்கீழும் (கலைப்பு) வெளியிடப் படும் அழைப்பாணைகள்.

பிரிவு 65 (2) (ஈ)-ன் கீழ் விசாரணைத் தொடர்பாக ஒரு பேரவைக் கூட்டம் அல்லது நிருவாகக் குழுக் கூட்டம் சங்கத்தால் கூட்டப்பட வேண்டுமென்று கோரி கேட்புக் கட்டளை வெளியிடப்படலாம். மற்றும் விதி 53 (2)-ன் கீழ் ஒரு சங்கம் தனக்குச் சேரவேண்டிய பாக்கியைத் தன் உறுப்பினருடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து வசூல் செய்வதற்காகச் சம்பளப் பட்டுவாடா அலுவலருக்கு ஒரு வேண்டுகோள் அனுப்பலாம். பிரிவு 19 (4)-ன் கீழ் ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு ஒரு குறிப் பிட்ட உறுப்பினருக்குத் தன் சேவையை அளிக்க வேண்டுமென்று பதிவாளர் சட்டப்படியான ஓர் உத்தரவையிடலாம். பிரிவு 64 (5)-ன்கீழ் ஒரு சங்கத்தில் தணிக்கையில் காணப்பட்ட குறை பாடுகளை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் நீக்கம் செய்வதற்கும் பதிவாளர் உத்தரவிடலாம். அதே மாதிரியாக பிரிவு 65 (4)-ன் கீழும், பிரிவு 66 (3)-ன் கீழும் ஒரு சங்கத்தில் விசாரணையின்போதும் ஆய்வின்போதும் காணப்பட்ட குறைபாடுகளை நீக்கம் செய்வதற்குப் பதிவாளர் உத்தரவிடலாம். பிரிவு 72 (1)-ன் கீழ் ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவைத் தள்ளி வைப்பதற்குப் (Supersession) பதிவாளர் உத்தரவிடலாம்; பிரிவு 71 (1)-ன்கீழ் தண்டம் உத்தரவை (Surcharge Order) அவர் பிறப்பிக்கிறார்.

ஒரு நிருவாகக் குழு உறுப்பினரைப் பதவியிலிருந்து விலக்கு வதற்குப் பிரிவு 28-ன் கீழ் பதிவாளர் உத்தரவிடலாம். பதிவாளரால் வெளியிடப்பட்ட கட்டளைகளை நிறைவேற்றத் தவறுதலும் சட்டத்தின்கீழ் குற்றமாகும். உதாரணமாக பிரிவு 26 (1) (அ) (ஆ)-ன் கீழ் ஒரு பிரதிநிதித்துவப் பேரவையை அமைப்பதற்கு உப-விதிகளைத் திருத்தம் செய்ய ஒரு சங்கத்திற்குப் பதிவாளர் கட்டளையிடலாம். பிரிவு 70 (1)-ன் கீழ் ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவைச் சங்கத்தின் அலுவலரை, அல்லது ஊழியரை வேலையிலிருந்து நிறுத்தி வைக்கும்படிப் பதிவாளர் கட்டளையிடலாம். விதி 14-ன் கீழ் ஒரு சங்கத்திற்கு அதன் கணக்குகளையும் பதிவேடுகளையும் எழுதி முடித்து வைக்குமாறு பதிவாளர் கட்டளையிடலாம். சங்கம் அட்டவணையையும் அறிக்கையையும் அனுப்ப வேண்டுமென்று பதிவாளர் விதி 14-ன் கீழ் கட்டளையிடுகிறார். நிருவாகக் குழுவின் உறுப்பினராக இருப்

பதற்குத் தகுதியின்மையை அடைந்த ஓர் உறுப்பினரை நீக்குவதற்கு விதி 40-ன் கீழ் பதிவாளர் கட்டளையிடுகிறார். இம் மாதிரியாக விதிகளின்கீழ் பதிவாளர் கட்டளைகளை வெளியிடுகிறார்.

(iii) சட்டத்தின் சரத்துகளின்கீழ் அதிகாரமளிக்கப்பட்ட ஒருவரால் சட்டப்படி விரும்பப்பட்ட எந்தத் தகவல்களையும் எந்த நபர் கொடுக்கத் தவறுதலும் அல்லது வேண்டுமென்றே கொடுக்காமலிருத்தலும் (பிரிவு 101).

இந்தக் குற்றங்களுக்காக 200 ரூபாய் வரை நீடிக்கும் அபராதத்தை விதிக்கலாம் (பிரிவு 101).

(ஆ) (i) பிரிவு 32-ன் உட் பிரிவு 2-க்கு முரண்பாடாக செயல் படுதல் : அதாவது சங்கத்திற்குச் சாதகமாக ஈடு செய்யப்பட்ட ஒரு சொத்தைக் கடன் வாங்கியவரால் சங்கத்தின் எழுத்து மூலமான அனுமதியின்றி விற்பதும் அல்லது மாற்றுவதும் (transfer) அல்லது கையாடல் தீங்கிழைப்பதும் (conversion) (பிரிவு 102).

(ii) சங்கத்திற்குச் சாதகமான ஈட்டுக்கு உட்பட்ட சொத்-தைப் பிரிவு 32 (3)-ன் கீழ் சங்கம் கேட்டுக்கொண்டபோது கடன் வாங்கியவர் அத்தகைய சொத்தைச் சங்கத்தின் வசம் கொடுத்து வைக்கவோ அல்லது பாதுகாப்புக்கு ஒப்படைக்கவோ தவறுதல் (பிரிவு 102).

(iii) பிரிவு 33-ன் பகுதி (iii)-க்கு முரண்பாடாகச் செயல் படுதல். அதாவது பிரிவு 33 (1)-ன் கீழ் அறிவிப்பு மூலம் சங்கத்திற்குச் சாதகமாக ஏற்படுத்தப்பட்ட ஈட்டுக்குட்பட்ட ஓர் அசையாச் சொத்தின் எந்த ஒரு பாகத்தையும் ஒரு சங்கத்திலிருந்து கடன் வாங்கியவர் அக் கடனைத் தீர்க்காமல் விற்பதும் அல்லது வேறு விதமாக மாற்றுவதும் (பிரிவு 102).

(iv) பிரிவு 77 (3)-க்கு முரண்பாடாகச் செயல்படுதல் : அதாவது பிரிவு 77 (1)-ன் கீழ் ஒரு கூட்டுப் பண்ணைச் சங்கத்திலிருந்து வாங்கிய கடன்களைக் குறித்து ஓர் அறிவிப்பு மூலம் சங்கத்திற்குச் சாதகமாக ஏற்படுத்தப்பட்ட ஈட்டுக்குட்பட்ட ஒரு நிலத்தைக் கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் முன் அனுமதியின்றி விற்பதும் அலல்து வேறு விதமாக மாற்றுதலும். இந்தக் கூட்டுப் பண்ணைச் சங்கங்களில் ஓர் உறுப்பினர் கூட்டுப் பண்ணை நடவடிக்கைகளுக்காகத் தன் நிலத்தை, மொத்த நிலங்களுடன் இணைத்துக் கொள்வதற்குச், சங்கத்திற்குக் கொடுக்கிறார் (பிரிவு 102). இந்தக் குற்றங்களுக்கு 6 மாதங்கள் வரை நீடிக்கும் ஒரு

காலவரைக்குச் சிறைவாசமும் அல்லது ரூபாய் 500 வரை நீடிக்கும் அபதாரமும் தண்டனையாக விதிக்கலாம் (பிரிவு 102).

(இ) ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கமல்லாத வேறு எந்த ஒருவரும் 'கூட்டுறவு அல்லது அதற்குச் சமமான சொல்லைப் பயன் படுத்தல்'. பிரிவு 101-ன் கீழ் ஒரு பதிவு செய்யப்பட்ட சங்கமல்லாத எந்த நபரும் 'கூட்டுறவு' என்ற சொல்லையோ அல்லது அதற்குச் சமமான எந்த மாநில மொழியிலுள்ள ஒரு சொல்லையோ ஒரு பாகமாகக் கொண்ட பெயர் அல்லது தலைப்பின் கீழ் வர்த்தகம் அல்லது தொழிலை அரசாங்க அனுமதி யின்றிச் செய்யக் கூடாது [பிரிவு 103 (1)]. அதாவது கூட்டுறவு என்ற சொல்லைத் தன் பெயரின் ஒரு பாகமாகக் கொண்டு, 1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் அமலுக்கு வந்த தேதியன்று, அந்தப் பெயரில் வர்த்தகத்தை அல்லது தொழிலை நடத்திக் கொண்டிருந்த நிறுவனங்கள் மட்டும் தான் இவ்விதியிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் குற்றத்திற்காக ரூபாய் 200 வரை நீடிக்கும் அபராதத்தைத் தண்டனையாக விதிக்கலாம். குற்றம் தொடர்ந்து செய்யப் படுமானல் தண்டிக்கப்பட்ட பிறகு குற்றம் தொடர்ந்து செய்யப் பட்ட ஒவ்வொரு நாளுக்கும் ரூபாய் 50/- வீதம் மேற் கொண்( அபராதம் விதிக்கலாம் [பிரிவு 103 (2)]. இந்தத் தண்டனை 1932ஆம் வருடத்தியச் சட்டத்தில் ஒவ்வொரு நாளுக்கும் ரூபாய் 5/-ஆக இருந்தது. அது இப்போது ரூபாய் 50/-க்கு அதிகரிக்கப் பட்டிருக்கிறது.

'கூட்டுறவு' என்ற வார்த்தையைப் பயன்படுத்துவது ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் சிறப்பு உரிமைகளில் ஒன்ருகும். சட்டத்தின் கீழ் கூட்டுறவு என்ற சொல்லைப் பயன்படுத்து வதற்குத் தடை கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்ட ஒருமித்த நிறுவனங்களை (Corporate bodies) மற்ற நிறுவனங்களில் இருந்து அதாவது அதே தொழில் அல்லது வர்த்தகத்தைச் செய்யும் பங்கு முதலீட்டுக் கம்பெனி (Joint Stock Company) அல்லது கூட்டு வாணிகம் (Partnership) அல்லது வேறு தனியார் துறை நிறுவனங்களிலிருந்து பிரித்துக் காட்டுவதற்குத் தேவைப்படு கிறது. கூட்டுறவு அல்லாத நிறுவனம் கூட்டுறவுப் பெயரை வைத்துக் கொண்டு வியாபாரம் செய்து தோல்வியடைந்தால் அந்த அவமானம் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப் பட்ட கூட்டுறவு நிறுவனங்களைத்தான் சாரும். ஏனென்ருல், கூட்டுறவுச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட நிறுவனங் களுக்கும் மற்ற நிறுவனங்களுக்கும் உள்ள வேற்றுமையைச் சாதாரணமாகப் பாதுமக்கள் உணர மாட்டார்கள். மற்றும்

கூட்டுறவு நிறுவனங்களுக்கு அரசாங்கம் பல சலுகைகளையும் சிறப்புரிமைகளையும் அளித்துள்ளார்கள். எனவே இந்த நிறுவனங்கள் சரியாகச் செயல்பட்டு வருவதைக் கவனித்துக் கொள்வதற்கும் அவைகளின் செயல்பாட்டில் ஒரு கண்ணை வைத்துக்கொள்வதற்கும் பொதுமக்களுக்கு ஒரு பொறுப்பு உண்டு.

கைத்தறித் துணி, பால் வழங்குதல் போன்ற துறைகளில் குறிப்பாகச்சில கூட்டுறவு நிறுவனங்கள் சம்பாதித்தநற்பெயரைத் தனியார் நிறுவனங்கள் தங்கள் வாணிகத்தையும் தொழிலையும் வளர்த்துக் கொள்வதற்குப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது. இந்தக் காரணங்களுக்காகத்தான் இந்தச் சரத்து தேவையாக இருக்கிறது. பிரிவு 103-ன் கீழ் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்ட ஒரு சங்கம் அல்லாமல் வேறு ஒருவர் 'கூட்டுறவு' என்ற சொல்லைப் பயன்படுத்துவது ஒரு குற்றமாகும். 'கூட்டுறவு' என்ற சொல்லைப் பயன்படுத்திக்கொண்டு வியாபாரம் செய்யும் பொய் நிறுவனங்களிலிருந்து உண்மையான கூட்டுறவு நிறுவனங்களைப் பாதுகாப்பதற்கு இந்தப் பிரிவு வழி செய்கிறது.

(ஈ) பணச் சார்பற்ற தகராறுகளைக் குறித்த தாவாக்களில் பிறப்பிக்கப்பட்ட முடிவுகளை அல்லது தீர்ப்புகளை அமல் செய்யத் தவறுதல்-பிரிவு 73-ன் கீழ் பிறப்பிக்கப்பட்ட எந்த முடிவை அல்லது தீர்ப்பை அமல் செய்யத் தவறுதலும் அல்லது அத்தகைய முடிவு அல்லது தீர்ப்பின்மீது ஒரு மேல்முறையீடு தாக்கல் செய்யப் பட்டிருந்தால் மேல் முறையீட்டு அலுவலரால் பிறப்பிக்கப்பட்ட அதாவது தீர்ப்பாயம், பதிவாளர், அல்லது அரசாங்கம், இவர்களால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவை அமல்படுத்தத் தவறுதலும். அம்மாதிரி அமல் செய்யத் தவறியது ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவாக இருக்கலாம் அல்லது அதன் அலுவலர் அல்லது அதன் ஊழியர் அல்லது ஊதியம் பெற்ற ஊழியராக இருக்கலாம். இவ்வாறு தவறுவது பணச் சார்பற்ற தகராறுகளைக் குறித்து மட்டும்தான் இருக்கும்.

பணத் தகராறுகளில் சிவில் அல்லது வருவாய்த் துறை நீதி மன்றங்கள் மூலமாகவும் அல்லது கூட்டுறவுத் துறை மூலமாகவும் தீர்ப்பாணைகள் அல்லது தீர்ப்புகள் நிறை வேற்றப்படலாம். ஆனால், பணச் சார்பற்ற தகாரறுகளில் அதாவது நிருவாகக் குழு உறுப்பினர்கள் தேர்தல் போன்றவை களில் உத்தரவுகளைக் கட்சியினர் நிறைவேற்றுதல் செய்வதற்கு ஒரே ஒரு வழி அவர்கள் உத்தரவுகளை நிறைவேற்றத் தவறுதலைச் சட்டத்தின்கீழ் ஒரு குற்ற

மாகக் கருதி அவர்கள்மீது ஓர் அபராதத்தை விதிப்பதுதான் (பிரிவு 104). இந்தக் குற்றத்திற்கு ரூபாய் 100 வரை நீடிக்கும் அபராதத்தைத் தண்டனையாக விதிக்கலாம் (பிரிவு 104).

(உ) இதர குற்றங்கள்-எந்தத் தண்டனையும் வெளிப்படையாக விதிக்கப்படாத சட்டத்தின்கீழ் செய்யப்படும் எல்லாக் குற்றங்களிலும் 50 ரூபாய்க்கு மேற்படாத அபராதம் தண்டனையாக விதிக்கப்படலாம். எந்தத் தண்டனையும் வெளிப்படையாக விதிக்கப்படாத குற்றத்தைச் செய்யும் ஒரு சங்கம் அல்லது அதன் அலுவலர் அல்லது அதன் உறுப்பினர் அல்லது வேறு எந்த நபருக்கும் ரூபாய் 50/-க்கு மேற்படாத அபராதம் தண்டனையாக விதிக்கப்படலாம் (பிரிவு 105).

சில செயல்களைக் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ்க் குற்றங்களாகக் கருதவேண்டுமென்று சந்தானம் குழுவினர் கருத்து கொண்டனர். ஒரு பொய்க் கடனை வாங்குதல் அல்லது அனுமதித்தல், சங்கத்தில் எந்தப் பணத்தையும் வீணாக்குதல், சங்கத்தின் சார்பாகச் செய்யப்படும் வியாபாரத்தில் ரொக்கமாக அல்லது பொருளாகக்கையூட்டு வாங்குதல் (Illegal gratification), கூட்டத்திற்கு வராமலே நிருவாகக் குழுக் கூட்டத்தின் நடவடிக்கைகளில் கையெழுத்திடுதல் ஆகியவையும் ஒரு குற்றமாகச் செய்யப்பட வேண்டுமென்று அக் குழுவினர் பரிந்துரை செய்தனர். ஆகையால், மேற்கண்ட தவறான செயல்களுக்காக ஒரு புதிய பிரிவைச் சட்டத்தில் புகுத்தி இந்தக் குற்றங்களுக்காக ரூபாய் 500 வரை நீடிக்கும் அபராதம் அல்லது ஒரு வருடத்திற்கு மேற்படாத சிறைவாசம் அல்லது இரண்டையும் தண்டனையாக விதிக்க வேண்டுமென்று அவர்கள் ஆலோசனை கூறினர். மேலும் இக் குற்றங்களைப் புரிந்த நபர்கள் எந்தச் சங்கத்திலும் அவர்கள் தண்டனை பெற்ற தேதியிலிருந்து 6வருட காலத்திற்குப் பதவி வகிக்கத் தகுதியற்றவர்களாக்க வேண்டுமென்றும் அவர்கள் மேற்கொண்டு ஆலோசனை கூறியிருக்கின்றனர்.

2. குற்றவாளிகள்மீது நடவடிக்கையெடுப்பதற்கான நடைமுறை (Procedure for Proceeding Against the Offenders)

சட்டத்தின்கீழ்ச் செய்யப்படும் ஒவ்வொரு குற்றமும், 1898ஆம் வருடத்திய கிரிமினல் நடைமுறை விதித் தொகுப்பின் செயலுக்காக (Criminal Procedure Code 1898), பிடியாணையில்லாமல் பிடிக்கத் தகா குற்றமாகக் (Non-cognizable Offence) கருதப்படவேண்டும் [பிரிவு 106 (2)]. அதாவது தொடர்புடைய கட்சியினர் நடவடிக்கைகளெடுத்து அதனைப் பொறுத்து

இயங்கினுல் மட்டும் தான் அத்தகைய குற்றங்களை நீதிமன்றங்களில் நடவடிக்கைகள் தொடர முடியும். பிடியாணை வேண்டாக் குற்றங்களில் (Cognizable Offence), எந்தக் காவல் அலுவலரும் அல்லது நீதிபதியும் அல்லது பொதுமக்களும்கூட நடவடிக்கை எடுக்கலாம்.

கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் செய்யப்பட்ட குற்றங்களில் பாதிக்கப்பட்ட கட்சியினர் நடவடிக்கையைத் தொடங்கினுல் மட்டும்தான், ஒரு நீதிமன்றத்தில் கவனம் செலுத்தப்பட்டு நடவடிக்கை எடுக்கப்படலாம். மாநில நீதிபதி (Presidency Magistrate) அல்லது முதல்தர நீதிபதி (First Class Magistrate) நிலைக்குக் குறைந்த எந்த ஒரு நீதிமன்றமும் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் செய்யப்பட்ட எந்தக் குற்றத்தையும் விசாரிக்கக்கூடாது [விதி 106 (1)]. மற்றும் பதிவாளரின்முன் அனுமதியின்றி கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் எந்த வழக்குத் தொடர்தலும் (Prosecution) செய்யப்படக் கூடாது [பிரிவு 106 (3)]. பொருளற்ற (Frivolous) பிராதுகள் தொடரப்படுவதைத் தவிர்க்கும் நோக்கத்துடன் இந்தச் சரத்து செய்யப்பட்டிருக்கிறது. எல்லாச் சூழ்நிலைகளிலும் மேற்சொன்னவாறு நீதிமன்றத்தில் பிராதுகள் தாக்கல் செய்யப்பட்டுத் தொடர்பான கட்சியினரைத் தண்டிப்பதற்காக நடவடிக்கையெடுக்கப்பட வேண்டும்.

### 3. ஒரு சங்கத்தின் பதிவேடுகளையும் சொத்துகளையும் உடைமை சேர்ப்பித்தல் (Delivery of Possession of Records and Properties of Societies) (பிரிவு 107)

சில சமயங்களில் சங்கத்தின் நிருவாகிகள், சட்டப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநர் குழுவிற்கு அல்லது சங்கத்தின் நிருவாகம் தள்ளிப்போடப்படும் பொழுது ஒரு தனி அலுவலருக்கு அல்லது சங்கம் மூடப்பட வேண்டுமென்று உத்தரவிடப்பட்ட போது ஒரு கலைப்பு அலுவலருக்குச் சங்கத்தின் பதிவேடுகளையும் சொத்துகளையும் ஒப்புவிக்காமலிருப்பது நேரிடுகிறது. அத்தகைய சூழ்நிலைகளில், சங்கத்தின் நிருவாகிகள் சங்கத்தின் பதிவேடுகளையும் சொத்துகளையும் மேற் குறிப்பிட்டபடி மற்றவர்களுக்கு ஒப்புவிக்கவேண்டுமென்று உத்தரவிடுவதற்கு ஒரு சட்டப்படியான சரத்து கூட்டுறவுச் சட்டத்திலில்லாத காரணத்தால் கடந்த காலத்தில் சிரமங்கள் இருந்து வந்தன. அந்தச் சிரமம், பிரிவு 107-ஐச் சட்டத்தில் புகுத்த நிவர்த்திக்கப்பட்டது. சங்கத்தின் ஆவணங்களையும் இதர சொத்துகளையும் அத்தகைய சூழ்நிலைகளில் ஒப்படைப்பதை அமல் செய்யும் நோக்கத்துடன் விண்ணப்பத்தின் பேரிலும் சங்கம் திருத்தியமைக்கப்பட்டது

அல்லது கலேக்கப்படும்படி உத்தரவிடப்பட்டது என்று பதிவாள ரிடமிருந்து ஒரு சான்றிதழை முன்னிலேப்படுத்துவதன் பேரிலும் சங்க எல்லேயில் அதிகாரம் செலுத்தும் ஒரு நீதிபதிக்குச் (Magistrate) சங்கத்தின் பதிவேடுகளேயும் சொத்துகளேயும் சேர்ப்பிக்குப்படிக் கட்டளேயிடுவதற்கு அதிகாரம் அளித்து பிரிவு 107-ல் சரத்து செய்யப்பட்டிருக்கிறது.

சங்கத்தின் ஆவணங்களேயும் சொத்துகளேயும் சட்டப்படி அமைக்கப்பட்ட நபருக்குச் சேர்ப்பிக்கத் தவறிய காரணத்தால் எந்தச் சூழ்நிலேகளில் இந்தப் பிரிவின் சரத்துகளேப் பயன்படுத்திக் கொள்ள வேண்டிய தேவை ஏற்படும் என்பதைப் பிரிவு 107 (1) கூறுகிறது. அத்தகைய சூழ்நிலேகளாவன :

(1) ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு திருத்தியமைக்கப்படும் பொழுது,

(2) ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு பதிவாளரால் தள்ளி வைக்கப்பட்டு பிரிவு 72-ன் கீழ் ஒரு தனி அலுவலர் அல்லது ஒரு புதிய நிருவாகக் குழு அமைக்கப்படும் பொழுது,

(3) ஒரு சங்கம் கலேக்கப்பட வேண்டுமென்று உத்தரவிடப் பட்டு பிரிவு 86-ன் கீழ் ஒரு கலேப்பு அலுவலர் அமர்த்தப்படும்பொழுது,

இந்த எல்லாச் சூழ்நிலேகளிலும் சங்கத்தின் ஆவணங்களேயும் சொத்துகளேயும் ஒப்புவிப்பதற்கு எதிர்ப்பு இருந்தாலும் அல்லது ஒப்புக்கொள்ள முடியாமல் தடுக்கப்பட்டாலும், ஒரு மாநில நீதிபதியின் நீதிமன்றத்தில் அல்லது சங்கத்தின் எல்லேயில் அல்லது சங்கத்தின் ஆவணங்களும் சொத்துகளுமிருக்கும் எல்லேயில் அதிகாரம் செலுத்தும் முதல் வகுப்பு நீதிபதி நீதி மன்றத்திலும் நடவடிக்கையெடுக்கப்படலாம். அத்தகைய சூழ்நிலேகளில் திருத்தியமைக்கப்பட்ட நிருவாகக் குழு அல்லது கலேப்பு அலுவலர் நிருணயிக்கப்பட்ட நமுனுவில் எவரிடம் பொறுப்பை ஒப்படைக்கப் படவேண்டுமோ அவர்கள் சட்டப்படி அமைக்கப்பட்ட நபர்கள் என்று பதிவாளரிடமிருந்து ஒரு சான்றிதழுடன் ஒரு விண்ணப் பத்தை நீதிமன்றத்திற்கு அனுப்ப வேண்டும். அதற்குப் பிறகு அவர்களுக்கு சங்கத்தின் ஆவணங்களேயும் சொத்து களேயும் சுவாதீனம் அளிக்க வேண்டுமென்று நீதிபதி (Magistrate) கட்டளேயிட வேண்டும் [பிரிவு 107 (1)]. பதிவாளர், தான் தேவை என்று கருதும் விசாரணேயைச் செய்த பிறகுதான்,

பிரிவு 107 (1)-ன் கீழ் தன் சான்றிதழை வெளியிடுவார். தேவைப்படும் விசாரணைக்குப் பிறகு பதிவாளரால் சான்றிதழ் கொடுக்கப்பட்டால், நீதிமன்றத்தில் பிரிவு 107 (1)-ன் கீழ் எடுக்கப்படும் நடவடிக்கைகளின் செயலுக்காக, அந்தச் சான்றிதழ் ஒரு முடிவான சான்ருகும் (Conclusive Evidence). சான்றிதழில் குறிக்கப்பட்ட பதிவேடுகளும் சொத்துகளும் சங்கத்திற்குச் சொந்தமானவை என்பதற்கும் அது ஒரு முடிவான சான்ருகும் [பிரிவு 107 (3)].

விதி 101-ன்கீழ் பதிவாளரால் பிரிவு 107 (1)-ன் கீழ் வழங்கப்பட்ட சான்றிதழ், விதிகளின் அட்டவணையிலடங்கியுள்ள நமூனு எண் 9-ல், இருக்கவேண்டும். பிரிவு 107 (4)-ன் கீழ் சட்டப்படி அமைக்கப்பட்ட நபருக்குச் சுவாதீனமளிப்பதற்குக் கட்டளையிடுவதற்காகச் செய்யப்படும் விண்ணப்பத்தில் ஒரு முடிவு செய்வதற்கு முன்பு, ஒரு நீதிபதி (Magistrate) சங்கத்தின் பதிவேடுகளையும் சொத்துகளையும் அல்லது தேவை என்று கருதப்படும் அவற்றின் ஒரு பகுதியையும் சுவாதீனம் எடுத்துக் கொள்வதற்கு ஓர் அலுவலரை (Receiver) அமர்த்தலாம். அத்தகைய அலுவலருக்குக் கொடுக்கப்படும் ஊதியமும் அவரால் செய்யப்பட்ட இதர செலவுகளும் தொடர்பான சங்கத்தின் நிதியிலிருந்து கொடுக்கப்பட வேண்டும் [பிரிவு 107 (4)].

பிரிவு 107-ல் அடங்கியுள்ள சரத்துகள் ஒரு சங்கத்தின் செயல்பாட்டில் ஏற்படும் முட்டுக் கட்டையைத் தவிர்ப்பதற்கும், ஒரு சங்கத்தின் நிருவாகத்தில் நிகழும் ஒழுங்கீனங்களைத் தடுப்பதற்குப் பரிகாரமளிப்பதற்குமான நோக்கத்துடன் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. புதிதாக அமைக்கப்பட்ட நபர்கள் சங்கத்தின் பதிவேடுகளையும் சொத்துகளையும் சுலபமாகச் சுவாதீனமெடுத்துக் கொள்வதற்கு இந்தச் சரத்து வழி செய்கிறது.

# 18. பலவகை

## (Miscellaneous)

1. சொத்துகளை நிபந்தனைக்குட்பட்ட ஜப்தி செய்தல் (Conditional attachment of Properties) (பிரிவு108-ம், விதி 81-ம்)

எந்தச் சூழ்நிலைகளில் தீர்ப்புக்கு முன்பு சொத்துகள் ஜப்தி செய்யப்பட உத்தரவிடப்படலாம் என்பதுபற்றியும், அத்தகைய ஜப்தியைச் செய்யும்பொழுது எந்த நடைமுறை பின்பற்றப்பட வேண்டுமென்பது பற்றியும் பிரிவு 108-ம், விதி 81-ம் விளக்குகின்றன. அவைமுன் அத்தியாயத்தில் ஆராயப்பட்டன. பயனைப் பொறுத்தவரையில் இந்தப் பிரிவின்கீழ் செய்யப்பட்ட ஜப்தி, பிரிவு 91-ன்கீழும் விதிகளின் அத்தியாயம் XI-ன்கீழும் செய்யப்பட்ட ஜப்திக்குச் சமமானது. அந்த ஜப்தி விதிகளின் அத்தியாயம் X-ல் அடங்கியுள்ள நடைமுறைப்படிச் செய்யப்பட வேண்டும். அது தகுதி வாய்ந்த ஒரு சிவில் நீதிமன்றத்தால் செய்யப்பட்ட ஜப்தியைப் போன்று ஒரே மாதிரியான பயனைக்கூட உடையது.

2. பதிவைக் குறித்த நிபந்தனைகளிலிருந்து சங்கங்களுக்கு விலக்களிக்கும் அதிகாரமும் (பிரிவு 109), பதிவு செய்யப்பட்ட சங்கங்களைச் சட்டத்தின் எந்த ஒரு சரத்திலிருந்தும் விலக்களிக்கும் அதிகாரமும் (Power to exempt Societies) (பிரிவு 111)

ஒரு சங்கம் பதிவு செய்யப்படவில்லையானால் அது ஒரு கூட்டுறவாக (Corporate Body) இருக்க முடியாது, அல்லது பிரிவு 43-ன்கீழ் அது விதி விலக்குகளைப் பெற முடியாது; அல்லது அது சட்டத்தின் கீழ்இதர சலுகைகளையும் சிறப்புகளையும் பெறமுடியாது. பிரிவு 109-ம், 111-ம் இந்திய அரசாங்கத்தின் தீர்மானத்தில் (Govt. of India Resolution) பின்வருமாறு விளக்கப்பட்டிருக்கின்றன. 'இந்தியாவில் சிறிய மக்களுடைய நலத்திற்காகப் பயனுள்ள

முறையில், கூட்டுறவுக் கொள்கையானது எந்தெந்த வடிவத்தில் இருக்கலாம் என்பதுபற்றி எந்த ஒரு பொதுவான சரத்துகள் தொகுப்பை வகுப்பதற்குச் சாத்தியப்படாமல் இருந்தது. எல்லாச் சம்பவங்களுக்காகவும் (Eventualities) சரத்துகள் செய்வது சாத்தியமில்லாமல் இருந்தது.

ஆகையால் ஒரு மாநில அரசாங்கத்திற்கும் (Local Government) சட்டத்தின்கீழ் எந்த ஒரு நிறுவனத்தையும் ஒரு சங்கமாகப் பதிவு செய்வதற்கு அனுமதியளிக்க ஏற்பாடு செய்ய ஒரு பொதுவான பிரிவு சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்தப் பிரிவின் கீழ் மாநில அரசாங்கம் எந்தச் சங்கத்திற்கும் சட்டத்தின் எந்தச் சரத்துகளிலிருந்தும் விதிவிலக்கு செய்யலாம் அல்லது அத்தகைய சங்கத்திற்குப் பொருந்தும் எந்த சரத்துகளையும் மாற்றலாம்' ஆகையால், நிலைமை பின்வருமாறு நிற்கிறது. இந்த நாட்டில் அநேகமாக நிறுவப்படவிருக்கும் கூட்டுறவுச் சங்கங்களின் வகைக்குத் தகுந்தவையாக நம்பப்படும் சரத்துகள் மட்டும்தான் சட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்தச் சரத்துகள், பொதுவாக, தம் சொந்தச் சக்தியால் இந்தச் சங்கங்களுக்குப் பொருந்தும் ஓர் இயல்பான சட்டமாக (Normal Law) அமையும். ஆனால், ஒரு மாநில அரசாங்கம் ஒவ்வொரு சூழ்நிலையிலும் இந்தச் சரத்துகளிலிருந்து மாறுபடவோ, அல்லது சரத்துகளை மாற்றவோ முழு சுதந்தரமும் அதிகாரமும் பெற்றிருக்கும். அவ்வாறு சரத்துகளை மாற்றியமைப்பதற்கு அது தேவையான காரணங்களை முழுமையாக ஆலோசித்த பிறகு ஒவ்வொரு சூழ்நிலையிலும் ஒரு தனிப்பட்ட உத்தரவின்மூலம் நடவடிக்கை யெடுக்க வேண்டும். அதுவும் வேறுபடுவதற்கு உண்மையாகவே, இந்த அதிகாரம், சட்டத்தின் நோக்கங்களை வளர்ப்பதற்கு உத்தேசிக்கப்பட்ட குறிக்கோள்களைக் கொண்ட சங்கங்களின் சார்பாக மட்டும்தான், கையாளப்பட வேண்டுமென்று உத்தேசிக்கப்படுகிறது'.

பிரிவு 109-க்கும் பிரிவு 111-க்குமுள்ள வேற்றுமை என்ன வென்றால் பிரிவு 109 ஒரு சங்கத்திற்குப் பதிவு நிபந்தனைகளில் இருந்து அளிக்கப்பட்ட விலக்குகளுக்குப் பொருந்தும். ஆனால், பிரிவு 111 முன்னரே பதிவு செய்யப்பட்ட சங்கங்களுக்கு மட்டும் தான் பொருந்தும். பிரிவு 109-ன் கீழ் அரசாங்கம் ஒவ்வொரு சூழ்நிலையிலும் ஒரு தனிப்பட்ட உத்தரவின் மூலம் எந்தச் சங்கத்தையும் பதிவைக் குறித்து சட்டத்தின் தேவைகளிலிருந்து தன்னால் விதிக்கப்படும் நிபந்தனைகளுக்குட்பட்டு பிரிவு 4 அல்லது 6-ன்கீழ் விதிவிலக்கு அளிக்கலாம். உதாரணமாக, எண்ணிக்கை 10-க்குக்

குறைந்த நபர்களுள்ள ஒரு கூட்டத்தினர் வீணை செய்வதுபோன்ற ஓர் உயர்தர நுட்பம் வாய்ந்த வர்த்தகத்திலோ அல்லது கைத் தொழிலிலோ ஈடுபட்டிருந்தால், பத்துக்கும் குறைந்த உறுப்பினர் களுடன் ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்குக்கூட அரசாங்கம் அனுமதி அளிக்கலாம். தஞ்சை மாவட்டத்தில் வீணை செய்பவர் களுக்காக ஏற்படுத்தப்பட்ட சங்கம் இதற்கு உதாரணமாகும். இந்த வீணை செய்பவர்கள் ஒரு கூட்டுறவு நிறுவனத்தின் மூலம் தங்களுக்குத் தேவையான உதவியை நாடியதாலும், அத்தகைய கூட்டுறவு நிறுவனம் மிகத் தேவைப்படுகிற பலதரப்பட்ட நுட்ப மான இசைக் கருவிகளை உற்பத்தி செய்ய ஏற்பாடு செய்வதற்கு ஒரு நல்ல வாய்ப்பு இருந்ததாலும்தான் அத்தகைய கூட்டுறவுச் சங்கம் நிறுவப்பட்டது.

பிரிவு 111-ன் கீழ் பதிவு செய்யப்பட்ட எந்தச் சங்கத்திற்கும் ஒரு பொது அல்லது தனிப்பட்ட உத்தரவின்மூலம் சட்டத்தின் எந்தச் சரத்துகளிலிருந்தும் விதிவிலக்கு அளிக்கவும், அல்லது அத்தகைய சரத்துகள் அத்தகைய சங்கத்திற்கு உத்தரவில் குறிக்கப்பட்டுள்ள அத்தகைய மாறுதல்களுடன் பயன்படுத்தப்பட வேண்டுமென்றும் கட்டளையிட அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு. உதாரணமாக, ஒரு தலைமைச் சங்கத்தின்செயல் முறையில் விதிகளில் அனுமதிக்கப்பட்டுள்ள விகிதத்திற்கும் மேற்பட்டு தன் உறுப்பினர்களுக்கு இலாப ஈவை வழங்குவதற்கு அரசாங்கம் அனுமதி அளிக்கலாம். மற்றும் தனிப்பட்ட சூழ்நிலையில் அரசாங்கம் மாற்றுள்வழி வாக்குரிமையை (Voting by Proxy) அனுமதிக்கலாம். இந்தப் பிரிவின் கீழ், அசாதாரண சூழ்நிலைகளிலும் தேவைப்படும் சூழ்நிலைகளிலும் அல்லது ஏதாவது மாறுதல் ஏற்படும் நிலைமைகளைச் சமாளிப்பதற்கும் மட்டும்தான் அரசாங்கம் ஒதுக்கப்பட்ட இந்த அதிகாரங்களைக் (Reserve powers) கையாளலாம். எனவே, சட்டத்தின் கட்டுக் கோப்பிற்குள் சங்கத்தின் செயல்பாட்டில் ஏற்படும் ஏதாவது முட்டுக்கட்டையைத் நீக்குவதற்குத்தான் இந்த இரண்டு பிரிவு களும் ஏற்படுத்தப்பட்டன. இந்த முட்டுக் கட்டைகளைத் தற்காலிகமாக அல்லது நிரந்தரமாக நீக்குவதன்மூலம் அத்தகைய சங்கம் நன்ருகச் செயல்பட்டுத் தன் உறுப்பினர்களுடைய நலன் களுக்குச் சேவை செய்து சமுதாய நலத்தை வளர்க்க ஏதுவாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. நம் நாட்டினைப்போல் மாறிக் கொண்டிருக்கும் ஒரு பொருளாதார அமைப்பில் அத்தகைய ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள் தேவையாக இருக் கின்றன. அத்தகைய அதிகாரங்கள் இருந்தால்தான் சங்கங்கள் மக்கள் எதிர்பார்க்கும்வண்ணம் செயல்பட முடியும்.

விதி 103-ன் கீழ் பொது உத்தரவு அல்லது தனிப்பட்ட உத்தரவின்மூலம் அரசாங்கம் தேவை என்று கருதும் நிபந்தனைகளுக்குட்பட்டு எந்தச் சங்கத்தையும் அல்லது சங்கங்களின் வகையையும் விதிகளின் எந்தச் சரத்துகளிலிருந்தும் விலக்கலாம். அல்லது அத்தகைய சரத்துகளை எந்தச் சங்கத்திற்கும் அல்லது சங்கங்கள் வகைக்கும் உத்தரவில் குறிக்கப்பட்டவாறு சில திருத்தங்களுடன் பயன்படுத்த வேண்டுமென்று அரசாங்கம் கட்டளையிடலாம். 1971ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (இரண்டாவது திருத்தம்) சட்டம், பிரிவு 111-ல், 'வருங்காலத் தேதிக்காவது அல்லது கடந்த காலத் தேதிக்காவது' என்ற சொற்களைச் சேர்த்தும், அவற்றைத் திருத்தி அமைத்தும் ஒரு திருத்தம் செய்திருக்கிறது. இந்தத் திருத்தத்தின் விளைவு என்னவென்றால், அரசாங்கம் சங்கங்களுக்குச் சட்ட விலக்குதலைக் 'கடந்த காலத் தேதியிலிருந்து அல்லது ஒரு வருங்காலத் தேதியிலிருந்து' அளிக்க அதிகாரத்தைக் கையாளக்கூடும்.

3. தற்சார்புச் சங்கங்களுக்கு விதிவிலக்கு (Exemption of self Reliant Societies) *(பிரிவு 110)*

ஒரு தற்சார்புச் சங்கம் பிரிவு 2 (12)-ல் சட்டத்தின் அத்தியாயம் VI-ல் குறிக்கப்பட்ட அரசாங்க உதவியை எந்த வடிவத்திலும் வாங்காத ஒரு சங்கம் அல்லது அரசாங்கத்திடமிருந்து அத்தகைய உதவியைப் பெற்ற எந்தச் சங்கத்தினிடமிருந்தும் உதவியை எந்த வடிவத்திலும் வாங்காத ஒரு சங்கம் என்று விளக்கப்பட்டிருக்கிறது. பிரிவு 110-ன் கீழ் அத்தகைய சங்கம் பிரிவு 19-லிருந்தும், பிரிவு 27 (1)-ன் விலக்குக் கூறிலிருந்தும், பிரிவு 27 (2)-லிருந்தும் விலக்கப்பட்டிருக்கிறது. பிரிவு 29-ல் ஒரு சங்கத்தினுடைய சேவைகளுக்கு உறுப்பினருடைய உரிமைகளும் அத்தகைய சேவைகளும் கிடைக்காதபோது அந்தக் குறையைத் தீர்ப்பதற்கான விண்ணப்பம் செய்வது பற்றியும் கூறப்பட்டிருக்கிறது.

தற்சார்புச் சங்கம் எந்தவித அரசாங்க உதவிகளுமன்றித் தன் தொழிலை நடத்தவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுவதால், அத்தகைய சங்கம் தன் உறுப்பினர்களுக்குச் சேவை செய்யும் பிரச்சினையைச் சங்கத்தின் விருப்பத்திற்கே விட்டுவிட வேண்டுமென்ற உண்மையின் அடிப்படையில் இந்த விலக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. மற்றும் அத்தகைய சங்கத்தில், எந்தச் சூழ்நிலையிலும் அரசாங்கமோ அல்லது நிதி வங்கியோ இயக்குநர்களை பிரிவு 27 (2)-ன் கீழ் நியமிக்காது. அதிகமான அரசாங்க உதவிகள் அளிக்கப்படும் தற்போதைய நிலைமையிலும், சங்கங்கள்

சமுதாய சேவைக்கும் பொருளாதாரச் சேவைக்கும் ஒரு கருவியாகக் கருதப்படும் இந்தச் சமயத்திலும் இந்த வகைச் சங்கங்களை நிறுவுவது கடினமாகும். உண்மையாகவே, இவ்வகைச் சங்கங்கள் இதுவரை நிறுவப்பட்டு செயல்படுவதாகத் தெரியவில்லை.

4. ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலங்களுக்காக நிறையீட்டுத் தொகையை (Compensation) நிருணயிப்பதற்காக மத்தியஸ்தரும் தீர்ப்பாயங்களும் சிவில் நீதிமன்றங்களாகச் செயல்படும் (Arbtrator in fixing Compensation for lands acquired and the Tribunal to be Civil Courts) (பிரிவு 112)

பிரிவு 82 (1) (அ)-ன் கீழ் ஒரு கூட்டுப் பண்ணைச் சங்கத்திற்குச் சாதகமாக ஆர்ஜிதம் செய்வதற்கு உத்தேசிக்கப்பட்ட நிலத்திற்காகச் செலுத்தப்படவேண்டிய பதிலீட்டுத் தொகையை நிருணயிப்பதற்கு அமர்த்தப்பட்ட ஒரு மத்தியஸ்தரும், பிரிவு 95-ன் கீழ் அமர்த்தப்பட்ட ஒரு தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றமும் பிரிவு 112-ன்படி ஒரு வழக்கை விசாரிக்கும்பொழுதும் அல்லது ஒரு மேல் முறையீட்டை விசாரணை செய்யும்பொழுதும் 1908ஆம் வருடத்தியச் சிவில் நடைமுறை விதித் தொகுப்பின்கீழ் ஒரு சிவில் நீதிமன்றத்திற்குண்டான அதே அதிகாரங்களையுடையவர்களாவர். இதைப் பற்றியும் கூட்டுப் பண்ணைச் சங்கங்களைப் பற்றியும் தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்தைப் பற்றியும் முந்தைய அத்தியாயத்தில் விளக்கம் கூறியபோது குறிப்பிட்டிருக்கிறோம்.

ஒரு கூட்டுப் பண்ணைச் சங்கத்திற்காக ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலத்திற்கு நிறையீட்டுத் தொகையைத் திர்மானிப்பதற்காக அமர்த்தப்படும் மத்தியஸ்தர் ஒரு சார் நீதிபதி (Snbordinate Judge) தகுதிக்குக் குறையாத ஒரு நீதித்துறை அலுவலராக இருப்பார். தீர்ப்பாயம் என்பது பிரிவு 96-ன் கீழ் அமர்த்தப்பட்டுச் சில தீர்ப்பாணைகளிலும் அல்லது தீர்ப்புகளிலும் மேல் முறையீட்டு அலுவலராக இயங்கும். அரசினர் ஒவ்வொரு மாவட்டத்திலும் மாவட்ட நீதிபதி (District Judge) பதவியுள்ள நீதித்துறை அலுவலர்களைத் தீர்ப்பாயங்களாக அமர்த்தி இருக்கின்றனர். இந்த நபர்கள் சிவில் நீதிமன்றங்களாக அறிவிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்களுக்கு 1908ஆம் வருடத்திய சிவில் நடைமுறை விதித் தொகுப்பின் கீழ் ஒரு வழக்கை அல்லது ஒரு மேல் முறையீட்டை விசாரிக்கும்பொழுது ஒரு சிவில் நீதிமன்றத்தின் எல்லா அதிகாரங்களும் உண்டு.

5. அரசினரால் அதிகாரங்கள் அளிப்படைவு (Delegation of Powers by Government) (பிரிவு 113)

இந்தப் பிரிவின்கீழ் அரசாங்கம் ஓர் அறிவிப்பின்மூலம் சட்டத்தின் கீழும் விதிகளின் கீழும் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களையும் அல்லது எந்த அதிகாரத்தையும் கூட்டுறவுத் துறையின் எந்த அலுவலருக்கும் அல்லது இதர துறைகளின் அலுவலர்களுக்கும் அல்லது எந்த அலுவலருக்கும் அளிப்படைவு செய்யலாம். பலவகை அலுவலர்களுக்கு ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள் முந்தைய ஓர் அத்தியாயத்தில் விவரமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இந்த அலுவலர்கள் விதிகளைச் செய்யும் அதிகாரம் தவிர, சட்டத்தின்கீழ் மற்ற எல்லா அதிகாரங்களையும் சரியான அதிகார அளிப்படைவின்படி கையாளலாம். விதிகள் அரசாங்கத்தால் மட்டும்தான் செய்யக்கூடும் [ பிரிவு 113 (1) ]. அதிகாரங்களை அளிப்படைவு செய்வதுபோல் அரசாங்கம் அத்தகைய அதிகாரங்களைத் திரும்பப்பெறலாம். அவ்வாறு ஒப்படைக்கப்பட்ட எல்லா அதிகாரங்களும் கூட்டுறவுத் துறை அலுவலர்களைப் பொறுத்தவரையில் பதிவாளருடைய ஆதிக்கத்துக்குட்பட்டும், பதிவாளர் உட்பட மற்ற எல்லா அலுவலர்களைப் பொறுத்தவரையில் அரசாங்கத்தின் ஆதிக்கத்திற் குட்பட்டும் கையாளப்படவேண்டும். அரசாங்கத்தால் அதிகார மளிக்கப்பட்ட எந்த அலுவலரும் அந்த அதிகாரங்களைக் கையாண்டு அவரெடுக்கும் நடவடிக்கைகளையும் செயல்களையும் கட்டுப்படுத்தவும் திருத்தவும்கூட அரசாங்கத்திற்கு அதிகாரம்உண்டு.

ஓர் அலுவலருக்கு ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள், அந்த அதிகாரங்கள் ஒப்படைத்த அறிவிப்பில் நிருணயிக்கப்பட்ட அல்லது குறிப்பிடப்பட்ட நிபந்தனைகளுக்கும் தடைகளுக்கும் உட்பட்டே கையாளப்பட வேண்டும் [பிரிவு 113 (2)]. நடைமுறையில், அரசினர் நிருவாக வசதியின் தேவைகளைக் குறித்தும் அலுவலர்களைக் குறித்தும் அத்தகைய அதிகாரங்களை அளிப்படைவு செய்தும் அவ்வப்போது அந்த அதிகாரங்களை மாற்றியுமிருக்கின்றனர். பொதுவாக, பதிவாளருடைய வேலையும் பொறுப்பும் அவருக்குக் கீழ்ப்பட்ட மற்ற அலுவலர்களுடைய வேலையும் பொறுப்பும் அதிகரித்து வருவதால், வேலையை விரைவாகவும் திறம்படவும் செய்யும் பொருட்டுப் பதிவாளருக்கும் அவருக்குக் கீழ்ப்பட்ட இதர அலுவலர்களுக்கும் மேலும், மேலும் அதிகமான அதிகாரங்களை அளிப்படைவு செய்வது மேலும், மேலும் அதிகமாகத் தேவைப்படுகின்றது.

6. செயல்பட்டுக் கொண்டிருக்கும் சங்கங்களைக் காப்பாற்றுதல் (Saving of Existing Societies)(பிரிவு 114)

1961 ஆம் வருடத்தியச் சட்டம் அமலுக்கு வந்த தேதியன்று செயல்பட்டுக் கொண்டிருந்த எல்லாச் சங்கங்களுக்கும், அவை

முந்தைய சட்டங்களாகிய 1904ஆம் வருடத்திய 'நாணயக் கூட்டுறவுச் சங்கச் சட்டம்' 1912ஆம் வருடத்திய 'கூட்டுறவுச் சங்கச் சட்டம்' அல்லது 1932ஆம் வருடத்திய 'சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டம்', இவற்றின் கீழ் பதிவு செய்யப்பட்டிருந் தாலும், அவைகளுக்குச் சட்டப்படியான ஒப்புதலும் (Statutory Recognition) அவை தொடர்ந்து செயல்படுவதற்காகவும் சட்டப் படியான ஏற்பு அளிக்கும் நோக்கத்துடன் இந்தப் பிரிவு செய்யப்பட்டிருக்கிறது. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழ் இந்தச் சங்கங்கள் பதிவு செய்யப்பட்டதாகக் கருதப்பட வேண்டும். அவைகளின் உப-விதிகளும் 1961ஆம் வருடத்திய வெளிப்படையான சரத்துகளுக்கு முரண்படாமலிருந்தால் தொடர்ந்து அமலில் இருக்கலாம் [பிரிவு 114 (1)]. அதே மாதிரியாக, மாநிலங்களின் சீரமைப்பின் விளைவாகத் தமிழ் நாட்டில் சில புதிய ஊர்கள் சேர்க்கப்பட்டன. இந்த ஊர்களிலுள்ள சங்கங்கள் வேறுபட்ட சட்டங்களின் அடிப் படையில் செயல்பட்டிருந்தன.

உதாரணமாக, புதுக்கோட்டை மாநிலத்தில் ஒரு பகுதியாக இருந்த புதுக்கோட்டை இப்போது தமிழ்நாட்டில் சேர்க்கப்பட்டு தமிழ்நாட்டின் ஒரு பகுதியாக இருக்கிறது. அதே மாதிரியாகக் கன்னியாகுமரி மாவட்டமும், திருநெல்வேலி மாவட்டத்தின் செங்கோட்டை தாலுக்காவும், இப்போது தமிழ்நாட்டில் சேர்க்கப்பட்டுள்ளன. இந்த எல்லைகளில் சங்கங்கள் கேரள மாநிலத்தின் சட்டங்களின் கீழ் செயல்பட்டு வந்தன. மற்றும் ஆந்திர மாநிலத்தின் பகுதியாக இருந்த திருத்தணி தாலுக்காவும் இப்போது தமிழ்நாட்டில் சேர்க்கப்பட்டுள்ளது. இம்மாதிரி சூழ்நிலைகளிலும் கூட்டுறவுச் சங்கங்களின் செயல்பாட்டைக் குறித்து சட்ட நிருவாகத்தில் ஒரு படித்தான தன்மையைச் செயல்படுத்தும் நோக்கத்துடன் இத்தகைய எல்லைகளிலிருக்கும் சங்கங்கள் 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப் பட்டதாகப் பதிவாளரின் ஓர் உத்தரவின் மூலம் கருதப் படுவதற்கு பிரிவு 114 (2) வழி செய்கிறது. அத்தகைய சங்கங் களின் உப-விதிகளும் அவை திருத்தப்படும் அல்லது மாற்றப்படும் வரை தொடர்ந்து அமலில் இருக்கும் [பிரிவு 114 (2)]. பிரிவு 114 (2)-ன்கீழ் பதிவாளர் மாநிலங்களின் சீரமைப்பின் விளைவாக எல்லாச் சங்கங்களையும் 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழ் பதிவுசெய்யப்பட்ட சங்கங்களாக 1963ஆம் வருடத்தில் அறிவிப்பு செய்திருக்கிறார்.

சந்தானம் குழுவினர் பிரிவு 114 (1)-லுள்ள சரத்துகளுக்கு ஒத்தவாறு பிரிவு 114 (2)-ம் திருத்தப்பட வேண்டுமென்று

ஆலோசனை கூறியிருக்கின்றனர். அதாவது புதிய சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்டதாகக் கருதப்படும் சங்கங்களின் உப-விதிகளும் அல்லது தமிழ்நாட்டிற்கு மாற்றப்பட்ட சங்கங்களின் உப-விதிகளும் சட்டத்தின் வெளிப்படையாக சரத்துகளுக்கு முரண்படாமலிருந்தால் அவை மாற்றப்படும் அல்லது நீக்கப்படும் வரை தொடர்ந்து அமலில் இருக்கும் என்று பிரிவு 114 (2)-ஐத் திருத்தம் செய்யவேண்டுமென்று அக் குழுவினர் கூறியிருக்கின்றனர். மற்றும், முந்தைய சட்டங்களின்கீழ் செய்யப்பட்ட எல்லா அலுவல் ஆணைகளும், விதிகளும், உத்தரவுகளும் அறிவிப்புகளும், அறிக்கைகளும், தொடரப்பட்ட வழக்குகளும், இதர நடவடிக்கைகளும் 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழ் முறையே செய்யப்பட்டதாகவும் அல்லது தொடரப்பட்டதாகவும் கருதப்பட வேண்டும் [பிரிவு 114 (3)]. எனவே, மாநிலத்தில் செயல்பட்டிருந்த எல்லாச் சங்கங்களுக்கும் மாநிலத்தில் புதியதாகச் சேர்க்கப்பட்ட எல்லைகளில் செயல்படும் எல்லாச் சங்கங்களுக்கும், அவைகளால் முந்தைய சட்டங்களின்கீழ் செய்யப்பட்ட எல்லாச் செயல்களுக்கும் நடவடிக்கைகளுக்கும் சட்டப்படியான முழு பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. இவை 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின்கீழ் செய்யப்பட்டவையாகக் கருதப்பட வேண்டும்.

**7. சில குறைபாடுகளினால் சங்கங்களின் செயல்கள் செல்லாதவையாகச் செய்யப்படக் கூடாது (Act of Societies not to be invalidated) (பிரிவு 115)**

இந்தப் பிரிவு 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் பிரிவு 63 போன்றது. ஆனால், இது அதைவிட முழுமையானது. சங்கத்தின் பேரவை அமைப்பிலும் அல்லது நிருவாகக் குழு அமைப்பிலும் சில குறைபாடுகளிருப்பினும், சங்கங்களின் செயல்களுக்கு இந்தப் பிரிவு பாதுகாப்பு அளிக்கிறது. இந்தப் பிரிவின் கீழ்க்கண்ட காரணங்களால் மட்டும் ஒரு சங்கத்தின் அல்லது அதன் நிருவாகக் குழுவின் அல்லது அதன் அலுவலரின் செயல் செல்லாததாகாது.

(அ) சங்கத்தை அமைப்பதிலும் அல்லது பேரவையை அமைப்பதிலும் அல்லது பிரதிநிதித்துவப் பேரவையை அமைப்பதிலும் அல்லது நிருவாகக் குழுவினை அமைப்பதிலும் காலி இடம் அல்லது குறைபாடு இருத்தல் காரணமாக [பிரிவு 115 (அ)],

(ஆ) நிருவாகக் குழுவின் ஓர் உறுப்பினரின் தேர்தலில் அல்லது நியமனத்தில் அல்லது சங்கத்தின் ஓர் அலுவலரின் நியமனத்தில் குறைபாடு அல்லது ஒழுங்கின்மை இருத்தல் காரண

டாக அல்லது அத்தகைய உறுப்பினர் அல்லது அலுவலரின் தகுதி யின்மை காரணமாக (பிரிவு 115 (ஆ)],

(இ) ஒரு செயலின் தகுதியைப் (Merits of the Case) பாதிக் காத அத்தகைய செயல் அல்லது நடவடிக்கையின் குறைபாடு அல்லது ஒழுங்கீனம் காரணமாக [பிரிவு 115 (இ)],

(ஈ) சங்கத்தின் பேரவை அல்லது நிருவாகக் குழு அமைப்பி லும் அல்லது ஓர் அலுவலரின் தேர்தலிலும் காணப்பட்ட சில தொழில் நுட்பக் குறைபாடுகளுக்காகவும் செய்தியின் தகுதி யைப் பாதிக்காத வேறு குறைபாடுகளுக்காகவும் ஒரு சங்கத்தின் தொழில் நிலையில்லாததாக்கப்படாமலிருப்பதை உறுதி செய்வது தான் இந்தப் பிரிவின் நோக்கம். உதாரணமாக, சரியாகத் தேர்ந்தெடுக்கப்படாத அல்லது பதவியை வகிப்பதற்குத் தகுதி யின்மையைப் பெற்ற ஒரு நபர் இருக்கும் ஒரு நிருவாகக் குழு ஒரு கடனை அளிப்படைவு செய்தது சட்ட விரோதமானதாகாது' அது செல்லுபடியாகாததாகாது. கடன்வாங்கியவர் ஒரு தகுதியில்லாத நிருவாகக் குழுவால் கடன் அளிப்படைவு செய்யப்பட்டது என்று சொல்ல முடியாது. அதேமாதிரியாக ஓர் அலுவலரால் ஒரு சொத்து விற்கப்பட்டாலும் அல்லது ஒரு சொத்தில் முதலீடு செய்யப்பட்டாலும் அதற்கான தீர்மானத்தைச் செய்த நிருவாகக் குழுவின் தேர்தல் தொடர்பாகப் பின்னால் தகராறு நேர்ந்தால் அந்த விற்பனை அல்லது முதலீடு செல்லத் தகாதது என்று கருதப்படக்கூடாது. மேற் கண்ட வகைகளில் குறைபாடுகளின் விளைவாக ஏற்பட்ட சில தொழில் நுட்பத் தன்மையான காரணங்களுக்காகச் சங்கத்தின் தொழில் பாதிக்கப்படக்கூடாது என்பது இதன் கருத்து. ஆகை யால், அத்தகைய தொழில் நுட்பமான சில குறைபாடுகளிலிருந்து சங்கத்திற்கு ஒரு பாதிக்காத நிலைமையை (Immunity) இந்தப் பிரிவு கொடுக்கிறது.

**8. 1956-ஆம் வருடத்திய கம்பெனிகளின் சட்டத்தின் (Companies Act) சரத்துகள் பதிவு செய்யப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பொருந்தா (Companies Act 1956, not to apply to Societies). (பிரிவு 116)**

இது கூட்டுறவுச் சட்டம் முழுமைக்கும் அடிப்படையானது சாதாரணமாக கம்பெனிகள் சட்டம் பல இலாபத்திற்காக ஏற் படுத்தப்பட்ட நிறுவனங்களை நிருவகிக்கும் ஒரு சட்டமாக இருக் கிறது. இந்தச் சட்டம் முக்கியமாக முதலாளிகளின் தேவைகளை நிறைவு செய்வதற்கு ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. ஆரம்பத்தில் பல நாடுகளில் அக் கம்பெனிகள் சட்டத்தின் கீழ்தான் கூட்டுறவுச் சங்கங்கள் ஒரு சட்டப்படியான தகுதியைப் பெற முடிந்தது.

நாளடைவில் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை மிகுந்ததாலும் கூட்டுறவு இயக்கம் வலிமை பெற்றதாலும், சட்டத்தைக் கூட்டுறவு இயக்கத்தின் தேவைகளுக்காகத் திருத்த வேண்டியிருந்தது. புதிய சட்டம் இயற்றுதலைக் கூட்டுறவுச் சங்கங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்வதற்குக், கூட்டுறவுச் சங்கங்களுடைய சட்டபடியான விளக்கத்தைச் செய்ய முயற்சிப்பதற்கு ஒரு தேவை ஏற்பட்டது. அத்தகைய விளக்கங்கள் சில கூட்டுறவுச் சட்டங்களின் தோற்றுவாயில் அடங்கியிருக்கின்றன. மற்றும் அவை சட்டத்தின் பல சரத்துகளிலும் விதிகளிலும் புகுத்தப்பட்டிருக்கின்றன. கூட்டுறவுச்சங்கங்களின் செயல்பாட்டை நிருவகிப்பதற்கு ஒரு தனிப்பட்ட சட்டத்தின் தேவையை வலியுறுத்தி இந்திய அரசாங்கம் கீழ்க் கண்டவாறு கூறியுள்ளது.

'கம்பெனிச் சட்டத்தின் விரிவான சரத்துகள், பெருவாரியான முதலாளித்துவச் செயல்பாட்டில் எவ்வளவு இன்றியமையாததாக இருந்தாலும், ஊக்கமளிக்கப்பட விரும்பப்படும் கூட்டுறவுச் சங்க வகைக்கு முற்றிலும் தகுதியற்றனவாக இருக்கின்றன. கூட்டுறவுச் சங்கங்களை ஆரம்பிப்பதில் செய்யப்பட வேண்டிய முதல் செயல் அவற்றைப் பொதுச் சட்டத்தின் அமலிலிருந்து எடுத்துவிட்டு, அப் பொதுச் சட்டத்தின் சரத்துகளுக்குப் பதில், கூட்டுறவுச் சங்கங்களின் அமைப்புக்கும் நோக்கங்களுக்கும் ஏற்ப, தனியாக சரத்துகளை ஏற்படுத்தவேண்டி இருந்தது. கம்பெனிச்சட்டத்திலிருந்து விலக்களித்திருப்பதன் காரணமாக, பல்வேறு பத்திரங்கள், ஐந்தொகைக் குறிப்புகள் (Balance sheets) முதலியவற்றைப் பதிவு செய்வதற்கான கட்டணங்களைச் செலுத்துவதிலிருந்து விலக்கு கிடைத்திருக்கிறது. கூட்டுறவுச் சங்கங்களின் செயல்பாட்டைப் பரிபாலிப்பதற்கு ஒரு தனிச் சட்டம் இருந்தால் அச் சங்கங்களுக்குத் தனிப்பட்ட தனிச் சிறப்புகளையும் சலுகைகளையும் அளிப்பதற்குச் சாத்தியப்படும். இந்தப் பிரிவின் விளைவாகக் கூட்டுறவுச் சங்கங்கள் 1956ஆம் வருடத்திய கம்பெனிச் சட்டத்தின் பார்வையிலிருந்தும் அதிகாரத்திலிருந்தும் எடுக்கப்பட்டிருக்கின்றன.

**9. நல்லெண்ணத்துடன் செய்யப்பட்ட செயல்களுக்குப் பாதுகாப்பு (Protection of action taken in good faith) (பிரிவு 117).**

சட்டத்தின் கீழும் அல்லது சட்டத்தின் கீழ் செய்யப்பட்ட எந்த விதி அல்லது உப-விதியின் கீழும், நல்லெண்ணத்துடன் செய்யப்பட்ட அல்லது செய்வதற்கு உத்தேசிக்கப்பட்ட எந்தச் செயலுக்காகவும், எந்த அலுவலர் மீதும் அல்லது அரசாங்க

ஊழியர்மீதும், எந்த வழக்கும் அல்லது குற்றச்சாட்டும் அல்லது இதர சட்டப்படியான நடவடிக்கையும் எடுக்கக்கூடாது. இந்தப் பிரிவுகூட்டுறவுத்துறை அலுவலர்களுக்கு, அவர்கள் சட்டத்தையும் விதிகளையும் உப-விதிகளையும், அமல் செய்யுங்கால், நல்லெண்ணத் துடன் புரிந்த அல்லது புரிவதற்கு உத்தேசித்த செயல்களுக்காக, சட்டப்படியான பாதுகாப்பை அளிக்கிறது. இந்தப் பிரிவு நல்லெண்ணத்துடன் செய்யப்படும் செயல்களுக்கு மட்டுமல்லாமல் நல்லெண்ணத்துடன் செய்வதற்கு உத்தேசிக்கப்படும் செயல் களுக்கும்கூடச் சட்டப்படியான பாதுகாப்பை அளிக்கிறது. இந்தப் பிரிவு, கூட்டுறவுச் சட்டக் குழுவினர் தயாரித்த மாதிரிக் கூட்டுறவுச் சங்க மசோதாவின் பகுதி 120-ஐத் தழுவி இருக்கிறது. ஒரு செயல் நல்லெண்ணத்துடன் செய்யப்படவில்லை என்பது ஒரு நீதிமன்றத்தில்தான் நிரூபிக்கப்படவேண்டும். ஒரு செயல் மோசடியாகவும் அல்லது கெட்ட எண்ணத்துடனும் செய்யப் படாமலிருக்கிறவரை அதாவது சரியில்லாத நோக்கத்துடன் செய்யப்படாமலிருக்கும்வரை இந்தப் பிரிவின்கீழ் அத்தகைய செயலுக்குப் பாதுகாப்பு கொடுக்கப்படும்.

**10. கூட்டுறவுச் சட்டங்களில் தோன்றும் ஆதாரக் குறிப்புகள் (References) 1961ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் ஆதாரக் குறிப்புகளாகக் கருதப்படுதல் (Construction of references to Co-op. Societies Act in Enactments) (பிரிவு 118).**

1912ஆம் வருடத்தியக் கூட்டுறவுச் சங்கச் சட்டம் அல்லது 1932ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டம் அல்லது 1951ஆம் வருடத்திய திருவாங்கூர்-கொச்சி கூட்டுறவுச் சங்கச் சட்டம் இச் சட்டங்களுக்கான எல்லா ஆதாரக் குறிப்புகள் இந்தியாவில் எந்த ஆணையாளராலும் செய்யப்பட்ட எந்தச் சட்டத்திலும் கூறப்பட்டு சென்னை மாநிலத்தில் தற்போது அமலில் இருந்தால் அவை சென்னை மாநிலத்திற்குப் பொறுத்த வரை 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் அதிகாரக் குறிப்பு களாகக் கருதப்பட வேண்டும்.

**11. விதிகளைச் செய்வதற்கு அரசாங்கத்தின் அதிகாரம் (Power of Govt. to make Rules) (பிரிவு 119).**

அரசாங்கம் சென்னை மாநிலம் முழுமைக்கும் அல்லது அதன் எந்தப் பகுதிக்காகவும் அல்லது எந்தச் சங்கத்திற்காகவும் அல்லது எத்தகைய சங்கங்களின் வகைக்காகவும் சட்டத்தின் எல்லா நோக்கங்களையும் அல்லது எந்த நோக்கத்தையும் நிறைவேற்றும் பொருட்டு விதிகள் செய்யலாம் [பிரிவு 119 (1)]. இது விதிகளைச் செய்வது அரசாங்கத்திற்குள்ள ஒரு பொதுவான அதிகாரம்.

பொதுப் பகுதிகளின் சட்டத்தின் (General Clauses Act) பிரிவு 21-ன்படி 'அரசாங்கத்தின் எந்தச் சட்டத்திலும் விதிகளை வெளியிடுவதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டால், அந்த அதிகாரத்தில் அதே முறையிலும் அதே ஒப்புதலுக்குமுட்பட்டும் அவ் விதிகளுக்குச் சேர்ப்பதற்கும், அவற்றைத் திருத்துவதற்கும், மாற்றுவதற்கும், எடுத்துவிடுவதற்கும் நிபந்தனைகளுக்குட்பட்டு கையாளப்பட வேண்டிய அதிகாரமும் அடங்கியிருக்கிறது'.

குறிப்பாகவும், விதிகளைச் செய்வதற்குண்டான பொதுவான அதிகாரத்திற்கு விரோதமில்லாமலும் அரசாங்கத்தால் வகுக்கப் பட்ட அத்தகைய விதிகள் கீழ்க்கண்டவைகளை நிருணயிக்கலாம் [பிரிவு 119 (2)]. இந்த உட்பிரிவு விதிகளில் வகுக்கப்பட வேண்டிய பல்வேறு செய்திகளைக் குறிப்பிடுகிறது.

(அ) ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்காக விண்ணப்பம் செய்வதில் கையாளப்பட வேண்டிய நிபந்தனைகளையும் விண்ணப் பத்திற்காக பயன்பட வேண்டிய நமூனுக்களையும் அத்தகைய விண்ணப்பங்கள் செய்வதில் பின்பற்றப்பட வேண்டிய நடைமுறை களையும் நிருணயிக்கலாம் (விதிகள் 3, 4, 5, 6-ஐப் பார்க்கவும்).

(ஆ) பிரிவு 5-ன் சரத்துகளுக்குட்பட்டு சங்கங்கள் தம் பொறுப்பை (Liability) மாற்றும்பொழுது கையாள வேண்டிய நடைமுறையை நிருணயிக்கலாம் (விதி 8).

(இ) ஒரு சங்கம் எந்தெந்த பொருள்களைக் குறித்து உப-விதிகள் செய்யலாம் அல்லது செய்ய வேண்டுமென்பதையும் (விதி 4), உப-விதிகளைச் செய்வதற்கும், மாற்றுவதற்கும், எடுத்து விடுவதற்கும் கையாளவேண்டிய நடைமுறைகளையும், அவ்வாறு உப-விதிகளைச் செய்வதற்கும் மாற்றுவதற்கும் அல்லது எடுத்து விடுவதற்கும் முன்பு பூர்த்தி செய்யவேண்டிய நிபந்தனைகளையும் நிருணயிக்கலாம் (விதிகள் 4, 7, 9).

(ஈ) ஒரு சங்கத்தில் உறுப்பினராகச் சேருவதற்கு விண்ணப்பம் செய்யும் நபர்கள் நிறைவேற்ற வேண்டிய நிபந்தனைகளை நிருணயிப்பதற்கும், உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப் பதற்கும், சேர்த்துக் கொள்வதற்கும் ஏற்பாடு செய்யலாம் (விதிகள் 17, 18, 19, 20, 21, 25).

(உ) உறுப்பினர் உரிமையைக் கையாளுவதற்கு முன்பு செலுத்தப்பட வேண்டிய தொகைகளையும், உறுப்பினர் பெற வேண்டிய நலன்களையும் ஏற்பாடு செய்யலாம் (விதி 22, 23).

(ஊ) பங்குகள் மூலமாகவும் கடனீட்டுப் பத்திரங்கள் மூலமாகவும் அல்லது வேறு விதமாகவும் நிதிகளைத் திரட்டும் முறைகளை ஒழுங்குபடுத்தலாம்.

(எ) ஒரு நிதி வங்கியின் நடைமுறையில் அவ்வங்கியின் உறுப்பினர்களில் எத்தனை விகிதப்படி தனி நபர் உறுப்பினர்கள் சங்க உறுப்பினர்களுக்கு இருக்க வேண்டுமென்பதையும், அவ்வங்கியின் பேரவை அமைப்பிலும் அல்லது அதன் நிருவாகக் குழு அமைப்பிலும் எந்த விகிதப்படி தனி நபர்கள் நிற்க வேண்டு மென்பதையும், அவ்வங்கியின் நிருவாகக் குழு உறுப்பினர்களின் எண்ணிக்கையின் உச்ச வரம்புபற்றியும் நிருணயிக்கலாம் (விதி 34).

(ஏ) உறுப்பினர்களின் பேரவைக் கூட்டங்களுக்காகவும் அத்தகைய கூட்டங்களில் பின்பற்றப்படவேண்டிய நடைமுறை களுக்காகவும் அத்தகைய கூட்டங்களில் கையாளப் படவேண்டிய அதிகாரங்களுக்காகவும் ஏற்பாடு செய்யலாம் (விதி 209, 230).

(ஐ) நிருவாகக் குழுவின் உறுப்பினர்களையும் இதர அலுவலர்களையும் (ஊதியம் பெற்ற அலுவலர் அல்லாதவர்கள்) அமர்த்துவதற்காகவும், கண்காணிப்பு செய்வதற்காகவும், விலக்கு வதற்காகவும், நிருவாகக் குழுக் கூட்டங்களில் கையாளப்பட வேண்டிய நடைமுறைக்காகவும், நிருவாக் குழுவாலும் இதர அலுவலர்களாலும் செய்யப்படவேண்டிய கடமைகளுக்காகவும், அவர்கள் கையாளக்கூடிய அதிகாரங்களுக்காகவும் ஏற்பாடு செய்யலாம் (விதி 31, 32, 33, 36, 39, 40).

(ஒ) தன் நிருவாகக் குழுவிற்கு ஒரு தவணை தவறிய உறுப்பினரை உறுப்பினராக அல்லது வேறு எந்தச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு உறுப்பினராக அமர்த்துவதைத் தடை செய்யவும் அத்தகைய நபர் சங்கத்தின் உறுப்பினர் உரிமையைப் பயன்படுத்தவும் அல்லது வேறு சங்கத்தில் பிரதிநிதியாக இருந்து வாக்களிப்பு செய்யவும் தடை செய்யக்கூடும் (விதி 20, 21).

(ஓ) ஒரு சங்கம் வைக்க வேண்டிய கணக்குகளையும் ஏடுகளையும் நிருணயிக்கலாம் (விதிகளின் அத்தியாயம் III விதிகள் 13, 14).

(ஔ) ஒரு சங்கத்தின் பொறுப்புகளைக் காட்டும் ஐந் தொகைக் குறிப்பைக் கால முறையாகப் பிரசுரிப்பதற்காக ஏற்பாடு செய்யலாம் [விதி 16, 54, ( 2 )].

(க) பதிவாளருக்கு ஒரு சங்கத்தால் அனுப்பப்படவேண்டிய அறிக்கைகளை நிருணயித்து அத்தகைய அறிக்கைகள் எந்த

நபர்களாலும் எந்த நமூனுவிலும் அனுப்பட வேண்டுமென்பதையும் அப்படி அனுப்பத் தவறிய சூழ்நிலைகளில் அத்தகைய அறிக்கையைத் தயார் செய்வதற்கான செலவுகளைச் சங்கத்தின் மீது விதிப்பதையும் ஏற்பாடு செய்யலாம் (விதி 16).

(ங) சங்க ஏடுகளின் பதிவுகள் நகலை எந்த நபர்கள் எந்த நமூனுவில் சான்று செய்ய வேண்டுமென்பதையும் அத்தகைய நகல்களை வழங்குவதற்காக விதிக்கப்பட வேண்டிய கட்டணங்களையும் ஏற்பாடு செய்யலாம் (விதி 15).

(ச) உறுப்பினர்களின் பதிவு ஏட்டை (Register of Members) வைப்பதற்காகவும், சங்கத்தின் பொறுப்பு பங்குகளால் வரையறுக்கப்பட்டிருந்தால் ஒரு பங்குகள் பதிவு ஏட்டை வைப்பதற்காகவும் ஏற்பாடு செய்யலாம் (விதி 13).

(ஞ) (i) தகராறுகளை முடிவு செய்வதற்கு ஒரு மத்தியஸ்தர் அல்லது மத்தியஸ்தர்களை அமர்த்த ஏற்பாடு செய்யலாம்.

(ii) பதிவாளர் முன்பும் மத்தியஸ்தர்கள் முன்பும், அல்லது தகராறுகளை முடிவு செய்யும் இதர நபர்கள் முன்பும் நடவடிக்கைகளில் கையாளப்பட வேண்டிய நடைமுறையை நிருணயிக்கலாம். இதில் தகராறுக்குண்டான ஒரு கட்சியினர் வயது வராதவராகவோ அல்லது மனநோயளராகவோ அல்லது நலிந்த புத்தி உள்ளவராகவோ இருந்துதன் நலன்களைப் பாதுகாப்பதற்குச் சக்தியற்றவராக இருந்தால், அத்தகையவருக்கு ஒரு காப்பாளரை (Guardian) அமர்த்துவதும் இதில் அடங்கி இருக்கிறது (விதிகளின் அத்தியாயம் VIII).

(iii) அத்தகைய நடவடிக்கைகளில் ஏற்படும் செலவுகளை விதிக்கலாம் (விதிகளின் அத்தியாயம் VIII).

(iv) அத்தகைய நடவடிக்கைகளில் செய்யப்பட்ட முடிவுகளை அல்லது தீர்ப்புகளை நிறைவேற்றுதல் செய்யலாம் (விதிகளின் அத்தியாயம் VIII).

(ட) உறுப்பினர்கள் தங்கள் பொறுப்பைத் திரும்பப் பெற்றுக் கொள்வதற்காகவும், அவ்வாறு திரும்பப் பெற்றுக் கொள்ளும் உறுப்பினர்களுக்குச் செலுத்தப்பட வேண்டிய தொகைகளுக்காகவும் முன்னுள் உறுப்பினர்களின் பொறுப்புகளுக்காகவும், அல்லது இறந்துபோன உறுப்பினர்களின் சொத்துகளின் பொறுபுப்களுக்காகவும் ஏற்பாடு செய்யலாம் (விதி 23).

(ண) சங்கங்கள் உறுப்பினர்கள் அல்லாத நபர்களுடன் வியாபாரம் செய்வதற்குண்டான தடைகளையும் கட்டுப்பாடு களையும் நிருணயிக்கலாம் (விதி 49).

(த) ஓர் இறந்துபோன உறுப்பினரின் அக்கறையையும் மதிப்பையும் நிருணயிக்கும் வகைக்காகவும், அத்தகைய அக்கறை யைச் செலுத்துவதற்கு அல்லது மாற்றுவதற்கு ஒரு நபரை நியமிப்பதற்காகவும் ஏற்பாடு செய்யலாம் (விதி 22).

(ந) கடன்களுக்காக விண்ணப்பம் செய்யும் உறுப்பினர்கள் செலுத்த வேண்டிய பணத் தொகையையும் அவர்கள் நிறை வேற்ற வேண்டிய நிபந்தனைகளையும், அத்தகைய கடன்கள் எந்தக் காலங்களுக்காக விண்ணப்பம் செய்யப்படலாம் என்பதையும், ஒரு தனி உறுப்பினருக்கு எவ்வளவு கடன் தொகை கொடுக்க லாம் என்பதையும் நிருணயிக்கலாம் (விதி 43).

(ப) சேமிப்பு நிதி அமைப்பதற்காகவும் வைப்பதற்காகவும் அத்தகைய நிதி எந்த நோக்கங்களுக்குப் பயன்படுத்தப்படலாம் என்பதையும் ஒரு சங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ் நிதிகளை முதலீடு செய்வதற்காகவும் ஏற்பாடு செய்யலாம் (விதி 44, 47, 48). பிரிவு 119 (2)-ன் உட்பகுதி (U)-ல் 'சேம நிதிகள்' என்ற சொற் களுக்குப் பிறகு 'பிற நிதிகள்' என்ற சொற்களைச் சேர்த்துக் கொள்வதற்காக, 1971ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (இரண்டாவது திருத்தம்) சட்டத்தால் சட்டத் திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது. இதன் நோக்கம், சேம நிதியைத் தவிர சட்ட விதிகளின் கீழ் அமைக்கப்படும் சங்கங்களில் பிற நிதிகளின் அமைப்பையும் நிருவாகத்தையும்கூட, அதாவது விதி 46 (1) (அ)-ல் ஏற்படுத்தப்பட்ட 'கூட்டுறவு வளர்ச்சி நிதி சட்டத்தின் நோக்க எல்லைக்குள்ளும், விதிகளின் நோக்க எல்லைக் குள்ளும் கொண்டு வருவதே என்பது தெளிவு.

(ம) ஒரு சங்கம் தன் உறுப்பினர்களின் எண்ணிக்கையை எந்த அளவுக்கு வரையறுக்கலாம் என்பதை நிருணயிக்கலாம்.

(ய) ஒரு வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தின் உறுப்பினர்களுக்கு இலாபங்கள் எந்த நிபந்தனைகளுக்கு உட் பட்டு விநியோகம் செய்யலாம் என்பதையும் சங்கம் விநியோகம் செய்யும் இலாப ஈவு விகிதத்தின் உச்ச வரம்பையும் நிருணயிக் கலாம் (விதி 46).

(ர) பிரிவு 86-ன் கீழ் அமர்த்தப்பட்ட ஒரு கலைப்பு அலு வலர் கையாள வேண்டிய நடைமுறையை நிருணயிப்பதற்காகவும் அந்தச் சங்கத்தில் ஏற்படும் உபரி சொத்துகளை முடிவு செய்வதற்

காகவும் மற்றும் ஏற்பாடு செய்யலாம். (விதிகளின் அத்தியாயம் IX-விதி 58 மற்றும் 48).

(ல) எல்லா மேல்முறையீடுகளைச் சமர்ப்பிப்பதற்கும் முடிவு செய்வதற்கும் கையாள வேண்டிய நடைமுறையையும் புனர் ஆய்வுக்காகவும், மறுசீராய்வுக்காகவும், விண்ணப்பம் செய்வதில் கையாள வேண்டிய நடைமுறையையும், அத்தகைய முறையீடுகளைக் குறித்தும் விண்ணப்பங்களைக் குறித்தும் செலுத்த வேண்டிய கட்டணங்களையும் நிருணயிக்கலாம் (விதிகளின் அத்தியாயம்-விதி 91, 92, 93).

(வ) சங்க நிதிகளுக்கு அரசாங்கம் அளிக்கும் உதவிக்கான காலவரையையும் நிபந்தனைகளையும் நிருணயித்து கடனீட்டுப் பத்திரங்களின் பேரில் வட்டியையும், அல்லது சங்கங்கள் வாங்கும் வைப்புத் தொகைகளின் பேரில் வட்டியையும் செலுத்த அரசாங்கமளிக்கும் உத்தரவாதத்தின் நிபந்தனைகளையும் நிருணயிக்கலாம்.

(அஅ) சட்டத்தின்கீழ் ஜப்தி செய்யப்பட்ட சொத்தின் பாதுகாப்பாக ஏற்பாடு செய்யலாம் [விதி 62 (iii)-ம் 83-ம்].

(ஆஆ) நிறைவேற்றுக் கட்டளையை (Process) வெளியிடுவதற்காகவும் அவைகளைச் சேர்ப்பதற்காகவும் அவைகளைச் சேர்ப்பித்ததை மெய்ப்பிப்பதற்காகவும் ஏற்பாடு செய்யலாம் (விதி 80-ம் 97-ம்).

(இஇ) பதிவாளர் செயலகத்தில் சான்றிடப்பட்ட பத்திரங்களின் நகல்களைக் கொடுப்பதற்காகக் கட்டணங்களை விதிப்பதற்காக ஏற்பாடு செய்யலாம் (விதி 100).

(ஈஈ) பதிவாளரால் அல்லது அவரால் அதிகாரமளிக்கப்பட்ட எந்த நபரால் செய்யப்பட்ட எந்த ஜப்திக்குமெதிராகச் செய்யப்பட்ட கோரிக்கைகளையும் மறுப்புகளையும் ஆராய்வதற்கு ஏற்பாடு செய்யலாம்.

(உஉ) பிரிவு 71-ன் கீழ் வரும் செய்திகளில் அரசாங்கத்திற்கு எதிராகத் தீர்ப்பு அளிக்கப்பட்ட செலவுகளை வசூல் செய்வதற்காக ஏற்பாடு செய்யலாம்.

(ஊஊ) பிரிவு 91-ன் கீழ் சொத்துகளை ஜப்தி செய்வதற்காகவும் விற்பனை செய்வதற்காகவும் நடைமுறையை நிருணயிக்கலாம் [விதிகளில் அத்தியாயம் (X)].

(எஎ) தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றத்தின் வேலைகளை முடிப்பதற்குப் பின்பற்ற வேண்டிய நடைமுறையை நிருணயிக்கலாம் (விதி 91).

(ஏஏ) விதிகளால் நிருணயிக்கப்பட வேண்டுமென்று சட்டத்தில் வெளிப்படையாக அனுமதிக்கப்பட்ட அல்லது கோரப்பட்ட எல்லாப் பொருள்களுக்கும் ஏற்பாடு செய்யலாம். இது சட்டத்தின் பல சரத்து களின் கீழ் செய்திகளை முடிவு செய்வதற்காக விதிகளைச் செய்வதற்கு ஒரு பொதுவான சரத்து. இந்தப் பிரிவு விதிகள் எந்தெந்த சில செயல்களைப் பற்றிச் செய்யப்படுவது விரும்பத்தக்கது என்பதை எடுத்துக்காட்டுக்காகக் கூறுகிறது. அரசாங்கத்தால் வகுக்கப்படும் விதிகள் எந்தெந்தப் பொருள்களைப் பற்றி இருக்கலாம் என்ற ஒரு பட்டியலை இந்தப் பிரிவு கொடுக்கவில்லை.

(ஐஐ) சட்டத்தின் கீழ் செய்யப்படும் ஒவ்வொரு விதியும் அரசாங்க அரசிதழில் (Fort St. George Gazette) பிரசுரிக்கப்பட வேண்டும். அப்படிப் பிரசுரிக்கப்பட்ட விதி ஒரு குறிப்பிட்ட தினத்தில் அமலுக்கு வருமென்று குறிப்பிடப்பட்டாலொழிய, அந்த விதி பிரசுரிக்கப் பட்ட தேதியன்று அமலுக்கு வரும் [விதி 119 (3)]. தற்போதுள்ள விதிகள் அரசாங்க உத்தரவின் மூலம் 2-10-1963ஆம் தேதியன்று அமலுக்கு வந்தன.

சட்டத்தின் கீழ் அரசாங்கத்தால் செய்யப்பட்ட ஒவ்வொரு விதியும் சட்ட மன்றத்தின் இரண்டு அவைகளின் முன்பு வைக்கப் படவேண்டும். அவ்வாறு விதிகள் வைக்கப்பட்ட சட்டமன்றக் கூட்டம் முடிவடைவதற்கு முன்பும் அல்லது அடுத்த கூட்டத் திற்கு முன்பும், சட்டமன்ற இரண்டு அவைகளிலும் எந்தச் சட்டத் திருத்தமும் ஒப்புக்கொள்ளப்பட்டாலும் அல்லது ஒரு குறிப்பிட்ட விதி தேவை இல்லை என்று சட்டமன்றத்தால் கருதப்பட்டாலும் விதி திருத்தப்பட்டபடி அமலுக்கு வரும்; அல்லது சூழ்நிலைக் கேற்ப விதி எடுக்கப்பட்டுவிடும். எனினும், விதிகள் அவ்வாறு திருத்தம் செய்யப்படுவதோ அல்லது எடுக்கப்படுவதோ அந்த விதியின் கீழ் முன்னதாகவே செய்யப்பட்ட எந்த நடவடிக்கையின் சட்டப்படி செல்லக்கூடிய தன்மையைப் பாதிக்காது [பிரிவு 119 (4)]. எனவே, இந்தப் பிரிவு அரசாங்கத்தால் அவ்வப்போது சட்டத்தின்கீழ் வகுக்கப்பட்ட விதிகளின் மீது தன் கருத்தைத் தெரிவிக்கச் சட்டமன்றத்திற்கு ஒரு வாய்ப்பைக் கொடுக்கிறது.

விதி 103-ன்கீழ், அரசாங்கம் ஒரு பொது அல்லது சிறப்பு உத்தரவின் மூலமும் அரசாங்கத்தால் தேவை என்று கருதப்பட்ட

நிபந்தனைகளுக்குட்பட்டும் எந்தச் சங்கத்தையும் அல்லது சங்க வகைகளையும் எந்த விதியின் சரத்துகளிலிருந்தும் விலக்கவும் அல்லது அத்தகைய சரத்து எந்தச் சங்கத்திற்கும் அல்லது சங்க வகைக்கும் அரசாங்கம் கட்டளையில் குறிப்பிடும் திருத்தங் களுக்குட்பட்டு பிரயோகிக்கப்பட வேண்டுமென்று கட்டளையிட லாம். இந்த விதியின் நோக்கத்திற்காகச் சங்கம் என்பது ஒவ்வொரு பதிவு செய்யப்படாத சங்கத்தையும் சேர்த்துக் குறிக்கும்.

1971ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (இரண்டாவது திருத்த) சட்டத்தினுல், பிரிவு 119 (A) என்ற ஒரு புதிய பிரிவு சேர்க்கப்பட்டிருக்கிறது. கூட்டுறவு உற்பத்தித் திட்டங்களையும் இதர கூட்டுறவுத் திட்டங்களையும் செயல்படுத்து வதற்காகச் சங்கங்களுக்குக் கட்டளைகளை வெளியிடுவதற்கு மகாராஷ்டிர மாநிலக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் இருப்பது போன்று இந்தப் புதிய பிரிவு பதிவாளருக்கு அதிகாரம் அளிக்கிறது. பொது நலத்தை முன்னிட்டும் கூட்டுறவு உற்பத்தித் திட்டத்தையும் இதர வளர்ச்சித் திட்டங்களையும் ஒழுங்காகச் செயல்படுத்துவதை நிறைவேற்றும் செயலுக்காகவும் அல்லது சங்கங்களின் தொழில் சரிவர நிருவாகம் செய்யப்படுவதை உறுதிப் படுத்துவதற்காகவும் அல்லது ஒரு சங்கத்தின் அலுவல்கள், உறுப்பினர்கள், வைப்புத்தொகை செலுத்தியவர்கள், கடனுளர் கள் இவர்களின் நலன்களைப் பாதிக்கும் வகையில் நடத்தப் படுவதைத் தடுப்பதற்காகவும் பதிவாளர் தேவை என்று கருதினுல் தொடர்பான சங்கங்களுக்கு அவர் தக்க கட்டளைகளை வெளியிட லாம். அத்தகைய கட்டளைகளை அத்தகைய சங்கங்கள் நிறை வேற்றக் கடமைப்பட்டிருக்கின்றன.

சட்டம் என்பது சங்கங்களின் செயல்பாட்டிற்காக முக்கிய மான கொள்கைகளைத் தான் வகுக்கிறது; ஆனுல், பலவகைப்பட்ட சங்கங்களின் தேவைகளைக் குறித்தும் கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சியில் அவ்வப்போது நேரிடும் மாறுதல் நிலைமைகளைக் குறித்தும் விவரங்கள் விதிகளில் பூர்த்தி செய்யப்படுகின்றன. சட்டத்தின் திருத்தம் அங்கீகாரத்திற்குச் சட்ட மன்றங்களுக்குப் போகவேண்டும். ஆனுல், விதிகளை அரசாங்கமே எளிதாகத் திருத்தக் கூடும். விதியை அரசாங்கம் ஒரு முறை நிருணயித்து விட்டால் அது உடனே அமலுக்கு வருகிறது. 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் பிரிவு 65 (3)-ல் நிருணயித்தபடி, விதிகள் அமலுக்கு வருவதற்கு முன்னுல் பிரசுரம் செய்யப்படத் தேவையில்லை. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் கீழ், முன்ன

தாகப் பிரசுரம் செய்வதை எடுத்துவிட்டுத் தேவைப்படும் பொழுதெல்லாம் அரசாங்கம் ஒரு விதியைச் செய்யலாம். அவ்வாறு செய்யப்பட்ட விதி சட்டமன்றத்தின் முன்னால் வைக்கப் பட வேண்டும் [பிரிவு 119 (4)].

விதிகள் செய்யும் அதிகாரத்தின் கீழ் அரசாங்கம் வகுக்கும் விதிகள் சட்டத்துடனும் ஒத்திருக்க வேண்டும். ஏனென்றால், சட்டத்தின் நோக்கங்களையும் செயல்களையும் நிறைவேற்றவே விதிகள் முக்கியமாகச் செயல்படுகின்றன. 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 65 (4) பிரிவு, விதிகள் அந்தச் சட்டத்தில் இயற்றப் பட்டது போலவே அமல் செய்யப்பட வேண்டுமென்று குறிப் பாகக் கூறியது. அத்தகைய கூற்று 1961ஆம் வருடத்தியச் சட்டத்தில் காணப்படாவிட்டாலும், (ஒருவேளை அத்தகைய கூற்று தேவையற்றது போலும்) விதிகள் சட்டத்தைப் போலவே சக்தி உடையவைகளாக இருக்கின்றன. ஏனென்றால், விதிகளும் கூட சட்ட மன்றத்தின் இரண்டு அவைகளுக்கும் முன்னால் வைக்கப்பட்டு அவைகளைத் திருத்தவோ அவைகளை எடுத்து விடவோ சட்டமன்றத்திற்கு அதிகாரம் உண்டு,

விதிகள் சட்டத்தைப் போலவே கட்டுப்படுத்தும் சக்தி வாய்ந்தவை. விதிகளுடன் சேர்ந்து சட்டம் கூட்டுறவுச் சட்டத் திற்கு ஓர் அடித்தளமாக இயங்குகின்றது. சட்டத்திலுள்ள சரத்துகள் எவ்வாறு கையாளப்பட்டு நிறைவேற்றப்படு கின்றனவோ அவ்வாறே விதிகளும், எந்தச் சூழ்நிலையிலாவது சட்டத்தின் சரத்துகளின் உட்பொருளுக்கும் நோக்கத்திற்கும் அவை முரண்பாடாகக் காணப்பட்டாலொழிய நிறைவேற்றப் படவேண்டும். அந்தச் சூழ்நிலைகளில், சட்டத்தின் பிரிவுகளைக் குறித்தும், சட்டத்தின் பிரிவுகளின் நோக்கங்களுக்கு ஏற்பவும், விதிகள் பொருள் செய்யப்பட வேண்டும். அதாவது அத்தகைய சூழ்நிலைகளில், விதிகளைவிட சட்டம் தான் முன் நிகழ்வு (Precedence) பெற்றது.

**சட்டத்தின்கீழ் அரசினரின் அதிகாரங்கள் :** 1961ஆம் வருடத் தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் சட்டமாக அமலுக்கு வருவதற்கு முன்பு அது சட்ட மன்றத்தின் இரண்டு அவைகளால் நிறைவேற்றப்பட்டு இந்தியக் குடியரசுத் தலைவரின் ஒப்புதலை 1962ஆம் ஆண்டு மார்ச்சு 4ஆம் தேதியில் பெற்றது. முதலில் அது 1962ஆம் ஆண்டு மார்ச்சு 14ஆம் தேதியில் அரசிதழில் (Fort St. George Gezette) பிரசுரிக்கப்பட்டது. பிரிவு 1 (3)-ன்கீழ், அரசாங்கம் அறிவிப்பின் மூலம் நிருணயிக்கும் ஒரு தேதியன்று சட்டம் அமலுக்கு வரவேண்டும். எனவே, சட்டம்

அமலுக்கு வரவேண்டிய தேதியை அரசாங்கம் முடிவு செய்ய வேண்டும். அவ்வாறு முடிவு செய்வதற்கு அரசாங்கத்திற்குத் தான் அதிகாரம் உண்டு.

9-9-1963 நாளிட்ட அரசாங்க உத்தரவுப்படிச் சட்டம் அமலுக்கு வரும் தேதியை 2-10-1963 ஆக நிருணயித்திருந்தார்கள். அவ்வண்ணமே சட்டம் 2-10-1963 தேதியிலிருந்து அமலில் இருக்கிறது. அதே மாதிரியாக சட்டத்தின் கீழ் நிருணயிக்கப்பட்ட விதிகள் 4-9-1963 தேதிய அரசிதழில் (Fort St. George Gazette) பிரிவு 119 (3)-ன் கீழ் எதிர்பார்க்கப்பட்டபடி பிரசுரிக்கப்பட்டன. 9-9-1963 தேதிய அரசாங்க உத்தரவில் சட்டமும், விதிகளும் அமலுக்கு வரவேண்டிய தேதியை 2-10-1963ஆக அரசாங்கம் நிருணயித்திருக்கிறது. எனவே சட்டமும், விதிகளும் 2-10-1963 தேதியிலிருந்து அமலில் உள்ளன.

கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகத்தை அரசாங்கம் ஓர் அமைச்சர் மூலம் அரசாங்க மட்டத்தில் நடத்துகிறது. ஆனால், கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகம் முக்கியமாகப் பதிவாளர் மூலமும் கூட்டுறவுத் துறை அலுவலர்கள் மூலமும் நடத்தப்பட்டு வருகிறது. தேவையான அதிகாரம் பதிவாளருக்கும் அவருடைய அலுவலர்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. குறிப்பிட்ட பொருள்களில் சட்டத்தின் கீழ் அரசாங்கம் செயல்படலாம். அப்போது இந்த அதிகாரங்கள் அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மேல் முறையீடு அதிகாரங்கள் மட்டுமன்றி சட்டத்தின் கீழ் அரசாங்கம் சில பணிகளையும் மேற்கொள்ளலாம். சட்டத்தின் கீழும் விதிகளின் கீழும் அளிக்கப்பட்ட அரசாங்கத்தின் அதிகாரங்கள் சுருக்கமாக கீழே தரப்பட்டுள்ளன:-

(i) சட்டமும், விதிகளும் அமலுக்கு வரும் தேதியை நிருணயிக்கும் அலுவலகம் [பிரிவு 1 ( 2 )-ம்] பிரிவு 119 ( 3 )-ம்].

(ii) அரசாங்கம் சென்னை மாநிலத்திற்காகவும் அல்லது அந்த மாநிலத்தின் எந்தப் பகுதிக்காகவும் ஒரு நபரைக் கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளராக அமர்த்தலாம். மேலும், வேறு எந்த நபருக்கும் சட்டத்தின் கீழ் பதிவாளருடைய எல்லா அதிகாரங்களையும் அல்லது எந்த அதிகாரத்தையும் அரசாங்கம் வழங்கலாம் [பிரிவு ( 3 )].

(iii) அரசாங்கம் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராவதற்கு உரிமை பெற்றிருக்கிறது [பிரிவு 17 (1) (இ)].

மேலும், ஒரு தனி உத்தரவின் மூலம் எந்த நிறுவனத்தையும் அல்லது நபர்களையும், அவர்கள் பதிவு செய்யப்பட்டிருந்தாலும் செய்யப்படாவிட்டாலும் அல்லது சட்டத்தால் நிறுவப்பட்டாலும் அல்லது அவ்வாறு நிறுவப்படாவிட்டாலும், ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராவதற்கு அனுமதி அளிக்கலாம் [பிரிவு 17 (1) (ஈ)].

(iv) அரசாங்கம் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராக இருந்தால், அரசாங்கத்தால் அந்தச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு நியமிக்கப்பட்ட ஒவ்வொரு நபருக்கும் ஒவ்வொரு வாக்கு (Vote) உண்டு [பிரிவு 21 (1) (ஆ)-ன் (இ) விலக்குக் கூறு].

(v) சங்கத்தின் உப-விதிகளில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தால், அரசாங்கம் நிருவாகக் குழுவின் எல்லா உறுப்பினர்களையும் அல்லது எந்த உறுப்பினரையும் உப-விதிகளில் குறிக்கப்பட்ட கால வரைக்கு நியமிக்கலாம். ஒரு சங்கத்தில் அரசாங்கம் பங்குகள் எடுத்திருந்தால் அந்தச் சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு 3-க்கு மேற்படாத நபர்களை அல்லது ஒரு நிருவாகக் குழு உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் 1/3 நபர்களை இதில் எது குறைவோ அந்த உறுப்பினர்களை, அரசாங்கம் நியமிக்கலாம். எந்தச் சமயத்திலும் அரசாங்கம் அவ்வாறு நியமிக்கப்பட்ட நபர் அல்லது நபர்களை திரும்பப் பெற்று அதனால் எழும் காலி இடங்களுக்குப் புதிய நபர்களை நியமிக்கலாம் [பிரிவு 27 (1)-ன் விலக்குக் கூறும் பிரிவு 27 (2)-ம்].

(vi) கூட்டுறவுச் சங்கங்கள் முத்திரை வரியைச் செலுத்துவதிலிருந்தும் [பிரிவு 43 (அ)], பதிவுக் கட்டணங்களைச் செலுத்துவதிலிருந்தும் விலக்குவதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு [பிரிவு 43 (ஆ)].

(vii) ஒரு சங்கத்தின் பங்கு மூலதனத்திற்கு அரசாங்கம் நேரிடையாகப் பணம் வழங்கலாம் (பிரிவு 44). இது அரசாங்கம் ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்படுவதற்குச் செய்யப்பட்ட சட்டச் சரத்தைப் பின்பற்றுகிறது [பிரிவு 17 (1) (இ)].

(viii) முக்கிய மாநிலக் கூட்டாளித்துவ நிதி அல்லது மாநிலத் துணைக் கூட்டாளித்துவ நிதியிலிருக்கும் பணத்திலிருந்து

ஒரு சங்கத்தில் பங்குகளை வாங்குவதற்காக அரசாங்கத்தின் அங்கீகாரம் தேவை (பிரிவு 48).

(xi) பிரிவு 56-ல் குறிக்கப்பட்ட பல்வேறு வித உதவிகளை அரசாங்கம் அளிக்கலாம்.

(x) அசையாச் சொத்தின் அடைமானத்தின்பேரில் ஒரு சங்கம் அல்லது சங்க வகையால் கடன் அளிக்கப்படுவதை அரசாங்கம் தடை செய்யலாம், அல்லது கட்டுப்படுத்தலாம் [பிரிவு 58 (3)].

(xi) எந்தச் சங்கம் அல்லது சங்க வகையால் எந்தக் கூட்டுறவு ஆண்டிற்கும் தணிக்கைக்காகச் செலுத்தப்பட வேண்டிய கட்டணம் முழுவதையும் அல்லது அக் கட்டணத்தின் எந்தப் பாகத்தையும் அரசாங்கம் விலக்கு செய்யலாம் [பிரிவு 64 (6)].

(xii) கூட்டுப் பண்ணைச் சங்கங்களைக் குறித்து, சட்டத்தின் அத்தியாயம் 10-ன் கீழ், தக்க அலுவலரின் வேலைகளைச் செய்வதற்கு எந்த நபருக்கும் அரசாங்கம் அதிகாரம் அளிக்கலாம் [ பிரிவு 75 (1) ].

(xiii) ஒரு கூட்டுப் பண்ணைச் சங்கத்தில் அதன் உறுப்பினர்களுடன் செய்யப்பட்ட ஒப்பந்தத்தின்பேரில் இணைக்கப்பட்ட (pooled) நிலங்களைக் குறித்து அந்த ஒப்பந்தம் முடிவடைந்த பிறகு அந்த நிலங்களை ஆர்ஜிதம் செய்ய வேண்டுமென்று அரசாங்கம் கருதினுல் அந்த நிலங்களை ஆர்ஜிதம் செய்வதற்கு அரசாங்கம் நடவடிக்கைகளை எடுக்கலாம் [ பிரிவு 81 (2) ].

(xiv) பிரிவு 81-ன்கீழ் ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலங்களுக்காகக் கொடுக்கப்பட வேண்டிய நட்ட ஈட்டுத் தொகையை நிருணயிக்க நிலச் சொந்தக்காரர்களுடன் ஓர் ஒப்பந்தம் செய்ய முடியவில்லையாலுல் அரசாங்கம் ஒரு சார் நீதிபதி தகுதிக்குக் குறையாத ஒரு நீதித் துறை அலுவலரை மத்தியஸ்தராக அமர்த்தலாம். மேலும், அத்தகைய மத்தியஸ்தருக்கு உதவி செய்ய, ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலங்களின் தன்மையைப் பற்றிய தனித் திறமை வாய்ந்த ஒரு நபரை அரசாங்கம் நியமிக்கலாம் [ பிரிவு 82 (1) ].

(xv) அரசாங்கம் தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றங்களை அமைத்து அத்தகைய மன்றங்கள் அதிகாரம் செலுத்த வேண்டிய எல்லைகளைத் தீர்மானிக்கிறது (பிரிவு 95).

(xvi) சில முடிவுகள், உத்தரவுகள் முதலியவற்றின் மீது அரசாங்கத்திற்கு மேல் முறையீடு அதிகாரங்கள் (Appellate Powers) உண்டு (பிரிவு *96*).

(xvii) முடிவுகள், உத்தரவுகள் முதலியவற்றைக் குறித்து அரசாங்கத்திற்குப் புனராய்வு அதிகாரங்கள் உண்டு. தன் புனராய்வு அதிகாரங்களைச் செலுத்துவதற்கு முன்பு அரசாங்கம் முடிவு, உத்தரவு முதலியவற்றின் ஆய்வை நிறுத்தி வைக்கலாம். புனராய்வு உத்தரவுகளின் மீது அரசாங்கம் செலவுகளைக்கூடத் தீர்ப்பு அளிக்கலாம்.

(xviii) அரசாங்கத்தின் ஒப்புதல் இல்லாமல், பதிவு செய்யப் பட்ட சங்கமல்லாத எந்த நபரும் 'கூட்டுறவு' அல்லது அதற்குச் சமமான எந்த மாநில மொழிகளிலுள்ள வார்த்தை அடங்கிய பெயரில் அல்லது தலைப்பில் வியாபாரம் செய்யவோ அல்லது தொழில் நடத்தவோ கூடாது [பிரிவு *103* (**P**)].

(xix) பதிவுக்காக நிருணயிக்கப்பட்ட நிபந்தனைகளிலிருந்து சங்கங்களை விலக்குவதற்கு அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு (பிரிவு *109*).

(xx) சட்டத்தின் சில பிரிவுகளிலிருந்து விலக்குப் பெறுவதற்காகத் தற்சார்புச் சங்கங்கள் நிறைவேற்ற வேண்டிய நிபந்தனைகளை அரசாங்கம் குறிப்பிடலாம் (பிரிவு *110*).

(xxi) அரசாங்கம் எந்தச் சங்கத்தையும் சட்டத்தின் எந்தச் சரத்துகளிலிருந்தும் விலக்கி அல்லது அத்தகைய சரத்து அத்தகைய சங்கத்திற்கு அரசாங்கத்தால் குறிக்கப்பட்ட மாறுதலுடன் பயன்படுத்தப்பட வேண்டுமென்று கட்டளையிடலாம் (பிரிவு *111*).

(xxii) விதிகளைச் செய்யும் அதிகாரம் தவிர, சட்டத்தில் அரசாங்கத்திற்குண்டான எந்த அதிகாரங்களையும் கையாள எந்த அலுவலருக்கும் அரசாங்கம் அதிகாரமளிக்கலாம் அல்லது அதிகாரங்களை ஒப்படைக்கலாம். அத்தகைய அதிகாரங்களை அரசாங்கம் திரும்பப் பெறவும் கூடச் செய்யலாம். இவ்வாறு ஒரு நபருக்கு அளிக்கப்பட்ட அதிகாரம் அரசாங்கத்தால் நிருணயிக்கப் படும் தடைகளுக்கும் நிபந்தனைகளுக்கும் உட்பட்டும் அரசாங்கத்தினுடைய கண்காணிப்புக்கும் புனராய்வுக்கும் கூட உட்பட்டிருக்கும். அவ்வாறு அதிகாரம் அளிக்கப் பட்ட அலுவலரின் செயல்களையும் அல்லது நடவடிக்கை

களையும் கண்காணிப்பதற்கும் மாற்றுவதற்கும்கூட அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு (பிரிவு 113).

(xxiii) சட்டத்தின் எல்லா நோக்கங்களையும் அல்லது எந்த நோக்கத்தையும் நிறைவேற்றுவதற்கும், குறிப்பாக பிரிவு 119-ல் குறிக்கப்பட்ட பொருள்களைப் பற்றியும் அரசாங்கம் விதிகளைச் செய்யலாம் (பிரிவு 119). இந்த அதிகாரம் முன்னரே விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது.

(xxiv) சட்டத்தின்கீழ் ஒரு விசாரணையைச் செய்யவும் அல்லது தக்க நடவடிக்கைகளை எடுக்கவும் பதிவாளருக்கு அரசாங்கம் கட்டளையிடலாம். அரசாங்கம் பதிவாளரின் நடவடிக்கைகளின் பதிவேடுகளையும்கூட வரவழைத்து அவற்றை ஆய்வு செய்து தான் சரி என்று கருதும் வகையில் உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம் (பிரிவு 120).

(xxv) சட்டத்தின் சரத்துகளை அமல் செய்வதில் எழும் இன்னல்களை நீக்குவதற்கு அரசாங்கம் எதையும் செய்யலாம். எனினும், அரசாங்கத்தின் உத்தரவுகள் சட்டமன்றத்தின் இரண்டு அவைகளுக்கும் முன்பு வைக்கப்பட்டு, அவைகளைச் சட்டமன்றம் சரி என்று கருதும் வகையில் திருத்தப்படலாம் அல்லது மாற்றப் படலாம் (பிரிவு 122).

விதிகளின் கீழ் அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் பின்வருமாறு

(i) பத்திரங்களின் சான்றிடப்பட்ட நகல்களை வழங்குவதைக் குறித்துப் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட நடைமுறையை அங்கீகரித்தல் [விதி 100 (3)].

(ii) அரசாங்கம் எந்தச் சங்கத்தையும் அல்லது சங்க வகையையும் விதிகளின் எந்தச் சரத்துகளிலிருந்தும் விலக்கவும் அல்லது அத்தகைய விதி எந்தச் சங்கத் திற்கும் அல்லது சங்க வகைக்கும் அரசாங்க உத்தரவில் குறிக்கப்பட்ட திருத்தங்களுடன் பயன்படுத்தப்பட வேண்டுமென்று கட்டளையிடலாம் (விதி 103).

**12. கட்டளையிடுவதற்குண்டான அரசாங்கத்தின் அதிகாரம் (Power of Govt. to give Directions) (பிரிவு 120).**

சங்கங்கள் சரியான முறையில் செயல்பட்டு வருவதையும் கூட்டுறவு இயக்கம் நல்ல தொழில் முறைகளில் வளர்ச்சியடைந்து வருவதையும் உறுதிப்படுத்தவதற்கான இறுதிப் பொறுப்பு

அரசாங்கத்திடம் இருக்கிறது. ஆகவே, சட்டத்தின் கீழ் பதிவாளருக்கு அவ்வப்போது கட்டளைகளையிடுவதற்கு அரசாங்கம் அதிகாரம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. சட்டத்தில் பதிவாளர் நடுநாயகமாக விளங்குகிறார்.

கூட்டுறவு இயக்கத்தை நல்ல முறையில் ஊக்குவிப்பதற்கும் வழிகாட்டுவதற்கும், கண்காணிப்பதற்கும் கட்டளையிடுவதற்கும், தேவையான எல்லா அதிகாரங்களும் பதிவாளருக்குச் சட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எனினும், எந்தச் சூழ்நிலையிலும் நடவடிக்கையெடுக்கவும் அரசாங்கத்தால் கட்டளையிடப்பட்ட விசாரணையின் முடிவைப் பற்றித் தெரிவிக்கவும் பதிவாளருக்குக் கட்டளையிடும் அதிகாரத்தைப் பிரிவு 120 அரசாங்கத்திற்குக் குறிப்பாக வழங்குகிறது [பிரிவு 120 (1)]. அத்தகைய சூழ்நிலை களில் அரசாங்கம் பதிவாளரின் அத்தகைய நடவடிக்கைகளின் பதிவேடுகளை வரவழைத்து அவைகளைப் பரிசோதித்து அரசாங்கம் தகுதி என்று கருதும் வகையில் உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம், ஆனால், அத்தகைய உத்தரவைப் பிறப்பிப்பதற்கு முன்பு அந்த உத்தரவினால் பாதிக்கப்படும் நபருக்குத் தன் விளக்கத்தையோ அல்லது மறுப்பையோ கூறுவதற்கு அரசாங்கம் ஒரு வாய்ப்பு வழங்கவேண்டும் [விதி 120 (2)]. கூட்டுறவுச் சங்கங் களின் செயல்பாட்டைக் குறித்த எந்தச் செயலிலும் பரிசோதனை செய்ய ஏற்பாடு செய்வதற்கும் சட்டத்தின்கீழ் தக்க நடவடிக்கையையெடுப்பதற்கும் அதிகப்படியான அதிகாரத்தை அரசாங்கத்திற்கு இந்தப் பிரிவு வழங்குகிறது, அரசாங்கமே பதிவாளருடைய நடவடிக்கைகளை வரவழைத்துத் தக்க முறையில் அந்த நடவடிக்கைகளை எந்த விதத்திலும் திருத்துவதற்கான அதிகாரத்தைக்கூட இந்தப் பிரிவு அரசாங்கத்திற்குக் கொடுக் கிறது.

13. எடுத்துவிடுவதும் பாதுகாப்பு அளிப்பதும் (Repeal and Savings) (பிரிவு 121).

இந்தப் பிரிவின்படி இதற்கு முந்தைய கூட்டுறவுச் சட்டம் அதாவது, 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங் களின் சட்டம் எடுக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு எடுக்கப் பட்டதால் 1961ஆம் வருடத்திய சட்டத்திற்கு முன்பும் 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் சரத்துகளை கையாண்டும் எடுக்கப்பட்ட எந்த நடவடிக்கையும் எந்த விதத்திலும் பாதிக்கப்படாது. எனவே, இந்தப் பிரிவு முந்தைய கூட்டுறவுச் சட்டத்தை எடுத்து விடுவதோடுகூட முந்தைய சட்டத்தின் கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளை 1961ஆம் வருடத்திய தற்போதுள்ள

சட்டத்தின் கீழ் எடுக்கப்பட்டவைபோல் பாதுகாக்கிறது. பிரிவு 118 இந்த நிலைமையை மேற்கொண்டு வலுப்படுத்துகிறது. எந்த அரசாங்கத்தாலும் நிறைவேற்றப்பட்டு சென்னை மாநிலத்தில் அமலிலிருக்கும் எந்தச் சட்டத்திலும் காணப்படும் முந்தைய சட்டங்களைப் பற்றிய எல்லாக் குறிப்புகளும் இந்தச் சட்டத்திற்குண்டான குறிப்புகளைப் போல் கருதப்பட வேண்டு மென்று பிரிவு 118 கூறுகிறது.

பிரிவு 121 (1)-ன் படி, 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டமும், 1961ஆம் வருடத்தியச் சட்டமும் அமலுக்கு வருவதற்கு முன்பு சென்னை அரசாங்கத் திற்குச் சேர்க்கப்பட்ட அல்லது மாற்றப்பட்ட நிலப் பரப்பில் அமலிலிருந்த அந்தச் சட்டத்திற்குச் சமமான 1951ஆம் வருடத்திய திருவாங்கூர் - கொச்சின் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் உட்பட வேறு எந்தச் சட்டமும், 1961ஆம் வருடத்தியச் சட்டம் அமலுக்கு வந்த தேதியில் எடுக்கப்பட்டவையாகக் கருதப்படவேண்டும். ஆனால், வருமான வரி, முத்திரை வரி, பதிவுக் கட்டணங்கள் இவைகளிலிருந்து விலக்குகளைக் குறித்து மத்திய அரசாங்கத்திற்குள்ள அதிகாரங்களைக் கூறும் 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் பிரிவு 30 எடுக்கப்படவில்லை [பிரிவு 121 (1)]. 1961ஆம் வருடத்தியச் சட்டத்தின் பிரிவு 43 முத்திரை வரி, பதிவுக் கட்டணங்கள் இவைகளிலிருந்து விலக்கு அளிக்கும் அதிகாரத்தை மட்டும் கூறுகிறது.

வருமான வரியிலிருந்து விலக்கு அளிப்பதற்கு மத்திய அரசாங்கத்திற்குள்ள அதிகாரத்தைக்கூறும் 1932ஆம் வருடத்தியச் சட்டத்தின் 30ஆம் பிரிவு எடுக்கப்படவில்லை. எனினும், உட்பிரிவு (1) எடுக்கப்பட்டது. முந்தைய சட்டத்தின் (1932 சட்டம்) சரத்துகளுக்கு ஏற்ப எடுக்கப்பட்ட நடவடிக்கை களைப் பாதிக்கக்கூடாது [பிரிவு 121 (2)]. அத்தகைய எல்லா நடவடிக்கைகளும் அவை தற்போதைய சட்டத்தின்கீழ் எடுக்கப் பட்ட எந்த நடவடிக்கையாலும் செயலாலும் தள்ளப் பட்டாலொழிய தற்போதுள்ள சட்டத்தின்கீழ் செய்யப்பட்ட தாகவே கருதப்படவேண்டும் [பிரிவு 121 (3)]. தற்போதுள்ள சட்டம் மாநிலத்திற்குச் சேர்க்கப்பட்ட அல்லது மாற்றப்பட்ட நில வரம்புக்குத் தேவையான திருத்தத்துடன் பயன்படுத்தப்பட வேண்டுமென்று நீதிமன்றங்களும்கூடக் கருதலாம் [பிரிவு 121 (4)]. மற்றும், சட்டம் அமலுக்கு வந்த பிறகு மாநிலத்திற்குச் சேர்க்கப் பட்ட அல்லது மாற்றப்பட்ட நிலவரம்பில் அமலிலிருக்கும் எந்தச் சட்டத்திலிருக்கும் சமமான சட்டத்திற்குக் குறிப்புகள்,

அந்த நிலவரம்பைப் பொறுத்தவரை, 1961ஆம் வருடத்தியச் சட்டத்திற்கான குறிப்புகளாகக் கருதப்படவேண்டும் [ பிரிவு 121 (5) ].

மேற்கண்ட எல்லாச் சரத்துகளின் பயன் என்னவென்றால், முந்தைய சட்டங்களையொட்டிச் செய்யப்பட்ட எல்லாச் செயல்களையும் நடவடிக்கைகளையும் பாதுகாத்து அவைகளும்கூட தற்போதுள்ள சட்டத்தின்கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளாகக் கருதப்படும் என்பது. எடுத்துவிடப்பட்ட சட்டங்களின்கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள், அவை தற்போதுள்ள சட்டத்தின்கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கையால் தள்ளிப்போடப்பட்டாலொழிய தற்போதுள்ள சட்டத்தின்கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளாகக் கருதப்படவேண்டும். இத்தகைய சரத்துகள் ஒரு புதிய சட்டம் பழைய சட்டத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டு வரப்படும்பொழுது அத்தகைய சட்டத்தில் சேர்க்கப்படுகின்றன.

**14.** சிக்கல்களை நீக்குவதற்கு அதிகாரம் (Power to remove difficulties) (பிரிவு122)

சட்டத்தில் சரத்துகளை அமல் செய்வதில் எந்தச் சிக்கலும் எழுந்தால் பிரிவு 122 (1)-ன் கீழ் அரசாங்கம் சூழ்நிலைக்குத் தகுந்தபடி உத்தரவின் மூலம் அச் சிக்கலை நீக்குவதற்குத் தனக்குத் தேவையாகத் தோன்றும் எதையும் செய்யலாம். அத்தகைய அரசாங்க உத்தரவு சட்டத்தின் சரத்துகளுக்கு வெளியேயும் கூட இருக்கலாமென்று இந்தப் பிரிவு விரிவுபடுத்துகிறது. இந்த அதிகாரம் சட்டமன்றத்தின் பின் அங்கீகாரத்திற்குட்பட்டிருந்தாலும் இது ஒரு தனிப்பட்ட அசாதாரண அதிகாரமாகும். சட்டத்தின் ஆட்சிமுறையில் எந்த வகையிலும் எழுகின்ற எந்தச் சிக்கலையும் நீக்குவதற்கு அரசாங்கத்திற்கு இந்தச் சரத்து அதிகாரம் கொடுக்கிறது. அத்தகைய இன்னல்களை ஓர் உத்தரவைப் பிறப்பிப்பதன் மூலம் அரசாங்கம் நீக்கலாம். அரசாங்கத்தால் செய்யப்பட்ட ஒரு விதியைப்போல் இந்த உத்தரவு சக்தி வாய்ந்தது. அரசாங்கத்தால் நிருணயிக்கப்பட்ட விதிகளைப் போல், இந்த உத்தரவும் அது பிறப்பிக்கப்பட்ட பிறகு சாத்தியப்படும் வகையில் உடனே சட்டமன்றத்தின் இரண்டு அவைகளுக்கு முன்பு வைக்கப்பட வேண்டும். அவ்வாறு வைக்கப்பட்ட சட்டமன்றக் கூட்டம் முடிவதற்கு முன்பு அல்லது அடுத்தக் கூட்டம் முடிவதற்கு முன்பு சட்டமன்றம் அந்த உத்தரவை ஒப்புக்கொள்ளலாம்; அல்லது அந்த உத்தரவைத்

திருத்தம் செய்யலாம்; அல்லது அந்த உத்தரவு தேவையற்றது என்றும் சொல்லலாம். திருத்தம் ஏதாவது செய்யப்பட்டால் திருத்தப்பட்ட உத்தரவு அமலுக்கு வரும்.

உத்தரவு, தேவையற்றது என்றும் அதை எடுத்துவிட வேண்டு மென்றும் சட்டமன்றத்தின் இரண்டு அவைகளும் கருதினுல் அந்த உத்தரவு எடுத்து விடப்பட்டதாகக் கருதப்பட வேண்டும். எந்தச் சூழ்நிலையிலும் அந்த உத்தரவையொட்டி முன்னதாகவே செய்யப்பட்ட எதையும் அது பாதிக்காது. இந்தச் சரத்துகள், பிரிவு 119 (4)-ன்கீழ் அரசாங்கத்தின் விதியை நிருணயிக்கும் அதிகாரத்தைக் குறித்த சரத்துகள் போன்றவை. எனினும் தமிழ்நாட்டு அரசாங்கத்தின் சட்டத் துறையில் வெளியிடப்பட்ட 1-6-68 நாளிட்ட 80290/சிஏ/111/67-B/ வேளாண்மைத் துறை/ நினைவுக் குறிப்பில் அறிவுரை செய்தபடி இந்தப் பிரிவு எடுக்கப்பட வேண்டும். (8-9-67 நாளிட்ட வருவாய்த் துறை குறிப்பு எண் 67323/ஆர்/2/67-2ஐப் பார்க்கவும்).

# 19. சங்கங்களின் அலுவலர்களும், ஊழியர்களும்

## (Officers and Employees of Societies)

**(விதிகளின் அத்தியாயம் 11)**

தற்போது கூட்டுறவுச் சங்கங்களின் ஊழியர்களை வேலைக்குச் சேர்ப்பது (Recruitment), அவர்களின் பணி வரையறைகளை (Service conditions) நிருணயிப்பது முதலியவற்றையும் ஒழுங்கு படுத்த அரசாங்கத்திற்கு அல்லது பதிவாளருக்கு அதிகாரத்தை அளிக்கும் சட்டப்படியான சரத்து ஒன்றுமில்லை. ஆனால், பிரிவு 85-ன்கீழ் பதிவாளர் சங்கங்களின் ஊழியர்களால் கொடுக்கப்பட வேண்டிய பிணையத்தை (Security) நிருணயிக்கலாம். இதனை ஆலோசித்த சந்தானம் குழுவினர், ஆள் சேர்த்தல், பொதுப்பணிப் பிரிவுகளை (Caders) அமைத்தல், இவை உட்படக் கூட்டுறவு நிறுவனங்களின் ஊழியர்களின் பணி வரையறைகளை ஒழுங்கு படுத்துவதற்கான விதிகளைச் செய்ய அரசாங்கத்திற்கு அதிகாரம் அளித்துக் கூட்டுறவுச் சட்டத்தில் ஒரு குறிப்பான சரத்து செய்யப்பட வேண்டுமென்று கருதினர். பல்வேறுவித சங்கங்களின் அலுவலர்களின், ஊழியர்களின் கடமைகள், பொறுப்புகள், ஊதியங்கள், படி, மற்றும் இதர பணி வரையறைகளை ஒழுங்கு படுத்துவதற்காக விதிகளைச் செய்ய அரசாங்கத்திற்கு அதிகாரம் அளித்து ஒரு புதிய பிரிவைச் சட்டத்தில் புகுத்துவதற்காக ஒரு சட்டத் திருத்தத்தையும் அக் குழுவினர் ஆலோசனை கூறியிருக்கின்றனர்.

தற்போது, பிரிவு 85-ன் கீழ் சில கூட்டுறவு நிறுவனங்கள் ஊதியம் பெற்ற செயலாளர்களை அமர்த்த வேண்டுமென்று கட்டாயப்படுத்தப்பட்டிருக்கின்றன. இதன் நோக்கம், சங்கங்களின் லேவாதேவிகள் பெருகி அதன் காரணமாக நிறுவனங்

களுக்குத் தினசரி கவனிப்பு தேவைப்படும்பொழுது, கௌரவ ஊழியர்கள்மீது அதிக சார்பு வைக்கப்படாமலிருப்பதை உறுதிப் படுத்துவதாகும். எல்லா நிதி வங்கிகளும் ஓர் இலட்சத்திற்குக் குறையாத நடைமுறை மூலதனமுள்ள நாணயச் சங்கங்களும், நான்கு இலட்சங்களுக்குக் குறையாத அளவு உறுப்பினர்களிட மிருந்து கடன் நிலுவையுள்ள நிலவள வங்கிகளும், ஐந்து இலட்சங் களுக்குக் குறையாத அளவு உறுப்பினர்களிடமிருந்து கடன் நிலுவையுள்ள வீட்டு வசதிச் சங்கங்களும், ஓர் ஊதியம் பெற்ற செயலாளரை அமர்த்த வேண்டும். ஊதியம் பெற்ற செயலாளர், நிதி வங்கி, நாணயச் சங்கம், அடைமான வங்கி அல்லது வீட்டு வசதிச் சங்கம் இவைகளின் நிருவாகக் குழுவின் உறுப்பினராக இருப்பதற்குத் தகுதி பெறுதவர்.

நிலவள வங்கிகளின் செயல்முறையிலும் வீட்டு வசதிச் சங்கங் களின் நடைமுறையிலும் அச் சங்கங்களில் குறிப்பிடப்பட்ட வரம்புகளுக்குக் கீழே கடன் நிலுவை குறைந்தாலுங்கூட செயலாளர் பதிவியில் நீடித்திருக்க வேண்டும்; அவரைப் பதிவாளரின் ஒப்புதலின்றி வேலையிலிருந்து நீக்கக் கூடாது. விதி 86-ன்கீழ், சங்கங்கள் தங்கள் எல்லா ஊழியர்களிடமிருந்தும் சங்கத்தில் பல்வேறு பணியாளர்களுக்குப் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட வடிவத்திலும் (Form), தரத்திலும் (Standard) பிணையங்கள் வாங்க வேண்டும் [ விதி 85 (1) ]. எந்தச் சங்கமும் பதிவாளரால் நிருணயிக்கப்பட்ட பிணையத்தைப் பதிவாளரால் கட்டளையிடப்படும் கால வரையறைக்குள் கொடுக்காத எந்த ஊதியம் பெற்ற ஊழியர்களையும் வேலையில் வைத்துக்கொண் டிருக்கக் கூடாது [விதி 85 (2)]. எனினும், பொது உத்தரவின் மூலம் அல்லது தனி உத்தரவின் மூலம் பதிவாளர் எந்தச் சங்கத்தையும் அல்லது எந்தச் சங்க வகையையும் அல்லது எந்தச் சங்கத்திலுள்ள எந்தப் பணியாளர் வகுப்பையும் இந்த விதியின் சரத்துகளிலிருந்து விலக்கவும், எந்த ஊதியம் பெற்ற ஊழியர் களைப் பொறுத்தவரை அத்தகைய ஊழியர் கொடுக்கவேண்டிய பிணையத்தின் வடிவம் அல்லது சரத்தைக் குறித்து இந்த விதியின் சரத்துகளைத் தளர்த்தவும் கூடும்.

# 20. பதிவாளரும் அவருடைய அதிகாரங்களும்

## (Registrar and his Powers)

### 1. பொது (General)

இதற்கு முந்தைய அத்தியாயங்களில் சட்டத்தின் கீழும், விதிகளின் கீழும் பதிவாளருக்குள்ள அதிகாரங்களைக் கூட்டுறவுச் சங்கங்களின் செயல்பாட்டைக் கண்காணிக்கும் சட்ட ஏற்பாட்டைக் கூறும்போது விளக்கியுள்ளோம். கூட்டுறவு இயக்கத்தை உருவாக்குவதிலும், அதற்கு வழி காட்டுவதிலும் பதிவாளர் எடுத்துக் கொள்ளவேண்டிய முக்கிய பங்கைப்பற்றியும் அதற்காக அவருக்குக் கொடுக்கப் படவேண்டிய அதிகாரங்களைப் பற்றியும்கூட முன்னரே விவாதித்துள்ளோம். முன்னரே கூறியபடி, பதிவாளர் என்பவர் கூட்டுறவு இயக்கத்தின் ஒரு நண்பனாகவும், தத்துவவாதியாகவும், வழிகாட்டியாகவும் மட்டு மன்றி, அவர் கூட்டுறவு இயக்கத்தின் பிரம்மாவாகவும், விஷ்ணு வாகவும், சிவனாகவும் கூட இருக்கிறார். இந்தக் கூற்றுகள் கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி பெருமளவு பதிவாளரையும் அவருடைய அலுவலர்களையும் சார்ந்திருக்கிறது என்பதைக் காட்டுகின்றன. அது மட்டுமன்றி உத்தியோகப் பற்றற்ற கூட்டுறவாளர்களின் திறமையான தலைமையும் கூட்டுறவு வளர்ச்சிக்குத் தேவை என்பதும் வெளிப்படை. தன் கடமைகளைத் திறம்பட நிறைவேற்றவும் சட்டத்தில் கூறப்பட்ட கொள்கை களின்படி சட்டத்தைப் பரிபாலனம் செய்யவும் பதிவாளருக்கு மிகப் பெருமளவிலான அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக் கின்றன. இந்த அதிகாரங்களில் சில நிருவாகத் தொடர் புடையவை (Administration), மற்றவை நீதித் தன்மை வாய்ந்தவை (Quasi Judicial); வேறு சில தண்டனை விதிப்பவை (Punitive). இவை சட்டத்தின் கீழும் விதிகளின் கீழும் பதிவாள ருக்கு வழங்கப்பட்டிருக்கின்றன.

பேராசிரியர் கால்வெர்ட் (Calvert) என்பவரின் கூற்றின்படி, 'இந்தச் சட்டத்தின்கீழ் பதிவாளர் கூட்டுறவு இயக்கத்தின் அடித்தளமாக அமைக்கப்பட்டிருக்கிறார். பதிவாளர்கள் வெறும் பதிவு செய்யும் அலுவலர்கள் மட்டுமல்ல ; அவர்கள் வெறும் பதிவு செய்யும் அலுவலர்களாக மட்டுமிருக்க உத்தேசிக்கப் படவுமில்லை ; அவர்கள் மேற்பார்வையையும், உதவியையும், நல்லுரைகளையும், கண்காணிப்பையும்கூட வழங்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றார்'. பதிவாளர் எந்தத் தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டுமென்பதையும் அவர் எந்த வகையான நபராக இருக்கவேண்டுமென்பதையும் மெக்லகென் கூட்டுறவுக் குழு (Maclagan Committee on Co-operative) கூறியிருப்பதை நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். சுருக்கமாகக் கூறவேண்டுமாயின், பதிவாளரின் கடமைகளும், சட்டப்படியான கடமைகளும் அதற்குப் புறம்பான கடமைகளும் சேர்ந்து, மிக்க பொறுப்பானவை. கூட்டுறவு இயக்கத்தின் வடிவமும் வலிவும் பெருமளவு பதிவாளரின் மீதும் அவருடைய அலுவலர்களின்மீதும் சார்ந்திருக்கிறது. குறிப்பாக இயக்கத்தின் ஆரம்ப காலத்தில், இயக்கத்தின் பணியைத் துவக்குவதற்குத் தேவைப்பட்ட அறிவையும் அமைப்பையும் அரசாங்கம் பெருமளவு கொடுக்கக் கூடிய நிலைமையிலிருந்தது. அரசாங்கம் தான் இயக்கத்திற்கு வழங்கிய உதவியால் அதற்கு நிலைத்ததன்மையைக் கொடுக்குமளவு தேவைப்படும் பொதுமக்கள் நம்பிக்கையை உண்டுபண்ண முடிந்தது. இயக்கம் வளர்ச்சியடைந்து அதில் மக்கள் அதிகப்படியாகப் பங்கெடுத்துக்கொண்ட பிறகு, அதன் மக்கள் இயக்கத் தன்மை அதிகத் தெளிவாகவும், பலமாகவும் விளங்கியது.

கூட்டுறவு நிறுவனங்கள் சீரமைக்கப்பட்ட பிறகு அவை சமுதாய பொருளாதார நலத்தின் கருவியாக-குறிப்பாக சமுதாயத்தின் வலிவற்ற மக்கள் பகுதியினர் நலத்திற்காக ஒரு சக்தி வாய்ந்த கருவியாக முன்னைவிட அதிகமாக மக்கள் இயக்கத் தன்மையைப் பெற்றது. இந்தத் திருப்பம் விரும்பக் கூடியதே. ஏனென்றால், அடிப்படையில் கூட்டுறவு இயக்கம் ஒரு மக்கள் இயக்கமாகும். அரசாங்கம் இயக்கத்திற்குப் பல வகைகளில் உதவியளித்து வந்தாலும் கூட்டுறவு நிறுவனம் என்பது தன்னம்பிக்கையின் மீதும் சுதந்தர அடிப்படையிலும் இயங்கும் ஒரு நிறுவனம் என்று கூட்டுறவாளர்களிடையே நிலவும் உணர்வைக் குறைக்க எதையும் செய்யக் கூடாது. இயக்கத்தின் மேலான நலத்தை நோக்கிச் சட்டத்தாலும் நடைமுறையிலும் கூட்டுறவு இயக்கம் அரசாங்கத் துறையால் நிருவகிக்கப்பட்ட ஓர் அரசு நிறுவனமாகி விடாமலிருப்பது உறுதி செய்யப்பட

வேண்டும். பல்வேறு கூட்டுறவு மாநாடுகளிலும், மாநில மாநாடு களிலும், அகில இந்திய மாநாடுகளிலும், கூட்டுறவு நிறுவனங் களின் சுதந்தரத்தையும் சுயாட்சித் தன்மையும் பாதுகாக்க வேண்டியதன் தேவை வலியுறுத்தப்பட்டிருக்கிறது. அதாவது கூட்டுறவு நிறுவனங்கள் தம் அலுவலர்களைத் தாமே ஒழுங்கு படுத்திக்கொள்ளக் கூடியவைகளாக இருக்கவேண்டும் என்பது. கூட்டுறவு நிறுவனங்கள் எல்லா மட்டங்களிலும் போதுமான வளங்களை எழுப்பி முடிந்த வரை அவை நிதி பலமுள்ளவைகளா கவும் தற்சார்புள்ளவைகளாகவுமிருந்தால் மட்டும்தான் அது சாத்தியப்படும். இந்த இலட்சியத்திற்கு எல்லாரும் பாடுபட வேண்டும். ஆனால், இந்த இலட்சியத்தை அடைவதற்குத் தொடர்புடைய எல்லாருடைய ஒன்றுபட்ட முயற்சியும் நாட்டில் பல்வேறு மட்டங்களில் எடுக்கப்படும் தீவிர முயற்சியும் மிகமிக இன்றியமையாததாகும்,

மற்றும் சட்டத்தின் கீழும், விதிகளின் கீழும் பதிவாளரின் அதிகாரங்கள் மிகவும் விரிந்தவையாக இருக்கின்றன என்றும், சட்டத்தின் கீழ் அதிகாரங்கள் அரசாங்க அலுவலர்களிடம் குவிக்கப்பட்டிருக்கின்றன என்றும் சில வட்டாரங்களில் ஒரு கருத்து இருந்து வருகிறது. இந்த அதிகாரங்களில் சிலவற்றைக் கூட்டிணைப்புக் கூட்டுறவு நிறுவனங்களுக்கு ஒப்படைக்க வேண்டு மென்றும், தணிக்கை போன்ற சில செயல்களைக் கூட்டுறவு நிறுவனங்களே நடத்திக் கொள்ளலாம் என்றும், அதற்கு வேண்டிய அதிகாரங்கள் சட்டத்தின் கீழ் அவைகளுக்கு வழங்கப் படவேண்டுமென்றும் ஒரு பகுதியினர் கருதுகின்றனர். ஆனால், இந்த யோசனையை அமல் செய்வதில் அதிக முன்னேற்றம் ஏற்படவில்லை, சட்டப்படியான அதிகாரங்களை அரசாங்கமும் அரசுத் துறை அலுவலர்களும் மட்டுமே அதிகமாகக் கையாள வேண்டுமென்பதும் சங்கங்களை அமைத்தல், சங்கங்களின் மேற் பார்வை, கூட்டுறவுக் கல்வி, கூட்டுறவு யோசனை முதலிய வற்றைப் போன்ற துறைகளை மட்டும்தான் கூட்டிணைப்புக் கூட்டுறவு நிறுவனங்கள், கவனித்துக்கொள்ள வேண்டும் என்பதும் அனுபவத்திலிருந்து தெரிகிறது. பதிவாளரால் கூட்டுறவு இயக்கம் கண்காணிக்கப்பட்டு வருவது குறிப்பாகத் தமிழ் நாட்டில் வெற்றியை அளித்திருக்கிறது என்றுதான் கூறவேண்டும். அத்தகைய கண்காணிப்பு எந்த வகையிலும் கூட்டுறவு வளர்ச்சியைத் தடை செய்யவில்லை. கூட்டுறவு இயக்கத்தில் தோன்றும் பல பிரச்சினைகளை ஆராய்ந்து அவைகளைச் சமாளித்துத் தீர்ப்பதில் காலமெல்லாம் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட ஒருவர்தான் இந்தப் பதவியின் கடமைகளைத் திறம்பட

நிறைவேற்ற முடியும். அரசாங்க அலுவலர்களாலும் உத்தியோகப் பற்றற்ற கூட்டுறவாளர்களாலும் மேற்கொள்ளப் படும் கூட்டு முயற்சிகளால்தான் கூட்டுறவு இயக்கத்தின் திடமான, ஒழுங்கான முன்னேற்றத்தை உறுதிப்படக் கூடும். ஆற்றலும், திறமையும் வாய்ந்த பல பதிவாளர்களை மட்டு மல்லாமல், கூட்டுறவு இயக்கத்திற்குத் தங்கள் மதிப்பு வாய்ந்த காலத்தையும் கவனத்தையும் செலுத்திய ஏராளமான உத்தியோகப் பற்றற்ற கூட்டுறவாளர் பெருமக்களையும் பெற்றிருந்த ஒரு நல்ல பேறு தமிழ் நாட்டிற்குக் கிடைத் திருந்தது. கூட்டுறவு இயக்கத்தில் பல துறைகளில் நாட்டின் மற்ற பாகத்திற்குத் தமிழ்நாடு ஒரு வழிகாட்டியாக இருந்தது என்று அது பெருமை கொள்ள முடியும்.

கூட்டுறவு வளர்ச்சிக்கான விரிவான திட்டத்தை அமல் செய்வதற்கு, இயக்கம் சரியாக அமைக்கப்படுவதும், வழி காட்டப்படுவதும், கட்டுப்படுத்தப்படுவதும் தேவைப்படுகிறது. இச் செயலுக்காகக் கூட்டுறவுப் பதிவாளருக்கு எல்லா முக்கிய அதிகாரங்களையும் வழங்குவது தேவையாக இருக்கிறது. அதே சமயத்தில் கூட்டுறவு இயக்கம் முக்கியமாக ஒரு மக்கள் இயக்கம் என்பதையும், மற்ற நிறுவனங்களைவிடக் கூட்டுறவு இயக்கத்தில் தான் மக்கள் அதிக அளவு ஈடுபட்டிருக்கின்றனர் என்பதையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். மாதிரிக் கூட்டுறவு மசோதாவைத் தயாரிக்கும்போது கூட்டுறவுச் சட்டக் குழுவினர் பின்வருமாறு கூறியிருக்கின்றனர் :

'கூட்டுறவுச் சட்டம் கூட்டுறவு நிறுவனங்களின் வளர்ச்சிக்கு சக்திவாய்ந்த ஒரு கருவியாகப் பணியாற்றுவதன் மூலம் கூட்டுறவுச் சங்கங்களை நாட்டின் வளர்ச்சியில் தங்கள் முக்கியப் பங்கை, அதிகப்படுத்திக்கொண்டு போகும் வகையில், மேற்கொள்வதற்கு வசதி செய்வதை உறுதிப்படுத்துதலே எங்கள் முக்கியமான நோக்கமாகும். நாட்டின் பொருளாதாரத் திட்டத்தின் இலட்சியம் சமதர்ம பொதுவுடைமைச் சமுதாயமாக ஏற்றுக் கொள்ளப்பட்டபோது, ஒரு கூட்டுறவுத் துறையை அமைத்து வளர்ப்பது நாட்டின் தேசியக் கொள்கையின் மத்திய நோக்கங் களில் ஒன்றாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. மாதிரிக் கூட்டுறவு மசோதாவில், பதிவாளருக்கு அநேக மாநிலங்களில் நடைமுறையில் தேவை என்று காணப்படும் அதிகாரங்களையும் மாநிலக் கூட்டுறவுச் சட்டங்களில் முன்னரே அடங்கியுள்ள அதிகாரங்களையும் மட்டும்தான் நாங்கள் அளித்திருக்கின் றோம்'. மேலும் அவர்கள் கூறியதாவது : 'சில மாநிலங்களில்

பதிவாளருக்குத் தற்போது அளிக்கப்பட்டுள்ளதும் ஆனால், மக்கள் இயக்கத் தன்மைக்கு முரண்பாடாகக் கருதப்படுவதுமான சில அதிகாரங்களை நாங்கள் எடுத்து விட்டோம்'.

சங்கங்களின் இணைப்பைக் கட்டாயமாகக் கொண்டு வருவதற்கு அதிகாரமும், ஒரு சங்கத்தைத் தன் உப-விதிகளில் ஒரு திருத்தத்தைத் தழுவ, கட்டாயப்படுத்துவதற்கு அதிகாரமும், கூட்டுறவு நிறுவனங்களின் நிருவாகக் குழுவிலிருந்து ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட உறுப்பினர்களை விலக்குவதற்கு அதிகாரமும், பதிவாளருக்கிருப்பதை உதாரணங்களாக அக் குழுவினர் எடுத்துக் காட்டியிருக்கின்றனர். எனினும், இந்த அதிகாரங்கள் 1961ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தில் இடம் பெற்றிருக்கின்றன. அதாவது, ஓர் உப-விதித் திருத்தத்தைத் தழுவ, ஒரு சங்கத்தைக் கட்டாயப் படுத்தும் உரிமை (பிரிவு 12); ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிலிருந்து ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட உறுப்பினர்களை விலக்குவதற்கு அதிகாரம் [பிரிவு 28 (ஏ)]. சங்கங்களின் இணைப்பைக் கட்டாயமாக ஏற்படுத்தும் அதிகாரம் 1956ஆம் ஆண்டில் சென்னைக் கூட்டுறவுச் சங்கச்சட்டத்தில் புகுத்தப் பட்டது. ஆனால், 1961ஆம் ஆண்டில் அந்தச் சட்டம் திருத்தப் பட்டபோதுஅந்த அதிகாரம் கைவிடப்பட்டது. எனினும், அத் தகைய சரத்து தமிழ்நாட்டில் தேவைப்படுகிறது என்ற கருத்து நிலவுகிறது. சந்தானம் குழுவினரும் சங்கங்களின் கட்டாய இணைப் புக்காகச் சட்டப்படியான சரத்தைப் பரிந்துரை செய்திருக்கின் றனர் ஆகையால் இயக்கம், மக்கள் இயக்கமாகவும் மக்களாட்சி முறை இயக்கமாகவும் இருந்தாலும், இயக்கம் சரியாகச் செயல் படுவதையும் முன்னேற்றப் பாதையில் அது வளர்ச்சியடை வதையும் உறுதிப்படுத்துவதற்குச் சில அதிகாரங்கள் தேவையாக இருக்கின்றன என்பது தெளிவு.

எனவே, பதிவாளரின் அதிகாரங்கள் சட்டத்தின் கீழும் விதி களின் கீழும் விரிவாக இருந்தாலும், கூட்டுறவு இயக்கம் விரிவு அடையும் இந்தத் தருணத்தில் அவை தேவையாகவே உள்ளன. சங்க வகைகளின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதோடுகூட, அவைகளின் லேவாதேவிகள் அதிகரித்தும் சிக்கல் தன்மையை அடைந்துமிருப்பதோடுகூட, இயக்கத்தின் மீது தொடர்ந்து ஒழுக்கக் கண்காணிப்பு, காவல், கட்டுப்பாடு இவற்றின் தேவை முக்கியமாகிவிட்டது. ஒரு சங்கத்தின் தோல்விகள் அல்லது மோசடிகள், கையாடல்கள் முதலியன அபூர்வமாக இருந்தாலும் அவை, இயக்கத்திற்கு ஒரு கெட்ட பெயரைக் கொண்டு

வருவதுடன், இயக்கத்தில் மக்களுக்கிருக்கும் நம்பிக்கையைக் குறைப்பதற்குக் காரணமாகிவிடும். தவறு செய்பவர்கள் அவர் எங்கிருந்தாலும் தண்டிக்கப்படவேண்டும்.

சங்கங்களில் முறைகேடுகள், தீய நிருவாகம், நிதிகளை வீண் செலவு செய்தல், போட்டி, பகைமை, உட்குழு மனப்பான்மை இவைகளைத் தடுக்கவும் சங்கங்களில் ஊன்றிய நலமிகளின் வளர்ச்சியைத் தடுக்கவும், கூட்டுறவுக் கொள்கைகள் மீறப்படா மலிருப்பதைப் பார்த்துக்கொள்ளவும் இயக்கம் உண்மையாகவே மக்களின் பெரும்பாலான பகுதியினருக்குக், குறிப்பாக, கிராமப் பகுதிகளில் பணியாற்றுவதைப் பெருக்கிக் கொள்ளவும் சட்டம் இயங்கப்படவேண்டும். இயக்கம் மக்களுள் வலிவற்ற பகுதி யினருக்குத் தொண்டு செய்யவே உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. இவற்றையெல்லாம் உறுதிப்படுத்துவதற்குத்தான் அதிகாரங்கள் தேவைப்படுகின்றன. சில சமயங்களில், வெறும் அதிகாரத்தை வைத்திருப்பது தடுக்கும் ஒரு சக்தியாக இருக்கிறது. அந்த வகை யிலுங்கூட அது பயனுள்ளதாக இருக்கிறது. அதிகாரங்கள் எத்தன்மையதாக இருந்தாலும், அதிகாரங்களைக் கையாளுவதும் அவை கையாளப்படுகின்ற முறையுங்கூட முக்கியமாக இருக்கின்றன.

ஒரு பழமொழியின்படி, ஓர் 'அரக்கனுக்குடைய (Giant) பற்கள் இருப்பது நல்லதுதான்; ஆனால், அவைகளை ஓர் அரக்கனைப் போல் பயன்படுத்துவது நல்லதல்ல, சட்டத்தை நிறைவேற்றுங் கால் இயக்கத்தின் விரிவான நோக்கங்களையும் நிலைமையையும் அலுவலர்கள் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். நிலைமை என்றால் இயக்கம் சமுதாயத் துறையிலும் பொருளாதாரத் துறை யிலும் வளர்ந்து வருகின்றது என்பது. அனுதாபம், விரைவு, திறமை இவற்றுடன், சட்டத்தின் பல்வேறு சரத்துகளும் கூட்டுறவுக் கொள்கைகளின் தேவைகளும் சரியாகக் கையாளப் படுவதும் சேர்ந்த ஒரு முறையிலுங்கூட, சட்டம் பரிபாலனம் செய்யப்படவேண்டும்.

2. சட்டத்தின் கீழும் விதிகளின் கீழும் பதிவாளரின் அதிகாரங்கள் பின்வருமாறு (Powers of the Registrar under the Act and the Rules) :

பதிவாளர் என்றால் மாநிலப் பதிவாளரும் சட்டப் பிரிவு 3-ன் கீழ் பதிவாளரின் எந்த அதிகாரங்களுமளிக்கப்பட்ட எல்லா அலுவலர்களும் என்றுதான் பொருள் ஆகும்... கூட்டுறவுத் துறையின் பல்வேறு அலுவலர்களுக்கும் இதரத் துறைகளின்

அலுவலர்களுக்கும் ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்களின் விவரங்கள் முந்தைய அத்தியாயத்தில் எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. ஒரு பதிவாளரின் அதிகாரங்களாவன :

*(i)* **பதிவு செய்தல்** (Registration)

*(அ)* ஒரு சங்கத்தையும் அதன் உப-விதிகளையும் பதிவு செய்வதற்கும் அல்லது பதிவு செய்ய மறுப்பதற்கும் பதிவாளருக்கு முழுமையான உளத் தேர்வு உண்டு. [பிரிவு 9 (1)]. எனவே ஒரு சங்கம் சாதகமான சூழ்நிலையில் ஆரம்பிப்பதைக் கவனிக்கும் பொறுப்பு பதிவாளர் மீது உள்ளது.

*(ஆ)* சட்டத்தின் செயல்களுக்காக ஒரு நபர் ஒரு விவசாயியா, அல்லது விவசாயி அல்லாதவரா அல்லது ஒரு நகரத்தில் அல்லது கிராமத்தில் அல்லது நகரங்கள் வகுப்பில் ஒரு நபர் வசிக்கிறரா, அல்லது அசையாச் சொத்தைச் சொந்தமாக வைத்திருக்கிறரா என்பதையும் அல்லது ஒரு நபர் ஒரு குறிப்பிட்ட வகுப்பினர் அல்லது தொழிலைச் சேர்ந்தவரா என்று எந்தப் பிரச்சினையையும் பதிவாளர் முடிவு செய்யவேண்டும் [பிரிவு (7) ] .

*(இ)* ஒரு சங்கம் பதிவு செய்வதற்காகக் கிடைத்த ஒரு விண்ணப்பத்தைக் குறித்து அந்தச் சங்கம் பதிவு செய்யப்படலாமா என்பதை முடிவு செய்வதற்கு உதவியாகப் பதிவாளர் கோரும் தகவலை அவர் வரவழைக்கலாம். அத்தகைய தகவலைச் சங்கப் பதிவுக்காக விண்ணப்பம் செய்பவர்களிடமிருந்து அவர் வரவழைக்கலாம் [பிரிவு 8(3) ].

*(ஈ)* ஒரு சங்கத்தின் உப-விதிகளின் திருத்தத்தை அல்லது திருத்தங்களைப் பதிவு செய்வதற்குக்கூடப் பதிவாளருக்கு உளத் தேர்வு உண்டு [பிரிவு 11 (3)]. ஒவ்வோர் உப-விதித்திருத்தத்திற்கும் அவருடைய அங்கீகாரம் தேவை [பிரிவு 11 (1)]. அவருடைய அங்கீகாரமில்லாவிடில் எந்த உப-விதித் திருத்தமும் செல்லத் தக்கதல்ல.

*(உ)* அவரால் குறிப்பிடப்பட்ட வகையில், சங்கத்தின் உப-விதிகளை ஒரு சங்கம் திருத்த வேண்டுமென்று அவர் கட்டளையிடலாம் [பிரிவு 12 (1)]. அவரால் குறிப்பிடப்பட்ட காலவரையறைக்குள், சங்கம் உப-விதித் திருத்தத்தைச் செய்யத் தவறினல் பதிவாளரை அத்தகைய உப-விதித் திருத்தத்தைப் பதிவு செய்யலாம் [பிரிவு 12 (2)]. அப்படிப் பதிவு செய்யப்பட்ட உப-விதித் திருத்தம், பிரிவு 11-ன் கீழ் பதிவு செய்யப்பட்ட ஓர் உப-விதித் திருத்தம் போன்ற சக்தியையுடையதாகும் [பிரிவு 12 (3)].

(ஊ) சங்கங்கள் பிரிக்கப்படும்போதும் இணைக்கப்படும் போதும் முதல் நிலைத் தீர்மானம் (Preliminary Resolution) மாறுதல்களுடன் உறுதிப்படுத்தப்பட்டால் அத்தகைய மாறுதல்கள் கவனிக்கவேண்டிய மாறுதல்களா (Material Changes) என்பதைப் பதிவாளர் முடிவு செய்யலாம். அவருடைய முடிவு அறுதியானது [ பிரிவு 13 (1) (இ)-ம், பிரிவு 13 (2) (இ)-ம் ].

(எ) சங்கங்களிடையே சொத்துப் பொறுப்புகள் மாற்றுதல் செய்வதில் முதல் நிலைத் தீர்மானத்தில் செய்யப்பட்ட மாறுதல்கள் கவனிக்க வேண்டியவையா அல்லது அல்லவா என்பதைப் பதிவாளர் முடிவு செய்யலாம். அவருடைய முடிவு அறுதியானது [ பிரிவு 14 (3) ].

(ஏ) சங்கங்களை வகைப்படுத்துவது 11ஆம் விதிக்கு ஒத்தவாறு, பதிவாளரால் செய்யப்படும் ஒரு செயலாகும் (பிரிவு 15).

(ஐ) ஒரு சங்கத்தை அது இப்பொழுதிருக்கும் சங்க வகையிலிருந்து இன்னொரு சங்க வகைக்கு மாற்றுவது போன்ற, ஒரு சங்கத்தின் உப-விதிகளில் எந்தத் திருத்தமும் பதிவாளருடைய கருத்தில் சரியானதாக இருந்தால், அவர் பிரிவு 16-ன் கீழ் சங்கத்தை வேறு வகையைச் சேர்ந்த ஒரு சங்கமாக மாற்றிக் கொள்வதற்கு 12ஆம் விதிக்கு ஒத்தவாறு நடவடிக்கை எடுக்கும் படிச் சங்கத்திற்குக் கட்டளையிடலாம்.

(ii) உறுப்பினர் நிலை (Membership)

(அ) 18ஆம் விதியில் நிருணயிக்கப்பட்ட சில சங்க வகைகளில் ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவால் ஓர் உறுப்பினரை உறுப்பினர் பதவியிலிருந்து விலக்குவதற்குப் பதிவாளரின் அங்கீகாரம் தேவைப்படுகிறது [பிரிவு 17 (2) (அ)-ன் விலக்குக்கூறு ].

(ஆ) ஓர் உறுப்பினருக்கு ஒரு குறிப்பிட்ட சேவை புரியச் சங்கம் மறுத்தால், அவ்வாறு சங்கம் மறுத்தது நியாயமற்றதாகவும் ஒழுங்கீனமானதாகவும் அல்லது வேற்றுமை காட்டும் தன்மையுள்ளதாகவும் பதிவாளர் கருதினால் அச் சேவையை உறுப்பினருக்குச் செய்யவேண்டுமென்று அச் சங்கத்தின் நிருவாகக் குழுவினருக்குப் பதிவாளர் கட்டளையிடலாம் [பிரிவு 19 (4)].

(இ) ஒரு சங்கத்தின் பேரவை உறுப்பினர் பதவியிலிருந்து ஓர் உறுப்பினரை நீக்கியது அமலுக்கு வரவேண்டுமானால் பதிவாளரின் அங்கீகாரம் தேவைப்படுகிறது [பிரிவு 20 (2)].

(iii) நிருவாகம் (Management)

(அ) ஒரு சங்கத்தின் விவகார எல்லை அல்லது உறுப்பினர்களின் எண்ணிக்கை விதி 28-ல் குறிப்பிட்டபடி பெரிதாக இருக்கும் காலங்களில், பிரதிநிதித்துவப் பேரவை (Representative General Body) என்று அழைக்கப்படும் ஒரு சிறிய பேரவையை அமைப்பதற்கான ஏற்பாடு செய்ய ஒரு சங்கத்தின் உப-விதிகளைத் திருத்தம் செய்ய வேண்டுமென்று பதிவாளர் ஒரு சங்கத்திற்குக் கட்டளையிடலாம் [பிரிவு 26 (1) (ஆ)].

(ஆ) பதிவாளர் கோரியபடி, பிரிவு 26 (3) (அ) (v)-ன்கீழ் ஒரு சங்கம் ஒரு பேரவைக் கூட்டத்தைக் கூட்டத் தவறினால், பதிவாளரே அத்தகைய கூட்டத்தைக் கூட்டலாம் [பிரிவு 26 (4) (அ)]; அல்லது சங்கத்தில் ஒரு கூட்டத்தைக் கூட்டுவதற்கு நிருவாகக் குழுவோ அல்லது தகுதி வாய்ந்த அலுவலரோ இல்லை என்று பதிவாளர் கருதினாலும், அல்லது நிருவாகக் குழுவின் செயல்படும் தகுதியைக் குறித்து ஒரு தகராறு இருந்தாலும், அத்தகைய சூழ்நிலைகளிலும் பதிவாளரே ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டத்தைக் கூட்டலாம் [பிரிவு 26 (4) (அ)]. அத்தகைய கூட்டங்களில் பதிவாளர் தானே தலைமை வகிக்கலாம்; அல்லது அவ்வாறு தலைமை வகிப்பதற்கு அவர் எந்த நபருக்கும் அதிகாரம் அளிக்கலாம் [பிரிவு 26 (4) (ஆ) (iii)]. அவர் ஒரு சங்கத்தின் சிறப்புப் பேரவைக் கூட்டத்தைக் கூட்டுவதில் ஏற்பட்ட செலவுகளைச் சங்கத்தின் நிதிகளிலிருந்தோ அல்லது மேற்பார்வை ஒன்றியத்தின் நிதிகளிலிருந்தோ அல்லது எந்தச் சங்கத்தின் விண்ணப்பத்தினால் அக் கூட்டம் கூட்டப்பட்டதோ அச் சங்கத்தின் நிதிகளிலிருந்தோ அல்லது கூட்டத்தைக் கூட்டுவதற்குத் தவறியதற்காக அல்லது மறுத்ததற்காகப் பொறுப்பாளர்களாகம் பதிவாளரால் கருதப்படும் நபர்களாலோ, செலுத்தப்பட வேண்டுமென்றுகூடப் பதிவாளர் கட்டளையிடலாம் [பிரிவு 26 (5)].

(இ) புதியதாகப் பதிவு செய்யப்பட்ட ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவின் பதவிக் காலத்தை, அச் சங்கத்தின் பதிவுக்கான விண்ணப்பத்தில் குறிப்பிட்டபடி, பதிவாளர் நீட்டிப்பு செய்யலாம் [பிரிவு 27 (1)-ன் விலக்குக்கூறு)].

(ஈ) சங்கத்தின் உப-விதிகள் நியமனம் செய்வதற்கு அனுமதித்தால், ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவின் எல்லா உறுப்பினர்களையும் அல்லது எந்த உறுப்பினரையும் பதிவாளர் உப-விதிகளில் குறிக்கப்படும் கால வரம்புக்குப் பதிவாளர் நியமனம் செய்யலாம் [பிரிவு 27 (1)-ன் விலக்குக் கூறு].

(உ) பதிவாளர் ஓய்வுபெறவேண்டிய நிருவாகக் குழு உறுப்பினர்களின் பதவிக் காலத்தைத் தன்னால் நிருணயிக்கப்படும் தேதி வரை நீட்டிப்பு செய்யலாம் [பிரிவு 27 (3) (இ)-க்கும் விதி 36 (2)-க்கும் ஒத்தவாறு].

(ஊ) நிருவாகக் குழுவின் ஏதாவது ஓர் உறுப்பினர் பிரிவு 28-ல் குறிக்கப்பட்ட தகுதியின்மைகளுக்கு உட்பட்டிருந்தாரா அல்லது உட்பட்டிருக்கிறாரா என்பதை முடிவு செய்வதற்குப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிறார் [பிரிவு 28 (6)].

(எ) சில சூழ்நிலைகளில், ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவிலிருந்து ஒரு நபரை விலக்கவும் அல்லது அந்த நபரை எந்தச் சங்கத்திலும் ஒரு நிருவாகக் குழு உறுப்பினர் பதவியை இனிமேல் வகிப்பதற்குத் தகுதியற்றவராக்கச் செய்யவும் பதிவாளர் உத்தர விடலாம் [பிரிவு 28 (அ)].

(iv) நிதிகள் (Funds)

(அ) ஒரு சங்கம் மற்றொரு சங்கத்திற்குக் கடன்கள் கொடுப்பதற்குப் பதிவாளரின் அளிப்படைவு தேவைப்படுகிறது. ஆகையால், சங்கங்களிடையே கடன் கொடுத்துக் கொள்வதற்குப் பதிவாளரின் அனுமதி தேவைப்படுகிறது [பிரிவு 58 (1)-ன் விலக்குக்கூறு].

(ஆ) ஒரு சங்கத்தின் நிதிகளை ஒரு வரையறுக்கப்படாத சங்கத்தின் பங்கு மூலதனத்தில், தன்னால் அவ்வப்போது குறிக்கப் படும் வரம்புக்குட்பட்டு, முதலீடு செய்யப் பதிவாளர் அனுமதிக்கலாம் [பிரிவு 60 (இ)].

(இ) வங்கி வியாபாரம் செய்யும் எந்த வங்கியுடனும் அல்லது நபருடனும் ஒரு சங்கத்தின் நிதிகளை முதலீடு செய் வதற்குப் பதிவாளர் அங்கீகாரம் அளிக்கலாம் [பிரிவு 60 (ஈ)].

(v) தணிக்கை

(அ) ஒவ்வொரு சங்கத்தின் கணக்குகளையும் பதிவாளர் தணிக்கை செய்யவேண்டும்; அல்லது தன்னால் அதிகாரம் அளிக்கப் பட்ட சில நபர்களால் தணிக்கை செய்வதற்கு அவர் ஏற்பாடு செய்யலாம் [பிரிவு 64 (1)]. தணிக்கையாளர் (பதிவாளர்) சங்கத்துக்குச் சொந்தமாக உள்ள அல்லது சங்கத்தின் பாதுகாப்பிலுள்ள எல்லா ஏடுகளையும், பத்திரங்களையும், பிணையங்களையும், ரொக்கத்தையும் மற்றும் இதர சொத்து களையும் தாராளமாகப் பார்வையிடலாம் [பிரிவு 64 (3)]. அத்தகையவைகளைத் தன்னால் குறிக்கப்படும் இடத்தில் முன்னிலைப்

படுத்துவதற்காக எந்த நபருக்கும் அவர் அழைப்பாணையை அனுப்பலாம் [பிரிவு 64 (3)]. தொடர்புடைய நபர்களைச் சங்கத்தின் லேவாதேவிகளைப் பற்றியும், செயல்பாட்டைப் பற்றியும் தன்னால் தேவைப்படும் தகவல்களைக் கொடுக்குமாறு அவர் கோரலாம் [பிரிவு 64 (4)]. தணிக்கையின் விளைவாக வெளிப்பட்ட குறைபாடுகளைச் சரி செய்வதற்குத் தன்னால் குறிப்பிடப்படும் காலவரம்புக்குள் நடவடிக்கை எடுப்பதற்குச் சங்கத்தின்அலுவலர்களைப் பதிவாளர் கட்டளையிடலாம் [பிரிவு 64 (5)].சங்கத்தின் கணக்குகளைத் தணிக்கை செய்வதற்காகச் சங்கம் செலுத்த வேண்டிய கட்டணங்களைப் பதிவாளர் நிருணயிக்கலாம் [பிரிவு 64 (6)].

(vi) விசாரணை (Inquiry)

(அ) தன்னிச்சையாகவோ அல்லது வேண்டுகோளின் பேரிலோ பதிவாளர் ஒரு சங்கத்தின் அமைப்பு, செயல்பாடு, நிதி நிலைமை-இவைகளைப்பற்றி ஒரு விசாரணை நடத்தலாம் [பிரிவு 65 (1)]. அவர் எல்லா நியாயமான நேரங்களிலும் சங்கத்திற்குச் சொந்தமாக உள்ள அல்லது அதன் பாதுகாப்பில் உள்ள ஏடுகளையும், கணக்குகளையும், பத்திரங்களையும், பிணையங்களையும், ரொக்கங்களையும், மற்ற இதர சொத்துகளையும் தாராளமாகப் பார்வையிடலாம் [பிரிவு 65 (2) (அ)]. தொடர்புடைய நபரைத் தன்னால் குறிப்பிடப்படும் இடத்தில் அவைகளை முன்னிலைப்படுத்தும்படி அவர் அழைப்பாணை அனுப்பலாம் [பிரிவு 65 (2) (அ)]. ஏடுகளையும், கணக்குகளையும் அல்லது பத்திரங்களையும், விசாரணையை வசதிப் படுத்துவதற்காக அதைத் தேவைப் பட்டால், பதிவாளர் கைப்பற்றவும் கூட அதிகாரம் பெற்றிருக்கிறார் [பிரிவு 65(2) (ஆ)]. ஒரு சங்கத்தின் அலுவலைக் குறித்து ஒருநபர் நன்றாகத் தெரிந்திருக்கிறார் என்று பதிவாளர் நினைத்தால் அச் சங்கத்தின் அலுவல்களைக் குறித்து அத்தகைய நபரை வருகை தரும்படி அழைப்பாணை அனுப்பவும், அவரைப் பிரமாணத்தின் பேரில் விசாரணை செய்யவும் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிறார் [பிரிவு 65 (2) (இ)].

ஒரு நபருக்குச் சொந்தமாகவுள்ள அல்லது அவர் பாதுகாப்பிலுள்ள எந்த ஏடுகளையும், கணக்குகளையும் அல்லது பத்திரங்களையும், அத்தகைய ஏடுகளில் அல்லது கணக்குகளில் அல்லது பத்திரங்களில் சங்கத்தின் லேவாதேவிகளுக்குத் தொடர்பான எந்த ஒரு பதிவும் அடங்கியிருப்பதாகப் பதிவாளர் நம்புவதற்குக் காரணமிருந்தால், அவர் அத்தகைய நபரை அவைகளை முன்னிலைப் படுத்தும்படி அழைப்பாணை அனுப்புவதற்குக்கூடப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிறார் [பிரிவு 65 (2) (இ)].

சங்கத்தின் எந்த அலுவலரையும் அல்லது அலுவலர்களையும் ஒரு பேரவைக் கூட்டம் அல்லது நிருவாகக் குழுக் கூட்டத்தைக் கூட்ட வேண்டுமென்று அவர் கோரலாம். அத்தகைய கூட்டம் கூட்டப் படவில்லையானல், அவரே அத்தகைய கூட்டத்தைக் கூட்டலாம் [பிரிவு 65 (2) (இ) ]. ஒரு சங்கத்தின் ஓர் அலுவலரை அல்லது அச் சங்கத்தின் நிதி வங்கியின் அலுவலரை, விசாரணையின் விளை வாக வெளிப்பட்ட குறைபாடுகளை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் சரி செய்ய வேண்டுமென்று, பதிவாளர் கட்டளையிடலாம் [பிரிவு 65 (4) ].

(vii) ஆய்வு (Inspection)

(அ) தன்னிச்சையாகவோ அல்லது வேண்டுகோளின் பேரிலோ ஒரு சங்கத்தின் ஏடுகளைப் பதிவாளர் ஆய்வு செய்யலாம். அவ்வாறு ஆய்வு செய்யும்பொழுது அவர் பிரிவு 65-ன் கீழ் ஒரு விசாரணை நடத்தும் பொழுது கையாளுகின்ற எல்லா அதிகாரங் களையும் கையாளலாம் [பிரிவு 66 (1) (அ) ] .

(ஆ) ஆய்வின் விளைவாக வெளிப்பட்ட குறைபாடுகளைச் சரி செய்வதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று அவர் கட்டளை யிடலாம். அத்தகைய கட்டளை ஒரு சங்கத்தின் அலுவலருக்கு அனுப்பப்படலாம் [ பிரிவு 65 (3) ].

(viii) ஒரு நிதி வங்கியின் ஏடுகளை ஆய்வு செய்தல்: தனக்குக் கடன்பட்டுள்ள எந்தச் சங்கத்தின் ஏடுகளையும் ஆய்வு நடத்து வதற்கு ஒரு நிதி வங்கியின் ஊதியம் பெற்ற ஊழியரின் தகுதியைப் பற்றிப் பதிவாளர் சான்றிட வேண்டும் (பிரிவு 67).

(ix) விசாரணையின் செலவுகளும் ஆய்வின் செலவுகளும்: பிரிவு 65-ன் கீழ் செய்யப்பட்ட விசாரணையைக் குறித்தும் அல்லது பிரிவு 66 அல்லது 67-ன் கீழ் செய்யப்பட்ட ஆய்வைக் குறித்தும் செலுத்தப்படவேண்டிய செலவுகளைப் பதிவாளர் தீர்ப்பு அளிக்கலாம் (பிரிவு 68).

(x) ஒரு சங்கத்தின் அலுவலர் அல்லது ஊழியரை வேலையி லிருந்து தற்காலிகமாக நிறுத்தி வைத்தல் (Suspension): ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவைத் தன் ஊதியம் பெற்ற அலுவலர் அல்லது ஊழியரை வேலையிலிருந்து தற்காலிகமாக நிறுத்தி வைக்க வேண்டுமென்று பதிவாளர் கட்டளையிடலாம். அவ்வாறு நிறுத்திவைப்பது தணிக்கை, விசாரணை அல்லது ஆய்வின்போது காணப்பட்ட அத்தகைய ஊழியரின் மீதுள்ள புகார்களை விசாரணை செய்து முடிவு செய்யும்வரை (பிரிவு 70).

(xi) தண்டம் (Surcharge) : பதிவாளர் பிரிவு 71-ன் கீழ் ஒரு தண்டம் உத்தரவைப் பிறப்பிக்கலாம்.

(xii) ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவை மேற்கடத்தல் (Supersession) : ஒரு சங்கத்தின் நிருவாகக் குழுவை மேற்கடக்கவும் சங்கத்தின் அலுவல்களை நிருவாகம் செய்வதற்கு ஒரு சிறப்பு அலுவலரை அல்லது நிருவாகக் குழுவை அல்லது சில நபர்களை அமர்த்தவும், பதிவாளருக்கு அதிகாரம் உண்டு (பிரிவு 72).

(xiii) தகராறுகளைத் தீர்த்து வைத்தல் : சங்கத்தின் செயல் பாட்டிற்குத் தொடர்பான தகராறுகளைப் பதிவாளர் தீர்த்து வைக்கலாம் (பிரிவு 73).

(xiv) சங்கத்தைக் கலைத்தலும் அதன் பதிவை ரத்து செய்தலும்

(அ) ஒரு சங்கத்தின் அலுவல்களைப் பதிவாளர் கலைக்கலாம் (பிரிவு 85).

(ஆ) கலைக்கப்பட்ட சங்கத்திற்காக அவர் ஒரு கலைப்பு அலுவலரை அமர்த்தலாம் [ பிரிவு 86 (1) ].

(இ) பிரிவு 86 (1)-ன்கீழ் அமர்த்தப்பட்ட கலைப்பு அலுவலர் பதிவாளரின் கட்டுப்பாட்டிற்குட்பட்டு வேலை செய்ய வேண்டும் [ பிரிவு 87 (2) ].

(ஈ) பதிவாளர் ஒரு சங்கத்தின் பதிவை ரத்து செய்யலாம் (பிரிவு 88).

(உ) பதிவாளருடைய அனுமதியில்லாமலும் அவரால் விதிக்கப்படும், நிபந்தனைகளுக்குட்படாமலும் கலைப்பு அலுவலரின் மீதும், சங்கத்தின்மீதும், சங்கத்தின் எந்த உறுப்பினர்மீதும், சங்கத்தின் அலுவல்களைக் குறித்த எந்தப் பொருளைப்பற்றியும், எந்த வழக்கும், அல்லது சட்டப்படியான நடவடிக்கையும் எடுக்கப் படக் கூடாது (பிரிவு 89).

(ஊ) கலைக்கப்படவேண்டுமென்று உத்தரவிடப்பட்ட ஒரு சங்கத்தை மீண்டும் இயல்பான நிலைமைக்குக் கொண்டுவரப் பதிவாளர் உத்தரவிடலாம் (பிரிவு 90).

(xv) தீர்ப்பாணைகளை நிறைவேற்றுதல்

(அ) தீர்ப்பாணைகள், முடிவுகள், தீர்ப்புகள், உத்தரவுகள்- இவைகளை-நிறைவேற்றுவதற்குப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக் கிறார் (பிரிவு 91-ம் விதிகளின் அத்தியாயம் 10-ம்).

(ஆ) உறுப்பினர்களிடமிருந்து பாக்கியாகவுள்ள கடன்களை பிரிவு 32 (1)-ன் கீழ் பற்றுப் பொறுப்புக்கு உட்பட்டுள்ள சொத்து விற்பனை மூலம் வசூலிப்பதற்குப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிறார் (பிரிவு 92).

(இ) விதி 79-ல் விதிக்கப்பட்ட நடைமுறைப்படிப் பதிவாளர் பிரிவு 94-ல் குறிப்பிட்ட அரசாங்கத்திற்குச் சேர வேண்டிய தொகைகளையும் பதிவாளர் வசூல் செய்யலாம். அத்தகைய தொகைகளை வசூல் செய்வதற்கும் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிறார் (விதி 79).

(ஈ) பிரிவு 96-ன் கீழ் மேல் முறையீட்டில் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளையும் பிரிவு 97–ன்கீழ் புனராய்வில் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளையும் பிரிவு 98-ன்கீழ் மறுசீராய்வில் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளையும் பதிவாளர் நிறைவேற்றலாம் (பிரிவு 99). அவர் விதி 94-ன் கீழ் அவ்வாறு செய்யலாம்.

(xvi) மேல்முறையீடுகளும் புனராய்வும் மறுசீராய்வும்

(அ) தனக்குக் கீழ்ப்பட்ட அலுவலர்களால் பிறப்பிக்கப்பட்ட சில முடிவுகளைக் குறித்தும் உத்தரவுகளைக் குறித்தும் மேல் முறையீடு அதிகாரம் பதிவாளருக்குண்டு [பிரிவு 96 (2) (11)].

(ஆ) தன்னிச்சையாகவோ அல்லது விண்ணப்பத்தின் பேரிலோ தனக்குக் கீழ்ப்பட்ட அலுவலர்களால் எந்த நடவடிக்கைகளிலும் பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளைப் புனராய்வு செய்யப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிறார். அத்தகைய அதிகாரத்தைச் செலுத்தும் பொழுது அத்தகைய நடவடிக்கைகளுக்குத் தொடர்பான பதிவேடுகளை அவர் வரவழைத்து பரிசீலனை செய்யலாம் [பிரிவு 97 (1)]. ஆனல், பிரிவு 96 (1)-ன்கீழ் மேல் முறையீட்டுக்கு ஏற்பாடு செய்யப்பட்ட நடவடிக்கைகளில் அவருக்கு அதிகாரமில்லை.

(இ) விண்ணப்பத்தின் பேரில், புதியதாகவும் முக்கியமாகவுமுள்ள உண்மைகள் கண்டுபிடிக்கப்பட்ட ஆதாரத்தின் பேரில், பிரிவு 96-ன்கீழ் தன்னல் பிறப்பிக்கப்பட்ட எந்த உத்தரவையும், பிரிவு 97-ன்கீழ் பிறப்பிக்கப்பட்ட எந்த உத்தரவையும், மறுசீராய்வு செய்யப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிறார் [பிரிவு 98 (1)].

(xvii) குற்றங்களும், தண்டனைகளும்

(அ) சட்டத்தின்கீழ் எல்லா வழக்குத் தொடர்தல்களுக்கும் பதிவாளரின் முன் அனுமதி தேவைப்படுகிறது. அவருடைய

முன் ஒப்பளிப்பின்றிச் சட்டத்தின் கீழ் எந்த வழக்குத் தொடர்தலும் எடுக்கப்படக் கூடாது [பிரிவு 106 (3)].

(ஆ) பிரிவு 107 (1)-ன் கீழ் ஒரு சங்கத்தின் பதிவேடுகளையும் சொத்துகளையும் சுவாதீனம் எடுத்துக்கொள்வதற்காக ஒரு நீதிபதிக்கு (Magistrate) விண்ணப்பம் செய்வதற்கு, விதி 101-ல் நிருணயிக்கப்பட்ட நமூனாவில் பதிவாளரால் அளிக்கப்பட்ட ஒரு சான்றிதழ் தேவையாக இருக்கிறது. பதிவாளரால் அளிக்கப்பட்ட சான்றிதழுடன் செய்யப்பட்ட ஒரு விண்ணப்பத்தின் பேரில் மட்டுமே நீதிபதி, ஒரு நிருவாகக் குழு மேற்கடக்கப்பட்ட பிறகு, புதியதாக அமைக்கப்பட்ட தனி அலுவலருக்கு அல்லது நிருவாகக் குழுவிற்கு அல்லது கலைப்பு அலுவலருக்குச் சுவாதீனம் அளிக்கக் கட்டளையிடலாம் [பிரிவு 107 (1)].

(xviii) சொத்துகளை நிபந்தனைக்குட்பட்ட ஜப்தி செய்தல்: பிரிவு 108-ன் கீழ், சொத்துகளை நிபந்தனைக்குட்பட்ட ஜப்தி செய்யப் பதிவாளர் உத்தரவிடலாம். இது தீர்ப்புக்கு முன் செய்யப்படும் ஜப்தி.

**சட்டத்தின் கீழ் வகுக்கப்பட்ட விதிகளின் கீழ் பதிவாளர் பெற்றிருக்கும் சில முக்கியமான அதிகாரங்கள் பின்வருமாறு:**

(1) புதியதாகப் பதிவு செய்யப்பட்ட சங்கங்கள் செயல்படத் தொடங்க வேண்டிய காலத்தை நீட்டிப்பு செய்தல் (விதி 6).

(2) தனி நபர்களும், சங்கங்களும் அடங்கிய ஒரு சங்கம் தனி நபர்கள் சங்கத்தில் தொடர்ந்திருப்பது தேவையில்லை என்றும் தனி நபர் உறுப்பினர்களுக்குப் பங்குகளைத் திருப்பிக் கொடுக்க ஏற்பாடு செய்யவும் முடிவு செய்வதற்கு முன்பு பதிவாளரின் அங்கீகாரம் தேவைப்படுகிறது (விதி 23).

(3) ஒன்றுக்கு மேற்பட்ட நாணயச் சங்கங்களின் அல்லது வீட்டு வசதிச் சங்கத்தில் ஒருவர் உறுப்பினராவதற்குப் பதிவாளரின் அளிப்பளைவு தேவைப்படுகிறது (விதி 25).

(4) விதி 34-ல் விதிக்கப்பட்ட 1 : 3 என்ற விகிதாச்சாரத்திற்குட்பட்டு ஒரு நிதி வங்கியின் நிருவாகக் குழுவில் உறுப்பினர்களுக்கும் சங்க உறுப்பினர்களுக்குமிருக்க வேண்டிய விகிதாச்சாரத்தைப் பதிவாளர் நிருணயிக்கலாம் (விதி 34).

(5) எந்தச் சங்கத்திற்கும் அல்லது சங்க வகைக்கும் பிரயாணப்படி, நித்தியப்படி, சங்கக் கூட்டங்களில் கலந்து கொள்வதற்கு வருகைக் கட்டணங்கள் (Sitting fees) இவைகளின் உச்ச விகிதத்தைப் பதிவாளர் குறிப்பிடலாம். பிரயாணப்படி கோரிக்கை செய்யப்பட வேண்டிய பட்டியலின் நமூனுவும்கூட அவரால் நிருணயிக்கப்பட வேண்டும் [விதி 41 (5)].

(6) ஒரு சங்கம் வாங்கும் கடன் அல்லது வைப்புத் தொகைகளின் சரியான உச்ச வரம்பை-அதாவது கடன் வாங்கும் வரம்பைப் (Borrowing Limit)-பதிவாளர் நிருணயிக்க வேண்டும் (விதி 42).

(7) மூன்று வருடங்களுக்கு மேற்பட்டும் ஐந்து வருடங்களுக்கு மேற்படாமலுமுள்ள காலங்களுக்காகச் சில குறிப்பிட்ட செயல்களுக்குக் கடனுக வழங்க ஒரு நிதி வங்கிக்கு அல்லது நாணயச் சங்கத்திற்கு அனுமதியளிக்கப் பதிவாளருக்கு உளவுத் தேர்வு அதிகாரம் உண்டு [விதி 43(1)-ன் விலக்குக்கூறு].

(8) ஒரு சங்கத்தின் நிதிகளை, நிலம் வாங்குவதிலும் அல்லது நிலம் குத்தகையெடுப்பதிலும் அல்லது சங்கத்தின் செயலகமாகப் பயன்படுத்த எந்தக் கட்டடத்தை வாங்குவதிலும் அல்லது கட்டுவதிலும் அல்லது புனர் அமைப்பதிலும், முதலீடு செய்வதற்காகப் பதிவாளரின் அளிப்படைவு தேவை (விதி 44).

(9) தமிழ் நாட்டுக் கூட்டுறவு ஒன்றியத்திற்கு ஒப்படைக்கப்பட்ட கூட்டுறவுக்கல்வி நிதியை (Co-operative Education Fund) நிருவகிக்க ஐந்து நபர்களுக்கு மேற்படாத ஒரு குழுவை அமைக்கப் பதிவாளர் அதிகாரம் பெற்றிருக்கிருர். இந்த ஐந்து நபர்களில் இருவர் தமிழ் நாட்டுக் கூட்டுறவு ஒன்றியத்தின் நிருவாகக் குழு உறுப்பினர்களாக இருக்க வேண்டும் [விதி 46 (6) (v)].

(10) ஒரு விநியோகச் சங்கம் (Stores Society) உறுப்பினர் அல்லாதவர்களுக்குத் தன் சரக்குகளை விற்பதற்குப் பதிவாளர் அனுமதி அளிக்கலாம் (விதி 49).

(11) ஒவ்வொரு கூட்டுறவு ஆண்டிற்கும் கணக்குகளைத் தணிக்கை செய்வதற்காகப் பல்வேறுவகைச் சங்கங்களால் செலுத்தப்பட வேண்டிய கட்டணங்களைப் பதிவாளர் நிருணயிக்க வேண்டும் (விதி 55).

(12) பிரிவு 86 (1)-ன் கீழ் அமர்த்தப்பட்ட ஒரு கலைப்பு அலுவலர் பதிவாளரால் எந்தச் சமயத்திலும் விலக்கப் படலாம் [விதி 58 (எல்)]. கலைக்கப்பட்ட சங்கத்தின் உபரி நிதிகளை முடிவு செய்வதற்காகப் பதிவாளரின் முன்அங்கீகாரம் தேவைப்படுகிறது [விதி 58 (3)]. ஒரு கலைக்கப்பட்ட சங்கத்தில் கோரப்படாத தொகைகளை (Unclaimed amounts) நிதிவங்கியின் வராக் கடன் வைப்பு நிதிக்குச் (Bad Debt Reserve) சேர்ப்பதற்கும் பதிவாளரின் முன்அங்கீகாரம் தேவைப் படுகிறது [விதி 58 (கே)-ம் விதி 58 (எல்)-ம்].

(13) விதிகளின் கீழ் அறிவிப்புகளையும் அல்லது நிறை வேற்றுதல் கட்டளைகளையும் சேர்ப்பிப்பதற்கு அமர்த்தப் பட்ட நபர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டியபடி விகிதங்களை அவ்வப்போது பதிவாளர் நிருணயிக்கலாம் (விதி 73).

(14) ஜப்தி செய்யப்பட்ட சொத்துகள் ஒப்படைக்கப்பட்ட அல்லது அவை பாதுகாப்புக்கு வைக்கப்பட்ட ஓர் உறுப்பினர், முன்னுள் உறுப்பினர் அல்லது இறந்து போன உறுப்பினரின் நியமி, வாரிசு அல்லது சட்டப் படியான பிரதிநிதி எழுதிப் கொடுக்கப்பட வேண்டிய பத்திரத்தின் (Bond) நமூனாவை நிருணயிக்க பதிவாளருக்கு அதிகாரம் உண்டு [விதி 83 (1)].

(15) ஒரு அடைமான வங்கியின் செயலில் அல்லது ஒரு வீட்டு வசதிச் சங்கத்தின் நடைமுறையில், விதி 84-ல் நிருண யிக்கப்பட்ட வரம்பிற்குக் கீழே கடன் நிலுவைகள் குறைந்து விட்டால் அச்சங்கங்களின் ஊதியம் பெற்ற செயலரின் சேவைகளை நிறுத்தி விடுவதற்குப் பதிவாளரின் அளிப்படைவு தேவப்படுகிறது (விதி 84).

(16) பதிவாளர் அலுவலகத்தில் பத்திரங்களின் சான்றிடப் பட்ட நகல்களை வழங்குவதைக் குறித்து கைக்கொள்ள வேண்டிய நடைமுறையை அரசாங்கத்தின் முன் அங்கீகாரத்துடன் பதிவாளர் விதிக்கலாம் (விதி 100).

# 21. அரசாங்கத்தால் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்கப்பட்ட சலுகைகளும் விலக்குகளும்

## (Concessions and Exemptions granted by Govt. to Co-operative Societies)

1. பொது (General)

*1961*ஆம் வருடத்தியச் சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின்கீழ் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்கப்பட்ட பல்வேறு சிறப்புரிமைகளைக் குறித்து முந்தைய அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம். இந்தச் சிறப்பு உரிமைகள் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்ட சங்கங்களால் பயன்படுத்தப்படுகின்றன. சட்டத்தின்கீழ் அவைகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டு அளிக்கப் படுகின்றன. உண்மையாகவே, கூட்டுறவுச் சங்கங்களைக் கம்பெனிச் சட்டத்தின் பரப்பிலிருந்து எடுக்கப்பட்டதன் நோக்கங் களுள் ஒன்று, கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சில தனிப்பட்ட சிறப்புகளையும், விலக்குகளையும், சலுகைகளையும் வழங்குவதற் காகத்தான். இந்தச் சிறப்பு உரிமைகள் வழங்கப்படுவது கூட்டுறவுச்சங்கங்களின் கொள்கைகளையொட்டியும், நோக்கங்களை யொட்டியும், அத்தகைய சங்கங்கள் சாமானிய வருவாயுள்ள மக்களுடைய முன்னேற்றத்திற்காகவும், சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினரின் நல்வாழ்வுக்காகவும் சேவை செய்யக்கூடிய நிறுவனங்கள் என்பதுதான். இந்த நிறுவனங்களில் முதல் குவிக்கப்படாமலிருப்பதாலும் (Concentration of Capital), அல்லது அவை தன்னல அடிப்படையில் இலாபம் சம்பாதிக்கும் நோக்கம் இல்லாமலியங்குவதாலும், இந்தச் சங்கங்களின் குறிக்கோள் உறுப்பினர்களுக்குச் சேவை செய்து மக்களிடையே விவசாயத் துறையிலும் தொழில் துறையிலும் தற்சார்பு வளர்ப்பதாலும், கூட்டுறவுச் சங்கங்கள் தனிப்பட்ட சிறப்புச்

சலுகைகளையும் விலக்குகளையும் பெறுவதற்கு உரிமை பெற்றிருக்கின்றன.

2. சட்டப்படியான சிறப்புரிமைகள் (Statutory Privelages)

சுருக்கமாகக் கூட்டுறவுச் சங்கங்களின் சிறப்புரிமைகள் பின்வருமாறு :

(1) சங்கங்கள் சட்டப்படியான ஒருமித்த நிறுவனங்களாக இருக்கும் (Bodies Corporate) (பிரிவு 31).

(2) சங்கங்களிலிருந்து கடன்கள் வாங்கிய உறுப்பினர்கள் பெற்ற பயிர்கள், தளவாடங்கள், பொருள்கள்மீது அக் கடன்களை வசூல் செய்வதற்காகச் சங்கத்திற்கு ஒரு முதன்மையான பற்றுப் பொறுப்பு (First Charge) இருக்கிறது (பிரிவு 32).

(3) சில சங்கங்களிலிருந்து கடன்கள் வாங்கிய உறுப்பினர்களின் அசையாச் சொத்தின்மீது சங்கத்திற்குப் பற்றுப் பொறுப்பு உண்டு (பிரிவு 33).

(4) ஓர் உறுப்பினர் சங்கத்தில் வைத்திருக்கும் பணத்தின்மீது சங்கத்திற்கு ஒரு பற்றுப்பொறுப்பு இருப்பதோடு அவ் உறுப்பினர்கள் கொடுக்க வேண்டிய பாக்கிக்காக அத்தகைய பணத்தைப் பற்றுப்பொறுப்பு செய்வதற்குச் சங்கத்திற்கு உரிமை உண்டு (பிரிவு 34).

(5) ஒரு நிதிவங்கியில் முதலீடு செய்யப்பட்ட சங்கத்தின் சேமிப்பு நிதி (Reserve Fund) மீதும், வருங்காலச் சேமிப்பு நிதி மீதும் (Provident Fund) அச் சங்கம் நிதி வங்கிக்குக் கொடுக்க வேண்டிய பாக்கிக்காக அத்தகைய நிதித் தொகைகளைப் பற்றுப் பொறுப்பு செய்துகொள்வதற்கு நிதி வங்கிக்கு உரிமை கிடையாது (பிரிவு 35).

(6) ஒரு சங்கத்தின் உறுப்பினர்களின் பங்குத் தொகைகள் ஜப்தியிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கின்றன (பிரிவு 36).

(7) சங்கம் செலுத்தவேண்டிய கடன் பொறுப்புக்காக அதன் சேமிப்பு நிதியும் வாராக் கடன் காப்பு நிதியும் ஜப்தி செய்யப் படுவதிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது (பிரிவு 37).

(8) உறுப்பினர்கள் சேர்க்கப்பட்ட தேதிகளைக் குறித்தும் அவர்கள் உறுப்பினர் பதவியிலிருந்து நின்றுவிட்ட தேதிகளைக் குறித்தும் சங்கத்தால் வைக்கப்பட்ட உறுப்பினர்கள் பதிவேடு ஒரு மேலோட்டமான சான்று (Prima Facie) ஆகும் (பிரிவு 38).

(9) சட்டப்படியான நடவடிக்கைகளில் சங்கத்தின் ஏடுகளிலுள்ள பதிவுகள் (Entries) சான்றாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் (பிரிவு 39).

(10) சங்கத்திற்கு உறுப்பினர்களிடமிருந்து வர வேண்டிய பாக்கிக்காக உறுப்பினர்களின் சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழித்துக் கொள்வதற்குச் சங்கத்திற்கு உரிமையுண்டு (பிரிவு 40).

(11) பங்குகள்பத்திரங்களும், கடனீட்டுப் பத்திரங்களும் கட்டாயப் பதிவிலிருந்து விலக்கப்பட்டிருக்கின்றன (பிரிவு 41).

(12) வருவாய்த் துறை விற்பனையில் ஒரு சங்கம் அசையாச் சொத்தை வாங்கினால் தனக்குப் பாக்கியாகவுள்ள தொகைக்கு அதைப் பற்றுப் பொறுப்பு செய்து கொள்வதற்குச் சங்கத்திற்கு உரிமை உண்டு (பிரிவு 42).

(13) முத்திரை வரியும், பதிவுக் கட்டணங்களும் செலுத்துவதிலிருந்து சங்கம் விலக்கு அளிக்கப்பட்டிருக்கின்றது (பிரிவு 43).

(14) வருமான வரியிலிருந்து சங்கம் விலக்கு அளிக்கப் பட்டிருக்கிறது. 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தின் 30ஆம் பிரிவு நீக்கப்படாமல் இன்னும் அமலில் இருக்கிறது [பிரிவு 121 (1)].

(15) மத்தியஸ்தத்தின் மூலம் தகராறுகளைத் தீர்த்துக் கொள்வதற்குச் சங்கங்கள் அனுமதிக்கப்பட்டிருக்கின்றன (பிரிவு 73).

(16) பதிவாளரும் அல்லது அவருக்குக் கீழ்ப்பட்ட எந்த நபரும் தவணை தவறிய பாக்கிதாரர்களின் சொத்தை ஜப்தி செய்து அதை விற்பனை செய்வதன் மூலமும் அல்லது ஜப்தி செய்யாமல் அதை விற்பனை செய்வதன் மூலமும் கீழ்க்கண்ட தொகைகளை வசூல் செய்யலாம் ;

(i) ஒரு சிவில் நீதிமன்றத்தின் தீர்ப்பாணை அல்லது உத்தரவின் கீழ் கொடுக்கப்பட வேண்டிய எந்தத் தொகையையும், பதிவாளரின் முடிவு அல்லது தீர்ப்பின்கீழ் கொடுக்கப்பட வேண்டிய எந்தத் தொகையையும், அல்லது பதிவாளருக்கு கீழ்ப்பட்ட பதிவாளரால் அதிகாரம் அளிக்கப்பட்ட எந்த நபரால் அல்லது மத்தியஸ்தரால் அளிக்கப்பட்ட முடிவு அல்லது தீர்ப்பின் கீழ் கொடுக்கப்பட வேண்டிய எந்தத் தொகையும், அல்லது ஒரு நிதி வங்கி உட்பட பதிவு செய்யப்பட்ட ஒரு

சங்கத்தால் வாங்கப்பட்ட பதிவாளரின் உத்தரவின்கீழ் கொடுக்கப்பட வேண்டிய எந்தத் தொகையையும்,

(ii) சட்டத்தின் கீழ் எந்த நடவடிக்கையிலும் அரசாங்கத்திற்கு ஒரு சங்கத்தினிடமிருந்து அல்லது ஓர் அலுவலர் முன்னுள் அலுவலர், உறுப்பினர், முன்னுள் உறுப்பினர், இறந்துபோன உறுப்பினரிடமிருந்து வரவேண்டிய எந்தத் தொகையையும்,

(iii) பிரிவு 26 (4)-ன் கீழும் அல்லது பிரிவு 65 (2) (இ) (ii)-ன் கீழும் கூட்டப்பட்ட ஒரு சங்கத்தின் பேரவைக் கூட்டத்தின் செலவுகளுக்காகச் செலுத்தப்பட வேண்டுமென்று உத்தரவிடப்பட்ட எந்தத் தொகையையும்,

(iv) பிரிவு 68-ன் கீழ் ஒரு நிதி வங்கி உட்பட ஒரு சங்கத்திற்குச் செலவுகளுக்காகத் தீர்ப்பு அளிக்கப்பட்ட எந்தத் தொகையையும்,

(v) பிரிவு 87-ன் கீழ் கலைப்பு அலுவலரால் ஒரு சங்கத்தின் சொத்துகளுக்கு அல்லது செலவுகளுக்கு ஓர் உதவித் தொகையாக வசூலிக்கப்பட வேண்டுமென்று உத்தரவிடப்பட்ட எந்தத் தொகையையும்,

(vi) பிரிவு 71-ன் கீழ் ஒரு சங்கத்திற்குத் திருப்பிச் செலுத்தப்பட வேண்டுமென்றோ அல்லது சங்கத்தின் சொத்துகளுக்கு ஓர் உதவித் தொகையாக வசூலிக்கப்பட வேண்டுமென்றோ உத்தரவிடப்பட்ட எந்தத் தொகையையும்,

மேற் குறிப்பிட்ட தொகையின்மீது கொடுக்கப்பட வேண்டிய வட்டியுடனும், நிறைவேற்றுதல் கட்டளைகளின் செலவுகளுடனும் வசூலிக்கலாம் (பிரிவு 91). மத்தியஸ்தர்களின் முடிவுகளும் தீர்ப்புகளுங்கூடச் சிவில் நீதிமன்றங்களின் மூலம் நிறைவேற்றப்படலாம். சென்னைக் கிராம நீதிமன்றங்கள் சட்டத்தின்கீழ் (Madras Village Courts Act. Act I of 1889) அமைக்கப்பட்ட கிராம நீதிமன்றங்களும் இச் செயலுக்காகச் சிவில் நீதி மன்றங்களாகும்.

இந்தச் சட்டப்படியான சிறப்புரிமைகளைத் தவிர அரசாங்கம் கூட்டுறவு இயக்கம் ஆரம்பித்தது முதல் இன்றுவரையும்கூட கூட்டுறவு நிறுவனங்களுக்குப் பல்வேறு சலுகைகளையும், விலக்குகளையும், உதவிகளையும் பல்வேறு வடிவத்தில் அளித்துக் கொண்டிருக்கின்றது. இயக்கத்தின் ஆரம்ப நாள்களில் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பல்வேறு சலுகைகளையும் அளிப்பதன் மூலம்

அவைகளின் அமைப்புக்கும் வளர்ச்சிக்கும் அரசாங்கம் ஊக்கம் அளித்தது. அரசாங்கம் பல்வேறு துறைகளில் கூட்டுறவுச் சங்கங்கள் செயல்படுவதை வளர்த்தும், ஊக்கம் அளித்தும் வந்தது. நாடு சுதந்தரம் பெற்ற பிறகு, கிராம நலத்தைப் பேணுவதற்கும் நகர அபிவிருத்தியை வளர்ப்பதற்கும் ஒரு சாதனமாகக் கூட்டுறவு நடவடிக்கைகளிருந்ததால் அரசாங்கத்தின் உதவி அதிகப் படியாகவும் பல்வேறு வகைகளாகவும் பெருகிற்று.

ஒவ்வொரு ஐந்தாண்டுத் திட்டத்திலும், அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழு அறிக்கையிலும், கூட்டுறவுச் சங்கங்களுக்கு அதிகமான அரசாங்க உதவிகளின் தேவை வலியுறுத்தப்பட்டு, கூட்டுறவுத் துறைக்கு அதிகப்படியான நிதிகள் வழங்கப்பட்டன. கூட்டுறவுச் சங்கங்களை ஊக்குவித்து அவைகளின் வளர்ச்சியை ஆதரிக்கும் கட்டத்திலிருந்து இப்பொழுது கூட்டுறவு நிறுவனங்களில் அரசாங்கம் பங்கெடுத்துக் கொள்கிறது. கூட்டுறவுக் கடன் நிறுவனங்களிலும் விற்பனை நிறுவனங்களிலும் அரசாங்கப் பங்காளித்துவம் கிராமக் கடன் விசாரணை அறிக்கை வெளியிட்ட பிறகு உறுதியாகி, ஸ்டோர்ஸ் சங்கங்கள், நகர வங்கிகள் முதலியவை போன்ற இதர வகை சங்கங்களுக்கும் அரசாங்கக் கூட்டாளித்துவக் கொள்கை நீட்டிக்கப்பட்டிருக்கிறது. அரசாங்கம் கூட்டுறவு நிறுவனங்களில் பங்குகள் வைத்துக் கொள்வது மட்டுமன்றித் தன் நியமிகள் மூலம் சங்கங்களின் நிருவாகத்தில்கூடப் பங்கெடுத்துக் கொண்டு தேவையான நிருவாகிகளையும், தொழில்நுட்ப நிபுணர்களையும் அளித்து உதவி செய்கிறது.

3. விலக்குகள் (Exemptions)

(1) முத்திரை வரியிலிருந்து விலக்கு : பிரிவு 43 (அ) முத்திரை வரியிலிருந்து விலக்கு அளிப்பதற்காக வசதி அளிக்கும் ஒரு பிரிவு.

(i) கூட்டுறவுச் சங்கத்தால் அல்லது கூட்டுறவுச் சங்கத்தின் சார்பில் அல்லது கூட்டுறவுச் சங்கத்தின் ஓர் அலுவலர் அல்லது உறுப்பினரால் நிறைவேற்றப்பட்ட பத்திரங்களைக் குறித்தும் கூட்டுறவுச் சங்கத்தின் வியாபாரத் தொடர்பான பத்திரத்தைக் குறித்தும் முத்திரை வரி செலுத்துவதிலிருந்து எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களும் விலக்களிக்கப்பட்டிருக்கின்றன.

(அ) ஆனால் வீடு அமைக்கும் ஒரு கூட்டுறவுச் சங்கத்தால் கட்டப்பட்ட ஒரு வீட்டைக் குறித்து நிறைவேற்றப்பட்ட ஒரு சொத்துரிமை மாற்றுப் பத்திரங்களைப் பொறுத்தவரை அத்தகைய பத்திரம், சொத்து ஒதுக்கப்பட்டு சொத்துரிமை மாற்றப்பட்ட

ஓர் உறுப்பினருக்குச் சாதகமாகவும் அத்தகைய சொத்து ஒதுக்கப் பட்ட தேதியிலிருந்து ஐந்து வருடங்களுக்குக் குறையாத ஒரு காலம் கழியாமலிருந்தாலொழிய முத்திரை வரி விலக்கு செயல் படாது.

(ஆ) மற்றும் அத்தகைய சங்கத்திற்குச் சாதகமாக நிறைவேற்றப்பட்ட விற்பனைப் பத்திரங்களைப் பொறுத்தமட்டில் விற்பனைப் பத்திரம் நிறைவேற்றப்பட்ட தேதிக்கு முன்பு இரண்டு வருடங்களுக்குக் குறையாத ஒரு காலத்திற்குத் தொடர்ந்து அத்தகையச ங்கத்தின் உறுப்பினராக அவர் இருந்தாலொழிய முத்திரை வரி விலக்கு செயல்படாது.

(ii) எனினும், உறுப்பினர்களுக்காக வீடுகளைக் கட்டுவதை முக்கிய நோக்கமாகக் கொண்ட கூட்டுறவுச் சங்கங்களும் அல்லது உறுப்பினர்களால் வீடுகள் கட்டுவதற்கு நிதி அல்லது வசதிகள் வழங்கும் சங்கங்களும் மாநில அரசாங்கத்தின் பதிவு பெறாத ஊழியர்கள் மட்டும் அல்லது அரிசனங்கள் அல்லது கைத்தறி நெசவாளர்கள் அடங்கிய சங்கங்களும் கீழ்க்கண்ட பத்திரங்களைக் குறித்து முத்திரை வரியிலிருந்து விலக்கப்பட்டிருக்கின்றன. அதாவது சங்கங்களுக்குச் சாதகமாக நிறைவேற்றப்பட்ட அசையாச் சொத்து விற்பனை தொடர்பான பத்திரங்களைக் குறித்து, சொத்தை விற்பவர் அத்தகைய சங்கத்தில் விற்பனைப் பத்திரம் நிறைவேற்றப்பட்ட தேதிக்கு முன்பு இரண்டு வருடங் களுக்குக் குறையாத ஒரு காலத்திற்கு உறுப்பினராக இருக்க வேண்டுமென்ற ஒரு தடை, இந்தச் சங்கங்களின் நடைமுறையில் அமல்படுத்தக்கூடாது.

(iii) கூட்டுறவுச்சங்கங்கள் கட்சியினராக இருக்கும் எல்லாத் தகராறுகளிலும் மத்தியஸ்தர்களால் அளிக்கப்பட்ட தீர்ப்பு களுக்கு இந்திய முத்திரை வரியின் அனுபந்தம்-1-ன் பிரிவு 12-ன் கீழ் குறிக்கப்பட்ட முத்திரை வரியைச் செலுத்துவதிலிருந்து கூட்டுறவுச் சங்கங்கள் விலக்கப்பட்டிருக்கின்றன.

**(2) பதிவுக் கட்டணங்களைச் செலுத்துவதிலிருந்து விலக்கு**

பிரிவு 43 (ஆ) கீழ்க்கண்ட சூழ்நிலைகளில் விலக்கு அளிப்பதற் காக வசதி அளிக்கும் ஒரு பிரிவாகும்.

(அ) பதிவுச் சட்டத்தின்கீழ் எந்தச் சங்கத்தாலும் அல்லது சங்கத்தின் சார்பிலும் அல்லது அத்தகைய சங்கத்தின் எந்த அலுவலருக்கு அல்லது உறுப்பினருக்குச் சாதகமாக அல்லது அவர்கள் சார்பாக அல்லது அவர்களால் சங்கத்தின் வியாபாரத் தொடர்பாக நிறைவேற்றப்பட்ட எந்தப் பத்திரத்தைக் குறித்தும்

செலுத்த வேண்டிய எல்லாப் பதிவுக் கட்டணங்களிலும் பாதியை அரசாங்கம் நீக்கியிருக்கிறது. ஆனால், ரூ. 5,000/க்கு மேற்கொண்டு மதிப்புள்ள பத்திரங்கள் தொடர்பாகவும், ரூபாய் 5,000/க்கு மேற்பட்ட கடன்களுக்காக வில்லங்கச் சான்றிதழ்களுக்கான விண்ணப்பங்கள் தொடர்பாகவும் முழு விகிதப்படிக் கட்டணங்கள் செலுத்தப்படவேண்டும்.

(i) கூட்டுறவு நிலவள வங்கியால் கொடுக்கப்படும் ரூபாய் 2,000/க்கு அதிகப்படாத கடன்களுக்கான வில்லங்கச் சான்றிதழுக்கான விண்ணப்பங்கள் தொடர்பாக ஒரு கட்டணமும் செலுத்தப்படவேண்டியதில்லை.

(ii) மேற்சொன்ன பகுதி (அ)-ன்கீழ் வாராத சூழ்நிலைகளில், ஒரே கிராமத்திலிருக்கும் சொத்தைக் குறித்து ஒரு நிலவள வங்கியால் செய்யப்பட்ட ஒவ்வொரு சான்றிதழ் விண்ணப்பத்தைக் குறித்தும் செலுத்தப்படவேண்டிய கட்டணம் ஒரே நபருக்குச் சாதகமாகவும் ஒரே சொத்து தொடர்பாகவுமுள்ள பத்திரங்களின் பதிவுகளைத் தேடுவதற்காகவும் விதிக்கப்படவேண்டிய கட்டணத்திற்குக் குறைக்கப்பட வேண்டும். அவ்வாறு குறைக்கப்படுவது சொத்துரிமையைக் குறித்து தேடியதன் முடிவு பொருட்படுத்தாமல் செய்யப்பட வேண்டும்.

(மேற்சொன்ன இனங்கள் (i)-லும், (ii)-லும் அளிக்கப்பட்ட சலுகைகள் 30-6-1965 தேதி வரை அத்தேதி உட்பட அமலில் இருக்க வேண்டும்).

(ஆ) கிராமதானக் கூட்டுறவுச் சங்கங்களும், சர்வோதயக் கூட்டுறவு சங்கங்களும் அவற்றின் உறுப்பினர்களும் பத்திரங்களை நிறைவேற்றுவதற்கும், வில்லங்கச் சான்றிதழ்கள் வாங்குவதற்கும் செலுத்த வேண்டிய பதிவுக் கட்டணங்களைக் குறித்து முழு விலக்கு அளிக்கப்பட்டுள்ளன. கிராமதானக் கிராமங்களில் சங்கங்களுக்குச் சாதகமாக எழுதப்படும் அன்பளிப்புப் பத்திரங்களைப் பதிவு செய்தல் தொடர்பாக தனிப்பட்ட நபர் இல்லங்களுக்குப் பதிவுத் துறைப் பதிவாளர் வருவதற்கான கட்டணமும் விலக்கப்பட்டிருக்கிறது.

(இ) அட்டவணைக் குலத்தினர் (Scheduled Castes) பெரும்பான்மையாக உறுப்பினர்களாக இருக்கும் சங்கங்களுக்கும், இதர கூட்டுறவுச் சங்கங்களின் அட்டவணைக் குலத்தைச் சார்ந்த உறுப்பினர்களுக்கும், பதிவுக்காகச் செலுத்தப்பட வேண்டிய கட்டணங்களிலிருந்தும் வில்லங்கச் சான்றிதழ்கள் வாங்குவதற்காகச் செலுத்தப்பட வேண்டிய கட்டணங்களிலிருந்தும் முழு விலக்கு அளிக்கப்பட்டுள்ளது.

### (3) விற்பனை வரியிலிருந்து விலக்கு

இது இதர வித நிதி உதவியின்கீழ் வரலாம் [பிரிவு 56 (எப்)]. மாவட்ட விநியோக விற்பனைச் சங்கங்கள் தன்னுடன் இணைக்கப் பட்ட பிரதம சங்கங்களுக்குச் செய்யும் விற்பனைகள் விற்பனை வரியிலிருந்து விலக்கப்பட்டிருக்கின்றன. பால் வழங்கும் சங்கங் களும் பால் வழங்கும் ஒன்றியங்களும் உண்மையில் பால் நுகர் வோர்களுக்குச் செய்யும் விற்பனைகளும், அத்தகைய சங்கங்களால் அல்லது ஒன்றியங்களால் உற்பத்தி செய்யப்பட்ட பால் உற்பத்திப் பொருள்களும் (Milk Products) தவிர, அவற்றின் மற்ற எல்லா விற்பனைகளைக் குறித்தும் செலுத்தப்பட வேண்டிய விற்பனை வரியிலிருந்தும் அவை விலக்கப்பட்டிருக்கின்றன. அச் சங்கங்கள் உண்மையில் நுகர்வோர்களுக்குச் செய்யும் விற்பனைகளைக் குறித்தும்கூட குறைக்கப்பட்ட விற்பனை வரிதான் அத்தகைய மொத்த விற்பனையினால் விதிக்கப்பட்டிக்கிறது.

### (4) வருமான வரியிலிருந்து விலக்கு

1932ஆம் வருடத்திய VI ஆம் சட்டத்தின் 30ஆம் பிரிவு ரத்து செய்யப்படாமல் இன்னும் அமலிலிருக்கிறது. இந்தப் பிரிவு விலக்களிப்பதற்கு வசதி செய்யும் ஒரு பிரிவு. நில வள வங்கிகள், ஊழியர்கள் நாணயச் சங்கங்கள், விற்பனைச் சங்கங்கள், பதனப் படுத்தும் சங்கங்கள் உட்பட எல்லாக் கூட்டுறவு வங்கிகளும் வருமான வரியிலிருந்து முழு விலக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. பதனப்படுத்தும் சங்கங்கள் என்றால், கைக்குத்தல் அரிசி சங்கங்கள் முதலியவை போன்ற மின்சார உதவியில்லாமல் உறுப்பினர்களின் விவசாய விளை பொருள்களைப் பதனப்படுத்துவதில் ஈடுபட் டிருக்கும் சங்கங்களும், உறுப்பினர்களால் உற்பத்தி செய்யப் பட்ட பாலைப் பால் வழங்கும் ஒன்றியங்களுக்கு வழங்குவதில் ஈடுபட்டிருக்கும் பிரதம பால் வழங்கும் சங்கங்களும் என்பன வாகும். இதர எல்லாச் சங்கங்களும் தம் வியாபார இலாபங்கள் ரூ. 15,0001-க்கு மேற்பட்டால் மட்டும்தான் வருமான வரியைச் செலுத்துவதற்குக் கடமைப்பட்டிருக்கின்றன.

சர்க்கரை ஆலைகள், போன்ற பதனப்படுத்தும் கூட்டுறவுச் சங்கங்கள் மின்சாரத்தைப் பயன்படுத்தும் அந்த நிறுவனங்களில் அவை உற்பத்தி தொடங்கி பொருள்களை உற்பத்தி செய்ய ஆரம்பித்த முந்தைய வருடத்திற்குப் பின்னால் வரும் நிதி வருடத்திற்காகப் பயன்படுத்தப்பட்ட மூலதனத்தின்மீது வருடம் ஒன்றுக்கு 80%-க்கு மேற்படாத இலாபங்களின்மீது வருமானவரி விதிப்பிலிருந்து விலக்கப்பட்டு இருக்கின்றன. அதற்குப் பிந்திய

வருடங்களுக்குகூடக் அத்தகைய விலக்கு உண்டு. தற்போது வருமான வரியிலிருந்து முழு விலக்கு அளிக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களிலிருந்து பெற்ற இலாப ஈவுகள் ஒரு வருடத்திற்கு ரூ. 3,000/-வரை வருமான வரியிலிருந்து விலக்குக்காகத் தகுதியுள்ள வருமான வகுப்பில் (Categoris of Income) சேர்க்கப் படலாம்.

16-3-1972 தேதியன்று இந்தியப் பாராளுமன்றத்தில் 1972-73 ஆண்டிற்கான பொது வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பிக்கும் போது இந்திய நிதி மந்திரி திரு. ஒய். பீ. சவாண் அவர்களால் இந்தத் திட்டம் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டத்தைப்பற்றி அவர் கீழ்வருமாறு கூறியிருக்கிறார். 'கூட்டுறவுச் சங்கங்களிலிருந்து பெறப்படும் இலாப ஈவுகள் தற்போது வருமான வரியிலிருந்து முழு விலக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. இந்த விதி விலக்கு சரி என்று எனக்குத் தோன்றவில்லை. ஆகையால், அதைத் திரும்பப் பெற நான் உத்தேசிக்கின்றேன். எனினும் அத்தகைய இலாப ஈவுகள் ஒரு வருடத்திற்கு ரூ. 3,000/- வரை வருமான வரியிலிருந்து விலக்கப்பட தகுதி பெற்ற வருமானப் பட்டியலில் சேர்க்கப்படலாம்'.

5. இதர பலவகைச் சலுகைகள் (Other miscellaneous concessions) பொது

(i) வரையறுக்கப்படாத பொறுப்பு கிராம நாணயச் சங்கங்களில் உறுப்பினர்களின் சொத்துப் பட்டியலைத் தயார்செய்வதற்கு வசதி செய்து அத்தகைய சங்கங்களின் உறுப்பினர்களின் சொத்தின் சர்வே எண்கள் மற்றும் இதர விவரங்களைப் பற்றிய தகவல்களை அத்தகைய சங்கங்களின் செயலாளர்களுக்குக் கிராம அலுவலர்கள் (Village Officers) வழங்கவேண்டும்.

(ii) கட்டணம் செலுத்தாமல் பதிவு ஆவணங்களைப் பரிசோதனை செய்து குத்தகை விவரங்களையும், விற்பனை விவரங்களையும் சேகரிப்பதற்கு, நிலவள வங்கியின் கூட்டுறவு உதவிப் பதிவாளர்களுக்கும் வீடு அடைமான சங்கங்களின் கூட்டுறவு உதவிப் பதிவாளர்களுக்கும் அரசாங்கம் அனுமதி அளித்திருக்கிறது. கூட்டுறவு விவசாயப் பண்ணைச் சங்கங்களின் அமைப்புக்குத் தொடர்பான கூட்டுறவுத் துறை அலுவலர்கள் சங்கங்களின் உறுப்பினர்களின் நிலத்தின் மீது வில்லங்கங்களைத் தெரிந்து கொள்வதற்காகப், பதிவு ஆவணங்களை இலவசமாகப் பார்ப்பதற்கு அரசாங்கத்தால் அனுமதி அளிக்கப்பட்டிருக்கின்றனர்.

(iii) அரசாங்கம் கீழ்க்கண்ட வகைச் சங்கங்களுக்குத் தணிக்கைக் கட்டணம் செலுத்துவதிலிருந்து விலக்கு அளித்திருக்கின்றது.

(அ) எல்லா உறுப்பினர்களும் அல்லது பெரும்பாலான உறுப்பினர்களும் அரிசனங்களாக அல்லது மீனவர்களாக இருக்கும் எல்லாச் சங்கங்களும்.

(ஆ) கிராம வங்கிகள், விவசாய வங்கிகள், நிலவள வங்கிகள் நாணய ஒன்றியங்களைத் தவிர மற்ற எல்லா வரையறுக்கப்படாத அல்லது வரையறுக்கப்பட்ட பொறுப்பு பிரதம விவசாய நாணயச் சங்கங்களும்.

(இ) கூட்டுறவுப் பயிற்சி நிறுவனங்கள்.

(ஈ) மேற்பார்வை ஒன்றியங்கள்.

(உ) தங்கள் வியாபாரத்தைத் தொடங்கிய தேதியிலிருந்து ஆறு வருடங்கள் முடிவு பெறுமலுள்ள கைத்தறி நெசவாளர் சங்கங்களும் பால் வழங்கும் சங்கங்களும்.

(ஊ) தங்கள் வியாபாரம் தொடங்கிய தேதியிலிருந்து ஐந்து வருடங்கள் முடிவு பெறுமலிருக்கும் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள்.

(எ) மேற்சொன்ன (அ)-லிருந்து (ஊ) வரையுள்ள இனங்களில் குறிக்கப்பட்ட சங்கங்களைத் தவிர, தங்கள் வியாபாரத்தைத் தொடங்கிய தேதியிலிருந்து மூன்று வருடங்கள் முடிவு பெறுமலிருக்கும் எல்லா பிரதம சங்கங்களும். (ஆனல்) இந்த விலக்கு கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளுக்கும் கூட்டுறவு நூற்பு ஆலைகளுக்கும் கிடையாது).

(ஏ) தங்கள் சொந்தச் செலவில் தங்கள் கணக்குகளைத் தணிக்கை செய்யும் சங்கங்கள்.

(ஐ) எனினும், தணிக்கைக் கட்டணங்களிலிருந்து மேற்கூறிய விலக்கு சங்கங்கள் தங்கள் நிகர இலாபங்களிலிருந்து விதி 48 (2) (அ)-ல் நிருணயித்தபடி தணிக்கை நிதிக்குச் செலுத்தும் பொறுப்பிலிருந்து மேற்சொன்ன சங்கங்களையெடுத்துவிடாது.

(iv) ஒரு கூட்டுறவுச் சங்கம் அரசாங்கக் கருவூலங்களில் மாவட்ட ஆட்சியாளரின் ஒப்புதலுக்குட்பட்டு தக்க நிபந்தனை

களின்பேரில் தன் பணப் பெட்டியைப் (Strong Box) பாதுகாப்புக் காக வைக்கும் சிறப்புரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது.

(v) ஒரு பெயரளவான வருடாந்தரக் கட்டணத்தைச் செலுத்தி கூட்டுறவுச் சங்கங்கள் மாவட்ட அரசிதழின் தாலூக்கா தாள்களையும் கிராமத் தாள்களையும் பெறலாம்.

5. அரசாங்க உதவி (State Aid)

கூட்டுறவு நிறுவனங்களுக்கு அரசாங்க உதவியும் ஆதரவும் பல்வேறு வடிவங்களில் அளிக்கப்படுகின்றன.

(1) மேற்கூறியவாறு சட்டத்தின் கீழ் சிறப்புரிமைகள் (Privelages).

(2) சட்டத்தின்கீழ் ஏற்படுத்தப்பட்ட விலக்குகள் (Exemptions) (உதாரணம்: முத்திரை வரி, பதிவுக் கட்டணங்கள் முதலியவை செலுத்துவதிலிருந்து விலக்கு).

(3) சலுகைகள் (Concessions) (உதாரணம்: வில்லங்கச் சான்றிதழ்கள் கிராம நாட்டுப் படங்கள் (Village Maps) முதலிய வற்றையும் பெறுவதற்கு வசதி.

(4) நிதி உதவியும் நிருவாக உதவியும் (Financial & Administrative Assistance) (உதாரணம்: கடன்களும், மானியங்களும்).

சட்டத்தின் கீழ் அளிக்கப்பட்ட சிறப்புரிமைகளைக் குறித்து விரிவாக முந்தைய ஓர் அத்தியாயத்தில் விளக்கம் தரப்பட்டிருக் கின்றது. இந்த அத்தியாயத்தில் ஏனைய அரசாங்க உதவிகள் விளக்கப்படும்.

**நிதி உதவியும் நிருவாக உதவியும்:** சங்கங்களுக்கு உதவியை ஏற்பாடு செய்வதற்கு வசதி செய்யும் சட்டப் பிரிவு 56ஆம் பிரிவு ஆகும். சங்கங்களுக்களிக்கப்படும் அரசாங்க உதவியைச் சுருக்கமாகப் பின்வரும் தலைப்புகளின்கீழ் வகைப்படுத்தலாம்.

(i) சங்கங்களின் பங்கு மூலதனத்தில் பங்கு கொள்ளுதல் (பிரிவு 44, 45, 47).

(ii) பல்வேறு செயல்களுக்காகக் கடன்களும் மானியங் களும் அளித்தல்.

(iii) வைப்புத் தொகைகள், கடனீட்டுப் பத்திரங்கள், கடன்கள் இவைகளைத் திருப்பிச் செலுத்துவதற்கான உத்தர வாதம் அளித்தல்.

(iv) நிருவாகத்திற்காகவும் அல்லது இதர வேலைகளுக்காகவும் அரசாங்க ஊழியர்களின் சேவைகளை ஏற்பாடு செய்தல்.

(V) பொதுத் தன்மையான இதர சலுகைகள்: பங்கு மூலதனத்தில் அரசாங்கம் பங்கு கொள்ளுதல் (பிரிவு 44, 45, 47). பிரதம மட்டத்திலும், மாவட்ட மட்டத்திலும், மாநில மட்டத்திலும், நாணயச் சங்கங்களின் பங்கு மூலதனத்திலும், விற்பனைச் சங்கங்களின் பங்கு மூலதனத்திலும் அரசாங்கம் பங்கு கொண்டிருக்கிறது. சர்க்கரை ஆலைகளும், நூற்பு ஆலைகளும் போன்ற பதனப்படுத்தும் சங்கங்களின் பங்கு மூலதனத்திலும் அரசாங்கம் பங்கு கொண்டிருக்கிறது. நாணயச் சங்கங்களின் பங்கு மூலதனத்தில் அரசாங்கம் முதலீடு செய்வது அச் சங்கங்களின் மூலதனத்தின் அஸ்திவாரத்தைப் பலப்படுத்தவும், சங்கங்களின் வளங்களும் கடன் வாங்கும் சக்தியும் அதிகரித்துத் தவணை தவறிய பாக்கியால் வரும் அதிர்ச்சியைத் தாங்கி தங்கள் நாணய உதவியையும் மற்றப் பணிகளையும் செய்வதற்குப் போதுமான நிதிகளைப் பெறுவதற்குமே. விற்பனைச் சங்கங்கள் பதனப்படுத்தும் பொறிகளை அமைப்பதற்கு வசதி செய்வதும் அவற்றின் நடைமுறை முதலை அதிகரிப்பதும் தான் அந்தச் சங்கங்கள் பங்கு மூலதனத்தில் பங்கு கொள்வதன் நோக்கம். சர்க்கரை ஆலைகளிலும், நூற்பு ஆலைகளிலும் அவ்வாலைகளின் மூலதனத் தேவைகளில் ஒரு பகுதியை உதவும் நோக்கத்துடன் அரசாங்கம் உதவித் தொகை அளிக்கிறது.

தமிழ் நாட்டு மாநிலக் கைத்தறி நெசவாளர் பங்கு மூலதனத்திற்கும் அரசாங்கம் உதவித் தொகை அளித்திருக்கிறது. அதே போன்று தமிழ் நாட்டு மத்திய வீடு அடைமான வங்கிக்கும் தமிழ் நாட்டு மத்திய நில வள வங்கிக்கும் அரசாங்கம் உதவித் தொகை அளித்திருக்கிறது. மாவட்ட விநியோக விற்பனைச் சங்கங்களின் பங்கு மூலதனத்திலும் பிரதமக் கூட்டுறவு ஸ்டோர்ஸ் சங்கங்களின் மூலதனத்திலும் மத்திய அரசாங்கத்தால் ஆதரிக்கப்பட்ட நுகர்வோர் திட்டத்தை அமல்படுத்துவதற்கும் அச் சங்கங்களின் நிதி வளங்களை வளப்படுத்துவதற்கும்கூட அரசாங்கம் பங்கு கொண்டிருக்கிறது.

அண்மையில் இந்திய ரிசர்வ் வங்கி தன் தேசிய நீண்ட கால (செயல்) நிதியிலிருந்து (National Long Term Operations Fund), மாநில அரசாங்கத்திற்கு நிதி உதவி அளிப்பதற்கு உறுதி கூறியிருக்கிறது. இந்த உதவியின்மூலம் மாநில அரசாங்கங்கள் நகர வங்கிகளின் பங்கு மூலதனத்தில் ஒரு மிகப் பொறுக்கு அடிப்படையின்பேரில் (Selective basis) ஈடுபாடு கொள்ள வசதி

ஏற்படுகிறது. இந்த வங்கிகள் சிறு தொழில்களுக்கு நிதி வழங்கும் தொடர்புடைய உற்பத்தி நடவடிக்கைகளில் ஈடுபட்டோ அல்லது அக்கறை கொண்டோ இருந்தால்தான் அத்தகைய நிதி உதவி அளிக்கப்படும். ஆனல், இந்த நிதி வசதியைத் தமிழ்நாட்டிலுள்ள நகர வங்கிகள் கணிசமான ஓர் அளவுக்கு இன்னும் பயன்படுத்திக் கொள்ளவில்லை.

தமிழ்நாட்டில் 31-3-1971 தேதியில் நாணய நிறுவனங்களின் பங்கு மூலதனத்தில் செய்யப்பட்ட அரசாங்கத்தின் மொத்த முதலீடுகள் 775.36 இலட்சமாக இருந்தன. அவற்றின் விவரம் பின்வருமாறு :

தமிழ்நாட்டு மாநிலக் கூட்டுறவு வங்கி 126 இலட்சம்; மாவட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகள் 232.85 இலட்சம், பிரதம நாணயச் சங்கங்களும், விவசாய வங்கிகளும் 167.61 இலட்சம்; தமிழ்நாட்டு மாநிலக் கூட்டுறவு நிலவள வங்கி 170 இலட்சம்; பிரதம நிலவள வங்கிகள் 43 இலட்சம்; கூட்டுறவு நகர வங்கிகள் 85 இலட்சம்; தமிழ்நாடு மத்திய வீட்டு அடைமான சங்கம் 35 இலட்சம்.

**கடன்களும் மானியங்களும்** (Loans and Subsidies) [ பிரிவு 56 (அ)-ம் (எப்-ம்) ] இவை மூன்று வகைப்படும்.

(அ) மானியமும் ஓர் அம்சமாகவுள்ள கடன்கள்.

(ஆ) கடன்கள் மட்டும்.

(இ) மானியங்கள் மட்டும்.

**(அ) மானியமும் ஓர் அம்சமாகவுள்ள கடன்கள் :** குறிப்பிட்ட செயல்களுக்காக பல்வேறு சங்க வகைகளுக்காக ஏற்படுத்தப்பட்ட உதவித் திட்டத்தின்படி வழங்கப்படுகின்றன. அத்தகைய உதவி நாணயச் சங்கங்களாலும், விற்பனைச் சங்கங்களாலும் கிடங்குகள் கட்டுவதற்காகவும், விவசாய வங்கிகள், கிராம வங்கிகள் மேற்பார்வை ஒன்றியங்கள் இவைகளுக்காக அலுவலகக் கட்டடங்கள் கட்டுவதற்காகவும், பதனப்படுத்தும் பொறிகளை அமைப்பதற்காகவும், நிலங்களைச் சீர்திருத்துவதற்காகவும் விவசாயப் பண்ணைச் சங்கங்களால் நீர்ப்பாசன வசதிகள் ஏற்படுத்துவதற்காகவும் விவசாயக் கருவிகள் வாங்குவதற்காகவும் வழங்கப்படுகிறது. கடன்களும், மானியங்களும் தொழில் நிறுவனங்களின் ஊழியர்கள் வீட்டு வசதிச் சங்கங்களுக்கும்கூட வழங்கப்படுகின்றன. பால் வழங்கும் சங்கங்களுக்கும், பால் வழங்கும் ஒன்றியங்களுக்கும் பதனப்படுத்தும் பொறிகளை அமைப்பதற்

காகவும் பாலைச் சுகாதார முறையில் கையாளுவதற்குப் பொறிகளை வாங்குவதற்கும் அழிவிலிருந்து காப்பாற்றப்படும் மாட்டுப் பண்ணைகள் (Selvage Farms) முதலியவற்றை நடத்துவதற்காகவும் கடன்களும் மானியங்களும் அளிக்கப்படுகின்றன.

(ஆ) கடன்கள் மட்டும் : குறுகிய காலக் கடன்களும், மத்திய காலக் கடன்களும் பால் வழங்கும் சங்கங்களுக்குத் தன் உறுப்பினர்கள் கறவை மாடுகளையும் அதிக பால் கொடுக்கும் மாடுகளையும் (High-yielding Heifers) வாங்குவதற்குக் கொடுக்கப்படுகின்றன. நீண்ட காலக் கடன்கள் பல்வேறு வீட்டு வசதித் திட்டங்களின் கீழ் வீட்டு வசதிக் கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கொடுக்கப்படுகின்றன.

(இ) மானியம் மட்டும் : நிருவாக ஊழியர்களை வைத்துக் கொள்வதற்காக நாணயக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும், கூடுதலான மேற்பார்வையாளர்களின் சம்பளத்தைக் கொடுப்பதற்காக மத்திய வங்கிகளுக்கும், நிலவள வங்கிகளுக்கும், கிடங்குகளை வாடகைக்கு எடுப்பதற்காக விற்பனைச் சங்கங்களுக்கும், உறுப்பினர்களால் செலுத்தப்பட வேண்டிய பங்கு மூலதனத்திற்காக விவசாயப் பண்ணைச் சங்கங்களுக்கும் மானியங்கள் மட்டும் வழங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அரிசனங்களுக்காகத் தனியாக அமைக்கப்பட்ட பால் வழங்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு நாற்காலி, மேசை முதலிய வகைகளையும் மற்ற தளவாடங்களையும் வாங்குவதற்காகவும், பால் கறக்கும் தொழுவங்களை அமைப்பதற்காகவும் நிருவாக ஊழியர்களின் சம்பளத்திற்காகவும் மானியங்கள் மூலம் உதவி அளிக்கப்படுகின்றன.

(ஈ) அரசின் உத்தரவாதம் (Government Guarantee) [பிரிவு 56 (அ) (இ) (ஈ) (உ)] : தமிழ்நாடு மாநில நிலவள வங்கியால் வெளியிடப்படும் கடனீட்டுப் பத்திரங்களின்பேரில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய அசலையும் முதலையும் அரசினர் உத்தரவாதம் அளித்திருக்கின்றனர். அவ்வாறு அளிக்கப்பட்டிருக்கும் உத்தரவாதத்தின் உச்ச வரம்பு அண்மையில் ரூ. 125 கோடிக்கு உயர்த்தப்பட்டிருக்கிறது. இந்திய ஸ்டேட் வங்கிக்குக்கூட (State Bank of India) ரூ. 2 கோடி வரம்புக்குட்பட்டு அந்த வங்கியால் தமிழ்நாடு மாநில நிலவள வங்கிக்கு அளிக்கப்பட்ட ரொக்கக் கடன் வசதியின்பேரில் (Cash Credit Accommadation) அந்த வங்கி வாங்கியிருக்கும் கடன்களையும் முன் பணங்களையும் திருப்பிச் செலுத்துவதற்காக அரசின் உத்தரவாதம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

முழு நிதித் திட்ட (Full Finance Scheme) எல்லைகளிலிருக்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அச் சங்கங்களின் பயிரிடும் குத்தகைக் காரர், விவசாயி உட்பட கடைநிலை விவசாயிகளுக்கு (Marginal and Sub-Marginal Cultivators) வழங்கிய குறுகிய காலக் கடன் களிலும், மத்திய காலக் கடன்களிலும் 10% வரம்புக்குட்பட்டு அந்தத் தனிப்பட்ட நபருக்கு வழங்கிய கடனில் 2/3 அளவுக்குக் கடன்களை பற்றுப் பொறுப்பு செய்வதற்கு அரசின் ஆதரவு கொடுக்கப்பட்டிருக்கிறது. தீவிர விவசாய எல்லைத் திட்டத்தின் (Intersive Agricultural Area Programme) கடன்கள் வழங்குவதற் காகத் தஞ்சை மாவட்டத்தில் மத்திய வங்கிகளுக்கு இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் பிரிவு 17 (4) (இ)-ன்கீழ் அளிக்கப் பட்ட குறுகிய காலக் கடன் வரம்புத் தொகைக்காக இந்திய ரிசர்வ் வங்கிக்குச் சாதகமாக ஒரு தொடர்ந்த உத்தரவாதப் பத்திரம் அரசாங்கம் நிறைவேற்றிக் கொடுத்திருக்கிறது. மதுரை மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிக்கும் மதுரை மாவட்டத்தில் கள்ளர் நாணயச் சங்கங்களுக்கு அச் சங்கங்களின் உறுப்பினர் களின் நிலுவையிலிருக்கும் கடன்கள் திருப்பிக் கொடுப்பதற்கு ரூ. 4,000/ வரை அரசினர் உத்தரவாதம் அளித்திருக்கின்றனர்.

தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு 36 மாதங்களுக்கும் அதற்கு மேற்பட்ட காலத்திற்கும் வாங்கப்பட்ட தவணை வைப்புத் தொகைகளின் அசலையும் வட்டியையும் திருப்பிக் கொடுப்பதற்கும் ரூ. 125 இலட்சம் உச்ச வரம்புக்குட்பட்டும் மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகள் வாங்கும் தவணை வைப்புத் தொகைகளின் அசலையும் வட்டியையும் திருப்பிக் கொடுப்பதற்கு ரூ. 30 இலட்சம் உச்ச வரம்புக்குட்பட்டும் அரசினர் உத்தரவாதம் அளித்திருக்கின்றனர். தமிழ்நாடு கூட்டுறவு மத்திய வீட்டு அடைமானச் சங்கத்திற்கும் அது ஆயுள் ஈட்டுறுதிக் கூட்டுருவிடமிருந்து (Life Insurance Corporation) வாங்கும் கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கும் ரூபாய் இரண்டு கோடி அளவுக்கும் பொதுமக்களிடமிருந்து வாங்கும் தவணை வைப்புத் தொகைகளைத் திருப்பிக் கொடுப்பதற்கு ரூபாய் 50 இலட்சம் வரை அரசினர் உத்தரவாதம் அளித்திருக்கின்றனர். கூட்டுறவு நிறுவனங்களுக்களிக்கப்பட்ட அரசின் உத்தரவாதம் கூட்டுறவுத் துறையில் பொதுமக்கள் முதலீடு செய்வதை வளர்ப்பதற்கும் முதலீடு செய்யும் பொதுமக்களிடையே அதிகப்படியான நம்பிக்கையைப் பெறுவதற்கும் பேருதவியாக இருக்கின்றது. கூட்டுறவு வங்கிகளும் நிறுவனங்களும் தங்கள் செயல்பாட்டிற்காகத் தேவைப்படும் நிதிகளைத் திரட்டுவதற்குக் கூட இந்த அரசின் உத்தரவாதம் பயனுள்ளதாக இருக்கிறது.

**சங்க நிருவாகத்திற்காகவும் இதர பணிகளுக்காகவும் அரசின் ஊழியர்களை உதவுதல் [பிரிவு 56 (எப்)] :** தங்கள் அலுவல்களை நிருவாகம் செய்வதற்குச் சங்கங்கள் கோரும் பயிற்சி பெற்ற அரசின் ஊழியர்களின் சேவைகளை அரசாங்கம் அளித்து வந்திருக்கிறது. பொதுவாக அத்தகைய அரசின் அலுவலர்களின் சேவைகள் சங்கங்களுக்கு அடிப்படை விதி (Fundamental Rules) 127-ன் நிபந்தனைகளின் கீழ் அல்லது அயல் பணி (Foreign Service) நிபந்தனைகளின் கீழ் செலுத்தப்பட வேண்டிய செலவுகளின் பேரில் கொடுக்கப்படுகின்றன. தகுதியுள்ள நிலைகளில் அதாவது சங்கங்களின் நிதி வளங்கள் குறைவானதாகவும் அல்லது அலுவலர்களின் செலவுகளைச் செலுத்துவதற்குப் போதாததாகவும் இருந்தால் குறிப்பாகச் சங்கங்களின் செயல்பாடு ஆரம்ப நிலையில் இருந்தால் அரசினர் தங்கள் அலுவலர்களின் சேவையைப் போதுமான காலத்திற்கு இலவசமாகவும் அல்லது சங்கங்களின் நிதி நிலைமையையும் அவைகளின் தனிப்பட்ட தேவைகளைக் கடைப்பிடித்தும் வருடா வருடம் அதிகமாகச் செலுத்த வேண்டிய அடிப்படையின் பேரிலும் (Sliding scale basis) அரசாங்கம் அளிக்கிறது. கூட்டுறவுத் துறையின் அலுவலர்கள் மட்டுமல்லாமல் இதர துறைகளில் இருக்கும் அரசினர் ஊழியர்களின் சேவைகள் கூட சங்கங்களுக்குக் கடனுகை அளிக்கப்படுகிறது. விவசாயத் துறையைச் சேர்ந்த விவசாய மேஸ்திரிகள், நிலப்பணியாளர்கள் (Field men) முதலியவர்களின் பணி விவசாயப் பண்ணைக் கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடன் அடிப்படையில் கொடுக்கப்படுகிறது.

பால் வழங்கும் சங்கங்களுக்கும், கால் நடை வளர்ப்புச் சங்கங்களுக்கும், கோழிப் பண்ணைச் சங்கங்களுக்கும் கால் நடை பராமரிப்புத் துறையிலிருந்து கால் நடை காப்பாளர்கள் (Strchmen) கோழி இன வளர்ச்சிப் பணியாளர் முதலியவர்களின் பணி (Poultry Field men) கொடுக்கப்படுகிறது. வீடு கட்டும் வேலையை மேற்கொள்ளும் வீட்டு வசதி தொழில் ஒப்பந்தச் சங்கங்களுக்குப் பொதுப்பணித் துறை மேற்பார்வையாளர்களின் சேவைகள்கடனுகை அளிக்கப்படுகின்றன.

இணைப்பு I

# சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம், 1961

(1961ஆம் வருடத்திய 53ஆம் எண்ணுள்ள சட்டம்)

(சென்னை மாநிலத்தில் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றிய சட்டத்தைத் திருத்துவதற்காகவும், தொகுப்பதற்காகவும், அவற்றின் அமைப்பிற்காக முன்னிலும் சிறந்த ஏற்பாடு செய்வதற்காகவுமான சட்டம்)

## தோற்றுவாய்

பொதுவான பொருளாதாரத் தேவைகளையுடைய நபர்களிடையே சிக்கனத்தையும் சுய உதவியையும் பரஸ்பர உதவியையும் வளர்ப்பதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களின் அமைப்பையும் செயல்பாட்டையும் மேலும் வசதிப்படுத்தும் பொருட்டும், அதன் மூலம் விவசாயத்திலும் தொழிலிலும் சீர்திருத்தத்தைக் கொண்டு வருவதற்காகவும், உற்பத்தி முறைகளையும், தொழில் முறைகளையும், வாழ்க்கை முறைகளையும் முன்னிலும் சிறந்த வகையில் நடத்துவதற்காகவும், அந்தச் செயலுக்காக சென்னை மாநிலத்தில் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றிய சட்டத்தைத் திருத்தித் தொகுப்பது பொருத்தமாக இருப்பதால், இந்தியக் குடியரசின் 12ஆம் வருடத்தில், பின்வருமாறு சட்டம் இயற்றப்படுகிறது.

## அத்தியாயம் I

## பீடிகை

**1. தலைப்புச் சுருக்கம், பரப்பு, தொடக்கம்**

*(1) இச்சட்டம் 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்கள் சட்டம் என அழைக்கப்பெறும்.*

(2) இது தமிழ்நாடு முழுவதற்கும் விரிவுறும்.

(3) அறிவிக்கையின் மூலம் அரசினர் குறிப்பிடும் தேதியன்று இது அமலுக்கு வரும்.

2. **சொற்பொருள் விளக்கங்கள் :** இச் சட்டத்திலே, சூழ்நிலே வேறு பொருளைக் குறித்தாலன்றி, மற்றபடி :

(1) 'உப-விதிகள்' என்பது, தற்காலத்தில் அமலிலிருக்கும் பதிவான உப-விதிகள் எனப் பொருள்படும்; உப-விதிகளின் பதிவான திருத்தம் என்பதும் இதில் அடங்கும்.

(2) 'குழு' என்பது, பதிவு செய்யப்பட்ட சங்கம் ஒன்றின் நிருவாகம் அளிக்கப்பட்டுள்ள நிருவாகக் குழு எனப் பொருள் படும்.

(3) 'கூட்டுறவு ஆண்டு' என்பது, யாதோர் ஆண்டின் ஜூலை மாதம் முதல் தேதியன்று ஆரம்பித்து, அடுத்த ஆண்டு ஜூன் மாதம் 30ஆம் தேதியோடு முடிவடைகின்ற காலம் எனப் பொருள்படும்; அல்லது பதிவான சங்கத்தின் யாதோர் அல்லது யாதொரு பதிவான சங்கங்கள் வகையின் கணக்குகள் பதிவாளரின் முன் அனுமதியுடன் வேறு தேதி வரை எழுதப் பட்டால், அச் சங்கத்தின் அல்லது சங்கங்களைப் பொறுத்தவரை, அத் தேதியுடன் முடிவடைகிற ஆண்டு எனப் பொருள்படும்.

(4) 'நிதி வங்கி' என்பது, பதிவான மற்ற சங்கங்களுக்குக் கடன் கொடுப்பதையே தன் முக்கிய நோக்கமாகக் கொண்ட பதிவான சங்கம் எனப் பொருள்படும்.

(5) 'அரசினர்' என்பது, மாநில அரசினர் எனப் பொருள் படும்.

(6) 'உறுப்பினர்' என்பது, சங்கம் ஒன்றைப் பதிவு செய்யக் கோரும் விண்ணப்பத்தில் கையெழுத்திட்டுள்ள நபர் என்றும், அச் சங்கம் பதிவான பிறகு இச் சட்டம், விதிகள், உப-விதிகள் ஆகியவற்றைப் பின்பற்றி அதன் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்ட நபர் என்றும் பொருள்படும். பெயரளவு அல்லது துணைஞர் உறுப்பினர் என்பதும் இதில் அடங்கும்.

(7) 'பெயரளவு' அல்லது 'துணைஞர்' 'உறுப்பினர்' என்பது, உப-விதிகளில் குறிப்பிடப்படும் ஓர் உறுப்பினருக்குள்ள சிறப் புரிமைகளையும், உரிமைகளையும் மட்டும் உடையவர் என்றும் மற்றும், உப-விதிகளில் குறிப்பிடப்படும் பொறுப்புகளுக்கு மட்டும் உட்பட்டவரென்றும் பொருள்படும்.

(8) 'அலுவலர்' என்பதில் தலைவர், உப-தலைவர், பெருந் தலைவர், துணைப்பெருந்தலைவர், செயலாளர், துணைச் செயலாளர், பொருளாளர், நிருவாகக் குழு உறுப்பினர், மேலும், சங்க அலுவலைக் குறித்துக் கட்டளைகள் பிறப்பிக்க விதிகளின் கீழ் அல்லது உப-விதிகளில் அதிகாரம் அளிக்கப்பட்டுள்ள இதர நபர் என்பதும் அடங்கும்.

(9) 'பதிவான சங்கம்' என்பது, இச் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப்பட்ட அல்லது பதிவானதாகக் கருதப்பட்ட சங்கம் என்று பொருள்படும்.

(10) 'பதிவாளர்' என்பது, இச் சட்டத்தின் கீழ் கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளருக்குள்ள அலுவல்களை நிறைவேற்ற நியமிக்கப் பெற்ற நபர் என்பது பொருள்படும். இச் சட்டத்தின் படி பதிவாளருக்குள்ள அதிகாரங்கள் அனைத்தும் அல்லது எவையேனும் 3ஆம் பிரிவின் கீழ் கொடுக்கப் பெற்றுள்ள நபர் என்பதும் இதில் அடங்கும்.

(11) 'விதிகள்' என்பது, இச் சட்டத்தின் படிச் செய்யப்பட்ட விதிகள் எனப் பொருள்படும்.

(12) 'தற்சார்புச் சங்கம்' என்பது, vi ஆம் அத்தியாயத்தின் கீழ், அரசினரிடமிருந்து எவ்வித உதவியையும் அல்லது அத்தகைய உதவியை அரசினரிடமிருந்து பெறுகிற பதிவான சங்கம் எதனிட மிருந்தும் எவ்வித உதவியையும் பெற்றுக் கொள்ளாத ஒரு பதிவான சங்கம் எனப் பொருள்படும்.

**விளக்கம் :** எளிதில் பணமாக்கக்கூடிய வளத்திற்காக (Fluid Resources) நிதி வங்கியிடமிருந்து ரொக்கக் கடன் வசதி பெறுவதானது, இப் பகுதியின்படி உதவி பெறுவதாகாது. அந்த நிதி வங்கி அரசினரிடமிருந்து உதவி பெற்றாலும் பாதகமில்லை.

(13) 'வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கம்' என்பது, சங்கம் கலைக்கப்பட்டால், அது செலுத்த வேண்டிய கடன்களுக்கு அதன் உப-விதிகளின்படி சங்க உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டுப் பதிவான சங்கம் எனப் பொருள்படும்.

(14) 'வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கம்' என்பது, சங்கம் கலைக்கப்பட்டால் அதன் கடன்கள் அனைத்துக்கும் அதன் உறுப்பினர்கள் கூட்டாகவும், தனித் தனியாகவும் பொறுப்பு ஏற்று, சங்கச் சொத்தில் உள்ள குறைவை நிறைவு செய்யக் கட்டுப்பட்டவர்களுக்காகப் பதிவான சங்கம் எனப் பொருள் படும்.

(15) 'மேற்பார்வை ஒன்றியம்' என்பது, தன் உறுப்பினர்களாயுள்ள பதிவான சங்கங்களை அமைப்பதையும், வளர்ப்பதையும், மேற்பார்வை செய்வதையும் அவற்றிற்கு உதவுவதையும் அல்லது கூட்டுறவுக் கொள்கைகளையும், செயல்முறைகளையும், பிரச்சாரம் செய்வதையும் அல்லது அவை பற்றிய கல்வியைப் பரப்புவதையும் தன் முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ள பதிவான சங்கம் எனப் பொருள்படும்.

(16) 'தீர்ப்பாயம்' என்பது, 95ஆம் பிரிவின்கீழ் அமைக்கப்பட்டதும் விசாரணை அதிகாரமுள்ளதுமான ஒரு தீர்ப்பாயம் எனப் பொருள்படும்.

## அத்தியாயம் II

## பதிவு செய்தல்

### 3. பதிவாளர்

அரசினர், தமிழ்நாடு மாநிலத்திற்காக அல்லது அதன் ஒரு பகுதிக்காகக் கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளராக ஒருவரை நியமிக்கலாம். மற்றும் இச் சட்டத்தின் கீழ் பதிவாளரின் அதிகாரங்கள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதையும் வேறு எவருக்காயினும் பொதுவான அல்லது சிறப்பான உத்தரவு மூலம் வழங்கலாம்.

### 4. பதிவு செய்யப்படக்கூடிய சங்கங்கள்

(1) இச் சட்டத்தின் சரத்துகளுக்குட்பட்டு, தன் உறுப்பினர்களின் பொருளாதார நலன்களைக் கூட்டுறவுக் கொள்கைகளுக்கிணங்க வளர்ப்பதைத் தன் நோக்கமாகக் கொண்டுள்ள ஒரு சங்கம், அல்லது அத்தகைய சங்கம் செயல்படுவதை வசதிப்படுத்தும் நோக்கத்துடன் அமைத்துள்ள ஒரு சங்கம், வரையறுக்கப்பட்ட அல்லது வரையறுக்கப்படாத பொறுப்புடன் இச் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப்படலாம்.

ஆனால், ஒரு பதிவான சங்கத்தை உறுப்பினராயுள்ள சங்கத்தின் பொறுப்பு வரையறுக்கப்பட்டதாயிருக்கவேண்டும்.

(2) ஒரு பதிவான சங்கத்தின் உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்படாததாயிருந்தாலும் அல்லது பங்குகள் மூலம் வரையறுக்கப்பட்டதாயிருந்தாலும் அச் சங்கத்தில் பங்குகள் எடுத்துள்ள நிதி வங்கியின் அல்லது அரசாங்கத்தின் பொறுப்பு அந்த அரசாங்கம் அல்லது வங்கி அதில் எடுத்துள்ள பங்கு மூலதனத்தின் அளவிற்கு மட்டுமே இருக்கும்.

5. பொறுப்பின் வகையை மாற்றுதல்

(1) 4ஆம் பிரிவின் உட்பிரிவு (1)-க்கு விலக்குக் கூறுக்கும் இது பற்றிச் செய்யப்படும் எவையேனும் விதிகளுக்குமுட்பட்டு ஒரு பதிவான சங்கம் தன் உப-விதிகளில் ஒரு திருத்தம் செய்வதன் மூலம் தன் பொறுப்பின் வகையை வரையறுக்கப்பட்டதிலிருந்து வரையறுக்கப்படாததாகவும் அல்லது வரையறுக்கப்படாததிலிருந்து வரையறுக்கப்பட்டதாகவும் மாற்றிக் கொள்ளலாம். ஆனால்,

(i) அச் சங்கம் தன் பொறுப்பின் வகையை மாற்றிக் கொள்ள உத்தேசித்திருப்பதை, அதன் உறுப்பினர்களுக்கும், கடனாளர்களுக்கும் எழுத்து மூலம் அறிவிப்பு அனுப்ப வேண்டும்.

(ii) யாதொரு உறுப்பினர் அல்லது கடனாளர், இதற்கு மாறாக உப-விதி அல்லது ஒப்பந்தம் இருப்பினும், சூழ்நிலைக்கேற்பத் தனது பங்குகளைத், தான் செலுத்திய தொகையை அல்லது கொடுத்த கடனை, அவ்வாறு தனக்குஅறிவிப்பு சேர்ப்பித்ததிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் திரும்பப் பெறுவதற்கு உரிமையுள்ளவராவார். அத்தகைய கோரிக்கைகள் எல்லாம் நிறைவேற்றப்படும் வரையில், இந்த மாற்றம் அமலுக்கு வராது.

(iii) இக் கால வரைக்குள் எந்த உறுப்பினரேனும் கடனாளரேனும் தன் விருப்பத்தைத் தெரிவிக்காவிட்டால், அவர் அம் மாற்றத்தை ஏற்றுக் கொண்டிருப்பதாகக் கருதப்படுவார், என்ற நிபந்தனைகளுக்குட்பட்டும்,

(2) 1ஆம் உட்பிரிவுக்கு விலக்குக் கூறில், என்ன சொல்லியிருந்த போதிலும், மாற்றத்தை எல்லா உறுப்பினர்களும் கடனாளர்களும் ஒப்புக் கொண்டால், அம் மாற்றம் உடனடியாக அமலுக்கு வரும்.

6. பதிவு செய்வதுபற்றிய நிபந்தனைகள்

பதிவான சங்கத்தை உறுப்பினராகக் கொண்ட சங்கம் தவிர, எந்த ஒரு சங்கமும் குறைந்தது பத்து நபர்களைக் கொண்டிருந்தாலல்லது மேலும், அதன் நோக்கம் தன் உறுப்பினர்களுக்குக் கடன் கொடுப்பதற்காக நிதி திரட்டுவதாக இருந்தாலல்லது, அத்தகைய நபர்கள் கீழ்க்கண்டவாறு இராவிட்டாலும், அச் சங்கம் பதிவு செய்யப்படக் கூடாது.

(அ) ஒரே நகரத்தில் அல்லது கிராமத்தில் அல்லது அதே கிராமத் தொகுதியில் குடியிருக்கவேண்டும் அல்லது அசையாச் சொத்துள்ளவர்களாய் இருக்க வேண்டும்.

(ஆ) பதிவாளர் வேறுவிதமாகக் கட்டளையிட்டாலொழிய, ஒரே வகுப்பை அல்லது தொழிலைச் சேர்ந்தவர்களாய் இருக்கவேண்டும்.

இச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்ட, ஒவ்வொரு வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கத்தின் பெயரிலும் 'வரை யறுக்கப்பட்டது' என்னும் சொல் இறுதிச் சொல்லாக இருக்க வேண்டும்.

7. சில செயல்களை முடிவு செய்யப் பதிவாளரின் அதிகாரம்

இச் சட்டத்தின் செயல்களுக்காக, எந்த ஒரு நபர் விவசாயியா அல்லது அல்லவா என்பது குறித்தும், எந்த ஒரு நபர் குறித்த ஒரு நகரத்தில் அல்லது கிராமத்தில் அல்லது கிராமத் தொகுதியில் குடியிருக்கிறாரா அல்லது அசையாச் சொத்து உடையவராயிருக் கிறாரா என்பது குறித்தும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கிராமங்கள் ஒரு தொகுதியாக அமையுமா என்பது குறித்தும் அல்லது எந்த ஒரு நபர் எந்த ஒரு குறித்த வகுப்பை அல்லது தொழிலைச் சேர்ந்தவரா என்பது குறித்தும் பிரச்சினை ஏதேனும் எழுந்தால், அது பதிவாளரால் முடிவு செய்யப்படவேண்டும்.

8. பதிவுக்கான விண்ணப்பம்

(1) பதிவு செய்யுமாறு பதிவாளருக்கு ஒரு விண்ணப்பம் செய்யப்படவேண்டும். அந்த விண்ணப்பம்

(2) (அ) பதிவான சங்கம் எதுவும் உறுப்பினராக இல்லாத சங்கத்தின் செயலில் 6ஆம் பிரிவின் (1) உட் பிரிவிலும், 17ஆம் பிரிவின் (1) உட்பிரிவிலும் சொல்லப்பட்ட தகுதி பெற்றவர்களாகவும் 18ஆம் பிரிவின் (1) உட்பிரிவின் கீழ் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படுவதற்குத் தகுதியின்மைகள் இல்லாதவர்களாகவுமுள்ள, பத்து பேரேனும், கையெழுத்திடவேண்டும்.

(ஆ) பதிவான சங்கங்களை உறுப்பினராகவுள்ள சங்கத்தின் செயலின், பதிவு பெற்ற அத்தகைய சங்கங்கள் ஒவ்வொன்றின் சார்பாகவும், முறையாக

அதிகாரம் பெற்ற ஒருவர் அந்த விண்ணப்பத்தில் கையெழுத்திடவேண்டும். (அச் சங்கத்தின் உறுப்பினர்கள் எல்லாரும் பதிவு பெற்ற சங்கங்களாயிரா விட்டால், வேறு பத்து உறுப்பினர்கள் அதில் கையெழுத்திடவேண்டும்). அத்தகைய உறுப்பினர்களின் எண்ணிக்கை பத்துக்கும் குறைந்தால், அவர்கள் எல்லாருமே அதில் கையெழுத்திட வேண்டும்.

(3) அச் சங்கத்தின் உத்தேச உப-விதிகளின் நகல் ஒன்றையும் விண்ணப்பத்துடன் சேர்த்தனுப்பவேண்டும். அந்த விண்ணப்பதாரர்கள், அல்லது எவர் சார்பில் அத்தகைய விண்ணப்பம் செய்து கொள்ளப்படுகிறதோ அந்த நபர்கள் அச் சங்கத்தைக் குறித்துப் பதிவாளரால் கேட்கப்படும் தகவலைக் கொடுக்க வேண்டும்.

9. பதிவு செய்தல்

(1) ஒரு சங்கத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பம், இச் சட்டத்தின் சரத்துகளுக்கும் விதிகளுக்கும் இசைந்திருக்கிறதென்றும், அச் சங்கத்தின் உத்தேச உப-விதிகள் இச் சட்டத்திற்கோ, விதிகளுக்கோ, கூட்டுறவுக் கொள்கைகளுக்கோ முரணாக இருக்கவில்லையென்றும், அச் சங்கம் தன் அபிப்பிராயத்தில் வெற்றிகரமாகச் செயலாற்றுமென்றும், பதிவாளர் திருப்தியடைந்தால், அவர் அச் சங்கத்தையும் அதன் உப-விதிகளையும் பதிவு செய்யலாம்.

(2) பதிவாளர் ஒரு சங்கத்தையும் அதன் உப-விதிகளையும் பதிவு செய்ய மறுத்தால், மறுப்பு உத்தரவை, அவர் அவ்வாறு மறுப்பதற்குண்டான காரணங்களுடன், சங்கத்தின் பதிவுக்கான விண்ணப்பத்தில் கையெழுத்திட்டவரும், அவ் விண்ணப்பத்தில் கையெழுத்திட்ட நபர்களால் இது பற்றி நியமிக்கப்பட்டவருமான யாதேனுமொரு நபருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

10. பதிவுச் சான்று

பதிவாளரால் கையெழுத்திடப்பட்ட பதிவுச் சான்றிதழ், அதில் குறிப்பிடப்பட்டுள்ள சங்கம் அதன் பதிவு ரத்து செய்யப்பட்டிருக்கிறதென்று நிரூபிக்கப்பட்டாலொழிய, முறையாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறதென்பதற்கு முடிவான சான்றாகும்.

**11. பதிவான சங்கத்தின் உப-விதிகளைத் திருத்தல்**

(1) ஒரு பதிவான சங்கத்தின் உப-விதிகளின் திருத்தம் எதுவும் இச் சட்டத்தின்கீழ் அது பதிவு செய்யப்படுகிற வரையில், சட்டப்படி செல்லக்கூடியதல்ல.

(2) ஒரு பதிவான சங்கத்தின் உப-விதிகளில் திருத்தத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பம் நிருணயிக்கப்பட்ட முறையில், உப-விதிகளின் திருத்தத்தின் நகல் ஒன்றுடன், பதிவாளருக்குச் செய்யப்பட வேண்டும்.

(3) உப-விதிகளின் திருத்தம் இச் சட்டத்திற்கோ, அல்லது விதிகளுக்கோ முரணுக இல்லையெனப் பதிவாளர் திருப்தியுற்ருல் அவர் திருத்தத்தைப் பதிவு செய்யலாம்.

ஆனல், தனது முறையீடுகளைச் செய்து கொள்வதற்காகச் சங்கத்திற்கு ஒரு வாய்ப்பு அளிக்கப்பட்டிருந்தாலொழிய, உப-விதிகளின் திருத்தத்தைப் பதிவு செய்ய மறுத்து உத்தரவு பிறப்பிக்கப்படலாகாது என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

(4) பதிவான சங்கம் ஒன்றின் உப-விதிகளின் திருத்தத்தைப் பதிவாளர் பதிவு செய்ய மறுத்தால், மறுப்பு உத்தரவை அதற்கான காரணங்களுடன் பதிவான சங்கத்திற்கு அவர் அனுப்பி வைக்கவேண்டும்.

(5) உப-விதிகளின் திருத்தம் ஒன்றைப் பதிவாளர் பதிவு செய்தால், தன்னுல் சான்றிடப்பட்ட உப-விதிகளின் திருத்தத்தின் நகல் ஒன்றை அவர் மேற்படி பதிவான சங்கத்திற்கு அனுப்பிவைக்கவேண்டும். அத் திருத்தம் முறையாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறதென்பதற்கு இதுவே முடிவான சான்ருகும்.

(6) பதிவான சங்கம் ஒன்றின் உப-விதிகளின் திருத்தம் அதில் குறிப்பிடப்பட்டுள்ள தேதியிலிருந்து அமலுக்கு வரத் தொடங்கும். அவ்வாறு தேதி எதுவும் குறிப்பிடப்பட்டிரா விட்டால் அத் திருத்தம் பதிவு செய்யப்பட்ட தேதியிலிருந்து அமலுக்கு வரத்தொடங்கும்.

(7) இப் பிரிவின் சரத்துக்குப் பாதகமில்லாமல், உப-விதிகளில் ஒரு சங்கத்தால் உத்தேசிக்கப்பட்ட யாதொரு திருத்தம் காரணமாக அச் சங்கத்தின் நோக்கங்களில் அல்லது விவகாரங்களில் முக்கிய மாற்றம் ஏற்படுகிறதென்று பதிவாளர் கருதினுல் அத் திருத்தம், இதற்கெனச் செய்யப்படக்கூடிய விதிகளுக்குட்பட்டு மட்டுமே, பதிவு செய்யப்படும்.

**12. உப-விதிகளில் திருத்தம் செய்யக் கட்டளையிட அதிகாரம்**

(1) ஒரு பதிவான சங்கத்தின் விவகார எல்லையை மாற்றும் பொருட்டும் அல்லது அது செய்யும் சேவைகளை விரிவாக்கும் பொருட்டும் அல்லது உப-விதிகளில் குறிப்பிடப்பட்டுள்ள பிற காரணங்கள் பொருட்டும் உப-விதிகளில் ஒரு திருத்தம் செய்யப் படவேண்டும் என்று பதிவாளர் திருப்திகரமாகக் கருதினுல், அவர் அச் சங்கம் இணைந்துள்ள நிதி வங்கியுடன் நிருணயிக்கப்பட்ட முறையில் ஆலோசனை நடத்திய பிறகு, எழுத்து மூலமான அறிவிப்பின் மூலம் அவ்வறிவிப்பில் குறிப்பிடப்பட்ட காலத் திற்குள் அத் திருத்தத்தை ஏன் செய்யக் கூடாது என்பதற்குக் காரணம் காட்டும்படி சங்கத்தைக் கேட்கலாம்.

(2) உட்பிரிவு (1)-ல் குறிப்பிடப்பட்ட அறிவிப்பில் குறிக்கப் பட்டுள்ள காலத்திற்குள் பதிவான சங்கம் திருத்தத்தைச் செய்யத் தவறினுல், தனது மேல்முறையீட்டைத் தெரிவிக்கச் சங்கத்திற்கு ஒரு வாய்ப்பைக் கொடுத்த பிறகு, பதிவாளர் அந்தத் திருத்தத்தைப் பதிவு செய்து திருத்தத்தின் நகல் ஒன்றைச் சங்கத்திற்கு வழங்க வேண்டும்.

(3) உட்பிரிவு (2)-ன் கீழ் பதிவு செய்யப்பட்ட யாதொரு உப-விதித் திருத்தமும், மேல் முறையீட்டில் செய்யப்படும் முடிவைப் பின்பற்றிப் பதிவு ரத்து செய்யப்பட்டாலொழிய, 11ஆம் பிரிவின்கீழ் பதிவு செய்யப்பட்ட உப-விதித் திருத்தத்தைப் போலவே செல்லக் கூடியதாகும்.

**13. சங்கங்களைப் பிரித்தலும், இணைத்தலும்**

(1) (அ) பதிவான யாதொரு சங்கமும் தனது பேரவையைத் தனியாகக் கூட்டி இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்களாகப் பிரிந்து கொள்வதற்குத் தீர்மானம் நிறை வேற்றலாம். இக் கூட்டத்திற்கு உறுப்பினர்களுக்கு ஏழு நாள்கள் முனறிவிப்புக் கொடுக்கவேண்டும். (இந்த உட்பிரிவில் இனி இது முதல் நிலைத் தீர்மானம் எனக் குறிப்பிடப்படும்). அந்தத் தீர்மானத்தில் இச் சங்கத்தின் சொத்துகளையும், பொறுப்புகளையும் பிரிந்துபோகிற புதிய சங்கங்களிடையே பிரிப்பதற்கான பிரேரணைகள் கண்டிருக்கவேண்டும். மற்றும் புதிய சங்கம் ஒவ்வொன்றின் விவகார எல்லை எதுவென்பதையும் அதன் உறுப்பினர்கள் யாவர் என்பதையும் அதில் நிருணயிக்கப்படலாம். புதிய சங்கங்களின் உத்தேசிக்கப்பட்டுள்ள உப-விதிகளும் அத் தீர் மானத்துடன் இணைக்கப்படவேண்டும்.

(ஆ) (i) முதல் நிலைத் தீர்மானத்தின் நகல் ஒன்றை அச் சங்கத்தின் எல்லா உறுப்பினர்களுக்கும், கடனாளர் களுக்கும் அனுப்ப வேண்டும்.

(ii) சங்கத்தின் உறுப்பினர்கள் யாவரும், இதற்கு முரண் பாடாக யாதோர் உப-விதி இருந்தபோதிலும், முதல் நிலைத் தீர்மானத்தைப் பெற்றுக்கொண்ட தேதியிலிருந்து ஒரு மாத கால அளவுக்குள் புதிய சங்கம் எதிலும் உறுப்பினராகும் உத்தேசம் தனக்கு இல்லையென அவர் அச் சங்கத்திற்கு அறிவிப்பின் மூலம் தெரிவிக்கலாம்.

(iii) அச் சங்கங்களின் கடன்காரர் எவரும், இதற்கு முரண்பாடாக யாதோர் உடன்படிக்கை இருந்த போதிலும், தனக்குச் சேரவேண்டிய தொகையைத் திருப்பித் தருமாறு தான் கேட்க உத்தேசித்திருப் பதாக உட்பகுதி (ii)-ல் குறிக்கப்பட்டுள்ள கால அளவுக்குள் அச் சங்கத்திற்கு அறிவிப்பின் மூலம் தெரிவிக்கலாம்.

(இ) சங்கத்தின் எல்லா உறுப்பினர்களுக்கும், அதன் கடனாளர்களுக்கும், முதல் நிலைத் தீர்மானத்தை அனுப்பிய தேதியிலிருந்து இரண்டு மாத காலம் முடிவடைந்த பிறகு, முதல் நிலைத் தீர்மானத்தையும் உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளையும் ஆலோசனை செய்வதற்காகச் சங்கப் பேரவையின் ஒரு கூட்டத்தைக் கூட்டவேண்டும். இதற்குச் சங்கத்தின் உறுப்பினர் களுக்குப் பதினைந்து நாள்களேனும் முன்னறிவிப்புக் கொடுக்க வேண்டும். அத்தகைய கூட்டத்தில் முதல் நிலைத் தீர்மானமும் புதிய சங்கங்களின் உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளும் அக் கூட்டத் திற்கு வந்திருந்து வாக்களிக்கிற உறுப்பினர்களுள் மூன்றில் இரண்டு பகுதியினர்களுக்குக் குறையாத பெரும்பான்மையோரால் நிறைவேற்றப்பட்டு தீர்மானத்தின் மூலம் மாறுதல்கள் இன்றியோ, அல்லது முக்கியமானவை அல்லவெனப் பதிவாளர் கருதுகிற மாறுதல்களுடனே, உறுதி செய்யப்பட்டால் பதிவாளர் (2) ஆம் பகுதியின் சரத்துகளுக்கும் 9ஆம் பிரிவுக்கும் உட்பட்டு, ஆனால் 8ஆம் பிரிவில் என்ன அடங்கியிருந்தாலும், அதனைப் பொருட்படுத்தாமல் நிருணயிக்கப்பட்ட விதத்தில் சான்றிடப் பட்ட தீர்மானத்தின் நகல் ஒன்றைப் பெற்றவுடன் புதிய சங்கங்களையும் அவற்றின் உப-விதிகளையும் பதிவு செய்யலாம். அவ்வாறு பதிவு செய்ததன்பேரில், மூல சங்கத்தின் பதிவு ரத்தானதாகக் கருதப்படும்.

முதல் நிலைத் தீர்மானத்தில் செய்யப்பட்டுள்ள மாறுதல்கள் முக்கியமானவையா, அல்லது முக்கியமானவையில்லையா என்பதைக் குறித்துப் பதிவாளரின் கருத்தே முடிவானதாகும்.

(ஈ) பகுதி (இ)-ல் குறிக்கப்பட்டுள்ள கூட்டத்தில் மற்றொரு தீர்மானத்தின் மூலம் கீழ்க்கண்டவற்றிற்காக ஏற்பாடு செய்யப் படவேண்டும்.

(i) (ஆ) பகுதியின் (ii) உட்பகுதியின்கீழ் அறிவிப்புக் கொடுத்துள்ள எல்லா உறுப்பினர்களின் பங்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுப்பதும்,

(ii) (ஆ) பகுதியின் (iii) உட்பகுதியின்கீழ் அறிவிப்புக் கொடுத்துள்ள எல்லாக் கடன்காரர்களின் கோருரிமைகளை நிறைவேற்றுவதும் : ஆனால், எந்த உறுப்பினர் அல்லது கடன்காரரும், (இ) பகுதியில் ஏற்பாடு செய்யப் பட்டவாறு முதல் நிலைத் தீர்மானம் உறுதிசெய்யப் படுகிற வரையில், பங்குத் தொகையைத் திரும்பப் பெறுவதற்கோ கோருரிமைகளை நிறைவேற்றப் படுவதற்கோ தகுதியுடையவராகார் என்ற நிபந்தனைக்கு உட்பட்டும்,

(உ) பகுதி (ஈ)-ல் குறிக்கப்பட்டுள்ள எல்லா உறுப்பினர்களின் பங்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுப்பதற்கோ, கடன்காரரின் கோருரிமைகளைத் தீர்ப்பதற்கோ ஏற்பாடு செய்யப் படவில்லையெனப் பதிவாளர் திருப்தியுற்றால், அவர், அப் புதிய சங்கங்களைப் பதிவு செய்ய மறுக்கலாம்.

(ஊ) புதிய சங்கங்களைப் பதிவு செய்திருப்பதே, மூல சங்கத்தின் சொத்துகளும் பொறுப்புகளும், (இ) பகுதியின்கீழ் உறுதி செய்யப்பட்டுள்ள முதல் நிலைத் தீர்மானத்தில் குறிக்கப் பட்டுள்ள வகையில் புதிய சங்கங்களின் உரிமையாகி விட்டதற்குப் போதுமான சொத்துரிமை மாற்றப் பத்திரமாகும்.

(2) (அ) இரண்டு அல்லது மூன்று பதிவான சங்கங்கள் தத்தம் பேரவைகளை இதற்கெனத் தனியாகக் கூட்டி ஒரே சங்கமாக இணைவதற்குத் தீர்மானிக்கலாம். இவ்வாறு பேரவையைக் கூட்டுவதற்கு அந்தந்தச் சங்க உறுப்பினர்களுக்கு 7 நாள்கள் முன்னறிவிப்புக் கொடுக்கவேண்டும். இனி இந்த உட்பிரிவில் அந்தத் தீர்மானம் முதல் நிலைத் தீர்மானம் எனக் குறிப்பிடப் படுகிறது. ஒருங்கிணைக்கப்படும் சங்கத்தின் உத்தேச உப-விதிகள்

முதல் நிலைத் தீர்மானத்துடன் இணைக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

(ஆ) (i) ஒவ்வொரு சங்கத்தின் முதல் நிலைத் தீர்மான நகல் ஒன்று அச் சங்கத்தின் எல்லா உறுப்பினர்களுக்கும் கடன் காரர்களுக்கும் அனுப்பப்படவேண்டும்.

(ii) சங்கத்தின் உறுப்பினர் எவரும், இதற்கு முரண் பாடாக யாதோர் உப-விதி இருந்தபோதிலும், முதல் நிலைத் தீர்மானத்தைப் பெற்றுக் கொண்ட தேதியிலிருந்து ஒரு மாத காலத்திற்குள், இணைக்கப் பட்ட சங்கத்தின் உறுப்பினராகும் உத்தேசம் தனக்கு இல்லையென அவர் தான் உறுப்பினராக உள்ள சங்கத்திற்கு அறிவிப்பு மூலம் தெரிவிக் கலாம்.

(iii) சங்கத்தின் கடனுளர் எவரும், இதற்கு முரண் பாடாக யாதோர் உடன்படிக்கை இருந்த போதிலும், தனக்குச் சேரவேண்டிய தொகையைத் திருப்பித் தருமாறு தான் கேட்க உத்தேசித்திருப்ப தாக (ii) உட்பகுதியில் சொல்லிய காலத்திற்குள் அச் சங்கத்திற்கு அறிவிப்பு மூலம் தெரிவிக்கலாம்.

(இ) இச் சங்கங்களின் எல்லா உறுப்பினர்களுக்கும் கடனுளர்களுக்கும் முதல் நிலைத் தீர்மானத்தை அனுப்பிய தேதியி லிருந்து இரண்டு மாத காலம் முடிவடைந்த பிறகு, முதல் நிலைத் தீர்மானத்தையும் உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளையும் ஆலோசனை செய்வதற்காக அச் சங்க உறுப்பினர்களின் கூட்டுக் கூட்டம் ஒன்று கூட்டப்பட வேண்டும். இக் கூட்டத்திற்கு, அச் சங்கங் களின் உறுப்பினர்களுக்குக் குறைந்தது பதினைந்து நாள்களேனும் முன்னறிவிப்புக் கொடுக்க வேண்டும். அத்தகைய கூட்டத்தில், முதல் நிலைத் தீர்மானமும், உத்தேசிக்கப்பட்ட உப-விதிகளும் அக் கூட்டத்திற்கு வந்திருந்து வாக்களிக்கிற உறுப்பினர்களுள் மூன்றில் இரண்டு பகுதியினருக்குக் குறையாத பெரும்பான்மை உறுப்பினர்கள் மாறுதல்கள் இன்றியோ, அல்லது முக்கிய மானவை அல்லவெனப் பதிவாளர் கருதுகிற மாறுதல்களுடனோ உறுதி செய்யப்பட்டால், பதிவாளர் 1ஆம் பகுதியின் சரத்துக்கும் 9ஆம் பிரிவுக்குட்பட்டும் 8ஆம் பிரிவில் என்ன சொல்லியிருப்பினும் அதைப் பொருட்படுத்தாமல் நிருணயிக்கப் பட்ட வகையில் சான்றிடப்பட்ட அந்தத் தீர்மானத்தின் நகல் ஒன்றைப் பெற்றவுடன் இணைக்கப்பட்ட சங்கத்தையும் அதன்

உப-விதிகளையும் பதிவு செய்யலாம். அவ்வாறு பதிவு செய்யப் பட்டவுடன் மூல சங்கங்களின் பதிவு ரத்து செய்யப்பட்டதாகக் கருதப்படும்.

முதல் நிலைத் தீர்மானத்தில் செய்யப்பட்டுள்ள மாறுதல்கள் முக்கியமானவையா இல்லையா என்பதைக் குறித்துப் பதிவாளரின் கருத்தே முடிவானதாகும்.

(ஈ) பகுதி (இ)-ல் குறிக்கப்பட்டுள்ள கூட்டுக் கூட்டத்தில் மற்றொரு தீர்மானத்தின்மூலம் கீழ்க் கண்டவற்றிற்காக ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

(i) (ஆ) பகுதியின் (ii) உட்பகுதியின்கீழ் அறிவிப்புக் கொடுத் துள்ள எல்லா உறுப்பினர்களின் பங்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுப்பதும்,

(ii) (ஆ) பகுதியின் (iii) உட்பகுதியின்கீழ் அறிவிப்புக் கொடுத் துள்ள எல்லாக் கடனாளர்களின் கோருரிமைகளை நிறை வேற்றுவதும்,

ஆனால், அத்தகைய உறுப்பினர் அல்லது கடனாளர் (இ) பகுதியில் ஏற்பாடு செய்துள்ளவாறு முதல் நிலைத் தீர்மானம் உறுதி செய்யப்படுகிற வரையில் தொகையைத் திரும்பப் பெறு வதற்கோ, கோருரிமை நிறைவேற்றப் பெறுவதற்கோ உரிமை யுள்ளவராகமாட்டார் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

(உ) பகுதி (இ)-ல் குறிக்கப்பட்டுள்ள கூட்டுக் கூட்டத்தை யார் கூட்டவேண்டும் என்பதும், அக் கூட்டத்தில் பின் பற்ற வேண்டிய நடைமுறையும், கூட்டம் நடைபெறுவதற்கு வந்திருக்க வேண்டிய உறுப்பினர்களின் குறைவெண் வரம்பும் இது பற்றி நிருணயிக்கப்படுகிறபடி இருக்கும்.

(ஊ) பகுதி (ஈ)-ல் குறிக்கப்பட்டுள்ள எல்லா உறுப்பினர் களின் பங்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுப்பதற்கும் கடனாளர் களின் கோருரிமைகளை நிறைவேற்றுவதற்கும் ஏற்பாடு செய்யப் படவில்லையெனப் பதிவாளர் திருப்தியுற்றால், அவர் அந்த இணைக்கப்பட்ட சங்கத்தைப் பதிவு செய்ய மறுக்கலாம்.

(எ) இணைக்கப்பட்ட சங்கத்தைப் பதிவு செய்திருப்பதே மூல சங்கங்களின் சொத்துகளும், பொறுப்புகளும். இணைக்கப் பட்ட சங்கத்தில் உரிமையாகி விட்டதற்குப் போதுமான சொத் துரிமை மாற்றப் பத்திரமாகும்.

**14. சொத்துகளையும், பொறுப்புகளையும் பதிவு பெற்ற சங்கங்களிடையே மாற்றுவது**

(1) பதிவான இரண்டு அல்லது மூன்று சங்கங்கள் தத்தம் பேரவைகளை இதற்கெனத் தனியாகக்கூட்டி தங்களுடைய சொத்துகளையும், பொறுப்புகளையும் தங்களுக்குள் முழுவதையுமோ அல்லது பாகத்தை மட்டுமோ மாற்றிக் கொள்ளத் தீர்மானிக்கலாம். இவ்வாறு பேரவையைக் கூட்டுவதற்கு அந்தந்த சங்க உறுப்பினர்களுக்கு 7 நாள்கள் முன்னறிவிப்புக் கொடுக்க வேண்டும். அந்தத் தீர்மானம் இதில் பின்னர் இப்பிரிவில் முதல் நிலைத் தீர்மானமெனக் குறிப்பிடப்படுகிறது.

(2) (அ) ஒவ்வொரு சங்கத்தின் முதல் நிலைத் தீர்மானத்தின் நகல் ஒன்று சங்கத்தின் எல்லா உறுப்பினர்களுக்கும் அதன் கடனாளர்களுக்கும் அனுப்பப்படவேண்டும்.

(ஆ) சங்கத்தின் உறுப்பினர் எவரும், இதற்கு முரண்பாடாக யாதொரு உப-விதி இருந்தபோதிலும், முதல் நிலைத் தீர்மானத்தைப் பெற்றுக் கொண்ட தேதியிலிருந்து ஒரு மாத காலத்திற்குள், அச் சங்கத்திலிருந்து தன் பங்கு மூலதனத்தைத் திரும்பப் பெறத் தான் உத்தேசித்திருப்பதாகச் சங்கத்திற்கு அறிவிப்பு மூலம் தெரிவிக்கலாம்.

(இ) சங்கத்தின் கடனாளர் யாரும் இதற்கு முரண்பாடாக யாதொரு உடன்படிக்கை இருந்தபோதிலும் தனக்குச் சேரவேண்டிய தொகையைத் திருப்பித் தருமாறு தான் கேட்க உத்தேசித்திருப்பதாக (ஆ) உட்பகுதியில் சொல்லிய காலத்திற்குள், சங்கத்திற்கு அறிவிப்பு மூலம் தெரிவிக்கலாம்.

(3) எல்லாச் சங்கங்களின் உறுப்பினர்களுக்கும், கடனாளர்களுக்கும் முதல் நிலைத் தீர்மானத்தை அனுப்பிய இரண்டு மாத காலம் முடிவடைந்த பிறகு முதல்நிலைத் தீர்மானத்தை ஆலோசனை செய்வதற்காக அந்தச் சங்கங்கள் ஒவ்வொன்றின் பேரவைக் கூட்டம் ஒன்று கூட்டப்படவேண்டும். இந்தக் கூட்டத்திற்கு உறுப்பினர்களுக்குப் பதினைந்து நாள்களேனும் முன்னறிவிப்புக் கொடுக்கவேண்டும். அத்தகைய கூட்டத்தில் முதல் தீர்மானம் அக் கூட்டத்திற்கு வந்திருந்து வாக்களிக்கிற உறுப்பினர்களுள் மூன்றில் இரண்டு பகுதியினருக்குக் குறையாத பெரும்பான்மையினரால் நிறைவேற்றப்படுகிற தீர்மானத்தின்மூலம்

மாறுதல் இன்றியோ, அல்லது முக்கியமானவை அல்லவெனப் பதிவாளர் கருதுகிற மாறுதல்களுடனே உறுதி செய்யப்பட்டால், அவர் நிருணயிக்கப்பட்டுள்ள முறையில், உறுதி செய்யப்பட்ட அத் தீர்மானத்தைப் பெற்றவுடன் அச்சொத்துகளையும் பொறுப்புகளையும் சங்கங்களிடையே மாற்றுவதற்கு அங்கீகாரம் அளிக்கலாம்.

முதல் தீர்மானத்தில் செய்யப்பட்டுள்ள மாறுதல்கள் முக்கியமானவையா, அல்லது முக்கியமானவையில்லையா என்பது குறித்துப் பதிவாளரின் கருத்தே முடிவானதாகும்.

(4) உட்பிரிவு (3)-ல் குறிக்கப்பட்டுள்ள கூட்டத்தில் மற்றொரு தீர்மானத்தின்மூலம் கீழ்க்கண்டவற்றிற்காக ஏற்பாடு செய்யப்படவேண்டும்.

(அ) உட்பிரிவு (2)-ன் (ஆ) பகுதியின் கீழ் அறிவிப்புக் கொடுத்துள்ள எல்லா உறுப்பினர்களின் பங்கு மூலதனத்தைத் திருப்பிக் கொடுத்தலும்,

(ஆ) உட்பிரிவு (2)-ன் (இ) பகுதியின் கீழ் அறிவிப்புக் கொடுத்துள்ள எல்லாக் கடனாளர்களின் கோருரிமைகளை நிறைவேற்றுதலும்,

ஆனால், உறுப்பினர் எவரும், அல்லது கடனாளர் எவரும் (3) ஆம் உட்பிரிவில் வகை செய்துள்ளபடி, முதல் தீர்மானம் உறுதி செய்யப்படும் வரையில் மேற்சொன்னவாறு மூலதனத்தைத் திரும்பப் பெறுவதற்கு அல்லது கோருரிமைகளை நிறைவேற்றப் பெறுவதற்கு உரிமையுள்ளவராகமாட்டார், என்ற நிபந்தனைக்குட்பட்டு,

(5) (அ) எல்லா உறுப்பினர்களுக்கும் பங்குகளைத் திருப்பிக் கொடுப்பதற்கான ஏற்பாடும், (4)ஆம் உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள கடனாளர்கள் எல்லாருடைய கோருரிமைகளையும் நிறைவேற்றுவதற்கான ஏற்பாடும் செய்யப்படவில்லையென்று பதிவாளர் திருப்தியடைந்தால், அவர், சங்கங்களுக்கிடையே சொத்துகளையும், பொறுப்புகளையும் மாற்றம் செய்ய அங்கீகாரம் கொடுக்க மறுக்கலாம்.

(ஆ) (3)ஆம் உட்பிரிவின் கீழ் பதிவாளரின் அங்கீகாரம் இன்றி இப் பிரிவின் கீழ் சங்கங்களின் சொத்துகளும் பொறுப்புகளும் மாற்றம் செய்யப்படுவது சட்டப்படிச் செல்லுபடியாகா.

(6) உறுதி செய்யப்பட்ட முதல்நிலைத் தீர்மானம் (3)ஆம் உட்பிரிவின் கீழ் 'பதிவாளரால் அங்கீகரிக்கப்படுவதானது, இப் பிரிவின்கீழ் தொடர்பான சங்கங்களின் வசம் மாற்றப்பட்ட சொத்துகளும், பொறுப்புகளும் உரிமையாகி விட்டதற்குப் போதுமான சொத்துரிமை மாற்றப் பத்திரமாகும்.

15. வகைப் படுத்துதல்

பதிவாளர், இதற்கென செய்யப்பட்ட விதிகளுக்கிணங்க, சங்கங்களின் நோக்கங்கள், விவகார எல்லை, உறுப்பினர் நிலை, அல்லது விதிகளில் குறிக்கப்பட்டுள்ள ஏனைய யாதொரு பொருள் ஆகியவற்றையொட்டி பதிவான சங்கங்களை வகைப்படுத்த வேண்டும்.

16. ஒரு வகைச்சங்கத்தினின்று மற்றொரு வகைச் சங்கத்திற்கு மாற்றிக்கொள்ளுதல்

யாதொரு பதிவான சங்கமும், இது குறித்து செய்யப்பட்ட விதிகளையொட்டியும், விதிகளில் குறிக்கப்படும் நிபந்தனைகளுக்கு உட்பட்டும்,அது தற்போதிருக்கும் வகையினின்று வேறுபட்ட வகையின் ஒரு சங்கமாக மாற்றிக் கொள்ளத் தீர்மானிக்கலாம்.

ஆனால் சங்க உப-விதிகளின் உத்தேசிக்கப்பட்டுள்ள எந்தத் திருத்தமும், சங்கத்தை அது தற்போதிருக்கும் வகையினின்றுவேறு பட்ட ஒரு வகையைச் சேர்ந்த சங்கமாக மாற்றிவிடும் என்று பதிவாளர் கருதினால், அவர் இப் பிரிவின் கீழ் நடவடிக்கை எடுக்கு-மாறு சங்கத்திற்குக் கட்டளையிடலாம்.

அத்தியாயம் III

## உறுப்பினர்களின் தகுதிகளும், அவர்களுடைய உரிமைகளும், பொறுப்புகளும்

17. சங்கத்தின் உறுப்பினராவதற்கான தகுதிகள்

(1) (அ) 18ஆம் பிரிவின் சரத்துகளுக்குட்பட்டு 1872ஆம் ஆண்டு இந்திய ஒப்பந்தச் சட்டத்தின் (1872ஆம் ஆண்டு 9ஆம் மத்தியச் சட்டம்) 11ஆம் பிரிவின் கீழ் ஒப்பந்தம் செய்யத் தகுதியுள்ள யாதொரு தனி நபரும்,

(ஆ) பதிவான வேறு யாதொரு சங்கமும்,

(இ) அரசினரும், மேலும்,

(ஈ) பதிவு செய்யப்பட்ட அல்லது பதிவு செய்யப்படாத அல்லது யாதொரு சட்டத்தினுல் அல்லது அதன் கீழ் நிறுவப்பட்ட அல்லது நிறுவப்படாத யாதொரு நபர் குழுவும், அத்தகைய நபர்குழு இது குறித்து அரசினர் செய்யும் ஒரு பொது அல்லது சிறப்பு உத்தரவின் மூலம் அங்கீகரிக்கப்பட்டிருந்தால்,

ஒரு பதிவான சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட உரிமையுள்ளவராவார்.

ஆனுல் ஓர் இந்துக் கூட்டுக் குடும்பம் ஒரு பதிவான சங்கத்தின் உறுப்பினராகச் சேருவதற்கு உரிமையுடையதல்ல என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

மேலும், வயதுவராதவர்களும் நிலையான புத்தியில்லாதவர்களும் நிருணயிக்கப்படும் வகையைச் சேர்ந்த பதிவு பெற்ற சங்கங்களின் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படலாம் என்ற நிபந்தனைக்கும் அந்த உறுப்பினர்கள், நிருணயிக்கப்படும் உறுப்பினர்களின் உரிமைகளையும், சிறப்புரிமைகளையும் வகித்து வருவதுடன் நிருணயிக்கப்படும் பொறுப்புகளுக்கு மட்டுமே உட்பட்டவராவர் என்ற நிபந்தனைக்குட்பட்டும்.

(2) (அ) நிருணயிக்கப்படும் வகையைச் சேர்ந்த பதிவான சங்கங்களின் நடைமுறையில், அத்தகைய சங்கத்தின் உறுப்பினராகச் சேரத் தகுதி பெற்ற ஒவ்வொரு நபரும் இதன் செயலுக்காக நமூனு ஏதேனுமிருந்தால் அதில் விண்ணப்பம் செய்து கொள்வதன் பேரில் சங்கத்தின் நிருவாகக் குழுவினரால் அந்த வகை பதிவான சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

ஆனுல், இப் பகுதியின்கீழ்ச் சேர்க்கப்பட்ட யதொரு உறுப்பினரையும் பதிவாளரின் அங்கீகாரத்தின் மேல், நிருவாகக் குழுவினர், உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கி விடலாம் என்ற நிபந்தனைக்கும் அத்தகைய அங்கீகாரத்தைப் பெறுவதற்குரிய யாதொரு விண்ணப்பமும் அத்தகைய உறுப்பினர் சங்கத்தில் சேர்ந்த தேதியிலிருந்து 2 மாதங்களுக்குள் செய்யப்பட வேண்டும் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

(ஆ) மற்ற யாதொரு வகையைச் சேர்ந்த பதிவான சங்கங்களின் நடைமுறையில் உறுப்பினராவதற்குத்

தகுதி வாய்ந்த யாதொரு நபரும் இதன் செயலுக்காக நமூனு ஏதேனும் இருப்பின் அதில் விண்ணப்பம் செய்து கொள்வதன் பேரில் நிருவாகக் குழுவினரால் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப் படலாம்.

ஆனுல், நிருவாகக் குழுவானது, உறுப்பினராகச் சேருவதற்கான விண்ணப்பத்தை ஆலோசித்த கூட்டத்தின் நடவடிக்கைக் குறிப்பில் எழுதி வைக்கப்பட்ட சரியானதும், போதுமானதுமான காரணத்தை முன்னிட்டு யாதொரு நபரையும் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ள மறுக்கலாம் என்ற நிபந்தனைக்கும், நிருவாகக் குழு அவ்வாறு உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ள மறுத்த தீர்மானத்தை விண்ணப்பதாரருக்கு அனுப்ப வேண்டும் என்ற நிபந்தந்தனைக்குட்பட்டும்,

மேலும் விண்ணப்பத்தின் மேல் நிருவாகக் குழு செய்த முடிவு விண்ணப்பத் தேதியிலிருந்து இரண்டு மாத காலத்திற்குள் விண்ணப்பதாரருக்குத் தெரிவிக்கப்படாவிட்டால், அத்தகைய கால அளவு முடிவடைந்த தேதியன்று நிருவாகக் குழு விண்ணப்ப தாரரை சேர்த்துக் கொள்ள மறுத்துத் தீர்மானம் செய்து விட்டிருப்பதாகக் கருதப்பட வேண்டும்; அத்தகைய கால அளவு முடிவடைந்த தேதி, மேல் முறையீடு செய்து கொள்ளும் செயலுக்காக, அத்தகைய முடிவு செய்த தேதியாகக் கருதப்பட வேண்டும் என்ற நிபந்தனைகளுக்குட்பட்டும்,

(3) ஒரு பதிவான சங்கத்தின் எந்த உறுப்பினரும், உறுப்பினர் பதவி தொடர்பாகச் சங்கத்திற்குச் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தாமல் அல்லது செலுத்தும் வரை அல்லது விதிகளினுலும் உப-விதிகளினுலும், நிருணயிக்கப்படும் முடிவைப் பெருமல் உறுப்பினர்களின் உரிமைகளைக் கையாளக் கூடாது.

18. சங்கத்தில் உறுப்பினராவதற்குத் தகுதியின்மைகள்

(1) கீழ்க் கண்டபடி இருந்தால், எவரும் ஒரு சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட உரிமையுள்ளவராகார்.

(அ) கடனிறுக்க நொடித்தவரென (Insolvent) உத்தரவு பெற விண்ணப்பிப்பவர் அல்லது தீர்ப்பு செய்யப்படாத இன்சால்வென்ட்; அல்லது

(ஆ) ஒழுக்கக்கேடுள்ள குற்றத்திற்காக தண்டிக்கப்பட்டிருந்து, அத்தகைய தண்டனை ரத்து செய்யப்படாமலிருந்து,

தண்டனை முடிவடைந்த தேதியிலிருந்து ஐந்தாண்டுக் காலம் கழியாமலிருப்பது அல்லது,

(இ) அச் சங்கத்தில் அல்லது அதன் நிதி வங்கியில் அல்லது அது நிதி உதவும் வங்கியாயிருக்கிற ஒரு பதிவான சங்கத்தில் ஊதியம் பெறும் ஊழியராயிருப்பது: அல்லது,

(ஈ) இச் சட்டத்தின் கீழ் உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கப் பட்டிருந்து அவ்வாறு நீக்கிய தேதியிலிருந்து ஓர் ஆண்டுக் காலம் முடிவடையாமலிருப்பது,

(2) பதிவான சங்கத்தின் உறுப்பினர் ஒருவர் கீழ்க்கண்டபடி இருந்தால், அவர் சங்கத்தின் உறுப்பினராயிருப்பதிலிருந்து நின்று விடவேண்டும்.

(அ) நொடித்தவரென (Insolvent) உத்தரவுப்பெற விண்ணப்பத்திருப்பது அல்லது அவ்வாறு உத்தரவிடப் பட்டிருப்பது,

(ஆ) (1)ஆம் உட்பிரிவின் (ஆ) பகுதியில் விவரித்துள்ள குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டிருப்பது,

ஆனால், ஒருவர் இப் பகுதியின்படி உறுப்பினராயிருப்பது முடிவடைந்திருந்தால், மேல் முறையீட்டின்மீது அல்லது புனராய்வின்மீது தண்டனை ரத்து செய்யப்பட்டாலும் அவ்வாறு ரத்து செய்யப்பட்டதிலிருந்தும் அவர் மீண்டும் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

(இ) அச் சங்கத்தில் அல்லது அதன் நிதி வங்கியில் அல்லது அது நிதி வங்கியாயிருக்கிற பதிவான சங்கம் ஒன்றில் ஊதியம் பெறும் ஊழியராவது : அல்லது,

(ஈ) இச் சட்டத்தின்கீழ் உறுப்பினர் பதவியிலிருந்து விலக்கப்பட்டிருப்பது.

(3) (1)ஆம் உட்பிரிவைச் சேர்ந்த (ஆ) பகுதியின் சரத்துகளும் (2)ஆம் உட்பிரிவைச் சேர்ந்த (ஆ) பகுதியின் சரத்துகளும், நிருணயிக்கப்படும் வகையைச் சேர்ந்த நபர்களை மீட்பதற்காக வென்றே அமைக்கப்பட்ட சங்கத்தில் சேர விரும்புகிற நபருக்கு அல்லது அதில் உறுப்பினராக உள்ளவருக்குப் பொருத்தமான (1)ஆம் உட்பிரிவைச் சேர்ந்த (ஆ) பகுதியின் சரத்துகளும் (2)ஆம் உட்பிரிவைச் சேர்ந்த (இ) பகுதியின் சரத்துகளும் தன் உறுப்பினர் களுக்கு வேலை வாய்ப்பு கொடுப்பதையே முக்கியக் குறிக்

கோளாகக் கொண்டுள்ள ஒரு பதிவான சங்கத்தில் சேர விரும்புகிற நபருக்கு அல்லது அதில் உறுப்பினராக உள்ளவருக்குப் பொருந்தா.

19. பதிவான சங்கத்திலிருந்து சேவைபெறுவதற்கும் குறையை நீக்கு வதற்கும் விண்ணப்பித்துக் கொள்ள உறுப்பினர்களின் உரிமை

*(1)* ஒரு பதிவான சங்கத்தின் உறுப்பினர் ஒவ்வொருவரும் அச் சங்கத்தின் உப-விதிகளில் கண்ட சரத்துகளின்கீழ் பதிவான சங்கத்தின் உறுப்பினர்களுக்குக் கிடைக்கிற சேவைகளைப் பெற உரிமையுள்ளவராவர். அத்தகைய சேவைகள், அவர் விண்ணப்பம் செய்து கொள்வதன்பேரில் அச் சங்க நிருவாகக் குழுவினரால் அவருக்குச் செய்யப்பட வேண்டும்.

*(2)* யாதொரு பதிவான சங்கத்தின் யாதோர் உறுப்பினருக்கு யாதொரு சேவையும் மறுக்கப்பட்டால், அல்லது சேவைகளுக் காகத் தான் செய்த விண்ணப்பத்தின்பேரில் நிருவாகக் குழு செய்த தீர்மானம் தான் செய்த விண்ணப்பத் தேதியிலிருந்து ஒரு மாத காலத்திற்குள் தனக்குத் தெரிவிக்கப்படாவிட்டால் அவர் அக் குறையை நீக்கம் செய்வதற்காகப் பதிவாளருக்கு விண்ணப்பித்துக் கொள்ளலாம்.

*(3)* சேவை மறுக்கப்பட்டிருந்தால், சேவை செய்ய மறுத்து நிருவாகக் குழு செய்த தீர்மானத்தைப் பெற்றுக் கொண்ட தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குள்ளும் அல்லது சேவை செய்ய வேண்டுமென்று செய்து கொண்ட விண்ணப்பத்தின்பேரில் நிருவாகக் குழுவின் தீர்மானம் அறிவிக்கப்படாதிருந்தால் சங்கத் திற்கு விண்ணப்பித்துக் கொண்ட தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள்ளும், (2) ஆம் உட்பிரிவின்படிப் பதிவாளருக்கு விண்ணப்பம் செய்யப்படவேண்டும்.

*(4)* யாதொரு சேவையைச் செய்ய மறுத்திருப்பது நியாயமற்றதெனவும், முறையற்றதெனவும் அல்லது வேற்றுமை காட்டுகிறதெனவும் பதிவாளர் திருப்தி கொண்டால் நிருவாகக் குழுவிற்குத் தன் முறையீடுகளைத் தெரிவிக்க வாய்ப்பளித்த பிறகு அச் சேவையைச் செய்யவேண்டுமென உத்தரவு பிறப்பித்துக் கட்டளையிடலாம்.

*(5)* *(4)*ஆம் உட்பிரிவின்கீழ்ப் பிறப்பிக்கப்பட்ட உத்தரவைக் கடைப்பிடித்து நிருவாகக் குழுவால் யாதொரு சேவை செய்யப் பட்டிருந்தால், அந்த நிருவாகக் குழுவும், அத்தகைய சேவை செய்யப்பட்ட உறுப்பினரும் அத்தகைய உத்தரவு பிறப்பிக்கப்

பட்டிராவிட்டால் அச் சேவை தொடர்பாய் எந்த உரிமைகளையும், கடமைகளையும் உள்ளவர்களாய் இருந்திருப்பார்களோ அதே உரிமைகளையும், கடமைகளையும் இப்போது உள்ளவர்களாய் இருப்பார்கள்.

20. விலக்குதல்

(1) ஒரு பதிவான சங்கத்தில் உறுப்பினராயிருப்பவர் அச் சங்க நலனுக்குப் பாதகமாகச் செயல்பட்டால் அதற்காகத் தனியாகக் கூட்டப்பட்ட பேரவைக் கூட்டத்தில் வந்துள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் மூன்றில் இரு பகுதியினர் நிறைவேற்றும் தீர்மானத்தின்பேரில், அவர் விலக்கப் படலாம்.

(2) எந்த நபரும் தனது விளக்கத்தைத் தெரிவித்துக் கொள்ள ஒரு வாய்ப்பு கொடுக்கப் பெறுமலும், அல்லது (1)ஆம் உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள தீர்மானம் பதிவாளரால் அங்கீகரிக்கப்படும் வரையிலும், அந்த உட்பிரிவின்கீழ் விலக்கப்படக்கூடாது: உறுப்பினரை விலக்கிச் செய்யப்பட்ட (பதிவாளரால் அங்கீகரிக்கப்பட்டபடியுள்ள) தீர்மானத்தின் நகல் ஒன்று உறுப்பினருக்கு அனுப்பப்பட வேண்டும்.

21. உறுப்பினரின் வாக்குகள்

1. (அ) ஒரு பதிவான சங்கத்தின் உறுப்பினர் எவருக்கும் சங்க விவகாரங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட வாக்குகள் கிடையாது.

(ஆ) பதிவான யாதொரு சங்கம் அல்லது அதன் நிருவாகக் குழுவின் கூட்டத்தின்முன் வரும் ஒவ்வொரு பிரச்சினையும், கூட்டத்திற்கு வந்திருக்கும் உறுப்பினர்களுள் பெரும்பான்மையினரால் வாக்களிப்பதன் மூலம் முடிவு செய்யப்படவேண்டும். வாக்குகள் சமமாக இருக்கும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் பிரச்சினை முடிவு செய்யப்படவில்லையென்று கருதப்படவேண்டும். ஆனல்,

(அ) ஒரு தேர்தலில் வாக்குகள் சமமாக இருக்கும் சூழ்நிலையில் எவரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்பது திருவுளச் சீட்டுப் போட்டு நிருணயிக்கப்பட வேண்டும் ;

(ஆ) வாக்களிக்க உறுப்பினருக்குள்ள உரிமையைச் சங்கம் தனது உப-விதியின் மூலம் குறிப்பிட்ட வகையில் கட்டுப்படுத்தலாம் ;

(இ) அரசினர் அல்லது நிதிவங்கி உறுப்பினராக இருக்கும் சங்கத்தில், சங்கத்தின் நிருவாகக் குழுவிற்குச் சூழ்நிலைக்கேற்ப அரசினர் அல்லது நிதி வங்கியால் நியமனம் செய்யப்பட்ட ஒவ்வொரு நபருக்கும் ஒரு வாக்கு உண்டு ;

(ஈ) ஒரு பெயரளவு அல்லது துணைஞர் உறுப்பினருக்கு வாக்களிக்கும் உரிமை கிடையாது.

(உ) உப-விதிகளில் ஏற்பாடு செய்யப்பட்டாலொழிய மற்றபடி வயதுவராத அல்லது மனநோயாளியான ஓர் உறுப்பினருக்கு வாக்களிக்கும் உரிமை கிடையாது.

2. தனது நிதியில் ஒரு பகுதியைப் பதிவான மற்ருெரு சங்கத்தில் முதலீடு செய்துள்ள பதிவு பெற்ற சங்கம், அச் சங்க விதிகளின்கீழ் அல்லது உப-விதிகளின்கீழ் அவ்வாறு நியமிக்கப் படத் தகுதியற்றவராயிராத தமது உறுப்பினர்களில் ஒருவரை அத்தகைய மற்றச் சங்கத்தின் விவகாரங்களில் வாக்களிக்க நியமிக்கலாம்.

3. (1) ஆம் உட்பிரிவில் அல்லது (2)ஆம் உட்பிரிவில் ஏற்பாடு செய்யப்பட்டாலொழிய மற்றபடி ஒரு பதிவான சங்கத்தின் உறுப்பினர் எவரும் மற்ருெருவர் மூலம் வாக்களிக்கக் கூடாது.

4. இப் பிரிவில் என்ன சொல்லியிருந்த போதிலும் அதைப் பொருட்படுத்தாமலே ஒரு பதிவான சங்கத்தின் நிருவாகக் குழு விற்கு நடைபெறும் தேர்தலில் அரசினரின் அல்லது நிதி வங்கியின் நியமி வாக்களிக்க உரிமையுள்ளவராகமாட்டார்.

**22. உறுப்பினர்கள் கணக்குகளை ஆய்வு செய்தல்**

ஒரு பதிவான சங்கத்தின் உறுப்பினர் எவரும் நிருணயிக்கப் படும் கட்டணத்தைச் செலுத்துவதன் பேரில் அலுவலக நேரத்தில் எப்போது வேண்டுமாலுைம் அச் சங்கக் கணக்குகளில் தனக்குத் தொடர்பான நிதி வங்கிகளைத் தாளுகவேயாவது அல்லது தான் இதற்கென எழுத்து மூலம் அதிகாரம் அளித்த உறுப்பின ராகவுள்ள பிரதிநிதி மூலமாகவாவது ஆய்வு செய்யலாம்.

**23. பங்கு அல்லது பற்றினை மாற்றுவதில் கட்டுப்பாடுகள்**

ஒரு பதிவான சங்கத்தின் மூலதனத்தில் உறுப்பினர் ஒருவர் வைத்துள்ள பற்று அல்லது பங்கு அல்லது அதன் ஒரு பகுதியை

மாற்றம் செய்தல் எதுவும் கீழ்க்கண்ட சூழ்நிலைகளிலன்றி சட்டப் படி செல்லக் கூடியதல்ல.

(அ) அத்தகைய பங்கு அல்லது பற்று உறுப்பினரால் ஓராண்டுக்குக் குறையாமல் வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

(ஆ) அது சங்கத்திற்கு அல்லது சங்க உறுப்பினருக்கு மாற்றம் செய்யப்பட வேண்டும்.

(இ) அம் மாற்றத்தை அச் சங்கத்தின் நிருவாகக் குழு அங்கீ கரிக்க வேண்டும்.

24. உறுப்பினர் மரணமடைவதன் பேரில் பற்றினை மற்றொருவருக்கு மாற்றுதல்

1. 34ஆம் பிரிவின் சரத்துகளுக்குட்பட்டு ஒரு பதிவான சங்கத்தின் உறுப்பினர் ஒருவர் மரணமடைவதன் பேரில் இறந்து போன அந்த உறுப்பினருடைய பங்கினை அல்லது பற்றினை, விதிகளுக்கிணங்க நியமனம் செய்யப்பட்ட நபருக்கு அல்லது நபர்களுக்கு சங்கம் மாற்றி விடவேண்டும். அல்லது நபர் எவரும் நியமனம் செய்யப்படாவிட்டால் மரணமடைந்த உறுப்பினரின் வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதியென நிருவாகக் குழுவிற்குத் தோன்றுகிற நபருக்கு அவ்வாறு மாற்றிவிட வேண்டும்.

ஆனால் சூழ்நிலைக்கேற்ப அத்தகைய நியமி அல்லது வாரிசு அல்லது சட்டப் படியான பிரதிநிதி உறுப்பினராகச்சேர்க்கப்படத் தகுதியுள்ளவராக இருந்தால் அவர் அச் சங்கத்தின் உறுப்பின ராகச் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்ற நிபந்தனை குட்பட்டு,

மற்றும் இந்த உட்பிரிவில் கூறப்பட்டதெதுவும், வயதுவராத அல்லது மன நோயாளியான ஒரு நபர் பதிவான சங்கம் ஒன்றின் மூலதனத்தில் மரணமடைந்த நபருக்குள்ள பங்கினை அல்லது பற்றினைப் பெறுவதைத் தடை செய்யாது என்ற நிபந்தனைக்குட் பட்டு

(2) 1ஆம் உட்பிரிவில் என்ன சொல்லியிருந்த போதிலும் அதை பொருட்படுத்தாமலும் விதிகளில் குறிக்கப்பட்டு நிபந்தனை களுக்குட்பட்டு சூழ்நிலைக்கேற்ப ஒரு பதிவான சங்கம் தானாகவே அல்லது மரணமடைந்தவரின் நியமி, வாரிசு அல்லது சட்டப்

படியான பிரதிநிதி கேட்டுக் கொள்வதன் பேரிலோ மேற்படி மரணமடைந்தவருக்கு மூலதனத்திலிருந்த பங்கு அல்லது பற்றை, விதிகளைக் கடைப் பிடித்து நிருணயித்து அவருக்குக் கொடுக்க வேண்டும்.

3. பதிவான சங்கம், மரணமடைந்த உறுப்பினருக்குத் தான் கொடுக்க வேண்டிய மற்றெல்லாப் பணத்தையும் சூழ்நிலைக்கேற்ப அத்தகைய நியமி அல்லது சட்டப்படியான பிரதிநிதிக்குக் கொடுக்கலாம்.

4. பதிவான சங்கம் இப் பிரிவின் சரத்துகளுக்கிணங்க செய்த எல்லா மாற்றங்களும், கொடுத்த பணத்தொகைகளும் சட்டப்படி செல்லக் கூடியதாகும்; வேறுயாதொரு நபர் இதைக் குறித்துச் சங்கத்தின் மீது செய்து கொள்கிற கேட்புக்கும் எதிராக இவை செல்லக்கூடியதாகும்.

**25. முன்னுள் உறுப்பினரின் அல்லது இறந்துபோன உறுப்பினருடைய சொத்தின் பொறுப்பு**

1. (2)ஆம் உட்பிரிவின் சரத்துகளுக்குட்பட்டு ஒரு பதிவான சங்கத்தின் முன்னுள் உறுப்பினரின் பொறுப்பு அல்லது இறந்து போன உறுப்பினர் சொத்திலுள்ள பொறுப்பு அச் சமயத்தில் சங்கத்தின் கடன்களுக்காக கீழ்க்கண்டபடி இருக்கும்.

(அ) முன்னுள் உறுப்பினர் செயலில் அவர் உறுப்பினரா யிருந்து முடிந்துபோன தேதியன்று இருந்த கடனுக் காகவும்,

(ஆ) இறந்துபோன உறுப்பினரின் செயலில் அவர் இறந்து போன தேதியன்று இருந்த கடனுக்காகவும்,

அத் தேதியிலிருந்து இரண்டாண்டுக் காலம் வரையில் அவருடைய பொறுப்பு இருந்துவரும்;

ஆனால் ஒரு பதிவான சங்கத்தில் பங்குகள் எடுத்துள்ள அரசினர் அல்லது நிதி வங்கியின் பொறுப்பு மேற்படி அரசினர் அல்லது நிதி வங்கி உறுப்பினராயிருத்தலினின்று அற்றுப்போன தேதியிலிருந்து அற்றுப்போகும் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

2. பதிவாளர், 85 (1)ஆம் பிரிவின்கீழ் எழுத்தின் மூலம் பிறப் பிக்கும் உத்தரவின் மூலம் ஒரு சங்கத்தை முடிவு கட்டும்படி கட்டளையிட்டால் அந்தக் கட்டளையின் தேதிக்கு முன்னதாக

இரண்டு ஆண்டுகளுக்குள் மரணமடைந்த உறுப்பினரின் சொத்துகளின் பொறுப்பும் அந்தக் காலத்திற்குத் தொடர்பான முன்னுள் உறுப்பினரின் பொறுப்பும் சங்கத்தின் முழுக் கலைப்பு நடவடிக்கைகள் நடத்தப்பட்டு முடிக்கப்பெறும் வரையில் தொடர்ந்து இருந்து வர வேண்டும். ஆனுல் அந்த நபர் சூழ்நிலைக்கேற்ப உறுப்பினராயிருத்தலினின்றும் நின்றுபோன தேதியன்று அல்லது அவர் மரணமடைந்த தேதியன்று இருந்த சங்கத்தின் கடன்களைப் பொறுத்தவரையில் மட்டுமே அத்தகைய பொறுப்பு இருக்கும்.

## அத்தியாயம் IV

## பதிவான சங்கங்களின் நிருவாகம்

**26. பேரவைக் கூட்டங்கள்**

1. (அ) இச் சட்டம், விதிகள், உப-விதிகள், ஆகியவற்றின் சரத்துகளுக்குட்பட்டு, ஒரு பதிவான சங்கத்தின் இறுதியான அதிகாரம் அதன் உறுப்பினருடைய பேரவை வசம் நிலைபெறும்.

ஆனுல், இந்தப் பகுதியில் கண்டதெதுவும் ஒரு பதிவான சங்கத்தின் நிருவாகக் குழுவிற்கு அல்லது ஓர் அலுவலருக்கு இச் சட்டத்தினுல் அல்லது இச் சங்கத்தின் விதிகளால் அல்லது உப-விதிகளால் வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தை அந்த நிருவாகக் குழு அல்லது அலுவலர் செலுத்துவதைப் பாதிக்காது என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

(ஆ) பகுதி (அ)-ல் என்ன சொல்லியிருந்தபோதிலும் அதைப் பொருட்படுத்தாமலே பதிவான சங்கத்தின் விவகார எல்லையானது நிருணயிக்கப்படும் எல்லைக்குக் குறைவாக இல்லாமலிருந்தால், அல்லது பதிவான அச் சங்கத்தில் நிருணயிக்கப்படும் எண்ணிக்கையுள்ள உறுப்பினர்களுக்குக் குறையாமல் இருந்தால் பதிவான சங்கம் தன் உப-விதிகளைத் திருத்தம் செய்வதன் மூலம் ஒரு சிறிய அவையை அமைப்பதற்கு ஏற்பாடு செய்யலாம். அவ்வாறு செய்யவேண்டுமெனப் பதிவாளர் கட்டளையிட்டால் அவ்வாறே செய்யப்படவேண்டும். இந்தச் சிறிய அவையின் உறுப்பினர்கள் நிருணயிக்கப்படும் எண்ணிக்கை கொண்டவர்களாக இருப்பார்கள். இவர்கள், விதிகளைக் கடைப்பிடித்துத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். (இந்த அவையைப் பிரதிநிதித்துவப் பேரவை எனக் குறிப்பிடவேண்டும்). உப-விதிகளில்

குறிப்பிடும் பேரவையின் அதிகாரங்கள் அனைத்தையும் அல்லது அவைகளில் எதையாவது இந்த அவை செலுத்தும். இச் சட்டத்திலே பேரவை அல்லது அதன் கூட்டம் பற்றிய குறிப்பிடு தொடர்பாய், எச்சொற்கள் பயன்படுத்தப்பட்டிருந்த போதிலும் இப்பகுதியின் கீழ் பிரதிநிதித்துவப் பேரவை அமைக்கப் பட்டிருந்தால் அக் குறிப்பிடு, சூழ்நிலைக்கேற்ப பிரதிநிதித்துவப் பேரவை அல்லது அதன் கூட்டம் பற்றிய குறிப்பிடாக இருந்தாற் போலவே பிரதிநிதித்துவப் பேரவை செலுத்தத்தக்க அதிகாரங்கள் தொடர்பாகப் பயன்படும்.

ஆனால், பிரதிநிதித்துவப் பேரவை அதன் அமைப்பை அல்லது அதிகாரங்களைக் குறித்து உப-விதிகளிலுள்ள சரத்து எதையும் மாற்றக் கூடாது என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

(இ) பிரதிநிதித்துவப் பேரவை யாதொரு அதிகாரத்தையும் விதிகளில் அல்லது உப-விதிகளில் குறிக்கப்பட்டுள்ள கட்டாயங்களுக்கும் நிபந்தனைகளுக்கும் உட்பட்டுச் செலுத்த வேண்டும்.

2. ஒரு பதிவான சங்கத்தின் பேரவை கீழ்க்கண்ட செயல்களுக்காக ஆண்டிற்கொருமுறை நடத்தப்பட வேண்டும் :

(அ) சங்க நடவடிக்கைகளின் நிகழ்ச்சி முறையையொட்டி நிருவாகக் குழு தயாரித்த அடுத்த ஆண்டுக்குரிய வரவு செலவுத் திட்டத்தை அங்கீகரித்தல் ;

(ஆ) நிருவாகக் குழுவின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தல் ;

(இ) தணிக்கை அறிக்கையையும், ஆண்டு அறிக்கையையும் ஆலோசித்தல் ;

(ஈ) நிகர இலாபத்தை விநியோகம் செய்தல் ;

(உ) சங்கத்தின் உப-விதிகளையொட்டிக் கொண்டுவரப் படும் யாதொரு பொருளையும் ஆலோசனை செய்தல் ;

3. (அ) நிருவாகக் குழு எப்போது வேண்டுமானாலும் பதிவான சங்கத்தின் சிறப்புப் பேரவையைக் கூட்டலாம். கீழ்க்கண்டவர்கள் அவ்வாறு கூட்ட வேண்டுமென வேண்டுகோள் செய்துள்ள தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குள் அத்தகைய கூட்டத்தைக் கூட்டவேண்டும் :

(i) உப-விதிகளில் குறிப்பிட்டிருக்கும் எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் அல்லது மொத்த உறுப்பினர்களில் குறிப்பிடப்படும் விதமுள்ளவர்கள் அல்லது,

(ii) அச் சங்கம் இணைக்கப்பட்டுள்ள மேற்பார்வை ஒன்றியத்தின் நிருவாகக் குழு அல்லது,

(iii) அச் சங்கம் இணைக்கப்பட்டுள்ள நிதிவங்கியின் நிருவாகக் குழு அல்லது,

(iv) இது செயல்களுக்காக நிருணயிக்கப்படும் மற்ற யாதொரு பதிவான சங்கம் அல்லது,

(v) பதிவாளர்.

*(ஆ)* பகுதி *(அ)*-ல் குறிக்கப்பட்டுள்ள வேண்டுகோள் எழுத்து மூலமானதாயிருக்க வேண்டும். சிறப்புப் பேரவையின் கூட்டத்தில் ஆலோசிப்பதற்கான செயல்களை அதில் குறிப்பிட வேண்டும்.

4. *(அ)* *(3)*ஆம் உட்பிரிவின் *(அ)* பகுதியின் கீழ் விடுத்த வேண்டுகோளையொட்டி நிருவாகக் குழு பேரவையைக் கூட்ட மறுத்தால் அல்லது தவறினால் அல்லது கூட்டத்தைக் கூட்டுவதற்கு இச் சட்டத்தின்கீழ் அல்லது விதிகளின்கீழ் அல்லது உப-விதிகளின் கீழ் அதிகாரம் வாய்ந்த நிருவாகக் குழு அல்லது அலுவலர் இல்லையெனப் பதிவாளர் கருதினாலும் அல்லது நிருவாகக் குழு செயல்படுவதற்குரிய தகுதியைப் பற்றித் தகராறு ஏதேனும் இருந்தாலும் பதிவாளர் அக் கூட்டத்தைத் தானே கூட்டலாம்.

*(ஆ)* (i) அந்த வேண்டுகோளையொட்டி அல்லது இந்த உட்பிரிவைச் சேர்ந்த *(அ)* பகுதியின் கீழ்ப் பதிவாளர் தானாகவே கூட்டிய பதிவுச் சங்கத்தின் சிறப்புப் பேரவைக் கூட்டத்தில் குறைவெண் வரம்பு நபர்கள் வந்திராவிட்டால், சூழ்நிலைக்கேற்ப நிருவாகக் குழு அல்லது பதிவாளர் நிருணயிக்கும் வேறொரு தினத்திற்கும், நேரத்திற்கும் கூட்டம் ஒத்திப் போடப்படும்.

(ii) அவ்வாறு ஒத்திப் போடப்பட்ட கூட்டத்திலும் குறைவெண் வரம்பு நபர்கள் வந்திராவிட்டால், வந்திருக்கும் உறுப்பினர்களே குறைவெண் வரம்பு உறுப்பினர்களாக அமைவார்கள்.

(iii) இந்த உட்பிரிவின் *(அ)* பகுதியின்கீழ் கூட்டப்பட்ட யாதொரு கூட்டம் தொடர்பாக அச் சங்கத்தின் அல்லது மேற்பார்வை ஒன்றியத்தின் உப-விதிகளில்

என்ன கண்டிருந்த போதிலும் அதைப் பொருட்படுத்தாமல் அக் கூட்டம் கூட்டுவதற்குக் கொடுக்க வேண்டிய முன்னறிவிப்புக் காலத்தையும் அக் கூட்டம் கூட்ட வேண்டிய நேரத்தையும், இடத்தையும் அக் கூட்டத்தில் ஆலோசிக்க வேண்டிய பொருள்களையும் பதிவாளரே தீர்மானிக்கலாம். மற்றும், அவர் அக் கூட்டத்தில் தலைமை வகிக்கலாம்; அல்லது அவ்வாறு தலைமை வகிப்பதற்காக யாதொரு நபருக்கும் அதிகாரம் அளிக்கலாம்.

(5) சிறப்புப் பேரவைக் கூட்டம் எந்தச் சங்கம் அல்லது மேற்பார்வை ஒன்றியம் அல்லது பதிவான யாதொரு வேறு சங்கம் கேட்டுக் கொண்டதன் மேல் கூட்டப்பட்டதோ அவற்றின் நிதிகளிலிருந்து அக் கூட்டம் கூட்டியதில் ஏற்பட்ட செலவுகள் செலுத்தப்பட வேண்டுமென அல்லது (4)ஆம் உட்பிரிவின் கீழ் அக் கூட்டத்தைக் கூட்ட மறுத்ததற்கு அல்லது தவறியதற்குப் பொறுப்பாளி எனப் பதிவாளர் கருதுகிற நபரால் அச் செலவுகள் செலுத்தப்பட வேண்டுமெனப் பதிவாளர் உத்தரவிடலாம்.

27. நிருவாகக் குழுக்களை நியமித்தல்

1. ஒரு பதிவான சங்கத்தின் பேரவை அதன் உபவிதிகளுக்கிணங்க ஒரு நிருவாகக் குழுவை அமைத்து அத்தகைய நிருவாகக் குழுவிடம் பதிவான சங்கத்தின் விவகாரங்களின் நிருவாகத்தை அளிக்க வேண்டும்.

ஆனால், இச் சட்டத்தின் தொடக்கத்திற்குப் பிறகு பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் நடைமுறையில், அச் சங்கத்தைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பத்தில் கையெழுத்திட்டுள்ள நபர்கள், பதிவுத் தேதியிலிருந்து மூன்று மாத காலத்திற்கு அல்லது அதற்கு மேற்கொண்டும் தேவையெனப் பதிவாளர் கருதும் காலத்திற்கு, அச் சங்கத்தின் விவகாரங்களை நடத்த நிருவாகக் குழு ஒன்றை நியமிக்கலாம்; ஆனால், இவ்விலக்குக் கூற்றின் கீழ் நியமிக்கப்பட்ட நிருவாகக் குழு செயல்படுவதானது உப-விதிகளின்படி ஒரு நிருவாகக் குழு அமைக்கப்பட்டவுடன் நின்றுபோகும் என்ற நிபந்தனைக்கும்,

மற்றும், உப-விதிகளில் அவ்வாறு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தால் சூழ்நிலைக்கேற்ப பதிவாளர் அல்லது அரசினர், உப-விதிகளில் குறிப்பிட்டிருக்கும் காலத்திற்கு நிருவாகக் குழுவின்

உறுப்பினர்கள் அனைவரையும் அல்லது அவர்களில் எவரையும் நியமனம் செய்யலாம் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

2. அரசினர் அல்லது நிதி வங்கி பதிவான சங்கம் ஒன்றில் பங்குகள் வாங்கியிருந்தால் அல்லது நிதி உதவியோ மற்ற உதவிகளோ கொடுத்திருந்தால் சூழ்நிலைக்கேற்ப அரசினர் அல்லது நிதி வங்கி அரசினர் நிருணயிக்கும் அச் சங்கத்தின் நிருவாகக் குழுவிலுள்ள உறுப்பினரால் மூன்று பேர் அல்லது மொத்த எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பகுதி இரண்டில் எது குறைவோ அந்த எண்ணிக்கையுள்ள நபர்களை நியமிக்கலாம். அரசினர் அல்லது நிதி வங்கி அவ்வாறு நியமனம் செய்யப்பட்ட நபரை அல்லது நபர்களை எப்போது வேண்டுமானாலும் திரும்பப் பெற்று அக் காலி இடத்தை அல்லது காலி இடங்களைப் புதிய நியமனம் மூலம் நிரப்பலாம்.

3. (அ) இச் சட்டத்தின் கீழ் அமைக்கப்பட்ட யாதொரு நிருவாகக் குழுவின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினரின் பதவிக் காலம் மூன்று ஆண்டுகளாகும்.

ஆனால், முன்னே நடந்த தேர்தலில் நிருவாகக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினரில் ஏறக்குறைய மூன்றில் ஒரு பகுதியினர் அத் தேர்தலுக்குப் பிறகு முதலாண்டு முடிவில் பதவியிலிருந்து ஓய்வு பெற வேண்டும்; அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களில் ஏறக்குறைய மூன்றில் ஒரு பகுதியினர் அத் தேர்தலுக்குப் பிறகு இரண்டாவது ஆண்டு முடிவில் அப் பதவியிலிருந்து ஓய்வு பெற வேண்டும்; அவ்வாறு முதலாண்டு முடிவிலும் இரண்டாம் ஆண்டு முடிவிலும் எந்தெந்த உறுப்பினர் பதவியிலிருந்து ஓய்வு பெற வேண்டுமென்பதைச் சீட்டுக் குலுக்கிப் போட்டு நிருவாகக் குழு நிருணயிக்க வேண்டும் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

(ஆ) யாதொரு நிருவாகக் குழுவில் அரசினர் அல்லது பதிவாளர் அல்லது நிதி வங்கி நியமனம் செய்த உறுப்பினர் அரசாங்கச் சார்பற்ற உறுப்பினராக இருந்தால் அவருடைய பதவிக் காலம் மூன்றாண்டுக் காலமாகும்.

(இ) பகுதி (அ)-ல் சொல்லியிருந்தபோதிலும், அதைப் பொருட்படுத்தாமலும் விதிகளில் குறிப்பிடப்படும் நிபந்தனைக்குட்பட்டும், இப் பகுதியின் கீழ் பதவியிலிருந்து ஓய்வு பெற வேண்டிய நிருவாகக் குழு உறுப்பினர்களின் பதவிக்காலம் தான் நிருணயிக்கும் தேதி வரையில் நீடிக்க வேண்டுமென்று பதிவாளர் கட்டளை

யிடலாம். அவ்வாறு கட்டளையிடுவதற்குரிய காரணங்களை அவர் எழுதி வைக்க வேண்டும்.

4. நிருவாகக் குழுவின் உறுப்பினர்கள், நிருணயிக்கப்படும் முறையில் வாக்குத் தாள் மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

ஆனல், நிருவாகக் குழு உறுப்பினர்கள் பதவியில் தற்செயலாக நேரிடுகிற காலி இடத்தை விதிகளில் அல்லது உப-விதிகளில் குறிக்கப்படும் முறையில் நிரப்ப வேண்டும். அத்தகைய தற்செயல் காலி இடத்தை நிரப்புகிற நிருவாகக் குழு உறுப்பினர், அந்த நிருவாகக் குழுவின் எந்த உறுப்பினருடைய இடத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளரோ அந்த உறுப்பினர், அந்தக் காலி இடம் ஏற்பட்டிராவிட்டால், பதவி வகித்திருக்கக்கூடிய காலம் வரையில் மட்டுமே பதவி வகிப்பார் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

28. நிருவாகக் குழு உறுப்பினராவதற்கான தகுதியின்மை

1. ஒருவர் கீழ்க் கண்ட நிலையிலிருந்தால், நிருவாகக் குழுவின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு அல்லது நியமிக்கப்படுவதற்குத் தகுதியற்றவராவார்.

(அ) பதிவான சங்கத்தில் ஊதியம் பெறும் ஊழியரின் நெருங்கிய உறவினராயிருப்பது அல்லது,

(ஆ) (i) அவர் வாங்கிய கடன் அல்லது கடன்களை அச்சங்கத்திற்கு அல்லது பதிவான வேறு யாதொரு சங்கத்திற்கு, அதன் உப-விதிகளில் நிருணயிக்கப்பட்டுள்ள காலம் வரை அல்லது எப்படியும் மூன்று மாதங்களுக்கு மேற்பட்டு தொகையைச் செலுத்தத் தவறியிருப்பது ;

ஆனல் இவ்வுட்பகுதியின் கீழ் பதவி வகிப்பதினின்றும் நின்று போன நிருவாகக் குழு உறுப்பினர் ஒருவர், அவர் பதவி வகிப்பதினின்று நின்று போன தேதியிலிருந்து ஓர் ஆண்டுக் காலத்திற்கு அவர் உறுப்பினராக இருந்த அந்தப் பதிவான சங்கத்தின் நிருவாகக் குழு உறுப்பினராக மறுபடியும் தேர்ந்தெடுக்கப்படுவதற்கோ, மற்ற யாதொரு சங்கத்தின் குழுவிற்குத் தேர்ந்தெடுப்பதற்கோ தகுதியுடையவராக மாட்டார். அல்லது,

(i) அவருக்கு எதிராக 91ஆம் பிரிவில் குறிப்பிட்டுள்ள யாதொரு, தீர்ப்பாணை, உத்தரவு, தீர்மானம் அல்லது தீர்ப்பு பிறப்பிக்கப்பட்டிருத்தல்,

(இ) சங்கத்துடன் செய்து கொண்ட யாதொரு ஒப்பந்தத்தில் அல்லது சங்கம் தனிப்பட்ட முறையில் செய்த

விற்பனையில் அல்லது வாங்கியதன் அல்லது யாதொரு ஏலத்தில் அல்லது (முதலீடும், கடன் வாங்குவதும் நீங்கலாக) சங்கத்தின் நிதிப் பொறுப்பு அடங்குகிற யாதொரு ஒப்பந்தத்தில் அல்லது விவகாரத்தில், அந்த ஒப்பந்தம் அல்லது விவகாரம், விற்பனை அல்லது கிரயத்திற்கு வாங்கியது முடிவு பெறுமலிருந்தாலும், அதில் நேரடியாகவோ, மறைமுகமாகவோ பற்றுள்ளவரா யிருத்தல்;

ஆனால், இப் பகுதி நிருணயிக்கக்கூடிய வகையைச் சேர்ந்த ஒப்பந்தங்களுக்கும், விற்பனைகளுக்கும், கொள்முதல்களுக்கும் அல்லது விவகாரங்களுக்கும் பொருந்தாது.

(ஈ) பதிவான சங்கத்தின் சார்பில் அல்லது அதற்கெதிராக அல்லது அச் சங்கத்தில் உறுப்பினர் என்ற நிலை வகிக்கும் மற்ற யாதொரு பதிவான சங்கத்தின் சார்பாக அல்லது எதிராக வழக்கறிஞராகப் பணியாற்றுதல் ;

(உ) பெயரளவு அல்லது துணைஞர் உறுப்பினராக இருத்தல்;

(ஊ) அவர் வயது வராதவராகவோ, மனநிலை பிறழ்ந்தவராகவோ இருத்தல் ; அல்லது,

(எ) இச் சட்டத்தின் கீழ் யாதொரு குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டு அத் தண்டனை மாற்றப்படாமலிருத்தலும் அத் தண்டனை காலாவதியான தேதியிலிருந்து மூன்று ஆண்டுக் காலம் கழியாதிருத்தலும், அல்லது

(ஏ) 28 (அ) பிரிவின்படி தொடர்பான சங்கத்தின் அல்லது இதர வேறு ஒரு சங்கத்தின் நிருவாகக் குழு உறுப்பினர் பதவியி லிருந்து நீக்கப்பட்டால்.

2. நிருவாகக் குழு உறுப்பினர் கீழ்க் கண்டவாறு இருந்தால் அவர் தன் பதவியிலிருப்பது முடிவடைந்து விடும்.

(அ) (1)ஆம் உட்பிரிவில் சொல்லியுள்ள தகுதியின்மைகளில் எதையேனும் உடையவராயிருப்பது;

ஆனால், நிருவாகக் குழு உறுப்பினர் ஒருவர் இச் சட்டத்தின் கீழ் யாதொரு குற்றத்தைச் செய்ததற்காகத் தண்டிக்கப்பட்ட காரணத்தால் தனது பதவி வகிப்பதை இழந்து விட்டால் அத் தண்டனை, மேல் முறையீட்டின் மீது அல்லது புனராய்வின் மேல் ரத்து செய்யப்பட்டால் அவ்வாறு செய்யப்பட்டதிலிருந்து அவர்

தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது நியமிக்கப்பட்ட காலத்திற்கு அவரை மீண்டும் ப த வி யி ல் சேர்த்துக் கொள்ளவேண்டும். மேலும் இடைக்கால காலி இடத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது நியமிக்கப்பட்ட யாதொரு நபரும் ஷெ நபர் மீண்டும் பதவியில் சேர்ந்தவுடன் பதவியைக் காலி செய்ய வேண்டும்.

(ஆ) பதிவான சங்கத்தின் உறுப்பினராயிருப்பது முடிந்து விட்டிருப்பது அல்லது,

(இ) சங்கத்திற்கு யாதொரு தொகையைப் பாக்கியாயி ருக்கிற ந ப ரி ட மி ரு ந் து தொகை வசூல் செய்வதற்காக விற்பனைக்குக் கொண்டுவரப்பட்ட அந்த நபரின் சொத்தை நேரடி யாகவோ மறைமுகமாகவோ வாங்குதல் ;

3. (அ) எந்த நபரும் ஐந்துக்கு மேற்பட்ட பதிவான சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் ஒரே சமயத்தில் உறுப்பினரா யிருத்தல் கூடாது.

(ஆ) பகுதி (அ)ன் சரத்துகளுக்குட்பட்டு எந்த நபரும் ஒரே சமயத்தில் விதிகளின் படித் தலைமைச் சங்கங்கள் வகை செய்யப் பட்ட சங்கங்களில் இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் அல்லது மத்தியச் சங்கங்கள் என வகை செய்யப் பட்ட சங்கங்களில் இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் உறுப்பினராயிருத்தல் கூடாது;

(இ) யாதொரு நபர் நிருவாகக் குழுவின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது நியமிக்கப்பட்ட தேதியன்று--

(i) பதிவான ஐந்து சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் உறுப்பினராக இருந்தால் அல்லது,

(ii) பகுதி(ஆ)-ல் குறிப்பிட்ட விதமாக தலைமைச் சங்கங்கள் அல்லது மத்தியச் சங்கங்கள் என வகை செய்யப்பட்ட இரண்டு பதிவான சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் ஓர் உறுப்பினராக இருந்தாலும் அவர் அந்தத் தேதி யன்று எந்த நிருவாகக் குழுவின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அல்லது நியமிக்கப்பட்டிருக்கி ருரோ அந்த நிருவாகக் குழு, சூழ்நிலைக்கேற்ப, மேற் சொன்ன தலைமைச் சங்கம் அல்லது மத்தியச் சங்கத்தின் நிருவாகக் குழுவாக இருந்தாலும் மேற்படி தேதியன்று அவர் தேர்ந்தெடுக்கப்பட்டது அல்லது நியமிக்கப்பட்டது செல்லாதது;

(ஈ) (i) யாதொரு நபர் இச் சட்டத்தின் தொடக்கத்தில் ஐந்துக்கு மேற்பட்ட பதிவான சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் ஓர் உறுப்பினராக இருக்கும் நிலையில் அவர் முன்னரே மேற்சொன்ன ஐந்துக்கு அதிகமாயுள்ள எல்லாச் சங்கங்களின் நிருவாகக் குழுக்களின் உறுப்பினர் பதவியைக் கைவிட்டாலொழிய, சட்டத் தொடக்கத்தின் தேதியிலிருந்து 90 நாள்கள் முடிவடைந்தவுடன் அத்தகைய பதிவான எல்லாச் சங்கங்களின் நிருவாகக் குழுக்களிலும் உறுப்பினரா யிருப்பதினின்றும் நீங்கக்கடவர்.

(ii) தலைமைச் சங்கங்கள் அல்லது மத்தியச் சங்கங்கள் என (ஆ) பகுதியில் குறிப்பிட்டுள்ள வகையைச் சார்ந்த பதிவு பெற்ற இரண்டிற்கு மேற்பட்ட சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் ஒருவர் இச் சட்டத்தின் தொடக்கத்தில் உறுப்பினராக இருந்தால் அவர் (1) உட்பகுதியின் சரத்துகளுக்குட்பட்டும் அந்த உட்பிரிவில் குறிப்பிட்டுள்ள காலம் முடிவடைந்தாலும் மேலும், சூழ்நிலைக்கேற்ப, அத்தகைய தலைமைச் சங்கங்கள் அல்லது மத்தியச் சங்கங்களில் இரண்டிற்கு மேற்படாத சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் மட்டுமே உறுப்பினராக இருக்கும் வகையில் அவர் முன்னரே கைவிட்டிருந்தாலொழிய, அவர் அத்தகைய எல்லா தலைமைச் சங்கங்களிலும், அல்லது மத்தியச் சங்கங்களிலும் உறுப்பினராயிருப்பது நின்று விடும்.

(உ) அரசினர் அல்லது பதிவாளர் நிருவாகக் குழுவிற்கு உறுப்பினர் ஒருவரை நியமனம் செய்வதற்கு இந்த உட்பிரிவில் உள்ளதெதுவும் பொருந்தாது.

4. நிருவாகக் குழுவின் யாதொரு உறுப்பினர்மீதும் 71ஆம் பிரிவின் (1) உட்பிரிவின்கீழ் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்து அது ரத்து செய்யப்படாமலிருந்தால், நிருவாகக் குழுவின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட அல்லது நியமிக்கப்பட அவர் அந்த உத்தரவுத் தேதியிலிருந்து மூன்றாண்டுக் காலம் வரை உரிமையுள்ளவராக மாட்டார்.

5. (அ) மேற்கடக்கப்பட்டுள்ள நிருவாகக் குழுவின் உறுப்பினர் எவரும் மேற்கடப்புக் காலம் முடிவடைந்த தேதியிலிருந்து மூன்று ஆண்டுக் காலம் வரை அந்த நிருவாகக் குழுவிற்குத் தேர்ந்தெடுப்பதற்கு அல்லது நியமிப்பதற்குத் தகுதியற்றவராவார்.

(ஆ) 72ஆம் பிரிவின் கீழ் மேற்கடப்பு நடவடிக்கை முடிவடையாமலிருக்கிற நிருவாகக் குழுவின் உறுப்பினர் எவரும் அந்த நடவடிக்கை முடிவடைகிற வரை நிருவாகக் குழுவிற்குத் தேர்ந்தெடுப்பதற்கு அல்லது நியமிப்பதற்குத் தகுதியற்றவராவார்.

6. நிருவாகக் குழுவின் உறுப்பினர் ஒருவர் இப் பிரிவில் சொல்லியுள்ள தகுதியின்மைகள் ஏதேனும் உடையவராயிருந்தாரா அல்லது அத் தகுதியின்மைகளில் எதற்கும் உட்பட்டவரா யிருக்கிறாரா என்பது பற்றித்த கராறு ஏதேனும் எழுந்தால் அதைப் பதிவாளர் முடிவு செய்யவேண்டும்.

**28அ. (1) நிருவாகக் குழு உறுப்பினரைப் பதவியிலிருந்து நீக்குவது**

1. 64ஆம் பிரிவின் கீழ் செய்யப்படும் தணிக்கையில் அல்லது 65ஆம் பிரிவின் கீழ் செய்யப்படும் விசாரணையில் அல்லது 66ஆம் பிரிவின்கீழ் செய்யப்படும் ஆய்வில் கூட்டுறவுச் சங்கத்தின் நிருவாகக் குழு உறுப்பினர் ஒருவர் சங்கத்தின் எந்த ஒரு நிதியை அல்லது இதர சொத்தைக் கையாடல் செய்ததாகவோ அல்லது மோச எண்ணத்துடன் கையாடியதாகவோ அல்லது சங்கம் பற்றி நம்பிக்கை மோசடிக் குற்றம் புரிந்தார் என்றோ அல்லது சங்க நிருவாகத் தொடர்பாய் எல்லை மீறிய வகையில் தொடர்ந்து தன் கடமையில் கவனக் குறைவாய் இருந்தார் என்றோ அல்லது சட்டப்படியான தனது கடமைகளையும், செயல்களையும் நிறைவேற்றுவதில் குற்றங்களையும் தவறுகளையும் செய்தார் என்றோ பதிவாளருக்குத் தோன்றினால் பதிவாளர் அவரை அவர் மீது எடுக்கப்படும் இதர நடவடிக்கைகளுக்குப் பாதகமில்லாமல் தனது எழுத்து மூலமான உத்தரவின் மூலம் நிருவாகக் குழு உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கிவிடலாம்.

2. தனது விளக்கத்தைத் தெரிவிக்க ஒரு வாய்ப்பு அளிக்கப் பட்டாலல்லாமல் எந்த ஒரு நபரையும் (1) ஆம் பிரிவின் கீழ் நிருவாகக் குழு உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கக் கூடாது.

## அத்தியாயம் V

## பதிவான சங்கங்களின் கடமைகளும், உரிமைகளும்.

**29. சங்கங்களின் முகவரி**

ஒவ்வொரு பதிவான சங்கத்திற்கும் விதிகளையொட்டிப் பதிவான ஒரு முகவரி இருக்க வேண்டும். அந்த முகவரி அறிவிப்புகளும், கடிதங்களும் அனுப்பப்படத் தக்கதாயிருக்க

வேண்டும். முகவரியில் மாற்றம் ஏற்பட்டால், மாற்றம் ஏற்பட்ட நாளிலிருந்து முப்பது நாள்களுக்குள் அம் மாற்றத்தைப் பதிவாளருக்குத் தெரிவிக்க வேண்டும்.

**30. சட்டம், விதிகள், உபவிதிகள் ஆகியவற்றின் நகல் ஆய்விடத் தக்கனவாயிருத்தல்**

ஒவ்வொரு பதிவான சங்கமும், இச் சட்டம், அச் சங்கத்தை முறைப்படுத்துகிற விதிகள், அதன் உப-விதிகள் ஆகியவற்றின் நகலையும், அதன் உறுப்பினர்களுடைய பதிவேடு ஒன்றையும், சங்கத்தின் பதிவான முகவரியில் நியாயமான எல்லா நேரங்களிலும் இலவசமாக ஆய்விடத்தக்க வகையில் வைத்திருக்க வேண்டும்.

**31. சங்கங்கள் ஒருமித்த நிறுவனங்களாயிருத்தல்**

ஒரு சங்கத்தைப் பதிவு செய்தால், அது பதிவு செய்யப் பட்டுள்ள பெயரில் ஓர் ஒருமித்த நிறுவனமாகிவிடும். அது நிலையான வழி உரிமை உள்ளதாயிருக்கும். அதற்குப் பொதுவான முத்திரை ஒன்றிருக்கும். சொத்தை வைத்திருக்கவும், ஒப்பந்தங்கள் செய்யவும், வழக்குகளையும் மற்றச் சட்ட நடவடிக்கைகளைத் தொடரவும், அவற்றில் எதிர்வாதம் செய்யவும் அது நிறுவப்பட்டுள்ள செயல்களுக்குத் தேவையான எல்லாவற்றையும் செய்யவும் அதற்கு அதிகாரம் இருக்கும்.

**32. சங்கத்திற்கு முதன்மையான பற்றுப் பொறுப்பு**

1. நிலவரி பொறுத்தவரை அல்லது நிலவரியைப் போலவே வசூலிக்கத்தக்க பணம் தொடர்பாய், அரசினரின் யாதொரு முன்னுரிமைக்குட்பட்டுப் பதிவான சங்கத்திற்கு யாதொரு உறுப்பினரிடமிருந்து அல்லது முன்னாள் உறுப்பினரிடமிருந்து அல்லது இறந்து போன உறுப்பினரின் சொத்திலிருந்து கிடைக்க வேண்டிய கடன் அல்லது பாக்கித் தொகை கீழ்க்கண்டவற்றிலிருந்து முதன்மையான பற்றுப் பொறுப்பாகப் பெறப்பட வேண்டும்.

(i) அந்த உறுப்பினர் எந்தப் பயிர்களை அல்லது இதர விவசாயப் பொருளை விளைவிப்பதற்காகப் பதிவான சங்கத்திலிருந்து கடன் வாங்கினாரோ அப் பயிர்கள் அல்லது இதர விவசாயப் பொருள்கள்.

(ii) பதிவான சங்கம் கொடுத்த கடன் தொகையிலிருந்து முழுவதுமோ அல்லது ஓரளவுக்கோ வாங்கிய

கால்நடை, கால்நடைத் தீவனம், விவசாயம் அல்லது தொழிலியல் கருவிகள் அல்லது இயந்திரங்கள் அல்லது தயாரிப்புக்கான கச்சாப் பொருள்கள் அல்லது அவ்வாறு வழங்கிய அல்லது வாங்கிய கச்சாப் பொருள்களிலிருந்து தயாரிக்கப்பட்ட சாமான்கள் அல்லது அக் கடன் தொகையைக் கொண்டு செலுத்திய அல்லது வாங்கிய யாதொரு பட்டறை, கிடங்கு அல்லது அலுவலகம்.

2. ஒரு பதிவான சங்கத்திற்கு (1)ஆம் உட்பிரிவின்கீழ் முதன்மையான பற்றுப்பொறுப்பு ஏற்பட்டுள்ள சொத்தை அல்லது சொத்திலுள்ள அக்கறையை அச் சங்கத்தின் எழுத்து மூலமான முன்அனுமதியின்றி எவ்வகையிலும் விற்கவும் கூடாது ; அல்லது மற்றபடி இன்னொருவருக்கு மாற்றவும் கூடாது ; அல்லது அது மாறுதல் செய்யப்படவும் கூடாது.

3. ஒரு பதிவான சங்கத்தின் உறுப்பினர் அல்லது முன்னாள் உறுப்பினர்களின் நியமி, வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி, அவ்வாறு செய்யவேண்டுமெனச் சங்கத்தால் கோரப் பட்டால், (1)ஆம் உட்பிரிவின்கீழ் பற்றுப்பொறுப்பு ஏற்படுத்தப் பட்டுள்ள சொத்தைச் சங்கத்திற்குச் சேரவேண்டிய கடன் அல்லது பாக்கித் தொகை முழுவதும் செலுத்தப்படும் வரை விதிகளினால் நிருணயிக்கப்படும் இடத்திலும் முறையிலும் சங்கத்தின் வசம் வைப்பீடு செய்யவேண்டும் ; அல்லது அதன் பொறுப்பில் அளிக்க வேண்டும். அவ்வாறு வைப்பீடு செய்த அல்லது பொறுப்பில் அளித்த சொத்தை அகற்றுவதற்கும் அனுப்பி வைப்பதற்கும் அல்லது பராமரிப்பதற்கும் ஏற்பட்ட எல்லாச் செலவுகளுக்காகவும்கூட அவர் தொகையைச் செலுத்த வேண்டும். அத்தகைய சொத்தினை அகற்றுவதற்கும் அனுப்பி வைப்பதற்கும் அல்லது பராமரிப்பதற்கும் ஏற்பட்ட செலவுகளை, நிருணயிக்கப்படும் விகிதத்திற்கிணங்க, உறுப்பினரிடமிருந்து அல்லது முன்னாள் உறுப்பினரிடமிருந்து அல்லது இறந்த உறுப்பினருடைய சொத்திலிருந்து சூழ்நிலைக்கேற்ப வசூலிக்க வேண்டும்.

4. தற்போது அமலிலுள்ள யாதொரு சட்டத்தில் என்ன சொல்லியிருந்த போதிலும், 2ஆம் உட்பிரிவிற்கு முரண்பாடாகச் செய்யப்படும் எந்த விவகாரமும் சட்டத்தில் முற்றிலும் செல்லாதது.

5. ஒரு பதிவான சங்கத்திற்குச் சாதகமாக 1ஆம் உட்பிரிவின் கீழ், ஏற்படுத்தப்படும் பற்றுப்பொறுப்பை அச் சங்கம் கடன்

கொடுத்த பிறகு, 1883ஆம் ஆண்டு நில வளக் கடன்கள் சட்டத்தின்கீழ் (மத்தியச் சட்டம் 19/1883) கொடுக்கப்பட்ட ஒரு கடன் காரணமாக அரசினருக்கு ஏற்படும் எந்தக் கோருரிமைக்காகவும் சரிசெய்து கொள்ளலாம்.

**33. சில பதிவான சங்கங்களிலிருந்து கடன் வாங்கும் உறுப்பினர்களின் அசையாச் சொத்தின் மீது பற்றுப் பொறுப்பு**

இச் சட்டத்தில் அல்லது தற்போது அமலிலுள்ள இதர யாதொரு சட்டத்தில் என்ன சொல்லியிருப்பினும் :

(i) விவசாயிகளே பெரும்பான்மையில் உறுப்பினர்களாயுள்ள ஒரு பதிவான சங்கத்திற்குக் கடனுக்காக விண்ணப்பித்துக் கொள்ளும் ஓர் உறுப்பினர், தனக்குச் சொந்தமான நிலம் அல்லது இதர அசையாச் சொத்து இருந்தால், நிருணயிக்கப்படும் நமூனுவில் ஓர் உறுதிமொழியைக் கொடுக்க வேண்டும். உறுப்பி-னருக்குச் சங்கத்தால் வழங்கப்படும் கடன் தொடர்பாகவும், இனிமேல் அவ்வப்போது வழங்கப்படும் கடன்கள் தொடர்பாகவும், அக் கடன்களின் பேரிலான வட்டிக்காகவும் அவர் அந்த உறுதிமொழியில் குறிக்கப்பட்டுள்ள அத்தகைய நிலம் அல்லது அசையாச் சொத்து அல்லது அதன் பாகத்தின் மீது பற்றுப் பொறுப்பு ஒன்றை ஏற்படுத்துகிருர்.

(ii) எந்தச் சங்கத்தின் சார்பாக பற்றுப் பொறுப்பு ஏற்படுத்தப்பட்டதோ அச் சங்கத்தின் எழுத்து மூலமான முன் அனுமதியுடன், எந்தச் சமயத்திலும் (1)ஆம் பகுதியின் கீழ் செய்யப்பட்ட ஓர் உறுதி மொழி மாற்றப்படலாம் அல்லது ரத்து செய்யப்படலாம்.

(iii) சங்கத்திலிருந்து உறுப்பினரால் வாங்கப்பட்ட கடன் அல்லது கடனின் முழுத் தொகை அதன் மீது சேர வேண்டிய வட்டியுடன் சங்கத்திற்குச் செலுத்தப்படுகிறவரை, எந்த நிலம் அல்லது அசையாச் சொத்து தொடர்பாக (1)ஆம் பகுதியின்கீழ் ஓர் உறுதிமொழி செய்யப்பட்டதோ அந்த நிலம் அல்லது அசையாச் சொத்து அல்லது நிலம் அல்லது அசையாச் சொத்தின் யாதொரு பாகம் அல்லது நிலேயத்தின் மீது அல்லது அசையாச் சொத்தின் மீது உள்ள பாத்தியதை விற்கப்படக்கூடாது அல்லது மாற்றப்படக் கூடாது. இப் பகுதியை மீறிச் செய்யப்படும் யாதொரு விவகாரமும் சட்டத்தில் முற்றிலும் செல்லாதது.

(iv) (i)ஆம் பகுதியின் கீழ் செய்யப்படும் உறுதிமொழி அல்லது (ii)ஆம் பகுதியின்கீழ் செய்யப்படும் அதன் யாதொரு

மாற்றம் அல்லது ரத்து அந்த நிலம் அல்லது இதர அசையாச் சொத்துள்ள எல்லை மீது அதிகாரம் வகிக்கும் உப-பதிவாளருக்குப் பதிவு அஞ்சல்மூலம் அனுப்பப்படவேண்டும்.

(v) உறுதிமொழியை அல்லது அதன் மாற்றத்தை அல்லது ரத்தைப் பெறுவதன் பேரில் உப-பதிவாளர் அந்த உறுதி மொழியை அல்லது அதன் மாற்றத்தை அல்லது ரத்தைப் பதிவு செய்து அதன் நகல் ஒன்றைப் பதிவான சங்கத்திற்கு அனுப்பி வைக்கவேண்டும்.

(vi) (i)ஆம் பகுதியின்கீழ் செய்த யாதொரு உறுதிமொழி அல்லது (ii) பகுதியின்கீழ் செய்த அதன் யாதொரு மாற்றம் அல்லது ரத்து (v) பகுதியின்கீழ் பதிவு செய்யப்படாவிட்டால் சட்டத்தில் முற்றிலும் செல்லாதது.

**34. ஓர் உறுப்பினரின் பங்குகள் அல்லது பாத்தியதை தொடர்பாகப் பற்றுப் பொறுப்பு ஏற்படுத்துவதும், கடன் தீர்க்க அவற்றை ஒதுக்குவதும்**

ஓர் உறுப்பினர் அல்லது முன்னுள் உறுப்பினர் அல்லது மரண மடைந்த உறுப்பினருக்கு மூலதனத்தில் உள்ள பங்கு அல்லது பாத்தியதை மீதும், அல்லது அவரது வைப்புத் தொகைகள்மீதும், ஓர் உறுப்பினர், இறந்துவிட்ட உறுப்பினர் அல்லது முன்னுள் உறுப்பினருக்குச் செலுத்தப்பட வேண்டிய இலாப ஈவு, மேலூதியத் தொகை அல்லது இலாபங்கள் மீதும், அத்தகைய உறுப்பினர் அல்லது முன்னுள் உறுப்பினர் அல்லது மரண மடைந்த உறுப்பினரிடமிருந்து சங்கத்திற்குச் சேர வேண்டிய கடனுக்காகப் பதிவான சங்கத்திற்கு பற்றுப் பொறுப்பு உண்டு. அது ஓர் உறுப்பினர் அல்லது முன்னுள் உறுப்பினர் அல்லது மரண மடைந்த உறுப்பினருக்குச் செலுத்தப்பட வேண்டிய அல்லது அவர் பெயருக்கு வரவு வைக்கப்பட்ட யாதொரு தொகையையும் அத்தகைய கடனைச் செலுத்துவதற்காகச் சரி செய்து கொள்ளலாம்.

**35. சில பணத் தொகைகளின் மீது நிதி வங்கிக்கு ஒரு கோருரிமை கிடையாது**

எந்த நிதி வங்கிக்கும் ஒரு பதிவான சங்கத்தினடமிருந்து வரவேண்டிய கடனுக்காக,

(i) ஒரு பதிவான சங்கம் சேம நிதியிலிருந்து தன்னிடம் முதலீடு செய்துள்ள யாதொரு தொகை மீதும் அல்லது

(ii) 63ஆம் பிரிவின் கீழ் ஏற்படுத்தப்பட்ட வருங்காலச் சேமிப்பு நிதியிலிருந்து எந்தச் சங்கம் தன்னிடம் முதலீடு செய்துள்ள யாதொரு தொகை மீதும் ஒரு பற்றுப் பொறுப்பு கிடையாது; அல்லது அத் தொகைகளை அக் கடனுக்காகச் சரிசெய்து கொள்வதற்கு உரிமை கிடையாது.

36. பங்குகள் அல்லது பாத்தியதை முதலானவை ஜப்தி செய்வதற்குட் பட்டவையல்ல

34ஆம் பிரிவின் சரத்துகளுக்குட்பட்டு ஒரு பதிவான சங்கத்தின் மூலதனத்தில் ஓர் உறுப்பினருக்குள்ள பாத்தியதை, அல்லது 63ஆம் பிரிவின்கீழ் ஏற்படுத்தப்பட்ட வருங்காலச்சேமிப்பு நிதியில் ஒரு சங்க ஊழியர் பெயருக்கு வரவு வைக்கப்பட்டுள்ள தொகை, வருங்காலச் சேமிப்பு நிதிக்குச் சங்கம் உதவித் தொகை செலுத்தியிருந்தால் அத் தொகைகள், அல்லது வருங்கால சேமிப்பு நிதியில் சேர்ந்துள்ள தொகைகளிலிருந்து சங்கம் முதலீடு செய்து உள்ள தொகை ஆகியவை, சூழ்நிலைக்கேற்ப, சங்கத்தின் அத்தகைய உறுப்பினர் அல்லது ஊழியர் கொடுக்க வேண்டிய யாதொரு கடன் அல்லது தீர்க்க வேண்டிய பொறுப்புக்காக ஒரு நீதி மன்றத்தால் பிறப்பிக்கப்பட்ட ஒரு தீர்ப்பாணை அல்லது உத்தரவின் கீழ் ஜப்தி செய்யப்படக் கூடாது; அல்லது விற்பனை செய்யப்படக் கூடாது; மேலும் கடனிறுக்க வகையின்மையைக் குறித்த 1909ஆம் ஆண்டின் பிரசிடென்சி டவுன் இன்சால்வென்சி சட்டத்தின் கீழ் (மத்தியச் சட்டம் III/1909) நியமிக்கப்பட்டுள்ள ஆணைபெற்ற ஆட்சியாளர் (அபீசியல், அசைனி) அல்லது கடனிறுக்க வகையின்மையைக் குறித்த 1920ஆம் ஆண்டு ப்ராவின்சீயல் இன்ஸால்வென்ஸி சட்டத்தின் கீழ் (மத்தியச் சட்டம் 5/1920) நியமிக்கப்பட்டுள்ள ஓர் ஆணைபெற்ற (Reciver) அத்தகைய பங்கு, பாத்தியதை அல்லது தொகை மீது எந்த ஒரு கோருரிமையும் செய்ய உரிமை கிடையாது, அல்லது அதை அவர் கேட்கவும் கூடாது.

37. சேமநிதியும், வராக்கடன் காப்புநிதியும் ஜப்திக்குட்பட்டவையல்ல

ஒரு பதிவான சங்கத்தின் சேம நிதி அல்லது வராக் கடன் காப்புநிதி, 60ஆம் பிரிவின் சரத்துகளுக்கிணங்க முதலீடு செய்யப் பட்டிருந்தால் அச் சங்கத்தினிடமிருந்து வரவேண்டிய கடனுக்காக அல்லது அது செலுத்த வேண்டிய பொறுப்புக்காக ஒரு நீதி மன்றத்தின் தீர்ப்பாணை அல்லது உத்தரவின் கீழ் அந்த நிதி ஜப்திக்குட்பட்டதாகாது.

38. உறுப்பினர்கள் பற்றிய பதிவேடு

யாதொரு பதிவான சங்கத்தால் வைக்கப்பட்டு வரும் உறுப்பினர்கள் பற்றிய பதிவேடு, அல்லது உறுப்பினர்களின் அல்லது பங்குகளின் பட்டியல் அதில் எழுதப்பட்டுள்ள கீழ்க்கண்ட விவரங்களைப் பார்த்தவுடன் சான்றுக அமையும்.

(அ) அத்தகைய பதிவேட்டில் அல்லது பட்டியலில் யாதொரு நபரின் பெயர் எழுதப்பட்ட தேதி;

(ஆ) அத்தகைய நபர் எந்தத் தேதியன்று உறுப்பினராய் இருப்பதினின்றும் நின்று விட்டார்.

39. சங்க ஏடுகளில் உள்ள பதிவுகளின் சான்று

1. ஒரு பதிவான சங்கத்தில் முறையாக வைக்கப்பட்டு வரப் படும் ஏடுகளில் உள்ள யாதொரு பதிவின் நகலும், விதிகளில் நிருணயிக்கப்படும் விதத்தில் சான்றிடப்பட்டால், அது யாதொரு வழக்கில் அல்லது சட்ட நடவடிக்கையில் இருப்பதற்கான அப் பதிவைப் பார்த்தவுடன் சான்ருகப் பெற்றுக் கொள்ளப்படும். மேலும் ஒவ்வொரு வழக்கிலும் அவ்வேடுகளில் பதிவு செய்துள்ள செய்திகள் நிதி வங்கிகள், கணக்குகள் ஆகியவற்றிற்குச் சான்ருக அது ஏற்றுக்கொள்ளப்படும். மூலத்தில் எழுதிய பதிவு போலவே அது அனுமதிக்கப்படும்.

2. ஒரு பதிவான சங்கத்தில் எந்த அலுவலரும் அல்லது கலைப்பு அலுவலரும், எந்த அலுவலரின் அலுவலகத்தில், பதிவான ஒரு சங்கம் கலைக்கப்பட்ட பிறகு: அதன் பதிவேடுகள் ஒப்படைக்கப் படுகின்றனவோ அந்த அலுவலரும் மேற்படி சங்கம் அல்லது கலைப்பு அலுவலர் கட்சிக்காராக இராத சட்ட நடவடிக்கைகளில் சங்கத்தின் ஏடுகளில் யாதொன்றையும் [அதில் உள்ள பதிவுகள் (1) உட்பிரிவின் கீழ் நிரூபிக்க முடிவதாயிருந்தால்] முன்கொணரும்படியோ அல்லது அவ்வேடுகளில் பதிவு செய்துள்ள பதிவுகள், நிதி வங்கிகள், கணக்குகள் ஆகியவற்றை நிரூபிக்கச் சாட்சியாகத் தோன்றும்படியோ சிறப்புமுறை காரணத்தை முன்னிட்டு நீதிமன்றம் அல்லது நடுவர் உத்தரவு பிறப்பித்தாலொழியக் கட்டாயப்படுத்தப்படக் கூடாது.

40. சம்பளத்திலிருந்தும் கூலியிலிருந்தும் கழித்துக் கொள்வது

1. பதிவான சங்கத்தின் ஓர் உறுப்பினர் தனக்குச் செலுத்தப் பட வேண்டிய சம்பளத்திலிருந்து அல்லது கூலியிலிருந்து சங்கத் தால் கேட்கப்படும் தொகையைக் கழித்துக் கொள்ளத் தே

வேலையளிப்பவருக்கு அல்லது சம்பளத்தை அல்லது கூலியைப் பட்டுவாடா செய்யும் அலுவலருக்கு அதிகாரம் அளிக்கும் வகையில் அச் சங்கத்திற்குச் சாதகமாக ஓர் ஒப்பந்தத்தை எழுதிக் கொடுக்கலாம். அத்தகைய உறுப்பினர் அவ்வப்போது தனக்குச் செலுத்த வேண்டிய கடனுக்காக அல்லது பிற தொகைகளுக் காக, அவரது சம்பளத்திலிருந்து அல்லது கூலியிலிருந்து ஒரு குறிப் பிட்ட தொகையைக் கழித்துக் கொள்ளவேண்டும் என்று அச் சங்கம் எழுதி வேண்டுகோள் செய்யவேண்டும்.

2. (அ) பதிவான சங்கத்தின் ஓர் உறுப்பினர் (1)உட்பிரிவின் கீழ் ஓர் ஒப்பந்தத்தை எழுதிக் கொடுப்பதன் பேரில் அந்த உறுப்பினர் வேலையளிப்பவர் அல்லது அவரது சம்பளம் அல்லது கூலியைப் பட்டுவாடா செய்யும் அலுவலருக்குச் சங்கம் எழுத்து மூலம் செய்து கொள்ளும் வேண்டுகோளை அவர் பெற்றுக்கொண்டு அதில் குறிப்பிட்டுள்ள தொகையை அவர் அந்த உறுப்பினருடைய சம்பளத்திலிருந்து அல்லது கூலியிலிருந்து கழித்துக் கொள்ள வேண்டும். மேலும் யாதொரு சங்கம் அல்லது யாதொரு வகைச் சங்கங்கள் தொடர்பாக விதிகளில் குறிப்பிடப்படும் காலத்திற்குள் அவ்வாறு கழித்துக் கொண்ட தொகையை அவர் அந்தச் சங்கத் திற்குச் செலுத்திவிட வேண்டும்.

(ஆ) ஒரு சங்கம் யாதொரு நபரிடமிருந்து ஒரு மாதத்தில் வசூலிக்க வேண்டும் என்று கேட்கும் தொகை அல்லது ஒரே நபரிடமிருந்து தொகை வசூலிக்க வேண்டுமென்று ஒன்றுக்கு மேற் பட்ட சங்கங்கள் கேட்கும் பட்சத்தில், அவை கேட்கும் தொகை கள் எல்லாம் சேர்த்து வரும் தொகை அந்த நபரின் மொத்தச் சம்பளத்தின் பாதியை விட அதிகமாயிருந்தால் வேலையளிப்பவர் அல்லது சம்பளத்தை அல்லது கூலியைப் பட்டுவாடா செய்யும் அலுவலர் அந்த நபர் ஒரு மாதத்தில் மொத்தச் சம்பளமாக அல்லது கூலியாகப் பெறும் தொகையில் பாதித் தொகையை அவரது சம்பளம் அல்லது கூலியிலிருந்து பிடித்துக் கொள்ள வேண்டும். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சங்கங்கள் உறுப் பினரின் சம்பளம் அல்லது கூலியிலிருந்து தொகையைக் கழித்துக் கொள்ளும்படிக் கேட்டிருக்கும் சூழ்நிலையில் வேலையளிப்பவர் அல்லது சம்பளத்தை அல்லது கூலியைப் பட்டுவாடா செய்யும் அலுவலர், சங்கங்களின் வேண்டுகோளையொட்டி வசூலிக்கப் படவேண்டிய வீதாச்சாரப்படி அவை எல்லாவற்றிற்கும் அவ்வாறு வசூலித்த தொகையைச் செலுத்திவிட வேண்டும் ;

ஆனல், விதிகளில் குறிக்கப்பட்டுள்ள வகையைச் சேர்ந்த பதிவான சங்கங்களுக்கு யாதொரு தொகை சேர வேண்டியிருந்

தால், விதிகளில் நிருணயிக்கப்படும் வண்ணம் அந்த மாதம் அல்லது அதன் பாகத்திற்கான மொத்தச் சம்பளம் அல்லது கூலித் தொகையைப் பிடித்து அத்தகைய வகைச் சங்கங்களுக்கு மேலே கூறப்பட்டபடி செலுத்தப்படலாம் என்ற நிபந்தனைக்கு உட்பட்டு,

3. வேலையளிப்பவர் அல்லது சம்பளம் அல்லது கூலியைப் பட்டுவாடா செய்யும் அலுவலர் விதிகளில் நிருணயிக்கப்படும் பதிவேடுகளை வைத்துவர வேண்டும்.

4. இச் சட்டத்தின் தொடக்கத் தேதியன்று அமலிலிருந்து வருபவையும் 1ஆம் உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள தன்மையைக் கொண்டவையுமான ஒப்பந்தங்கள் எல்லாவற்றிற்கும் இப் பிரிவின் சரத்துகள் பொருந்தும்.

5. தற்போது அமலிலுள்ள யாதொரு சட்டத்தில் இதற்கு முரண்பாடாக என்ன சொல்லியிருப்பினும் இப் பிரிவின் சரத்துகள் பொருந்தும்.

6. (1)ஆம் உட்பிரிவில் குறிப்பிட்டுள்ளபடி உறுப்பினரின் வேலையளிப்பவர் அல்லது அவரது சம்பளத்தைப் பட்டுவாடா செய்யும் யாதொரு அலுவலர், இப் பிரிவின் சரத்துகளில் எவற்றையேனும் பின்பற்றத் தவறினால் அவர்மீது ஐந்நூறு ரூபாய் வரை அபராதம் விதிக்கப்படலாம்.

ஆனால், இப் பிரிவில் அடங்கியுள்ளது எதுவும் அரசாங்கத்திற்கும் அல்லது அரசாங்கத்தின் யாதொரு அலுவலருக்கும் பொருந்தாது என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

7. இப் பிரிவில் அடங்கியுள்ளது எதுவும் அரசியலமைப்புச் சட்டத்தின் 366ஆம் பிரிவின் (20) பகுதியில் விளக்கப்பட்டுள்ளபடி இரயில்வே நிருவாகத்தின்கீழ் யாதொரு இரயில்வேயினால் நடத்தப்படுகிற நிறுவனங்களுக்கும் பொருந்தாது.

**41. பதிவான சங்கத்தின் பங்குகள், கடன் ஈட்டுப் பத்திரங்கள் தொடர்பான பத்திரங்கள் இவைகளுக்குக் கட்டாயப் பதிவிலிருந்து விலக்கு**

1908ஆம் ஆண்டு இந்தியப் பதிவுச் சட்டத்தின் [மத்தியச் சட்டம் (16/1908)] 17ஆம் பிரிவைச் சேர்ந்த 1உட்பிரிவில் கண்ட (ஆ) (இ) பகுதிகளில் அடங்கியுள்ளதெதுவும்,

*1.* ஒரு பதிவான சங்கத்தின் சொத்து முழுவதும் அல்லது அதன் யாதொரு பாகம் அசையாச் சொத்தாயிருந்த போதிலும் அதிலுள்ள பங்குகளுக்குத் தொடர்பான ஒரு பத்திரத்திற்குப் பொருந்தாது, அல்லது

*2.* அத்தகைய சங்கம் வழங்கிய யாதொரு கடன் ஈட்டுப் பத்திரத்திற்கும் பொருந்தாது. இக் கடன் ஈட்டுப் பத்திரம், அசையாச் சொத்தில் யாதொரு உரிமையை அல்லது பாத்தியதையை உண்டாக்கக் கூடாது; அறிவிக்கக்கூடாது; வழங்கக்கூடாது; வரையறுக்கக்கூடாது அல்லது எடுத்துவிடக் கூடாது; ஆனால், பதிவான ஒரு பத்திரத்தின் மூலம் கடன் பத்திரத்தை வைத்திருப்பவர் எந்த அளவுக்குப் பாதுகாப்பு பெறுகிறரோ அதற்குப் பாதகம் ஏற்படுத்தாத வகையில் மேற்சொன்ன உரிமை முதலியவை உண்டாகும். பதிவான இந்தப் பத்திரத்தின் மூலம் சங்கம் தன்னுடைய அசையாச் சொத்து முழுவதையுமோ அல்லது அதன் பாகத்தையோ அல்லது அதிலுள்ள யாதொரு உரிமையையோ, அத்தகைய கடன் ஈட்டுப் பத்திரங்களை வைத்திருப்பவர்களின் நன்மைக்காக, பொறுப்புரிமையமைப்பு சொத்தின் மேல் பொறுப்பாளர்களுக்கு அடைமானம் வைத்திருக்கலாம்; எழுதிக் கொடுத்திருக்கலாம்; அல்லது மற்றபடி உரிமை மாற்றியிருக்கலாம் அல்லது,

*(3)* அத்தகைய சங்கம் வழங்கியுள்ள யாதொரு கடன் ஈட்டுப் பத்திரத்தின் மேல்குறிப்பிற்கு அல்லது அப் பத்திரத்தை மாற்றுவதற்குப் பொருந்தாது.

**42. ஒரு பதிவான சங்கம் 1864ஆம் ஆண்டு 2ஆம் சென்னைச் சட்டத்தின் கீழ் ஒரு விற்பனையின்போது அசையாச் சொத்தை வாங்கினல் அதை அதற்குச் சேரவேண்டிய கடனுக்காக விலக்கு செய்துகொள்ள அதற்குள்ள உரிமை**

இச் சட்டத்தின் கீழும் அல்லது அதன் கீழ் செய்யப்படும் யாதொரு விதியின்படியும் யாதொரு நபரிடமிருந்து ஒரு பதிவான சங்கத்திற்குச் சேரவேண்டிய யாதொரு தொகையை நிலவரிப் பாக்கியைப் போலவே வசூலிக்கத் தக்கதாயிருந்தாலும் *1864*ஆம் ஆண்டு சென்னை நிலவரி வசூல் சட்டத்தின் (சென்னைச் சட்டம் *2/1864*) சரத்துகளின் கீழ் அந்த நபரின் அசையாச் சொத்து விற்பனைக்குக் கொண்டுவரப்பட்டாலும் அந்த விற்பனையில் சங்கம் எந்த அசையாச் சொத்தை வாங்கினலும் மேற்படி சட்டத்தின் *36*ஆம் பிரிவின் சரத்துகளில் மூன்ருவது நான்காவது பகுதிகளுக்குப் பதில் கீழ்க்கண்ட பகுதிகள்

அமைத்துக் கொள்ளப்பட்டிருந்தாற் போலவே அந்தச் சரத்துகள் பொருந்தும்.

'மூன்றுவது: சொத்து வாங்குபவருக்குக் கொடுக்கவேண்டிய தொகை சொத்தின் கிரய விலையிலிருந்து முழுவதும் அல்லது ஒரு பாகம் சரிசெய்யப்பட வேண்டும். தொகை மீதியிருந்தால் அதை விற்பனைத் தேதியிலிருந்து முப்பது நாள்களுக்குள் மாவட்ட ஆட்சியாளரிடம் அல்லது அது சார்பாக அவரிடமிருந்து அதிகாரம் பெற்ற இதர அலுவலரிடம் செலுத்த வேண்டும்.'

'நான்காவது: சொத்தின் கிரய விலையில் எஞ்சியுள்ள தொகையை அச் சொத்தினை வாங்கியவர் செலுத்த மறுத்தால் அல்லது செலுத்தத் தவறிவிட்டால் அச் சொத்தை வாங்கியவரின் செலவிலும், அவருக்குப் பாதகமாக அச் சொத்து மீண்டும் விற்கப்படும். அவர் அவ்வாறு தொகையைச் செலுத்த மறுத்ததால் அல்லது தவறியதால் ஏற்பட்ட நட்டத்திற்காக அல்லது செலவுக்காக அச் சொத்தை வாங்கியவரிடமிருந்து அரசாங்க வருவாய்ப் பாக்கியைப் போலவே வசூலிக்கப்படத் தக்கதாகும். முதல் விற்பனையை விட இரண்டாவது விற்பனையில் சொத்து அதிக விலைக்கு விற்கப்பட்டால் அந்த வேறுபாடு அல்லது அதிகத் தொகை முதல் விற்பனை எந்த நபர் கணக்கில் செய்யப் பட்டதோ அவரைச் சேர்ந்ததாகும்.

**43. முத்திரை வரிக் கட்டணத்திலிருந்தும் பதிவுக் கட்டணத்திலிருந்தும் விலக்களிக்க அதிகாரம்**

அரசினர் அறிக்கை வெளியிடுவதன் மூலம் பதிவான யாதொரு வகைச் சங்கங்கள் தொடர்பாகக் கீழ்க் கண்டவற்றிற்கு விலக்களிக்கலாம்.

(அ) பதிவான ஒரு சங்கத்தால் அல்லது அதற்குச் சாதக மாக அல்லது அத்தகைய சங்கத்தின் ஓர் அலுவலரால் அல்லது உறுப்பினரால் எழுதிக் கொடுக்கப்பட்டு அச் சங்கத்தின் அலுவல் தொடர்பாயிருக்கும் பத்திரங்கள் அல்லது அவ் வகையைச் சேர்ந்த பத்திரங்கள் அல்லது இச் சட்டத்தின் கீழ்ப் பதிவாளர் செய்யும் முடிவுகள் தீர்ப்புகள் அல்லது உத்தரவுகள் இவற்றிற்குத் தற்போது அமலிலுள்ள யாதொரு சட்டத்தின்கீழ் முறையே செலுத்தப்பட வேண்டிய முத்திரை வரிக் கட்டணம். இது 1899ஆம் ஆண்டு இந்திய முத்திரைவரிச்சட்டத்தில் (மத்தியச் சட்டம் 11/1899-ன்) 9ஆம் பிரிவைச் சேர்ந்த (2) உட்பிரிவின் (அ) பகுதியில் குறிக்கப்பட்டுள்ள முத்திரை வரியல்லாத இதர கட்டணங்களாகும்.

(ஆ) தற்போது அமலிலுள்ள பதிவுச் சட்டத்தின் கீழ்ச் செலுத்தப்பட வேண்டிய யாதொரு கட்டணமும்.

## அத்தியாயம் VI

## பதிவான சங்கங்களுக்கு அரசாங்க உதவி

### 44. பதிவான சங்கங்களில் அரசினர் முதலீடு செய்தல்

1. பதிவான ஒரு சங்கத்தின் பங்கு மூலதனத்திற்கு அரசினர் நேரடியாகத் தொகை செலுத்தலாம்.

2. யாதொரு ஒப்பந்தத்தில் இதற்கு முரண்பாடாக என்ன இருப்பினும், பதிவான யாதொரு சங்கத்தில் அரசினர் தாம் எடுத்துள்ள பங்குகளைக் குறித்து, அச் சங்கத்தில் யாதொரு இதர பங்குகளைக் குறித்துச் செலுத்தப்பட வேண்டிய இலாப ஈவை விட அதிகமான வீதத்தில் இலாப ஈவைப் பெற அரசினருக்கு உரிமை கிடையாது.

### 45. தலைமைச் சங்கத்திற்கு அரசினர் நிதிகள் வழங்குதல்

அரசினர் சட்டத்தின்மூலம் ஒதுக்கப்பட்டுள்ள தொகைக்கு உட்பட்டு, இதர பதிவான சங்கங்களின் பங்குகளை வாங்குவதற்காக (இனி இதன்கீழ் இந்த அத்தியாயத்தில் தலைமைச் சங்கம் என்று குறிக்கப்பட்டுள்ள) ஒரு பதிவான சங்கத்திற்குப் பணம் வழங்கலாம்.

### 46. தலைமைச் சங்கத்துடன் அரசினரின் கூட்டாளித்துவம்

1. 45ஆம் பிரிவின்கீழ் அரசாங்கத்தாரால் பண உதவி வழங்கப்பட்டுள்ள ஒரு தலைமைச் சங்கம் அத் தொகையுடன் ‘முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதி’ என்னும் நிதியை அமைக்க வேண்டும்.

2. அந்த நிதியை ஒரு தலைமைச் சங்கம் கீழ்க்கண்ட செயல்களுக்காகப் பயன்படுத்த வேண்டும்.

(அ) இதர பதிவான சங்கங்களில் நேரடியாகப் பங்குகளை வாங்குவதற்கும்

(ஆ) (இனி இதன்கீழ் இந்த அத்தியாயத்தில் மத்தியச் சங்கம் என்று குறிக்கப்பட்டுள்ள) ஒரு பதிவான சங்கம் (இனி இதன் கீழ் இந்த அத்தியாயத்தில் பிரதமச் சங்கங்களென்று குறிக்கப்பட்டுள்ள) பதிவான இதர சங்கங்

களில் பங்குகள் வாங்குவதற்காக, அச் சங்கத்திற்குப் பணம் வழங்குவதற்கும்;

(இ) இந்த அத்தியாயத்தின் சரத்துகளுக்கிணங்க அரசினருக்குப் பணம் செலுத்துவதற்கும் ;

மேற்சொன்ன செயல்களுக்குத் தவிர வேறெந்தச்செயலுக்கும் அந்த நிதியைப் பயன்படுத்தக் கூடாது.

**47. அரசாங்கக் கூட்டாளித்துவத் துணை நிதி**

1. முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலிருந்து ஒரு தலைமைச் சங்கத்தால் பணம் பெறும் ஒரு மத்தியச் சங்கம், அத் தொகையைக் கொண்டு அரசாங்கக் கூட்டாளித்துவத் துணை நிதியொன்றை அமைக்க வேண்டும்.

2. ஒரு மத்தியச் சங்கம் 'அரசாங்கக் கூட்டாளித்துவ துணை நிதியைக்' கீழ்க்கண்ட செயல்களுக்குப் பயன்படுத்த வேண்டும் :

(அ) பிரதம சங்கங்களில் பங்குகள் வாங்குவதற்கும்,

(ஆ) இந்த அத்தியாயத்தின் சரத்துகளுக்கிணங்க தலைமைச் சங்கத்திற்குப் பணம் செலுத்துவது :

மேற்சொன்ன செயல்களுக்குத் தவிர வேறெந்தச் செயலுக்கும் அந்த நிதியைப் பயன்படுத்தக்கூடாது.

**48. பங்குகள் வாங்குவதற்காக அரசினரின் அங்கீகாரம்**

அரசினரின் எழுத்து மூலமான முன்அனுமதியைப் பெற்றுக் கொள்ளாமல் முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலிருந்து அல்லது அரசாங்கக் கூட்டாளித்துவ துணை நிதியிலிருந்து' பதிவான ஒரு சங்கத்தின் பங்கு எதையும் வாங்கக் கூடாது.

**49. சில பங்குகளைக் குறித்து பொறுப்பு வரையறுக்கப்பட்டிருக்க வேண்டும்**

(அ) அரசினர் அல்லது

(ஆ) ஒரு தலைமைச் சங்கம் அல்லது மத்தியச் சங்கம்.

சூழ்நிலைக்கேற்ப 'முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலிருந்து அல்லது உப-நிதியிலிருந்து ஒரு பதிவான சங்கத்தில் பங்குகள் வாங்கியிருந்தால், அந்தப் பதிவான சங்கம் கலைக்கப் படும்போது அந்தப் பங்குகளைக் குறித்த பொறுப்பு அவை

தொடர்பாகச் செலுத்தப்பட்ட தொகைக்கு வரையறுக்கப் பட்டிருக்கும்.

**50. இலாப ஈவுத் தொகையின் மீது கட்டுப் பாடுகள்**

'முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலிருந்து இதர பதிவான சங்கங்களில் பங்குகளை வாங்கியுள்ள ஒரு தலைமைச் சங்கமும், 'அரசாங்கக் கூட்டாளித்துவ உப-நிதியிலிருந்து பிரதம சங்கங்களில் பங்குகள் வாங்கியுள்ள ஒரு மத்தியச் சங்கமும் தொடர்பான சங்கத்தால் அறிவிக்கப்பட்டதும் அச் சங்கத்தின் இதர பங்குதாரர்களுக்குச் செலுத்தப்படவேண்டியதுமான இலாப ஈவு வீதத்தை மட்டுமே பெற உரிமையுள்ளதாகும்.

**51. தலைமைச் சங்கங்களுக்கும், மத்தியச் சங்கங்களுக்கும் இழப்பீடு**

1. முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலிருந்து பங்குகள் வாங்கியுள்ள பதிவான ஒரு சங்கம் மூடப்பட்டால் அல்லது கலைக்கப்பட்டால் பங்குகளை வாங்கிய தலைமைச் சங்கத்தினிடமிருந்து அப் பங்குகளை வாங்கியதன் மூலம் ஏற்பட்ட நட்டத்திற்காகத் தொகை எதையும் கேட்கும் உரிமை அரசினருக்குக் கிடையாது.

ஆனால் கலைக்கப்பட்ட சங்கத்தின் கலைப்பு அலுவலரிடமிருந்து பெற்ற யாதொரு தொகையை அரசினருக்குச் செலுத்தவேண்டும். மேற்படி கூட்டாளித்துவ நிதியிலிருந்து சங்கத்தில் முதலீடு செய்த பங்கு மூலதனத்தையும், அந்தப் பங்கு மூலதனத்தின் பேரில் செலுத்தப்பட்ட இலாப ஈவுத் தொகையையும் திருப்பிச் செலுத்தும் வகையில் அவ்வாறு செலுத்தவேண்டும் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

2. அரசாங்கக் கூட்டாளித்துவ உப-நிதியிலிருந்து பங்குகள் வாங்கியுள்ள பதிவான ஒரு சங்கம் மூடப்பட்டால் அல்லது கலைக்கப்பட்டால், பங்குகளை வாங்கிய மத்தியச் சங்கத்தினிடம் இருந்து அவ்வாறு வாங்கியதன் மூலம் ஏற்பட்ட நட்டத்திற்காகத் தொகை எதையும் கேட்கும் உரிமை அரசினருக்கோ அல்லது தலைமைச் சங்கத்திற்கோ கிடையாது.

ஆனால், மத்தியச் சங்கம், கலைக்கப்பட்ட சங்கத்தின் கலைப்பு அலுவலரிடமிருந்து பெற்ற தொகையை அரசாங்கக் கூட்டாளித்துவ உப-நிதிக்கு வரவு வைக்கவேண்டும். மேலும், முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதிக்கு வரவு வைப்பதன் மூலம் தலைமைச் சங்கத்திற்குச் சேரும்படி செய்யவேண்டும். முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலிருந்து மேற்படி

சங்கத்தில் முதலீடு செய்துள்ள பங்கு மூலதனத்தைத் திருப்பிச் செலுத்தும் வகையில் அவ்வாறு செய்யவேண்டும்.

52. பங்கு மூலதனம், இலாப ஈவு முதலியவற்றை முடிவு செய்தல்

1. முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலிருந்து வாங்கப்பட்ட பதிவான இதர சங்கங்களின் பங்குகள் தொடர்பாக, அந்தப் பங்குகள் மீட்கப்படுவதன் மேல் ஒரு தலைமைச் சங்கம் பெற்றுக் கொண்ட எல்லாத் தொகைகளும், அல்லது இலாப ஈவாக அல்லது வேறு விதமாகப் பெற்ற எல்லாத் தொகைகளும் அந்த நிதிக்கு வரவு வைக்கப்பட வேண்டும்.

2. அரசாங்கக் கூட்டாளித்துவ உப- நிதியிலிருந்து வாங்கப்பட்ட பிரதம சங்கங்களின் பங்குகள் தொடர்பாக அப் பங்குகள் மீட்கப்படுவதன்மேல், ஒரு மத்தியச் சங்கம் பெற்றுக் கொண்ட எல்லாத் தொகைகளும் அல்லது இலாப ஈவாக அல்லது வேறு விதமாகப் பெற்ற எல்லாத் தொகைகளும் முதலில் அந்த நிதிக்கு வரவு வைக்கப்படவேண்டும். பிறகு தலைமைச் சங்கத்திற்கு மாற்றப்படவேண்டும். தலைமைச் சங்கம் முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதிக்கு அதை வரவு வைக்கவேண்டும்.

3. பங்குகள் சூழ்நிலைக்கேற்ப தலைமைச் சங்கத்தின் பெயரில் அல்லது மத்தியச் சங்கத்தின் பெயரில் இருப்பினும், (1)ஆம் (2)ஆம் உட்பிரிவுகளில் குறிக்கப்பட்டுள்ள எல்லாத் தொகைகளும், இலாப ஈவுகளும் அரசினருக்குச் செலுத்தப்பட வேண்டும்.

4. (3)ஆம் உட்பிரிவில் ஏற்பாடு செய்யப்பட்டாலொழிய, மற்றபடி 45ஆம் பிரிவின்கீழ் ஒரு தலைமைச் சங்கத்திற்கு அரசினர் வழங்கியுள்ள பணத் தொகைகளைத் திருப்பிப் பெற அரசினருக்கு உரிமை கிடையாது.

53. தலைமைச் சங்கம் அல்லது மத்தியச் சங்கம் கலைக்கப்படுவதன் பேரில் முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியையும் அரசாங்கக் கூட்டாளித்துவ உப-நிதியையும் முடிவு செய்தல்

1. முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியொன்றை ஏற்படுத்தியுள்ள ஒரு தலைமைச் சங்கம் மூடப்பட்டால் அல்லது கலைக்கப்பட்டால் அச் சங்கத்தில் அந்த நிதிக்கு வரவு வைக்கப்பட்டுள்ள அல்லது செலுத்தப்பட வேண்டிய எல்லாத் தொகைகளையும் அரசினருக்குச் செலுத்தவேண்டும்.

2. அரசாங்கக் கூட்டாளித்துவ உப- நிதியொன்றை ஏற்படுத்தியுள்ள மத்தியச் சங்கம் மூடப்பட்டால் அல்லது

கலைக்கப்பட்டால், அச் சங்கத்தில் அந்த நிதிக்கு வரவு வைக்கப் பட்டுள்ள அல்லது செலுத்தப்படவேண்டிய எல்லாத் தொகை களும் 46ஆம் பிரிவின் (2) உட்பிரிவைச் சேர்ந்த (ஆ) பகுதியின் கீழ் அச் சங்கம் பண உதவி பெறுகிற முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியில் செலுத்தப்பட்டு அதற்கு வரவு வைக்கப்படவேண்டும்.

**54. முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியும் அரசாங்கக் கூட்டா ளித்துவ உப-நிதியும் சொத்துகளின் பாகம் ஆகமாட்டா**

முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதிக்கு அல்லது அரசாங்கக் கூட்டாளித்துவ உப- நிதிக்கு வரவு வைக்கப் பட்டுள்ள யாதொரு தொகை, சூழ்நிலைக்கேற்ப, தலைமைச் சங்கத்தின் அல்லது மத்தியச் சங்கத்தின் சொத்துகளின்பாகம் ஆக மாட்டா.

**55. அரசினரும், தலைமைச் சங்கங்களும் செய்துகொள்ளும் ஒப்பந்தம்**

இந்த அத்தியாயத்தின் முந்தைய சரத்துகளுக்குட்பட்டும்,

(அ) 46ஆம் பிரிவின் (2)ஆம் உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள செயலுக்காக, தலைமைச் சங்கத்திற்கு எந்தெந்தச் சரத்துகளின் கீழும் நிபந்தனைகளின் கீழும் பணம் வழங்கப்படும் என்பதைக் குறிப்பிட்டு அரசினர் ஒரு தலைமைச் சங்கத்துடன் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம்,

(ஆ) ஒரு தலைமைச் சங்கம், அரசினரின் ஒப்புதல் பெற்று ஒரு மத்தியச் சங்கத்துடன் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். அதில் 46ஆம் பிரிவின் (2)ஆம் உட்பிரிவில் அடங்கியுள்ள (ஆ)பகுதியில் குறிக்கப்பட்டுள்ள செயலுக்காக முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதியிலிருந்து மத்தியச் சங்கத்திற்கு எந்தச் சரத்தின் கீழும் நிபந்தனைகளின் கீழும் பணம் வழங்கப்படும் என்பதைத் தலைமைச் சங்கம் குறிப்பிட வேண்டும்.

**56. பதிவான சங்கங்களுக்கு இதர விதமான அரசினர் உதவி**

தற்போது அமலிலுள்ள யாதொரு சட்டத்தில் என்ன சொல்லியிருப்பினும், அரசினர்

(அ) பதிவான யாதொரு சங்கத்திற்குக் கடன்களையும் முன் பணங்களையும் வழங்கலாம்.

(ஆ) பதிவான ஒரு சங்கம் வழங்கிய கடன் ஈட்டுப் பத்தி ரங்கள் தொடர்பாக அசல் தொகையையும் அதன் மீது சேர்ந்து-

வந்த வட்டியையும் திருப்பிச் செலுத்துவதற்கு உத்தரவாதமளிக்கலாம்,

(இ) பதிவான ஒரு சங்கத்தின் பங்கு மூலதனத்தையும் அரசினர் குறிப்பிடும் விதங்களில் அவற்றின் மீது இலாப ஈவுகளையும் திருப்பிச் செலுத்துவதற்கு உத்தரவாதமளிக்கலாம்.

(ஈ) பதிவான ஒரு சங்கத்திற்குக் கொடுத்த கடன்கள், முன் பணங்கள் தொடர்பாக அவற்றின் அசல் தொகையும், வட்டியும் திருப்பிச் செலுத்தப்படுவதற்கு உத்தரவாதமளிக்கலாம்.

(உ) யாதொரு பதிவான சங்கம் பெற்றுக்கொண்ட வைப்புத் தொகைகள் திருப்பித் தரப்படுவதற்கும் அந்த வைப்புத் தொகைகளின் மேல் செலுத்த வேண்டிய வட்டித் தொகை குறித்தும் உத்தரவாதம் அளிக்கலாம்.

(ஊ) பதிவான யாதொரு சங்கத்திற்கு மானியத் தொகைகள் அளிப்பது உட்பட வேறு யாதொரு வடிவத்திலும் அதற்கு நிதி உதவி அளிக்கலாம்.

**57. இந்த அத்தியாயத்தின் சரத்துகள் இதர சட்டங்களைப் புறக்கணிக்கும்**

தற்போது அமலிலுள்ள வேறு யாதொரு சட்டத்தில் இதற்கு முரண்பாடாக என்ன சொல்லியிருப்பினும், 45 முதல் 55 வரையுள்ள பிரிவுகளின் சரத்துகள் அமல்படுத்தவேண்டியவை ஆகும்.

## அத்தியாயம் VII

## பதிவான சங்கங்களின் சொத்துகளும் நிதிகளும்

**58. கடன்கள் மீது கட்டுப்பாடுகள்**

*1*. ஓர் உறுப்பினரைத் தவிர வேறு எந்த நபருக்கும் பதிவான ஒரு சங்கம் கடன் வழங்கக் கூடாது.

ஆனால் பதிவாளரின் பொது அல்லது சிறப்பு அனுமதியுடன் பதிவான ஒரு சங்கம் மற்றொரு பதிவான சங்கத்திற்குக் கடன் வழங்கலாம் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

மற்றும், பதிவான ஒரு சங்கம் உப-விதிகளில் குறிப்பிடப்படும் கடன்களை அதன் ஊதியம் பெறும் ஊழியர்களுக்கு வழங்கலாம் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

2. (1)ஆம் உட்பிரிவில் என்ன சொல்லியிருப்பினும், ஒரு பதிவான சங்கம் வைப்புத் தொகை செலுத்தியவரின் வைப்புத் தொகையின் ஆதாரத்தின் பேரில் அவருக்குக் கடன் வழங்கலாம்.

3. அரசினர், பொது அல்லது சிறப்பு உத்தரவின் மூலம் பதிவான யாதொரு சங்கம் அல்லது யாதொரு சங்கங்களின் வகை அசையாச் சொத்தின் அடைமானத்தின் பேரில் கடன் வழங்குவதைத் தடை செய்யலாம் அல்லது கட்டுப்படுத்தலாம்.

**59. கடன் வாங்குவதன் மீது கட்டுப்பாடுகள்**

சங்கத்தின் விதிகள் அல்லது உப-விதிகளில் நிருணயிக்கப்படும் வரையறையின்படியும், நிபந்தனைகளின்படியும் மட்டுமே ஒரு பதிவான சங்கம் வைப்புத் தொகைகளையும், கடன்களையும் பெற்றுக் கொள்ளலாம்.

**60. நிதிகளை முதலிடு செய்தல்**

58ஆம் பிரிவின் (3)ஆம் உட்பிரிவின் சரத்துகளுக்குட்பட்டு, ஒரு பதிவான சங்கம் தனது நிதிகளைக் கீழ்க் கண்டவற்றுள் எதிலாவது முதலீடு செய்யலாம் அல்லது வைப்புத் தொகையாக வைக்கலாம்.

(அ) அரசாங்கச் சேமிப்பு வங்கி : அல்லது,

(ஆ) 1882ஆம் ஆண்டு இந்தியப் பொறுப்பமைப்புச் சட்டத்தின் முந்தைய சட்டம் (2/1882) 20ஆம் பிரிவில் குறிக்கப்பட்டுள்ள பிணையங்களில்,

(இ) பதிவான வேறு யாதொரு சங்கத்தின் பங்குகள் அல்லது பிணையங்களில் ஆனால் பதிவாளரின் பொது அல்லது சிறப்பு அனுமதியைப் பெற்றுக் கொண்டும், அவ்வப்போது அவரால் குறிப்பிடப்படும் வரையறைகளுக்கு உட்பட்டும் அன்றி மற்றபடி வரையறுக்கப்படாத பொறுப்புடைய யாதொரு சங்கத்தில் அத்தகைய முதலீடு எதுவும் செய்யக் கூடாது.

(ஈ) பதிவாளர் இதற்காக அங்கீகரித்துள்ளதும் வங்கி வியாபாரம் நடத்துவதுமான யாதொரு வங்கியுடன், அல்லது பதிவாளர் அவ்வாறு அங்கீகரித்துள்ளவரும் வங்கி வியாபாரம் நடத்துபவருமான நபருடன் அல்லது,

(உ) விதிகளில் அனுமதிக்கப்பட்டுள்ள வேறு யாதொரு முறையிலும்.

**61. நிதிகள் உறுப்பினர்களிடையே பிரித்துக்கொள்ளப்படாது**

1. பதிவாளரால் அறிவிக்கப்பட்டுள்ள நிகர இலாபத்தைத் தவிர, பதிவான ஒரு சங்கத்தினுடைய நிதியின் எந்தப் பாகமும், அதன் உறுப்பினர்களிடையே மேலூதியமாக அல்லது இலாப ஈவாக அல்லது வேறு விதமாகப் பிரித்துக்கொள்ளப்படாது, ஆனால் ஓர் உறுப்பினர் செயலாளராக அல்லது எழுத்தராக வேலை செய்வதற்கு, உப-விதிகளில் நிருணயிக்கப்படும் வீதங்களில், பணம் வழங்கப்படலாம் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

2. (1)ஆம் உட்பிரிவில் ஏற்பாடு செய்துள்ளபடியன்றி மற்றபடி, சங்கத்தின் தலைவர் அல்லது நிருவாகி சங்கத்திற்குச் செய்யும் யாதொரு சேவைக்காக, அவருக்குப் பதிவான ஒரு சங்கத்தின் நிதிகளிலிருந்து கௌரவ ஊதியம் எதுவும் வழங்கப்படக் கூடாது.

62. நிகர இலாபங்களை விநியோகம் செய்தல்

இச் சட்டத்தின் செயலுக்காக யாதொரு கூட்டுறவு ஆண்டைக் குறித்துப் பதிவாளரால் அறிவிக்கப்பட்ட யாதொரு பதிவான சங்கத்தின் நிகர இலாபம் கீழ்க்கண்டபடி ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும் :

முதலாவதாக, நிகர இலாபத்தின் 25 சதவீதத்திற்குக் குறையாத தொகையை சேமநிதிக்கு வரவுவைக்க வேண்டும்.

இரண்டாவதாக, விதிகளில் குறிக்கப்படும் வீதப்படி நிருணயிக்கப்படும் இதர நிதிகளுக்கு உதவித் தொகையாகச் செலுத்த வேண்டும்.

மூன்றாவதாக, விதிகளில் நிருணயிக்கப்படும் வீதங்களின்படி உறுப்பினர்களுக்கு அவர்களின் பங்குகளின் மீது கொடுக்க வேண்டிய இலாப ஈவைக் கொடுப்பதற்குப் பயன்படுத்த வேண்டும்.

நான்காவது, விதிகளில் குறிக்கப்படும் வீதங்களின்படி, குறிக்கப்படும் நிபந்தனைகளுக்குட்பட்டுப் பதிவான சங்கத்தின் உறுப்பினர்களுக்கும், ஊதியம் பெறும் ஊழியர்களுக்கும் மேலூதியம் கொடுப்பதற்காகப் பயன்படுத்த வேண்டும்.

ஐந்தாவதாக, விதிகளில் குறிப்பிடப்படும் அளவுக்கு உட்பட்டு நிகர இலாபத்தின் இரண்டு சதவீதத்திற்கு மேற்படாத தொகையைக் கூட்டுறவுக் கல்வி நிதிக்கு உதவித் தொகையாகச் செலுத்த வேண்டும்.

ஆறாவதாக, உப-விதிகளில் குறிக்கப்படும் வீதங்களின் படி குறிக்கப்படும் இதர நிதிகளுக்கு உதவித் தொகையாகச்செலுத்த வேண்டும்.

ஏழாவதாக, விதிகளில் குறிக்கப்படும் நிகர இலாபத்தின் பத்து சதவீதத்திற்கு அதிகமாகாத வீதத்தின்படி பொது நல நிதிக்கு உதவித் தொகையாக ஒதுக்க வேண்டும்.

எட்டாவதாக, தொகை ஏதாவது மீதியிருந்தால், அதைச் சேம நிதிக்கு வரவு வைக்கவேண்டும்.

63. வருங்காலச் சேமிப்பு நிதி

ஒரு பதிவான சங்கம் தனது ஊழியர்களின் நலனுக்காக வருங்காலச் சேமிப்பு நிதி ஒன்றை ஏற்படுத்தலாம். சங்கத்தின் உப-விதிகளையொட்டி ஊழியர்களுக்குச் சங்கம் செலுத்தும் உதவித் தொகைகள் அந்த நிதிக்கு வரவு வைக்கப்பட வேண்டும்.

2. (1) ஆம் உட்பிரிவின்கீழ்ப் பதிவான ஒரு சங்கத்தால் ஏற்படுத்தப்பட்ட வருங்காலச் சேமிப்பு நிதி

(அ) சங்கச் செயல்களுக்காகப் பயன்படுத்தப்படக்கூடாது.

(ஆ) சங்கச் சொத்துகளின் பாகமாகக் கூடாது.

(இ) ஜப்தி செய்யப்படுவதற்கு அல்லது யாதொரு நீதி மன்றம் அல்லது வேறு அதிகார சபையின் வேறு யாதொரு நடவடிக்கைக்கும் உட்படக் கூடாது.

## அத்தியாயம் VIII

## தணிக்கை, விசாரணை, ஆய்வு, தண்டம், மேற்கடப்பு

64. தணிக்கை

1. ஒவ்வொரு பதிவான சங்கத்தின் கணக்குகளையும் ஒவ்வோர் ஆண்டிலும் குறைந்தது ஒரு முறையாவது பதிவாளர் தணிக்கை செய்ய வேண்டும் அல்லது இதற்காகப் பொது அல்லது சிறப்பு முறைஉத்தரவு மூலம் தன்னால் அதிகாரமளிக்கப்பட்ட யாதொரு நபரைக் கொண்டு அவற்றைத் தணிக்கை செய்யவேண்டும்.

2. (1)ஆம் உட்பிரிவின்கீழ் செய்யப்படும் தணிக்கையில், தவணை தவறி செலுத்தப்படாமலிருக்கும் கடன்கள் எவையேனு மிருந்தால் அவற்றைப் பரிசீலனை செய்வதும், ரொக்கக்

கையிருப்பையும், பிணையங்களையும் சரிபார்ப்பதும், சங்கத்தின் சொத்துகளையும், பொறுப்புகளையும் மதிப்பிடுவதும் அடங்கும்.

3. பதிவாளராவது அல்லது (1)ஆம் உட்பிரிவின்படி அவரால் அதிகாரமளிக்கப் பெற்ற நபராவது சங்கத்தைச் சேர்ந்த அல்லது அதன் வசமுள்ள ஏடுகளையும், கணக்குகளையும், பத்திரங் களையும், பிணையங்களையும், ரொக்கத்தையும், இதர சொத்து களையும் நியாயமான எல்லா நேரங்களிலும் தாராளமாய்ப் பார்வையிட வசதி அளிக்கப்பட வேண்டும். மேலும், அவர் எவையேனும் அத்தகைய ஏடுகள், கணக்குகள், பத்திரங்கள், பிணையங்கள், ரொக்கம் அல்லது இதர சொத்துகளைத் தன்னிடம் வைத்துள்ள அல்லது அவற்றைப் பாதுகாப்பாக வைத்திருப் பதற்குப் பொறுப்பு வகிக்கும் எந்த நபரையும் சங்கத்தின் தலைமைச் செயலகத்திலாவது அல்லது அதன் யாதொரு கிளை நிலையத்திலாவது எந்த இடத்திலும் அவைகளைக் கொண்டுவந்து முன்னிலைப்படுத்தும்படி யாதொரு நபருக்கும் அழைப்பாணை யிடலாம்.

4. சங்கத்தின் ஓர் அலுவலராக அல்லது ஊழியராக உள்ள அல்லது யாதொரு சமயத்தில் அவ்வாறு அலுவலராக அல்லது ஊழியராக இருந்த ஒவ்வொரு நபரும், ஒவ்வோர் உறுப்பினரும், முன்னாள் உறுப்பினரும், பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் பெற்ற நபர் கேட்பதற்கேற்ப, சங்கத்தின் விவரங்களைப் பற்றியும், அது செயல்படுவது பற்றியும் தகவல் கொடுக்க வேண்டும்.

5. பதிவாளர் எழுத்து மூலமான உத்தரவு பிறப்பித்து, தணிக்கையில் சுட்டிக்காட்டப்பட்ட எவையேனும் தவறுகளைத் திருத்தி அமைப்பதற்காக, அந்த உத்தரவில் குறிக்கப்பட்டுள்ள காலத்திற்குள் அந்த உத்தரவில் குறிக்கப்பட்டுள்ள நட வடிக்கையை எடுத்துக் கொள்ளுமாறு, மேற்படி சங்கத்தின் யாதொரு அலுவலருக்கும் கட்டளையிடலாம்.

6. ஒவ்வொரு பதிவான சங்கமும் இது தொடர்பாகச் செய்யப்படும் விதிகளையொட்டிப் பதிவாளர் நிருணயிக்கும் ஒரு கட்டணத்தை ஒவ்வொரு கூட்டுறவு ஆண்டிலும் தனது கணக்கு களைத் தணிக்கை செய்வதற்காகச் செலுத்த வேண்டும். தணிக்கைக்காகச் செலுத்தப்படும் கட்டணம் 95ஆம் பிரிவில் குறிக்கப்பட்டுள்ள விகிதத்தில் வசூலிக்கப்பட வேண்டும்.

ஆனால், ஓர் ஆண்டில் யாதொரு சங்கம் அல்லது யாதொரு சங்க வகை, யாதொரு கூட்டுறவு ஆண்டிற்காகச் செலுத்தப்பட

வேண்டிய கட்டணம் முழுவதையும் அல்லது அதன் யாதொரு பாகத்தையும் அரசாங்கம் மேற்கடப்பு செய்யலாம்.

65. விசாரணை

1. பதிவு செய்யப்பட்ட யாதொரு சங்கத்தின் அமைப்பு, வேலை, நிதி நிலைமை இவற்றைப் பற்றிப் பதிவாளர் தானாகவே விசாரணையை மேற் கொள்ளலாம் அல்லது மாவட்ட ஆட்சியாளர் கேட்டுக் கொண்டாலும் அல்லது நிருவாகக் குழுவில் பெரும்பான்மையான உறுப்பினர்கள் அல்லது உறுப்பினர்களில் மூன்றிலொரு பங்கு பாகத்திற்குக் குறையாதவர்கள் விண்ணப்பம் செய்து கொண்டாலும், மேற்சொன்னபடி விசாரணையைச் செய்ய வேண்டும். இதற்கென எழுத்து மூலமாக அதிகாரம் கொடுத்து அவர் யாதொரு நபரையும் அவைகளைப் பற்றி விசாரணை செய்யும்படிக் கட்டளையிடலாம்.

2. பதிவாளர் அல்லது (1)ஆம் உட்பிரிவின்கீழ் அவரால் அதிகாரம் பெற்ற நபர் கீழ்க்கண்ட அதிகாரங்களை உடையவராவார், அவையாவன :

(அ) அவர் சங்கத்திற்குச் சொந்தமான அல்லது அதனிடமுள்ள ஏடுகளையும், கணக்குகளையும், பத்திரங்களையும், பிணையங்களையும், ரொக்கத்தையும், அல்லது இதர சொத்துகளையும் நியாயமான எல்லா நேரங்களிலும் தாராளமாகப் பார்வையிட வசதி செய்யப்பட வேண்டும். மேலும், அவர் அத்தகைய ஏடுகள், கணக்குகள், பத்திரங்கள், பிணையங்கள், ரொக்கம் அல்லது இதர சொத்துகளைத் தன்னிடம் வைத்துள்ள அல்லது அவற்றைப் பாதுகாப்பாய் வைத்திருக்கப் பொறுப்பு வகிக்கும் எந்த நபரும் சங்கத்தின் தலைமைச் செயலகத்திலாவது அல்லது அதன் யாதொரு கிளை நிலையத்திலாவது எந்த இடத்திலும் அவற்றைக் கொண்டுவந்து முன்னிலைப்படுத்தும்படிக் கட்டளையிடலாம்.

(ஆ) அத்தகைய ஏடுகள், கணக்குகள், பத்திரங்கள் ஆகியவற்றின் பாதுகாப்பிற்காக அவற்றைத் தன்னிடம் எடுத்துக் கொள்வது தேவையென்று அல்லது தன் விசாரணைக்கு அவை தேவையென்று அவருக்குத் தோன்றினால், அவர் அவற்றைத் தான் கைப்பற்றிக் கொள்ளலாம். மேலும், அவர் அவற்றை எந்த நபரிடமிருந்து எடுத்துக் கொண்டாரோ அல்லது கைப்பற்றினாரோ அவருக்கு ரசீது ஒன்று வழங்க வேண்டும்.

ஆனல், அவ்வாறு கைப்பற்றப்பட்ட ஏடுகள், கணக்குகள் அல்லது பத்திரங்களைப் பரிசீலனை செய்வதற்கும், விசாரணை செய்வதற்கும் தேவையான வரைதான் அவர் அவற்றைத் தன்னிடம் வைத்திருக்க வேண்டும் என்ற நிபந்தனைக்கும்,

மேலும் அவர் மேற்படி ஏடுகள், கணக்குகள் அல்லது பத்திரங்களை அடுத்த மேல் அலுவலரின் அனுமதியில்லாமல், ஒரு சமயத்தில் 50 நாள்களுக்கு மேல் தன் வசம் வைத்திருக்கக் கூடாது என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

(இ) சங்கத்தின் அல்லது அதன் கிளையின் விவகாரங்கள் எந்த நபருக்குத் தெரிந்திருக்குமென்று தான் நம்புவதற்கு நியாயமிருக்கிறதோ அவரை வரவழைத்து பிரமாணத்தின் மேல் பரிசீலனை செய்யலாம்; மேலும், பதிவாளர் அல்லது மேலே சொல்லியுள்ளவண்ணம் அதிகாரம் அளிக்கப்பட்டுள்ள நபர் யாதொரு நபருக்குச் சொந்தமான அல்லது அவரது பாதுகாப்பிலுள்ள எவையேனும் ஏடுகள், கணக்குகள், அல்லது ரசீதுகள் ஆகியவை சங்கத்தின் விவகாரங்களுக்குத் தொடர்பான விவரங்களைக் கொண்டுள்ளன என்று நம்பக் காரணம் இருந்தால், அத்தகைய ஏடுகள், கணக்குகள் அல்லது ரசீதுகளைக் கொண்டு வந்து காட்டுமாறு அந்த நபருக்கு அழைப்பாணை அனுப்பலாம்.

(ஈ) (i) சங்கத்தின் பேரவையின் அல்லது நிருவாகக் குழுவின் கூட்டம் பற்றி அறிவிப்புக் கொடுப்பதற்கான காலத்தை நிருணயித்து யாதொரு விதி அல்லது உப-விதி செய்யப்பட்டிருப்பினும் அதற்குப் பாதகமில்லாமல், சங்கத்தின் தலைமைச் செயலகத்திலாவது அதன் யாதொரு கிளை நிலையத்திலாவது தான் கட்டளையிடக் கூடிய நேரத்திலும், இடத்திலும் பேரவையின் அல்லது நிருவாகக் குழுவின் ஒரு கூட்டத்தைக் கூட்டும்படியும், தான் குறிப்பிடும் செயல்களை ஆலோசிக்கும்படியும் சங்கத்தின் அலுவலர் அல்லது அலுவலர்களை அவர் கேட்டுக் கொள்ளலாம். மேலும் 26ஆம் பிரிவின் 4ஆம் உட்பிரிவின் (ஆ) பகுதியில் அடங்கியுள்ள (i) (ii) உட்பகுதிகளின் சரத்துகள் இந்த உட்பகுதியின்கீழ்க் கூட்டப்பட்ட யாதொரு கூட்டத்திற்கும் பொருந்தும். மேலும் அவை அந்தப் பிரிவில் அடங்கியுள்ள 3ஆம் உட்பிரிவின் (ஏ) பகுதியின் கீழ்ச் செய்யப்பட்ட வேண்டுகோளையொட்டியக் கூட்டத்தைப் போலவே அக் கூட்டத்திற்கும் பொருந்தும்.

(ii) சங்கத்தின் அலுவலர் அல்லது அலுவலர்கள் அத்தகைய கூட்டத்தைக் கூட்ட மறுத்தால் அல்லது தவறினால் அல்லது அத்தகைய கூட்டத்தைக் கூட்ட இச் சட்டத்தின் கீழ் அல்லது விதிகளின் கீழ் அல்லது உப-விதிகளின் கீழ் எந்த நிருவாகக் குழுவிற்கும் அல்லது அலுவலருக்கும் அல்லது அலுவலர்களுக்கும் தகுதியில்லையென்று பதிவாளர் கருதினால் அல்லது அத்தகைய கூட்டத்தைக் கூட்டுவதற்கு அந்த நிருவாகக் குழு அல்லது அலுவலர் அல்லது அலுவலர்களின் தகுதி பற்றி தகராறு ஏதேனுமிருந்தால், பதிவாளர் அல்லது 1ஆம் உட்பிரிவின் கீழ் அவரால் அதிகாரம் பெற்ற நபர் தானே கூட்டத்தைக் கூட்ட அதிகாரமுள்ளவராவார். 26ஆம் பிரிவில் கண்டுள்ள (4) (ஆ) பகுதி, அப் பிரிவின் 5ஆம் உட்பிரிவு ஆகியவற்றின் சரத்துகள், அக் கூட்டம் மேற்படி 4ஆம் உட்பிரிவின் (ஏ) பகுதியின்கீழ் கூட்டப்பட்ட கூட்டத்திற்குப் பயன்படுவது போலவே அக் கூட்டத்திற்கும் பொருந்தும்.

3. இப் பிரிவின்கீழ் விசாரணை நடத்தப்பட்டால், அதன் முடிவைப் பதிவாளர் கீழ்க்கண்டவர்களுக்கு அனுப்பிவைக்க வேண்டும்.

(i) பதிவான சங்கத்தின் பங்கு மூலதனத்தில் அரசினர் தொகை செலுத்தியுள்ள சூழ்நிலையில் அல்லது viஆம் அத்தியாயத்தில் குறிக்கப்பட்டுள்ள முக்கிய அரசாங்கக் கூட்டாளித்துவ நிதிக்கு அல்லது அரசாங்கக் கூட்டாளித்துவ உப-நிதிக்குப் பதிவான சங்கத்தினிடமிருந்து தொகை ஏதேனும் சேரவேண்டியிருப்பதில், அரசினர் அல்லது அரசினரால் இது குறித்து நியமிக்கப்படும் இதர யாதொரு அலுவலர்,

(ii) சங்கம் எந்த நிதிவங்கியுடன் இணைக்கப்பட்டுள்ளதோ அந்த வங்கி,

(iii) தொடர்பான சங்கம்.

4. பதிவாளர் எழுத்து மூலமான உத்தரவைப் பிறப்பித்து, விசாரணையின் விளைவாகக் கண்டுபிடிக்கப்பட்ட தவறுகளைச் சரிப்படுத்துவதற்காக அந்த உத்தரவில் குறிக்கப்பட்டுள்ள காலத்திற்குள் அதில் குறிக்கப்பட்டுள்ள நடவடிக்கையை மேற்கொள்ள

வேண்டுமென்று சங்கத்தின் யாதொரு அலுவலருக்கு அல்லது அதன் நிதி வங்கிக்குக் கட்டளையிடலாம்.

66. ஆய்வு

1. பதிவாளர், தானுகவோ அல்லது பதிவான ஒரு சங்கத்தின் கடனுளர் ஒருவர் விண்ணப்பம் செய்து கொள்வதன் மூலமாகவோ சங்கத்தின் ஏடுகளை ஆய்வு செய்யலாம். அல்லது இதற்காக எழுத்து மூலமான பொது அல்லது தனிப்பட்ட உத்தரவின்மூலம் தன் அதிகாரம் பெற்றுள்ள யாதொரு நபருக்கும் அவ்வேடுகளை ஆய்வு செய்யும்படிக் கட்டளையிடலாம். பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பெற்ற நபருக்கு 65ஆம் பிரிவின்கீழ் விசாரணை ஒன்றை நடத்தும்போது ஏற்பட்டுள்ள பதிவாளரது எல்லா அதிகாரங்களையும் உடையவராவார்.

ஆனால் கடனுளர்,

(அ) அக் கடன் அப்போது பாக்கியாக உள்ள தொகை தான் என்றும், அதைத் தான் கேட்டிருப்பதாகவும் அது நியாயமான ஒரு காலத்திற்குள் தனக்குச் செலுத்தப்படவில்லை என்றும் பதிவாளருக்கு நிரூபித்தாலன்றி, மற்றும் :

(ஆ) உத்தேசிக்கப்பட்ட ஆய்வு செய்வதற்கான செலவுகளுக்காக ஆதாரமாகப் பதிவாளர் விரும்பும் தொகையைப் பதிவாளரிடம் வைப்பீடு செய்தால் அன்றி,

கடனுளர் விண்ணப்பித்துக் கொள்வதன் பேரில் ஆய்வு செய்யப்படவுமாட்டாது, அவ்வாறு ஆய்விடும்படிக் கட்டளையிடப்படவுமாட்டாது.

2. (1)ஆம் உட்பிரிவின்கீழ் ஆய்வு நடந்தால், பதிவாளர் அதன் முடிவுகளைக் கீழ்க்கண்டவர்களுக்குத் தெரிவிக்கவேண்டும்.

(அ) தானுகவே ஆய்வு நடத்தினுல், தொடர்பான சங்கம்,

(ஆ) கடனுளர் ஒருவர் விண்ணப்பத்தின் பேரில் ஆய்வு செய்யப்பட்டால் அந்தக் கடனுளர், சங்கம் எந்த நிதிவங்கியுடன் இணைக்கப்பட்டுள்ளதோ அந்த வங்கியும்,

3. பதிவாளர், உத்தரவு எழுத்தின் மூலம், ஆய்வின் விளைவாக வெளிப்பட்ட தவறுகளைச் சரிசெய்வதற்காக, அந்த உத்தரவில் குறிப்பிட்டுள்ள காலத்திற்குள், உத்தரவில் குறிக்கப்

படும் நடவடிக்கையை எடுக்கவேண்டும் என்று சங்கத்தின் யாதொரு அலுவலருக்கும் கட்டளையிடலாம்,

67. நிதி வங்கியால் ஏடுகளின் ஆய்வு

ஒரு நிதி வங்கி தனக்குக் கடன்பட்டுள்ள பதிவான யாதொரு சங்கத்தின் ஏடுகளையும் ஆய்வு செய்ய உரிமையுடையதாகும். அத்தகைய வங்கியின் நிருவாகக் குழுவால் அதிகாரம் அளிக்கப் பட்ட யாதொரு அலுவலரையாவது, அல்லது அந்த வங்கியில் ஊதியம் பெறும் ஊழியர்களில் ஒருவர் அத்தகைய ஆய்வு செய் வதற்குத் தகுதியுடையவரென்று பதிவாளரால் சான்றிடப் பட்டால் அந்த ஊழியராவது அந்த ஆய்வைச் செய்யலாம். அவ்வாறு ஆய்வு செய்யும் அலுவலராவது அல்லது ஊழியராவது சங்கத்திற்குச் சொந்தமான அல்லது அதன் வசமுள்ள ஏடு களையும், கணக்குகளையும், பத்திரங்களையும், பிணையங்களையும், ரொக்கத்தையும், இதர சொத்துகளையும் நியாயமான எல்லா நேரங்களிலும் தாராளமாக ஆய்வு செய்ய வசதி அளிக்கப்பட வேண்டும். மேலும், அவர் சங்கத்தின் நிதி நிலைமையைக் குறித்தும், நிதிவங்கி சங்கத்திற்குக் கடனாகக் கொடுத்துள்ள தொகைகள் பாதுகாப்பாக உள்ளனவா என்பது குறித்தும், தெரிந்து கொள்வதற்குத் தேவையான தகவல்களையும், விவரப் பட்டியல்களையும், விவர அறிக்கைகளையும் தனக்கு அனுப்பும்படிக் கேட்கலாம்.

68. விசாரணை செய்வதற்கும், ஆய்விடுவதற்குமுண்டான செலவுகள்

1. 65ஆம் பிரிவின் கீழ் விசாரணை நடத்தப்பட்டாலும், அல்லது 66ஆம் பிரிவின் கீழ் ஆய்வு செய்யப்பட்டாலும் பதிவாளர், கட்சிக் காரர்களுக்குத் தங்கள் தரப்பை விளக்கு வதற்கு வாய்ப்பளித்த பிறகு, செலவுகளை முழுமையாகவாவது அந்தச் செலவுகளில் அவருக்குச் சரியென்று தோன்றும் பாகத்தை யாவது, அச் சங்கத்திற்கும், விசாரணை செய்யவேண்டும் அல்லது ஆய்வு நடத்தவேண்டுமென்று கேட்கும் உறுப்பினர்களுக்கும், அல்லது கடனாளருக்கும், அச் சங்கத்தின் தற்போதைய அல்லது முன்னாள் அலுவலர்களுக்குமிடையே, பங்கிடு செய்யலாம். மேலும், 67ஆம் பிரிவின் கீழ் நிதிவங்கி ஆய்வு நடத்தும் சூழ்நிலையில், அந்த நிதிவங்கிக்குச் செலவுகளுக்கான தொகையை வழங்கவேண்டுமென்றுப் பதிவாளர் முடிவு செய்யலாம்.

2. (1)ஆம் உட்பிரிவின்கீழ், செலவுகளுக்காகக் கொடுக்கப்பட வேண்டுமென்று தீர்ப்பளிக்கப்பட்ட யாதொரு தொகையும் நில்வரி பாக்கியைப் போலவே வசூலிக்கப்படலாம்.

**69. பதிவான சங்கம் சில செலவுகளைக் கொடுக்க வேண்டும்**

பதிவான சங்கம் ஒவ்வொன்றும், சங்கத்தின் செயலுக்காக அரசினரால் வேலைக்கு அமர்த்தப்பட்ட சிறப்பான அல்லது கூடுதலான ஊழியர்களைக் குறித்து நிருணயிக்கப்படும் தொகையை அரசினருக்குச் செலுத்தவேண்டும்.

**70. சங்கத்தின் அலுவலரை அல்லது ஊழியரை வேலையிலிருந்து தற்காலிகமாக விலக்கி வைப்பது**

1. 64ஆம் பிரிவின்கீழ் ஒரு தணிக்கையின்போது, அல்லது 65ஆம் பிரிவின் கீழ் ஒரு விசாரணையின்போது அல்லது 67 அல்லது 68ஆம் பிரிவின் கீழ் ஓர் ஆய்வின் போது, பதிவான சங்கத்தில் ஊதியம் பெறும் ஓர் அலுவலர் அல்லது ஊழியர் மேற்படி சங்கம் தொடர்பாகப் பணக் கையாடல் செய்தார், அல்லது நம்பிக்கைத் துரோகம் செய்தார் அல்லது இதர குற்றங்களைச் செய்தார் அல்லது அவ்வாறு செய்வதற்குப் பொறுப்பாளியாயிருந்தார் என்று பதிவாளருக்குத் தெரிவிக்கப்பட்டால், பதிவாளர் அத்தகைய ஊதியம் பெறும் அலுவலர் அல்லது ஊழியர் அவ்வாறு குற்றம் புரிந்தார் என்பதைப் பார்த்தவுடன் சான்று இருக்கிற தென்று கருதினாலும், சங்கத்தின் நலனை முன்னிட்டு, அந்த ஊதியம் பெறும் அலுவலர் அல்லது ஊழியரை வேலையிலிருந்து தற்காலிகமாக விலக்கி வைப்பது தேவையென்று கருதினாலும், அது தொடர்பாக ஆராய்ந்து முடிவு செய்வதற்கு முன்பு தான் குறிப்பிடும் தேதியிலிருந்தும் காலம் வரையிலும் அந்த ஊதியம் பெறும் அலுவலரை அல்லது ஊழியரை வேலையிலிருந்து தற்காலிக மாக விலக்கிவைக்கவேண்டுமென்று அல்லது அதற்காக ஏற்பாடு செய்யவேண்டுமென்று சங்கத்தின் நிருவாகக் குழுவிற்குக் கட்டளை யிடலாம்.

2. (1)ஆம் உட்பிரிவின் கீழ் பதிவாளரிடமிருந்து கட்டளை கிடைத்தவுடன் பதிவான சங்கத்தின் நிருவாகக் குழு உப-விதி களில் இதற்கு முரண்பாடாக என்ன சரத்து அடங்கியிருப்பினும் மேற்படி ஊதியம் பெறும் அலுவலரை அல்லது ஊழியரை உடனடியாக வேலையிலிருந்து தற்காலிகமாக விலக்கிவைக்க வேண்டும், அல்லது அதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

3. மேற்படி ஊதியம்பெறும் அலுவலரை அல்லது ஊழியரை வேலையிலிருந்து தற்காலிகமாக விலக்கிவைக்கும் கால அளவை அவ்வப்போது நீட்டிக்கவேண்டுமென்று பதிவாளர் கட்டளை யிடலாம். பதிவாளரின் முன்அனுமதியில்லாமல் அந்த

அலுவலரை அல்லது ஊழியரை வேலையில் மீண்டும் அமர்த்தக் கூடாது.

71. தண்டம்

1. 64ஆம் பிரிவின்கீழ் தணிக்கையின்போது அல்லது 65ஆம் பிரிவின்கீழ் விசாரணையின் போது அல்லது 66ஆம் அல்லது 67ஆம் பிரிவின்கீழ் ஆய்வின்போது அல்லது சங்கம் கலைத்துவிடப்படும் போது, அச் சங்கத்தை அமைப்பதில் அல்லது அதன் நிருவாகத்தில் கலந்து கொண்டுள்ள எந்த நபராவது, அல்லது அந்தச் சங்கத்தின் எந்த முன்னாள் அல்லது தற்போதுள்ள அலுவலராவது யாதொரு தொகையை அல்லது இதர சொத்தை முறையற்ற விதத்தில் பயன்படுத்தியுள்ளாரென்றோ, அல்லது மோசடியாய் தன்னிடம் வைத்துக் கொண்டுள்ளாரென்றோ, அல்லது சங்கத்தின் தொடர்பாக நம்பிக்கைத் துரோகம் செய்ததால் அல்லது வேண்டுமென்றே கவனக்குறைவாக இருந்தால் சங்கச் சொத்துகளில் குறைவு ஏற்பட்டதென்றோ, அல்லது சட்டத்திற்கும், விதிகளுக்கும் அல்லது உப-விதிகளுக்கும் விரோதமாகச் செலவு செய்திருக்கிறாரென்றோ தோன்றினால், பதிவாளரோ அல்லது இதற்காக அவரிடமிருந்து அதிகாரத்தைச் சிறப்பாகப் பெற்றவரோ தானாகவோ, அல்லது நிருவாகக் குழு அல்லது கலைப்பு அலுவலர் அல்லது கடனாளர் அல்லது பண உதவி செய்தவரின் விண்ணப்பத்தின் பேரிலோ, அத்தகைய நபரின் அல்லது அலுவலரின் நடத்தையைக் குறித்து விசாரித்து மேற்படி தொகையை யாயினும், சொத்தினையாயினும் அதில் யாதொரு பாகத்தை யாயினும் பதிவாளருக்கு அல்லது மேற்சொன்னவாறு அதிகாரம் அளிக்கப் பெற்றுள்ள நபருக்கு நியாயமாகத் தோன்றும் வீதப்படி வட்டியுடன் திருப்பிச் செலுத்திவிடவேண்டுமென்றோ அல்லது பணத்தைக் கையாடல் செய்தது, முறையற்ற விதத்தில் பயன் படுத்தியது, மோசடியாய் நிறுத்திவைத்துக் கொண்டது, நம்பிக்கைத் துரோகம் செய்தது, அல்லது வேண்டுமென்றே கவனக்குறைவாய் இருந்தது தொடர்பாய் இழப்பீடாகப் பதிவாளருக்கு அல்லது மேற்சொன்னவாறு அதிகாரம் அளிக்கப் பட்டுள்ள நபருக்கு நியாயமெனத் தோன்றும் ஈட்டுத் தொகையைச் சங்கத்தின் சொத்திற்குக் கொடுக்கவேண்டுமென்றோ கோரி ஓர் உத்தரவைப் பிறப்பிக்கலாம்.

ஆனால் இந்த உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள யாதொரு செயலைப்புரிந்த தேதியிலிருந்து, அல்லது ஒரு செயலைச் செய்யத் தவறிய தேதியிலிருந்து ஆறு ஆண்டுகள் முடிவடைந்தபிறகு

அத்தகைய விசாரணை எதையும் நடத்தக் கூடாது என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

மற்றும், தொடர்பான நபர் தன் தரப்பை விளக்கிச் சொல்ல நியாயமான ஒரு வாய்ப்பு அளிக்கப்படாமல் இந்த உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள யாதொரு நபருக்கெதிராக எந்த உத்தரவும் பிறப்பிக்கப்படக்கூடாது என்ற நிபந்தனைக்குமுட்பட்டும்,

2. யாதொரு பதிவான சங்கத்திற்குத் திருப்பிச் செலுத்த வேண்டுமென்றும் அல்லது அதன் சொத்திற்காகக் கொடுக்கப்படும் பற்றுப்பொறுப்புத் தொகையாக வசூலிக்க வேண்டுமென்றும் இப் பிரிவின் கீழ் உத்தரவு பிறப்பிக்கப்படும் யாதொரு தொகையும் இதற்காகப் பதிவாளர் மாவட்ட ஆட்சியாளருக்குச் செய்யும் வேண்டுகோளின்பேரில், நிலவரி பாக்கியைப் போலவே வசூலிக்கப்படலாம்.

3. அந்த நபர் அல்லது அலுவலருக்கு அல்லது ஊழியருக்கு அவருடைய நடத்தையினால் கிரிமினல் குற்றம் தொடர்பான பொறுப்பு ஏற்பட்டிருப்பினும், இப் பிரிவு பொருந்தும்.

72. நிருவாகக் குழுவை மேற்கடப்பது

1. (அ) பதிவான யாதொரு சங்கத்தின் நிருவாகக் குழு சரியாக இயங்கவில்லையென்று அல்லது இச் சட்டத்தின் கீழ் அல்லது விதிகளின் கீழ்ப் பதிவாளர் பிறப்பிக்கும் சட்டம் தொடர்புடைய யாதொரு உத்தரவு அல்லது கட்டளையை வேண்டுமென்றே கீழ்ப்படியவில்லை அல்லது அதை வேண்டுமென்றே நிறைவேற்றத் தவறினார் என்று பதிவாளர் கருதினால், அந்த நிருவாகக் குழுவிற்குத் தனது கட்சியை விளக்கிச் சொல்ல வாய்ப்பு அளித்த பிறகு, எழுத்தில் உத்தரவின்மூலம் அவர், அந்த நிருவாகக் குழுவைக் கலைத்து விட்டுச் சங்கத்தின் அலுவல்களை நிருவகிப்பதற்காக இரண்டு ஆண்டுகளுக்கு மேற்படாத குறிக்கப்பட்ட ஒரு காலத்திற்கு (இனி இதன் கீழ் சிறப்பு அலுவலர் என்று குறிப்பிடப்படுகிற) ஒரு நபரை அல்லது (இனி இதன் கீழ் நிருவாகக் குழு என்று குறிப்பிடப்படுகிற) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் அடங்கிய ஒரு நிருவாகக் குழுவை நியமிக்கலாம்.

(ஆ) பதிவாளர் மேற்படி உத்தரவில் குறிப்பிடப்பட்ட காலத்தைத் தனக்குப் பொருத்தமென்று தோன்றினால், அவ்வப்போது நீட்டிக்கலாம், ஆனால் அத்தகைய உத்தரவு மொத்தத்தில் நான்கு ஆண்டுகளுக்கு மேற்பட்டு அமலில் இருக்கக்கூடாது.

2. சிறப்பு அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டால், பதிவாளரால் குறிப்பிடப்படும் செயல்களில் சிறப்பு அலுவலருக்கு ஆலோசனை கூறுவதற்காக ஐந்து நபர்களுக்கு மேற்படாத ஓர் ஆலோசனைக் குழுவைப் பதிவாளர் நியமிக்கலாம்.

3. (1)ஆம் உட்பிரிவின்கீழ் நியமிக்கப்பட்ட சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழுவினர், பதிவாளரின் கட்டுப்பாட்டுக் குட்பட்டும், அவர் அவ்வப்போது பிறப்பிக்கக்கூடிய கட்டளைகளுக்குட்பட்டும், சங்கத்தின் நிருவாகக் குழுவின் அல்லது இதர அலுவலரின் எல்லா வேலைகளையும் அல்லது அவற்றில் எதையேனும் செயலாற்றவும் சங்கத்தின் நலனுக்குத் தேவையாயிருக்கக் கூடிய நடவடிக்கையை மேற்கொள்ளவும் அதிகாரம் உடையவர் ஆவார்.

4. சிறப்பு அலுவலர் அல்லது 1ஆம் உட்பிரிவின்கீழ் நியமிக்கப்பட்ட நிருவாகக் குழுவின் ஊதியத்தைப் பதிவாளர் நிருணயிக்கலாம். அவ்வாறு நிருணயிக்கப்பட்ட ஊதியத் தொகையையும், பதிவாளரால் அங்கீகரிக்கப்படும் மேற்கடக்கப்பட்ட காலத்தில் சங்கத்தை நிருவகிப்பதற்காக ஏற்பட்ட இதர செலவுகளும், சங்க நிதிகளிலிருந்து வழங்கப்படவேண்டும்,

5. (1)ஆம் உட்பிரிவின்கீழ் நியமிக்கப்பட்ட சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழுவினர், தனது .பதவிக்காலம் முடிவடைவதன் பேரில், இச் சட்டம், விதிகள், உப-விதிகள் ஆகியவற்றின் சரத்துகளுக்கிணங்க ஒரு புதிய நிருவாகக் குழுவை அமைக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

6. பதிவான யாதொரு சங்கம் தொடர்பாக 1ஆம் உட்பிரிவின் கீழ் பதிவாளர் நடவடிக்கை எதையேனும் எடுக்கும் முன், சங்கம் எந்த நிதி வங்கிக்குக் கடன் பட்டுள்ளதோ அதனுடன் கலந்தாலோசிக்கவேண்டும்.

7. இப் பிரிவில் அடங்கியுள்ளதெதுவும், 84ஆம் பிரிவின்கீழ் சங்கத்தைக் கலைத்துவிடும்படி உத்தரவிட்டால் பதிவாளருக்குள்ள அதிகாரத்தைப் பாதிக்காது.

8. (1) ஆம் உட்பிரிவின்கீழ் பிறப்பிக்கப்பட்ட ஓர் உத்தரவு, அரசின் ஓர் உத்தரவின் மூலம் நிறுத்திவைக்கப்பட்டாலொழிய, அதில் குறிக்கப்பட்டுள்ள தேதியிலிருந்து அமலுக்கு வரும். 1ஆம் உட்பிரிவின்கீழ் பிறப்பிக்கப்பட்ட ஓர் உத்தரவானது, மேல் முறையீட்டின் பேரில் மாற்றப்பட்டால், சூழ்நிலைக்கேற்ப, (1) உட்

பிரிவின் கீழ் நியமிக்கப்பட்ட சிறப்பு அலுவலர் அல்லது நிருவாகக் குழு சங்கத்தின் நிருவாகத்தை உடனே நிருவாகக் குழுவிடம் அளிக்கவேண்டும்.

## அத்தியாயம் IX

## தகராறுகளைத் தீர்த்து வைத்தல்

**73. தகராறுகள்**

1. (அ) ஒரு பதிவான சங்கத்தின் தற்போதைய உறுப்பினர்களிடையேயும், முன்னுள் உறுப்பினர்களிடையேயும், தற்போதைய உறுப்பினர்கள் அல்லது முன்னுள் உறுப்பினர்கள், மரணமடைந்த உறுப்பினர்கள் ஆகியவர்கள் மூலமாக உரிமை கோரும் நபர்களிடையேயும், அல்லது,

(ஆ) தற்போதைய உறுப்பினர், முன்னுள் உறுப்பினர் அல்லது தற்போதைய உறுப்பினர் மூலமாகவாவது, முன்னுள் உறுப்பினர் அல்லது இறந்துவிட்ட உறுப்பினர் மூலமாகவாவது உரிமை கோரும் நபர் ஆகியவர்களுக்கும் சங்கம் அல்லது அதன் நிருவாகக் குழு அல்லது சங்கத்தின் யாதொரு அலுவலர், முகவர் அல்லது ஊழியருக்குமிடையேயும் அல்லது,

(இ) சங்கம் அல்லது அதன் நிருவாகக் குழுவிற்கும், முன்னுள் நிருவாகக் குழு அல்லது சங்கத்தின் யாதொரு அலுவலர், முகவர் அல்லது முன்னுள் ஊழியர் அல்லது யாதொரு முன்னுள் அலுவலர், முன்னுள் முகவர் அல்லது முன்னுள் ஊழியர் அல்லது மரணமடைந்த யாதொரு அலுவலர், முகவரின், அல்லது ஊழியரின் நியமி, வாரிசுகள், அல்லது சட்டப்படியான பிரதிநிதிகள் ஆகியவர்களுக்குமிடையேயும் அல்லது,

(ஈ) சங்கத்திற்கும் பதிவான வேறு யாதொரு சங்கத்திற்கும் இடையேயும் நிருவாகக் குழுவின் அமைப்பு குறித்தும், பதிவான சங்கத்தின் நிருவாகம் அல்லது அலுவல் குறித்தும் (சங்கத்தின் ஊதியம் பெறும் ஊழியருக்கு விரோதமாகச் சங்கம் அல்லது அதன் நிருவாகக் குழு எடுத்துக் கொண்ட ஒழுங்கு நடவடிக்கைக்குத் தொடர்பான யாதொரு தகராறு நீங்கலாக) யாதொரு தகராறு ஏற்பட்டால், அந்தத் தகராறைப் பதிவாளரின் முடிவுக்காக அனுப்பவேண்டும்.

விளக்கம்: இப் பிரிவின் செயலுக்காக, தகராறு என்பதில் கீழ்க்கண்டவை அடங்கும்:

(i) யாதொரு உறுப்பினரிடமிருந்து அல்லது மரண மடைந்த யாதொரு உறுப்பினரின் நியமி, வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதிகளிடமிருந்து ஒரு பதிவான சங்கத்திற்கு வரவேண்டிய யாதொரு கடன் அல்லது கேட்புக்காக அக் கடன் அல்லது கேட்பு ஒப்புக் கொள்ளப்பட்டாலும் சரி, ஒப்புக் கொள்ளப் படாவிட்டாலும் சரி அச் சங்கத்தால் செய்யப்படும் தாவா ;

(ii) ஒரு நிலம் அல்லது இதர அசையாச் சொத்தை அளிப்பது அல்லது பங்கிடுவது தொடர்பான நிபந்தனேகள் மீறப்பட்டதற்காக மேற்படி நிலம் அல்லது இதர அசையாச் சொத்தினேத் தன்னிடம் அளிக்கவேண்டுமென்று பதிவான ஒரு சங்கம், ஓர் உறுப்பினர், முன்னுள் உறுப்பினர், அல்லது மரண மடைந்த உறுப்பினர்களின் நியமி, வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதியைக் கேட்பது,

ஆனுல் நிருவாகக் குழு தேர்ந்தெடுக்கப்படுவது குறித்த அல்லது அது தொடர்பான தகராறு எதுவும் அந்தத் தேர்தலின் முடிவு அறிவிக்கப்படும் வரை இப் பிரிவின்கீழ் முடிவு செய்யப் படுவதற்காகப் பதிவளாருக்கு அனுப்பப்படக்கூடாது.

2. பதிவாளர் அத்தகைய ஒரு தகராறு அனுப்பப்படுவதன் பேரில்,

(அ) இதைத் தானே முடிவுசெய்யலாம், அல்லது அவருக்கு கீழ்ப்பட்டவரும் அவரது அதிகாரம் பெற்றவருமான யாதொரு நபருக்கும் அதை மாற்றலாம் அல்லது,

(ஆ) நிருணயிக்கப்படும் விதிகளுக்குட்பட்டு, நடுவர் அல்லது நடுவர்களிடம் அதை அனுப்பலாம்.

3. பதிவாளரால் நிருணயிக்கப்படும் விதிகளுக்குட்பட்டு (1)ஆம் உட்பிரிவின்கீழ் அவருக்குக் கீழ்ப்பட்ட நபருக்கு அனுப்பப் பட்ட அல்லது (அ) பகுதியின் கீழ் அல்லது 2ஆம் உட்பிரிவின் (ஆ) பகுதியின்கீழ் அவருக்குக் கீழ்ப்பட்ட நபருக்கு மாற்றப்பட்ட யாதொரு தகராறைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். மேலும் அவர் அந்தத் தகராறை,

(அ) தானே முடிவு செய்யலாம் அல்லது,

(ஆ) அதைத் தனக்குக் கீழ்ப்பட்டவரும் தன்னுல் அதிகாரம் அளிக்கப்பட்ட வருமான யாதொரு நபருக்கும் முடிவு செய்வதற் காக மாற்றலாம். அல்லது,

(இ) அதை நடுவர் அல்லது நடுவர்களுக்கு அனுப்பலாம். அல்லது,

(ஈ) எவரிடமிடருந்து அது திரும்பப் பெற்றுக் கொள்ளப் பட்டதோ அவருக்கே அதை மீண்டும் மாற்றலாம்.

(உ) எந்த நடுவர் அல்லது நடுவர்களிடமிருந்து அது திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டதோ, அதே நடுவர் அல்லது நடுவர்களிடம் அதை மீண்டும் அனுப்பலாம்.

4. இப் பிரிவின் செயலுக்காக யாதொரு நபர் பதிவான யாதொரு சங்கத்தின் உறுப்பினராயுள்ளாரா அல்லது உறுப்பின ராக இருந்தாரா என்பது பற்றியும் அல்லது அனுப்பப்பட்ட ஒரு தகராறு நிருவாகக் குழுவின் அமைப்பு அல்லது சங்கத்தினுடைய நிருவாகம் அல்லது அலுவல் தொடர்பானதா என்பது பற்றியும் ஒரு கேள்வி எழுந்தால், அத்தகைய கேள்வி பதிவாளரால் முடிவு செய்யப்படவேண்டும்.

5. (1) ஆம் உட்பிரிவின் கீழ் பதிவாளருக்கு அனுப்பப்பட்ட ஒரு தகராறு அல்லது 3ஆம் உட்பிரிவின்கீழ் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்ட ஒரு தகராறு யாதொரு அசையாச் சொத்திற்குத் தொடர்பாக இருந்தால் பதிவாளர் அல்லது 2ஆம் அல்லது 3ஆம் உட்பிரிவின்கீழ் எவரிடத்தில் அந்தத் தகராறு மாற்றப்பட்டிருக் கிறதோ அந்த நபர் அல்லது நடுவர் அல்லது நடுவர்கள் தகரா றுக்குத் தொடர்பான தரப்பினரின் விண்ணப்பத்தின் பேரில் அந்தச் சொத்தில் பாத்தியதையுள்ள நபர் உறுப்பினராயிருந் தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, அந்தத் தகராறில் ஒரு தரப் பினராய் அவர் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டுமென்று கட்டளை யிடலாம். பதிவாளர் மேற்சொன்ன நபர், நடுவர் அல்லது நடு வர்கள் அதன்மீது செய்யும் முடிவு அவ்வாறு சேர்க்கப்பட்டுள்ள தரப்பினரைக் கட்டுப்படுத்தும். ஆனுல், அந்தச் சொத்தின் அளவு வரைதான் அந்த முடிவு அதைக் கட்டுப்படுத்தும்.

6. பதிவாளர், நீதியின் நலனை முன்னிட்டுத், தான் தகுதி யென்று கருதும் இடை உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம்.

## அத்தியாயம் X

## கூட்டுப் பண்ணைச் சங்கங்கள்

**74. அத்தியாயத்தின் பொருத்தம்**

இந்த அத்தியாயம் கூட்டுப் பண்ணைச் சங்கங்களுக்கு மட்டுமே பொருந்தும்.

75. சொற் பொருள் விளக்கங்கள் இந்த அத்தியாயத்தில், சூழ்நிலை வேறு விதமாகக் கோரினாலன்றி மற்றபடி

1. 'தகுதி வாய்ந்த அலுவலர்' என்றால், அரசினர் அறிக்கையின் மூலம், அந்த அறிக்கையில் குறிக்கப்பட்டிருக்கும் எல்லைக்காக இந்த அத்தியாயத்தின் கீழ்த் தகுதி வாய்ந்த அலுவலரின் அலுவல்களைச் செய்ய அரசினரால் அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கும் நபர் அல்லது அலுவலர் என்று பொருள்படும்.

2. 'கூட்டுப் பண்ணைச் சங்கம்' என்றால் உறுப்பினர்களின் நிலங்களையும் பதிவான சங்கத்திற்குச் சொந்தமான அல்லது அதன் சுவாதீனத்தில் உள்ள இதர நிலங்களையும் ஒன்று திரட்டி, கூட்டு அடிப்படையில் சாகுபடி செய்வதை நோக்கமாகக் கொண்ட பதிவான சங்கம் என்று பொருள்படும். இச் சங்கத்தின் உறுப்பினர்கள் அல்லது உறுப்பினர்களின் குடும்பத்தினர் அத்தகைய சாகுபடியில் ஈடுபடுபவர்களாகவும் அவர்களால் சங்கத்திற்குச் செய்யப்பட்ட சேவைக்காக ஊதியம் பெறுபவர்களாகவும் இருக்கவேண்டும்.

3. அக்கறையுள்ள நபர் என்பதில் நிலங்கள் தொடர்பாக, 81ஆம் பிரிவின் 2ஆம் உட்பிரிவின்கீழ் அத்தகைய நிலங்களை ஆர்ஜிதம் செய்ததன் காரணமாகச் செலுத்தப்படவேண்டிய நட்ட ஈட்டுத் தொகையில் உரிமைகோரும் அல்லது கோர உரிமையுள்ள எல்லா நபர்களும் அடங்குகிறார்கள்.

4. வேலைகள் என்பதில், கட்டடங்களும் கட்டட அமைப்புகளும் எல்லா வகையான வளங்களும் அடங்கும்.

76. உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்ளுதல்

17ஆம் பிரிவின் சரத்துகளில் என்ன சொல்லியிருந்த போதிலும் அதைப் பொருட்படுத்தாமலே, ஒரு கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் உறுப்பினராவதற்கான ஒவ்வொரு விண்ணப்பமும் சங்கத்தின் நிருவாகக் குழுவால் ஆலோசனை செய்யப்படவேண்டும் உறுப்பினராகச் சேர அனுமதிப்பதற்கு அல்லது மறுப்பதற்கு நிருவாகக் குழுவிற்கு அதிகாரம் உண்டு.

77. கூட்டுப் பண்ணைச் சங்கத்திற்குச் சாதகமாக உறுப்பினர் பற்றுப் பொறுப்பு ஏற்படுத்துதல்

1. இச் சட்டத்தில் அல்லது தற்பொழுது அமலில் உள்ள இதர யாதொரு சட்டத்தில் என்ன சொல்லியிருந்தபோதிலும்,

அதைப் பொருட்படுத்தாமலே, 75ஆம் பிரிவின் (2)ஆம் பகுதியில் விவரிக்கப்பட்டவண்ணம் ஒன்று தொகுக்கப்பட்ட நிலங்களின் சொந்தக்காரரான கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் ஒவ்வோர் உறுப்பினரும், அத்தகைய சங்கத்தினுல் கோரப்பட்டால், நிருணயிக்கப்பட்ட நமூனுவில், கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் வேலைகள் தொடர்பாக அல்லது அவற்றை வசதிப் படுத்தும் பொருட்டு சங்கம் வாங்கியுள்ள கடனைக் குறித்து, அந்த நிலங்களின்மீது ஒரு பற்றுப்பொறுப்பு உண்டுபண்ணுகிறதாக ஓர் உறுதிமொழியைச் செய்யவேண்டும். இவ்வாறு ஏற்படுத்தப்பட்ட பற்றுப் பொறுப்பு எந்த நடரிடமிருந்து பண்ணைச் சங்கம் கடன்கள் வாங்கியுள்ளதோ அவருக்கு மாற்றப்பட்டுவிட்டதாகக் கருதப்படவேண்டும்.

2. கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் முன்அனுமதியை எழுத்தில் பெருமல் 1ஆம் உட்பிரிவின்கீழ்ச் செய்யப்பட்ட எந்த உறுதி மொழியும் உறுப்பினரால் மாற்றப்படக் கூடாது அல்லது ரத்து செய்யப்படக்கூடாது. மேலும் 1ஆம் உட்பிரிவின் கீழ் எந்த நபருக்கு மேற்படி பற்றுப் பொறுப்பு மாற்றப்பட்டுள்ளதோ அந்த நபரின் அங்கீகாரமில்லாமல் கூட்டுப் பண்ணைச் சங்கமானது அத்தகைய அனுமதியை வழங்கக்கூடாது.

3. (அ) எந்த நிலம் குறித்து (1)ஆம் உட்பிரிவின் கீழ் உறுதி மொழி செய்யப்பட்டுள்ளதோ அந்த நிலம், அல்லது அத்தகைய நிலத்தின் யாதொரு பாகம் அல்லது அந்த நிலத்தில் உள்ள யாதொரு பாத்தியதையும் கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் எழுத்து மூலமான முன்அனுமதியின்றி விற்கப்படக்கூடாது; அல்லது இதர விதமாக மாற்றப்படக்கூடாது; மேலும் மேற்படி சங்கம் அத்தகைய அனுமதியை (1)ஆம் உட்பிரிவின் கீழ் மேற்படி பற்றுப் பொறுப்பு எந்த நபருக்கு மாற்றப்பட்டுள்ளதோ அந்த நபரின் அங்கீகாரத்தை முன்னதாகப் பெருமல் வழங்கக்கூடாது.

(ஆ) தற்போது அமலில் உள்ள யாதொரு சட்டத்தில் என்ன சொல்லியிருந்தபோதிலும் அதைப்பொருட்படுத்தாமலே, (அ)-ன் பகுதிக்கு முரண்பாடாகச் செய்யப்பட்டுள்ள எந்த நிதி வங்கியும் சட்டத்தில் முற்றிலும் செல்லாதது.

4. கூட்டுப் பண்ணைச் சங்கம், (1)ஆம் உட்பிரிவின் கீழ் செய்யப்பட்ட உறுதிமொழியை அல்லது அதன் மாற்றத்தை அல்லது ரத்தை, நிலம் அமைந்துள்ள எல்லையின்பேரில் அதிகாரம் செலுத்தும் சார் பதிவாளருக்குப் பதிவு அஞ்சல் மூலம் அனுப்ப வேண்டும்.

5. உறுதிமொழியை அல்லது அதன் மாற்றத்தை அல்லது ரத்தைப் பெற்றவுடன், சார் பதிவாளர் தற்போது அமலிலுள்ள யாதொரு சட்டத்தில் என்ன சொல்லியிருப்பினும், அந்த உறுதி மொழியை அல்லது அதன் மாற்றத்தை அல்லது ரத்தைப் பதிவு செய்து அதன் நகல் ஒன்றைக் கூட்டுப் பண்ணைச் சங்கத்திற்கு வழங்க வேண்டும்.

6. (1)ஆம் உட்பிரிவின்கீழ்ச் செய்யப்பட்ட யாதொரு உறுதி மொழி அல்லது அதன் யாதொரு மாற்றம் அல்லது ரத்து (5)ஆம் உட்பிரிவின் கீழ்ப் பதிவு செய்யப்படாவிட்டால், அது இச் சட்டத்தில் அல்லது தற்போது அமலில் உள்ள இதர யாதொரு சட்டத்தில் என்ன சொல்லியிருந்தபோதிலும் அதைப் பொருட் படுத்தாமலே, சட்டத்தில் முற்றிலும் செல்லாதது.

78. நிலங்களைக் குறித்துக் கூட்டுப்பண்ணைச் சங்கத்திற்கும், உறுப்பினர்களுக்குமிடையே ஒப்பந்தம்

ஒரு கூட்டுப் பண்ணைச் சங்கம், கூட்டு அடிப்படையில் அதனால் சாகுபடி செய்யப்படுவதற்காகத் தன்னுடைய நிலங்களை ஒன்று தொகுக்க வேண்டுமென்று யாதொரு உறுப்பினரையும் கோரலாம். மேலும் அத்தகைய நிலங்களை அந்தச் செயலுக்காக, கூட்டுப் பண்ணைச் சங்கமும், அத்தகைய உறுப்பினரும் ஒப்புக்கொள்ளப் படும் ஐந்து ஆண்டுகளுக்குக் குறையாத காலத்திற்குக் கூட்டுப் பண்ணைச் சங்கத்தினிடம் விட்டு வைக்குமாறு அந்த உறுப் பினரைக் கோரலாம்.

79. நிலங்களைக் கூட்டுப் பண்ணைச் சங்கத்திடம் சட்ட உரிமையாக்குவதும் ஒப்பந்தத்தின் பதிவும்

1. இச் சட்டத்தில் அல்லது தற்போது அமலிலுள்ள இதர யாதொரு சட்டத்தில் என்ன சொல்லியிருந்தபோதிலும் அதைப் பொருட்படுத்தாமல் 75ஆம் பிரிவின் (2)ஆம் பகுதியில் விவரிக்கப் பட்ட வண்ணம் நிலங்களைக் கூட்டுப் பண்ணைச் சங்கத்திடம் ஒன்று தொகுத்துள்ள ஒவ்வோர் உறுப்பினரும், 77ஆம் பிரிவின் (1)ஆம் உட்பிரிவின் கீழ் செய்துள்ள உறுதிமொழி மட்டுமன்றிக் கூட்டுப் பண்ணைச் சங்கத்துடன் ஒப்பந்தம் ஒன்றையும் நிறைவேற்றிக் கொள்ளவேண்டும். இந்த ஒப்பந்தத்தில் அவருடைய நிலங்கள் எவ்வளவு காலத்திற்குக் கூட்டுப் பண்ணைச் சங்கத்திடம் சட்ட உரிமையாக இருக்கும் என்பதும், வருமானத்தில் அவரது பங்கு எந்த அடிப்படையில் நிருணயிக்கப்பட வேண்டும் என்பதும் நிருணயிக்கப்படும் இவை போன்ற இதர செய்திகளும் குறிப்பிடப் படவேண்டும்.

2. (1)ஆம் உட்பிரிவின் கீழ் செய்யப்பட்ட ஒப்பந்தத்தைச் சங்கம் நிலம் அமைந்துள்ள எல்லேயில் அதிகாரம் செலுத்தும் சார் பதிவாளருக்குப் பதிவு அஞ்சல் மூலம் அனுப்பவேண்டும்.

3. ஒப்பந்தத்தைப் பெற்றுக் கொண்டதன் பேரில், சார் பதிவாளர், தற்போது அமலில் உள்ள யாதொரு சட்டத்தில் என்ன சொல்லியிருப்பினும், அந்த ஒப்பந்தத்தைப் பதிவு செய்து அதன் நகல் ஒன்றைச் சங்கத்திற்கு வழங்கவேண்டும்.

4. (1)ஆம் பிரிவின்கீழ் நிறைவேற்றப்பட்டு (3)ஆம் உட் பிரிவின் கீழ் பதிவு செய்யப்படாமல் இருக்கிற ஓர் ஒப்பந்தம் இச் சட்டத்திலாவது தற்காலிகமாக அமலிலிருந்து வருகிற இன்னொரு சட்டத்திலாவது என்ன சொல்லியிருப்பினும் சட்டத்தில் முற்றிலும் செல்லாதது.

80. ஒப்பந்தக் காலத்தில் நிலங்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ளக் கூடாது

இச் சட்டத்திலாவது தற்காலிகமாக அமலில் இருந்து வருகிற இன்னொரு சட்டத்திலாவது என்ன சொல்லியிருப்பினும், கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் எந்த உறுப்பினருடைய நிலங்கள் 75ஆம் பிரிவின் (2)ஆம் பகுதியில் விவரிக்கப்பட்ட விதமாக ஒன்று தொகுக்கப்பட்டுள்ளனவோ அந்த உறுப்பினர் 79ஆம் பிரிவின் (1)ஆம் உட்பிரிவின் கீழ் நிறைவேற்றப்பட்ட ஒப்பந்தத்தில் குறிப் பிடப்பட்டிருக்கிற காலம் முடிவடைவதற்கு முன் அவ்வாறு அவர் ஒன்றுதொகுத்த நிலங்களைக் கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் சுவாதீனத்திலிருந்து அல்லது பொறுப்பிலிருந்து திரும்பப்பெற்றுக் கொள்ள அவருக்கு உரிமையும் கிடையாது, அப்படித் திரும்பப் பெற்றுக் கொள்வதற்கு அவர் அனுமதிக்கப்படவுமாட்டார்.

81. ஒப்பந்தம் முடிந்த பிறகு நிலங்களைப் பொறுப்பு நிறைவேற்றம் செய்தல்

1. 79ஆம் பிரிவின் (1)ஆம் உட்பிரிவின் கீழ் மேற்படி உறுப்பினர் நிறைவேற்றியுள்ள ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிற காலம் முடிந்த பிறகு, கூட்டுப் பண்ணைச் சங்கம் மேற்படி உறுப்பினர் 75ஆம் பிரிவின் (2)ஆம் பகுதியில் விவரிக்கப்பட்ட விதமாக ஒன்று தொகுத்த நிலங்களைக் கிரயத்திற்கு வாங்கிக் கொள்ளலாம்; அல்லது அந்த நிலங்களுக்குப் பதிலாகக் கூட்டுப் பண்ணைச் சங்கத்திற்குச் சொந்தமான அதே மதிப்புள்ள இதர நிலங்களைக் கொடுத்து மாற்றிக் கொள்ளலாம்.

2. (அ) உட்பிரிவில் என்ன சொல்லியிருப்பினும், அரசினர் (1)ஆம் உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள நிலங்களை ஆர்ஜிதம் செய்வது தேவையென எப்போதும் கருதினால், அவர்கள் இந்த உட்பிரிவையொட்டி அந்த நிலங்களை ஆர்ஜிதம் செய்யத் தாங்கள் முடிவு செய்திருப்பதாக அறிவிப்பு ஒன்றை அரசிதழில் வெளியிட்டு அந்த நிலங்களை ஆர்ஜிதம் செய்யலாம்.

ஆனால் அந்த அறிவிப்பை வெளியிடுவதற்கு முன் ஆர்ஜிதம் செய்யவிருக்கும் நிலங்களின் சொந்தக்காரரை அல்லது அவற்றில் அக்கறையுள்ள இன்னொரு நபரை, அந்த நிலங்களை ஏன் ஆர்ஜிதம் செய்யக்கூடாது என்பதற்குக் காரணம் காட்டும்படிக் கேட்க வேண்டும். அந்த நிலங்களில் அக்கறையுள்ள நபர் ஏதாவது காரணம் சொல்லியிருந்தால், அதை ஆலோசித்த பிறகும், தொடர்பான கட்சிக்காரர்கள் தங்கள் முறையீடுகளைச் செய்து கொள்ள அவர்களுக்கு ஒரு வாய்ப்பு அளித்த பிறகும், அரசினர் தங்களுக்குத் தகுதியாகத் தோன்றக்கூடிய உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம் என்ற நிபந்தனைக்குட்பட்டும்,

(ஆ) மேற்சொன்னவிதமாக ஓர் அறிவிப்பு அரசிதழில் வெளியிடப்பட்டிருந்தால், அந்த அறிவிப்பு எந்த நிலங்களைக் குறித்ததோ, அந்த நிலங்கள், அறிவிப்பு வெளியான தேதி முதல் வில்லங்கங்கள் எவையும் இன்றி அரசினருக்கு முற்றிலும் சட்ட உரிமையானதாகிவிடும்,

(இ) இந்த உட்பிரிவின் கீழ் பின்வரும் சூழ்நிலைகளில் தவிர, மற்ற எந்தச் சூழ்நிலைகளிலும் எந்த நிலமும் ஆர்ஜிதம் செய்யப்படக்கூடாது.

(i) 79ஆம் பிரிவின் (1)ஆம் உட்பிரிவின் கீழ் நிறைவேற்றப்பட்ட ஒப்பந்தத்தில் குறிக்கப்பட்டிருக்கிற காலத்தில் நிலங்களில் அல்லது அவற்றின்மீது கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் முழு செலவில் அல்லது ஒரு பகுதிச் செலவில் எந்தக் கட்டடவேலைகளாவது கட்டப்பட்டிருந்து அந்தக் கட்டட வேலைகளைப் பயன்படுத்தும் உரிமையை அல்லது அவற்றின் மதிப்பைக் கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் செயல்களுக்காப் பயன்படுத்தவேண்டும் அல்லது பாதுகாத்து வரவேண்டும் என்று அரசினர் கருதினால் அந்தச் சூழ்நிலையில் அல்லது,

(ii) ஆர்ஜிதம் செய்யப்படவிருக்கிற நிலங்களை, 75ஆம் பிரிவின் (2)ஆம் பகுதியில் குறிக்கப்பட்டுள்ள விதமாகச் சாகுபடி செய்யப்படுகிற மற்ற நிலங்களிலிருந்து அந்த

நிலங்களுக்குப் பாதகமில்லாமல் பிரிக்கமுடியாது என்று அரசினர் கருதும் சூழ்நிலையில்

3. (அ) 2ஆம் உட்பிரிவின் கீழ் ஆர் ஜி த ம் செய்யப்பட்ட எந்த நிலங்களாவது ஒரு கூட்டுப் பண்ணைச் சங்கத்திற்கு மாற்றப் பட்டிருந்து, அந்த நிலத்தை அல்லது அதன் பகுதியை அச் சங்கம் விற்கவோ மற்றபடி மாற்றவோ உத்தேசித்தாலும் அல்லது கூட்டுப் பண்ணைச் சங்கத்தைக் கலைத்து விடும்படி உத்தரவிடும் பட்சத்தில் 86ஆம் பிரிவின்கீழ் நியமிக்கப்படுகிற கலைப்பு அலுவலர் அந்த நிலம் அல்லது அதன் பகுதியை விற்க அல்லது மற்றபடி மாற்றிவிட உத்தேசித்தாலும், அவ்வாறு அந்த நிலத்தை அதன் பாகத்தை (2)ஆம் உட்பிரிவின்கீழ் ஆர்ஜிதம் செய்வதற்கு அடுத்து முன்பு யார் அதன் சொந்தக்காரராக இருந்தாரோ (இவர் இந்த உட்பிரிவில் இதன் பின்னர் 'முந்தைய சொந்தக்காரர்' என்று குறிப்பிடப்படுகிறார். இச் சொற்றொடரில் அவரது சொத்தில் பாத்தியதையுள்ள அவருடைய வழியுரிமை பெற்றவர்களும் அடங்கும்) அவர் மற்ற எல்லாரையும்விட அந்த நிலத்தை அல்லது அதன் பகுதியையுடைய முதல் உரிமையுடையவராவார்.

(ஆ) சூழ்நிலைக்கேற்ப, அந்த நிலத்தை அல்லது அதன் பகுதியை விற்க அல்லது மற்றபடி மாற்றிவிட உத்தேசிக்கிற கூட்டுப் பண்ணைச் சங்கம் அல்லது கலைப்பு அலுவலர் அவ்வாறு அந்த நிலத்தை அல்லது அதன் பாகத்தை (2)ஆம் உட்பிரிவின்கீழ் ஆர்ஜிதம் செய்வதற்கு அடுத்து முன்பாக யார் அதன் சொந்தக் காரரோ அவருக்கு அதைத் தான், என்ன விலைக்கு விற்க விரும்பு கிறார்கள் என்பது பற்றி அறிவிப்புக் கொடுக்க வேண்டும்.

(இ) (ஆ)-ன் பகுதியின்கீழ் முந்தைய சொந்தக்காரர் யாருக்கு அறிவிப்பு அனுப்பப்பட்டதோ அவர் அந்த அறிவிப்பைப் பெற்றுக்கொண்ட தேதியிலிருந்து மூன்று மாதங் களுக்குள் அதில் குறிப்பிட்ட தொகையை, சூழ்நிலைக்கேற்ப கூட்டுப் பண்ணைச் சங்கத்திடம் அல்லது கலைப்பு அலுவலரிடம் செலுத்தினாலொழிய (அ) பகுதியின் கீழ்த் தனக்குள்ள உரிமையை இழந்து விடுவார்.

82. 81ஆம் பிரிவின்கீழ் ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலங்களுக்கு இழப்பீட்டினை முடிவு செய்யும் முறையும் கோட்பாடும்

1. 81ஆம் பிரிவின் (2)ஆம் பிரிவின்கீழ் எந்த நிலங்களாவது ஆர்ஜிதம் செய்யப்பட்டால் அவற்றிற்காக இழப்பீடு கொடுக்க வேண்டும். இழப்பீட்டுத் தொகை இதன் பின்னர் விவரிக்கப்

பட்டிருக்கிற முறைக்கும், கோட்பாடுகளுக்குமிணங்க முடிவு செய்யப்பட வேண்டும். அவையாவன :

(அ) இழப்பீட்டுத் தொகை ஒப்பந்தத்தின்மூலம் நிருணயிக்கப்பட முடிந்தால், ஒப்பந்தத்திற்கிணங்க அது செலுத்தப்பட வேண்டும்.

(ஆ) அத்தகைய ஒப்பந்தம் எதுவும் செய்து கொள்ள முடியாவிட்டால், அரசினர் கீழ்நிலை நீதிபதித் தகுதிக்குக் குறையாத தகுதியுள்ள நீதித்துறை அலுவலர் ஒருவரை நடுவராக நியமிக்க வேண்டும்.

(இ) குறிப்பிட்ட யாதொரு செய்தியில், அரசினர் ஆர்ஜிதம் செய்துள்ள நிலங்களின் தன்மையைக் குறித்து சிறப்புத் தேர்ச்சி பெற்றுள்ள ஒருவரை நடுவருக்கு உதவி புரிய நியமிக்கலாம். அவ்வாறு ஒருவர் நியமிக்கப்பட்டால், இழப்பீடு பெறவிருக்கிற நபரும் அதே செயலுக்காக மதிப்பிடுபவர் ஒருவரை நியமிக்கலாம்.

(ஈ) விசாரணை நடவடிக்கை தொடங்கும்போது, நடுவருக்கு முன் அரசினரும், இழப்பீடு பெறவிருக்கிற நபரும் தாங்கள் தங்கள் கருத்துப்படி எது நியாயமான இழப்பீட்டுத் தொகை என்பதைக் கூற வேண்டும்.

(உ) இந்தத் தகராறு குறித்து விசாரணை செய்த பிறகு நடுவர் தனக்கு நியாயம் என்று தோன்றுகிற தொகையை இழப்பீட்டுத் தொகையாக உறுதி செய்து தீர்ப்பளிக்க வேண்டும். அந்தத் தொகையை எந்த நபருக்கு அல்லது நபர்களுக்குச் செலுத்த வேண்டும் என்பதையும், அவர் தனது தீர்ப்பில் குறிப்பிட வேண்டும். அப்படித் தீர்ப்பு அளிக்கையில் ஒவ்வொரு வழக்கின் காரணங்களையும் (2)ஆம் பிரிவின் சரத்துகளையும் அவை எதுவரை பொருந்துமோ அந்த அளவுக்குக் கவனித்துத் தீர்ப்பளிக்க வேண்டும்.

(ஊ) இழப்பீட்டைப் பெறுவதற்கு உரிமை பெற்றுள்ள நபர் அல்லது நபர்களைக் குறித்து தகராறு இருப்பின் அந்தத் தகராறையும் நடுவர் முடிவு செய்ய வேண்டும்; இழப்பீடு பெறுவதற்கு ஒருவருக்கு மேல் உரிமை உண்டு என்று நடுவருக்குத் தெரிந்தால், அவர் அத் தொகையை அவர்களிடையே பங்கீடு செய்யவேண்டும்.

(எ) 1940ஆம் ஆண்டு நடுவர் சட்டத்தில் (மத்தியச் சட்டம் 10/1940) சொல்லியிருப்பது எதுவும், இந்தப் பிரிவின் கீழ் நடுவர்களுக்குப் பொருந்தாது.

2. (1)ஆம் உட்பிரிவின் கீழ் நிலங்கள் ஆர்ஜிதம் செய்வ தற்காகச் செலுத்தப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகை பின் வருமாறு;

(அ) (i) ஆர்ஜிதம் செய்த தேதியன்று அந்த நிலங்களை மார்க் கெட் நிலவரப்படி விற்றிருந்தால், அவற்றிற்கு என்ன விலை கிடைத்திருக்குமோ அத்தகைய விலையிலிருந்து கூட்டுப் பண்ணைச் சங்கம் அந்த நிலங்களில் அல்லது அவற்றின்மேல் கட்டடங்கள் எவற்றையாவது எழுப்பி யிருந்தால் அவற்றின் மதிப்பைக் கழித்து விட வேண்டும். அல்லது,

(ii) 75 ஆம் பிரிவின்(1)ஆம் பகுதியில் விவரிக்கப்பட்டிருக்-கிற விதமாக அந்த நிலங்கள் ஒன்று தொகுக்கப்பட்ட தேதியன்று மார்க்கெட் நிலவரப்படி அவை என்ன விலைக்கு விற்றிருக்குமோ அந்த விலைக்கு இரண்டு மடங்கு இதில் எது குறைவோ அதுவும், மற்றும்,

(ஆ) மேற்படி நிலங்களில் பாத்தியதையுள்ள நபருக்குப் பின்வரும் செய்திகள் எல்லாவற்றுக்குமாக அவற்றில் யாதொன்றுக்காவது என்ன தொகை அல்லது தொகைகளை இழப்பீடு கொடுப்பது தேவையெனத் தெரிகிறதோ அத்தகைய தொகை அல்லது தொகைகள்:

(i) மேற்படி நிலங்களைக் காலி செய்து கொடுப்பதற் குண்டான செலவுகள்,

(ii) செய்திகளின் சூழ்நிலைகளுக்குப் பொருத்தமான வேறு யாதொரு செய்தியும்

**83. இழப்பீட்டுத் தொகையைச் செலுத்துதல்**

ஒரு தீர்ப்பின் கீழ்ச் செலுத்தப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகையை விதிகளுக்குட்பட்டு தகுதி வாய்ந்த அலுவலர், அந்தத் தொகையைப் பெறுவதற்கு உரிமையுள்ள நபர் அல்லது நபர்களுக்கு அத் தீர்ப்பில் குறிக்கப்பட்டிருக்கப்படும் விதமாகவும் காலத்திற்குள்ளும் செலுத்த வேண்டும்.

**84. 1894ஆம் ஆண்டு நில ஆர்ஜிதச் சட்டத்தின்கீழ் கூட்டுப் பண்ணைச் சங்கங்களுக்காக நிலத்தை ஆர்ஜிதம் செய்வதன் மீது கட்டுப்பாடு**

1894ஆம் ஆண்டு நில ஆர்ஜிதச் சட்டத்தில் (மத்தியச் சட்டம், 1894) என்ன சொல்லியிருப்பினும், அச் சட்டத்தின் கீழ்க் கூட்டுப் பண்ணைச் சங்கம் ஆர்ஜிதம் செய்யவிருக்கும்

நிலத்தின் பரப்பு, அதன் உறுப்பினர்கள் ஒன்று தொகுத்துள்ள நிலங்களின் மொத்தப் பரப்பைவிட 10 சதவீதத்திற்கு மேற்பட்டால், அந்தச் சட்டத்தின் கீழ் எந்த நிலத்தையும் ஆர்ஜிதம் செய்யக்கூடாது.

ஆனால் கூட்டுப் பண்ணைச் சங்கத்தின் எந்த நோக்கத்திற்காக அது அவ்வாறு ஆர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறதோ, அந்த நோக்கம் இதற்காகச் செய்யப்பட்ட விதிகளில் குறிக்கப்பட்டுள்ள நோக்கமாய் இருந்தால் ஒழிய, மேற்சொன்னவரது எந்த நிலமும் ஆர்ஜிதம் செய்யப்படக் கூடாது.

## அத்தியாயம் XI

## பதிவான சங்கங்களைக் கலைத்தலும் அவற்றின் பதிவை ரத்து செய்தலும்

85. பதிவான சங்கங்களைக் கலைத்தல்

1. 65ஆம் பிரிவின் கீழ் ஒரு விசாரணை நடத்தப்பட்ட பிறகு, அல்லது 66ஆம் அல்லது 67ஆம் பிரிவின் கீழ் ஆய்வு செய்யப்பட்ட பிறகு அல்லது ஒரு பதிவான சங்கத்தின் மொத்த உறுப்பினர்களில் நான்கில் மூன்று பங்குக்குக் குறையாத உறுப்பினர்களால் செய்யப்படும் விண்ணப்பம் பெற்றுக் கொண்டதன் பேரில், பதிவாளர், சங்கத்தைக் கலைத்துவிட வேண்டும் என்று கருதினால், எழுத்தில் பிறப்பித்த உத்தரவு மூலம் அச் சங்கம் தனது மேல்முறையீட்டைச் செய்வதற்கு ஒரு வாய்ப்பளித்த பிறகு, அது கலைக்கப்பட வேண்டுமென்று கட்டளையிடலாம். அத்தகைய உத்தரவின் நகல் ஒன்றைப் பதிவு அஞ்சல் மூலம் பதிவாளர் சங்கத்திற்கு அனுப்பவேண்டும்.

2. பதிவாளர் கீழ்க் கண்ட சூழ்நிலைகளில், ஒரு பதிவான சங்கத்தைக் கலைப்பதற்கு உத்தரவு எழுத்தின் மூலம் கட்டளையிடலாம்.

(அ) சங்கத்தில் குறைந்த அளவு பத்து உறுப்பினர்களாவது இருக்கவேண்டும் என்று சங்கப் பதிவு நிபந்தனைகளிலிருந்தும், உறுப்பினர்களின் எண்ணிக்கை பத்திற்கும் குறைவாகப் போயிருந்தால் அல்லது,

(ஆ) பதிவான சங்கம் நிருணயிக்கப்பட்ட காலத்திற்குள் செயல்படத் தொடங்கவில்லை என்றால், அல்லது சங்கம் செயல்படாமல் நின்றுவிட்டது என்றால்.

86. கலைப்பு அலுவலர்

1. ஒரு பதிவான சங்கத்தைக் கலைப்பதற்காகப் பதிவாளர் 85ஆம் பிரிவின் கீழ் உத்தரவு ஒன்றைப்பிறப் பித்திருந்தால், அவர் அதன் செயலுக்காகக் கலைப்பு அலுவலர் ஒருவரை நியமித்து, அவரது ஊதியத்தை நிருணயிக்கலாம்.

2. ஒரு கலைப்பு அலுவலர் தான் நியமிக்கப்பட்டதன் பேரில் மேற்படி சங்கத்திற்கு உரிமையான அல்லது உரிமையுள்ளவை என்று தோன்றுகிற எல்லாச் சொத்துகளையும், உடைமைகளையும் சட்டப்படி நடவடிக்கை எடுக்கவேண்டிய தாவாக்களையும் தனது பொறுப்பில் அல்லது தனது கட்டுப்பாட்டின் கீழ் எடுத்துக் கொள்ளவேண்டும். மேலும், அவர் அத்தகைய சொத்து ளுக்கு, உடைமைகளுக்கு, தாவாக்களுக்கு நட்டம் அல்லது மதிப்புக் குறைவு ஏற்பதை அல்லது அவற்றிற்குச் சேதம் விளை வதைத்தடுக்கக் கட்டாயம் அல்லது தகுதி எனத் தனக்குத் தோன்றுகிற நடவடிக்கைகளை எடுக்கவேண்டும்.

3. 96ஆம் பிரிவின் (2)ஆம் உட்பிரிவின் (அ) பகுதியின் கீழ் மேல்முறையீடு கொடுக்கப்பட்டிருந்தால், 85ஆம் பிரிவின் (1)ஆம் உட்பிரிவின் கீழ் ஒரு பதிவான சங்கத்தைக் கலைப்பதற்காக செய்யப்பட்ட ஓர் உத்தரவு, மேல்முறையீட்டில் அந்த உத்தரவு ஆர்ஜிதம் செய்யப்படும் வரை அமல்படுத்த முடியாது.

ஆனால், கலைப்பு அலுவலர், (2)ஆம் உட்பிரிவில் குறிக்கப் பட்ட சொத்துகள், உடைமைகள், சட்டப்படி நடவடிக்கை எடுக்கவேண்டிய தாவாக்கள் ஆகியவற்றைத் தனது பொறுப்பில் அல்லது கட்டுப்பாட்டின் கீழ்த் தொடர்ந்து வைத்துக் கொள்ள வேண்டியது மட்டுமன்றி, அந்த உட்பிரிவில் கூறப்பட்ட நடவடிக்கையினை எடுக்கவும் அதிகாரம் உள்ளவராவார்.

4. ஒரு பதிவான சங்கத்தைக் கலைப்பதற்கான உத்தரவு மேல்முறையீட்டில், மேற்கடக்கப்பட்டால், மேற்படி சங்கத்தைச் சேர்ந்த சொத்துகள், உடைமைகள், நடவடிக்கை எடுக்க வேண்டிய தாவாக்கள் ஆகியவை மேற்படி சங்கத்தில் மீண்டும் சட்ட உரிமையாகிவிடும்.

87. கலைப்பு அலுவலரின் அதிகாரங்கள்

1. இது குறித்துச் செய்யப்படும் எந்த விதிகளுக்குமுட்பட்டு எந்தச் சங்கத்தைக் கலைக்கும்படி உத்தரவு பிறப்பிக்கப் பட்டுள்ளதோ, அந்தச் சங்கத்தின் சொத்துகள் அனைத்தும்

கலைப்பு உத்தரவு அமலுக்கு வரும் தேதி முதல் 86ஆம் பிரிவின் கீழ் நியமனம் செய்யப்படும் கலைப்பு அலுவலரிடம் சட்ட உரிமையாக நிற்கும். மேலும், கலைப்பு அலுவலர் அத்தகைய சொத்துகளை விற்பனை மூலமும் அல்லது இதர வகைகளின் மூலமும் வசூலிக்கலாம்.

2. அத்தகைய கலைப்பு அலுவலர், பதிவாளரின் கட்டுப் பாட்டுக்குட்பட்டு கீழ்க்கண்ட அதிகாரங்களை உடையவராவார்.

(அ) பதிவான சங்கத்தின் சார்பாகத் தனது பதவியின் பெயரில் வழக்குகள், இதர சட்ட நடவடிக்கைகள் தொடரவும், தொடரப்படும் வழக்குகளில் சங்கத்தின் சார்பில் வாதாடவும்;

(ஆ) சங்கத்தின் உறுப்பினர்கள் அல்லது முன்னாள் உறுப்பினர்கள் அல்லது இறந்துவிட்ட நபர்களின் சொத்துகள் அல்லது நியமிகள், வாரிசுகள் அல்லது சட்டப்படியான பிரதிநிதிகள் அல்லது அலுவலர்கள் அல்லது முன்னாள் அலுவலர்கள் (கொடுக்க வேண்டிய பாக்கி உட்பட) கொடுக்க வேண்டிய உதவித் தொகையை அவ்வப்போது தீர்மானிக்கவும்;

(இ) பதிவான சங்கத்திற்கு எதிராக எழும் எல்லாக் கோருரிமைகளையும் ஆராயவும், இச் சட்டத்தின் சரத்துகளுக்கும் உட்பட்டு கோருரிமையர்களிடையே எவருக்கு முதலிடம் கொடுக்கவேண்டும் என்பதை முடிவு செய்யவும்;

(ஈ) 1908ஆம் ஆண்டு சிவில் நடைமுறைச் சட்டத்தின்கீழ் (மத்தியச் சட்டம் V 1908) சிவில் நீதிமன்றத்திற்காக ஏற்பாடு செய்துள்ள வகையிலும் முறைப்படியும், சாட்சிகளை வரவழைக்கவும், அவர்களைக் கட்டாயமாகத் தன் முன் வரக் கோரவும், சங்கத்திற்குச் சொந்தமான அல்லது சங்கத்தின் பொறுப்பில் எவையேனும் ஏடுகள், கணக்குகள், ஆவணங்கள், பிணையங்கள், ரொக்கம், அல்லது இதர சொத்துகள் ஆகிய வற்றைத் தன் முன் கட்டாயமாகக் கொண்டுவந்து முன்னிலைப் படுத்தும்படி உத்தரவிடலாம்.

(உ) இது குறித்துச் செய்யப்பட்ட விதிகளுக்குட்பட்டு, பதிவான சங்கத்திடமிருந்து கோரப்படும் தொகைகளை வட்டி உட்பட சங்கம் கலைக்கப்படும் தேதி வரையில், வரிசைக் கிரமமாகச் சங்கச் சொத்துகள் அனுமதிக்கும் வகையில் முழுமை யாக அல்லது தகுந்த வீதாச்சாரத்தில் செலுத்தவும், கோரப் படும் தொகைகளைச் செலுத்திய பிறகு, தொகை ஏதாவது மீதியிருந்தால், அதை வட்டி கொடுப்பதற்காகப் பயன்

படுத்தலாம். வட்டித் தொகை, கலைப்பு உத்தரவு வெளியிடப்பட்ட தேதியிலிருந்து அவர் நிருணயிக்கும் வீதப்படி, கொடுக்கப்படவேண்டும். ஆனால், இந்த வட்டி எவற்றிலும் ஒப்பந்த வீதத்திற்கு மேற்படக்கூடாது.

(ஊ) கலைப்பதற்கான செலவை எந்த நபர்கள் எந்த விதப்படி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று தீர்மானிக்கவும்,

(எ) யாதொரு நபர் ஓர் உறுப்பினரா, முன்னாள் உறுப்பினரா அல்லது மரணமடைந்த உறுப்பினரின் நியமியா என்பதைத் தீர்மானிக்கவும்.

(ஏ) சங்கத்தைக் கலைப்பதற்காகச் சங்கத்தின் சொத்துகளை வசூல் செய்து அவற்றைப் பங்கிடுவது குறித்து அவருக்குத் தேவையெனத் தோன்றுகிற கட்டளைகளைப் பிறப்பிக்கவும்,

(ஐ) தேவைப்பட்ட அளவுக்குச், சங்கத்தின் கலைப்புக்கு நன்மை பயக்கும் வகையில் அதன் அலுவல்களை நடத்தவும்,

(ஒ) நிருணயிக்கப்பட்ட அலுவலரின் முன்அனுமதியுடன், கடனாளர்களுடன் அல்லது சங்கம் ஒரு நபருக்குள்ள தற்போதைய அல்லது வருங்கால உரிமைக்கு உட்படுவதாக இருந்தால் அத்தகைய உரிமையுள்ள நபர்களுடன் ஒத்திசைவு அல்லது யாதொருவித ஏற்பாடோ செய்து கொள்வதற்கும்,

(ஓ) நிருணயிக்கப்பட்ட அலுவலரின் அவையின் முன் அனுமதியுடன், சங்கத்திற்குப் பங்குத் தொகையில் நிலுவைத் தொகையைச் செலுத்த வேண்டியுள்ள பங்குதாரர்களுக்கும் அல்லது மற்றக் கடனாளர்களுக்கும் அல்லது பதிவான சங்கத்திற்குக் கடன் பொறுப்பு ஏற்படும் என்று தெரிகிற பங்குதாரர் அல்லது இதர நபருக்கும் இடையே வாய்தாத் தொகைகள் அல்லது வாய்தாத் தொகைகளுக்கான பொறுப்புகள், கடன்கள், கடன்களில் முடியும் பொறுப்புகள், இப்போதுள்ள அல்லது இனிமேல் வரப்போகிற உறுதியான, தற்செயலான அல்லது முன்னரே இருந்துவருகிற அல்லது இருந்து வருவதாக நம்பப்படுகிற எல்லா உரிமைகள் தொடர்பாகவும், சங்கத்தின் சொத்துகளுக்கு அல்லது கலைப்பிற்குத் தொடர்பான அல்லது அவற்றைப் பாதிக்கிற எல்லாப் பிரச்சினைகள் தொடர்பாகவும் ஒருவருக்கொருவர் ஒப்புக்கொள்கிற நிபந்தனைகளின் பேரில் ஒத்திசைவு செய்து வைக்கவும் அவருக்கு அதிகாரம் உண்டு. மற்றும், அத்தகைய வாய்தாத் தொகை, பொறுப்புக் கடன் அல்லது கோருரிமையைக் கொடுத்துத் தீர்ப்பதற்காக எந்த

விதமான பிணையத்தையும் எடுத்துக்கொண்டு அதை முற்றிலும் கொடுத்துத் தீர்த்துவிடலாம்.

3. பதிவான சங்கத்தின் சொத்துகளைக் குறித்து அல்லது சங்கத்தைக் கலைப்பதற்குண்டான செலவுகளைக் குறித்து இந்தப் பிரிவின் கீழ் வசூலிக்குமாறு உத்தரவிடப்பட்டுள்ள யாதொரு உதவித் தொகையும், இது குறித்துப் பதிவாளர் மாவட்ட ஆட்சியாளருக்கு விண்ணப்பித்துக் கொள்வதன் பேரில், நிலவரி பாக்கியைப்போலவே வசூலிக்கப்படவேண்டும்.

4. (3) ஆம் உட்பிரிவில் ஏற்பாடு செய்துள்ளபடியன்றி, மற்றபடி, இப் பிரிவின் கீழ் செய்யப்பட்ட உத்தரவுகள், விண்ணப்பம் செய்து கொள்வதன் பேரில், தொடர்பான எல்லையின்மீது அதிகாரம் வகிக்கும் சிவில் நீதி மன்றத்தால், அது அத்தகைய நீதி மன்றத்தின் தீர்ப்பாணையாக இருந்தாற்போலவே அமல் நடத்தப்படவேண்டும்.

5. ஒரு பதிவான சங்கத்தின் அலுவல்களைக் கலைத்த பிறகு கலைப்பு அலுவலர், அது பற்றிப் பதிவாளருக்கு அறிக்கை அனுப்பிச் சங்கத்தின் பதிவேடுகளைப் பதிவாளர் கட்டளையிடுகிற இடத்தில் வைப்பீடு செய்யவேண்டும்.

88. பதிவை ரத்து செய்தல்

ஒரு பதிவான சங்கத்தின் அலுவல்கள் முழுமையும் கலைக்கப்பட்டவுடன், பதிவாளர், அச் சங்கத்தின் பதிவை ரத்து செய்து உத்தரவு பிறப்பிக்கவேண்டும். பதிவு செய்யப்படுவதன்பேரில், அச் சங்கம், பதிவு ரத்து செய்யப்பட்ட தேதியிலிருந்து ஓர் ஒருமித்த நிறுவனமாக இயங்குவதிலிருந்து நின்று விடும்.

89. சட்ட நடவடிக்கைகளுக்குத் தடை

இச் சட்டத்தில் வெளிப்படையாக வகை செய்யப்பட்டுள்ளபடியன்றி, மற்றபடி எந்தச் சிவில் நீதி மன்றத்தாலும், இச் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப்பட்டுள்ள சங்கத்தைக் கலைப்பது பற்றிய அல்லது அச் சங்கத்தின் பதிவை ரத்து செய்வது பற்றிய யாதொரு செய்தி பற்றி நீதி மன்றத்தில் வழக்கு செய்யப்படக்கூடாது. மேலும் கலைப்பு அலுவலர் நியமனம் செய்யப்பட்டவுடன், கலைப்பு அலுவலரின் மேல் அல்லது சங்கத்தின் மேல் அல்லது யாதொரு உறுப்பினரின் மேல் பதிவாளரின் அனுமதியின்றியும் அவர் விதிக்கக்கூடிய நிபந்தனைகளுக்கு உட்பட்டும் அன்றி மற்றபடி, பதிவு பெற்ற சங்கத்தின் விவகாரங்கள்

தொடர்பாக எந்த வழக்கும் அல்லது சட்டத் தொடர்பான எந்த இதர நடவடிக்கைகளும் தொடரக்கூடாது.

**90. கலைக்கப்படும்படி உத்தரவிடப்பட்ட சங்கத்தை மீண்டும் புதுப்பித்தல்**

கலைக்கப்படும்படி உத்தரவிடப்பட்ட ஒரு சங்கம், இச் சட்டத்தின் சரத்துகளுக்கிணங்கவும், விதிகளின்படியும், உப-விதிகளின்படியும் அமைக்கப்பட்ட ஒரு நிருவாகக் குழுவிடம் அளிக்கப்படலாம் என்று பதிவாளர் கருதினால், அவர் சங்கம் முழுமையும் கலைக்கப்படுமுன், எச் சமயத்திலும் சங்கத்தைக் கலைத்துவிடும்படி வெளியிட்ட உத்தரவை ரத்து செய்யலாம், அல்லது திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். மற்றும் அவர் இச் சட்டத்தின் சரத்துகளுக்கிணங்கவும், விதிகளின்படியும், உப-விதிகளின்படியும், ஒரு நிருவாகக் குழுவை அமைக்குமாறும், அச் சங்கத்தின் நிருவாகத்தை அத்தகைய நிருவாகக் குழுவிடம் அளிக்குமாறும் கலைப்பு அலுவலருக்குக் கட்டளையிடலாம்.

## அத்தியாயம் XII

## தீர்ப்புகள், தீர்ப்பாணைகள், உத்தரவுகள், முடிவுகள் ஆகியவற்றை நிறைவேற்றுதல்

**91. சொத்துகளை ஜப்தி செய்து விற்பனை செய்வதன் மூலம் சில தொகைகளை வசூலிப்பதற்குப் பதிவாளரின் அதிகாரம்**

பதிவாளர் அல்லது அச் செயலுக்கெனப் பதிவாளரால் அதிகாரம் அளிக்கப்பட்ட அவருடைய எந்த ஒரு கீழ் அலுவலர் நிருணயிக்கப்பட்ட விதிகளுக்குமுட்பட்டும், இச் சட்டத்தினால், அல்லது இச் சட்டத்தின்கீழ் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள இதர யாதொரு வசூல் முறைக்குப் பாதகமில்லாமலும், கீழ்க் கண்ட தொகைகளை வசூல் செய்யலாம்.

(அ) சிவில் நீதிமன்ற உத்தரவு, அல்லது ஒரு தீர்ப்பாணை பதிவாளர் அல்லது இது சார்பாகப் பதிவாளரால் அதிகாரம் அளிக்கப்பட்ட அவருடைய யாதொரு கீழ் அலுவலர் அல்லது நடுவர் அல்லது நடுவர்கள் முடிவு அல்லது தீர்ப்பு, அல்லது பதிவாளர் உத்தரவு இவற்றின் கீழ் கொடுக்கவேண்டிய யாதொரு தொகை, அல்லது,

(ஆ) பதிவான சங்கம் அல்லது பதிவான சங்கத்தின் அலுவலர் ஒருவர், முன்னாள் உறுப்பினர் அல்லது இறந்துவிட்ட

உறுப்பினர் அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய யாதொரு தொகை, இச் சட்டத்தின் கீழ் யாதொரு நடவடிக்கைகளில் அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டும் எனத் தீர்ப்பளிக்கப்பட்ட செலவுத் தொகையுட்பட அல்லது,

(இ) 26ஆம் பிரிவின் 4ஆம் உட்பிரிவின்கீழ் அல்லது 65ஆம் பிரிவின் 2ஆம் உட்பிரிவின் (ஈ) பகுதியின் (ii) உட்பகுதியின் கீழ் பதிவான சங்கத்தின் பேரவைக் கூட்டத்தைப் பதிவாளர் கூட்டியதால், அதற்குண்டான செலவு குறித்து செலுத்தப்பட வேண்டும் என்ற உத்தரவிடப்பட்ட யாதொரு தொகை அல்லது,

(ஈ) 68ஆம் பிரிவின் கீழ் நிதிவங்கி உட்பட ஒரு பதிவான சங்கத்திற்குச் செலவுத் தொகைக்காகக் கொடுக்கவேண்டும் எனத் தீர்ப்பளிக்கப்பட்ட யாதொரு தொகை, அல்லது,

(உ) பதிவு செய்யப்பட்ட சங்கத்தின் சொத்துகளுக்குக் கொடுக்கும் உதவித் தொகை அல்லது சங்கத்தைக் கலைப்பதற்கு ஏற்பட்ட செலவு குறித்து 87ஆம் பிரிவின் கீழ் வசூல் செய்யப்பட வேண்டும் என்று உத்தரவிடப்பட்டுள்ள யாதொரு தொகை அல்லது,

(ஊ) 71ஆம் பிரிவின்கீழ்ச் சங்கத்திற்குத் திருப்பித் தரப் படவேண்டும் அல்லது அதன் சொத்துகளுக்கு உதவித் தொகை யாக வசூல் செய்யப்பட வேண்டும் என்று உத்தரவிடப்பட்டுள்ள யாதொரு தொகை, அத்தகைய தொகைக்கு வட்டி எதுவும் சேரவேண்டியிருந்தால் அதையும், யாருக்கு எதிராக பேற்படி தீர்ப்பாணை, முடிவு, தீர்ப்பு, அல்லது உத்தரவு பெறப் பட்டிருக்கிறதோ அல்லது பிறப்பிக்கப்பட்டிருக்கிறதோ அவ-ருடைய சொத்தினை ஜப்தி செய்து விற்பனை செய்வதற்காக அல்லது ஜப்தியின்றி விற்பனை செய்வதற்கான நடவடிக்கைச் செலவுகளையும், சேர்த்து மேற்கொள்ளத் தொகையுடன் வசூல் செய்யப்பட வேண்டும்.

**92. கடன்களை வசூல் செய்தல்**

இச் சட்டத்தில் அல்லது தற்போது அமலிலுள்ள யாதொரு இதர சட்டத்தில் என்ன அடங்கியிருந்தபோதிலும் அதைப் பொருட்படுத்தாமலும், எடுக்கப்படும் அல்லது எடுக்கப்பட வேண்டிய யாதொரு வசூல் முறைக்குப் பாதகமில்லாமலும், பதிவாளர் அல்லது இது சார்பாக அவருடைய அதிகாரம் பெற்ற அவரது கீழ் அலுவலர், விதிகளுக்குமுட்பட்டும், பதிவான சங்கம் இச் செயல் குறித்து விண்ணப்பம் செய்து கொள்வதன் பேரிலும்,

யாதொரு உறுப்பினர் அல்லது முன்னாள் உறுப்பினர் அல்லது இறந்துவிட்ட உறுப்பினர் சங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய யாதொரு கடன் தொகையை அல்லது நிலுவைத் தொகையை 32ஆம் பிரிவின் 1ஆம் உட்பிரிவின் கீழ் பற்றுப் பொறுப்புக்கு உட்பட்டுள்ள சொத்தினை அல்லது அச் சொத்திலுள்ள பாத்தியதையை விற்பனை செய்து இப் பிரிவின்படி வசூலிக்கலாம்.

ஆனால், தொடர்புடைய உறுப்பினருக்கு அல்லது முன்னாள் உறுப்பினருக்கு அல்லது இறந்துவிட்ட உறுப்பினரின் நியமி, வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதிக்கு அத்தகைய சொத்தினை விற்பதற்கு விண்ணப்பத்திருப்பது பற்றி அறிவிப்பு அனுப்பப்பட்டு அத்தகைய அறிவிப்பு சேர்க்கப்பட்டதிலிருந்து ஏழு நாள்களுக்குள் கடன் அல்லது நிலுவைத் தொகைகளைச் செலுத்தத் தவறினால் தவிர, மற்றபடி அச் சொத்தினை இப் பிரிவின்கீழ் விற்கும்படியான உத்தரவு பிறப்பிக்கப்படக் கூடாது என்ற நிபந்தனைக்குட்பட்டும்.

93. சில செயல்களுக்காகப் பதிவாளர் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட நபர் ஒரு சிவில் நீதி மன்றமாக இயங்குவார்

பதிவாளர் அல்லது இது சார்பாக அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட இதர நபர், யாதொரு சொத்தினை ஜப்தி செய்து விற்பனை செய்வதன் மூலம் அல்லது யாதொரு சொத்தினை ஜப்தி செய்யாமல் விற்பனை செய்வதன் மூலம் யாதொரு தொகையை வசூல் செய்வதற்காக இச் சட்டத்தின்கீழ் அதிகாரங்களைக் கையாளுகையில் அல்லது அவ்வாறு வசூல் செய்வதற்காக அவருக்கு அனுப்பப்பட்ட விண்ணப்பத்தின் பேரில் உத்தரவு பிறப்பிக்கையில் அல்லது அவ்வாறு வசூல் செய்வதற்காக யாதொரு நடவடிக்கை எடுக்கும்படிக் கட்டளையிடுகிற உத்தரவு களைப் பிறப்பிக்கையில் 1963ஆம் ஆண்டு இந்தியக் காலாவதிச் சட்டத்திற்கு (மத்தியச் சட்டம் 36/1963) முதல் அட்டவணையின் 182ஆம் பிரிவின் செயல்களுக்காக ஒரு சிவில் நீதி மன்றமாகக் கருதப்படுவார்.

94. அரசினருக்குச் சேரவேண்டிய தொகைகளை வசூல் செய்தல்

யாதொரு பதிவான சங்கம் அல்லது பதிவான சங்கத்தின் ஓர் அலுவலர், முன்னாள் அலுவலர், உறுப்பினர், அல்லது முன்னாள் உறுப்பினர், அல்லது இறந்துவிட்ட உறுப்பினர் ஆகியோரிட மிருந்து அரசினருக்குச் சேரவேண்டிய எல்லாத் தொகைகளையும் நிலவரி பாக்கி வசூலிக்கப்படுவது, போலவே வசூலிக்கப்படலாம்.

இச் சட்டத்தின் கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கைக்கான செலவிற்காக அரசினருக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்று தீர்ப்பளிக்கப்பட்ட தொகைகளும் இதில் அடங்கும்.

2. பதிவான சங்கத்திடமிருந்து அரசாங்கத்திற்குச் சேர வேண்டியவையும், 1ஆம் உட்பிரிவின் கீழ் வசூல் செய்யப்பட வேண்டியவையுமான தொகைகளை முதலில் சங்கத்தின் சொத்துகளிடமிருந்து வசூல் செய்யலாம். இரண்டாவதாக, உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்ட சங்கமாய் இருந்தால், அந்த பொறுப்புக்குட்பட்டு அச் சங்கத்தின் உறுப்பினர்களிடமிருந்தும், முன்னாள் உறுப்பினர்களிடமிருந்தும், இறந்துவிட்ட உறுப்பினர்களின் சொத்துகளிலிருந்தும் வசூல் செய்யலாம். மூன்றாவதாக, இதர சங்கங்களில் உறுப்பினர்களிடமிருந்தும், முன்னாள் உறுப்பினர்களிடமிருந்தும், இறந்து விட்ட உறுப்பினர்களின் சொத்துகளிடமிருந்தும் வசூல் செய்யலாம்.

ஆனால் முன்னாள் உறுப்பினர்களின் பொறுப்பும், இறந்துவிட்ட உறுப்பினர்களின் சொத்துகளின் பொறுப்பும் எல்லாச் செய்திகளிலும் 25ஆம் பிரிவின் சரத்துகளுக்கு உட்பட்டவையாகும் என்ற நிபந்தனைக்குமுட்பட்டும்.

## அத்தியாயம் XIII

## மேல்முறையீடும் புனராய்வும் மறுசீராய்வும்

### 95. கூட்டுறவுத் தீர்ப்பாயம்

1. இச் சட்டத்தின் செயல்களுக்காகத் தேவைப்படும் அளவுக்குத் தீர்ப்பாயங்களை அரசினர் அமைக்கலாம்.

2. ஒவ்வொரு தீர்ப்பாயத்திலும் ஒரே ஓர் உறுப்பினர் மட்டும் இருக்க வேண்டும். அவர் கீழ்த்தர நீதிபதியின் பதவிக்குக் குறையாத பதவி வகிக்கும் நீதித் துறை அலுவலராக இருக்க வேண்டும்.

3. ஒவ்வொரு தீர்ப்பாயமும் அரசினர் அவ்வப்போது அறிக்கையின் மூலம் தீர்மானிக்கும் எல்லை மீது அதிகாரத்தையும் ஆட்சி செலுத்தும்.

### 96. மேல்முறையீடு (1) யாதொரு நபர்

(அ) பதிவாளர் பிரிவு 71-ன் (1) ஆம் உட்பிரிவின் கீழும் பிரிவு 73-ன் (2) ஆம், (3)ஆம் அல்லது (4)ஆம் உட்பிரிவுகளின்

கீழும், 91ஆம் அல்லது 108ஆம் பிரிவின் கீழும் பிறப்பிக்கப்படும் அல்லது செய்யப்படும் முடிவினுல் அல்லது உத்தரவினுல்; அல்லது,

(ஆ) 73ஆம் பிரிவின் (2)ஆம் அல்லது (3)ஆம் உட்பிரிவின் கீழ் நடுவரின் அல்லது நடுவர்களின் தீர்ப்பினுல் பாதிக்கப்பட்டால் தீர்ப்பாயத்திற்கு மேல்முறையீடு செய்து கொள்ளலாம்.

ஆனுல் இந்த உட்பிரிவின் (அ) அல்லது (ஆ) பகுதிகளில் அடங்கியவை எவையும்;

(i) ஒரு நிருவாகக் குழுவை அமைப்பதன் தொடர்பான அதைக் குறித்த யாதொரு தேர்தல் உட்பட எந்தச் செய்தியைக் குறித்தும் 73ஆம் பிரிவின் (2), (3) அல்லது (4) உட்பிரிவுகளின்கீழ் செய்த யாதொரு முடிவு, உத்தரவு அல்லது தீர்ப்பு அல்லது,

(ii) 73ஆம் பிரிவின் (2) அல்லது (3) உட்பிரிவின்கீழ் யாதொரு தகராறைப் பிறருக்கு மாற்றியும் அனுப்பியும், திரும்பப் பெற்றும் அல்லது பிறருக்கு மீண்டும் மாற்றியும் பிறப்பிக்கும் யாதொரு உத்தரவு ஆகியவற்றிற்குப் பொருந்தா என்ற நிபந்தனைக்குமுட்பட்டும்,

2. (அ) 7ஆம் பிரிவின்கீழ்ச் செய்த யாதொரு முடிவினுலும் 9ஆம் பிரிவின்கீழ்ச் சங்கம் பதிவு செய்யப்படுவதை மறுத்தாலும், 11ஆம் பிரிவின்கீழ் உப-விதிகளில் செய்த திருத்தத்தினுலும், 12 பிரிவின் (2) உட்பிரிவின்கீழ் உப-விதிகளில் திருத்தத்தைப் பதிவு செய்தாலும், 17 (2) பிரிவின் (அ) பகுதியின் விலக்குக் கூற்றின்கீழ் உறுப்பினர் ஒருவரை நீக்குவதை அங்கீகரித்தாலும் அல்லது அங்கீகரிக்க மறுத்தாலும், 20 (2) பிரிவின்கீழ் உறுப்பினர் ஒருவரை வெளியேற்றுவதை அங்கீகரித்தாலும் அல்லது அங்கீகரிக்க மறுத்தாலும் 28ஆம் பிரிவின் (6) உட்பிரிவின் கீழ்ச் செய்த முடிவாலும் 28 (அ) அல்லது 72 (1) பிரிவு அல்லது 85ஆம் பிரிவு இவற்றின் கீழ்ப் பிறப்பித்த உத்தரவாலும் பாதிக்கப்பட்ட யாதொரு நபர் மேல்முறையீடு செய்து கொள்ளலாம். ஆனுல், அத்தகைய முடிவு, மறுப்பு, பதிவு, அங்கிகாரம் அல்லது உத்தரவு மீது,

(i) சென்னை மாநிலத்திற்கான கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளருடையதாயிருந்தால், அரசினருக்கும் அல்லது,

(ii) யாதொரு இதர நபருடையதாயிருந்தால், பதிவாளருக்கும் மேல்முறையீடு செய்து கொள்ளலாம்.

விளக்கம் : இப் பகுதியின் செயல்களுக்காக, 'பாதிக்கப்பட்ட நபர்' என்பது, 11ஆம் அல்லது 12ஆம் பிரிவைப் பொறுத்தவரை', பதிவு செய்யப்பட்ட சங்கம் எனப் பொருள்படும்.

(ஆ) 17ஆம் பிரிவின் (2) உட்பிரிவின் (அ) பகுதியின் கீழ்ப் பதிவு செய்யப்பட்ட சங்கத்தில் உறுப்பினராகச் சேர அனுமதி மறுக்கப்பட்ட அல்லது 87ஆம் பிரிவின்கீழ்க் கலைப்பு அலுவலரின் உத்தரவினுல் பாதிக்கப்பட்ட யாதொரு நபர் பதிவாளருக்கு மேல்முறையீடு செய்துகொள்ளலாம்.

3. (1) அல்லது (2) உட்பிரிவின் கீழ் செய்துகொண்ட யாதொரு மேல்முறையீடும், இச் சட்டத்தின் சரத்துகளுக்கு உட்பட்டு, முடிவு, உத்தரவு, தீர்ப்பு, மறுப்பு, பதிவு அல்லது அங்கீகாரத்தின் தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் செய்து கொள்ளவேண்டும். ஆனுல், மேல்முறையீட்டு அலுவலர், மேல் முறையீடு செய்பவர் மேற்கூறிய கால அளவிற்கோ மேல்முறையீடு செய்துகொள்ள முடியாமைக்குப் போதிய காரணமுண்டு எனத் திருப்தியடைந்து கொள்ளும் நிலையில் மேற்கூறிய இரு மாதகால அளவிற்குப் பிறகும் மேல்முறையீட்டை ஏற்றுக் கொள்ளலாம்.

4. இப் பிரிவின்கீழ் ஒரு மேல்முறையீட்டை முடிவு செய்வதில் மேல்முறையீட்டு அலுவலர், கட்சிக்காரர்கள் தெரிவித்துக் கொள்ள வேண்டியவற்றை விளக்குவதற்குப் போதிய வாய்ப்பு கொடுத்த பிறகு, தான் பொருத்தமெனக் கருதும் உத்தரவை மேல்முறையீட்டின்மீது பிறப்பிக்கலாம்.

5. மேல்முறையீட்டின்பேரில் மேல்முறையீட்டு அலுவலரின் முடிவு அல்லது உத்தரவு அறுதியானதாகும்.

6. மேல்முறையீட்டு அலுவலர் மேல்முறையீட்டின்மீது தான் தகுதியெனக் கருதும் இடைக்கால உத்தரவுகளை முன்பாகவே பிறப்பிக்கலாம்.

7. மேல்முறையீட்டு அலுவலரின் முன்பாக நடைபெறும் யாதொரு நடவடிக்கைகளில், மேல்முறையீட்டு அலுவலர் தான் பொருத்தமெனக் கருதும் வகையில், நடவடிக்கைச் செலவுகள் பதிவு பெற்ற சங்க நிதிகளிலிருந்தாவது மேல்முறையீட்டுக்குரிய கட்சிக்காரரிடமிருந்து செலுத்தப்பட வேண்டுமெனத் தீர்ப்பளிக்கலாம்.

**97. புனராய்வு**

1. பதிவாளர் தானுகவோ அல்லது விண்ணப்பத்தின் பேரிலோ தனக்குக் கீழ்ப் பதவியிலுள்ள அலுவலர் எவருடைய

பதிவேடு கட்டுகளை வரவழைத்துப் பரிசீலிக்கலாம். அரசினர் தாமாகவோ அல்லது விண்ணப்பத்தின் பேரிலோ பதிவாளரின் பதிவேடு கட்டுகளை வரவழைத்துப் பரிசீலிக்கலாம். 96ஆம் பிரிவின் (1) உட்பிரிவில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள தீர்ப்பாயத்திற்குச் செய்து கொள்ளும் மேல்முறையீடு நடவடிக்கை அல்லாத இதர யாதொரு நடவடிக்கையைப் பொருத்தவரை, அத்தகைய நடவடிக்கையின் ஒழுங்குத் தன்மையைப் பற்றியும் பிறப்பித்த அல்லது உத்தரவு செய்தது சரியானதுதானு, சட்டப்படியானது தானு, முறையானதுதானு, என்பது பற்றியும் பதிவாளர் அல்லது அரசினர் திருப்தி செய்து கொள்ளலாம். ஏதாவதொரு பொருளில் அத்தகைய யாதொரு முடிவை அல்லது உத்தரவைத் திருத்தவேண்டும், ரத்து செய்யவேண்டும், மாற்றவேண்டும், அல்லது மறு சீராய்வுக்கு அனுப்ப வேண்டுமெனப் பதிவாளருக்கோ அல்லது அரசினருக்கோ தோன்றினுல், அவ்வாறே பதிவாளர் அல்லது அரசினர் உத்தரவுகள் பிறப்பிக்கலாம்.

ஆனுல், இப் பிரிவின்கீழ் வரும் அதிகாரங்களைக் கையாளுவதற்காகப் பதிவாளருக்கோ அல்லது அரசினருக்கோ செய்யப்படும் ஒவ்வொரு விண்ணப்பமும், அவ்விண்ணப்பத்திற்குத் தொடர்பான நடவடிக்கை, முடிவு அல்லது உத்தரவு விண்ணப்பதாரருக்குத் தெரிவிக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள் செய்து கொள்ளப்பட வேண்டும் என்ற நிபந்தனைக்குட்பட்டும்.

2. யாதொரு நபருக்கும் தனது தரப்பை விளக்கிச் சொல்ல வாய்ப்பு கொடுக்கப்பட்டிருந்தாலன்றி, மற்றபடி (1) உட்பிரிவின் கீழ் அவரைப் பாதிக்கும் எந்த உத்தரவையும் பிறப்பிக்கக் கூடாது.

3. பதிவாளர் அல்லது அரசினர் சூழ்நிலைக்கேற்ப இது குறித்து (1) உட்பிரிவின் கீழ் தனக்கு அல்லது தங்களுக்குள்ள அதிகாரத்தைக் கையாளுகிற வரையில், அத்தகைய முடிவு அல்லது உத்தரவின் நிறைவேற்றுதலை நிறுத்தி வைக்கலாம்.

4. பதிவாளர் அல்லது அரசினர் இப் பிரிவின்கீழ் நடவடிக்கைகளிலுண்டான செலவுகளைப் பதிவாளருக்கு அல்லது அரசினருக்கு தகுதியெனத் தோன்றுகிறவரையில், சங்கத்தின் நிதிகளிலிருந்து செலுத்தவேண்டுமென்றே அல்லது புனராய்வு செய்யுமாறு கோரும் தரப்பினர் செலுத்தவேண்டுமென்றே தீர்ப்பளிக்கலாம்.

**98. மறு சீராய்வு**

1. மேல் முறையீடு செய்பவர், அல்லது மறுசீராய்வு கோரும்

விண்ணப்பதாரர் அல்லது பிரதிவாதி, 96ஆம் அல்லது 97ஆம் பிரிவின் கீழ்ப் பிறப்பிக்கப்பட்ட யாதொரு உத்தரவையும் மறு சீராய்வு செய்ய வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொள்ளலாம். முதல் உத்தரவு பிறப்பிக்கப்பட்ட சமயத்தில் அவருக்குத் தெரிந்திருக்காத அல்லது அவரால் முன்னிலைப்படுத்த முடியாத புதிய முக்கியமான மெய்ம்மைகளைக் கண்டு பிடித்ததன் அடிப்படையில் அல்லது பதிவேட்டில் உள்ள வெளிப்படையான சில தவறுகளின் அடிப்படையில் அல்லது யாதொரு இதர போதிய காரணங்களுக்காக அவ்வாறு விண்ணப்பித்துக் கொள்ளலாம்.

ஆனால் மறு சீராய்வுக்கான விண்ணப்பம் எதுவும் ஒரே உத்தரவைக் குறித்து ஒரு முறைக்கு மேற்பட்டு செய்யப்படக் கூடாது என்ற நிபந்தனைக்குட்பட்டும்.

2. மறு சீராய்வுக்காக ஒவ்வொரு விண்ணப்பமும், நிருணயிக்கப்படும் காலத்திற்குள்ளும், முறைக்கிணங்கவும் செய்யப்பட வேண்டும்.

3. மறு சீராய்வு விண்ணப்பத்தின்மீது பிறப்பிக்கப்படும் முடிவு அல்லது உத்தரவு முடிவானதாகும்.

4. மறு சீராய்வு விண்ணப்பத்தின் மீது உத்தரவு பிறப்பிப்பதற்குத் தகுதியான அலுவலர் அவ்விண்ணப்பத்தின் பேரில் முடிவு எடுக்கும் வரையில் தனக்குத் தகுதியெனத் தோன்றுகிற இடைக்கால உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம்.

5. (4)ஆம் உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள அலுலர் தனக்கு முன்பு எடுக்கப்படும் நடவடிக்கைகளுக்கான செலவுகளின் தொகையைச் சங்க நிதிகளிலிருந்தாவது அல்லது மறு சீராய்வு விண்ணப்பம் செய்த தரப்பினரிடமிருந்தாவது செலுத்தப்பட வேண்டுமெனத் தனக்குத் தகுதியெனத் தோன்றும் வண்ணம் தீர்ப்பளிக்கலாம்.

**99. மேல் முறையீடு, புனராய்வு அல்லது மறுசீராய்வு மீது பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளை நிறை வேற்றுதல்**

96, 97 அல்லது 98ஆம் பிரிவின் கீழ் தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றம், பதிவாளர் அல்லது அரசினர் பிறப்பித்த யாதொரு உத்தரவு நிருணயிக்கப்படும் முறைப்படியும் அலுவராலும் நிறைவேற்றப்பட வேண்டும்.

**100. சிவில் நீதி மன்றங்களின் அதிகாரத்திற்குத் தடை**

இச் சட்டத்தின் கீழ் ஒரு நடுவர், கலைப்பு அலுவலர், பதிவாளர் அல்லது அவரது அதிகாரம் பெற்ற ஓர் அலுவலர்,

தீர்ப்பாயம் அல்லது அரசினர் பிறப்பித்த உத்தரவு அல்லது தீர்ப்பு, செய்த முடிவு அல்லது நடவடிக்கை அல்லது பிறப்பித்த கட்டளை மீது எந்தச் சிவில் நீதி மன்றத்திற்கும் நடவடிக்கை எடுக்க உரிமை கிடையாது.

## அத்தியாயம் XIV

## குற்றங்களும் தண்டனைகளும்

**101. பொய்த் தகவல் கொடுத்ததற்காகவும், அல்லது அழைப்பாணை அல்லது இதர சட்டப்படியான உத்தரவு வேண்டுகோள் அல்லது கட்டளைக்குக் கீழ்ப்படியாது மீறியதற்காகவும் தண்டனை**

ஒரு பதிவான சங்கத்தின் நிருவாகக் குழு அல்லது அலுவலர், ஊழியர், அல்லது ஊதியம் பெறும் ஊழியர், அல்லது சங்கத்தின் யாதொரு உறுப்பினர் வேண்டுமென்றே பொய்யான விவர அறிக்கை கொடுத்தால் அல்லது பொய்த் தகவலைக் கொடுத்தால் அல்லது யாதொரு நபர் வேண்டுமென்றே அல்லது நியாயமான காரணமின்றி இச் சட்டத்தின் சரத்துகளின் கீழ் அனுப்பப்பட்ட யாதொரு அழைப்பாணை, வேண்டுகோள் அல்லது இதர சட்டபடியான உத்தரவு, வேண்டுகோள் அல்லது கட்டளைக்குக் கீழ்ப் படிய மறுத்தால் அல்லது இச் சட்டத்தின் சரத்துகளின் கீழ் இது சார்பாக அதிகாரம் அளிக்கப்பட்ட நபர் ஒருவர் சட்டம் தொடர்பாகக் கோரும் யாதொரு தகவலை வேண்டுமென்றே கொடுக்காமலிருந்தால் அல்லது கொடுக்கத் தவறினால் அவருக்கு இருநூறு ரூபாய் வரையில் அபராதம் விதிக்கப்படும்.

**102. 32ஆம் 33ஆம் அல்லது 77ஆம் பிரிவுகளை மீறியதற்காக தண்டனை**

யாதொரு நபர், 32ஆம் பிரிவின் (2)ஆம் உட்பிரிவை மீறி நடந்தால், அல்லது 32 (3) பிரிவின் கீழ், பதிவான சங்கத்திற்குச் சாதகமாக ஒரு முதன்மையான பற்றுப் பொறுப்புக்குட்படுத்தப் பட்ட சொத்தை வைப்பீடு செய்யும்படி அல்லது அளிக்கும்படி கோரப்பட்டபோதும் அவ்வாறு வைப்பீடு செய்ய அல்லது அளிக்கத் தவறினாலும் அல்லது 33ஆம் பிரிவின் (iii) பகுதியை அல்லது 77ஆம் பிரிவின் (3) உட்பிரிவை மீறினாலும் அவருக்கு ஆறுமாதக் காலம்வரை சிறைத் தண்டனையோ அல்லது ஐந்நூறு ரூபாய் வரை அபராதத் தண்டனையோ விதிக்கப்படும்.

**103. கூட்டுறவு என்றசொல் அல்லது அதற்கிடான சொல்லைப் பயன் படுத்தத் தடை**

1. பதிவான சங்கம் அல்லாத இதர நபர் எவரும் அரசினரின் ஒப்பளிப்பின்றி 'கூட்டுறவு' அல்லது மாநில மொழியில் அதற்

கீடான சொல்லைப் பாகமாக இருக்கும் யாதொரு பெயர் அல்லது தலைப்பு ஆகியவைகளின் கீழ் வியாபாரம் செய்யவோ அல்லது அலுவல் நடத்தவோ கூடாது.

ஆனால், இந்த உட்பிரிவில் எதுவும் 1912ஆம் ஆண்டு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் (மத்தியச் சட்டம் 11/1912) அமுலுக்கு வந்தத் தேதியன்று ஒருவர் எந்தப் பெயரில் அல்லது தலைப்பில் அலுவல் நடத்தி வந்தாரோ அல்லது வர்த்தகம் செய்து வந்தாரோ அந்தப் பெயரை அல்லது தலைப்பை அவராவது, அவருடைய வழி உரிமையானவராவது பயன்படுத்துவதற்குப் பிரயோகிக்கப் படமாட்டாது என்ற நிபந்தனைக்குட்பட்டும்.

2.(1)ஆம் உட்பிரிவின் சரத்துகளை மீறி நடப்பவர் ஒருவர் இருநூறு ரூபாய்வரை அபராதம் விதிக்கப்படத் தக்கவராவார். அந்தச் சரத்துகளை அவர் தொடர்ந்து மீறி நடந்தால், தண்டனை விதிக்கப்பட்ட பின்னர் அக் குற்றம் தொடர்ந்து இழைக்கப் படுகிற ஒவ்வொரு நாளுக்கும் மேற்கொண்டு ஐம்பது ரூபாய் தண்டனை அவருக்கு விதிக்கப்படும்.

**104. மத்தியஸ்த முடிவிற்கும் அல்லது தீர்ப்பிற்கும் அமல் கொடுக்கத் தவறியதற்கான தண்டனை**

யாதொரு பதிவான சங்கம் அல்லது அதன் அலுவலர் அல்லது ஊழியர் அல்லது ஊதியம் பெறும் ஊழியர் 73ஆம் பிரிவின் கீழ் யாதொரு முடிவிற்கு அல்லது தீர்ப்பிற்கு அமல் கொடுக்கத் தவறினால், அல்லது அத்தகைய முடிவுக்கு அல்லது தீர்ப்புக்கு எதிராக மேல்முறையீடு செய்யப்பட்டிருந்து தக்க மேல்முறையீட்டு அலுவலர் பிறப்பிக்கும் உத்தரவை அமலாக்கத் தவறினால், அந்த முடிவு அல்லது தீர்ப்பு ஒரு பண தீர்ப்பாணை யாக இல்லாதிருக்கவேண்டும், அவருக்கு ஐந்நூறு ரூபாய் வரை அபராதம் தண்டனை விதிக்கப்படும்.

**105. வேறுவிதத்தில் ஏற்பாடு செய்யப்படாத குற்றங்களுக்கான தண்டனை**

இச் சட்டத்தின்கீழ் எந்தக் குற்றத்திற்காக வெளிப்படையாக இதில் எந்தத் தண்டனையும் ஏற்பாடு செய்யப்படாமலிருந்தால் அத்தகைய குற்றத்திற்காக யாதொரு பதிவான சங்கம் அல்லது யாதொரு அலுவலர் அல்லது அதன் உறுப்பினர் அல்லது யாதொரு இதர நபருக்கு 50 ரூபாய்க்கு மேற்படாத அபராதம் விதிக்கப்படும்.

**106. குற்றங்களை வழக்கு எடுத்துக்கொள்ளல்**

1. மாநில நீதிபதி அல்லது முதல் வகுப்பு நீதிமன்றம், நீதிபதி தகுதிக்குக் கீழ்ப்பட்ட நீதிமன்றம் எதுவும் இச் சட்டத்தின் கீழ்ச் செய்யப்பட்ட யாதொரு குற்றத்தையும் வழக்கிற்கு எடுத்துக் கொள்ளக்கூடாது.

2. இச் சட்டத்தின் கீழ் செய்யப்படும் ஒவ்வொரு குற்றமும், 1898ஆம் ஆண்டு, கிரிமினல் நடைமுறைச் சட்டத்தின் (மத்தியச் சட்டம் V, 1898) செயலுக்காகப் பிடியாணையில்லாமல் பிடிக்கத் தகா வழக்காகக் கருதப்படும்.

3. பதிவாளரின் முன் ஒப்பளிப்பின்றி இச் சட்டத்தின்கீழ் எந்த வழக்கும் தொடரப்படக்கூடாது.

**107. ஒரு பதிவான சங்கத்தின் பதிவேடுகளையும், சொத்துகளையும் சுவாதீனமளிப்பது**

1. ஒரு பதிவான சங்கத்தின் நிருவாகக் குழுவை அச் சங்கத்தின் பேரவைக் கூட்டத்தில் திருத்தி அமைக்கப் பட்டிருந்தாலும், அல்லது பதிவாளர் அதை மேற்கடந்து 72ஆம் பிரிவின்கீழ் சிறப்பு அலுவலர் அல்லது ஒரு நிருவாகக் குழுவை நியமித்தாலும் அல்லது சங்கத்தைக் கலைத்துவிட்டு 86ஆம் பிரிவின்கீழ்க் கலைப்பு அலுவலர் ஒருவரை நியமித்தாலும், அந்தத் திருத்தியமைக்கப்பட்ட நிருவாகக் குழு சிறப்பு அலுவலர், அல்லது நிருவாகக் குழு கலைப்பு அலுவலர் சங்கத்தின் ஏடுகள், கணக்குகள், பதிவேடுகள், பிணையங்கள், ரொக்கம், இதர அசையும் அல்லது அசையாச் சொத்துகள் இவற்றை (இனி இதன் கீழ் இவற்றைச் சங்கத்தின் பதிவேடுகளும், சொத்துகளும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது) சுவாதீனம் எடுத்துக் கொள்வதில், திருத்தியமைப்பதற்கு அல்லது மேற்கடப்பதற்கு அல்லது கலைக்கப் படும்படி உத்தரவிடப்படுவதற்கு முன்பு இருந்த நிருவாகக் குழுவினரோ அல்லது அச் சங்கத்தின் பதிவேடுகளையும் சொத்து களையும் வைத்துக் கொள்வதற்கு உரிமையற்ற ஒரு நபரோ தடை செய்தால் அப்போது, கீழ்வரும் நடைமுறையைக் கையாள வேண்டும்.

பதிவு செய்த சங்கத்தின் அலுவலகம் அல்லது அதன் பதிவேடுகளும், சொத்துகளும் எந்த மாநில நீதிபதியின் அதிகார வரம்பில் உள்ளனவோ அவருக்கு மேற்சொன்ன திருத்தி யமைக்கப்பட்ட நிருவாகக் குழு சிறப்பு அலுவலர், நிருவாகக் குழு கலைப்பு அலுவலர் மேற்படி பதிவான சங்கம் திருத்தி அமைக்கப் பட்டுவிட்டது அல்லது மேற்கடக்கப்பட்டுவிட்டது அல்லது

கலைக்கப்படும்படி உத்தரவிடப்பட்டுள்ளதென்றும், மேற்சொன்ன படி சிறப்பு அலுவலர், நிருவாகக் குழு அல்லது கலைப்பு அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டிருக்கிறார் என்றும் விவரிக்கப்பட்ட சான்றிதழ் ஒன்றை நிருணயிக்கப்பட்ட நமூனாவில் பதிவாளரிட மிருந்து பெற்று அதைக் கொண்டுவந்து முன்னிலைப்படுத்துவதன் மூலம், மேற்படி நீதிபதி, சங்கத்தின் பதிவேடுகளையும், சொத்து களையும், திருத்தியமைக்கப்பட்ட குழுவினரிடம், சிறப்பு அலுவலரிடம், நிருவாகக் குழுவினரிடம், கலைப்பு அலுவலரிடம் சுவாதீனம் அளிக்கும்படிக் கட்டளையிடவேண்டும்.

2. பதிவாளர் தனக்குத் தேவையெனத் தோன்றுகிற விசாரணையைச் செய்யாமல் (1)ஆம் உட்பிரிவின் கீழ் எந்தச் சான்றிதழையும் வழங்கக் கூடாது.

3. (1) ஆம் உட்பிரிவின்கீழ் நடவடிக்கைகளின் செயலுக்காக, மேற்சொன்ன சான்றிதழ், தொடர்பான பதிவேடுகளும், சொத்து களும் பதிவான சங்கத்திற்குச் சொந்தமானவை என்பதற்கு முடிவான சான்றாகும்.

4. (1) ஆம் உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள மாநில நீதிபதி அல்லது முதல் வகுப்பு நீதிபதி, பதிவாளரின் சான்றிதழில் குறிப் பிட்டுள்ளவையும், சங்கத்திற்குச் சொந்தமானவையுமான பதிவேடுகள், சொத்துகள் ஆகியவற்றைத் திருத்தியமைக்கப்பட்ட நிருவாகக் குழு சிறப்பு அலுவலர், நிருவாகக் குழு கலைப்பு அலுவலரிடம் சுவாதீனம் அளிப்பது பற்றிய விண்ணப்பத்தை முடிவு செய்யும் வரை, அத்தகைய பதிவேடுகளையும் சொத்து களையும் அல்லது தேவைப்படும் அவற்றின் பாகத்தையும் சுவா தீனத்தில் எடுத்துக் கொள்வதற்காக ஒருவரை (Receiver) நியமிக்கலாம். அவருக்கு ஊதியம் ஏதேனும் கொடுக்கப்பட்டால் அந்த ஊதியமும், அவரால் செய்யப்படும் இதர செலவுகளும் தொடர்பான பதிவான சங்கத்தின் நிதிகளிலிருந்து செலுத்தப் படவேண்டும்.

## அத்தியாயம் XV

## பலவகை

### 108. சொத்துகளை ஜப்தி செய்தல்

பதிவாளர் பிரிவு 73-ன் (1) உட்பிரிவின்கீழ் தனக்கு அனுப்பப் பட்டுள்ள தாவா குறித்து பதிவான சங்கத்தின் விண்ணப்பத்தின் பேரில் அல்லது பிரிவு 87-ன் (2) உட்பிரிவின் (ஆ) பகுதியின்கீழ்

சங்கத்தின் சொத்துகளுக்கு ஒரு நபர் கொடுக்க வேண்டிய உதவித் தொகையைத் தீர்மானிப்பதற்காக அத்தகைய கலைப்பு அலுவலரின் முன்னுள்ள நடவடிக்கைகள் குறித்து 86ஆம் பிரிவின் கீழ் நியமிக்கப்பட்ட கலைப்பு அலுவலரின் விண்ணப்பத்தின் பேரில், அல்லது நிருவாகக் குழு கலைப்பு அலுவலர் அல்லது சங்கத்தின் கடனுளரின் விண்ணப்பத்தின்பேரில் அல்லது 71ஆம் பிரிவின்கீழ் யாதொரு நபரின் நடத்தையை விசாரிக்க உத்தர விட்டுள்ள விசாரணையைக் குறித்து மேற்படி தகராறுக்குக் காரணமான தரப்பினர் அல்லது நபர், சூழ்நிலைக்கேற்ப கலைப்பு அலுவலர் அல்லது பதிவாளர் மேற்படி நபர் அல்லது தரப்பினருக்கு எதிராகச் செய்யப்படும் யாதொரு முடிவை, பிறப்பித்துள்ள யாதொரு உத்தரவை நிறைவேற்றுதலைத் தடுக்க அல்லது நிறைவேற்றுவதைத் தாமதம் செய்யும் நோக்கத்துடன் அவரது சொத்து முழுவதையும் அல்லது அதன் பொருட்டு யாதொரு பாகத்தையும் பதிவாளரின் அதிகார எல்லையிலிருந்து அகற்ற முயற்சி செய்யப் போகிறார் என்று பதிவாளர் திருப்தி யடைந்தால் போதுமான ஆதாரம் கொடுக்கப்பட்டாலன்றி மற்றபடி மேற்படி சொத்தினை அல்லது அதன் யாதொரு பாகத்தினை, அவர் தகுதியெனக் கருதும்படி நிபந்தனைக்குட்பட்ட ஜப்தி செய்யுமாறு கட்டளையிடலாம். அத்தகைய ஜப்தி தகுந்ததோர் சிவில் நீதி மன்றத்தினால் செய்யப்பட்டது போலவே அமல் உடையதாகும்.

**109. பதிவு செய்வதற்கான நிபந்தனைகளிலிருந்து சங்கங்களுக்கு விலக்களிப்பதற்கான அதிகாரம்**

இச் சட்டத்தில் என்ன அடங்கியிருப்பினும், பதிவு செய்வது பற்றி இச் சட்டத்தின் தேவைகள் எவற்றில் இருந்தேனும், யாதொரு சங்கத்திற்கும் அரசினர் சிறப்பு உத்தரவின் மூலமும், அவர்கள் விதிக்கக்கூடிய நிபந்தனைகளுக்குட்பட்டும் ஒவ்வொன்றிலும் விலக்களிக்கலாம்.

**110. தற்சார்புச் சங்கங்களுக்கு விலக்கு**

19ஆம் பிரிவிலோ, அல்லது 27ஆம் பிரிவின் (1)ஆம் உட்பிரிவின் இரண்டாவது விலக்குக் கூற்றிலோ, அல்லது (2)ஆம் உட்பிரிவிலோ அடங்கியிருப்பது எதுவும், அரசினர் பொதுவான அல்லது சிறப்பு உத்தரவுமூலம் குறிப்பிடும் நிபந்தனைகளைப் பூர்த்தி செய்யும் யாதொரு தற்சார்புச் சங்கத்திற்கும் அல்லது யாதொரு தற்சார்புச் சங்க வகைக்கும் பொருந்தா.

**111. பதிவான சங்கங்களுக்கு விலக்களிக்க அதிகாரம்**

110ஆம் பிரிவின்கீழ் அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்திற்குப்

பாதகமில்லாமல், அரசினர்,பொது அல்லது சிறப்பு உத்தரவின் மூலம் சட்டத்தின் சரத்துகள் எதிலிருந்தும் பதிவு பெற்ற யாதொரு சங்கத்திற்கும் விலக்களிக்கலாம். அல்லது உத்தரவில் குறிப்பிடப்படும் மாறுதல்களுடனும் அத்தகைய சங்கத்திற்கு அத்தகைய சரத்துகள் பொருந்தவேண்டுமெனக் கட்டளையிடலாம்.

**112. ஆர்ஜிதம் செய்யப்பட்ட நிலங்களுக்காக இழப்பீடு நிருணயிப்பதில் நடுவரும் தீர்ப்பாயமும் சிவில் நீதி மன்றங்களாயிருப்பர்**

82ஆம் பிரிவின் (1)ஆம் உட்பிரிவின் (பி) பகுதியின் கீழ் நியமிக்கப்பட்ட நடுவரும், தீர்ப்பாயமும் ஒரு வழக்கை நடத்துகையில் அல்லது மேல் முறையீட்டை விசாரிக்கையில் 1908ஆம் ஆண்டு சிவில் நடைமுறைச் சட்டத்தின் கீழ் (மத்தியச் சட்டம் V, 1908) சிவில் நீதி மன்றத்திற்கு உரிமையாகவுள்ள அதே அதிகாரங்களை உடையவர்களாவர்.

**113. அரசினர் அதிகார அளிப்படைவு**

1. அரசினர், அறிக்கையின் மூலம், விதிகளைச் செய்யும் அதிகாரத்தைத் தவிர, இச் சட்டத்தின் கீழ் தன்னிடம் உரிமையாகவுள்ள எந்த அதிகாரங்களையும் கையாள யாதொரு அதிகாரக் குழுவிற்கு அல்லது அலுவலருக்கு அதிகாரம் அளிக்கலாம். அது போலவே அத்தகைய அதிகாரத்தை திரும்பப் பெறலாம்.

2. (1)ஆம் உட்பிரிவின் கீழ் அளிக்கப்பட்ட அதிகாரத்தைக் கையாளுதல். நிருணயிக்கப்படும், அல்லது அறிக்கையில் குறிப்பிடப்படும் கட்டுப்பாடுகளுக்கும், நிபந்தனைகளுக்கும், அரசினர் அல்லது இது சார்பாக அரசினரால் அதிகாரம் அளிக்கப்பட்ட அலுவலரின் புனராய்வுக்கும், ஆதிக்கத்துக்கும் உட்பட்டதாகும். அவ்வாறு அதிகாரம் அளிக்கப்பட்ட யாதொரு அலுவலரின் செயல்களை அல்லது நடவடிக்கைகளைப் புனராய்வு செய்யவும் கட்டுப்பாடு செய்யவும் அரசினருக்கு அதிகாரமுண்டு.

**114. தற்போதுள்ள சங்கங்களுக்குப் பாதுகாப்பு**

1. தற்போது செயல்பட்டு வருபவையும், 1904ஆம் ஆண்டுக் கூட்டுறவுக் கடன் சங்கச் சட்டத்தின் கீழ் (மத்தியச் சட்டம் X/1904) அல்லது 1912ஆம் ஆண்டுக் கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தின் கீழ் (மத்தியச் சட்டம் II/1912) அல்லது 1932ஆம் ஆண்டு சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் கீழ் (சென்னைச்சட்டம் VI/ 1932) பதிவு செய்யப்பட்ட சங்கங்களும் இச் சட்டத்தின்கீழ் பதிவுசெய்யப்பட்டுள்ளவையாகக் கருதப்பட

வேண்டும். அவற்றின் உப-விதிகள் இச் சட்டத்தில் வெளிப் படையான சரத்துகளுக்கு முரண்பாடாக இல்லாத வரை தொடர்ந்து அமலில்இருக்கும், மேற்படி உப-விதிகள் மாற்றப் படும்வரை அல்லது ரத்து செய்யப்படும்வரை மேற்கண்டவாறு தொடர்ந்து அமலில்இருக்கும்.

2. முன்பு புதுக்கோட்டை மாநிலத்தில் பாகமாக இருந்து வந்த எல்லைகளில் அல்லது கன்னியாகுமரி மாவட்டத்தில் அல்லது திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த செங்கோட்டை தாலுக்காவில் அல்லது 1959ஆம் ஆண்டு ஆந்திர மாநில சென்னை (எல்லை மாற்றச்) சட்டத்தின் (மத்தியச் சட்டம் 56/1959) இரண்டாவது அட்டவணையில் குறிக்கப்பட்டுள்ள மாநிலங் களில் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பொருந்தும் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப்பட்ட ஒவ்வொரு சங்கமும் இச் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப்பட்டதாகக் கருதப்படவேண்டுமெனப் பதிவாளர் உத்தரவிட்டால், இச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்டதாகக் கருதப்படும். மற்றும் அதன் உப-விதிகள் மாற்றப்படும் வரை அல்லது ரத்து செய்யப்படும் வரை தொடர்ந்து அமலில் இருக்கும்.

3. (1)ஆம் உட்பிரிவில் குறிக்கப்பட்டுள்ள சட்டங்களின்கீழ்ச் செய்யப்பட்ட எல்லா நியமனங்கள், விதிகள், உத்தரவுகள், வெளியிடப்பட்ட அறிக்கைகள், அறிவிப்புகள், தொடரப்பட்ட வழக்குகள், இதர நடவடிக்கைகள் ஆகியவை இச் சட்டத்தின்கீழ் முறையே செய்யப்பட்டவையாக, வெளியிடப்பட்டவையாக, தொடரப்பட்டவையாகக் கருதப்படவேண்டும்.

**115. சில குறைபாடுகளினால் சங்கங்களின் செயல்கள் சட்ட ஒப்புதல் அற்றவையாக ஆகி விடக்கூடாது**

பதிவான சங்கத்தின் எந்தச் செயலும் அல்லது சங்கத்தை சேர்ந்த யாதொரு நிருவாகக் குழு அல்லது யாதொரு அலுவலரின் செயல் எதுவும்;

(அ) சங்கத்தின் யாதொரு காலிஇடம் அல்லது சங்கத்தை அமைப்பதில் உள்ள யாதொரு குறைபாட்டின் காரணமாக அல்லது பேரவை அமைத்தலில் அல்லது நிருவாகக் குழுவை அமைத்தலில் உள்ள யாதொரு குறைபாட்டின் காரணமாக ;

(ஆ) நிருவாகக் குழு உறுப்பினர் ஒருவரைத் தேர்ந்தெடுப் பதில் அல்லது சங்கத்தின் அலுவலர் ஒருவரை நியமிப்பதில் உள்ள யாதொரு குறைபாடு அல்லது அத்தகைய உறுப்பினர் அல்லது அலுவலரின் யாதொரு தகுதியின்மை காரணமாக ;

(இ) இதன் முக்கிய அம்சங்களைப்பாதிக்காத அச் செயலில் அல்லது நடவடிக்கையில் உள்ள யாதொரு குறைபாடு அல்லது முறைகேடு காரணமாக, சட்ட சம்மதமற்றதாக ஆகிவிடாது.

**116. 1956ஆம் ஆண்டுக் கம்பெனிகள் சட்டம் பொருந்தாது**

1956ஆம் ஆண்டுக் கம்பெனிகள் சட்டத்தின் (மத்தியச் சட்டம் I/1956) சரத்துகள் பதிவு பெற்ற சங்கங்களுக்குப் பொருந்தா.

**117. நல்லெண்ணத்துடன் எடுத்த நடவடிக்கைக்குப் பாதுகாப்பு**

இச் சட்டத்தின் கீழ் அல்லது அதன் கீழ்ச் செய்யப்பட்ட யாதொரு விதியின்கீழ் நல்லெண்ணத்துடன் செய்யப்பட்ட எதற்காகவும் அல்லது செய்ய உத்தேசித்துள்ள எதற்காகவும் அரசாங்க அலுவலர் அல்லது ஊழியர் எவர் மீதும் யாதொரு வழக்கு, பிராது அல்லது இதர சட்டரீதியான நடவடிக்கை எதுவும் எடுக்கப்படக் கூடாது.

**118. சட்டங்களில் கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்திற்குக் குறிப்பீடு**

இந்தியாவில் யாதொரு அதிகாரக் குழுவால் செய்யப் பட்டவையும், தற்போது தமிழ்நாட்டில் அமலில் இருந்து வருபவையுமான சட்டங்களில் கீழே குறிப்பிட்டுள்ள சட்டங்கள் பற்றிய குறிப்பீடு காணப்படின் அது தமிழ் நாட்டிற்குப் பொருந்தும் வரை, இச் சட்டம்பற்றிய குறிப்பீடுகளாகக் கொள்ள வேண்டும். மேற்சொன்ன சட்டங்களாவன: கூட்டுறவுச் சங்கங்கள் சட்டம், 1912 (மத்தியச் சட்டம்II, 1912) அல்லது சென்னைக் கூட்டுறவுச் சங்கங்கள் சட்டம் 1932 (சென்னைச் சட்டம் VI, 1932) அல்லது திருவாங்கூர்-கொச்சி கூட்டுறவுச் சங்கங்கள் சட்டம் 1952 (திருவாங்கூர்-கொச்சி சட்டம் X, 1952).

**119. விதிகள் செய்வதற்கு அதிகாரம்**

1. அரசினர் இச் சட்டத்தின் எல்லாச் செயல்களையும் அல்லது எவையேனும் செயல்களையும் நிறைவேற்றுவதற்காக, சென்னை மாநிலம் முழுவதற்கும் அல்லது அதன் யாதொரு பாகத்திற்காகவும், யாதொரு பதிவான சங்கத்திற்காகவும் அல்லது யாதொரு சங்கங்கள் வகைக்காகவும் விதிகள்செய்யலாம்.

2. அத்தகைய விதிகள், குறிப்பாகவும், மேற்சொன்ன அதிகாரத்தின் பொதுத் தன்மைக்குப் பாதகமில்லாமலும்,

(அ) சங்கங்களைப் பதிவு செய்வதற்கான விண்ணப்பங்கள் அனுப்புவதில் பயன்படுத்த வேண்டிய நமூனுக்களையும் கையாளப்

படவேண்டிய நிபந்தனைகளையும் அத்தகைய விண்ணப்பங்கள் அனுப்புவதில் பின்பற்றவேண்டிய நடைமுறையையும் நிருணயிக்கலாம்.

(ஆ) 5ஆம் பிரிவின் சரத்துக்குட்பட்டு, சங்கங்கள் தங்கள் பொறுப்பு வகையை மாற்றியமைத்துக் கொள்ளும்போது பின் பற்ற வேண்டிய நடைமுறையை நிருணயிக்கலாம்.

(இ) யாதொரு சங்கம் எச் செயல்களைக் குறித்து உப-விதிகள் செய்யலாம் அல்லது செய்யவேண்டும் என்று நிருண யிக்கலாம். உப-விதிகளைச் செய்வதிலும், மாற்றியமைத்தலிலும், ரத்து செய்வதிலும் பின்பற்றவேண்டிய நடைமுறையையும் மேற் படி உப-விதிகளைச் செய்வதிலும், மாற்றியமைத்தலிலும், ரத்து செய்வதிலும் பின்பற்றவேண்டிய நிபந்தனைகளையும் நிருண யிக்கலாம்.

(ஈ) சங்கத்தில் உறுப்பினராகச் சேர விண்ணப்பித்துக் கொள்ளும் நபர்கள் அல்லது உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்பட்ட நபர்கள் நிறைவேற்றப்பட வேண்டிய நிபந்தனை களை நிருணயிக்கலாம். உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் சேர்த்துகொள்வதற்கும் ஏற்பாடு செய்யலாம்.

(உ) உறுப்பினர்கள் உரிமையைக் கையாளுவதற்குமுன் சங்கத்திற்குக் கொடுக்கவேண்டிய தொகைகளைச் செலுத்துவதற் காகவும், அடையவேண்டிய அக்கறையைப் பற்றியும் ஏற்பாடு செய்யலாம்.

(ஊ) பங்குகள் அல்லது கடன் ஈட்டுப் பத்திங்கள் மூலம் அல்லது இதர விதமாக நிதி சேர்க்கும் முறையை ஒழுங்கு படுத்தலாம் :

(எ) நிதிவங்கியின் நடைமுறையில்,

(i) அதன் பேரவை அமைப்பதில் அல்லது அதன் நிருவாகக் குழுவில் தனிப்பட்ட உறுப்பினர்கள், சங்க உறுப்பி னர்கள், இவர்களின் விகிதாச்சாரத்தை நிருண யிக்கலாம்.

(ii) நிருவாகக் குழுவில் உள்ள உறுப்பினர்களின் அதிக எண்ணிக்கையை நிருணயிக்கலாம்.

(ஏ) உறுப்பினர்களின் பேரவைக் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்யலாம். அத்தகைய கூட்டங்களில் கையாளவேண்டிய நடை

முறையையும் அத்தகைய கூட்டங்கள் கையாளவேண்டிய அதிகாரங்களையும் நிருணயிக்கலாம்.

(i) நிருவாகக் குழு உறுப்பினர்களையும் ஊதியம் பெறும் அலுவலரல்லாத இதர அலுவலர்களையும் நியமனம் செய்வதற்கும், வேலையிலிருந்து தற்காலிகமாக மேற்கடப்பதற்கும், அவர்களைக் குழுவிலிருந்து அகற்றுதவதற்கும் ஏற்பாடு செய்வதற்காகவும், நிருவாகக் குழுக் கூட்டங்களில் கையாளவேண்டிய நடைமுறையை நிருணயிக்கலாம். நிருவாகக் குழு, இதர அலுவலர்கள் கையாளவேண்டிய அதிகாரங்கள், செய்யவேண்டிய கடமைகள் ஆகியவற்றை நிருணயிக்கலாம்.

(ஐ) சங்கத்திற்குச் செலுத்தவேண்டிய தொகையைச் செலுத்தத் தவறிய சங்க உறுப்பினர் ஒருவரை அதன் நிருவாகக் குழு உறுப்பினராக அல்லது இதர யாதொரு சங்கத்தின் உறுப்பினராக நியமிக்கப்படுவதைத் தடை செய்யலாம். அவர், சங்கத்தின் உறுப்பினர் என்ற முறையில் தனது உரிமையைப் பயன்படுத்துதலையும், அதை மற்றொரு சங்கத்தில் பயன்படுத்தி வாக்களித்தலையும் தடை செய்யலாம்.

(ஒ) சங்கம் வைத்துவர வேண்டிய கணக்கு ஏடுகளையும் நிருணயிக்கலாம்.

(ஓ) சங்கத்தின் சொத்துப் பொறுப்புகளைக் காட்டும் இருப்புநிலைக் குறிப்பைக் காலத்திற்கொருமுறை வெளியிடுவதற்கு ஏற்பாடு செய்யலாம்.

(ஔ) ஒரு சங்கம் பதிவாளருக்கு அனுப்பவேண்டிய விவர அறிக்கைகளை நிருணயிப்பதற்கும், அத்தகைய கணக்குகள் யாரால் எந்த நமூனாவில் அனுப்பப்படவேண்டும் என நிருணயிப்பதற்கும், அத்தகைய கணக்குகளை அனுப்பத் தவறிவிடின் அவற்றைத் தயாரிப்பதற்கான செலவுகளை விதிப்பதற்காக ஏற்பாடு செய்யலாம்.

(ஃ) சங்கத்தின் ஏடுகளில் உள்ள பதிவுகளின் நகல்களை எந்த எந்த நமூனாவில் சான்றிடலாம் என்பது குறித்து ஏற்பாடு செய்யலாம். அத்தகைய நகல்களை வழங்குவதற்காக வசூலிக்க வேண்டிய கட்டணங்களை நிருணயிக்கலாம்.

(க) உறுப்பினர்கள் பற்றிய பதிவேடு ஒன்றை அமைத்து, வைத்து வருவதற்காகவும் உறுப்பினர்களின் பொறுப்பு வரையறைக்குட்பட்டதாக இருந்தால், பங்குகள் பற்றிய பதிவேடு ஒன்றை வைத்து தருவதற்காகவும் ஏற்பாடு செய்யலாம்.

(ங) (i) தகராறுகளைத் தீர்த்துவைப்பதற்காக நடுவர் ஒருவரை அல்லது நடுவர்களை நியமிப்பதற்காகவும் ஏற்பாடு செய்யலாம்.

(ii) பதிவாளர், நடுவர் அல்லது நடுவர்கள் அல்லது தகராறுகளைத் தீர்க்கும் இதர நபர் ஆகியோர் முன்பு நடக்கும் நடவடிக்கைகளில் கையாளப்படவேண்டிய நடைமுறையை நிருணயிக்கலாம். தகராறுகளுக்குத் தொடர்புடையவரும் வயது வராத மனநோயாளியான அல்லது அறிவுவளர்ச்சியடையாத காரணத்தினால் தனது சொத்துகளைப் பாதுகாத்துக்கொள்ள இயலாத நபருக்குப் பாதுகாவலர் நியமனம் செய்வதும் இதில் அடங்கும்.

(iii) அத்தகைய நடவடிக்கைகளுக்குண்டான செலவுகளை விதிப்பிப்பதற்கு ஏற்பாடு செய்யலாம்.

(iv) அத்தகைய நடவடிக்கைகளின் முடிவு அல்லது தீர்ப்புகளை நிறைவேற்றலாம்.

(ச) உறுப்பினர்கள் திரும்பப்பெற்றுக் கொள்வதற்கும், திரும்பப் பெற்றுக் கொள்ளும் உறுப்பினர்களுக்குத் தொகை ஏதேனும் கொடுக்க வேண்டியிருந்தால், அவற்றைக் கொடுப்பதற்கும், முன்னாள் உறுப்பினர்கள், அல்லது இறந்துவிட்ட உறுப்பினர்கள், சொத்துகளின் பொறுப்புகளை வகை செய்வதற்கும் ஏற்பாடு செய்யலாம்.

(ஞ) உறுப்பினர்கள் அல்லாத நபர்களுடன் சங்கங்கள் எந்தத் தடைகளுக்கும் வரையறைகளுக்கும் கட்டுப்பட்டு வர்த்தகம் நடத்தலாம் என நிருணயிக்கலாம்.

(ட) இறந்துவிட்ட உறுப்பினர்களுடைய அக்கறையின் மதிப்பை எந்தவிதமாகத் தீர்மானிக்கலாமென்பதற்கும், அத்தகைய அக்கறையைச் செலுத்துவதற்கும், மாற்றுவதற்கும், ஒரு நபரை நியமனம் செய்வதற்கும், ஏற்பாடு செய்யலாம்.

(ண) கடன் கேட்டு விண்ணப்பித்துக் கொள்ளும் உறுப்பினர்கள் செலுத்தவேண்டிய தொகைகள், ஒரு தனிப்பட்ட உறுப்பினர்களுக்குக் கடன் கொடுக்க அவர் நிறைவேற்ற வேண்டிய நிபந்தனைகள், கடன், காலம் கொடுக்கத்தக்க கடன் தொகை முதலியவற்றை நிருணயிக்கலாம்.

(த) சேம நிதிகளை ஏற்படுத்திப் பராமரிக்கவும் ஏற்பாடு செய்யலாம்; எத்தகைய நோக்கங்களுக்கு சேம நிதிகளைப் பயன்படுத்தலாமென்பதையும் சங்கத்தின் கண்காணிப்பின் கீழ்

யாதொரு நிதியை முதலீடு செய்யலாம் என்பதையும் ஏற்பாடு செய்யலாம்.

(ந) ஒரு சங்கம் தனது உறுப்பினர்களின் எண்ணிக்கையை எந்த அளவுக்கு வரையறுக்கலாம் என்பதையும் நிருணயிக்கலாம்.

(ப) வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தின் உறுப்பினர்களுக்கு எந்த நிபந்தனையின்கீழ் இலாபத் தொகையை விநியோகிக்க வேண்டும் என்பது பற்றியும், சங்கங்கள் கொடுக்கத் தக்க உச்ச அளவு இலாப ஈவு வீதத் தொகைகளையும் நிருணயிக்கலாம்.

(ம) 86ஆம் பிரிவின் கீழ் நியமிக்கப்பட்ட கலைப்பு அலுவலர் பின்பற்ற வேண்டிய நடைமுறையை நிருணயிப்பதற்கும் சங்கத்தில் அதிக சொத்துகள் இருந்தால் அவற்றை முடிவு செய்வதற்கும் ஏற்பாடு செய்யலாம்.

(ய) இச் சட்டத்தின்கீழ் மேல்முறையீடுகள், புனராய்வுக்கான விண்ணப்பங்கள், மறுசீராய்வு கோரி செய்யப்படும் விண்ணப்பங்கள் ஆகியவற்றைச் சமர்ப்பிப்பதும் முடிவு செய்வதும் பற்றிய நடைமுறையையும் அத்தகைய மேல்முறையீடுகள் அல்லது விண்ணப்பங்கள் தொடர்பாகச் செலுத்த வேண்டிய கட்டணங்களையும் நிருணயிக்கலாம்.

(ர) பதிவான சங்கங்களுக்கு அரசாங்கம் எந்தக் காலத்திற்கும், எந்த நிபந்தனைகளின் அடிப்படையிலும் நிதி உதவி அளிக்கலாமென்பது பற்றியும், சங்கங்கள் வெளியிடும் கடன் ஈட்டுப் பத்திரங்கள் மீதும், வைப்புத் தொகைகள்மீதும் செலுத்தப்படவேண்டிய வட்டி குறித்து எந்த நிபந்தனைகளின் கீழ் அரசினர் உத்தரவாதம் அளிக்க வேண்டும் என்பது பற்றியும் நிருணயிக்கலாம்.

(ல) இச் சட்டத்தின்கீழ் ஜப்தி செய்யப்பட்ட சொத்துகளின் பாதுகாப்பிற்காக ஏற்பாடு செய்யலாம்.

(வ) நீதிமன்ற நிறைவேற்றுதல் கட்டளைகளை அனுப்பவும், அவற்றை உரிய நபர்களிடத்தில் சேர்ப்பிக்கவும் அவற்றைச் சேர்ப்பித்ததைச் சான்றுரைக்கவும் ஏற்பாடு செய்யலாம்.

(ழ) பதிவாளர் அலுவலகத்தில் ஆவணங்களின் சான்றிடப்பட்ட நகல்களை வழங்குவதற்கான கட்டணங்களை விதிப்பதற்கு ஏற்பாடு செய்யலாம்.

(ள) பதிவாளர் அல்லது அவரது அதிகாரம் பெற்ற யாதொரு நபரால் செய்யப்பட்ட ஜப்திக்கு எதிராகச் செய்யப்

பட்ட கோரிக்கைகளையும், எதிர்டுகளையும் ஆராய்வதற்காக ஏற்பாடு செய்யலாம்.

(ந) 71-ஆம் பிரிவின்கீழ் தொடரப்பட்ட வழக்குகளில் அரசாங்கத்திற்கெதிராகத் தீர்ப்பளிக்கப்பட்ட செலவை வசூலிக்க ஏற்பாடு செய்யலாம்.

(ன) 91-ஆம் பிரிவின்கீழ் சொத்துகளை ஜப்தி செய்து விற்பனை செய்வதற்கான நடைமுறையை நிருணயிக்கலாம்.

(கக) தீர்ப்பாயத்தின் அலுவல் நடைமுறையைத் தீர்மானித்து அதன் நடவடிக்கைகள் பற்றி நிருணயிக்கலாம்.

(கங) விதிகளில் நிருணயிக்கப்பட வேண்டிய இச் சட்டத்தால் வெளிப்படையாகத் தேவைப்படும் அல்லது அனுமதிக்கப்படும் எல்லாவற்றிற்காகவும் ஏற்பாடு செய்யலாம்.

3. இச் சட்டத்தின் கீழ் செய்யப்படும் எல்லா விதிகளும் அரசிதழில் பிரசுரிக்கப்பட வேண்டும். மேலும் அவை, குறிப்பிட்ட தேதியன்று அமலுக்கு வரும் என்று கூறப்பட்டிருந்தாலன்றி மற்றபடி அவை பிரசுரிக்கப்படுகின்ற தேதியன்று அமலுக்கு வரும்.

4. இச் சட்டத்தின்கீழ் செய்யப்படும் விதி ஒவ்வொன்றும் அது செய்யப்பட்டவுடன் விரைவில் இரு சட்டப் பேரவைகளின் முன்பும் வைக்கப்பட வேண்டும். அதே சட்ட சபைக் கூட்டத் தொடரில் அல்லது அடுத்தக் கூட்டத் தொடரில் இரு சபைகளும் அத்தகைய விதியில் யாதொரு மாறுதலைச் செய்ய ஒப்புக் கொண்டால் அல்லது அத்தகைய விதியைச்செய்யக் கூடாது என்று கருதினால் அந்த விதி, சூழ்நிலைக்கேற்ப மாற்றியமைக்கப்பட்டபடி சட்டப்படி செல்லும் அல்லது சட்டப்படி செல்லாததாகும். ஆயினும், அத்தகைய யாதொரு மாறுதல் அல்லது ரத்து அந்த விதியின்கீழ் முன்னால் செய்யப்பட்ட யாதொரு விதியின் அமலைப் பாதிக்காது.

**120. கட்டளைகளைப் பிறப்பிக்க அரசினரின் அதிகாரம்**

1. அரசினர் உத்தரவின்மூலம், அந்த உத்தரவில் குறிப்பிட்ட யாதொரு செய்தியைக் குறித்து விசாரணை செய்யும்படி அல்லது இச் சட்டத்தின்கீழ் தகுந்த நடவடிக்கை எடுக்கும்படி பதிவாளருக்குக் கட்டளையிடலாம். பதிவாளர் அவர் செய்த

விசாரணையின் முடிவு அல்லது எடுத்த நடவடிக்கைகளின் முடிவு பற்றி நாளடைவில் அரசினருக்கு அறிக்கை அனுப்ப வேண்டும்.

2. (1)ஆம் உட்பிரிவின்கீழ் கட்டளை பிறப்பிக்கப்பட்ட யாதொரு செய்தியிலும் அரசினர், இச் சட்டத்தில் என்ன அடங்கியிருப்பினும், பதிவாளரின் நடவடிக்கைகள் பற்றிய பதிவேடுகளை மறுசீராய்வு செய்து தான் தகுதியெனக் கருதும் உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம்.

ஆனால், இந்த உட்பிரிவின்கீழ் யாதொரு உத்தரவைப் பிறப்பிக்கும் முன்னர் அத்தகைய உத்தரவினால் பாதிக்கப்படக் கூடிய நபருக்குத் தனது தரப்பை விளக்கிச் சொல்வதற்கு வாய்ப்பு அளிக்கப்படவேண்டும் என்ற நிபந்தனைக்குட்பட்டும்.

**121. நீக்கலும், பாதுகாப்பும்**

1. 1932ஆம் ஆண்டு சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் (சென்னை சட்டம் VI /1932) மத்திய அரசினர் அதிகாரங்களைக் குறிக்கிற 30ஆம் பிரிவு தவிர அச் சட்டமும், இச் சட்டத்தின் தொடக்கத்திற்கு அடுத்து முன்பு சேர்க்கப்பட்ட பிரதேசத்தில் அல்லது மாற்றப்பட்ட பிரதேசத்தில் அமலில் உள்ள நிகரான யாதொரு சட்டமும் இச் சட்டத்தின் தொடக்கத்திலிருந்து நீக்கப்படும். இதில் (இப் பிரிவில் நிகரான சட்டம் என்று குறிப்பிடப்படுகிற) 1952ஆம் ஆண்டு திருவாங்கூர்—கொச்சிக் கூட்டுறவுச் சங்கங்கள் சட்டம் (திருவாங்கூர்—கொச்சி சட்டம் X /1952) அடங்கும்.

2. நிகரான சட்டத்தின் (1)ஆம் உட்பிரிவின் நீக்கம்.

(i) நிகரான சட்டம் இதற்கு முன்பு அமலாகி வந்த அதன் கீழ் செய்யப்பட்ட எதையும், அதன்கீழ் முறையாக அனுமதிக்கப்பட்டு வந்த யாதொன்றையும் பாதிக்காது அல்லது,

(ii) நிகரான சட்டத்தின் கீழ்ப் பெறப்பட்ட அல்லது சேர்ந்து வந்துள்ள அல்லது ஏற்பட்ட யாதொரு உரிமை, பாத்தியதை, கடமை அல்லது அல்லது பொறுப்பைப் பாதிக்காது, அல்லது,

(iii) நிகரான சட்டத்திற்கு விரோதமாகச் செய்யப்பட்ட யாதொரு குற்றம் தொடர்பாக அமைந்த யாதொரு அபராதத் தண்டனையையும், பறிமுதலையும் அல்லது தண்டனையையும் பாதிக்காது.

(iv) மேற்சொன்ன அத்தகைய யாதொரு உரிமை, பாத்தியதை, கடமை, பொறுப்பு, அபராதத் தண்டனை, பறிமுதல் அல்லது தண்டனை தொடர்பாக நடக்கும் யாதொரு ஆராய்வையும் சட்ட நடவடிக்கை அல்லது பரிகாரத்தையும் பாதிக்காது.

அத்தகைய யாதொரு மறுசீராய்வு, சட்ட நடவடிக்கை அல்லது பரிகாரம் இந்தச் சட்டம் நிறைவேற்றப்படாமலிருந்தால் எப்படியோ அப்படியே மேற்கொள்ளப்படலாம் அல்லது தொடர்ந்து நடத்தப்படலாம் அல்லது அமலுக்குக் கொண்டு வரப்படலாம் அல்லது அத்தகைய யாதொரு அபராதத் தண்டனை, பறிமுதல் அல்லது தண்டனை அவ்வாறே விதிக்கப் படலாம்.

3. (2) ஆம் உட்பிரிவின் சரத்துகளுக்குட்பட்டு, நிகரான சட்டத்தின் கீழ்ச் செய்யப்பட்ட யாதொரு நியமனம் அல்லது அதிகார அளிப்படைவு, பிறப்பிக்கப்பட்ட அறிக்கை உத்தரவு, அறிவுரை, அல்லது கட்டளை, வகுக்கப்பட்ட விதி, ஒழுங்கு முறை, அல்லது நமூனு, வழக்கப்பட்ட சான்றிதழ் அல்லது செய்யப்பட்ட பதிவு ஆகியவை உட்பட செய்யப்பட்ட எதுவும் அல்லது மேற்கொள்ளப்பட்ட யாதொரு நடவடிக்கையும், இந்தச் சட்டத்தின்கீழ்ச் செய்யபட்டுள்ள யாதொரு செயலால் அல்லது மேற்கொள்ளப்பட்டுள்ள யாதொரு நடவடிக்கையினுல் மேற் கடக்கப்பட்டாலன்றி, மற்றபடி அப்படி மேற்கடக்கப்படுகிற வரை, இந்தச் சட்டத்தின்கீழ் செய்யப்பட்டிருப்பதாக அல்லது மேற்கொள்ளப்பட்டதாகக் கருதப்படும்; மேலும் அவை அதே விதமாகத் தொடர்ந்து அமலிலிருந்து வரும்.

4. சேர்க்கப்பட்டுள்ள மாநிலத்தில் அல்லது மாற்றலாகி யுள்ள மாநிலத்தில் இச் சட்டத்தைப் பயன்படுத்துவதை வசதிப் படுத்துவதற்காக யாதொரு நீதிமன்றம் அல்லது இதர அதிகாரக் குழு தம் முன்பு உள்ளதற்குத் தக்கவாறு இணக்கம் செய்து கொள்வதற்குத் தேவையாய் அல்லது தகுதியாய் இருக்கும் வண்ணம் அதன் பொருளைப் பாதிக்காத வகையில் அந்த நீதி மன்றம் அல்லது அதிகாரக் குழு செய்யும் மாறுதல்களுடன் அது இச் சட்டத்திற்குப் பொருள் கொள்ளலாம்.

5. சேர்க்கப்பட்டுள்ள மாநிலத்தில் அல்லது மாற்றலாகியுள்ள மாநிலத்தில் இச் சட்டத்தின் தொடக்கத்திற்குப் பிறகும் தொடர்ந்து அமலில் இருந்து வருகிற யாதொரு சட்டத்தில் நிகரான சட்டம் தொடர்பாக வருகிற யாதொரு குறிப்பீடு அந்த

மாநிலம் தொடர்பான வகையில் இச் சட்டத்திற்கான குறிப்பீடு எனப் பொருள் கொள்ளப்படவேண்டும்.

விளக்கம் ; இப் பிரிவின் செயலுக்காக 'சேர்க்கப்பட்ட மாநிலம்' என்பது 1959ஆம் ஆண்டு ஆந்திர மாநிலம், சென்னை (எல்லை மாற்றச்) சட்டத்தின் (மத்தியச் சட்டம் 56/1959) இரண்டாவது அட்டவணையில் குறிக்கப்பட்டுள்ள மாநிலங்கள் என்று பொருள்படும். மாற்றப்பட்ட பிரதேசம் என்பது கன்னியாகுமரி மாவட்டம் என்றும் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த செங்கோட்டை தாலுக்கா என்றும் பொருள் படும்.

**122. இன்னல்களை அகற்றுவதற்கான அதிகாரம்**

இச் சட்டத்தின் சரத்துகளை அமல் செய்வதில் ஏதேனும் இன்னல் எழுந்தால் அரசினர் சூழ்நிலைக்குத் தக்கவாறு, உத்தரவின் மூலம் அந்த இன்னலை அகற்றுவதற்காக அவர்களுக்குத் தேவையெனத் தோன்றுகிற எதையும் செய்யலாம்.

2. (1)ஆம் உட்பிரிவின் கீழ் செய்யப்படும் ஒவ்வோர் உத்தரவும் அது செய்யப்பட்டவுடன் விரைவில் இரு சட்டப் பேரவைகளின் முன்பும் வைக்கப்படவேண்டும். அதே சட்ட அவைக் கூட்டத் தொடரில் அல்லது அடுத்த கூட்டத் தொடரில் இரு அவைகளும் அத்தகைய உத்தரவில் மாறுதலைச் செய்ய ஒப்புக் கொண்டால், அல்லது அத்தகைய உத்தரவு செய்யப்படக்கூடாது எனக் கருதினால் அந்த உத்தரவு, சூழ்நிலைக்கேற்ப, மாற்றியமைக்கப்பட்டபடி அமல் திறன் உள்ளதாகும் அல்லது முழுவதும் செல்லுபடி ஆகாது; ஆயினும் அத்தகைய யாதொரு மாறுதல் அல்லது ரத்து அந்த உத்தரவின் கீழ் முன்னால் செய்யப்பட்ட எதன் அமல்திறனையும் பாதிக்காது.

இணைப்பு II

# 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திற்குத் திருத்தங்கள்

தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (திருத்தம்) சட்டம், 1970

(*1970ஆம் வருடத்திய 29ஆம் சட்டம்.*)

**1. தலைப்புச் சுருக்கமும் தொடக்கமும்**

*1. இந்தச் சட்டம் தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (திருத்தச்) சட்டம், 1970 என்று அழைக்கப்படலாம்.*

*2. அது 1970ஆம் ஆண்டு நவம்பர் 10ஆம் தேதியன்று அமலுக்கு வந்ததாகக் கருதப்பட வேண்டும்.*

**2. 1961ஆம் வருடத்திய 53ஆம் எண்ணுள்ள தமிழ்நாடு சட்டத்தில் IX-அ என்ற புதிய அத்தியாயத்தைப் புகுத்தல்**

*1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் IXஆம் அத்தியாயத்திற்குப் பிறகு (1961ஆம் வருடத்திய 53ஆம் எண்ணுள்ள தமிழ்நாடு சட்டம்), (இனி இதன் கீழ் முக்கியச் சட்டம் எனக் குறிப்பிடப்படுகிறது), பின்வரும் அத்தியாயம் புகுத்தப்பட வேண்டும், அதாவது:*

அத்தியாயம் IX-அ

**மாநிலக் கூட்டுறவு வங்கியும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளும்**

**73-அ. சொற்பொருள் விளக்கங்கள்**

*இந்த அத்தியாயத்தில் வேறு விதமாகக் காரணம் கோரினால் தவிர,*

(அ) 'சபை' என்றால், மாநிலக் கூட்டுறவு வங்கியின் இயக்குநர்கள் குழு என்று பொருள்படும்.

(ஆ) 'மத்தியக் கூட்டுறவு வங்கி' என்றால், இந்தச் சட்டத்தின்கீழ் பதிவு செய்யப்பட்டதும் அல்லது பதிவு செய்யப் பட்டதாகக் கருதப்பட்டதும், மாநிலக் கூட்டுறவு வங்கியின் ஓர் உறுப்பினரானதுமான ஒரு கூட்டுறவு மத்திய வங்கி என்று பொருள்படும்.

(இ) ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கித் தொடர்பான 'குழு' என்றால், அதன் அலுவல்களின் நிருவாகம் அளிக்கப்பட்ட இயக்குநர்கள் சபை அல்லது நிருவாக சபை அல்லது நிருவாகக் குழு அல்லது ஆட்சிக் குழு என்று பொருள்படும்.

(ஈ) 'சிறு குடியானவர்' என்றால், நிருணயிக்கப்படும் நிலப் பரப்பிற்கு மேற்படாத நிலத்தைச் சொந்தமாக வைத்திருக்கும் அல்லது சாகுபடி செய்யும் ஒரு நபர் என்று பொருள்படும்.

(உ) 'ஒரு மாநிலக் கூட்டுறவு வங்கி' என்றால் தமிழ் நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி, வரையறுக்கப்பட்டது, என்று பொருள் படும்.

(ஊ) 'சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினர்' என்பதில் சிறு குடியானவர்களும் அட்டவணையில் கண்ட மலைவாசிகளும் மகளிரும் சேர்த்துக்கொள்ளப் பட்டிருக்கின்றனர்.

**73-ஆ மாநிலக் கூட்டுறவு வங்கியும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளும்**

1. தமிழ் நாடு மாநிலத்திற்காக, ஒரு மாநிலக் கூட்டுறவு வங்கியும், தேவையாகக் கருதப்படும் பல மத்தியக் கூட்டுறவு வங்கிகளும் இருக்க வேண்டும்.

2. தமிழ் நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (திருத்தச்) சட்டத்தின், 1970 (இனிமேல் இதன் கீழ், திருத்தச் சட்டம் என்று குறிப்பிடப்படுகிறது) தொடக்கத் தேதியன்றும், அந்தத் தேதியிலிருந்தும்.

(i) தற்போதுள்ள தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி வரையறுக்கப்பட்டது, (பதிவு எண் 18), மாநிலக் கூட்டுறவு வங்கியாகக் கருதப்படவும் வேண்டும்; இருக் கவும் வேண்டும் ; மற்றும்,

(ii) தற்போதுள்ள ஒவ்வொரு கூட்டுறவு மத்திய வங்கியும் ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கியாகவும் மாநிலக்

கூட்டுறவு வங்கியின் ஓர் உறுப்பினராகவும் கருதப் படவும் வேண்டும், இருக்கவும் வேண்டும்.

3. (அ) சபை எல்லா மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் சூழ் நிலைகளுக்கேற்ப, தலைவர்களையும், பெருந்தலைவர்களையும், நிருணயிக்கப்படும் எண்ணிக்கையுள்ள தேர்ந்தெடுக்கப்பட்டும், நியமனம் செய்யப்பட்டுமுள்ள இதர உறுப்பினர்களையும், விதிகளில் குறிக்கப்படும் ஓர் அலுவல் வழி உறுப்பினரையும் கொண்டதாக இருக்கவேண்டும். குழு நிருணயிக்கப்படும் எண்ணிக்கையுள்ள தேர்ந்தெடுக்கப்பட்டும், நியமனம் செய்யப்பட்டுமுள்ள உறுப்பினர்களையும், விதிகளில் குறிக்கப்படும் ஓர் அலுவல் வழி உறுப்பினரையும் கொண்டதாக இருக்க வேண்டும்.

ஆனால் குழுவில் பிரதிநிதித்துவம் சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்ற நிபந்தனைக்கும்,

மற்றும், நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை சபை அல்லது குழுவின் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையின் ஐந்தில் ஒரு பாகத்திற்கு மேற்படக் கூடாது என்ற நிபந்தனைக்குமுட்பட்டு;

மற்றும், சூழ்நிலைக்கேற்றாற்போல், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின், வரையறுக்கப்பட்டது (பதிவு எண் 18), நிருவாக சபையின் அல்லது தொடர்பான கூட்டுறவு மத்திய வங்கியின் குழுவின் தற்போதுள்ள உறுப்பினர்கள், திருத்தச் சட்டத்தின் தொடக்கத் தேதியன்று, பிரிவு 28-ன் சரத்துக்கு உட்பட்டு, தற்போதுள்ள தங்கள் உறுப்பினர் பதவிக் காலம் முடியும் வரை அல்லது பிரிவு 27-ன் உட்பிரிவு (3)-ன் பகுதி (இ)-ன் கீழ் தங்கள் உறுப்பினர் பதவிக்காலம் நீடிக்கப்பட்டுள்ள தேதி வரை, திருத்தச் சட்டத்தின் தொடக்கத் தேதிக்குப் பிறகு முதன்முதலாக அமைக்கப்பட்ட சபை அல்லது குழுவின் உறுப்பினர்களாகத் தொடர்ந்திருக்க வேண்டும் என்ற நிபந்தனைக்கும்,

மற்றும், தேர்தல்களில் அலுவல்வழி உறுப்பினர் வாக்களிக்க உரிமையுள்ளவராகார் என்ற நிபந்தனைக்குமுட்பட்டு,

(ஆ) சபை அல்லது குழுவின் யாதொரு கூட்டத்திற்கு வருகை தருவதற்கும், அக் கூட்டத்தில் விவாதங்களில் பங்கெடுப் பதற்கும் அரசினர், உத்தரவின் மூலம், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட அரசாங்க அலுவலர்களை அனுப்பலாம். ஆனால்,

அத்தகைய அலுவலர் அல்லது அலுவலர்கள் வாக்களிக்கும் உரிமை பெற்றவர்களாக மாட்டார்கள்.

4. திருத்தச் சட்டத்தின் தொடக்கத் தேதிக்குப் பிறகு பதிவு செய்யப்பட்ட ஒவ்வொரு புதிய மத்தியக் கூட்டுறவு வங்கியும், அத்தகைய பதிவின்பேரில் மாநிலக் கூட்டுறவு வங்கியின் ஓர் உறுப்பினராகக் கருதப்பட வேண்டும்; ஓர் உறுப்பினராக இருக்கவும் வேண்டும்.

ஆனால், அத்தகைய யாதொரு உறுப்பினரும் பதிவாளரின் அங்கீகாரம் பெற்று, மாநிலக் கூட்டுறவு வங்கியின் உறுப்பினர் தகுதியிலிருந்து சபையின் ஒரு தீர்மானம் மூலம், நீக்கப்படலாம் என்ற நிபந்தனைக்கும், மற்றும் அத்தகைய பதிவாளரின் அங்கீகாரத்தைப் பெறுவதற்கான விண்ணப்பம், மத்தியக் கூட்டுறவு வங்கியின் பதிவுத் தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் செய்யப்பட வேண்டும் என்ற நிபந்தனைக்குமுட்பட்டும்,

5. நிருணயிக்கப்படும் சங்க வகையைச் சேர்ந்த ஒவ்வொரு பதிவான சங்கமும், அந்தச் செயலுக்காக நமூனு ஏதாவது நிருணயிக்கப்பட்டிருந்தால், அந்த நமூனுவில் செய்யப்பட்ட விண்ணப்பத்தின்பேரில் மத்தியக் கூட்டுறவு வங்கியின் ஓர் உறுப்பினராக, அத்தகைய விண்ணப்பத்தை மத்தியக் கூட்டுறவு வங்கி பெற்ற தேதியன்று அந்தத் தேதியிலிருந்தும், சேர்க்கப்பட்டதாகக் கருதப்பட வேண்டும்.

ஆனால், இந்த உட்பிரிவின்கீழ் சேர்க்கப்பட்டதாகக் கருதப்படும் எந்த உறுப்பினரும், பதிவாளரின் அங்கீகாரத்தைப் பெற்று, உறுப்பினர் பதவியிலிருந்து குழுவால் விலக்கப்படலாம் என்ற நிபந்தனைக்கும் மற்றும் அத்தகைய அங்கீகாரத்தைப் பெறுவதற்கான யாதொரு விண்ணப்பமும், அத்தகைய உறுப்பினர் சேர்க்கப்பட்டதாகக் கருதப்படுகிற தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் செய்யப்பட வேண்டும் என்ற நிபந்தனைக்குமுட்பட்டும்.

73-இ. சொத்துகளையும் பொறுப்புகளையும் சட்ட உரிமை செய்தல்

திருத்தச் சட்டத்தின் தேதியன்றும், அத் தேதியிலிருந்தும் தற்போதுள்ள தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின், வரையறுக்கப்பட்டது (பதிவு எண் 18), எல்லா சொத்துகளும், பொறுப்புகளும் தற்போதுள்ள கூட்டுறவு மத்திய வங்கிகளின் எல்லா சொத்துகளும், பொறுப்புகளும் முறையே மாநிலக் கூட்டுறவு வங்கிக்கும், சமமான மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும் மாற்றப்பட்டதாகவும் அவை வசம் சட்ட உரிமையுள்ளவையாகவும் இருக்கவேண்டும்.

**73-ஈ. மாநிலக் கூட்டுறவு வங்கியாலும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும வாங்கப்பட்ட கடன்களின் அசலையும முன்பணங்களின் அசலையும் அவைகளின் பேரில் வட்டியையும் அரசினர் உத்தரவாதமளித்தல்**

1. அரசினரால் நிருணயிக்கப்படும் அதிக தொகைக்குட்பட்டும், அவர்களால் தகுதியென்று கருதி விதிக்கப்படும் நிபந்தனைகளுக்குட்பட்டும், அரசினர், மாநிலக் கூட்டுறவு வங்கியும், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் ஒவ்வொன்றும் வாங்கிய யாதொரு கடன் அல்லது முன்பணத்தின் அசலைத் திருப்பிச் செலுத்துவதையும், அவற்றின் மீது வட்டியைச் செலுத்துவதையும், உத்தரவாதமளிக்கலாம்.

சட்ட அவைகள் இரண்டினையும் கலந்தாலோசித்த பிறகு, அரசினர், உட்பிரிவு (1)-ன்கீழ் தங்களால் நிருணயிக்கப்பட்ட உத்தரவாதம் பெறுமல் தொகையை அதிகப்படுத்தலாம்.

**73-உ. மத்தியக் கூட்டுறவு வங்கிகள் இதர சங்கங்கள் மூலமாக செயற்படலாம்**

யாதொரு மத்தியக் கூட்டுறவு வங்கியும், தன் விவகார எல்லைக்குள் யாதொரு குறிப்பிட்ட எல்லையில், யாதொரு கூட்டுறவு வங்கி உட்பட யாதொரு இதர பதிவான சங்கத்தின் மூலமாக, பொது அல்லது தனிப்பட்ட உத்தரவின்மூலம், பதிவாளரால் குறிக்கப்படும் நிபந்தனைகளுக்குட்பட்டு செயற்படலாம்.

**73-ஊ. விதிகள் செய்வதற்கு அதிகாரம்**

1. இந்த அத்தியாயத்தின் செயல்களை நிறைவேற்றுவதற்கு அரசினர் விதிகளைச் செய்யலாம்.

2. குறிப்பாகவும் மேற்சொன்ன அதிகாரத்திற்குப் பொதுவாக முரண்படாமலும்அத்தகைய விதிகள் கீழ்க்கண்டவைகளுக்காக ஏற்பாடு செய்யலாம்.

(i) நிருணயிக்கப்படும் இந்த அத்தியாயத்தால் வெளிப்படையாகத் தேவைப்படும் அல்லது அனுமதிக்கப்படும் எல்லாப் பொருள்களும்.

(ii) சபைக்கும், குழுவிற்கும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையும் ஒவ்வொரு பதிவான சங்கத்திலிருந்து அல்லது சங்கங்களின் வகையிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையும்.

(iii) சபைக்கும் குழுவிற்கும் நியமனம் செய்யப்படவேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையும் அவர்களின் தகுதிகளும்.

(iv) சபை அல்லது குழுவின் உறுப்பினர்களின் பதவிக் காலம்.

(v) சபைக்கும் குழுவிற்கும் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தலும் ; நியமனம் செய்தலும், மற்றும் அவர்களை நீக்குதலும்.

(vi) சபைக்கும் குழுவிற்கும் அலுவலர்களைத் தேர்ந்தெடுத்தலும் மற்றும் அவர்களின் பதவிக் காலமும்.

(vii) குழுவின் செயற் குழுவை அமைத்தலும் குழுவின் வேலைகளை அந்தச் செயற்குழுவிற்கு அளித்தலும்.

**73-எ. இந்த அத்தியாயத்தின் சரத்துகள் இதர சரத்துகளைப் புறக்கணிக்கும்**

இந்த அத்தியாயத்தின் சரத்துகள், அவற்றிற்கு முரண்பாடாக இந்தச் சட்டத்தின் யாதொரு சரத்திலும் அல்லது யாதொரு விதியிலும் அல்லது உப-விதியிலும் (யாதொரு பதிவான சங்கத்தின் உப-விதி உட்பட) அல்லது தற்போது அமலிலிருக்கும் யாதொரு இதர சட்டத்திலும் எந்தச் சரத்து அடங்கியிருந்த போதிலும், அமல்படுத்தப்பட வேண்டும்.

3. 1961ஆம் வருடத்திய 63ஆம் தமிழ்நாடு சட்டத்தின் பிரிவு 96-ன் திருத்தம்: முக்கியச் சட்டத்தின் பிரிவு 96-ன் பிரிவு (2)-ன் பகுதி (அ)-ல் பிரிவு 17-ன் உட்பிரிவு (2)-ன் பகுதி (அ)-க்கு விலக்குக்கூறின்கீழ் ஓர் உறுப்பினர் நீக்கப்பட்டதை அங்கீகரித்தல் அல்லது அங்கீரிக்க மறுத்தல், என்ற வாக்கியத்திற்குப் பிறகு பிரிவு 73(ஆ)-ன் உட்பிரிவு (4) அல்லது உட்பிரிவு (5)-க்கு விலக்குக்கூறு என்ற வாக்கியம் புகுத்தப்பட வேண்டும்.

**4. நீக்கல்**

தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (திருத்தம்) அவசரச் சட்டம்; 1970, (1970ஆம் வருடத்திய 4ஆம் தமிழ்நாடு அவசரச் சட்டம்) இதன் மூலம் நீக்கப்படுகிறது.

**தமிழ்நாடு சட்ட அவையின் கீழ்க்கண்ட சட்டம் 1970 டிசம்பர் 23ஆம் தேதியன்று ஆளுநரின் இசைவு பெற்றது**

1970ஆம் வருடத்திய 32ஆம் சட்டம்.

**1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான ஒரு சட்டம்**

**1. தலைப்புச் சுருக்கம்**

· இந்தச் சட்டம் தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (மூன்றாவது திருத்தம்) சட்டம் 1970 என்று அழைக்கப்படலாம்.

**2. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தின் IX-ஆ என்ற புதிய அத்தியாயத்தைப் புகுத்தல்**

1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் (1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டம்) (இனி இதன்கீழ் முக்கியச் சட்டமாக குறிக்கப்படும்) IX-அ அத்தியாயத்திற்குப் பிறகு கீழ்க்கண்ட அத்தியாயம் புகுத்தப்பட வேண்டும். அதாவது :

**அத்தியாயம் IX-அ**

**தலைமைச் சங்கங்கள்**

73-ஏ. சொற்பொருள் விளக்கங்கள்: இந்த அத்தியாயத்தில் சூழ்நிலை வேறுவிதமாகக் கோரினால்தவிர

(அ) 'தலைமைச் சங்கம்' என்றால், தமிழ்நாடு மாநிலம் முழுவதற்கும் வியாபிக்கிற விவகார எல்லையுடைய ஒரு பதிவான சங்கம் என்று பொருள்படும்; மற்றும்

(i) அத்தகைய சங்கத்தின் முக்கிய நோக்கம், தன்னுடன் இணைக்கப்பட்ட இதர பதிவான சங்கங்களின் முக்கிய நோக்கங்களை வளர்ப்பதும், அத்தகைய சங்கங்களின் செயல்களுக்கான வசதிகளை ஏற்பாடு செய்வதுமாக இருக்கும்; அல்லது

(ii) அத்தகைய சங்கம் ஒரு தலைமைச் சங்கமாக அறிக்கையின் மூலம் அரசினரால் வகை செய்யப்பட்டிருக்கும்.

ஆனால், அத்தகைய சங்கத்தில் தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கியும், வரையறுக்கப்பட்டது; தமிழ் நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியும், வரையறுக்கப்பட்டது, உள்ளடங்கியிருக்கா.

(ஆ) ஒரு தலைமைச் சங்கத்திற்குத் தொடர்பான 'சபை' என்றால் அதன் விவகாரங்களின் நிருவாகம் அளிக்கப்பட்டிருக்கிற இயக்குநர்கள் சபை அல்லது நிருவாகச் சபை அல்லது நிருவாகக் குழு அல்லது ஆட்சிக் குழு என்று பொருள்படும்,

(இ) ஒரு தலைமைச் சங்கத்தைக் குறித்து 'அறிக்கை செய்யப் பட்ட தேதி' என்றால் பிரிவு 73ன்-கீழ் அத்தகைய சங்கத்தைக் குறித்து வெளியிடப்பட்ட ஓர் அறிக்கையில் குறிப்பிடப்படும் தேதி என்று பொருள்படும்

**73-ஐ தலைமைச் சங்கங்களுக்கு இந்த அத்தியாயத்தின் பிரயோகம்**

அறிக்கையின் மூலம் இந்த அத்தியாயத்தின் சரத்துகளை யாதொரு தலைமைச் சங்கத்திற்கும் அத்தகைய அறிக்கையில் குறிப்பிடப்பட்ட தேதியிலிருந்து அரசினர் பொருந்தச் செய்யலாம்

**73-ஒ. ஒரு தலைமைச் சங்கத்தின் சபை**

சபை கீழ்க்கண்டவர்களைக் கொண்டதாக இருக்கவேண்டும்.

(i) நிருணயிக்கப்படும் எண்ணிக்கையுள்ள தேர்ந்தெடுக்கப் பட வேண்டிய உறுப்பினர்களும் நியமனம் செய்யப்பட வேண்டிய உறுப்பினர்களும்,

(ii) உட்-பிரிவு (2)-ன் கீழ் மேலாண்மை இயக்குநர், ஒருவர் அமர்த்தப்பட்டால், அவரும்,

(iii) விதிகளில் குறிப்பிடப்படும் ஓர் அலுவல்வழி உறுப்பி-னரும் ஆனால் நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை சபை உறுப்பினர்களின் மொத்த எண்ணிக் கையில் ஐந்தில் ஒரு பங்குக்கு மேற்படாமல் இருக்க வேண்டும் என்ற நிபந்தனைக்கும் மற்றும்.

அறிக்கை செய்யப்பட்ட தேதியன்றிருந்த சபையின் தற்-போதைய உறுப்பினர்கள் பிரிவு 28-ன் சரத்துகளுக்குட்பட்டு தங்கள்தற்போதைய பதவிக்காலம் முடிவடையும் வரை அறிக்கை தேதிக்குப் பிறகு முதன் முதலாக அமைக்கப்பட்ட சபையின் உறுப்பினர்களாகத் தொடர்ந்திருக்க வேண்டும் என்ற நிபந்-தனைக்கும், மற்றும்,

1. அறிக்கை தேதிக்குப் பிறகு முதன் முதலாக சபை அமைத்ததன்பேரில், அறிக்கை தேதியன்றிருக்கும் சபையின் அலுவலர்கள் அத்தகைய அலுவலர் பதவியிலிருந்து நின்றுவிட வேண்டும் என்ற நிபந்தனைக்கும் இந்த அத்தியாயத்தின்கீழ் செய்யப்பட்ட விதிகளுக்கிணங்க புதிய அலுவலர்கள் தேர்ந் தெடுக்கப்படவேண்டும் என்ற நிபந்தனைக்குமுட்பட்டு,

2. ஒவ்வொரு தலைமைச் சங்கத்திற்காகவும் நிருணயிக்கப் படும் விதத்தில் ஒரு மேலாண்மை இயக்குநர் அல்லது ஒரு செயல் அலுவலர் அமர்த்தப்படலாம். மேலாண்மை இயக்குநர்

அமர்த்தப்பட்டால் அவர் அந்த அவை உறுப்பினராக இருக்க வேண்டும்.

3. உத்தரவின்மூலம் சபையின் யாதொரு கூட்டங்களுக்கு வருகை தருவதற்கும் சபை. விவகாரங்களில் பங்கெடுத்துக் கொள்வதற்கும் அரசினர் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அரசாங்க அலுவலர்களை அனுப்பலாம். ஆனால், அத்தகைய அலுவலர் அல்லது அலுவலர்களுக்கு வாக்களிக்கும் உரிமை இல்லை.

**73-ஒ. தலைமைச் சங்கங்களில் அங்கத்துவம்**

நிருணயிக்கப்படும் வகையைச் சேர்ந்த ஒவ்வொரு பதிவான சங்கமும், அச் செயலுக்காக ஏதாவது நமூனு நிருணயிக்கப் பட்டிருந்தால் அத்தகைய நமூனுவில் செய்யப்பட்ட விண்ணப் பத்தின்பேரில், தலைமைச் சங்கத்தின் ஓர் உறுப்பினராக அத்தகைய விண்ணப்பத்தைத் தலைமைச் சங்கம் பெற்ற தேதி யன்றும் அத் தேதியிலிருந்தும் சேர்க்கப்பட்டதாகக் கருதப்பட வேண்டும்.

ஆனால், இந்தப் பிரிவின்கீழ் சேர்க்கப்பட்டதாகக் கருதப்படும் யாதொரு உறுப்பினரும், பதிவாளரின் அங்கீகாரத்தைப் பெற்று, சபையால் உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கப்படலாம் என்ற நிபந்தனைக்கும், அத்தகைய அங்கீகாரத்தைப் பெறுவதற்கான யாதொரு விண்ணப்பமும், அத்தகைய உறுப்பினர் சேர்க்கப் பட்டதாகக் கருதப்படும் தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் செய்யப்பட வேண்டும் என்ற நிபந்தனைக்குமுட்பட்டும்,

**73-ஔ. தலைமைச் சங்கங்களால் வாங்கப்பட்ட கடன்களின் அசலையும் முன்பணங்களின் அசலையும் அவற்றின் மீது வட்டியையும் அரசினர் உத்தரவாதமளித்தல்**

1. அரசினரால் நிருணயிக்கப்படும் அதிகத் தொகைக்குட் பட்டும், அவர்களால் தகுதியெனக் கருதப்பட்டு விதிக்கப்படும் நிபந்தனைகளுக்குமுட்பட்டும், அரசினர் யாதொரு தலைமைச் சங்கத்தால் வாங்கப்பட்ட யாதொரு கடன் அல்லது முன் பணத்தின் அசலைத் திருப்பிச் செலுத்துவதையும், அவற்றின் பேரில் வட்டி செலுத்துவதையும் உத்தரவாதமளிக்கலாம்.

2. சட்ட சபைகள் இரண்டினையும் கலந்தாலோசித்த பின்னர், அரசினர் தங்களால் உட்பிரிவு (1)-ன் கீழ் நிருணயிக்கப் பட்ட அதிகத் தொகையை அதிகப்படுத்தலாம்.

73-ஃ. விதிகள் செய்வதற்கு அதிகாரம்

1. இந்த அத்தியாயத்தின் செயல்களை நிறைவேற்றுவதற்கு அரசினர் விதிகளைச் செய்யலாம். மற்றும், வெவ்வேறு தலைமைச் சங்கங்களுக்காக வெவ்வேறு சரத்துகள் விதிகளில் செய்யப் படலாம்.

2. குறிப்பாகவும், மேற்சொன்ன அதிகாரத்திற்குப் பொதுவாக முரண்படாமலும் அத்தகைய விதிகள் கீழ்க்கண்டவை களுக்காக ஏற்பாடு செய்யலாம்.

(i) நிருணயிக்கப்படும் இந்த அத்தியாயத்தால் வெளிப் படையாகத் தேவைப்படும் அல்லது அனுமதிக்கப்படும் எல்லாப் பொருள்களும்,

(ii) பிரிவ் 73-K-ன் செயலுக்காகப் பதிவான சங்கங்களை வகைப்படுத்துதலும்,

(iii) சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர் களின் எண்ணிக்கையும், ஒவ்வொரு மாவட்டத்தி லிருந்து அல்லது ஒவ்வொரு பதிவான சங்கம் அல்லது சங்கங்களின் வகையிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையும்,

(iv) சபைக்கு நியமனம் செய்யப்பட வேண்டிய உறுப்பினர் களின் எண்ணிக்கையும், அவர்களுடைய தகுதிகளும்,

(v) சபை உறுப்பினர்களின் பதவிக் காலமும், அவர்களை நீக்குதலும்,

(vi) சபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதைக் குறித்தும் நியமனம் செய்வதைக் குறித்துமான எல்லாப் பொருள்களும், அத்தகைய தேர்தலுக்காக வாக்காளர் களும் அவர்களுடைய தகுதிகளும், சபையில் இதர விதங்களில் பிரதிநிதித்துவமில்லாத தனிப்பட்ட நலமி களுக்காகப் பிரதிநிதித்துவமும்,

(vii) சபைக்கு அலுவலர்களைத் தேர்ந்தெடுத்தலும், அவர் களின் பதவிக் காலமும், அவர்களை நீக்குதலும்,

(viii) சபையின் செயற்குழுவை அமைத்தலும், செயற் குழுவிற்குச் சபையின் வேலைகளை அளித்தலும்,

(ix) நிருவாக இயக்குநர் அல்லது செயல் அலுவலரை அமர்த்தும் முறையும், அவர்களின் தகுதிகளும், அதிகாரங்களும், கடமைகளும், அவர்களின் அதிகாரங் களையும் கடமைகளையும் அளித்தலும்.

**73—N. இந்த அத்தியாயத்தின் சரத்துகள் இதர சரத்துகளைப் புறக்கணிக்கும்**

*1. இந்த அத்தியாயத்தின் சரத்துகள், அவற்றிற்கு முரண்பாடாக இந்தச் சட்டத்தின் வேறு யாதொரு சரத்திலும் அல்லது யாதொரு விதியிலும் அல்லது உப-விதியிலும் (யாதொரு பதிவான சங்கத்தின் உப-விதி உட்பட) அல்லது தற்போது அமலிலிருக்கும் யாதொரு இதர சட்டத்திலும் எந்தச் சரத்து அடங்கியிருந்தபோதிலும் அமல்படுத்தப்பட வேண்டும்.*

*2. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தின் பிரிவு 96-ன் திருத்தம் : முக்கியச் சட்டத்தின் பிரிவு 96-ன் உட்பிரிவு (2)-ன் பகுதி (அ)-ல் 'பிரிவு 17–ன் உட்பிரிவு (2)-ன் பகுதி (அ)-ன் விலக்குக் கூறின்கீழ் ஓர் உறுப்பினர் நீக்கப்பட்டதை அங்கீகரித்தல் அல்லது அங்கீகரிக்க மறுத்தல், பிரிவு 73 (ஆ)-ன் உட்பிரிவு (4)-க்கு அல்லது உட்பிரிவு (5)-க்கு விலக்குக் கூறு' என்ற வாக்கியத்திற்குப் பிறகு 'பிரிவு 73—K-க்கு விலக்குக் கூறு' என்ற வாக்கியம் சேர்க்கப்படவேண்டும்.*

**தமிழ்நாடு சட்ட சபையின் கீழ்க்கண்ட சட்டம் 1971 டிசம்பர் 23ஆம் தேதியன்று ஆளுநரின் இசைவு பெற்றது**

**1971ஆம் வருடத்திய 39ஆம் சட்டம்**

**1971ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான ஒரு சட்டம்**

**1. தலைப்புச் சுருக்கம்**

*இந்தச் சட்டம் தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (இரண்டாவது திருத்தம்) சட்டம், 1971 என்று அழைக்கப்படலாம்.*

**2. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தின் 62ஆம் பிரிவின் திருத்தம்**

*1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 62ஆம் பிரிவில் (1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டம்), (இனி இதன்கீழ் முக்கியச் சட்டமாகக் குறிக்கப்படும்) பகுதி முதலில் '25 சதவிகிதத்திற்குக் குறையாமல்' என்ற சொற்களுக்குப் பதிலாக '20 சதவிகிதத்திற்குக் குறையாமல்*

ஆனால் *30* சதவிகிதத்திற்கு மேற்படாமல், என்ற சொற்கள் சேர்க்கப்படவேண்டும்.

**3. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தில் IX—இ புதிய அத்தியாயத்தைப் புகுத்தல்**

முக்கியச் சட்டத்தின் IX-ஆ அத்தியாயத்திற்குப் பிறகு, கீழ்க்கண்ட அத்தியாயம் சேர்க்கப்படவேண்டும், அதாவது :

## அத்தியாயம் IX-இ

## கூட்டுறவு ஒன்றியங்கள்

**73-O. சொற்பொருள் விளக்கங்கள்**

இந்த அத்தியாயத்தில் சில சூழ்நிலைகள் வேறுவிதமாகக் கோரினால் தவிர

(அ) 'கூட்டுறவு ஒன்றியம்' என்றால், கூட்டுறவுக் கல்வியையும், கூட்டுறவுப் பிரச்சாரத்தையும் அல்லது கூட்டுறவுப் பயிற்சியையும் அல்லது சேமிப்பைத் திரட்டுவதையும் முக்கிய நோக்கமாகக் கொண்ட ஒரு சங்கம் என்று பொருள்படும்.

(ஆ) 'மாவட்டக் கூட்டுறவு ஒன்றியம்' என்றால், இந்தச் சட்டத்தின்கீழ் ஒரு மாவட்டக் கூட்டுறவு ஒன்றியமாகப் பதிவு செய்யப்பட்ட ஒரு கூட்டுறவு ஒன்றியம் என்று பொருள்படும்.

(இ) 'தாலுக்காக் கூட்டுறவு ஒன்றியம்' என்றால், இந்தச் சட்டத்தின்கீழ் ஒரு தாலுக்காக் கூட்டுறவு ஒன்றியமாகப் பதிவு செய்யப்பட்ட ஒரு கூட்டுறவு ஒன்றியம் என்று பொருள்படும்.

(ஈ) 'தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம்' என்றால், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம் வரையறுக்கப்பட்டது என்று பொருள் படும்.

**73-P. கூட்டுறவு ஒன்றியங்கள்**

1. தமிழ்நாடு மாநிலத்திற்காக ஒரு தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியமும், தேவையெனக் கருதப்படும் மாவட்டக் கூட்டுறவு ஒன்றியங்களும், தாலுக்காக் கூட்டுறவு ஒன்றியங்களும் இருக்க வேண்டும்.

2. *1971*ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (இரண்டாவது திருத்தம்) சட்டம் (இனி இதன்கீழ் இந்த அத்தியாயத்தில் திருத்தச் சட்டமாகக் குறிக்கப்படும்) தொடக்கத்

தேதியன்றும், அத் தேதியிலிருந்தும், தற்போதுள்ள தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், வரையறுக்கப்பட்டது (பதிவு எண் X/387) தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியமாகக் கருதப்படவும் வேண்டும்; இருக்கவும் வேண்டும்.

(3) தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியம், அத்தியாம் IX-ன்செயல்களுக்காக ஒரு தலைமைச் சங்கமாகக் கருதப்பட வேண்டும்.

**73-Q. பதிவான சங்கங்கள் கூட்டுறவு ஒன்றியங்களின் உறுப்பினர்களாக இருக்கவேண்டும்**

1. தமிழ்நாடு மாநிலத்தில் ஒவ்வொரு பதிவான சங்கமும், திருத்தச் சட்டத்தின் தொடக்கத் தேதியன்றும் அத் தேதியிலிருந்தும் அல்லது அதன் (சங்கத்தின்) பதிவுத் தேதியன்றும் அத் தேதியிலிருந்தும், எந்தத் தேதி பின்னரோ அத் தேதியின் சூழ்நிலைக்கேற்ப, தாலுக்காக் கூட்டுறவு ஒன்றியம் அல்லது மாவட்டக் கூட்டுறவு ஒன்றியம் அல்லது தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் உறுப்பினராகக் கருதப்பட வேண்டும். ஆனால், அத்தகைய யாதொரு ஒன்றியத்தின் உறுப்பினராவதற்கு அத்தகைய ஒன்றியத்தின் உப-விதிகளின்படி அத்தகைய சங்கம் தகுதியுடையதாக இருக்க வேண்டும்.

2. ஒவ்வொரு பதிவான சங்கமும், உட்பிரிவு (1)-ன்கீழ் தான் ஓர் உறுப்பினராக இருப்பதாகக் கருதப்படும் கூட்டுறவு ஒன்றியத்திற்கு, அத்தகைய ஒன்றியத்தின் உப-விதிகளில் ஏற்பாடு செய்யப்படும் வீதத்தில் ஒரு வருடாந்தரச் சந்தா செலுத்தவேண்டும்.

**73-R சொத்துகளையும் பொறுப்புகளையும் சட்ட உரிமை செய்தல்**

திருத்தச் சட்டத்தின் தொடக்கத் தேதியன்றும் அத் தேதியிலிருந்தும் தற்போதுள்ள தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின், வரையறுக்கப்பட்ட (பதிவு எண் X/387), எல்லா சொத்துகளும் பொறுப்புகளும் தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்திற்கு மாற்றப்பட்டதாகவும் அதன் வசம் சட்ட உரிமையுள்ளதாகவும் இருக்க வேண்டும்.

**73-S. இந்த அத்தியாத்தின் சரத்துகள் இதர சரத்துகளைப் புறக்கணிக்கும்**

இந்த அத்தியாயத்தின் சரத்துகள் அவற்றிற்கு முரண்பாடாக இந்தச் சட்டத்தின் வேறு யாதொரு சரத்திலும் அல்லது யாதொரு விதியிலும், யாதொரு உப-விதியிலும், யாதொரு பதிவான சங்கத்தின் உப-விதி உட்பட அல்லது தற்போது அமலில் இருக்கும் யாதொரு இதர சட்டத்திலும் எந்தச் சரத்து அடங்கியிருந்த போதிலும் அமல்படுத்தப்பட வேண்டும்.

**4. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தின் 96ஆம் பிரிவின் திருத்தம்**

(i) முக்கியச் சட்டத்தின் 96ஆம் பிரிவில் (1) உட்பிரிவு (2)-ன் பகுதி (அ)-ல், 'பிரிவு 28-அ ; அல்லது பிரிவு 72-ன் உட்பிரிவு (1) அல்லது பிரிவு 85-ன்கீழ் உத்தரவு என்ற வாக்கியத்திற்குப் பதிலாக 'பிரிவு 28–அ, அல்லது பிரிவு 72-ன் உட்பிரிவு (1), பிரிவு 85 அல்லது பிரிவு 119 (அ)–ன் கீழ் உத்தரவு' என்ற வாக்கியம் சேர்க்கப் பட வேண்டும்.

(ii) உட் பிரிவு (5)-ல் 'முடிவு அல்லது உத்தரவு' என்ற சொற் களுக்குப் பதிலாக 'பிரிவுகள் 97, 98-ன் சரத்துகளுக் குட்பட்டு, முடிவு அல்லது உத்தரவு' என்ற சொற்களும் இலக்கங்களும் சேர்க்கப்பட வேண்டும்.

**5. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தின் பிரிவு 111-க்குப் பதிலாகப் புதிய பிரிவைச் சேர்த்தல்**

முக்கியச் சட்டத்தின் பிரிவு 111-க்குப் பதிலாக கீழ்க்கண்ட பிரிவு சேர்க்கப்பட வேண்டும். அதாவது, '111. பதிவான சங்கங்களை விலக்குதல் செய்வதற்கு அதிகாரம்: 110ஆம் பிரிவால் அளிக்கப்பட்ட அதிகாரத்திற்கு முரண்படாமல், பொது அல்லது தனிப்பட்ட உத்தரவின்மூலம், அரசினர் இனி வரப்போகிற தேதியிலிருந்தாவது அல்லது சென்ற காலத் தேதியிலிருந்தாவது,

(அ) யாதொரு பதிவான சங்கத்தையும் இந்தச் சட்டத்தின் யாதொரு சரத்துகளிலிருந்தும் விலக்குதல் செய்ய லாம்.

(ஆ) உத்தரவில் குறிக்கப்படும் மாறுதல்களுடன் சரத்துகள் குறிக்கப்படும் சங்கங்களுக்குப் பொருந்த வேண்டும் என்று கட்டளையிடலாம்.

**6. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தின் பிரிவு 119-ன் திருத்தம்**

முக்கியச் சட்டத்தின் 119ஆம் பிரிவின் உட்பிரிவு (2)-ன் பகுதி (U)-ல், 'காப்பு நிதிகள்' என்ற சொற்களுக்குப் பிறகு 'மற்றும் இதர நிதிகள்' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.

**7. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தில் புதிய பிரிவு 119-ஐச் சேர்த்தல்**

முக்கியச் சட்டத்தின் 119ஆம் பிரிவுக்குப் பிறகு கீழ்க்கண்ட பிரிவு சேர்க்கப்பட வேண்டும். அதாவது :

**119-அ. பொது நலம் முதலியவற்றை முன்னிட்டுக் கட்டளைகளையிடுவதற்குப் பதிவாளரின் அதிகாரம்**

1. பொது நலத்தை முன்னிட்டும் அல்லது அரசினரால் அங்கீகரிக்கப்பட்ட அல்லது மேற்கொள்ளப்பட்ட கூட்டுறவு உற்பத்தித் திட்டங்களையும் இதர அபிவிருத்தித் திட்டங்களையும் சரிவர அமல்படுத்துவதை உறுதிப்படுத்துவதற்காகவும் அல்லது பொதுவாக யாதொரு வகை பதிவான சங்கத்தின் தொழிலின் சரியான நிருவாகத்தை உறுதிப்படுத்துவதற்காகவும் அல்லது யாதொரு பதிவான சங்கத்தின் அலுவலர்கள், உறுப்பினர்கள் அல்லது வைப்புத்தொகை செலுத்தியவர்கள் அல்லது கடனாளிகள் ஆகியவர்களின் நலன்களைப் பாதிக்கும் வகையில் நடத்தப்படுவதைத் தடுப்பதற்காகவும், பொதுவாக பதிவான சங்கங்களின் யாதொரு வகைக்கும் அல்லது குறிப்பாக யாதொரு பதிவான சங்கம் அல்லது பதிவான சங்கங்களுக்கும் கட்டளைகள் வெளியிடுவதற்குத் தேவை என்று பதிவாளர் திருப்தியடைந்தால், இதில், செய்யப்பட்ட விதிகளுக்குட்பட்டு, அவர் உத்தரவின்மூலம் அச்சங்கங்களுக்கு அவ்வப்போது கட்டளைகள் வெளியிடலாம். மற்றும் தொடர்பான பதிவான எல்லாச் சங்கங்களும் அல்லது பதிவான சங்கமும், சூழ்நிலைகளுக்கேற்ப அத்தகைய கட்டளைகளை நிறைவேற்றுவதற்குக் கட்டுப்பாடுடையவை.

2. உத்தரவின் மூலம் உட்பிரிவு (1)-ன் கீழ் வெளியிடப்பட்ட யாதொரு கட்டளைகளைப் பதிவாளர் மாற்றுதல் அல்லது ரத்து செய்யலாம். மற்றும் அத்தகைய கட்டளைகளை மாற்றுதல் அல்லது ரத்து செய்வதில் அவர் தகுதியென்று கருதும் நிபந்தனைகளை விதிக்கலாம்.

**தமிழ் நாடு சட்ட சபையின் கீழ்க்கண்ட சட்டம் 1971 டிசம்பர் 23ஆம் தேதியன்று ஆளுநரின் இசைவைப் பெற்றது**

*(1971ஆம் வருடத்திய 38ஆம் சட்டம்)*

**1. தலைப்புச் சுருக்கம்**

இந்தச் சட்டம் தமிழ் நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (திருத்தச்) சட்டம் 1971 என்று அழைக்கப்படலாம்.

**2. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தின் IX-ஆ அத்தியாயத்தின் தலைப்பின் திருத்தம்**

1961ஆம் வருடத்திய தமிழ் நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் (1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ் நாடு சட்டம்) (இனி இதன்கீழ் முக்கியச் சட்ட வகையைக் குறிக்கப்படும்), IX-ஆ அத்தியாத்தில் 'தலைமைச் சங்கங்கள்' என்ற தலைப்புக்குப் பதிலாக 'தலைமைச் சங்கங்களும் மத்தியச் சங்கங்களும்' என்ற தலைப்பு சேர்க்கப்பட வேண்டும்.

**3. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ் நாடு சட்டத்தில் 73-H பிரிவின் திருத்தம்**

முக்கியச் சட்டத்தின் பிரிவு 73-H-ல் பகுதி (ஆ)-க்குப் பிறகு, கீழ்க்கண்ட பகுதி சேர்க்கப்பட வேண்டும், அதாவது,

(ஆஆ) 'மத்தியச் சங்கம்' என்றால்தமிழ் நாடு மாநிலத்தின் ஒரு பகுதிக்கு வரையறுக்கப்பட்ட விவகார எல்லையுடைய ஒரு பதிவான சங்கம் என்று பொருள்படும்; மற்றும்,

(i) அச் சங்கத்தில் இதர பதிவான சங்கங்கள் உறுப்பினர்களாவதற்குத் தகுதியுள்ளவையாக இருக்கும்.

(ii) அச் சங்கம் ஒரு மத்தியச் சங்கமாக அறிக்கையின் மூலம் அரசினரால் வகைப்படுத்தப்பட்டிருக்கும்.

**4. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ் நாடு சட்டத்தின் IX-ஆ அத்தியாயத்தில் சில வாக்கியங்களை மாற்றுதல்**

முக்கியச் சட்டத்தின் IX-ஆ அத்தியாயத்தில்,

(i) பிரிவு 73-(H)-ன் பகுதி (அ)-ல் தவிர, 'தலைமைச் சங்கம்' மற்றும் 'தலைமைச் சங்கங்கள்' என்ற சொற்கள் எங்கு நிகழ்ந்தாலும் அந்த சொற்களுக்குப் பதிலாக 'தலைமைச் சங்கம் அல்லது மத்தியச் சங்கம்' மற்றும் 'தலைமைச் சங்கங்கள் அல்லது மத்தியச் சங்கங்கள்' என்ற சொற்கள் முறையே சேர்க்கப்பட வேண்டும்.

(ii) விளிம்புத் தலைப்பில் 'தலைமைச் சங்கங்கள்' மற்றும் 'தலைமைச் சங்கம்' என்ற சொற்கள் எங்கே நிகழ்ந்தாலும் அந்த சொற்களுக்குப் பதிலாக, 'தலைமைச் சங்கங்களும் மத்தியச் சங்கங்களும்' மற்றும் 'தலைமைச் சங்கமும் மத்தியச் சங்கமும்' என்ற சொற்கள் முறையே சேர்க்கப்பட வேண்டும்.

தமிழ்நாடு சட்ட சபையின் கீழ்க்கண்ட சட்டம் 1970 டிசம்பர் 19ஆம் தேதியன்று குடியரசுத் தலைவரின் இசைவைப் பெற்றது

(1970ஆம் வருடத்திய 31ஆம் சட்டம்.)

**1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான ஒரு சட்டம்**

'. தலைப்புச் சுருக்கமும் தொடக்கமும்

1. இந்தச் சட்டம் 1970ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (இரண்டாவது திருத்தச்) சட்டம் என்று அழைக்கப்படலாம்.

2. அது 1970 நவம்பர் 10ஆம் தேதியன்று அமலுக்கு வந்ததாகக் கருதப்பட வேண்டும்.

2. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தில் X-அ புதிய அத்தியாயத்தைப் புகுத்துதல்

1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் (1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டம்) (இனி இதன் கீழ் முக்கியச் சட்டமாகக் குறிப்பிடப்படும்) அத்தியாயம்X-க்குப் பிறகு பின்வரும் அத்தியாயம் சேர்க்கப்பட வேண்டும். அதாவது,

அத்தியாயம் X-அ

**நீரேற்றுப் பாசனச் சங்கங்கள்**

84-அ. அத்தியாப் பொருத்தம்

இந்த அத்தியாயம் நீரேற்றுப் பாசனச் சங்கங்களுக்கு மட்டும் பொருந்தும்

84-ஆ. சொற்பொருள் விளக்கங்கள்

இந்த அத்தியாயத்தில் காரணம் வேறுவிதமாகத் கோரினல் தவிர,

1. 'நீரேற்றுப் பாசனச் சங்கம்' என்றால், முக்கியமாக விவசாயச் செயல்களுக்காக நீரேற்றுப் பாசனம் மூலம் நீர் வழங்கலை முக்கிய நோக்கமாகக் கொண்ட ஒரு சங்கம் என்று பொருள்படும்;

2. 'சிறு குடியானவர்களின் நீரேற்றுப் பாசனச் சங்கம்' என்றால், நிருணயிக்கப்படும் நிலப்பரப்பிற்கு மேற்படாத நிலங்

களையுடைய உறுப்பினர்களைக்கொண்ட ஒரு நீரேற்றுப் பாசனச் சங்கம் என்று பொருள்படும்.

84-இ. ஒரு நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் உறுப்பினர்களால் உறுதி மொழி

1. (அ) இந்தச் சட்டத்தில் அல்லது தற்போது அமலில் இருக்கும் யாதொரு இதர சட்டத்தில் அடங்கியுள்ள எதையும் பொருட்படுத்தாமல், ஒரு நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் உறுப்பினராகச் சேருவதற்கு விண்ணப்பம் செய்யும் ஒவ்வொரு நபரும் அத்தகைய விண்ணப்பத்தில் நீரேற்றுப் பாசனச் சங்கத்தால் அவர் விரும்பும் நீர் வழங்குதலுக்கான நிலங்களின் விவரங்களைக் குறிப்பிட்டு, விண்ணப்பத்தில் குறிக்கப்பட்ட நிலங்களை நீரேற்றுப் பாசனச் சங்கத்தால் தன் செயலுக்குத் தொடர்பாக அல்லது தன் செயலை வசதிப்படுத்துவதற்காக வழங்கப்படும் யாதொரு கடனுக்காக ஆதாரமாக அடைமானம் செய்வதற்கு நீரேற்றுப் பாசனச் சங்கத்திற்கு அதிகாரம் அளித்து ஓர் உறுதிமொழிகூட செய்யவேண்டும்.

(ஆ) பகுதி (அ)-வில் குறிக்கப்பட்ட ஓர் உறுதிமொழி எந்த நபரால் செய்யப்பட்டாலும் அத்தகைய நபர் நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் ஓர் உறுப்பினராகச் சேர்க்கப்பட்டாலும் அத்தகைய சங்கம் உறுதிமொழியில் குறிக்கப்பட்ட நிலங்களையும் அல்லது அதன் எந்தப் பாகத்தையும் அத்தகைய சங்கத்திற்குக் கடன் வழங்குகின்ற அரசினருக்கும் எந்த நிலவள வங்கிக்கும் அல்லது வேறு எந்த நிதி நிறுவனத்திற்கும் (இனி இதன் கீழ் இந்தப் பிரிவின் கடனுளராகக் குறிக்கப்படும்) சாதகமாக அடைமானம் செய்வதற்குத் தகுதியுடையதாக இருக்கும். மற்றும் அத்தகைய அடைமானம் உறுதிமொழி செய்த நபர் மீதும் அத்தகைய நிலங்களில் அவருடைய வழி உரிமை பெற்றவர்கள்மீதும் கட்டுப்படுத்துவதாக இருக்கும்.

(இ) அரசினரும், எந்த நிலவள வங்கியும் தவிர யாதொரு நிதி நிறுவனத்திலிருந்து கடன் வாங்கும் யாதொரு நீரேற்றுப் பாசனச் சங்கமும் பதிவாளரின் முன் அங்கீகாரத்தைப் பெற வேண்டும்.

2. உட்பிரிவு (1)-ன் கீழ் செய்யப்பட்ட எந்த உறுதி மொழியும் நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் முன்னதான எழுத்து அனுமதியில்லாமல் எந்த உறுப்பினராலும் மாற்றுதல் அல்லது ரத்து செய்யப்படக் கூடாது. மற்றும் நீரேற்றுப் பாசனச் சங்கம்

கடனுளரின் அங்கீகாரமின்றி அத்தகைய அனுமதியை வழங்கக் கூடாது.

3. (அ) உட்பிரிவு (1)-ன்கீழ் செய்யப்பட்ட உறுதிமொழியில் குறிக்கப்பட்ட எந்த நிலமும் அல்லது அத்தகைய நிலத்தின் எந்தப் பாகமும் அல்லது அத்தகைய நிலத்தில் எந்த உரிமையும் நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் முன்னதான எழுத்து அனுமதியின்றி விற்கப் படக்கூடாது அல்லது வேறு விதமாக மாற்றப்படக் கூடாது. மற்றும் நீரேற்றுப் பாசனச் சங்கத்தால் கடனுளரின் அங்கீகார மின்றி அத்தகைய அனுமதி வழங்கப்படக் கூடாது.

(ஆ) தற்போது அமலிலுள்ள யாதொரு சட்டத்தில் எந்தச் சரத்து அடங்கியிருந்த போதிலும், பகுதி (அ)-க்கு முரண் பாடாகச் செய்யப்பட்ட எந்த நடவடிக்கையும் சட்டத்தில் முற்றிலும் செல்லாதது.

4. உட்பிரிவு (1)-ன்கீழ், செய்யப்பட்ட உறுதிமொழி அல்லது அதன் மாறுபாடு அல்லது அதனை ரத்து செய்தல், நிலங்கள் இருக்கின்ற எல்லையின் மீது அதிகாரம் செலுத்தும் உப-பதிவாள ருக்குப் பதிவு அஞ்சல் மூலம் நீரேற்றுப் பாசனச் சங்கத்தால் அனுப்பப்பட வேண்டும்.

5. உறுதிமொழி அல்லது அதன் மாறுபாடு அல்லது அதனை ரத்து செய்தல் கிடைத்தவுடன் உப-பதிவாளர், தற்போது அமலி லுள்ள யாதொரு சட்டத்தில் எந்தச் சரத்து அடங்கியிருந்த போதிலும், அத்தகைய உறுதிமொழி மாறுபாடு அல்லது ரத்து செய்தலைப் பதிவு செய்து அதன் ஒரு நகலை நீரேற்றுப் பாசனச் சங்கத்திற்கு வழங்க வேண்டும்.

6. உட்பிரிவு (1)-ன்கீழ் செய்யப்பட்ட யாதொரு உறுதி மொழி அல்லது அதன் யாதொரு மாறுபாடு அல்லது அதனை ரத்து செய்தல் உட்பிரிவு (5)-ன்கீழ் பதிவு செய்யப்படவில்லையானல், அது இந்தச் சட்டத்தில் அல்லது தற்போது அமலிலிருக்கும் யாதொரு இதர சட்டத்தில் யாதொரு சரத்து அடங்கியிருந்த போதிலும், சட்டத்தில் முற்றிலும் செல்லாதது.

**84-ஈ. உறுப்பினர் காலம், செலவுகளைப் பங்கிட்டுக் கொள்ளுதல் முதலியவற்றைக் குறித்து ஒப்பந்தம்**

1. இந்தச் சட்டத்தில் அல்லது அமலிலுள்ள யாதொரு வேறு சட்டத்தில் எந்தச் சரத்து அடங்கியிருந்தபோதிலும், ஒரு நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்க்கப்பட்டதன்

பேரில், ஒவ்வொரு நபரும், பிரிவு 84 (இ)-ன் உட்பிரிவு (1)-ன்கீழ் செய்யப்பட்ட உறுதிமொழி ஏதுமிருந்தால் அத்துடன், நீரேற்றுப் பாசனச் சங்கத்துடன் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிட்டு ஓர் ஒப்பந்தத்தை நிறைவேற்ற வேண்டும்.

(i) நீரேற்றுப் பாசனச் சங்கத்தால் நீர் வழங்கப்பட்ட நிலத்தை அல்லது அதன் யாதொரு பாகத்தைச் சொந்தமாக வைத்துக் கொண்டிருக்கும்வரை அவர் அத்தகைய சங்கத்தின் உறுப்பினராகத் தொடர்ந்திருக்க வேண்டும் என்றும்,

(ii) நீர் வழங்குதலை ஏற்பாடு செய்வதற்காக, பதிவாளர் அங்கீகாரத்துடன், அவ்வப்போது குழுவால் முடிவு செய்யப்படும் மூலதனம் செலவினங்களிலும் பேணுதற் செலவுகளிலும் (நிருவாகச் செலவும், தேய்மானமும் உட்பட) தன் பாகத்தைச் செலுத்துவதற்கு அவர் ஒப்புக்கொள்ள வேண்டும் என்றும்,

(iii) மற்றும் நிருணயிக்கப்படும் அத்தகைய இதர செயல்களும்.

2. உட்பிரிவு (1)-ன்கீழ் நிறைவேற்றப்பட்ட ஒப்பந்தம், நிலங்கள் இருக்கின்ற எல்லையின்மீது அதிகாரம் செலுத்தும் சார்-பதிவாளருக்குப் பதிவு அஞ்சல்மூலம் நீரேற்றுப் பாசனச் சங்கத்தால் அனுப்பப்பட வேண்டும்.

3. ஒப்பந்தம் கிடைத்ததன்பேரில், சார்-பதிவாளர் தற்போது இருக்கும் யாதொரு சட்டத்தில் எந்தச் சரத்து அடங்கியிருந்தபோதிலும் அத்தகைய ஒப்பந்தத்தைப் பதிவு செய்து அதன் நகல் ஒன்றை நீரேற்றுப் பாசனச் சங்கத்திற்கு வழங்க வேண்டும்.

4. உட்பிரிவு (3)-ன்கீழ் பதிவு செய்யப்படாத உட்பிரிவு (1)-ன்கீழ் நிறைவேற்றப்பட்ட எந்த ஒப்பந்தமும், இந்தச் சட்டத்தில் அல்லது தற்போது அமலிலிருக்கும் இதர யாதொரு சட்டத்தில் எந்தச் சரத்து அடங்கியிருந்தபோதிலும், சட்டப்படி முற்றிலும் செல்லாதது.

5. நீரேற்றுப் பாசனச் சங்கம், யாதொரு உறுப்பினரால் அல்லது முன்னாள் உறுப்பினரால் அல்லது இறந்துபோன உறுப்பினரால் உட்பிரிவு (1)-ன்கீழ் நிறைவேற்றப்பட்ட ஒப்பந்தத்தின்கீழ் சங்கத்திற்குப் பாக்கியாக உள்ள யாதொரு தொகையையும் அல்லது யாதொரு கணக்கின் காரணமாகச்

சங்கத்திற்குப் பாக்கியாக உள்ள தொகையையும், வசூல் செய்வதற்குத் தகுதியுடையதாக இருக்கும்.

84-உ. உறுப்பினராக இருத்தலிலிருந்து திரும்பப் பெறுவதற்குத் தடை

இந்தச் சட்டத்தில் அல்லது தற்போது அமலிலுள்ள யாதொரு இதர சட்டத்தில் யாதொரு சரத்து அடங்கியிருந்த போதிலும், ஒரு நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் உறுப்பினர், நீரேற்றுப் பாசனச் சங்கத்தால் நீர் வழங்கப்பட்ட நிலத்தை அல்லது அதன் யாதொரு பாகத்தைச் சொந்தமாகத் தொடர்ந்து வைத்திருக்கும் வரைதான் உறுப்பினராக இருத்தலிலிருந்து திரும்பப் பெறுவதற்குத் தகுதியுள்ளவரல்லர். ஆனால், நீரேற்றுப் பாசனச் சங்கம் நிருணயிக்கப்படும் நிபந்தனைகளுக்குமுட்பட்டும், யாதொரு உறுப்பினரையும் திரும்பப் பெறுவதற்கு அனுமதிக்கலாம் என்ற நிபந்தனைக்குமுட்பட்டும்.

84-ஊ. நீர் வழங்குதலை ஒழுங்கு படுத்துதல்

ஒரு நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் குழு, பதிவாளரின் அங்கீகாரத்தைப் பெற்று இதற்கென தன்னால் செய்யப்படும் விதி முறைகளுக்கு இணங்க, சங்கத்தின் பொறிகளிலிருந்து நீர் வழங்குதலை ஒழுங்குபடுத்துவதற்கு உரிமை பெற்றிருக்கும்.

84-எ. நிலம் மாற்றப்பட்டவர்கள், அவர்களின் வாரிசுகள் முதலியவர்களை உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளுதல்: ஒரு நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் ஓர் உறுப்பினர்

(i) பாசனச் சங்கத்தால் நீர் வழங்கப்படும் யாதொரு நிலத்தை அல்லது அதன் பாகத்தை விற்றால் அல்லது இதர வகையில் மாற்றினால்,

(ii) இறந்தால்,

நிலம் மாற்றப்பட்டவர் அல்லது அவர் வாரிசு அல்லது சட்டப்படியான பிரதிநிதி, சூழ்நிலைக்கேற்ப, அத்தகைய சங்கத்தின் உறுப்பினராவதற்குத் தகுதியுள்ளவராக இருந்தால், நிருணயிக்கப்பட்ட நமூனா ஏதாவதிருந்தால் அதில் செய்யப்பட்ட விண்ணப்பத்தின் பேரில், அவர் நீரேற்றுப் பாசனச் சங்கத்தின் உறுப்பினராகக் குழுவால் சேர்த்துக் கொள்ளப்படுவார்.

ஆனால், இந்தப் பிரிவின்கீழ் சேர்த்துக் கொள்ளப்பட்ட யாதொரு உறுப்பினரும் குழுவால் பதிவாளரின் அங்கீகாரத்

துடன் உறுப்பினர் பதவியிலிருந்து நீக்கப்படலாம் என்ற நிபந்தனைக்கும், அத்தகைய அங்கீகாரத்தைப் பெறுவதற்கான யாதொரு விண்ணப்பமும் அத்தகைய உறுப்பினர் சேர்த்துக் கொள்ளப்பட்ட தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் செய்யப்பட வேண்டும் என்ற நிபந்தனைக்குமுட்பட்டும்.

**84-ஏ. சிறு குடியானவர்களின் நீரேற்றுப் பாசனச் சங்கத்திற்காக சலுகைகளும் வசதிகளும்**

அத்தியாயம் VI-ன் சரத்துகளுக்கு முரண்படாமல், ஒரு சிறு குடியானவர்களின் நீரேற்றுப் பாசனச் சங்கம் நிருணயிக்கப்படும் தனிப்பட்ட சலுகைகளுக்கும், வசதிகளுக்கும் தகுதியுடையதாக இருக்கும்.

**3. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ்நாடு சட்டத்தின் 96ஆம் பிரிவின் திருத்தம்:** முக்கியச்சட்டத்தின் பிரிவு 96-ன் உட்பிரிவு(2)-ன் பகுதி (அ)-ல், 'பிரிவு 20-ன் உட்பிரிவு (2)-ன் கீழ் ஓர் உறுப்பினரை விலக்குதலை அங்கீகரித்தல் அல்லது அங்கீகரிக்க மறுத்தல்' என்ற வாக்கியத்திற்குப் பதிலாக 'அல்லது 84-எ பிரிவுக்கு விலக்குக்கூறு, பிரிவு 20-ன் உட்பிரிவு (2)-ன் கீழ் ஓர் உறுப்பினரை விலக்குதலை அங்கீகரித்தல் அல்லது அங்கீகரிக்க மறுத்தல், பிரிவு 84 (இ)-ன் உட்பிரிவு (1)-ன் பகுதி (இ)-ன் கீழ் ஒரு கடனை வாங்குவதற்காக யோசனை, 84-ஆ பிரிவின் உட்பிரிவு (1)-ன் பகுதி (ii-ன்) கீழ் குழுவின் முடிவு, அல்லது 84 (ஊ) பிரிவின்கீழ் விதி முறைகள்' என்ற வாக்கியம் சேர்க்கப்பட வேண்டும்.

**4. 1961ஆம் வருடத்திய 53ஆம் தமிழ் நாடு சட்டத்தின் 102ஆம் பிரிவின் திருத்தம் :** முக்கியச் சட்டத்தின் பிரிவு 102-ன்,

(i) விளிம்புத் தலைப்பில் 'பிரிவு 32, 33 அல்லது 77' என்ற வாக்கியத்திற்குப் பதிலாக 'பிரிவுகள் 32, 33, 77 அல்லது 84-இ' என்ற வாக்கியம் சேர்க்கப்பட வேண்டும் ; மற்றும்,

(ii) 'பிரிவு 77-ன் உட்பிரிவு (3)' என்ற வாக்கியத்திற்குப் பிறகு 'அல்லது பிரிவு 84 (இ)-ன் உட்பிரிவு (3)' என்ற வாக்கியம் சேர்க்கப்பட வேண்டும்.

**5. நீக்குதல் :** இதன்மூலம் தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் (2ஆம் திருத்தம்) அவசரச் சட்டம், 1970 (1970ஆம் வருடத்திய 5ஆம் தமிழ்நாடு அவசரச் சட்டம்) நீக்கப்படுகிறது.

# மேற்கோள் நூல்கள்


1. சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம், 1961. (1961ஆம் வருடத்திய 53ஆம் சென்னை சட்டம்) மற்றும் அதன்கீழ்ச் செய்யப்பட்ட விதிகள் — சென்னை அரசாங்கம் 1966. (சென்னை அரசாங்கத்தின் அதிகாரத்தின்கீழ், அரசாங்க எழுதுபொருள் அச்சுத்துறை இயக்குநரால் அச்சிடப் பெற்றது) (சென்னை அரசாங்கம்—நீதித் துறை).

2. சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் 1932, விதிகளுடனும், முன்தீர்ப்புச் சட்டங்களுடனும், சென்னை நில அடைமான வங்கிகளின் சட்டங்களுடனும் (1939ஆம் வருடத்திய Xஆம் சட்டம்)—திரு. T. நாராயணபிள்ளையால் பதிப்பிக்கப்பட்டுச் சென்னை மாநிலக் கூட்டுறவு ஒன்றியத்தால் வெளியிடப்பட்டது, 1954.

3. கூட்டுறவுச் சட்டமும் கொள்கைகளும்–H. கால்வெர்ட்

4. இந்தியாவில் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டமும், செயல் முறையும் (மத்தியச் சட்டங்களும் மாநிலக் சட்டங்களும்) இரண்டாவது பதிப்பு—1965 (தொகுதிகள் I, II) —L. S. சாஸ்திரி.

5. சென்னைக் கூட்டுறவு நடைமுறை நூல், 1952—தொகுதிகள் I, II—J. C. ரயன் (கூட்டுறவுப் பதிவாளர், சென்னை) அவர்களால் திருத்தித் தொகுக்கப்பட்டது.

6. நில அடைமான வங்கி நடைமுறை நூல்—சென்னை அரசாங்க வெளியீடு 1937.

7. மகாராஷ்டிரமாநிலக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம், 1960—D. A. வித்வான்ச்

8. இந்தியாவில் கூட்டுறவுச் சட்டம் — பேராசிரியர் M. D. வித்வான்ச்

9. சென்னைக் கூட்டுறவுப் பத்திரிகை வெளியீடுகள் - சென்னை மாநிலக் கூட்டுறவு ஒன்றியத்தால் வெளியிடப்பட்டவை —சென்னை.

## அறிக்கைகள்

1. இந்தியாவில் கூட்டுறவு பற்றிய குழுவின் அறிக்கை—சர் E. D. மாக்லகன், 1915.

2. சென்னையில் கூட்டுறவு பற்றிய குழுவின் அறிக்கை —டவுன்சன்ட், 1928.

3. சென்னையில் கூட்டுறவு பற்றிய குழுவின் அறிக்கை 1939-40—சர். டி. விஜயராகவாச்சாரி.

4. இந்திய அரசாங்கத்தால் அமைக்கப்பட்ட கூட்டுறவுத் திட்டக் குழுவின் அறிக்கை-1951—R. G. சராய்யா.

5. அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை-தொகுதி II - பொது அறிக்கை 1954—கோர்வு வாலா.

6. சென்னையில் கூட்டுறவு பற்றிய குழுவின் அறிக்கை 1955-56—T. M. நாராயணசாமிபிள்ளை.

7. இந்திய அரசாங்கத்தால் அமைக்கப்பட்ட கூட்டுறவுச் சட்டத்தைப்பற்றிய குழுவின்அறிக்கை-1957—(தொகுதிகள் I, II).

8. இந்திய அரசாங்கத்தால் அமைக்கப்பட்ட கூட்டுறவுக் கடன் பற்றிய குழுவின் அறிக்கை-1960—V. L. மேத்தா.

9. தமிழ்நாட்டில் கூட்டுறவு பற்றிய குழுவியின் அறிக்கை-1969-(பாகங்கள் I, II, IIIம்)—K. சந்தானம்.

10. தமிழ்நாடு மாநிலத்தில் 30-6-69 முடிவடைந்த கூட்டுறவு ஆண்டிற்கான கூட்டுறவுச் சங்கங்களின் செயல்பாட்டின் மீது அறிக்கை—கூட்டுறவுப் பதிவாளர், சென்னை.

11. கூட்டுறவுச் சட்டமும் செயல்முறையும் என்பது பற்றிய கருத்தரங்கின் அறிக்கை-ஜுன் 1971—வைகுந்த மேத்தா நேஷனல் இன்ஸ்டிடியூட் ஆப் கோவாபரேடிவ் மானேஜ்மண்ட், வெளியீடு பூனா-16.

# கலைச்சொற்கள்

(ஆங்கிலம் - தமிழ்)

A

Act — சட்டம்
Additional Registrar — இணைப் பதிவாளர்
Address — முகவரி
Admission — சேர்த்துக் கொள்ளுதல்
Admission Book — நுழைவு ஏடு
Administration — நிருவாகம்
Adult — வயது வந்தவர்
Advance — முன்பணம்
Agent — முவகர்
Agreements — ஒப்பந்தங்கள்
Agricultural Banks — விவசாய வங்கிகள்
Agricultural Credit Stabilisation Fund — விவசாயக் கடன் நிலைபேறுக்க நிதி
Agricultural Improvement — விவசாய வளர்ச்சி
All-India Rural Credit Survey — அகில இந்தியக் கிராமக் கடன் விசாரணை
Amalgamation of Societies — சங்கங்களை இணைத்தல்
Amendments to by-laws — உப-விதிகளுக்குத் திருத்தங்கள்
Annual Statement — வருடாந்தர விவரப் பட்டியல்
Appeal — மேல்முறையீடு
Appellant — மேல்முறையீடு செய்பவர்
Appendix — இணைப்பு, பிற்சேர்க்கை
Apex Society — தலைமைச் சங்கம்
Arbitrator — நடுவர்
Arbitration — இசைவுத் தீர்ப்பு முறை
Artisans — கைவினைஞர்கள்

Assent — அங்கீகாரம், இசைவு
Assets — சொத்துகள்
Assistant Secretary — உதவிச் செயலாளர்
Associate Member — துணைஞர் உறுப்பினர்
Attachement of Property — சொத்துப் பற்றுகை
Audit — தணிக்கை
Audit Certificate — தணிக்கைச் சான்று
Audit Clarssification — தணிக்கைப் பாகுபாடு
Audit Fee — தணிக்கைக் கட்டணம்
Audit-Government — பதிவாளரால் அல்லது அவரால் அதிகாரம் அளிக்கப்பட்ட நபரால் மட்டும் செய்யப்பட்ட தணிக்கை.
Audit Memorandum — தணிக்கைக் குறிப்பு
Audit-Private — சாசனக் கணக்கர்களால் செய்யப்பட்ட தணிக்கை
Audit-State Controlled — அரசாங்கத்தால் கட்டுப்படுத்தப் பட்ட தணிக்கை
Auditor — தணிக்கையாளர்
Award — இசைவுத் தீர்ப்பு

B

Bad Debts — வராக் கடன்கள்
Bad Debt Reserve — வராக் கடன் காப்பு இருப்பு
Balance Sheet – சொத்துப் பொறுப்புப் பட்டியல் இருப்பு நிலைக் குறிப்பு, ஐந்தொகைக் குறிப்பு
Ballot — மறைவான வாக்களிப்பு
Bank — வங்கி
Bar — தடை
Bar of Jurisdiction of Civil Courts — சிவில் நீதிமன்றங்களின் அதிகாரத் தடை
Barrowing Limit — கடன் வாங்கும் வரம்பு
Batta — பிரயாணப் படி
Better Business — மேலான தொழில் முறை
Better Farming — மேலான வேளாண்மை
Better Living — மேலான வாழ்க்கை
Block Development Officer — வட்டார வளர்ச்சி அலுவலர்
Block Level — வட்டார மட்டம்

Board of Directors — இயக்குநர்கள்-அவை
Board of Management — நிருவாக அவை
Body Corporate — கூட்டுறவு
Bonds, Govt. of India — இந்திய அரசாங்கத்தின் வருமானத்தின் பேரில், பேரரசு நாடாளுமன்றத்தால் சாற்றப்பட்ட கடன் பத்திரங்கள்
Bonus — மேலூதியம்
Bonus Equalisation Fund — மேலூதியம் சமப்படுத்தும் நிதி
Bonus on Production — உற்பத்தியின்பேரில் மேலூதியம்
Borrowing — கடன் வாங்குதல்
Budget — வரவு செலவுத் திட்டம்
Builldling Fund — கட்டட நிதி
Business — தொழில்
Business Losses Reserve — வியாபார நட்டக் காப்புஇருப்பு
By-Laws — உப-விதிகள்

C

Capitalism — முதலாளித்துவம்
Capitalist — ஊக வணிகர்-முதலாளி
Capitalist Economy — முதலாளித்துவப் பொருளாதார அமைப்பு
Cash — ரொக்கம்
Cash Balance — ரொக்கக் கையிருப்பு
Cash Book — ரொக்க ஏடு
Cash Credit — ரொக்கக் கடன்
Cattle Mortality Fund — கால்நடை மரிப்பு நிதி
Casting Vote — அறுதி வாக்கு
Casual Vacancy in the Committee — நிருவாகக் குழுவில் ஏற்படும் தற்செயலான காலி இடம்
Central Bank, District Co-operative Bank — மத்திய வங்கி-மாவட்டக் கூட்டுறவு வங்கி
Central Society — மத்தியச் சங்கம்
Certified Copy — சான்றிட்ட நகல்
Chairman — பெருந்தலைவர்
Chairman, TamiInadu Housing Board — தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்தின் தலைவர்
Charge — பற்றுப் பொறுப்பு
Change of Liability — பொறுப்பு வகை மாற்றம், பொறுப்புவகையை மாற்றுதல்

Charted Accountant — சாசனக் கணக்கர்
Chief Audit Officer — தலைமைத் தணிக்கை அலுவலர்
Chief Promoters of a Society — ஒரு சங்கத்தின் தலைமைத் தோற்றுவிப்பவர்கள்
Circle Deputy Registrar — வட்டத் துணைப் பதிவாளர்
Citizen — குடிமகன்
Claim — கோருரிமை
Classification of Societies — சங்கங்களை வகைப்படுத்துதல்
Clause — பகுதி
Cognisable Offence — பிடியாணை வேண்டாக் குற்றம்
Collateral Security — துணை ஈடு
Committee — குழு, நிருவாகக் குழு
Committee on Co-operative Law — இந்தியக் கூட்டுறவுச் சட்டக் குழு
Committee Member — நிருவாகக் குழு உறுப்பினர்
Common Good Fund — பொது நல நிதி
Common Seal — பொதுவான முத்திரை
Communism — பொதுவுடைமையை அடிப்படையாகக் கொண்ட சமுதாயம்
Communist — பொதுவுடைமையர்
Compensation —நிறையீட்டுத் தொகை, இழப்பீட்டுத் தொகை, இழப்பீடு
Compromise — ஒத்திசைவு
Concession — சலுகை
Concurrent Audit — உடன்தணிக்கை
Conditional Attachment of Properties Before Decree —தீர்ப்பாணை பிறப்பிப்பதற்கு முன் சொத்துகளை நிபந்தனைக் குட்பட்ட ஜப்தி செய்தல்
Consumers Co-operative Society — நுகர்வோர் கூட்டுறவுச் சங்கம்
Contribution — விகிதத் தொகை
Contributory Provident Fund — வழங்கல் வருங்காலச் சேமிப்பு நிதி
Contribution Order — விகிதத் தொகை உத்தரவு-உதவித் தொகை உத்தரவு
Conversion — மாற்றம் செய்தல்
Co-operation — கூட்டுறவு
Co-operators — கூட்டுறவாளர்கள்

Co-operative Character — கூட்டுறவுத் தன்மை
Collective Farming Co-operatives — மொத்த விவசாயக் கூட்டுறவுப் பண்ணைகள்
Co-operative Development Fund — கூட்டுறவு வளர்ச்சி நிதி
Co-operative Education Fund — கூட்டுறவுக் கல்வி நிதி
Co-operative Legislation — கூட்டுறவுச் சட்டம்
Co-operative Land Development Bank — கூட்டுறவு நில வள வங்கி
Co-operative Manual — கூட்டுறவு நடைமுறைக் கையேடு
Co-operative Organisation — கூட்டுறவு நிறுவனம்
Co-operative Policy — கூட்டுறவுக் கொள்கை, கூட்டுறவு இயக்கு நீதி
Co-operative Prineiples, Basic — அடிப்படைக் கூட்டுறவுக் கொள்கைகள்
Co-operative Sub-Registrar — கூட்டுறவு உதவிப் பதிவாளர், கூட்டுறவுச் சார்புப் பதிவாளர்
Co-operative Thought-Evolution of — கூட்டுறவுக் கோட்பாட்டின் படிப்படியான மலர்ச்சி
Co-operative Training Institute — கூட்டுறவுப் பயிற்சி நிலையம்
Co-operative Year — கூட்டுறவு ஆண்டு
Co-operative Movement — கூட்டுறவு இயக்கம்
Co-option — சேர்த்துக் கொள்ளுதல்
Corporate Existence — தன் ஆட்சி உரிமை
Creditor — கடனுளர்
Credit Guarantee Corporation — கடன் உத்தரவாத நிறுவனம்

## D

Debenture — கடனீட்டுப் பத்திரம்
Debenture-Holder — கடனீட்டுப் பத்திரத்தை உடையவர்
Decesed Member, Estate of — மரணமடைந்த உறுப்பினரின் சொத்துகள்
Depreciation Fund — தேய்மான நிதி

Decentralisation of Powers — அதிகாரத்தை விரிவாக்குதல்
Decision — முடிவு
Declaration — உறுதிக்கூறு, உறுதிக் கூற்றுப் பத்திரம்
Decree — தீர்ப்பாணை
Decree-Holder — தீர்ப்பாணை உடையவர்
Deduction From Salaries or Wages — சம்பளம் அல்லது கூலியிலிருந்து கழிவு செய்தல்
Defaulter — தவணை தவறிய பாக்கிதாரர்
Delegate — பிரதிநிதி
Delegation of Powers — அதிகார அளிப்படைவு
Delivery of Possession — உடைமை சேர்ப்பித்தல்
Delivery of Possession of Records and Properties — சங்கத்தின் ஆவணங்களையும் சொத்துகளையும் உடைமை சேர்ப்பித்தல்
Democracy — மக்களாட்சி
Democratic Out Look — மக்களாட்சிக் கண்ணோட்டம், மக்களாட்சி முறையில் கண்ணோட்டம்
Democratic Socialism — மக்களாட்சிப் பொதுவுடைமை
Demand — கேட்பு
Demand Notice — கேட்பு அறிவிப்பு
Deposits — வைப்புத் தொகைகள்
Depositor — வைப்புத் தொகை செலுத்துபவர்
Deputy Registrar — துணைப் பதிவாளர்
Direction-Power of Govt. to give — அரசாங்கத்திற்குக் கட்டளையிடுவதற்குண்டான அதிகாரம்
Director — இயக்குநர்
Director of Animal Husbandry — கால்நடை மேற்பார்வை இயக்குநர்
Director of Fisheries — மீன்வளத் துறை இயக்குநர்
Director of Handlooms — கைத்தறி இயக்குநர்
Director of Industries and Commerce — தொழில் வணிகத் துறை இயக்குநர்
Director of Khadi and Village Industries — கதர் கிராமக் கைத்தொழில் துறை இயக்குநர்
Dismissal — மேற்கடப்பு
Dispute தகராறு

Disqualifications for Membership of a Committee — நிருவாகக் குழு அங்கத்துவத் திற்குத் தகுதியின்மைகள்
Dissolution — கலைத்தல்
Distraint and Sale of Properties — சொத்தை ஜப்தி செய்தலும், விற்பனை செய்தலும்
District Co-operative Audit Officer — மாவட்டக் கூட்டுறவுத் தணிக்கை அலுவலர்
District Co-operative Supply and Marketing Society — மாவட்டக் கூட்டுறவு விநியோக, விற்பனைச் சங்கங்கள்
District Liquidation Fund — மாவட்டக் கலைப்பு நிதி
Dividend — இலாப ஈவு
Dividend Equalisation Fund — இலாப ஈவு சமப்படுத்தும் நிதி
Dividend on Shares — பங்குகள் இலாப ஈவு
Division — பிரித்தல்
Division of Society — சங்கத்தைப் பிரித்தல்
Documents — பத்திரங்கள், ஆவணங்கள்
Doubtful Debts — சந்தேகக் கடன்கள்

E

Economic — பொருளாதாரம்
Economic Democracy — பொருளாதார மக்களாட்சி
Economic Needs-Common — பொதுவான பொருளாதாரத் தேவைகள்
Election — தேர்தல்
Election by Ballott — மறைவான வாக்களிப்பு மூலம் தேர்தல்
Eligibility for Membership — உறுப்பினராவதற்குத் தகுதி
Employee — ஊழியர்
Encumbrance Certificate — வில்லங்கச் சான்று
Entrance Fee — நுழைவுக் கட்டணம்
Execution — நிறைவேற்றுதல்
Execution Proceedings — நிறைவேற்றுதல் விதிமுறை
Executive Committee — நிறைவேற்றுதல் குழு, செயற் குழு
Executive Officer — செயல் அலுவலர்
Ex-officio — பதவி வழி
Exemption — விலக்கு

Expulsion — நீக்குதல், வெளியேற்றுதல்
Extension Officer, Co-operative — கூட்டுறவு விரிவாக்க அலுவலர்

F

Farming Co-operative Society — விவசாயப் பண்ணைச் சங்கம்
Federal Character — கூட்டிணைப்புத் தன்மை
Federal Society — கூட்டிணைப்புச் சங்கம்
Federal Structure — கூட்டிணைப்பு அமைப்பு
Final Audit — இறுதித் தணிக்கை
Financing Bank — நிதி வங்கி
First Charge — முதன்மையான பற்றுரிமை அல்லது பற்றுப் பொறுப்பு
Fisheries Department Officers — மீனவர் துறையின் அலுவலர்கள்
Fixed Charge — நிலையான பற்றுப் பொறுப்பு
Floating Charge — இழைவுறு பற்றுப் பொறுப்பு
Fluid Resources — நீர்மைச் சொத்துகள், எளிதில் பணமாக்கக்கூடிய வளங்கள்
Formation — அமைத்தல்
Full-Finance Scheme — முழுமை நிதித் திட்டம்
Funds — நிதிகள்

G

Governing Body — ஆட்சிக் குழு
Government — அரசினர்
Government Guarantee — அரசினர் உத்தரவாதம்
Goverment Securities — அரசாங்கப் பிணையங்கள், அரசாங்க பற்றுப் பொறுப்புப் பத்திரங்கள், அரசாங்கக் கடன் பத்திரங்கள்
Governor — மாநில ஆட்சித்தலைவர், ஆளுநர்
Gratuity — பணிக்கொடை
Guardian — காப்பாளர், காப்புப் பொறுப்பாளர்
Guarantee Liability — உத்தரவாதமளித்த பொறுப்பு

H

Heirs — வாரிசுகள்
Hindu Joint Family — பிரிவினை ஆகாத ஒரு இந்துக் கூட்டுக் குடும்பம்
Honorarium — கௌரவ ஊதியம்
House Building Society — வீடு அமைக்கும் சங்கம்
House Construction Society — வீடு கட்டும் சங்கம்
House Mortgage Co-operative Bank — வீடு அடைமான கூட்டுறவு வங்கி

I

Ideal — இலட்சியம், குறிக்கோள்
Income Tax — வருமான வரி
Individualist Economy — தனியார் சுவாதீனப் பொருளாதார அமைப்பு
Inquiry — விசாரணை
Inspection — ஆய்வு
Insurance Scheme — காப்புறுதித் திட்டம்
Instruments — ஆவணங்கள்
Interests of a Member — உறுப்பினரின் பாத்தியதை
Interim Audit — இடைக் காலத் தணிக்கை
Interim Committee — இடைக்கால நிருவாகக் குழு
Interlocutary Orders — இடைக்கால உத்தரவுகள்
Internal Resources — சொந்த பண வசதிகள்
International Co-operative Alliance — அனைத்துலகக் கூட்டுறவுச் சங்கம்
Introductory — தொடக்கக் கூறு
Investment of Funds — நிதிகளை முதலீடு செய்தல்
Irrigation Co-operative Society — நீரேற்றுப் பாசனக் கூட்டுறவுச் சங்கம்

J

Joint Farming Co-operatives — கூட்டு விவசாயக் கூட்டுறவுப் பண்ணைகள்
Joint Stock Companies — கூட்டுப் பங்குக் கம்பெனிகள்
Joint Registrar — கூட்டுப் பதிவாளர்
Judgement — தீர்ப்பு
Judicial — நீதிமுறையான
Junior Inspector of Co-operative Societies — இளநிலைக் கூட்டுறவு ஆய்வாளர்

## K

Khadi and Village Industries Department Officers — கதர் கிராமத் தொழில் வாரியத்தின் அலுவலர்கள்

## L

Land Improvement — நில வளர்ச்சி
Land Revenue Arrears — நில வருமான பாக்கி
Labour Contract Co-operative Societies — தொழில் ஒப்பந்தக் கூட்டுறவுச் சங்கங்கள்
Leissez Faire — கட்டுப்பாடற்ற சுழற்சி
Liabilities — பொறுப்புகள்
Lien — பற்றுரிமை
Life Insurance Premium — ஆயுள் காப்புறுதிக் கட்டணம்
Limited Liability — வரையறுக்கப்பட்ட பொறுப்பு
Liquidation — கலைப்பு
Liquidator — கலைப்பு அலுவலர்
Loan — கடன்
Loans Committee — கடன் குழு

## M

Management — நிருவாகம்
Managing Director — மேலாண்மை இயக்குநர்
Manager — மேலாளர்
Major — உரிமை வயது வந்தவர்
Marginal Cultivator — கடைநிலை விவசாயி
Market — அங்காடி
Marketing Society — விற்பனைச் சங்கம்
Maximum Borrowing Power — வாங்கப்படும் கடன் அளவு
Medium-Term Loan — மத்தியக் காலக் கடன்
Meeting — கூட்டம்
Member — உறுப்பினர்
Membership — அங்கத்துவம், உறுப்பினர் நிலை
Memorandum — நினைவுக்குறிப்பு
Milk Commissioner — பால் உற்பத்தித் துறை ஆணையர்
Milk Supply Co-operative Society — பால் வழங்கும் கூட்டுறவுச் சங்கம்

